

நம்மை ஆட்கொள்கிறது.

ஒரு நிமிடம் காத்திருந்து, சுதாரித்துக் கொள்வதுடன், பிரார்த்தனை முடிந்ததை உறுதிப்படுத்திக் கொண்டு அழைப்பு மணி அடிக்கிறோம்.

உள்ளே... வரவேற்பறைச் சுவரில்... வாழ்நாளில் பெரும் பகுதியை சதாசிவம் - எம்.எஸ். தம்பதி சரித்திரம் படைப்பதிலேயே செலவிட்டதற்குச் சான்றான புகைப்படங்கள். அவற்றுக்கும் தமக்கும் உள்ள தொடர்பை சற்றும் வெளிக்காட்டாத எளிமையுடன் எம்.எஸ். கைத்தறிப் புடைவையும் கையில் பனையோலை விசிறியுமாய், இலேசான கவலை படர்ந்த முகத்துடன் அமர்ந்திருக்கிறார்.

# ஒரு

'எட்டு மணிக்கு ஒரு நிகழ்ச்சியில் குத்து விளக்கு ஏற்றப் போக வேண்டும். அதனால் பார்த்தசாரதியை (உறவினர்) போனில் கூப்பிட்டு இன்று வரவேண்டாம் என்று சொல்ல வேண்டும்.'

அதிகாலை ஏழு மணி. மழை பூத்தூறலாய்ப் பெய்து பூமியைக் குளிர்வித்திருக்கிறது. மொட்டவிழும் மலர்களின் இலேசான மணம் அந்த தென் சென்னைப் பகுதி வீட்டிற்குள் நுழையும்போதே வரவேற்கிறது. வராந்தாவில் ஆடு நாற்காலி, பளபளப்பான திண்ணை... கடந்து போய் வாசல் மணியை அழுத்தக் கை உயர்த்துகிறோம்... மூடிய கதவுகளுக்குப் பின்னாலிருந்து சுருதிப் பெட்டி ஒலிக்க, கை பின்வாங்கிக் கொள்கிறது.

"தேத்யான யோகானு கதாபச்யன்..."

- உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் உள்ளங்களை உருக்கிய குரல், அம்பாளை உருகி உருகிப் பாடுகிறது.

"மாம் பாஹி சர்வேச்வரி மோக்ஷ தாத்ரி..."

- துர்கா பஞ்சரத்னம் நிறைவுற, ஏகாந்த சேவையாக அம்பாளை தரிசித்த அமைதி

டெலிபோன் எண்கள் அடங்கிய புத்தகத்தை அவர் புரட்ட, குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள் என்று பலரது பெயர்களிடையே 'செம்மங்குடி குருஜி' என்ற பெயர் மட்டும் அவர் சொந்தக் கையெழுத்தில் தனித்துத் தெரிகிறது.

எண்பதை நெருங்கும் கட்டத்திலும் தொடரும் சிஷ்ய பாவம்! டெலிபோன் பேசி முடித்தவர் நமது வியப்பை ஒதுக்கித் தள்ளிவிட்டு விளக்குகிறார் :

''இன்னமும் கச்சேரின்னா எனக்கு பயம்தான் தெரியுமோ...? மேடைல உட்கார்ந்து பாட ஆரம்பிக்கறப்போதான் அது தானா மறைஞ்சு போறது... பத்திரிகைக்குப் பேட்டி கொடுக்கறதுன்னா அதைவிட பயம்...''

- சிரிக்கிறார்.

சதாசிவம் தயாராகி வர, துவக்க

# சுந்தரமான இல்லறம்

காரியங்களுக்குக் கணக்கு வழக்கின்றி உதவும் மனப்பாங்கிற்கு இதுவே அஸ்திவாரமோ என்று சிந்தித்தபடி புகைப்படங்கள் எடுக்கத் தயார் செய்கிறோம். பணியின் முக்கியத்துவம் கருதி, பெங்களூர் பயணம் முடித்து சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து அவசரமாய் வந்திருக்கிறார் யோகா.

புதுமணப்பெண்ணின் கூச்சத்துடன் கணவர் அருகே ஒடுங்கி நின்று 'போஸ்' கொடுக்கிறார் எம்.எஸ். 'அவர்களை அசௌகரியப் படுத்துகிறோமோ...' என்கிற நமது குற்ற உணர்வைப் புரிந்து கொண்டதுபோல் 'ஜோக்' அடித்து சூழ்நிலையைக் கலகலப்பாக்குகிறார் சதாசிவம்.

"எங்க வயசெல்லாம் போட்டோவுல வருமா...?" என்கிறார்.

செப்டெம்பர் பதினைந்தாம் தேதி (ஆவணி ஹஸ்தம்) சதாசிவம் 94வயது பூர்த்தி செய்கிறார். எம்.எஸ்.ஸுக்கு செப்டெம்பர் முப்பது அன்று (புரட்டாசி பரணி) எண்பது வயது முடிகிறது!

தமிழகமும் இந்தியாவும் தங்களில் ஓர் அம்சமாகக் கருதி ஏற்றிருக்கும் தம்பதி... பல வகைகளில் புரட்சி தம்பதி என்றே சொல்ல வேண்டும்!

விழாவுக்குப் புறப்பட உடைமாற்றி வருகிறார் எம்.எஸ். அரை நூற்றாண்டுக்கும் மேலாக அருகிருந்து உதவி வரும் பணியாளர் விசாலம் பூத் தொடுத்துத் தயாராய் வைத்திருக்கிறார்.

''இது போதும்... மீதியைத் திரும்பி வந்து வேணுமானா வெச்சுக்கறேன்...'' துளி பூவானாலும் வீணாக்கக் கூடாது என்கிற சிக்கன உணர்வு. நல்ல



• காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டத்தில் எம்.எஸ்–சதாசிவம்...

பேட்டிக்கென நாம் செல்லும் வேறொரு மாலைப் பொழுதில், தைரியத்தை வரவழைத்துக் கொண்டு இந்த எண்ணத்தை வெளியிட, சதாசிவம் சுபாவமாகச் சிரிக்கிறார்.

சாவித்திரி திரைப்படத்தில் எம்.எஸ்.ஸை ஆண் வேடம் தரித்து நடிக்கச் செய்ததை நினைவூட்டுகிறோம்...

"அப்போதான் மலேரியா ஜுரம் வந்து உடம்பு ரொம்ப தளர்ந்து போயிருந்தது. இரண்டு பேருமா ('கல்கி' மற்றும் சதாசிவம்) வந்து கேட்டுண்டப்போ முதல்ல அழுகையா வந்தது... அப்புறம் அவா எடுத்துச் சொல்லி



* மகள்கள் விஜயா, ராதாவுடன்...

தைரியமூட்டினா... நடிச்சுட்டேன்..." என்கிறார் எம்.எஸ்.

அந்தத் திரைப்படத்தில் அவர் இசைத்த 'ப்ருஹி முகுந்தேதி' பற்றி பேச்சு வருகிறது.

"அந்தப் பாட்டை எனக்கு மாமாதான் (செம்மங்குடி) சொல்லிக் கொடுத்தார்... அது சினிமாவினால ரொம்பப் பிரபலமான பிறகு ஒரு சமயம் மாமாகிட்டேயே சில பேர் கேட்டாளாம் : 'உங்களுக்கு எம்.எஸ். பாடின ப்ருஹி முகுந்தேதி தெரியுமா...?' அப்படின்னு...! அந்தக் காலத்துலே அவர் அதைச் சொல்லி சொல்லி ஆச்சர்யப்படுவார்..." – எம்.எஸ். நினைவுகூர்கிறார்.

"ஆனால் மீரா திரைப்படம்தான் அவள் வாழ்க்கையில் திருப்புமுனை... ஹிந்தி மீரா நாடு தழுவிய அளவில் புகழ் தேடித் தந்தது" என்கிறார் சதாசிவம். "சினிமாவையே விரும்பாத ராஜாஜி கூட, அந்தத் திரைப்படத்தை புண்ணிய தினங்களில் இந்தியா முழுவதும் காட்டச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். பக்திதான் இசைக்கு ஆதாரம் என்பதை அந்தத் திரைப்படம் ரொம்ப வலுவாக ஊர்ஜிதப்படுத்தியது."

இதை ஒப்புக் கொண்டு ஆமோதிக்கிறார் எம்.எஸ். "மீரா படத்தினாலே எனக்கே பக்தியோட மேன்மை புரிந்தது. அதோட இவரும் (சதாசிவம்) எப்பவுமே சொல்வார் : 'எந்தப் பாட்டானாலும் அர்த்தம் தெரிஞ்சு அதோட ஒன்றிப் பாடணும். அப்படிப் பாடினால்தான் கேட்கிற ரசிகர்களும் பாட்டோடு ஒன்றுவா...'. இதையேதான் கல்கி மாமாவும் (அமரர் கல்கி) சொல்லுவார். தமிழ்ப் பாட்டுகள் தேர்ந்தெடுத்துத் தந்து பாடச் சொல்லும்போது விளக்குவார்..."

எம்.எஸ்.ஸின் கச்சேரிகள் அனைத்தையும் சதாசிவம்தான் திட்டமிடுகிறார் என்பது ஊரறிந்த ரகசியம். "இத்தனை நாளா அவர் சொல்றதைத்தான் பாடிண்டிருக்கேன். ...என்ன குறைஞ்சு போச்சு...?" என்று அவர் சர்வசாதாரணமாய்ச் சொல்வதை நம் நவீன செவிகள் நம்பக்கூட மறுக்கின்றன.

'ஒரு கலைஞருக்குத் தம் நிகழ்ச்சியை நிர்ணயிக்கும் சுதந்தரம் வேண்டாமோ...?'

– பெண்மைக்கும் வாழ்க்கைக்கும் எம்.எஸ். வகுக்கும் இலக்கணங்களைப் பார்க்க நம் கேள்வி அனர்த்தமானது என்று உணர்கிறோம்.

இன்றைய தலைமுறை குறித்து மிகுந்த கவலையுடன் பேசுகிறார். "குடும்ப வாழ்க்கையினுடைய அருமையும் புனிதமும் இளையதலைமுறைக்குப் புரிய வேண்டும். ஒரு பெண்ணுக்குக் குடும்பமும் கணவனும்தான் முதல் கடமைகள்." மிக உறுதியாகச் சொல்கிறார். முகம் தெரியாதவர்கள் குடும்பத்தில் நேர்ந்த மணமுறிவுச் செய்தி கூட அவரைப் பதறச் செய்கிறது!

'மறக்க முடியாத நிகழ்ச்சிகளைச் சொல்லுங்கள்' என்று கேட்டால் எம்.எஸ். நினைவு கூர்வது மக்சய்சய் விருது பெற்றதையோ

மியூசிக் அகாடமியில் தலைமை தாங்கிய தையோ அல்ல...

"அப்போ எனக்கு ரொம்ப கடுமையா டைபாய்டு வந்துடுத்து. பெண்கள் இருவருக்கும் கல்யாணம் நிச்சயமாகவிருந்த சமயம்... இந்தக் கடமையை முடிக்காமல் போய்விடுவோமோன்னு ரொம்ப கவலைப்பட்டு பகவானை வேண்டிண்டேன்..." என்கிறார்.

காஞ்சி முனிவர் அருளால் உடல் குணமாகி, அவரது ஆசி பெற்று மீண்டு, இரு பெண்களுக்கும் ஒரே பந்தலில் திருமணம் நடத்தியதை மனநிறைவுடன் சொல்கிறார்.

உரையாடல் மீண்டும் 'பக்தி' என்கிற களத்துக்கே திரும்புகிறது.

சதாசிவம் பக்தியிலும் குறிப்பாக இசையிலும் ஈடுபாடு கொள்ளக் காரணம் என்ன...?

"அந்த நாட்களில் கிராமங்களில் எல்லாம் நாதஸ்வரம்தான் பிரதானமாக இசை ஞானத்தைப் பரப்பி வந்தது. கோவில் உத்ஸவங்கள், நித்ய பூஜைகள், பஜனை... மணக்காலில் (லால்குடி அருகே) எல்லாம் நடக்கும். அதோடு பாரதி பாடல்களில் ரொம்ப ஈடுபாடு உண்டு..." என்கிறார்.

"காற்றடிக்குது கடல் குமுறுது கண்ணை விழிப்பாய் நாயகனே..." – மெல்லிய, ஆனால் உற்சாகமான குரலில் பாடிக் காட்டுகிறார்.

"தீம்தரிகிட தீம்தரிகிட..." என்று பாடுகையில் அவரது மெலிந்த உடல் அசைந்து ஆடுகிறது.

" 'எங்கள் வேள்விக் கூடமீதில் ஏறுதே தீ தீ...' என்று பாடிக் கொண்டே அன்னியத் துணிகளைப் போட்டுக் கொளுத்துவோம்..." என்று சிலிர்ப்புடன் நினைவுகூர்கிறார்.

"அப்போதெல்லாம் தேசபக்தியும் தெய்வ பக்தியும்தான் வாழ்க்கையில் பிரதானமாய் இருக்கும்... இப்போ தோசை பக்திதான் இருக்கு..." ஆதங்கத்தை ஹாஸ்யத்தில் மறைத்துச் சொல்கிறார்.

பெங்களூரில் கதர் நிலையம் நடத்த ராஜாஜி தம்மை அனுப்பி வைத்ததையும் மதுரை வைத்யநாத அய்யர் தமது பாரதி பாடல்களைக் கேட்டு ஈர்க்கப்பட்டு சுதந்தரப் போராட்டத்தில் சேர்ந்ததையும் குறிப்பிடுகிறார்.

ராஜாஜியின் அன்புக்கு அடையாளமான சம்பவங்களை அடுக்குகிறார்.

"ஒன்றரை மாதம் கடுங்காவல் தண்டனை முடிந்து அன்றுதான் விடுதலையாகி வந்திருந்தேன். உடனே நாக்பூரில் போராட்டத்துக்கு வரச் சொல்லி நண்பர்கள் அழைத்தார்கள். ராஜாஜி என்னை அனுப்ப மறுத்து விட்டார். 'அவன் அழகா இருக்கான்றதுக்காக அவனைக் கூப்பிடறேளா...! அனுப்ப முடியாது...' என்று சொல்லி விட்டார். ஆனால் மறுநாளே உள்ளூரில் மீண்டும் என்னைக் கைது செய்து விட்டார்கள். திரும்பவும் சிறைவாசம்...!"

## ஆதீனங்களாக நடித்த ஆதீனங்கள்!

• தருமபுரம் ஆதீனம்

தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதய்யர் தொடருக்கான படப்பிடிப்பு. உ.வே. சாமிநாதய்யருக்கும் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுரம் ஆதீனம் ஆகியவற்றுக்கிடையிலான தொடர்பு பற்றி எடுக்க வேண்டிய சூழ்நிலை. உ.வே. சாமிநாதய்யருக்கான தொடர்பு என்பது பழைய ஆதீனகர்த்தர்களுடன் என்பதால், அவர்களைப் போல் யாரை நடிக்க வைப்பது என்கிற குழப்பம். இந்த நிலையில் ஆதீனத்துக்குள் வந்து வேறொருவர் ஆதீனகர்த்தராக நடிப்பது சரியாக இருக்காது என்று இன்றைய ஆதீனகர்த்தர்கள் கருதினார்கள். என்ன செய்வது என்று குழம்பிய டைரக்டர் ஜகந்தான், இன்றைய குருமகாசந்நிதானங்களாக இருக்கிறவர்களிடமே பழைய ஆதீன கர்த்தர்களாக நடிக்கும்படி கேட்க, அவர்களும் அப்படியே நடித்துக் கொடுத்தார்களாம்!

–சுப்ர. பாலன்

சுப்ரமண்ய சிவாவின் சீடராக இருந்து பின்னர் காந்தி மார்க்கத்துக்கு மாறியவர் சதாசிவம். ராஜாஜியின் வழிகாட்டல் அவர்

அரசியல் சிந்தனையை வகுத்துக் கொள்ள உதவியது எனில், சிறு வயது முதலே நிகழ்ந்த ஆன்மீக சந்திப்புகள் அவரது பக்தி நெறியை நிர்ணயிக்க உதவியது.

"எனக்கு ஏழு வயதிருக்கும்போது மஹா பெரியவா மணக்காலுக்கு வந்திருந்தார். என் அப்பா ஒரு சன்னியாசிப் பிரியர். அப்போது பெரியவாளுக்கும் அப்பாவுக்கும் சந்திப்பு நேர்ந்தது. பிற்காலத்திலே பெரியவா என்னைக் கேட்டதுண்டு... 'உங்கப்பாவை உனக்கு நினைவிருக்கா...? பட்டை பட்டையா விபூதியும் ருத்ராக்ஷமுமா இருப்பார்...?' (சதாசிவம் மிக இளமையிலேயே தந்தையை இழந்தவர்) என்று பரிவோடு கேட்டார் பெரியவா... வாழ்க்கையில் பெரிய மஹான்களின் தொடர்பு ஏற்பட்டது ஒரு பாக்கியம். சிறு வயதில் ராமகிருஷ்ண பரமஹம்சரின் எழுத்துக்களைப் படிப்பேன். அப்புறம் ரமண மஹரிஷியிடம் ஈடுபாடு கொண்டேன். ஒருமுறை திருவண்ணாமலையில் அவரைப் பார்க்கப் போனபோது ஒரு மணி நேரம் அவரருகே அமர்ந்து தரிசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. ஒரு சொல் கூட இருவரும் பரிமாறிக் கொள்ளவில்லை. ஆனால் அந்த மௌனத்தில் அவர் எனக்கு நிறைய உணர்த்தினார்..." என்கிறார்.

# இளைஞர்கள் பார்வையில்...

***எம்.எஸ்.ஸுக்கு வயலின் வாசித்து வருபவர் ஆர்.கே. ஸ்ரீராம்குமார். வயது 29! மிருதங்கம் வாசிப்பவர் கே.வி. பிரசாத் – வயது 38. இந்த இளைஞர்கள் இருவருமே வியப்பும் மரியாதையும் மேலிட தங்கள் அனுபவங்களைக் கூறினார்கள்.***

***ஸ்ரீராம்குமார் :*** *என் தாத்தா ஆர்.கே. வெங்கட்ராம சாஸ்திரி, அம்மாவுக்கு (எம்.எஸ்.) நிறைய வாசித்திருக்கிறார். எங்கள் குடும்பங்களுக்கிடையே தொடர்பு இருந்தவண்ணமிருந்தது. அம்மாவைப் பார்க்கப்போகும்போது, என்னை வாசிக்கச் செய்து கேட்பார், திருத்துவார்; யோசனைகள் சொல்லுவார். 'ஒருநாள் நீ ரொம்பப் பெரியாளாகி எம்.எஸ்.ஸுக்கு வாசிக்கணும்னு போய்டப் போறே...' என்று நண்பன் விஜய் சிவா விளையாட்டாகச் சொல்லிக் கொண்டிருப்பான்.*

*அவன் சொன்னது போலவே நடந்தது! திடீரென்று அம்மா ஒருநாள் போன் செய்து 'ஏப்ரல் 15 அன்று வாசிக்கணுமே' என்று கேட்டார். அதே தேதியில் நான் விஜய்க்கு வாசிக்க ஒப்புக் கொண்டிருந்தேன்! அந்தக் கச்சேரி மதுரையில்... அம்மாவுக்கு மறுப்பு சொல்ல மனமில்லை என்றாலும் விஜய்க்குக் கொடுத்த வாக்கை மீற முடியவில்லை. அதனால் 'வேறு கச்சேரி இருக்கிறது' என்று அம்மாவிடம் சொல்லி விட்டேன்.*

*விஷயம் தெரிந்ததும் விஜய் உரிமையோடு திட்டித் தீர்த்தான். 'நான் வேறு ஆர்டிஸ்ட் தேடிப் போட்டுக் கொள்கிறேன். முதலில் அவர்களுக்குச் சம்மதம் சொல்லு' என்று அவன் சொன்னதும் அம்மாவிடம் சம்மதம் தெரிவித்தேன்.*

*அன்று (15.4.89) தொடங்கி எத்தனையோ மேடைகளில் அவருக்கு வாசித்தாயிற்று. ஒவ்வொரு முறையும் முதல் முறை வாசிப்பது போல்தான் தோன்றுகிறது.*

*உச்சரிப்பு கச்சிதம், ஆழ்ந்த பாவம் அளவான கமகம் என்று சங்கீதத்தின் உயர்வான அம்சங்களை மட்டுமின்றி வாழ்க்கைப் பண்புகளையும் அவர்களிடத்தில் கற்றுக் கொள்ள முடியும்.*

*இத்தனை உயர்விலும் துலங்கும் இயல்*



* ஆர்.கே. ஸ்ரீராம் குமார்



* கே.வி. பிரசாத்

ரமணமஹரிஷி நூற்றாண்டையொட்டி எம்.எஸ்.ஸின் இசை நிகழ்ச்சி செப்டெம்பர்

15 அன்று ஏற்பாடாகியிருக்கிறது. சதாசிவத்தின் 94வது பிறந்த நாளன்று அது நடைபெறும் பொருத்தம் நம்மை வியக்க வைக்கிறது. அதே போல், எம்.எஸ். வழங்கியிருக்கும் மீனாக்ஷி சுப்ரபாதம் காசெட் செப்டெம்பர் 12 அன்று வெளியிடப்படுவதிலும் ஒரு பொருத்தத்தை உணர்கிறோம். தமது எண்பதாவது பிறந்த தினத்தையொட்டி, தமது சொந்த ஊரான

தாமல் பொது நிகழ்ச்சிகளில் பங்கேற்பதையும் இரண்டாம் பேருக்குத் தெரியாமல் பொருளுதவி செய்வதையும் தொடர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

''இந்த அரிய தம்பதியிடம் உங்களை மிகவும் ஈர்த்த விஷயம் எது...?'' என்று 1954 முதல் உடனிருந்து உதவி வரும் ஆத்மநாதனைக் கேட்கிறோம்.

*பான எளிமை, சக கலைஞர்களைக் குடும்ப உறுப்பினர் போல் நடத்தும் பண்பு, எல்லாவற்றுக்கும் மேலாக, அம்மாவும் மாமாவும் இணைந்து நடத்தும் தியாக வாழ்வு... என்று அடுக்கிக் கொண்டே போகலாம்.*

*இவ்வளவு பணிகளுக்கு இடையேயும் அணுகுவதற்குச் சுலபமானவராய் அவர் இருப்பது எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தும். நிறைய இளம் பாடகர்களுக்கு அறிவுரை சொல்லி வழிகாட்டியிருக்கிறார். பாட்டில் நிதானம் அவர் மிகவும் வலியுறுத்தும் அம்சம்.*

*அவரிடம் சில கீர்த்தனைகள் கற்றுக் கொள்ள வேண்டும் என்று எனக்கு நீண்ட நாள் ஆசை. அதை வெளிப்படுத்திய பின் ஒரு நாள் அவரே முதல் பாடமாக 'ஸ்ரீ கணபதி' கற்றுக் கொடுத்து ஆரம்பித்து வைத்தார். அதன் பிறகு பல சந்தர்ப்பங்களில் அம்மாவின் கைப்பட எழுதி வைத்த பாட்டு நோட்டுகளைப் புரட்டிப் பார்த்து 'இந்தக் கீர்த்தனை ஞாபகமிருந்தால் சொல்லிக் கொடுங்களேன்...' என்று கேட்பேன். உடனே கற்றுத் தந்துவிடுவார்!*

***கே.வி. பிரசாத் :*** *1971 ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன். எர்ணாகுளத்தில் குடியிருந்தோம். அங்கு எம்.எஸ். அம்மா கச்சேரி நடக்க இருந்தது. டிக்கெட் வாங்கிக் கொண்டு போய்க் கச்சேரி கேட்க அப்போது எங்கள் குடும்ப நிதி நிலைமை அனுமதிக்கவில்லை. வாங்க வழி இருந்தாலும் முடியாதபடிக்கு எல்லா டிக்கெட்டுகளும் படுவேகமாக விற்றுப் போய்விட்டன! எப்படியாவது கச்சேரி கேட்க வேண்டும் என்ற ஆசையில் என் நண்பனும் நானும் சபாவின் பின்புறச் சுவர் ஏறிக் குதித்து கட்டடத்துக்குள் நுழைந்து விட்டோம். இன்னொரு நண்பன் அங்கு மைக் ஆபரேடர். அவன் உதவியுடன் மேடையில் பக்கவாட்டுத் திரைக்கு அருகே அமர்ந்து கச்சேரியைக் கேட்டோம்.*

*இது நடந்து பதிமூன்று ஆண்டுகள் கழித்து, ஆல் இந்தியா ரேடியோவில் நான் மிருதங்க வித்வானாகப் பணியேற்ற புதிதில் அம்மா வரச் சொல்லிக் கூப்பிட்டதாகத் தெரிவித்தார் உடன் பணி செய்த கடையநல்லூர் வெங்கட்ராமன்.*

*"ரேடியோவில் உன் வாசிப்பைக் கேட்டுவிட்டுத்தான் வரச் சொல்கிறார்கள்... வாத்தியத்துடன் வா" என்றார்.*

*அந்த முதல் சந்திப்பின்போது வாசித்துக் காட்டியது பிடித்துப் போக 'அடுத்து ஒரு கல்யாணக் கச்சேரி இருக்கிறது... வாசிக்கணும்' என்று சொல்லி விட்டார் மாமா.*

*அந்த நேரத்தில் எனக்கு எர்ணாகுளத்தில் கச்சேரி கேட்ட அனுபவம் நினைவுக்கு வர, அழுகையே வந்துவிட்டது. இப்படியொரு வாய்ப்புக் கிடைக்கும் என்று நான் அன்றைக்கு கனவில் கூட நினைக்கவில்லையே! அவருக்கு வாசிக்க ஆரம்பித்த பிறகு இந்தத் துறையில் எனக்குக் கிடைத்த அங்கீகாரமே தனிதான் என்று சொல்லத் தேவையில்லை.*

*'84 தொடங்கி ஏராளமான கச்சேரிகள் வாசித்து வருகிறேன். மேடையிலேயே வாசிப்பை ரசித்து உற்சாகப்படுத்தும் அவருடைய பாங்கு, பயணங்களின் போது தம் பழைய கால இசையுலக அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு எங்களுக்குப் புதிய விஷயங்களைச் சொல்லும் நேர்த்தி என்று அவரிடம் பல உயர் குணங்களைப் பார்க்கிறேன்.*

*எல்லாவற்றையும் விட அதிகமாய் என்னை பாதித்தது அவருடைய பக்தி. அவரையே தெய்வீக நிலைக்கு உயர்த்தி, ரசிகர்களையும் பக்தர்களாக்கிவிடும் அந்த ஆற்றலை நான் வேறு எந்தக் கலைஞரிடமும் பார்த்ததில்லை.*

மதுரையின் நாயகி மீனாக்ஷியம்மனுக்கு எம்.எஸ். வழங்கும் இசைக் காணிக்கை இது என்று எண்ணமிடுகிறோம்.

திட்டமிடாமல் தேடி வந்த இந்தப் பொருத்தங்களைப் பற்றிய சிந்தனைகளின்றி இந்த தம்பதியின் வாழ்க்கை தொடர்கிறது. முதுமையின் சிரமங்களைப் பொருட்படுத்

''மாமா (சதாசிவம்) ஒரு சம்பவத்தை அடிக்கடி சொல்லுவார். ஆனந்த விகடனில் வேலைக்கு அழைப்பு வந்தபோது, அதற்குப் போகக் கூட அவரிடம் கைக்காசு இருக்கவில்லை. நண்பர் ஒருவர் இவருடைய முகவாட்டத்தைப் பார்த்து, பாக்கெட்டிலிருந்த கடிதத்தையும் உரிமையோடு எடுத்துப் படித்து



"நான் உன்னை முதன் முதலா பெண் பார்க்க வந்தப்போ.. நீ என்னைப் பற்றி என்ன நினைச்சே தங்கம்?"

"உங்க கிருதா, மொரட்டு மீசை இதையெல்லாம் பார்த்தவுடனே எங்க எனக்கு நீங்க கட்டுப்படாம எதிர்த்துப் பேசிடுவீங்களோன்னு ரொம்ப பயந்தே போயிட்டேங்க...

– ஆர்.பி. செல்வம்



"எங்க புது மானேஜர் 'ராசிபலன்'ல ரொம்ப நம்பிக்கை உள்ளவர்."

"அப்படியா?"

"பின்னே பாரேன்... 'நாளைக்கு எனக்கு எட்டில் சந்திரன், உடல் அசதி ஏற்படும்'னு காரணம் காட்டி தற்செயல் விடுப்பு கேட்டதுக்கு உடனே அனுமதி குடுத்துட்டார்."

- இரா. சம்பத்குமார்

விஷயத்தைப் புரிந்து கொண்டிருக்கிறார். பத்து ரூபாய் நோட்டை மாமாவின் பாக்கெட்டில் செருகி அன்றைக்கு அவர் உதவியதுதான் மிகப் பெரிய திருப்புமுனையாக அமைந்தது. காலத்தில் செய்யும் உதவியின் அருமையை இப்படித் தம் சொந்த அனுபவத்தால் உணர்ந்த தாலோ என்னவோ, மாமாவும் கணக்கற்றவர்களுக்கு உதவியிருக்கிறார். அந்த உதவிகளெல்லாம் ஏதோ கையில் நிறைய பணம் சேர்ந்து விட்டது என்பதற்காகச் செய்தவையல்ல... பல சந்தர்ப்பங்களில், உதவி வேண்டிய நபர்களை, கச்சேரி நடக்கும் இடத்துக்கே வரச் செய்து, சன்மானத் தொகையை நேரடியாக அவரிடம் கொடுக்கச் செய்ததுண்டு..." உணர்ச்சி மேலிடப் பேசுகிறார் ஆத்மா.

**மா**லை விளக்கேற்றும் நேரம். தமது பூஜையறையில் ஸ்ரீ சத்ய சாயி பாபாவுக்கு ஆரத்தி எடுத்துப் பாடுகிறார் எம்.எஸ்.

"நாராயண நாராயண ஓம் சத்ய நாராயண நாராயண ஓம்..." அவரது ஆழ்ந்த நம்பிக்கையும் ஈடுபாடும் கற்பூர ஜோதியுடன் சேர்ந்து ஒளிர, பணியாளர்களும் குடும்பத்தாரும் திரண்டு வந்து ஆரத்தியில் பங்கேற்கிறார்கள்.

"பாபா, இந்த அறையில், இங்குதான் உட்கார்ந்தார், உணவு கொண்டார்" என்று தமது அறையைக் காட்டுகிறார் சதாசிவம். பாபாவின் திருவடி சரணங்கள், காஞ்சி முனிவரின் பிரும்மாண்ட படம், இஷ்ட தெய்வங்கள், குருநாதர்களின் படங்களுடன் ஒரு பிரத்யேகப் பூஜை அலமாரி... அதைப் பார்த்தபடி சொல்கிறார் சதாசிவம் :

"ராஜாஜி சொன்னதைத்தான் நினைத்துக் கொள்கிறேன்... 'பிறர் தன்னை நினைவு வைத்துக் கொள்ள வேண்டும் என ஆசைப்படுபவர்கள் ஒரு விஷயத்தை மறந்து போகிறார்கள்.... அப்படி அவர்களை நினைவு வைத்துக் கொள்வோரும் ஒருநாள் மறைந்து தானே போவார்கள்...!' என்று அவர் சொல்லுவார்."

– இந்த வாக்கியத்துடன் சந்திப்பை முடித்துக் கொண்டு கீதை படிக்க அமர்கிறார் சதாசிவம்.

ராஜாஜி எழுதியிருக்கும் உரையுடனான கீதை சுலோகங்கள் அடங்கிய காசெட் (சின்மயா மிஷன் பிரத்யேகமாக ஒலிப்பதிவு செய்தது) கம்பீரமாக ஒலிக்க ஆரம்பிக்கிறது.

**- சிஷ்யா**

அட்டை வண்ணப்படமும், படங்களும் : **யோகா**

# 1. சூளாமணி விஹாரம்

அந்த மாளிகையின் வாயிலில் திடகாத்திரமான தேகத்துடனும், உருவிப் பிடித்த வாட்களுடனும் வீரர்கள் சதா உலவினார்கள். அவர்கள் அனுமதியின்றி காற்றுக் கூட அந்த மாளிகைக்குள் நுழைவது கடினம் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் உள்ளே நுழையவும், எட்டிப் பார்க்கவும் வேறு வழிகளுமிருக்கின்றன என்று உணர்ந்த புஷ்பக் கொடிகள், பக்கத் தூண்களின் வழியே படர்ந்து மேலேறி, மேன்மாடத்து உப்பரிகையிலும் பக்க அறையிலும் சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்து, தங்கள் மலர் முகங்களைக் காட்டி நகைத்துக் கொண்டிருந்தன. அப்படிக் காவலர்களைப் பரிகசித்து தூண்களைப் பற்றி மேலேறி, அறைக்குள் எட்டிப் பார்த்தது நித்திய மல்லிக் கொடியொன்று; அறைக்குள்ளிருந்த மஞ்சத்தில் புஷ்பக் கொடியொன்று படுத்திருப்பதைக் கண்டு திகைத்தது. சடாரென்று தனது தலையை வெளியே இழுத்துக் கொண்டது. சற்றுக் கழித்து மீண்டும் தலையை உள்ளே நீட்டிய கொடி, மஞ்சத்தில் கிடந்தது சாதாரண புஷ்பக் கொடியல்ல என்பதையும், புஷ்பக் கொடியை விட அழகிய மங்கை என்பதையும் புரிந்து கொண்டதால் துணிவுடன் அவளை ஆராயவும் தொடங்கியது. அவளை ஆராயத் தொடங்கிய பின்பே அந்தப் புஷ்பக் கொடிக்கு இயற்கை செய்திருந்த ஓரவஞ்சனை புரிந்திருக்க வேண்டும். ஒரு புஷ்பக் கொடிக்கு ஒரே வித மலர்களை அளிக்கும் இயற்கை, அசல் புஷ்பக் கொடியாகவே இருந்த அந்த மங்கைக்கு மட்டும் பலவித மலர்களை அளித்திருந்தது!

'முகத்தில் தாமரையையும் நீலோற்பல மலர்களை விழிகளிலும், முல்லையை இதழ் வரிசையிலும் தளிர் விரல்களில் அசோக மலர்களையும், விரல் நகங்களில் மாம் பூவையும், உடல் முழுவதும் தாழையின் மஞ்சள் நிறத்தையும் அளித்திருந்த இயற்கை, பலவித மலர்களைக் கொண்ட ஒரே புஷ்பக் கொடியாக அவளை அடித்திருந்தது.

புஷ்பங்களின் சேர்க்கை மட்டுமின்றி அந்த மங்கையிடம் தமிழகத்தின் பெரும் அரசுகளின் சேர்க்கையும் தெரிந்தது. பாண்டி நாட்டுக்கே உரிய அகன்ற கருவிழிகளில் சோழ நாட்டு விஷமமும் சிந்தனையும் கலந்திருக்க, மலை நாட்டுப் புஷ்பங்களாக செழித்துக்கிடந்த அவயங்களில் கொங்கு நாட்டு கம்பீரமும் தெரிந்தது.

தந்தக் கரங்களில் பிடித்திருந்த ஓலையொன்றை மீண்டும் படித்தவள் சிந்தனையுடன் எழுந்து சாளரத்தை நோக்கி நடந்தாள். அவளது அழகிய அந்த நடைக்குத் தென்றலைப் பறிகொடுத்து விட்ட கோபத்தில்தான் காற்று அந்த நாகையில்



# தனுசு

அடிக்கடி புயலாக வீசுகிறது என்பதை உணர்ந்து கொண்ட சாளரத்துக் கொடி, அச்சத்தில் தலையை மீண்டும் வெளியே இழுத்துக் கொண்டது.

அதுவரை வானில் வெகு கர்வத்துடன் நீந்திய முழுமதி, சாளரத்தில் அந்த மங்கையின் முகத்தைக் கண்டு வெட்கிய தால், மேகப் போர்வையை இழுத்து தன்னை மூடிக் கொண்டது.



நிலவு மறைந்த தால் வெளியே கவிந்த இருளைப் பழித்த அவளது கருங்கூந்தல் காற்றில் மெல்ல அசைந்தது.

ஆனால் அந்த மங்கையின் சித்தத்தை அவள் கரத்திலிருந்த ஓலை முழுவதுமாக ஆக்கிரமித்திருந்ததால் எதையும் ரசிக்கக் கூடிய மனநிலையில் அவள் இல்லை. இத்தனைக்கும் அவள் தந்தை மீண்டும் நாடு திரும்புமாறு அழைத்திருந்த ஓலைதான் அது.

சிறுமியாக இருந்தபோதே அரண்மனையில் அன்னியர் நடமாட்டம் அதிகரித்ததும், அப்போதே தன்னை நண்பரான சைவத் துறவியாருடன் தந்தை அவனிதன் அனுப்பி வைத்ததும் அவள் நினைவில் எழுந்தன.

கடாரத்து பாணியில் நான்கு பக்கங்களிலும் பட்டை

விஷ்வக்சேனன்




**"மல்டி சேனல் கச்சேரியாம்... முன் சீட்டுல இருக்குற பட்டனைத் தட்டினா வேணுங்கிற சங்கீதத்தைக் (ஹெட்போன்ல) கேட்டுக்கலா மாம்!"**

**— அகில்**

யான வளைந்த முகப்புகளுடனும், மூன்று மாடங்களுடனும் சைலேந்திர மன்னனான ஸ்ரீமாற விஜயோத்துங்கவர்மனால் கட்டப் பட்டது அந்த சூளாமணி விஹாரம். வெறும் புத்த விஹாரமாக மட்டுமின்றி கல்விக்கும், பல கலைகளுக்கும் இருப்பிடமாக அது திகழ முற்பட்டதாலும், பல நாட்டு அரச குமாரர் களும், இளவரசிகளும், வீரர்களும் அங்கு வந்து தங்கிப் பயின்றதாலும் மதில்களையொட்டி வெகு தூரத்திற்குப் பயிற்சிக் கூடங்களும், பல கட்டடங்களும் எழுந்து, பிரும்மாண்டமான கடிகையாக வளர்ந்திருந்தது. கட்டடங்கள் முடிந்த இடத்திலிருந்து பெரும் நந்தவன மொன்றும் பலவித புஷ்பச் செடிகளுடனும், கொடிகளுடனும், மூலிகைகளுடனும் இப் போது நிலவொளியில் ஆனந்தமாகக் குளித்த படி நின்றது. பக்கவாட்டில் மரமல்லியும், தேவ தாரு மரங்களும், செண்பக மரங்களும் சற்று இடைவெளி விட்டுப் பாதை அமைத்திருக்க, அந்தப் பாதையின் இறுதியில் அழகிய மாளிகையொன்றும் எழுந்து நின்றது. அந்த மாளிகையில்தான் தங்க வைக்கப்பட்டிருந்தாள் பூங்கோதை.

இவ்வளவு வருடங்களாக எட்டிக்கூடப் பார்க்காமல், துறவியாரின் பாதுகாப்பில் விட்டு வைத்த தந்தை, திடீரென அழைத்திருப்பதும் துறவியார் தெரிவித்திருந்த விவரங்களும் தற் போது நாடு திரும்புவது உசிதமா என்ற சந்தேகத்தையும் கிளப்பி விட்டிருந்தது. போசளர்களும், காகதீயர்களும் தமிழ கத்தைப் பங்கிட்டு ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த அந்த வேளையில், கொங்கு நாட்டு மன்னனும், தன் தந்தை யுமான அவநிதனுக்கு என்ன உதவி கிட்டியிருக்க முடியும் என்ற சிந்தனை அவள் புலன்களை மறைத்திருந்ததால் அறையின் வாயிலில் வந்து நின்ற சூளா மணி விஹாரத் தலைவரையோ, அவர் ''மகளே''என்று அன்பொழுக விடுத்த அழைப்பையோ அவள் கவனிக்க வில்லை.

அவள் சிந்தனையைக் கவனித்த சூளாமணி விஹாரத் தலைவரின் முகத் தில் முறுவலொன்று படர்ந்ததன்றி, அவளை நோக்கி இரண்டடி வைத்த படியே "பூங்கோதை"என்று அவளைப் பெயரிட்டு அழைக்கவும் செய்தார்.

அவள் சிந்தனையினூடே புகுந்த புத்தத் துறவியின் குரல் அவளை சாளரத் திலிருந்து திரும்ப வைத்தது மட்டுமின்றி சட்டென்று வணங்கவும் வைத்தது. அவள் கரத்திலிருந்த ஓலையையும், அவள் முகத்தில் படர்ந்திருந்த குழப்பத் தையும் கவனித்த சூளாமணித் தலைவர், "மகளே, நாடு திரும்புவது குறித்து நீ குழம்பியிருப்பதாகத் தெரிகிறது"என்றார்.

"ஆம் தந்தையே"என்று ஒப்புக் கொண்ட பூங்கோதையின் பதிலிலும் குழப்பம் தொனித் தது.

''மகளே, உன் கல்வியும் பயிற்சிகளும் முற்றுப் பெற்ற இந்த நிலையில், இந்த விஹாரத் தின் விதிகளின்படி, உன் தந்தையின் ஓலையை ஏற்று, உன்னை அனுப்பி வைக்கத்தான் வேண் டும். ஆனால் உன்னை இங்கு கொண்டு வந்து சேர்த்த தஞ்சை சைவத் துறவியாருக்கு ஓலை யனுப்பியும் அவர் இதுவரை வராதது சற்று கவலையளிக்கிறது. உன்னை அழைத்துச் செல்ல நாளையே ரதத்துடன் வீரர்கள் வருவ தாக இப்போது செய்தியும் வந்திருக்கிறது"என்ற விஹாரத் தலைவரின் குரலில் கவலை ஒலித் தது.

பூங்கோதையின் முகத்தில் திகைப்பு தெரிந் தது. "அப்படியானால் நாளையே என்னை இங் கிருந்து..."என்ற அவள் சொற்களும் பாதியில் நின்றன.

"ஆம் மகளே, நாளைக் காலைவரை சைவத் துறவியார் வரவில்லையெனில், உன்னை தகுந்த எந்தத் துணையுடன் அனுப்புவது என்றுதான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்"என்ற புத்தத் துறவியின் குரல் கூட சற்றுத் தழுதழுத்து, துறவிக் கோலத்தில் இருந்தாலும வளர்த்த



''ஐந்நூறு ரூபாய் மாமூல் வெட்டுய்யா.''
''ஐயா நான் என்னங்க தப்பு செஞ்சேன்?''
''ஏதாவது பண்ணி இருப்பே கட்டுய்யா!''
''ஐயா நான் ஒண்ணுமே பண்ணலைங்க!''
''மாமூலை வெட்டிட்டுப் போய் ஏதாவது பண்ணு, நான் கண்டுக்கலே!''

— தஞ்சாவூர் ராஜபாரதி

பாசம் எளிதில் விடுவதில்லை என்பதை நிரூபித்தது.

சூளாமணி விஹாரத் தலைவரின் சஞ்சலத்தைப் போக்கவும், கொங்கு நாட்டு இளவரசிக்குத் துணையாகச் செல்லவும் அவர்கள் இருவருமே முற்றிலும் எதிர்பாராத மனிதனொருவன் அதே சமயத்தில் நாகையில் காலடி எடுத்து வைத்துக் கொண்டிருந்தான்.

**நா**கையின் அந்தத் துறைமுகத்தில் ஒரே சமயத்தில் ஐந்தாறு கலங்களுக்கு மேல் நுழையவும், நங்கூரம் பாய்ச்சவும் இயற்கை அனுமதிக்காததால் துறைமுகத்திற்குச் சற்றுத் தள்ளி சீன, அராபிய, கடாரத்துக் கலங்களும், சோழர் கடற்படையின் சில கலங்களும் கடலில் நங்கூரமிட்டு ஆடியபடி நிலவொளியில் குளித்துக் கொண்டிருந்தன. முதல் ஜாமம் முடியும் நேரத்தில் துறைமுகத்தினுள் நுழைய முற்பட்ட சீனத்துக் கலம் ஒன்றின் மேல் தளத்தில் நின்றிருந்தான் அவன். நாகையின் துறைமுகப் பகுதியையும், தூரத்தே தீபங்கள் ஒளிப் புள்ளிகளாகத் தெரிந்த சூளாமணி விஹாரமிருந்த பகுதியையும் வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான் அந்த சீனத்து வாலிபன். பார்வைக்கு மெலிதாகத் தெரிந்த அவன் தேகம் ஏதோ இரும்பில் வார்க்கப்பட்டது போல உறுதியாக இருந்ததன்றி, திடமாகப் பக்கப் பலகையை பற்றி நின்ற அவன் நீண்ட கரத்தில் தென்பட்ட வாள் வடுக்கள் அவன் சாதாரணப் பயணியோ, அல்லது வணிகனோ அல்ல என்று நிரூபித்தன. வாளின் கூர்மையை விட அதிகக் கூர்மையாக ஜொலித்த அவன் மஞ்சள் விழிகளும், சீனத்து மிங் இனத்து அரசகுமாரர்களைப் போல் முதுகில் கட்டப்பட்டு, தோளுக்கு மேல் எட்டிப் பார்த்தபடியிருந்த வாளின் பிடியும் அவன் வணிகனல்ல என்பதை உறுதி செய்தன. அதைவிட அவன் கழுத்திலாடிய சங்கிலியில் இணைக்கப்பட்டிருந்த பதக்கம், பார்ப்பவர் கவனத்தை சற்று இழுத்து நிற்க வைத்தது. அந்தப் பதக்கத்தில் பொறிக்கப்பட்டிருந்தது ஒரு கடல் நாகம். அதன் பச்சைக் கற்கள் பதிக்கப்பட்ட விழிகள் நாகைத் துறைமுகத்தை நோக்கி விழித்துக் கொண்டிருந்தன.

துறைமுகத்தை அடைத்து நாகையில் அடியெடுத்து வைத்த அந்த வாலிபனையும் அந்த பதக்கத்தையும் கண்ட துறைமுகக் காவலர்கள் முகங்களில் அபரிமிதமான கிலி படர்ந்தது. "யாங்சின், யாங்சின்"என்று தங்களையறியாமல் உச்சரித்தார்கள்! காவலர்களின் கிலியைக் கவனித்த வாலிபன் முகத்தில் மாற்றமேதும் தெரியவில்லை. அவன் அதை எதிர்பார்த்திருந்ததாகவே தோன்றியது. நிதான நடையுடன் காவலர்களை நெருங்கிய அந்த வாலிபன் கரத்தில் சிறு முடிப்பொன்றும் தோன்றியது.

"காவலரே, இதில் நூறு பொற்காசுகள் இருக்கின்றன. இதை வைத்துக் கொண்டு எனக்கு ஒரு புரவியைக் கொடுங்கள். நான் சூளாமணி விஹாரம் வரையில் செல்ல வேண்டும்'' என்றான் அவன்.

அந்த சீனன் அளித்த முடிப்பைத் தொடவும் அஞ்சிய காவலன் சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்த பார்வையில் எச்சரிக்கை தெரிந்தது. சீனத்து வணிகர்கள் சுங்கக் காவலர்களுடன் நடத்திக் கொண்டிருந்த விவாதங்களும், பொதிகளை இறக்கிக் கொண்டிருந்த அடிமைகள் இட்ட கூச்சலுமாக துறைமுகப் பகுதி நிறைந்து கிடப்பதையும், வணிகர்களை அச்சுறுத்திக் கொண்டிருந்த போசள வீரர்களின் கவனம் தனியாக வந்திருக்கும் அந்த சீனன் மீது அதிகம் திரும்பாமலிருப்பதையும் கவனித்த காவலன், அந்த வாலிபனை பக்கவாட்டு வாயிலொன்றின் வழியே துரிதமாக அழைத்துச் சென்றான். காவலர்களின் புரவிகளுக்கு நடுவே நின்றிருந்த தனது புரவியை நடத்திக் கொண்டு வந்தவன், ''பிரபு, புரவி இதோ இருக்கிறது. அந்த முடிப்பைத் தாங்களே வைத்துக் கொள்ளுங்கள். இங்குள்ள போசள வீரர்களில் ஒரு சிலர் மட்டுமே தங்களை அறிவார்கள். எனினும் தாங்கள் துரிதமாக சூளாமணி விஹாரத்தை அடைந்து விடுவது உசிதம்''என்றான் படபடப்புடன்.

இத்தனைக்கும் அந்த சீனத்து வாலிபனின் மஞ்சள் முகத்தில் எந்த மாறுதலும் தெரியவில்லை. அவன் மெல்லிய உதடுகளின் மீது 'ப'கர வடிவில் கவிழ்ந்து நீண்டிருந்த மீசை மட்டும் ஒரு புறமாக இழுபட்டு அவன் முறுவலிப்பதை உணர்த்தியது.

அந்தக் காவலனை நோக்கி சீனத்துப் பாணியில் தலையைச் சரித்து நன்றி கூறிவிட்டுப் புரவியிலேறிக் கிளம்பி, சூளாமணி விஹாரத்தை நோக்கிச் சென்ற பாதையில் திரும்பியதும், அரையிருளில் பாதையை மறித்து புரவி வீரர் நால்வர் நிற்பதைக் கண்டான். அந்தக் காவலன் விடுத்த எச்சரிக்கை எத்தனை உண்மையென்பது புரிந்தது.

எதிரில் நின்றிருந்த நால்வருள் தலைவ

னாகத் தோன்றியவனிடமிருந்து அதிகாரத் துடன் சொற்கள் உதிர்ந்தன: "யாங்சின், புரவி யைத் திருப்பு. உன் சீனத்துத் தந்திரமெதையும் காட்ட முயல வேண்டாம். எங்களுடன் வா!"

சீனத்து வாலிபனின் பதில் திடமாக வந்தது. "மன்னிக்க வேண்டும் வீரர் தலைவரே, நீங்கள் கூறும் யாங்சின் நானல்ல. நான் சூளாமணித் தலைவர் புத்த மித்திரரைச் சந்திக்க சீனத்தி லிருந்து இப்பொழுதுதான் வருகிறேன். என் னைச் செல்ல விடுங்கள்."

ஒருவரையொருவர் பார்த்து விழித்த அந்த நான்கு வீரர்களும் வாலிபனின் வார்த்தைகளில் ஒன்றைக்கூட நம்பவில்லை என்பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. "யாங்சின், நீயாக வர மறுத்தால் உன்னைக் காயப்படுத்தி இழுத்துச் செல்லவும் உத்தரவிருக்கிறது"என்ற வீரர் தலை வன் தன் அகலமான வாளை உருவினான். மற்றவர்களின் வாட்களும் வெளியில் வந்து இருளில் மின்னின.

அப்பொழுதும் அந்த வாலிபனின் முகத்தில் அதிக மாறுதலேதும் தெரியவில்லை.. அவன் குரலும் வெகு நிதானத்துடன் ஒலித்தது, "உங்கள் விருப்பம் அதுதானென்றால் அதை நிறைவேற்ற எந்தத் தடையுமில்லை, வாருங் கள்"என்ற வலிபனின் முதுகில் அதுவரை கட்டப்பட்டிருந்த அந்த சீனத்து வாள் கண்ணி மைக்கும் நேரத்தில் அவன் கரத்தில் தோன்றி யது. ஆனால் எதிரில் நின்ற வீரர்கள் வாலி பனை நெருங்கத் தொடங்கும் முன்பாக காற் றில் விர்விர்ரென்ற ஒலி சீனனின் பின்புற மிருந்து எழுந்தது. அடுத்த கணம் வரிசையாக நின்றிருந்த வீரர்கள், மார்பில் பாய்ந்த அம்பு களுடன் நிலத்தில் உருண்டனர்.

சீனன் முகத்தில் முதன் முறையாகத் திகைப்பு தெரிந்தது. ஒரு கரத்தில் சோழ நாட்டுப் போர் வில்லுடனும் மறுகரத்தில் இன்னுமிரு கணைகளுடனும் பக்கவாட்டி லிருந்து ஒருவன் வெளியே வந்தான். வந்தவன் முகத்தில் சோழ நாட்டவன் என்பது எழுதி ஒட்டியிருந்தது. வாலிபனை அணுகி அவனை ஏற இறங்கப் பார்த்தவன் விழிகளிலும் அடுத்து உதிர்ந்த சொற்களிலும் விஷமம் சொட்டியது. "அந்தப் போசளர்கள் உங்களை யாங்சின் என்று எண்ணியதில் தவறேதுமில்லை. அதே மெல்லிய திடமான உருவம், வயதை நிர்ண யிக்க முடியாத மஞ்சள் முகம், சிறிய கூர் விழி கள், கடல் நாகம் பதித்த அதே பதக்கம்..."

சொல்லிக் கொண்டே போனவனை சீனனின் கரம் உயர்ந்து தடுத்தது, "நில்லுங்கள், என்னை வர்ணித்தது போதும். யார் நீங்கள்? இவர்கள் என்னை வழிமறிக்கப் போவது உங்க ளுக்கு முன்பே தெரியுமா?" சீனனின் கேள்வி யில் ஆவல் தெறித்தது.

எதிரில் நின்றவன் பதில் நிதானமாக வந்தது, "நான் சோழ ஒற்றர் படையைச் சேர்ந் தவன். பெயர் விஜயன். நீங்கள் வரும் செய்தி ஒரு திங்களுக்கு முன்பே கிடைத்தது. இவர் களைத் தேடி மற்ற வீரர்கள் வருமுன்பாக நாம் இங்கிருந்து விலகி விடுவது நல்லது, வாருங் கள்"என்றவன் அடுத்து எழுப்பிய குரலுக்குப் புரவி ஒன்றும் ஓடிவந்தது. அடுத்த கணம் இரு புரவிகளும் சூளாமணி விஹாரத்தை நோக்கி விரைந்தன.

விஹாரத்தின் வாயிலை அடைந்ததும் விஜயனைக் கண்டு திறக்கப்பட்ட கதவுகளை யும் உள்ளே பிரும்மாண்டமாக எழுந்து நின்ற கட்டடங்களையும், ஸ்தூபிகளையும் கண்டு பிரமித்த சீனனை அணுகினான் விஜயன். "சீனத்து வீரரே, உங்களுக்காகத் தலைவர் காத்துக் கொண்டிருக்கிறார். நாம் பிறகு சந்திப் போம், வருகிறேன்"என்று கூறிவிட்டுத் திரும்பி இருளில் மறைந்தான்.

புரவியை உள்ளே செலுத்திய சீனன், விஹா ரத்தின் படிகளில் வந்து இறங்கிய பொழுது, சூளாமணி விஹாரத் தலைவர் வாயிலிலே நின்றிருந்தார். பக்கங்களில் எரிந்த பந்தங்களின் ஒளியில் அந்த சீனனைக் கவனித்த அவரது முகத்தில் ஒரு வியப்பு கண நேரமே தோன்றி மறைந்தது. அடுத்து அதில் ஒரு சாந்தியும் படர்ந்தது. படிகளில் ஏறி சூளாமணித் தலை வரின் பாதம்வரை தலையைத் தாழ்த்தி வணங் கிய சீனனை தலையைத் தொட்டு ஆசியளித்த புத்தமித்திரரின் குரலிலும் பெரும் சாந்தி ஒலித்தது. "யுவான், உள்ளே வா. நல்ல சமயத் தில்தான் நீ வந்திருக்கிறாய்"என்றபடியே அவன் தோளைப் பற்றி அழைத்துச் சென்றார். உள்ளே விரிந்த பெரும் மண்டபத்தையும் பிரும் மாண்டமான புத்தர் சிலையையும் கண்டு பிர மித்த யுவானை அமரப் பணித்த சூளாமணித் தலைவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தபடியே மெல்ல உலவினார்.

"யுவான், உன் ஓலை எனக்குக் கிடைத்து ஒரு திங்களாகிறது. உன் தந்தை யாங்சின்னைப் பற்றி நான் அறிய எடுத்துக் கொண்ட முயற்சி கள் ஏதும் பயனளிக்கவில்லை. அவர் போசளர்



"வாங்கின கடனைத் திருப்பிக் கேட்டு நீங்க என் வீட்டுக்கு நடையா நடக்கறது இன்னியோட முடிவுக்கு வந்துடும்!"

"அப்ப பணத்தை நாளைக்குத் திருப்பறீங்களா?"

"ஊஹூம். உங்க தெருவுக்கே குடி வர்றேன்!"

— மயிலாடுதுறை ஆர். ஜெயந்தி



கிறிஸ்துமஸ் சீசனையொட்டி, 'மிராகிள் ஆன் தர்டிபோர்த் ஸ்ட்ரீட்' என்றொரு ஆங்கிலப் படம் வெளியிடப்படும். 'சாண்டா கிளாஸ்' (கிறிஸ்துமஸ் தாத்தா) வேஷம் போடுபவருக்கும் குழந்தைகளுக்கும் இடையேயான உறவு பற்றியது. சாண்டாவாக நடிப்பவர் ரிச்சர்ட் அட்டன்பரோ.

— அ. குமார்

களால் சிறை செய்யப்பட்டார் என்பதைத் தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. நீயே நேரில் சென்று அறிந்து வர சந்தர்ப்பம் ஒன்று இப்போது கிடைத்திருக்கிறது. ஆனால்..." சிந்தனையுடன் உதிர்ந்த புத்தமித்திரரின் சொற்கள் பாதியில் நின்றன.

"ஆனால் என்ன தந்தையே?"- யுவானின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"ஆனால் அதில் அபாயங்கள் அதிகம். அதிலும் நீ அச்சாக உன் தந்தையைப் போலவே இருப்பது பெரும் அபாயம்!"

"அபாயம் வீரர்களுக்கு விருந்தல்லவா தந்தையே?"என்றான் யுவான்.

சுளீரென்று சாட்டையால் அடிக்கப்பட்டவர் போல் நிமிர்ந்த துறவியின் விழிகளில் வியப்பு வழிந்தது. "இதே வார்த்தைகளைத் தான் உன் தந்தை அடிக்கடி கூறுவார்" என்றவர், "யுவான், கவனமாகக் கேள். தற்போது போசளர் வசத்திலிருக்கும் கொங்கு நாட்டின் இளவரசி இங்கிருக்கிறாள். அவள் தந்தையின் ஓலைப்படி நாளைக் காலை அவள் பயணப்பட வேண்டும். நீ அவளுக்குத் துணையாகச் செல். உன் தந்தையைப் பற்றி அறிய கொங்கு நாட்டில் வாய்ப்புகள் கிடைக்கலாம்" என்றார்.

**து**றவியின் ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்ட யுவான், மறுநாள் உதயநேரத்திற்கு முன்னதாகவே பயணத்திற்குத் தயாராக நின்றிருந்தான். இளவரசிக்கு யுவானை அறிமுகப்படுத்திய சூளாமணித் தலைவர் பூங்கோதையுடன் இரு தோழிகளையும் ரதத்தில் ஏற்றி யுவான் ரதத்தைத் செலுத்திவர, சுற்றிலும் வீரர் இருபதின்மர் சூழ்ந்து வர அனுப்பி வைத்தார். ரதம் விஹாரத்தைவிட்டு வெளியேறி வெகுதூரம் சென்றபின்பும் அங்கேயே நின்றிருந்த சூளாமணி தலைவரின் மனத்தில் ஏனோ இனமறியாத கலக்கம் தோன்றியபடியே இருந்தது. அவர் கலக்கத்தை இன்னும் அதிகப்படுத்த சரியாக ஒரு ஜாமம் கழித்து ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

ஆஜானுபாகுவான சிவந்த மேனியிலும் அகன்ற நெற்றியிலும் நீறு பளிச்சிட, நீண்ட சடையுடனும் வெளேரென்ற தாடியுடனும் விஹாரத்தினுள் அதிவேகமாகப் பிரவேசித்தார் தஞ்சையின் சைவத் துறவியார். பணியாட்களையும் காவலர்களையும் வெகு அலட்சியமாக ஒதுக்கிவிட்டு, விறுவிறுவென்று படிகளில் ஏறி, சூளாமணித் தலைவரின் அறைக்குள் நுழைந்தவர், உக்கிரமான பார்வையுடன் அவர் எதிரில் நின்றார்.

யாருடைய வருகைக்காகவும் அனுமதிக்காகவும் முன்தினம் வரை சூளாமணித் தலைவர் காத்துக் கிடந்தாரோ, அந்த சைவத் துறவியார் இளவரசி பயணப்பட்ட ஒரு ஜாமம் கழித்து திடும் பிரவேசமாக உள்ளே நுழைந்ததையும், அவர் பெரு விழிகள் பொழிந்த உக்கிரத்தையும் கண்ட விஹாரத் தலைவர் வரவேற்கவும் வார்த்தைகள் வராமல் திகைத்தார்.

குற்றம் புரிந்துவிட்ட ஒற்றனை விசாரிக்கும் மன்னனின் உக்கிரத் தொனி சைவத் துறவியாரின் குரலில் ஒலித்தது, "இளவரசியை அனுப்பி விட்டீரா?"என்று.

பதிலுக்கு அருகிலிருந்த குழலிலிருந்து கொங்கு மன்னனின் ஓலையை எடுத்து நீட்டிய சூளாமணித் தலைவரின் குரல் சற்றுத் தடுமாறியே ஒலித்தது. "இதோ கொங்கு மன்னன் அவந்தனின் ஓலை. உடன் இருபது வீரர்களும் ரதத்துடன் வந்திருந்தார்கள். ஒரு ஜாமத்திற்கு முன்புதான் அனுப்பி வைத்தேன்"என்றார் சூளாமணித் தலைவர்.

அடுத்த கணம் அந்த ஓலை அவர் கரத்திலிருந்து பறிக்கப்பட்டுக் கசங்கி, அறையின் மூலையை நோக்கிப் பறந்தது. கூடவே சைவத் துறவியாரிடமிருந்து உதிர்ந்த சொற்கள் சூளாமணித் தலைவரின் தலையில் பெரும் இடிகளாக இறங்கின.

"இந்த ஓலை போலியென்பது புரியவில்லையோ உமக்கு? உடன் வந்த வீரர்கள் போசளத் தண்ட நாயகன் சிங்கணன் அனுப்பி வைத்தவர்கள் என்பது தெரியுமா உமக்கு?" -அதி உக்கிரத்துடன் இரைந்தார் சைவத் துறவியார்.

(தொடரும்)

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை
## கம்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில் ஆங்கிலம், தமிழ் ரூ. 40/-
எதிர்கால கணிப்புடன் ரூ. 120/-
ஆண்டு பலன் : ரூ. 50/-
கல்யாண பொருத்தம் : ரூ. 40/-

**ASTROLOGY SOFTWARE FOR SALE.**

## ஸ்வயம்வராலயா

(GOVT. REGD.)

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. போன் : 425822,

7-ஏ, சாந்தி வஹூார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4. போன் : 846278,

88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph. : 3340146

## THUS SPAKE THE PARAMACHARYA



A volume in about 900 Pages being the Translation into English of the Divine Speeches of Sri Paramacharya Swamigal under the title, "THUS SPAKE THE PARAMACHARYA" is to be released shortly. The book will contain the select speeches of Sri Paramacharya Swamigal on a variety of Topics. The volume is prepared and compiled by "Vidhya Seva Rathna" Sri A. Ganapathi Raman M.A., M.Ed retired Headmaster of Dalmia Hr. Sec. School, Dalmiapuram. The book will be priced Rs.300/-, with Maha Swamigal Silver Dollar. Pre-publication price for those who remit money for the book before 21-1-96 will be Rs.250/-. Amount to be remitted to **Sri. A. Ganapathi Raman, No.7, Ganesh Nagar, Lalgudi, Tiruchi District, Tamil Nadu. Pin.621 601**. Book, Dollar will be sent by Reg. Post.



ADYAR

## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

**XEROX**
**LASER PRINTING**
**WORD PROCESSING**
**DTP**
**ELECTRONIC & MANUAL TYPING**
**BINDING & LAMINATION**

## RAMACHANDRA SAREES

*Quality & Quality*

தரம் தரம் தரம்தவிர வேறில்லை!
உயர்ரக Madurai Sungudi
புடவைகள் வழங்குபவர்கள்

ராமசந்திரா சாரீஸ்
RAMACHANDRA SAREES



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop 3rd Street,
West Mambalam, Madras - 33.
Ph : 4896532

**Other Attractions :**
BENGAL, COIMBATORE KORA, DEVENDRA & VENKATAKIRI.

வழங்குபவர்கள் : Ramachandra Sarees 20 B. Old Kuyavar palayam road, Madurai - 625 009.



### சென்ற வாரம்....

போசளர்களும் காகதீயர்களும் தமிழகத்தை ஆதிக்கம் செய்து கொண்டிருந்த காலம். சோழ மன்னன் அவநிதன் மகள் பூங்கோதையின் பாதுகாப்புக் கருதி, மன்னனின் நண்பரான சைவத் துறவியொருவர், நாகை சூளாமணி விஹாரத்தின் தலைவர் புத்தமித்திரர் பொறுப்பில் விட்டுச் செல்கிறார். திடீரென்று அவநிதனிடமிருந்து பூங்கோதையை அனுப்பி வைக்கும்படி ஓர் ஓலை வருகிறது.சீன இளைஞன் யுவான் பாதுகாப்பில் பூங்கோதையை அனுப்பி வைக்கிறார் புத்தமித்திரர். அவள் சென்ற சிறிது நேரத்தில் அங்கே வந்த சைவத் துறவி, ஓலையை வாங்கிப் பார்த்து விட்டு, "இது போலி ஓலையாயிற்றே, எப்படி அனுப்பி வைத்தீர்கள் பூங்கோதையை?" என்று உக்கிரத்துடன் இரைகிறார்....

## 2. பழங்கதை

சூளாமணி விஹாரத்திற்கும், நிகரற்ற வீரர்களை தமிழகத்திற்கு உருவாக்கி அளித்துக் கொண்டிருந்த அதன் கடிகைக்கும் தலைவரான புத்தமித்திரரை இத்தனை உக்கிரமான குரலில் ஏதோ குற்றவாளியை விசாரிப்பது போல் ஒருவர் மிரட்ட இயலும் என்று கனவிலும் பணியாட்கள் எதிர்பார்க்கவில்லை.

திகைப்பில் சிலைகளாக நின்று விட்டார்கள். சற்றைக்கெல்லாம் அறைக்குள் ஒலித்த குரல்கள் மெல்ல மட்டுப்படத் தொடங்கின. உரையாடலை அங்கு நின்று மேற்கொண்டு கேட்பது பெருங்குற்றம் என்பதை உணர்ந்த

# இந்திரதனுசு

## விஷ்வக்சேனன்

வீரர்களும் பணியாட்களும் ஒருவரையொருவர் பார்த்தபடி மெல்லக் கலையத் தொடங்கினார்கள்.

எதிரே ஆஜானுபாகுவாக நின்ற சைவத் துறவியாரின கைகள் யானையின் துதிக்கைகளைப் போல வலுவுடன் பருத்து வளைந்து, இடுப்பில் பதிந்து நின்றன. அவரது பெருவிழிகளில் தெறித்த உக்கிரத்தை கவனித்த சூளாமணி விஹாரத் தலைவரின் சித்தம் பெரிதும் குழம்பிக் கிடந்தது.

'மனிதன், செய்து விட்ட தவறுகளையும் இனி செய்யப் போகும் தவறுகளையும் எண்ணியே பாதி வாழ்நாளைக் கழிக்கிறான். எஞ்சியிருக்கும் வாழ்நாள் செய்த தவறுகளுக்குப் பரிகாரம் காணவே சரியாயிருக்கிறது. எனவே அதிலிருந்து தப்ப புத்த பிரானின் திருவடிகளைச் சேர்ந்து விடு' என்று துறவறம் பெற்ற போது கிடைத்த உபதேசத்தை ஒருமுறை எண்ணிக் கொண்டார் அவர். நாசியிலிருந்து பெருமூச்சொன்றும் வெளிவந்தது.

புத்தமித்திரரின் சோகத்தையும் பெருமூச்சையும் கவனித்த சைவத் துறவியாரின் உக்கிரம் சற்று இறங்கியது. தமது குரலை அடக்கிக் கொண்டவர், "புத்தமித்திரரே, உமது செய்கையின் விளைவு என்ன என்பது புரிகிறதா உமக்கு? பதினெட்டு ஆண்டுகளாகக் கட்டிக் காத்த பொக்கிஷத்தை வெகு எளிதாக போசள சிங்கணனிடம் சிக்க விட்டு விட்டீர்" என்றார்.

தலையைக் குனிந்தபடியே அறைக்குள் மெல்ல உலவிய சைவத் துறவியாரின் குரலில் கனவுச் சாயை படரத் தொடங்கியது. "புத்தமித்திரரே, சற்று எண்ணிப் பாரும். சோழ இராஜாதி ராஜர் பாண்டியரிடமிருந்தும், உட்பகையை வளர்த்த உறவினன் காடவகோப் பெருஞ்சிங்கனிடமிருந்தும் சோழ அரசைக் காக்க போசள மன்னன் வீர சோமேஸ்வரனிடம் உதவி கோரினார். மீண்டும் புரட்சி எழுந்த போது காகதீயரிடம் உதவி கோரினார். இருவருமே உதவத்தான் செய்தனர். ஆனால் அதற்கு விலையாகப் போசளர்கள் மெல்ல மெல்ல சோழ நாட்டையும் கொங்கு நாட்டையும் வசப்படுத்திக் கொண்டனர். காகதீயர் சார்பாக விஜயகண்ட கோபாலன் தொண்டை மண்டலத்தை எடுத்துக் கொண்டான். சோழ நாட்டில் வேரூன்ற எண்ணிய வீர சோமேஸ்வரன் சோழ வம்சத்தின் ஒரே வாரிசான சோழ இளவரசியை மணக்க எண்ணினான். ஆனால் இளவரசி கொங்கு மன்னன் அவந்தனை விரும்பி மணந்து கொண்டாள். ஆனால் இது நடந்து ஆண்டுகள் பதினெட்டு ஓடிவிட்டன'' - பேச்சை சற்று நிறுத்திய சைவத் துறவியாரின் முகத்தில் இன்னும் கனவுச் சாயை படர்ந்து கிடந்தது.

அந்த கனவுச் சாயை சூளாமணித் தலைவரின் விழிகளிலும் தெரிந்தது. அவரது விழிகள் சாளரத்தின் வழியே எங்கோ வானத்தை வெறித்துக் கிடக்க, உதடுகள் மெல்ல "பழங்

# அருள்வாக்கு



ஐம்புலன்களே நமக்கு வாழ்வின் சகல ஆனந்தத்தையும் சாத்தியமாக்குகின்றன. நல்ல சாப்பாடு, ரம்மியமான சங்கீதம், சுகந்தம், குளிர்ந்த தென்றல், பூரண சந்திரனின் காட்சி இவை நமக்கு ஐம்புலன்களாலே அனுபவத்துக்கு வருகின்றன. மனிதனுக்கு இந்த ஐம்புலன்களைத் தந்து, இவற்றுக்கு ஆதாரமாக வெளியே ஐம்பூதங்களிலிருந்து தோன்றும் சுவை, மணம் முதலிய அழகுகளையும் வைத்திருப்பவர் ஸ்வாமி. அவரது கிருபையால்தான் சகல இன்பங்களும் கிடைக்கின்றன. நம்மால் ஒரு மணி அரிசி சிருஷ்டிக்க முடியாது. ஸ்வாமியே இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து, அதன் அழகுகளை நாம் அனுபவிப்பதற்காக நமக்கு பஞ்ச இந்திரியங்களையும் சிருஷ்டித்துத் தந்திருக்கிறார். ஆனபடியால் நமது புலன்களால் அனுபவிக்கும் இன்பங்களை ஸ்வாமியின் நினைவோடு அனுபவிப்பதே நமது கடமையும் தர்மமுமாகும்.

அவருக்கு இந்த இன்பங்களை முதலில் அர்ப்பித்து, அவரது பிரசாதமாகவே அவற்றை நாம் ஏற்க வேண்டும். இந்த வழக்கம் நிலைப்பட்டால் ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்யத் தகாத எந்தப் பொருளையும் நமது புலன்களால் அனுபவிக்கக் கூடாது என்ற பக்குவம் உண்டாகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

கதை" என்று முணுமுணுத்தன.

சைவத் துறவியாரின் குரல் தொடர்ந்து ஒலித்தது. "ஆம் புத்தமித்திரரே, பழங்கதைதான். ஆனால் பழங்கதையிலிருந்து புதுக்கதைகள் பிறக்கின்றன. உட்பகையைப் பேச்சுவார்த்தை மூலமாகவோ, போரிட்டோ தீர்த்துக் கொள்ளாமல், சோழ ராஜராஜர் அன்னியரை உதவிக்கு அழைத்தது பெரும் பிசகுதான். விளைவாக இப்போது பட்டமேற்ற ராஜேந்திர சோழருக்கு எந்த அதிகாரமும் இல்லை. போசளர் தயவில் ஆட்சி நடக்கிறது. கொங்கு மன்னனுக்கு இந்தப் பூங்கோதையை அளித்துவிட்டு, சோழ இளவரசியும் மறைந்து போனாள். ராஜேந்திரருக்கும் வாரிசு இல்லை. பூங்கோதையை தம் மகனுக்கு வற்புறுத்தி மணமுடித்து விட்டால் பிறகு சோழ நாட்டிலும் கொங்கு மண்ணிலும் வேரூன்றி விடலாம் என்று வீர சோமேஸ்வரன் மனப்பால் குடிக்கிறான். நீரும் உண்மையை அறியாமல் அவன் தண்டநாயகன் சிங்கணனின் வீரர்களுடன் இளவரசியை அனுப்பி விட்டீர்."

புத்தமித்திரர் மெல்லிய குரலில் பதிலளித்தார், "துறவியாரே, உடன் சென்றிருப்பது சிங்கணன் வீரர்கள் மட்டுமல்ல, யுவானும் சென்றிருக்கிறான்."

துறவியாரது பெருவிழிகள் இன்னும் அகன்றன. "யார், யாங்சின்னின் மகனா?" அவர் கேள்வியிலும் வியப்பு ஒலித்தது.

"ஆம். தந்தையைத் தேடி யுவான் நேற்று சீனக் கலத்தில் வந்தான். அவனையும் உடன் அனுப்பியிருக்கிறேன்" என்றார் சூளாமணி விஹாரத் தலைவர்.

அடுத்த சில கணங்கள் தீவிர சிந்தனையிலிறங்கிய சைவத் துறவியாரின் முகத்தில் தெளிவு புலப்பட்டது. அடுத்து ஓலைகளையும் எழுத்தாணியையும் கொண்டு வர வாயிலிலிருந்த வீரனைப் பணித்த துறவியார் ஓலைகளில் விறுவிறுவென்று ஏதோ எழுதத் தொடங்கினார். எழுதி முடித்து, புத்தமித்திரரிடமும் ஓர் ஓலையை எழுதி வாங்கி, அவற்றைக் குழல்களில் இட்டு அடைத்தவர் மீண்டும் வாயிற்காவலனை அழைத்தார்.

"வீரனே, நீ சென்று முன்னறையில் இருக்கும் என் சீடனை அழைத்து வா" என்று உத்தரவும் பிறப்பித்தார்.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்தவன் துறவியாரின் சீடனாகத் தெரியவில்லை. சோழ வீரர் உடையுடனும் நீண்ட வாளுடனும் முகத்தில் சோழ நாட்டு விஷமம் மின்ன உள்ளே நுழைந்து வணங்கியவனைக் கண்ட சூளாமணி விஹாரத் தலைவர் விழிகளில் வியப்பு வழிந்தது. "துறவியாரே, விஜயனும் தங்களுடன் வந்திருக்கிறானா?" என்ற கேள்வியும் அவரிடமிருந்து உதிர்ந்தது.

அவர் கேள்விக்கு பதிலேதும் கூறாத சைவத் துறவி, விஜயனுக்கு அடுத்து இட்ட உத்தரவுகள் சூளாமணித் தலைவரின் வியப்பை இன்னும் உயர்த்தின.

"விஜயா, கொங்கு நாட்டின் தென்பகுதியில் பாண்டிய இளவல் இருக்கிறான். நீ காற்று வேகத்தில் செல்ல வேண்டும். இந்த ஓலைக் குழலை அவனிடம் அளித்துவிட்டு, இன்னொரு குழலை பாண்டியர் தலைநகரில் சேர்த்து விடு. பின்பு ஏற்கெனவே இட்ட பணியைக் கவனிக்கலாம்" என்றார் சைவத் துறவியார்.

ஓலைக் குழல்களைப் பெற்றுக் கொண்ட

விஜயன், மீண்டும் தலைவணங்கிவிட்டு வெளியேறினான்.

அவன் வெளியேறியதும் சைவத் துறவியாரை ஏறிட்ட சூளாமணி விஹாரத் தலைவருக்கு எந்த விளக்கமும் அவசியமில்லாமற் போயிற்று. அன்னியர் பிடியிலிருந்து தமிழகத்தை விடுவிக்க, தமிழகத்து மன்னர்கள் இணைய வேண்டும் என்று சைவத் துறவியார் அடிக்கடி கூறி வந்ததையும், அவரது அந்த திட்டத்தின் முதற்படி துவங்கி விட்டது என்பதையும் புரிந்து கொண்ட சூளாமணித் தலைவரின் முகத்தில் ஆனந்தம் தோன்ற ஆரம்பித்தது.

'இயல்புக்கு மாறாக நடக்கும் மனிதர்களையும், சந்தேகத்திற்குட்பட்டவர்களையும் உடனடியாகக் கொன்றுவிடுவதே சிறந்தது' என்ற சீனத்து சித்தாந்தத்தில் முழு நம்பிக்கை வைத்திருந்தான் யுவான். அந்தப் பயணத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே அவனுக்குச் சந்தேகம் தோன்ற ஆரம்பித்து விட்டது. கொங்கு இளவரசியும் தோழியருமிருந்த ரதத்தைச் செலுத்திக் கொண்டிருந்த யுவான், உடன் வந்த வீரர்கள் ரதத்தின் முன்னும் பின்னுமாக வரத் தொடங்கி விட்டதையும், நேர் மேற்கு நோக்கிச் செல்ல வேண்டிய பிரதானப் பாதையை விடுத்து பயணம் வடமேற்காகத் திரும்பி விட்டதையும் கவனித்தான். அந்த வீரர்களின் பார்வைகள் அடிக்கடி சந்தித்து ரகசியம் பேசியதையும், போதாக்குறைக்கு அவர்கள் இடையிடையே உச்சரித்த இரண்டொரு வார்த்தைகளையும் கவனித்தவன் இவர்கள் நிச்சயம் கொங்கு நாட்டின் வீரர்களாயிருக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்டான். அவன் கூரிய அறிவிற்கு அவர்கள் போசள வீரர்கள் என்பதும், தங்களை போசளர் தலைநகருக்கு அழைத்துச் செல்ல முற்படுவதும் புரிந்தது.

அந்த சந்தேகம் ரதத்தினுள் அமர்ந்து வந்து கொண்டிருந்த இளவரசிக்கும் வந்திருக்க வேண்டும். ரத சாரதியின் நேர் முன்புறமிருந்த சீலையை விலக்கியவள் "சீனத்து வீரரே!" என்று மெல்ல அழைத்தாள்.

"என் பெயர் யுவான், இளவரசி" என்றான் யுவான் ரதத்தின் பாதையிலிருந்து விழிகளை அகற்றாமலே.

"யுவான், நாம் செல்வது கொங்கு நாட்டுப் பாதையாகத் தெரியவில்லையே" என்றாள் பூங்கோதை.

"ஆம் இளவரசி. எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் நீங்கள் அஞ்ச வேண்டாம். நான் கவனித்துக் கொள்கிறேன்" என்றான யுவான.

என்ன காரணத்தாலோ யுவானின் வார்த்தைகள் தனக்குப் பெரும் நம்பிக்கையளிப்பதை உணர்ந்த பூங்கோதை, மேற்கொண்டு ஏதும் பேசாமல் ரதத்தின் பக்கச் சீலையை விலக்கி பாதையெங்கும் விரிந்திருந்த பசுமையை ரசிக்க ஆரம்பித்தாள். பசுமை என்ற ஒரு பொது நிறத்திலேயே பலவித வண்ணபேதங்களைக் காட்டிக் கொண்டிருந்தது இயற்கை. வயல்களின் மரகதப் பச்சை, தளிர் நாற்றுக்களின் இளம் பச்சை, முற்றிய கதிர்களின் பொன்னிறம் கலந்த பச்சை, வாழையும் தென்னையும் காட்டும் வேறுவித பச்சை, குறுக்கே பாய்ந்த கால்வாய்களின் ஓரங்களில் விளைந்த கோரைகளின் பச்சை என்று வண்ண ஜாலங்களை வாரி இறைத்துக் கொண்டிருந்தது பசுமை. சோழ நாட்டின் எல்லை கடந்த பின்பு, இயற்கையின் வண்ணம் மாறத் தொடங்கியது.

சிறு குன்றுகளும், புதர்களும், மரங்களும் அடர்ந்த வனப்பகுதி நேர் எதிரில் தோன்ற ஆரம்பித்தது. தமிழகத்தைப் பற்றி சீன வணிகரிடமும், சூளாமணி விஹாரத் தலைவரிடமும் அறிந்த விவரங்கள் சரியானால், எதிரிலிருக்கும் வனப்பகுதி காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனின் ஆளுகைக்கு உட்பட்ட வனப்பகுதியாகத்தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான் யுவான். அப்படியானால் காடவர்களின் குறுக்கீடு ஏதும் இல்லாத பட்சத்தில் மட்டுமே இந்த வீரர்கள் போசளர் தலைநகரை அடைய இயலும் என்பதும் புரிந்தது அவனுக்கு.

மாலைப் பொழுது முற்றி விட்டது. காடவருக்குச் சொந்தமான பகுதியைக் கடக்க வேண்டிய அபாயத்தை அந்த வீரர்களும் உணர்ந்திருக்க வேண்டும். பயணத்தை அத்துடன் நிறுத்திய வீரர்கள் இளவரசி தங்கவும், உணவுக்கும் அருகிலிருந்த சத்திரமொன்றில் ஏற்பாடுகள் செய்தனர்.

மீண்டும் உதய நேரத்தில் தொடர்ந்த

## வித்தியாசம்....

'அதோ போகிறாரே, அவர் ஒரு காலத்தில் லட்சாதிபதியாக இருந்தார்; இன்று ஏழையாக அலைகிறார்' என்று சிலரைப் பார்த்துக் கூறுவதுண்டு. 'அதோ போகிறாரே அவர் ஒரு காலத்தில் எம்.ஏ. பட்டதாரியாக இருந்தார். இன்று எஸ்.எஸ்.எல்சியாகத் திரிகிறார்' என்று எவரைப் பார்த்தும் கூற முடியாது. பணத்துக்கும் படிப்புக்கும் உள்ள வித்தியாசம் இதுதான்!

கூறியவர் : புலவர் கீரன்; தகவல் : பா. குணா

பயணம், கதிரவன் உச்சிக்கு வரும் சமயத்தில் அடர்ந்த வனப்பகுதியை நெருங்கியது. நேர் எதிரில் விரிந்த வனப்பகுதியைக் கடக்காமல் இடதுபுறத்தில் மேற்கு நோக்கிப் பாதை யொன்று வளைந்து திரும்புவதையும், அது கொங்கு மண்டலத்தின் பூந்துறை காட்டுக்குச் செல்லும் பாதையென்பதையும் புரிந்து கொண்ட யுவான் மெல்லத் திரும்பி, சீலை யைச் சற்று விலக்கி, இளவரசியை எச்சரித்து விட்டு நடவடிக்கைக்குத் தயாரானான். ரதம் முட்புதர்களும் மரங்களும் நிறைந்த கானகத் துப் பாதையை நெருங்கிக் கொண்டிருந்தது.

அந்தப் பயணம் மட்டும் போசளத் தண்ட நாயகன் சிங்கணன் இட்ட திட்டப்படி நடந் திருந்தால் முப்பது ஆண்டுகளாகப் பரவத் தொடங்கி வேரூன்ற ஆரம்பித்திருந்த போச ளர் ஆதிக்கம் தமிழகத்தில் ஸ்திரப்பட்டிருக் கும். ஆனால் தமிழகத்தின் தலைவிதி வேறு விதமாயிருந்தது. அந்த விதியும் சீனத்து யுவான் உருவத்திலும் அந்தக் கானகத்துக் காடவர்கள் வடிவிலும் வந்து குறுக்கிட்டது.

கானகப் பாதையின் துவக்கத்திலேயே தெரிந்த வளைவொன்றில் முன்னால் சென்ற வீரர்கள் திடீரென புரவிகளை இழுத்துப் பிடித்து நிறுத்தினார்கள். அவர்கள் முகங்களில் பெரும் கலவரம் படரத் தொடங்கியது. அவர் களின் கிலி பிடித்த பார்வைகள் பாதையின் குறுக்கே வெட்டி எறியப்பட்டுக் கிடந்த பெரும் மரம் ஒன்றை ஏதோ பிசாசைப் பார்ப் பது போல பார்த்தன. சற்று நேரம் அப்படியே நின்ற வீரர்கள், ரதத்தின் பின்புறமிருந்த வீரர் களையும் அழைத்தார்கள். கானகத்திலிருந்து எந்த அரவமும் எழாததால், வீரர்கள் புரவி களிலிருந்து இறங்கி, அந்த மரத்தை அகற்றவும் துணிந்தார்கள். அடுத்த வினாடி எழுந்தது பெருங்கூச்சல். புதர்களின் மறைவிலிருந்தும், மரங்களின் பின்புறங்களிலிருந்தும் முப்பதுக் கும் குறையாத காடவ வீரர்கள் கறுத்துப் பெருத்த சரீரங்களுடனும், பெரும் மீசைகளுட னும், உயர்த்திப் பிடித்த பட்டாக் கத்திகளுட னும் பாய்ந்தனர்.

சற்றுத் திகைத்த போசள வீரர்கள், சுதா ரித்துக் கொண்டு, வாட்களை உருவி காடவர் களின் தாக்குதலை எதிர்க்கத் தொடங்கி னார்கள்.

சற்றுத் தள்ளி ரதத்தில் அமர்ந்தபடியே நடந்தவற்றைக் கவனித்துக் கொண்டிருந்த யுவான், ரதத்தை அரைவட்டமாகத் திருப்பி புதர்களினூடே மேற்கு நோக்கிப் பறக்க விட்டான். மரங்கள் மீது மோதி விடாமல் மயிரிழையில் விலகி, ரதம் அதிவேகமாக வளைந்து வளைந்து, கானகத்தினூடே அசுர வேகத்தில் பறப்பதைக் கண்ட இளவரசி பூங்கோதையின் கிலி படர்ந்த விழிகளில் வியப்பு பரவ ஆரம்பித்தது.



ஆசிரியர் : அரசியல்வாதி பையனை ஸ்கூல்ல சேர்த்துக்கிட்டது தப்பாப் போச்சு!

நண்பர் : எப்படி...?

ஆசிரியர் : என் நாற்காலியையே முறைத்து முறைத்துப் பார்க்கிறான்.

- தேனி. எஸ். மாரியப்பன்

கானகத்தினூடே விரைந்த ரதம், குறுக்கில் திரும்பி, மேற்கு நோக்கிச் சென்ற பாதையை அடைந்ததும் இன்னும் அதிக வேகத்துடன் பூந்துறை நாட்டை நோக்கிச் செல்ல ஆரம் பித்தது.

சீனத்து வீரனின் ரத சாரத்தியத்திலிருந்த லாகவத்தைக் கண்டு வியப்பில் ஆழ்ந்து விட்ட பூங்கோதை, பின்புறம் திரும்பிப் பார்வையைச் செலுத்தியதும் அதிர்ந்தாள். அவள் பார்வை யைத் தொடர்ந்து திரும்பிப் பார்த்த தோழியர் இருவரும் அச்சத்தில் வீலென்று அலறவும் செய்தனர்.

ரதத்தை செலுத்தியபடியே அவர்கள் அலறலுக்குக் காரணமறியத் திரும்பிய யுவான், ஐந்தாறு காடவர்கள் புரவிகளில் ரதத்தைத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பதைக் கண் டான். காடவ வீரர்களின் புரவிகள் பக்கவாட் டில் ரதத்தை முந்தத் தொடங்குவதைக் கவ னித்த யுவானின் 'ப' வடிவ மெல்லிய மீசை ஒருபுறம் மெல்ல இழுபட்டது. ஏறக்குறைய ரதத்தின் நடுப்பகுதிக்கு நேராக காடவர்களின் இருபுரவிகள் வரும் வரை பொறுத்திருந்து, சடாரென்று ரதத்தை ஒருபுறமாக ஒதுக்கினான் யுவான்.

அந்தப் புரவிகள் தடுமாறி, பாதையிலிருந்து விலக, அவற்றின் மீதிருந்த காடவர்கள் அதே வேகத்தில் தூக்கி எறியப்பட்டு விழுந்தார்கள்.

ரதம் ஒருபுறமாக ஒதுங்கியதால் சற்று வேகம் தடைபடவே, மறுபுறத்தில் முந்திக் கொண்ட காடவர்கள் ரதத்தின் முன்புறம் வந்து புரவிகளையும் மெல்ல நிறுத்தினர். ரதம் நின்றதும் கீழே குதித்த யுவானை, புரவிகளி லிருந்து இறங்கிய காடவர்கள் ஐவரும் உயர்த் திய வாட்களுடன் நெருங்கவும் முற்பட்டனர்.

(தொடரும்)



தினங்களுக்குச் சற்று முன்னரும் பின்னரும் வியாபாரம் மந்தமாகி விடுகிறது. இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் சங்கம் முடிவெடுத்தது...” என்கிறார்.

ஆயிரக்கணக்கான வாடிக்கை யாளர்கள் ஜி.ஆர். தங்கமாளிகையில் துளைத்து எடுத்து விட்டார்களாம். ‘இவ்வாண்டு ஏன் சிறப்புச் சலுகை இல்லை?’ என்று...

“கூட்டத்தைச் சமாளிக்கறது கஷ்டமாச்

# தங்கமான சலுகைக்கு டாட்டா சொன்னதேன்?

சேன்னு பார்த்தால் என்கொயரியைச் சமா ளிப்பதே பெரிய பாடா யிடுச்சு...” என்றார் அதன் அதிபர் ராஜேந்திரன்.

நாளிதழ்களில் பெரிய பெரிய விளம்பரங் கள். ‘இந்த ஆண்டு செய்கூலி சேதாரம் தள்ளுபடி செய்ய இயலாமைக்கு வருந்துகிறோம்...’ - சென் னையின் பெரிய நகைக் கடைக்காரர்கள் நிறைய பேர் ஒற்றுமையாக ஒரே விளம்பரமாகக் கொடுத்திருந்தார்கள்.

போன வருடம் புத்தாண்டை ஒட்டி ‘செய் கூலி இல்லை! சேதாரம் இல்லை!’ என்று முழங்கிய அதே கடைக்காரர்கள்.

என்ன ஆயிற்று இந்த வருஷம்?

‘நகை மற்றும் வைர வியாபாரிகள் சங்கம் எடுத்த முடிவு அது...” என்றார் இந்தத் தள்ளுபடி விற்பனை யோச னையை முதன் முதலில் அறிமுகப் படுத்தியவர்களுள் ஒருவரான சுகுமாரன் - லலிதா ஜுவல்லரி உரிமையாளர்.

“பெரிய கடைக்காரர்கள் இவ்வாறு அறிவித்தால் சிறு வியாபாரிகள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள் என்பதால் இச் சலுகையை வாபஸ் வாங்கி விட்டோம்” என்றார்.

“மேலும், சலுகை அமுலில் உள்ள காலத்தில் கூட்டத்தைச் சமாளிக்க முடியவில்லை. ஆனால் அந்த

“பேப்பரில் விளம்பரம் போட்டுட் டோம்... ஆனால், ரொம்ப நெருங்கிய வாடிக்கையாளர்கள் வந்து வற்புறுத்திக் கேட்கும் போது ‘சலுகை கிடையாது’ என்று முரட்டுத்தனமாக மறுப்பதும் கஷ்டம்தான்...” என்றார் இன்னொரு பிரபல நகைக் கடைக்காரர்.

இதற்கிடையே, பல கடைகள், புத்தாண்டுக்குச் ‘செய்கூலி சேதார தள்ளுபடி’யை பகிரங்கமாக அறிவித்தே விளம்பரம் செய்தன. அவர்களிடம் கேட்டால், தாங்கள் சம்பந்தப்பட்ட சங்கத்தின் உறுப்பினர் அல்ல என்றார் கள். “எங்கள் கடையின் ஆண்டு விழா சமயம் இது... அதையொட்டி சலுகை தருகிறோம்” என்று வேறுவிதமான காரணங்கள் சொன்னோரும் உண்டு.

ஜனவரி ஒன்றாம் தேதி நகை வாங் கியே தீருவது என்கிற சென்டிமென்ட் வேர்பிடித்த பிறகு சலுகை இருந்தென்ன இல்லாது போனால்தானென்ன!

**- எஸ். சந்திரமௌலி**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.

“ஏய் இந்தா... காருக்கு நேரமாச்சுலே? கெளம்புற வழியைப் பாருங்க.”

புருஷனை ‘தார்க்குச்சி’ வைத்து விரட்டிக் கொண்டிருந்தாள், வடிவு. அவளது இடுப்பில் கனத்த சாக்குப்பை. வலது கையில் பிளாஸ்டிக் கூடை. ரெண்டிலும் முண்டும் முடிச்சுமாக நிறைய சாமான்கள். பாரம், அவளை ஒருச் சாயலாக நிற்க வைத்திருந்தது.

நாளைய மறுநாள்... குலதெய்வம் கோவிலில் பொங்கல். ரெண்டாவது புள்ளைக்குக் காது குத்து, முடியெடுப்பு. அதற்காகத்தான் சாமான்கள் வாங்க வந்திருந்தனர்... அம்மனும், சாமியும்.

வேல்க்கனி, வெத்தலை பாக்குக் கடைக் காரனை கடித்துக் குதறிக் கொண்டிருந்தான். “வெருசா... குடு... வெருசா.. வெருசா...”

“செமந்துக்கிட்டு எம்புட்டு நேரம் நிக்க? வெருசா வந்து தொலையுங்களேன்? கார்லே கூட்டம் சள்ளை பறியும். நிக்கக்கூட எடம் கெடைக்காது.”

“நீ நடந்துக்கிட்டேயிரு. நா... வந்து பஸ்லே ஒன்னை ஒக்கர்ர வைக்கேன்... போதுமா?”

“ஆமா... ஒங்கய்யா வீட்டுக் காராக்கும்?”

வாங்கிய சாமானை அவசர அவசரமாய் டவுசர் பைக்குள் திணித்துக் கொண்டு ஓடி வருகிற அவனைப் பார்த்து முகத்தை நொடிக்கிற வடிவு. சிரித்துக் கொள்கிற வேல்க்கனி. மானாவாரி யாக முறுக்கிய மீசை நுனிகளில் வெத்தலைக் காவி. வேட்டியை உயர்த்தி மடித்துக் கட்டியிருந்தான். டவுசரின் அடிப்பட்டை வெளியே தெரிகிறது. தலையில் வட்டச் சுற்றாகக் கட்டியிருந்த கலர்த் துண்டு. உடம்பு முழுக்க ரோம அடர்த்தி.

ஆவணி மாசத்து வெயில். சுள் ளென்று உறைக்கிற மழைக் கோப் பான வெயில். ரோடு முழுக்க ஜனம், உரசி, இடித்துக் கொண்டு நகரும் ஜனம். ‘டர்ர், புர்ர்’ரென்று விரைகிற வாகனங்களின் அதிர் வில் நடுங்குகிற ரோடு.

பஸ் நிலையத்திற்குள், ஏகப் பட்ட நெரிசல். ஆண்களும் பெண் களும் சிறிசுகளுமாக ‘திருவிழாக்’ கூட்டம். நெரிசலாக சொருகிக் கொண்ட பஸ்கள்.

வடிவுக்கு ஏகப்பட்ட பிரமிப்பு. ‘இம்புட்டு ஜனமா...’ என்று நினைத்து நினைத்து மாய்ந் தாள். கலர் டீ.வி. பெட்டிகள் ரெண்டு ஓடிக் கொண்டிருந்தன. ஜவுளிக் கடை விளம்பரமும் நகைக் கடை விளம்பரமும் தூள் பறந்தது.

வேல்க்கனி, வருகிற பஸ்களையே கவனித் தான். ஏறுவதற்கும் இறங்குவதற்கும் நடக்கிற மல்லுக் கட்டுகள். உக்கிரமான தள்ளு முள்ளு கள். ‘காச் மூச்’சென்ற காட்டுக் கத்தல்கள்.

ஜன்னல் வழியாக கர்சீப்பைப் போட்டு சீட் பிடிக்கிற சாமர்த்தியம். கர்சீப்பை எடுத்து கீழே போட்டுவிட்டு, ஜம்மென்று உட்கார்ந்து

# பார்வை



கொள்கிற கிராமத்துப் பெண்கள். "இடிபட்டு மிதிபட்டு ஏறுன நாம, நின்று சாகணும். காத்தாட வெளியே நிக்குறவுக, கைக்குட்டை போட்டு உக்காந்து போகணும். நல்லாயிருக்கே ஞாயம்" என்று வரப்போகிற சண்டைக்கு... இப்போதே கோபம் காட்டிச் சீறுகிற சீற்றம்.

"இதென்ன... இம்புட்டுக் கூட்டமாயிருக்கு... இன்னைக்கு என்னமும் விசேஷமா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. தெனம் தெனம் இதே எழவுக் கூத்துதான்."

வாய்க்குள் வார்த்தை வார்த்தையாயிருக்க... குபீரென்று பாய்ந்தான் வேல்க்கனி. முன் பக்கம் நெளிந்த பஸ் வந்து விட்டது. வடிவும் பாரத்தை இழுத்துக் கொண்டு 'தொக், தொக்'கென்று ஓடினாள்.

புளிச்சிப்பமாக அடைந்து சப்பிப் போய்க் கிடந்த கூட்டம், 'அப்பாடா' என்ற பெருமூச்சோடு இறங்குவதற்குள் வந்து அப்பிக் கொண்ட கூட்டம். மனித நெறு நெறுப்பு. தள்ளுமுள்ளு. சண்டை சத்தம், முண்டியடித்து முட்டி மோதுகிற மூர்க்கம். எல்லார் கண்களிலும் 'சீட்' வெறி. அலைபாய்வு.

வேல்க்கனியின் பாய்ச்சல். காட்டுக் கூச்சல். தடாலடித்தனம். ஆளுக்கு முந்தி ஏறி விட்டான். டிரைவர் சீட்டுக்கு இடது புறத்தில் ஓர் ஒற்றைச் சீட்டு. அதில் ஓடிப்போய் உட்கார்ந்து கொண்டு, வடிவைக் கூப்பிட்டான். "இங்க வா... ஒக்காரு."

முண்டியடித்து ஏறுகிற ஜனம். சரக்கு மூட்டைகளை 'முக்கித் தக்கி' கோணிப் பைகளையும், வாழைத் தாரையும் கொண்டு வந்து போடுகிறலோடு மேன்கள். 'மிதிச்சிராதே... இடிக்காதே... கொஞ்சம் தள்ளு... எங்கே தள்ள' என்று ஒரே சத்தக்காடு. வாக்குவாதம்.

எப்படியோ இடித்துப் பிடித்து தடுமாறி ஏறி வந்தாள், வடிவு. சக்கையாகிப்போன அயற்சி.

சாக்குப்பையையும் கூடையையும் வாங்கி காலடிக்குள் வைத்தான். "இதுலே ஒக்காரு..."

"நீங்க?"

"எனக்குப் பின்னாடி ஒரு சீட் போடச் சொல்லியிருக்கேன்."

போய்விட்டான். பஸ் முழுக்க மனித வெக்கை. நிற்கக் கூட இடமில்லாமல் மனிதத் தத்தளிப்பு. அப்பளமாய் சப்பிப்போய் திணறிய பெண்கள். ஒருத்தர் மூச்சு, மற்றவர் செவியில் உஷ்ணமாய்...

என்ஜினைச் சுற்றியுள்ள இடைவெளிகளிலும் சாமான்கள், கால்கள். ஒற்றைச் சீட்டில் உட்கார்ந்து கொண்ட வடிவுக்குள் நசநசக்கிற புழுக்கம். சென்னி ரோமங்களுக்குள் ஊடுருவி நழுவுகிற வியர்வைக் கோடு. ஈரக் கூச்சம். வடிவின் முன்னாலும் கண்ணாடி, இடது பக்கமும் கண்ணாடியடைப்பு. காற்றேயில்லை. வெயிலில் காய்ந்த பஸ் தகரம், வெப்பத்தை உள்ளே கக்குகிறது. வெந்து தகிக்கிற வேக்காடு. 'எப்படா பஸ் புறப்படும்' என்று தவிக்கிற தவிப்பு. என்ஜின் உஷ்ணச் சீற்றம் வேறு.

கண்டக்டர் வந்தார். "டிக்கட்... டிக்கட்... யாரு டிக்கட்... எங்க போவணும்?"என்று ஒரே சத்தமாய் கத்தினார். "சில்லறையா குடுங்க" என்று அதட்டினார். அவ்வப்போது 'டபார், டபார் என்று புறங்கையால் பஸ்ஸின் 'டாப்'பை அறைகிறார்.

'இந்த மனிதச் சதையை கிழித்து உள்ளே புகுந்து எப்படித்தான் டிக்கட் போடுதாரோ...' என்று கண்டக்டரை நினைத்துப் பரிதாபப் பட்டாள்.

சிகரெட்டை கடைசி உறிஞ்சு உறிஞ்சி சுண்டியெறிந்துவிட்டு, டிரைவர் சாவதானமாய் வந்தார். பஸ்ஸின் முன்பக்க டயர்களை தட்டிப் பார்த்தார். பஸ்ஸின் இடது பக்கம் வந்து, 'சைடு மில்லர்' கண்ணாடியை சரி செய்தார். வண்டிக்குள் ஏறி, கண்டக்டரைத் தேடினார்.

"என்ன தலைவா... டிக்கட் அடிச்சாச்சா? வண்டியை எடுப்பமா?"

"ம்... எடுங்க தலைவா. நா அடிச்சிக்கிடுதேன்."

வண்டிக்கு உயிர் தந்தார். உறுமி விட்டு மெல்ல நகர்கிற பஸ். கடைசி நேரத்தில்

**மேலாண்மை பொன்னுச்சாமி**




**பல்லவன் போக்குவரத்துக் கழகம் தனது சர்வீஸ்களுக்கு இதுவரை சிறப்புப் பெயர் எதுவும் வைத்ததில்லை. முதல் முறையாக PP70 என்ற தனது ரூட்டிற்கு... "ரிங் ரோடு ரைடர்" (Ring Road Rider) என்ற பெயரைச் சூட்டி உள்ளது. இந்த பஸ் தாம்பரத்தையும் ஆவடியையும் இன்னர் ரிங் ரோடு உதவியுடன் இணைக்கிறது.**

**– பெரியசாமி**

---

துள்ளலாய் ஓடிவந்து அப்புகிற இளவட்டங்கள்.

"படியிலே நிக்காதீங்க... மேலே ஏறிருங்க... மேலே வந்துருங்க. சொல்றதைக் கேட்டுக்கணும். தாறுமாறா வையும்படி வைச்சிக்கிடாதீக..."

விளையாட்டாகவும் அதட்டலாகவும் எச்சரிக்கிற கண்டக்டரின் அலறல்.

பஸ்ஸின் வேகத்தில் உயிர் பெறுகிற காற்று. பஸ்ஸுக்குள் ஊடுருவி, வியர்வை நசநசப்பை தொட்டுக் குசலம் விசாரிக்கிற காற்று. மூச்சுத் திணறிக் கிடந்தவர்களுக்குள் மெல்லமெல்ல உயிர்ப்பரவல்.

பார்க் ஸ்டாப்பில் ஆள் ஏறியது. சங்கரன் கோவில் விலக்கில் நின்ற ஜனம், ஏற வழியற்றுப் பரிதவித்தனர். கடந்து செல்லும் பஸ்ஸைச் சபித்தனர்.

அங்கும் இங்குமாய் பார்த்துக் கொண்டிருந்த வடிவு, தற்செயலாக டிரைவரைப் பார்த்தாள். இவள் ஒற்றைச் சீட்டில், நடுவில் என்ஜின். ஒட்டினாற் போல் டிரைவர். இவளுக்குள் பகீரென்றது. உள்ளுக்குள் 'திகுதிகு' வெனத் தகிக்கிற தீ.

வடிவையே வெறிக்கிற டிரைவர். ஸ்டீயரிங்கில் வலது கையும், கியரில் ஒரு கையுமாக வண்டியை நகர்த்திக் கொண்டே இவளை இமை தட்டாமல் பார்க்கிற வக்கிரம்.

வடிவு பதறிப்போனாள். மாராப்புச் சேலை சரியாகத்தானே இருக்கிறது? பின்னும் இழுத்துச் சொருகிக் கொண்டாள்.

இவளுக்குள் கூசந்து வந்தது. இப்படி... டிரைவர் பக்கத்தில் ஒற்றையாளாக வந்து உட்கார்ந்து விட்டோமே என்று குமைந்தாள். வெறுப்புடன் டிரைவரைப் பார்த்தாள். உள்ளுக்குள் சண்டாளமாய் பொங்கிச் சீறுகிற நாறவசவுகள்.

வேகம் எடுக்கிற பஸ். போக்குவரத்து நெரிசலுக்குள் ஊடுருவிப் பாய்கிறது. டிரைவர் காலரைத் தூக்கிவிட்டுக் கொள்கிறார்... முன்னால் பார்க்கிறார். இப்போது –

அவரது காது– செவிமடலின் மச்சம்– கன்னப் பகுதி– கழுத்து நரம்பு தெரிகின்றன. அடிக்கடி ஹாரனை அழுத்துகிறார். ஸ்டைலான அழுத்தம், அலட்டலான அழுக்கல் என்று இவளுக்குப் படுகிறது.

வடிவுக்குள் ஜ்வாலை விடுகிற தீ. நுனி நாக்கு வரை வந்து எரிகிற ஜ்வாலை. "மூஞ்சி மொகரையைப் பாரு. கருவாய்ப்பய. என்ன மாய் மொறைக்கான்.... பாரு? பொம்பளையே பாக்காத பய மாதிரி. நாசமாய்ப் போக. அவன் கண்ணுலே பாம்பு புடுங்க. ஒரு நா பேதியிலே பாடையேற..."

கண்டமேனிக்கு பொடுபொடுவென்று துடிக்கிற அவள் உதடுகள்... தகிப்பும் கொதிப்பும் சாபமாகி சத்தமில்லாமல் சிதறின.

பி.எஸ்.கே. நகர் ஸ்டாப்பில் இறங்குகிற நாலைந்து டிக்கட்கள். ஓரக் கண்ணால் பார்க்கிற வடிவு. இவளையே நேர் கண்ணால் பார்க்கிற டிரைவர். நன்றாகத் திரும்பி... வசதியாக வெறிக்கிற கண்கள்.

தைரியமாய் உற்றுப் பார்க்கிற திமிர். கொஞ்சங்கூட கூச்சமில்லாமல் – அச்சமில்லாமல்– இம்மி கூட தயக்கமோ தடுமாற்றமோயில்லாமல்– கொத்திப் பிடுங்குகிற பார்வை. 'அப்படித்தாண்டி பாப்பேன். என்னை எவன் என்ன செஞ்சிட முடியும்?' என்று எகத்தாளமாய்ச் சவால் விடுகிற பார்வை."

கண்டக்டர் திரும்பத் திரும்ப 'படிப் பயணி'களை எச்சரிக்கிறார். "ஏய்... பச்சைச் சட்டை, மேலே ஏறுதியா... என்ன வேணும்? மேலே ஏறுடா...ராஸ்கல்" என்று காட்டமாகச் சீறுகிறார். கெட்ட வார்த்தைகளில் 'சள், புள்'ளென்று விழ ஆரம்பித்து விட்டார். முடிவில்லாத நச்சரிப்பும், தொல்லைகளும் அவரை அப்பி விட்டன. அவரது இயல்பை – மென்மையை – தின்று தீர்த்து விட்டன.

வடிவுக்கு ஒரு மனசாகவில்லை. வேறு எதிலும் ஒட்ட மறுக்கிற நினைவுகள். வேறு திசைகளில் விட்டாலும் போக மறுக்கிற பார்வை. சதா எந்நேரமும், தான் பார்க்கப்



*''மணப்பெண் ஏன் போட்டோ கிராபரை இப்படித் திட்டுது?''*

*''மணமகனைப் பார்த்து, 'கடைசியா ஒரு தடவை சிரிங்க'ன்னு சொன்னாராம்!''*

*– எம். அசோக்ராஜா*

படுவதை உணர்கிற மனசு. முள்முள்ளாய்க் குத்துகிற 'பார்வைப் பிரமைகள். கொதிப்பும் வேதனையுமாய்க் குழம்புகிற நினைவுகள்.

பஸ்... சத்திரப்பட்டியைத் தாண்டி... சங்கம் பட்டியையும் தாண்டிவிட்டது.

வேல்க்கனி எங்கே இருக்கான் என்று அலை பாய்கிற மனசோடு திரும்பித் திரும்பிப் பார்த்தாள். தட்டுப்படவில்லை. இடையில் பெரும் உயிர்ச்சுவராக மறித்துக் கொண்டு நிற்கிற ஸ்டாண்டிங் பயணிகள்.

அடாவடித்தனமாக வெறிக்கிற இந்த டிரைவரைப் பற்றி வேல்க்கனியிடம் சொல்லி விடலாமா என்று தவித்தாள்.

அந்த யோசனையிலும் ஒரு நெருடல். தயக்கம்.

வேல்க்கனி ஒரு மதிக்காரன். பாய்ந்தால்... ஒரே பாய்ச்சல்தான். முரட்டுப் புத்தி. யோசிக்க மாட்டான்.

...இப்படித்தான்.

ரெண்டு வருஷத்துக்கு முந்தி ஒரு சம்பவம். குழாயடியில் சண்டை. அதில் ஒரு பெண், 'வாய்க்கு வராத' கெட்ட வார்த்தையில் வடிவை வைது விட்டாள். வெறுங்குடத்துடன் அழுது கொண்டே வீடு வந்து விட்டாள். அவ்வளவு தான்.

வேல்க்கனி ஒரே கோபச் சீற்றமாய்ப் பாய்ந்தான். வசவுகளும் சண்டையுமாக தெருவே நாறிப் போயிற்று. ஒரே சத்தக் காடு. கைகலப்பாகி விட்டது. போலீஸ் ஸ்டேஷன் வரைக்கும் விவகாரம் போய்... ஆயிரம் ரூபாய் செலவும், அவமானமுமாய் பிரச்னை முடிந்தது. ரொம்பக் கேவலமாகிப்போய் விட்டது...

"பல்லைக் கடித்துக் கொண்டாள் வடிவு. சிரமப்பட்டு கட்டுப்படுத்திக் கொண்டாள். ஒவ்வொரு ஸ்டாப்பிலும் அவன் பார்க்கிற வெறி. கோயில் மாட்டின் மேய்ச்சல் போன்ற திமிர். சுதந்திரமான பார்வை. அச்சமில்லாத –அத்துமீறலான பார்வை.

இவளுக்குள் கொதிப்பு. காலில் கிடக்கும் செருப்பால் அடித்து விடலாமா என்கிற மூர்க்கம். திமிறத் துடிக்கிற தன்மானச் சிலிர்ப்பு.

அவள் முகமெல்லாம் கடுப்பு. அடைக் கோழியின் சினசினப்பு. மூன்றுபடி பயிறு வறுத்துவிடலாம். அத்தனை கனல்: நெருப்புச் சிதறலாய்... 'வெடுக், வெடுக்'கென்று ரெண்டு பார்வை பார்த்தாள், உயிர் அ(று)ந்து போகிற மாதிரி.

டிரைவர் அதற்கெல்லாம் அசந்த மாதிரி தெரியவில்லை. சுரணையேயில்லாமல் மரத்துப் போனவனைப் போல வெறித்தான். நெஞ்சையும், முகத்தையும் நன்றாகத் திருப்பி, இவளை நேருக்கு நேராகப் பார்த்தான். தாராளமான பார்வை. 'இதோ... இவளை நான் பார்த்து ரசிக்கிறேன்... பாருங்கள்' என்று எல்லாருக்கும் காட்டிக் கொள்கிற பார்வை. உதடுகளில் சில பாவனைச் சலனங்கள். மெல்லிய துடிப்புகள்.

வடிவுக்குள் விசுவரூபமாக வடிவம் கொள்கிற பத்ரகாளி. அவனது தலையை துண்டித்து, கண்ணில் ஓட்டை போட்டு, கயிற்றில் கோத்து, கழுத்தில் போட்டு ருத்ரதாண்டவம் ஆட வேண்டும் போல... ஒரு தினவு.

கண்டக்டர் பின்னால் யாரையோ கோபமாக அதட்டுகிறார். "யேய் தம்பி, ஏன் லேடீஸ் பக்கம் போய் இடிச்சுக்கிட்டு நிக்கே? அசிங்கமாயில்லே? ச்சேய்! ஆம்பளைக நிக்குற பக்கம் ஒதுங்கியிருப்பா..."

வடிவுக்குள் ஒரு நினைப்பு. கண்டக்டரையே கூப்பிட்டுச் சொல்லலாமா? 'மொதல்லே... ஒங்க டிரைவரு கண்ணை நோண்டிப் புடுங்குங்க' என்று.

அவளுக்குள் தீ ஜ்வாலைகள்...

கடைசியாக ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள்.

'ஊரு வரட்டும். இந்தப் பயலை சும்மாவுடக் கூடாது. பஸ்ஸை விட்டு எறங்குறப்ப...இந்த நாயி மூஞ்சிக்கு நேரா, காறித்துப்பிட்டு எறங்கிர வேண்டியதுதான், செருப்பாலடிச்ச மாதிரி...'

ஆலங்குளம் முக்குரோடு. 'மொலேர்' என்று திரண்டு வந்து அப்பிய கூட்டம். வாசல்படியெல்லாம் கால் வைத்துத் தொங்கும் இளவட்டங்கள். 'படியிலே நிக்காதே' என்று

கண்டக்டர் சொல்ல முடியாத நிலைமை. பயங்கர நெருக்கடி.

ஒற்றைக்காலை கடைசிப் படியில் வைத்து, மறுகாலை வைக்க இடமில்லாமல் அந்தரத்தில் மிதக்கவிட்டு... விக்கிரமாதித்த வேதாளமாய்த் தொங்குகிற நாலைந்து பயணிகள்.

பின்னால் ஒரே கூச்சல். சந்தைக் கூச்சல்.

பஸ்ஸுக்கு முன்னால் ஓரங்கட்டி நின்ற லாரி. சிமெண்டு லோடு ஏற்றிய லாரி. தார்ப்பாய் போட்டு, வலைப்பின்னலாய் கயிறு கட்டப்பட்ட லாரி.

அவை எதையும் பொருட்படுத்தாமல் இவளையே வெறிக்கிற டிரைவர். ஸ்டீயரிங்கில் ஒரு கையும், கியரில் ஒரு கையுமாக இவளை இன்னும் அழுத்தமாக - கூர்மையாய்... பார்க்கிற திமிர்.

நகர்கிற பஸ், லாரியை நெருங்கத் தயங்கியது. விலகிப் போகவும் போதிய இடமில்லை. பஸ், மெதுவாக ஊர்ந்து, லாரியை நெருங்க.

இவளையே வெறிக்கிற டிரைவர். வெறித்தனப் பார்வை.

"தலைவா..." என்று சத்தம் போட்டு கண்டக்டரைக் கூப்பிடுகிற டிரைவர்.

"என்ன... பாஸ்?" அங்கிருந்தே பதில் கூவல்.

''பின்வாசல்லே தொங்குற வெள்ளைச் சட்டையையும் ப்ளூ சட்டையையும் உள்ளே நெருங்கி வரச் சொல்லுங்க."

''எடமில்லியே... பாஸ். வைச்சகாலை எடுக்கக் கூட முடியலே..."

"உள்ளே வரச் சொல்லுங்கன்னா... சொல்லுங்க... லாரியோட பாடி தட்டினா... என்னாகும்? ரெண்டு பேரும் ஸ்பாட்லேயே சாம்பாரு. தெரியுதா? உள்ளே வந்தாகணும்." கண்டிப்போடும் எரிச்சலோடும் அதட்டுகிற டிரைவரின் கோபச் சத்தம். பொறுமை சிதைந்த ஆத்திரம்.

அப்போதும்... இவள் மீதே பார்வை.

பார்வைக்கும், பேசுகிற பேச்சுத் தொனிக்கும் சம்பந்தமில்லை. ஒட்டவில்லை. வேறு வேறு தொனி. அபசுரமாய்...

வடிவுக்குள் பிடிபடாத மர்மம். வடிவமாகாத உருவச் சிதைவு. என்ன இது? என்ன இது?

இவள் திகைப்பும் குழப்பமுமாய் இடது பக்கமுள்ள கண்ணாடியைப் பார்த்தாள். அதற்கும் வெளியே -

நீள்சதுரமாய் ஒரு கண்ணாடி. ரசம் பூசிய கண்ணாடி. 'சைடுமில்லர்'. அந்தச் சிறிய கண்ணாடிக்குள் தெரிகிற பஸ்ஸின் இடது பக்க முழுமை. ரெண்டு வாசலுமே தெரியுது.

லாரியைவிட்டு விலகி மெதுவாக ஊர்ந்து... வேகம் எடுக்கிற பஸ்.

வடிவுக்குள் குழப்பமான நினைவுகள்.

இந்தக் கண்ணாடியைத்தான் இந்நேரம் வரைக்கும் பார்த்துக்கிட்டு வந்தாரா? போக்குவரத்து நெரிசல்லே ஏறுற - எறங்குற - ஆளுகளைக் கவனிக்கத்தான்... இவரு இந்தப் பார்வை பார்த்தாரா? அப்ப... என்னைப் பாக்கலியா?

அடப்பாவி மனுசா, இது தெரியாம ஒன்னைப் பத்தி என்னென்னமோ நெனைச்சி... எப்படியெப்படியோ சபிச்சித் தொலைச்சுட்டேனே... நா ஒரு அறிவுகெட்டவ...

வடிவுக்குள் பரவிய ஒரு வெட்க உணர்வு. ஒரு தப்பும் பண்ணாத அப்புராணி மனுசனை, தப்பிதமாய் நினைத்து விட்டோமே என்கிற உணர்வு. நினைக்க நினைக்க அவளுக்கே கூச்சமாக இருந்தது.

இம்புட்டு நேரமாய் இவளைப் பாடாய் படுத்தி... பலதையும் நினைக்க வைத்து... வாட்டி வதைத்த நினைவுகள். ரணமாக்கிய ஆத்திர உணர்ச்சிகள்.

அதெல்லாம் வடிந்து விலகிய பின்னும்... மனசுக்குள் அதன் நிழலான சுவடுகள்.

ஊர் வந்து, வட்டமடித்து பஸ் நின்றது. கடைசியாக இறங்குவதற்காக எழுந்த வடிவு, டிரைவர் தம்பியின் முகம் பார்த்தாள். ஒரு கனிந்த பார்வையையும் குளிர்ச்சியையும் சிந்திவிட்டு இறங்கினாள்.

ரெண்டையும் உணர்ந்த டிரைவர், ஒன்றும் புரியாமல் திகைத்துக் குழம்பினார்... வாழ்க்கையைப் போல.



**''பேப்பர் தட்டிலே பாஸந்தியைக் கொடுக்காதேன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்... தட்டையும் பாஸந்தின்னு சாப்பிட்டுட்டுப் போயிட்டாங்க பாரு...''**

**- கார்த்திக் ராஜா**

# இந்திர

## 3. ஆதித்ய பாண்டியன்



யுவானின் சாமர்த்தியத்தை எண்ணி குதூகலமடைந்த கொங்கு நாட்டு இளவரசியின் மனம், காடவர்கள் தொடர்ந்து வந்து ரதத்தை நிறுத்தி விட்டதைக் கண்டு அச்சத்தால் நிறைந்தது. அவர்கள் யுவானைச் சூழ்ந்து கொண்டனர். பெரும் பட்டாக்கத்திகளுடனும், அரக்கர்களைப் போன்ற உருவங்களுடனும் சூழ்ந்த காடவர்களையும், மெல்லிய கரங்களுடன் கால்களை சற்று அகற்றி திடமாக நிலத்தில் ஊன்றி நின்ற யுவானையும் கண்டவள் அவன் அன்றோடு தொலைந்தான் என்றே தீர்மானித்தாள்.

அடுத்த கணம் சீனத்து வீரனிடமிருந்து எழுந்த சீனத்துப் போர்க்கூச்சல், இளவரசியை மட்டுமின்றி, ஓங்கிய வாட்களுடன் சூழ்ந்து கொண்ட காடவர்களையும் திகைக்க வைத்தது. இமைப்பதில் பாதிப் பொழுதில் யுவானின் முதுகில் கட்டப்பட்டிருந்த உறைக்குள்ளிருந்து அந்த சீனத்து வாள் அவன் கரத்தில் தோன்றி கரகரவெனச் சுழல ஆரம்பித்தது. விர் விர்ரென்று காற்றில் ஒலியெழுப்பச் சுழற்றிய யுவான், வாளை இறுக்கிப் பிடித்து நிறுத்தினான். அவன் சிறு விழிகள் அதீத தீட்சண்யத்துடன் காடவர்களின் சிறு அசைவையும் கவனித்தன. அவன் வாளைப் பிடித்த விதமும் சற்று வினோதமாயிருந்தது. வாளை உட்புறமாக மடக்கி, அதன் நுனி தோளில் பதிந்திருக்க, இன்னொரு கரம் முஷ்டி பிடித்து முன்னால் நீண்டிருந்தது. அந்த சீனத்துப் போர்க்கலையைப் பற்றி ஏதும் அறிந்திராத காடவர்கள் வெறிக்கூச்சல்களுடன் அவன் மீது பாய்ந்தனர். பாய்ந்த இரண்டு வினாடிகள் கழித்தே தாங்கள் செய்தது எத்தகைய தவறு என்பதையும் உணர்ந்தனர். முன்னால் பாய்ந்த இரு காடவர்களின் ஓங்கிய வாட்கள், இரண்டு வினாடிகளுக்கு ஓங்கியபடியே நின்றன. அடுத்து அவை பக்கவாட்டில் திருப்பப்பட்டு நிலை குலைந்து கீழ் நோக்கி இறங்கின. சீனத்து வாள் சட்டென்று விடுபட்டு, ஒரு காடவனின் தோளிலும் மற்றொரு காடவனின் வாள் பிடித்த கரத்திலும் பதிந்து, சரேலென்று இழுபட்டது. அடுத்து பக்கவாட்டில் வந்த காடவனின் விலாப் பகுதியில் யுவானின் இடது கால் மின்னல் வேகத்தில் உயர்ந்து பதிந்தது. அதே வேகத்தில் சுழன்று திரும்பியவனது வீச்சில் அந்தக் காடவனின் வாள், அவன் கரத்தை விட்டுப் பறந்து தொலைவில் சென்று விழுந்தது. தாக்கத் துவங்கிய ஐந்தாறு கணங்களுக்குள் மூன்று பேரைச் செயலற்று விழச் செய்துவிட்ட அந்த சீனத்து வீரனை பிரமித்துப் பார்த்தனர் காடவர்கள். அவனைப் பக்கவாட்டில் நெருங்குவது அபாயம் என்பதைப் புரிந்து கொண்டதால் நேர் எதிரில் நின்று வாட்களைச் சுழற்றி தாக்கத் தொடங்கினார்கள்.

காடவர்கள் அதுவரையில் சோழர்களுடனும், பாண்டியர்களுடனும், போசளர்களுடனும் கூடப் பலமுறை போரிட்டிருந்தனர். ஆனால் அந்த சீனத்து வாலிபனின் கரத்தில் சழன்ற அந்த வாள் வீச்சைப் போன்றதொரு வீச்சை அதுவரை கண்டதில்லை. அனாவசிய சுழற்சிகள் என்பது அறவேயின்றி, பின்புறத்தில் துவங்கி பக்கவாட்டிலும், நேர் எதிரிலும் இருமுறை சுழன்று, செங்குத்தாகப் பாய்ந்த அந்த வாள் வீச்சின் முறையை நிர்ணயிக்க இயலாமல் திணறினார்கள். தற்காப்பை விடத் தாக்குதலே அதிகம் என்பதையும், தங்கள் தாக்குதலிலிருந்து சீனன் மயிரிழையிலேயே விலகி அனாயாசமாகத் தப்பிப்பதையும் கண்டு வியந்

**விஷ்வக்சேனன்**



தார்கள். போதாக்குறைக்கு அவன் சுழன்று அருகில் நெருங்கிய போதெல்லாம் முஷ்டி பிடித்த அவன் இடது கரமும் வாளின் வேகத்துக்கு இணையாக உயர்ந்து பாய்ந்த கால்களும், காடவர் களின் கழுத்திலும், கைகளின் இணைப்பிலும், விலாப் பகுதியிலும் பதிந்து நரம்புகளைத் தாக்கின. தாங்கள் அவனைத் தாக்கியது எத்தனை பிசகு என்பதையும், அவனிடமிருந்து தப்பவே உதவி தேவைப்படும் என்பதையும் உணர ஆரம்பித்தார்கள்!

ரதத்தின் சீலையை விலக்கி, அந்த அற்புதமான சீனத்து வாட்போரை பிரமித்துப் போய் பார்த்துக் கொண்டிருந்தாள் இளவரசி. முதலில் வாளை இழந்த காடவன், தன் புரவியை அணுகி, அதன் பக்கங்களில் தொங்கிய பெரும் ஈட்டிகளிலொன்றை எடுப்பதையும், அதை உயர்த்திப் பிடித்தபடியே யுவானைப் பின்புறமாக நெருங்க முயல்வதையும் கண்டு, "யுவான்!" என்று அலறி னாள்.

இளவரசி விடுத்த எச்சரிக்கையால் சுழன்று திரும்பிய யுவானின் கழுத்தை உரசிப் பறந்தது அந்த ஈட்டி! பவளத்தாலான மாலையொன்றை அவசரமாக அவனுக்குப் பரிசாக அளித்தது போல் கழுத்தில் ரத்தக் கோடு ஒன்றைக் கிழித்து விட்டுச் சென்றது. அதுவரையில் பார்வையை நான்குபுறங்களிலும் சுழலவிட்டு முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல் வாளைச் சுழற்றிக் கொண்டிருந்த யுவானின் மஞ்சள் முகத்தில் முதன் முறையாகச் சீற்றம் தெரிந்தது. அவன் குனிந்து நிமிர்ந்த வேகத்தில், அங்கிக்குள் அதுவரை மறைந்து கிடந்த பதக்கம் வெளி வந்து,

அந்தக் கடல் நாகம் காடவர்களை நோக்கித் தீவிழி விழித்தது. அடுத்து அவன் வாளின் வேகம் கூடி வீச்சின் முறையும் மாறியது.

அதே நேரத்தில், போசள வீரர்களைத் தீர்த்து கட்டிய காடவ வீரர்கள், புரவிகளில் பாய்ந்து வந்தனர். அதைக் கண்ட மற்ற காடவர்களின் வேகம் கூடியது. யுவானும் அதைக் கவனித்ததால் போரிட்டபடியே ரதத்தை நெருங்க முற்பட்டான்.

ஆனால் ரதத்தை நோக்கி வந்து கொண்டிருந்த காடவர்களின் புரவிகள் சட்டென்று பாதியில் நின்றன. யுவானுடன் போரிட்டவர்களும் கூட சண்டையை நிறுத்தி எதிர்த்திசையில் வெறித்துப் பார்த்தபடி நின்றனர். காடவர்களின் இந்த மாற்றத்திற்குக் காரணமறியத் திரும்பிப் பார்த்த யுவான் மட்டுமின்றி ரதத்தினுள் அமர்ந்து போரை ரசித்துக் கொண்டிருந்த இளவரசியும் திகைத்தாள்.

தென் மேற்கிலிருந்து, வீரர் பதின்மர் பின் தொடர, முன்னால் பாய்ந்து வந்து கொண்டிருந்தது ஒரு சாம்பல் நிறப் புரவி. அதன் கழுத்தைச் சுற்றி ஓடிய பட்டையில் முத்துக்கள் கட்டப்பட்டிருந்தன. அதன் நெற்றி முகப்பிலும் தொங்கியது ஒரு பெரும் முத்து. வெகு அலட்சியமாகப் பாய்ந்து வந்த அந்தப் புரவியையும் அதில் அமர்ந்து வந்த வாலிபனையும் கண்ட காடவர்களின் முகங்களில் எல்லையற்ற ஆத்திரமும், அச்சமும் தோன்றின. யுவானையும் ரதத்தையும் அடியோடு கைவிட்ட காடவர்கள், அந்த வாலிபனை நோக்கிப் பாய்ந்தார்கள்.

அந்த வாலிபனுக்கு வயது இருபத்து நான்குக்கு மேல் மதிக்க இயலாதிருந்தது. அரும்பு கட்டத் தொடங்கியிருந்த உதடுகளின் மேற்பகுதி. இதழ்களில் தொக்கி நின்ற விஷமப் புன்முறுவல். அவன் முகம் பார்வைக்கு ஏதோ விளையாட்டுப் பிள்ளை போல இருந்தாலும், ஈட்டிகளின் முனைகளை விடக் கூர்மையாக ஜொலித்தன அவன் விழிகள். பெண்களின் இடையைப் போல் சிறுத்துக் கிடந்த அவன் இடையிலிருந்து நீண்டிருந்த வாளும் அவன் விழிகளும் அவன் ஒன்றும் விளையாட்டுப் பிள்ளை அல்ல என்பதை நிரூபித்தன.

காடவர்கள் தங்களை நோக்கிப் பாய்வதைக் கவனித்த வாலிபனின் இடது கரம் மேலே உயர்ந்தது. அடுத்த கணம் வரிசை மாறாது அவன் பின்னால் வந்து கொண்டிருந்த வீரர்களிடமிருந்து ஏக காலத்தில் கிளம்பிய ஈட்டிகள் காடவர்களை நோக்கி ஜிவ்வென்று இறங்கின. அதே வேகத்தில் காடவ வீரர்களை நெருங்கிக் கலந்து விட்ட வாலிபனும் அவன் வீரர்களும் வர்ட்களை கரகரவெனச் சுழற்ற ஆரம்பித்தனர். ஏக காலத்தில் நான்கைந்து காடவர்களைச் சந்தித்த அந்த வாலிபனது வாள் வீச்சில் தனது சீனத்து வாட் போர் முறையும் கலந்திருப்பதைக் கவனித்த யுவான் அந்த வாலிபன் அதை வெகு அலட்சியமாகக் கையாண்ட விதத்தை வியப்புடன் கவனித்தான். உடன் வந்த வீரர்களும் சாமானிய வீரர்களல்ல என்பதும் புரிந்தது யுவானுக்கு. தன் உதவி அந்த வாலிபனுக்கோ, மற்ற வீரர்களுக்கோ தேவைப்படாது என்பது புரிந்ததால் யுவான் தன் வாளை உறையிலிட்டபடியே ரதத்தை நெருங்கினான்.

சீலையை விலக்கி, போரைக் கவனித்துக் கொண்டிருந்த இளவரசியை நெருங்கிய யுவான், "இளவரசி, இந்த வீரர்கள் யாரென்பது தங்களுக்குத் தெரிகிறதா?" என்று வினவினான்.

"திட்டமாகத் தெரியவில்லை யுவான். ஆனால் அந்த வீரரை இதற்குமுன் எங்கோ பார்த்திருப்பதாகத் தோன்றுகிறது...." இளவரசியின் பதில் பாதியில் நின்றது.

காடவர்கள் பின் வாங்கி கானகத்தை நோக்கி விரைய ஆரம்பித்து விட்டதால் தன் வீரர்களை அவர்களுடன் போரிடவிட்ட அந்த வாலிபன் ரதத்தை நோக்கி வந்து கொண்டிருந்

## குழம்பிக் கொண்டிருக்கும் அதிகாரிகள்!

பகுதி நேரமாக வேலை பார்க்கும் தம்மை நிரந்தரமாக்கும்படி அரசுக்கு மனு போட்டார் செல்லம்மா. இவர், திருவனந்தபுரம் அருகிலுள்ள பெரும் பழுதூர் பஞ்சாயத்தில் ஒரு துப்புரவுத் தொழிலாளி. அரசும் இவரது மனுவை ஏற்று, நிரந்தரமாக்கி உத்தரவு பிறப்பித்தது. ஒருவழியாகத் தமது 65-வது வயதிலாவது நிரந்தரமானோமே என்று சந்தோஷப்பட்டார் செல்லம்மா. அந்த சந்தோஷம் நீடிக்கவில்லை. காரணம், சட்டப்படி நிரந்தரத் தொழிலாளர்கள் 58-வது வயதில் ஓய்வு பெற்றாக வேண்டும். பகுதி நேரத் தொழிலாளர்கள்தாம் 70 வயது வரை வேலை பார்க்க முடியும். செல்லம்மாவை என்ன செய்வது? நிரந்தரமாக்கும் உத்தரவை ஏற்று ஓய்வு பெறச் செய்வதா அல்லது பகுதி நேரப் பணியாளராகவே நீடிக்கச் செய்வதா? குழம்பிக் கொண்டிருக்கிறார்கள் அதிகாரிகள்!

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ்.எஸ். மணி**

தான.

அவன் சற்று நெருங்க ஆரம்பித்த பிறகே அவனைக் கூர்ந்து கவனித்த இளவரசிக்கு அவனை சூளாமணி விஹாரத்திலும் கடிகையிலும், பயிற்சிக் கூடங்களிலும் சில ஆண்டுகளுக்கு முன் பார்த்த நினைவு எழுந்தது. நுதலை இரு பிரிவாகப் பிரித்த திருமண் பளீரிட அதற்கு மேல் சுருண்டு சுருண்டு இரு பக்கங்களில் தொங்கிய குழல்களும், குறுவாட்களின் முனைகளைப் போல் நீண்டு சரேலென்று இறங்கிய புருவங்களும் அதன் கீழ் கூர்மையாகப் பளிச்சிட்ட விழிகளும், அவற்றில் தொக்கி நின்ற விஷமமும், அந்த விஷமத்தை உயர்த்திக் காட்டிய இதழ்களின் முறுவலும் அலட்சியமாக ஆடிய வலுவான கரங்களும், கம்பீர நடையும் அவன் சாதாரண வாலிபனல்ல என்பதை இளவரசிக்குப் புரிய வைத்தன.

தங்களை நெருங்கி லேசாகத் தலையை வணக்கத்துக்கு அடையாளமாகத் தாழ்த்தி நிமிர்ந்த அந்த வாலிபனின் கூர் விழிகள் தன் கண்களின் வழியே உள்ளத்தையே ஊடுருவுவதைக் கவனித்த இளவரசியின் இதயம் வேகமாக இயங்க ஆரம்பித்தது.

“கொங்கு நாட்டு இளவரசிக்கு வணக்கம். நான் பாண்டியரைச் சேர்ந்தவன். பெயர் ஆதித்ய பாண்டியன்” என்று சர்வ சாதாரணமாகத் தன்னை அறிவித்துக் கொண்ட வாலிபனின் விழிகள் யுவானை நோக்கித் திரும்பின. அவன் வலது கரம் எழுந்து யுவானின் தோளில் பதிந்தது. முறுவல் இன்னும் விகசித்தது. “யுவான், நீயும் இளவரசியாரும் என்னுடன் வர வேண்டும்” என்றான் அந்த வாலிபன்.

யுவான் ஆச்சரியத்தால் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான். “பாண்டிய மன்னருக்கும் இளைய பாண்டியருக்கும் அடுத்து நீங்கள் கூறிய பெயரில் பாண்டிய இளவல் ஒருவர் இருப்பதாகக் கேட்டிருக்கிறேன், அது—” யுவானின் சொற்களும் ஆச்சரியத்தில் மிதந்தே வந்தன.

ஆமென்பதற்கடையாளமாகத் தலையசைத்த ஆதித்யன், “யுவான் உன்னையும் இளவரசியாரையும் அழைத்து வரும்படி பாண்டிய மன்னர் உத்தரவு” என்றும் அறிவித்தான்.

யுவானின் முகத்தில் லேசாகக் குழப்பம் படர்ந்தது. “இளவரசே, கொங்கு நாட்டு இளவரசியை அவர் தந்தையாரிடம் அழைத்துச் செல்லும்படி சூளாமணி விஹாரத் தலைவரது உத்தரவு...” என்று இழுத்தான் யுவான். அவன் பார்வை இளவரசியை ஏறிட்டு அங்கும் குழப்பம் படர்ந்திருப்பதைக் கவனித்தது.

பதிலுக்குத் தனது கச்சையிலிருந்து ஓலையொன்றை எடுத்து நீட்டினான் ஆதித்யன்.

அ ரு ள் வா க் கு



நாம் எங்கேயோ ஒரு பீச்சுக்குப் போகிறோம்; அல்லது ஸினிமாவுக்குப் போகிறோம். கண்டதை நினைத்துக் கொண்டு அரட்டை அடித்துக் கொண்டு தான் போகிறோம். ஆனால் போகிற வழியில் ஏதாவது ஒரு ஸத்ஸங்கத்திலிருந்து “ஹர ஹர மஹாதேவா”, “ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே” என்கிற மாதிரி ஒரு கோஷம் வந்தால், சட்டென்று நம்முடைய கன்னாபின்னா நினைப்புப் போய், பகவந்நாமா க்ஷணகாலம் மனஸுக்குள் போய் நம்மைக் கொஞ்சம் உருக்கி விடுகிறது. நாமாவுக்கு அப்படி ஒரு சக்தி இருக்கிறது. ஆனதால் வாழ்க்கைப் போராட்டத்தின் முடிவிலே ஒரு ஜீவாத்மா உயிருக்காகப் போராடிக் கொண்டு மனஸ் நாலா திசையிலும் அலைபாய்கிறபோது, அல்லது ஸ்மரணை தப்பிக் கொண்டிருக்கிறபோது பக்கத்திலே இருக்கிறவர்கள் பகவந்நாமாவை கோஷித்துக் கொண்டிருந்தால், அது அந்த ஜீவாத்மாவை அதன் மூலமான பரமாத்மாவிடம் இழுப்பதற்கு ரொம்பவும் சக்திகரமான (effective) வழியாக இருக்கும். ஒருத்தன் எத்தனை துன்மார்க்கத்தில் போனவனாயிருந்தாலும், அந்தக் கடைசி நாழியில் இந்த ஸம்ஸாரத்திலிருந்து தப்புவதற்கு பகவானைப் பிடித்துக் கொள்ளத் தவிக்கத்தான் செய்வான். அவனுக்குத் தானாக அந்தத் தாபம் வராவிட்டால் கூட நாம் உண்டாக்கித் தந்து விட்டால் பிடித்துக் கொண்டு விடுவான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ஓலையின் வரிகள் ஏறக்குறைய கிறுக்கல்களாகவே இருந்தன. எனினும் அந்த எழுத்துக்கள் சூளாமணி விஹாரத்தலைவருடையவைதான் என்பதும் மிகுந்த அவசரத்தில் அதை எழுதியிருக்கிறார் என்பதும் புரிந்தது. யுவானுக்கும் இளவரசிக்கும் விஹாரத்திற்கு முதலில் வந்த ஓலை போலியென்றும் தற்போது கொங்கு நாட்டிற்குச் செல்வது உசிதமல்ல என்றும் பாண்டிய இளவலுடன் செல்லுமாறும் பணித்திருந்தார் சூளாமணி விஹாரத் தலைவர்.

வழியில் அபாயங்கள் குறுக்கிட்ட போதிலும், யுவானின் உதவியால் எப்படியும் தந்தையைக் காணலாம் என்று எண்ணியிருந்த இளவரசியின் உள்ளம் ஏக்கத்தின் வசப்பட்டு விட்டதை அவள் மலர் விழிகள் உணர்த்தின. அவள் மனத்திலோடிய எண்ணங்களை பாண்டிய இளவல் உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். அவன் முறுவல் இன்னும் சற்று மலர்ந்தது, "இளவரசி, தந்தையைச் சென்று காண இயலவில்லையே என்று வருந்த வேண்டாம். தற்போது கொங்கு நாட்டில் நிலைமை சரியில்லை. அங்கு நிலையைச் சீர் செய்யவும், தங்கள் தந்தையை போசளர் பிடியிலிருந்து விடுவிக்கவும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. விரைவில் நானே தங்களைத் தந்தையாரிடம் அழைத்துச் செல்கிறேன்" என்றான் ஆதித்யன் பரிவு தொனித்த குரலில்.

யுவானின் குரல் குறுக்கே புகுந்தது. "இளவரசே, சூளாமணி விஹாரத் தலைவரின் உத்தரவுப்படி இளவரசியாரைத் தாங்கள் அழைத்துச் செல்லுங்கள். நான் தமிழகத்திற்கு வந்த பணி...."

கரத்தை உயர்த்தி யுவானைத் தடுத்த ஆதித்யன், "யுவான், நீ தமிழகம் வந்த காரணத்தை நான் அறிவேன். உன் தந்தை யாங்சின்னைப் பற்றி முழு விவரம் அறியாமல் நீ அவரைத் தேடிச் செல்வது அபாயம்" என்றான் ஆதித்யன்.

"என் தந்தையைப் பற்றிய விவரம் உங்களுக்குத் தெரியுமா?" யுவானின் கேள்வி வேகத்துடன் வந்தது.

பதிலுக்கு மெள்ள நகைத்த ஆதித்யன், கச்சையிலிருந்து எடுத்து நீட்டிய பொருளைக் கண்ட யுவானின் தலை சுழன்றது.

அவன் கழுத்திலிருந்ததைப் போலவே அச்சாக அதே பதக்கம் இணைக்கப்பட்ட சங்கிலி யுவானின் முகத்துக்கெதிரில் ஆடியது. பதக்கத்திலிருந்த கடல் நாகத்தின் பச்சை விழிகள் அவனைப் பார்த்து விழித்தன. பார்த்தவுடன் யாங்சின் அணிந்திருந்த பதக்கம் அது என்பதும் புரிந்தது அவனுக்கு.

(தொடரும்)

**இந்திர தனுசு**

**விஷ்வக்சேனன்**

## 4. கள்ளன் மீது கடைக்கண்!

யுவானின் பார்வை வழியே புகுந்து அந்தக் கடல் நாகம் அவன் சித்தத்தை உறைய வைத்து விட்டது! எதிரிலிருந்தவர்களையும் இருக்குமிடத்தையும் கூட உணர இயலாதபடி அவன் புலன்கள் செயலிழந்து கிடந்தன. எதிரில் நின்ற பாண்டிய இளவல் அவன் பார்வையில் எழுந்து மறைந்தான். அருகிலிருந்த ரதமும் அதிலிருந்த இளவரசியும் மறைந்தனர். சீறிப்பாயும் சீனத்துக் கடல் அவன் கண்ணெதிரே எழுந்தது. சிறிய அலைகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் பெரிதாக எழுந்து நின்ற மரக்கலம் எழுந்தது. சுற்றிலும் சீனத்து அரச குடும்பத்துப் பிரதானிகள் நிற்க, கழுத்தில் அந்தக் கடல் நாகம் பதித்த ஆரத்துடன் அவன் தந்தை யாங்சின் நின்றார். அருகில் தமிழகத்திலிருந்து வந்த அந்தத் துறவி மாறன் அமுதனார் பன்னிரு திருமண்ணையும் சார்த்தியபடி நெடுநெடுவென்று நின்றார். யாங்சின் இறுதியாகக் கூறிய வார்த்தைகளும் அவன் செவிகளில் மீண்டும் ஒலித்தன. "யுவான், என் வாழ்நாளுக்குள் பாதியில் கட்டி முடிக்கப்படாமல் நிற்கும் நமது ஆலயம் கட்டி முடிக்கப்பட வேண்டும். நான் அறிந்த சிற்பக்கலை போருக்கு மட்டுமே பயன்படும். மாறன் அமுதனாருடன் தமிழகம் சென்று ஆலயத்துச் சிற்பக் கலை பற்றிய அறிவுடனும், தமிழகத்துச் சிற்பிகளுடனும் திரும்புகிறேன். உன் தாயைக் கவனமாகப் பார்த்துக் கொள்."

அடித்து வைத்த சிலையாகவே நின்று விட்ட யுவானையும் அவன் பிரமித்த பார்வையையும் கண்டான் ஆதித்யன். அவன் முகத்திலிருந்த விஷமம் முறுவலாக மலர்ந்தது. லேசாக யுவானின் தோளைத் தட்டியவன் "யுவான், பிரமித்து நிற்க இது சமயமல்ல. காடவர்கள் எந்த நேரத்திலும் அதிக வீரர்களுடன் திரும்பி வரலாம். நாம் இங்கிருந்து விரைவில் புறப்படுவது நல்லது" என்றான்.

பிரமையிலிருந்து விடுபட்ட யுவான், "மன்னிக்க வேண்டும் இளவரசே, இதோ இப்பொழுதே புறப்படலாம்," என்றபடியே ரதத்தின் சாரதி ஸ்தானத்தில் தாவி ஏறியமர்ந்தான்.

காடவர்களைக் கானகத்திற்கு விரட்டியிருந்த ஆதித்யனின் வீரர்கள் அணிவகுத்து நின்றிருக்க, அவர்களுக்குச் சைகையாக உத்தரவு பிறப்பித்து விட்டு, தன் சாம்பல் நிறப் புரவியை நெருங்கி ஒரே தாவலில் அதன் மீது ஏறியமர்ந்தான். ரதத்தின் முன்புறத்தில் சாம்பல் நிறப் புரவியின் மீது ஆதித்யன் செல்ல, ரதம் தொடர்ந்தது. வீரர்களும் பின்தொடர்ந்தனர்.

நேர் தெற்கு நோக்கி நீண்ட அவர்களின் பயணம், சோழ நாட்டின் மேற்கு எல்லை வழியே தொடர்ந்தது. இரண்டு தினங்களாகத் தொடர்ந்த பயணத்தாலும், இடையே நேர்ந்த சங்கடங்களாலும் இளவரசியின் முகத்தில் தெரிந்த அலுப்பையும் களைப்பையும் கவனித்த ஆதித்யன், இரவு கவியத் தொடங்கிய பொழுதுக்குப் பின்னும் பயணத்தைத் தொடர்வது உசிதமல்ல என்று தீர்மானித்தான். சற்றுத் தொலைவில் தெரிந்த ஊரை அடுத்த சத்திரமொன்றில் இளவரசி தங்குவதற்கு ஏற்பாடு செய்தான்.

இரவைக் கழிக்கவும், இளைப்பாறவும் இளவல் தேர்ந்தெடுத்த இடம் அலாதியாயிருந்தது. சத்திரத்தின் முன்பகுதி மட்டுமே வழிப்போக்கர்களுக்குப் பயன்படுவதாக அமைந்திருந்தது. பின்பகுதி ஒரு காலத்தில் பெரும் மாளிகையாக இருந்திருக்க வேண்டும் என்பது புரிந்தது. விசாலமான உட்புறத்து அறையொன்றில் தானும் தோழியரும் தங்க ஏற்பாடு செய்ததையும், சிறு

சிறு தேவைகளையும் கவனித்து, கூடுமான் வரையில் எல்லா ஏற்பாடுகளையும் பாண்டிய இளவலே நேரிடையாகச் செய்ததையும் கவனித்த இளவரசி



யின் மனதில் 'பார்வைக்கு விளையாட்டுப் பிள்ளை போலிருக்கும் இந்த மனிதருக்குப் போர்க்கலை மட்டுமின்றி, பெண்களின் தேவைகளை உணர்ந்து, தகுந்த வசதிகள் செய்யவும் தெரிந்திருக்கிறதே!' என்ற வியப்பு ஏற்பட்டது.

அந்த இரவில் அவள் நீராட பதமான சூட்டுடன் நீரும் மஞ்சள், ஸ்நானப் பொடிகளும் வாசனைப் பொடிகளும் மட்டுமின்றி எங்கிருந்தோ மாற்று ஆடைகளும் கூடத் தயாராயின. போதாக்குறைக்கு ஈரமான நீண்ட குழலை உலர்த்த தணலுடன் சாம்பிராணியும் வந்தது. இதமான நீராட்டமும், நீராட்டத்திற்குப் பின் வந்த உணவும், கனி வகைகளும் பயண அலுப்பை அறவே நீக்கி விட்டதால், புத்துணர்ச்சியுடன் வெளிப்புறத்து நீண்ட தாழ்வரையை அடைந்தாள். இளவலுடைய ஏற்பாடுகளின் நேர்த்தியும், அதை நிறைவேற்றிய விதமும் அவளை வியப்பில் ஆழ்த்தியிருந்தது. அவள் வியப்பையும் பிரமிப்பையும் இன்னும் உயர்த்தியது அற்புதமான இயற்கைச்

சூழ்நிலை.

தாழ்வரையை அடுத்து, சற்றுக் கீழிறங்கிய படிகளைத் தொடர்ந்து, சிறுபாதையொன்று நீண்டு சட்டென்று முடிந்தது. பாதை முடிந்த இடத்தில் மேற்பரப்பு வெள்ளித் தகடுகளாக நிலவொளியில் மின்ன, சிறு சிறு சுழல் களுடன் சுழித்துச் சுழித்து அன்னநடை பயின்று கொண்டிருந்தது ஒரு நதி. நதிக் கரையை ஒட்டி பக்கவாட்டில் நீண்டிருந்த மாளிகை, பாதி வரையில் மட்டுமே நன்றா யிருப்பதையும், பாதிக்கு மேலிருந்த பகுதி இடிந்தும், சில இடங்களில் தீயினால் கருகியது போலவும் தெரிந்தது. எதிர்க் கரையில் மரங் கள் அடர்ந்து கிடப்பதையும், மரக்கிளைகள் சில தாழ்ந்து நீர்ப்பரப்பைத் தொட முயற்சி செய்வதையும் கவனித்தாள். அந்த மாளிகை யை நிர்மாணித்தவன் பெரும் ரசிகனாயிருக்க வேண்டும் என்றும் என்ன காரணத்தாலோ பாதிக்கும் மேல் சிதிலமடைந்த மாளிகையின் பின்பகுதியைச் செப்பனிடாமல் விட்டிருக்க வேண்டும் என்றும் தீர்மானித்தாள் இளவரசி.

மாளிகையின் மதில்களில் சில சிற்பங்கள் தெரிந்தன. அவையும் சிதிலமடைந்து காணப்பட்டன. சிற்பங்கள் வடிக்கப்பட்ட விதத்தில் சேரநாட்டு முறையை இனம்காண முடிந்தது.

'அப்படியானால் இது சேரர்களுக்குச் சொந்தமான மாளிகையா? நான் இருப்பது சேர நாட்டு எல்லையா?' என்ற கேள்வியும் அவள் சித்தத்தில் எழுந்தது.

மெல்ல படிகளில் இறங்கியவள், நதியை நோக்கிச் சென்ற பாதையில் நடந்தாள். நீர்ப் பரப்பின் மீது நீந்தி விளையாடிக் கொண் டிருந்த இரவு நேரத்துக் குளிர்ந்த காற்று சிலீ ரென்ற கரங்களால் அவள் முகத்தைத் தழுவி வரவேற்றது. வெள்ளித் தகடாக ஒளிர்ந்த நதியில், பாதி தேய்ந்திருந்தாலும் நிலவு மனோ கரமாகப் பிரதிபலித்தது. 'தான் முழுதாக வளர்ந்தாலும் அவள் முகத்தின் அழகுக்கு ஈடாக இயலாது' என்பதை உணர்ந்ததால் சங்கடப்பட்டு மெல்ல அசைந்து கொண்டிருந் தது!

கரையிலிருந்த சிறு பாறையொன்றில் அமர்ந்த இளவரசி, கால்களை, சில்லிட்டுக் கிடந்த நதியில் துளைய விட்டாள். தந்தத்தில் கடையப்பட்டு சந்தனத்தின் நிறம் பூசப்பட்ட அவள் பாதங்களைத் தழுவியதால் நதியின் அலைகளுக்குப் பெரும் மகிழ்ச்சி ஏற்பட் டிருக்க வேண்டும். பாறையின் விளிம்பில் மோதிய அலைகள் நகைத்த விதம் அப்படித் தானிருந்தது.

இரவின் அந்த அமைதியிலும் இயற்கை யின் அழகிலும் ஆழ்ந்து விட்ட கொங்கு நாட்டு இளவரசி, பின்னால் ஒலித்த காலடிச் சப்தத்தை கவனித்ததாகத் தெரியவில்லை. திடீரென்று அவள் தோள்களில் பலமான இரு கரங்கள் பதிந்து ஏதோ சிறு குழந்தையைத் தூக்குவது போலத் தூக்கி, பாறையின் மீது நிறுத்தின. திடுக்கிட்டுத் திரும்பியவளின் கால்கள் சற்றுத் தடுமாறவே நீர்ப்பரப்பை நோக்கிச் சாய முற்பட்டவளை அந்த வலு வான கரங்கள் உறுதியாகப் பற்றி நிறுத்தவும் செய்தன.

அவள் எதிரே அந்த விளையாட்டுப் பிள்ளை முகத்தில் லேசான சினம் தெரிய, அவள் இடையைப் பற்றியபடி நின்றிருந்தான். "இளவரசியார் இரவு நேரத்தில் இப்படித் தனித்து வருவது முறையல்ல" என்ற சொற் களும் வெகு வேகத்துடன் வந்தன பாண்டிய இளவலிடமிருந்து.

இடையில் பதிந்திருந்த அவன் கரத்தைப் பட்டென்று விலக்கிய பூங்கோதையின் முகத் திலும் சினம் தெரிந்தது. பாறையின் மீது ஸ்திர மாக நின்றவள், "இதைப் பாண்டிய இளவல் சற்று எட்ட இருந்தே அழைத்துக் கூறியிருக்க லாம்" என்றாள் குரலிலும் கோபத்தைக் காட்டி.

ஆதித்யனின் பதில் அதே வேகத்தில் வந்தது. "நான் எட்டவே நின்றிருந்தால் தங்களை அழைக்க வேண்டிய அவசியமே இருந்திருக்காது. சந்தேகமிருந்தால் திரும்பி நதியைப் பாருங்கள்."

திரும்பி நதியைப் பார்த்தவளின் விழிகளில் எல்லையற்ற திகில் பரவியது. அவள் அமர்ந் திருந்த பாறைக்கு நேர் எதிரில் நீர்ப் பரப்பின் மீது வாயை பயங்கரமாகத் திறந்து கோரைப் பற்களைக் காட்டி நகைத்துக் கொண்டிருந்தது



***"கூட்டத்துக்கு வந்ததும் தலைவருக்கு சோடா கொடுக்க வேண்டாம்னு சொன்னேன், கேட்டீங்களா?"***

***"இப்ப என்னாச்சு?"***

***"தான் வந்த வேலை முடிஞ்சு போச்சுன்னு உடனே கிளம்பிட்டாரு!"***

***- எஸ்.எஸ். பூங்கதிர்***

## அருள்வாக்கு



***படித்ததன் பிரயோஜனம் நல்ல குணம்; அடக்கம். இப்போது நாட்டில் முன்னை விட நிறையப் படிப்பு இருக்கிறது; ஹைஸ்கூலில் இடம் இல்லாமல், 'ஷிப்டு' வைத்து வகுப்பு நடத்துகிறார்கள். இவ்வளவு இருந்தும் படிப்பின் பிரயோஜனமான விநயம் ஏற்படவில்லை. அதற்கு நேர் விரோதமான குணம் அல்லவா வளர்கிறது? படிக்கிற பையன்கள் இருக்கிற இடத்துக்குத்தான் போலீஸ், மிலிடெரி எல்லாம் அடிக்கடி வர வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் என்ன? முன்பு நம் மாணவர் களுக்கு இருந்த குரு பக்தி என்பதே இப்போது அடியோடு போய் விட்டது. பையன் வாத்தியாரைப் பார்த்து, 'கேள்வித் தாளையே கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அடிக்கிறேன்' என்று சொல்லக்கூடிய நிலைமை வந்துவிட்டது.***

***முன்பு இருந்த பாடங்கள் இப்போதும் இருக்கின்றன. ஆனால் முறை மாறி விட்டது. மருந்து ஒன்றாகவே இருந்தாலும், பத்தியம் மாறி விட்டால் மருந்தே விஷமாகி விடும் என்பது போல ஆகிவிட்டது இது. குரு பக்தி போனதும் பத்தியம் போய் விட்டது.***

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.***

ஒரு முதலை. அச்சத்தில் தடுமாறியவள் மீண்டும் பாறையின் மீதிருந்த பின்புறமாகச் சரிந்தாள். அவளை அப்படியே மீண்டும் தாங்கிய ஆதித்யனின் கரங்கள் அவளை மாளிகையின் படிகள் இருந்த இடம்வரையில் கீழே இறக்க மறுத்து படிகளை அடைந்ததும் மெல்ல இறக்கி அமர வைத்தன.

**கொ**ங்கு நாட்டு இளவரசியின் நிலை சொல்லத் தரமற்றதாயிருந்தது. அச்சமும், அச்சத்தைத் தொடர்ந்த நாணமும், நாணம் விளைவித்த சங்கடமும், அந்த விளையாட்டுப் பிள்ளையின் கரங்களின் ஸ்பரிசமும், ஸ்பரிசம் ஏற்படுத்திய இனம்புரியாத உணர்வும் அவள் சித்தத்தைத் தாக்கி, அந்த சேரநாட்டு மாளிகையின் படிகளில் அவளை ஒரு சிற்பமாகவே அடித்திருந்தது.

ஆதித்யனின் நிலையும் சங்கடத்தில் தானிருந்தது என்பது சலனப்பட்ட அவன் குரலில் தெரிந்தது. "மன்னிக்க வேண்டும் இளவரசி. உணவருந்தியபின் தங்களைக் காணவில்லை என்று பணிப்பெண்கள் முறையிட்டதால் தேடி வந்தேன். இங்கு வந்தபின் நீங்கள் அமர்ந்திருந்த பாறைக்கு நேர் எதிரில் அந்த முதலை வருவதும் தெரிந்தது. அதனால் தான்..." அவன் சொற்களை முடிக்காமல் பாதியில் நிறுத்தினான்.

மாளிகையின் தாழ்வரையில் காலடிச் சப்தங்கள் ஒலித்தன. பணிப்பெண்கள் பின் தொடர யுவான் வந்து கொண்டிருந்தான்.

"இதோ இருக்கிறார் இளவரசி" என்று கூவியபடியே வந்த பணிப்பெண்களைத் தொடர்ந்து வந்த யுவானின் சிறு விழிகளில் விஷமம் மின்னியது.

"உங்கள் தனிமையில் குறுக்கிட்டதற்கு மன்னிக்க வேண்டும்" என்றவன் குரலிலும் விஷமம் சொட்டியது.

"இல்லை யுவான். நான் இப்பொழுதுதான் இளவரசியாரைத் தேடிக் கொண்டு இங்கு வந்தேன். இளவரசி இந்த நதிக்கரையின் அழகில் ஆழ்ந்து நெடுநேரமாக இங்கு அமர்ந்திருக்கிறார்" என்றான் ஆதித்யன்.

ஆதித்யனின் சங்கடத்தையும், இளவரசி உணர்ச்சிக் குவியல்களிலிருந்து இன்னும் விடுபடாது அமர்ந்திருந்த நிலையையும் கவனித்த யுவானுக்கு ஏதோ நிகழ்ந்திருக்கிறது என்பது தெளிவாகப் புரிந்தது. பார்வையை நதியின் மீதும் நதிக்கரையை ஒட்டி நீண்டிருந்த அந்த மாளிகையின் மீதும் ஓட்டியவன், "உண்மைதான் இளவரசே, இந்த மாளிகையும், நதிக்கரையும் அழகாய்த்தானிருக்கின்றன. ஆனால் இத்தனை பெரும் மாளிகை எப்படி வழிப்போக்கர் தங்கும் சத்திரமாயிற்று?" என்றான்.

"இது வெறும் சத்திரமல்ல யுவான்" என்றான் ஆதித்யன். "ஆம்பிராவதி நதிக்கரையி

விருக்கும் இந்த வஞ்சி நகருக்கும் இந்த அழகிய மாளிகைக்கும் தனி சரித்திரமே உண்டு. இந்த நகரம் ஒரு காலத்தில் சேரர் தலைநகரமாகவும், இந்த மாளிகை சேரமானின் அரண்மனையாகவும் இருந்தது. அதோ இடிந்து கருகிக் கிடக்கும் பகுதியில்தான் மாமன்னன் சோழ கரிகாலன், சேரனால் சிறைவைக்கப்பட்டான். மாளிகையோடு அவன் ஒருகாலும் எரிந்ததால் அந்தப் பட்டப் பெயரையும் பெற்றான். பின்னாளில் வந்த சோழ மன்னர்கள் இதை நினைவுச் சின்னமாகவே வைத்திருந்தார்கள். வஞ்சி நகர் பிறகு கொங்கு நாட்டுடன் இணைந்தது. கவனிப்பாரின்றி பிறகு இது சத்திரமாகவும் பயன்படத் தொடங்கியது."

ஆதித்யன் கூறி நிறுத்தியதும் தற்போது சோழ வம்சம் சீர்குலைந்து கிடக்கும் நிலை ஒரு கனத்த மௌனத்தை சற்று நேரம் நிலவ விட்டது. சம்பாஷணை வேறு திசையில் திரும்பி விட்டதால் இளவரசியின் சங்கட நிலையும் மாறியிருந்தது. படிகளை விட்டு எழுந்தவள் தோழியருடன் மாளிகையின் உட்புறத்தை நோக்கி நடந்தாள். ஆதித்யனும் யுவானை அழைத்துக் கொண்டு முன்புறத்தை நோக்கிச சென்றான்.

மறுதினம் உதயகாலத்தில் தொடங்கிய பயணம், உச்சிப் பொழுதில் பாண்டியர் தலைநகரை அடைந்தது.

மேகங்கள் உலவும் உயர்ந்த மதில் என்று கவிகளின் அதித வர்ணனைக்கு ஆளானதும், "நெய்படக் கரிந்த திண்போர்க் கதவு" என்றும் "வையையன்ன வழக்குடை வாயில்" என்றும் மதுரைக் காஞ்சி வர்ணிக்கும் மதுரையின் கோட்டை வாயில் வெகு கம்பீரமாக எழுந்தது இளவரசியின் கண்ணெதிரே. மதில்களின் அகலத்தையும், உள்ளே தெரிந்த மாளிகைகளையும், கோபுரங்களையும் கண்ட யுவான் பிரமிப்பு படர்ந்த விழிகளுடன் புரவியைச் செலுத்தினான். ஆதித்யனைக் கண்டதும் வீரர்களும் மக்களும் எழுப்பிய உற்சாகக் கூச்சல்களையும், மாளிகைகளின் சாளரங்கள் திறந்து, அவனையும் ரதத்தையும் உற்று நோக்கிய மலர்முகங்களையும் கவனித்த இளவரசியின் மனத்தில் இத்தனை இளவயதில் மக்களின் இத்தனை அன்பையும், ஆதரவையும் ஆதித்யன் எப்படிப் பெற்றான் என்ற வியப்பு மேலோங்கியது.

சென்று கொண்டிருந்த ஊர்வலம் சட்டென்று நின்றது. அரண்மனையை ரதம் அடைந்து விட்டதை வீரர்களின் கோஷங்கள் உணர்த்தின. வீரர்கள் ஓடிவந்து ரதத்தின் புரவிகளைப் பிடித்து நிற்க, அரண்மனையின் படிகளில் மங்கையர், கரங்களில் ஆரத்தியுடன் இளவரசியை வரவேற்கச் சித்தமாக நின்றனர்.

அடிமைப்பட்டுக் கிடந்த ஒரு சிற்றரசின் இளவரசிக்கு, பாண்டியர் அரண்மனையில் கிடைத்த வரவேற்பு சங்கடத்தையே ஏற்படுத்தியது. ஆரத்தியையும் மங்கலத் திலகத்தையும் வெட்கத்துடன் ஏற்ற இளவரசி, அரண்மனை வாயிலை அடைந்ததும் நின்றாள். உள்ளிருந்து பரல்கள் ஒலிக்க யாரோ நடந்து வரும் ஒலி கேட்டது. சற்றே வயதில் மூத்த, அழகிய மங்கையொருத்தி வாயிலில் வந்து நின்றாள். அவள் கழுத்தில் மங்கல நாணும் ஒரு பெரும் முத்தாரமும் புரண்டன. அந்த ஒரு ஆரத்தைக் கொண்டு ஒரு அரசையே விலைக்கு வாங்கலாம் என்று தீர்மானித்தாள் இளவரசி. அந்த மங்கையின் விழிகளில் அபரிமிதமான அழகும் அசாத்திய கூர்மையும் பளிச்சிட்டன. இளவரசியை ஏற இறங்க ஒருமுறை அளவெடுத்த அந்த மங்கை, பின்னால் நின்ற ஆதித்யனைக் கண்டதும் குறும்பாகச் சிரித்தாள். அடுத்து அவளிடமிருந்து உதிர்ந்த சொற்களிலும் விஷமம் சொட்டியது, "சூளாமணித் தலைவரின் ஓலை கிடைத்ததும் ஆதித்யன் அப்படி விரைந்து சென்றதன் காரணம் இப்பொழுதல்லவா புரிகிறது!" என்றாள் அவள்.

அவள் வார்த்தைகள் இளவரசியின் முகத்தைச் சிவக்கச் செய்து தாழ வைத்தாலும் கடைக்கண்ணால் ஆதித்யனைக் கவனிக்கவும் செய்தாள் அவள்.

ஆதித்யன் முகத்தில் சதா உலவும் முறுவல் மறைந்து, ஏதோ கள்ளத்தனம் செய்து விட்டு அகப்பட்டுக் கொண்டவன் போல் விழித்தான்!

(தொடரும்)



## ஒரு கின்னஸ் ஹோட்டல்!

பாங்காக் நகரத்திற்கு வெளியே 'ராயல் டிராகன்' என்ற மிகப் பெரிய சிற்றுண்டிச் சாலை இருக்கிறது. எட்டு கால்பந்தாட்ட கிரவுண்டுகளை ஒன்று சேர்த்தால் எவ்வளவு இருக்குமோ அவ்வளவு பெரியது. உலகிலேயே மிகப் பெரிய சிற்றுண்டிச் சாலை என்று கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கிறது. இதில் ஆயிரம் வெயிட்டர்களும் 322 சமையல்காரர்களும் பணிபுரிகின்றனர். சமையலறையிலிருந்து சாப்பிடும் இடத்திற்கு வெயிட்டர்கள் செல்ல காலில் சக்கரம் (skates) அணிந்து செல்கின்றனர்.

- எஸ். கே. மூர்த்தி

## 5. மதுரைக்கு வந்த மர்ம ஓலை!

மதுரை மாநகரின் மாளிகை வாயிலில் நின்று அந்த மங்கை மதுரமான குரலில் உதிர்த்த சொற்களால் தலை கவிழ்ந்து நின்றாள் இளவரசி. 'இந்த மங்கை யாராயிருக்கக்கூடும்?' என்ற கேள்வி அவள் மனத்தில் எழுந்து சுழன்று கொண்டிருந்தது. அந்த மங்கையின் விழிகளில் அன்பையும் பரிவையும் மீறி அறிவின் கூர்மையும் தெரிவதை கவனித்த இளவரசி, வயது சற்று கூடியிருந்தாலும் அவள் தேகக்கட்டு உறுதியாக இருப்பதையும், அவள் கரங்களின் முன் பகுதியில் வாள் வடுக்கள் தெரிவதையும்ம் கவனித்தாள். மன்னருக்கும், இளைய பாண்டியருக்கும் தவிர வேறு எவருக்கும் கட்டுப்படாதவன் ஆதித்ய பாண்டியன் என்று கேள்விப்பட்டிருந்தாள். அந்த மங்கையின் முன்பாக அவன் தலை கவிழ்ந்து நிற்பதைக் கண்டவளுக்கு உண்மை உதயமாகத் தொடங்கியது.

பாண்டிய மன்னர் வெகு காலத்திற்கு முன்பே மனைவியை இழந்தவர், அப்படியானால் எதிரில் நிற்பவள் கொற்கைக் காவலன் மகளாயிருந்து, ஜடாவர்ம வீர பாண்டியனின் மனைவியாகி, அவனிடமே போர்ப் பயிற்சியும், படைகளை நடத்தவும் பயிற்சி பெற்ற இளைய ராணி இளநங்கையாகத்தான் இருக்க வேண்டும். உள்ளத்தில் உதயமான உண்மை அவள் விழிகளில் அச்சத்தைத் தோற்றுவித்தது.

அவள் முகபாவங்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த இளநங்கைக்கு அவள் அச்சத்தின் காரணம் புரிந்து விட்டது. "பூங்கோதை, அஞ்ச வேண்டாம், உள்ளே வா" என்று அவள் தோள்களைப் பற்றி அணைத்தபடியே திரும்பி, "யுவான், நீயும் உள்ளே வா" என்றும் அழைத்தாள்.

தான் தமிழகம் வந்த மூன்று தினங்களுக்குள் தன் பெயரும், பிரபாவமும் மதுரை வரை எட்டிவிட்டதை எண்ணி வியந்தபடியே அரண்மனைக்குள் நுழைந்த யுவான், உள்ளே நுழைந்ததும் பிரமித்தான். பிரும்மாண்டமான அந்தக் கூடத்தில் சிற்பங்களும் சித்திரங்களும் நிறைந்திருந்தன. சற்று உயரத்தில் மாட்டப்பட்டிருந்த பெரும் மரப் பலகையொன்று அவன் கவனத்தை ஈர்த்தது. நுணுக்கமான சித்திர வேலைப்பாடுகளுடன் கற்களும் பாதிக்கப்பட்டு, பாண்டியரின் ராஜமுத்திரை அதில் செதுக்கப்பட்டிருந்தது. அதன் நேர் கீழிருந்த இருக்கையில் அமர்ந்து யுவானை உற்று நோக்கிக் கொண்டிருந்தான் ஒருவன். அந்த மனிதனை சூளாமணி விஹாரத்திலும், நாகையிலும் சந்தித்த நினைவும் எழுந்தது யுவானுக்கு. சோழ ஒற்றர் படையைச் சேர்ந்த விஜயன் என்று நாகையில் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட அந்த மனிதன் மீது வியப்பு நிரம்பிய விழிகளை நாட்டிய யுவான், "விஜயா, நீ எப்படி இங்கு...." என்று இழுத்தான்.

**விஷ்வக்சேனன்**

விஜயனின் வழக்கமான விஷமப்புன்முறுவல் விரிந்தது. "யுவான், நீ சென்று முதலில் நீராட்டத்தையும் உணவையும் முடித்துக் கொண்டு



வா. நிதானமாக அமர்ந்து பேசலாம்" என்றான் விஜயன்.

இரு நாழிகைகளுக்குப் பின்னர் மேன் மாடத்தில் இடப்பட்ட இருக்கைகளில் அனைவரும் அமர்ந்திருக்க, நடுவிலிருநத தட்டுக்களில் கனிகள் நிறைந்திருந்தன. விஜயன் நிதானமாக விளக்க ஆரம்பித்தான். "யுவான், நீ இளவரசியாரை அழைத்துச் சென்ற பிறகுதான், வந்தவர்கள் சிங்கணனின் வீரர்கள் என்பதை அறிந்தோம். சைவத் துறவியாரும் நீங்கள் சென்று ஒரு ஜாமம் கழித்தே வந்து சேர்ந்தார்.

ஒருமுறை ஆதித்யனை ஏறெடுத்துப் பார்த்த யுவான், "சோழ வீரர்களைக் கொண்டே எங்களை மீட்டிருக்கலாமே" என்றான்.

விஜயனின் பதில் உடனே வந்தது,





## அருள்வாக்கு

**அஹிம்சையின் முக்கிய பிரயோஜனம் சித்தம் அடங்குவதே. ஆனால் அஹிம்சையை அப்யசிப்பதால், நாம் உத்தேசிக்காமலே வேறொரு பலனும் ஏற்படும். இதற்கு 'அவாந்தரப் பிரயோஜனம்' என்று பெயர். ஒருவன் மனம், வாக்கு, காயம் என்ற திரிகரணங்களாலும் அஹிம்சையைப் பரிபூரணமாகச் சாதித்து விட்டால் அவனுடைய சங்கல்பமின்றியே - அதாவது, அவாந்தரப் பிரயோஜனமாக - அவனுடைய சந்நிதானத்துக்கு வருகிற எல்லாப் பிராணிகளும் தாமாகவே தங்கள் பகைகளை மறந்து அஹிம்சா மயமாகி விடும்.**

**அஹிம்சா ப்ரதிஷ்டாயாம்**
**தத்ஸந்நிதௌ வைரத்யாக:**
**- யோக சூத்திரம்**

**அஹிம்சையைப் பூரணமாக அனுஷ்டித்தவன் இருக்குமிடத்தில் குரூரமானவர் மனத்திலும் சாந்தம் உண்டாகும். எனவே, தான் அன்போடு இருப்பதே இவனது சங்கல்பமானாலும், மற்றவர்களையும் அன்பாக ஆக்கும் அவாந்தரப் பிரயோஜனமும் கிடைக்கிறது.**

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.***

"போசளர்களின் செயல்களில் சோழர்கள் தலையிடுவதில் சிக்கல்கள் பல இருக்கின்றன யுவான். சோழ வம்சத்து ஒரே வாரிசாக இருக்கும் இளவரசியை போசளர்களிடம் சிக்க விடுவதை சைவத்துறவியார் அடியோடு விரும்பவில்லை. ஆனால் நேரிடையான எதிர்ப்பைக் காட்டவும் படைபலம் போதாது. அது மட்டுமல்ல...." என்று இழுத்தான் விஜயன்.

"மேலும் என்ன?"

விஜயனின் விஷமப் பார்வை பாண்டிய இளவலின் மீது பாய்ந்தது, "மேலும் கொங்கு நாட்டுக்கும் சோழ வம்சத்துக்கும் ஒரே வாரிசு சேர வேண்டிய இடம் இதுதான் என்று தீர்மானித்திருக்கிறார் சைவத்துறவியார்" என்றான் விஜயன்.

ஆதித்யனின் முகம் லேசாகச் சிவந்தது.

"இந்த அரசியல் விவகாரங்களைத் தீர்மானிக்க துறவியாருக்கு என்ன அதிகாரம்? என்ன அக்கறை?" ஆதித்யனின் கேள்வி சற்று உஷ்ணத்துடனே வந்தது.

அந்தக் கேள்விக்கு பதில் இளையராணியிடமிருந்து வந்தது, "ஆதித்யா, துறவியார் யாரென்பதை அறிந்தால் நீ இப்படிக் கேட்க மாட்டாய். இதில் அவருக்கில்லாத அதிகாரமும் அக்கறையும் வேறு யாருக்கும் இருக்க முடியாது" என்றாள் அவள்.

விஜயனின் முகத்திலிருந்த விஷமம் மறைந்து அதில் அச்சம் படர்ந்தது. துறவியாரைப் பற்றிய உண்மையை இளைய ராணியார் ஊகித்து விட்டார்கள் என்பதை அவள் வார்த்தைகள் உணர்த்தியதால் பிரமிப்பும் சேர்ந்தது அவன் முகத்தில்.

இருவரது பார்வையையும் கவனித்த ஆதித்யன் வினவினான், "யார் இந்தத் துறவி?" என்று.

இளையராணியின் பதில் வெகு சாதாரணமாக வந்தது. "தற்சமயம் கூற இயலாது ஆதித்யா. பிறகு நீயே புரிந்து கொள்வாய்."

அதுவரையில் இளையராணியின் பக்கத்திலமர்ந்து அவர்கள் விவாதிப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த பூங்கோதையின் தலை மெல்ல நிமிர்ந்து, பார்வை ஆதித்யனை ஏறிட்டது. அந்தப் பார்வையிலிருந்த ஏக்கத்தையும் கவலையையும் கவனித்தவன் அடுத்து வினவினான், "அப்படியானால் இளவரசியை அவள் தந்தையிடம் கொண்டு சேர்ப்பிக்க வேண்டாமா?"

இளையராணியின் பதில் தீர்க்கமாக வந்தது, "அதுவும் தற்போது இயலாது ஆதித்யா. கொங்கு நாடு போசளர் பிடியிலிருக்கிறது. தவிர யுவானின் தந்தையும் சிங்கணனிடம் சிறைப்பட்டிருக்கிறார். பாண்டிய மன்னரின் போர் ஏற்பாடுகளுடன் துறவியாரின் திட்டமும் ஒத்துப் போகிறது. இது பற்றி மன்னர்தாம் முடிவெடுக்க வேண்டும்."

யுவானையும் இளையராணியையும் மாறி மாறிப் பார்த்த ஆதித்யன், "ஏன் இப்பொழுதே நாம் போசளர் மீது படையெடுக்கக் கூடாது?" என்றான்.

"இப்பொழுது கூடாது!" இளையராணியின் பதில் உடனே வந்தது.

"ஏன்?"

"காரணமிருக்கிறது ஆதித்யா" - வாயிலிலிருந்து கரகரத்த குரல் ஒன்று ஒலித்தது.

அனைவரது பார்வையும வாயிலை நோக்கித் திரும்பியது.

**"கொங்கு ஈழம் கொண்டு கொகுவடுகு**
**கோடழித்து**
**கங்கை இருகரையும் காவிரியும் கைக்**
**கொண்டு"**

- என்று பிற்காலத்தில் மெய்கீர்த்திகள் பாட 'சோமகுல திலக' என்று போற்றப்பட்டவனும், தமிழகத்தின் இணையற்ற வீரனும் ராஜதந்திரியுமான ஜடாவர்ம வீரபாண்டியன், அறையின் கூரையை இடித்து விடுபவன் போன்ற உயரத்துடன் வாயிலில் நின்றிருந்தான். இளைய பாண்டியனது வருகை அந்த அறையிலிருந்த அனைவரையும் வணங்கி எழ வைத்தது.

உள்ளத்தையே ஊடுருவி விடுவதைப் போலப் பாய்ந்த அவன் கூர்விழிகள் அறையிலிருந்த ஒவ்வொருவரையும் அலசியது. இறுதியாக விஜயனின் மீது நிலைக்கவும் செய்தது.

அவன் பார்வையின் பொருளைப் புரிந்து கொண்ட விஜயன் தன் கச்சையிலிருந்து இரு ஓலைக்குழல்களை எடுத்து நீட்டினான்.

குழல்களிலிருந்த சோழர் முத்திரைகளை கவனமாக உடைத்தபடியே இருக்கையில் அமர்ந்த ஜடாவர்ம பாண்டியன் வெகு நிதானமாக ஓலைகளைப் படிக்க ஆரம்பித்தான். படிக்கப் படிக்க அவன் விழிகளில் போர்களின் போது தோன்றும் கழுகுப் பார்வை படர்ந்தது. சில கணங்களுக்குப் பின் அதுவும் மறைந்து பெரும் கனவுச் சாயை படர்ந்தது. அவன் பார்வை மீண்டும் விஜயனை நோக்கித் திரும்பியது. அதில் தெரிந்த கேள்வியைப் புரிந்து கொண்ட விஜயன், "பிரபு, இன்னும் ஒரு திங்களுக்குள் அனைத்து ஏற்பாடுகளையும் முடித்துவிட்டு தங்களுக்குத் தெரிவிப்பதாகக் கூறினார். பூர்வாங்கமாக சில பணிகள் இருப்பதாகவும் அதற்காக ஆதித்ய பாண்டியரை அனுப்பி வைக்குமாறும் கூறினார். விவரம் அடுத்த ஓலைக் குழலில் இருக்கிறது" என்றான்.

மௌனமாக இருக்கையை விட்டு எழுந்த வீரபாண்டியன் கைகளைப் பின்புறம் கட்டியபடி அறையில் உலவினான். அனைவரது பார்வையும் அவன் சிந்தனையைக் கலைக்கத் துணிவின்றி அவன் மீது பதிந்திருக்க, சற்று நேரம் கழித்து இறுதியாக அறிவித்தான் வீரபாண்டியன், "விஜயா, இன்னும் இரு தினங்கள் இங்கேயே தங்கியிரு. நான் மன்னரைக் கலந்து கொண்ட பிறகுதான் எந்தத் தீர்மானத்திற்கும் வர வேண்டும்."

ஆதித்யன் முகத்தில் தெறித்த கேள்வியையும் அவனையும் கவனித்த வீரபாண்டியன் முகத்தில் முறுவலொன்று நெளிந்தது. அடுத்து ஒலித்த அவன் சொற்களில் சிந்தனையும் பரிவுமிருந்தது.

"ஆதித்யா, கவனமாகக் கேள். தமிழகத்தின் மூன்று பெரும் சக்திகள் பிளவுபட்டுக் கிடக்கின்றன. சோழ ராஜராஜரால் ஏற்பட்ட சிக்கல்களின் விளைவாகவும், ஏற்படுத்திக் கொண்ட உறவின் காரணமாகவும், இன்னும் ஏற்படுத்த முயலும் உறவின் காரணமாகவும் போசளர் தமிழகத்தில் வேரூன்ற எண்ணுகிறார்கள். விஜயகண்ட கோபாலனும் இதே வழியில் ஏற்கெனவே பெற்றுவிட்ட காஞ்சி நகரிலிருந்து வடக்கே ஸ்திரப்படுத்திக் கொள்ள எண்ணுகிறான். ஆனால் கண்ட கோபாலனுக்கும் போசள மன்னனுக்கும் பகையென்பது உலகறிந்தது. இரண்டு பகைவர்களை நண்பர்களாக வைத்திருப்பது என்பது இரண்டு புலிகளின் மீது ஒருங்கே அமர்ந்து செல்வதைப் போன்றது. அந்த அசாத்யமான காரியத்தை நடத்திக் கொண்டிருக்கிறார் சோழ மன்னர். இடையில் எவருக்கும் அடங்காத காடவர்களின் சிற்றரசும் அதன் ஆதரவாளர்களும் வேறு...."

வீரபாண்டியன் சற்று நிறுத்தினான், தான் கூறியவை ஆதித்யன் சித்தத்தில் உறைய அவகாசமளித்து.

"அதில் ராஜேந்திர சோழரின் சித்தம் என்னவென்பது விளங்கவில்லையே?" என்று வினவினான் ஆதித்யன்.

பதில் விஜயனிடமிருந்து வந்தது , "ராஜேந்திர சோழர், ராஜராஜரின் செயல்களுக்குப் பரிகாரம் காண நினைக்கிறார். ஆனால் போசளருடனோ, கண்ட கோபாலனுடனோ நேரடியாக பகையோ போரோ தொடங்க சோழ நாட்டில் படைபலமில்லை. அன்னியரிடமிருந்து விடுபட்டு தமிழ்நாடு தமிழ் மன்னரால் ஆளப்பட வேண்டுமென்பது அவர் விருப்பம். சைவத் துறவியார் அதை நிறைவேற்ற முயல்கிறார்."

வீரபாண்டியன் தொடர்ந்தான், "தற்போது கொங்கு நாட்டிற்கும் சோழ அரசுக்கும் ஒரே வாரிசாக இருப்பவர் கொங்கு இளவரசி. அவளை அடைவதன் மூலம் தமிழகத்தை விழுங்க நினைக்கிறார்கள் போசளர்கள். பாண்டியரது படை பலம் அதிகமில்லையென்பதும் அதை ஈடுகட்டவே யந்திரப் பொறிகளை அதிகமாகப் போர்களில் பயன்படுத்துகிறோம் என்பதும் சிங்கணன் எண்ணம். அதைத் தடை செய்யவே யுவானின் தந்தையையும் சிறையெடுத்திருக்கிறான் அவன். சைவத் துறவியாரின் ஓலை நமது திட்டங்களுடன் ஒத்துப் போகின்றன. ஆனால் அதன் இறுதிப் பகுதிதான் சற்று சிந்திக்க வைக்கிறது."

"ஆதித்யனைத் தஞ்சைக்கு அழைத்திருப்பதைத்தானே கூறுகிறீர்கள்?" - இளையராணியாரின் கேள்வி அவள் ஓலைகளைப் படித்து முடித்து விட்டதை உணர்த்தியது.

அந்தக் கேள்விக்கு பதில் அப்போது எவராலும் தெளிவாகக் கூற இயலாதிருந்தது.

இரண்டு தினங்களுக்குப் பின்னர் பாண்டிய மன்னரிடமிருந்து வந்தது ஓர் ஓலை. மன்னர் பதிலை எதிர்பார்த்துக் காத்திருந்த அனைவரையும் மதுரையை விட்டு வெளியேற உத்தரவிட்ட அந்த ஓலையைக் கண்டு ஆதித்யனும், பூங்கோதையும் மட்டுமல்ல, வீரபாண்டியனும் கூட பிரமித்தான்.

(தொடரும்)

உயர்ந்தது ஏழைகளுக்காக உழைக்கும் ஓர் உத்தமனுடைய முகத்தில் துளிர்க்கும் வியர்வை நீர்.
— வாரியார்
தகவல் : வயலூர் ஆர். பார்த்திபன்



பிச்சை பொறுமை இழந்திருந்தான். சந்திலிருந்த முட்டுக் கல்லில் தளர்வாய் உட்கார்ந்தான். சுற்றிலும் பாதி புகைத்த பீடித்துண்டுகள். எதிர் சுவற்றில் அண்டக் கால் கொடுத்து நின்றபடி, வானத்தை அண்ணாந்து, தாடி சொறிந்து கொண்டிருந்த மாயாண்டி, பிச்சையின் அவஸ்தையைப் பார்த்துக் காவிப் பல் தெரிய கலீரென்று சிரித்தான்.

"என்னண்ணே! நீ புள்ளத்தாச்சியா இல்லே உன் பொண்டாட்டி புள்ளதாச்சியா? ம்... இந்த நெளி நெளியறே!"

பிச்சை எரிச்சலோடு ஏறிட்டான்.

"என்னடா... எகத்தாளமா?"

"பின்னே என்னண்ணே! நான்தான் படிச்சு படிச்சு சொன்னனே! பொசுக்குன்னா கத்தியைத் தூக்கற நமக்குப் பொண்டாட்டி எதுக்கண்ணே! ம்... கூலிக்கு ஆளை வெட்டற நமக்கெல்லம் குடும்பம் தோதுப்படுமா?"

பிச்சை பதில் பேசவில்லை. தலைகுனிந்து கொண்டான். மாயாண்டி ஏளனப் புன்னகை உதட்டில் வழிய, சந்திலிருந்து மெயின்ரோட்டுக்கு நகர்ந்தான்.

எதிர் டீக்கடையில் பேப்பர் படித்தபடி இருவர்... பக்கத்துப் பெட்டிக்கடையில் பான்பராக் மென்றபடி ஒருவன்... சிக்னலுக்காகக் காத்திருந்தார்கள்.

ஆர்.எஸ்.காளியம்மன் கோவிலுக்கு எதிர்த்தாற் போல், பத்தடி தள்ளி, சேலம் மெயின் ரோட்டில் ஒரு சின்ன கட்டடத்தில் அந்த 'சமூக சேவை மையத்தின்' ஆபீஸ் இயங்கிக் கொண்டிருந்தது.

சரியாக மாலை ஆறுமணிக்கு, இருள் பூசிக் கொள்ள ஆரம்பிக்கும் நேரத்தில், வெள்ளை மாருதியில் வந்திறங்கும் முப்பத்தைந்து வயது இளைஞன்தான் இன்றைய இலக்கு! கார் நம்பர் கொடுக்கப்பட்டிருந்தது. கையிலோ, காலிலோ எலும்பு முறிவு அல்லது பலத்த ரத்த காயம்! உயிருக்குச் சேதம் கூடாது- இதுதான் உத்தரவு! மற்றபடி அந்த இளைஞன் யார், எதற்கு இந்த தண்டனை, இது தகுமா? முறையா? என்பதெல்லாம் விடைதெரியாத கேள்விகள்! கேட்கக் கூடாத கேள்விகள்!

இதுநாள் வரை பிச்சையும் கேட்டதில்லை! நேற்றுதான் கேட்டான்! அருவருப்பும், ஆச்சர்யமும் முகத்தில் மின்னத் திரும்பிய சீசரின் கண்களில் எச்சரிக்கை!

"என்னடா பிச்சை! தலகாணி மந்திரமா! ரொம்ப தடுமாறிப் போயிருக்கே!"

"இல்லீங்க... வந்து..."

"இதோ பார்! சொகத்துக்கு மட்டும்தான் பொண்டாட்டி! அவ சொல் பேச்சை கேட்க ஆரம்பிச்சிட்டே... அப்புறம் நீ வெறும் தலையாட்டி ஞாபகமிருக்கட்டும்...! கொஞ்சநாளா 'தொழில்' மேல உனக்கு அக்கறை குறைஞ்சு போச்சு! இதுலயாவது உம் பழைய திறமையைக் காட்டு! போ."

சீசரை மறுத்துப் பேசும் தைரியம் இல்லை! அவன், சோற்றுக்கு வழியில்லாமல் சொறிநாயைப் போலத் தெருவில் திரிந்தவனுக்கு சொர்க்கம் காட்டியவன்! ஓடும்வரை விரட்டிக் கொண்டிருந்த ஜனங்களை, ஒரே ஒரு விழிப்பார்வையில் மிரண்டு போய் பின்வாங்கச் செய்தவன்! பைசாவுக்குப் பிரயோஜனப் படாத அனாதைப்

ஜெரா



இலயிப்பை ஏற்படுத்தியது. மெல்ல அவளை நெருங்கினான்.

"என்னா குட்டி! ரொம்ப ரவுசு பண்றே... ம்...?"

கல்யாணி ஆக்ரோஷமாகப் பார்த்தாள். விரிந்த கண்களில் கசிந்த நெருப்பைப் பார்த்து பிச்சையின் அடிவயிறு லேசாகக் கலங்கியது. அம்சாக்காவைப் பார்த்தான்.

"என்னா அம்சா! பார்ட்டி ரொம்ப சிலும்பறா!"

வெற்றிலை எச்சிலைப் 'புளிச்' என்று வெளியே துப்பி விட்டு திரும்பிய அம்சாக்கா "யஹ்ஹாங்" என்று ஆமோதிப்பது போல நீட்டி முழக்கினாள்.

"ஆயி அப்பன் இல்லியாம்... மெட்ராஸுக்கு அக்காவைத் தேடிப் போறாளாம்... டிக்கட்டுக்கு காசில்லாம திருதிருன்னு குந்திகிட்டு இருந்தவளை இட்டாந்தேன்... மடங்குவனாங்கறா!"

"எங்கிட்டே வுடு...தள்ளிகிட்டு போயி பத்து நாள்ள சரியாக்கி அனுப்பி வைக்கிறேன்."

பிச்சைக்கு ஏன் என்று தெரியவில்லை. களங்கமற்ற அவள் முகமா, அல்லது கல் சிற்பம் போன்ற அவள் உடலா... எது அவனுக்குள் க்ரியை புரிந்தது என்று தெரியவில்லை. கேட்டு விட்டான்! ஆச்சர்யம் பொங்க அம்சாக்காவும் தலையாட்டி விட்டாள்!

அதிசயம்! கல்யாணி முரண்டு பிடிக்கவில்லை– பழகிய நாய்க்குட்டி போல பிச்சையைத் தொடர்ந்தாள்... ஒருவேளை எதிர் துருவம் என்பதால் அம்சாக்காவைவிட பிச்சையை சமாளிப்பது சுலபம் என்று நினைத்தாளோ என்னவோ...

பெண்சுகம் பிச்சையை என்றைக்குமே பேதலிக்கச் செய்ததில்லை! காரணம்... அவன் நினைத்தபோது... நினைத்தபடி அது கிடைத்தது வெகு சுலபமாக. ஆனால்...

கூடவே இருந்ததால் கல்யாணி அவனுக்கு இன்னொரு உலகத்தைக் காட்டினாள். அனாதையான அவனுக்கு அவளுடைய அன்பும் பரிவும் இதுவரை புலப்படாத எத்தனையோ உறவுகளின் வாசல்கதவுகளை விரியத் திறந்து விட்டன! முரட்டுத்தனம் மெல்ல மெல்ல முட்டிபோட ஆரம்பித்தது. இரக்க குணம் 'பிச்சையை' அந்தஸ்துக்கு உயர்த்தியவன். அவனைப் பகைத்துக் கொண்டு எப்படி...?!

ஆனால் கல்யாணி... அவளுக்கு எப்படி சமாதானம் சொல்ல முடியும்? எட்டி உதைக்கும் அவன் கால்களைக் கட்டிக் கொண்டு மௌனமாக கண்ணீர் விடும் அந்த 'வளர்ந்த' குழந்தையின் வாயை எப்படி அடைக்க முடியும்!

ஒரு வருடத்துக்கு முன்பு 'மாமூல்' வசூலிக்க தொப்பூர் பக்கம் அம்சாக்கா வீட்டுக்குப் போயிருந்தான் பிச்சை. அப்போது தான் மூலையில் உட்கார்ந்து கால் மடித்து விசும்பியபடி தலைவிரி கோலமாய் மூக்கைச் சிந்திக் கொண்டிருந்த கல்யாணி கண்ணில் பட்டாள். அம்சாக்கா அலட்டிக் கொள்ளாமல் நொடிக்கொருதரம் அவள் மோவாயில் இடித்து கெட்டவார்த்தையில் கொஞ்சிக் கொண்டிருந்தாள். மற்றப் பெண்களைப் போல இல்லாமல் கல்யாணியின் தீவிரமான எதிர்ப்பு பிச்சைக்கு ஓர்

லேசாக எட்டிப்பார்க்கத் தொடங்கியது.... நள்ளிரவில் விழித்துக் கொள்ள ஆரம்பித்தான்... குழந்தையாய் குறுகிப்படுத்து அவன் மார்பில் ஒண்டிக் கொண்டிருந்த அவள் எழில் முகம் அவனுக்கு எதிர்கால பயத்தைத் தூண்டி வியர்க்க வைத்தது.

அவள் விடாமல் நச்சரித்தாள். இந்த வெட்டும் தொழிலை விட்டு விடச் சொல்லி... கோபத்தில் உதைத்தாலும் பொறுமையாய் தாங்கிக் கொண்டாள்... என்றாலும் போராட மட்டும் தயங்கியதில்லை.

"ஊளயங்ங்..."

வித்தியாசமான மாயாண்டியின் அந்த விசில் சத்தம் பிச்சையைத் துணுக்குறச் செய்தது... மெயின் ரோட்டுக்குப் பாய்ந்தான். சாம்பல் பூசிக் கொண்டிருந்த மெல்லிய இருட்டில் வெள்ளை மாருதி... கதவைத்திறந்தபடி அந்த இளைஞன்... யோசிக்க நேரமில்லை.. தபதபவென்று யார்யாரோ ஓடினார்கள்... மெல்லிய பரபரப்பில் இருந்த நெடுஞ்சாலை நிமிஷ நேரத்தில் நிசப்தமானது... சர் சர்ரென்று கடை ஷட்டர்கள் தலை கவிழ்த்துக் கொண்டன...

உருட்டுக் கட்டைகள் மாருதியின் கண்ணாடிச் சுவர்களைப் பதம்பார்க்க, விக்கித்து நின்ற இளைஞனின் பின்புறச் சட்டைக் காலரைக் கொத்தாகப் பற்றித் திருப்பி, வீச்சரிவாளை ஓங்கினான் பிச்சை! அந்தக் கணத்தில்...

"வீல்ல்" அடிவயிற்றில் எக்கி வெளிக் கிளம்பிய அந்த அலறல் பிச்சையை இமைக்கும் நேரம் தயங்கித் திரும்ப வைத்தது... அந்த நேரம் விடுபட்டுக் கொள்ள போதுமானதாயிருந்தது அந்த இளைஞனுக்கு... மேற்கொண்டு இயங்க பிச்சையால் முடியவில்லை... வீச்சரிவாள் கையைப் புறக்கணித்து தார்ச் சாலையில் தண்டனிட்டது. அலறியப் பெண்ணைப் பார்த்ததும் பிச்சை பதறினான்.

"ஐயோ கல்யாணி!" என்று கத்தியபடி பிச்சை ஓடினான்... மெல்ல மயங்கிச் சாய்ந்த கல்யாணி, தாங்கிக் கொள்ளும் முன்பு தரையில் விழுந்தாள்... பிச்சை அவள் தலையைப் பற்றித் தூக்கிய போது அவன் கைகளை நனைத்து, வெதுவெதுப்பான ரத்தம் விரலிடுக்கில் வழிந்தது... மெல்ல மேடிட்டிருந்த அவள் வயிறு ஏறித்தாழ, செருகும் இமைகளைப் பிரித்து பிச்சையை ஏக்கத்தோடு பார்த்தாள் கல்யாணி....

"'விட்... விட்டுடுய்யா... வெட்டாதீய்யா..." அதற்கு மேல் பேசமுடியாமல் உதடுகள் துடிக்க கல்யாணி மயக்கமானாள்... செக்கப்புக்காக டாக்டரைப் பார்க்கப் போவதாய் சொல்லி இருந்தாள். அதற்கு முன்பு கோவிலுக்கு வந்திருக்க வேண்டும். அசம்பாவிதம் பார்த்த அதிர்ச்சியில், நிலை புரியாது, கல் இடறி... கால்

'சுருக்-நறுக்' என்று ஒரு
சொல்லோவியம் - 18

## கிரிக்கெட் என்பது....

'பதினொரு முட்டாள்கள் ஆடுவதை, பதினோராயிரம் பேர் பார்க்கிற விஷயம்' என்று பெர்னார்ட்ஷா சொன்னால் சொல்லி விட்டுப் போகட்டும்.

உலகக் கோப்பை ஜுரம் பற்றத் தொடங்கியிருக்கும் இந்த சீஸனில் 'கிரிக்கெட்' பற்றி நீங்கள் ஒரு 'டச்சிங்'கான சொல்லோவியம் தீட்டுங்கள். பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியத்துக்கும் ஐம்பது ரூபாய் பரிசு. இன்னும் எட்டு வாரங்களுக்குத் தொடர்ந்து நடக்கும் இப்போட்டியில் அதிக முறை பரிசு பெறும் ஒருவருக்கு ஒரு ஜோடி டைடன் கைக்கடிகாரங்கள் பரிசு!

**முடிவு தேதி : 19.2.96**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

- ஆர்.

கிரிக்கெட் என்பது..........................

..........................

..........................

..........................

..........................

பெயர் : ..........................

முகவரி : ..........................

..........................

..........................

..........................



- இரா. முத்துவேல்

மடங்கி...

பிச்சை செய்வதறியாது தவித்தான். பெரிதாக ஓலமிட்டு அழ வேண்டும் போலிருந்தது. ஆனால் வார்த்தைகள் மொண்ணையாகித் தொண்டைக்குள் சிக்கிக் கொண்டன. தேகம் வெடவெடத்தது. அவன் கைகள், உடம்பு எல்லா இடத்திலும் ரத்தம்....

ரத்தம் அவனுக்குப் புதிதல்ல... அது அவன் முகம் நனையத் தெறித்த போதெல்லாம் கூட தேகம் நடுங்கியதில்லை- இந்த அளவுக்கு பாதிக்கப்பட்டதில்லை....ஆனால் இப்போது... பதற்றம் தொற்றிக் கொண்டது.... ரத்தம் பார்க்க கண்கள் கூசின... அந்தச் சிவப்பு, மனதை சின்னாபின்னப் படுத்தியது- நெருப்பைத் தீண்டியது போல எரிந்தது...

இந்த ரத்தம்... அவன் ரத்தம்! அன்பைப் புரியவைத்தவளின் ரத்தம்... அனாதைப் பிச்சைக்கு ஓர் அடையாளம் கொடுத்தவளின் ரத்தம்...

நிசப்தமாகி இருந்த நெடுஞ்சாலை நிமிஷ நேரத்தில் உயிர்ப் பெற்றது... பிச்சை நெடுங்கல்லாய் உட்கார்ந்திருக்க, அவனைச் சுற்றி பரபரப்பாய் கூட்டம்! போட்டது போட்டபடி கோவில் பூசாரி ஓடி வந்தார்!

"ஆளாளுக்கு வசவசன்னு பேசிக்கிட்டு இருக்காம ஒரு ஆட்டோவைப் புடிங்க... புள்ளதாச்சிப் பொண்ணு.... இந்தாய்யா... காயத்துக்கு இந்தத் துண்டைச் சுத்து..."

பிச்சை மௌனமாய் சொன்னதைச் செய்தான். யாரோ கல்யாணியின் முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். யாரோ சோடா உடைத்து நீட்டினார்கள்.

"நகருங்கய்யா... கொஞ்சம் நகருங்க..."

கூட்டத்தை விலக்கிக் கொண்டு அந்த இளைஞன்... பிச்சையால் தாக்கப்பட வேண்டிய இளைஞன்... பின்புறம் சட்டை கிழிந்து தொங்கிக் கொண்டிருக்க... எட்டிப் பார்த்தான்... சாலை ஓரமாக மூளியாய் நின்று கொண்டு... வெள்ளைமாருதி புறப்படத் தயாராய் இருந்தது.

"சும்மா பாத்துக்கிட்டு இருந்தா காரியமாகாது... ஆளுக்கு ஒரு கை புடிங்க..."

நிமிஷ நேரத்தில் கல்யாணி மாருதியில் ஏற்றப்பட்டாள்... ஆதரவாய் ஓரிரு பெண்களும் ஏறிக் கொண்டனர். டிரைவர் சீட்டுக்குப் போகும் முன்பு இருகரம் கூப்பிய படி மௌனச் சாமியாய் நின்று கொண்டிருந்த பிச்சையைப் பார்த்து நேசமாய் சிரித்தான் அந்த இளைஞன்.

"அட... முன்னால் வந்து உட்காருங் கண்ணே! எங்கம்மாவும் டாக்டர்தான்... ராசியானவங்க... கவலைப் படாதீங்க... ஒண்ணும் ஆவாது..."

**ப**த்து நாட்கள் ஆகி விட்டன.

வெகு சீக்கிரமே எழுந்து ஒரு பீடியைப் பற்ற வைத்தபடி... ஆங்காங்கே பொத்தலாகி இருந்த வீட்டுக் கூரையை வெறித்தபடி உட்கார்ந்திருந்த பிச்சையிடம் காப்பியை நீட்டினாள் கல்யாணி...

"அட... என்ன ரோசனை...?"

தலையில் கட்டோடும், துருத்திய வயிறோடும் மெல்ல மூச்சு வாங்கியபடி நின்றிருந்த அவளை தீர்க்கமாகப் பார்த்தான் பிச்சை...

"ஒண்ணுமில்லே... நான்... நான் கூலிப்பட்டாளத்துல சேந்துடறதா முடிவு பண்ணிட்டேன் புள்ளே..."

கல்யாணி திடுக்கிட்டுப் பின்வாங்கினாள்... கண்களில் கலவரத்தோடு கண்ணீர்த் துளிகளும் எட்டிப் பார்த்தன. மூக்கு விடைத்தது... பிச்சை ஆதரவாய் சிரித்தான்....

"பயப்படாதே... உசிரை வாங்கற அந்த கூலிப்பட்டாளத்துல இல்ல... உழைச்சுப் பிழைக்கற கூலிப்பட்டாளத்துல... கூளையூர்லே ஒரு கட்டட வேலை நடக்குது... அதுக்குதான்..."

பிச்சை கட்டிலுக்கு அடியிலிருந்து மண்வெட்டியையும், பூச்சுக் கரண்டியையும் இழுத்துக் காட்டி வெள்ளையாகச் சிரித்தான்... கல்யாணி துள்ளலோடு அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டு, கன்னம் நோக்கிப் பாய்ந்தாள்.

பெயரில் மதுரத்தை இணைத்துக் கொண்டிருந்ததாலோ என்னவோ, பாண்டியரின் அந்தப் பழம் பெரும் தலை நகரான மதுரை, இளவரசி பூங்கோதையின் மனத்திற்கு ஓர் இனிமையையும், பெரும் ஆறுதலையும் அளித்திருந்தது. இளையராணியின் அன்பும் பரிவும் மட்டுமின்றி அந்த இனிமைக்கு வலிவு கூட்ட வேறு காரணமும் இருப்பதாகப் பட்டது அவளுக்கு. அந்தக் காரணம் அரண்மனைக்குள் அடிக்கடி வளைய வந்து அவளைப் பலமுறை சந்தித்தது. விளையாட்டுப் பிள்ளை போலிருந்தவன் அவளை விழுங்கி விடுபவன் போலப் பார்த்த பார்வைகளும், அடிக்கடி ஏற்பட்ட சந்திப்புகளும் அவள் சிந்தையில் ஏற்படுத்திய மாறுதல்களின் விளைவாகக் கன்றிச் சிவந்திருந்தது அவள் முகம். அந்த முகத்தையும் தரையை நோக்கித் தாழ்ந்துவிட்ட பார்வையையும் கண்டு இளையராணியும் தோழியரும் பேசிய பரிகாச வார்த்தைகளும் கூட இனிமையை அளிப்பதாக எண்ணிக் கொண்டாள் அவள்.

## விஷ்வக்சேனன்

எல்லாவற்றுக்கும் மேலாக கொங்கு மண்ணில் போசளர் ஆதிக்கம் பரவுமுன் அவளை சூளாமணி விஹாரத்தில் கொண்டு சேர்த்தவரும், அவள் நல்வாழ்விலும், கல்வியிலும் பெரும் அக்கறை காட்டியவருமான சைவத் துறவியாரின் திட்டப்படி காரியங்கள் நடக்கின்றன என்பது பாதுகாப்பு உணர்வைத் தந்தது. அவள் சேர வேண்டிய இடம் பாண்டியர் அரண்மனை என்று துறவியார் குறிப்பிட்டதாக விஜயன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பின்பு, ஆழ்ந்த நம்பிக்கை உண்டாயிற்று.

சித்தத்தின் வேகத்திற்கும் காலத்தின் வேகத்திற்கும் ஒரு கண்ணுக்குத் தெரியாத மாயப் பிணைப்பை ஏற்படுத்தியிருந்த இயற்கை, மதுரை அரண்மனைக்கு அவள் வந்து இரு தினங்கள் ஓடி விட்டதை உணர வழியில்லாமல் அடித்திருந்தது. இளையராணியிடமிருந்தும், ஆதித்யனின் விஷம விழிகளிலிருந்தும் தப்பி அரண்மனை நந்தவனத்தில் மயக்க முயற்சித்துக் கொண்டிருந்தன. அந்த மயக்கத்தை இன்னும் அதிகப்படுத்த நந்தவனத்து மலர்கள் தங்களது சுகந்தம் அனைத்தையும் திரட்டி அவளுக்கு அனுப்பி வைத்துக் கொண்டிருந்தன. அதுவும் போதாதென்று அவள் அமர்ந்திருந்த இடத்தினருகிலிருந்த மரத்தின் மீதிருந்து குயில் ஒன்று தன் இனிய குரலை எழுப்பிக் கொண்டிருந்தது. ஒரே சீராகச் சென்று கொண்டிருந்த தனது வாழ்வின் போக்கில் ஏற்பட்டு விட்ட மாறுதல்களைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தவளின் தோள்களில் சிலீரென்ற இரு கரங்கள் பதிந்தன. திடுக்கிட்டுத் திரும்பியவளின் விழிகளை இரு விஷம விழிகள் ஊடுருவின. உள்ளத்தையே ஊடுருவி அலசிய அந்தப் பார்வையை இரு வினாடிகளுக்கு மேல் சந்திக்கத் திராணியற்ற அவள் முகம் தாழ்ந்தது. வெகு சகஜமாக அவளருகில் அமர்ந்த ஆதித்யனின் கரம் அவள் முகத்தை மெல்ல நிமிர்த்தியது. "பூங்கோதை" என்ற மிருதுவான அழைப்பொன்றும் அவனிடமிருந்து வந்தது.

சிறு வயதில் தந்தையும், சூளாமணி விஹாரத் தலைவரும் சைவத் துறவியாரும் தன் பெயரைப் பலமுறை உச்சரித்து அழைத்திருந்தாலும், அந்த அழைப்புக்கள் அனைத்திலும் ஏற்படாத ஓர் உணர்வு ஆதித்யனின் அழைப்பில் ஏற்படுவதை உணர்ந்தாள் இளவரசி.

"பூங்கோதை"- மீண்டும் அழைத்தான் அவன்.

"ம்" ஒற்றைச் சொல்லே பதிலாக வந்தது அவளிடமிருந்து.

"துறவியார் கூறியபடி இளையராணியார் செய்யும் ஏற்பாட்டுக்கு நீ ஒப்புக் கொள்கிறாயா பூங்கோதை?"

"ம்"- மீண்டும் அதே பதில் வந்தது அவளிடமிருந்து. அவன் அதைக் குறிப்பிடுகிறான் என்பதும் புரிந்தது அவளுக்கு.

"இப்படி ஒற்றெழுத்தாகவே பதில் கூறினால் எப்படி? வாய்திறந்து மறுமொழி கூறினால் முத்தா உதிர்ந்துவிடும்?" ஆதித்யனின் குரல் சற்று உயர்ந்து ஒலித்தது.

சட்டென்று நிமிர்ந்தாள் அவள். அடுத்து மெலிதாக ஒலித்த அவள் குரலில் தயக்கம் தெரிந்தது. "சம்மதம்தான், ஆனால்..."

"ஆனால் என்ன?"

"நான் அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு சிற்றரசின் வாரிசு. தாங்கள் பாண்டியப் பேரரசின் இளவல். மேலும்..."

இந்திரா



"மேலும் என்ன?"

"மேலும் மன்னர் இதற்கு ஒப்புக் கொள்ள வேண்டுமே?"- மெல்ல நீண்ட சம்பாஷணை அவள் தயக்கத்தைத் துடைத்திருந்தது.

ஆதித்யனின் பதில் உடனே வந்தது: "மன்னர் ஒப்புக் கொண்டு விட்டார்!" "எப்பொழுது?" என்றாள் வியப்பில் விரிந்த விழிகளுடன்.

அகன்று விரிந்த அவள் விழிகளைச சறறு நேரம் ரசிதத ஆதித்யன், "பூங்கோதை, நீ கொங்கு நாட்டின் இளவரசி மடடுமலல. மூன்றாம ராஜேந்திர சோழருக்குப பின அறறுப போய்விடட சோழ வமசத்தின எஞசியிருக்கும ஒரே வாரிசு. அதனாலதான உன்னை போசளர் கரங்களில ஒப்படைப்பதை ராஜேந்திர சோழர் விருமபவில்லை. சோழ, பாண்டிய அரசுகளை இணைப்பதன் மூலம் தமிழகம் அன்னியரிடமிருந்து விடுபடும் என்று எண்ணுகிறார். பாண்டிய மன்னரும் இதை ஏற்றுக் கொண்டார். ஓலை இப்போதுதான் வந்தது" என்றான்.

பூங்கோதையின் அகன்ற விழிகள் படபட வென்று அடித்துக் கொண்

# நவைசு



## அருள்வாக்கு

பகவத் ஸங்கல்பம் நமக்குப் புரியாது. என்றாலும், அவன் சாஸ்த்ர வாயிலாகக் கலி அதர்ம யுகம் என்று நமக்குத் தெரிவிக்கும் போது, அப்படியே அதர்மத்தில் லோகம் நசித்துப் போவதற்காகத்தான் இந்த யுகம் அவனால் தீர்மானமாக ஸங்கல்பிக்கப் பட்டிருக்கிறதென்று அர்த்தம் செய்து கொண்டுவிடக் கூடாதென்றே தோன்றுகிறது. 'லோகம் அவனுக்கு நாடகம். அவன் கதை எழுதி, டைரக்ட் பண்ணுகிற நாடகம். ரஸ வைசித்ர்ய ருசிக்காக (காவிய ரஸங்களில் மாறுபாடு செய்து சுவை கூட்டுவதற்காக) நாடகாசிரியர் ரௌத்ரம், பீபத்ஸம், பயம் ஆகியவையுள்ள ஸீன்களையும் கல்பிப்பது போல அவனும் கலியில் செய்வதாயிருக் கலாம்' என்று சொன்னாலுங்கூட, இதிலே ஒரு அளவுக்கு மேலே போக அவனுடைய கருணையுள்ளம் இடம்கொடுக்காது. ஒரே ரௌத்ரம், பீபத்ஸம், பயானகம் என்று ஆகிவிட்டால் அதில் 'ரஸம்' என்று சொல்லும் படி என்ன இருக்கும்? விரஸம்தான் இருக்கும். ஆகையினால் அவன் பூர்வ யுகத்து மநுஷ்யர்களைப் போல இந்த யுகத்தில் அவ்வளவு தார்மிகர்களாகவும், தெய்வ சக்தியுள்ளவர்களாகவும் ஜனங்களை ஸ்ருஷ்டிக்காவிட்டாலும், அதர்மத்தில் அவர் களுக்கு உள்ளூர ஒரு ருசியைக் கொடுத்தே ஸ்ருஷ்டித்திருந்தாலும், அதிலேயே அவர்கள் முழுகி அழிந்து விடும் கொலைக் கூத்தாக முடித்து விட மாட்டான். சறுக்கா மாலை விளையாட்டுப் போலச் சறுக்கும் வரை சறுக் கட்டும் என்று பார்த்துக் கொண்டிருந்தாலும், விழுந்த எலும்பை முறித்துக் கொள்ள விடாமல் தாங்கிக் கொள்வதற்கு வருவான், மஹான்களையும் அனுப்பி வைப்பான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.

டன. "துறவியார் கூறியது பலித்து விடும் போலிருக்கிறது" என்று அவள் இதழ்களும் முணுமுணுத்தன.

"என்ன கூறினார் துறவியார்?" ஆதித்யன் கேட்டான்.

இளவரசி தன் கரத்தை அவன் முகத்துக்கு எதிரில் நீட்டினாள் "துறவியார் இந்தக் கரத்தின் ரேகைகளைப் பார்க்கும் போதெல் லாம் தமிழகத்தை மீண்டும் ஒரு குடையின் கீழ் கொண்டுவரும் ஒரு தமிழ் மன்னனின் அரச குடும்பத்தில் நான் சென்று சேருவேன்; என் திருமணத்தை தமிழகத்தின் மன்னர்கள் குறைந்தது மூன்று பேராவது சேர்ந்து நடத்து வார்கள் என்று அடிக்கடி கூறுவார்"– அவள் வார்த்தைகள் கனவிலிருந்து ஒலிப்பதுபோல ஒலித்தன.

தன் முகத்துக்கெதிரே நீண்ட அந்த மலர்க் கரத்தைப் பற்றிய ஆதித்யன் தன் இதழ்களை அதில் பதித்தான். பூங்கோதையின் உடல் சிலிர்த்தது.

"அப்படியே நடக்கட்டும் பூங்கோதை. நான் இப்போது வந்தது உன் சம்மதத்தை உன் வாய் மொழியாக அறிந்து கொள்ள மட்டுமல்ல. உன்னிடம் விடைபெற்றுக் கொள்ளவும்தான்" என்றான். இளவரசியின் மலர்முகம் சட் டென்று கூம்பியது. "விடைபெற்றுக் கொள் ளவா? எதற்காக?"– அவள் குரல் ஈனஸ்வரத்தில் ஒலித்தது.

"துறவியார் என்னைத் தஞ்சைக்கு அழைத்து ஓலையனுப்பியிருந்தாரல்லவா? மன்னரிடமிருந்து உடனே செல்லும்படி உத் தரவு வந்திருக்கிறது. அது மட்டுமல்ல..."

"இன்னும் என்ன?"

"உன்னையும் இந்த மதுரையிலிருந்து வெளியேற்ற உத்தரவிட்டிருக்கிறார்."

"எதற்காக?"– அவள் குரலில் அச்சம் ஒலித் தது.

"அஞ்ச வேண்டாம் பூங்கோதை. உன்னைப் பாதுகாப்பான இடத்தில் ஒப்படைத்த பின்பு தான் நான் தஞ்சைக்கு செல்வேன்."

"இந்த மதுரையின் பாதுகாவலுக்கு என்ன குறைவு?"

"பூங்கோதை! தமிழகத்தை அன்னியரிட மிருந்து மீட்க சோழ நாட்டிலும் கொங்கு மண்ணிலும் உள்ள போசளர்களையும், தொண்டை மண்டலத்திலுள்ள காகதீயர் களையும் விரட்ட வேண்டும். இடையில் காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனின் இடையூறுமிருக்கிறது. இத்தனையும் சாதிக்கு மளவிற்கு நமது படை பலம் அதிகரிக்க வேண் டும். இருக்கும் படைகளை இதற்காக மூன் றாகப் பிரித்திருக்கிறார் மன்னர். அதில் மதுரை யின் காவற்படையும் அடங்கும். தமிழகத்தின்



''உங்களுக்குத் தெரிஞ்ச மினிஸ்டர், எம்.பி., எம்.எல்.ஏ. யாராவது இருக்காங்களா?''

''இல்லை ஸார்...''

''சரி... ஆளுங்கட்சி மாநிலச் செயலாளர், மாவட்டச் செயலாளர் இப்படி யாராவது...''

''அப்படித் தெரிஞ்சவங்களும் யாரும் இல்லை ஸார்...''

''அப்படியா?... போலீஸ்துறையிலே இன்ஸ்பெக்டர், எஸ்.ஐ., கான்ஸ்டபிள்னு...''

''ஒருத்தரும் இல்லை ஸார்...''

''அப்பாடா!... ஆபீஸ் பணத்தைக் கையாடின குற்றத்துக்காக உங்களை நான் சஸ்பெண்ட் பண்ணறேன்!''

– எஸ். சீனிவாசன்

---

விடுதலைக்கான முதற்போர் கொங்கு மண்ணில் நிகழப் போகிறது. படைத்தலைவர் கிருஷ்ணமல்லர் உத்தமபாளையத்திலிருக்கிறார். அவரது பாதுகாப்பில் உன்னைக் கொண்டு சேர்த்த பிறகுதான் நான் தஞ்சை செல்லப் போகிறேன். பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். அரண்மனைக்குத் திரும்பலாம் வா'' என்றான் ஆதித்யன்.

உறவின் இனிமையும் பிரிவின் துயரமும் ஏற்படுத்திய உணர்ச்சிகள் ஒன்றாய் உள்ளத்தில் போட்டியிட, இளவலின் கரத்திலிருந்து தனது கர்த்தை விடுவித்துக் கொள்ள மனமின்றி மௌனமாக நடந்த பூங்கோதைக்கு எப்படியும் அவன் உத்தமபாளையம் வரை வருகிறான் என்ற நினைவு சற்று ஆறுதலளித்தது.

அதே சமயத்தில் விஜயனுடன் உரையாடிக்கொண்டிருந்த யுவானுக்கு உத்தமபாளையம் செல்லும் ஆவல் அதிகரித்துக் கொண்டிருந்தது. பாண்டியரின் பிரதான படைத்தலைவரும், வடநாட்டு மல்லர்களையெல்லாம் வென்றதால் ஆரியச் சக்கரவர்த்தி என்று பட்டம் பெற்றவரும், தமிழகத்துப் போர் முறைகளை கரதலப் பாடமாகக் கற்ற பின்பும் திருப்தியடையாமல் சீனத்திற்கும் வந்து போர்ப் பயிற்சி பெற்று வந்தவருமான கிருஷ்ண மல்லரைப் பற்றி அவன் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தான். எல்லாவற்றையும் விட அவன் தந்தை யாங்சின் இறுதியாக உத்தம பாளையத்தின் கோட்டையில்தான் பணியாற்றிக் கொண்டிருந்தார் என்று விஜயன் தெரிவித்திருந்ததும் அவன் ஆவலை அதிகரிக்கச் செய்திருந்தது.

வீரபாண்டியனிடமும் இளையராணியாரிடமும் விடை பெற்று, மறுதினம் உதய நேரத்திலேயே தொடங்கிய பயணம் இளவரசியின் மனோநிலைக்கு சற்று மாறுதலை அளிக்கத் தொடங்கியது. வைகையைக் கடந்த பின்னர், பசேலென்று விரிந்த வயல்களும் அழகிய கிராமங்களும், சிறு குன்றுகளும் வனங்களும் அவள் ஏக்கத்தை மாற்ற முயன்றன. முல்லையாற்றைக் கடந்த பின்னர் சூழ்நிலை சற்று மாறியது. கண்களுக்கெட்டிய தூரம் வரையில் தோகை மரங்கள் நிறைந்த வனமும், தோகை விரித்து ஆடிய மயில்களின் கூட்டங்களும் தென்பட்டன. ஊடே வாழையும் தென்னையும் நிறைந்த சோலைகள் குறுக்கிட்டன.

விஜயனுடன் உரையாடியபடியே புரவியை நடத்திய யுவான், சற்று அருகில் நெருங்கி "விஜயா, இது என்ன இடம்?" என்று வினவினான்.

"இந்த இடத்திற்குத் தோகை வனம் என்று பெயர்'' என்ற விஜயனின் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை தெரிவதைக் கண்ட யுவான் "எதைப் பற்றி சிந்திக்கிறாய் விஜயா?" என்றான்.

"யுவான், உத்தமபாளையம் கோட்டை பலமானதுதான். படைத்தலைவர் கிருஷ்ண மல்லரும் சாமானிய மனிதரல்ல. ஆனால் அங்கிருந்துதான் உன் தந்தை சிறைப் பிடிக்கப்பட்டு போசளரால் கடத்தப்பட்டிருக்கிறார்" என்றான் விஜயன்.

''நீ என்ன கூற வருகிறாய் விஜயா?'' யுவானின் குரலில் இலேசாகக் குழப்பம் ஒலித்தது.

"யுவான். என் யூகம் சரியானால் உத்தம பாளையக் கோட்டைக்குள்ளேயே போசள ஒற்றர்கள் இருக்க வேண்டும். உன்னைப் பார்த்த பிறகு அந்த ஒற்றர்களுக்குச் சந்தேகம் எழலாம். எதற்கும் நீ எச்சரிக்கையுடன் இரு'' என்றான் விஜயன்.

விஜயனின் வார்த்தைகளிலிருந்த உண்மை யுவானுக்குப் புரிந்தது. தோகை வனத்தைக் கடந்ததும் புரவியை நிறுத்தினான் விஜயன். அவன் திடீரென நின்றதைக் கவனித்த யுவானும் ஆதித்யனும் கூட புரவிகளை நிறுத்தினார்கள். புரவியைத் திருப்பி விஜயனை நெருங்கிய ஆதித்யன் "ஏன் நின்றுவிட்டாய் விஜயா?" என்றான்.

"இளவரசே, துறவியார் எனக்கு இட்ட முக்கியப் பணியொன்று இன்னும் நிறைவேறப் படாமலிருக்கிறது. அதற்காக நான் கொங்கு நாட்டின் வடக்குப் பகுதிவரை செல்ல வேண்டும். நான் இப்படியே விடை பெற்றுக் கொள்ள அனுமதிக்க வேண்டும்'' என்றான் விஜயன்.

சற்று நேரம் ஏதோ சிந்தித்த ஆதித்யன் "சரி

ரிஜிஸ்டர் எண் S.I.C. of C. 3225

ஸ்ரீ ராமஜெயம்

# தாது வருஷத்திய

## ஆற்காடு கா.வெ. சீதாராமய்யர்

## சர்வமுகூர்த்த பஞ்சாங்கம்

**1996** **1997**

**TRADE**  **MARK**

துவக்கம் 1900 நடப்பு 1996

டிரேட் மார்க் உரிமையாளரும், கணிதரும் :
ஆற்காடு ஸ்ரீராம நிலைய நாடி ஜோதிட வல்லவராகிய
ஆற்காடு ஜோதிட வல்லுனர்
கா.வெ. சீதாராமய்யர் குமாரர்
K.S.V. சுப்ராமய்யருடைய அபிமான புத்திரன்
K.N. நாராயணமூர்த்தி மகன்
K.N. சுந்தரராஜன்


**லாவண்யா பதிப்பகம்**
51, சீதாராமய்யர் தெரு, ஆற்காடு - 632 503.

வெளியிட்டு விற்பனை செய்பவர்கள்
**ஆனந்த நிலையம்**
18, அருளாம்பாள் தெரு (Upstairs) T. Nagar, Madras - 600 017.
Phone : 4346242, 4344158.




விலை : 29.00

ஆற்காடு ஜோதிட வல்லுனர் கா.வெ. சீதாராமய்யர் அவரது குமாரர் K.S.V. சுப்பராமய்யர் அபிமான புத்திரன் K.N.
நாராயணமூர்த்தி போட்டோ படங்கள் பின்பக்கத்தில் இருக்கின்றனவா என்று கவனித்து வாங்கவும்.

விஜயா, உன் விருப்பப்படியே செய். உன்னை மீண்டும் தஞ்சையில் சந்திக்கிறேன்" என்றான்.

இளவரசியிடமும், யுவானிடமும் விடை பெற்றுக் கொண்ட விஜயன் புறப்படுமுன் ஆதித்யனின் குரல் அவனை மீண்டும் நிறுத்தியது. "விஜயா, சற்றுப் பொறு"...

"என்ன இளவரசே?"

"நீ தேடிச் செல்பவரைக் காணும் வாய்ப்புக் கிடைத்தால் இன்னும் ஒரு திங்களில் போர் தொடங்கி விடும் என்று தெரிவித்து விடு" என்றான் ஆதித்யன்.

விஜயனின் விழிகள் வியப்பில் விரிந்தன. பிரமிப்பில் சற்றுத் திகைத்தவன் மேற்கொண்டு ஏதும் கூறாமல் புரவியைத் திருப்பிக் கொண்டு விரைந்தான்.

பயணம் மீண்டும் தொடர்ந்தது. கதிரவன் மேற்கில் சரியத் தொடங்கிய நேரத்தில் உத்தம பாளையத்தின் கோட்டை மதில்கள் பெரிதாக எழுந்து நின்றன.

ஆதித்யனைக் கண்டதும் கோட்டை வாயிலிலிருந்த பேரிகைகள் பலமாக முழங்கி வரவேற்றன. கோட்டையின் அகலத்தையும் ஆழமான அகழியையும், பலமான காவல் முறையையும் கவனித்த யுவான், இந்தக் கோட்டையிலிருந்து ஒருவரைக் கடத்த வேண்டுமானால் உள்ளுக்குள் ஒரு திறமையான ஒற்றன் இருக்க வேண்டும் என்று விஜயன் கூறியது உண்மையாகத்தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

அணி வகுத்து நின்று, வாட்களைத் தாழ்த்தி வரவேற்ற வீரர்களின் வணக்கத்தை ஏற்ற ஆதித்யன் கோட்டைத் தலைவனை அணுகி "படைத் தலைவர் எங்கே?" என்று வினவினான்.

கோட்டைத் தலைவனின் பதில் வணக்கத்துடன் வந்தது. "இளவரசே, சேரன் துறை முகத்திலிருந்து அரபுப் புரவிகள் வந்திருக்கின்றன. அதில் தமக்கு அதிமுரடான புரவியொன்று தேவையென்று பார்வையிடச் சென்றிருக்கிறார். விரைவில் வந்து விடுவதாகவும் கூறிச் சென்றார். தாங்கள் உள்ளே வாருங்கள்."

ரதத்திலிருந்து இறங்கிய இளவரசியும், யுவானும் பின் தொடர அரண்மனையை நோக்கி நடந்த ஆதித்யன், பாதியில் நின்றான். கோட்டை வாயிலிலிருந்து புரவிகள் பல வரும் ஒலி எழுந்தது. கட்டுக்கடங்காமல் துள்ளிய படியே பெரும் அராபியப் புரவியொன்று முன்னால் வந்தது. செக்கச் செவேலென்ற திடகாத்திரமான, ஆஜானுபாகுவாக அந்தப் புரவியின் மீது அமர்ந்து வெகு அலட்சியமாக அதைச் செலுத்திக் கொண்டு வந்து கொண்டிருந்தார் கிருஷ்ண மல்லர்.

ஆதித்யனும் உடன் இளவரசியும் நிற்பதைக் கவனித்தவர் புரவியிலிருந்து வேகமாகக் குதித்து அவர்களை நெருங்கினார். அவர் இறங்கியதும் முரண்டிய அந்தப் புரவியை ஐந்தாறு வீரர்கள் சிரமத்துடன் இழுத்துச் சென்றனர். ஆதித்யனை நெருங்கி எலும்புகள் நொறுங்கும்படி ஓர் அணைப்பு அணைத்தவர், அருகில் நின்ற இளவரசியை "இளவரசி, வரவேண்டும், வரவேண்டும்" என்று கனத்த வெண்கலக் குரலில் வரவேற்றார்.

அவரது பெரும் உருவத்திற்கு சற்றும் பொருந்தாத சிறிய யானைக் கண்கள் யுவானைக் கண்டதும் சற்றே விரிந்தன.

"அந்தப் பதக்கமும், முகச்சாயலும், உருவமும் அச்சாக இவன் தந்தை யாங்சின்னை உரித்து வைத்திருக்கிறானே...!" அவர் குரலில் வியப்பு ஒலித்தது.

யுவானின் சாயலைக் கண்டு வியந்தது கிருஷ்ணமல்லர் மட்டுமல்ல. சற்றுத் தொலைவில் வரிசையாக அமைந்திருந்த காவலர் இல்லங்களின் முன் நின்று யுவானை உற்றுப் பார்த்த இன்னொருவனும் தான்! அருகிலிருந்த இளவரசியைக் கண்டதும் அவன் முகம் இன்னும் மாறுதலடைந்தது. தான் அந்தக் கோட்டையில் அத்தனை தினங்களாகக் காத்திருந்த வேளை எதிர்பாராமல் வந்துவிட்டதை உணர்ந்து, ஓர் இல்லத்தினுள் நுழைந்து, ஓலையொன்றில் அவசரமாக ஏதோ எழுத முற்பட்டான்.

(தொடரும்)

---

"ஏம்மா! பாட சான்ஸ் கிடைச்சிருச்சுன்னு சொல்றியே... எங்கே- வானொலியிலா, டி.வி.யிலா?"

"என்னைப் பெண் பார்க்க வர்றவங்க முன்னாலே!"

– சிற்பிசோமு



* அதிவேகமாகப் பிரிக்கிறது

# ஒரு மணி நேரத்தில் 40,000 கடிதங்கள்!

எட்டாயிரம் சதுர அடிப் பரப்பை அடைத்துக் கொண்டிருக்கும் ஒரு தானியங்கி இயந்திரத்தை இந்தியத் தபால்துறை சென்னையில் நிறுவியிருக்கிறது. பெல்ஜியம் நாட்டு இறக்குமதி, விலை சுமார் பத்து கோடி ரூபாய். இதை வைப்பதற்கேற்ற ஒரு கட்டடம், கருவிக்கான கஸ்டம்ஸ் வரி இதெல்லாம் மேலும் ஒரு பத்து கோடி ரூபாயைச் சாப்பிட்டு விட்டது. அவ்வளவே!

மீனம்பாக்கத்தில், இருபது கோடி செலவு செய்து நிறுவப்பட்டிருக்கும் இந்தக் கருவி செய்யும் வேலைதான் என்ன?

தபால்களைப் பிரித்துப் போடும். சும்மா இல்லை. ஒரு மணி நேரத்தில் நாற்பதாயிரம் கடிதங்களை முகவரிக்கு ஏற்ப பிரித்துப் போடும்.

எப்படி ஒரு கருவியால் கடிதத்தின் மேலுள்ள முகவரியைப் படித்துச் செயல்பட முடியும்? தெரிந்து கொள்ளப் போன போது..

முதல் பகுதியில் சென்னையின் வெவ்வேறு தபால் பெட்டிகளிலிருந்து சேகரிக்கப்பட்ட ''ஃபர்ஸ்ட் க்ளாஸ் மெயில்''கள் (அதாவது கார்டு, இன்லண்ட் கவர், அதிக எடையற்ற தபால் உறைகள் ஆகியவை) வந்து சேருகின்றன. அவற்றில், கருவிக்கு ஏற்ற மாதிரியானவற்றைப் பிரித்து உள்ளே அனுப்புகிறார்கள் சில ஊழியர்கள்.

எந்த மாதிரி கடிதங்களைக் கருவி ஏற்கும்?

* அஞ்சலட்டை, புதிய இன்லண்ட் கடிதம் (பழையதில் ஒட்டப்படாத இரு பக்கங்கள் இருப்பதால் ஏற்காது), அஞ்சல் துறை வெளியிடும் தபால் உறை.

* தனியார் வெளியிடும் உறை என்றால் 9 லிருந்து 16 செ.மீ., நீளமும் 140லிருந்து 255 மிமீ. அகலமும் இருக்கலாம். (வழக்கமாகக் கடைகளில் விற்கப்படும் இரண்டு வித வெளிர் பழுப்பு உறைகள் இந்தப் பிரிவுகளில் அடங்கி விடுகின்றன).

* பின்கோடு எழுத விடப்பட்டிருக்கும் கட்டங்களுக்குக் கீழே வேறு எதுவும் எழுதப்படாமல் இருக்கும் கடிதங்கள்.

* எல்லா மடிப்புக்களும் சரியாக ஒட்டப்பட்ட உறைகள்.

* உறைக்குள் தாளைத் தவிர எந்த உறுதியான பொருளும் இருக்கக் கூடாது.

* அதே போல் உறையை ஸ்டேப்ளர் பின்னால் இணைத்திருக்கக் கூடாது.

இப்படித் தேர்வு செய்யப்பட்ட கடிதங்கள் அட்வான்ஸ்ட் காம்ப்பாக்ட்ஸ்யூட்'' என்ற பகுதியைச் சென்றடைகின்றன. இதில் பத்து ஊழியர்கள் (Bar Coders என்கிறார்கள்) அடுத்தடுத்து அமர்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு எதிரே உள்ள கன்வேயர் பெல்ட்டில் மேற்கண்ட கடிதங்கள் ஒவ்வொன்றாக வந்து சேருகின்றன. குறிப்பிட்ட இடத்தில் கடிதம் தானாக நிற்க, முகவரியின் 'பின்கோடை' கம்ப்யூட்டரில் தட்டுகிறார் ஊழியர். அது சங்கேத வரிகளாக (Bar Code) அந்தக் கடிதத்தின் முகவரிப் பகுதியில் பின்கோடு பகுதிக்குக் கீழ, சிவப்பு வண்ணத்தில் பதிக்கப்படுகிறது. இந்த bar code என்பது இயந்திரம் படிக்கவல்ல சங்கேத மொழி.

அடுத்து, அதிவிரைவு கடிதம் பிரிக்கும் பகுதிக்கு இவை செல்கின்றன. 'பார் கோடு' செய்யப்பட்ட கடிதங்கள் அசுர வேகத்தில் இங்கு இயந்திரத்தால் பிரிக்கப்பட்டு 200 வெவ்வேறு புறாக்கூண்டுகளுக்கு (பல்வேறு தபால் நிலையங்களுக்கானவை) தானியங்கி முறையில் அனுப்பப்படுகின்றன. ஒவ்வொரு புறாக்கூண்டில் சேரும் கடிதங்களையும் 'பண்டிலா'க்கி (இதைச் செய்வதும் கருவியின் மற்றொரு பாகம்தான்) அந்தந்த இடத்துக்கு

* பார்கோடுகள்....





லான பிரம்மானந்தத்திடம் இந்தக் கருவிக்கான அவசியம் என்ன என்று கேட்டோம்.

காலை வேளைகளில் தபால் நிலையங்களில் நிலவும் டென்ஷனை இது பெரிதும் குறைக்கும்; கடிதம் கிடைக்கத் தாமதமானால் மிகவும் கோபப்படும் நகர மக்களை இது சமாதானப்படுத்தும் என்றார்.

மற்றொரு கார்ணத்தையும் குறிப்பிட்டார் பி.டி.எஸ்.குமார். இவர் தானியங்கித் தபால் துறை மையத்தின் இயக்குனர்.

"தனியார் துறை நிறுவனங்களின் குரியர் சர்வீஸ்களால் இன்னும் சில ஆண்டுகளில் தபால் துறையே நொடித்துப் போக வாய்ப்பு உண்டு. அவற்றிற்கு ஈடுகொடுக்க இதுபோன்ற தொழில்நுட்ப் முன்னேற்றங்களைப் பயன்படுத்திக் கொள்வது வெகு அவசியம்."



அனுப்புகிறார்கள்.

கருவியைப் பயன்படுத்துவதில் ஆதாயம் என்ன? கைகளால் பிரிக்கும் போது 'மகாராஷ்டிரம்' என்ற புறாக்கூண்டில் வந்து சேரும் தபால்களை, பம்பாயிலுள்ள 'ஸார்டிங்' அலுவலகத்துக்கு அனுப்ப, அவர்கள் மகாராஷ்டிரத்தின் பல்வேறு பகுதிகளுக்கேற்பப் பிரித்து, வெவ்வேறு தபால் நிலையங்களுக்கு அனுப்புவார்கள்.

இந்தக் கருவியைப் பயன்படுத்தும் போது, கடிதங்களை ஸார்டிங் அலுவலகத்துக்கு அனுப்பாமல் நேரடியாகவே தபால் நிலையங்களுக்கு அனுப்ப முடிகிறது. இதனால் நேரம் மிச்சம்.

"பம்பாயில் சில வருடங்களுக்கு முன் இக்கருவி அறிமுகமாகி விட்டது. அடுத்த பெருமை சென்னைக்குத்தான் கிடைத்திருக்கிறது" என்ற போஸ்ட்மாஸ்டர் ஜெனர

இயந்திரங்கள் நிறுவியதற்குச் சென்னையில் யூனியன் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. காரணம் டெல்லியில் ஏற்கெனவே இது தொடர்பான ஒப்பந்தம் கையெழுத்தாகி விட்டதாம்!

தானியங்கி கருவி இயங்கும் மையத்தில் பணிபுரியும் சில ஊழியர்களின் கருத்துக்களைக் கேட்டோம்.

"இரண்டு ஊதிய உயர்வுகள், ஏ.சி. சூழல், மணிக்கு 2000 கடிதங்களுக்கு மேல் Code செய்தால் அதற்குப் படி ஆகியவற்றில் மயங்கி வந்து விட்டோம். ஆனால் ஒவ்வொரு மணி நேரமும் எங்கள் வேலையின் அளவு (ஒவ்வொரு ஊழியரும் மணிக்கு எவ்வளவு கடிதங்களை Code செய்கிறார் என்ற புள்ளி விவரம்) மைய கம்ப்யூட்டரில் பதிவாவது சங்கடமாக இருக்கிறது. பணத்துக்காக அடிப்படை சுதந்தரத்தை இழந்து விட்டோமோ என்று கொஞ்சம் உறுத்தல். நீண்ட நேரம் வேலை செய்வதால் கண் எரிச்சல். மற்றபடி அமைதியான, அருமையான சூழ்நிலைதான்" என்றனர்.

- ஜி.எஸ்.எஸ்.

## 7. சூரிய காங்கேயன்...?

மேன்மாடத்தில் உலவிக் கொண்டிருந்த கிருஷ்ணமல்லர், ஏதோ சிக்கலான புதிருக்கு விடைகாண முயன்று கொண்டிருந்ததாகத் தெரிந்தது. முப்புரிநூல் குறுக்கே ஓடிய அவரது திறந்த மார்பு - அகன்று செப்புத் தகட்டால் அடித்தது போலிருந்தது. யாலனையின் துதிக்கையைப் போல் பக்கங்களில் தொங்கிய கரங்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்தும், பிரிந்தும், அவ்வப்பொழுது உயர்ந்து முரட்டுக் குழல்களைக் கோதி விட்டுக் கொண்டுமிருந்தன. அவர் எதிரிலிருந்த இருக்கைகளில் அமர்ந்திருந்த ஆதித்யனோ யுவானோ, சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த இளவரசியோ அவர் சிந்தனையைக் கலைக்கத் துணிவின்றி சம்பாஷணையை அவரே துவக்கக் காத்திருந்தனர்.

உலவுவதைச் சற்று நிறுத்திய கிருஷ்ணமல்லரின் யானை விழிகள் யுவானின் மீது பதிந்தன. அடுத்து ஒலித்த அவரது சொற்களும் சிந்தனையில் தோய்ந்தே ஒலித்தன. "யுவான், உன் தந்தை தமிழகத்திற்கு வந்தது சிற்பக்கலை பயில்வதற்குத்தான். வந்த ஒரு ஆண்டுக் காலத்திற்குள் அதைப் பயிலவும் செய்தார். பதிலாக மாறன் அமுதனாரின் உத்தரவுப்படி பாண்டியருக்குப் போர்ப் பொறிகளை அமைக்கவும், அவற்றைப் போர்களில் பயன்படுத்தவும் பயிற்றுவித்தார். போசளரின் கவனம் திரும்பவும் அதுவே காரணமாயிற்று.

யுவானின் குரல் குறுக்கே புகுந்தது. "அப்படியானால் அவருக்குத் தகுந்த பாதுகாப்பு ஏன் அளிக்கப்படவில்லை?"

"தவறு யுவான். யாங்சின்னைக் காற்றுக் கூட எளிதில் நெருங்க இயலாதபடி பாதுகாத்துத்தான் வைத்திருந்தோம். ஆனால் சேரருடனான போரில் போசளர் தலையீடு பெரிதும் இருந்ததை மன்னரும் இளையபாண்டியரும் உணர்ந்தபின்புதான் போசளரை அடியோடு ஒடுக்கவும், தமிழகத்தை விட்டு அவர்களை வெளியேற்றவும் மன்னர் தீர்மானித்தார்."

கிருஷ்ணமல்லரின் சொற்களை மீண்டும் யுவானின் குரல் இடைமறித்தது. "அதற்கும் என் தந்தைக்கும் என்ன



# இந்திர தனுசு

தொடர்பு?"

கிருஷ்ணமல்லர் சற்று நிதானித்தார். அடுத்து அவர் வார்த்தைகளில் பெரும் நிதானமிருந்தது. "யுவான், சற்று பொறுமையாகக் கேள். சேரன் தலைநகர் பரலிமா நகரை வெல்வதற்கு உன் தந்தையும் இளையபாண்டியரும் அமைத்த போர் யந்திரங்கள் பெரிதும் உதவின. அந்த யந்திரங்கள் அனைத்தையும் அவர் இந்தக் கோட்டையிலிருந்துதான் உருவாக்கினார். பாண்டியர் படை சேரன் தலைநகரில் தீவிரமாகப் போரில் ஈடுபட்டிருந்த போது போசளர்கள் இந்தக் கோட்டையிலிருந்து யாங்சின்னைச் சிறையெடுத்துப் போனார்கள். ஆனால்..."

"ஆனால் என்ன?"

"உன் தந்தை சிறையெடுக்கப்படுவதற்கு இரு தினங்கள் முன்பு மாறன் அமுதனார் இங்கு வந்து சென்றார். அதன் பிறகு காவலும் சற்று தளர்த்தப்பட்டது..."

கிருஷ்ண மல்லரின் வார்த்தைகள் பாதியில் நின்றன. சிறு விழிகளில் விஷமமும் வழிந்தது.

யுவானின் முகத்தில் வியப்பு படர்ந்தது. "அப்படியானால் என் தந்தை கடத்தப்பட்டது வெறும் நாடகமா?" என்றான் யுவான் வியப்புடன்.

"கடத்தப்பட்டது நாடகமல்ல யுவான். போசளர்கள் தம்மைச் சிறைப்படுத்தப் போவதை அறிந்துதான் யாங்சின் அதிக எதிர்ப்புக் காட்டாமல் உள்நோக்குடன் அவர்களுடன் சென்றிருக்க வேண்டும். இதற்கு விளக்கம் அளிக்கக்கூடியவர் இருவர்தாம். ஒருவர் மன்னர். மற்றொருவர் மாறன் அமுதனார்" என்றார் கிருஷ்ணமல்லர்.

"என் தந்தை இருக்குமிடம் உங்களுக்குத் தெரியுமோ?" நேரிடையாகவே வந்தது யுவானின் கேள்வி.

கிருஷ்ணமல்லர் மெல்ல நகைத்தார். "தெரியும்" என்ற பதிலும் வந்தது அவரிடமிருந்து.

யுவான் இருக்கையைவிட்டு வேகமாக எழுந்து கொண்டான். "எங்கிருக்கிறார் என் தந்தை?" – வேகத்துடன் வந்தது அவன் கேள்வி.

அதுவரையில் மௌனமாக இருவரின் உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த ஆதித்யன் "யுவான், சற்றுப் பொறு" என்றபடி எழுந்து யுவானை அமர்த்தினான். யுவானின் மஞ்சள் முகம் மெல்ல சிவக்க முயன்று கொண்டிருந்தது. அவன் விழிகளை உற்றுநோக்கிய ஆதித்யனின் முகத்தில் சற்றுக் கடுமையும் படர்ந்திருந்தது.

"யுவான், இதுபற்றி இந்தக் கோட்டைக்குள் விவாதிப்பது அபாயம். யாங்சின் தமிழகத்தின் விடுதலைக்காகச் செய்ய முற்பட்டிருக்கும் சேவையை உன் அவசரத்தினால் கெடுத்து விடாதே. அவர் இருக்குமிடம் எதுவென்பதை நானும் அறிவேன். பிறகு இதுபற்றி விளக்குகிறேன்" என்ற ஆதித்யன் தொடர்ந்து, "விஜயன் நம்மிடமிருந்து விடைபெறும்போது நான் கூறியது நினைவிருக்கிறதா?" என்றான்.

யுவானின் முகத்தில் சற்று குழப்பமும், தொடர்ந்து சிந்தனையும் படர்ந்தது. சற்று சிந்தித்தவன், "ஆம். அவன் தேடிச் செல்பவரைக் கண்டால் இன்னும் ஒரு திங்களில் போர் தொடங்கும் என்று தெரிவிக்கச் சொன்னீர்கள்" என்றான் சிந்தித்தபடியே.

"அவன் தேடிச் சென்றிருப்பது யாங்சின்னைத்தான்" ஆதித்யனின் பதில் யுவானைத் திகைக்க வைத்தது. யுவான் மேற்கொண்டு ஏதோ பேசத் தொடங்குமுன் அவனைக் கையமர்த்திய ஆதித்யன் "யுவான், இதுபற்றி இந்தக் கோட்டைக்குள் பேசாமலிருப்பது நல்லது" என்றான் மீண்டும்.

## அருள்வாக்கு



ஆத்ம ஜ்யோதிஸை (ஜோதியைப்) பூர்ணமாகப் பிரகாசிக்கச் செய்யவும், துக்கமில்லாமல் இருப்பதற்குரிய ஸாதனங்களைச் சொல்லவும், நமக்கு ஆசாரிய பரம்பரை வேண்டும். ஓர் ஆசாரியர் தமக்குப் பிற்காலத்தில் தம் காரியத்தைச் செய்ய மற்றொருவருக்கு அதிகாரம் கொடுக்கிறார். இப்படி வருபவர்களின் வரிசைதான் ஆசாரிய பரம்பரை. அந்தப் பரம்பரை விஷயத்தில் நாம் நிரம்ப நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். ஆத்ம ஜ்யோதிஸை அடைய வேண்டிய மார்க்கமாகிய நிதியைக் காப்பாற்றித் தந்தவர்கள் அவர்களே. யார் யார் மூலமாக இந்த நிதியானது லோகத்தில் இன்று வரையில் வந்திருக்கிறதோ, அவ்வளவு பேரையும் தியானித்தால் அதிக அனுக்கிரஹம் உண்டாகும். ஆகவே குரு பரம்பரா ஞானமானது ஆத்மதத்வத்தில் நாட்டமுடையவர்களுக்கு அவசியம் இருக்க வேண்டும்.

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.***

விஜயன் தன்னிடம் தனியே எச்சரித்தது நினைவில் எழுந்தது யுவானுக்கு, "இந்தக் கோட்டைக்குள் ஒற்றர்கள் இருப்பதாக சந்தேகிக்கிறீர்களா?" என்றான் யுவான்.

"சந்தேகமேதுமில்லை யுவான். இங்கு போசள ஒற்றர் இருப்பது நன்றாகவே தெரியும்" ஆதித்யனின் பதில் நிதானமாக வந்தது.

யுவானின் பார்வை படைத் தலைவரையும் ஆதித்யனையும் வெறித்தது. அறைக்குள் நடந்த விவாதத்தை மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த இளவரசியின் முகத்தில் சற்று அச்சம் படரத் தொடங்கியிருந்தது. "ஏன் அவர்களைப் பிடித்துச் சிறையில் அடைக்கவில்லை?" அவள் கேள்வியிலும் அச்சம் ஒலித்தது.

கிருஷ்ணமல்லர் யுவானையும் இளவரசியையும் பார்த்து மெள்ள நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர்கள்?" – இளவரசியின் குரல் சூடேறியது.

நகைப்பதை நிறுத்திய கிருஷ்ணமல்லர், "இளவரசி, இங்கிருப்பவர்கள் வெறும் கருவிகள். இவர்களை இயக்குபவன் தொலை தூரத்திலிருக்கிறான். இவர்களைப் பிடித்து அடைத்து விட்டால் எதிரிகளின் நோக்கம் என்ன என்பது புரியாமல் போய்விடும்" என்றார்.

"நாம் எச்சரிக்கையின்றி இருக்கும்போது ஒற்றர்கள் தங்கள் பணியை நிறைவேற்றிக் கொண்டால்? அல்லது இங்கிருந்து தப்பிவிட்டால் என்ன செய்வது?" – யுவானின் கேள்வியில் பரபரப்பு கூடியிருந்தது.

கிருஷ்ணமல்லர் மீண்டும் இடிஇடியென்று நகைத்தார். "நான் அதைத்தான் எதிர்பார்க்கிறேன் யுவான். போசளருடன் போர் தொடங்க ஒரு காரணம் வேண்டாமா?" என்றவர் மறுபடி நகைத்தார். சற்றுக் கழித்து, "யுவான், இந்தக் கோட்டையிலிருந்து ஏறக்குறைய வட கொங்கு நாட்டின் எல்லை வரையில் கூட நமது வீரர்கள் சாதாரண மக்களாக உலவிக் கொண்டிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, கொங்கு மக்களும் ஒரு புரட்சிப் படையை அமைத்திருக்கிறார்கள். இங்கிருந்து தப்பும் எவனும், அவன் போய்ச் சேருமிடம் வரையில் கண்காணிக்கப்படுவது மட்டுமல்ல, எந்த வினாடியிலும் கொல்லப்படுவான்" என்றார்.

பாண்டிய மன்னரும் மாறன் அமுதனாரும் வகுத்துள்ள திட்டத்தில் யாங்சின்னும் தானும் இளவரசியும் ஏன், கிருஷ்ணமல்லரும் ஆதித்யனும் கூட வெறும் கருவிகள்தான் என்பதையும், கிருஷ்ணமல்லரின் சொற்களுக்குப் பின்னால் நீண்ட காலமாகவே வகுக்கப்பட்ட ஆழ்ந்த திட்டமிருக்கிறது என்பதையும் புரிந்துகொண்ட யுவான் அடுத்து வினவினான் : "படைத் தலைவரே! இங்குள்ள ஒற்றர்கள் யாரென்பதை அறிவீர்களா?"

"அறிவேன். அதுகுறித்து உறுதிசெய்து கொள்ளவே இளவரசியாரை இங்கு வரவழைத்தேன்" என்றார் கிருஷ்ணமல்லர்.

இளவரசி விழித்தாள். "இங்குள்ள ஒற்றர்கள் யாரென்பதை நான் உறுதி செய்வதா? எனக்கொன்றும் விளங்கவில்லை" அவள் குரலில்

குழப்பம் ஒலித்தது.

கிருஷ்ணமல்லர் நிதானமாக நகர்ந்து பூங்கோதையின் எதிரில் வந்து நின்றார். "இளவரசி, தங்கள் தந்தை அவந்தரிடம் சூரிய காங்கேயன் என்று ஒரு மெய்க்காவலன் இருந்தது தங்களுக்கு நினைவிருக்கிறதா?" – கிருஷ்ணமல்லரின் குரலில் பெரும் நிதானம் இருந்தாலும் அவர் சித்தம் கனவேகமாக இயங்கிக் கொண்டிருப்பதை பளிச்பளிச்சென்று மின்னிய சிறு விழிகள் நிரூபித்தன.

இளவரசியின் முகத்திலிருந்த குழப்பம் இன்னும் விரிந்தது. "ஆம். நீங்கள் கூறும் பெயரில் ஒரு மெய்க்காவலர் இருந்தார். தந்தையை மட்டுமல்ல, என்னையும் தன் கண்களைப் போலப் பாதுகாத்து வந்தார். அரண்மனைத் தாதிகளிடம் நான் வளர்ந்த நாட்களை விட அவரிடம் வளர்ந்த நாட்கள்தான் அதிகம். தாயற்ற எனக்குத் தாயாகவே இருந்தார். அவருக்கு என்ன நேர்ந்தது?" – இளவரசியின் குரலில் குழப்பத்துடன் கவலையும் ஒலித்தது.

"இளவரசி. நீங்கள் சூளாமணி விஹாரத்திற்குச் சென்ற பின்பு கொங்கு மண்ணில் போசளர் ஆதிக்கம் பலப்பட்டது. சோழர் உதவியும் கிட்டவில்லை. எனவே உங்கள் தந்தை அந்த சூரிய காங்கேயனிடம் ஓலையொன்றைக் கொடுத்து உதவிகோரி இங்கு அனுப்பினார்" கிருஷ்ணமல்லரின் விளக்கம் இளவரசியின் கவலையை இன்னும் அதிகரிக்க வைத்தது.

"அப்படியானால் சூரியகாங்கேயன் எங்கே?"

"சற்றுப் பொறுங்கள் இளவரசி" என்ற கிருஷ்ணமல்லர், வாயிலிலிருந்த வீரனை அழைத்தார். உள்ளே நுழைந்து வணங்கிய பாண்டி நாட்டு வீரனை நோக்கியவர், "வீரனே, நீ சென்று மேற்குப்புறக் காவலர் தலைவனை நான் அழைத்ததாக அழைத்து வா" என்று உத்தரவிட்டார்.

அவன் சென்ற பின்பு ஆதித்யனை அழைத்தவர், "ஆதித்யா, நீ இளவரசியை அந்த அறைக்குள் அழைத்துச் சென்று விடு. அந்தச் சிலைக்குப் பின்னால் சற்று மறைந்து நில்லுங்கள். உள்ளே வருபவனை இளவரசி நன்றாகப் பார்க்கட்டும்" என்றார்.

கிருஷ்ணமல்லரின் ஏற்பாடுகள் நன்றாகப் புரிந்தது ஆதித்யனுக்கு. குழப்பம் இன்னும் விலகாததால் அப்படியே அமர்ந்திருந்த இளவரசியின் தோள்களைப் பற்றி எழுப்பியவன், அவளை மெல்ல அருகிலிருந்த அறைக்குள் அழைத்துச் சென்றான். அவர்கள் சென்று சிலையின் பின் மறைந்ததும் யுவானை நோக்கியவர், "யுவான், இப்போது வருபவனை நன்றாகக் கவனித்துக் கொள்" என்றும் கூறி




**"ஹவாலா புகழ் ஜெயின் சகோதரர் களுக்கு நல்லெண்ணப் பரிசு தரப்போறாங் களாம்."**

**"எதுக்கு?"**

**"கட்சிப் பாகுபாடு இல்லாமல் எல்லா தலைவர்களுக்கும் லட்சலட்சமா கொட்டிக் கொடுத்துத் தன்னோட நல்லெண்ணத் தைக் காட்டியிருக்காங்களே!"**

**- சீர்காழி வி. ரேவதி**

னார்.

சற்று நேரத்தில் வேகமாக உள்ளே நுழைந்து படைத் தலைவரை வணங்கியவன் காரிருளைக் கடைந்து கருங்காலி மரத்தில் கைகளும் கால்களும் செய்து ஒட்டவைத்தவன் போல இருந்தான். வேங்கையைக் கண்டு அஞ்சுவதாகப் பாசாங்கு செய்யும் நரியின் போலி அச்சமும், சாகசமும் அவன் விழிகளில் தெரிந்தன.

அறைக்குள் மெல்ல உலவிக் கொண்டிருந்த கிருஷ்ணமல்லர் அவன் முகம் அடுத்த அறையை நோக்கி முழுவதும் திரும்பும் வரை உலவி நின்றார். "காங்கேயா, நேற்றிரவு மேற்கு வாயிலில் காவலர் சற்றுக் குறைவாக இருந்த தாகத் தெரிகிறது" – கிருஷ்ணமல்லரின் குரலில் இலேசாகக் கடுமை ஒலித்தது.

கணநேரமே தயங்கிய காங்கேயன், "ஆம் படைத்தலைவரே, காவலர்களில் இருவருக்கு இரு தினங்களாக உடல்நிலை சரியில்லை. எனவே நானே இரவு முழுவதும் விழித்து காவல் புரிந்தேன்" என்றான் அத்தமான பணிவு நிரம்பிய குரலில்.

"சரி காங்கேயா, கிழக்கு வாயிலிலிருந்து நான் கூறியதாகச் சொல்லி இரு வீரர்களை அழைத்துக் கொள். மேற்கு வாயில் எதிர் நோக்கியிருப்பது மலைப்பகுதி. அந்தப் பகுதி யில் காவல் குறைவாக இருப்பது கூடாது, புரிந் ததா?" என்றார் கிருஷ்ணமல்லர்.

"உத்தரவு படைத்தலைவரே!" என்று வணங்கிய காங்கேயன், பின்னோக்கி நகர்ந்து பின்பு திரும்பி வெளியேறினான்.

அவன் வெளியேறும்வரை பொறுத்த படைத்தலைவர் சற்றுக் கழித்து, "ஆதித்யா" என்று குரல் கொடுத்தார்.

அடுத்த அறைக்குள் சிலையின் மறைவில் நின்றிருந்த இளவரசிக்கு, அவள் சித்தத்தின் குழப்பத்திற்கும் கவலைக்கும் ஆதித்யனின் அண்மையும் தோள்களில் பதிந்திருந்த அவன் கரங்களும் பெரும் ஆறுதலை அளித்துக் கொண்டிருந்ததால், அவள் அங்கிருந்து நகர முற்படவில்லை. ஆதித்யனுக்கும் படைத்தலை வர் அழைப்புக்கு உடனே செவி சாய்க்கும் எண்ணமிருப்பதாகத் தெரியவில்லை.

"ஆதித்யா!" என்று மீண்டும் ஒலித்தது படைத்தலைவரின் வெண்கலக் குரல். அவர் அழைப்பைத் தொடர்ந்து திருதிருவென விழித்தபடி வெளியே வந்த ஆதித்யனையும், சிவந்து கிடந்த முகத்துடன் பின்னால் வந்து கொண்டிருந்த இளவரசியையும் கவனித்த கிருஷ்ணமல்லரின் யானைக் கண்கள் பளிச் சிட்டு அவற்றில் விஷமம் வழியத் தொடங்கி யது. உலக்கை போன்ற இரு கரங்களையும் இடையில் கொடுத்து இருவரையும் ஏற இறங்க ஒருமுறை நோக்கியவர், "ஓகோகோ, அப்படிப் போகிறதா விஷயம்?" என்றார் பலத்த குரலில்.

ஆதித்யனும் இளவரசியும் சங்கடத்தில் தலைகுனிந்து நிற்க, யுவானின் குரல் ஒலித்தது : "ஆம் படைத்தலைவரே, விஷயம் அப்படிப் போய் நாட்கள் நான்கு ஆகின்றன" என்று.

இடிஇடியென்று நகைத்தார் கிருஷ்ண மல்லர். யுவானின் நகைப்பும் சேர்ந்து ஒலித் தது.

நகைப்பதை நிறுத்திய கிருஷ்ணமல்லர் "இளவரசி, இப்போது வந்து சென்றவனை கவனித்தீர்களா இல்லையா?" என்றார் சந்தேக மும் விஷமமும் நிரம்பிய தொனியில்.

இளவரசியின் பதில் மெலிதாக ஒலித்தது : "கவனித்தேன் படைத்தலைவரே!"

"இவன்தான் உங்கள் தந்தையிடமிருந்து ஓலை கொண்டு வந்த மெய்க்காவலன் சூரிய காங்கேயன்" என்றார் கிருஷ்ணமல்லர்.

சட்டென்று நிமிர்ந்தாள் இளவரசி. அவ ளது முகத்தில் எல்லையற்ற கலவரம் படர்ந்தது.

"இல்லை. இருக்க முடியாது. நான் சூரிய காங்கேயனைக் கண்டு பல ஆண்டுகள் ஆகி விட்டன. ஆனால் நிச்சயமாக இப்போது வந்தவன் சூரிய காங்கேயனாக இருக்க முடி யாது!"

ஏறக்குறைய உச்சத்தில் ஒலித்தது இளவரசி யின் குரல்.

(தொடரும்)

# 8. பூங்கோதைக்கு அபாயம்!

மனித மனமே விசித்திரமானது. அதிலும் பெண்களின் மனம் அதி விசித்திரமானது. அதற்கு பெற்றவர்களின் நினைவும், பிறந்த இடத்தின் நினைவும் வந்து விட்டால் மற்றவர்கள் எத்தனை தூரம் பரிவும் அன்பும் காட்டினாலும் அது இரண்டாம் பட்சமாகி விடுகிறது. அந்த நினைவில் பெண்களின் மனத்தில் தோன்றும் அர்த்தமற்ற கோபதாபங்களும், எடுத்தெறிந்து பேசும் பேச்சுக்களும் விளைவிக்கும் அனர்த்தங்கள் பலப்பல.

அத்தகைய அர்த்தமற்ற கோபத்தின் வசப்பட்டிருந்தாள் கொங்கு நாட்டின் இளவரசி பூங்கோதை. சோழ வம்சத்தில் பிறந்து, கொங்கு



மன்னனை மணந்து, தன்னை ஈன்றதும் மறைந்துவிட்ட தாயின் நினைவும், போசளரிடமிருந்து தன்னைப் பாதுகாக்க சூளாமணி விஹாரத்திற்கு அனுப்பிவிட்டு, அன்னியரிடம் அடிமையாகிக் கிடக்கும் தந்தையின் நினைவும், பிறந்த மண் மாற்றாரிடம் அகப்பட்டுச் சீரழிந்து கிடந்த நிலையும் அவளை வாட்டத் தொடங்கியிருந்தன. அந்த சமயத்தில் யாரோ ஒரு கருத்த மனிதனை, தந்தையிடமிருந்து ஓலை கொண்டு வந்த மெய்க் காவலன் சூரியகாங்கேயன் என்று கிருஷ்ணமல்லர்



யயிருந்த கிருஷ்ணமல்லருக்கு அவள் சித்தத்தில் எழுந்த கோபாக்னியின் காரணம் புரிந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் வெகு நிதானமாகவே பேச ஆரம்பித்தார்: "இளவரசியார் மிகுந்த கோபத்தில் இருப்பதாகத் தெரிகிறது...."

வெடுக்கென்று வந்தது இளவரசியின் பதில் : "ஆம் கோபத்திலிருக்கிறேன். நானிருக்கும் நிலையில் எனக்குக் கோபம் ஒன்றுதான் குறைவாயிருக்கிறது."

"ஏன்? இளவரசியாரின் நிலைக்கென்ன?" கிருஷ்ணமல்லரின் கேள்வியில் பெரும் அக்கறை தொனித்தது.

"என் நிலைக்கு என்னவா? என் தந்தையிடமிருந்து உதவி கோரி ஓலை வந்த பின்னும் உதவிக்குச் செல்லாமல் அவரை போசளரிடம் சிறைப்பட வைத்தீர்கள். கொங்குநாட்டு மக்களை அன்னியரிடம் அவதிப்பட வைத்திருக்கிறீர்கள். தந்தையைக் காணச் சென்ற என்னை வழிமறித்து பாண்டியர் தலைநகரில் கொண்டு தள்ளிவிட்டுப் பிறகு அங்கிருந்தும் இந்தக் கோட்டையில் கொண்டு வந்து அடைத்திருக்கிறீர்கள். அவசியமானால் என்னையும்

# இந்திர கன்னி

போசளரிடம் சிறைப்பட விடுவீர்கள்! போதாக் குறைக்கு யாரோ ஒரு கரும்பூதத்தைக் காட்டி என் தந்தையின் மெய்க்காவலன் சூரிய காங்கேயன் என்று கூறுகிறீர்கள். கொங்கு நாடு மட்டுமின்றி, அதன் மன்னனும் இளவரசியும் உங்களுக்கு வெறும் விளையாட்டுக் கருவிகளாகி விட்டனர். இதில் எனக்குக் கோபம் வந்து யாருக்கென்ன நஷ்டம்?"

அவள் கோபத்தையும் படபடவென்று பொரிந்து தள்ளிய வார்த்தைகளையும் கேட்ட

கூறியதும் அவள் கோபம் உச்சத்தை எட்டியது. அவன் சூரிய காங்கேயனோ அல்லது வேறு மனிதனோ, தந்தை உதவி கோரி அனுப்பிய ஓலையைக் கொண்டு வந்தவன், ஓலை கிடைத்ததும் பாண்டியர், தந்தையின் உதவிக்குச் செல்லவில்லை என்ற உண்மை அவளது சினத் தீயில் இன்னும் சற்று நெய் வார்த்தது.

அவள் முகமாறுதல்களைக் கவனித்தபடி

விஷ்வக்சேனன்

ஆதித்யன் மட்டுமின்றி, யுவானும் கூட திகைத்துப் போய், செக்கச் செவேலென்று கன்றிச் சிவந்து விட்ட அவள் முகத்தை வெறித்துப் பார்த்தபடி சிலை

யாகவே அமர்ந்திருந்தார்கள்.

கிருஷ்ணமல்லரின் குரல் அதே நிதானத்துடன் ஒலித்தது. "இளவரசி, தவறாகக் கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் தந்தையின் ஓலையுடன் வந்தவன் நான்கு தினங்கள் தாமதமாக வந்தான். எதிரிகளிடம் சிக்கியதாகவும் பின்பு தப்பித்து வந்ததாகவும் காரணமும் கூறினான். அதற்குள் போசளத் தண்ட நாயகன், வட கொங்கு முழுவதையும் கைப்பற்றி, உங்கள் தந்தையையும் சிறை செய்து விட்டான். ஓலை கொண்டு வந்தவனது நடவடிக்கைகள் சந்தேகத்தை அளித்ததால், ஒற்றர்களை அனுப்பி விசாரிக்க உத்தரவிட்டேன். பிறகுதான் என் யூகம் சரியென்பதும் வந்தவன் மன்னின் மெய்க்காவலனைக் குத்தி காவிரியில் எறிந்து விட்டு, இங்கு உளவறிய வந்திருக்கிறான் என்பதும் புரிந்தது." கிருஷ்ணமல்லர் விளக்க விளக்க இளவரசியின் முகத்திலிருந்து சினம் அகன்று கவலை படர்ந்தது.

"அப்படியானால் சூரிய காங்கேயன் விட்டு வருகிறேன்" என்று சகஜமாகக் கூறிய கிருஷ்ணமல்லர் வெளியே நடந்தார். அறையில் மீதமிருந்த இருவருக்கும் தடையாக இருக்க விரும்பாத யுவானும் படைத்தலைவருடன் வெளியேறினான்.

அறைக்குள் தனித்து விடப்பட்ட ஆதித்யனும் இளவரசியும் ஒருவரையொருவர் கண்களால் விழுங்கியபடியே நீண்ட நேரம் அமர்ந்திருந்தனர். விரைவில் பிரியப் போகிறோம் என்கிற எண்ணம் இருவர் மனங்களையும் பொங்க வைத்திருந்ததால் வாய்ச் சொற்களுக்கு எந்தப் பயனுமில்லாமலிருந்தது.

அடுத்த அரை ஜாமத்தில் அனைவரிடமிருந்தும் விடை பெற்றுக் கொண்ட ஆதித்யனின் பயணம், சோழ நாட்டை நோக்கித் துவங்கியது. அந்தப் பயணம் தமிழகத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும் பயணம் என்பதை உணர்ந்த ஆதித்யன், மெல்ல தனது சித்தத்தை ஒரு நிலைக்குக் கொண்டு வர முயன்றான்.




மடிந்து விட்டானா? என் தந்தையின் நிலை என்னவாயிற்று?" இளவரசியின் குரலில் பெரும் கவலை ஒலித்தது.

"அஞ்ச வேண்டாம் இளவரசி, உங்கள் தந்தை ஸ்காந்தபுரத்து அரண்மனையில் சிறையிருக்கிறார். அவரை மீட்பதற்கும் கொங்கு மண்ணை விடுவிப்பதற்கும் பலமான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. இன்னும் ஒரு திங்களில் தமிழகத்தின் விடுதலைப் போர் கொங்கு மண்ணில் துவங்கும்." கிருஷ்ணமல்லரின் குரலில் அதுவரை காணாத வேகம் ஒலித்தது.

இளவரசியின் முகத்தில் சற்று சங்கடம் தெரிந்தது. அடுத்து ஒலித்த அவள் குரலிலும் அது ஒலித்தது. "படைத் தலைவரே, சற்று முன்பு நான் உணர்ச்சி வசப்பட்டு ஏதேதோ கூறிவிட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்."

"அதனால் பாதகமில்லை இளவரசி. நீங்கள் சென்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். ஆதித்யன் சோழ நாட்டுக்குப் பயணப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் செய்து

ஆதித்யன் சென்ற பின்பு உத்தமபாளையத்து அரண்மனை வெறிச்சிட்டு விட்டதாகத் தோன்றியது இளவரசிக்கு. அவள் கவனத்தைத் திருப்ப கிருஷ்ணமல்லரும், யுவானும் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின.

ஆசை உந்தியதால் எழுந்த ஆவலும், ஆவல் நிறைவேறாததால் ஏக்கமும், ஏக்கத்தின் விளைவாகத் தோன்றிய காரணமற்ற கோபதாபமும் அவள் சித்தத்தை அலைக்கழித்துக் கொண்டிருந்தன. கிருஷ்ணமல்லர் ஏற்பாடு செய்திருந்த வசதிகளும், அழைத்த குரலுக்கு ஓடிவந்த பணிப் பெண்களும், அவளுக்கு சலிப்பையே ஏற்படுத்தின. இளவரசிக்கு ஏதேனும் குறைவோ, அதிருப்தியோ ஏற்பட்டால், படைத் தலைவர் தங்களைத் தொலைத்து விடுவார் என்ற அச்சத்தில், அவளது காரணமற்ற கோபத்தையும், அற்ப விஷயங்களுக்கெல்லாம் எரிந்து விழுந்ததையும் பொறுமையுடன் பணிப் பெண்கள் தாங்கிக் கொண்டார்கள். அன்பையும் இனிமையையும் அளிக்கவல்ல இனிய பெண்

ணொருத்தி குணம் மாறுபட்டால் எத்தனை விஷமாக மாற முடியும் என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தாள் இளவரசி அடுத்த இரண்டே தினங்களில்.

அரண்மனையும், பஞ்சணையும், கனிவகை களும், பணிப் பெண்களும் வெறுத்து விட்ட தால் இரண்டாவது தினம் மாலைப் பொழுது மயங்கத் தொடங்கிய நேரத்தில் அரண்மனை நந்தவனத்தை நோக்கி நடந்த பூங்கோதையை, நந்தவனத்து வண்ண மலர்கள் தலையசைத்து வரவேற்றன. மலர்களின் இனிய சுகந்தத்தை யெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து, தென்றல் அவளது பூவுடலைத் தழுவி ஆறுதலளிக்க முயன்றது. நந்தவனத்தினூடே நடந்த பூங் கோதை சற்றுத் தள்ளி ஓர் அழகிய பொய்கை தெரிவதையும், பொய்கையில் அல்லி மலர்கள் மலர்ந்து கிடப்பதையும் கவனித்து, மெல்ல அதை நாடிச் சென்று, அதன் கரையில் அமர்ந்து, மலர்களை வெறிக்க ஆரம்பித்தாள். அல்லி மலர்களும் தங்கள் மலர்க் கண்களை அகல விழித்து அவளைப் பரிதாபத்துடன் பார்த்தன. பொய்கையை அடுத்திருந்த மரக்கி ளையில் அமர்ந்து இனிய குரலெழுப்பிக் கூவிக் கொண்டிருந்த குயிலுக்கு, அவள் சோகம் புரிந்த தாலோ என்னவோ, தன் இனிய கீதத்தை நிறுத் திக் கொண்டு அங்கிருந்து பறந்து மறைந்தது.

பூங்கோதை எதையும் ரசிக்கும் மனநிலை யில் இல்லை. எந்தக் கவலையுமற்று சூளாமணி விஹாரத்தில் கழித்த நாட்கள் அவள் நினை வில் எழுந்தன. கல்வியையும், பயிற்சிகளையும், விளையாட்டுக்களையும் தவிர்த்து, வேறு எந்தக் கவலையுமற்று பறவைகளைப் போல ஆடிப் பாடித் திரிந்த அந்த நாட்களின் பசுமை நிறைந்த நினைவுகள் அவளைச் சூழ்ந்தன. 'மனித வாழ்வில் கல்வி பெற்று வெளியேறுவது முதல் இறுதிவரை, போராட்டங்கள் தாம்' என்று சூளாமணித் தலைவர் அடிக்கடி கூறு வதில் இருந்த உண்மை எத்தனை நிதர்சன மானது என்பது புரிந்தது.

அடுத்து அவள் சித்தத்தில் எழுந்தது ஆதித் யனின் சிரித்த முகம். தன்னையும் யுவானையும் காடவர்களிடமிருந்து மீட்ட போது ஆதித்யன் கரத்தில் அந்த நீண்ட வாள் கரகரவெனச் சுழன்ற விதமும், போரிட்ட போதும் மாறா திருந்த அந்த விளையாட்டுப் பிள்ளையின் விஷமச் சிரிப்பும்.... அவனைப் பற்றிய நினைவே தன் குணமாறுதலுக்குக் காரணம் என்ற உண்மையை அவள் புத்தி இடித்துக் கூறியதால், அந்த நிலைக்கு ஆளாக்கிய ஆதித் யன் மீது இனம் தெரியாத கோபம் ஒன்றும் பிறந்தது.

அவன் எதிரிலிருப்பதாகவே பாவித்துக் கொண்டவள், கரங்களில் சிக்கிய புற்களைப் பறித்து எதிரில் எறிந்தாள். அடுத்து அவள் கரத்



# அருள்வாக்கு

**வெள்ளைக்கார வேஷத்திலே உள்ள நம்மவர்கள் சட்டம் செய்கிறார்கள், அதற்கு அடிமையாக நாம் இருக்கிறோம் என்றால் அதில் சுதந்தரத்தின் சாரமே இல்லை. நம்முடைய சம்பிரதாயங்களை அநுசரிக்காதவர்களுக்கு வோட்டுக் கொடுத்து வரும் ராஜ்யம் அடிமை ராஜ்யம் தான். லௌகிக விஷயங்கள் கூட ஆத்ம சம்பந்தமாகவும், தெய்வ சம்பந்தமாகவும் இருந்த அந்த முறைதான் நம்முடையது. அதன்படி இருந்தால் உத்கர்ஷத்தை (உயர்வை) அடையலாம் என்பதை அறிந்து, நமக்கு எந்த மாதிரி ஸ்வதந்திரம் உண்டோ அதை, அந்த முறையை நிலை நிறுத்துவதிலேயே பயன்படுத்த வேண்டும். தர்மம், தொழில் முறை முதலியவைகளை அறிந்தவர்களையும், அநுஷ்டானம், ஒழுக் கம் உடையவர்களையுமே ராஜ்ய நிருவா கத்தில் வைத்துப் பார்க்க வேண்டும். அவர்கள் நம்முடைய சாஸ்திரப்படி தர்ம ராஜ்யத்தை ஸ்தாபித்து இது நன்றாக நடக் கிறது என்று காட்டி மற்ற தேசத்தவர் களும் இதை அநுசரிக்கச் செய்ய வேண் டும். அப்படி நடத்திக் காட்டுவதற்கு நம் முடைய சாஸ்திரங்களையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும்.**

**சாஸ்திரங்களைப் பார்த்து அந்தப்படி ஏன் நடக்கக்கூடாது, அந்தப்படி பண்ணு கிறவர்களை ஏன் சட்டசபைக்கு அனுப்பக் கூடாது என்று எல்லா ஜனங்களும் ஆலோ சித்துப் பார்க்க வேண்டும்.**

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.

தில் சிக்கியது ஒரு மலர்க் கொத்து. அதையும் எடுத்து எதிரிலிருந்த பொய்கையை நோக்கி எறிந்தவள், எறிந்த பின்பே அது எப்படி தன்னருகில் வந்தது என்று சிந்தித்தாள். அந்த சிந்தனையும் சட்டென்று நின்றது. பொய்கையின் நீரில் மிதந்த அந்த மலர்க் கொத்திலிருந்து ஏதோ புகை போல வருவதைக் கண்டவள் திகைத்தாள். எழுந்து சென்று அதை நீரிலிருந்து எடுத்தவள் அந்தப் புகை தன் நாசியை எட்டியதும் கண்கள் இருளத் தொடங்குவதையும், கால்கள் தள்ளாடத் தொடங்குவதையும் உணர்ந்தாள். எல்லையற்ற திகில் முகத்தில் படர, அரண்மனையை நோக்கி இரண்டடி எடுத்து வைத்து, பின் இயலாமல் மயங்கிச் சரிந்தாள்.

அவள் அமர்ந்திருந்த இடத்தின் நேர் பின்புறமிருந்த செடிகளின் மறைவிலிருந்து எழுந்தான் மேற்கு வாயில் காவலர் தலைவன் சூரிய கார்ங்கேயன். ஒருமுறை சுற்று முற்றும் பார்த்தவன், கச்சையிலிருந்து சிறு குப்பியொன்றை எடுத்துக் கொண்டு இளவரசியை நெருங்கினான். அவள் நாசிக்கருகே இரண்டொரு வினாடிகள் பிடித்தவன் மீண்டும் அதை கச்சையில் செருகிக் கொண்டு நந்தவனத்தின் மூலையொன்றை நோக்கி நடந்தான். மதிலை ஒட்டிக் கிடந்த பாறையொன்றை அடைந்து அதை மெல்ல நகர்த்தினான். புதர்களும் செடிகளும் நிறைந்த அந்தப் பகுதியில் ஒரு மனிதன் நுழையக் கூடிய அளவுக்கு வழியொன்று தோன்றியது.

அதே சமயத்தில் சோழ நாட்டு எல்லைக்குள் நுழைந்து கொண்டிருந்த ஆதித்யனின் மனத்தில் தான் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவன் என்பதும், தான் நுழைந்து கொண்டிருப்பது சோழ நாட்டு எல்லை என்பதும் கூட மறந்துவிடும் அளவிற்கு எதிரே விரிந்த காட்சி பிரமிக்க வைத்தது. பிரும்மாண்டமான ஒரு பச்சைக் கம்பளத்தை விரித்து, பூமியின் மீது போர்த்தி விட்டதுபோல விழிகள் திரும்பிய பக்க மெல்லாம் விரிந்திருந்த வயல் வெளிகள். ஊடே பூத்தையலிட்டாற்போல தென்னையும் வாழையும் இணைந்த சோலைகளும், மாஞ் சோலைகளும், அழகிய சிறு கிராமங்களும், குறுக்கிட்டு மயங்க வைத்தன. காவிரியிலிருந்து பிரிந்த கால்வாய்களும் சிற்றாறுகளும் மாலைக் கதிர்களின் ஒளியில் பொன்னும் வெள்ளியும் கலந்த சரிகையிட்டு பூமியை அழகு படுத்திக் கொண்டிருந்தன.

இத்தனை செழிப்பும், வளமும், பெருகிக் கிடந்தாலும் வளத்தின் பயனை தமிழகத்து மக்கள் அனுபவிக்க இயலாமல் அன்னியரிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் நிலையை எண்ணியவன் மனத்தில் ஏக்கமும் பிறந்தது. ஏக்கத்தைத் தொடர்ந்து அந்த நிலையை எப்படியும் மாற்ற வேண்டும் என்ற உறுதியும் பிறந்தது.

இயற்கையின் அழகில் லயித்துப் போய் பயணம் செய்த ஆதித்யன், மாலை முற்றி ரேகை மறையும் நேரத்தில் தன்னை நெடுநேரமாக நான்கு புரவி வீரர்கள் தொடர்ந்து வருவதைக் கவனித்தான். ஓடுபவனைக் கண்டால் தானே துரத்துபவர்களுக்கு வேகம் அதிகரிக்கும்! மேலும், நான்கு வீரர்களைச் சமாளிப்பது என்பது ஆதித்யனைப் பொறுத்தவரையில் ஒரு பெரும் விஷயமாகத் தோன்றவில்லையென்பதால் புரவியைச் சாதாரணமாகவே நடக்க விட்டான் பாண்டிய இளவல். சற்றுத் தொலைவில் தெரிந்த சிறு ஊரைக் கண்டதும் அங்கேயே பின் தொடர்பவர்களுக்கு ஒரு வழி செய்து விடலாம் என்றும் தீர்மானித்தான்.

பின் தொடர்பவர்கள் போசள வீரர்களாயிருக்கும் பட்சத்தில், தன்னை சைவத் துறவியார் அழைத்த நோக்கமும், தான் சோழ நாட்டை அடைந்திருக்கும் நோக்கமும் கெட்டு விடக்கூடும் என்ற உண்மையும் அவன் உள்ளத்தில் உறுத்தியது. ஆனால் அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக அந்த ஊரை அவன் நெருங்கு முன்பு, பின் தொடர்ந்த நால்வரும் மெல்லப் பின் வாங்கியபடியே வேறு திசையில் மறைந்து விட்டனர்.

அந்தச் சிறிய ஊரில் இரண்டு நாழிகை நேரமே தங்கிய ஆதித்யன், சிறிது உணவு அருந்தி, சிரமபரிகாரமும் செய்து கொண்ட பின் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தான். தான் இன்னும் சில காத தூரமே செல்ல வேண்டியிருப்பதை விசாரித்து அறிந்து கொண்டவன், இரவின் முதல் ஜாமத்திற்குள் தஞ்சையை அடைந்து விடுவது என்ற தீர்மானத்துடன் புரவியைச் சற்று வேகமாகச் செலுத்தத் தொடங்கினான். வேகத்துடன் பாய்ந்த புரவியை அந்த ஊரைத் தாண்டி அரைக்காத தூரத்திலேயே மீண்டும் இழுத்துப் பிடித்து நிறுத்தினான் ஆதித்யன்.

அவனுக்கு எதிரில் அந்த நான்கு புரவி வீரர்களும் பாதையை மறித்து நின்றிருந்தனர்.

(தொடரும்)



"தேர்தலில் தனித்துப் போட்டியிடுவதைத் தவிர வேற வழியே இல்லை!"

"ஏன் தலைவரே?"

"ஒரு கூட்டணியிலேயும் நம்மைச் சேர்த்துக்க மாட்டேன்னுட்டாங்கய்யா!"

— ஞா. ஞானமுத்து

# உள்ளத்தை அள்ளித்தா

**கா**தல் கிரௌண்டில் நகைச்சுவை ஒன் டே மேட்ச். கவுண்டமணி, கார்த்திக், மணிவண்ணன் என்று மூவரணி ஃபீல்டர்கள். ரம்பா பந்து வீச, திசைக்கொரு சிக்ஸர் அடித்து, பாணா கிளப்புபவர், டைரக்டர் சுந்தர்.சி.

முழு நீள நகைச்சுவைப் படம் என்று முடிவு செய்து கொண்டு, முதல் காட்சியிலேயே அதை பகிரங்கப் படுத்தி விடுவதால் நமது எதிர்பார்ப்புகளுக்குத் தானாக ஒரு எல்லை விழுந்து விடுகிறது. ஏமாற்றமில்லை. நோய் விட்டுப் போகும் என்பதற்கு நூறு சத உத்தரவாதம் தந்திருக்கிறார்கள்.

ஒரு மாதிரி 'ஸெமி'த்தனமாய் இழுத்துப் பேசி நடிப்பதை இதிலும் விடவில்லை, கார்த்திக். மிலிட்டரி அப்பாவின் அராஜகத்துக்குப் பயந்து, சொல்லாமல் ஊட்டிப் பக்கம் ஓடி விடுகிறார். ஊட்டி குளிர் போதாதா? உறை பிரித்த புது லக்ஸ் போல அங்கே ஒரு ரம்பா. துள்ளலும் சிணுங்கலும் காதலும் ஊடலுமாகப் பொழுது கரைகிறது.

நிஜத்தில் ஹீரோ, கார்த்திக் இல்லை. மாறாக, கவுண்டமணியும் மணிவண்ணனும். ஜேப்படி கவுண்டரும் கஞ்சர் மணியும் திரையை நிறைத்துக் கோலோச்சுகிறார்கள்.

வடிகட்டின கஞ்சத் தந்தையிடம் காசு பெயராமல் கஷ்டப்படும் ரம்பா, ஆள் செட்டப் பண்ணி தன்னைத்தானே கடத்தச் செய்கிறார். நிஜமாகவே ரம்பாவைக் கடத்தி காசு பண்ண முயலும் கார்த்திக்– கவுண்டமணி கூட்டணி இடையே நுழைந்து குட்டையைக் குழப்ப, தியேட்டர் வெடிக்கிறது– சிரிப்புப் பட்டாஸில்.

பல பாடல்களிலிருந்து செதுக்கி எடுத்து புதுப்பாடல்கள் தந்திருக்கிறார் சிற்பி. ஒன்று தேறுகிறது.

'அழகிய 'லேலா'. ஒளிப்பதிவில் நிறைய 'ஜெர்க்' இருக்கிறது. ஆகவே கண் உறுத்தல்.

இதையெல்லாம் யாரும் படத்தில் கவனிக்க மாட்டார்கள். சிரிக்கவே நேரம் போதாது என்பது காரணம்.



**வே**லாயுதம் ஜமான்னா எங்க பக்கத்துல, தெருக்கூத்துக்கு ரொம்பப் பேர் போனது. இருந்தாலும் இப்போ அந்தக் கலைக்கு அவ்வளவு மவுசு இல்லை.

பக்கத்துக் குப்பத்திலிருந்து எங்க வீட்டு வேலைக்கு வந்து போய்க் கொண்டிருந்த வேலாயுதத்தின் மனைவி, அப்பாவிடம் 'தற்போது சீண்டப்படாம நசிஞ்சு போய் ஈ ஓட்டிக் கொண்டிருக்கிற கூத்தாடிக் கலைஞர்களுக்கு அரசாங்கத்தில் நிவாரணம் கோர ஏதாவது வழி இருந்தா சொல்லுங்களேன் சாமி'ன்னு கேட்டப்போ -

"கவர்மென்ட்ல இதற்கான கோர்ஸ் ஏதும் இருக்கா, இல்லியான்னு எனக்குத் தெரியலை. இருந்தாலும் என் பெண்ணை ஒரு வார்த்தை கேட்டுட்டுச் சொல்றேன்''னு அப்பா சொன்னார்.

**ஈ**ஸிசேரில் ஏதோ சிந்தனையாக இருந்த அப்பாவை அணுகி, "யோசனை ரொம்ப பலமாப்பா?'' என்றேன்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லேம்மா. நம்ம வீட்டு வேலைக்காரி ஆனந்தாயி, எப்பவுமில்லாம என் நெஞ்சிலே ஒரு விஷயத்தை விதைச்சுட்டா. அதான், அவளுக்கு ஒத்தாசை பண்ண ஏதாவது வழி இருக்கான்னு..."

"...................''

"அவள் புருஷன் நல்ல கலைஞன்ம்மா."

"தெரியுமே!''

"போன போகியின் போது கூட பக்கத்துக் குப்பத்து எல்லையம்மன் கோவில்ல கூழ் ஊத்திக் கூத்து நடத்தினாங்க... அதிலே வேலாயுதம் வேஷம் தரிச்சு 'சல்லிய மகாராஜன் வந்தேன். தேரை விட்டுக் கீழே குதிச்சேன்'னு பாடிக்கிட்டு, அந்த மரக் குந்தானியிலிருந்து தேரை விட்டுக் கீழே குதிக்கிற பாவனையில் தாவிக் குதித்து, 'மோரை விட்டுக் கூழைக் கரைச்சேன்'னு பாடினதும், அவங்கவங்களும் பகபகன்னு வாய் விட்டு, விலா நோகச் சிரித்ததை இன்னமும் என்னால மறக்க முடியலேம்மா."

வாஸ்தவம்தான்.

அப்பா நூத்துக்கு நூறும் அப்படியே அச்சாய்ச் சொன்னார். பிசகில்லே.

பழைமையை அசைபோட்டுக் கொண்டு வெட்டியாய் திண்ணையைத் தேய்த்த கலைஞர்களுக்கு என்னாலான உதவியைச் செய்யலாமென்று, கடந்த தடவை எங்கள் பிரிட்டீஷ் கலாசார, தகவல் மையத்திற்கு லண்டனிலிருந்து வந்து போன நாடக, இசை, திரைப்பட நுண்கலைப் பரிவர்த்தனைக் குழுவினரை மகிழ்விக்க, அவர் புரோகிராம் ஒன்றை ஏற்பாடு செய்தேன்.



அப்பா சொன்ன மாதிரியே வேலாயுதம் வேஷம் தாங்கி, 'சல்லிய மகாராஜன் வந்தேன். தேரை விட்டுக் கீழே குதிச்சேன்'னு பாடிக்கிட்டு அந்த மரக்குந்தானியிலிருந்து தாவிக் குதிச்சே, வந்திருந்த மேலைநாட்டவர்களை ஒரு அசத்து அசத்திட்டார்.

அதனால, இம்முறை இத்தாலியிலிருந்து வந்திருக்கும் கலைக் குழுவினரை மகிழ்விப்பதற்காக வரச் சொல்லி, ஆனந்தாயியிடம் தகவல் சொல்லி அனுப்பினேன்.

அவரிடமிருந்து பதில் ஏதுமில்லை.

'ரேட் கட்டலே. வேற இடத்துல அட்வான்ஸ் வாங்கிட்டதினால தேதி ஈரெட்டா இருக்கு'ன்னு எல்லாம் சொல்ல வாய்ப்பில்லே. ஏன்னா, அவர் கிராக்கி இல்லாம உன்னி பிடிச்சு உட்கார்ந்திருக்கிறது ஊரறிஞ்ச விஷயம்.

இருந்தும் அவர் ஆஜராகாததினால எனக்கு முள்ளு மேல நிற்கிற மாதிரி ஆகிட்டது.

"மேலைநாட்டுக் கலைஞர்கள் முன்னாடி ஆடவும் பாடவும் கொடுத்து வச்சிருக்கணுங்கிறதைப் புரிஞ்சுக்காம பெரிசா பீஸ்காரம் பண்றீங்களே''ன்னு நாலு வார்த்தை உறைக்கிற மாதிரி கேட்டுடறதுன்னு கைனடிக்கை எடுத்துக்கிட்டு நானே புறப்பட்டேன்.

**வா**சலில் உட்கார்ந்திருந்த வேலாயுதம், "வாங்கம்மா. வரச் சொல்லிச் சொன்னீங்கன்னு எம் பொஞ்சாதி வந்து

*சி. எம். நாராயணன்*



# கலைஞன்

சொல்லுச்சி''ன்னு வார்த்தைகளை வெகுவாக விழுங்கினார். உட்கார்ந்து பேச ஒரு முக்காலியைக் கொண்டு வந்து போட்டார்.

''முடியலேன்னு சொல்லிட்டா நான் வேற ஏதாவது புரோகிராமுக்கு அரேஞ்சு பண்ணுவேனில்ல? அத்த விட்டுட்டு சொல்லிச்சி, கொல்லிச்சின்னு இழுக்கடிக்கறீங்களே''ன்னு கேட்டுடணும் போல உள்ளுக்குள் எரிச்சல் மண்டிற்று.

.. தணித்துக் கொண்டேன்.

''போன தடவை நீங்க நடத்திக் காட்டின நிகழ்ச்சியினால எங்களுக்கு அமோக பேர். இந்தத் தடவை இத்தாலியிலிருந்து வேறொரு கலைக் குழு வந்திருக்கு. நாளைய மறுநாள் ராத்திரி... ஒரு மணி நேரம் உங்க புரோகிராமை நடத்திக் காட்டினீங்கன்னா...''

''ஒரு மணி நேரம் என்னம்மா... ஒரு ராத்திரி பூராவும் ஆடக் கூட நாங்க தயாரா இருக்கோம். ஆனா...''

''ஆனா என்ன சொல்லுங்க.''

''மத்த மத்த கலைஞர்கள் மாதிரி எங்க ஆட்டத்தையும் பாட்டத்தையும் படம்பிடிச்சுக் காட்டியோ, பாராட்டி எழுதியோ, பார்த்துப் பரவசப்பட வாய்ப்பத்தவங்க நாங்க...''

''வாஸ்தவம்தான்.''

''உங்க முணுமுணுப்பும் முகச்சுளிப்பும்தாம்மா எங்க உயிர் மூச்சு. கைப்புண் மாதிரி எதையும் கண்ணுக்கு முன்னாடி...''

''புரியலியே. ரெமுனரேஷன் போதலேங்கறீங்களா?''

''கலைஞனுக்கு காசும் பணமும் ரெண்டாம் பட்சம்தாம்மா. நான் சொல்ல வர்றது...''

அவர் தயங்கவே ஊக்குவித்தேன்.

''நம்ம ஜனங்களானா இதுக்கு முன்னாடி எத்தனை தடவை எங்க ஆட்டபாட்டத்தைப் பார்த்திருந்தாலும் நான் வேஷங்கட்டி தேரை விட்டுக் கீழே குதிக்கிற பாவனையில் அந்த மரக் குந்தானியிலிருந்து தாவிக் குதிச்சு 'சல்லிய மகாராஜன் வந்தேன். தேரை விட்டுக் கீழே குதிச்சேன்'னு பாடறதுக்குள்ளேயே அததும் 'ஹா ஹா'ன்னு வாயைப் பிளந்துக்கிட்டு விழுந்து விழுந்து சிரிக்குங்க... இவங்களானா...''

என்ன சொல்கிறார் இவர்?

''மோரை விட்டுக் கூழைக் கரைச்சேன்னு விளாவரியா பாடியும் கூட ஒரு பாதிப்பும் இல்லாம பிகுபிகுன்னு முழிச்சுகிட்டு, விளக்கிச் சொல்றவர் வார்த்தைக்குத் தவம் கிடக்கிறாங்க. இவர்களுக்கு கையைக் காலை மட்டுமே ஆட்டி அபிநயிக்கிற பொம்மலாட்டம் போதுமேம்மா. என் கூத்து எதுக்கு, அனாவசியமா?''

என்னுள் சிவுக்கென்றது.

''நான் இப்படிச் சொல்றேனேன்னு வருத்தப்படாதீங்கம்மா. காதலுக்கு வேணா வாய் வார்த்தைகள் தேவையற்றதாய் இருக்கலாம். ஆனா ஆட்டத்துக்கு இசைவா, பாடற வாய்ப்பாட்டை தன்னிச்சையா உணர்ந்து ரசிக்கத் தெரியாதவங்க கிட்ட ஆடவும் பாடவும் செய்யறது கஷ்டம்மா. ஆயிரம்தான் கேட்கிறதுக்கு மேல நீங்க அதிகப்படியா பணம் கொடுக்கிறதாயிருந்தாலும், வெக்கோல் கன்னுக் குட்டியைப் பார்த்து மாடு ஏங்கற மாதிரி மனசுக்கு வேதனையா இருக்கும்மா... அதனால...''

புலி பசித்தாலும் புல்லைத் திங்காதுங்கிற போது எப்படிக் கட்டி இழுக்கிறது? விட்டுட்டேன்.

## 9. ஆதித்யன் அடைந்த ஆச்சர்யங்கள்!

சுக்கிலபட்சம் துவங்கி மூன்று நான்கு தினங்களே ஆகியிருந்தன. மேற்கில், முக்காலுக்கும் மேல் வெட்டப்பட்ட நிலவும் இறங்கி மறைந்து விட்டது. தஞ்சையை நோக்கிச் சென்ற அந்தப் பாதையில், இடையில் குறுக்கிட்ட சிறு ஊர்களைத் தவிர வழியில் வேறு ஒளியேதும் இல்லை. கும்மிருட்டாக இருளடித்துக் கிடந்த அந்த வேளையில் எதிரில் வெறும் நிழலுருவங்களாகப் புரவிகளும் அந்த நான்கு வீரர்களும் புலப்பட்டனர். தனது புரவியின் வேகத்தைக் குறைத்து விட்ட ஆதித்யன், அவர்கள் போசள வீரர்களாயிருக்கும் பட்சத்தில் அவர்களை ஒழித்து விட்டே தஞ்சையை அடைவது என்று தீர்மானித்தான்.

ஆனால் அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக அவர்களை நெருங்கியதும் புரவியிலிருந்து குதித்த நால்வரில் ஒருவன், ஆதித்யனை அணுகி, ஒருமுறை தலைதாழ்த்தி வணங்கியதுடன், கச்சையிலிருந்து எதையோ எடுத்து பாண்டிய இளவலின் முன்பு நீட்டவும் செய்தான். அந்த இருளிலும் பளீரென்று சிவந்த ஒளியை வீசிய அதை உற்றுக் கவனித்த ஆதித்யனுக்கு அது சோழ மன்னரின் முத்திரை மோதிரம் என்பது புலப்பட்டது. புலியின் உருவம் பொறிக்கப்பட்ட அந்த மோதிரத்தின் சிவந்த விழிகள் ஆதித்யனை உற்றுப் பார்த்தன.

அடுத்து அந்த வீரனின் குரலும் ஒலித்தது. "பாண்டிய இளவலுக்கு வணக்கம். நாங்கள் சோழர் படையைச் சேர்ந்தவர்கள். தங்களைப் பாதுகாப்புடன் அழைத்து வரும்படி துறவியாரின் கட்டளை" என்றான் அந்த வீரன்.

"அப்படியானால் நீங்கள் என்னை இத்தனை தூரம் பின்தொடர்ந்திருக்க வேண்டாமே. ஆரம்பத்திலேயே என்னிடம் கூறியிருக்கலாமே" என்றான் ஆதித்யன்.

"இல்லை இளவரசே! துறவியார் திட்டவட்டமாகக் கூறியிருக்கிறார். வீரர்கள் சூழ தாங்கள் பகலில் வருவது பலர் கவனத்தை யும் ஈர்க்கலாம். எனவே இருள் கவிந்த பின்பே தங்களைச் சந்தித்து விவரம் தெரிவிக்கவு[ம்] உத்தரவிட்டிருந்தார்" என்றான் அந்த வீரன்.

"சரி, இனி நாம் செல்லலாமல்லவா?" ஆதித்யன் வினவினான்.

"சற்றுப் பொறுங்கள் பிரபு. தஞ்சையை நெருங்க நெருங்க போசள வீரர் நடமாட்ட[ம்] அதிகரிக்கும். தாங்கள் இந்த சோழ வீர[ர்] உடையை அணிந்து கொண்ட பின்பு செல்[ல]லாம் பிரபு" என்ற வீரனின் கரத்தில் ஒரு துணி மூட்டையும் தோன்றியது.

துறவியாரின் எச்சரிக்கையை எண்ண[ி] உள்ளுக்குள் வியந்து கொண்ட ஆதித்யன் அந்த வீரனிடமிருந்து உடைகளைப் பெற்று[க்] கொண்டு சற்று நேரத்தில் சோழ வீரனாகவே மாறி வந்தான்.

"பிரபு, இனி நாம் செல்லலாம்" என்[ற] வீரன், தொடர்ந்து, "கோட்டை வாயிலைக் கடக்கும் போது சற்று வேகமாகக் கடந்து விடுங்கள். நேராக அரண்மனையை அடைந்[த]தும் உள்ளே சென்று அரண்மனை வீரர்களு[ட]ன் கலந்து விடுங்கள்" என்றான்.

துறவியாரின் ஏற்பாட்டின்படியே சகல[]மும் நடந்தன. அந்த வீரனைக் கண்டது[ம்] கோட்டை வாயில்கள் திறக்க முற்பட்டன. கனவேகமாக அந்த வீரர்களுடனேயே உள்ளே நுழைந்து விட்ட ஆதித்யன், சற்றுத் தொலை[]வில் பெரும் புலிக் கொடி கம்பீரமாகப் பறந்[த] அரண்மனையை நோக்கிப் புரவியை துரி[த]மாகச் செலுத்தினான். அரண்மனை வாயி[லி]லும் துறவியாரின் ஏற்பாடுகள் கனகச்சிதமா[க] இருந்தன.

ஆதித்யனின் புரவி, வாயிலை அடைந்[த]து அவன் கீழே குதிப்பதற்கும் அரண்மனையின் பக்கவாட்டிலிருந்து இருபது[க்]கும் குறையாத சோழ வீரர்கள் வெளி[] வந்து அரண்மனைக்குள் நுழைவதற்கு[ம்] சரியாயிருந்தது. வீரர்களுடன் வீரனா[க] உள்ளே நுழைந்த ஆதித்யன் பிரமித்தான். அவன் உள்ளே நுழைந்ததும் அரண்மனையின் வெளிப்பு[ற] வாயில் மூடப்பட்டது. உடன் நுழைந்த வீரர்களு[ம்] உள்ளே ஏற்கெனவே இருந்த சோழ வீரர்களு[ம்] சட்டென்று இரு பக்கா[ங்]களிலும் அணிவகுத்[து]



வாட்களைத் தாழ்த்தி பாண்டிய இளவலை வரவேற்றார்கள்.

உருவித் தாழ்ந்த வாட்களும், மரியாதை நிரம்பிய வீரர்களின் பார்வையும் போதா தென்று உள்ளிருந்து "பாண்டிய இளவல் வர வேண்டும், வர வேண்டும்" என்று முகமன் கூறியபடியே வந்த சோழப் பேரமைச்சரையும் கண்ட ஆதித்யனின் பிரமிப்பு அதிகரித்தது.

அவனை நெருங்கி ஒருமுறை தலையைத் தாழ்த்திய பேரமைச்சர், "பாண்டிய இளவலை கோட்டை வாயிலிலிருந்து வரவேற்பதுதான் முறை. ஆனால் கோட்டையிலிருந்து இந்த அரண்மனை வரை இருப்பவர்கள் போசள வீரர்கள். ஆனால் அரண்மனைக் குள் முற்றிலுமாக சோழ வீரர்கள்தான். எனவேதான் தாங்கள் உள்ளே நுழைந்த பின்பு இந்த வர வேற்பு" என்றார் சற்று சங்கடம் தொனித்த குரலில்.

ஆதித்யனுக்கு நிலைமை புரிந்தது. துங்கபத்திரா நதியிலிருந்து தெற்கே குமரி வரை ஒரே குடையின் கீழ் தமிழகத்தை ஆண்ட சோழ வம்சம் அன்னியருக்கு இடம்கொடுத்த ஒரே குற்றத்துக்காக, ஓர் இளவரசனுக்கு விரும் பியபடி பகிரங்கமாக வரவேற்பு அளிக்கவும் அதிகாரமின்றி அரண்மனைக்குள்ளேயே

விஷ்வக்சேனன்

## அருள்வாக்கு



புத்தியைக் கெடுப்பதில் கள்ளு, கஞ்சா அளவுக்குப் போகாவிட்டாலும், 'அடிக்ட்' - ஆக அடிமைப்படுத்துகிற சக்தி காபி, டீக்கும் இருப்பதால்தான் அவை உதவாது என்பது. போதையை உண்டுபண்ணுவது - intoxicant - என்று இவற்றைச் சொல்ல முடியாவிட்டாலும், நரம்பை ஊக்குவிக்கிறவை - stimulant- என்பதால் தள்ளத்தான் வேண்டும். 'ஸ்டிமுலேட்' பண்ணுவது அப்போதைக்குக் கிளுகிளுப்பைத் தந்து உத்ஸாஹப்படுத்தலாமானாலும், முடிவிலே இப்படி செயற்கையாக தூண்டப்பட்ட நரம்பு மண்டலம் பலஹீனம்தான் அடையும். காபியில் இருக்கிற 'கஃபைன்' விஷவஸ்துவே என்று ஸகலரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

டீயும் அநாசாரம்தான். என்றாலும் காபி போல் அவ்வளவு மோசமில்லையாதலால், சுறுசுறுப்புக்கு ஏதாவது பானம் வேண்டத்தான் வேண்டும் என்கிறவர்கள் டீ வேண்டுமானால் கொஞ்சம் சாப்பிடலாம். இப்படிச் சொன்னதால், "பெரியவா டீ சாப்பிடச் சொல்றா" என்று அர்த்தம் பண்ணிக் கொண்டு விடக் கூடாது. காபி, டீ மாதிரி எதுவாவது இல்லாமல் முடியவே முடியாது என்று இருக்கிறவர்கள் டீ வேண்டுமானால் கொஞ்சம் சாப்பிட்டுக் கொண்டு, அதையும் படிப்படியாக விட வேண்டும்.

நல்ல வஸ்துவான பாலில் இந்த ஸாமான்களைக் கலந்து கெடுக்க வேண்டியதே இல்லை. அதிகாலையில் வெறும் பாலே சாப்பிடலாம். பகலில் மோராக்கிக் குடிக்கலாம். மோர்க் கஞ்சியாகவும் சாப்பிடலாம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

சுருங்கி விட்ட அவலம் அவன் உள்ளத்தை உருக்கியது. அவன் சித்தத்திலோடிய எண்ணங்கள் முகத்தில் படர்ந்த வருத்தக்குறியைக் கொண்டே யூகித்த பேரமைச்சரின் சொற்கள் சற்று வேகத்துடனேயே வந்தன : "பாண்டிய இளவலின் வருத்தம் புரிகிறது. ஆனால் இந்த நிலை மாறும் நாள் அதிக தூரத்தில் இல்லை. வாருங்கள், தங்களுக்காகத் துறவியார் காத்திருக்கிறார்" என்றபடியே திரும்பி நடந்த பேரமைச்சரைத் தொடர்ந்த ஆதித்யன், மேன்மாடத்தை நோக்கிச் சென்ற படிகளில் ஏறத் துவங்கினான்.

இரண்டாவது மாடத்தை அடையும் முன்பு குறுக்கிட்ட சிற்பத் தூண்களும், நுணுக்கமான வேலைப்பாடுகள் நிறைந்த பெரும் கதவுகளும், சுவர்களில் தீட்டப்பட்டிருந்த சித்திரங்களும் ஆதித்யனைப் பிரமிக்க வைத்தன. மேன்மாடத்து அறையின் வாயிலிலேயே நின்ற அமைச்சர், ஆதித்யனை உள்ளே செல்லும்படி கூறிவிட்டு வாயிலில் நின்றார்.

அறைக்குள் நுழைந்த ஆதித்யனின் பிரமிப்பு இன்னும் உயர்ந்தது. அறையின் மூலைகளில் நின்ற பாவை விளக்குகள் வீசிய ஒளியும், மேலிருந்து தொங்கிய யவனர் சர விளக்குகள் பொழிந்த ஒளிவெள்ளமும் அந்த அறையை இந்திரலோகமாகவே மாற்றியிருந்தன. சுவர்களில் பல நாட்டுப் படைக்கலங்களும், பல போர்களில் சோழர் படைகள் கலந்து கொண்ட விதங்களைப் பற்றிய சித்திரங்களும் தெரிந்தன. அறையின் மூலையில் உயர்ந்த பட்டுத் துணிகளை விரிப்புகளாகக் கொண்டு, ஓர் அழகிய மஞ்சமும் கிடந்தது. விரிப்புக்கள் சுருங்காமலும் கசங்காமலுமிருந்த விதம் அதை யாரும் பயன்படுத்தவில்லையென்பதைத் தெரியப்படுத்தியது. ஏறக்குறைய ஒரு அரசனின் அந்தரங்க அறையைப் போலவேயிருந்த அந்த அறை, உண்மையில் ஒரு துறவியின் அறை தானா என்ற சந்தேகத்தை எழுப்பியது.

அறைக்குள் துறவியாரோ வேறு பணியாட்களோ இல்லாததைக் கவனித்த ஆதித்யன், உட்புறமாக மேலும் நடந்து வெளித் தாழ்வரையை அடுத்து நீண்ட உப்பரிகையை அடைந்தான். உப்பரிகையின் கைப்பிடிச் சுவரில் ஒரு காலை ஊன்றி, ஒரு கரத்தை இடையில் முட்டுக் கொடுத்து, பலத்த சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் சைவத் துறவியார்.

துறவியாரின் அகலமான முதுகின் உரத்தையும், திரண்ட புஜங்களையும், நீண்ட கரங்களில் முழங்கைக்குக் கீழே தெரிந்த வாள் வடுக்களையும் கவனித்த ஆதித்யன், அவர் துறவறம் பெறுவதற்கு முன்பு தமிழகத்தின் சிறந்த மல்லராகவோ, பெரும் வாள் வீரராகவோ இருந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

அவன் காலடியோசை கேட்டு நிதானமாகத் திரும்பிய துறவியாரின் பெரு விழிகள் ஆதித்யனைக் கண்டதும் இன்னும் மலர்ந்தன. நீண்ட சடை முடியையும், தாடியையும், நீறு பளிச்சிட்ட அகன்ற நெற்றியையும், அரையில் உடுத்தியிருந்த காவியையும் கண்ட ஆதித்யன், அந்த அறையின் ராஜ போகத்திற்கும் அவருக்கும் அறவே தொடர்பில்லாமலிருந்ததையும் கவனித்தான். எல்லாவற்றையும் விட அவனைப் பெரிதும் கவர்ந்தவை துறவியாரின் கண்கள்தாம். அகன்று பெரிதாக விழித்த அந்த

விழிகளில் ஒரு கம்பீரமான அழகு தெரிந்தது. கூர்மையாகப் பாய்ந்த பார்வையில் ஒரு கனவுச் சாயை லேசாகப் படர்ந்திருந்தது. இவற்றைக் கவனித்த ஆதித்யனுக்கு இவர் உண்மையில் துறவிதானா என்ற சந்தேகமும் எழுந்தது.

அவனது ஆராய்ச்சிப் பார்வையைக் கவனித்த துறவியாரின் இதழ்களில் படர்ந்த முறுவல், விழிகளிலும் பரவி, அவர் முகத்துக்கு ஒரு களையை அளித்தது. "வா, ஆதித்யா!" என்ற அவர் குரலில் முழுமையான அன்பு கலந்து ஒலித்தது.

"சோழ நாட்டு சைவத் துறவியாரைப் பற்றிப் பலமுறை கேள்விப்பட்டிருக்கிறேன். நேரில் சந்திக்கும் பாக்கியம் இன்றுதான் கிடைத்தது."

துறவியாரின் பதில் நிதானமாக வந்தது. "நினைவு தெரிந்து நீ இப்பொழுதுதான் சந்திக்கிறாய் ஆதித்யா."

"தாங்கள் கூறுவது விளங்கவில்லை" – ஆதித்யனின் குரலில் சந்தேகம் லேசாகத் தொனித்தது.

"இதற்கு முன்பே நான் உன்னைப் பல முறை சந்தித்திருக்கிறேன். ஆனால் அது உனக்கு நினைவிருக்கக் காரணமில்லை. என் தோற்றமும் அப்போது வேறு விதமாயிருந்தது. உனக்கும் மிகவும் சிறு வயது. எனவே நினைவிலிருக்கக் காரணமில்லை. அதிருக்கட்டும். பாண்டிய மன்னர் என் வேண்டுகோளுக்கு ஒப்புக் கொண்டாரா?" துறவியாரின் குரலில் ஆவல் தெரிந்தது.

"ஆம்" என்ற ஆதித்யனின் பதிலைக் கேட்டதும், "மிக்க மகிழ்ச்சி ஆதித்யா" என்றார் துறவியார். "இனி நம் பணியைத் துரிதமாகத் தொடங்கலாம். என் வாழ்நாளுக்குள் தமிழகம் அன்னியரிடமிருந்து விடுபட்டு மீண்டும் தமிழ் மன்னர்களின் அரசு அமைவதைக் காண வேண்டும் என்ற என் லட்சியம் நிறைவேறி விடும்" – துறவியாரின் முகத்திலும் வார்த்தைகளிலும் மிதமிஞ்சிய நம்பிக்கை தெரிந்தது.

அவரது மகிழ்ச்சியும், நகைப்பும் ஆதித்யனையும் தொற்றிக் கொண்டது.

அதே மலர்ந்த பெருவிழிகளால் ஆதித்யனை ஏறிட்ட துறவியார், "ஆதித்யா, பாண்டிய மன்னரின் நோக்கமும் எனது வாழ்வின் லட்சியமும் ஒரே திசையில் ஓடுகின்றன. ஆனால் நான் போசளரையோ, தொண்டை மண்டலத்திலிருக்கும் காகதீயரையோ நேரிடையாக சோழ வீரர்களைக் கொண்டு எதிர்க்க இயலாது. சோழ ராஜேந்திரருக்கு முன்பு அரியணையிலிருந்த மூன்றாம் ராஜராஜர் அவர்களுடன் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தங்களை ராஜேந்திரரோ, அவர் சார்பில் ஆட்சியைக் கவனிக்கும் நானோ மீற இயலாது. ஆனால் மறைமுகமாக அவர்களின் பலத்தைக் குறைக்கலாம். சோழர் படையிலும் தற்போது அதிக வீரர்கள் இல்லை" என்றார். பேச்சை சற்று நிறுத்தி ஆதித்யனுக்குத் தாம் கூறியவை பற்றி சிந்திக்கச் சற்று அவகாசமும் அளித்தார்.

ஆதித்யனுக்கு அவர் கூறியவை அனைத்தும் சரியென்று பட்டாலும் அவரது வார்த்தைகளின் இறுதிப் பகுதி சற்று சந்தேகத்தை அளித்ததால் அவரை உற்றுநோக்கினான்.

அவன் முகபாவத்தை கவனித்த துறவியார், "ஆதித்யா, உன் மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றியிருக்கிறது. நாம் பரஸ்பரம் கொள்ளும் சந்தேகம் நமது நோக்கத்தையே பாழடித்து விடும். எனவே தயங்காதே, எதுவானாலும் கேள்" என்றார்.

ஒருகணமே தயங்கிய ஆதித்யன், "சோழ ராஜேந்திரர் பட்டமேற்று மூன்று ஆண்டுகள் வரையில் பாண்டியருடனும், போசளருடனும் கூடப் போரிட்டார். பிறகு சோழ நாட்டில் போர் எதுவும் நடைபெறவில்லை. அப்போது இருந்த பெரும்படை பிறகு என்னவாயிற்று? அத்தனை வீரர்களும் எங்கே சென்று விட்டார்கள்?" என்று வினவினான்.

துறவியாரின் முகத்தில் விஷமம் பரவியது.

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

## FORM IV

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Madras |
| 2. Periodicity of Publication | : | Weekly |
| 3. Name of Printer | : | V. Murali |
| Nationality | : | Indian |
| Address | : | D-38, Nelson Chambers, 115, Nelson Manickam Mudaliar Road, Aminjikarai, Madras - 600 029. |
| 4. Name of Publisher | : | K. Rajendran |
| Nationality | : | Indian |
| Address | : | 1, 5th Street, Lake Area, Nungambakkam, Madras - 600 034. |
| 5. Name of Editor | : | Seetha Ravi |
| Nationality | : | Indian |
| Address | : | 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Madras - 600 041. |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1996

K. Rajendran
Publisher



''கிரிக்கெட்லே நம்ம அணி அதிக ரன் எடுக்க என்ன வழி?''

''ஒரே வழிதான்; நம்ம அணி வீரர்கள் பேர்லேயே 'ரன்' வர்ற மாதிரி 'சசிதரன், முரளிதரன், கங்காதரன், தினகரன்'னு தேர்ந்தெடுக்கணும்!''

– பரணி மனோ

---

"ஆதித்யா, உன் சந்தேகம் நியாயமானதுதான். நான் முன்பு கூறியபடி போசளரை நேரிடையாக எதிர்ப்பதில் ராஜேந்திரருக்குப் பல சங்கடங்கள் இருந்தன. காடவ கோப் பெருஞ் சிங்கனுடன் இன்னும் சில சிற்றரசுகளும் சேர்ந்து உட்பகையை வளர்த்து விட்டார்கள். எனவே தஞ்சையின் காவலுக்கு சிறு பகுதியை மட்டும் நிறுத்திக் கொண்ட ராஜேந்திரர் மீதிப் படைகளைக் கலைத்து விட்டார். ஆனால் சோழ வீரர்கள் படையை விட்டு விலக விரும்பவில்லை. "துறவியார் தமது விளக்கம் ஆதித்யன் புத்தியில் உறைய சற்று அவகாசம் அளித்து விட்டுத் தொடர்ந்தார் : "எனவே, படையின் பெரும் பகுதி கொங்கு நாட்டுக்கு, சாதாரண மக்களாகச் சென்று கொங்கு மண்ணின் விடுதலையை விரும்பும் வீரர்களையும் சேர்த்து ஒரு விடுதலைப் படையை உருவாக்கியது. மீதிப் பேர்..." துறவியாரின் சொற்கள் பாதியில் நின்றன. அவர் பெரு விழிகளில் வழிந்த விஷமும் கூடியது.

"மீதி வீரர்கள் என்ன ஆனார்கள்?" ஆதித்யனின் கேள்வி சாதாரணமாகத்தான் வந்தது. ஆனால் துறவியார் கூறிய பதிலில் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''மீதி வீரர்கள் பாண்டிய நாட்டிலிருக்கிறார்கள்'' என்ற துறவியார் மெள்ள நகைத்தார்.

"என்ன? சோழ வீரர்களில் பாதிப் பேர் பாண்டிய நாட்டிலிருக்கிறார்களா?" – ஆதித்யனின் திகைப்பு அவன் கேள்வியிலும் ஒலித்தது.

"ஆம் ஆதித்யா! ராஜேந்திரரின் நோக்கம் போசளர்களைத் தமிழகத்திலிருந்து விரட்டுவது. நேரிடையாக சோழ வீரர்களைக் கொண்டு அதை சாதிக்க இயலாது. ஆனால் போசளரின் பரம வைரிகளான பாண்டியர் படையிலிருந்து கொண்டு அவர்களை எதிர்ப்பதும் போரிடுவதும் இயலும். எனவே பாண்டிய மன்னர் திரட்டிக் கொண்டிருந்த படையில், சோழ வீரர்கள் சாதாரணக் குடிகளாகச் சென்று இணைந்து கொண்டார்கள்'' என்றார் சைவத் துறவியார் வெகு சாதாரணமாக.

ஆதித்யன் துறவியாரைப் பார்த்த பார்வையில் பிரமிப்பு வழிந்தது. தமிழகத்திலிருந்து போசளரை விரட்ட சோழ ராஜேந்திரர் திட்டம் வகுத்து நீண்ட காலமாகி விட்டது என்பதை உணர்ந்தான். தமிழகம் விடுதலை பெற, சோழர் பெரும்படையை கலைக்கவும் தயங்காத அபூர்வ பிறவி சோழ மன்னர் என்பதும் புரிந்தது அவனுக்கு.

அவன் பிரமிப்பைக் கவனித்த துறவியார், ''ஆதித்யா, பாண்டியருக்கு உதவ சோழ வீரர்களை அனுப்பி வைத்ததோடு மட்டும் நிற்கவில்லை சோழ மன்னர். மேலும் படை திரட்டவும், போருக்குப் பின் நாட்டை வளப்படுத்தவும் பெரும் செல்வமொன்றையும் பரிசாக அளிக்கத் தீர்மானித்திருக்கிறார்'' என்றார்.

''பெரும் செல்வமா? என்ன அது?'' என்றான் ஆதித்யன் பிரமிப்பு இன்னும் நீங்காத குரலில்.

துறவியாரின் முகத்தில் நிதானம் படர்ந்தது. அடுத்து ஒலித்த அவர் குரலிலும் நிதானம் பெரிதும் காணப்பட்டது. "ஆம் ஆதித்யா, பெரும் செல்வம்தான் அது. அதன் பெயர் இந்திர தனுசு" என்றார் துறவியார்.

*(தொடரும்)*

---



''நீ சின்ன வயதில் கிரிக்கெட் விளையாடியிருக்கிறாயா?''

''ஓ. நிறைய.''

''நீ அடித்த அதிகப்ட்ச ரன்கள் எவ்வளவு?''

''70''

''ப்பூ! இவ்வளவுதானா? நான் 175 அடித்திருக்கிறேன். சரி, அதிக பட்சமாக எவ்வளவு விக்கெட் சாய்த்திருக்கிறாய்?''

இந்த முறை முதலில் நீ சொல். அப்புறம் நான் சொல்கிறேன்!''

– ஆத்மா முரளி

## 10. பொற்பேழை

இரவின் குளிர்ந்த தென்றலுக்குக்கூட துறவியார் உச்சரித்த 'இந்திர தனுசு' என்ற பெயர் திகைப்பை அளித்திருக்க வேண்டும். உப்பரிகையை அடுத்து நீண்ட தாழ்வரையில் சற்று நேரம் தயங்கி நின்ற காற்று, மேற்கொண்டு துறவியார் ஏதும் பேசாமல் விழிகளை அரைவாசி மூடி நிஷ்டையில் ஆழ்ந்து விட்டதால் மெள்ள சீலையை நகர்த்திவிட்டு அந்த அறைக்குள் புகுந்து மறைந்தது.

அகன்ற நெற்றிக்குக் குறுக்கே ஓடிய பச்சை நரம்பு, இலேசாகப் புடைத்து நிற்க, அந்த இரவிலும் பளிச்சிட்ட நீறு சற்றே சுருங்கி துறவியாரின் சித்தம் கனவேகத்தில் ஓடிக் கொண்டிருந்ததை உணர்த்தியது. ஆதித்யன் அவர் நிஷ்டையில் குறுக்கிட மனமின்றி மௌன மாகவே காத்திருந்தான்.

நீண்ட நேரம் கழித்து விழிகளைத் திறந்து ஆதித்யனை ஏறிட்டார் அவர். "ஆதித்யா, சோழ அரசை ஸ்தாபித்த முதலாம் பராந்தகனின் தந்தை முதல் ஆதித்த சோழர் தில்லை சிற்றம்பலத்தைப் பொன்னம்பலமாக்கியபோது அத்தனை பொன்னும் எங்கிருந்து கிடைத்தது என்பதை அறிவாயா?" என்று வினவினார்.

ஆதித்யன் இல்லையென்பதற்கடையாளமாகத் தலையசைத்தான்.

"கொங்கு நாட்டின் செல்வத்துக்கும் செழிப்புக்கும் மூலதனமாக இருப்பது எதுவென்பது தெரியுமா?"

துறவியாரின் அடுத்த கேள்வியும் உடனே வந்தது.

ஆதித்யன் மீண்டும் மௌனமாகத் தலையசைத்தான்.

"தெற்கில் சோழரும் வடக்கில் காகதீயரும் மேற்கில் போசளரும் நெருங்கினாலும் காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனை இன்னும் அடக்க இயலாததற்குக் காரணத்தை அறிவாயா?"– துறவியாரின் இந்தக் கேள்விக்கும் விடை ஆதித்யனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

"இத்தனை கேள்விகளுக்கும் ஒரே ஒரு பதில் இருக்கிறது ஆதித்யா.



விஷ்வக்சேனன்

அது இந்திர தனுசு. நூறு ஆண்டுகளுக்கு மேல் மறைக்கப்பட்டு விட்ட ரகசியம் அது" என்ற துறவியார், உப்பரிகையை விட்டுத் திரும்பி, "ஆதித்யா, வா என்னுடன்" என்று அழைத்தபடியே அறைக்குள் நுழைந்தார்.

மீண்டும் அறைக்குள் நுழைந்த ஆதித்யனுக்கு முதலில் எழுந்த சந்தேகம் மீண்டும் தோன்றவே, "துறவியாரே இது மன்னரின் அறையாகத் தெரிகிறது" என்றான்.

முன்னால் சென்ற துறவியார் திரும்பிப் பாராமலே அனாயாசமாக பதில் சொன்னார்: "ஆம் ஆதித்யா, இது சோழ ராஜேந்திரனின் சயன அறை."

"மன்னர் இங்கு தங்குவதில்லையா?" ஆதித்யனின் அடுத்த கேள்விக்கும் அதே வேகத்தில் பதில் வந்தது துறவியாரிடமிருந்து.

"இல்லை ஆதித்யா. மன்னர் இப்போதெல்லாம் தில்லையம்பலத்திலேயே பழியாய்க் கிடக்



# இந்திர தனுசு

கிறார். இரு மகாராணிகளும் கூட தில்லையின் மாளிகையிலேயே இருக்கிறார்கள்'' - வார்த்தைகளை உதிர்த்தபடியே அறையின் ஒரு மூலைக்கு வந்த துறவியார், அங்கிருந்த உயரமான பாவை விளக்கைச் சற்று நகர்த்திவிட்டு சீலையை விலக்கினார். மன்னரின் பஞ்சணையைச் சுற்றி வந்து அருகில் நெருங்கிய ஆதித்யன், அங்கு சுவரோடு சுவராகப் பதிக்கப்பட்டிருந்த கதவு ஒன்று இருப்பதைக் கவனித்தான். எங்கிருந்தோ தம் கரத்தில் தோன்றிய திறவு கோலினால் அதைத் திறக்க முற்பட்டார் துறவியார்.

கதவு திறந்ததும் நெடு நாட்களாகப் பூட்டி வைத்திருந்ததால் உண்டான ஒரு வித நெடி இருவரையும் தாக்கியது. அருகிலிருந்த பந்தமொன்றை விளக்கின் உதவியால் பற்ற வைத்த துறவியார், அந்தக் கதவின் வழியே உள்ளே நுழைந்தார். சிறு அறையொன்றின் மறுபுறத்திலிருந்து படிகள் கீழே இறங்கின. துறவியார் வெகு வேகமாக அவற்றில் இறங்க ஆரம்பித்து சற்றே திரும்பி, "ஆதித்யா, கவனமாக இறங்கி வா, படிகள் சற்று நெருக்கமாக அமைக்கப்பட்டிருக்கின்றன" என்று அவனை எச்சரித்தார். கருங்கல்லால் அமைக்கப்பட்ட அந்தப் படிகள் சுழன்று சுழன்று இறங்கிக் கொண்டேயிருந்தன. வெகு நேரம் ஆன பிறகும் படிகள் இன்னும் முடியாததையும் சுற்றிச் சுற்றி அவற்றில் தொடர்ந்து இறங்கியதால் தலை சுழலும் ஸ்திதிக்கு வரத் தொடங்கி விட்டதையும் உணர்ந்த ஆதித்யன், இந்தப் படிகள் நிச்சயம் பாதாள உலகத்திற்குச் செல்லும் படிகளாயிருக்க வேண்டும் என்றே தீர்மானித்தான்.

துறவியார் எதையும் லட்சியம் செய்யாமல் வேகமாக இறங்கியபடியே இருந்தார். ஆதித்யன் ஏறக்குறைய மயங்கி விழுந்து விடும் நிலைக்கு வந்தபோது, படிகள் சட்டென்று



## அருள் வாக்கு

புராணங்களில் வெறும் கற்பனையும் எங்காவது இருக்கலாம்தான். பிற்காலத்தவர்கள் இடைச் செருகலாக (interpolation) சிலதை நுழைத்து விட்டும் இருக்கலாம். ஆனால் எது வெறும் கற்பனை, எது இடைச் செருகல், எது மூல ரூபம் என்று யார் நிர்ணயிப்பது? அவரவரும் தங்களுக்கு இடைச் செருகலாகத் தோன்றுவதை நீக்கி விடுவது என்று ஆரம்பித்தால் அத்தனை கதைகளும் போய் விடும். மூலக் கதையென்றே ஒன்று நிற்காது. அதனால் சில தப்புக்கள், கோளாறுகள் இருப்பதாகத் தோன்றினாலும்கூட இன்றைக்கு நம் கைக்கு எந்த ரூபத்தில் புராணங்கள் வந்திருக்கின்றனவோ அதை அப்படியே வைத்து ரக்ஷிக்கத்தான் வேண்டும்.

அதிலே ஏதாவது கட்டுக்கதை இருந்தாலும் இருந்து விட்டுப் போகட்டும். அது நம் மனஸை பகவானிடம் கொண்டு போய் விட்டு சாந்தப்படுத்துகிறதோ இல்லையோ? கடைக்கு ஒரு பண்டம் வாங்கப் போகிறோம். நல்ல சரக்காகக் கிடைக்கிறது. நம் உத்தேசம் பூர்த்தியாகி விட்டது என்று ஸந்தோஷப்படுவதா, அல்லது கடையில் இன்ன குறை இருந்தது, கடைக்காரனிடம் இன்ன தோஷம் இருந்தது என்று சொல்லி அதிருப்தி படுவதா? பூகோள-ககோள (வான் இயல்) வர்ணனைகள், மன் வந்தரம் முதலான கால வர்ணனைகள் எங்கேயாவது தப்பிப் போனால்தான் போகட்டுமே! இதையெல்லாம் தெரிந்து கொள்ளத்தான் ஜாகரஃபியும் அஸ்ட்ரானமியும் ஹிஸ்டரியும் இருக்கிறதே! ஜாகரஃபியிலும் ஹிஸ்டரியிலும் அஸ்ட்ரானமியிலும் கொடுக்க முடியாத பரமாத்ம தத்துவத்தை, பக்தியை, தர்மத்தைச் சொல்கிற லக்ஷ்யத்தைப் புராணம் பூர்த்தி பண்ணுகிறதோ இல்லையோ?

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

முடிவடைந்து அவன் எதிரில் பெரும் மண்டபம் ஒன்று எழுந்தது. மண்டபத்தின் உள்ளே நுழைந்த ஆதித்யன், வாழ்நாளில் அதுவரை கண்டறியாத காட்சியொன்று தன் கண்களின் முன்பு தோன்றுவதை உணர்ந்தான்.

துறவியார் கரத்திலிருந்த பந்தத்தின் உதவியுடன் உள்ளே தொங்கிக் கொண்டிருந்த இரண்டொரு சர விளக்குகளை ஏற்றியதும் அந்தக் காட்சி இன்னும் தெளிவாக விரிந்தது. பிரமிப்பில் அப்படியே அடித்து வைத்த சிலையாக நின்றான் ஆதித்யன். பொன்னும் மணியும் முத்துக்களும் கற்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்களும் குறுவாட்களும் மகுடங்களும் பதுமைகளும் பெரும் ரத்தினங்கள் இழைக்கப்பட்ட ஒரு சிம்மாசனமும் இன்னும் என்னவென்றே விளங்காத பல பொக்கிஷங்களும் அந்தப் பெரும் மண்டபத்தில் நிறைந்து கிடந்தன. சரவிளக்குகளின் ஒளியில் தான் கண்டது ஒரு பகுதியே என்பதையும் அந்த மண்டபம் இன்னும் நீண்டுகிடப்தையும் பார்த்தவனது பிரமிப்பு உச்சத்தை எட்டியது.

துறவியாரது வேகநடை, அந்த மண்டபத்தினுள் நுழைந்த பின்பும் நிற்கவில்லை. மண்டபத்தின் மறுகோடி வரையில் விறுவிறுவென்று நடந்தவர் சட்டென்று நின்றார். அவரது பார்வை எதிரே தெரிந்த வேலைப்பாடமைந்த பெரும் கதவின் மேல் புறம், சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு வாளின் மீது நிலைத்தது.

துறவியார் சட்டென்று நின்றதையும் அவர் பார்வை பாய்ந்து நிலைத்த இடத்தையும் கவனித்தான் ஆதித்யன். அந்த வாளையும் பெரும் ஏக்கம் படரத் தொடங்கிய அவர் முகத்தையும் கவனித்தபடி நின்றான். வாளின் உறையிலிருந்த வேலைப்பாடுகள் கண்களைக் கவர்ந்தன. அசாத்திய நீளமாயிருந்த அந்த வாளின் பிடியில் கற்கள் பதிக்கப்பட்ட புலிச் சின்னம் பந்தத்தின் ஒளியில் சிவந்து ஜொலித்தது.

அந்த நீண்ட வாளை உற்றுப் பார்த்தபடி நின்ற துறவியாரிடமிருந்து உதிர்ந்த சொற்களில், பெரும் ஏக்கமும் பெருமையும் கலந்து ஒலித்தன.

"ஆதித்யா, இது சாளுக்கிய எல்லை முதல் குமரி வரையில் சோழர் புலிக்கொடியைப் பறக்க விட்ட முதற் குலோத்துங்கனின் வாள். இது உயர்த்தப்பட்ட இடத்திலெல்லாம் பெரும் வெற்றியையே தேடித்தந்தது. இதைக் கண்டு சாளுக்கிய நாடும் கலிங்கமும் ஈழமும் நடுங்கியது. ஆனால்...." துறவியாரின் சொற்கள் பாதியில் நின்றன.

"ஆனால் என்ன துறவியாரே?"

துறவியாரின் முகத்தில் பெரும் சோகம் படர்ந்தது. "இப்போது இதைத் தொடக்கூட எந்த சோழ வீரனுக்கும், சோழ வீரன் என்ன, சோழ மன்னனுக்கும் அருகதை கிடையாது."

இதைச் சொன்ன அவர் குரலிலும் பெரும் சோகம் ஒலித்தது.

அடுத்து நீண்ட பெருமூச்சொன்றை வெளியிட்ட துறவியார், "சரி ஆதித்யா, வா என்னுடன்'' என்றபடியே எதிரேயிருந்த கதவைத் திறந்து உள்ளே நுழைந்தார்.

அடுத்து தென்பட்ட அறை, நல்ல விசால மாயிருந்தது. தந்தத்தாலும், மரத்தாலும், பொன்னாலும் செய்யப்பட்ட, சிறியதும் பெரியதுமான பல பேழைகள் அங்குகிடந்தன. அந்தப் பேழைகளின் மீதும், பக்கங்களில் நின்ற மர அடுக்குகளின்மீதும் ஓலைச் சுவடிகள் பல இறைந்து கிடந்தன. உள்ளே நுழைந்த துறவி யார் பந்தத்தின் ஒளியில் பேழைகளைத் திறந்து பார்ப்பதும், ஓரிரு ஓலைகளைப் புரட்டிப் படிப்பதுமாக எதையோ தேட ஆரம்பித்தார். அவர் தேடுவது எதையென்று புரியாத ஆதித்யன் மண்டபத்திலிருந்து இரு சரவிளக்குகளைக் கொண்டு வந்து அறைக்குள் பொருத்தினான். அறையெங்கும் தாராளமாகப் பரவிய ஒளியில் நீண்ட நேரம் தேடிய துறவியாருக்கு அவர் தேடியது இறுதியாக, அறையின் மூலையிலிருந்து கிடைத்தது. சுத்தமான பொன்னால் செய்யப்பட்ட பேழையொன்றை எடுத்துக் கொண்டு சரவிளக்கின் அருகில் வந்து நின்ற துறவியாரின் பெரு விழிகள் பொன்னை விட அதிகமாக மின்னின. தமது காவி வஸ்திரத்தின் ஒரு பகுதியால் அந்தப் பேழையைத் துடைத்தவர், அதை விளக்கின் அருகில் மெள்ளக் கொண்டு போனார். அந்தப் பேழையின் மீது, ஏதோ எழுதியிருப்பதைக் விளக்கொளியில் கண்ட ஆதித்தன், அருகில் நெருங்கி உற்றுக் கவனித்தான். அடுத்து, வியப்பு தொனித்த குரலில் அதன் மீதிருந்ததைச் சற்று உரக்கவே படித்தான்– "இந்திர தனுசு" என்று.

தொடர்ந்து இந்திர தனுசைப் பற்றி துறவியார் விளக்க விளக்க, திகைப்பில் உறைந்த ஆதித்யன், கொங்கு மன்னனும் இளவரசியும் எத்தகைய செல்வத்தை இழந்திருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டது மட்டுமின்றி அதை எப்படியும் மீட்பது என்றும் தீர்மானித்தான்.

திகைப்பும் வைராக்கியமும் மாறாமல் ஆதித்யன் உணர்ச்சி வசப்பட்டு நின்ற அதே நேரத்தில் கொங்கு நாட்டு இளவரசி உண்மையில் தன் உயிரையே இழந்து விடக் கூடிய நிலையிலிருந்தாள். ஆதித்யனோ, உத்தம பாளையத்து நந்தவனத்திலிருந்து சூரிய காங்கேயனால் அபகரிக்கப்பட்டவளின் நிலையை அறியாதவனாக இருந்தான்.

கொங்கு நாட்டின் தலைநகரான ஸ்காந்தபுரத்தின் அரண்மனை. அதில் மன்னன் அவந்தனின் அறையிலிருந்த பஞ்சணையில்

''நம்ம தலைவர் வீட்டு வாசல்ல, 'உண்மை'ன்னு பெரிசா எழுதி 'ஃபோகஸ் லைட்' போட்டு வெச்சிருக்கே, எதுக்கு?''

'' 'உண்மையை வெளிச்சம் போட்டுக் காட்டுவேன்'னு தலைவர், மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத்தான்.''

– ஜெயாப்ரியன்



துவண்டு கிடந்தாள் இளவரசி பூங்கோதை. தடாகத்திலிருந்து பறித்து எறியப்பட்ட தாமரைக் கொடியைப் போல வதங்கிப் போயிருந்தாள்.

அந்த அரண்மனைக்கு அவள் கொண்டு வரப்பட்டு முழுதாக ஒரு தினம் ஓடிவிட்ட பிறகும் மூடிக்கிடந்த மலர் விழிகள் திறக்க வேயில்லை. சிவந்த தாமரையின் நிறத்தைப் பெற்றிருக்கும் அழகிய முகம் வெளுத்துப் போய், வெள்ளகத்திப் புஷ்பமாகவே தெரிந்தது. சற்றைக்கொரு தரம் மிகுந்த சிரமத்துடன் பெரிதாக வந்த மூச்சும் மெள்ள மெள்ள அடங்கிக் கொண்டிருந்த அதன் வேகமும் அவள் முடிவை நோக்கிச் சென்று கொண்டிருப்பதை உணர்த்தின.

பஞ்சணைக்குச் சற்றுத் தள்ளியிருந்த இருக்கையில் அமர்ந்து அவளையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்த மன்னன் அவந்தனின் முகத்தில், வாழ்நாளில் அதுவரை கண்டறியாத சோகம் படர்ந்து கிடந்தது. வயதும் கவலைகளும் அளித்த பரிசுகளாகத் தலையில் தென்பட்டன, ஓரிரு நரைகள். அந்த முகத்திலிருந்த களையும் கண்களில் தெரிந்த ஒருவித கவர்ச்சியும் ஒரு காலத்தில் மன்னாதி மன்னர்களையெல்லாம் விடுத்து சோழ இளவரசி அவனிடம் மயங்கியதற்குக் காரணமிருக்கிறது என்பதைப் புலப்படுத்திக் கொண்டிருந்தன.

அரண்மனைக்குள் நுழைந்து கொண்டிருந்த மருத்துவரைக் கண்டதும் அவர்களின் முகம் சற்று மாறியது.

இருக்கையை விட்டு எழுந்தவன், வேகமாக மருத்துவரை நோக்கிச் சென்றான். அவர் நெருங்குமுன்பே ஒலித்த வன் குரலில், கவலையும் பதற்றமும் கலந்திருந்தது. "மருத்துவரே, சீக்கிரமாக வாரும். வந்து என் மகளைச் சற்று கவனியும்."

மருத்துவர் முகத்தில் வியப்பு தெரிந்தது. "என்ன? இளவரசியார் வந்திருக்கிறாரா? என்ன அவருக்கு?"– கேட்ட மருத்துவர் திரும்பி அருகில் உடன் வந்து கொண்டிருந்த போசள வீரனை எரித்து விடுவது போலப் பார்த்தார். "என்ன செய்தீர்கள் இளவரசியாரை?" என்ற அவர் கேள்வியும் கடுமையுடன் வந்தது.

அந்த வீரனின் பதில் சற்று நடுக்கத்துடனேயே வெளிப்பட்டது. ''மருத்துவரே, உங்களை அழைத்து வரும்படிதான் தலைவர் உத்தரவு. மற்ற விவரங்கள் ஏதும் எனக்குத் தெரியாது.''

மன்னன் குரல் குறுக்கிட்டது. "மருத்துவரே, உங்கள் விசாரணையைப் பிறகு வைத்துக் கொள்ளலாம். முதலில் வந்து என் மகளைக் கவனியுங்கள்'' என்றான் மன்னன் கெஞ்சும் குரலில்.

விறுவிறுவென்று பஞ்சணைக்கு அருகில் வந்து நின்ற அந்த கொங்கு நாட்டு மருத்துவரின் முகத்தில் திகைப்பும் வியப்பும் கவலையும் அச்சமும் மாறிமாறித் தோன்றின. சிறுமியாகத் தாம் பார்த்திருந்த 'இளவரசியை இயற்கை எப்படி செப்பனிட்டிருக்கிறது!' என்று உள்ளுக்குள் வியந்த மருத்துவர், வாழைத்தண்டு போல செயலற்றுக் கிடந்த அவள் கரத்தைப் பிடித்து, நாடியை உற்றுக் கவனித்தார். அடுத்து அவள் விழிகளின் இமையை உயர்த்தி உட்புறத்தையும் அவள் பேச்சையும் கவனித்தவர் முகத்தில் கவலை படர்ந்தது. அடுத்து ஒலித்த அவர் குரலில் நடுக்கம் புலப்பட்டது.

''மன்னவா, இளவரசியாருக்கு மிகக் கடுமையான விஷம் அளிக்கப்பட்டிருக்கிறது. விஷப் புகையால் சுவாச உறுப்புக்கள் முழுவதுமாக பாதிக்கப்பட்டிருக்கின்றன. இதே நிலை நீடித்தால் நாளை உச்சிப் பொழுதுக்குள் அவர் மூச்சு முழுவதுமாக நின்று விடும்'' என்றார் மருத்துவர்.

மருத்துவரின் வார்த்தைகள் மன்னனை மட்டுமின்றி அந்த அறைக்குள் வேகமாக நுழைந்து கொண்டிருந்த சூரிய காங்கேயனையும் திடுக்கிட வைத்தன.

அவனை நோக்கித் திரும்பிய மன்னனது பார்வையில் கொலைக்குறி தென்பட்டது. மஞ்சத்தினடியில் அதுவரை மறைந்து கிடந்த குறுவாள் மன்னனின் கரத்தில் தோன்றியது. அதை காங்கேயன் மீது எறிந்துவிட வேகத்துடன் அக்கரம் உயரவும் செய்தது.

(தொடரும்)

# தனபிரியா

வழங்கும்

## சேமிப்பு திட்டங்கள்

◆ தனயோக ஃபிக்செட் டெபாசிட் திட்டம் ◆

டெபாசிட்களுக்கு 1 கிராம் தங்க காசு வழங்கப்படும்

### க்யூமுலேடிவ் டெபாசிட்

| வருடம் | டெபாசிட் தொகை | முதிர்வு தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | 10,000 | 13,000 | 30.00% | 2% |
| 24 மாதங்கள் | 10,000 | 16,000 | 30.00% | 2% |
| 36 மாதங்கள் | 15,000 | 30,000 | 33.33% | 3% |

### ஃபிக்செட் டெபாசிட்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 25% | ரூ. 5,000/- | 5% |

### பென்ஷனர் மற்றும் முதியோர்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 30% | ரூ. 5,000/- | 2% |

### தனபிரியா பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- இரு மடங்காகிறது. 36 மாதங்களில் ரூ. 50,000/-
ஊக்கப் பரிசு : 5 கிராம் தங்க காசு

### தனயோக பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 50,000/- மும் மடங்காகிறது. 57 மாதங்களில் ரூ.1,50,000/-
ஊக்கப் பரிசு : 10 கிராம் தங்க காசு

### திருமகள் திருமண திட்டம் ரிக்கரிங் டெபாசிட் திட்டம்

ரூ.1000 x 25 மாதங்கள் அல்லது
ரூ. 500 x 25 மாதங்கள்

26ம் மாத துவக்கத்தில் ரூ. 50,000/- அல்லது ரூ. 25,000/- பெற்று 27ம் மாதம் முதல் மாதம் ரூ.1000/- அல்லது ரூ.500/- வீதம் 25 மாதத்திற்கு எந்தவிதமான வட்டி இல்லாமல் திரும்ப செலுத்தலாம் அல்லது ரூ. 25,000/-ஐ மறுமுதலீடு 10 வருட காலத்திற்கு செய்து ரூ.2,32,835 பெறுங்கள்

### ஓய்வுதாரர் நலத் திட்டம்

| | |
|---|---|
| குறைந்தபட்ச முதலீடு<br>காலம்<br>வட்டி<br>விகிதம் | ரூ. 1 லட்சம் அல்லது அதற்கு மேல் 6 வருடங்கள் அல்லது அதற்கு மேல் 26 சதவிகிதம் வருடத்திற்கு மற்றும் 1800 சதுர அடியில் வீட்டு மனை திருமுல்லை வாயில் நகரில் இலவசமாக பத்திர பதிவு செய்து வழங்கப்படும் அல்லது ரூ. 15,000/- ரொக்கம் |




வட்டி தொகைக்கு முன் கூட்டின காசோலைகள்
பின் தேதியிட்டு வழங்கப்படும்

● ஞாயிற்றுக் கிழமையும் அலுவலகம் இயங்கும் ●

**தனபிரியா இன்வெஸ்ட்மென்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்**

*காம்தார் பில்டிங் (2வது மாடி) 143/3. பிராட்வே, சென்னை – 600 108 போன் : 565668*

**கார்பரேட் அலுவலகம் :** எண்.34 துரைசாமி சாலை, தி. நகர்,
சென்னை -17. போன் : 8281116.

"விரைந்து சேருங்கள் மகிழ்ச்சியாக வாழுங்கள்"

# சுஜாதா பக்கம்



நோவம் சாம்ஸ்கி (Noam Chomsky) மொழி இயலில் புதிய கருத்துக்களைக் கொண்டு வந்தவர். குழந்தைகள் மொழி கற்கும் விதத்தை ஆராய்ந்து, மனித மொழிகளின் ஆழமான அமைப்புகளையும் (deep structures) அமைப்பு மாற்ற (transformation) விதிகளையும் அறுதியிட்டவர். அவர் சமூக அறிவியல், அரசியல் விமர்சனம், ஊடகங்கள் - குறிப்பாகச் செய்தித்தாள்கள் எப்படி நம்மை ஏமாற்றிச் சம்மதத்தை உற்பத்தி செய்கின்றன என்பதைப் பற்றியெல்லாம் சிந்திக்க வைத்து, அமெரிக்க மனங்களைக் கலக்கிக் கொண்டிருக்கிறார். வியட்நாம் குறுக்கீட்டை எதிர்த்துச் சிறை சென்றிருக்கிறார். இராக் போரையும் பலமாக எதிர்த்தவர். இரண்டாம் உலகப் போரில் யூதர்களை ஹிட்லர் கொன்ற குற்றம் மிகவும் பெரிதுபடுத்தப்பட்டது. கம்போடியா 'போல்பாட்'டிலும் இந்தோனேசியத் தீவு ஒன்றிலும் அமெரிக்க சம்மதத்துடன் ராணுவ அராஜகத்தில் ஓர் இனத்தையே அழித்ததில் இறந்தவர்கள் எண்ணிக்கை அதிகம் என்று சொல்லி, கண்டனத்துக்கு உள்ளானார்.

சாம்ஸ்கியின் புத்தகங்களும் சொற்பொழிவுகளும் இளைய தலைமுறையினரால் பெரிதும் விரும்பப்பட்டும் பலரால் வெறுக்கப்பட்டும் வருகின்றன.

அண்மையில் சாம்ஸ்கி ஓசைப்படாமல் இந்தியா வந்து ஒரு லெக்சர் கொடுத்துவிட்டுச் சென்றார். நல்ல காலம், அவரை தூர்தர்ஷனும் 'இந்து' போன்ற ஏடுகளும் பேட்டி கண்டன. நம் பொருளாதாரச் சீர்திருத்தங்களைப் பற்றி அவர் சொன்ன கருத்துக்கள் சிந்திக்கத் தக்கவை :

"பொருளாதார நிபுணர்களும் உலக வங்கியும் ஆணையிட்டுச் செயல்பட்டால் நாசத்தை நோக்கித்தான் செல்வீர்கள். எனக்கு இந்தியாவைப் பற்றி அதிகம் தெரியாது. அதனால் விவரமாகப் பார்க்காமல் இந்தியாவில் என்ன நிகழும் என்று சொல்ல இயலாது. ஆனால் சரித்திரத்தில் பல உதாரணங்கள் உள்ளன. இந்தியாவில் பிரிட்டிஷ் காலனியாதிக்கத்திலேயே அவர்கள் பரிசோதனை செய்யத் துவங்கினார்கள். என்ன மிச்சம்?... உங்களுக்குத் தெரியும். பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியா இங்கிலாந்தைவிட அதிகத் தொழில் முன்னேற்றம் பெற்றிருக்கும். பிரிட்டிஷ் ஆதிக்கம் அதை ஒடுக்கிவிட்டது! ஆடம் ஸ்மித் போன்றவர்கள் இதைக் கண்டித்திருக்கிறார்கள். தற்கால இந்தியா ஊழலில் உழன்று கொண்டிருக்கிறது. இதன் பொருளாதாரம் பெரும்பாலும் கறுப்பானது. ஊழல், கையூட்டு, கொள்ளை இவைகளால் கிடைத்த கறுப்புப் பணம்தான் இந்தியாவில் ஆதிக்கம் செய்கிறது.

"பிரேசில் ஓர் உதாரணம். அறுபதுகளில் உங்களைப் போல் அவர்களும் தாராளமயமாக்கினார்கள். பொருளாதாரம் மிக வேகமாக வளர்ந்தது. யாருக்கு? பத்து சதவிகித மக்களுக்கு. மற்ற தொண்ணூறு சதவிகிதத்தினருக்கு எந்த மாறுதலும் இல்லை. அதேதான் உங்களுக்கும் நிகழப் போகிறது. இந்தத் தந்திரம், முன்னேற்ற நாடுகளில் கூடச் செல்லவில்லை. உலகிலேயே பணக்கார நாடாகிய அமெரிக்காவில் மற்ற முன்னேற்ற நாடுகளைவிட ஏழைமை இருமடங்கானது. குழந்தைகள் போஷாக்கு குறைவு, சிசு மரணம், வயசானவர்கள் பட்டினி - இவையெல்லாம் இன்றும் அதிகம். அமெரிக்க நாடு சிறிய, மிகமிக பணக்காரக் குழுக்களாகவும் கணிசமான ஏழை மக்களின் குழுக்களாகவும் பிரிந்துவிட்டது. அதே தான் உங்கள் நாட்டிலும் நிகழப் போகிறது. உங்கள் தாராள மயமாக்குதலைச் செயல்படுத்துபவர்கள் பணக்காரராவார்கள். உங்கள் வளத்தில் தொழிலாளிகள் பங்கு குறையும். ஏழை - பணக்கார வித்தியாசம் அதிகரிக்கும். பசி அதிகமாகும். சுற்றுச் சூழல் நாசமாகும். ஆரோக்கியம் கெடும். பணவீக்கம் குறையும். நாட்டில் ஒரு சிலர் மிக மிகப் பணக்காரரா வார்கள். விவசாயத் துறையில் உங்கள் ஆராய்ச்சி முயற்சிகள் பாதிக்கப்படும்.

"இந்தியா விவசாய நாடு. உங்கள் விவசாய ஆராய்ச்சியாளர்கள் மிகச் சிறந்தவர்கள். அவர்களைப் பன்னாட்டு நிறுவனங்கள் வளைத்துப் போட்டு, ஐந்து மடங்கு அதிக சம்பளம் கொடுத்து உள்நாட்டு முயற்சிகளைக் கொன்றுவிடுவார்கள். உங்கள் மருத்துவ ஆராய்ச்சியின் சிறப்பையும் இழப்பீர்கள். இனி பாகிஸ்தானில் போல, இந்தியாவிலும் மருந்துகளின் விலை அதிகரிக்கும். தாராள மயமாக்குவதன் அர்த்தமே இதுதான். உள்நாட்டு ஆராய்ச்சியைக் கொல்வது.

"கனடாவுக்கு இது நிகழ்ந்தது. அமெரிக்க வியாபார ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதும் அதன் சிறப்பான உள்நாட்டு மருத்துவ ஆராய்ச்சிகள் பாதிக்கப்பட்டன.

"அமெரிக்கா உங்களைப் படையெடுக்காமலேயே அமெரிக்க பன்னாட்டு நிறுவனங்களால் நீங்கள் ஆளப்படுவீர்கள்..."

- இவ்வாறு சாம்ஸ்கி சொன்னது நம் நாட்டில் நிகழ்வதை இப்போதே கவனிக்க இயலும். மூன்று மாடல் இருந்த நாட்டில் இன்று, ஆறு லட்சத்திலிருந்து பதினெட்டு லட்சம் வரை விலையில் பதினெட்டு கார் மாடல்கள். உள்நாட்டு டீ.வி. எலெக்ட்ரானிக்ஸ் ஆராய்ச்சி செத்துக் கொண்டிருக்கிறது. சூயிங்கம், சானிட்டரி நாப்கின் போன்றவைகளுக்கெல்லாம் அயல்நாட்டுத் தொழில்நுட்பத்தை நாடுகிறோம். செல்லுலர் போன் வந்து சினிமா நடிகர்களும் சிட்பண்டு அதிபர்களும் ஹவாலா மன்னர்களும் ஆளுக்கொன்று கையில் வைத்துக் கொண்டு மனைவிகளோடு பேசுகிறார்கள்! பணவீக்கம் ஐந்து சதவிகிதத்துக்கு அருகில் வந்துவிட்டது என்கிறார்கள். தபால் கார்டு, நிரோத் - இரண்டைத் தவிர வேறு ஏதாவது விலை ஏறாமல் இருந்திருக்கிறதோ?

(மீண்டும் அடுத்த வாரம்)

## 11. மருத்துவர் இல்லத்தில் மாய உருவம்!



ஒரு தலைவனிடம் ஏற்படும் பலவீனம் அவன் மக்களையும் எத்தனை தூரம் பாதிக்கும் என்பதற்கு எடுத்துக்காட்டாக நின்றிருந்தான் கொங்கு நாட்டு மன்னன் அவனிதன். சோழ ராஜராஜன் அன்னியருக்கு இடம் கொடுத்துவிட்டதால், சோழ நாட்டை மட்டுமின்றி அதற்கு உட்பட்ட சிற்றரசுகளையும் அடிமைப்பட வைத்து விட்டிருந்தான். பெயரளவிற்குச் சிற்றரசாக இருந்தாலும் அது வரையில் சர்வ சுதந்தரமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த கொங்கு நாட்டின் மன்னன் அவனிதன் நாட்டையும், அதிகாரத்தையும் இழந்ததுடன் ஒரே மகளையும் இழக்கும் நிலைக்கு வந்திருந்தான். எனவே, அவன் நிதானத்தை இழந்ததிலோ, மகளின் இந்த நிலைக்குக் காரணமான சூரிய காங்கேயனைக் கொன்றுவிட முயன்றதிலோ வியப்பேதுமிருக்கவில்லை.

அவனிதனின் முயற்சியை மருத்துவரின் உரத்த குரல் தேக்கியது. "நில், மன்னா நில்" என்று பலமாக ஒலித்த மருத்துவரின் குரலில் அடுத்து கடுமையும் ஒலித்தது. "மன்னவா, இவனைக் கொல்வதால் தங்கள் மகள் உயிர் பிழைத்து விடப் போவதில்லை. இவனைக் கொன்ற பின்பு ஏற்படக் கூடிய விளைவுகளைச் சற்றேனும் சிந்தித்துப் பாருங்கள்...."

அவனிதனின் பதில் அலட்சியத்துடன் வந்தது: "மருத்துவரே, என்னைத் தடுக்காதீர்கள். இவனைக் கொன்றபின் போசள சிங்கணன் இந்தக் கோட்டையையும் அரண்மனையையும் அழிக்கலாம். என்னையும் கொல்லலாம். என் மகள் மடிந்த பிறகு நான் உயிர் வாழ விரும்பவில்லை."

மன்னன் பதிலிலிருந்த ஆவேசத்தையும் அலட்சியத்தையும் கவனித்த மருத்துவர் அவனுக்கு நேர் எதிரில் வந்து நின்றார். அவர் விழிகள் மன்னன் விழிகளை நிர்ப்பயமாகச் சந்தித்தன. "மன்னவா, தமிழகத்தில் எந்தக் குற்றவாளியையும் தீர விசாரிக்காமல் கொல்வதோ, தண்டனை அளிப்பதோ இன்று வரை கிடையாது. இவனைக் கொன்றே தீருவது என்று தீர்மானித்தீர்களானால் அந்தப் பொறுப்பை என்னிடம் விடுங்கள். இரண்டே நரம்புகளைத் தட்டி இவன் விழிகளைத் தவிர வாழ்நாள் முழுவதும் வேறு அசைவே இல்லாமல் செய்து விடுகிறேன். நீங்கள் அந்தக் களங்கத்தைச் சுமக்க வேண்டாம். நீங்கள் கூறியபடி உங்கள் உயிர் உங்களுக்குத் துச்சமாக இருக்கலாம். ஆனால் எனக்கும், இந்தக் கொங்கு நாட்டு மக்களுக்கும் இருக்கும் ஒரே நம்பிக்கை நீங்கள்தான். அந்த நம்பிக்கையையும் சிதைத்து விடாதீர்கள். அந்தக் குறுவாளை இப்படித் தாருங்கள்" - மருத்துவரது குரலிலிருந்த வேகமும் அவர் வார்த்தைகளிலிருந்த உண்மையும் அவனிதன் கரத்தைத் தாழ்த்த வைத்தன.

நடந்த சம்பவம் சூரியகாங்கேயனை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டதால், திகைத்துப் போய்ச் சிலையாக அதுவரை நின்றவன் திரும்பி வாயில்லை நோக்கி நகர முற்பட்டான். மருத்துவரின் குரல் அவனைத் தடுத்தது - "காங்கேயா, நில்!" என்று.

சற்று முன்பு அவர் கூறிய தண்டனை முறைகள் காங்கேயனைக்

**விஷ்வக்சேனன்**



யை அறியாமல் அதைப் பயன்படுத்துவது தவறு என்பது தெரியாதா உனக்கு? போ, போய் சிங்கணனிடமும் உன் மன்னன் வீர சோமேஸ்வரனிடமும் நீயே இளவரசியைக் கொன்றுவிட்டதாகச் சொல்'' என்றார் மருத்துவர்.

காங்கேயன் திருதிருவென விழித்தான். வீர சோமேஸ்வரனுக்கு இந்தச் செய்தி கிடைக்குமானால் தன்னை உயிருடன் தோலுரித்து விடுவான் என்பதை உணர்ந்தான். ஏனெனில் தனது மகனுக்கு இளவரசியை வலுக்கட்டாயமாக வாவது மணமுடிப்பதன் மூலம் கொங்கு நாட்டிலும், சோழ மண்ணிலும் தன்னை ஸ்திரப்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டிருந்தான் வீர சோமேஸ்வரன்.

காங்கேயனின் அச்சத்தை இன்னும் உயர்த்த மருத்துவரின் குரல் மீண்டும் ஒலித்தது. “ஏன் விழிக்கிறாய்? நீயாகப் போய் உன் மன்னனிடம் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா அல்லது சோமகேசி இளவரசியைக் கொன்று விட்டான் என்று நான் செய்தியனுப்பவா?'' என்றார் மருத்துவர்.

எதிரில் நின்றவனது கரிய முகத்திலிருந்த திகில் இன்னும் கலக்கியிருந்ததால் அவர் தன்னை நோக்கி வரத் தொடங்கியதும் அவன் கரிய முகத்தில் கலவரமும் அச்சமும் படர்ந்தன. அவன் கலவரத்தைக் கவனித்த மருத்துவர் உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாரென்றாலும் வெளிக்காட்டாமல் முகத்தில் கடுமையை வரவழைத்துக் கொண்டபடியே, “காங்கேயா, நீ இளவரசியாருக்கு அளித்த மூலிகையுடன் கோரக்க மூலிகையைச் சேர்த்தாயா?'' என்றார்.

காங்கேயன் முகத்தில் அச்சத்துடன் வியப்பும் சேர்ந்து கொண்டது. “ஆம் மருத்துவரே, உத்தமபாளையத்திலிருந்து ஸ்காந்தபுரம் வரையில் நீண்ட பயணம் என்பதால் ஐந்து துளிகளை அதிகமாகச் சேர்த்தேன்'' என்றான் அவன்.

மருத்துவரின் முகத்தில் வெறுப்பு வழிந்தது. “பச்சிலையுடன் இரண்டு துளிகளுக்குமேல் சற்றுக் கலந்தாலே கோரக்க மூலிகை சுவாசப்பையை அழித்துவிடும். மூலிகைகளின் தன்மை

# இந்திர தனுசு

## அருள்வாக்கு

**கொ**டுக்க வேண்டும். அதுதான் த்யாகம். அதைத்தான் வேதம் எங்கே பார்த்தாலும் வற்புறுத்துகிறது. எந்தக் கர்மாவும் செய்து முடிக்கும்போது, "நான்தான் கர்த்தா என்பதால் இதன் ப்ரயோஜனம் முழுதும் எனக்கே வந்துவிடப் போகிறதே; அப்படி என் ஒருத்தனுக்கு மட்டும் பலன் கிடைத்து விடக் கூடாது" என்கிற பரம த்யாக புத்தியில் "ந மம" - "எனதில்லை; எனக்கில்லை" என்று அதன் பலனை லோக க்ஷேமார்த்தம் - த்யாகம் பண்ணச் சொல்கிறது நம்முடைய மதம்.



மற்ற வஸ்துக்களைக் கொடுத்து விட்டு, "நான் கொடுத்தேன்" என்ற எண்ணத்தை மட்டும் வைத்துக் கொண்டு இருந்தால் இந்த அஹங்காரமானது த்யாகத்தாலும் தானத்தாலும் கிடைக்கிற ஆத்மாபிவிருத்தியை அப்படியே ஏப்பம் விட்டுவிடும். த்யாகம் பண்ணவேண்டும்; அதைவிட முக்கியமாக, த்யாகம் பண்ணினேன் என்ற எண்ணத்தையும் த்யாகம் பண்ணிவிட வேண்டும்.

மஹாபலி நிறையக் கொடுத்தான்; வாரி வாரிக் கொடுத்தான். ஆனால் தான் கொடுக்கிறோம் என்ற அஹங்காரத்தை அவன் பகவானுக்கு பலி கொடுக்கவில்லை. இதனால்தான் பகவானே அவனிடம் இந்த அஹங்காரத்தை யாசகமாகப் பெற்று, அஹங்கார நாசத்துக்கு அடையாளமாகத் தலையிலே கால் வைத்தான்.

"ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு வெளியில் ஏதேதோ பண்ணிக் கொண்டு அஹங்காரத்தைக் கரைக்காமல் இருந்தால் இவனுக்கும் ப்ரயோஜனமில்லை; இவனுடைய ஸர்வீஸால் லோகத்துக்கும் ப்ரயோஜனமிராது. தாற்காலிகமாக ஏதோ நன்மை நடந்தது போல் படாடோபமாகத் தெரியலாம்; ஆனால் அது நின்று நிலைத்து விளங்காது.

***- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.***

அதிகமாகியது.

"சோமகேசி, நீ சாளுக்கியன் என்பதையும் சூரிய காங்கேயனைக் கொன்று விட்டு அவன் பெயரில் பாண்டிய நாட்டில் உலவியதையும் நான் அறிவேன். கொங்கு நாட்டில் மாற்றுப் பெயரைக் கொண்டு ஏய்ப்பது எளிதல்ல சோமகேசி!" என்ற மருத்துவர், "நீ விழித்தது போதும். இளவரசியாரின் உயிருக்கு இந்த நிலையில் நான் உத்தரவாதமெதுவும் அளிக்க முடியாது. எதற்கும் என் குடிலுக்கு இளவரசியை எடுத்துச் சென்று முயன்று பார்க்கிறேன். இரண்டு நாழிகைக்கொருமுறை யென்று அவர்களுக்கு மூலிகைகள் அளித்துப் பார்த்தால் ஓரளவு பிழைக்க வாய்ப்பிருக்கிறது. போய் சிவிகையொன்றை எடுத்து வரச் சொல்" என்றார்.

அவன் வெளியேறிய பின்பு மன்னனை நெருங்கிய மருத்துவர் குரலைப் பெரிதும் தாழ்த்திக் கொண்டார். "மன்னவா, இளவரசியாருக்கு அபாயம் ஒன்றுமில்லை. ஆனால் அவர் மயக்கத்தை இங்கே தெளிவிப்பதுதான் அபாயம். என் குடிலுக்கு அழைத்துச் சென்றுவிடுகிறேன்."

"என்ன கூறுகிறீர் மருத்துவரே?"

"ஆம் மன்னவா. இளவரசியாரின் மயக்கம் சாதாரணமானதுதான். ஆனால் அவர் இங்கே விழித்துவிட்டால் பிறகு தங்களுடன் இளவரசியும் அரண்மனையிலேயே சிறையிருக்க வேண்டிவரும். சற்று எண்ணிப் பாருங்கள்..."

**ம**ன்னன் முகத்தில் மிதமிஞ்சிய ஏக்கம் பிரதிபலித்தது. பல ஆண்டுகள் கழித்துத் தன்னிடம் வந்த ஒரே மகளுடன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் மீண்டும் பிரிவது அவன் உள்ளத்தைச் சுக்குநூறாக்கியது. ஆனால் மருத்துவர் கூறியதில் இருந்த உண்மை மெல்ல அவன் உணர்ச்சிகளுக்கு அணை போட்டதால் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவன், "மருத்துவரே, அவளை இங்கிருந்து தப்பிக்க வைக்க உங்களால் இயலுமா? தப்பிய பின்பு எங்கு அனுப்பப் போகிறீர்கள்?" என்றான் கரகரத்த குரலில்.

"கவலைப்பட வேண்டாம் மன்னவா! நீங்கள் யாரை நம்பி இளவரசியைச் சிறு வயதிலேயே ஒப்படைத்தீர்களோ, அந்தச் சைவத் துறவியாரிடமே அவரை அனுப்பி வைக்கிறேன். சரியாக இன்றைக்கு மூன்றாவது நாள் இளவரசியார் தஞ்சையிலிருப்பார்" என்ற மருத்துவரின் கரங்களைப் பிடித்துக் கொண்ட மன்னனின் விழிகள் கலங்கியிருந்தன.

"கலங்க வேண்டாம் மன்னா. விரைவில் காலம் மாறிவிடும்" என்று ஆறுதலளித்த மருத்துவர் மீண்டும் சோமகேசி வருவதைக் கண்டு முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டார்.

**கனாக் கண்டேன் தோழீ...**

**புதிய மினி தொடர்கதை பக்கம் 20-ல் ஆரம்பம்.**

புதிய மினி தொடர்கதை பக்கம் 20-ல் ஆரம்பம்.

பணிப்பெண்கள் இளவரசியை அசையாமல் எடுத்துச் சிவிகையில் கிடத்த, பின்னால் நடந்த மருத்துவரின் விழிகள் ஒருமுறை திரும்பி மன்னனை நோக்கின.

மருத்துவர் வீசிய பார்வை தந்த ஆறுதலால் சற்றே ஆறுதலடைந்த அவநிதனின் விழிகளை நீர்த்திரை மறைத்தது. அரண்மனையிலும் கோட்டையிலும் நெடுக நின்றிருந்த போசள வீரர்களை வெறுப்புக் கலந்த பார்வையுடன் கவனித்தபடியே வந்த மருத்துவரைத் தொடர்ந்து சேமகேசியும் உடன் போசள வீரர்களும் வந்தனர்.

தமது குடிலையடைந்ததும் இரு பணிப் பெண்களைத் தவிர மற்றவர்களைத் திருப்பியனுப்பிய மருத்துவர், சோமகேசியிடம் இரண்டு தினங்கள் கழித்து வந்தால் போதுமென்று கூறியனுப்பவும் செய்தார். குடிலை விட்டு வெளியே வந்த சோமகேசி, சற்று நின்றான். வெளியில் மக்கள் கூட்டம் மருத்துவருக்காகக் காத்துக் கிடந்தது. இல்லத்தின் முன்பும் மரநிழல்களிலும் முதியவர்களும் பெண்களும் குழந்தைகளும், திடகாத்திரர்களும் கூட நிரம்பியிருப்பதைக் கண்ட சோமகேசி 'ஸ்காந்தபுரத்து மக்களில் இத்தனை பேர் நோயுற்றவர்களா?' என்று வியந்தான். சற்றுத் தள்ளியிருந்த மரத்தை நோக்கி இரு வீரர்களுடன் நடந்தவன், சட்டென்று மரத்தினடியில் நின்றான். உடன் வந்த வீரனை அழைத்தவன், "அந்தக் கிழ மருத்துவனை நம்ப இயலாது. இந்தக் குடிலுக்குச் சற்றுத் தள்ளியிருந்து இவனைக் கவனித்துக் கொள்ளுங்கள். நான் சோழ நாட்டிலிருக்கும் நமது வீரர்களுடன் மீண்டும் உத்தமபாளையத்திற்குச் சென்று அதைக் கைப்பற்றுகிறேன். தண்டநாயகருக்கும் தாக்குதலைத் தொடங்கிவிடுமாறு செய்தியனுப்ப வேண்டும். என்னுடன் உத்தமபாளையத்திலிருந்து வந்த நமது வீரனை அழைத்து வா" என்று உத்தரவிட்டான்.

சற்று நேரத்தில் அந்த மரத்தினடிக்கு வந்த வீரனை நோக்கியவன், "நீ இடைப்பாடி நாட்டுக்குச் சென்று இந்த ஓலையைச் சிங்கணரிடம் கொடுத்துவிடு. இளவரசி பாண்டி நாட்டில் இல்லையென்றும் தாக்குதலைத் தொடங்கலாம் என்றும் தெரிவித்துவிடு" என்றான்.

ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்த சோமகேசி, மக்கள் கூட்டம் சற்றுத் தள்ளியேயிருப்பதைக் கவனித்து, திருப்தியுடன் தலையசைத்தபடி அங்கிருந்து அகன்றான். அதுவரை மரத்தின் மறுபுறத்தில் ஒருவன் நோயாளியைப் போலக் கம்பளியொன்றைப் போர்த்தியபடி படுத்துக் கிடந்ததையோ, அவன் பேசியவற்றை ஒரு வார்த்தை கூட விடாமல் அவன் கவனித்துக் கொண்டிருந்தான் என்பதையோ சோமகேசி அறியவில்லை.

மருத்துவரது குடிலுக்குள் நோயாளிகளைக் கவனித்து மூலிகைகளையும், குளிகைகளையும் அளித்து அனுப்பும் பணி வெகு மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. மாலை மங்கி இருள் லேசாகப் பரவிய பொழுதில்தான் மருத்துவர் இல்லத்திலிருந்த கூட்டம் கரைந்து ஓரிருவர் மட்டும் தங்கள் முறைக்காகக் காத்திருந்தனர். அன்று முழுவதும் மூலிகைகளைக் கலுவத்தில் இட்டு அரைத்தும் பச்சிலைகளைப் பிழிந்தும் பணி செய்த அலுப்பு மருத்துவரின் சீடர்கள் முகங்களில் தெரிந்தது.

இருக்கும் ஓரிருவரும் வெளியேறிய பின்பு சீடர்களும் மருத்துவரிடம் விடைபெற்றுக் கொள்வதையும் மருத்துவர் குடிலின் பின்புறத்திலிருந்த மூலிகைத் தோட்டத்தை நாடிச் செல்வதையும் மரத்தினடியிலிருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்தான் அந்தக் கம்பளி போர்த்திய மனிதன்.

குடிலின் பின்புறத்து அறையில் பட்டு விரிப்பொன்றின் மீது படுத்துக் கொண்டிருந்த இளவரசிக்கு மெல்ல நினைவு திரும்ப ஆரம்பித்திருந்தது. மூடியிருந்த இமைக்குள் அசைந்த விழிகள் அதை நிரூபித்துக் கொண்டிருந்தன. மருத்துவர் அளித்திருந்த மூலிகைச் சாறை இரு நாழிகைகளுக்கொரு முறை பணிப்பெண்கள் அளித்துக் கொண்டேயிருந்ததாலும், பின்புறத்து மூலிகைத் தோட்டத்திலிருந்து மூலிகை மணம் நிரம்பிய காற்றைத் தொடர்ந்து சுவாசித்ததாலும் அன்று மாலைப்

பொழுதிலேயே இளவரசியின் மயக்கம் தெளியத் தொடங்கியிருந்தது. நீண்ட நேரமாக ஓய்வெடுத்துவிட்ட அவள் சித்தம் விழிப்பை நாடி கனவேகமாக இயங்கத் தொடங்கியதால் ஏதேதோ காட்சிகளை அவள் உள்ளம் உருவாக்கி அவள் கண்களுக்குள் காட்டிக் கொண்டிருந்தது. சூளாமணி விஹாரமும், பாண்டியர் தலைநகரும், உத்தமபாளையமும் மாறி மாறித் தோன்றியது மட்டுமின்றி அங்கங்கே நடந்த சம்பவங்களும் பலவிதமாக மாறிமாறித் தோன்றின.

அவள் விழிகளிலும் முகத்திலும் ஏற்பட்ட சலனங்களைக் கவனித்த பணிப்பெண்கள், மருத்துவர் கூறியிருந்தபடி மூலிகைச் சாற்றை அவள் இதழ்களை நீக்கிச் சிறிதும்,. மற்றொரு மூலிகைச் சாற்றை அவள் இமைகளை விலக்கி விழிகளிலும் விடவே, அடுத்த கால் நாழிகையில் இளவரசி கண் விழித்தாள். தான் ஏதோ ஒரு புதிய இடத்திலிருப்பதையும், தான் சந்தித்திராத புதிய பணிப்பெண்கள் எதிரில் நிற்பதையும் கண்டவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

மெல்ல எழ முயன்றவள், தன் உடலின் கனமே பெரும் சுமையாயிருப்பதையும், ்கைகால்களின் இணைப்புகள் பெரிதும் பலவீனப்பட்டுக் கிடப்பதையும் உணர்ந்தாள்.

எதிரில் நின்ற பணிப்பெண்கள் அவள் நிலையை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். அவளைத் தாங்கி மெல்ல அமர வைத்தவர்கள் ஒரு முறை தலைவணங்கினார்கள்.

இளவரசியிடமிருந்து பலவீனமான குரலில் கேள்வி ஒலித்தது. "யார் நீங்கள்? நான் எங்கிருக்கிறேன்? இந்தக் குடில் யாருடையது?"

இளவரசியின் கேள்விக்குப் பதிலளிக்க ஆரம்பித்த அந்தப் பெண்கள் அறை வாயிலில் ஏற்பட்ட அரவத்தைக் கேட்டு நிமிர்ந்தனர். நிமிர்ந்தவர்கள் விழிகளில் பெரும் திகில் பரவியது. அதைக் கவனித்த இளவரசியும் சிரமப்பட்டுப் பின்புறம் திரும்பி நோக்கினாள்.

உடல் முழுவதும் கம்பளியொன்றைப் போர்த்தியபடி உருவமொன்று வாயிலில் நின்றது. நடுவில் இலேசாக விலகியிருந்த கம்பளியினூடே அதன் கச்சையில் குறுவாளொன்றும் தெரிந்தது. இளவரசி திரும்பியதும் ஒரு முறை தலையசைத்த அந்த உருவம் ஓரடி முன்னால் எடுத்து வைத்தது.

அடுத்த கணம் 'வீலெ'ன்ற பணிப்பெண்களின் அலறல் அந்தக் குடிலின் பின்புறத்தில் கவிந்து கிடந்த இருளை ஊடுருவி வெகு தூரத்திற்குக் கேட்டது. மருத்துவர் இல்லத்திற்குச் சற்றுத் தள்ளி சோமகேசி நிறுத்தியிருந்த போசள வீரர்கள் மூவருக்கும் கூட அந்த அலறல் கேட்டது.

(தொடரும்)



## பிரதமருக்கு ஒரு பகிரங்கக் கடிதம்!

மாண்புமிகு பிரதமர் ராவ் அவர்களுக்கு ஒரு சாமானியன் எழுதிக் கொண்டது.

மதிப்பிற்குரிய ஐயா! தாங்கள் எத்தனையோ தொழிற்சாலைகளைத் திறந்து வைத்து, அதை நாட்டிற்கு அர்ப்பணிப்பதை பேப்பரில் படித்திருக்கிறேன். ஆனால் நினைவாற்றலை அதிகரிக்கச் செய்யும் ஒரு மாத்திரையைத் தாங்கள் வெளியிட்டது எனக்கு மிகவும் கவலையைத் தருகிறது. மத்திய அரசின் அறிவியல் ஆய்வு மையக்கிளையானது மூலிகைகளிலிருந்து இதைத் தயாரித்து, தங்கள் மூலம் வெளியிட்டிருக்கிறது. நாடு இருக்கும் நிலையில் ஊழல், லஞ்சம், ஹவாலா எல்லாவற்றையும் மக்கள் தெரிந்து கொண்டு குழம்பிப் போய் இருக்கிறார்கள். கடவுள் கொடுத்த ஞாபக மறதியால் ஜனங்கள் நாளாவட்டத்தில் இவைகளை மறந்து, மீண்டும் தங்களுக்கே வோட்டு அளிப்பார்கள்! ஆனால் இந்த மாத்திரையைச் சாப்பிட்ட பின், அவர்கள் ஞாபகம் அதிகமாகி இந்த ஊழலைப் பற்றியே நினைத்து சிந்திக்க ஆரம்பித்து, செயல்பட்டால் அது உங்களுக்கு நல்லதல்ல என்று நினைக்கிறேன்.

மறதி என்பது ஜனங்களுக்கு கடவுள் கொடுத்த வரப்பிரசாதம். இந்த மாத்திரையால் என்னென்ன விளையுமோ என்று அஞ்சுகிறேன்!

இப்படிக்கு,
உங்கள் பிரஜை,
எம் வெங்கடேஸ்வரன்,
திருநெல்வேலி.

# சுஜாதா பக்கம்



மூன்று பொறியியற் கல்லூரிகளுக்குக் கம்ப்யூட்டர் பற்றி விரிவுரையாற்றச் சென்றிருந்தேன். அண்ணா நகரிலுள்ள வேலம்மாள் கல்லூரி, புதுக்கோட்டை கீரனூரில் மூகாம்பிகை கல்லூரி, தஞ்சை வல்லத்தில் சண்முகா கல்லூரி. தனியார் பொறியியற் கல்லூரிகளில் மாணவர்களை அனுமதிப்பதில் மூன்று வகை இருக்கிறது. ஃப்ரீ சீட், பெய்டு சீட், மேனேஜ்மென்ட் கோட்டா. ("டோட்ல வந்தியா, நோட்ல வந்தியா?")

ஃப்ரீ சீட் என்பது வருஷத்துக்குச் சுமார் இரண்டாயிரம். பெய்டு சீட் என்பது வருஷத்துக்குச் சுமார் முப்பத்திரண்டாயிரம்! மேனேஜ்மென்ட் சீட் வருஷத்துக்கு ஒரு லட்சம்! இந்த உத்தேசமான எண்ணிக்கைகள் கல்லூரிக்குக் கல்லூரி மாறுபடுகின்றன. பல வகைகளில் பணம் வசூலிக்கப்படுகின்றது. மாணவர்களிடையே பொருளாதார வேறுபாடுகளுடன் துவக்குவது ஆரோக்கியமானதா என்பதை யோசிக்காமல் செய்துவிட்ட இந்த அமைப்பை எப்படி நிவர்த்தி செய்யப் போகிறார்கள் என்று தெரியவில்லை. இதற்குத் தீர்வாக எனக்குத் தோன்றுவது இது:

நல்ல கல்லூரியென்றால் பணம் வசூலிப்பதில் தப்பில்லை. (அமெரிக்காவில் இதுதான் வழக்கம்). ஃப்ரீ சீட்டுகளை அரசுக் கல்லூரிகளிலும், பணம் கொடுக்கும் சீட்டுகளைத் தனியார் கல்லூரிகளிலும் பிரித்து, எவ்வளவு பணம் என்பதை ஒரு தாட்சண்ணியமற்ற குழு பரிந்துரைக்க, எல்லா மாணவர்களிடமும் ஒரே தொகையை வாங்குவது தான் ஆரோக்கியம். அவர்களுக்குக் கல்லூரியிலேயே நூலகம், உணவகம், சோதனைச் சாலை இவைகளில் சின்னச் சின்ன வேலைகள் கொடுத்து சம்பாதிக்க வாய்ப்புத் தரலாம். இறுதியில் எல்லா பொறியியல் கல்லூரிகளையும் தன்மயமாக்குவது (ஆட்டொனமஸ்) மிகவும் முக்கியம்.

சில தரமான கல்லூரிகளில் கம்ப்யூட்டர் வசதிகள் போதுமானதாகவே இருக்கின்றன. நிறைய டெர்மினல்கள், நெட்வொர்க், சர்வர் ஒர்க் ஸ்டேஷன் என்று பெருமையுடன் காட்டினார்கள். வல்லம் கல்லூரி இதில் முதலிடம் வகிக்கிறது. ஆனால் உண்மையாக மாணவர்களை கை வைக்க அனுமதிக்கிறார்களா என்பதை என் இரண்டு மணி நேர விஜயத்தில் அறிந்து கொள்ள இயலவில்லை. விரிவுரையாளர்களின் தரத்தைப் பற்றியும் கொஞ்சம் கவலையாக இருக்கிறது.

காரணம் இந்தக் கல்லூரிகள் கிராமப்புறங்களில் அமைந்திருப்பதும் சம்பளப் பற்றாக்குறையும்தான். என்ன, என்னவோ டி.எஸ்.பி., ந்யுரல் நெட்வொர்க்ஸ், ஆர்ட்டிபிஷியல் இன்டெலிஜென்ஸ் என்றெல்லாம் கித்தாப்பான எலக்டிவ்ஸை வைத்து விட்டு, மாணவர்கள் ஆர்வத்துடன் தேர்ந்தெடுக்க, கற்றுத்தர ஆளில்லாமல் சோகாக்கிறார்கள்.

சிலபஸ் என்னும் பாடத் திட்டம் பாரதிதாசனிலும் சென்னை பல்கலைக்கழகத்திலும் மதுரை காமராஜிலும் பிற்பட்டதாக இருக்கிறது. அண்ணா பல்கலைக்கழகம் விதிவிலக்கு. மற்றவைகளில் இன்னும் மாணவர்கள் பேசிக், கோபால், ஃபார்ட்ரான் இவற்றையே கட்டிக் கொண்டு அழுகிறார்கள்! உலகமே ஸி மற்றும் ஸி ப்ளஸ் ப்ளஸ் மொழியில் இயங்கிக் கொண்டிருக்கிறது. ஸி ப்ளஸ் ப்ளஸ் மொழியே இன்னும் ஐந்து வருஷம்தான் தாங்கும். புதிதாக ஜாவா என்கிற மொழி ஆட்சியைப் பறிக்கும் என்று இப்போதே பரபரப்பாக பேசப்படுகிறது. இந்த நிலையைக் குறிப்பிட்டுக் கேட்டால், பாடத்திட்டத்தைத் திருத்தும் கமிட்டி இன்னும் கூடவில்லை என்கிறார்கள். கூடினாலும் கேக்கும் பிஸ்கட்டும் சாப்பிட்டுவிட்டு அடுத்த கூட்டத்துக்கு ஒத்திப் போட்டு விடுகிறார்கள் என்றும் தெரிகிறது!

இதற்கு நிவாரணம் கல்லூரிகளுக்குச் சுயாட்சி நிலை கொடுத்து, பாடத்திட்டத்தை அமைப்பதிலும் சுதந்தரம் அளிப்பதே. திருச்சி ஜோசப், சென்னை லயோலா போன்றவற்றில் இந்த ஏற்பாடு உள்ளது. ஆர்ஈஸி, ஐஐடிக்களும் உதாரணம். பொறியியல் மாணவர்களுக்கு நான் திரும்பத் திரும்பச் சொல்லும் அறிவுரைகள் இவை :

உங்கள் பெற்றோர் நிறைய பணம் கொடுத்து சேர்த்திருக்கிறார்கள். அவர்களுக்கு நீங்கள் செய்ய வேண்டிய கைம்மாறு 'அர்ரியர்ஸ்' வைக்காமல் பாஸ் பண்ணி நான்கு வருஷத்தில் வெளியே வருவது. ப்ராஜெக்ட் பெரிசாக எடுத்துக் கொள்ளாமல் குறிப்பிட்ட கால கெடுவுக்குள் முடிக்கும் படியாக எடுத்துக் கொள்வது. அதை ஓரிரண்டு பேருக்கு மேல் அல்லாமல் தெளிவாக திட்டமிட்டுச் செய்வது.

சிலபஸில் இருக்கிறதோ இல்லையோ, 'ஸி' மொழி, யுனிக்ஸ், 'ஊப்ஸ்' என்னும் 'ஆப்ஜெக்ட் ஓரியண்டட் ப்ரோக்ராமிங், 'டேட்டா கம்யுனிகேஷன், டி.எஸ்.பி., ஒரு முக்கியமான 'ஆர்டிபிஎம்எஸ்', கேட் (CAD) இவைகளைத் தெரிந்து கொள்வது. இந்தியாவில் எந்த ஊரிலும் வேலைக்குச் செல்லத் தயாராக இருப்பது.

பாடங்களைச் சொந்தமாகப் படித்துக் கொள்வது. ஒவ்வொரு வகுப்பிலும் துடியாக இருப்பவளை, 'அம்மா, தாயே' என்று கெஞ்சி, பாடம் எடுக்கச் சொல்வது! (மீண்டும் அடுத்த வாரம்)

# இந்திர

## 12. மருத்துவரின் சித்து

உடல் முழுக்கக் கம்பளத்தால் போர்த்திய படி வந்து நின்ற உருவத்தைக் கண்டு அலறி விட்ட பணிப்பெண்களைத் தொடர்ந்து வாயிலை நோக்கித் திரும்பிய இளவரசியும் திடுக்கிடத்தான் செய்தாள். தொடர்ந்து அந்த உருவம், கம்பளத்தை முன்புறம் இணைத்திருந்த கயிறுகளை அறுத்து, அதைச் சுழற்றி ஒருபுற மாக எறிந்து, தன்னை யாரென்று காட்டிக் கொண்டதால் அவளது திகைப்பு வியப்பாக மாறியது. அவளிடமிருந்து "யுவான்" என்ற அழைப்பு வியப்புடன் வெளிவந்தது.

அதே சமயத்தில், பணிப்பெண்களின் அலற லைக் கேட்டு, பின்புறத்து மூலிகைத் தோட்டத் திலிருந்து விரைந்து உள்ளே நுழைந்த மருத்து வரின் முகத்தில் யுவானைக் கண்டதும் சற்றுக் கடுமையே பரவியது. "யுவான், உன்னை முதல் ஜாமம் முடிந்த பிறகுதானே வரவேண்டும் என்று கூறியிருந்தேன்" என்றார் மருத்துவர்.

"மன்னிக்க வேண்டும் மருத்துவரே, முதல் ஜாமம் முடியும்வரை காத்திருக்க அவகாச மில்லை. உங்கள் உத்தரவுக்காகத்தான் இத் தனை நேரம் தாமதித்தேன். அந்தப் போலிக் காங்கேயன் சோழ நாட்டிலிருந்து போசள வீரர் களை அழைத்துக் கொண்டு உத்தமபாளையத் தைத் தாக்கச் சென்றிருக்கிறான். சிங்கணனுக் கும் போர் துவங்கி விடலாமென்று செய்தி யனுப்பியிருக்கிறான்'' என்றான் படபட வென்று.

மருத்துவர் முகத்திலிருந்த கடுமை மறைந்து, நிதானம் பரவியது. ஆனால் அவரது சொற் களில் மட்டும் விஷமம் ஒலித்தது. ''நான் உன்னை மன்னிப்பதிருக்கட்டும் யுவான். முதலில் அதோ வருகிறார்களே அவர்கள் மன்னிக்கிறார்களா என்று சற்று திரும்பிப் பார்'' என்றார் மருத்துவர்.

சட்டென்று திரும்பிய யுவான் போசள வீரர் மூவர் அதிவேகமாக வாட்களை உருவிய படி உள்ளே நுழைவதைக் கண்டான். உள்ளே நுழைந்த வீரர்களும் அறைவாயிலில் நின்ற யுவானைக் கண்டு ஒருகணம் திகைத்தார்கள். கரங்களைக் குறுக்கே நீட்டி உடன் வந்த வீரர் இருவரையும் நடுவிலிருந்த வீரன் தடுத்தான்.

"வீரர்களே, இவன் யாங்சின். இடைப்பாடி நாட்டுக் கோட்டையி லிருந்து எப்படியோ தப்பி இங்கு வந்திருக்கி றான். மிகவும் அபாய மானவன். முடிந்தால் அவனை உயிருடன் பிடிக்கலாம். இல் லையெனில் கொன்று விடத் தயங்க வேண்டாம்'' என்று மற்ற இரு வீரர்களை எச்சரித்த அந்த வீரனின் விழிகள் யுவானின் மஞ்சள் முகத்தையும் கழுத் திலிருந்து தொங்கிய அந்தப் பதக்கத்தையும் வெறித்தன.



அடுத்து அந்த வீரர்கள் வாட்களை நீட்டியப் படி ஒவ்வொரு அடியாக யுவானை நெருங்க முற்பட்டு சற்று அருகில் வந்ததும் வேகமாகப் பாயவும் செய்தார்கள். சரேலென்று சுழன்று, பக்கவாட்டில் யுவான் ஒதுங்கி விட்டதால், பாய்ந்த வேகத்தில் அறைக்குள் நுழைந்து விட்ட வீரர்கள் மீண்டும் யுவானை நோக்கித் திரும்பவும், யுவானுடைய தோளின் பின்புற மிருந்த அந்த சீன்த்துவாள் அவன் கரத்தில் தோன்றவும் சரியாயிருந்தது.

மீண்டும் அலறுவதற்காக வாயைத் திறந்த பணிப்பெண்கள் யுவானின் இடது கரம் உயர்ந்து தங்களை நோக்கி நீண்டு எச்சரித்த தால் திறந்த வாய் திறந்தபடியே நின்று விட் டனர். எதிரில் நடப்பவற்றை, இளவரசி ஒன்றும் விளங்காமல் திகைப்புடன் வெறித்துக் கொண்டிருக்க, போசள வீரர் மூவரும் யுவானை நோக்கிப் பாய்ந்து விட் டார்கள். இம்முறை யுவான் நின்ற இடத்திலிருந்து விலக முயற்சி செய்யவில்லை. அவன் வாள் பிடித்த



# அருள்வாக்கு

**த**மிழ்நாட்டில் ஒருத்தனுக்கு இலவசமாகச் சாப்பாடு போடுகிற இடத்துக்கு ''சத்திரம்'' என்று பேர் சொல்கிறோம். வடக்கே போனால், சத்திரம் என்று சொல்லமாட்டார்கள். ''தரம் சாலா'' என்பார்கள். ''தர்ம சாலை'' என்பதன் திரிபு அது. இங்கே தக்ஷிணத்தில் மட்டும் ஏன் சத்திரம் என்கிறார்கள்? சத்திரம் என்றால் என்ன? ''ஸத்ரம்'' என்பதுதான் 'சத்திரம்' என்றாயிருக்கிறது. ஸத்ரம் என்பது ஒரு வகை யாகத்தின் பெயர். அந்த யாகத்திற்கும் மற்ற யாகங்களுக்கும் என்ன வித்தியாசம் என்றால் மற்ற யாகங் களில் யஜமானன் என்கிற ஒருவன், தன் திரவியத்தைச் செலவு செய்து, தக்ஷிணை கொடுத்து, யாகம் பண்ணுகிறான்; ரித்விக்குகள் என்ற பிராம்மணர்கள் (புரோகிதர்கள்) யஜமானிடம் தக்ஷிணை வாங்கிக் கொண்டு அவனுக்காக யக்ஞத்தை நடத்தித் தருகிறார்கள். ஸத்ர யாகங்களில் மட்டும் யாகம் பண்ணும் அத்தனை பேருமே யஜமானர்கள். ஒரு யக்ஞத்தினால் லோக க்ஷேமமும், அதில் கலந்து கொள்கிற எல்லோருக்கும் சித்த சுத்தியும், அதைத் தரிசிப்பவர்களுக்குக் கூட நன்மையும் ஏற்படு கின்றனவென்றாலும், இதனால் விசேஷமாகப் புண்ணியம் அடைவது யஜ மானன்தான். ஸத்ர யாகங்களில் ரித்விக்குகளே யஜமானர்களாக இருப்பதால், அத்தனை பேருக்கும் ஸமமான புண்ணியம். இந்த யக்ஞம் தன்னுடையது என்ற உரிமை எல்லோருக்கும் இருக்கிற ஸோஷலிஸ யக்ஞம் இது. இதை வைத்தே, எவரானாலும் உரிமையோடு வந்து, யஜமானர்கள் மாதிரி வயிறாரச் சாப்பிட்டுப் போகிற இடத்துக்கு ''சத்திரம்'' என்று பேர் வந்து விட்டது. இந்த வார்த்தையிலிருந்து, சத்திரத்தில் சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போடுகிறவன் தன்னை உயர்வாக நினைக்க வில்லை என்ற உயர்ந்த பண்பும் தெரிகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கரம் உயர்ந்து, ஏக காலத்தில் மூன்று வாட்களையும் தடுத்தது. கண்ணிமைக்கும் நேரமே அந்த வாட்களைத் தடுத்த யுவானின் வாள், சரேலென்று ஒருமுறை சுழன்று பக்க வாட்டில் ஒதுங்கிப் பின்புறமாகச் சென்று, மீண்டும் முன்னால் நீண்டு நடுவிலிருந்த வீரன் மார்பை ஊடுருவி மீண்டது. குருதியில் நனைந்து வெளியேறிய அந்த வாள், கூரையை நோக்கி உயர்ந்தது. அது மீண்டும் கீழிறங்கிய போது இடது புறத்திலிருந்த வீரனை எதிர் வீச்சாகத் தாக்கியது. அந்தத் தாக்குதலிலிருந்து தப்ப அந்த வீரன் வலது புறம் திரும்பவும், யுவானின் வாள் மீண்டும் பின்வாங்கி அவன் வலப்புறத்து விலாவில் பாய்ந்தது. இருவருக்குமிடையே சரேலென்று புகுந்த யுவானின் வலது கால் உயர்ந்து, நேர் பின்புறத்திற்கு வந்து விட்ட வீரனின் வாள் பிடித்த கரத்தை அதிவேகத்துடன் தாக்கியது. அந்த வீரனின் வாள் அவன் கரத்திலிருந்து மேல் நோக்கிப் பறந்து மேற்கூரையில் செருகி நின்றது!

சண்டை துவங்கிய இரண்டு மூன்று கணங்களுக்குள் இருவரை வீழ்த்தி விட்டு தன்னுடைய வாளையும் பறக்க விட்டு விட்ட சீனனை திக்பிரமையுடன் பார்த்த அந்த வீரன், சட்டென்று திரும்பி பின்புற வாயிலை நோக்கி ஓட ஆரம்பித்தான். பின்புறத்து வாயிலில் நின்று, நடந்த சிறு சண்டையையும், யுவானின் சீனத்துப் போர் முறையையும் ரசித்துக் கொண்டிருந்த மருத்துவர், எஞ்சிய வீரன் தானிருந்த வாயிலை நோக்கி ஓடி வருவதைக் கண்டதும் வழி விட்டு சற்று ஒதுங்கினார். ஆனால் அந்த வீரன் அவரைக் கடக்கு முன்பு, அவர் கரம் அந்த வீரனின் பிடரியில் பதிந்தது. அந்த வீரன் ஒரு துள்ளலுடன் குப்புறத் தரையில் விழுந்து உருண்டான். விழிகள் குடிலின் பின்புறத்து இருளில் வெறித்திருக்க, அதன் பிறகு அவனிடம் அசைவேதும் தெரியவில்லை.

மருத்துவர் அப்படியே திரும்பி தோட்டத்தின் இருளை நோக்கி இருமுறை கரங்களைத் தட்டினார். சற்று நேரத்தில் இருளிலிருந்து மருத்துவரின் சீடர்கள் இருவர் வந்தனர். கீழே கிடந்தவனைச் சுட்டிக்காட்டிய மருத்துவர், "இவனை நமது இல்லத்திற்குச் சற்றுத் தள்ளி ஓரமாகக் கிடத்தி விடுங்கள். இவன் உயிருடன் தானிருக்கிறான். ஆனால் எதற்கும் பயனற்றவனாகி விட்டான். உள்ளே கிடப்பவர்களை அப்புறப்படுத்தி தோட்டத்தில் புதைத்து விடுங்கள்'' என்றார்.

பணிப்பெண்களை நோக்கித் திரும்பியவர், "நீங்கள் இளவரசியை வேறு அறைக்கு அழைத்துச் சென்று, அவருக்காகத் தயாரித்து வைத்திருக்கும் மூலிகை கலந்த உணவை அளித்து விட்டு, மீண்டும் முன்னறைக்கு அழைத்து வாருங்கள். ஒரு நாழிகையில் அவர் பலவீனம் பறந்து விடும். யுவான், நீ என்னுடன் வா. முன்னறைக்குச் சென்று பேசலாம்'' என்றார். அவர் உத்தரவுகள் மளமளவென்று நிறைவேறத் தொடங்கின.

முன்னறைக்கு வந்து சேர்ந்ததும் மருத்துவரின் பார்வை யுவானை ஒருமுறை அலசியது.

"என்ன மருத்துவரே, அப்படிப் பார்க்கிறீர்கள்?" என்றான் யுவான்.

"யுவான், உன் தந்தையின் சாயலும் நடையும் அப்படியே உன்னிடமிருக்கின்றன. ஆனால் அவரிடமில்லாதது ஒன்றும் சேர்ந்திருக்கிறது."

"என்ன அது?"

"வேகமும் படபடப்பும் உன்னிடம் தெரிகிறது. மலையே பெயர்ந்தாலும் யாங்சின் பரம நிதானமாகத்தான் செயல்படுவார்."

"மருத்துவரே! சேமகேசி போசள வீரர்களிடம் கூறியதைக் கேட்டபின்பு நான் எத்தனை நேரம் பொறுத்திருக்க முடியும்? பாண்டிய இளவலுக்கும் படைத்தலைவருக்கும் செய்தி கூற வேண்டாமா?" என்றான் யுவான் சற்று வேகத்துடன்.

மருத்துவர் மெள்ள நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர்?" யுவானின் கேள்வியில் அதே வேகமிருந்தது.

"யுவான்! பாண்டியருக்கு நீ செய்தி அறிவித்துத்தான் அவர்கள் நிலைமையைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. இளவரசியாரும் அந்தப் போலிக் காங்கேயனும் உத்தமபாளையத்திலிருந்து மறைந்து விட்டார்கள் என்றதும் உன்னை படைத் தலைவர் அனுப்பி வைத்திருப்பது பாதுகாப்புக்காகத்தான். அதன் பிறகு உன்னிடமிருந்து வரும் செய்திக்காகக் கையைக் கட்டிக் கொண்டு காத்திருப்பார் என்று எண்ணுகிறாயா? அல்லது கொங்கு நாட்டு மக்கள் தங்கள் இளவரசியைக் காக்கத் திறனற்றவர்கள் என்று எண்ணுகிறாயா?" – மருத்துவரின் கேள்விகள் சரமாரியாக வந்தன.

அவரது கேள்விகளில் உண்மை நிரம்பிக் கிடந்ததை உணர்ந்த யுவான் மௌனம் சாதித்தான்.

"யுவான், கொங்கு நாட்டு மக்கள் படைபலத்தில் குறைந்தவர்களே தவிர, கோழைகளல்ல. இருபத்து நான்கு உபநாடுகளிலும் கொங்கு மண்ணை போசளரிடமிருந்து விடுவிக்கத் துடிக்கும் வீரர்கள் இருக்கிறார்கள். தலைமை தாங்கி வழி நடத்த சோழ மன்னரோ, பாண்டியரோ முன்வர வேண்டும். அவ்வளவு தான்."

அவர் கூறியதன் பொருள் சித்தத்தில் உறைக்கவே சட்டென்று நிமிர்ந்தான் யுவான். "அப்படியானால்..."

"ஆம் யுவான், முப்பதாயிரம் வீரர்களைக் கொண்ட படை கொங்கு நாட்டின் முக்கிய இடங்களிலும் கோட்டைகளிலும் காத்துக் கிடக்கிறது. பாதிப் பேர் மலைகளிலும் வனங்களிலுமிருக்கிறார்கள். காலை முதல் நீ இந்த இல்லத்தின் வாசலில் கண்ட மக்கள் கூட்டத்தில் பாதிப் பேர் பல இடங்களிலிருந்து நிலைமையை அறிவிக்க வந்தவர்கள். நானும் என்

சீடர்களை மூலிகைகள் பறித்து வர வெவ்வேறு இடங்களுக்கு அனுப்புவதுண்டு" - மருத்துவரின் வார்த்தைகளைத் தொடர்ந்து ஒரு முறுவலும் அவர் முகத்தில் படர்ந்தது.

அர்த்தபுஷ்டியுடன் அவரது முகத்தில் படர்ந்த முறுவலைக் கவனித்த யுவானின் மனத்தில் சந்தேகம் பரவியது.

அவன் சந்தேகத்தை யூகித்து விட்ட மருத்துவர் பலமாக நகைத்தபடியே, "நீ சந்தேகிப்பது போல் இந்தப் படையின் தலைவன் நானல்ல யுவான். இவர்களைத் தொலைதூரத்திலிருந்து இயக்குபவர் ஒருவர் இருக்கிறார். அவர் கட்டளைகளை நிறைவேற்ற வீரர் தலைவன் ஒருவனுமிருக்கிறான். என் கடமை வெறும் செய்திகளை அனுப்புவது மட்டுமே" என்றார்.

"யார் உங்களை இயக்குபவர்?" யுவானின் கேள்வியில் இன்னும் சந்தேகம் ஒலித்தது.

மருத்துவரின் முகத்தில் விஷமம் சொட்டியது. "படைத் தலைவர் கிருஷ்ணமல்லர். பாண்டிய நாட்டில் படைகள்ளத் திரட்ட தேவைப்பட்ட அவகாசத்தில் இங்கும் ஒரு படையை உருவாக்கியிருக்கிறார். போதாக்குறைக்கு தஞ்சைத் துறவியாரும் ஏராளமான சோழ வீரர்களை அனுப்பி வைத்திருக்கிறார். இந்த வீரர்களுக்குத் தலைமைதாங்குபவன்..." என்று சற்று நிறுத்திய மருத்துவர் "சூரிய காங்கேயன்" என்றார்.

யுவானின் சிறிய மஞ்சள் விழிகள் வியப்பில் விரிந்தன.

"ஆம் யுவான். சூரிய காங்கேயன், கொங்கு மன்னரின் மெய்க்காவலன், மன்னரின் ஓலையுடன் பாண்டியர் படைத்தலைவரிடம் சென்றபோது, அவன் வழிமறிக்கப்பட்டு, அந்த சேமகேசியால் கத்தியால் குத்தப்பட்டு காவிரியில் எறியப்பட்டது என்னவோ உண்மைதான். காவிரியின் சுழலில் காயங்களுடன் விழுந்தவன் மடிந்து விட்டதாகவே சேமகேசி எண்ணினான். ஆனால் சூரிய காங்கேயன் காவிரியின் மீன்களுக்கும் நீந்தக் கற்றுக் கொடுப்பவன்! காயங்களுடன் கரையேறியவனை என் சீடர்கள் என்னிடம் சேர்த்தார்கள். ஆண்டவன் அருளினாலும், எனக்குக் கொஞ்சம் மருத்துவம் தெரியுமென்பதாலும் அவன் உயிர் பிழைத்து விடுதலைப் படையின் தலைவனாக உலவுகிறான்" என்றார் மருத்துவர்.

உள்ளறையின் வாயிலிலிருந்து இளவரசியின் குரல் வியப்புடன் ஒலித்தது : "அப்படியானால் சூரிய காங்கேயன் இறக்கவில்லையா? இப்போது எங்கிருக்கிறார்?"

இளவரசியின் மலர்விழி கள் முழுவதுமாக மலர்ந்து வியப்பை வெளிப்படுத்தின. மருத்துவர் "உண்மைதான் இளவரசி, காங்கேயன் உயிருடன் தான் இருக்கிறான். அது மட்டுமல்ல. நாளை உங்களை தஞ்சைக்கு துறவியாரிடம் அழைத்துச் செல்லப் போவதும் அவன்தான்" என்றார்.

"என்ன? என் தந்தையைக் காணாமல் நான் நாளை தஞ்சை செல்ல வேண்டுமா?" - இளவரசியின் குரலில் ஏக்கமும் கோபமும் கலந்து ஒலித்தன. அவள் விழிகள் பரிதாபத்துடன் மருத்துவரை நோக்கின.

மருத்துவரின் குரல் திடமாக ஒலித்தது. "ஆம் இளவரசி, போர் துவங்க இன்னும் நான்கு தினங்களே இருக்கின்றன. அதற்குள் தங்களைப் பாதுகாப்புடன் சோழ நாட்டுக்கு அனுப்பி விட வேண்டும். இது கிருஷ்ணமல்லரின் உத்தரவு."

கொங்குநாட்டிற்கு மட்டுமின்றி தமிழகத்தின் விடுதலைக்குமான முதல் போர் அறிவிப்பை சர்வசாதாரணமாக வெளியிட்ட மருத்துவர், மேற்கொண்டு ஏதும் கூறாமல் அறையின் மூலைக்குச் சென்று ஓலைகளை எடுத்துப் பரபரவென்று ஏதோ எழுதத் துவங்கினார்.

ஓலைகளை எழுதி முடித்தபின் யுவானை நெருங்கியவர், "யுவான், சாளுக்கிய சேமகேசி கண்ணனூர் சென்று, சிங்கணனிடம் உத்தரவு பெற்ற பின்புதான் சோழ நாட்டிலிருக்கும் போசள வீரர்களைத் திரட்டிக் கொண்டு உத்தமபாளையம் செல்ல முடியும். நீ அதற்குள் தஞ்சைத் துறவியாரிடம் இந்த ஓலைகளைச் சேர்ப்பித்து விடு" என்றார்.

'மருத்துவர் லேசுப்பட்டவரல்ல' என்று எண்ணியபடியே ஓலைகளை வாங்கி மேலும் கீழுமாகப் புரட்டிய யுவான், "மருத்துவரே, என்ன எழுத்து இது? ஒன்றும் புரியவில்லையே" என்றான்.

மருத்துவரின் பதில் உடனே வந்தது. "மருத்துவர்களின் எழுத்து எந்தக் காலத்திலும் இப்படித்தானிருக்கும். உனக்குப் புரியாது. வேண்டியவர்களுக்குத்தான் அது புரியும். நீ புறப்படு."

சற்றுத் தயங்கிய யுவான், "என் தந்தை?" என்றான் சற்று சலனப்பட்ட குரலில்.

"யுவான், யாங்சின்னைப் பற்றி நீ கவலை கொள்ள வேண்டாம். அவருக்கு யார் உதவியும் தேவையில்லை. இந்தப் போர் முடியும் போது நீ மீண்டும் அவரைக் காணலாம். அதுவரையில் சற்றுப் பொறுத்திரு" என்றார் மருத்துவர்.

மருத்துவர் கூறியது எத்தனை உண்மையென்பதை நிரூபித்துக் கொண்டிருந்தார் யாங்சின், இடைப்பாடி நாட்டின் கோட்டையில்.

(தொடரும்)

● நண்பனுக்காக உயிரைக் கொடுப்பது எளிது. ஆனால் உயிரைக் கொடுப்பதற்குரிய நண்பன் கிடைப்பது அரிது.
— கெதே; தகவல் : க. மாரியப்பன்

## 13. சீனத்து இடி முழக்கம்

தமிழ் மண்ணில் அடியெடுத்து வைத்து விட்ட காரணத்தினாலோ, அல்லது தன் சகோதரி பவானியைக் காண வேண்டும் என்ற ஆவலினாலோ, தெற்கு நோக்கிப் பாய்ந்த காவிரியின் நடை பெரும் துள்ளலாகவே இருந்தது. கொங்கு நாட்டிற்கும் போசள நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதியென்பதால் இடைப்பாடி நாடு எனப் பெயர் பெற்று விட்ட அந்த வட கொங்குப் பகுதியில் காவிரியின் கிழக்கில் செழித்த வயல்களும் மேற்கில் அடர்ந்த வனமுமாக இருந்தது. எண்ணற்ற மூலிகைகளுடன், சந்தனமும் தேக்குமாக நிறைந்து கிடந்தாலும் துஷ்ட மிருகங்கள் அதிகம் உலவியதால் அந்த வனப் பகுதியில் மனித சஞ்சாரம் என்பது அறவே அற்றுப் போய், கோரைப் பற்களும் கூர் நகங்களும் வைத்ததே அங்கு சட்டமாக இருந்தது.

அவ்வப் பொழுது ஒலித்த உறுமல்களும், கர்ஜனைகளும் வேடுவர்கள் கூட அங்கு அதிகம் உலவுவதில்லை என்பதை நிரூபித்தன.

ஆனால் இயற்கையின் எந்தச் செல்வத்தையும் விட்டு வைக்க மனிதன் ஒப்புவதில்லையென்பதையும் நிரூபிக்க, காவிரியின் ஓரங்களில் மரங்கள் வெட்டப்பட்டு சாய்ந்து கிடந்தன. வனத்தின் முகப்பில் வெறும் அடிமரங்கள் நின்றன.

மாலைப் பொழுது முற்றி இருள் கவியத் துவங்கு முன்பாகவே கருத்த மேகங்கள் கார்காலம் நெருங்கி விட்டதை அறிவுறுத்தின. தெற்கிலிருந்து வேகமாக வந்து வானை மூடி இருள் கவியச் செய்து விட்டன. துஷ்ட மிருகங்களின் நடமாட்டம் இனி அதிகரித்து விடும் என்று உணர்ந்ததால், மரங்களை வெட்டிக் கொண்டும் அடுக்கிக் கொண்டுமிருந்த பணியாட்களை விரைவில் அக்கரைக்குச் செல்லும்படி போசள வீரர்கள் ஏவிக் கொண்டிருந்தார்கள். பன்னீர் தெளிப்பது போல் தெறிக்கத் தொடங்கிய மழைச் சாரலையும், பெரும் அரக்கன் ஒருவன் வாயைக் குவித்து ஊதுவதுபோல் விட்டு விட்டு வீசத் தொடங்கிய ஊதற்காற்றையும் லட்சியம் செய்யாமல், வெட்டப்பட்ட மரங்களைச் சுமந்த பணியாட்கள், காவிரியின் கரைகளை இணைத்த மரப்பாலத்தின் வழியே நடந்து சற்றுத் தூரத்தில் தெரிந்த இடைப்பாடி நாட்டுக் கோட்டையை நோக்கி விரைந்தனர்.

கோட்டைக் கதவுகளினூடே நுழைந்து முன்புறமிருந்த இரு உயரமான மாளிகைகளையும் கடந்து, பின்புறம் வீரர்கள் அணிவகுப்புக்கென்றே ஏற்பட்ட திடலில் மரங்களைக் கொண்டு சேர்த்து விட்டு, அருகிலிருந்த கூடாரங்களில் ஒதுங்கி நின்றனர்.

அந்தக் கூடாரங்களிலேயே சற்று பெரிதாகவும் நடு நாயகமாகவும் விளங்கிய ஒரு கூடாரத்தின் வாயிலுக்கு நேர் எதிரில் உட்புறமாக இருந்த மரப்பலகையொன்றில் அமர்ந்து, வெளியே திடலில்



இறைந்து கிடந்த மர உருளைகளையும், கூடைகள் போல் செதுக்கப்பட்ட மரங்களையும் வெறித்துப் பார்த்தபடி அமர்ந்திருந்தான் ஒரு மனிதன். அவன் மஞ்சள் முகமும், சிறுத்த விழிகளும், பகரவடிவ மீசையும் அவன் ஒரு சீனன் என்பதைத் தெரிவித்தன. பார்வைக்கு மெலிந்து காணப்பட்டாலும் அவன் தேகம் வைரம் பாய்ந்து இறுகித் தெரிந்தது. அந்த சீனனின் அருகில் நின்று அவனிடம் இரைந்து ஏதோ கூறிக் கொண்டிருந்தான் சற்று படாடோபமான உடையுடன் இன்னொருவன். ஆனால் அந்த சீனனின் பார்வை அந்த மனிதனை நோக்கித் திரும்பியதாகவோ, அவன் கூறுவதை கவனித்ததாகவோ தெரியவில்லை.

தான் கூறியதைக் கேளாமலும் பதிலேதும் கூறாமலும், மரங்களை வெறித்துக் கொண்டிருந்த சீனனின் போக்கு, பக்கத்தில் நின்றவனுக்குப் பெரும் ஆத்திரமேற்படுத்தியிருக்க வேண்டும் என்பது அடுத்து அவன் இரைந்ததிலிருந்து தெரிந்தது.

"யாங்சின், நான் கூறியது உன் செவிகளில் விழுந்ததா இல்லையா?" இரைந்தான் அந்த மனிதன்.

யாங்சின்னின் மஞ்சள் முகமும் சிறிய விழிகளும் அந்த மனிதனை நிதானமாகத் திரும்பி நோக்கின. "என் செவிகளுக்கு இதுவரை பழுதொன்றுமில்லை சிங்கணா" என்ற பதிலும் வெகு அலட்சியமாக வந்தது அவனிடமிருந்து.

போசாளத் தண்ட நாயகனும், பெரும் தந்திரசாலியென்று பெயரெடுத்தவனும், ஏறக்குறைய பாதி தமிழகத்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருந்தவனுமான சிங்கணனுக்குத் தன்னை அந்த சீனன் சர்வ சாதாரணமாகப் பெயர் சொல்லி அழைத்தது இன்னும் ஆத்திரமேற்படுத்தியிருக்க வேண்டும். இன்னும் சற்று உக்கிரமாகவே இரைந்தான் அவன், "நான் கேட்ட கேள்விக்கு இன்னும் உன்னிடமிருந்து பதில் வரவில்லை யாங்சின்!" என்று.

"என்ன கேட்டாய் நீ?" யாங்சின்னின் பதிலும் கேள்வியாகவே வந்தது.

"யந்திரப் பொறிகள் இன்னும் ஒரு திங்களுக்குள் தயாராகி விடுமா என்று கேட்டேன்....."

"ஆகாது..."



யாங்சின்னின் பதில் திட்டமாக வந்தது.

"ஏன் ஆகாது?" சிங்கணன் மீண்டும் இரைந்தான்.

"இவை அரண்மனை உபயோகத்திற்குச் செய்யுப்படும் சாதாரண மரப் பொருட்கள் இல்லை சிங்கணா, அனைத்தும் போர்க்கருவிகள். செய்யும் முறையில் சிறு பிழை ஏற்பட்டாலும் பயன் தராது."

மேற்கொண்டு ஏதோ கூற வந்த சிங்கணன் போசள வீரன் ஒருவன் நனைந்தபடியே ஓடி வருவதைக் கண்டு நிதானித்தான்.

வீரன் சிங்கணனை அடைந்ததும் தலை வணங்கி, "படைத் தலைவரே, உத்தமபாளையத்திலிருந்து முக்கிய சேதியுடன் ஒருவன் தங்களைக் காண வந்திருக்கிறான்" என்றான்.

சிங்கணன் முகத்தில் சிந்தனை படர்ந்து.



''பந்துல தேச்சுக்க எச்சில் வேணும் கிறதுக்காக இப்படி நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு ஒரு நாயை தோள் மேல் வைச்சுக்கிட்டே நீங்க 'பௌல்' பண்றதை ஒத்துக்க மாட்டேன்!''

– கிரிஜா மணாளன்

"சரி, வரச்சொல்" என்று உத்தர விட்டான்.

சற்று நேரத்தில் அரை ஓட்டமாக, நனைந்தபடியே வந்தவன் நீண்ட பயணத்தில் களைத்திருந்தது அவன் முகத்தில் தெரிந்தது. சிங்கணனை வணங்கி நிமிர்ந்தவனின் பார்வை அருகில் அமர்ந்திருந்த யாங்சின்னைக் கண்டதும் ஏதோ பிசாசைக் கண்டவன் போல மருண்டது. அவன் குரலும் குழறியபடி வந்தது. கச்சையிலிருந்து ஓலைக்குழலை எடுக்கச் சென்ற கரமும் திசைமாறி, யாங்சின்னைக் காட்டியது. "இவன்... இவன்" என்று குழறினான் அந்த வீரன்.

அவன் குழப்பத்துக்கும் குழறலுக்கும் காரணம் புரியாத சிங்கணன் முகத்தில் மீண்டும் சினம் ஏறியது. "வீரனே, நீ கூறவந்ததை உடனடியாகக் கூறு" என்று உத்தரவிட்டான்.

அந்த வீரன் குழறியபடியே "பிரபு. இவனை இரு தினங்களுக்கு முன்பு உத்தமபாளையத்தில் கண்டேன்" என்றவன், யாங்சின்னை சற்று உற்று நோக்கி, "இல்லையில்லை. அவன் இன்னும் இளைஞனாக இருந்தான். அவன் கழுத்தில் கடல் நாகம் பொறித்த பதக்கம் ஒன்றும் இருந்தது" என்றான்.

யாங்சின்னின் முகத்தில் மெலிதான முறுவல் ஒன்று பிறந்தது. அவன் மஞ்சள் முகமும் சிறு விழிகளும் அந்த வீரனை நோக்கித் திரும்பின.

வெளியே வானத்தில் மேகங்கள் வேகமாக மோதி பளீரென்ற மின்னல்களுடன் பலமாக இடி முழக்கம் செய்யத் தொடங்கின.

"பேச்சு வெளிவரும் வரை ஒரு முட்டாள் அறியப்படுவதில்லை" என்று வடமொழி வாக்கியம் ஒன்று கூறுகிறது. உண்மையே ஆனாலும் தக்க இடத்தில்தான் அதைக் கூற வேண்டும் என்றும் அது கூறுகிறது. உத்தமபாளையத்திலிருந்து வந்த வீரன், உளறிவிட்ட சொற்களின் பொருள் சிங்கணனுக்கு ஏதும் விளங்கவில்லையென்றாலும் யாங்சின்னுக்குப் புரிந்துவிட்டதால் அதுவரை லேசாக வாடிக் கிடந்த அவன் முகத்தில் ஒரு மலர்ச்சியும் இதழ்களில் ஒரு முறுவலும் நெளியத் தொடங்கின. வந்த வீரனை சிங்கணன் இழுத்துச் செல்லாத குறையாக மாளிகைக்கு அழைத்துச் சென்று விட்ட பிறகும் அப்படியே அமர்ந்திருந்த யாங்சின்னின் முகத்தில் இலேசான சிந்தனையும் படர்ந்தது.

சட்டென்று ஏதோ தீர்மானத்திற்கு வந்த யாங்சின், சற்றுத் தள்ளியிருந்த கூடாரங்களில் மழைக்கு அஞ்சி ஒதுங்கி நின்ற தச்சர்களை, கைகளைத் தட்டி அழைத்தான். அவர்களால் செய்யப்பட்ட மர உருளைகளையும் இன்னும் சில மரப் பொருட்களையும் கொண்டு வரப் பணித்தவன், அவற்றில் சிலவற்றை மட்டும் தேர்ந்தெடுத்து உளியையும் சுத்தியலையும் கொண்டு செதுக்க ஆரம்பித்தான். இன்னும் வேகத்துடன் தொடர்ந்த மழையையோ, இரவு ஏறத் தொடங்கிவிட்டதையோ அவன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. நெடு நேரம் நின்றுவிட்டு தச்சர்கள் மெள்ள கலைந்து சென்ற பின்பும் சீனனின் கரத்திலிருந்த சுத்தியலின் சப்தம் ஓயவில்லை. கூடாரத்தின் வாசல் புறம், மழைச் சாரல் எட்டாதவாறு பொருத்தப்பட்டிருந்த தீப்பந்தத்தின் ஒளியில் அவன் பணி தொடர்ந்தது.

கதிரவன் உதிக்கும் நேரம் வரையிலும் கூட மழை ஓயவில்லை. மேகங்கள் கலைய மனமின்றி அங்கேயே நிலைத்தன. முற்றிலும் இருள் விலகாத அடுத்த தினத்தின் காலைப் பொழு

தில் விழித்தெழுந்து வெளியே வந்த தச்சர்கள் பிரமித்து நின்றார்கள்.

யாங்சின்னின் கூடார வாயிலில் முழு வடிவில் அமைக்கப்பட்ட யந்திரப் பொறி ஒன்று நின்றிருந்தது. பெரும் வில் போன்ற அதன் அமைப்பையும் உச்சியில் அமைக்கப்பட்டிருந்த மரக்கூடையின் அகலத்தையும் இணைப்புக்களில் பயங்கரமாகத் தெரிந்த பெரும் மரப் பற்களையும் கண்டு ஆச்சர்யத்தில் உறைந்து நின்ற தச்சர்கள், யாங்சின்னை ஏதோ பிசாசைப் பார்ப்பது போலப் பார்த்தார்கள். அவர்களில் இருவர் சிங்கணனுக்குச் சேதி சொல்ல மழையில் நனைந்தபடியே மாளிகையை நோக்கி ஓடவும் செய்தார்கள்.

சற்று நேரத்தில் அரை ஓட்டமாக வந்து நின்ற சிங்கணன் தன் கண்ணெதிரில் எழுந்து நின்ற காட்சியை நம்ப இயலாதவன் போல் வெறித்து நோக்கினான். அவன் முகத்தில் திகைப்பும், ஓரளவு அச்சமும் சந்தேகமும் கூடத் தோன்றின.

சிங்கணனின் பின்புறமிருந்து ஒலித்தது யாங்சின்னின் குரல் : "சிங்கணா, இது தமிழகத்தின் இடங்கணிப் பொறி. இளைய பாண்டியர் வடிவமைத்தவற்றில் சில மாறுதல்களைச் செய்திருக்கிறேன். இதை நகர்த்துவதற்கு உரிய சக்கரங்களும், அச்சும், அந்த எறிகூடையை வில்லுடன் இணைக்கும் நாணும் மட்டுமே பொருத்த வேண்டும்."

பிரமிப்பு நிரம்பிய பார்வையை யாங்சின்னின் மீது வீசிய சிங்கணன், "கல்யாணபுரத்திலிருந்து அச்சுக்களும் நாண் பூட்ட மணிக் கயிறுகளும் கொண்டுவர இப்பொழுதே உத்தரவிடுகிறேன் யாங்சின்" என்றான்.

கருங்கல்லின் மீது வரிசையாக குறுவாட்களை எறிந்தது போல நகைத்தான் யாங்சின்.

"ஏன் நகைக்கிறாய்?" என்ற சிங்கணனின் கேள்வியில் இலேசான அச்சமிருந்தது.

நகைப்பதை நிறுத்திய யாங்சின்னின் சிறு விழிகளில் ஏளனம் வழிந்தது. "சிங்கணா, சாளுக்கிய கல்யாணபுரத்திலிருந்து வரும் அச்சுக்களைப் பொருத்த இவை பவனி ரதங்கள் அல்ல. ஐம்பதுக்கும் மேற்பட்ட பெரும் எரியம்புகளையும், பாறைகளையும் வீசவல்லவை. நூற்றுக் கணக்கில் வீரர்களையும், பெரும் கோட்டைக் கதவுகளையும் நொடியில் அழிக்க வல்லவை. நீ கொண்டுவரக்கூடிய அச்சு இதன் முதல் சுழற்சியிலேயே முறிந்து விடும்."

"பின் இந்த யந்திரத்திற்கான அச்சு எங்கு கிடைக்கும்?" சிங்கணனின் கேள்வியில் குழப்பம் ஒலித்தது.

யாங்சின்னின் பதில் நிதானமாக வந்தது: "பெரும் ஆலயத் தேர்களுக்கும், இது போன்ற யந்திரப் பொறிகளுக்கும் முறிபடாத அச்சுக்



## அருள்வாக்கு

நடைமுறை உலகில் மநுஷ்யர்கள் எல்லோரும் ''பணமே வேண்டாம்'' என்று இருப்பது சாத்தியமே இல்லை. ''பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை'' என்று திருவள்ளுவரே சொல்லிவிட்டார். ஆனாலும் அவசியமில்லாமல் ஏராளமாகச் சம்பாதிப்பதும் அவசியமில்லாமல் விரயமாகச் செலவழிப்பதும், அல்லது பூதம் காத்த மாதிரி பாங்கில் மூட்டை மூட்டையாகப் போட்டு வைப்பதும் ரொம்பப் பிசகு. போதும் என்ற மனசோடு சம்பாதனம் செய்து, அதைக் கவனத்துடன் செலவழிக்க வேண்டும். சொந்தச் செலவுகளை அதமபட்சமாக்கிக் கொண்டு, தான தர்மங்களுக்கு முடிந்த மட்டும் செலவழிக்க வேண்டும். செலவுகளுக்குள் நமக்கு என்று இல்லாமல் தானமாகச் செலவழிப்பதுதான் உண்மையில் நமக்கு ''வரவு''. இதனால் புண்ணிய வரவு கிடைக்கிறது. தனக்கென்று செலவழிப்பதால் பெற முடியாத ஆத்ம சிரேயஸை இதனாலேயே பெறுகிறோம். சொந்த விஷயங்களில் ''கணக்காயிருந்தால்'' ஏழை எளியவர்களாலும் கூட ஒரு பைசாவாவது தர்மம் பண்ணமுடியும். அப்படி அவர்கள் கொடுக்கிற பைசாவை ஈசுவரன் கோடியாக மதித்து அநுக்கிரகம் செய்வான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



## இவர் விட்ட சவால்!

புதிதாக ராகம் கண்டுபிடித்திருப்பதாக வித்வான்கள் கூறியிருக்கிறார்கள். இப்போது உமையாள்புரம் சிவராமன் சவால் விட்டிருக்கிறார்: நாராயணி என்ற தாளத்தைப் புதிதாக கண்டுபிடித்து வாசிக்கப்போகிறாராம்!

—எஸ்.வி.என்.

---

களை ஒரே வார்ப்பில் உருவாக்கும் கலைஞர்கள் சோழ நாட்டில் இருக்கிறார்கள்."

"சோழ நாட்டில் எங்கிருக்கிறார்கள்?" சிங்கணனின் குரலில் ஆவல் அபரிமிதமாகத் தொனித்தது.

"குடந்தைக்குத் தெற்கே சேங்காலிபுரம் என்ற நகர் இருக்கிறது. இத்தகைய அச்சுக்களை செய்வதைக் கலையாகப் பயின்றவர்கள் அங்கிருக்கிறார்கள். அங்கிருந்து அச்சுக்கள் கொண்டு வர இயலுமா உன்னால்?"

சோழ நாட்டில் தனக்கிருக்கும் அதிகாரத்தையும் அங்கிருக்கும் மூவாயிரம் போசள வீரர்களையும் எண்ணியவன் மனத்தில் நம்பிக்கை பிறந்தது. யாங்சின்னை ஏறிட்டவன், "நீ கூறிய இடத்திலிருந்து இன்னும் பத்து தினங்களுக்குள் அச்சுக்களை வரவழைக்கிறேன்" என்றான்.

யாங்சின்னிடமிருந்து அடுத்த கேள்வி வந்தது: "சிங்கணா, இந்த யந்திர வீரர்களுக்கு நாண் பூட்ட என்ன செய்யப் போகிறாய்?"

"அதற்கும் தனிப்படத் தயாரிக்கும் இடம் ஏதேனும் இருக்கிறதா? சொல். அதையும் வரவழைக்கிறேன்" என்றான் சிங்கணன்.

மீண்டும் நகைத்த யாங்சின், "சிங்கணா, நாண் பூட்டுவதற்கான மணிக்கயிறுகள் கோட்டைக்குள்ளே, இங்கேயே இருக்கின்றன. இதோ பார்.... என்று கூறிவிட்டு கூடாரத்தினுள் தயாராக வைத்திருந்த நல்ல முறுக்கேறிய கயிறு ஒன்றை எடுத்து யந்திரப் பொறியிலும் மரக் கூடையிலும் சேர்த்து பக்குவமாகச் சுழற்றி மாட்டினான். அடுத்து தச்சர் நால்வரை அழைத்து வாட்களைத் தீட்டுவதற்காகத் திடலின் ஓரத்திலிருந்த பெரும் பாறையொன்றையும் எடுத்து மரக்கூடையில் வைக்க உத்தர விட்டான்.

பொறியின் மறு பக்கமிருந்த விசையை இரண்டு சுற்றுக்கள் சுழற்றியதும், கயிறு முறுக்கேறி, அந்த மரக்கூடையை விசையுடன், உயர்த்தி பாறையை ஆகாயத்தில் எறிந்தது. அதிவேகத்துடன் பறந்து, திடலையும் கடந்த பாறை, சுற்றி வளைத்த கோட்டை மதிலின் ஒரு பகுதியை உடைக்கவும் செய்தது! அதே நேரத்தில் பொறியிலிருந்த மணிக்கயிறும் அறுந்து விழுந்து தொங்கியது!

சிதிலமாகிவிட்ட கோட்டை மதிலையும், அதற்குக் காரணமான யந்திரப் பொறியையும் கண்டு பிரமித்துப் போய் சிலையாகவே நின்ற சிங்கணனுக்கு, இதைப் போன்ற பல பொறிகளுக்கான மரங்கள் திடலில் கிடப்பதும் அவை முழுதும் வடிவமைக்கப்பட்டால் ஆயிரம் வீரர்கள் செய்யும் பணியை அவை செய்து விடும் என்பதும் புரிந்தது. இவற்றைக் கொண்டு பாண்டியரை மட்டுமின்றி, கிழக்கில் அச்சுறுத்திக் கொண்டிருக்கும் காகதீய மன்னனையும், காஞ்சியின் விஜயகண்ட கோபாலனையும் கூட அடக்கி விடலாம் என்றும் தீர்மானித்தான் சிங்கணன்.

(தொடரும்)

---

கருத்து: சீர்காழி வி. ரேவதி



# சுஜாதா பக்கம்



தமிழில் தற்காலக் கவிதை எப்படி இருக்கிறது? பெரிய பத்திரிகைகள் கூட தெரியாத்தனமாக புதுக்கவிதைகளைப் பிரசுரிக்கின்றன. காரணம் மாணவர்களிடமும் இளைஞர்களிடமும் வெவ்வேறு அளவில் கவிதாரசனை ஏற்பட்டிருக்கிறது. அண்மையில் ஆனந்தவிகடன் விழாவில் வாலி, அப்துல் ரகுமான், வைரமுத்து மூன்று பேரும் கவிதை வாசித்தார்கள். கைதட்டலின் அளவிலிருந்து வாலியின் வினோத எதுகைகளுக்கு அதிகம் வரவேற்பு இருப்பதை உணர முடிந்தது. (தமிழ் ஏடுகளுக்கு வசந்த காலம் என்னும் சீசன் வந்ததற்கு ரீசன் ஈசன், அல்ல... எஸ்எஸ் வாசன்!)

எதிர் பார்க்கக் கூடிய எதுகைகளிலிருந்து தான் கவிதா ரசனையின் பாலபாடம் தொடங்குகிறது. வாலி, வைரமுத்து, அப்துல் ரகுமான், மீரா, மு. மேத்தா போன்றவர்கள் எல்லாம் Big league என்று சொல்லலாம். அவர்கள் கவிதைகளை உடனே பிரசுரிக்க பத்திரிகைக்காரர்களும் பதிப்பாளர்களும் தயாராக இருக்கிறார்கள்.

அடுத்து வருவது சிறுபத்திரிகைச் சூழல். ஞானக் கூத்தன், கலாப்ரியா, கல்யாண்ஜி, மனுஷ்ய புத்திரன், பழமலய், அழகிய சிங்கர், வைதீஸ்வரன், ராஜகோபாலன், பசவய்யா, இன்குலாப், இளம் பிறை இவர்களுடன் இடமின்மை காரணமாக விட்டுப் போன ஒரு முப்பதுபேர், கவிதையை உயிருடன் வைத்துக் கொண்டு பலப்பல வினோதங்களைச் சாதிக்கிறார்கள். இவர்கள் எழுதும் அடுத்த வரிகளை எதிர்பார்க்க முடியாது. இவர்கள் கவிதையில் அலுப்பு இல்லை. நேரடியாகப் பார்த்து உணர்ந்தவைகளை எழுதுவார்கள். எழுதாத வரிகள் அதிகம் இருக்கும். பலர் சொந்தக் காசை செலவழித்து தொகுப்பு வெளியிடுகிறார்கள். வருஷத்துக்குச் சுமார் முன்னூறு பிரதிகள் விற்கின்றன.

இத் தொகுப்புக்கள் பல கலையம்சம் பொருந்திய அட்டைப்படத்தோடு நேர்த்தியாக அச்சிட்டு வருகின்றன. அண்மையில் எனக்கு வந்த இரண்டு தொகுப்புக்கள் 'மனிதன் என்பது புனை பெயர்' - வசந்த குமாரன்; 'உயிர்த்திரு.' - ஆர்கே.

முதல் புத்தகத்திலிருந்து ஒரு கவிதையை மட்டும் கொடுக்கிறேன், உங்கள் ரசனையை சோதித்துப் பார்க்க:

*"செத்துப் போன*
*வண்ணத்துப் பூச்சியைச்*
*சுமந்தபடி எறும்புகள்*

*பிணத்தைச் சுமக்கும் கவலையில்லை*
*விருந்தைச் சுமக்கும்*
*கர்வமும் இல்லை அவைகளுக்குள்"*

இந்தக் கவிதையில் இரண்டு செய்யுள்கள் உள்ளன. படித்ததும் நீங்கள் பார்த்த எறும்பு வரிசைகளை நினைவு கொள்கிறீர்கள். உங்கள் எறும்புகள் கரப்பான்பூச்சியையோ கல்கண்டுத் துண்டையோ சுமந்து சென்றிருக்க லாம். வண்ணத்துப் பூச்சியைத்தான் சுமக்க வேண்டும் என்று கட்டாயமில்லை. ஏதோ ஒரு இன்பச்சுமை.. எறும்புகளின் விடா முயற்சியும் முட்டாள்தனமான அடிமை வாழ்வும் உங்களுக்கு ஞாபகம் வரலாம்.

இரண்டாவது பகுதியில் இந்த எறும்புகளுக்குக் கவலை, கர்வம் போன்ற மனித குணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இயற்கை நிகழ்ச்சிகளுக்கு மனித குணங்களைக் கொடுப்பது அல்லது மறுப்பது கவிதையின் ஒரு புராதனமான உத்தி. நாய்க்கு நன்றி, நரிக்குத் தந்திரம் போன்று பழங்காலத்து எளிய நாட்டுப்புறக் கதைகளிலிருந்து கிளைத்து இப்போது நவீனமாக்கப்பட்டிருக்கிறது.

இது நேரடியாக இருந்தால் உவமை என்று சொல்வோம். மறைமுகமாக இருந்தால் உருவகம் அல்லது மெட்டஃபர் என்று சொல்வோம். தமிழில் மிக மிக அதிகமாக கவிஞர்களால் பயன்படுத்தப்பட்ட அணி இது. இதை நம் கவிஞர்கள் உதறி எறிய வேண்டிய காலம் வந்துவிட்டது என எண்ணுகிறேன். கவிதையில் வாசகன் பங்கு கொள்ள உவமைகளும் உருவகங்களும் தடையாக உள்ளன. எதுகை மோனைகளைத் துறந்தாற் போல இவைகளையும் துறக்க வேண்டும். குறிப்பிட்ட கவிதையில் இரண்டாவது செய்யுள் எனக்குத் தேவையே இல்லை. முதல் மூன்று வரிகளோடு நிறுத்தியிருந்தால் எப்படிப்பட்ட அனுபவத்தைத் தந்திருக்கும் யோசித்துப் பாருங்கள்.

*செத்துப்போன*
*வண்ணத்துப் பூச்சியை*
*சுமந்தபடி எறும்புகள்*

அவ்வளவுதான். அந்த எறும்புகளுக்கு கர்வமோ கவலையோ என்று கிளைத்தெழும் எண்ணங்களை வாசகரிடம் விட்டு விட்டால் மேற் கொண்டு சிந்தித்து மற்ற வரிகளை அவன் நிரப்புவான்.

இவ்வாறு கவிதையில் பங்கிட்டுக் கொள்வது தான் உயர்ந்த கவிதானுபவம். ஜப்பானிய ஹைக்கூ அதைத்தான் செய்கிறது. வள்ளுவரின் குறட்பாக்களில், குறிப்பாக காமத்துப்பாலில். இந்த அனுபவம் இருப்பதை பார்க்கலாம்.

"ஊடி இருந்தேமாத் தும்மினாள் யாம் தம்மை
நீடுவாழ்க என்பாக்கு அறிந்து"

- நான் கோபித்துக் கொண்ட போது தும்முகிறாள், வாழ்த்துவேன் என்று.

(மீண்டும் அடுத்த வாரம்)



# விஷ்வக்சேனன்

## 14. ஸர்ப்பகந்தி

'பொருளின்மீது ஆசை கொண்டவனை செல்வத்தைக் காட்டி மயக்கலாம்; இன்பத்தில் நாட்டமிருப்பவனை மதுவையும் மங்கையையும் காட்டி ஏமாற்றலாம்; பண்டிதனை நல்ல நூல்களைக் காட்டியும், போர் வீரனைப் படைக்கலங்களைக் காட்டியும் சுயநினைவை இழக்க வைக்கலாம்' என்று அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. சிற்பக்கலை பயில்வதற்காக மாறன் அமுதனாருடன் தமிழகம் வந்த யாங்சின், சிற்பக்கலையை மட்டுமின்றி மற்றக் கலைகளையும் - அதிலும் மனிதர்களைத் திறமையாக எடைபோட்டுவிடும் கலையைச் சிறப்பாகக் கற்று வைத்திருந்தான். எனவேதான் சிங்கணனின் போர் வெறியையும் ஆவலையும் தூண்ட யந்திரப் பொறியை இயக்கிக் காட்டியது மட்டுமின்றி, அவன் பிரமிப்பை இன்னும் உயர்த்த அந்தப் பொறியைப் பற்றி விளக்கவும் ஆரம்பித்தான். "சிங்கணா, நூறு வீரர்களின் பணியை இது செய்யவல்லது. இதேபோலப் பாறைகளை எறிந்து கோட்டைகளையும் தகர்க்கலாம். பாறைக்குப் பதிலாக எரியம்புகளைப் பயன்படுத்திப் பல நூறு வீரர்களை ஒரே சமயத்தில் அழிக்கலாம். இதை நகர்த்தியபடியே இயக்கினால் ஏற்படக் கூடிய சேதம் அளவிட முடியாதது. ஆனால்..."

"ஆனால் என்ன?" சிங்கணனின் கேள்வி சற்றுக் கவலையுடன் வந்தது.

"ஆனால் சிங்கணா, இந்தக் கயிறு அறுந்து கிடப்பதைப் பார். மீண்டும் வேறு கயிறு மாட்டுவதற்கு ஒரு நாழிகையாவது வேண்டும். எனவே அறுந்து போகாத கயிறாகப் பயன்படுத்த வேண்டும்" என்றான் யாங்சின்.

"சொல் யாங்சின். அதற்கு என்ன செய்ய வேண்டும்?" யாங்சின்னின் முகத்தில் முறுவல் விரிந்தது. "கயிறுகளை வலுப்படுத்த எனக்கு ஸர்ப்பகந்தியின் வேர்கள் வேண்டும்" என்றான் முறுவலினூடே.

"ஸர்ப்பகந்தியா?" - விழித்தான் சிங்கணன். அவன் முகத்தில் மீண்டும் குழப்பம் படர்ந்தது. "எங்கிருந்து வந்து சேர்ந்தான் இந்தச் சீனன்? வெறும் புதிர்களாகவே அடுக்குகிறானே?" என்று மனத்துக்குள் யாங்சின்னைச் சபித்தானேயொழிய சிங்கணனுக்குத் தன் ஆவலை அடக்கவும் வழி தெரியவில்லை.

சிங்கணன் குழப்பத்தைக் கவனித்த யாங்

சின்னின் முறுவல் இன்னும் விரிந்தது. ''சிங்கணா, தமிழகத்தில் இத்தனை ஆண்டுகளாக அதிகாரமும் ஆட்சி யும் செலுத்தும் நீ, தமிழகத்து மூலி கைகளைப் பற்றி அறியவில்லையா? ஸர்ப்பகந்தியும் ஒரு மூலிகை. அதன் வேர்களில் பதமானவைகளாக எடுத்து, அதன் சாறில் மணிக்கயிறு களை நனைத்து நிழலில் உலர்த்தி னால் பிறகு வாள் கொண்டு வெட்டினாலும் லேசில் அறு படாது. அத்தகைய கயிறுகளைத்

# இந்திர தனுசு



தான் இந்தப் பொறிகளுக்கு நாண்களாகப் பூட்ட வேண்டும்" விளக்கினான் யாங்சின்.

"அந்த மூலிகை எங்கிருக்கிறது?" - ஆவலுடன் கேட்டான் சிங்கணன்.

"எந்த வனப்புகுதியிலும் அது கிடைக்கும். அதோ கோட்டையின் வெளியே ஓடும் காவிரியின் மேற்புறத்து வனத்திலும்கூட இருக்கும்."

"அப்படியானால் இப்பொழுதே அதை எடுத்துவர வீரர்களை அனுப்புகிறேன்."

"பொறு சிங்கணா. உன் வீரர்கள் அந்த மூலிகையை அடையாளம் காண்பது கடினம். அதிலும் பதம் தெரியாமல் பறித்து வருவதில் ஒரு பயனும் இருக்காது."

"பிறகு என்னதான் செய்ய வேண்டும் என்கிறாய்?" - சிங்கணன் குரலில் எரிச்சல் தெரிந்தது.

"இருபது வீரர்களை அழைத்துக் கொண்டு நீயும் என்னுடன் வா. மூலிகையையும் அதன் பதத்தையும் நான் அடையாளம் காட்டுகிறேன். உன் வீரர்களை விட்டுப் பறித்து எடுத்து வரச்சொல்" என்றான் யாங்சின்.

சிங்கணன் சித்தத்தில், 'இவனுக்கு உதவ கோட்டைக்கு வெளியில் ஆட்களிருக்கக் கூடுமோ?' என்ற சந்தேகம் எழுந்தது. ஆனால் வெளியில் பணியாட்களைத் தவிர எவருமில்லை என்ற நினைவும் கண்ணெதிரில் எழுந்து நின்று, ஆவலைத் தூண்டிய பொறியும் அவன் சந்தேகத்தைத் துடைத்துவிட்டதால் யாங்சின்னின் ஏற்பாட்டுக்கு உடனே ஒப்புக் கொள்ளவும் செய்தான்.

**வா**னத்தில் கூடிநின்ற மேகங்கள் ஒருமுறை தங்களது சங்கீத அறிவைக் காட்டி ஆவர்த்தனம் செய்தன. சாரல் தெறித்த வானம் பலமாகப் பொழியத் தருணம் பார்த்தது.

யாங்சின்னும் சிங்கணனும் புரவிகளில் முன்னால் செல்ல, பின்னால் இருபது வீரர்கள் தொடர, கோட்டை வாயிலைக் கடந்ததும் வானம் பளிச்சிட்டு தொடுவானத்திற்கும் உச்சிக்கும் ஓரிரு கோடிழுத்துப் பார்த்தது. போர் முரசுகளைப் போல் ஒலித்த மேகங்களைத் தொடர்ந்து மழை பிரளயமாக வர்ஷிக்கத் தொடங்கியது. கோட்டையைக் கடந்ததும் யாங்சின்னின் உடல் ஒருமுறை சிலிர்த்தது.

மரப்பாலத்தை அடைந்ததும் புரவிகள் நின்றன. கோட்டைச் சுவரை அடுத்து கூடாரங்களிலிருந்த பணியாட்கள், சிங்கணனும் யாங்சின்னும் மழையில் செல்வதையும் உடன் சென்ற வீரர்களையும் கண்டு பாலத்தை நோக்கி வர ஆரம்பித்தனர்.

புரவியை விட்டிறங்கிய யாங்சின், கீழே நுங்கும் நுரையுமாகப் பொங்கி ஓடிய காவிரியை ஒருமுறை பார்த்தான். பாலத்தின் பக்கவாட்டில் ஓடிய மூங்கில் பிடிமானத்தை ஒரு கரத்திலும் புரவியை ஒரு கரத்திலும் பற்றியவன், பாலத்தின் மீது நடக்க ஆரம்பித்தான். சிங்கணனும் வீரர்களும் தொடர்ந்தனர்.

சற்றுத் தொலைவு நடந்த யாங்சின், முகத்தில் வழிந்த மழைநீரைத் துடைத்துவிட்டு மீண்டும் மூங்கிலைப் பற்ற முயன்றபோது அது வழுக்கியதாலோ என்னவோ சற்றுத் தடுமாறிச் சாய்ந்தான். மளமளவென்று மூங்கில் முறியும் ஓசை கேட்டது. அடுத்த கணம் பொங்கிப் பாய்ந்த காவிரியில் தலைகுப்புற விழுந்தான் யாங்சின். திகைத்து நின்ற சிங்கணனைக் கண்டு மேகங்கள் பெரிதாக நகைத்தன.

**போ**சளரின் பிடியிலிருந்து தமிழகம் விடுபடப்போவதை எண்ணிய மேகங்கள் இடைப்பாடி நாட்டுக் கோட்டையிலிருந்து தப்பிய யாங்சின்னுக்கு உதவியதோடு மட்டும் நில்லாது, சோழ எல்லையிலிருந்து துறவியாரின் ரதத்தில் தஞ்சைக்கு விரைந்து கொண்டிருந்த கொங்கு நாட்டு இளவரசிக்கும் பெரும் உதவி புரியத் தீர்மானித்தன. தங்களிடமிருந்த நீரையெல்லாம் ஆனந்தமாகப் பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தன. ரதத்தினுள் அமர்ந்து சரம் சரமாக இறங்கிய மழையைப் பார்த்தபடியே வந்த இளவரசியின் மனம் அந்த மழையால் நனைந்து குளிர்ந்து கிடந்த சோழ நாட்டு மண்ணைவிட அதிகமாகக் குளிர்ந்திருந்தது. தஞ்சைத் துறவியாரை மட்டுமின்றி உத்தம பாளையத்தில் தன்னைப் பிரிந்து சென்ற ஆதித்யனையும் தஞ்சையில் காணப் போகிறோம் என்ற நினைவு ரதத்தினுள் தெறித்த மழைச்சாரலைவிட அதிக இன்பத்தை அவள் சித்தத்தில் ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

துறவியார் மழையையோ, காற்றையோ, கடும் வெயிலையோ என்றும் லட்சியம் செய்வதேயில்லையென்பதாலும், காவலுக்கும் வீரர்களை உடனே அழைத்துச் செல்வது வழக்கமில்லையென்பதாலும் தஞ்சைக் கோட்டைக்குள் நுழைந்த அவரது ரதத்தைக் கவனித்த

**"நாட்டுக்காக மனைவி, மக்களைத் துறக்கவும் தயார்னு நான் பேசியதைப் பற்றிப் பொது மக்கள் என்ன நினைக்கிறாங்க?"**

**"உங்க சின்ன வீட்டோட தூண்டுதல்தான் அதுக்குக் காரணமாயிருக்கும்னு பேசிக்கிறாங்க தலைவரே!"**

**- ஞா. ஞானமுத்து**



போசள வீரர்களும்கூட, தங்கள் கவனத்தை அந்த ரதத்தின் மீது அதிகமாகச் செலுத்த வில்லை. அரண்மனையின் பக்க வாயிலின் வழியே நுழைந்து, உட்புறத்து மண்டப வாயி லில் வந்து இறங்கிய இளவரசியை வரவேற்கத் துறவியாரே வந்து நின்றிருந்தார்.

துறவியாரின் அன்பான வரவேற்பும், சார லில் முழுவதுமாக நனைந்த உடலுக்கு இத மான சுடுநீரின் நீரோட்டமும், நீரோட்டத் திற்குப் பின் வந்த சுவையான உணவும் இள வரசியின் பயணக் களைப்பையும், உடல் அலுப்பையும் அறவே துடைத்துவிட்டதால் அடுத்த இரண்டு மூன்று நாழிகைகளில் புத்து ணர்வு பெற்றாள். துறவியாரின் மேன்மாடத்து அறைக்குள் நுழைந்தபோது அவள் உதயகாலத்துப் பனியில் குளித்த புதுமலரைப் போலவேயிருந்தாள்.

துறவியாரின் எதிரில் யுவானுடன் அமர்ந்து ஏதோ தர்க்கித்துக் கொண்டிருந்த ஆதித்யனின் விழிகளில் அவளைக் கண்டதும் ஒரு பிரமிப்பு பரவியது. அந்த விளையாட்டு விழிகள் அவளை விழுங்கிவிடுவது போல் பார்த்தன. வெளியில் மெல்ல அடங்கத் தொடங்கியிருந்த மழை அவள் உள்ளத்தில் பொழிய ஆரம்பித்தது.

"உள்ளே வா பூங்கோதை" என்று பரிவு நிரம்பிய குரலில் அழைத்த துறவியார், தமக் கருகிலிருந்த இருக்கையில் அவளை அமர்த்த வும் செய்தார். அந்தப் பரிவும் அன்பைப் பொழிந்த பெருவிழிகளும் அவளுக்குத் தந்தையை நினைவுபடுத்திவிடவே, இளவரசி யின் முகத்தில் சற்று துக்கத்தின் சாயையும் படர்ந்தது. அவள் எண்ண ஓட்டத்தைத் துறவி யார் புரிந்து கொண்டதால், "பூங்கோதை, ஸ்காந்தபுரத்து அரண்மனைக்குச் சென்றும் தந்தையைக் காணாமலேயே வந்துவிட்டதைக் குறித்து வருந்தாதே. உன் தந்தை அவநிதனை மீண்டும் கொங்கு நாட்டின் சுதந்திர மன்ன னாக விரைவிலேயே காணலாம்" என்றார் அதே பரிவுடன்.

தொடர்ந்து, "பூங்கோதை, மருத்துவர் உன் னிடம் தனிப்பட ஏதும் கூறியனுப்பினாரா?" என்றும் வினவினார்.

நீர்த் திரையிட்ட விழிகளைத் துடைத்துக் கொண்ட இளவரசி, "ஆம், கார்காலம் துவங்கி விட்டது என்று கூறச் சொன்னார்" என்றாள்.

துறவியாரின் பெருவிழிகளில் புதிதாக ஒரு மகிழ்ச்சி மலர்ந்தது. "நன்று, நன்று. இதைத் தான் எதிர்பார்த்தேன்" என்றவர், "இன்னும் விஜயன் ஏன் திரும்பிவரவில்லை?" என்று தனக்குள் கேட்டுக் கொள்ளவும் செய்தார்.

"விஜயனை எதற்கு எதிர்பார்க்கிறீர் துறவி யாரே?" - ஆதித்யனின் குரல் இடையில் குறுக் கிட்டது.

ஆதித்யனையும் யுவானையும் ஒருமுறை நோக்கியவரின் விழிகளில் விஷமம் படர்ந்தது.




"எங்க ஆபீஸ் ஸ்டாஃபுங்களுக்கு லஞ்சம் வாங்குறதுக்கே நேரம் போதலே."

"அப்படியா?"

"பின்னே மாசம் பொறந்து தேதி மூணு ஓடிப் போச்சு. நானும் கரடியாக் கத்திப் பார்த்துட்டேன். ஒரு பயல் கூட இன்னும் சம்பளம் வாங்க வரலேன்னா பார்த்துக்கோ யேன்!"

- ஆலத்தம்பாடி ராஜகோபால்

---

"ஆம் ஆதித்யா. யுவானின் தந்தையைப் பற்றிய செய்தியொன்றை எதிர்பார்க்கிறேன். உங்கள் குருதேவர் மாறன் அமுதனாருடைய திட்டத்தின் முதற்படி அதுதான்."

யுவானின் மஞ்சள் முகத்தில் வியப்பு விரிந் தது. "என்ன கூறுகிறீர் துறவியாரே? பாண்டி யரும் மறைமுகமாக சோழரும் போசளருடன் தொடுக்கப் போகும் இந்தப் போரில் எங்கோ சிறைப்பட்டிருக்கும் என் தந்தை என்ன உதவி செய்ய இயலும்?" யுவானின் கேள்வியிலும் வியப்பு தொனித்தது.

"ஆம் யுவான். பாண்டியர் சேரருடன் தொடுத்த முதற் போரில் பாண்டியர் படை பலம் மிகக் குறைவு. யுத்த தந்திரமும் இணைய, பாண்டியர் யாங்சின்னுடன் சேர்ந்து அமைத்த யந்திரப் பொறிகளும்தாம் சேரனை எளிதில் வெற்றி கொள்ள உதவின. அப்பொ ழுது முதல் சிங்கணனுக்கு யந்திரப் பொறி களைப் பற்றிய பித்து அதிகரித்தது. அதற்கா கவே யாங்சின்னைச் சிறையெடுக்கவும் செய் தான் அவன். சிங்கணன் கவனத்தைத் திசை திருப்பவும், அந்த அவகாசத்தில் படை திரட்ட வும், மாறன் அமுதனாரும் யாங்சின்னும் சிங்கணனுக்கு யந்திரப் பொறிகளின் மீதிருந்த ஆவலைப் பயன்படுத்திக் கொண்டார்கள். எனக்கும் சோழ வீரர்களைப் பாண்டிய நாட்டிலும் கொங்கு நாட்டிலும் பாண்டியர் படைகளுடன் ஊடுருவிக் கலக்க அவகாசம் தேவையாயிருந்தது." - துறவியார் அளித்த விளக்கம் யுவானை மட்டுமின்றி ஆதித்யனை யும் வியக்க வைத்தது.

துறவியார் தொடர்ந்தார்: "அதுமட்டுமல்ல ஆதித்யா, போசளரை விரட்டியபின் தொண்டை மண்டலத்தில் காகதீயரையும் இடையில் எவருக்கும் அடங்காத காடவ

# ஸ்ரீராம் சிட்ஸ்
# லட்சத்திற்கும் மேலான சந்தாதாரர்களின் இதயங்களில் இடம் பெற்றுள்ள பெயர்!



















## றைந்திருக்கும் பரிசை டைய வழி:

பொழுது உள்ள சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும் அஞ்சலில் ஒரு கிய சின்னஞ்சிறு காற்றாடி இடம் பெற்றிருக்கும். ஸ்ரீராம் கிளையில் புதிய சந்தாதாரரை அறிமுகம் செய்தவுடன் அதனைக் கொடுத்து க் காற்றாடிக் கூப்பனை பெற்றுக்கொள்ளலாம். இதில் உள்ள நூலை க்கும் போது, 3 இலக்க எண் தென்படும். அதன் கூட்டுத் கைக்கேற்ப உங்கள் பரிசை நீங்கள் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு க் காற்றாடிக் கூப்பனுக்கும் உங்களுக்கு ஒரு பரிசு உண்டு. ஸ்டெயின் ஸ் ஸ்டீல் சிந்தாமணி டப்பா முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.

## தொடரும் பரிசுக் குவியல்:

ந்த அறிமுகப்படுத்துவோர் பரிசுகளைத் தவிர, ஆண்டு முழுவதும் களுக்காகப் பரிசுகள் காத்திருக்கின்றன. மொத்தம் ரூ. 4 கோடி ப்புள்ள 402350 பரிசுகள். கைனடிக்ஹோண்டா முதல் 2 கிராம் கக்காசு வரையுள்ள மாதாந்திர சூப்பர் குலுக்கல் பரிசுகளும், 4 ம் தங்கக் காசு முதல் மாருதி 800 கார் வரையுள்ள பம்பர் குலுக்கல் சுகளும் இவற்றுள் அடங்கும்.







*ஸ்ரீராமில் சேர்ந்திடுங்கள்.*
*பரிசுகளை வென்றிடுங்கள்.*

- கிளைமேலாளர் முன்னிலையில் மட்டுமே காற்றாடியைத் திறக்க வேண்டும்.
- அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.
- அறிமுகப்படுத்துவோருக்காக மறைந்து காத்திருக்கும் பரிசுகளில் அடங்குபவை SS மிக்ஸ்பௌல், 4 கிராம் தங்கக்காசு முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.




**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.
**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு லிமிடெட்.
*நிர்வாக அலுவலகம்:* "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.*

ADWAVE/SCI/5277



**''என்னத்தை முழுங்கித் தொலைச்சே? அதை முதல்லே சொல்லு....''**

**- 'சிரி சிரி' முரளி**

மன்னனையும் ஒடுக்க வேண்டும். அப்பொழுதுதான் தமிழகம் பூரணமாக விடுதலை பெறும்.''

துறவியார் கூறியது உண்மை என்பது ஆதித்யனுக்குப் புரிந்தது. யுவானும் இளவரசியும் பிரமிப்பில் உறைந்து போயிருந்தனர்.

துறவியார் தொடர்ந்தார் : "அதிருக்கட்டும் ஆதித்யா, கொங்கு நாட்டில் துவங்கப் போகும் போர் அத்துடன் மட்டும் நிற்கப் போவதில்லை. நான் கூறியபடி இந்திர தனுசு பற்றிய ஓலையுடன் எனது ஓலையையும் எடுத்துக் கொண்டு உன் குருநாதரைக் காண வேண்டும். அதற்குமுன் விஜயன் மட்டுமின்றி, நாளை சிங்கணனிடமிருந்து அத்தாட்சி ஓலையுடன் அந்தக் காங்கேயன், சாளுக்கிய சேமகேசி இங்கு வருவான் என்று எதிர்பார்க்கிறேன். நீங்கள் மூவரும் அவன் கண்ணிலோ மற்ற போசள வீரர்கள் கண்களிலோ பாடமலிருக்க வேண்டும்'' என்றார்.

துறவியாரின் இந்த வேண்டுகோள் ஆதித்யனுக்கும் இளவரசிக்கும் சங்கடத்தை அளித்தது என்பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. யுவானின் முகத்தின் அத்தகைய சங்கடம் ஏதுமில்லை. மாறாக அவன் மஞ்சள் முகம் சித்தத்தில் ஏற்பட்ட உஷ்ணத்தால் இலேசாகச் சிவந்தது. "அந்தச் சாளுக்கிய ஒற்றனுக்கு அஞ்சி எங்களை இங்கு மறைந்திருக்கச் சொல்கிறீர்களா?'' என்ற அவன் கேள்வியிலும் அனல் தெறித்தது.

துறவியாரின் பதில் உறுதியாக வந்தது. அவரது பெருவிழிகள் யுவானையும் ஆதித்யனையும் திடமாக ஏறிட்டன. "யுவான், வேங்கை பதுங்குவதும், வில் வளைவதும் பாய்வதற்காகத்தான். வெறும் வீரம் மட்டும் எல்லாவற்றையும் சாதித்து விடுவதில்லை. அத்துடன் விவேகமும் இணையும்போதுதான் பூரணமான வெற்றி கிடைக்கிறது. சேமகேசி இங்கு வருவது இங்கிருக்கும் மூவாயிரம் போசள வீரர்களை அழைத்துக் கொண்டு உத்தமபாளையத்தில் தாக்குதலைத் தொடங்க. அதேசமயத்தில் வடகொங்கிலிருக்கும் படைகளுடன் சிங்கணன், சேமகேசியைப் பின்தொடர்ந்து பாண்டியர் எல்லையில் நுழைவான்'' என்ற துறவியாரின் சொற்கள் பாதியில் நின்றன.

அறை வாயிலில் சோழ வீரன் ஒருவன் வந்து, நின்று கொண்டிருந்தான். "மன்னிக்க வேண்டும். தங்களைக் காண ஒருவன் வந்து காத்திருக்கிறான். இடைப்பாடி நாட்டிலிருந்து வருவதாகத் தங்களிடம் தெரிவிக்கச் சொல்கிறான்'' என்றான் வீரன்.

துறவியாரின் விழிகள் ஜொலித்தன. "உடனே அவனை அழைத்து வா'' என்ற அவர் உத்தரவும் வேகத்துடன் வந்தது.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கியவன் தலையில் பெரும் முண்டாசு ஒன்று சுற்றியிருந்தான். அவன் முகத்தில் கறுத்த பெரும் மச்சத்தையும் நீண்ட மீசையையும் அடர்ந்த புருவங்களையும் கண்ட துறவியாரின் முகத்தில் ஆனந்தம் தெரிந்தது. அவன் கரத்தில் மரங்களை வெட்ட உதவும் நீண்ட கோடரி ஒன்றும் இருந்தது. உடன் வந்து அந்த மனிதனைத் தடுத்தபடியே நின்ற சோழ வீரன், "பிரபு, இதுபோன்ற ஆயுதங்களுடன் எவரும் அரண்மனைக்குள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை என்று பலமுறை எச்சரித்தேன் - இவன் கேட்கவில்லை'' என்றான் முறையிடும் குரலில்.

"அதனால் பாதகமில்லை. நீ செல்லலாம்'' என்று வீரனை நோக்கி உத்தரவிட்ட துறவியார், தயங்கித் தயங்கி அவன் மெல்ல வெளியேறியதும் மரம் வெட்டும் கோடரியுடன் நின்ற அந்த மனிதனை, "ஏன், அங்கேயே நிற்கிறாய்? வா உள்ளே'' என்றும் அழைத்தார்.

உள்ளே நுழைந்த அந்த மனிதன் அறையிலிருந்த மற்ற மூவரையும் ஏறிட்ட பார்வையில் விஷமம் வழிந்தது. யுவானை நோக்கித் திரும்பிய அவனது விழிகளில் சந்தேகச் சாயையும் பரவியது. துறவியாரை நோக்கித் திரும்பியவனின் குரல் கரகரத்து ஒலித்தது. "பிரபு, இதோ நிற்கும் சீனன் இரண்டு தினங்களுக்கு முன்பு இடைப்பாடி நாட்டில் இறந்துவிட்டான். மீண்டும் உயிருடன் இங்கு எப்படி வந்தான்?'' என்றான்.

அவன் வார்த்தைகளின் பொருள் அந்த அறையிலிருந்தவர்களுக்கு நன்றாகவே புரிந்ததால் அவர்கள் திடுக்கிட்டனர். அடுத்தாற்போல் அவன் பேசிய சொற்கள் அவர்களை மேலும் திகைப்படையச் செய்தது :

"பிரபு, தாங்கள் கூறியபடி கொங்கு நாட்டிலிருக்கும் போசளர் படைகளுடன் சிங்கணன் வரப்போவதில்லை....''

(தொடரும்)

## சந்தாதாரருக்கான பரிசுகள்

| வரிசை எண். | சீட்டு மதிப்பு ரூ. மாதங்கள் ரூ. | பரிசு |
|---|---|---|
| 1 | 250 x 40 = 10,000 | வ்யூ 1500 ஜக் |
| 2 | 400 x 25 = 10,000 | வ்யூ 1500 ஜக் |
| 3 | 500 x 30 = 15,000 | கிச்சன் ஃப்ரஷ் – ஏர்டைட் கன்டெய்னர்ஸ் (3) |
| 4 | 1000 x 25 = 25,000 | ஸ்டே ஃப்ரஷ் – ஏர்டைட் கன்டெய்னர்ஸ் (3) |
| 5 | 750 x 40 = 30,000 | பெங்குவின் டஃப் ஜக் |
| 6 | 1250 x 40 = 50,000 | இன்ஸுலேடட் ஹாட்பாட் 800 மிலி |
| 7 | 2000 x 25 = 50,000 | இன்ஸுலேடட் ஹாட்பாட் 800 மிலி |
| 8 | 4000 x 25 = 1,00,000 | டிராவல் ஸ்டார் தண்ணீர் ஜக் 4 லிட்டர் |
| 9 | 5000 x 30 = 1,50,000 | இன்ஸுலேடட் லஞ்ச் பேக் |

• நுழைவுக் கட்டணம் தனி • முன்னனுமதி பெறப்பட்டது



வென்றிடுவீர் 10000 க்கும் அதிகமான பரிசுகளை

**அறிமுகம் செய்வோருக்கும் அருமையான பரிசுகள் காத்திருக்கின்றன!**
நீங்கள் அறிமுகப்படுத்தும் சந்தாதாரருக்காக கிடைக்கும் கூப்பனில் உள்ள அதிர்ஷ்ட எண் மூலம் பல பரிசுப்பொருட்களை எடுத்துச் செல்லுங்கள்.

## அறிமுகப்படுத்துவோருக்கான பரிசுகள்

1. எவர்சில்வர் டம்ளர்
2. எவர்சில்வர் டபராசெட்
3. எவர்சில்வர் மீல்ஸ் பிளேட்
4. எவர்சில்வர் டிஃபன் காரியர்
5. ஈகிள் ஃபிளாஸ்க்
6. டைமெக்ஸ் வாட்ச்
7. எவர்சில்வர் டின்னர் செட் (31 பொருட்கள்)
8. கிராம்ப்டன் மிக்ஸர் கிரைண்டர்
9. அல்ட்ரா வெட் கிரைண்டர்



WE UNDERSTAND THE VALUE of PROTECTION

விரைவீர்! பாதுகாப்பானதோர் எதிர்காலத்திற்கு ஒன்றுபடுவோம் வாரீர்!



**Ram Kaashyap**
Chits Private Limited
Member Ram Kaashyap Group

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தேர்வு**

**கிளைகள் : சென்னை : • ஆழ்வார்பேட்டை :** 1/1 சர் தேசிகா ரோடு (அடித்தளம்), ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், சென்னை 600 004 போன் 4994303, 4998325 • **மைலாப்பூர் :** 36 வெங்கடேச அக்ரஹாரம், மைலாப்பூர், சென்னை 600 004 • **மேற்கு மாம்பலம் :** 1A முதல்மாடி, மூர்த்தி தெரு (அயோத்யா மண்டபம் அருகில்) மேற்கு மாம்பலம், சென்னை 600 033. போன் 4896638 • **அண்ணா நகர் :** 102. 'D' பிளாக் (அடித்தளம்) N.P. காம்ப்ளக்ஸ் (சிந்தாமணி அருகில்) கிழக்கு அண்ணா நகர், சென்னை 600 102. போன் 610979 • **அடையாறு :** 11, லயா பிளாக் 2வது மெயின்ரோடு, காந்தி நகர் அடையாறு, சென்னை 600 020. போன் 418081 • **கோயம்புத்தூர் :** ஏஷியாடிக் பில்டிங், 2வது மாடி, 378 டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயம்புத்தூர் 641 018 போன் 231886 • **கும்பகோணம் :** V.A.O. காம்ப்ளக்ஸ் 198 (முதல் மாடி) பெரிய கடை வீதி, கும்பகோணம் 612 001. போன் 24221 • **மதுரை :** N.C.S. பில்டிங் 2வது மாடி, 113-B, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை 624 001. போன் 541802 • **தஞ்சாவூர் :** T.S.No. 2547, தெற்கு மெயின் ரோடு தஞ்சாவூர் 613 009. போன் 25871 • **திருச்சி :** 44–45, அன்னை சிவகாமி காம்ப்ளக்ஸ், மூன்றாவது மாடி, சிங்காரத் தோப்பு (சூப்பர் பஜார்) திருச்சி 620 008. போன் 704752 • **ஈரோடு :** ஆனூர் அம்மன் காம்ப்ளக்ஸ், 58 சத்தி ரோடு, ஈரோடு 638 003 • **திருவாரூர் :** 80-A. தெற்கு வீதி, திருவாரூர் 610 002.

Insight-1556

**முன்கதைச் சுருக்கம் :** போசளராலும் காடவராலும் சோழ நாடு சீரழிந்து கிடந்த 13ம் நூற்றாண்டின், பிற்பகுதி. தமிழகத்திற்கு சிற்பக்கலை பயில வந்த தந்தையைத் தேடி சீனத்திலிருந்து, நாகை சூளாமணி விஹாரத்திற்கு வருகிறான் யுவான். விஹாரத் தலைவரால் கொங்கு இளவரசி பூங்கோதையுடன் காவலாக அனுப்பப்படுகிறான். போசள ரால் வழிமறிக்கப்படும் அவர்களை, பாண்டிய இளவல் ஆதித்யன் மீட்கிறான். மதுரை செல்லும் வழியில் ஆதித்யனுக்கும் பூங்கோதைக்கும் இடையே அன்பு மலர்கிறது. பாண்டிய மன்னன் உத்தரவால் உத்தமபாளையத்தில் படைத்தலைவர் கிருஷ்ண மல்லரிடம் பூங்கோதையை விட்டு, தஞ்சைக்கு வந்து சேரும் ஆதித்யனிடம் இந்திர தனுசு பற்றியும், தமிழகத்தை அன்னியரிடமிருந்து விடுவிப்பது பற்றியும் சைவத் துறவியார் விளக்குகிறார்.

சூரிய காங்கேயன் என்ற போலிப் பெயரில் உலவும் சாளுக்கிய சேமகேசியால் பூங்கோதை கடத்தப்படுகிறாள். ஸ்காந்தபுரம் வந்து சேருகிறாள். யுவான் பின் தொடர்கிறான். கொங்கு மருத்துவர் உண்மையான சூரிய காங்கேயன் இறக்கவில்லை என்று தெரிவிப்ப தோடு இளவரசியை தஞ்சைத் துறவியாரிடம் அனுப்பவும், யுவானை முன்னதாகச் செல்ல வும் ஏற்பாடு செய்கிறார்.

இடைப்பாடி நாட்டுக் கோட்டையில் போசள சிங்கணனிடம் சிறையிருக்கும் யாங்சின், தன் மகன் யுவான் தமிழகம் வந்திருப்பதை அறிகிறான். சிங்கணனுக்கு யந்திரப் பொறிகள் அமைத்துக் கொடுத்து அவற்றை இயக்க ஸர்ப்பகந்தி வேர்கள் தேவையென்றும் கூறி, தானே அதை எடுத்து வருவதாகவும் கூறுகிறான். கோட்டையை விட்டு வெளியேறும் யாங்சின், காவிரியின் பிரவாகத்தில் பாய்ந்து விடுகிறான்.

## 15 வேங்கையான சிறு நரி!

ஆதித்யனையும் மற்றவர்களையும் திகைக்க வைத்த செய்தியை அறிவித்த அந்த மனிதனை வெறித்துப் பார்த்தான் யுவான். அந்த மனிதன் வேண்டுமென்று மாற்றிப் பேசிய கரகரத்த குரலும், அவன் விழிகளில் சுபாவமாகவே வழிந்த விஷமமும் அவன் யாரென்பதைப் புரிய வைத்து விட்டதால், இருக்கையை விட்டு எழுந்து அவனை நெருங்கி, அவன் தலையிலிருந்த துணியைப் பற்றி சட்டென்று இழுத்தான்! அதற்கு முன்னதாகவே பார்த்தவுடனேயே அவன் யாரென்பதைப் புரிந்து கொண்டு விட்ட ஆதித்யனும் துறவியாரும் முறுவலுடன் கவனித்துக் கொண்டிருக்க, அதுவரை திகைப்பில் உறைந்து மௌனமாக இருந்த இளவரசியின் குரல் வியப்புடன் ஒலித்தது - "விஜயன்!" என்று.

தன் கரத்திலிருந்த கோடரியை சுவாதீனமாகத் துறவியாரிடம் அளித்த விஜயன், இளவரசியை நோக்கித் திரும்பி, "ஆம் இளவரசி. இதே கோலத்தில்தான் இடைப்பாடி கோட்டையில் மரம் வெட்டியாகப் பணி புரிந்தேன்" என்றான்.

யுவான் வினவினான். "சொல் விஜயா! என் தந்தை என்ன ஆனார்? ஏன்

# இந்திர தனுசு

விஷ்வக்சேனன்



அவர் இறந்து விட்டதாகக் கூறினாய்?”

விஜயன் தன் வேஷத்தை நிதானமாகக் கலைத்தபடியே கூறினான். “நானும் நமது வீரர்களும் சிங்கணனின் இடைப்பாடிக் கோட்டையில் மரம் வெட்டும் பணியாட்களாக இருந்தோம். சிங்கணன் விரும்பியபடி யந்திரப் பொறிகளைச் செய்வதாக ஆசை காட்டிக் கொண்டிருந்திருக்க வேண்டும் யாங்சின். ஆனால் இரு தினங்களுக்கு முன் உத்தம

# ஸ்ரீராம் சிட்ஸ்.

# ) லட்சத்திற்கும் மேலான சந்தாதாரர்களின் இதயங்களில் இடம் பெற்றுள்ள பெயர்!

## றைந்திருக்கும் பரிசை டைய வழி:



















பொழுது உள்ள சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும் அஞ்சலில் ஒரு யெ சின்னஞ்சிறு காற்றாடி இடம் பெற்றிருக்கும். ஸ்ரீராம் கிளையில் புதிய சந்தாதாரரை அறிமுகம் செய்தவுடன் அதனைக் கொடுத்து க் காற்றாடிக் கூப்பனை பெற்றுக்கொள்ளலாம். இதில் உள்ள நூலை க்கும் போது, 3 இலக்க எண் தென்படும். அதன் கூட்டுத் கைக்கேற்ப உங்கள் பரிசை நீங்கள் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு க் காற்றாடிக் கூப்பனுக்கும் உங்களுக்கு ஒரு பரிசு உண்டு. ஸ்டெயின் ஸ்டீல் சிந்தாமணி டப்பா முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.

## ாடரும் பரிசுக் குவியல்:

த அறிமுகப்படுத்துவோர் பரிசுகளைத் தவிர, ஆண்டு முழுவதும் களுக்காகப் பரிசுகள் காத்திருக்கின்றன. மொத்தம் ரூ. 4 கோடி புள்ள 402350 பரிசுகள். கைனடிக்ஹோண்டா முதல் 2 கிராம் க்காசு வரையுள்ள மாதாந்திர சூப்பர் குலுக்கல் பரிசுகளும், 4 ம் தங்கக் காசு முதல் மாருதி 800 கார் வரையுள்ள பம்பர் குலுக்கல் களும் இவற்றுள் அடங்கும்.







*ஸ்ரீராமில் சேர்ந்திடுங்கள்.*
*பரிசுகளை வென்றிடுங்கள்.*

- கிளைமேலாளர் முன்னிலையில் மட்டுமே காற்றாடியைத் திறக்க வேண்டும்.
- அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.

அறிமுகப்படுத்துவோருக்காக மறைந்து காத்திருக்கும் பரிசுகளில் அடங்குபவை SS மிக்ஸ்பௌல், 4 கிராம் தங்கக்காசு முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.




**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.
**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு லிமிடெட்.

*நிர்வாக அலுவலகம்:* "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.*

ADWAVE/SCI/5277



''பாட்டி, ஒரு கதை சொல்லேன்....''

''ஒரே ஒரு ஊரில், ஒரு கம்ப்யூட்டர் இருந்துச்சாம். அந்த ஊரிலேயே 'ரோபாட்டும்' வாழ்ந்ததாம். ரெண்டுக்கும், ரொம்ப நாளா பகையாம்...''

— ஆர். வசந்தகுமார்

பாளையத்திலிருந்து ஒருவன் ஓலையுடன் வந்தான். வந்தவன் யாங்சின்னைக் கண்டு ஏதோ பிசாசைக் கண்டது போல் விழித்தான். அவன் கூறியது சரியாகக் கேட்கவில்லையென்றாலும் என்ன கூறியிருப்பான் என்பதை யூகிக்க முடிந்தது. அன்று இரவு முழுவதும் யாங்சின் உறங்கவில்லை. மறுதினம் அவர் கூடார வாயிலில் இடங்கணிப் பொறி ஒன்று உருவாகியிருந்தது. பின்பு சிங்கணனும் வீரர்களும் பின்தொடர கோட்டைக்கு வெளியே வந்த யாங்சின், காவிரியைஅடைந்ததும் நீரில் தவறி விழுபவர் போல தலைகுப்புற விழுந்து விட்டார். வீரர்களையும் எங்களையும் விட்டு அவரைத் தேட உத்தரவிட்ட சிங்கணன், அவர் கிடைக்காததால் இறந்து விட்டதாகவே தீர்மானித்து விட்டான். அதைத்தான் நானும் வந்தவுடன் கூறினேன்'' என்று நிறுத்தினான் விஜயன்.

துறவியாரின் குரல் இடையில் புகுந்தது. "அங்கு நதியின் ஓட்டம் வேகமாக தெற்கு நோக்கிப் பாய்வதால் தென்கரை முழுவதும் சிங்கணன் தேடியிருப்பான்" என்றார் துறவி.

"ஆம் பிரபு. நாங்களும் தெற்குக் கரை ஓரமாக ஐந்தாறு காதம் வரை தேடினோம். அப்படியே திரும்பி விட்டோம்'' என்றான் விஜயன்.

"நீரில் விழுபவர் நீரோட்டத்திலேயே அடித்துச் செல்லப்படுவதுதான் இயல்பு. ஆனால் யாங்சின் இயல்புக்கு மாறாகச் செயல்படுபவர். எதிர்புறமாக நீந்திக் கரையேறியிருப்பார்" என்ற துறவியாரை வியப்புடன் நோக்கிய ஆதித்யன், பிறகு விஜயன் பக்கமாகத் திரும்பிக் கேட்டான் : "விஜயா! சிங்கணன் படைகளுடன் வரப் போவதில்லை என்றாயே?"

"ஆம் இளவரசே! சிங்கணன்னைக் கண்ணனூர் கோட்டையைப் பாதுகாக்க அனுப்பி விட்டு, அவனுக்குப் பதிலாகப் போரை நடத்த மற்றொரு தண்டநாயகன் விக்கலனை அனுப்பி வைத்திருக்கிறான் போசள சோமேஸ்வரன்."

படைகளை நடத்துவதில் இணையற்றவனென்றும், சிங்கணனைப் போல் தந்திரமோ, வஞ்சகமோ அறியாதவனென்றும், போர்த் திட்டங்கள் வகுப்பதிலும், வாள் வீச்சிலும் நிகரற்றவனென்றும் பெயரெடுத்திருந்த போசள விக்கலன் பெயரைக் கேட்ட ஆதித்யன் மட்டுமின்றி துறவியாரும் கூடச் சற்று திகைத்தார். போசளருடனான போர், எதிர் பார்த்திருந்ததை விட இன்னும் கடுமையாக இருக்கும் என்பது இருவருக்கும் புரிந்தது.

சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்து விட்ட துறவியார், ஏதும் கூறாமல் அறையின் மூலைக்குச் சென்று ஓலைகளை எடுத்து விறுவிறுவென்று எழுத ஆரம்பித்தார். சிந்தனையினூடே அவர் முகத்தில் கவலையும் தெரிந்தது. ஓலைகள் எழுதி முடித்தவர், குழல்களில் அடைத்து ஒன்றை ஆதித்யனிடம் அளித்தார்.

"ஆதித்யா, நீ இன்றே இரவு ஏறியதும் புறப்படு. இந்த ஓலையுடன் இந்திர தனுசு பற்றிய ஓலைகளையும் மாறன் அமுதனாரிடம் அளித்துவிடு'' என்றவர் மற்றொரு குழலை விஜயனிடம் அளித்தார்.

"விஜயா! இதைப் பாண்டிய மன்ன ரிடம் அளித்து விடு. இனி தாமதிப்பது அபா யம். காற்றைவிட வேகமாகச் செல்ல வேண்டும் நீ" என்று உத்தரவிட்டார்.

போசள விக்கலனின் வருகை துறவியாரையும் ஆதித்யனையும் மட்டுமல்ல, மன்னன் உத்தரவின்படி கண்ணனூர்க் கோட்டையை அடைந்த சிங்கணனையும் கூட திகைக்க வைத்தது. கண்ணனூர்க் கோட்டையில் காத்திருந்த சேமகேசியோ, அவனை மேலும் திகைக்க வைத்தான்!

திருவரங்கத்துக்கு நேர் வடக்கே காவிரியின் வட கரையில் மூன்றரைக் காதத்தில் அமைந்திருந்தது அந்தக் கோட்டை. பெரிதாகத் தெரியவில்லையென்றாலும் நான்கடிக்குக் குறையாத கனத்துடன் வளைந்து நீண்ட மதில்களும், மேற்புறத்தில் வரிசையாகத் தெரிந்த அம்பு வீசும் யந்திரங்களும், சதா உலவிக் கொண்டிருந்த வீரர்களும் அந்தக் கோட்டையை அணுகுவதோ, தாக்கிக் கைப்பற்றுவதோ அத்தனை எளிதல்ல என்பதை உணர்த்திக் கொண்டிருந்தன. கோட்டையைச் சுற்றி வளைத்த அகழியில் புரண்டு புரண்டு நீர் மட்டத்தில் பளீர் பளீரென்று வாலால் அறைந்த முதலைகள், மேலே உலவிய வீரர்களைப் பார்த்து அவ்வப்பொழுது வாயைப் பிளந்து அசுரப்பற்களைக் காட்டின!

கண்களுக்கெட்டிய தூரம் வரையில் காவிரி தந்த வரமாகப் பசேலென்று விரிந்த வயல்களையும் சிறு கிராமங்களையும் கடந்து, விரிந்த

சமவெளியில் அமைந்திருந்த அந்தக் கண்ண னூர்க் கோட்டையைத் தலைமையிடமாக சிங்கணன் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமிருக் கவே செய்தது. காவிரியின் தென்கரையிலிருந்து விரிந்த சோழ நாட்டிலிருக்கும் மூவாயிரம் வீரர் களையும் இயக்கவும், வடக்கே காடவர்களின் நடமாட்டத்தையும் தொண்டை நாட்டில் கண்ட கோபாலனின் நடவடிக்கைகளை அறிய வும் அந்தக் கோட்டை பெரும் சாதகமாக இருந் தது சிங்கணனுக்கு.

கோட்டையின் உள்ளே, மிக நேர்த்தியாகத் தெரிந்த சிறு மாளிகையில், தன் அறையில் மஞ் சத்தில் சாய்ந்து மதுக் குப்பியைக் கரத்தில் பிடித்தபடி அமர்ந்திருந்த சிங்கணனின் சித்தம் பெரிதும் குழம்பிக் கடந்தது. உல்லாசத் திற்காகவே உலகத்தில் அவதாரம் எடுத்திருந்த இரு அழகிய யவன மங்கையர் அவனை உரசி நின்றபடியே மதுக்குப்பியை நிரப்பி நிரப்பி அவன் சித்தத்தின் உஷ்ணத்தைக் குறைக்க முயன்று கொண்டிருந்தனர்.

அதிகாரத்தை மட்டுமின்றி அதற்குரிய வசதிகளையும் பூரணமாக அனுபவிக்கும் வழக்கமுடைய சிங்கணனது சித்தம் அப்போது மதுவின் ருசியிலோ எதிரில் இழைந்த மங்கையரின் அழகிலோ நாட்டம் கொண்ட தாகத் தெரியவில்லை. எதிரிலிருந்த யவன மங்கையின் தோளைப் பற்றி அருகில் இழுத்த வனின் விழிகளில் வெறித்த பார்வையே நிலவிக் கிடந்தது. அடுத்து ஒலித்த அவன் கேள்வியும் வரண்ட குரலிலேயே வந்தது: "சேம கேசி எப்பொழுது வந்தான் இந்தக் கோட் டைக்கு?"

யவன மங்கையின் கிள்ளைக்குரல் அவள் தமிழின் உச்சரிப்பிலிருந்த குறையை ஈடுகட்டி யது. "நேற்றிரவுதான் வந்தார் பிரபு."

"மன்னரைக் கண்டு வந்ததாகக் கூறி னானா?" சிங்கணனிடமிருந்து அடுத்த கேள்வி வந்தது.

"ஆம் பிரபு. அவரிடம் மன்னரின் ஓலையும் இருப்பதாகக் கூறினர். பிறகு..." என்று தயக்கத் துடன் இழுத்தாள் அந்த மங்கை.

"பிறகு என்ன?" சிங்கணன் குரலில் கடுமை யிருந்தது.

அந்த யவன மங்கையின் பதில் தயக்கத்துட னேயே வந்தது. "கொங்கு நாட்டின் விடுதலைப் படைகளை ஒடுக்கவும் பாண்டியர் மீது போர் தொடுக்கவும் தண்ட நாயகர் விக்கலனை மன்னர் நியமித்திருப்பதாகவும் கூறினார்."

சிங்கணனின் முகம் சிறுத்தது. எல்லையற்ற ஆத்திரமும் அதில் வெடித்தது. "தமிழ் நாட்டில் இத்தனை ஆண்டுகளாகப் போசளர் ஆட்சி நிலைத்திருக்க இந்த சிங்கணன்தான் காரணம் என்பதை மன்னர் மறந்து விட்டாரா? தமிழ கத்தை ஒரு குடையின் கீழ் ஆண்ட சோழ



"உங்க நண்பர் வந்திருக்கும் போது இனிமே டீ.வி. வைச்சுத் தொலைக்காதீங்க."

"ஏன்?"

"டீ.வி. நிகழ்ச்சியில் 'சாப்பிட வாங்க'ன்னு அறிவிச்சதும் நான்தான் கூப்பிடறேன்னு உள்ளே வந்து சட்டமா சப்பணம் போட்டு உக்காந்துட்டார் பாருங்க!"

— ஆலத்தம்பாடி ராஜகோபால்

மன்னனின் அதிகாரம் அனைத்தையும் பறித்து இன்று அவன் போசளர் கைப்பொம்மையா யிருக்கக் காரணமிந்த சிங்கணன்தான் என்பது நினைவில்லையோ மன்னருக்கு? இப்போது பாண்டியரை அடக்க மட்டும் நான் தகுதியற்ற வனாகி விட்டேனா?" ஆத்திரம் தலைக்கேறிய தால் சரமாரியாக வந்த அவன் கேள்விகளுக்கு பதிலளிக்கவோ, அவன் ஆத்திரத்தைத் தணிக்கவோ திராணியற்ற அந்த மங்கையருக்கு, என்ன பதில் கூறுவதென்பது புரியாததால் சற்று விழித்தனர்.

மஞ்சத்திலிருந்து எழுந்து மதுக்குப்பியை விட்டெறிந்த சிங்கணன், அறைக்குள் அங்கு மிங்குமாக உலவினான். நாகம் சீறுவதைப் போல் ஒலித்த அவன் மூச்சையும், கண்களில் தெறித்த கனலையும் கண்ட மங்கையர் அச் சத்துடன் ஒதுங்கியே நின்றனர். சட்டென்று உலவுவதை நிறுத்திய சிங்கணனின் சித்தத்தில் ஏதோ யோசனை பளிச்சிட்டதற்கறிகுறியாக அவன் புருவங்கள் நெரிந்தன:

"இந்த சாளுக்கிய சேமகேசி, மன்னரிட மிருந்து ஓலைபெற்று வந்ததாகக் கூறியிருக் கிறான். இவன் எதற்காக மன்னரைக் காணச் செல்ல வேண்டும்? மன்னரின் ஓலையில் என்ன செய்தி இருக்கிறது?" சேமகேசியைப் பற்றிய சந்தேகம் மனத்தில் எழுந்ததும் யவன மங்கையரை நோக்கித் திரும்பிய சிங்கணன், "உங்களில் யாரேனும் சென்று அந்த சேம கேசியை அழைத்து வாருங்கள்" என்று உத்தர விட்டான். மஞ்சத்தில் தள்ளப்பட்டு சிங் கணனை வெறித்துக் கொண்டிருந்தவள் எழுந்து, உடனே வெளியே நடந்தாள்.

சற்று நேரத்தில் ஓலைக்குழலுடன் உள்ளே நுழைந்து, சிங்கணனை வணங்கிய சேமகேசி யின் விழிகளில் போலியான அச்சமும் சற்று ஏளனமும் தெரிவதாகப்பட்டது சிங்கணனுக்கு. சேமகேசியை நோக்கி முதல் கேள்வியை வீசிய சிங்கணன் குரலில் அதீத உஷ்ணமிருந்தது.

"சேமகேசி, பாண்டிய நாட்டை விட்டு எதற்காக மன்னரைக் காணச் சென்றாய்?"

"பாண்டிய நாட்டில் என் பணி முடிந்து விட்டது படைத்தலைவரே" சேமகேசியின் பதில் உட்னே வந்தது.

"என்ன? பணி முடிந்து விட்டதா?"

"ஆம் படைத்தலைவரே, பாண்டிய நாட்டில் படை திரட்டும் முயற்சி ஏதேனும் இருந்தால் அறிவிக்க என்னைப் பணித்தீர்கள்."

"ஆம்."

"அந்தப் பணி முடிந்து விட்டது. இன்னும் ஒரு வாரத்திற்குள் உத்தமபாளையத்தில் பாண்டியர் படை குவியப் போகிறது. கொங்கு நாட்டின் தென் பகுதியில் தாக்குதலைத் துவக்கப் போகிறார் கிருஷ்ணமல்லர். அது மட்டுமல்ல படைத்தலைவரே, இன்னொரு பணியையும் முடித்திருக்கிறேன்" என்றான் சேமகேசி.

"என்ன பணி?"

"கொங்கு இளவரசியை அழைத்துவர சூளாமணி விஹாரத்திற்கு வீரர்களை அனுப்பினீர்கள்...."

"ஆம்."

"அவர்களால் இயலவில்லை."

"காடவர்கள் குறுக்கிட்டதால் இயலாமற் போனது."

சேமகேசியின் கறுத்த முகத்தில் ஏளனச் சிரிப்பொன்று தெரிந்தது. "அந்தப் பணியை நான் முடித்திருக்கிறேன், படைத்தலைவரே!" என்றான் சேமகேசி. சிங்கணன் முகத்தில் திகைப்பு தெரிந்தது.

"என்ன கூறுகிறாய் சேமகேசி?"

"ஆம் படைத்தலைவரே, நமது வீரர்களின் பாதையில் குறுக்கிட்டவர்கள் காடவர் மட்டுமல்ல. பாண்டிய இளவலும்தான். ஆதித்ய பாண்டியனால் மதுரைக்கு அழைத்துச் செல்லப்பட்ட இளவரசியை, உத்தமபாளையத்திற்கு அனுப்பி வைத்தான் வீர பாண்டியன். இளவரசியை பாண்டியரிடமிருந்து மீட்டு, ஸ்காந்தபுரத்தில் கொண்டு சேர்த்திருக்கிறேன்" என்ற சேமகேசியின் முகத்தில் அடுத்து போலியான வருத்தமொன்றும் படர்ந்தது.

குரலிலும் அந்த வருத்தத்தைப் படரவிட்டுக் கொண்டவன், "ஆனால் படைத்தலைவரே, பாண்டியர் படை திரட்டுவதையும், தாக்க திட்டமிட்டிருப்பதையும் தாங்கள் முன் கூட்டியே அறிந்து செய்தியனுப்பவில்லையென்பதால் மன்னருக்குச் சற்றுக் கோபம் தான்... அதுமட்டுமல்ல..."

அவன் தன்னைப் பார்த்து நகைக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட சிங்கணனின் சித்தத்தில் உஷ்ணம் கூடியது. "வேறென்ன கூறினார் மன்னர்?" என்ற அவன் கேள்வியிலும் அனல் பறந்தது.

தொடர்ந்து கூறத் தயங்குவதாகப் பாசாங்கு செய்த சேமகேசி, "தண்ட நாயகரால் இயலாத பணியை நான் முடித்தது குறித்து மன்னர் மகிழ்ச்சியடைந்தார். எனவே..." என்று இன்னும் தயங்கினான் சேமகேசி.

"மேலே சொல்!" சிங்கணனின் குரல் உரக்க ஒலித்தது.

"சோழ நாட்டிலிருக்கும் நமது வீரர்களை நான் நடத்திச் சென்று உத்தமபாயைத்தைக் கைப்பற்றவும் அத்தாட்சி ஓலையளித்தார். பாண்டியருடனான போரை நடத்த விக்கலனை அனுப்பி வைப்பதாகவும் கூறினார்" என்று முடித்தான் சேமகேசி.

அடித்து வைத்த சிலையாகவே நின்றான் சிங்கணன். சரியான சந்தர்ப்பம் மட்டும் கிடைத்தால் சிறு நரியும் எப்படி பெரும் வேங்கையைக் கூட வீழ்த்த முடியும் என்பதை நிரூபித்துக் காட்டிய சேமகேசி, மெல்லத் தனது பதவிக்குக் குறிவைக்கிறான் என்பதும் பல தலைமுறைகளாக சாளுக்கியருக்கு சோழர் மீதிருந்த பகையை மனத்தில் வைத்துக் கொண்டு பழி தீர்க்க முயல்கிறான் என்பதும் புரிந்தது சிங்கணனுக்கு.

மீண்டும் சிங்கணனை வணங்கிய சேமகேசி, "படைத்தலைவரே, நான் இப்பொழுதே சோழ நாட்டுக்குப் புறப்படுகிறேன். உத்தரவு தாருங்கள்" என்று மேலுக்குப் பணிவைக்காட்டிவிட்டு சிங்கணன் உத்தரவுக்கும் காத்திராமல் திரும்பி வெளியே நடந்தான்.

சிங்கணன் முகத்தில் குரூரப் புன்முறுவலொன்று பிறந்தது. "சேமகேசி! என்னை அகற்றிவிட்டு சோழ நாட்டை அத்தனை எளிதாக அடைய இயலுமென்று எண்ணுகிறாயா? உன்னைப் போல் இன்னும் பத்து ஒற்றர்களையும் சேர்த்து விழுங்கவல்ல துறவி அங்கிருக்கிறார். போதாக் குறைக்கு ஆதித்யனும் அங்கு தான் இருப்பதாகக் கேள்வி" என்று சற்று உரக்கவே கூறிய சிங்கணன், மீண்டும் மதுக்குப்பியை நோக்கி நடந்தான்.

(தொடரும்)

---

**"திருமணத்திற்குப் பிறகு சினிமாவில் நடிப்பீங்களா?"**

**"கணவர் அனுமதி கொடுத்தா நடிப்பேன்."**

**"அனுமதி கொடுக்கலைன்னா?"**

**"அடுத்த கணவர் அனுமதி கொடுத்தா நடிப்பேன்!"**

— வெ. ராஜாராமன்



**சமீபத்தில் வெளிவந்திருக்கும் 'பிரிவினைக்குப் பின்' என்கிற நூல், யூகோஸ்லாவியாவிலிருந்து சிதறுண்ட நாடுகளைப் பற்றியது. போஸ்னியா, செர்பியா போர்கள் பற்றி தினசரிகளில் பார்க்கிறோம். அவற்றுக்கான காரண காரியங்களைத் தீவிரமாக அலசும் இந்நூலின் ஆசிரியர் கண்ணன், வழக்கறிஞர். ஐ.நாவில் பணியாற்றியவர். ஆழ மான சிந்தனைகள் விரவிக் கிடக்கும் நூலிலிருந்து சில பகுதிகள்....**


* கண்ணன்

# போருக்கு எதிராக ஒரு குரல்!

● ஜாக்ரப் நகரைத் தெரிந்து கொள்ளப் புறப்பட்டேன். தெருக்களில் இருமருங்கும் ஓர் இறுக்கத்தைப் பிரதிபலித்த கம்யூனிசக் கட்டடங்கள். அழுக்கு மண்டியனவாய்க் காட்சியளித்தன. கம்யூனிசத்தைத் தங்களின் கட்டடங்களில் படிந்திருந்த அழுக்கி லிருந்தும் குரேஷியர்கள் துரத்தியிருக்கலாம் என்று எனக்குப் பட்டது. நகரம் நெடுகப் புறாக் கூண்டு போன்ற பல மாடிக் குடியிருப்புகள், குன்றுகளும் மலைகளுக் கிடையேயும் அமைந் திருந்த ஜாக்ரப் நகரத்தின் எழிலை வெகு வாய்ச் சிதைக்க முயற்சி செய் திருந்தன...

● காரின் ஹெட் லைட்டுகளை நீள் கதிக்கு மாற்றினேன். எதிரில் தீப்பிழம்புகளைப் போல் ஜொலித்த இரண்டு கண்கள் எங்களையே பார்த்துக் கொண்டிருந்தன. யாரோ துப்பாக்கியால் குறிபார்க்கிறார்கள் என்று தோன்ற, கைகள் உடனே சில்லிட்டு விட்டன. ஒருகணம்தான். அடுத்த நிமிடம் அந்தத் தீப்பிழம்புக் கண்களின் சொந்தக்காரர் துரித கதியில் சாலையில் குறுக்கே பாய்ந்தார். நிம்மதியும் வெட்கமும் ஒன்றும் நேராது என்ற உணர்வும் ஒரே நேரத்தில் எங்களைப் பற்றின. அந்தக் கண்களின் சொந்தக்காரர் எதிரிப் போர் வீரன் அல்ல. ஓர் நரி...

● விடுதலைப் போரில் எதற்கு மடி கிறோம் என்றே தெரியாமல் மடிந்து விடும் அப்பாவி மக்களின் உயிருக்கோ, வருங்காலத் திற்கோ நாம் எந்த நிலையில் பொறுப்பேற்க முடியும் என்பதை ஆயுதப் போர் முறையை மட்டுமே நம்புவோர் எண்ணிப் பார்க்க வேண் டாமா? இந்தியப் பிரிவினையின் போது நடந்த மக்கள் பரிமாற்றத்தால் நேர்ந்த அவலத்தைக் கண்ட ஜின்னா, மிகவும் துன்பத்தில் ஆழ்ந்தா ராம். 'இத்தனை பேருக்கு இவ்வளவு துன்பங் கள் வந்து சேரும் என்று தெரிந்திருந்தால் நான் பிரிவினையையே வலியுறுத்தியிருக்க மாட் டேன்' என்று ஜின்னா தமது கடைசி நாளில் சொன்னதாக ஒரு தகவல். இது உண்மையோ இல்லையோ - ஆனால் பிரிவினை, வன்முறை விளைவிக்கும் அவ லங்களைக் காண்கையில் யாருக்கும் இப்படித்தான் தோன் றும்....

● பிரிவினைவாதிகள் சுரண்டலில் இருந்தும் எதேச்சாதிகாரத்திலிருந்தும் விடுபடப் பிரிவினை கேட் டது அந்தக் காலம். இன்று சமத்துவம் இல்லை, தனித் துவம் இல்லை என்னும் அடிப்படையிலேயே பிரி வினைவாதங்கள் எழுப்பப் படுகின்றன. கனடாவின் கியூபெக், தனித்துவத் தேடலுக்கு நல்ல உதாரணம். சமத்துவம் கேட்டே தொடங் கியது தமிழர் பிரச்னை அண்டை இலங் கையில். இந்தச் சமத்துவ, தனித்துவக் கோரிக் கைகளுக்கு ஆயுதமேந்திய போர்தான் தீர்வா...?

'போரிட்டுப் போரிட்டுப் பூக்காமல் காய்த்துப் போகும்' ஒரு விடுதலைப் போர் மட்டுமே பரணி பாடத் தகுதியான ஒன்றா? எத்தனை தலைமுறைகளை உரமாய் இட்டும், எவ்வளவு உயிர்களை நீராய் வார்த்தும் இந்த விடுதலைப் பயிர் காக்கப்பட வேண்டும்? எவ்வளவு தியாகம் தேவை விடுதலைக்கு? இத்தனை தியாகங் களுக்குப் பிறகு கிடைக்கக் கூடிய அந்த மயான நாட்டில் எவர் மிஞ்சி இருப்பார்கள்? ராஜதந்திரம் மூலம் பல வெற்றி களைக் காணக்கூடிய இருபதாம் நூற்றாண் டின் இறுதியிலும் போர்தான் தீர்வா?

ராஜதந்திரத்தையும் பேச்சு வார்த்தையை யும் ஒதுக்கி விட்டுப் போரே வெற்றிதரும் என்று செயல்பட்டுத் தோற்றுப் போன செர்பி யரின் கதைதான் குரேஷிய, பாஸ்னிய சோகக் கதை.

தொகுப்பு : **சுப்ர.பாலன்**

**'பிரிவினைக்குப் பின்'/இரா. கண்ணன்/ தேன்பாவை பிரசுரம், *1/2* நீதிபதி ஜம்பு லிங்கம் சாலை, சென்னை – *4*. ரூ. *55/-***

## 16. முதல் போர்

அதிகப்படியான உபசாரம் கிட்டும் போது தன்னைப் பற்றி பெருமையாக நினைத்துக் கொள்வது மனித இயல்பு. உடன் அபரிமிதமான மரியாதையும் கிடைக்கும் போது எதிரிலிருப்பவர்களை தனக்கு அடங்கியிருப்பவர்களாகவும் மனம் நினைத்துக் கொள்கிறது. உள்நோக்கமோ, அதன்பின் மறைந்திருக்கும் அபாயமோ புலப்படுவதில்லை. போசள மன்னனின் ஓலையுடன் தஞ்சைக் கோட்டையில் நுழைந்த சேமகேசிக்குக் கிடைத்த வரவேற்பும் மரியாதையும் 'போசளர்களால் சோழர்கள் எந்த அளவிற்கு அடிமைப்படுத்தப் பட்டிருக்கிறார்கள்!' என்றுதான் அவனை எண்ண வைத்தது.

வீரர்கள் ஓடிவந்து புரவியைப் பிடித்த விதத்தையும், பணிப்பெண்கள் தொடர வாசலிலேயே நின்று வரவேற்ற கோட்டைத் தலைவனையும், அரண்மனைக்குள் நுழைந்ததும் முகமன் கூறி வரவேற்று அமருமாறு வேண்டிக் கொண்ட பேரமைச்சரையும் கண்ட சேமகேசி, தன்னை ஏதோ சிற்றரசன் என்றே எண்ணிக் கொண்டான்!

அந்த அதீதமான உபசாரம் அவன் புத்தியை மறைத்து விட்டதால், அரண்மனை முழுவதும் மருந்துக்குக் கூட போசள வீரர் யாரும் இல்லாததையும் சோழ வீரர்களே நிறைந்திருப்பதையும் சோழ மன்னனுக்கு நேரிடையாக அளிக்கப்பட வேண்டிய அந்த ஓலையை, பேரமைச்சரே பெற்று பிரித்துப் படிக்க முற்பட்டதையும் அவன் கவனிக்கவில்லை.

ஓலையைப் படித்து முடித்து அவனிடமே அளித்த அமைச்சர், வாயிலில் நின்ற சோழ வீரனைக் கைகளைத் தட்டி அழைத்தார். "வீரனே! போசள வீரர் தலைவனிடம் சென்று மன்னர் உத்தரவு வந்திருப்பதாகவும் எல்லா வீரர்களையும் கோட்டை வாயிலில் அணி வகுக்கும்படியும் தெரிவித்து விடு" என்றார்.

சேமகேசி திகைத்தான். "அமைச்சரே, என்ன இது? சோழ மன்னரிடம் இதற்கு அனுமதி பெற வேண்டாமா?" என்று வினவினான்.

பேரமைச்சரின் பதில் உடனே வந்தது. "தேவை இல்லை. சிங்கணர் தமது வீரர்களைச் சோழ நாட்டில் இயக்க இதுவரை அனுமதி கேட்டதில்லை. மன்னரும் மறுப்பேதும் கூறியதில்லை. மேலும் தற்போது மன்னரும் இங்கில்லை" என்றார்.

சேமகேசிக்கு ஒன்றும் விளங்கவில்லை. "மன்னர் எங்கிருக்கிறார்?" என்றான்.

"மன்னர் தில்லையம்பதியில் இருக்கிறார். அவர் அரண்மனைக்கு வந்து பல மாதங்கள் ஆகின்றன. அனைத்துப் பொறுப்புகளையும் சைவத் துறவியாரே கவனிக்கிறார். தங்களுக்கு ஏதும் விளக்கம் கேட்க வேண்டியிருந்தால் அதைத் துறவியாரிடமே கேட்கலாம்" என்றார் அமைச்சர்.



"இந்த எளியவனைப் பற்றி என்ன சர்ச்சை நடக்கிறது இங்கே?" – கணீரென்ற குரல் ஒன்று குறுக்கிட்டது. அறை வாயிலில் நெற்றியிலும் உடலிலும் நீறு பளீரிட, சிவந்த ஆஜானுபாகுவான மேனியுடன் சிவப் பழமாகத் துறவியார் நின்றிருந்தார்.

எழுந்து நின்று அவரை வணங்கிய அமைச்சர், "போசள மன்னர் இங்கிருக்கும் தமது வீரர்களை அழைத்துச் செல்ல இவரிடம் ஓலை கொடுத்து அனுப்பியிருக்கிறார்" என்றார்.

"போசள மன்னர் உத்தரவை உடனடியாக நிறைவேற்ற ஏற்பாடு செய்யுங்கள் அமைச்சரே" என்ற துறவியார், சேமகேசியை நோக்கித் திரும்பினார். "இருந்தாலும் வீரரே, உங்கள்

தண்டநாயகர் சிங்கணரே வந்து அழைத்துச் செல்லலாமே, மன்னர் உத்தரவு எதற்கு?" என்றார்.

''சிங்கணர் தற்போது வரக்கூடிய நிலையில் இல்லை. எனவே என்னை அனுப்பியிருக்கிறார்'' என்றான் சேமகேசி.

"ஏன், சிங்கணருக்கு என்ன ஆயிற்று? ஏதேனும்...?" துறவியாரின் முகத்திலும் அமைச்சரின் முகத்திலும் சொல்லி வைத்தாற்போல ஒரே சமயத்தில் கவலை படர்ந்தது. அந்தக் கவலை உண்மையா அல்லது போலியா என்பதை நிர்ணயிக்க அந்த சாளுக்கிய நாட்டின் திறமையான ஒற்றனால் கூட இயலவில்லை!

சற்றுத் தடுமாறிய சேமகேசி, "இல்லையில்லை, அவருக்கு ஒன்றும் நேரவில்லை. மன்னர் வேறு பணிகளுக்காக அவரை நியமித்திருக்கிறார்'' என்றான்.

அவன் தடுமாற்றத்தைக் கவனித்த பேரமைச்சரின் முகத்தில் நகைப்பு தோன்றியது. துறவியாரின் பெருவிழிகள் விடுத்த எச்சரிக்கையைக் கண்டவர் அந்த நகைப்பை சோகமாக மாற்றிக் கொண்டார். தொடர்ந்து துறவியார் கூறினார் : "வீரரே, தற்போது சோழ நாட்டைக் காப்பவர்கள் போசள வீரர்கள்தாம். எனவே தங்களது பணி முடிந்த பிறகு இங்கு ஒரு ஆயிரம் வீரர்களையாவது அனுப்பி வைத்தீர்களானால் நலமாக இருக்கும்."

தஞ்சைத் துறவியாரைப் பற்றி இதற்குமுன் தான் கேள்விப்பட்டிருந்தவை அனைத்தும் தவறென்றே தீர்மானித்த சேமகேசி, இழுத்த இழுப்பிற்கு வளையும் துறவியையும் அமைச்சரையும் பார்த்த பார்வையில் சற்று ஏளனமும் தெரிந்தது. ''வீரர்களைத் திருப்பியனுப்புவது குறித்து தற்பொழுது ஏதும் கூற இயலாது துறவியாரே! எனினும் இதைப் பற்றி சிந்தித்துப் பார்க்கிறேன்'' என்றான் அகந்தை



விஷ்வக்சேனன்

## கண்ணீர் குடிக்கும் பூச்சிகள்!



அவ்வளவு பெரிய யானைக்கும் ஒரு தொல்லை உண்டு. தருவது ஹைப்போகுரோஸிஸ் பேய்ன்ஸி ஜெரி! பெயரைப் பார்த்துப் பயப்பட வேண்டாம்; ஒருவித அந்துப் பூச்சியின் அறிவியல் பெயர்தான் இது. இப்பூச்சி, தனது 'உறிஞ்சி'யை யானையின் கண்களில் விடுகிறது. அதனால் யானையின் கண்களில் எரிச்சல் ஏற்பட்டுக் கண்ணீர் வழிய ஆரம்பிக்கிறது. இந்தப் பூச்சி அந்தக் கண்ணீரை ஆசையோடு உறிஞ்சிக் குடிக்கிறது! இந்தப்பூச்சி மட்டுமல்ல, இதுபோல் பல பூச்சிகள் விலங்கினங்களின் கண்ணீரை ஆவலோடு குடிக்கின்றன. நமது கண்களைச் சுற்றிக்கூட சில சமயங்களில் கண்கொசுக்கள் பறக்கின்றனவே, அதுவும் கண்ணீருக்காகத்தான்!

நன்றி : கலைக்கதிர்

---

நிரம்பிய குரலில்.

வாயிலில் சோழ வீரனொருவன் நுழைவது தெரிந்தது. உள்ளே நுழைந்து அமைச்சரையும் துறவியையும் வணங்கியவன், "பிரபு, தங்கள் உத்தரவுப்படி அனைத்து வீரர்களும் கோட்டை வாயிலில் அணிவகுத்து நிற்கிறார்கள்" என்று அறிவித்தான்.

ஒரு தினமாவது தஞ்சையில் தங்க வேண்டியிருக்குமென்று எண்ணியிருந்த சேமகேசிக்கு, அரைஜாம நேரத்தில் வந்த பணி முடிந்ததும், ஒரு தினம் முன்னதாகவே சென்று உத்தமபாளையத்தைக் கைப்பற்றி விடலாம் என்ற நினைவும் பெரும் சந்துஷ்டியை அளித்தது. கறுத்த முகத்தில் பற்கள் பளீரிட, சிறு நகைப்பொன்றை படரவிட்டுக் கொண்டவன், 'சோழ நாட்டு வீரர்கள் சுறுசுறுப்பான அடிமைகள்' என்று எண்ணிக் கொண்டான்.

அமைச்சரிடமும் துறவியாரிடமும் விடைபெற்ற சேமகேசி, கோட்டை வாயிலில் குவிந்திருந்த போசள வீரர்களை நடத்திக் கொண்டு, அப்பொழுதே மேற்கு நோக்கிப் பயணப்பட்டான். படைகளின் பயணம் தொடரத் தொடர வழியெங்கும் பல ஊர்களிலுமிருந்த போசள வீரர்கள் படையில் வந்து இணைந்து கொண்டதையும் ஏறக்குறைய சோழ நாட்டிலிருந்த போசள வீரர் அனைவரும் குவிந்து விட்டதையும் கவனித்தான். 'உத்தமபாளையத்தில் வெற்றி கிடைக்கப் போவது திண்ணம்' என்ற மகிழ்ச்சி ஏற்பட்டாலும், தான் தஞ்சையிலிருந்த அரை ஜாம நேரத்தில் அத்தனை ஊர்களுக்கும் படைப் பிரிவுகளுக்கும் துறவியாரால் எப்படி செய்தி அறிவிக்க முடிந்தது என்ற சந்தேகமும் பலமாகத் தோன்றியது.

சோழ நாட்டு எல்லை நெருங்கிக் கொண்டிருப்பதைக் கவனித்த சேமகேசி எதற்கும் வீரர் தலைவனிடம் இதுபற்றி விசாரித்து விடலாமென்று தீர்மானித்தான். வீரர் தலைவனை நோக்கித் தனது புரவியைச் செலுத்தியவன், "உபதலைவரே, இத்தனை துரிதமாக உங்களால் அனைத்து வீரர்களையும் எப்படி ஒன்று சேர்க்க முடிந்தது?" என்றான்.

போசள உபதலைவனின் எண்ண ஓட்டம் வேறுவிதமாக இருந்தது. கடந்த சில ஆண்டுகளாகத் தஞ்சையிலிருந்த போசள வீரர்களுக்குத் தலைமை வகித்த தனது நிலைமை திடீரென முன்பின் அறியாத வேற்று நாட்டவனால் மாறி விட்டதும் அவன் உத்தரவை ஏற்று நடக்க மன்னர் இட்டிருந்த கட்டளையும் அவனைக் கொதிக்கச் செய்திருந்ததால் சேமகேசியின் கேள்விக்கு அவனிடமிருந்து வெறுப்புடனேயே பதில் வந்தது : "இதில் துரிதம் ஒன்றுமில்லை தலைவரே! நீங்கள் மன்னர் ஓலையுடன் வருவதாகவும் போசள வீரர் அனைவரும் ஒன்று திரள வேண்டும் என்றும் சோழ அமைச்சர் நேற்று முன்தினமே அறிவித்தார். மற்ற ஊர்களில் இருக்கும் படைப் பிரிவுகளுக்கும் புரவி வீரர்களைக் கொண்டு அறிவித்து விட்டார். எனவேதான் நீங்கள் வந்தவுடனேயே நமது வீரர்கள் புறப்பட முடிந்தது."

போசள உபதலைவனது பதிலைக் கேட்ட சேமகேசியின் தலை சுழலத் தொடங்கியது. 'தண்டநாயகன் சிங்கணனுக்கே கூட, தான் அறிவித்த பின்பே தெரிந்த செய்தி, இரண்டு தினங்களுக்கு முன்பாகவே பேரமைச்சருக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?' என்ற கேள்வி அவன் சித்தத்தைக் குடையத் தொடங்கியது. சைவத் துறவியாரின் சிரித்த முகமும்



**"காசில்லேன்னு தெரிஞ்சும், என்னை ஏன், டிபன் சாப்பிடக் கூப்பிட்டே?"**

**"மாவாட்டும் போது, சும்மா ஒரு பேச்சுத் துணையா இருக்குமேன்னு தான்...!"**

**— ஆர். வசந்தகுமார்**

---

பெருவிழிகளும் அவன் மனக்கண்களில் எழுந்து அவனைப் பார்த்துப் பெரிதாக நகைத்தன. 'ஆயிரம் வீரர்களையாவது தஞ்சைக்குத் திருப்பியனுப்ப வேண்டும்' என்று கேட்டுக் கொண்ட துறவியாரின் வார்த்தைகளின் பொருள், சோழ எல்லையில் பெரிதாக எழுந்து நின்ற தோகை மலையை நெருங்கியதும்தான் புரிந்தது அவனுக்கு.

தோகை மலையைக் கடந்ததும் திரும்பி தென்மேற்கில் சென்ற பாதையை அடைந்து விட்டால் நேராக உத்தமபாளையத்தை அடைந்து விடலாமென்பதை அறிந்திருந்தவன், வீரர்களை துரிதமாகப் பின்தொடர உத்தர விட்டு விட்டுத் தனது புரவியில் முன்னால் விரைந்தான். அடிவாரத்தை நெருங்க முற்பட்டவனது செவிகளில் எங்கோ பலமாக ஒலிக்கத் தொடங்கிய முரசுகளின் ஒலி கேட்டது. மலையடிவாரத்தைக் கடந்து, தென்மேற்குப் பாதையை அடைந்தவன் திகைப்பில் அப்படியே உறைந்து நின்றான். அவனையும் போசள வீரர்களையும் எதிர்பார்த்துக் காத்திருப்பது போல் அவன் எதிரில் பாண்டியர் படைப் பிரிவு ஒன்று நின்றிருந்தது. படைகளின் முகப்பில், பூரண கவசங்களுடனும், இடையில் தரித்த நீண்ட வாளுடனும் ஒரு சாம்பல் நிறப் புரவியில் அமர்ந்திருந்தான் ஆதித்ய பாண்டியன். அடுத்திருந்த புரவியில் தோளின் பின்புறமிருந்து தலைநீட்டிய சீனத்து வாளுடனும், கழுத்திலிருந்து ஊசலாடிய கடல் நாகம் பதித்த பெரும் பதக்கத்துடனும் மஞ்சள் முகத்தில் சிறு விழிகள் பளிச்பளிச்சென்று மின்ன அமர்ந்திருந்த சீனத்து வாலிபனைக் கண்ட சேமகேசிக்கு, தஞ்சைத் துறவியார் தன்னையும் போசள வீரர்களையும் எத்தகைய படுகுழியில் தள்ளியிருக்கிறார் என்பது புரிந்தது. அவன் பின்னால் வந்து கொண்டிருந்த உபதலைவனும் வீரர்களும் திகைத்து அப்படியே நின்றார்கள்.

அவர்கள் நின்ற மறுகணம் எதிரில் புரவியில் அமர்ந்திருந்த பாண்டிய இளவலின் வாள் வானை நோக்கி உயர்ந்து இருமுறை ஆடியது. அடுத்து மலைச்சரிவின் பக்கவாட்டிலிருந்து கடகடவென்ற பெரும் ஒலி எழுந்தது. வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த யந்திரப் பொறிகள் தொடர்ந்து நூற்றுக்கணக்கில் வேல்களையும் அம்புகளையும் சரமாரியாகப் பொழியத் தொடங்கின. ஐந்தாறு சுற்றுக்கள் சுழன்ற பின்பு பொறிகளை போசளர் அணிவகுப்பின் மையப் பகுதியை நோக்கித் திருப்புமாறு சைகை செய்த ஆதித்யன், வாளை உயர்த்திய படியே அந்த சாம்பல் நிறப் புரவியை முன்னோக்கிப் பாய விட்டான்.

யந்திரப் பொறிகளால் ஏற்கெனவே சிதைந்து விட்ட அணிவகுப்பை சரிக்கட்ட இயலாமல் திணறிய போசளர் படை, நேர் எதிரில் வந்து மோதிய பாண்டிய வீரர்களின் தாக்குதலில் இன்னும் திணறத் தொடங்கியது.

பாண்டியர் படைகளின் முகப்பில் முன்னால் பாய்ந்த யுவான், தமிழகத்தில் தான் கலந்து கொள்ளும் முதற்போர் அது என்பதால் பெரும் உற்சாகத்திலிருந்தான். அதிவேகமாகச் சுழன்று, நேர் செங்குத்தாகப் பாய்ந்த அந்த சீனத்து வாள், போசள வீரர்களை மளமளவென்று சரித்தது. அந்த வீச்சின் முறையை அவர்கள் நிர்ணயிக்கும் முன் உடலில் புகுந்து புகுந்து புறப்பட்ட அவன் வாள் விளைவித்த ஓலங்களையும் அது சுழன்ற இடமெல்லாம் போசள வீரர்கள் படபடவென்று சரிந்ததையும் கவனித்து வியந்தபடியே வாளை வீசிய ஆதித்யனின் கடையிதழ்களில் ஒரு முறுவல் நெளிந்தது.

சேமகேசியும் அவன் படைப் பிரிவும் பின்வாங்கத் தொடங்குவதை கவனித்த ஆதித்யனின் வாள், மீண்டும் உயர்ந்து இடமும் வலமுமாக ஆடியது. அந்தச் சைகையின் பொருளைப் புரிந்து கொண்ட பாண்டியர் படை, அடுத்து அணிவகுப்பை மாற்றிக் கொண்டு போரிட்டபடியே அர்த்தசந்திர வியூகமாக அணிவகுக்கத் தொடங்கியது. யந்திரப் பொறிகளும் நகர்த்தப்பட்டு போசளர் படையின் வால் பகுதியை நோக்கித் திரும்பி தாக்கத் தொடங்கின.

சுற்றி வளைத்த அர்த்தசந்திர வியூகத்தையும் பொறிகளின் தாக்குதல் பின்புறத்தில் பலப்பட்டு விட்டதையும் கண்ட சேமகேசிக்கு இனி தான் பின்வாங்குவதோ, தப்புவதோ சாத்தியமல்ல என்பது புரிந்ததால் போசள வீரர்களை ஊடுருவி உள்ளே நுழைந்து விட்ட யுவானை

நோக்கித் தனது புரவியை செலுத்தினான். சேமகேசி தன்னை நோக்கி முன்னேறுவதைக் கவனித்த யுவானின் பகர வடிவ மீசை ஒரு பக்கமாக இழுபட்டது. அவன் கழுத்திலிருந்து ஊசலாடிய பதக்கத்திலிருந்த கடல்நாகம் சேம கேசியைப் பார்த்து ஒருமுறை 'சீறியது'!

கரகரவென வாளைச் சுழற்றியபடியே யுவானை நெருங்க முற்பட்ட சேமகேசியைக் கவனித்த ஆதித்யன், குனிந்து அந்த சாம்பல் நிறப் புரவியின் வலது செவியில் ஏதோ வார்த்தைகளை ஓதினான். உடனே அந்தப் புரவி தன் முன்னங்கால்களை உயர்த்தி ஒருமுறை பயங்கரமாகக் கனைத்தது. எதிரிலிருந்த வீரர்களை நசுக்கியபடி உயர்ந்து எழுந்து பாய்ந்து, அசுரத்தனமாக விரைந்த அந்த சாம்பல் நிறப் புரவி சேமகேசியின் பாதையில் இடைமறித்து குறுக்கே புகுந்தது. ஆதித்யனின் நீண்ட வாள் சேமகேசியின் வாளைத் தீப்பொறி பறக்க உரசி மோதியது.

வேவு பார்த்த குற்றத்திற்காகவும், கொங்கு நாட்டு இளவரசியைக் கடத்திய குற்றத்திற்காகவும் உரிய தண்டனையை சேமகேசியின் தோள்களிலும் மார்பிலும் வழங்கிய ஆதித்யனின் வாளைத் தடுக்க சேமகேசி எடுத்த முயற்சிகளோ, சாளுக்கிய முறையிலும் போசளர் முறையிலும் மாற்றி மாற்றி வீசிய வாளின் வீச்சுக்களோ பயன் அளிக்கவில்லை.

அந்தப் போர் முடிந்தபோது தன் கறுத்த உடல் முழுவதும் ஆதித்யனின் வாள் தீட்டிய போர்க் கவிதை எழுதப்பட்டிருக்க, மண்ணில் விழுந்து கிடந்தான் சேமகேசி. ஆயுதங்களை இழந்தவர்களையும் காயங்களுடன் உயிர் தப்பி ஓடியவர்களையும் துரத்திக் கொன்று விட முயன்ற யுவானைத் தடுத்தான் ஆதித்யன். அவனை வியப்புடன் பார்த்தான் யுவான். "இளவரசே, போர் என்று வந்த பின்பு எதிரிகளை முற்றிலுமாக அழிக்க வேண்டும் என்பதைத் தவிர சீனத்தில் வேறு எதையும் பார்ப்பதில்லை. அவர்களை முழுவதுமாக அழிக்க எனக்கு அனுமதி அளியுங்கள்'' என்றான் யுவான் சற்று வேகத்துடன்.

ஆதித்யனின் பதில் திடமாக வந்தது. "இல்லை யுவான். தமிழகத்தில் யுத்த தர்மம் என்று ஒன்று உண்டு. இதைவிடப் பெரும் எதிரியை அடுத்து நாம் எதிர்கொள்ள வேண்டும். காலத்தை வீணாக்காமல் படைகளை மேற்கு நோக்கித் திருப்பு'' என்று உத்தரவிட்டான்.

ஆதித்யன் குறிப்பிட்ட அந்தப் பெரும் எதிரி அதே சமயத்தில் கொங்கு நாட்டுத் தலைநகர் ஸ்காந்தபுரத்தின் அரண்மனைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)



## அருள்வாக்கு

தியானத்தில் ஒருமுகப்படுவதற்கு பெரிய இடைஞ்சல் என்ன? இந்த மனசு ஓயாமல் ஆடிக்கொண்டிருப்பதுதான். மனத்தினால்தான் எல்லா விதமான கஷ்டங்களும் உண்டாகின்றன. மனத்தில் ஏற்படும் ஆசையே அத்தனை கஷ்டங்களுக்கும் காரணம். 'ஆசைப்படாதே' என்று இந்த மனசை இழுத்துப் பிடித்து நிற்க வைக்க முடியவில்லை.

நாம் 'ஒரு வஸ்துவை நினை' என்று இந்த மனசிடம் சொன்னால், அது ஏதோ சொற்ப காலம் அதை நினைப்பது போல இருந்து, வேறு எங்கோ பாய்ந்து விடுகிறது. தியானம், சாந்தி என்றெல்லாம் நான் உபந்நியாசத்தில் சொல்கிறபோது ஒரு க்ஷணம் உங்கள் மனம் அடங்கினாற்போல் தோன்றும், ஆனந்தமாய் இருக்கும். ஆனால் அடுத்த க்ஷணமே மனம் எங்கோ ஓடி, சாந்தி குலைந்து போகிறது.

'பேசாமல் இரு' என்று கட்டளை போட்டு வாயை மூடிக் கொண்டு விட்டால் அது ஓரளவாவது பேசாதிருக்கிறது. 'பார்க்காதே' என்று உத்தரவு போட்டுக் கண்ணை மூடிக் கொண்டு விட்டால், கண் ஓரளவாவது பார்க்காமல் இருக்கிறது. ஆனால் இந்த மனத்திடம் மட்டும் 'நினைக்காமல் இரு' என்று எவ்வளவுதான் முட்டிக் கொண்டாலும் அது கேட்பதில்லை. நாம் 'நினை' என்றால் மனம் நினைக்க வேண்டும், 'நினைக்காதே' என்றால் நினைக்காமலிருக்க வேண்டும். அப்போதுதான் நமக்கு மனம் ஸ்வாதீனமாயிற்று, நமக்கு சித்த ஸ்வாதீனம் இருக்கிறது என்று அர்த்தம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

## சிறுகதை

"உங்களை சூப்ரண்டென்ட் வரச் சொல்றாரு."

அட்டெண்டர் காதருகே கிசுகிசுத்து விட்டு நகர்ந்ததும், பியூரெட்டில் சிரத்தையாக திரவம் நிரப்பிக் கொண்டிருந்த நான் சட்டென்று கலைந்து போனேன். காட்டன் வேஸ்டில் கை யைத் துடைத்துக் கொண்டு லேப் சூப்ரண் டென்டின் அறையை அணுகி எட்டிப்



பார்த்தேன்.

"குருமூர்த்தி, ரொம்ப அர்ஜண்ட்! இந்த காஸ்டிக் சாம்பிளைப் பாத்துக் குடேன்."

சூப்ரண்டென்ட், டேபிளின் மீது இருந்த பழுப்பு நிறப் பாட்டிலைச் சுட்டிக்காட்டினார். நான் தயக்கத்தோடு மென்று விழுங்கினேன்.

"காஸ்டிக் எல்லாம் முருகவேல்தான்..."

நான் முடிக்கும் முன்பாக பெருமூச்சு விட்ட அவர் ஜன்னல் வழியே பார்வையை ஓட்டினார். என் கண்கள் தொடர்ந்தன... சற்று தூரத்தில் கட்டுமானப் பணியிலிருந்த புது ப்ளாண்டின் அருகே கலவை சுமக்கும் பெண் ஒருத்தியிடம் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண் டிருந்தான் முருகவேல்.

"அபிஷியலா உன்னைக் கேட்கல குரு மூர்த்தி, அர்ஜண்ட், அதனாலதான்" அவர் குரல் கெஞ்சுவதைப் போல ஒலிக்கவும், அதற்கு மேல் தாமதிக்க என்னால் முடிய வில்லை. பாட்டிலைச் சுமந்து கொண்டு இடம் பெயர்ந்தேன். இது என் இயல்பு. கறாராக மறுத்துப் பேசுவதோ, கோடு இழுத்தாற்போல் கொள்கை காப்பதோ என்னால் ஆகாத ஒன்று!

முருகவேல் அப்படியல்ல! சரியான முன் கோபக்காரன் - ஆறடி ஆகிருதிக்கு கரணை கரணையான உடல் கட்டோடு பார்ப்பவரின் வயிற்றைக் கலக்குபவன். முறுக்கு மீசையும், லேசாகச் சிவப்பேறிய கண்களுமாக கவ னத்தை சிதற அடிப்பவன். சட்டென்று சத்தம் போட்டு எதையும் சாதித்துக் கொள்பவன். இல்லையென்றால் ஷிப்டுக்கு வந்து முழுசாக இரண்டு மணி நேரம் கூட ஆகவில்லை, இப் படி எங்கோ மூலையில் சுற்றிக் கொண் டிருப்பானா!

நான் மௌனமாக டேபிளுக்குத் திரும்பி மேற்கொண்டு வேலையில் இறங்கும் முன்பாக முதுகில் பளீ ரென்று அடி விழுந்தது. நிமிர்ந்தேன். முருக வேல்!

"என்ன மாப்ளே - இன்னிக்கும் என் வேலையை உன் தலையில கட்டிட்டானா?"

எகத்தாளமாக முருகவேல் சிரிக்கவும் எனக்கு எரிச்சலாக இருந்தது.

"நீ செய்யறது உனக்கே நல்லா இருக்கா - வேலையப் பாக்காம வெட்டி அரட்டை எதுக்கு?"

பயத்தில் குரல் கம்ம, எப்படியோ கேட்டு விட்டேன் - என் இதயம் தடக்தடக் என்று அடித்துக் கொள்ள, முருகவேல் கலீரென்று நகைத்தான்.

"அதான் - ஏமாந்த சோணகிரி நீ இருக் கப்ப எனக்கு என்ன கவலை - 'தில்' இருந்தா சூப்ரண்டென்ட் என்கிட்டே இல்ல சொல்லி இருக்கணும் - நானும் வேலைக்குத்தானே வந் திருக்கேன் - மாட்டேன்னா சொல்லப்

# வனவிலங்கு

போறேன். என்னை 'யூஸ்' பண்ணிக்கத் தெரியாததும், முடியாததும் அவங்க முட்டாள் தனம்."

முருகவேல் பட்டு கத்திரித்தாற்போல் நச் சென்று பதில் சொல்லவும் எனக்கே யோசனையாகத்தான் இருந்தது. ஒருவேளை என்னைப் போன்றவர்கள் எல்லாம் ஏமாந்த சோணகிரிகள்தானா! மிரட்டவும், சத்தம் போடவும் தெரிந்திருந்தால் தனி மரியாதை கிடைக்குமோ...

வாஸ்தவந்தான்! முருகவேலை அணுகிச் சொல்வதை கூட அவஸ்தையாய் உணர்பவர்கள், 'ஆமாம் சாமி' போடும் ஒரே காரணத்துக்காக, கொஞ்சமும் அனுசரணை இல்லாமல் அடுக்கடுக்காக வேலைகளை என் தலையில் ஏற்றி அழகு பார்க்கிறார்களே! இதை என்னவென்று சொல்வது!

"இதை வுடு மாப்ளே! புதன்கிழமை பொழுதோட பொட்டநேரி போறோம்! எனக்குப் பொண்ணு பாக்க! அப்புறம் ஓ.டி. அது இதுன்னு ஒப்பாரி வைக்காதே! ஆமா."

முருகவேல் தீர்மானமாகச் சொல்லிவிட்டு சூப்ரண்டென்டின் அறையை நோக்கிப் போனான். முருகவேல் எனக்கு நண்பன் என்பதோடு, ஒரு வகையில் தூரத்து சொந்தம் கூட. கடந்த இரண்டு வருடமாகப் பெண் தேடியும் இன்னும் அவனுக்கு செட்டாகவில்லை! பெண் பார்க்கப் போகும்போதெல்லாம், என்னையும் தவறாமல் இழுத்துப் போய் விடுவான்! பின்னே, இவனுடைய வீரப்பிரதாபத்தை எல்லாம் யார் அவிழ்த்து விடுவதாம்?

வெட்டி 'பந்தா'வோடு நோகாமல் நோன்பு கும்பிடும் முருகவேலுக்கு என்னைப் போன்ற இணக்கமான, யாரையும் எளிதில் கவர்ந்து விடும் 'எடுபிடி' தேவைப்பட்டதில் ஆச்சர்யமில்லை! முடியாது என்று சொன்னால் எங்கே என்னிடமும் முறைத்துக் கொள்வானோ என்ற பயம் உள்ளூர எனக்கு இருந்ததால் நானும் அவன் பின்னால் 'நாய்க்குட்டி'யானேன். வரும் புதன்கிழமை எப்படியோ!

நான் 'சாம்பிள் ரிப்போர்ட்டை' பவ்யமாக சூப்ரண்டென்டிடம் நீட்டிய போதுகூட முருகவேல் அவருக்கு எதிரே அமர்ந்து அரட்டை அடித்துக் கொண்டுதான் இருந்தான் - ரிப்போர்ட் கொஞ்சம் தாமதமாகி விட்டதற்காக அவர் என்னை செல்லமாகக் கடிந்து கொள்ளும்போது, முருகவேல் என்னைப் பார்த்து நமுட்டுச் சிரிப்பு சிரித்தான். எனக்கு இந்த முரண்பாடு முகத்தில் அறையாமல் இல்லை! என்ன செய்வது?

புதன்கிழமை. சொல்லிவைத்தாற்போல் முருகவேல் 'புல்லட்'டோடு வந்து விட்டான்! தழையத் தழைய பட்டு வேட்டியும், பளபளப்பாக முழுக்கை சட்டையும், மார்பில் செயினுமாக அவன் வண்டியில் உட்கார்ந்திருக்கும் கம்பீரத்தைப் பார்த்து நான் வாய் பிளந்து விட்டேன் - பின் ஸீட்டில் நான் தொத்திக் கொண்டது நிச்சயமாக திருஷ்டி பரிகாரமாகத்தான் தெரிந்திருக்கும்!

பொட்டநேரி கடை வீதியை ஒட்டிய மேல் பாதையில் வண்டியைத் திருப்பும் முன்பு இளநீர்க் கடையில் இருந்த கூட்டம் முருகவேலைக் கவர்ந்தது. கூட்டம், தகராறு என்றால் முருகவேலுக்கு 'குல்பி' சாப்பிடுவது போல. வழக்கம் போல வண்டியில் இருந்தவாறே என்னை விரட்டி விசாரிக்கச் சொன்னான் - நான் விவரம் சேகரித்துச் சொன்னதும், ஸ்டைலாக வண்டியை 'ஸ்டாண்ட்' செய்து விட்டு கூட்டத்தை அணுகினான். இளநீர் சாப்பிட்ட கணக்கில் குளறுபடி ஏற்பட்டு காசு கொடுப்பதில் கலாட்டா செய்து கொண்டிருந்தவனைப் பார்த்து, "கூடவோ, கொறைச்சலோ காசைக் குடுத்துப் போய்யா. இதுக்காக கடைவீதியை நாறடிச்சுக்கிட்டு..." என்று நியாயம் பேசினான். மேற்படி ஆள் இவனைப் பொருட்படுத்தாமல் பேசிக் கொண்டே போக, முருகவேல் யோசிக்கவில்லை - அவன் பின்னங்கழுத்தில் கைவைத்து நெட்டித் தள்ளினான். அவ்வளவுதான்! கூட்டம் நிசப்தமானது. எதிரும், புதிருமாக வந்து நின்ற வாகனங்களில் இருந்து சரிந்த ஜனங்கள் வேடிக்கைப் பார்க்க, நான் என் வாடிக்கையான கெஞ்சல், கொஞ்சல், இவைகளைப் பயன்படுத்தி, நிலைமையைக் கட்டுக்குள் அடக்கி, முருகவேலை 'பந்தா' கலையாமல் கழட்டிக் கொண்டு வர அரைமணி நேரத்துக்கு மேலாகி விட்டது.

விசிலடித்தபடி வண்டியை விரட்டிய முருகவேல், இதெல்லாம் என்னவோ அவனுடைய புருஷலட்சணம் என்பது போல புலம்பிக் கொண்டு வர, நான் அருவருப்பில்

ஜெரா

அமைதியானேன்.

"என்னடா மாப்ளே! மௌனமா வர்றே! என்ன கோவமா!"

"பின்ன.. குளிர்ச்சியாக்கும் - இது தேவையா - யாரையும் பயப்படுத்தி பணிய வைக்கிறது பெரிய விஷயமில்லே!"

முருகவேல் என்னின் சத்தத்தை மீறி பெரிதாகச் சிரித்தான் -

"மாப்ளே - அடுத்தவங்களை நம்ம தோள் மேல கை போட அனுமதிச்சேன்னு வச்சுக்க! அங்குல அங்குலமா முன்னேறி கழுத்தை அமுக்கப் பார்ப்பான்! தோளை தட்டிக்கிட்டு நின்னு பாரு, துண்டை எடுத்து இடுப்பில கட்டிகிட்டு நமக்கு கும்புடு போடுவான்!"

முருகவேலின் வியாக்கியானம் என்னை வெகுவாகக் கவர்ந்தது. "அட, ஆமாம்!" என்று அசைபோட வைத்தது. என் மௌனம் முருகவேலுக்கு நிறைய முனைப்பைக் கொடுத்து விட்ட உற்சாகத்தில் இன்னும் ஒரு படி மேலே போய் வாசலில் காத்திருந்த பெண் வீட்டாரிடம் பெரிதும் அலட்டிக் கொள்ள ஆரம்பித்தான்.

கடைவீதியிலேயே காத்திருந்து யாரும் முறைப்படி வரவேற்று கௌரவப்படுத்தவில்லை என்று வெளிப்படையாகக் கத்தினான். நான் குறுக்கே புகுந்து அவனையும் ஆசுவாசப்படுத்தி, அடுத்தவர்களிடமும் அன்பாக விளக்கம் சொல்லி, இங்கும் நிலைமையை நிதானப்படுத்த வேண்டியதானது.

முருகவேல் என் காதருகே குனிந்து, "சபாஷ்டா மாப்ளே, இப்படி சப்பைக்கட்டு கட்ட உன்னைத் தவிர யாராலயும் ஆகாது" என்று முணுமுணுத்த போது, இதற்காகப் பெருமைப்பட்டுக் கொள்வதா இல்லை சிறுமைப் பட்டுப் போவதா என்பதே எனக்குப் புரியவில்லை.

சம்பிரதாயப்படி பெண் பார்க்கும் படலம் தொடங்கியது - காப்பி தம்ளரை நீட்டிய மணப்பெண்ணைப் பார்த்ததும் முருகவேல் திறந்தவாய் மூடவில்லை! அழகு என்றால் அப்படி ஒரு அழகு! நளினம்! முகத்தில் அறிவின் முதிர்ச்சி! சத்தியமாக இதைவிட நல்ல பெண் முருகவேலுக்கு அமையும் என்று எனக்குத் தோன்றவில்லை. பொறாமை கூட மனத்தின் ஓரத்தில் லேசாகக் கால் பதித்தது.

பெண் மேச்சேரி ஹைஸ்கூலில் டீச்சராம் - நிறைய கவி அரங்கங்களிலும், பட்டிமன்றங்களிலும் கூட பேசுமாம்! அதற்கென்று ஒரு தனி இமேஜ் இருப்பது தெரிந்தது. இதை எல்லாம் கூட நான்தான் மெனக்கெட்டு ஓடி ஓடி ஆர்வமாக விசாரித்தேனே தவிர, முருகவேல் 'மாப்பிள்ளை பந்தாவை' சிறிதும் மாற்றிக் கொள்ளவில்லை.

பெண் பிடித்து விட்ட விஷயத்தைக் கூட முருகவேல் சார்பாக நான்தான் சொல்ல வேண்டியதானது. நாங்கள் வெளியே காத்திருக்க, கொஞ்ச நேரம் கழித்து பெண்ணின் தந்தை மெதுவாக வந்தார் - கைகளைக் கூப்பினார்.

"அப்போ..." என்று இழுத்தார். முருகவேல் என்னைப் பார்த்தான். நான் நிமிஷ நேரம் விழித்து விட்டு, "முகூர்த்தம் என்னிக்குன்னு பார்க்க பெரியவங்களை அனுப்பலாமுங்களா?" என்று நாசூக்காக விஷயத்தைக் கிளறினேன். அவர் பிடிகொடுக்காமல் "சொல்லி அனுப்பறோம் தம்பி" என்றார். முருகவேலுக்கு பட்டென்று மூக்கு விடைத்தது.

"பளிச்னு சொல்லுங்க - அதுதான் எனக்குப் புடிக்கும்." - பெரியவர் தர்மசங்கடமாக முருகவேலை ஏறிட்டார்.

"தம்பி... வருத்தப்படாதீங்க. வெளிப்படையா கேட்கறதினாலே சொல்றேன். வித்தியாசமா நெனைக்கப்படாது. நீங்க வேற இடம் பாத்துக்கிடுங்க."

முருகவேல் முகத்தில் உமிழப்பட்டவனைப் போலத் தாக்குண்டான் - எனக்கே கூட தேகம் நடுங்கியது.

"என்னங்க நீங்க.. இப்படிச் சொல்றீங்க... இது நியாய..."

"பதட்டப்படாதீங்க தம்பி. பொண்ணு இஷ்டத்துக்கு விரோதமா எதுவும் செய்யற பழக்கமில்லீங்க. விவரமான பொண்ணு, பஸ்ஸை விட்டு இறங்கும்போதே கடைவீதியிலே இளநி கடையில தம்பி பண்ண ஆர்ப்பாட்டத்தைப் பாத்துச்சாம். அதுக்கு இவரைப் புடிக்கல! என்ன பண்றது! ப்ராப்தம் இல்ல!"

"இது நல்லா இல்லீங்க. ஆம்பிளைக்கு அழகு தைரியம்தாங்க. எதையும் எதுத்து நின்னாத்தான் கௌரவமே கிடைக்கும்!" என்று தொடங்கி முருகவேலின் வியாக்கியானத்தை விலாவரியாக நான் சொல்லி முடிக்கவும், பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டு விட்டுப் பெரியவர் சிரித்தார்.

"எதிர்த்து நிக்கறது கௌரவம் இல்லேங்கல! ஆனா எல்லாத்தையும் எதிர்த்து நிக்கறது கேவலம். மணவாழ்க்கையில் மட்டுமில்ல; மனுஷ வாழ்க்கையிலேயும் பற்றும் பாசமும் தான் தம்பி பெரிசு!"

என் தோளில் தட்டிய பெரியவர் கூடவே, "உன் ஜாதகத்தை வேணுமானா குடு, பார்ப்போம்" என்றார்.

ஏதோ பேசப் போன என்னைத் தோளில் பற்றி மௌனமாக்கினான் முருகவேல். அதற்குப் பின் வீடு திரும்பும் வரை அவன் பேசவில்லை. சில நாட்களாக வேலைக்கே வருவதில்லை! ஒருவேளை அவன் மனத்திலிருந்த மிருகம் வேட்டையாடப்பட்டு விட்டதோ?

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1996



**முதல் பரிசு ரூ. 1,500**

**இரண்டாவது பரிசு**

**ரூ. 1,000**

**மூன்றாவது பரிசு**

**(இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்)**

**ரூ. 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

● கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதி மொழி தரவேண்டும்.

● நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

● உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால் தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

● எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

சரித்திரத் தொடர் கதை :

# இந்திரதனுசு

விஷ்வக்சேனன்

## 17. கிருஷ்ணமல்லர் தூது

ஆறு அகழிகளைப் பெற்ற பலமான கோட்டையை உடையது என்பதால் ஆறகழூர் என்று பெயர் பெற்ற கோட்டை; எதிரிகள் நெருங்க இயலாது என்று பெயர் பெற்ற சங்ககிரிக் கோட்டை - இவற்றை விடுத்து ஸ்காந்தபுரத்தை கொங்கு நாட்டின் தலை நகராக ஏன் தேர்ந்தெடுத்தனர் கொங்கு மன்னர்கள் என்ற கேள்விக்கு விடை, ஸ்காந்த புரத்தில் பிரவேசித்த போசளதண்டநாயகன் விக்கலனுக்குப் புரிந்தது.

ஆறடிக்குக் குறையாத அகலத்துடனும் ஆங்காங்கே அமைக்கப்பட்ட அம்புவீசும் பொறிகளுடனும் இருந்தது ஸ்காந்தபுரத்துக் கோட்டை. இரண்டு சுற்றுகளாக நீண்டு வளைந்தன கோட்டை மதில்கள். இரண்டாவது சுற்று மதிலின் வாயில் சற்றுத் தள்ளியே அமைக்கப்பட்டிருந்தது. மதில்களின் இடை வெளியில், சுவர்களிலிருந்த மாடங்களில் தலை நீட்டிக் கொண்டிருந்த பொறிகள் அந்தக் கோட்டையைத் தாக்குவதோ, கைப்பற்றுவதோ அத்தனை எளிதல்ல என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தன.

மதிலின் மீது உலவிய விக்கலன் தன் கூரிய விழிகளைக் கோட்டையின் மீதும் கோட்டையைச் சுற்றியிருந்த பகுதிகளின் மீதும் பாய விட்டான். இடைவிடாத பயிற்சியைக் காட்டியது அவனது திட்காத்திரமான உடலமைப்பு. அதீதமான உயரம். இடையிலிருந்து பாதம் வரை நீண்டு உறையிலிடப்பட்டிருந்த வாள், அவனது ஒவ்வொரு காலடிக்கும் உடலுடன் உரசி தட்தட்டென்று ஒலியெழுப்பியது. விக்கலனின் பின்னால் அசாத்தியப் பணிவுடன் நடந்த போசள உபதலைவன், கொங்கு நாட்டின் நிலையையும், சோழ நாட்டிலிருந்த போசளரை சேமகேசி அழைத்து வரச் சென்றதையும், மருத்துவர் இல்லத்திற்கு மயக்க நிலையில் எடுத்துச் செல்லப்பட்ட இளவரசி மாயமாகி விட்டதையும் கூறிக் கொண்



டிருந்தான்.

போசள உபதலைவனாகவும், கோட்டைத் தலைவனாகவும் பணியாற்றிய அந்த வீரனை ஏறிட்ட விக்கலனின் கூரிய அறிவில் கேள்விகள் பல எழுந்தன.

''உபதலைவரே'' என்று அழைத்த விக்கலனின் குரலிலும் சந்தேகம் தொனித்தது.

"உத்தரவிடுங்கள் படைத்தலைவரே!" என்று வணங்கிய உபதலைவனின் குரலில் பணிவு நிரம்பியிருந்தது.

"சோழ நாட்டில் நமது வீரர்கள் எத்தனை பேரிருக்கிறார்கள்?"

"மூவாயிரம் வீரர்கள் பிரபு."

"சோழ வீரர்கள் எத்தனை பேர்?"

''ஆயிரத்துக்கும் குறைவுதான் பிரபு. அதுவும் அரண்மனைக்குள் மட்டும்தானிருக்கிறார்கள்."

"சோழர் பெரும்படையின் மற்ற வீரர்கள் என்ன ஆனார்கள்?'' விக்கலனின் இந்தக் கேள்வி உபதலைவனை விழிக்க வைத்தது.

"தெரியவில்லை பிரபு."

"சரி போகட்டும். இங்கு விடுதலைப் படையொன்று இருப்பதாகக் கூறினார்களே, அதைப் பற்றிய விவரம் தெரியுமா?"

"அதன் எண்ணிக்கை விவரம் தெரியாது பிரபு. ஆனால் இங்கு சுற்றுப்புறங்களில்தான் அவர்கள் உலவுவதாக நமது வீரர்கள் தெரிவித்திருக்கிறார்கள்."

"சரி, பாண்டியரின் படைபலம் தெரியுமா?"

''தெரியும் பிரபு. உத்தமபாளையத்தில் கிருஷ்ணமல்லரிடம் மட்டும் பத்தாயிரம் வீரர்களிருக்கிறார்கள். அவரது சீடர்களான மல்லர்களைக் கொண்ட தனிப்படையொன்றும் இருக்கிறது."

விக்கலன் இலேசாக நகைத்தான். நகைப்பினூடே, "இப்பொழுது புரிகிறதா உமக்கு?" என்று கேட்கவும் செய்தான்.

"புரியவில்லை பிரபு."

"உபதலைவரே, சோழர்களின் பெரும்படை எங்கும் கரைந்து போய் விடவில்லை. அது பாண்டியர் படையுடனும், இங்கு விடுதலைப் படையுடனும் கலந்திருக்கிறது. இடைப்பாடி நாட்டிலேயே அந்த சீனனுடன் காலம் கழித்ததால் சிங்கணன் இதைப் பற்றி அறியவில்லை. சரி, இங்கு நமது வீரர்கள் எத்தனை பேர்?"

விக்கலனின் விளக்கம் உபதலைவனின் சித்தத்தை உறைய வைத்து விட்டதால் சற்றுக் கழித்தே அவனிடமிருந்து பதில் வந்தது : "நமது படையில் பதினைந்தாயிரம் பேர் இருக்கிறார்கள், படைத் தலைவரே!"

உபதலைவனை நோக்கித் தனது கூரிய விழிகளைத் திருப்பிய விக்கலன், "நமது வீரர்களுடன் மன்னர் அவந்தரின் வீரர்களும் அரண்மனையிலும் கோட்டையிலும் கலந்திருக்கிறார்கள் அல்லவா?'' என்றான்.

"ஆம் பிரபு. பல ஆண்டுகளாகக் கோட்டைப் பாதுகாப்பிலும் அரண்மனையிலும் நம்முடன் சேர்ந்தே அவர்கள் பணிபுரிகிறார்கள்'' என்ற உபதலைவனின் முகத்தில் குழப்பமிருந்தது.

"உபதலைவரே, இடைப்பாடி நாட்டிலிருந்து அந்த சீனன் தப்பி விட்டான். ஸ்காந்தபுரத்திற்கு வந்த இளவரசியும் பிறகு மறைந்து விட்டாள். காரணம் புரிகிறதா உமக்கு?"

விக்கலனின் கேள்வி உபதலைவனை இன்னும் குழப்பியது. அவன் பதிலேதும் கூறவில்லை.

விக்கலன் தொடர்ந்தான்: "கோட்டைக்குள் எதிரிகளுக்கு உதவக்கூடிய வீரர்கள் இருக்க வேண்டும் உபதலைவரே!" என்ற விக்கலன், "நமது படையில் போசள வீரர்களைத் தவிர்த்து மற்ற அனைவரையும் பிரித்துச் சிறையில் அடைத்து விடுங்கள்'' என்றும் உத்தரவிட்டான்.

விக்கலன் உத்தரவைக் கேட்ட உபதலைவன் திகைத்தான். ''பிரபு! இது புரட்சியை நாமே தொடங்கி வைப்பதாக ஆகிவிடும். வேண்டாம் படைத்தலைவரே, வேண்டாம்!"

விக்கலன் மீண்டும் நகைத்தான். "உபதலைவரே, புரட்சி எப்படியும் வெடிக்கப் போகிறது. அது தொடங்கியபின் இங்கிருக்கும் மற்ற வீரர்களை அடக்க முயல்வது அறிவீனம். வந்த பின்பு திணறுவதை விட வருமுன் காப்பது மேல். நான் கூறுவதை உடனடியாகச் செய்து விடுங்கள்."

விக்கலனின் உத்தரவு திடமாக வந்ததைக் கண்ட உபதலைவன், அதை நிறைவேற்றத் திரும்பி நடந்தான்.

அன்று மாலைக்குள் சோழ எல்லையில் சேமகேசி மாண்ட செய்தியும் கிருஷ்ணமல்லர் உத்தமபாளையத்திலிருந்து படைகளுடன் கிளம்பி விட்ட செய்தியும் கிடைத்தது விக்கலனுக்கு. நடுநிசிக்குப் பிறகு கொங்கு நாட்டின் தென் எல்லையில் நறையூர் நாட்டை கிருஷ்ணமல்லர் கைப்பற்றி விட்டதாகவும், கோட்டைக்குள்ளிருந்த வீரர்கள், அவருக்கு உதவியாக கோட்டைக் கதவுகளைத் திறந்து விட்டதாகவும் செய்தி வந்தது அவனுக்கு.

கிருஷ்ணமல்லரின் அடுத்த இலக்கு ஸ்காந்தபுரம்தான் என்பதை ஊகித்தவன், அப்பொழுதே எழுந்து கோட்டை மதில்களின் மீதிருந்த பொறிகளைச் சோதித்து, காவலையும் பலப்படுத்தினான். இரண்டாவது சுற்று மதிலின் வாசலில் இரண்டு அசுர யவனப் பொறிகளையும் நிறுத்தினான்.

நறையூர் நாட்டிலிருந்து ஸ்காந்தபுரம் வ[illegible] நீண்ட பெருவழிச்சாலை, ஆழம் அதிகமற்ற

இடத்தில் அமராவதி நதியைக் கடக்கக் கூடும் என்பதை யூகித்தவன், எஞ்சிய போசள வீரர்களுடன் முன்னதாகவே அங்கு கிருஷ்ணமல்லரை எதிர்கொள்ளத் தீர்மானித்தான்.

நதிக்கரையில் வில்லேந்திய வீரர்களை நான்கு வரிசைகளாக நிறுத்தியவன், எதிர்க் கரையில் பாண்டிய வீரர் நதியில் இறங்கு முன்பாக அம்புகளைப் பொழிய வேண்டும் என்றும் உத்தரவிட்டான். நதியைக் கடந்து வருபவர்களைத் தாக்க வீரர்களை இரு பிரி வாகப் பிரித்து, அணிவகுத்து நிற்க வைத் தான்.

கருக்கல் முடியும் நேரத்தில் கோட்டை யிலிருந்து வீரன் ஒருவன் ஓடிவந்தான். சிறைக்குள் அடைபட்ட வீரர்கள் கலகம் செய்வதாகவும் சிறைக் கதவுகளைப் பெயர்க்க முயல்வதாகவும் தெரிவித்த அந்த வீரனை ஏறிட்ட விக்கலன், "வீரனே, அடை பட்ட முப்பது நாழிகை கழித்து வீரர்கள் கலகம் செய்வதற்குக் காரணமிருக்க வேண் டும். நமது கவனத்தை திசை திருப்பும் முயற்சி இது. உபதலைவரை கவனித்துக் கொள்ளச் சொல். விடிந்ததும் பாண்டியர் படை வரலாம்" என்றான்.

விக்கலன் எதிர்பார்த்தபடி கதிரவன் ஒளி பரவ முற்பட்ட நேரத்தில் தெற்கில் பெரும் புழுதிப் படலம் எழுந்து, பாண்டியர் படையின் வருகையை அறிவித்தது. புரவிப் படையை முன்னால் அணிவகுக்கவும் நதிக்கரையில் வில்களுடன் நின்ற வீரர் களை சித்தமாகும்படியும் உத்தரவிட்ட விக் கலன், போருக்கான கவசங்களையும் இடை யில் தனது நீண்ட வாளையும் தரித்து நதிக் கரையில் நின்றான்.

ஆனால் பாண்டியர் படை அத்தனை துரிதமாக வருவதாகத் தெரியவில்லை. எழுந்த புழுதி மண்டலமும் மெள்ள அடங்கியது. கதிரவன் உதித்து ஒரு ஜாமம் கழித்து, பாண்டியரின் பெரும் கொடியை ஏந்திய புரவி வீரன் ஒருவன் முன்னால் வர, பின்தொடர்ந்து ஆஜானுபாகுவான ஒரு மனிதர் வருவது புலப்பட்டது. அந்த மனிதர் அமர்ந்து வந்த பெரும் அரபுப் புரவி, விக் கலனின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. ஆஸ்திகந்தம், தௌரிகம் என்று புரவி இலக் கண நூல்கள் வர்ணிக்கும் வேகம் அதிக மற்ற சமத்கார நடையுடன் நிதானமாக வந்த அந்தப் புரவி, அதிகம் பழகாத முரட்டுப் புரவியென்பதும் அந்த ஆஜானுபாகுவான மனிதரின் அசுரபலத்தில் அதன் முரட்டுத் தனம் கட்டுப்பட்டிருப்பதும் புரிந்தது அவனுக்கு.

## அருள்வாக்கு



நிர்வாஹம் பண்ணுவதற்கு ஒரு தகுதி வேண்டுமென்பது போலவே, ஒருத்தர் அப்படிப்பட்ட தகுதிகள் உள்ளவர்தானா என்று எடை போட்டுப் பார்த்து அவரைத் தேர்ந் தெடுப்பதற்கும் ஒரு தகுதி வேண்டும். ஒரு அபேக்ஷகர் (வேட்பாளர்) என்றால் அவர் ஏதோ ஒரு கட்சியில் இருப் பார். அதற்கென்று கொள்கைகள் இருக்கும். ஸ்வ யேச்சை அபேக்ஷகர் என்றால் அவருக்கும் ஏதோ கொள் கைகள் இருக்கத்தான் வேண்டும். தேர்ந்தெடுக்கிறவர் கள் இந்தக் கொள்கைகளைப் புரிந்து கொள்ளக் கூடிய வர்களாக இருக்க வேண்டும்; 'நம் தேசத்தில் தற் போதுள்ள நிலவரங்களில் இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் நிர்வாஹம் செய்வது நல்லதா?' என்று சீர்தூக்கி முடிவு பண்ணக் கூடியவர்களாக வோட்டர்கள் இருக்க வேண்டும். "அதைச் செய்கிறேன், இதைச் செய் கிறேன்" என்று எதையாவது சொல்லிக்கொண்டு வோட்டு கேட்டால், "அது ஸாத்யந்தானா? ஸாத்ய மானாலும் அப்படிச் செய்யலாமா?" என்று யோசித்துப் பார்த்து, பேச்சில் ஏமாந்து போகாமல் வோட் போடக் கூடியவர்களாக இருக்க வேண்டும். மொத்தத்தில், குடி யரசு எல்லாருக்குமானாலும், அதிலே ராஜாங்கம் அமைப் பவர்கள் எல்லா வர்க்கத்தினருக்கும் ப்ரதிநிதி களாயிருக்க வேண்டியவர்களானாலும், அவர்களுக்கு நிர்வாஹத்துக்கான யோக்யதாம்சம் இருக்க வேண்டி யிருக்கிறது; அப்படிப்பட்ட யோக்யதாம்சம் அவர்களுக்கு இருக்கிறதா என்று பரிசீலனை பண்ணி, அவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு யோக்யதாம்சம் வேண்டி யிருக்கிறது. அதாவது அபேக்ஷகர், வோட் போடுபவர் இருவருக்கும் யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது.

ஒரு வேலை கொடுக்கும்போது, மனுப் போட்ட பல பேரிலே யாருக்குக் கொடுக்கலாம் என்று ஸெலக்ட் செய்ய வேண்டியிருக்கிறது. ரொம்பவும் விஷயம் தெரிந் தவர்களைத்தான் ஸெலக்ஷன் கமிட்டியில் போட்டு, அவர்கள் மூலம் மனுப் போட்ட பல பேரில் ஒருத்தருக்கு வேலை கொடுக்கிறார்கள். அதாவது வேலைக்கு வைக் கிறவனின் யோக்யதாம்சத்தைப் பரீக்ஷித்து அவனை ஸெலக்ட் செய்வதற்கு அவனைவிட யோக்யதாம்சம் வாய்ந்தவரை நாட வேண்டியிருக்கிறது. குடியரசுத் தேர் தலில் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும், இன்னாருக்கு இன்ன யோக்யதாம்சம் என்று சீர்தூக்கிப் பார்க்கவேண்டி யவர்களான வோட்டர்களுக்கும் ஓரளவுக்கு யோக்யதை வேண்டித்தான் இருக்கும்.

தேச நிர்வாஹம், அரசியல் கொள்கைகள் முதலியவற்றைப் பற்றி ஓரளவேனும் விஷயஞான முள்ளவர்கள் ஆலோசனை செய்து வோட் கொடுத் தால்தான் ஆட்சி ஸரியானவர்களிடம் போகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**



''தலைவர் காலில் விழுந்து வணங்கா தன்மானத் தமிழ்த் தொண்டன் நான் ஒருவன்தான் என்பதை ஒப்புக் கொள்வீர்களா?''

வரிசையாக வில்லேந்தி நின்ற வீரர் களையும் இரு பிரிவாக அணிவகுத்து நின்ற புரவிப் படையையும் கவனித்த அந்த மனி தரின் யானை விழிகள் பளிச்சிட்டன. அவர் முகத்தில் முறுவலொன்றும் படர்ந்தது. பாண்டியர் கொடியுடன் உடன் வந்த வீரனை அக்கரையில் நிறுத்தியவர், தனித்து நதியிலிறங் கிக் கடந்து விக்கலனை நோக்கி வெகு நிதானமாகப் புரவியை நடத்தினார்.

சர்வ அலட்சியமாகத் தமது வீரர்களை ஊடுருவிய அந்த மனிதரின் ஆஜானுபாகுவான தோற்றத்தையும் அவர் இதழ்களில் படர்ந் திருந்த முறுவலையும் கவனித்த விக்கலன், அவர் சாதாரண வீரர் அல்ல என்பதைப் புரிந்து கொண்டான். போசள வீரர்கள் முகத் தில் படர்ந்த திகிலும் அதை உறுதிசெய்தது. புரவியை விட்டிறங்கி நிதானமாக நடந்து விக்கலனை நெருங்கிய அந்த மனிதரின் முறுவல் இன்னும் சற்று விரிந்தது. ''போசள தண்டநாயகர் விக்கலனைச் சந்தித்ததில் மகிழ்ச்சி'' என்ற சொற்கள் அவரிடமிருந்து உதிர்ந்தன.

சர்வசாதாரணமாகத் தன்னைப் பெயரிட்டு அழைத்த அந்த மனிதரை நோக்கிய விக்கலன், ''தாங்கள்...'' என்று இழுத்தான்.

''நான் ஜடாவர்ம சுந்தர பாண்டியரின் தூதன். பெயர் கிருஷ்ணமல்லன்'' என்று பதில் வந்தது அந்த மனிதரிடமிருந்து.

பண்டிதனை இன்னொரு பண்டிதனும், ஞானியை மற்றொரு ஞானியும், வீரனை மற் றொரு சுத்த வீரனும், சந்திக்கும் போது ஏற் படும் மகிழ்ச்சியே அலாதியானது; அது ஏற்படுத்தும் மனநிறைவுக்கு இணை ஏதும் கிடையாது என்று ஒரு தமிழ் சிற்றிலக்கியப் பாடல் கூறுகிறது.

வயது இன்னதென்று நிர்ணயிக்க இய லாமல் செக்கச் செவேலென்று உறுதியுடன் விரிந்து கிடந்த மார்பையும், ஆஜானுபாகு என்ற சொல்லுக்கு சரியான பொருளைக் காட்டிய முழங்கால் வரை நீண்ட வாகன வாரைப் போன்ற கரங்களையும், பளிச் பளிச்சென்று யானையின் விழிகளைப் போல் மின்னிய சிறு கண்களின் கூர்மையையும் பார்த் தான் விக்கலன். எதிரிகளின் பாசறைக்குள் நுழைந்த போதும் கிருஷ்ணமல்லரின் கண் களில் தெரிந்த நிதானத்தைக் கவனித்தான். 'இவர் வடநாட்டு மல்லர்களையெல்லாம் வென்று ஆரியசக்கரவர்த்தியென்று பெய ரெடுத்ததற்குத் தகுந்த காரணமிருக்கிறது' என்று தீர்மானித்தான்.

''ஆரியச் சக்கரவர்த்தியைச் சந்தித்தது என் பாக்கியம்'' என்று அவரை வணங்கியவன், ''வாருங்கள், அந்த கூடாரத்தினுள் சென்று அமர்ந்து பேசலாம்'' என்று முன்னால் நடந்தான். உள்ளே நுழைந்தவன், தன்து ஆயுதங் களையும் கவசங்களையும் வைக்கும் பெரும் மரப் பேழையின் மீது பட்டுத் துணியொன்றை விரித்து, ''இப்படி அமருங்கள்'' என்று கூறி னான்.

சிங்கணனுக்கும் விக்கலனுக்கும் இருந்த வேறுபாட்டைக் கவனித்த கிருஷ்ணமல்லர், காரியத்தைச் சாதிக்க மனிதர்களையோ, நெறி களையோ மதிக்காத சிங்கணனை விட, எதிரியாயிருந்தாலும் வீரத்திற்கு மதிப்பளிக்கும் விக்கலன் சுத்த வீரன் என்பதைப் புரிந்து கொண்டார். அவரது உறுதியான இதழ்களில் ஸ்திரமான முறுவலொன்று படர்ந்தது.

எதிரே நின்ற விக்கலனின் முகத்தில் லேசான சந்தேகச் சாயை பரவியிருந்தது. அவனிடமிருந்து எழுந்த முதற்கேள்வியிலும் அது பிரதிபலித்தது. ''படைத் தலைவரே, தூது வர எத்தனையோ வீரர்களிருக்க, தாங்களே தூதுவராக வந்த காரணம் எனக்கு விளங்க வில்லை. மேலும், சோழ எல்லையில் போசள வீரர்களை எந்த முன்னறிவிப்புமின்றித் தாக்கி அழித்த பாண்டியர், இப்போது மட்டும் தூது வந்திருப்பதன் பொருளும் விளங்கவில்லை'' என்றான் விக்கலன்.

கிருஷ்ணமல்லரின் பதில் நிதானமாக வந்தது : ''காரணங்கள் இரண்டு விக்கலா!''

''இரண்டு காரணங்களா'' - விக்கலனின் குரலிலிருந்த சந்தேகம் வியப்பாக மாறி ஒலித் தது.

காரணங்களை விளக்கினார் கிருஷ்ண மல்லர். அவர் விளக்க விளக்க, பாண்டியர் நீதி எத்தகையது என்பதை அறிந்து கொண் டான் விக்கலன். அதுமட்டுமின்றி, போசளர் கள் இனி தமிழகத்தில் தலையெடுக்காதிருக்க அவர் திட்டம் வகுத்து நீண்ட காலமாகி விட்டது என்பதையும், தான் இனி உயிருடன் போசள நாட்டுக்குத் திரும்புவது இயலாது என்பதையும் திட்டவட்டமாகப் புரிந்து கொண்டான்.

(தொடரும்)

# தொண்டன்

தெருத் தெருவாய் நீ சுற்றுகிறாய்
தேர்தல் போஸ்டர் ஒட்டுகிறாய்
கருக்கருவாளைக் கையேந்தி
கட்டளைகேட்டு வெட்டுகிறாய்!

தலைவியின் எடைக்கு எடையாகத்
தங்கம் அளந்து நிதிகொடுத்தாய்
இலவச வேட்டியின் ஏக்கத்திலே
எத்தனை கோவணம் பறிகொடுத்தாய்?

இனக்கலவரமா?... தலைவரவர்
ஏற்பாட்டுக்குச் சொல்லுகிறார்
உனக்கதில் பைசா லாபமில்லை
உத்தரவுக்கே கொல்லுகிறாய்!

அதிரடி அரசியல் நடத்துகிற
அரிதாரத்தில் மயங்கியதால்
புதிராய்ப் போனதுன் பெருமூளை!
புரியலையே இன்னும் நரிமூளை!

ஆயிரம் சின்னங்கள் இருந்தாலும்
அடிமைச்சின்னம் நீயல்லவா?
தேயிலைத்தோட்டம் அவர்வாங்கத்
திண்ணையில் கிழியுமுன் பாயல்லவா?

கொடித்துணியாவது உந்தன்தோல்
கொடிமரமாவது உந்தன்கால்
படிக்கல்லாவது உந்தன்தோள்
பதவிக்கு வந்ததும் நீ அம்பேல்!

'மாயை அரசியல்' மறையாதா?
மயக்கும் பிம்பம் உடையாதா?
வாயில் வழியும் வார்த்தைகளின்
வானவில் சாயம் வெளுக்காதா?

திசைகள் மாறிப் பயணிக்கும்
திருத்தொண்டன் நீ சிந்தித்தால்
வசைகள் நீங்கும்; வாழ்க்கை வரும்;
வானக சொர்க்கம் வாசல்வரும்!

— நா.வே. அருள்

சில அவசர வேலைக்காரர்களைத் தவிர, முக்கால்வாசி ஜனம் மழைக்குப் பயந்து எங்கேனும் கடைவாசல்களிலோ, பஸ் ஸ்டாண்ட் ஷட்டரின் கீழோ ஒடுங்கிக் கொண்டு இருந்தது. எங்கள் கடை வாசலில் கூட சிலர் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்தனர். கோடை மழை அல்லவா. திடுமெனப் பெய்யும். நிற்கும்.

உள்பக்கம் ஜெராக்சும், வெளி வராண்டாவில் 'ஜாப் டைப்பிங்கும்' சேர்ந்த கடை எங்களது.

நல்லவேளை, சாரல் இந்தப் பக்கமாய் வந்து விழவில்லை. விழுந்திருப்பின், டைப் அடிக்க முடியாது. மிஷினை நகர்த்திக் கொண்டு உள்ளே செல்ல வேண்டி வரும்.

அடித்து முடித்த மேட்டரைத் தனியே எடுத்து அதன் இரண்டு கார்பன் பிரதிகளோடு கஸ்டமரிடம் கொடுத்துக் காசை முதலாளியிடம் கொடுக்கச் சொன்னேன். விரல்களில் இதமாய் நெட்டி முறித்துக் கொண்ட போது ஒரு காப்பி குடிக்கலாம் போல் தோன்றிற்று.

அடுத்தாற்போலவே 'காப்பி' குடிக்க ஒரு சின்னக் கடை இருக்கிறது. ஆனால் வாசலில் மழைக்கு ஒதுங்கிய கும்பலினூடே சற்று சிரமப்பட்டுத் தான் செல்ல வேண்டும். எதற்கு...? காப்பி வேண்டாம் என்று தோன்றிற்று. 'இரண்டு ரூபாய் மிச்சம்' என்கிற எண்ணத் திருப்தி கூடவே உண்டாயிற்று.

ஆனால் இவ்விதம் மிச்சப்படுத்தி, இதில் வாங்குகிற ஐநூறும், சாயங்காலம் வக்கீல் வீட்டிற்குப் போய் ஓவர்டைம் வேலை பார்த்து, கொண்டு வருகிற சில நூறுகளும் தான் ஓரளவு கௌரவமாய் வாழ உதவுகிறது என்பது ஏனோ மணிக்குப் புரியாது போயிற்று.

மணி எனக்கு அடுத்துப் பிறந்தவன். அப்பா இருக்கையில் ஆசைக்கு ஒன்று, ஆஸ்திக்கு ஒன்று என்று நாங்கள் பிறந்தோம். ஆனால் 'ஆஸ்தி' எல்லாம் அப்பாவோடு போயிற்று. தம்பி ஆஸ்தியை அழிக்க வந்தவன் மாதிரிதான் நடந்து கொண்டான்.

அதனாலேயே அவனுக்கும் எனக்கும் வரவர அதிகம் பேச்சுவார்த்தை நேருகிறதில்லை. சின்னச் சின்ன வார்த்தைகளாய், "ஆமாம்", "உண்டு", "அப்படியா", "பார்க்கலாம்"- இது மாதிரியே தான் சம்பாஷனை நிகழும். நேற்றைக்குத் தான் சற்று அதிகப்படியாகி விட்டது.

நேற்று சாயங்காலம் வேலை முடிந்து வரும்போதே லேசாய் தலைவலித்த மாதிரி இருந்தது. அதோடு வழியில் சுமதி பார்த்துச் சொன்ன தகவல் அதிகம் மண்டைக் குடைச்சலை ஏற்படுத்தி விட்டது.

யாரோ கல்யாணியாம். அவள் டைப் அடிக்க இன்ஸ்டிடியூட் போகும் சமயம்



## சிறுகதை

பார்த்து, தினமும் பின்னால் சென்று கேலியும் கலாட்டாவும் செய்கிறானாம். கல்யாணியின் அம்மா என் தோழி சுமதியிடம், "உன் பிரெண்டுகிட்ட சொல்லி, அவ தம்பியைக் கண்டிச்சு வைக்கச் சொல்லும்மா. நாங்க என்ன பொழுது போகாதயா பொண்ணை வெளிய அனுப்பறோம். ஏதோ பிளஸ் டூ முடிச்சிருக்கா. இதையும் கத்து வச்சிக்கிட்டா, வேலை கிடைக்க வாய்ப்பிருக்கு. அது சம்பாதிச்சுதான் அது வாழ்க்கையைக் கரையேத்திக்கணும். ஆரம்பத்துலயே இப்படி இம்சை பண்ணினா என்ன பண்றது. நாங்க தாயும், மகளும் கிணத்துலதான் போய் விழணும்" என்று சொல்லியிருக்கிறாள்.

அவள் சொல்லச் சொல்ல என்னுள் ரௌத்திரம் பொங்கிற்று. பாவம் அந்தப் பெண். என் மாதிரித்தான் அதுவும். நாளை என் போலவே எங்கேனும் 'ஜாப் டைப்பிங்' செய்யக் கூடும். அதைப் போய் தொந்தரவு செய்திருக்கிறானே இவன்? வீடு இருக்கிற நிலைமையும், அக்கா சம்பாதித்து வாழ வேண்டி இருக்கிறதே என்ற உணர்வும் கொஞ்சமேனும் இருப்பின், இப்படிச் செய்து இருப்பானா?

அந்தக் கோபம்தான் வீட்டினுள் நுழைந்




# கோடை மழை

**தி. சிவசுப்ரமணியன்**

ததும் நுழையாததுமாய் அவனைப் பளா ரென்று கன்னத்தில் அடிக்கத் தூண்டிற்று. ஆனால் அதற்கே ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது அவனுக்கு.

"வேலை பார்க்கிற திமிர்ல, வளர்ந்தவன்னு கூடப் பார்க்காம கை நீட்டி அடிச்சிட்டே யில்ல? போறேன். இனிமே இந்த வீட்டு வாசப் படிய மிதிக்க மாட்டேன்."

சட்டையை மாட்டிக் கொண்டு 'விர்' என்று போனான். போகட்டும். எப்படியோ போகட்டும். வளர்ந்தவனாம் வளர்ந்தவன்... வளர்ந்தவன் செய்கிற காரியமா இது என்று தோன்றிற்று. ஆனால், அம்மா முகம் தான் வாடி இருந்தது. 'என்ன இருந்தாலும் பொம் பளைப் புள்ளை வேற வீட்டுக்குப் போறவ. நாளைக்கு நம்மைக் காப்பாத்தறதுக்கு அவன் தானே வேணும்' என்கிற ரீதியிலான சிந்தனை அவள் மனத்தில் ஒடிக் கொண்டிருக்கும் என்பதை என்னால் உணர முடிந்தது.

"உங்களைத்தாம்மா...?" எதிரே இருந் வர் இரண்டாம் முறையாகக் கேட்டபிறகே, ண்ண ஓட்டங்களில் மூழ்கி விட்டிருந்தது ரிந்தது. அதன்பின் விரைவாய் அவருக்கு மேட்டர் அடித்துக் கொடுத்து விட்டு, வீட் டுக்குக் கிளம்பினேன்.

வீட்டிற்குள் நுழைகையில், சமையலறை யில் அம்மா சாப்பாடு எடுத்து வைத்துக் கொண்டிருக்க, தம்பி மணி சாப்பிட்டுக் கொண்டிருந்ததைப் பார்க்க முடிந்தது.

என்னைப் பார்த்ததும் சாப்பிடுவதை நிறுத்தி, சற்றுத் தலை குனிந்து கொண்டான்.

"ஏண்டா வருத்தப்படறே. சும்மா சாப்பிடு. அவ யாரு. உன் அக்காதானே. அன்னிய மனுஷியில்லையே. ஏதோ கோபம். அவ அடிச்சிட்டா. அவளுக்கு அதுக்கு உரிமை யுண்டு. நீயும் ஏதோ மனத்தாங்கல் பட்டுப் போனே. அதான் வந்து, என் வயித்துல பாலை வார்த்துட்டியே, இனிமே என்ன... எல்லாம் சரியாப் போகும். நீ காப்பி குடிக்கலையாடி?"

அம்மாவால் எப்படி இதை இவ்வளவு எளிதாய்ப் பார்க்க முடிகிறது? பிள்ளைப் பாசமா? இருக்கும்.

சாப்பிட்டு முடித்ததும் தம்பி அறை வாசலில் தயங்கி நின்றான்.

"அக்கா" என்றான் மெல்லிய குரலில். ஏறிட்டுப் பார்த்தேன், 'என்ன' என்பது போல்.

"மன்னிச்சிருக்கா. ஏதோ போறாத நேரம். அப்படி நடந்துகிட்டேன்."

ஆச்சரியமாயிருந்தது. யார், மணியா இப்படிப் பேசுவது? பரவாயில்லை. இந்த மட்டும் புத்தி இருக்கிறதே. இதுவே போதும் என்று தோன்றிற்று.

"ஒரு இருவத்தஞ்சி ரூபா இருக்குமாக்கா? போஸ்டல் ஆர்டர் வாங் கணும். ரெயில்வேல ஒரு வேலைக்கு 'கால்ஃபார்' பண்ணிருக்கான்."

எடுத்துக் கொடுத்தேன். நிச்சயம் அது பொய்தான். எந்த வேலைக்கும் ரெயில் வேயில் கால்ஃபார் செய்ய வில்லை. நன்றாகத் தெரி கிறது. முடியாது என்று சொல்லி விடலாம். ஆனால் அது மேலும் பிரச்னையை வளர்க்கத்தான் செய்யும்.

இப்போது வீட்டில் நிலவுகிற இந்த 'இணக்க மான' சூழலை ஏன் கெடுக்க வேண்டும்? யோசனையுடன் ஜன்னல் வழியே பார்த்தபோது, மழை தூறிக் கொண்டிருந் தது. கோடை மழையில் பூமி குளிராதுதான். ஆனால் வெப்பம் குறையுமே, போதாதா?

## 18. விக்கலன் கேட்ட வரம்

ஸ்காந்தபுரத்தையும் நறையூர் நாட்டையும் பிரித்த அமராவதி நதியில் கார்காலம் துவங்கி மழை பொழிந்த தால் நீர்மட்டம் சற்றே உயர்ந்திருந்தது. தனது கரையி லிருந்த பாசறையில் இருபெரும் படைத்தலைவர்கள் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்ததாலோ என்னவோ, அந்த நதி நிரம்பித் தளும்பினாலும், கரைகளைத் தாக்கிய அலைகளைக் குறைத்துக் கொண்டு அமைதியாக ஓடியது.

ஆற்றின் கரைகளில் இரைக்காக வந்து இறங்கிய நாரைக் கூட்டமொன்று கரையோரம் நின்றிருந்த வீரர் களையும் அவர்களது விற்களையும் கண்டு அஞ்சியதால் ஒன்றாகச் சேர்ந்து பெரிதாகக் குரல் கொடுத்துவிட்டு, தெற்கே விரிந்திருந்த வயல்களை நோக்கிப் பறந்தன. அந்த நாரைகளுக்கு ஏற்பட்ட அச்சத்தைவிட அதிக அச்சத்தைக் காட்டிய வீரர்களின் முகங்கள், அக்கரையில் பாண்டியர் கொடியுடன் நின்ற வீரனையும், விக்கலனுடன் சென்று கிருஷ்ணமல்லர் நுழைந்துவிட்ட கூடாரத்தையும் மாற்றி மாற்றி வெறித்துக் கொண்டிருந்தன.

படைத்தலைவர், தான் தூது வந்த காரணத்தை விக்கலனிடம் விளக்கத் தொடங்கியிருந்தார் : "விக்கலா, நான் தூது வந்த காரணம் மிக எளிமையானது. படை களை நான் நடத்தி வந்திருந்தால் பாண்டியருக்காக ஓர் உபதலைவனைத் தூதனுப்பி வைத்திருப்பேன். ஆனால் தற்போது படைகளை நடத்தி வந்திருப்பவர் என்னை விட உயர்ந்தவர். நீயும் சாதாரணப் படைத்தலைவன் அல்ல. போசள மன்னனின் பிரதிநிதியாக வந்திருப் பவன்..."

விக்கலன் விழிகளில் வியப்பு விரிந்தது. "அப்படியா னால் தாங்கள் படைகளை நடத்தவில்லையா? இளைய பாண்டியர் படைகளுடன் வந்திருக்கிறாரா?" என்றான் விக்கலன் வியப்புடன்.

கிருஷ்ணமல்லர், 'இல்லை'யென்பதற்கடையாளமாகத் தலையசைத்தார். "இல்லை விக்கலா. பாண்டியர் படை களை இப்போது நடத்தி வந்திருப்பவர் ஜடாவர்ம சுந்தர பாண்டியத் தேவர்" என்றார் நிதானமாக.

விக்கலனின் வியப்பு இன்னும் அதிகரித்தது. "என்ன கூறுகிறீர் படைத்தலைவரே! இந்தச் சாதாரண தண்ட நாயகனுக்கெதிராக பாண்டிய மன்னரே படைகளை நடத்தி வந்திருக்கிறாரா?" என்றான் வியப்பு வழிந்த குரலில்.

"இப்போது தொடங்கும் போர் ஸ்காந்தபுரத்தோடு நிற்கப் போவதில்லை விக்கலா! கொங்கு நாட்டின் வட எல்லையைக் கடந்து போசளரின் தென் எல்லை வரை தொடரும். கொங்கு நாட்டின் வட எல்லைக்கு முன்னால் போசள மன்னரை எதிர்பார்க்கிறார் பாண்டிய மன்னர்..." என்ற கிருஷ்ணமல்லர், தொடர்ந்து, "சோழ எல்லையில் போசள வீரரை முன்னறிவிப்பின்றித் தாக்கியதன் கார ணம் சேமகேசி!" என்றார்.

"சேமகேசியா?"

"ஆம். சாளுக்கிய சேமகே பாண்டியர் கோட்டையில் போ யான பெயரில் நுழைந்தது ஒ குற்றம். அங்கு வேவு பார்த்தது றொரு குற்றம். உத்தமபாளைய தைக் கைப்பற்ற படைகளுட வந்ததும் குற்றம். எல்லாவற்றுக்கு மேலாக கொங்கு இளவரசியை கடத்திச் சென்றது பெருங்குற்ற இதில் ஏதாவது ஒரு குற்றத்திற் அவனைக் கொல்லலாம். ஒற்றனை அழிக்க முன்னறிவிப்பு அவசி மில்லை. இன்னும் ஒரு காரண மிருக்கிறது..."

"இன்னொரு காரணமா?"

"ஆம். நீ இருக்கும் இந்த இட தில் இருக்க வேண்டியவன் சி ணன். அவனால் சோழ மக்கது கும் கொங்கு நாட்டிலும் ஏற்பட் இன்னல்கள் கொஞ்சமல்ல. சி ணன் வந்திருந்தால் நேரடியாக தாக்குதலைத் தொடங்கியிருப்பே உன் வருகை நேற்று பிற்பகலில்தா எனக்கு அறிவிக்கப்பட்டது" எ றார் கிருஷ்ணமல்லர்.

"நான் மட்டும் என்ன வ விலக்கு?" - விக்கலனின் கேள் உடனே வந்தது.

கிருஷ்ணமல்லர் நகைத்த நகைப்பினூடே, "இங்கு சிங்கண இருந்திருந்தால் தனியாக வந் திருக்கும் என்னை வீரரை விட்டுச் சிறை செய் யவோ அழிக்கவோ முயன்றிருப்பான். நீ சுத்த வீரன் என் பதையும், உன்

**விஷ்வக்சேனன்**

# இந்திர தனுசு

ார் முறைகளைப் பற்றியும் யாதவ இளவல்
முறை கூறியிருக்கிறான்" என்றார்.
விக்கலன் பிரமித்தான். "யாதவ இளவல் தங்க
க்கு..."
"யாதவ கிருஷ்ணன் எனது சீடன்" என்றார்
ருஷ்ணமல்லர் முறுவலுடன்.
தெற்கே பாண்டியர் போரைத் தொடங்கும் தரு
த்தில் வடஎல்லையில் யாதவர்கள் படைகளைக்
ிப்பதாக வந்த செய்தியின் பொருள் விளங்கியது
ந்கலனுக்கு. போசளரை தமிழகத்திலிருந்து
ட்ட பாண்டியர் திட்டம்
ந்த்து நீண்ட காலமாகி
ட்டதென்பதும் அவனுக்
புரிந்தது.
சற்று நேரம் சிந்த
ாயில் ஆழ்ந்தவன்,
டைத்தலைவரே,
ங்கள் தூது
த விவரத்
க் கூறுங்
" என்
ா.





## அட பரமசிவனே!

பேராசைக்கார தனவந்தன் ஒருவன் ஏழை எளியோர் என்று கூடப் பாராமல் வட்டிக்கு வட்டி வாங்கிப் பொருள் சேர்த்து வந்தான். தான, தர்மமெல்லாம் அவனுக்குப் பிடிக்காத விஷயமென்றாலும் அடிக்கடி "அட, பரமசிவமே!" என்று கூறு வான். இப்படி நாளெல்லாம் சிவநாமத்தை உச்சரிக்கிற காரணத் தால் அவனுக்கு ஞானம் வழங்க முடிவு செய்தார் சிவபெருமான்.

ஒரு பரதேசியாக உருவெடுத்த சிவபெருமான் அந்தத் தனவந்தனின் ஊரையடைந்தார். கையில் திருவோடேந்தி வீடு களில் பிச்சையெடுத்து வந்தார். அவருடைய திருவோடு நிறையு மளவுக்குத் தனமோ, தானியமோ பிச்சையிட்டவர்களுக்குப் பொருள்வளம் கூட்டினார். இந்த அதிசயப் பரதேசி யின் மகிமை பற்றிக் கேள்விப்பட்ட தனவந்தன், அவருக்குப் பிச்சை யிடுவதன் மூலம் தான் இன்னும் பொருள் சேர்க்க ஆசைப்பட்டு அவரை அழைத்துவரச் செய்தான்.

சிவபெருமானும் கையில் திருவோட்டுடன் பரதேசிக் கோலத்தில் வந்து நின்றார். பிச்சையிடுவதற்குத் தயாராக நின்ற தனவந்தனிடம், "கனவானே, நீ அளிக்கும் பிச்சையில் என் கையிலுள்ள திருவோடு நிரம்பி வழிய வேண்டும். அதுவரை பிச்சையிடுவதை நிறுத்தக் கூடாது. அப்படி நிரப்பிவிட்டால் உன் செல்வம் பன்மடங்கு பெருகும். இல்லையேல் நீ பிச்சை யிட்ட பொருளும் உனக்குத் திரும்பக் கிடைக்காமல் போய் விடும்!" என்று எச்சரித்தார் பரதேசி.

இந்தத் திருவோட்டை நிரப்புவதா பெரிய விஷயம் என்கிற ஆணவத்தோடு பிச்சையிட்டான் தனவந்தன். திருவோடு நிரம் பும் வழியாய் இல்லை. தனது எல்லாப் பொருள்களையும் பிச்சை யிட்டு கட்டிய துணியுடன் மட்டுமே நின்ற தனவந்தனுக்கு வந்தி ருப்பது யாரென்று புரிந்தது. சிவபெருமானும் தமது சுயரூபத்தில் தரிசனம் தந்து, "பக்தனே, உன்னுள் இருந்த ஆசை என்னும் மாயையைத்தான் திருவோடாக்கி யாசித்தேன். ஆசைக்கு அளவேது? ஆகவேதான் எவ்வளவு முயன்றும் உன்னால் என் திருவோட்டை நிரப்ப முடியவில்லை. இனியாவது பேராசை ஒழித்து ஏழை - எளியவர்களிடம் கருணையோடு நடந்து கொள்!" என்று கூறித் தாம் பிச்சையாகப் பெற்றதையும் அவ னுக்கே திருப்பிக் கொடுத்து மறைந்தார். தனவந்தனும் திருந்தி வாழ்ந்து நற்கதியடைந்தான்.

* ஓர் ஆன்மீகச் சொற்பொழிலிவிருந்து....
தகவல் : ஆண்டார்கை சுந்தரம்

கிருஷ்ணமல்லரின் குரல் கணீரென்று ஒலித்தது. "போசள தண்டநாயகரே! தமிழகத் தின் பெரும்பகுதி போசளர் ஆட்சியில் பெரி தும் சீரழிந்து விட்டது. கொங்கு மன்னன் அவ நிதன் எமது உதவியைக் கோரியிருக்கிறான். கொங்கு நாட்டை அவநிதனிடம் ஒப்படைத்து விட்டு, போசள வீரர் அனைவரும் நாடு திரும்பிவிட வேண்டும். இதை ஏற்பதால் அனாவசியமான உயிர்ச் சேதமும், போரும் தவிர்க்கப்படும். இதைத் தெரிவிக்கவே வந்தேன்."

விக்கலன் நகைத்தான். நகைத்துவிட்டு, "போசளரை விரட்டி விட்டு பாண்டியர்கள் கொங்கு நாட்டை ஆக்கிரமிக்க நினைக்கிறீர் கள். இந்த மண் எப்படியும் அடிமை பூமிதான். அதற்குத்தானே இந்தப் போர்?" என்றான்.

கிருஷ்ணமல்லரின் முறுவல் சற்று விரிந்தது. "தவறு விக்கலா! போசள வீரர்களையும் சேம கேசியையும் அழித்த பின்னர், எமது படை சோழ நாட்டுக்குள் நுழையவில்லை என்பதை நீ அறியவில்லையா? அந்த மண்ணைச் சேர்ந்தவர்களையே அந்த நாட்டில் ஆட்சி நடத்த உதவுவதுதான் பாண்டிய மன்னரின் நோக்கம். வெற்றி கண்டபின்பு வென்றவரை அடிமையாக்குவது பாண்டிய மன்னர் விரும் பாத ஒன்று. இங்கும் அதே கதைதான் நிகழப் போகிறது" என்றார் கிருஷ்ணமல்லர்.

படைத்தலைவர் கூறியதில் உண்மை நிரம்பிக் கிடப்பதை உணர்ந்த விக்கலன் சற்று சிந்தித்தான். அடுத்து அவன் பதில் தெளிவா கவே வந்தது. "ஆனால் படைத்தலைவரே, இது மன்னர்கள் கூடி முடிவு செய்ய வேண்டிய விஷயம். நான் போசள மன்னர் உத்தரவை நிறைவேற்றும் வெறும் கருவி. பாண்டியரைத் தடுத்து நிறுத்த உத்தரவிட்டிருக்கிறார் எமது மன்னர். அதை நிறைவேற்றவே நான் வந்தி ருக்கிறேன்."

"நீ சொல்வதிலும் ஒரு நியாயம் இருக்கவே செய்கிறது" என்று சலித்தபடியே எழுந்த கிருஷ்ணமல்லர், "சரி, விக்கலா, இன்னும் அரை ஜாம நேரத்தில் படைகளுடன் வருகிறேன். சித்தமாக இரு" என்றபடியே வாயிலை நோக்கி நடந்தார்.

"படைத்தலைவரே" - விக்கலனின் குரல் அவரைத் தேக்கியது.

"என்ன விக்கலா?" கிருஷ்ணமல்லரின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"தங்கள் கரத்தால் நான் மடிய நேரிட்டால் என் பாக்கியம் என்று கருதுவேன்" என்றான் விக்கலன்.

மீண்டும் திரும்பி விக்கலனை நெருங்கிய கிருஷ்ணமல்லரின் யானை விழிகள், அவனை ஊடுருவிப் பார்த்தன. மல்லரின் வலிய கர

எழுந்து அவன் தோளில் பதிந்தது. "விக்கலா, உன் வீரத்திற்கு முழு வாய்ப்பையும் அளிக்கிறேன். நான் யந்திரப் பொறிகள் எதையும் இந்தப் போரில் பயன்படுத்தவில்லை. ஆனால் கோட்டைக்குள்ளிருக்கும் பொறிகளை நீ பயன்படுத்த எந்தத் தடையுமில்லை. உன்னையும் உன் வீரர்களையும் காத்துக் கொள்" என்றவர் திரும்பி வாயிலை நோக்கி நடந்தார்.

அடுத்த அரைஜாமத்தில் போரைக் காண விரும்பிய கதிரவன் சற்று மேலேறினான். கறுத்த மேகங்களும் பறவைக் கூட்டங்களும் அச்சத்தால் தூரத்து மலைகளை நோக்கி நகர்ந்தன. தெற்கில் மீண்டும் எழுந்த புழுதி மண்டலம் ஸ்காந்தபுரத்தை நோக்கி நகரத் தொடங்கியது.

நதிக்கரைக்கு ஒரு காத தூரம் இருக்கையில் வேகமெடுக்கத் தொடங்கிவிட்ட பாண்டியர் புரவிப்படை தூரத்தில் வரும்பொழுதே நிலத்தை தடதடவென அதிர வைத்தது. கிருஷ்ணமல்லரின் முரட்டு அரபுப் புரவி, முன்னால் அசுர வேகத்தில் பாய்ந்து வர, அவரது சீடர்களான மல்லர்களைக் கொண்ட தனிப் பிரிவு தொடர்ந்து வந்தது. அளவில் பெரியதாகவும் கனமாகவும் நீண்ட சதுர வடிவங்களிலிருந்த கேடயங்களை உயர்த்திப் பிடித்தபடி பெரும் வாட்களைச் சுழற்றியபடியே நதியிலிறங்கிய மல்லர்கள் மீது போசள வீரர்கள் தொடுத்த அம்புகள் ஏறக்குறைய பயனற்றுப் போயின. அதையும் மீறிப் பாய்ந்த ஒன்றிரண்டொரு அம்புகளை அனாயாசமாகப் பிடுங்கி எறிந்த கிருஷ்ணமல்லர், கரையேறியதும் முதலில் வில்லாளிகளை துவம்சம் செய்ய தமது சீடர்களுக்கு உத்தரவிட்டார். தங்கள் கேடயங்களால் போசள வீரர்களுக்குக் கபால மோட்சமளித்தும் பெரும் வாட்களால் சீவியும் நான்கு வரிசைகளையும் நீக்கத் தொடங்கினர் கிருஷ்ணமல்லரின் சீடர்கள்.

சற்று இடைவெளி விட்டு மீண்டும் ஒரு புரவிப்படைப் பிரிவு நதியிலிறங்கியது. பூரண கவசங்களுடனும் உயர்த்திய நீண்ட வாளுடனும், சிங்க விழிகளுடனும் தனது பெரும்புரவி முன்னால் வந்து கொண்டிருந்தான் ஜடாவர்ம சுந்தரபாண்டியன். கிருஷ்ணமல்லர் அமைத்துக் கொடுத்த பாதையில் முன்னேறிய பாண்டிய மன்னன், விக்கலன் படைப் பிரிவுகளை இரு பிரிவுகளாகப் பிரித்து, தனக்கு நேர் மோதித் தாக்குதலைத் துவங்கினான்.

போசள வில்லாளிகளை முழுவதுமாக அழித்துவிட்ட கிருஷ்ணமல்லரின் சீடர்கள், மீண்டும் அணிவகுத்து விக்கலனது படையை நோக்கில் ஊடுருவத் தொடங்கினர். கிருஷ்ண



"டில்லியிலேருந்து வரும் தலைவர் பெரீய்ய பெரீய்ய மூட்டைங்களோட வர்றாரே, ஏன்?"

"சூட்கேஸுங்களை எடுத்துவந்தா எதிர்க் கட்சிக்காரங்க பணம் கொண்டு வந்ததா பிரசாரம் பண்ணுறாங்களாம்!"

- வளர்மதி ஆசைத்தம்பி

மல்லரும் அவரது தனிப்படையும் போசள வீரர்களும் போரிட்ட பகுதியில் ஏற்பட்ட சேதம், அளவிட முடியாததாயிருந்தது. போசள வீரர்களைக் கேடயங்களாலும் மூன்று நான்கு வீரர்களை ஒன்றாகச் சீவித் தள்ளிய பெரும் வாட்களாலும் கடுமையாக கிருஷ்ணமல்லரின் சீடர்கள் தாக்கிக் கொண்டிருந்தனர். மேற்குப் பகுதியில் ஏற்பட்டுக் கொண்டிருந்த நாசத்தைக் கவனித்த விக்கலன், பாண்டிய மன்னன் தனது பிரசித்தி பெற்ற யானைப் படையை அழைத்து வராததன் காரணத்தைப் புரிந்து கொண்டான்.

சுந்தரபாண்டியனின் நீண்ட வாளுடன் தனது வாளை உராயவிட்ட விக்கலன், தனது படை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு தாக்கப்பட்டதை உணர்ந்தான். கிருஷ்ண மல்லர் குறுக்கில் திரும்பி தனக்கு நேர் வலது புறத்தில் ஊடுருவத் தொடங்கியதையும் கவனித்தான். அவர் உத்தேசத்தைப் புரிந்து கொண்டான். மன்னன் பிரிவுடன் மல்லர்களின் பிரிவு இணைய முற்படுவதைக் கண்டு, அவை ஒன்றாக இணைந்து விட்டால் விளைவு விரும்பத்தகாததாக இருக்கும் என்பதையும் உணர்ந்து கொண்டதால் தனது வீரர்களைக் கோட்டையை நோக்கிப் பின்வாங்க உத்தரவிட்டான்.

விக்கலன் மெள்ள பின்வாங்கத் தொடங்கியதையும் கோட்டையை அடைந்து அதன் பாதுகாப்பில் போரிடுவது உசிதம் என்று அவன் தீர்மானித்ததையும் புரிந்து கொண்ட பாண்டிய மன்னன் முகத்தில் முறுவல் ஒன்று பிறந்தது. அடுத்து அவன் செய்த சமிக்ஞையைத் தொடர்ந்து, மெள்ள தாக்குதலின் வேகத்தைக் குறைத்துக் கொண்ட பாண்டிய வீரர்கள் விக்கலனை முழுவதுமாகப்



"அவர்தாண்டா உண்மையான தலைவர்!"

"எப்படிச் சொல்றே?"

"யாரோட கூட்டு வச்சுக்கலாம்னு கேட்டா தேர்தல் முடியட்டும், அப்புறம் பார்த்துக்கலாம்னு சொல்லிட்டார்!"

- புளியரை கணேசன்

---

பின்வாங்கி கோட்டையை நோக்கிச் செல்லவும் அனுமதித்தனர்.

விக்கலனும் அவன் வீரர்களும் கோட்டைக்குள் நுழைந்த அடுத்தகணம் கோட்டையின் கதவுகள் பெரும் சப்தத்துடன் அறைந்து மூடப்பட்டன. உள்ளே நுழைந்த விக்கலன் சிறைச் சாலைப் பகுதியிலிருந்து எழுந்த கூச்சல்களை சட்டை செய்யவில்லை. இரண்டு சுற்றுக்களாகத் தொடர்ந்த மதில்களின் மீதிருந்த பொறிகளைச் சுவர்களின் இடையேயிருந்த இடைவெளியை நோக்கித் திருப்பச் செய்தான். இரண்டாவது சுற்றின் வாயிலிலிருந்த யவனப் பொறிகளை, வரும் புரவி வீரர்களைத் தாக்குமாறு இயக்கவும் உத்தரவிட்டான். தனது ஏற்பாடுகளை முடித்துக் கொண்டு, கோட்டை மதிலின் உச்சிக்கு வந்த விக்கலன், பாண்டியர் படை மீண்டும் அணிவகுத்து எதிரே நிற்பதையும், கிருஷ்ணமல்லரின் முரட்டுப் புரவி முன்னால் அதே சமத்கார நடையுடன் குறுக்கிலும் நெடுக்கிலுமாக நடப்பதையும் அவர் சரமாரியாக ஏதோ உத்தரவுகள் இட்டுக் கொண்டிருப்பதையும் கண்டான்.

ஸ்காந்தபுரத்திற்கு நேர் கிழக்கில் பத்து காத தூரத்தில், சோழ எல்லையை நோக்கிச் சென்ற பாதையின் இரு பக்கங்களிலும் வரிசையாகக் கூடாரங்கள் பல நின்றிருந்தன. முன்னணியில் நின்ற கூடாரத்தின் மீது பறந்த பாண்டியரின் பெரும் கொடி, ஸ்காந்தபுரத்தை விழுங்கிவிடத் துடிப்பது போல படபடத்துக் கொண்டிருந்தது! சோழ எல்லையில் சேமகேசியையும் போசள வீரர்களையும் அழித்து விட்டுக் கிளம்பிய அந்தப் படைப் பிரிவு ஸ்காந்தபுரத்தை நெருங்க நெருங்க, அதிகமாக வளர்ந்திருந்தது. பாண்டிய வீரர்களுக்கான உடையில் இல்லாத, சாதாரண உடைகளிலிருந்த வீரர்களின் எண்ணிக்கை அதிகமாகவும் தெரிந்தது. கூடாரத்தினுள் அமர்ந்து, எதிரில் நின்றவனையும் அருகிலிருந்த யுவானையும் ஏறிட்ட ஆதித்யனின் கரங்களில் ஓலைக் குழலொன்றும் இருந்தது.

ஆதித்யனின் எதிரில் நின்றிருந்தவன் அதிக உயரமில்லையென்றாலும் நல்ல திடகாத்திரமாயிருந்தான். உலையிலிடப்பட்ட நல்ல செப்பின் நிறத்திலிருந்தது அவன் முகம். சுருள் சுருளாக இரும்புத் துருவல்களைப் போலிருந்த அவன் குழல்கள் பார்வைக்குச் சற்று விசித்திரமாயிருந்தாலும் ஒரு களையை அளித்துக் கொண்டிருந்தன. அவன் விழிகளில், அடக்கப்பட்ட வேங்கையின் வேகம் தெரிந்தது. அந்த மனிதனை ஒருமுறை உற்றுநோக்கிய ஆதித்யன்,

"சூரிய காங்கேயா! படைத் தலைவரது உத்தரவு திட்டவட்டமாக இருக்கிறது. நீ திரட்டியிருக்கும் விடுதலைப் படையை மட்டுமல்ல, சோழ எல்லையிலிருந்து இந்தப் போருக்காகவே வீரர்களை நடத்திக் கொண்டு வந்திருக்கும் என்னையும் கூட ஸ்காந்தபுரத்தில் இப்போது நுழைய வேண்டாமென்றும், பாண்டிய மன்னரும், படைத்தலைவரும் கொங்குத் தலைநகரைக் கைப்பற்றி மன்னர் அவநிதரை விடுவித்த பின்பே வரவேண்டுமென்றும் உத்தரவிட்டிருக்கிறார். சிங்கணனுக்குப் பதிலாக போசள விக்கலன் அங்கிருப்பதுதான் காரணமாயிருக்க வேண்டும் என்பது என் யூகம்" என்றான்.

கொங்கு மன்னன் அவநிதனின் மெய்க் காவலனும், கொங்கு நாட்டு மக்கள் படையின் தலைவனுமான சூரியகாங்கேயனிடமிருந்து அடுத்து உதிர்ந்த சொற்களில் சிறிது ஆவேசமிருந்தது: "இந்தப் போருக்காக ஆண்டுக்கணக்கில் காத்திருக்கிறோம் இளவரசே! ஸ்காந்தபுரத்துக் கோட்டை சாதாரணக் கோட்டையல்ல, அதன் சூட்சுமங்களும் அபாயங்களும் எங்களுக்கு நன்றாகத் தெரியும்."

ஆதித்யன் இருக்கையை விட்டு எழுந்தான். "உன் உணர்ச்சிகள் புரிகிறது காங்கேயா! ஆனால் பாண்டியர் படையால் ஸ்காந்தபுரம் மீட்கப்பட வேண்டும் என்பது மன்னர் எண்ணம். அதை நீயோ, நானோ மீற முடியாது. கோட்டை கைப்பற்றப்பட்டவுடன் இங்கிருக்கும் வீரர்களை நடத்திக் கொண்டு நீ கோட்டைக்குச் செல்" என்றான் ஆதித்யன்.

காங்கேயன் முகத்தில் திகைப்பு தெரிந்தது. "அப்படியானால் தாங்கள்...?"

ஆதித்யன் இதழ்களில் முறுவல் படர்ந்தது. "என்னை குருதேவர் மாறன் அமுதனாரைச் சென்று சந்திக்க உத்தரவிட்டிருக்கிறார், இந்திர தனுசை மீட்க" என்றான் ஆதித்யன்.

(தொடரும்)

# சுஜாதா பக்கம்



"ஆங்கில இலக்கியத்தின் தலைசிறந்த நாடகாசிரியரான ஷேக்ஸ்பியரைப் பற்றி ஏராள மான ஆராய்ச்சிகள் உள்ளன. அவர் சொந்த வாழ்க்கை பற்றி அதிகம் தெரியவில்லை. பிறந்தது ஏப்ரல் 23, 1564. இறந்தது அதே தேதி 1616. 1590லிருந்து 1613 வரை அவர் எழுதிய நாடகங்கள் இன்றுவரை உலகின் ஏதாவது ஒரு பகுதியில் தொடர்ந்து நடிக்கப்படுகின்றன. சமகால எழுத் தாளரான பென் ஜான்சன் சொன்னபடி "அவர் நம் காலத்தவரல்ல; எல்லாக் காலத்துக்கும் உரிய வர்."

ஷேக்ஸ்பியர் தம் நாடகங்களில் மொத்தம் 29138 மூலவார்த்தைகளைப் பயன்படுத்தியிருக் கிறார். அவர்கால ஆங்கில மொழியில் நாற்பது சதவிகிதம் அது. (ஷேக்ஸ்பியர் காலத்தில் அகராதி இல்லை) ஒப்பிட்டுப் பார்த்தால் மகாகவி மில்டன் பயன்படுத்தியது பத்தாயிரம் வார்த்தைகளை மட்டுமே. கிங் ஜேம்ஸ் பைபிள் எட்டாயிரம். ஹோமர் ஒன்பதாயிரம். உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். இன்று புழக்கத்தில் இருந்துவரும் ASSASSINATION, ACCOMODATION, BASELESS, BEDROOM, CRITIC, DISHEARTEN, EXPOSURE, OBSCENE, PEDANT, SPORTIVE, USELESS, LEAP-FROG போன்ற வார்த்தைகள் ஷேக்ஸ்பியர் முதன் முதலில் பயன் படுத்தியவை.

தமிழிலும் நம் பழைய இலக்கியங்களில் பல நல்ல நல்ல வார்த்தைகள் உள்ளன. இதில் சோகம், அவற்றைப் பயன்படுத்துவதை மெள்ள மெள்ள குறைத்துக் கொண்டிருக்கிறோம். தற்காலத்தில் பேசப்படும், எழுதப்படும் தமிழ் மொத்தம் ஆயிரம் அல்லது மிஞ்சிப் போனால் ஐயாயிரம் சொற் களுக்குள் அடங்கி விடுகிறது. நாம் இழந்த சில சொற்களைப் பார்க்கலாம்:-

'இலை' என்னும் ஒரே உறுப்புக்குத் தமிழில், நான்கு சொற்கள் உள்ளன. மா, வாழை போன்ற வற்றிற்கு இலை. நெல், கேழ்வரகு போன்றவற்றிற்கு 'தாள்'. கரும்பு, சோளம் இவைகளுக்குத் 'தோகை'. தென்னை, பனைக்கு 'ஓலை'. இதில் தோகை மறைந்துவிட்டது. அதுபோல் ஒரு பூவிற்கு அதன் பல்வேறு நிலைகளில் அரும்பு, போது, மலர், வீ, செம்மல் என்று வார்த்தைகள் உள்ளன. இதில் பூ, அரும்பு, மலர், தவிர மற்றவை வழக்கில் இல்லை. அரும்பிலேயே மொட்டு, முகிழ், முகை, மொக்குள் என வேறு வேறு சொற்களுள் மொட்டு மட்டும் தான் உள்ளது. காயின் நிலைகளில் பூம்பிஞ்சு, திருகுபிஞ்சு கன்னற்காய் இவை மறைந்து விட்டன. மாம்பிஞ்சுக்கு மாவடு இருக்கிறது. பலாப்பிஞ்சுக்கு உண்டான 'மூசு' எங்கே போச்சு தெரியவில்லை. நெல் வகைக்கு மட்டுமே நூறு வார்த்தைகள் இருப்பதாகச் சொல்கிறார்கள். இதில் சம்பா ஒரு வகைக்கே எழுபது உண்டாம். அவையெல்லாம் எங்கே?

நிஜத்திற்கு உண்மை, வாய்மை, மெய்மை என்று மூன்று தமிழ்ச் சொற்கள் உள்ளன. இவற் றின் வேறுபாட்டை உணர்ந்து நாம் பயன்படுத்துகிறோமா என்பது சந்தேகமே. உண்மை என்பது மனத்துக்குள் இருப்பது. வாய்மை என்பது சொல்லில். மெய்மை செயலில். "தமிழின் சொல்வளத்தை தமிழரே இன்னும் சரியாக உணர்ந்திலர்" என்று தேவநேயப் பாவாணர் எழுதியிருப்பது சரியே.

ஒரு பக்கத்தில் நல்ல நல்ல தமிழ்ச் சொற்களை இழந்து கொண்டிருக்க, மறுபக்கத்தில் புதிய கலைச் சொற்களை அமைக்கத் திணறிக் கொண்டிருக் கிறோம். இயற்பியல், மருத்துவம், வேதியியல் ஜெனட்டிக்ஸ், உயிரியல், கணிப்பொறியியல் போன்றவற்றை மேல்நிலையில் தமிழில் கற்றுத் தர கலைச் சொற்கள் மிக அவசரமாகத் தேவைப்படு கின்றன. இதற்காக நாம் புதிய தமிழ் வார்த்தைகள் அமைக்க வேண்டியதே இல்லை என்பதுதான் என் வாதம். இருக்கிற தமிழ்ச் சொற்களையே பொருத் தம் பற்றி அதிகம் கவலைப்படாமல் புதிய அர்த் தங்களில் பயன்படுத்த அறிவியலும் தமிழும் தெரிந்த சில அறிஞர்கள் தேவைப்படுகிறார்கள்.

இவ்வகையினர் பலரை நான் சந்தித்திருக் கிறேன். இவர்களையெல்லாம் ஒருங்கிணைத்து ஒரு 'கலைச் சொல் வாரியம்' அமைக்க வேண்டும். ப்ரெஞ்சு, ஜப்பானிய மொழியினர் செய்தார்கள். அதுபோல் செய்ய வேண்டும். தேர்தல் முடிந்து புதிய அரசு இதை முதல் காரியமாகச் செய்ய வேண்டும்.

தமிழில் அகம் புறம் மலையாளத்துக்குச் சென்று விட்டது. மனை கன்னடத்துக்கு. இல்லு, ஈ தெலுங்குக்குப் பழுந்து போய் விட்டது. தா, கொடு இரண்டும் தமிழில் அதிக வேறுபாடின்றி பயன்படுத்தப்படுகின்றன. முன்பு 'ஈ' என்பது நம்மை விடக் கீழ் நிலையில் உள்ளவருக்கும் 'தா' என்பது நம்முடன் ஒத்தவர்க்கும் 'கொடு' என்பது நம்மைவிட உயர்ந்தவர்களுக்குக் கொடுப்பதற்கும் பயன்பட்டு வந்தது. சமூகத் தராதரம் மறைந்ததில் இந்த நளினமான வேறுபாடுகளும் மெள்ள மறைந்து விட்டதில் வியப்பில்லை.

இன்றைய தினங்களில் இம்மூன்று வார்த் தைகளையும் வேறு சூழ்நிலையில் கலைச் சொற்களில் பயன்படுத்தும் வாய்ப்பு உள்ளது. குறிப்பாக சட்டப் புத்தகங்களில்.

உதாரணமாக GRANT, ENDOWMENT, GIFT இவைகளுக்குள் வேறுபடுத்தப் பயன்படுத்தலாம்.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

## 19. மல்லரின் மென்மனம்

நியாயம் என்பது மனிதனுக்கு மனிதன் வேறுபடுவது. ஆனால் தர்மம் என்பது அனைத்து உயிர்களுக்கும் பொதுவானது. தர்மம் என்பது மாறாதது, அழியாதது. உலகின் இயக்கத்தை, சூரிய சந்திரர்களின், விண்மீன்களின் இயக்கத்தை, இயற்கையின் செயல்களை நடத்திச் செல்வது. அரசு நடத்தவும், மக்களைக் காக்கவும், போர்களை நடத்தவும் கூட ஒரு தர்மம் இருக்கிறது. அத்தகைய யுத்த தர்மத்தை என்றும் மதிப்பவனும், யுத்தம் என்று வரும்போது எதிரியின் வீரத்தை மதிப்பவனும், எதிராளியை அவன் விரும்பும் வசதிகளின்படி போரிட விட்டு அவனை வெல்வதே வீரம் என்று எண்ணுப்வனுமான ஜடாவர்ம சுந்தர பாண்டியன், போசள தண்ட நாயகனை பின்வாங்கவும், கோட்டைக்குள் பாதுகாப்புடன் நுழையவும் தாராளமாக அனுமதித்ததில் வியப்பேதுமில்லை.

பாண்டிய மன்னன் மட்டும் விரும்பியிருந்தால் கோட்டைக்குள் நுழையுமுன்பே எளிதாகத் தன்னை அழித்திருக்கலாமென்பதை உணர்ந்திருந்தான் விக்கலன். கிருஷ்ணமல்லரின் அசுர வேகத்திற்கும் அவரது சீடர்களான அந்த ராட்சதர்களின் வேகத்திற்கும் தானும் தனது போசள வீரர்களும் ஈடுகொடுத்திருக்க இயலாது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டிருந்ததால் சற்று வியப்புடனேயே கோட்டை மதிலின் மீது நின்று பாண்டியர் படையின் அடுத்த ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தான்.

ஸ்காந்தபுரக் கோட்டையின் எதிரில் அம்பெறியும் தூரத்திலேயே வெகு அலட்சியமாக உலவிய கிருஷ்ணமல்லரின் முரட்டு அரபுப் புரவி, அணிவகுத்து நின்ற பாண்டிய வீரர்களுக்கு முன்னால் குறுக்கும் நெடுக்குமாக உலவியது. அத்தனை அருகில் எதிரிகளின் கோட்டையிருப்பதை அறவே சட்டை செய்யாத கிருஷ்ணமல்லரின் வெண்கலக் குரல், சரமாரியாக உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தது. கோட்டையைத் தாக்கும் பொறுப்பை கிருஷ்ணமல்லரிடம் ஒப்படைத்து விட்ட பாண்டிய மன்னன், சற்றுத் தள்ளி தமது புரவியிலமர்ந்து படைத்தலைவரிடும் உத்தரவுகளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

> அள்ளித் தூக்கிக் கொண்டு வரப்படாத குறையாக சற்றுக் கழித்து உள்ளே கொண்டு வரப்பட்ட மருத்துவரை உஷ்ணம் தெறிக்க நோக்கிய கிருஷ்ணமல்லர், "இன்னும் இவன் ஏன் கண் விழிக்கவில்லை?" என்றார் முரட்டுத்தனமாக.

பாண்டியர் படையின் ஒரு பிரிவு சடசடவென்று புரவிகளைத் திருப்பிக் கொண்டு மீண்டும் நதிக்கரையை நோக்கி அதிவேகமாக விரைந்தது. இரு நாழிகைகள் கழித்து அந்த வீரர்கள் திரும்பியபோது கிருஷ்ணமல்லரின் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட விக்கலன் திகைத்தான். கனமான மரங்கள் வரிசையாக நதிக்கரையிலிருந்து வந்தன. கிருஷ்ணமல்லரின் சீடர்கள் ஐவர் ஐவராக மரங்களைத் தோள்களில் தாங்கி, மறுகரங்களில் தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்த சதுர கேடயங்களுடன் கோட்டை வாயிலை நோக்கி வேகத்துடன் முன்னேற, வில் வீரர்கள், கோட்டையின் உச்சியை நோக்கிக் குறிவைத்தனர். மதில் உச்சியில் போசள வீரர்களின் தலைகள் தெரிந்ததும் அம்புகள் பறந்தன. மரங்கள் பெரும் இடிகளாக வாயிலில் ஒன்றன்பின் ஒன்றாக மோதத் தொடங்கின. களிறுகள் இல்லாத குறையை ஈடுசெய்த மல்லர்களின் தொடர்ச்சியான தாக்குதலில் இரு நாழிகளுக்கும் சற்று அதிக நேரம் வரையில் ஈடுகொடுத்த

இந்திர தனுசு



தெற்கு வாசல் கதவுகள், பெரும் ஒலியுடன் உட்புறமாக முறிந்து விழுந்தன.

கதவுகள் விழுந்ததும் பாண்டியர் புரவிப் படை வேகமாக உள்ளே நுழைந்துவிடும் என்று எதிர் பார்த்திருந்த விக்கலன் ஏமாந்தே போனான். கிருஷ்ணமல்லரின் குரல் அதே வெண்கலத் தொனியில் மீண்டும் ஏதோ உத்தரவிட்டுக் கொண்டிருந்தது. சற்றுக் கழித்து அவரது சீடர்கள் வாட்களையும் அந்தக் கேடயங்களையும் ஏந்தி புரவிகளில் தாவினர். இரு உட்புற மதில்களுக்கிடையே நெருக்கமாக அணிவகுத்த மல்லர்கள் தலைக்கு மேல் உயர்த்திய கேடயங்கள் உலோகக் கூரையிட்டது போல் இணைத்திருக்க, உள்ளே பாய்ந்தனர். விக்கலன், தன் உத்தரவின்படி மேலிருந்து அம்புகளைப் பொழிந்த யந்திரங்கள் பயனற்று விட்டதையும், மல்லர்கள்

**விஷ்வக்சேனன்**

இரண்டாவது சுற்று வாயிலை அடைந்து விட்டதையும் கண்டான்.

ஒரு பிரிவை மேலிருந்து யந்திரங்கள் இயக்கிய வீரர்களைத் தாக்க கிருஷ்ணமல்லர் உத்தர விட்டு, எதிரில் நின்ற யவனப் பொறிகளைத் தாக்கத் துவங்கி விட்டதையும் பார்த்தான். இந்த அசுரப் படையை எதிர்கொள்ள இனி போசள நாடே கவசம் பூண்டு வந்தாலும் இயலாது என்பதைப் புரிந்து கொண்டான்.

யவனப் பொறிகளின் அடிப்பகுதியிலிருந்த பெரும் மர உருள்ளகளைச் சரமாரியாக வேல்களை எறிந்து பிளந்த கிருஷ்ணமல்லர், அடுத்து செய்த சமிக்ஞையைத் தொடர்ந்து, பாண்டிய மன்னனின் புரவிப் படையை முழு வேகத்துடன் கோட்டைக்குள் புகுந்தது.

மதிலை விட்டிறங்கி, தமது புரவியில் ஆரோகணித்த விக்கலன், மாளிகையை நோக்கி விரைந்த கிருஷ்ணமல்லரைத் தடுத்து நேருக்கு நேர் மோதினாலும், அவன் வாள் வீச்சில் வேகம் சற்றுக் குறைந்தே இருந்தது. கிருஷ்ணமல்லர் சலித்துக் கொண்டார். "என்ன வீச்சு இது விக்கலா? பலமாக வீசு உன் வாளை" என்று இரையவும் செய்தார். மடிவதானாலும் இந்த மனிதரின் கரத்தால் மடிவது தனக்குப் பெருமை என்று தீர்மானித்த விக்கலன் இடிகள் போலிறங்கிய படைத் தலைவரின் வாளை உறுதியுடன் எதிர்க்க ஆரம்பித்தான்.

அதுவரை எவரும் தடுத்தறியாத தமது பெரும் வாளை விக்கலன் வெகு லாகவமாகத் தடுத்துத் திருப்பியதையும், தமது தோளிலும் கூட ஒருமுறை அவன் வாள் பதிந்து மீண்டதையும் கண்ட கிருஷ்ணமல்லருக்கு மெள்ள அந்தப் போரில் சுவாரசியம் பிறக்கத் தொடங்கியது.

**சு**தந்தரமென்பதைச் சிறிது இடைவெளிக்குப் பின் மீண்டும் அடையும்போது மன்னனும் சரி, மக்களும் சரி, அது புதிதாகக் கிடைப்பதாகவே மகிழ்கிறார்கள் என்பதை கொங்கு நாட்டு மன்னனும், அரண்மனைக்குள் உலவிய மற்றவர்களும் நிரூபித்துக் கொண்டிருந்தார்கள்.

ஸ்காந்தபுரத்து அரண்மனையில் உலவிய அனைவரது முகங்களிலும் ஆனந்தம் தாண்டவமாடியது. மன்னன் அவநிதனை அதுவரை வருத்திய நோய், போன இடம் தெரியவில்லை! எங்கிருந்தோ வந்து குதித்திருந்த மருத்துவர் தமது முதுமையை அறவே மறந்து மேலும் கீழுமாக ஓடிக் கொண்டிருக்க, பாண்டிய மன்னனை அணுகி ஏதோ கூற முயன்ற அவநிதனின் குரல் எழும்பாமல் தழுதழுத்துக் கிடந்தது.

ஆனால் இந்தச் சூழ்நிலைக்கு நேர் மாறாக அரண்மனை மேன்மாடத்தின் கடைசி அறையில் அமர்ந்திருந்த கிருஷ்ணமல்லரின் முகத்தில் மட்டும் பெரும் கவலை படர்ந்து கிடந்தது. அவரது சிறிய யானை விழிகள் – எதிரில் பஞ்சணையில் – பெரும்கட்டுக்களுடன் நினைவின்றிப் படுத்துக் கிடந்த விக்கலன் மீது பதிந்து கிடந்தன. கிருஷ்ணமல்லரின் பெரும் வாள் அவன் கவசத்தை உடைத்துக் கொண்டு விலாப்பகுதியில் மூன்று விரற்கடை தூரம் பாய்ந்து, விலாவின் கடைசி வரிசை எலும்புகளை முறித்திருந்தது. இத்தனைக்கும் அவன் வாள் வீச்சை ரசித்தபடியே வாளை விலக்கிப் பாய்ச்சியபோது, அவர் தமது வேகத்தைப் பெரிதும் குறைத்துக் கொண்டுதான் வீசியிருந்தார்.

துவங்கிய அன்று மாலையே போர் முடிந்து விட்டாலும், அடுத்த நாளின் உதயகாலம் வரை திறக்காமலிருந்த விக்கலனின் மூடிய விழிகளையும், அசைவற்ற தேகத்தையும் கண்டவர், "என்ன மருத்துவன் இந்த கொங்கு நாட்டு மருத்துவன்!" என்று சலித்தபடியே ஏழாவது முறையாக வாயிலில் நின்ற தமது சீடனை அழைத்தார். "அடேய் உப்பிலி! சென்று அந்த மருத்துவனை இழுத்து வா!" என்று உத்தரவும் இட்டார்.

அள்ளித் தூக்கிக் கொண்டு வரப்படாத குறையாக சற்றுக் கழித்து உள்ளே கொண்டு வரப்பட்ட மருத்துவரை உஷ்ணம் தெறிக்க நோக்கிய கிருஷ்ணமல்லர், "இன்னும் இவன் ஏன் கண் விழிக்கவில்லை?" என்றார் முரட்டுத்தனமாக. விக்கலன் கண் திறவாமல் கிடப்பதற்கு ஏதோ தான்தான் காரணம் என்ற தொனியில் எழுந்த அந்தக் கேள்வியைக் கண்டு சற்று திருதிருவென விழித்த மருத்துவர், "படைத் தலைவரே, சற்றுப் பொறுத்துக் கொள்ளுங்கள். இன்று மாலைக்குள் இவர் விழித்து விடுவார். உயிருக்கு ஒன்றும் அபாயமில்லை. தாங்கள் இவரைச் சற்று பலமாகத்தான் தாக்கியிருக்கிறீர்கள்" என்றார்.

அடுத்தகணம் கிருஷ்ணமல்லர் எழுந்த வேகம், அப்படியே மருத்துவரை அறைந்தே கொன்று விடுவார் போலிருந்தது. "மருத்துவரே! நான் விக்கலனைத் தாக்கும்போது கால் பங்காக வேகத்தைக் குறைத்துத்தான் வாளை வீசினேன். நீர் இங்கேயே இரும்.

''சோமுவுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பார்த்தியா? கின்னஸ் புத்தகத்தில் அவன் பேர் வந்திருக்கு!''

''எதுக்காக?''

''தேர்தலிலே மிக அதிக வோட்டு வித்தியாசத்திலே தோற்றதற்கு!''

– து. பூவராகன்



மாலைக்குள் விக்கலன் விழிக்கவில்லையென்றால் உம்மை என் சீடர்களிடம் ஒப்படைத்து விட்டு எமது அரண்மனை மருத்துவரை வரவழைத்துக் கொள்வேன்" என்றார் கிருஷ்ண மல்லர்.

வாயிலில் நின்ற சீடன், உதடுகளை விலக்கி சத்தமில்லாமல் மருத்துவரை நோக்கித் தன் பற்களைக் காட்டினான். மருத்துவரின் உடல் ஒருமுறை நடுங்கியது. "மதங்கொண்ட யானை மரத்தைக் குத்திச் சாய்ப்பது போல் சாய்த்து விட்டு, இந்தக் கணமே எழுப்பி நிறுத்து என்றால் இயலுகிற காரியமா?" என்று முணுமுணுத்தபடியே விக்கலன் காயங்களை மீண்டும் பரிசோதித்தார் மருத்துவர்.

"என்ன புலம்புகிறீர்?" – கிருஷ்ணமல்லரின் குரல் மீண்டும் ஒலித்தது.

"ஒன்றுமில்லை படைத்தலைவரே, ரத்தம் வருவது நின்று பச்சிலையும் சற்று கெட்டிப்பட்டிருக்கிறது. வேறு மூலிகைகள் சிலவற்றையும் கொண்டு வருகிறேன்" என்று எழுந்தார் மருத்துவர்.

**மா**லைப் பொழுது நெருங்க நெருங்க விக்கலன் இன்னும் கண் விழிக்காததைக் கண்ட மருத்துவர் அந்த அறையை விட்டு வெளியேற வகை தெரியாது விழித்துக் கொண்டிருந்தார். அரண்மனையெங்கும் தீபங்களைப் பணியாட்கள் ஏற்றத் துவங்கிய சமயம்வரை பொறுத்திருந்த கிருஷ்ணமல்லர், தமது சீடனை அழைத்தார். "உப்பிலி, இந்த மருத்துவனை எடுத்து சாளரத்தின் வழியே வெளியில் எறிந்து விடு. மதுரையிலிருந்து நமது மருத்துவர் நறையூருக்கு வந்திருப்பார். சென்று அவரை அழைத்து வா" என்று உத்தரவிட்டார்.

படைத் தலைவரின் உத்தரவு எத்தகையதானாலும் எப்பொழுதும் அதை மீறியறியாத உப்பிலி, மருத்துவரை நெருங்கி சிறு குழந்தையைத் தூக்குவது போல தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு, அவர் அலறலைப் பொருட்படுத்தாது சாளரத்தை நோக்கி நடந்தான்.

"படைத்தலைவரே!" என்ற மெலிதான குரல் பஞ்சணையிலிருந்து ஒலித்தது. விக்கலன் கண் விழித்திருந்தான். கிருஷ்ணமல்லரின் உக்கிரமான முகத்தையும், மருத்துவரைத் தூக்கிய படி நின்ற அவரது சீடனையும் கண்டவனின் முகத்தில் இலேசான முறுவல் ஒன்றும் படர்ந்தது.

**வி**க்கலனுக்கு நினைவு திரும்பிய இரண்டாவது தினம். அவன் மெள்ள எழுந்து அமரும் வரை மருத்துவரை வெளியில் செல்ல விடாத கிருஷ்ணமல்லர், மூன்றாவது தினம் மீண்டும் அவரை அழைத்தார். அந்த அழைப்பில் தெறித்த கடுமையைக் கண்ட மருத்துவர், "இப்பொழுதே விக்கலனை எழுந்து நடமாடச் செய்ய வேண்டும்" என உத்தரவிடுவார் என்று எதிர்பார்த்து நடுங்கியபடியே வந்து நின்றார்.



"என்ன சார், ஒரு மொட்டை போடுறதுக்கு நூறு ரூபாய் கேட்குறீங்களே?"
"ரஜினி ஸ்டைலிலே மொட்டை போடச் சொல்றீங்களே! அதுக்காகத்தான்!"
– மல்லிகை மன்னன்

படைத்தலைவரின் விழிகள் உப்பிலி மல்லனை நோக்கித் திரும்பின. குறிப்பை உணர்ந்த சீடன் வெளியே சென்று திரும்பிய போது அவனே சிரமப்பட்டு சுமக்குமளவிற்கு ஒரு பெரும் பேழையைச் சுமந்து வந்து மருத்துவரின் எதிரில் வைத்தான். "அதைத் திறந்து பாரும்" – கிருஷ்ணமல்லரின் உத்தரவு மீண்டும் வந்தது.

மண்டியிட்டுப் பேழையைத் திறந்த மருத்துவரின் விழிகள் கூசின. முக்கால் பாகம் வரை நிறைந்து கிடந்த பொற்காசுகளின் மீது ரத்தினங்கள் பல இறைந்து கிடந்தன. "விக்கலன் உயிரை மீட்டதற்குப் பரிசு இது. எடுத்துக் கொண்டு நீர் வெளியேறலாம்" என்றார் கிருஷ்ணமல்லர். மண்டியிட்டபடியே திருதிருவென விழித்த மருத்துவரைக் கண்ட கிருஷ்ணமல்லரின் முகத்தில் சலிப்பு தோன்றியது. "என்ன மருத்துவரய்யா நீர்? உம்மால் எடுத்துச் சொல்ல இயலவில்லை என்றால் என் சீடனை விட்டு உம்மையும் சேர்த்து தூக்கிச் செல்ல உத்தரவிடவா?" என்றார் மீண்டும்.

அடுத்தகணம் பேழையை எடுத்துக் கொண்டு வெளியே பாய்ந்து மறைந்தார் மருத்துவர்.

சிறைப்பட்ட போசள வீரர்கள் சிலரை விடுவித்து, அவர்களுடைய பாதுகாப்புடன் விக்கலன் ரதமொன்றில் நாடு திரும்ப ஏற்பாடு செய்த கிருஷ்ணமல்லர், தமது படைகள் மீண்டும் அணிவகுத்து வடக்கு நோக்கிச் செல்ல, அன்று மாலையே உத்தரவிட்டார்.

**அ**தே சமயத்தில், பாண்டியரின் பரம வைரியும் போசளருக்கும், சோழருக்கும் அடங்காதவனென்று பெயரெடுத்திருந்தவனும், அரக்கர்களுக்கு நிகரானவர்களையே படை வீரர்களாகக் கொண்டிருந்தவனுமான காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனின் எல்லைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தான் ஆதித்ய பாண்டியன்.

(தொடரும்)



"உங்க முதலாளி நல்லவராப்பா?"

"சொக்கத் தங்கம் சார்."

"அப்ப இன்னொரு தோசை கொண்டு வா!"

- சீர்காழி வி. ரேவதி



"அவரோட ஞாபக மறதியைப் போய் இவ்வளவு பாராட்டுறியே, ஏன்?"

"பணம் கடன் வாங்கியது நான். அவர் வந்து கடனைத் திருப்பிக் கொடுத்திட்டுப் போறாரே!"

- பிரசன்னகுமார்



"கல்யாணம் பண்ணிக்கிட்டா ராதாவைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு சொன்னே. இப்ப வேறு ஒரு பெண்ணைப் பண்ணிக்கிட்டு இருக்கியே?"

"ஹி... ஹி... இவ பெயரும் ராதாதான்!"

- வெ. ஜெயராமன்

# மதம் கடந்த ஆலயம்!

சென்னை பெரம்பூர் சுற்று வட்டாரத்தில் ஜவஹர் நகர் குடியிருப்பு உருவாகி, வீடுகள் 'முளைக்க'த் தொடங்கிய சமயம். சின்னதாய் ஒரு விநாயகர் சிலையை வாங்கிப் பத்துக்குப் பத்து சதுரத்தில் கோவில் கட்ட எண்ணினார்கள் அப்பகுதியினர். அயனாவரத்தில் ஒரு சிற்பியிடம் விநாயகர் சிலையைக் கேட்டபோது அறுநூறு ரூபாய் சொன்னார் அவர். கையிலிருந்த நானூறு ரூபாயைக் கொடுத்துவிட்டு இருநூறு ரூபாயை அப்புறம் தருவதாய்ச் சொல்லி வாங்கி வந்த சிலை தான் அமிர்த கணபதியாகக் கோவில் கொண்டுள்ளது. எட்டாண்டுகளுக்கு முன்னால் இடம் பிடித்த அமிர்த கணபதி, படிப்படியாக ஒரு முழுமையான ஆலயத்தையே உருவாக்கிவிட்டார்.

ஆலய நாயகர் பாலாஜி. கூடவே அபிராமி உடனுறை அமிர்தகடேசுவரர். இங்கே இந்தச் சைவ - வைணவத் திருக்கோவிலுக்குப் பெயர் 'ரஜனி - ராஜா ஆலயம்'. அரசியல், சினிமாச் சூழலில் வேறு மாதிரி எண்ணிவிடலாகாது. ரஜனி என்பது அழகின் இறைவனான பாலாஜி. ராஜா - வேறு யார்? ஆடலரசனாகிய சிவபெருமான்தான். (இங்கே அமிர்தகடேசுவரர்.)

**இந்த ஆலயத்தை உருவாக்குவதில் இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள், சர்தார்ஜிக்கள் என்று சமய வேறுபாடின்றி அனைத்துத் தரப்பினரும் உதவியிருக்கிறார்கள்.**

இன்னும் கனக துர்க்கா, கார்த்திகேயன், ஆஞ்சநேயர், தர்மசாஸ்தா, சூர்ய பகவான், நவக்கிரக தேவதைகள், நாகராஜ விநாயகர் என்று எல்லோருடைய தேவைகளுக்கும் நிறைவு தருகிற மாதிரி தெய்வத் திருவுருவங்கள் உள்ளன. வடமாநிலங்களில் பிரபலமான 'வைஷ்ணோதேவி'யைப் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. ஜெய்ப்பூரிலிருந்து பளிங்கு மேனியோடு வரவிருக்கிறார் இந்த மாதா!

இங்கே ஆஞ்சநேயரையும் சாஸ்தாவையும் தவிர மற்ற தேவதைகள் கிழக்குப் பார்த்து



* அழகன்...

திருமணம் நடத்தவும் கொடுத்து உதவுகிறார்கள்.

ஜவஹர் நகரின் 1500 வீடுகளில் பல இன மக்கள் கலந்து வசித்து வருகிறார்கள். அவர்களின் தேவைக்காக ஏற்பட்ட ஆலயம் இது என்பதால், கோயிலின் பராமரிப்பு முழுவதையும் அனைத்துத் தரப்பினரையும் உறுப்பினர்களாய்க் கொண்டுள்ள ஆலய நிர்வாகக் குழு கவனித்துக் கொள்கிறது. தேவைப்படும் நிதி ஆதாரங்களை ஏற்படுத்தித் தருவது மட்டும் 'ரஜனி ராஜா அறக்கட்டளை' யின் பொறுப்பாக இருந்து வருகிறது.

ரஜனி ராஜா அறக்கட்டளையிலிருந்து ஆண்டுக்கு நூறு பேருக்குக் கல்யாண உதவியும்



* ஊனமுற்றோருக்கு உதவி

செய்கிறார்கள்.

உலக மனவளம் குன்றியோர் நாள், ஊன முற்றோர் நாள், உலக மூத்த குடிமக்கள் நாள் என்று மூன்று தினங்கள் தவிர ஆலயம் தொடங் கப்பட்டதை நினைவில் கொண்டு 'ரஜனி ராஜா நாள்' என்றும் கொண்டாடி வருகிறார்கள்.

இந்த நாட்களில் முதியோர், ஆதரவற்றோர் இல்லங்களில் உள்ளவர்களை வரவழைத்து அவர்களை மகிழ்வித்து உணவு, உடை எல்லாம் தருகிறார்கள். இதேபோல் மனவளர்ச்சி குன்றிய, ஊனமுற்ற குழந்தைகளுக்கும் உணவு தந்து ஆடைகள், பாட நூல்கள் எல்லாம் வழங்கி மகிழ்விக்கிறார்கள்.

இந்த ஆலயத்தை உருவாக்குவதில் இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள், சர்தார்ஜிக்கள் என்று சமய வேறுபாடின்றி அனைத்துத் தரப்பினரும் உதவியிருக்கிறார்கள். சுற்றுச் சுவர்களில் கீதை வரிகளைப் போலவே பைபிள் கருத்துக்களும், திருமறைக் கருத்துக்களும் இடம்பெற்றிருப்பது மகிழ்ச்சிதரும் விஷயம்.

— கலசைக்கிழார்

எழுந்தருளியிருப்பது ஒரு தனிப்பட்ட சிறப்பு.

பாலாஜியின் திருவுருவின் முன்னால் ஸ்ரீதேவி சமேதராய் எம்பெருமானின் உற்சவத் திருமேனியைக் காணலாம். இது திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் இந்த ரஜனி ராஜா ஆலயத்துக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

**சு**த்தமான சூழல்... சந்நிதியில் சிறு குப்பையைக் கூடப் போட்டுவிடக் கூடாது என்பதற்காக ஆங்காங்கே பிளாஸ்டிக் குப்பைக் கூடைகள் நம்மை எச்சரிக்கின்றன. தூண்களில் விபூதி குங்கும மிச்சம், சுவரோரமாய்ப் பற்றி எரியும் கற்பூரப் புகை - இந்த மாதிரிச் சமாசாரங்கள் எதுவுமே இல்லாத வியப்பூட்டும் தூய்மை. பக்தர்களின் மனமும் இப்படித் தூய்மை கெடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தியான மண்டபம் அமைக்கப்பட்டு தியானப் பயிற்சி வகுப்புகள் நடக்கின்றன.

இதே தியான மண்டபத்தை இலவசமாகத்

# மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்

## ஐம்பெருங் காப்பியங்கள் முதலானவை

### ஐம்பெருங்காப்பியங்கள்

ஜைனதத்துவநூலாசிரியர்
ஸ்ரீபுராணச்செம்மல்

**பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் எம்.ஏ. அவர்கள்உரையுடன் 1. சீவகசிந்தாமணி 2. சிலப்பதிகாரம் 3. மணிமேகலை 4. வளையாபதி 5. குண்டலகேசி**

5 தொகுதிகள்

விலை ரூ.600 சலுகை விலை ரூ.420

### பட்டினத்தார் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை. பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

ஒரே தொகுதியில்

விலை ரூ.100 சலுகை விலை ரூ.70

### தாயுமானவர் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை: பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

2 தொகுதிகள்

விலை ரூ.120 சலுகை விலை ரூ.84

### பதினென் புராணங்கள்

உரைநடையில் - முதல் தொகுதியில்
பேரா. அ.ச. ஞானசம்பந்தம் எம்.ஏ.

1. பிரம்ம புராணம் 2. பத்ம புராணம் 3. விஷ்ணு புராணம் 4. வாயு புராணம் 5. பாகவத புராணம் 6. நாரத புராணம் 7. மார்க்கண்டேய புராணம் 8. அக்னி புராணம் ஆகிய முதல் எட்டுப் புராணம் அடங்கியது

விலை ரூ.90 சலுகை விலை ரூ.63

### திருவிளையாடற் புராணம்

மூலமும் தெளிவுரையும்

உரை: இலக்கியத் தென்றல் ஜோதி, எம்.ஏ.

5 தொகுதிகள்

விலை ரூ.300 சலுகை விலை ரூ.210

முக்கிய அறிவிப்பு: பணம்(சலுகை விலை
அனுப்பக்கடைசிதேதி - 25.5.96

ஜூலை இறுதியில் நூல்கள் அனுப்பப்படும். குறித்த நேரத்தில் எவ்வளவு பேர் பணம் அனுப்புகிறார்களோ அந்த அளவுக்குத்தான் நூல்கள் அச்சிடத் தீர்மானித்திருக்கிறோம். ஆகவே நூல்கள் வேண்டுவோர் 25.5.96க்குள் பணம் அனுப்புக. வழக்கம்போல் V.P.P.யில் நூல்கள் அனுப்பப்படும். தபால் செலவினை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்க.

M.O. or D.D. அனுப்ப வேண்டிய முகவரி: TAMIL NILAYAM, ARR Complex, 141, Usman Road, T, Nagar, Madras-600 017. Phone : 825 7995 Near Panagal Park

# ராத்திரி தூங்கப் போகும் போது இருந்த சுண்டு விரல், காலையில் எப்படிக் காணாமல் போகும்?

## கால் விரலைக் காணோம்!

டோரிஸ் (65), ரிடையர் ஆன நர்ஸ். அமெரிக்காவில் ஃப்ளோரிடாவில் வசிக்கிறார். ஒரு நாள் காலை தூங்கி எழுந்த போது அவருக்கு ஷாக்! அவரது வலது கால் சுண்டு விரலைக் காணோம்! ராத்திரி தூங்கப் போகும்போது இருந்த சுண்டு விரல், காலையில் எப்படிக் காணாமல் போகும்? டாக்டரிடம் போன போது, "விரலைக் கீறி எடுத்தாற் போல இருக்கிறது. உங்களுக்குத் தெரியாமல் உங்கள் கால் விரலை வெட்டி எடுப்பது சாத்தியமில்லையே!" என்று குழம்பினார்.

அடுத்த சில நாட்களில், மறுபடி ஒரு கால் விரலைக் காணோம். இரண்டு மாத காலத்தில், டோரிஸ் இழந்த விரல்கள் நான்காக உயர்ந்தன!

முடியைப் பிய்த்துக் கொண்டார் டாக்டர் ஹாரி ஃபாக்ஸ். எப்படி ஒருவருக்குத் தெரியாமல், அவரது கால் விரல் மாயமாய் மறையும்? கேள்வி அவரது மண்டையைக் குடைந்தது.

மருத்துவப் புத்தகங்களைச் சல்லடை போட்டுப் பார்த்தும், இதுமாதிரி அதிசயத்துக்கு அவரால் விடை காண முடியவில்லை. அவருடைய மற்ற டாக்டர் நண்பர்களாலும் புதிருக்கு விடை காண முடியவில்லை.

ஒரு வழியாய், டோரிஸின் பக்கத்து வீட்டுக்காரப் பெண்மணி மூலம் புதிருக்கு விடை கிடைத்தது!

விரல்கள் மாயமாய் மறையக் காரணம் டோரிஸின் செல்ல நாய்க்குட்டிதான். கட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் டோரிஸின் கால் விரலை, கடித்துச் சுவைத்துக் கொண்டிருந்தது அவரது நாய்! ஜன்னல் வழியே இதைப் பார்த்துவிட்டு, சப்தம் போட்டு, அவர் டோரிஸை எழுப்ப, நாய் விரலை ஸ்வாஹா செய்து விட்டு, சாது போல டோரிஸ் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது.

காரணம் தெரிந்தவுடன், விளக்கம் தருவது டாக்டர்களுக்குக் கஷ்டமாக இல்லை.

டோரிஸுக்குக் கடும் சர்க்கரை வியாதி. விளைவு: கால் பகுதி, வலி தெரியாத அளவுக்கு உணர்ச்சியற்றுப் போனது. டோரிஸ் தூங்கும்போது, நாய் விரலைக் கடித்தது தெரியவில்லை!

ஆதாரம்: 'நியூ பேப்பர்'
தகவல்: மௌஷ்மி



## 20. கொடியன் காடவராயன்!

காவிரியின் கரையெங்கும் கோயில்களை எழுப்பிய சோழ வம்சத்து மன்னன் ஆதித்தனுக்கு, தில்லைச் சிற்றம் பலத்தைப் பொன்னம்பலமாக்க உதவியது காஞ்சனமலை. சோழ நாடு அன்னியர் வசப்பட்டு விட்டதால் இருநூறு ஆண்டுகளுக்கு மேல் தன் ரகசியத்தை இறுக மூடிக் கொண்டது அந்த மலை!

கொங்கு மண்டலத்தின் கீழ்ப்பந்துறை நாட்டின் எல்லையில் நின்றிருந்த அந்த மலை, தன்னைச் சுற்றிலும் அடர்ந்த மரங்களையும், புதர்களையும், காட்டுக் கொடிகளையும், செடிகளையும் அத்தமாகப் படரவிட்டு, மனித சஞ்சாரமே அடியோடு இல்லாமல் அடித்திருந்தது.

தனது ரகசிய வாயில்கள் அனைத்தையும் மூடிக் கொண்டு, பெயரில் கூட அது வெளிப்பட்டு விடக் கூடாதென்பதற்காக, கஞ்சமலையெனப் பெயரைச் சுருக்கிக் கொண்டாலும், அந்த ரகசியத்திற்கும் கசிவு ஏற்படுத்தும் வடிகால் உண்டு என்பதை நிரூபிக்கும் வகையில் அந்த மலையிலிருந்து உற்பத்தியாகி, தெற்கு நோக்கி விரைந்தது ஒரு சிறிய நதி. தன் இருகரைகளிலும்மிருந்த மணலைப் பொன் மயமாக அடித்து, கஞ்சமலையின் ரகசியத்தை பகிரங்கப் படுத்த முயன்று கொண்டிருந்தது அந்த நதி!

பொன்னை அள்ளி வந்ததால் காவிரிக்கு ஈடாகப் பொன்னி நதியென்று பெயர் பெற்ற அந்த நதி, சோழ வம்சம் சீர்குலைந்து போனதாலும், கொங்கு நாட்டில் போசளரால் அதர்மம் பெருகியதாலும் தன்னை சிறு ஓடையாகச் சுருக்கிக் கொண்டிருந்தது மட்டுமின்றி, தனது பாதையைச் சுற்றி மாற்றிக் கொண்டு, மகிழ மரங்கள் நிறைந்த வனப்பகுதியை அடுத்த மகுடஞ்சாவடியென்ற சிறு ஊரையொட்டி ஓடி, மனித கண்களுக்குப் புலப்படாமல் தப்பவும் முயன்று கொண்டிருந்தது.

அதிகம் பயன்படுத்தப்படாததால் அந்த ஓடையை ஒட்டிச் சென்ற பாதையில் செடி கொடிகளும் கோரைப் புற்களுமாக அடர்ந்து கிடந்தன. மலையிலிருந்து சரிந்து இறங்கிய அந்தப் பாதையில் காடவமன்னன் கோப்பெருஞ்சிங்கனின் வீரர்கள் அரக்கர்களைப் போல அந்த முன்னிரவு நேரத்தில் வந்து கொண்டிருந்தனர்.

கிருஷ்ண பட்சத்து நிலவு கானகத்து மரங்களை ஊடுருவ முயன்று தோற்றுக் கொண்டிருந்தது. சந்தேகத்தின் வசப்பட்ட மனித இதயம் போல இருளடித்துக் கிடந்த அந்த மலைப் பாதையில் வரிசையாக இறங்கிக் கொண்டிருந்தன பொதி வண்டிகள். பாதை கரடு முரடாக இருந்ததன்றி சரிந்து இறங்கியதாலும், பொதிகளை இழுத்த காளைகள் சரிவில் வேகமாக இறங்க முற்பட்டதாலும் அவற்றை அடக்கவும் பொதிகள் சரியாதிருக்கவும் காடவ வீரர்கள் பெரிதும் சிரமப்பட வேண்டியிருந்தது. பொதிகளின் முன்னால் புரவிகளில் வந்த வீரர் பதின்மரும் கறுத்த பெரும் உருவங்களுடனும், பாதிக்கு மேல் முகத்தை மறைத்த மீசைகளுடனும், இடையில் தரித்த பெரும் பட்டாக் கத்திகளுடனும் அசல் அரக்கர்களாகவே தெரிந்தனர். அதிலும் முன்னதாகப் புரவியில் வந்தபடியே பாதையை நோட்டம் விட்டபடி வந்தவன் அரக்கர் குலத்திலிருந்து தப்பி மனித குலத்துக்கு வந்தவனாகவே தெரிந்தான்! கொழுத்துப் புடைத்திருந்த அவன் முகமும் சிவந்து கிடந்த விழிகளும் அந்த மனிதனின் உணவில் மதுவும் மாமிசமும் ஏராள

விஷ்வக்சேனன்

மாக இருக்க வேண்டுமென்பதை வலியுறுத்தின. அவன் வலது கரத்தில் கட்டப்பட்டிருந்த கங் கணமும், காடவ இலச்சினை பொறிக்கப்பட்ட பெரு வாளும், அவன் பார்வையில் தெறித்த ஆணவமும் அவன் ஒரு சாதா ரண வீரனல்ல என்பதை



ணர்த்தின. காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனுக்கு அடுத்த டி, பட்டத்துக்குரியவனும், அவன் வளர்ப்பு மகனுமாக யன் காடவராயனாகத்தான் அவன் இருக்க வேண்டும் ன்பதை அந்த தோற்றம் வலியுறுத்திக் கொண்டிருந்தது.

காடவராயன் சட்டென்று புரவியை நிறுத்தினான். பாதை சரிந்து கீழிறங்கி, கிழக்கு நோக்கிச் சமதளத்தை அடையும் வளைவில் யாரோ ஒருவர் நிற்பது புலப்பட்டது அவனுக்கு. வண்டிகளை நிறுத்த உத்தரவிட்டவன், புரவியை முன்னால் செலுத்தி, நின்று கொண்டிருந்தவரை மெள்ள நெருங்கினான். மங்கலான நிலவொளியில் சடாமுடியுடனும் நீண்ட தாடியுடனும் நெடுநெடுவென்று உயர்ந்த தேகத்திலும் நெற்றியிலும் பன்னிரு திருமண் காப்பும் பளிச்சிட, இருளை ஊடுருவிய பெருவிழிகள் மின்ன, நின்றிருந்தவரை நெருக்கத்தில் பார்த்ததும் அவன் உதடுகள் "மாறன் அமுதனார்!" என்று உச்சரித்தன. அவன் முகத்தில் எல்லையற்ற திகிலும் படர்ந்தது.

அதர்மத்தின் வழியில் செல்பவனுக்கு, எத்தனை

படைபலமும், அதிகாரமும், இருந்தாலும் தர்மத்தின் வழியைப் பிரதானமாக எண்ணி நடக்கும் மனிதரைக் கண்டால் அச்சம் தோன்றத்தான் செய்கிறது. தர்மத்தின் சக்தி அது! நெடு நெடுவென்று நின்ற பாண்டியர் குலகுருவைக் கண்டதும் காடவராயன் மனதில் அச்சம் பிறந்தது. வாட்களையும் வேல்களையும் ஏந்திய வீரர்கள் தனக்குப் பின்னே வந்து கொண்டிருந்தாலும் தானே முன்னின்று எத்தனையோ கொலைகளையும் கொள்ளைகளையும் நடத்தியிருந்தாலும் காடவராயனின் நெஞ்சு நடுங்கியது.

"ஏன் நின்று விட்டாய் காடவராயா? வா. உனக்காகத்தான் காத்திருக்கிறேன்'' என்று கனிவு நிரம்பிய குரலில் மாறன் அமுதனார் அடுத்து விடுத்த அழைப்பு, அவன் மனத்தில் இன்னும் திகிலை மூட்டியது.

பல தினங்களாக உணவின்றிப் பசித்திருக்கும் வேங்கையொன்றை நெருங்குபவன் போல, மெள்ள அவரை நெருங்கியவன் "தாங்கள் இந்த நேரத்தில் இங்கு எப்படி வந்தீர்கள்?" என்றான்.

''உன்னைக் காப்பாற்ற''- அமுதனாரின் பதில் அதே கனிவுடன் வந்தது.

"என்னைக் காப்பாற்றவா?"– காடவராயன் கேள்வியில் திகைப்பு ஒலித்தது.

''ஆம்! உன்னை மட்டுமல்ல, உன் மன்னனையும் காப்பாற்ற...'' என்றவர், "அந்த பொதி வண்டிகளில் என்ன இருக்கிறது காடவராயா?'' என்று சாவதானமாகக் கேட்டார்.

காடவராயன் பதில் கூறாமல் விழித்தான்.

அதே அமைதி நிரம்பிய குரலில் அமுதனார் தொடர்ந்தார். "காடவராயா! பொதி வண்டிகளில் இருப்பவை என்ன என்பதை நான் அறிவேன். அவை உனக்கோ எனக்கோ சொந்தமானவையல்ல. அரங்கனையும், தில்லையம்பதியையும் சேர வேண்டியவை. இதற்கு முன் இங்கிருந்து கொண்டு சென்றவற்றையும், இந்தப் பொதிகளையும் நீயாக ஒப்படைப்பதானால் நான் கூறியபடி உன்னையும் உன் மன்னனையும் காப்பாற்றுகிறேன்..."

பாண்டியர் குலகுருவைக் கண்டதால் காடவராயன் மனத்தில் தோன்றியிருந்த அச்சம், அவர் வார்த்தைகளைக் கேட்கக் கேட்க ஆத்திரமாக மாறியது. இத்தனை வீரர்களுடன் வரும் தன்னை இருளில் வழிமறித்து, அச்சுறுத்தி, பொதிவண்டிகளை ஒப்படைக்கக் கூறும் அந்தத் துறவியை ஏறெடுத்து நோக்கிய காடவராயன், "துறவியாரே! தங்களுக்கெதிராக நான் வாளை உயர்த்த விரும்பவில்லை. அந்த நிலைக்கு என்னை ஆளாக்காதீர்கள். வழியை விட்டு விலகிப் போங்கள்!'' என்றான்.

அமுதனார் விடுவதாக இல்லை.

"ஆத்திரம் அறிவுக்குச் சத்ரு காடவராயா. நான் கூறுவதை ஏற்றுக் கொள். அழிவிலிருந்து காத்துக் கொள்ளலாம்..." என்றார் அமுதனார்.

''துறவியாரே! உம்மைப் பாண்டியர்கள் தெய்வமாக மதிப்பது எனக்குத் தெரியும். எமது பரம வைரியைச் சேர்ந்தவர் என்றாலும் உமது துறவிக் கோலத்திற்காக உம்மைக் கொல்லாமல் விடுகிறேன். வழியை விட்டு விலகி விடும்!'' காடவராயனின் குரல் உள்ளே பொங்கிய ஆத்திரத்தில் உயர்ந்து ஒலித்தது.

"காடவராயா! நான் கூறுவதைக் கேள். இவை இறைவன் திருப்பணிக்குச் சேர வேண்டியவை. எத்தனையோ ஆண்டுகளாகப் புதைந்து கிடந்த ரகசியத்தின் ஒரு பகுதிதான் உன் மன்னனுக்குத் தெரியும். இதைப் பற்றிய முழு விவரமும் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. உன்னை இப்பாவச் செயலிலிருந்து மீட்கவே நான் ஓடி வந்தேன். ஆலயங்களுக்குச் சேர வேண்டியவற்றை அபகரிக்க எண்ணாதே! நீயாக ஒப்படைத்து விடு. ஆத்திரத்தை வளர்த்துக் கொள்ளாதே. அறிவுக்கு அது சத்ரு..." என்றார் அமுதனார் மீண்டும்.

"இப்பொழுது நீர்தான் எனக்குச் சத்ரு! வழியை விட்டு விலகப்போகிறாயா இல்லையா?'' காடவராயன் ஒருமையில் இரைந்தான்.

மாறன் அமுதனாரின் முகத்தில் வருத்தம் படர்ந்தது. அடுத்து ஒலித்த அவர் குரலிலும் அது தொனித்தது. "வைகுந்தன் சித்தம் இப்படித்தான் என்றால் அதை மாற்ற நான் யார்?'' என்றவர், தமது கரங்களைப் பலமாக இரு

## அருள்வாக்கு

**ஊ**ரிலே பலவிதமான அயோக்கியர்கள் இருக்கிறார்கள். அதைப் பார்த்து வாஸ்தவமாகவே ஒருவனுடைய மனசு கொதிக்கிறது. அவன் அந்தத் தப்பையெல்லாம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறான். 'அவன் அந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான், இவன் இந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். இவனுக்கு வாக்கும் மனசும் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இவன் இப்படிச் சொல்வதால் இவனுக்கும் பிரயோஜனமில்லை, ஜனங்களுக்கும் பிரயோஜனமில்லை, தப்புச் செய்கிறவர்களுக்கும் பிரயோஜனமில்லை. இப்படி வியர்த்தமாக வாக்கும் மனசும் ஒன்றுபட்டிருப்பதைச் சத்தியம் என்று சொல்வதற்கில்லை.

ஒருவன் மனசில் கெட்ட எண்ணங்கள் எழுகின்றன. அதை அவன் அப்படியே வாக்கிலே வெளியிடுகிறான். அது சத்தியமாகிவிடுமா? ஆகாது.

ஆகவே சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவதுமட்டுமல்ல, நல்ல மனசிலே தோன்றுகின்ற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.



மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம் என்பதாக சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்.

*ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்*

பேச்சினாலும் காரியத்தினாலும் எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மையை உண்டாக்குவதே சத்தியம். கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கூட கடுமையாகச் சொன்னால் அதை யாரும் ஏற்க மாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப் போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும்: அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.

''சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாகச் சொல்ல முடியவில்லை என்றால் அப்போது அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமாயிருந்தாலும், அசத்தியத்தைச் சொல்லாதே'' என்பது பெரியோர் வாக்கு.

**ஸத்யம் ப்ருயாத் ப்ரியம் ப்ருயாத்**
**ந ப்ருயாத் ஸத்யம் அப்ரியம்**
**ப்ரியம் ச ந அந்ருதம் ப்ருயாத்**

காமமும் குரோதமும் உள்ள மனசிலிருந்து இப்படிப்பட்ட பிரியமான, நன்மையான வாக்கு வராது. க்ஷேமத்தையே உண்டாக்கும் சத்திய வாக்கு வரவேண்டுமானால் அதற்கு அடிப்படையாக காம, குரோதங்களற்ற நல்ல மனம் வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

முறை தட்டினார்.

சற்றுத் தள்ளியிருந்த மரமொன்றின் பின்னாலிருந்து பெரும் புரவியொன்று வெளி வந்தது. அதன் மீது உருவிய நீண்ட வாளுடன் ஒரு வாலிபன், அதே சமயத்தில் பின்புறத்தில் நின்ற பொதி வண்டிகளின் பக்கங்களில் மரங்களின் மறைவிலிருந்து திடீரென்று எரியும் பந்தங்கள் புலப்பட்டன.. வாட்களையும் வேல்களையும் தாங்கி வந்த வீரர்களும் வெளிப்படக் கண்ட காடவராயன் அமுதனார் சரியான முன்னேற்பாட்டுடன்தான் வந்திருக்கிறார் என்பதை உணர்ந்து சற்றுத் திகைத்தான். அடுத்த கணம் திகைப்பை உதறிக் கொண்டு பெரும் கூச்சலுடன் தனது பட்டாக் கத்தியை உருவியபடி அமுதனாரின் மீது பாயவும் செய்தான்.

அடுத்து நிகழ்ந்தது விபரீதம்! மரங்களின் பின்புறமிருந்து வெளிவந்த வீரர்கள் மீது காடவர்கள் பாய்ந்தனர். அதுவரை அடக்கப்பட்டு நின்ற காளைகள் சரிவான பாதையில் விடுபட்டதால் சுமைகளுடன் நிற்க இயலாது, வெகு வேகமாக தடதடவென இறங்கின. காளைகளின் ஒலியும், காடவ வீரர்களின் கூச்சலும், வாட்கள் மோதியதால் ஏற்பட்ட கிளாங் கிளாங்கென்ற ஓசையும், ஈட்டிகள் பாய்ந்ததால் எழுந்த மரணக் கூச்சல்களுமாக அந்த மலைப் பாதையில் முன்னிரவு நேரத்தில் ஒரு ரணகளம் சிருஷ்டியானது! இடையே, பொதி வண்டிகளை விட்டு விட்டு பாண்டிய வீரர்களின் மீது பாய்ந்த காடவர்களைத் தடுத்த யுவானின் சினத்துப் போர்க் கூச்சலும் எழுந்து, அந்த மலைப் பகுதியையும் காடவர்களையும் ஒரு கலக்குக் கலக்கியது.

காடவராயனின் பெரும் பட்டாக்கத்தி, மாறன் அமுதனாரின் மேல் பாய விடாமல் தடுத்த பாண்டிய இளவலின் மெல்லிய நீண்ட வாள், அனாயாசமாகச் சுழலத் தொடங்கியது. காடவராயனின் கண்களுக்கு முன்னும் மார்பு, தோள்களின் அருகிலும் அது அடிக்கடி தோன்றி மறைவதையும், அதன் அசுரச் சுழற்சியிலிருந்து தனது கனமான வாள் மீள இயலாமல் பல திசைகளிலும் திருப்பப்பட்டதையும் கண்டவன், ஆதித்ய பாண்டியனின் வாள் வீச்சைப் பற்றி அதுவரை தான் கேள்விப்பட்டது, எவ்வளவு உண்மை என்பதை உணர்ந்து கொண்டான்!

மிகுந்த சிரமத்துடன் தனது வாளை விடுவித்துக் கொண்டு மீண்டும் பாய்ந்த காடவராயன், ஆதித்யனின் வாள் வீச்சு சட்டென்று மாறி விட்டதையும் இரண்டொரு வீச்சுக்கொருமுறை அது தன் வாளை விலக்கி உடலில் கீறிவிட்டு அகன்றதையும் கண்டு, அந்த வீச்சின் முறையை நிர்ணயிக்க இயலாமல் திணறினான். அடுத்த இரண்டாவது நொடியில் காடவராயனின் வாள் அவன் கரத்திலிருந்து பறித்து இழுக்கப்பட்டு ஓடையின் பக்கங்களில் செழித்துக் கிடந்த கோரைகளின் நடுவே பறந்து சென்று விழுந்தது.

இரண்டு நாழிகை நேரமே நடந்த அந்தச்

சிறுபோர் முடிந்தபோது, எஞ்சிய காடவர்களையும், காடவராயனையும் ஒரு புறம் நிறுத்திய ஆதித்யன், அமுதனாரை ஏறெடுத்து நோக்கினான். அதுவரை ஏதோ சீடர்களின் வாட்பயிற்சியைப் பார்வையிடும் ஆசான் போல சர்வ சாதாரணமாக அந்தப் போரைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த மாறன் அமுதனார், காடவராயனை நெருங்கினார். "காடவராயா, ஏற்கெனவே நான் கூறியபடி சேந்தமங்கலத்தில் இதுவரையில் கொண்டு சேர்த்திருக்கும் கொங்கு நாட்டுச் செல்வத்தை உன் மன்னனைக் கொண்டு வந்து ஒப்படைக்கச் சொல். இல்லையெனில் இன்னும் பத்து தினங்களில் உன் தலைநகர் முற்றுகையிடப் படும் என்று தெரிவித்து விடு!" என்றார்.

பதிலொன்றும் கூறாது அமுதனாரையும் ஆதித்யனையும் வெறித்த காடராயன் திரும்பத் தனது புரவியை நோக்கி நடந்தான். காடவ வீரர்களும் பின் தொடர்ந்தனர்.

'தென் திசையில் கங்கையெனும் திருக்கெடிலத் திளைத்தாடி...' என்று பெரிய புராணம் தென்னகத்து கங்கையாகவே வர்ணிக்கும் கெடில நதியின் வெள்ளம் உள்ளங்கையில் ஓடும் ரேகை போல மெலிந்திருந்தது. பெரும்பாலும் மணற்பரப்பாகவே கிடந்த நதியைக் கண்டு, சுற்றிலுமிருந்த வனப்பகுதியின் மரங்கள் மேகங்களை இரைஞ்சியதாலோ, அல்லது நல்லவர் எவரோ காடவ எல்லையில் அடியெடுத்து வைத்ததாலோ... தொடங்கியிருந்த மழை ஓங்கிப் பொழிய ஆரம்பித்திருந்தது. மெள்ள மணற்பரப்பை மூடத் தொடங்கிய வெள்ளம், சிறு செடிகளையும் கொடிகளையும் இழுத்தபடியே நுங்கும் நுரையுமாகக் கரைகளைத் தாக்கி மளமள வென்று உயரத் தொடங்கியது.

காடவர்களின் அந்தப் பகுதிக்கு மேகங்கள் மழையைப் பொழிந்தது கண்டு இயற்கைக்கே சினமேற்பட்டிருக்க வேண்டும்! அதனால் தானோ என்னவோ, நதிப் பகுதியை மட்டுமின்றி சற்றுத் தள்ளியிருந்த காடவர் தலைநகரான சேந்தமங்கலத்தின் மீதும் பெரும் வேகத்துடன் புயல் தாக்கத் தொடங்கியது.

இயற்கையின் சீற்றத்தைக் காட்டிய புயலின் வேகத்தையோ, முகத்தில் அறைவது போல பொழிந்த கன மழையையோ பொருட்படுத்தாது காடவர் தலைநகர் சேந்தமங்கலத்தை நோக்கி, மழையில் நனைந்தபடியே புரவியில் வந்து கொண்டிருந்தார் தஞ்சையின் சைவத்துறவியார்.

(தொடரும்)



KANMANI
AGRO
GOLD
FARM

ஸ்ரீ அன்னையே துணை

# KANMANI AGRO GOLD FARM

9,10 TH AVENUE, ASHOK NAGAR, MADRAS - 600 083. TEL: 482 43 79

**[A KANMANI GROUP OF COMPANY]**

CATERING CASH CROP CULTIVATION
LIKE VEGETABLES, FRUITS & FLOWERS

## ACCEPTS FIXED DEPOSITS

*STRICTLY UNDER 45 S. CHAPTER III C OF RBI ACT OF 1934*

| PERIOD | 1 YEAR | 2 YEARS | 3 YEARS |
|---|---|---|---|
| INTEREST PAID QUARTERLY | @ 24% P.A. | 24% P.A. | 24% P.A. |
| INCENTIVE PAID INITIALLY | 3% | 6% | 9% |
| SPL. INCENTIVE FOR DEPOSITORS OF RS. 10,000/- AND ABOVE | - | - | 3% |

*Plus Attractive Gifts for all Depositors.*

**"உன் பேர் என்ன** தெரியுமா?"

சிறுமி சிரித்தாள்.

"ஐயே! எம்பேர் எனக்குத் தெரியாதோ?"

"சொல்லேன் பார்க்கலாம்."

"ஒனக்குத்தான் முந்தியே சொல்லியிருக்கேனே!"

"இன்னொரு தடவை சொல்லேன்!"

"மீஈஈனலோாாசனீஈஈஈ!"

பெயரோடு தானும் நீண்டு ஐந்து வயதுப் பிரம்மாண்டமாய் நிமிர்ந்து நின்றாள்.

"இல்ல."

"ம்?"

"உன் பேர் மீனலோசனி இல்ல."

"மீனலோசனிதான்."

"இல்ல."

"பின்ன என்னவாம்?"

"சுதந்திரா."

மந்திரம் சொல்வது போல் மிருதுவான குரலில் மூச்சோடு மூச்சாக அந்தப் பெயரை உச்சரித்தாள் நந்து. "உன் பேர் சுதந்திரா."

குழந்தையின் முகம் கோணியது. "இல்ல, எம்பேர் மீனலோசனிதான். நீ சொன்ன பேர் எனக்கு புடிக்கலே. ஒன்னையும் புடிக்கலே."

அழுகை ததும்பியது குரலில். தன் பெயர் மறுக்கப்பட்ட போது, தன் இருப்பே மறுக்கப் பட்ட அதிர்ச்சி. 'நான் யார்' என்ற குழப்பம் குழந்தைமைக்கு ஒவ்வாத பெரிய பாரம்.

திரும்பிக் கொண்டு போக முனைந்த குழந் தையின் கையைப் பற்றித் தடுத்தாள் நந்து.

"கோச்சுக்காதே. நீ மீனலோசனிதான். மத்த எல்லாருக்கும். உனக்கும் கூட. ஆனா எனக்கு நீ சுதந்திரா. உன்னை எனக்கு ரொம்ப பிடிக்கு, மானதால செல்லப் பேர் வச்சிருக்கேன். இப்ப உனக்கு ரெண்டு பேர். மீனலோசனி, சுதந்திரா."

போனஸ் பெற்ற மகிழ்ச்சியைத் திடீரென்று உணர்ந்து சுதந்திரா சிரித்தாள்.

**அ**ழுக்குத் துணி மூட்டைகள் அடுக்கிய கைவண்டியைத் தெருவில் ஒரு முதியவர் இழுத்துக் கொண்டு நடக்க, உச்சி மூட்டைக்கு மேல் ஒரு ராணி போல் அலட்சியமாய் உட் கார்ந்திருந்த சிறுமியைக் கண்டதுமே அவள் காலடியில் 'சுதந்திரா' என்று பெயர் எழுதி ஒட்டியிருந்தது போல் நந்து உணர்ந்தாள். பாப் பாவைக் கைகளில் தூக்கிக் கொண்டு, அவனுக் கும் வெளிக்காற்று கொடுத்த மாதிரி இருக்கும், அம்மாவுக்கும் உதவியாய் இருக்கும் என்று நினைத்துத் தாணாத் தெருவுக்கு நடந்து போய்க் காய்கறிகள் வாங்கிய பை ஒரு கையில் தொங்கத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது தான் சுதந்திராவை அப்படி ஒரு தரிசனமாய்க் கண்டாள். கீழிறங்கும் சூரியக் கதிர்களின் ஒ தற்செயலான கோணம் அந்தக் குழந்தைக்கு ஒரு பொன்னிற விசிறலைப் பின்னணியாக் யிருந்தது. அது ஒளிவட்டம். தெய்வங்களுக் இருப்பது போல், உலகக் கவலைகள் தீண்டா உயரத்தில் அமர்ந்திருக்கும் சுதந்திரத் தெய்வ அந்தக் குழந்தை.

குழந்தை, சுதந்திரம், ஒரே பொருளி இரண்டு சொற்கள்.

**நா**லு நாள் சென்று அந்தப் பெரி யவர், பேத்தி பின்தொடர

ஆர். சூடாமணி



இவர்கள் வீட்டுக்கே சலவைத் துணிகளை கொடுத்துவிட்டு, அழுக்குத் துணிகள் எடுத்து போக வந்தபோது, நந்துவின் வியப் மகிழ்ச்சியில் கரைந்தது. உள்ளே தாத்தா து களைப் பிரித்துக் கொண்டிருந்த போ குழந்தை வாசல் வராந்தாப் படியில் உ கார்ந்து, தனக்குள்ளாக ஏதோ பாடிக் கொ

# நடன விநாயகர்

டிருந்தாள். கறுப்பு உடம்பில் குட்டை மஞ்சள் கவுன் பளிச்சென்று இருந்தது. சுருட்டை முடியைச் சீவிப் பின்னி, பின்னல் உச்சியில் ஒரு ஊதா நிற க்ளிப் குத்தி அலங்கரித்திருந் தாள். வீட்டில் ஓர் ஆசைமிக்க அம்மா அல்லது ஆயா. நந்து கைகளில் பாப்பாவுடன் மெல்ல அவளை அணுகி அமர்ந்தாள். நட்புக்கு அச் சாரமாய் ஒரு புன்னகையை வைத்தாள்.

"உன் பேர் என்னம்மா?"

குழந்தை ஏற இறங்க அவளைப் பார்த்து விட்டு மிடுக்காக முகத்தைத் திருப்பிக் கொண் டாள்.

"பதில் சொல்லேன்."

சொல்லவில்லை.

"என் பேர் என்ன தெரியுமா? நந்தினி."

நந்துவின் தந்திரம் பலித் தது. குழந்தை தலையைத் திருப்பி "எம்பேர் மீனலோசனி" என்றாள் பெயர்ப் போட்டியில் பின்தங்கி விடாமல். பிறகு புருவங்களை உயர்த் தினாள். "நீ யாரு? ஒன்ன இதுக்கு முந்தி நா பார்த்ததில்லியே?"

"இந்த வீட்டு அம்மாவையும் அய்யாவை யும் உனக்குத் தெரியுமா?"

"ம்."

"நான் அவங்க மக."

"சின்னம்மாதான் அவங்க மக."

"நான் அவங்க பெரிய மக. பெங்களூர் லேந்து வந்திருக்கேன். இவன் என் பையன்."

மீனலோசனியின் பார்வை பையன் மேல் இறங்கியது. "உம் பேர் என்ன?"

"அவன் சொல்ல மாட்டான்."

"பேசத் தெரியாதா? இத்தினி பெரீவனா யிருக்கானே! அப்ப நீ சொல்லு அவம் பேரு."

"பாப்பா."

"ஐயே, பாப்பான்னுதான் தெரியிதே! பேர் என்னான்னு கேக்கறேன்."

"பேரும் பாப்பாதான்."

'மதனகோபாலா' என்று வாய் நிறைய அழைத்து "என்னம்மா?" என்று இவன் சிரித்த படி ஓடி வந்து அவள் கழுத்தைக் கட்டிக் கொள்ளும் காலம் வருமா?

பாப்பா அவள் பக்கத்தில், அவள் உட்கார வைத்த நிலையிலேயே உட்கார்ந்திருந்தான். விழுந்து விடாமல் அவள் ஒரு கையால் அணைத்துப் பிடித்திருந்தாள். இரண்டு வயதுக் கான உடல் வளர்ச்சி இருந்தது. ஆனால் நிலை குத்தி நோக்கும் கண்களில் ஜீவன் இல்லை. லேசாய்த் திறந்த வாயிலிருந்து சொட்டிக் கொண்டிருந்த எச்சிலை அவள் டவலால் துடைத்தாள்.

உள்ளேயிருந்து குரல்கள் வந்து கொண்டிருந் தன.

"வேஷ்டி?"

"ரெண்டு."

"ஜாக்கெட்?"

"நாலு."

"அந்தப் புது சில்க் ஜாக் கெட் இருக்கா? நீலத்துல கட்டம் போட்டுது?"

"இதோ இருக்கும்மா."

"சரி. சூடிதார்?"

"நாம சிநேகிதங்களாய் இருக்கலாமா?" என் றாள் நந்து.

நல்ல சிநேகிதர்களான பிறகுதான் அந்த ரக சியத்தை அவளுக்குச் சொன்னாள் : "உன் பேர் சுதந்திரா."

"இந்த நாளில் எந்த சலவைக்காரன்

வீட்டுக்கு வந்து துணி எடுக்கறான்? ஏதோ, பழங்கால மனுஷராய் இந்த வயசாளி கிடைச்சிருக்காரு. அதுவும் இங்க புரசவாக்கத்திலேயே. என் அதிர்ஷ்டம்தான்'' என்றாள் அம்மா குக்கரை அடுப்பில் ஏற்றிவிட்டு முன் அறைக்கு வந்து அமர்ந்தபடி.

டீ.வி. பெட்டியின் மேல் வைத்திருந்த சந்தன நிற எனாமல் வர்ணப் பூச்சு பளபளக்கும் மாக்கல் நடன விநாயகர் குட்டிச் சிலை வடிவைப் பார்த்தவாறு நின்றிருந்தாள் நந்து. விநாயகரின் மகுடமோ நான்கு கரங்களோ தரையில் ஊன்றியிருக்கும் இடது பாதமோ பெரிய விஷயமாய்த் தோன்றவில்லை. வலது முழங்கால் பக்கவாட்டில் மடங்கி, வலது பாதத்தில் குதிகால் உயர்ந்து, விரல் நுனிகள் மட்டும் தரையைத் தீண்டியிருந்தன. ஒரு நடன அசைவில் அவரைச் சிறைப்படுத்தியிருந்தான் கலைஞன். அடுத்தகணம் அந்தப் பாதம் கீழே பதிய, இடது பாதம் எழும்பி தரையில் விரல் நுனிகளின் மேல் நிற்கப் போகிறது. இரு பாதங்களும் மாற்றி மாற்றி, தக்கித் தரிகிட. தரையில் பாவாத விரல் நுனிகளில் நடனத்தின் இன்பம் முழுவதும், ஆடுகிற சுதந்திரம் முழுவதும் சங்கமித்திருக்கிறது.

"இல்லேன்னா வேலக்காரி வராத நாள்களில் துணிகளைத் தூக்கிக்கிட்டு நான் ஓடணும் லாண்டரிக்கு."

நந்து தாயைத் திரும்பிப் பார்த்து, "ஏன்? கலாவோ அப்பாவோ போகக் கூடாதா?" என்றாள்.

"கலாதானே? உன் தங்கைக்குத்தான் காதல் பண்ணவே நேரம் போதலையே! உங்கப்பாவைச் சொல்லு. நல்லா போவாரே லாண்டரிக்கு! 'நான் தூக்கிக்கிட்டுப் போகணுமா துணி மூட்டையை வண்ணானாட்டம்?' அப்படின்னு குடி முழுகிட்ட மாதிரி சத்தம் போடுவார். வீட்டு வேலைன்னா அப்படி. உனக்குத் தெரியாதா உங்கப்பா குணம்?"

---

''என் கணவருக்கும் ஷாஜஹானுக்கும் ஒரு சிறு வித்தியாசம்தான்''

''என்ன?''

''ஷாஜஹான் தாஜ்மகாலை கட்டினார், என் கணவர் தாஜ்மகாலை காட்டினார்!''

— பிரியா பாலு



தன் அப்பா குணம் மட்டுமா? பாப்பாவின் அப்பா குணமும் அவளுக்குத் தெரியும். காய்ச்சல் அடித்து வடிந்த களைப்போடு ஒரு காலைப் பொழுதில், "முத்து, டயர்டா இருக்கு. இன்னும் கொஞ்ச நேரம் படுத்திருக்கேன். பாலை மட்டும் கொஞ்சம் காய்ச்சி எறக்கிடறீங்களா? நான் வந்து காப்பி கலக்கறேன்" என்றாள்.

"அதெல்லாம் நம்மால முடியாது. வீட்டு வேலைங்க உன்னுது."

"வீடு உங்களுதும்தானே?"

"பெண்ணியம் பேசறியா?"

"மனுஷத்தனம் வேணும்னு கேட்டா பெண்ணியமா?"

"அப்போ நான் மிருகங்கறியா?"

அது பதச் சோறு. ஐந்தாண்டுத் திருமண வாழ்வில் அவனுக்குள் பல அவலட்சணங்களைக் காண நேர்ந்த போது, அதிர்ச்சியாய் இருந்தது. நம்பிக்கையுடன் ஏற்றுக் கொண்ட பந்தம். வாழ்க்கை முழுவதும் ஒரு நல்ல நட்பு உடன்வரும் என்று கண்ட கனவு. எல்லாம் 'இவனையா மணந்தேன்?' என்ற கேள்வியாய் முடிந்து போயிற்று.

கடைசியில் முத்தாய்ப்பாக அந்தப் பேச்சு.

"நந்து, நாளை சாயங்காலம் ஒரு பெரிய மனுஷரையும் அவர் சம்சாரத்தையும் நம்ப வீட்ல டிபனுக்குக் கூப்டிருக்கேன். வேலை ரீதியில் பழக்கமானவர். ஊர்ல பெரிய பிஸினெஸ்மேன். அவர் நம்ம வீட்டுக்கு வரதே பெரிசு. நல்ல டிஃபனாய் பண்ணு. அவர் மிஸஸும் வரதால நீயும் எங்க கூட கலந்துக்கணும். சுப்ரதிவ்யமாய் ஒண்ணு பெத்து வச்சிருக்கியே, அதை வழக்கம் போல கையில தூக்கிக்கிட்டு வந்து நிக்காதே. அவங்க வந்துட்டுப் போற வரைக்கும் அதும் மூஞ்சி வெளிய தெரியக்கூடாது."

ஈரமற்ற இயல்பின் சிகரம் பெயர்ந்து தலையில் விழுந்தது போல் இருந்தது.

இனியும் இவனுடன் வாழ வேண்டுமா?

குழந்தையுடன் பிறந்தகம் வந்த நாளிலிருந்து இதே சிந்தனைதான்.

அம்மா பயந்து விட்டாள்.

"என்னடி வெடிகுண்டு தூக்கிப் போடறே?"

"அங்கே நடந்ததெல்லாம் உனக்குத் தெரியாதும்மா. சொல்லவே மனசு நடுங்குது. ஒரு நாளா ரெண்டு நாளா? அஞ்சு வருஷம்! அவர் பேச்சும் குணமும்... போதும்மா!" கையெடுத்துக் கும்பிட்டாள்.

"உளறாதே. எப்படிப்பட்டவனானாலும் பெண்டாட்டி பிள்ளைய வச்சுக் காப்பாத்தறாரில்ல."

"என்னால என்னையும் எம் பிள்ளையையும் காப்பாத்திக்க முடியும். நானும் எம்.ஏ. படிச்சவதான்."

● காரியம் நடந்த பிறகு யோசனை சொல்வது, அறுவடைக்கு அப்புறம் மழை பெய்வதற்கு ஒப்பானது.
— ஹாலந்து பழமொழி; தகவல் : பா. குணா

"ஆனா ஒரு குழந்தைக்குத் தகப்ப னோட பாதுகாப்பு எத்தனை முக் கியம்! அத யோசிச்சியா? அதுவும்... இந்தக் குழந்தைக்கு!"

"நீ வச்ச பேர் எனக்குப் புடிக் கலே. என் மீனலோசனின்ற பேர்தான் புடிச்சிருக்கு" என்றாள் மீனலோசனி.

"அப்படிச் சொல்லாதே சுதந்திரா! நான் வச்ச பேர் ரொம்ப அழகான பேர். எத்தனை அழகான பேர்னு நீ பெரியவளானப்புறம் தெரிஞ்சுப்பே."

இருவரும் வாசல் வராந்தாவில் அமர்ந்திருந்தார்கள். நட்பு வேர்விட்ட பிறகு பாட்டன் சலவைத் துணி களுடன் வராத நாட்களில் கூட சுதந் திரா சில சமயம் அவளைப் பார்க்க வந்தாள். பாப்பாவை ஒரு பொம்மை போல் சிறிது நேரம் மடியில் வைத்துக் கொண்டு உற்றுப் பார்ப்பாள்.

"இவன் ஏன் இப்படி இருக்கான்? ஒண்ணும் பேசாம, ஒரே எடத்த பாத்துக்கிட்டு, பச்சைப் பாப்பா வாட்டம் எப்பப்பாரு சொள்ளு விட்டுக்கிட்டு."

"பச்சைப் பாப்பா சொள்ளு விடும்னு உனக்குத் தெரியுமா?"

"தெரியுமே! எங்க வூட்லயே பாப்பா இருக்கு. ஆனா அது எப்பவும் சொள்ளு விட்டுக் கிட்டிருக்காது. கண்ணை நல்லாத் திருப்பி நாலு பக்கமும் பாக்கும். சிரிக்கும். தவுந்து வரும். இப்பவே என்ன 'க்கா'ன்னு கூப்பிடுது!"

நடைபெற்று வரும் மருத்துவ சிகிச்சையால் ஒருநாள் பாப்பாவும் அப்படி ஆகமாட்டானா?

அந்த சிகிச்சை தொடர்ந்து நடப் பதற்கே கூட முத்துவின் பிரபல எலக்ட்ரானிக்ஸ் கம்பெனி மேலாளர் பதவி தருகிற பொருளாதார தைரியம் தேவைப்படுகிறதா?

சிலுசிலுவென்று காற்று எங் கிருந்தோ கிளம்பியது. காம்பவுண்டி லிருந்த மாமரத்தின் இலைகளிடையே புகுந்து புகுந்து காற்று விளையாடியது. மா இலைகளுக்குத் திடீரென்று மகிழ்ச்சி வெறி. துள்ளிக் குதித்து ஆட ஆரம்பித்தன. மழைத் துளிகள் வானத்தைத் துளைத்துக் கொண்டு விழுந்த கணத்தில் பூமிக்குள்ளிருந்து புதையல் போல் ஒரு குளிர்ச்சி வெடித் துக் கொண்டு வெளிப்பட்டது.

மீனலோசனி பாப்பாவைப் பொத்தென்று தரையில் வைத்துவிட்டு, ஒரு சந்தோஷக் கூவலுடன் படியிறங்கி, மரத்தின் அருகில் ஓடிப் போய்க் கைகளை ஆட்டிக் கொண்டு சுழன்று சுழன்று நடனமாடினாள். கிளிசல் தைத்த பச்சை சட்டை போட்டிருந் தாள். அவள் வேகச் சுழற்சியில் சட்டைப் பச்சைக்குள் பூமியின் பசுமை அனைத்தும் வெண்ணெயாய்த் திரண்டு புகுந்து விட்டது.

பாப்பாவைக் கரங்களுள் பதுக்கிக் கொண்டு நந்து பார்த்தபடி அமர்ந்திருந்தாள்.

சுதந்திரா ஆடுகிறாள். சுதந்திராதான் ஆட முடியும். கால்களில விலங்கு இல்லை. அல்லது நடன விநாயகர் ஆட முடியும். பூமியில் மின்ன லிடும் அந்தக் கால் விரல் நுனிகளில் சுதந்திரம் ஆனந்த நடனமாடுகிறது.

"அடுத்த மாசம் நான் பி.ஏ. எழுதி முடிச்சதுமே எங்க கல்யாணம் நடந்துட ணும்னு அப்பாவும் அம்மாவும் விரும்பறாங்க" என்றாள் கலா. இரவு சாப்பாட்டுக்குப் பிறகு சகோதரியோடு டீ.வி.யில் ஆங்கிலச் செய்திகள் பார்த்து முடித்ததும் அதை அணைத்துவிட்டு அவள் அருகில் வந்து உட்கார்ந்திருந்தாள்.

"இல்லேன்னா வரம்பு மீறிடுவோமோன்னு அவங்களுக்குப் பயம்!" என்று சிரித்தாள்.

"பையன் வீட்ல என்ன சொல்றாங்க?"

"ரவியோட அப்பா ஓகே சொல்லிட்டார் அம்மாவுக்குத்தான் அவ்வளவா இஷ்டமில் லேன்னு தோணுது. அவங்க அண்ணன் மகள் மருமகளாகணும்னு ஆசை. ஆனா பிள்ளை யோட விருப்பத்துக்காகக் கடைசில விட்டுக் கொடுத்துடுவாங்கன்னு நினைக்கறேன்."

"அதுவரைக்கும் நிம்மதி. எப்படியோ கல்யாணம் பிரச்னையில்லாம நடந்துடுமில்ல."

"அதான்க்கா.... பிரச்னை இருக்கக் கூடாது இல்லையா? ஏதாவது சாக்கு கிடைச்சா கூட அந்தம்மா இந்தக் கல்யாணம் வேணாம்னுடு வாங்களோன்னு பயமாயிருக்கு."

"சாக்குன்னா?"

கலா அவளை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டாள். "இல்லையா ஏதானும்? சும்மா... பொண்ணு சரியா விழுந்து கும்பிடலே, இல்லாட்டி பொண்ணோட அம்மா வாசலுக்கு வந்து வர வேற்கலே, இல்லாட்டி பொண்ணோட அக்கா.. பொண்ணோட அக்கா வாழாவெட்டியாய் வந்துட்டா... இல்லையா? இப்படி ஏதானும் அசட்டுச் சாக்கு..."

கலா சிரிக்க முயன்று தோற்று, ஒருமுறை நிமிர்ந்து பார்த்து விட்டு மௌனமானாள்.

நந்து எழுந்து கொண்டாள்.

"நான் போய் பாப்பா தூக்கத்துல துணியை நனைச்சுக்கிட்டானான்னு பார்க்கறேன் கலா அப்படியே படுத்துக்கறேன். தூக்கம் வருது. குட்

நைட்."

நந்து உள்ளே போக இரண்டடி எடுத்து வைத்தாள்.

"அக்கா!"

நடந்தவள் நின்றாள்.

"நான் ரவியை... ரொம்ப விரும்பறேன்."

இரவில் விளக்கு வெளிச்சத்தில் பின்னாலுள்ள சுவரில் விழும் பதுமையின் நிழலில் நடன நிலை இன்னும் துல்லியமாய்த் தெரிகிறது. கால் விரல் நுனிகளில் குதூகலம் குதி போடுகிறது.

"அம்மா, இந்த பொம்மய எனக்குத் தரியா?"

"தாராளமா எடுத்துட்டுப் போயேன்! விநாயகர் உன் வீட்ல நுழையற வேளை ஒரு புது ஆரம்பமாய் உன் வாழ்க்கை நல்லா இருக்கட்டும்."

அம்மாவின் குரல் பாசத்தில் கனிந்தது. நந்து கணநேரம் நெகிழ்ந்தாள். மறுகணம் விரக்தி மூடியது. எந்த உறவுதான் அழகாயில்லை? எதுதான் அன்பில் ஆரம்பிக்கவில்லை? கணவன் என்ற உறவு. குழந்தை என்ற உறவு. உடன் பிறப்பு என்ற உறவு. ஒவ்வொன்றுமே இனிமையாய்த் திகழ வேண்டிய பந்தம். வாழ்வை வளமாக்க வேண்டிய செல்வம். ஆனால் இன்று அவள் நிம்மதியை நோக்கிப் பறக்க முடியாமல் தடுக்கும் விலங்குகள் அவை. கணவன் என்ற விலங்கு. குழந்தை என்ற விலங்கு. உடன்பிறப்பு என்ற விலங்கு.

"தாங்ஸ்ம்மா."

பதுமையைத் தோள் பையில் போட்டுக் கொண்டாள். ஊருக்குக் கிளம்பும் தினமும் ஒரு தோளை அணைத்தாற்போல் குழந்தை, இன்னொரு தோளில் தொங்கும் பை.

சாமான்களை டாக்ஸியில் ஏற்றியாகி விட்டது. அப்பா அவசரப்படுத்தினார்.

"சீக்கிரம் வாம்மா நந்து. பிருந்தாவன் நமக்காகக் காத்திருக்காது. டாக்ஸி வந்து நின்ன போதே கடியாரத்தில் மணி அடிச்சுது. நல்ல சகுனம்."

புதுமணப் பெண்ணை முதல் முறை கணவன் வீட்டுக்கு அனுப்புவது போல்தான் அப்பாவும் அம்மாவும் நடந்து கொண்டார்கள். திடீரென்று கிளம்பி வந்து விட்டாள் என்று மாப்பிள்ளை கோபித்துக் கொள்ளாமல், அவரை சமாதானப்படுத்தும் வகையில், தாமே நேரில் போய் மகளை ஒப்படைத்துவிட்டு வருவதற்காக, அப்பா வேலைக்கு லீவ் போட்டு விட்டுக் கிளம்புகிறார்.

"ஒரு நிமிஷம் இருங்கப்பா! நான் அவளை வரச் சொல்லியிருந்தேன்... இதோ வந்துட்டாளே!"

சுருட்டை முடி குலுங்க, கால்கள் இருப்பதே தெரியாத வேகத்தில் பறந்தோடி வந்து



''எங்க மானேஜர் சரியான ஞாபகமறதி பேர்வழி.''

''அப்படியா?''

''வெளியே கிளம்பும் போது செக்ரட்டரியிடம் 'முதலாளி போன் செய்தால் பெயரை கேட்டு வைத்துக்கொள்' என்று சொல்வார் என்றால் பாரேன்!''

— பிரியா பாலு

பழுப்பு நிறக் கவுன் மேல் மூச்சிரைப்புத் தெரிய நின்றாள் சுதந்திரா.

"சுதந்திரா!"

நந்து கீழே மண்டியிட்டு, பாப்பாவை அணைத்த நிலையிலேயே அவளையும் சேர்த்து அணைத்துக் கொண்டு கன்னத்தில் முத்தமிட்டாள்.

"கஷ்டம் கஷ்டம்..." வராந்தாப் படியில் நின்றிருந்த அம்மா முணுமுணுப்பது கேட்டது.

"ஊருக்குப் போய் வரட்டுமா சுதந்திரா? ஸாரி, மீனலோசனி. நான் வச்ச பேர் பிடிக்கலே, இல்லே?"

"இப்ப புடிச்சிருக்கு." இரண்டு மாதப் பழக்கத்தில் அவளிடம் ஒட்டிக் கொண்டு விட்ட சிறுமியின் கண்கள் கலங்கியிருந்தன.

"திருப்பியும் எப்ப வருவே?"

"என் தங்கச்சி கல்யாணம் நடக்கறப்ப வருவேன்."

"அப்போ இவன் பேசுவானா?"

நந்து தோள் பையிலிருந்து காட்பரீஸ் ஜெம்ஸ் பாக்கெட் எடுத்துக் கொடுத்தாள்.

"ஹை, ஜெம்ஸ் பாண்ட்!"

"உனக்குத்தான். சாப்பிடு. இதுவும் உனக்கு." மாக்கல் விநாயகரை எடுத்துக் கொடுத்தாள்.

"புள்ளையார் சாமி!"

"டான்ஸ் ஆடற புள்ளையார் சாமி."

"எனக்கே எனக்கா!"

"ஆமா. நீ பெரியவளாகிக் கல்யாணம் கட்டறப்ப இதை யாரானும் இப்ப நீ இருக்கற மாதிரி ஒரு சின்னப் பெண்ணுக்குக் கொடுத்துடு. நான் போய் வரட்டுமா?" பாப்பாவுடன் டாக்ஸியில் ஏறிக் கொண்டாள்.

"நீ டான்ஸ் பண்ணு சுதந்திரா! அன்னிக்கு ஒருநாள் மழையில பண்ணினியே, அந்த மாதிரி டான்ஸ். நான் பார்த்துக்கிட்டே போறேன்."

சுதந்திரா கண்ணீர் தளும்பக் கரங்களை வீசி உடலைச் சுழற்றி நடனமாடத் தொடங்கினாள்.

## 21. மந்திரமாவது நீறு

மழை ஓங்கிப் பெய்து கொண்டிருந்தது. 'நல்லார் ஒருவர்' உளரேல் அவா பொருட்டு எல்லோருக்கும் பொழிய வேண்டியிருப்பதை உணர்ந்து, தஞ்சைத் துறவியார் காடவர் தலைநகரான சேந்தமங்கலத்தில் அடியெடுத்து வைத்ததும் கொட்ட ஆரம்பித்திருந்தது. சேந்தமங்கலத்து அரண்மனையின் பின்புறம் சற்றுத் தள்ளியிருந்த காடவராயனின் மாளிகையை ஓங்கி அறைந்தது. இத்தகைய மனிதனுக்கும் சேர்த்துப் பொழிய வேண்டியிருந்ததை எண்ணி வருத்தமும் கோபமும் கொண்டிருக்க வேண்டும் அந்த மழை!

அணைந்து கிடந்த தீபங்களைப் பொருட்படுத்தாமல் பஞ்சணையில் அமர்ந்திருந்த காடவராயனுக்குப் போதை தலைக்கேறியிருப்பதை, சிவந்து கிடந்த விழிகளும், உருண்டு கிடந்த மதுக்குப்பிகளும் உணர்த்தின. மதுவை விட அதிக போதையை அவனுக்கு ஏற்றிக் கொண்டிருந்த காடவமங்கையர் இருவர், அவன் மீது முழுவதுமாகச் சாய்ந்து மதுக்குப்பிகளைத் தேடி அவற்றை நிரப்பிக் கொண்டிருந்தனர். மஞ்சத்தை அடுத்திருந்த சாளரம் திறந்து கிடந்ததையோ அதன் வழியே மழைச் சாரல் தெறித்ததையோ, அதனால் அவர்கள் உடைகள் நனைந்து உடல்களுடன் ஒட்டிக் கிடந்ததையோ அவர்கள் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அந்த மங்கையரின் கழுத்திலும், கரங்களிலும், இடையிலும் காடவராயன் அளித்திருந்த ரத்தின மாலைகளும், முத்துக்களும், பொன்னாபரணங்களும் மின்னிக் கொண்டிருந்தன.

அறையின் மூலையில் நன்றாக இழுத்து விடப்பட்டு, காற்றில் அலைபாய்ந்தபடி எரிந்த சிறு தீபமொன்றின் மங்கலான ஒளியில் அந்த ஆபரணங்கள் மின்னியதைக் கண்ட காடவராயனுக்கு மீண்டும் கஞ்சமலையின் அடிவாரத்தில் நிலவொளியில் பளீரிட்ட ஆதித்யனின் வாள் வீச்சு நினைவுக்கு வந்தது. தலையை ஒருமுறை உலுக்கிக் கொண்டவன் மறுபடி மதுக்குப்பியை நீட்டினான். ஆனால் அதற்குள் அந்த மங்கையர் அவனை விட்டு விலகி வாயிலை நோக்கி வெறித்துக் கொண்டிருந்தனர்.

வாயிலில் ஏற்பட்ட அரவங்களைத் தொடர்ந்து உள்ளே நுழைந்த காடவ வீரன் ஒருவன் தலை வணங்கி நின்றான். வணங்கிய தலையை நிமிர்த்தவும் அஞ்சிய அந்த வீரன், "பிரபு, மன்னர் தங்களை உடனே



அழைத்து வரப் பணித்தார்'' என்றான் சங்கடம் நிரம்பிய குரலில்.

"மன்னர் அழைத்தாரா? இந்த நேரத்திலா?'' - காடவ ராயனின் குரலில் கடுமை தெறித்தது.

"ஆம் பிரபு, சைவத் துறவியார் ஒருவர் வந்திருக்கிறார். அவருடன் மன்னர் ஏதோ விவாதித்துக் கொண்டிருக்கிறார். தங்களையும் அழைத்து வரப் பணித்தார்'' என்ற வீரன் தலையைத் தாழ்த்தியபடியே வெளியேறினான்.

மதுக்குப்பியை வெறுப்புடன் விட்டெறிந்த காடவ ராயன், எழுந்து வெளியே நடந்து, கொட்டும் மழையில் சற்று நேரம் நின்றான். மதுவினால் ஏற்பட்ட மயக்கம் சற்று தெளிந்ததும் மீண்டும் உள்ளே நுழைந்தவன், உடைகளை மாற்றிக் கொண்டு, உட்புற வாயில் வழியே அரண் மனையை நோக்கி நடந்தான்.



"சீயன் அழகிய சிங்கன்'' என்று தமிழிலும், "மஹா ராஜ சிம்ஹ'' என்று வடமொழியிலும் மெய்க்கீர்த்திகள் பாடப் பெற்றவனும், எவருக்கும் அடங்காதவன் என்று பெயர் எடுத்தவனுமான காடவ மன்னன் கோப்பெருஞ் சிங்கனின் முகத்திலும் உடலிலும் முதுமையின் தளர்ச்சி தெரிந்தாலும், மனம் இன்னும் தளராமல் திடமாக இருந்த தால் கரங்களைப் பின்புறம் கட்டியபடி அசல் சிம்மமாகவே உலவிக் கொண்டிருந்தான். அவன் கால்கள் தட்தட்டென்று நிலத்தில் பதிந்ததையும், அடர்ந்த புருவங்கள் ஒன்று கூடி யிருப்பதையும் கவனித்த காடவராயனுக்கு, மன்னனது சித்தம் பெரும் சினத்தின் வசப்பட்டிருப்பது புரிந்தது. அவன் முகத்தில் இலேசாக அச்சத்தின் சாயை படர்ந்தது. மன்னனுக்கு எதிரில் ஆஜானுபாகு வான சிவந்த தேகத்துடன் உடலெங்கும் நீறு பளிச் சிட அமர்ந்திருந்த சைவத் துறவியாரையும்

# ...ந்திர தனுஷ

கவனித்த காடவராயன், அச்சத்துடன் சந்தேக மும் சேர்ந்து கொள்ள உள்ளே நுழைந்தான்.

காடவ மன்னனுக்கு உடல் ஓரளவு இன் னும் திடமாயிருந்தாலும் பார்வை அத்தனை தெளி வாக இல்லை. அவன் விழிகளைச் சுருக்கி வலது உள்ளங்கை யால் மறைப்புக் கொடுத்தபடி காடவராயன் வருவதைப் பார்த்த விதம் இதை நிரூபித்தது. அடுத்து அவன் முகத்தி லிருந்த கடுமை இன்னும் கூடியது. அவன் குரலிலும் கடுமை ஒலித்தது.

"காடவராயா! நீ கஞ்சமலையிலிருந்து திரும்பி எத்தனை நாட்களாயிற்று?''

காடவராயனின் பதில் சற்று தாமதித்தே வந்தது. "மூன்று தினங்களாயிற்று தந்தையே'' என்று.

"மாறன் அமுதனார் உன்னிடம் என்ன கூறியனுப்பி னார்?''

காடவராயனின் பதில் இன்னும் தாமதித்து வந்தது. "நம் தலைநகர் இன்னும் பத்து தினங்களில் முற்றுகையிடப்படும் என்றார்.''

"பாண்டியரின் தாக்குதலையும் முற்று கையையும் எதிர்க்க என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறாய்? அல்லது பொதி வண்டிகளை மீட்க ஏதேனும் முயன்றாயா?'' - மன்னனின் குரல் இரும்பாக ஒலித்தது.

"தந்தையே, நான்...'' இழுத் தான் காடவராயன்.

அடுத்து காடவமன்னன் குரல் உயர்ந்து ஒலித்தது, "தோல் வியை முதன் முறையாக சந்திக் கும்போது அதிர்ச்சி இருக்கத் தான் செய்யும் காடவராயா! தோல்வியை மதுவால் மறக்க நினைப்பவன் ஆண்மகனே அல்ல. அது வீரனுக்கு அழகு மல்ல. இப்படி மதுவும் மங்கை யருமாகக் கிடந்தால் வரும் அபாயம் விலகி விடுமா? சொல் காடவராயா!''

காடவராயன் மௌனம் சாதித்தான். அன்னிய மனிதர் முன்பாக மன்னன் தன்னைக்

கடிந்து பேசியது அவன் ஆத்திரத்தைக் கிளறி யிருந்தது.

அதுவரை அமைதியாக அமர்ந்திருந்த சைவத் துறவியாரின் குரல் மெள்ள ஒலித்தது: "காடவராயா, தோல்வியை வெற்றியாக மாற்ற முயற்சி தேவை. கீழே விழுவது மீண்டும் அதிக வேகத்துடன் எழத்தானே தவிர, இன்னும் துவண்டு விடுவதற்கில்லை" என்றார் துறவி யார்.

காடவராயன் நிமிர்ந்து துறவியாரைப் பார்த்த பார்வையில் உஷ்ணம் தெறித்தது. "நீர் யார் எனக்குப் புத்திமதி கூற?" – இரைந்தான் அவன்.

"காடவராயா!" – கோப்பெருஞ்சிங்கனின் குரல் உயர்ந்து, அசல் கர்ஜனையாகவே ஒலித் தது. "பெரியோர்களிடம் மரியாதையாகப் பேசப் பழகு முதலில். இவரை யாரென்று நினைத்தாய் நீ?"

அந்த கர்ஜனையில் சப்தநாடிகளும் ஒடுங்கி னாலும் காடவராயனின் கேள்வி மட்டும் சற்றுக் கழித்து வேகத்துடன் வந்தது, "யார் இந்தத் துறவி?" என்று.

"இவர் தஞ்சைத் துறவியார். சோழ மன்ன னிடமிருந்து சகல அதிகாரங்களையும் பெற்று பேரமைச்சருக்கும் உத்தரவிடும் நிலையிலிருப் பவர். நம்மை நாடி வந்திருக்கிறார்" என்றான் மன்னன்.

**ம**ன்னன் வார்த்தைகள் காடவராயன் முகத்தில் போலியான பணிவைப் படரவிட் டன. அவன் குரலில் ஏளனம் ஒலித்தது : "சோழ மன்னருக்கு இப்பொழுது என்ன அதிகாரமிருக்கிறது, அதை இவர் பெறுவதற்கு? இருந்தாலும் திடீரென நம் மீது அக்கறை ஏற்படக் காரணம்?"

வெறுப்பு வழிந்த விழிகளால் காடவ ராயனை நோக்கிய மன்னனின் பதில் வாளை விடக் கூர்மையாக வந்தது. "முட்டாளே! நமக்கு உதவ வந்திருப்பவரை ஏளனமா செய் கிறாய்?"

காடவராயன் தலைகுனிந்து நின்றிருந்தான். மன்னன் குரல் தொடர்ந்து ஒலித்தது. "ஆத்திர மும் வெறும் முரட்டுத்தனமும் எதற்கும் உத வாது காடவராயா. பாண்டியர் தாக்குதலி லிருந்து நம்மைக் காக்க என்ன செய்யப் போகி றாய்? பாண்டிய இளவல் வாளுக்கு பதில் கூற இயலாத நீ, அந்த ராட்சதன் கிருஷ்ணமல்ல னையும், மகாவீரனான வீரபாண்டியனையும் அவன் தமையன் சுந்தரபாண்டியனையும் எப்படி எதிர்கொண்டு இந்த சிற்றரசைக் காக்கப் போகிறாய்?" – ஆதித்யனின் வாளை விட அதிகமாகத் தாக்கின காடவமன்னனின் வார்த்தைகள்.

இரண்டொரு வினாடிகள் தலைகுனிந்து நின்ற காடவராயன், மீண்டும் சைவத் துறவி யாரை நோக்கினான். "சோழ நாட்டைக் காத்துக் கொள்ளவே இவரிடம் படைகள் ஏது மில்லையே? காடவ அரசைக் காக்க இவர் என்ன செய்யப் போகிறார்?" என்றான் காடவ ராயன்.

துறவியார் நிதானமாகப் பதிலளித்தார், "காடவராயா, பொறுமையாகக் கேள். சோழ நாட்டிலிருந்து உத்தமபாளையத்தைக் கைப் பற்றச் சென்ற போசளர்படை வழியிலேயே அழிக்கப்பட்டு, சோழ மன்னனுக்கு எதிர் பாராத விடுதலை கிடைத்திருக்கிறது. கொங்கு நாட்டில் போசளர் பாண்டியருடன் போரிட் டுக் கொண்டிருக்கின்றனர். பாண்டியர் படை வேகத்தையும் எண்ணிக்கையையும் கண்டு சிங்கணனும் கண்ணனூர் கோட்டையை விட்டு வெளியே வர அஞ்சிக் கிடக்கிறான். அந்தப் போர் ஒரு முடிவுக்கு வந்தபின்பு பாண்டியர் கவனம் கீழ்த்திசை நோக்கித் திரும் பும். சோழர்களின் காவற்படையும், உனது சிற்றரசும் பாண்டியர் வேகத்திற்கு முன்பு. வெறும் தூசு. புரிகிறதா?" என்ற துறவியார், சற்று நிதானித்து, தாம் கூறியவை அவன் சித்தத்தில் பதிய சற்று அவகாசமளித்தார்.

காடவமன்னன் தொடர்ந்தான், "உன் அர்த்தமற்ற கேள்விகளை நிறுத்து காடவராயா. நிலைமையைப் புரிந்து கொள். நமது இரு அரசுகளையும் காத்துக் கொள்ளத்தான் பகையை மறந்து சோழ மன்னர் துறவியாரை அனுப்பியிருக்கிறார்."

காடவராயன் மனத்தில் சந்தேகம் விலகி யதற்கான அறிகுறியேதும் புலப்படவில்லை. "அது எப்படி சாத்தியம் தந்தையே? நமக்கும் சோழருக்கும் ஏற்பட்ட பகை அத்தனை எளி தில் மறக்கக்கூடியதா? சோழ அரசு சீர்குலைய நாம்தான் காரணம் என்ற பழி இதனால் நீங்கிவிடுமா? அப்படியே சோழர்கள் பகையை மறந்து விட்டதாக வைத்துக் கொண்டாலும் என்ன பயன்? வெறும் காவற்படைகளை வைத்துக் கொண்டு அவர்கள் நமக்கு என்ன உதவி செய்துவிட முடியும்?" என்றான் காடவ ராயன், சந்தேகம் வழிந்த குரலில்.

'முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா' என்ற பழமொழியை ஒருமுறை நினைத்துக் கொண்ட துறவியார், "காடவராயா, சென்ற தலைமுறை வரை காடவர்களை விட சோழ மன்னர்களுக்கு நெருக்கமானவர்கள் யாரிருந் தார்கள்? பகை தோன்றியது இப்போதுதானே? மூன்றாம் ராஜராஜர் உன் தந்தைக்கு சபையில் உயர்ந்த பதவி அளிக்கவில்லையா? "வாள் நிலை கண்ட பெருமாள்" என்று பட்டமளித்து கௌரவிக்கவில்லையா? ஏன், எல்லாவற்றை யும்விட மேலாக தமது உடன்பிறந்தவள் மதுர வாசக நாச்சியாரை மணம் செய்து வைத்து உறவாக்கிக் கொள்ளவில்லையா? அத்தனை யும் மறந்து உன் தந்தை தனியரசாக ஆள விரும்பியதாலும், ராஜராஜரையே பாண்டியர் போரில் தோற்று வந்தபோது மடக்கி சிறை செய்ததாலும்தானே பகை வந்தது?" – சைவத் துறவியாரின் குரலில் இன்னதென்று விளங்




"தனக்கு மிஞ்சித் தர்மம்" என்பதற்கு நான் புது வியாக்யானம் செய்கிறேன்: தனக்கு எது உயிர் வாழ்வதற்கு அத்யாவச்யமோ, எதெல்லாம் இல்லாவிட்டால் உயிர் வாழ முடியாதோ. அந்த bare necessities-க்கு அதிகமாக எவரும் வைத்துக் கொள்ளாவிட்டால்தான் "தனக்கு மிஞ்சி"க் கையில் தர்மத்துக்குப் பணமே இருக்கும். முடிவில்லாமல் தனக்கென்று ஆடம்பர போக்யங்களை ('லக்ஷரி'களை)ப் பெருக்கிக் கொண்டே போய் விட்டு, "தனக்கு மிஞ்சித் தர்மம் பண்ண எதுவுமே இல்லை" என்று கைவிரித்தால் அது நியாயமில்லை. ஆனதால், தனக்கென்று எவ்வளவு குறைவாகச் செலவழிக்க முடியுமோ, அப்படி எளிமையாக வாழ்ந்து, மிச்சம் பிடித்து, அதைத் தர்மத்துக்குச் செலவழிப்பதுதான் "தனக்கு மிஞ்சித் தர்மம்". தர்மம் பண்ணியே ஆகவேண்டுமே! வேதத்தில் 'தர்மம் சர' என்றும், படிப்பு ஆரம்பத்திலேயே அவ்வை 'அறம் செய விரும்பு' என்றும் சொல்லியிருப்பதைச் செய்தேயாக வேண்டுமே! ஆனதால், நமக்கு வரும்படி எவ்வளவு குறைச்சலாயிருந்தாலும் அதற்குள் தர்மம் பண்ணும்படியாக வும் செலவைக் கட்டுப்படுத்திக் கொண்டு 'தனக்கு மிஞ்சும்' படிப் பண்ண வேண்டும் என்றே இந்த வசனத்தை அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால், எவனுமே தர்மத்துக்காகச் சேமித்துத்தான் ஆக வேண்டும் என்றாகும். அதாவது, எவனுமே கடன்பட மாட்டான்! இது ஒரு பெரிய ஸ்வய உபகாரம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ாத தொனியொன்று ஒலித்தது.

மன்னன் கோப்பெருஞ்சிங்கன் சித்தத்தில் ழைய நினைவுகள் ஓடியிருக்க வேண்டு மன்பது அவன் முகத்தில் விரிந்து கிடந்த னவுச் சாயையிலும், வெளியே பொழிந்து காண்டிருந்த மழையினூடே வெறித்த அவன் ார்வையிலும் தெரிந்தது. காடவராயன் மௌனமாக நின்றிருந்தான். ராஜராஜரை ந்தை சிறை செய்ததும் பிறகு ஏற்பட்ட பரீதங்களும் சோழ நாடே அன்னியர் வசப் ட்டதும் அவன் அறிந்தவைதாம். மீண்டும் லித்தது சைவத் துறவியாரின் குரல் : "காடவ யா, உன் தந்தையுடன் சேர்ந்து சோழருக் திராகக் கிளர்ச்சியில் ஈடுபட்ட நண்பர்கள் லையமானும் சம்புவரையனும் ஏன் ப்போது விலகி நிற்கிறார்கள்? சொல்..."

காடவராயனின் குரலில் வேகமும் சுருதி இறங்கியே ஒலித்தது. "அவர்கள் எமது ாக்கிஷங்களில் பங்கு கேட்கத் துவங்கினார் . விரோதம் பிறக்க அதுதான் காரணம்."

துறவியாரின் பெருவிழிகள் காடவராயனை ப்பார்வையாக ஊடுருவின. அவர் குரலி பெரும் அமைதி ஒலித்தது. "எங்கே, இன் ாரு முறை சொல் காடவராயா, கொங்கு டின் பொக்கிஷம் உமது பொக்கிஷமா?"

துறவியாரின் கேள்விகள் மன்னனைப் ரும் சங்கடத்தில் ஆழ்த்திக் கொண்டே வது அவன் முகத்தில் தெரிந்தது. "சரி, த் தர்க்கம் போதும். இனி ஆகவேண்டி தப் பற்றி சிந்திக்கலாம்" என்றான் அவன். றவியாரின் குரல் தொடர்ந்து தெளிவாக த்தது. "காடவராயா, உன் முரட்டுத்தனத் சற்று ஒதுக்கிவிடு. மலையமானையும் சம்புவரையனையும் நான் மீண்டும் இணைக்கிறேன். காடவர் படையுடன் அவர்கள் படையும் சேர்ந்தால் நமது படைபலம் பெருகி விடும். சோழ நாட்டுக் காவற்படைகளும் துணை நிற்கும். பாண்டியர் படையெடுப்பிலிருந்து நம்மைக் காத்துக் கொள்ள இயலும்."

"தாங்கள் கூறுவதை ஏற்றுக் கொள்கிறேன். நான் என்ன செய்ய வேண்டுமென்பதைக் கூறுங்கள்" என்றான் காடவராயன்.

தனது முரட்டு சுபாவத்தை ஒப்புக் கொண்டு, அதை மாற்றிக் கொள்ளவும், மீண்டும் பழைய நண்பர்களுடன் இணைவதை ஏற்றுக் கொள்ளவும் செய்த காடவராயனையும், அவனை அவற்றுக்கு இணங்கச் செய்து விட்ட துறவியாரையும் ஏறிட்ட காடவ மன்னன் விழிகளில் வியப்பு தெரிந்தது. துறவியார் லேசுப்பட்டவரல்ல என்று எண்ணிக் கொண்டான் மன்னன். காடவராயனின் சுபாவத்தை இதே ரீதியில் மாற்றி, தக்க பயிற்சியும் அளித்தால் தனக்குப் பின் திறமைமிக்க தலைவன் ஒருவனாக அவன் உருவாகக் கூடும் என்ற ஆவலும் கூடவே எழுந்தது.

காடவராயன் இறுதியாக ஒரு கேள்வியும் கேட்டான் : "துறவியாரே, மலையமானும் சம்புவரையனும் மீண்டும் இணைய ஒப்புக் கொள்வார்களா? அல்லது அதற்கு ஏதேனும் மந்திரம் வைத்திருக்கிறீர்களா...?"

கருங்கல்லில் சிற்றுளியால் தட்டுவதுபோல நகைத்தார் துறவியார். நகைத்தபடியே தமது காவி ஆடையிலிருந்து திருநீற்றுப் பையொன்றை எடுத்தார். "காடவராயா, இதோ இருக்கிறது மந்திரம். மந்திரமாவது நீறு!" என்றார் மீண்டும் நகைத்தபடி.

(தொடரும்)

## 22. காகதீய ருத்ராம்பாள்

உரத்த குரலில், ஆனந்தமாக இசைத்துக் கொண்டிருந்தார் சைவத் துறவியார் :

*"மன்னியசீர் மறைநாவல் நின்றவூர்ப் பூசல்*
*வரிவளையாண் மானிக்கு நேசனுக்கும் அடியேன்*
*தென்னவனாய் உலகாண்ட செங்கணாற்கு அடியேன்*
*திருநீல கண்டத்துப் பாணணார்க்கும் அடியேன்"*

செங்கண் சோழனுக்கும், திருநீலகண்டருக்கும் மட்டுமின்றி திரு ஆரூரில் பிறந்து சித்தத்தை சிவன்பால் வைத்திருக்கும் எல்லோர்க்கும் அடிமை நான் என்று சுந்தரமூர்த்தி நாயனார் எழுதிவைத்த அடிமை சாஸனத்தை கனத்த குரலில் பாடிக் கொண்டிருந்தார். அதைக் கேட்டதாலோ, அல்லது எதிர்பாராது போசளரிடமிருந்து கிடைத்துவிட்ட சுதந்தரத்தை எண்ணியதாலோ, தஞ்சை அரண்மனையின் உச்சியில் பறந்த பெரும்புலிக் கொடி, படபடவென்று அடித்து தனது மகிழ்ச்சியைக் காட்டிப் பறந்து கொண்டிருந்தது.

காடவ நாட்டிலிருந்து கிளம்பி, இருதினங்கள் கழித்தே தஞ்சைக்குத் திரும்பியிருந்த துறவியாரின் ஆனந்தம், வந்தது முதலே அதிகரித்திருந்தது. அந்த கன்த்த குரல் மேலே பறந்த புலிக் கொடியை ஆனந்தப்பட வைத்தது மட்டுமின்றி அரண்மனைக்குள்ளிருந்து கொங்கு நாட்டு இளவரசியை அந்த மேன்மாடத்து அறைக்கு இழுத்து வரவும் செய்தது.

காரணம் புரியாவிட்டாலும் அந்த கனத்த குரலில் தொனித்த ஆனந்தம் அவள் முகத்தையும் மலர வைத்ததால் அறையின் வாசலில் நின்றபடியே துறவியாரை சற்று நேரம் முறுவலுடன் கவனித்தாள் இளவரசி. "துறவியாரே" என்று அழைத்தாள். கனத்த குரலில் உரத்துப் பாடலை இசைத்துக் கொண்டிருந்தாலும் துறவியாரின் பாம்புச் செவிகளில் இளவரசி மெல்லிய குரலில் விடுத்த அழைப்பு விழுந்து விட்டதால் விழிகளைத் திறந்து அவளை நோக்கியவர், "வா பூங்கோதை, இப்படி அமர்ந்து கொள். இந்தப் பாடலைக் கேள்" என்றார். மீண்டும் பாடலை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தார்.

பூங்கோதையின் குரல் மீண்டும் குறுக்கிட்டது. "அதென்ன துறவியாரே? சுதந்தரம் கிடைத்ததென்று சோழநாடே மகிழ்கிறது... தாங்கள் மட்டும் அடிமை, அடிமையென்று பாடுகிறீர்கள்? அதில் இத்தனை ஆனந்தம் வேறு?" என்றாள் பூங்கோதை முறுவலுடன்.

துறவியாரின் பதில் திடமாக வந்தது. "பூங்கோதை, அடிமைப்படுவதில் உள்ள சுகம் சிந்தித்தால் மட்டுமே புரியும். மனித வாழ்வே உண்மையில் கடமைக்கும் காதலுக்கும் பொருளுக்கும் புகழுக்கும் அன்புக்கும் அறவழிக்கும் காலத்தின் வேகத்துக்கும் அடிமைப்பட்டே நடக்கிறது. அதில் ஒரு சுகமும் இருக்கிறது. என் போன்ற துறவிகளுக்கும் அடிமைப்படுவதில் தான் சுகம். ஆனால் அது மனிதருக்கா, இறைவனுக்கா என்பதைப் பொறுத்து இன்பமோ துன்பமோ அமைகிறது. சோழ மண்ணும் நானும் இதுவரை போசளருக்கு அடிமையாயிருந்தோம். இனி இறைவனுக்கும் அவன் அடியார்களுக்கும் மட்டும்தான் அடிமையென்று பாடினேன். இதில் தவறென்ன?" என்றார் துறவியார்.

அவர் கூறியதன் பொருள் பூங்கோதைக்கு மெள்ளப் புரிந்தது.

சற்றுக் கழித்து வினவினாள். "சரி, நான்கு தினங்களாகத் தங்களைக் காணவில்லையே, இந்த மழையில் எங்கு சென்று வந்தீர்கள்?" அவள் குரலில் உரிமையுடன் சற்றுக் கோபமும் கலந்து ஒலித்தது.

துறவியாரின் பதில் பூங்கோதையைத் திகைக்க வைத்தது. "பாண்டியருக்கு எதிராக காடவ மன்னனையும் மற்ற சிற்றரசர்களையும்

# இந்திர தனுசு

விஷ்வக்சேனன்



ஒன்று சேர்க்கச் சென்றிருந்தேன் பூங்கோதை" என்றார் அவர் நிதானமாக.

"துறவியாரே என்ன கூறிகிறீர்கள்?" பூங்கோதையின் திகைப்பு அவள் முகத்திலும் குரலிலும் தெரிந்தது.

"ஆம் குழந்தாய்! காடவருடன் மலையமானையும் சம்புவரையனையும் ஒன்று சேர்த்து, பாண்டியருக்கெதிராகப் படைகளைத் திரட்ட ஏற்பாடுகள் செய்துவிட்டு வந்தேன்" என்றவர் இடி இடியென்று நகைத்தார்.

"அப்படியானால் எதிரிகளின் படைபலம் அதிகரித்து விடாதா?" பூங்கோதை திகைத்தது அவள் முகத்தில் தெரிந்தது.

துறவியாரின் பதில் மீண்டும் வெகு நிதானத்துடன் வந்தது. "படை பலம் அதிகரிக்கத்தான் செய்யும். போர் சற்றுக் கடுமையாகவும் இருக்கும்."

"பின் ஏன் அவர்களை இணைக்க வேண்டும்?" - இளவரசியின் குரலில் உஷ்ணம் தெறித்தது. அவள் முகம் சிவந்து விட்டதையும் கண்களில் தெறித்த கனலையும் கவனித்த துறவியார், மீண்டும் கடகடவென நகைத்தார்.

"ஏன் நகைக்கிறீர்கள்?" - மீண்டும் அதே உஷ்ணத்துடன் வந்தது அவள் கேள்வி.

நகைப்பதை நிறுத்திய துறவியார், "காரணங்கள் இரண்டு குழந்தாய்..." என்றார்.

"இரண்டு காரணங்களா?"

"ஆம். இந்த மூன்று சிற்றரசர்களும்தான் சோழ அரசின் வீழ்ச்சிக்கு வித்திட்டவர்கள். இதில் ஒருவர் மட்டும் முறியடிக்கப்பட்டால் மற்ற இருவரும் சரணடைந்து விடுவார்கள். பின்பு சமயம் பார்த்து மீண்டும் கலகம் செய்யவும் முற்படுவார்கள். அவர்கள் படைகளை ஒன்றாக இணைத்து அழித்து விட்டால் பின்னால் கலகமேதும் செய்ய வாய்ப்பிருக்காது. என் நோக்கம் அதுதான். இரண்டாவதாக இளைய பாண்டியரின் விருப்பமும் இதில் கலந்திருக்கிறது."

"யார்? ஜடாவர்ம வீரபாண்டியரா?" - பூங்கோதையின் குரலில் உஷ்ணம் மறைந்து சற்று



## அருள்வாக்கு

நாம் அநுபவிப்பதற்காகப் பிரபஞ்சம் முழுவதையும் ஈசுவரன் நமக்கென விட்டிருக்கிறார். பலவிதமான போக்கிய வஸ்துக்களை வெளியிலே உண்டாக்கி, அவற்றை அநுபவிக்கிற இந்திரியங்களை நம்மிடம் வைத்திருக்கிறார். எனவே, நாம் அநுபவிப்பதை எல்லாம் அவருக்குச் சமர்ப்பித்துவிட்டே உபயோகித்துக் கொள்ள வேண்டும். உண்மையில் அவருக்கே என்றா அன்னத்தைக் கொடுத்து விடுகிறோம்? வெறுமே அவரிடம் காட்டுகிறோம். பிறகு நாம்தான் புசிக்கிறோம். நைவேத்தியம் செய்தால் ஸ்வாமி எங்கே சாப்பிடுகிறார் என்று சிலர் கேலியாகக் கேட்கிறார்கள். நிவேதனம் என்றால் ஸ்வாமியைச் சாப்பிடச் செய்வது என்று அர்த்தமே இல்லை. அவருக்குச் சாப்பிட்டு ஒன்றும் ஆகவேண்டாம். நம் நினைவைச் சுத்தமாக்கிக் கொள்ளத்தான் பூஜை முழுவதுமே தவிர அவருக்கு இதனால் ஆவது எதுவுமில்லை. 'நிவேதயாமி' என்றால் 'அறிவிக்கிறேன்' என்றுதான் அர்த்தமே தவிர 'உண்பிக்கிறேன்' என்று அர்த்தமல்ல. 'அப்பனே, இந்த வேளைக்கு உன் கருணையில் நீ இந்த அன்னத்தைக் கொடுத்திருக்கிறாய்' என்று அவனுக்குத் தெரிவித்துவிட்டு அவனுடைய நினைவோடு உண்ண வேண்டும். அவன் அருள் இல்லாவிட்டால் இந்த அரிசி எப்படி விளையும்? ஸயன்ஸ் நிபுணர் அரிசி வகைகளை ஆராய்ந்து பெரிய பெரிய புஸ்தகங்கள் எழுதலாம்; ஆனால் அவரால் ஒரு மணி அரிசியைச் செய்ய முடியுமா? செயற்கை அரிசி (synthetic rice) என்று ஒன்றைச் செய்ய முடிந்தால் கூட இதற்கு மூலமான கெமிகல்ஸ் ஏற்கெனவே பகவத் சிருஷ்டியில் இருந்துதானே ஆகவேண்டும்? எனவே மனிதன் செய்ததாகத் தோன்றும் எல்லாமும் கூட முடிவிலே ஈசுவரன் சிருஷ்டித்தது தான். பரமேசுவரனால் கொடுக்கப்பட்டதை அவனுக்குக் காட்டாமலே நாம் அநுபவித்தால் திருடர்களாவோம்.

எங்கும் இருக்கும் அவன், நாம் இருக்கச் சொல்லும் இடத்தில் நாம் கிரகிக்கும்படி வந்து நிற்பான். கல், மண், செம்பு முதலிய எந்த பிம்பத்தில் வைத்துக் கூப்பிடாலும் வருவான். அப்படிப்பட்ட யோக்கியதையும் கருணையும் அவனுக்கு நிச்சயமாக இருக்கிறது.

அவனைப் பூஜை என்று வைத்து ஒவ்வொரு குடும்பத்திலும் கூப்பிட்டு, அவனால் கொடுக்கப்பட்டதை உபயோகிக்கிறோம் என்று அன்றாடம் அறிவிக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் ஈசுவரனுக்கு நிவேதனமாக அர்ப்பிக்கத்தக்கதைத் தவிர வேறெதையுமே நாம் உபயோகிக்கக் கூடாது என்ற பக்குவம் நாளடைவில் உண்டாகும். நல்லவர்களாவோம்!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

பணிவும் அச்சமும் கலந்து ஒலித்தன.

"ஆம் பூங்கோதை. சம்புவரையனும் மலையமானும் வயது முதிர்ந்தவர்கள். காடவராயன் வெறும் மூர்க்கன். தலைமை வகித்து நடத்த திறமையான தலைவனில்லாத எதிரிப் படையில் வீரர்களின் எண்ணிக்கையாவது அதிகமிருந்தால்தான் இளைய பாண்டியருக்குப் போரில் ஒரு சுவாரசியம் இருக்கும்'' என்றார் துறவியார்.

பூங்கோதையின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. சற்றுக் கழித்து வினவினாள். "துறவியாரே, தொண்டை நாட்டில் காகதீயர்கள் இருப்பதாகக் கூறினீர்களே? அவர்களிடமிருந்து காஞ்சி மண்டலத்தை எப்படி மீட்கப் போகிறீர்கள்?''

''ஆம் பூங்கோதை, காஞ்சியையும் தொண்டை மண்டலத்தையும் மீட்க வேண்டும். காகதீய மன்னன் கணபதியும் அவன் சார்பாக காஞ்சியை ஆளும் விஜயகண்ட கோபாலனும் சாமான்யமானவர்கள் அல்ல. காகதீயர் படை பலம் பெரிதுதான். அதைத் திறமையுடன் நடத்த ஒரு தலைவியுமிருக்கிறாள் அங்கு'' என்றார் துறவியார்.

"படைகளை நடத்த தலைவியிருக்கிறாளா?'' பூங்கோதையின் குரலில் வியப்பு கொப்பளித்தது.

"ஆம். காகதீய மன்னனின் மகள். ருத்ராம்பாள். பெயருக்கேற்றபடி ரௌத்திரமானவள். அரசு நிர்வாகமும் ராஜதந்திரமும் பயின்றவள். பல முறை போசளருடனும் வடக்கே யாதவருடனும் போர்களை நடத்தியவள்'' என்று துறவியார் சற்று நிதானித்து பூங்கோதையை உற்று நோக்கினார். அவர் முகத்தில் இலேசாக விஷமம் படர்ந்தது. "ஆதித்யனை அவளிடம் தான் அனுப்ப எண்ணியிருக்கிறேன்'' என்றார் விஷமம் குரலிலும் ஒலிக்க.

"ஆம் பூங்கோதை. ஆதித்யனை தஞ்சைக்கு வரும்படி நான் அழைத்திருப்பதே அதற்காகத் தான்'' என்றார் துறவியார் அமைதியாக. அடுத்து அவர் முகத்தில் பெரும் சிந்தனை படர்ந்தது. பூங்கோதை தொடர்ந்து கேட்ட எந்தக் கேள்விக்கும் அவரிடமிருந்து சரிவர பதிலேதும் கிடைக்கவில்லை. அவள் தவிப்பைக் கவனித்தும் கவனிக்காதவராக சற்று நேரம் ரசித்த துறவியார், தாம் மீண்டும் காடவ மன்னனைக் காணச் செல்வதாகக் கூறிவிட்டுக் கிளம்பினார்.

அதே சமயத்தில், சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் ஏற்பட்டுக் கொண்டிருந்த மாறுதல்களை ருத்ராம்பாளிடம் தெரிவிக்க, காகதீய ஒற்றன் ஒருவன் பறந்து கொண்டிருந்தான்.

ஒருமுறை ஸ்நானம் செய்வதாலேயே சகல

பாவங்களையும் போக்கி விடும் என்று நம்பப்பட்டதால் பாவநாசினி என்று அழைக்கப்பட்டது அந்த நதி. மலையிலிருந்து அது இறங்கிய வேகத்தில் இருகரைகளிலும் வனங்களையும் சோலைகளையும் சிருஷ்டித்தபடி கீழ்த் திசையை நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. கருடன் தவம் புரிந்து பெரிய திருவடியாகும் பாக்கியத்தைப் பெற்றதால் கருடாசலம் என்றும், "சென்று காண்பதற்கரிய சிங்கவேள் குன்றம்" என திருமங்கை மன்னனால் மங்களா சாசனம் செய்யப்பட்டதும், கோபில மகரிஷி தவம் புரிந்து பரமபதத்தை அடைந்ததால் அகோபிலம் என்றும் அழைக்கப்பட்ட இடத்துக்கு மக்கள் நடந்தும், மாட்டு வண்டிகளிலும் சென்று கொண்டிருந்தனர். அந்தக் கூட்டங்களில் தமிழரும் தெலுங்கரும் மட்டுமின்றி வட நாட்டவரும், சீனரும், கடாரத்தவரும் கூடத் தென்பட்டனர். அயல் நாட்டவரும் கூட அந்த சிங்கவேள் குன்றத்தை நாடி வரத் தகுந்த காரணமிருக்கவே செய்தது.

பல நாட்டுப் பொற்காசுகள் குவிந்ததால் கனகபுரியென்றும் பிற்காலத்தில் மோட்டுப் பள்ளியென்றும் அழைக்கப்பட்ட வணிகத்தலம் அகோபிலத்திற்குச் சில காதங்களே தள்ளியிருந்தது ஒரு காரணம். சிங்கவேள் குன்றத்துப் பெருமாளை வந்து வணங்கிவிட்டுத் தொடங்கும் வணிகம் இரு மடங்கு லாபத்தைப் பெற்றுத் தரும் என்ற நம்பிக்கை இன்னொரு காரணம்.

மலையை நோக்கி நடந்து கொண்டிருந்த வணிகர் கூட்டமொன்றில் அவர்களுடன் சகஜமாக சிரித்து உரையாடியபடியே வந்து கொண்டிருந்தான் ஒரு வாலிபன். அவனது அகன்ற நெற்றியையும் கூர் விழிகளையும் முகத்தில் தெரிந்த ராஜகளையையும், இளம் மல்லனைப் போன்ற கம்பீரமான உருவத்தையும் கவனித்த வணிகர்கள், அவனிடம் தனியானதொரு மதிப்பையும் அன்பையும் காட்டிப் பேசியபடி வந்து கொண்டிருந்தனர். அவனது வேக நடைக்கு ஈடு கொடுத்து உடன் வந்து கொண்டிருந்தார் சீனத்து முதிய வணிகர் ஒருவர். வெண் மேகத்தைப் பிய்த்து ஒட்டவைத்தது போலிருந்த தலை முடியும் நீண்ட தாடியும் முதுமையைக் காட்டினாலும், உறுதியான உடலமைப்பும் அந்த முதியவரின் தீட்சண்யமான விழிகளும் அவர் முதுமைத் தோற்றத்திற்கு மாறாகவே இருந்தன. அந்த வாலிபனை நெருங்கிய முதியவர் அவனைப் பற்றி விசாரிக்கவும் தொடங்கினார்.

"தம்பி, இந்த மலைக்கு முதன்முறையாக வருகிறாயா?"

"இல்லை முதியவரே. பலமுறை வந்திருக்கிறேன். ஆனால் இம்முறை வந்திருப்பதில் கொஞ்சம் விசேஷமிருக்கிறது" என்றான் வாலிபன்.

"என்ன விசேஷம்?"

"முதியவரே, கல்விக்காகவும், பயிற்சிக்காகவும் தமிழகம் சென்ற நான் நான்கு ஆண்டுகளுக்குப் பின் திரும்புகிறேன். எங்கள் குல வழக்கப்படி இங்கு வந்து சிங்கவேளை சேவித்த பின்னரே எனது நாட்டுக்குத் திரும்ப வேண்டும்."

"தமிழகத்தில் யாரிடம் பயிற்சி பெறச் சென்றாய்?"

"ஆரியச் சக்கரவர்த்தி கிருஷ்ணமல்லரிடம்" என்ற வாலிபனை ஒரு முறை ஏறிட்ட சீனத்து முதியவர், ஏதோ புரிந்ததற்கடையாளமாகத் தலையசைத்துக் கொண்டார். அடுத்து அந்த சீனத்து முதியவரிடமிருந்து வந்த கேள்வி அந்த வாலிபனின் வேக நடையை சட்டென்று நிறுத்தவும் செய்தது.

"தம்பி, நீ யாதவ நாட்டைச் சேர்ந்தவன் தானே?" என்று கேட்ட சீனத்து முதியவரை வியப்புடன் ஏறிட்ட வாலிபன் ஏதோ கேட்பதற்கு முயன்றான், ஆனால் அவனிடமிருந்து சொற்கள் ஏதும் வெளிவரும் முன் நெருங்கிவிட்ட மலையடிவாரத்திலிருந்து எழுந்த கூச்சல் அவனது கவனத்தைத் திருப்பியது.

**ம**லையின் உச்சியை நோக்கி ஏறிய படிகளில் நின்றிருந்த காகதீய வீரர்கள், வணிகர்



"நமக்கு இல்லாட்டாலும் போகட்டும், மாட்டுக்குத் தண்ணி காட்டுங்கன்னு சொன்னேனே, கேட்டீங்களா?"

"என்னாச்சு?"

"பால் பவுடரா கறக்குதுங்க!"

— ஆர். வசந்தகுமார்

---

களையும் மக்களையும் மேலே செல்லவிடாமல் தடுத்து நிறுத்தியிருக்க, பெரும் வாக்குவாத மொன்றும் நடந்து கொண்டிருந்தது அங்கே. அந்தக் காட்சியால் புருவங்களை சுருக்கிய வாலிபன், தன் அகன்ற தோள்களை ஒருமுறை குலுக்கியபடி வீரர்களை நோக்கி விரைந்தான். அதே வேகத்தில் வணிகர்களை விலக்கி முன் னால் வந்தது மட்டுமின்றி வீரர்களைக் கடந்து படிகளில் ஏறவும் முற்பட்டான்.

வீரர் தலைவனின் நீண்ட வாள் உறையி லிருந்து வெளிப்பட்டு வாலிபனைத் தடுத்தது. "இப்போது மேலே செல்லக் கூடாது" என்ற உத்தரவும் பிறந்தது வீரர் தலைவனிடமிருந்து.

வீரர் தலைவனையும் பின்னால் நின்ற இருபதுக்கும் குறையாத வீரர்களையும் நோக்கி அலட்சியப்பார்வையொன்றை வீசிய வாலிபன், "ஏன் செல்லக்கூடாது?" என்று ஒரு கேள்வியையும் எழுப்பினான்.

"உன்னிடம் காரணத்த விளக்க வேண்டிய அவசியமில்லை. யாரையும் மேலே செல்ல அனுமதிக்கக் கூடாதென்று உத்தரவு. அவ் வளவே!" என்றான் வீரர் தலைவன்.

வாலிபனின் கண்கள், வீரர் தலைவனைச் சுட்டுவிடுவது போல் பார்த்தன. "யார் உத் தரவு?" கேள்வியும் உஷ்ணத்துடன் வந்தது.

"சொல்ல உத்தரவில்லை" என்ற வீரர் தலை வனை இடித்துத் தள்ளாத குறையாக விலக்கிய வாலிபன், இரண்டு படிகளைக் கடந்து ஏறி னான்.

அடுத்து வீரர் தலைவன் வாள் மட்டுமின்றி உடன் நின்ற வீரர் நால்வரது வாட்களும் ஏக காலத்தில் வாலிபனின் கழுத்தல் பதிந்தன.

வாட்கள் பதிந்த மறு கணம் வாலிபன் விழிகளிலிருந்த உஷ்ணம் மறைந்து பெரும் நிதானம் அவற்றில் படர்ந்தது. அதே நிலையில் வீரர் தலைவனை நோக்கித் திரும்பியவன், "வீரர் தலைவனே! தகுந்த காரணமின்றி, ஆண்டவனை சேவிக்கச் செல்லும் அடியார் களைத் தடுக்கும் உரிமையை உனக்கு யார் அளித்தது?" என்றான்.

வாலிபனின் முகத்தில் திடீரெனப் படர்ந்த நிதானமும் அவன் நின்ற தோரணையும் அவன் கேள்வியை வீசிய விதமும் வீரர் தலைவனைச் சற்று அசர அடித்ததால், சிறிது நிதானித்து விட்டுக் கூறினான்: "வாலிபனே, இளவரசியார் வந்து கொண்டிருகிறார். அவர் வந்த பின் நீங்கள் அனைவருமே செல்லலாம். சற்றுப் பொறு."

வாலிபனின் பதில் அலட்சியமாக வந்தது. "ஆண்டவன் சன்னிதியில் இளவரசியும் ஒன்று தான். இந்த ஏழையும் ஒன்றுதான். எங்களைத் தடுக்காதே" என்றான் வாலிபன். உடன் வந்த வணிகர் கூட்டமும் வாலிபனுக்கு ஆதரவாகக் கூச்சலிட ஆரம்பித்தது. வீரர் தலைவனை ஒரு முறை உற்றுப் பார்த்த வாலிபன், தொடர்ந்து படிகளில் ஏற ஆரம்பித்தான்.

அடுத்து நிகழ்ந்தது, பிரளயம்! கழுத்தில் பதிந்திருந்த வாட்களை வெகு அலட்சியமாகத் தட்டிவிட்ட வாலிபனின் கரம் நீண்டு வீரர் தலைவனின் தோளைப் பற்றியது. பற்றிய வேகத்தில் ஒரு சுழற்றலில் அவனைப் படி களின் ஓரங்களை நோக்கிப் பறந்து சென்று விழ வைத்தது!

அருகில் நின்று வாளை உயர்த்திய மற் றொரு வீரனின் கரம், பலமாகப் பற்றப்பட்டு எதிரிப்புறமாகத் திருப்பப்பட்டு, 'மளுக்'கென்ற ஓசையும் எழுந்தது. அடுத்த வீரனும் திடீ ரென்று ஆகாயத்தில் பறந்து வணிகர் கூட்டத்தை நோக்கி ஜிவ்வென்று இறங்கினான்.

மற்ற வீரர்கள் வாட்களை உருவிக் கொண்டு எச்சரிக்கையுடன் வாலிபனைச் சூழ முற்பட்டனர். வாலிபனும் தன்னைச் சூழ்ந்து கொள்ள முற்பட்ட வீரர்களை ஏதோ ஓடிவரும் ஆட்டுக்குட்டிகளை ஆசையுடன் எதிர் நோக் கும் வேங்கையைப் போல ஒரு பார்வை பார்த்து விட்டு, தனது கரங்களை உயர்த்தி னான்.

அதே நிலை நீடித்திருந்தால் சிங்கவேள் குன்றத்தின் திருப்பங்களில் என்ன நிகழ்ந்திருக் குமோ தெரியாது!

ஆனால் "நிறுத்து!" என்று அதிகாரத்துடன் பலமாக ஒலித்த குரலொன்று அனைவரையும் உறைய வைத்தது. திரும்பிய வாலிபனின் எதிரில், மேலிருந்து வளைந்து திரும்பி இறங்கிய படிகளில், இடையில் பதித்த கரங்களுடனும் கனல் பறந்த விழிகளுடனும் வெகு உக்கிரத் துடன் நின்றிருந்தாள் காகதீய இளவரசி ருத் ராம்பாள்!

(தொடரும்)

# KGC காசி சேமிப்புத் திட்டம் KGC

அ) மாதம் ரூ.200/- வீதம் 25 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.5,500/- மொத்தமாக உடனே பெறலாம். மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 25 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 25வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.5,500/ மொத்தமாக பெறலாம்.

ஆ) மாதம் ரூ.200/- வீதம் 45 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.10,000/- மொத்தமாக உடனே பெறலாம். மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 45 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 45வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.10,000/- மொத்தமாக பெறலாம்.

**எங்களிடம் வைப்பு நிதி செய்பவர்களுக்கு**




**நான்கு**
**பொன்னான சேமிப்பு திட்டங்களில் சேர்ந்து**




1 கிராம் தங்க நாணயம் + 3% ஊக்கத்தொகை வழங்குகிறோம்

**இலட்சம் மதிப்புள்ள பரிசுகளை வெல்வீர்!**

**குறைந்தபட்ச முதலீடு ரூ.10,000/- அதற்குமேல் ரூ.1000/- மடங்குகளில். தங்க நாணய சிறப்பு சலுகை 10.6.96 வரை மட்டுமே.**

## காசி ரொக்கப் பத்திர திட்டம் :

*அ) ரூ.862/-ஐ 12 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 12-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். ஆ) ரூ.640/-ஐ 36 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 36-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். இ) ரூ.475/-ஐ 60 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 60-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். இத்திட்டத்தின்படி குறைந்த முதலீடு செய்து குறுகிய காலத்தில் அதிக லாபம் பெறலாம். இப்பத்திரத்தினை தங்களது அன்பானவர்களுக்கு பரிசாகவும் அளிக்கலாம்.*

## காசி ரெக்கரிங் டெபாஸிட் திட்டம்

| குறைந்தபட்ச தொகை ரூ. | மாதங்கள் | முதிர்வுத் தொகை ரூ. |
|---|---|---|
| 100 | 12 | 1.302/- |
| | 24 | 2.184/- |
| | 36 | 4.568/- |
| | 48 | 6.604/- |
| | 60 | 8.968/- |

## காசி பென்ஷன் திட்டம்

| மாதத் தவணை | வருடங்கள் | முதிர்வுத் தொகை ரூ. | பென்சன் தொகை ரூ. |
|---|---|---|---|
| ரூ50 | 10 | 13.932/- | 175/- |
| ரூ.100 | 10 | 27.866/- | 350/- |
| ரூ.200 | 10 | 55.731/- | 700/- |
| ரூ500 | 10 | 1.39.328/- | 1.750/- |
| ரூ 1.000 | 10 | 2.78.657/- | 3.488/- |




**காசி பைனான்ஸ் & இன்வெஸ்மெண்ட்ஸ்**
**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.**

ஞாயிறு அலுவலகம் உண்டு

**தலைமை அலுவலகம்** : 91-92, ஜவஹர்லால் நேரு சாலை, காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ், அசோக் நகர், சென்னை - 600 083. போன் : 4822206, 4825506, 4821969, 4896409, 4896373 பேக்ஸ் : 044 4825606. **கிளைகள் சென்னை : சைதாப்பேட்டை** : 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 456464 **மைலாப்பூர்** : 140, முதல் மாடி, ஷாப் எண் 19 சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், ராயபேட்டை ஹை ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 04. **திருவான்மியூர்** : ஷாப் எண் 10, சிவம் ஆர்கேடு, எண்-64, எல்.பி.ரோடு, திருவான்மியூர், சென்னை-600 041. **அம்பத்தூர்** : எண் 11, சப்தகிரி ஃபிளாட், எம்.டி.எச்.ரோடு, அம்பத்தூர், சென்னை-600 053. போன் : 682592. **திருச்சி** : 5/B, 25, ஜென்னி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்மெண்ட், திருச்சி-621 001. போன் : 466003 32B/2, 3வது மாடி, வில்லியம்ஸ் ரோடு, டாப் காம்ப்ளக்ஸ், மூன்றாவது மாடி, கன்டோன்மெண்ட், திருச்சி-1. போன் . 466002 **மதுரை** : 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் (சக்தி சிவம் தியேட்டர் எதிரில்) மதுரை-625 001. போன் : 541190. **கோவை** : ஒப்லி டவர்ஸ், 594/4, டி.பி ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002. போன் : 444656. **பெங்களூர்** : 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஒலிகா காம்பளக்ஸ், சம்பைக் ரோடு, (8வது குறுக்குத் தெரு அருகில்) மல்லீஸ்வரம்-3 போன்: 3363351 1532, 26வது மெயின், 9வது பிளாக், பெனிஸ் பேக்கரி மாடியில், ஜெயநகர், பெங்களூர்-560 041. போன் : 6652480. **மைசூர்** : 20, முதல் மாடி, தேவராஜ ஆர்ஸ் சாலை, மைசூர்-570 001. போன் ; 35997 **குண்டூர்** : 4-8-14 மெயின் ரோடு, கொர்ட்டிபாடு, குண்டூர் 522007. போன் ; 355257. **மும்பாய்** : எண் 203A, ஸ்ரீராம் தர்ஷன், (கீழ்த்தளம்) (opp) பவாமோட்டர்ஸ் சியான் மெயின் ரோடு, சியான் (கிழக்கு) மும்பாய்-22 போன் : 4079414, 4079466. **DUBAI** NADA AL ZUHOOR TRADING EST, P.BOX NO. 27957 DUBAI : UAE. TEL : 247970 INTERCODE 00971/40 FAX : 247980



## 23. கோபப் புயல்!

ருத்ராம்பாளின் வருகை, விபரீதத்தைச் சற்று தாமதப்படுத்தியது.

காகதீய மன்னன் அவளை அசல் ஆணாகவே வளர்த்திருந்தான் என்பதை வீரர்களுக்கான உடையும், பாதுகாப்புக்கான மெல்லிய இரும்பு வலையும், இடையிலிருந்து நீண்ட வாளும் நிரூபித்துக் கொண்டிருக்க, அவள் குரல் மீண்டும் உக்கிரமாக ஒலித்தது:

"யாரிவன்? என்ன நடக்கிறது இங்கே?"

பதில் வாலிபனிடமிருந்து வந்தது. "இளவரசியார் மற்றவர்களை சற்று மரியாதையுடன் அழைப்பது நல்லது. மக்களை மதிக்கத் தெரியாத மன்னனோ, அரசோ அதிக நாட்கள் நிலைத்ததில்லை" என்றான் வாலிபன்.

'ருத்ரமகாதேவன்' என்று ஆண் பெயரைப் புனைந்து கொண்டிருந்த ருத்ராம்பாளின் விழிகள் அந்த வாலிபனை ஒருகணம் வெறித்தன.

"ருத்ராம்பாளுக்குப் புத்திமதி கூறுமளவிற்குத் துணிவிருக்கிறதா உனக்கு? யார் நீ?" என்றாள் முன்கோபி என்று நிரூபிக்கும் விதமாக.

"யாதவ கிருஷ்ணன்" - என்று தெளிவாக வந்த வாலிபனின்

தில் இளவரசியை
ட்டுமின்றி சுற்றி
ிருந்த வீரர்களை
ம் வணிகர்களை
ம் கூட அதிர்ச்சிக்
ள்ளாக்கியதால்,
னைவரது விழி
ளும் அந்த வாலி
னை திகைப்
டன் ஏறிட்டன.
வடக்கே
ாளுக்கியரையும்
ாளவத்தையும் மட்டு
ன்றி வட மேற்கிலிருந்த
ரசுகளை அடிபணியச்



செய்தவனும் போசளருக்கும் காகதீயருக்கும் பரம விரோதியுமான யாதவப் பேரரசின் மன்னன் இரண்டாம் ஜெய்துகியின் மகன் யாதவ கிருஷ்ணன்! தன்னந்தனியாக, எந்த முன்னறிவிப்புமின்றி, எதிரிகளின் நாட்டிற்குள் வணிகர்களுடன் வணிகனாக அவன் வரக்கூடும் என்பதை அறவே எதிர்பார்த்திராத ருத்ராம்பாள் சற்று திகைத்துத்தான் போனாள்.

கண நேர சிந்தனை அவன் பயிற்சிக்காகத் தமிழகம் சென்றதை நினைவுபடுத்தியது. அவன் பயிற்சியை முடித்துக் கொண்டு திரும்பிக் கொண்டிருக்கிறான் என்பதையும், திரும்பியதும் இளவரசனாகப் பட்டம் கட்டப்படுவான் என்பதையும், யாதவ மன்னனின கரம் இனனும் பலப் பட்டுவிடுமென்பதையும் புரிந்துகொண்டவளின் முகத்தில், விபரீதச் சாயை

ஒன்று படர்ந்தது. அடுத்து ஒலித்த அவள் உத்தரவைக் கேட்டு வீரர்கள் திகைத்தனர்.

"இவனைப் பிடித்துக் கட்டுங்கள்! யாதவ இளவல் சில காலம் காகதீயர் சிறையில் விருந்தினராக இருக்கட்டும்!" என்றாள் ருத்ராம்பாள்.

அந்த உத்தரவைக் கேட்டு யாதவ கிருஷ்ணன் கூச்சலிடுவானென்றோ தப்ப முயல்வானென்றோ எதிர்பார்த்த காகதீய இளவரசி ஏமாந்தே போனாள். சற்று முன்பாக அனல் பறந்த விழிகளுடன் வீரர்களைப் பந்தாடிய அவன் முகம் அசாதாரண அமைதியைக் காட்டியது. அதே பயங்கர அமைதி குரலிலும் ஒலிக்க, அவளைப் பெயரிட்டு ஏக வசனத்தில் அழைத்தவன், "ருத்ரா! ஆண்டவனை சேவிக்க வரும் அடியவர்களிடம் காட்ட வேண்டிய மரியாதையையோ, எதிரியானாலும் வேற்று நாட்டு இளவரசனுக்கு அளிக்க வேண்டிய மதிப்பையோ விடுத்து, தனியாக வந்திருப்பவனை சிறை செய்வது தர்மமல்ல. நான் மேலே சென்று சிங்கவேளை சேவித்துத் திரும்புகிறேன். பிறகு வேண்டுமானால் என்னைச் சிறை செய்து கொள்" என்றான்.

ருத்ராம்பாளின் பதில் வெகு அலட்சியமாக வந்தது: "உனக்குக் காட்ட வேண்டிய மரியாதையை சிறையில் வந்து காட்டுகிறேன்" என்றவள், வீரர்களை நோக்கி, "ஏன் நிற்கிறீர்கள் இன்னும்? அவன் கரங்களைப் பின்புறமாகக் கட்டிப் புரவியில் ஏற்றுங்கள்!" என்றும் உத்தரவிட்டாள்.

'பட்டமேற்குமுன்பாக ஆண்டவனை சேவிக்கும் பாக்கியம் கிட்டாமற் போனாலும், அவன் சன்னிதிக்குச் செல்லும் படிகளில் குருதியைப் படரவிடுவது பாவம்' என்ற எண்ணம் எழுந்ததால் மௌனமாகவே நின்ற யாதவ இளவலின் கரங்கள் கட்டப்பட்டன. புரவியொன்றில் அவன் ஏற்றப்பட்டான். இலேசான வருத்தக் குறி படர்ந்த முகத்துடன் அந்த கருடாசல மலையை நோக்கி தலையைத் தாழ்த்தி பிரார்த்தித்தவன், அவனை அதுவரை அழைத்து வந்த வணிகர்களையும் நோக்கி ஒரு முறை விடைபெறும் பாவனையில் வணங்கினான். அவன் விழிகளில் அந்தக் கூட்டத்திலிருந்த சீனத்து முதியவன் மட்டும் தென்படவில்லை.

சுற்றிலும் வந்து கொண்டிருந்த வீரர்களையும், புரவியில் முன்னால் சென்ற ருத்ரமகாதேவியையும், பயணித்த பாதையையும் கவனித்தபடியே வந்தான். சிங்கவேளை சேவிக்க வேண்டுமென்ற அவன் எண்ணம் நிறைவேறாதது குறித்து அவன் மனத்தில் வருத்தமிருக்கவே செய்தது. ஆனால் அதற்கும் தகுந்த காரணம் அந்த வைகுந்தன் அறிந்திருக்க வேண்டும் என்ற நம்பிக்கை அவன் வருத்தத்தை மெள்ளத் துடைக்கவும் செய்தது.

## அருள்வாக்கு

ஒரு விறகுக் கட்டு இருந்து, அதைச் [...] போட்ட கயிற்றுக்கட்டு முடிச்சு அவிழ்க்க[...] யாமல் ஆனால் என்ன செய்வார்கள் தெரி[...] கட்டு தளர்வதற்கு முதலில் கட்டிய கயிற்[...] இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் [...] மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வா[...] 'கட்டுப் போட்ட மாதிரி' தானே ஒழிய, மு[...] போட்டுக் கட்டியே விடமாட்டார்கள். இந்த [...] கத்தில் முதலில் முடிச்சுப் போட்டுக் கட்டின [...] லூஸாகிவிடும். அதை எடுத்துப் போட்டு விட[...] அப்புறம், கட்டினமாதிரி, ஆனால் கட்டியே வி[...] சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எ[...] விட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டுவி[...] இதே மாதிரி மனஸின் க்ருத்ரிமத்தில் பல [...] ஸான கார்யங்களால் மணி முடிச்சாகக் க[...] போட்டுக் கொண்டு ஸம்ஸார பந்தத்[...] கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, "சா[...] கர்மா" என்று கட்டு மாதிரி உள்ளதைப் போ[...] கொள்ள வேண்டும். கன்னாபின்னா கட்[...]

ஆனால் காகதீய இளவரசியின் எண்ணம் வேறு விதமாக இருந்தது. வடக்கே அச்சுறுத்திக் கொண்டிருக்கும் யாதவ மன்னனைப் பணிய வைக்கவே தன்னிடம் யாதவ இளவலைச் சிக்க வைத்திருக்கிறான் அந்த ஆண்டவன் என்று எண்ணினாள் அவள்!

உண்மையின் அந்த வைகுந்தனின் சித்தம் என்னவென்பதை இருவருமே அறிந்திருக்கவில்லை!

பவநாசினி நதியை நோக்கிச் சென்ற பாதையில் நதியை நெருங்க நெருங்க, மரங்கள் அடர்ந்து கொண்டே வருவதை கவனித்த இளவல், தப்பிக்கும் மார்க்கமேதும் தென்படுகிறதா என்று உற்றுக் கவனித்தபடியே வந்தான். சலசலவென்று ஓடிய நதி தன் நிலையைக் கண்டு சிரிப்பதாகவே பட்டது அவனுக்கு. நதியைக் கடப்பதற்கு அமைக்கப்பட்டிருந்த மரப்பாலத்தில் தட்தட்டென்று ஒலியெழும்பச் சென்ற புரவிகள் சட்டென்று நின்றன. இளவரசி நின்றதைக் கவனித்து, குதித்து இறங்கி முன்னால் சென்ற வீரர் தலைவனும் உடன் இறங்கிச் சென்ற வீரர் நால்வரும் கூட எதிரே தெரிந்த காட்சியைக் கண்டு திகைத்தனர்.

பாலத்தை மறுகரையுடன் இணைத்த பலகைகள் நீக்கப்பட்டு, கீழே நதியின் பிரவாகம் அவர்களைக் கண்டு நகைத்தபடியே ஓடிக் கொண்டிருந்தது! பக்கப் பலகைகளும் துண்டிக்கப்பட்டு, ஒரு பக்கத்து அடிக்கட்டையொன்று மட்டும் விளிம்பில் நின்றபடி பாலத்தை ஊசலாட வைத்துக் கொண்டிருந்தது. அதன் நுனியில் கட்டப்பட்டிருந்த



இல்லாமல் சாஸ்த்ர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்ம ரூபமாக அநேக கார்யங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈச்வரனே போட்ட ரூல்கள் இவை. நம் ஸ்வந்த ஆசையின் மேலே கன்னாபின்னா என்று காரியங்கள் பண்ணிப் பண்ணி முடிச்சாக்ப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு, இந்த ஸ்வதர்ம கர்மக் கட்டுதான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல. கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்து கொண்டால் சாஸ்த்ர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங்கூடத் தப்பாமல் ஸந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

நீண்ட கயிறு ஒன்றும் எதிர்க்கரையிலிருந்த பெரும் மரத்தை நோக்கிச் சென்றிருந்தது.

"பாலத்தை இப்படி துண்டித்தது யார்?" உக்கிரமான குரலில் ஒலித்த கேள்வியுடன் புரவியை விட்டு இறங்க முற்பட்டாள் ருத்ரமகாதேவி. அவள் கேள்வி முடியும் முன்னர் காற்றில் விர்விர்ரென்ற ஒலிகள் எழுந்தன. அடுத்த கணம், வீரர் தலைவனும் உடன் வந்து பாலத்தின் விளிம்பில் நின்ற நான்கு வீரர்களும் மார்பில் பாய்ந்த அம்புகளுடன் உருண்டனர்.

எதிர்க்கரையிலிருந்து பலமாக ஒலித்தது ஒரு குரல். "இளவரசி! அப்படியே நில்லுங்கள். அசையும் எவர் உயிரும் அடுத்த வினாடி மேலே பறந்துவிடும்!"

எதிர்க்கரையில் வீரர்கள், குறைந்தது பதின்மராவது இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் கனல் கக்கிய விழிகளை உயர்த்திய இளவரசி திகைத்தாள். பெரும் மரமொன்றின் அடியில் ஒரே ஒரு சீனத்து முதியவன் தனித்து நின்றிருந்தான். வெண்பஞ்சு போன்ற தலை முடியும் நீண்ட தாடியும் காற்றில் அலைபாய நின்ற அந்த சீனன் கரத்திலிருந்தது விசித்திரமான ஒரு வில். 'ப' கர வடிவத்திலிருந்த அந்த நீண்ட வில்லில் ஐந்து கணைகள் தெரிந்தன. அந்தக் கணைகளில் கூர்மையான எஃகு முனைகள்! அந்த முனைகளைக் காட்டிலும் கூர்மையாக மீண்டும் ஒலித்தது அவன் குரல். "இளவரசி, இந்த சீனத்து வில் ஒரே சமயத்தில் ஐந்து பேரை அழிக்க வல்லது. உங்கள் அனைவரையும் அழிக்க இதற்கு இன்னும் நான்கு வினாடிகள் போதுமானது. பரீட்சிக்க விரும்பினால் நிற்கும் இடத்தை விட்டு நகரலாம்" என்றான் அந்த முதியவன்.

அதுவரை அப்படியொரு விசித்திரமான ஆயுதத்தைக் கண்டிராத இளவரசி அந்த வில்லை சீனத்து முதியவன் பிடித்திருந்த லாகவத்தையும், பாலத்தில் உருண்டு விழுந்துவிட்ட வீரர்களின் சடலங்களையும் கண்டு அவன் மிரட்டல் வெறும் போலியல்ல என்பதையும் புரிந்து கொண்டாள். பாலத்தின் விளிம்பில் நிற்கும் தானும் தனது வீரர்களும் மரத்தின் மறைவில் நிற்பவனுக்குச் சரியான இலக்கு என்பதை உணர்ந்து, செய்வதறியாது பிரமித்து நின்றாள்.

மீண்டும் ஒலித்தது சீனத்து முதியவனின் குரல்: "யாதவ கிருஷ்ணா! ஏன் மலைத்து நிற்கிறாய்? புரவியை விட்டு இறங்கி வந்துவிடு!" என்றவன், சற்று முன்னால் நகர்ந்து வீரர்களும் இளவரசியும் நேர்ப் பார்வையில் படும்படி நின்றான்.

புரவியின் மீதிருந்து குதித்து இறங்கிய யாதவ இளவல் பாலத்தின் அடிக் கட்டையில் ஒரு கால் பதித்து, ஒரே தாவலில் மறுகரையை அடைந்து முதியவரை நெருங்கினான். வீரர்களையும் இளவரசியையும் விட்டு பார்வையை விலக்காத முதியவரின் உத்தரவு மீண்டும் ஒலித்தது: "யாதவ கிருஷ்ணா, அதோ அந்த மரத்திலிருந்து தொங்கும் கயிற்றைப் பலமாக இழுத்துவிடு!" என்று.

முதியவனின் உத்தேசம் இன்னதென்பதைப் புரிந்து கொண்ட யாதவ இளவல், ஒரே பாய்ச்சலில் மரத்தை அடைந்து கட்டுண்ட கரங்களை லாகவமாய்ப் பயன்படுத்தி, கயிற்றைப் பிடித்து பலங்கொண்ட மட்டும் உலுக்கி இழுத்தான். அடுத்த கணம் விளிம்பில் ஊசலாடிக் கொண்டிருந்த பாலத்தின் அடிக்கட்டை விலகி, மரப்பாலம் மளமளவென்ற ஓசையுடன் அதில் நிற்பவர்களையும் சேர்த்துக் கொண்டு நதியை நோக்கி இறங்கியது. புரவிகளின் கனைப்பொலிகளும் வீரர்களின் கூக்குரல்களும் சேர்ந்து ஒலித்தன.

யாதவ இளவலின் கட்டுக்களைக் குறுவாளால் அறுத்து எறிந்த முதியவன், மரங்களின் மறைவிலிருந்த புரவிகளை நோக்கி நடந்தான். அந்த சீனத்து வில்லை இரண்டு பக்கங்களிலும் மடக்கி நீண்ட துணிப்பைக்குள் அடைத்து, புரவியொன்றின் பக்கவாட்டில் தொங்க விட்டான். பாதையை விடுத்து பக்கங்களில் தெரிந்த மரக்கூட்டங்களினூடே நேர் வடக்கில் புரவியைப் பாய விட்டான். தொடர்ந்து சென்ற யாதவ இளவல் தூரத்தே தெரிந்த அடர்ந்த வனத்தைக் கண்டு இனி இளவரசியும் அவள் வீரர்களும் நதியிலிருந்து வெளியேறி வந்தாலும் தங்களைப் பிடிப்பது குதிரைக் கொம்புதான்



"வெயில் தாங்கமாட்டாம நிறைய கூல் டிரிங்க்ஸ் குடிச்சேன் டாக்டர்!"
— கிச்சா

என்பதைப் புரிந்து கொண்டான்.

தன்னந்தனியே வந்து அந்த விசித்திரமான சீனத்து வில்லின் உதவியோடு தன்னை எளிதாக மீட்ட அந்த சீனத்து முதியவர் நிச்சயம் அசாதாரணமான வீரர் என்பதையும் அவர் தோற்றமும் கூட ஒரு வேடமாகவே இருக்க வேண்டும் என்பதையும் யூகித்த இளவல், புரவியை அவருக்கு நெருக்கமாகச் செல்லவிட்டபடியே, "சீனத்து முதியவரே, தாங்கள் யார்?" என்று வினவினான்.

அந்த சீனத்து முதியவனின் பதில் நிதானமாக வந்தது, "உனது ஆசான் ஆரியச் சக்கரவர்த்தி கிருஷ்ணமல்லரின் நெருங்கிய நண்பன். பெயர் யாங்சின்..." என்று.

யாதவ இளவல் பிரமித்தான். அந்தப் பெயரைப் பலமுறை பாண்டிய நாட்டிலிருந்த போதே கேட்டிருந்தான். ஓரிருமுறை பார்த்தும் கூட இருக்கிறான். தான் பார்த்திருந்த அந்த மனிதருக்கும் தற்போது எதிரில் அனாயாசமாகப் புரவியிலமர்ந்து முதியவன் கோலத்தில் சென்று கொண்டிருந்த மனிதனுக்கும் சம்பந்தமேயில்லாதது போலத் தோன்றினாலும் மெள்ள மெள்ள நினைவு படுத்திக் கொண்டவனுக்குப் பல ஒற்றுமைகள் புலப்பட்டன.

"தாங்கள் போசள சிங்கணனிடம் சிறைப்பட்டிருந்ததாக...."

"ஆம். உண்மைதான். ஆனால் மாறன் அமுதனார் உத்தரவின்படி அங்கிருந்து வெளியேறியது முதல் உன் தந்தை யாதவ மன்னரிடம் சென்று சேர்ந்தேன். பயிற்சி முடிந்து நீ திரும்புவதையும், சிங்கவேளை சேவித்துவிட்டு நீ வரப் போவதையும் கூறி உன்னைப் பாதுகாத்து அழைத்து வரவும் பணித்தார் உன் தந்தை" என்றார் யாங்சின்.

யாங்சின் கூறிய பெயர்களும் நடந்த சம்பவங்களும் அவை கச்சிதமாகத் திட்டமிட்டு நிறைவேறியுள்ள விதமும் ஏதோ பெரும் திட்டமொன்றின் முன்னோடியென்பதை யாதவ இளவலுக்குப் புரிய வைத்தன.

இரு புரவிகளும் யாதவ எல்லையை நோக்கி விரைந்து கொண்டிருந்தன.

காகதீயரின் இரண்டாவது தலைநகரமாக இருந்ததும் கிழக்குக் கடற்கரையில் முக்கியத் துறைமுகமாக விளங்கியதுமான நெல்லூர் புரத்துக் கோட்டை அமளி துமளிப்பட்டுக் கொண்டிருந்தது. பவநாசினி நதியில் கட்டாய ஸ்நானம் செய்து வைக்கப்பட்டு பாவங்களையும் கையில் சிக்கிய யாதவ இளவலையும் தொலைத்து விட்ட ருத்ராம்பாள் அசல் ருத்ர தேவியாகவே கோட்டைக்குத் திரும்பியிருந்தாள்!

கரையேறியதும் உடன் நதியில் விழுந்து எழுந்து வந்த வீரர்களை யாதவ இளவலைத் தொடர்ந்து செல்ல உத்தரவிட்டவள், தனியாகவே கோட்டைக்குத் திரும்பியிருந்தாள். புழுதி பறக்கப் புயலாக வந்த அவள் புரவியின் வேகமும், புரவியின் கயிறுகளை வீரர்களை நோக்கி எறிந்துவிட்டு, நிலம் அதிர தட்தட்டென்று அரண்மனைக்குள் நுழைந்தவளின் கோபமும், அதித சினத்தில் சிவந்து கிடந்த அவள் முகமும் ஏதோ விபரீதம் நேர்ந்திருக்கிறதென்பதை அரண்மனை வீரர்களுக்கும் பணியாட்களுக்கும் புரிய வைத்துவிட்டதால் அவளது அறைக்குள் நுழையவோ விசாரிக்கவோ அஞ்சியவர்கள் அச்சத்துடனேயே உலவினார்கள். இளவரசிக்கு உணவுத் தட்டுக்களுடனும் கனிகளுடனும் உள்ளே நுழைந்த பணிப் பெண்கள் இரண்டாவது கணத்தில் அலறியபடி வெளியே ஓடி வந்தார்கள். அவர்கள் கொண்டு சென்ற தட்டுக்களும் கனிகளும் அவர்கள் பின்னால் பறந்து வந்தன. அறைக்குள் பொருட்கள் தடால் தடாலென்று உருளும் ஒலிகளும் தொடர்ந்து ஒலித்தன. வாயிலில் நின்ற காவலர்கள் வேல்களுடன் உயிரையும் கையில் பிடித்தபடி நின்றிருந்தனர்.

அரண்மனையின் கிழக்குப் பகுதியில் ஸ்தானிகளுடன் ஏதோ விவாதித்துக் கொண்டிருந்த காகதீய மன்னனுக்கு இளவரசியின் வருகையும் பணிப் பெண்கள்படும் அவதியும் தெரிவிக்கப்பட்டன.

உடனே அவன் இளவரசியின் அறையிருந்த மேற்கு வளாகத்தை நோக்கி நடந்தான். அவளது அறையை நெருங்க நெருங்க ஏதோ நடந்து முடிந்த போர்க்களத்தைப் பார்வையிடும் உணர்வு வந்தது காகதீய மன்னனுக்கு. மன்னனைக் கண்ட வீரர்களும் பணியாட்களும் ஆறுதல் பெருமூச்சு விட்டுக் கொள்வதும் புரிந்தது அவனுக்கு.

மன்னன் வருகையை அறிவிக்க, இளவரசியின் அறைக்குள் நுழைந்த வீரன் தலை தெறிக்கத் திரும்பி ஓடிவந்தான். அவனைத் தொடர்ந்து உள்ளே நுழைய முற்பட்ட மன்னனை நோக்கி மலர்களை வைக்கும் கனத்த குவளையொன்றும் பறந்து வந்தது வேகமாக.

(தொடரும்)



# "ஐயா தயவுல பிஸினஸ் அபாரம்!"

புது அம்பாசிடர் கார் அந்த வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து பட்டு வேஷ்டி, சட்டை அணிந்த ஒரு பெருத்த, கருத்த உருவம் இறங்கியது. கூடவே, கார் டிரைவர் பழக்கூடைகள் மற்றும் கலர் காகிதம் சுற்றப் பட்ட பேக்கட்டுகளுடன் பின் தொடர்ந்தான்.

வந்தவர் வாசலை அடைந்து கதவைத் தட்டிய தும் "யார் வேணும்" என்று குரல் கொடுத்தபடியே பானு ஓடி வந்தாள். வந்தவள் வாசல் முன் நின்ற பெரிய உருவத் தைப் பார்த்து சற்று மிரண்டு "அம்மா! இங்க வாயேன். யாரோ வந்திருக்கா" என்று இரைந்தாள். பின்கட்டில் வேலையாக இருந்த ஜானகி யும் பானு போட்ட கூச்சலைக் கேட்டு வாசல் பக்கம் விரைந் தாள். வந்தவள் வாசலில் நின்ற பெரிய உருவத்தையும், அவர் கொண்டு வந்திருந்த பொருட் களையும் பார்த்து, இவர்கள் வீடு தெரியாமல் வந்து விட் டார்களோ என்று எண்ணி உங்களுக்கு யாரைப் பார்க் கணும்?" என்று சற்று பதட் டத்துடன் கேட்டாள்.

வந்தவர் ஜானகியின் சந்தேகத்தைப் போக்க எண்ணி, நான் ஹெல்த் ஆபிஸர் சாருக்கு வேண்டப்பட்டவன். சார் இருக்காரா? இல் லன்னா, நீங்க உத்தரவு கொடுத்தால் நான் இருந்து பாத்துட்டுப் போறேன்" என்று பணிவுடன் கேட்டார்.

"சரி, உள்ளே வந்து உட் காருங்க. வந்துடுவார்" என்று சொல்லி பானுவைக் கூப்பிடும் பணியில் உள்ளே சென்றாள் ஜானகி.

சற்று நேரத்திற்கெல்லாம் 'ஹெல்த் ஆபீஸர்' டாக்டர் வெங்கல்ராவ் ஜீப்பில் வந்து இறங்கினார். வீட்டில் நுழைந்த தும் அங்கு அமர்ந்திருந்த பெரிய உருவம் அவரை வணங்கி நிற்பதை சற்றும் எதிர்பார்க்கவில்லை.

"யார் நீங்க? என்ன வேணும்? இதெல்லாம் என்ன?" என்று கேள் விக்கணைகளைத் தொடுத்தார்.

வந்தவர் சற்று அசந்து விட்டாலும் ஒருவாறு சமாளித் துக்கொண்டு "ஐயா வுக்கு என்னை ஒரு வேளை ஞாபகமிருக் காது. நான்தான் "மஸ்கிடெக்ஸ்" கொசுவத்தி தயாரிப்பாளர் மாடசாமி. ஐயாவைப் பார்த்து மரியாதை செய்துட்டுப் போலாமின்னு வந்தேன். ஐயா தயவிலேதான் என் பிசினெஸ் இப்போ அமோகமா நடக்குது. நானும் நல்லபடியா இருக்கேன். ஐயாவின் ஆதரவு எனக்குத் தொடர்ந்து இருக்கணும். என் பிசினஸ் முன்னேற்றத்திற்கே ஐயா ஆதரவு தான் காரணம். அதற்கு நன்றி சொல்லத்தான் தங்களைக் காண வந்தேன்" என்று மிகவும் பணிவாகப் பேசி முடித்தார்.

'ஹெல்த் ஆபீஸர்' வெங் கல்ராவுக்கு "மஸ்கிடெக்ஸ்" உரிமையாளர் மாடசாமி பேசியது புதிராகவே இருந்தது. இந்த ஆளுக்கு எப்போ, எப்படி உதவி செய்தேன். ஏன் இப்படி 'ஐஸ்' வைக்கிறான் என்பது புரியாத புதிராக இருந் தது. தன் சந்தேகத்திற்கு விளக்கம் பெற எண்ணிய வராக, "நீங்கள் சொன்னது எனக்கு ஒண்ணும் புரிய வில்லை. உங்கள் கொசுவத்தி தயாரிப்பு வளர்ச்சில் நான் எந்த வகையில் உதவி செய் தேன்? இப்படி ஒரு தொழில் நீங்கள் ஆரம்பித்து நடத்துவது பற்றியே எனக்கு இப்போ தான் தெரியும். அப்படி இருக்க, நான் உங்கள் பிசின ஸுக்கு ரொம்பவும் உதவிய தாக எப்படிக் கூறுகிறீர்கள்?" என்று சற்று சூடாகவே கேட் டார்.

மாடசாமி விஷயத்தை சற்று விளக்கமாக சொல்ல எண்ணி "பெரியவங்க பெரிய வங்க தான். என்னை இந்த நிலைக்கு ஏற்றிவிட ஏணியாக இருந்தும், அதை ஒரு பெரிசா பண்ணிக்காம பெருந் தன்மையா நீங்க பேசுறது உங்கள் பெரிய மனுஷத் தன்மையைத்தான் காட்டுது சார். நீங்கள் மட்டும் உங்கள் கொசு ஒழிப்புத் திட்டத்தை முறைப்படி செயல்படுத்தி இருந்தால் இந்த ஊரில் கொசுவத்தி பாக்டரியை மூட வேண்டி இருந்திருக்கும். எல்லாம் ஐயா போட்ட பிச்சை. நீங்கள் கொசு ஒழிப்பிற்கு பெரிய திட்டங்கள் போட்டதோடு சைலென்டா இருந்திட்டதால்தான், கொசு உற்பத்தி பெருகி, வேறு வழி இல்லாம ஜனங்க அதற்காக எங்கள் கொசு வத்தியை வாங்க வேண்டிய நிலை வந்தது. எங்களுக்கு வியாபாரம் பெருகியது. இதற்காக உங் களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும். நீங்க நல்லாயிருக்கணும் சார்!"

'ஜிபி'

## 24. கால சர்ப்பம்!

மதங்கொண்ட யானையை அங்குசத்தாலும், காட்டுத் தீயை மழையினாலும், பெண்களின் கோபத்தை அன்புடைய பெற்றோராலும், ஊழ்வினையை எம்பெருமானைச் சரணடைவதன் மூலமாகவும் மெள்ள மெள்ள அடக்க இயலும் என்கிறது ஒரு வடமொழி வாக்கியம். அது எத்தனை உண்மை என்பதை ருத்ராம்பாளின் அறைக்குள் நுழைந்த காகதீய மன்னன் கணபதி அன்று உணர்ந்து கொண்டான்.

அறைக்குள் நுழைந்ததும் எதிர்பாராமல் மன்னனை நோக்கிப் பறந்து வந்தது ஒரு கனத்த குவளை. மின்னல் வேகத்தில் வெளிவந்து தடுத்த மன்னனின் உடைவாளால் பலமாகத் தடுக்கப் பட்டதால் பெரும் ஒலியை எழுப்பியபடி அது தரையில் உருண்டது. அறையின் சாளரத்தினருகில் நின்று உக்கிரமாகத் திரும்பிய இளவரசி, தான் விட்டெறிந்த பொருள் தரையில் உருண்டதையும், சற்றுப் பிசகியிருந்தாலும் அது தன் தந்தையையே தாக்கியிருக்கக் கூடுமென்பதையும் உணர்ந்ததால் சற்றுப் பதற்றத்துடனேயே மன்னனை நெருங்கி அவன் வலிய தோள்களை அணைத்துக் கொண்டாள். "என்னை மன்னித்து விடுங்கள், தந்தையே!'' என்றாள் வருத்தம் தொனித்த குரலில்.

அவளைச் சிறு குழந்தை போல அணைத்து, மெள்ள நடத்தி மஞ்சத்தில் அமரச் செய்த மன்னனின் குரலில் பரிவு ஒலித்தது. "மகளே, கோபம் நம்மைச் சேர்ந்தவர்களை மட்டுமல்ல, நம்மையும் அழித்து



விடும். இத்தனை கோபம் பெண்களுக்கு ஆகாது மகளே!'' என்றவன் வாயிலில் நின்ற வீரனை, கரங்களைத் தட்டியழைத்து, உணவு கொண்டு வரும்படி பணித்தான்.

இளவரசி பதிலேதும் கூறவில்லை. அவள் விழிகள் அறையின் கோலத்தையும், கீழே சிதறிக் கிடந்த பொருட்களையும் வெறித்துக் கிடந்தன. அவள் உடைகள் இன்னும் ஈரம் உலராமலிருப்பதையும் சுருண்ட குழல்கள் நனைந்து கிடப்பதையும் கவனித்தான் மன்னன். அவள் சென்று வந்த இடம் பற்றித் தெரிந்திருந்ததால், எதிர்பாராதவிதமாக அவள் பவநாசினி நதியில் விழுந்திருக்கிறாள் என்பதையும் யூகித்தான். அவள் குழல்களைப் பிணைத்திருந்த பட்டுக் கயிறுகளைப் பிரித்து கூந்தலை காற்றில் உலரவும் விட்டான். இளவரசியின் உஷ்ணம் மெள்ள இறங்கத் தொடங்கியது, அவள் முகத்தில் தெரிந்தது.

உணவுத்தட்டுடன் உள்ளே நுழைந்த பணிப் பெண்ணின் விழிகள், மன்னன் செய்து கொண்டிருந்த பணியைக் கண்டதும் வியப்பை வெளிப்படுத்தின. "பிரபு....'' என்று ஏதோ கூறவந்தவளை பார்வையால் அடக்கிய மன்னன் ஏதும் பேச வேண்டாமென்றும் சைகை செய்தான்.

இளவரசியின் விழிகள் அச்சமும் வியப்பும் கலந்து கிடந்த பணிப் பெண்ணின் முகத்திலும், அவள் கழுத்தில் தென்பட்ட காயத்திலும் சற்று நிலைத்தன. அவள் குரல், "பெண்ணே, வா இங்கே'' என்று கடுமையுடன் அழைத்தது.

மிதமிஞ்சிய அச்சம் முகத்தில் விரவிக் கிடக்க, தன்னை நெருங்கிய பணிப் பெண்ணை நோக்கி அடுத்த உத்தரவும் அதே கடுமையுடன் வந்தது: "அதோ அந்தக் கோடியிலிருக்கும் பேழையைத் திற!''

அறையின் கோடியிலிருந்த பெரும் மரப்பேழையை அணுகி மெள்ள அதைத் திறந்த பணிப் பெண்ணின் விழிகள் அகல விரிந்தன. பொன்னும் மணியும், பவளமும், முத்து மாலைகளும், கற்கள் பதித்த பொன்னாபரணங்களும் அதில் நிறைந்து பளீரிட்டன.

"நீ விரும்புவதை அதிலிருந்து எடுத்துக் கொள். இரு தினங்கள் ஓய்வெடுத்துக் கொண்டபின்பு பணிக்கு வந்தால் போதுமானது. மருத்துவரிடம் சென்று காயத்தை கவனித்துக் கொள். நீ போகலாம்'' என்றாள் இளவரசி. ஒரு கணம் திகைத்த பணிப் பெண், இரு கரங்களிலும் பொன்னாபரணங்களை எடுத்துக் கொண்டு வெளியே விரைந்தாள்.

**ப**ணிப் பெண் வெளியேறியதும் மகளைப் பரிவுடன் நோக்கிய மன்னன், "மகளே, என்ன நேர்ந்தது? உன்னை பவநாசினியில் யார் தள்ளியது?'' என்று வினவினான்.

மன்னனின் யூகத்தை உள்ளுக்குள் வியந்த இளவரசி மெள்ள நிகழ்ந்தவற்றை விளக்கினாள். இடையில் குறுக்கிடாமல் முழுவதும் கேட்ட மன்னன், இறுதியாகக் கூறினான்: "ஆலயத்திற்கு வந்த யாதவ இளவலை நீ சிறை செய்ய முயன்றது தவறுதான் மகளே. ஆனால் அவனைத் தப்பிக்க வைக்க வந்தவன் நிச்சயம் முதியவனுமல்ல, சீனத்து வணிகனுமல்ல'' என்றவனின் விழிகள் சிந்தனையைக் காட்டின. சற்றுக் கழித்து அவன் சொற்களும் சிந்தனையுடனேயே உதிர்ந்தன. "ஐந்து கணைகளுடன் கூடிய போர் வில் என்றா கூறினாய்? அப்படியானால் அவன் யாங்சின்னாகத்தானிருக்க வேண்டும். போசள சிங்கணனிடமிருந்து தப்பியவன் மீண்டும் பாண்டியரை அடையாமல் வடக்கே யாதவ நாட்டை நோக்கிச் செல்கிறானென்றால் அதற்குத் தகுந்த காரணமிருக்க வேண்டும்.''

**ம**ன்னனின் சிந்தனையினூடே வாயிலில் நின்றிருந்த வீரன் குறுக்கிட்டான். உள்ளே தயங்கியபடியே நுழைந்தவன், "பிரபு, சோழ நாட்டிலிருந்து நமது ஒற்றன் வந்திருக்கிறான். தங்களை அவசரமாகக் காண விரும்புகிறான்...'' என்றான்.

உள்ளே நுழைந்து மன்னனையும் இளவரசியையும் சேர்த்தே வணங்கியவனின் புழுதிபடிந்த உடையும், முகத்தில்

விஷ்வக்சேனன்

தெரிந்த களைப்பும் நீண்ட பயணத்திற்குப் பின் நேராக மன்னனைக் காண வந்திருப்பதைத் தெரிவித்தன. முகத்திலும் இலசான பதற்றம் தெரிந்தது. அவன் ஏதோ விரும்பத்தகாத செய்தியுடன் வந்திருப்பதைப் புரிந்து கொண்ட மன்னன், "வீரனே, தயங்க வேண்டாம், கூற வந்ததைக் கூறு!" என்றான்.

"பிரபு, காஞ்சியில் கண்ட கோபாலர் சுதந்திர அரசராகத் தம்மை அறிவித்துக் கொண்டார். நமது படைத் தலைவர்கள் சிலரும் அவருக்குத் துணையாக நிற்கிறார்கள்.

அடங்கத் தொடங்கிய இளவரசியின் உக்கிரம் மீண்டும் எழுந்தது. காலைப் பலமாகத் தரையில் உதைத்து எழுந்தவள், "அத்தனை துணிவு வந்து விட்டதா கண்ட கோபாலனுக்கு?" என்று இரைந்தாள். அவளைக் கையமர்த்திய மன்னன் வீரனை நோக்கி, "மேலே சொல்" என்றான்.

"பிரபு, காஞ்சியின் காவற் படை தவிர இரண்டாயிரம் வீரர் கொண்ட படையும் திரட்டியிருக்கிறார் கண்ட கோபாலன்."

"அவ்வளவுதானா?" மன்னன் குரலில் சந்தேகம் தொனித்தது.

"காளத்தியிலும் மூவாயிரம் வீரர்களைக் கொண்ட பிரிவு ஒன்று, நாம் எதிர்க்க முற்பட்டால், தடுத்து நிறுத்தக் காத்திருக்கிறது."

மன்னனின் வலுவான கரங்கள் பின்புறமாகப் பிணைத்துக் கொண்டன. வல்லூறின் விழிகளைப் போல ஜொலித்த கூர்விழிகள் சாளரத்தின் வழியே எங்கோ வெறித்தன. அடர்ந்த புருவங்கள் ஒன்று கூடி, பலத்த சிந்தனையைக் காட்டின. அவ்ன் சிந்தனையினூடே புகுந்தது இளவரசியின் குரல்: "தந்தையே கண்ட கோபாலனுக்குத் திடீரென இத்தனை துணிவு எங்கிருந்து வந்தது?"

"இது திடீரென ஏற்பட்டதல்ல மகளே, துவக்கத்திலிருந்தே அவன் எண்ணம் சுதந்திரமான மன்னனாவதுதான். அவன் தாயாதி பொத்தப்பி மன்னனால் விரட்டப்பட்டு நம்மிடம் வந்து சேர்ந்தவனை, காஞ்சிக்குப் பிரதிநிதியாக அனுப்பியதுதான் நாம் செய்த தவறு. இப்போது மக்களின் ஆதரவில்லாவிட்டாலும் காஞ்சியில் வணிகர்களும், படைத் தலைவர்களும் ஆதரவாக நிற்பது அவனுக்குத் துணிவை அளித்திருக்கிறது. இந்த நிலையில் நாம் தாக்குதலைத் தொடங்குவது அதிக சேதத்தை ஏற்படுத்தும்" என்றவனின் புத்தியில் ஏதோ பளிச்சிட்டதற்கறிகுறியாக விழிகள் மின்னின. வீரனை நோக்கியவன், "வீரனே! சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் நிலைமை எப்படியிருக்கிறது?" என்றான் வேகத்துடன்.

*"பிரபு, பாண்டியர் கொங்கு நாட்டை முழுவதுமாக வசப்படுத்தி விட்டார்கள். ஆனால் கண்ணனூர்க் கோட்டையில் போசள சிங்கணன் இன்னுமிருக்கிறான்.

மன்னன் விழிகளில் சிந்தனை தீவிரமாக ஓடியது. "சொல் மேலே" என்றான் வீரனை வெறித்துப் பார்த்தபடி.

"சோழ நாட்டை நோக்கி பாண்டியர் படைகள் வரலாம் என்றும் நம்புகிறார்கள். காடவர்கள் மீண்டும் சேதிராயனுடனும் சம்புவரையனுடனும் பாண்டியர் படையெடுப்பை எதிர்பார்த்து, இணைந்திருக்கிறார்கள்.

இளவரசி குறுக்கிட்டாள்: "தந்தையே!"

"சொல் மகளே!"

"நாம் வடக்கில் யாதவரிடமிருந்தும் தாக்குதலை எதிர்பார்க்கிறோம் அல்லவா?"

"ஆம். அதிலும் நீ யாதவ கிருஷ்ணனைச் சிறையெடுக்க முயன்று, அவனும் தப்பியபின்பு போர் நிச்சயம்!"

"நாம் படைகளை வடக்கு எல்லையிலிருந்து திருப்புவது அபாயம் என்கிறீர்கள்.

"ஆம், நிச்சயமாக!"

"அப்படியானாலும் கூட, நம் படைகளை திசை திருப்பாமல் கண்ட கோபாலனை ஒடுக்க வழிகள் இருக்கின்றன தந்தையே" என்றாள் ருத்ராம்பாள்.

"அது என்ன வழி மகளே?" மன்னன் குரலில் வியப்பு தெரிந்தது.

"தந்தையே, பொத்தப்பி மன்னனால் ஆரம்பத்தில் விரட்டப்பட்டவன்தான் இந்த கண்ட கோபாலன் என்றீர்கள்."

"ஆம். பொத்தப்பி மன்னன் மன்மசித்தன் கண்டகோபாலனின் பரம எதிரி!"

"அவனை நாம் உபயோகப்படுத்திக் கொண்டால் என்ன?"

மன்னன் ஒரு கணம் திகைத்தான். "என்ன கூறுகிறாய் மகளே?" என்றான் சற்றுக் கழித்து.

"தந்தையே, நாம் நேரிடையாக கண்ட கோபாலனை இப்போது எதிர்க்க வேண்டாம். அவனும் அவன் படை பலமும் தற்போது பாண்டியரால் ஏற்படும் அபாயத்திலிருந்து நம்மைக் காக்கும் அரண். ஆனால் மன்மசித்தனை சற்றுத் தூண்டி விடுவதும், படை உதவி

* திருவந்திபுரம் கல்வெட்டுக்கள் (Epigraphica India Vol. VII - Page 168.)



நிருபர் : ரொம்ப தீவிரமான யோசனையா இருக்கீங்களே... அடுத்த படத்தைப் பற்றியா?

நடிகை : இல்லை. அடுத்த கணவரைப் பற்றி!

— பி.ஜி.பி. இசக்கி



யளிப்பதும், ஏற்கெனவே இருமுறை கண்ட கோபாலனிடம் தோற்ற மன்மசித்தனுக்குத் துணிவை அளிக்கும். தாயாதிகளின் போரில் எஞ்சியிருப்பவனை நம் பிரதிநிதியாகக் காஞ்சியில் வைத்துக் கொள்வோம். இதனால் நமக்கும் மக்களிடமிருந்தோ வணிகரிடமிருந்தோ எதிர்ப்பேதும் இருக்காது'' என்றாள் இளவரசி.

வேற்று நாட்டை ஆக்கிரமித்திருக்கும் போது, அந்த நாட்டின் உட்பகைகளை அவ்வப் பொழுது வளர்த்தும் தனக்குச் சாதகமானவர் களுக்கு உதவியும், ஒரு கட்டுக்குள் வைத்திருப் பது, ஆட்சியை அங்கு நிரந்தரமாக்கும் வழிகளில் ஒன்று. அர்த்த சாஸ்திரத்தின் இந்த ராஜ தந்திரத்தை அப்படியே செயல்படுத்தும் இளவரசியின் திட்டம் காகதீய மன்னனை பிர மிக்க வைத்ததால், அவள் ஏற்பாட்டுக்கு அப் போதே ஒப்புக் கொண்டான் அவன். உடனடி யாக ஓலையொன்றுடன் படைப் பிரிவு ஒன்றையும் பொத்தப்பிக்கு அனுப்ப உத்தர விட்டான். ஓலையை எழுதி, உபதலைவன் ஒரு வனிடம் எடுத்துச் செல்லப் பணித்தவன் மீண் டும் இளவரசியை நோக்கித் திரும்பி, "மகளே, கண்ட கோபாலனின் நிலை, தெற்கில் போசளரின் நிலையையும், சோழ நாட்டின் நிலையையும் வைத்து மாறுபடவும் செய்யலாம் அல்லவா?'' என்றான்.

''ஆம் தந்தையே! போசள சிங்கணன் கண்ணனூர்க் கோட்டையில் இன்னுமிருக் கிறான். அவனைக் கடந்துதான் பாண்டியர் சோழ நாட்டை அடைய முடியும். எதற்கும் நானே அதைக் கவனித்து உங்களுக்கு அறி விக்கிறேன்'' என்றாள் ருத்ராம்பாள்.

உண்மையில் கண்ணனூர்க் கோட்டை யில் சிங்கணனின் நிலை பெரும் சங்கடத்தில் தான் இருந்தது. கோட்டையின் உச்சியில் நின்று பார்வையை காவிரிக் கரை நோக்கிச் செலுத்தி யவனுக்குக் காற்றில் தலையசைத்த நெற்கதிர் களோ, கூடு திரும்பிக் கொண்டிருந்த பட்சி களின் இன்னிசையோ முதிர்ந்த நெல் மணத் துடன் வீசிக் கொண்டிருந்த மாலைக் காற்றோ சாந்தியை அளிக்கவில்லை. வெகு தூரத்தில் காவிரியின் வடகரையிலிருந்து அவ்வப் பொழுது கிளம்பிய புழுதி மண்டலமும், அவ்வப்பொழுது எதிரொலித்த போர்க்களிறு களின் பிளிறல்களும் அவன் சித்தத்தில் பெரும் சிந்தனையைத் தூண்டியிருந்தன. பாண்டியரின் பாசறையை நெருங்க முயன்ற அவனது வீரர் களை நோக்கி, கரையோரத் தோப்புகளிலிருந்து அம்புகள் பறந்து வந்து அணுகவொட்டாமல் தடுத்து விட்டன. எனவே வீரபாண்டியனின் படைகளைப் பற்றிய விவரமேதும் அறிந்து கொள்ள வாய்ப்புக் கிட்டவில்லை அவனுக்கு.

சிந்தனையில் ஆழ்ந்தபடியே தனது அறைக்குத் திரும்பியவனுக்கு, துணிவையும் ஆறுதலையும் அளிக்கக் கூடிய ஓலையொன்று காத்திருந்தது. போசள மன்னன் வீர சோமேஸ்வரன் படைத் தலைவர்களுடன் தலைநகரை விட்டுப் புறப் பட்டு விட்டதாகத் தெரிவித்த அந்த ஓலை அளித்த துணிவில், பாண்டியரின் தாக்குதலை எதிர் கொள்ளும் வழிகளைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தான் சிங்கணன்.

ஜடாவர்ம சுந்தர பாண்டியன் சேரருடன் நடத்திய போரில் யந்திரங்களையும் பொறி களையும் பயன்படுத்திய விதங்களையும், போர்க்களிறுகளையும் வீரர்களையும் அணி வகுத்த முறைகளையும் நேரிடையாகக் கண்டிருந்தான் சிங்கணன். களிறுகளை எப் பொழுதும் பக்கவாட்டில் கொண்டு வரும் பாண்டியர் அணிவகுப்பை எதிர் கொள்ள, தகுந்த முன்னேற்பாடுகள் செய்து கொள்ளத்


''ஏன்யா கைதியைத் தப்பவிட்டே?''
''அவனைக் கைது செஞ்சு, ஜெயிலில் தள்ளினாலும் பலனிருக்காது, சார்! ஜெயில் அதிகாரிங்க கிட்ட மாமூல் கொடுத்துட்டு வெளியே தப்பிவிடுவான்! அதான் நானே மாமூலை வாங்கிட்டு தப்ப விட்டுட்டேன்!''
— பாஸு

தீர்மானித்தான். தன் உபதலைவனை அழைத்து, படைப் பிரிவுடன் கிழக்கு வாயிலின் எதிரே யிருந்த மரக் கூட்டங்களில் மறைந்திருக்கவும், பக்கவாட்டில் வரும் யானைப் படையைக் கோட்டையை நெருங்குமுன் தாக்கவும் உத்தர விட்டான். கோட்டைக்குள் எஞ்சியிருந்த வீரர் களைக் கொண்டு போராடுவதே உசித மென்றும் மன்னன் படைகளுடன் வந்த பின்பு எதிர்த்தாக்குதல் நடத்தலாமென்றும் தீர்மானித் தான் சிங்கணன்.

இரண்டாவது தினம், வடக்கிலிருந்து போசளர் படைப் பிரிவு ஒன்று வந்து கொண்டிருப்பதாக, கோட்டைத் தலைவன் வந்து அறிவித்தான். மன்னனை வரவேற்க கோட்டை வாயிலுக்கு அதிவேகமாக வந்து நின்ற சிங்கணன், வந்த படைப்பிரிவில் மன்னன் வீர சோமேஸ்வரன் இல்லாததையும் அவனுக்குப் பதிலாக போசளர் பிரதான படைத் தலைவனான அப்பணன், குருதி படிந்த உடைகளுடனும் காயமடைந்த வீரர் களுடனும் வருவதைக் கண்டு திகைத்தான்.

கோட்டைக்குள் நுழைந்து சற்று ஆசுவாசப் படுத்திக் கொண்ட அப்பணன், நடந்தவற்றை விவரிக்க விவரிக்க, சிங்கணனின் தலை சுழலும் ஸ்திதிக்கே வந்தது. தானும் அப்பணனும் கண்ணனூர்க் கோட்டையிலிருக்கும் போசள வீரர்களும் சிக்கியிருக்கும் அபாயம் எத்தனை ஆழமானது என்பதும் புரிந்தது அவனுக்கு.

கொங்கு நாட்டின் வடக்கிலிருந்த கோட்டைகள் மட்டுமின்றி இடைப்பாடி நாட்டையும் சுந்தரபாண்டியன் கைப்பற்றி விட்டதையும் கொங்கு மக்களின் விடுதலைப் படைகளும், படைத்தலைவர் கிருஷ்ண மல்லரும் தொடுத்த அசுரத் தாக்குதலில் மன்னன் வீர சோமேஸ்வரன் பின் வாங்க நேரிட்டதையும், போசளர் படைப் பிரிவுகள் பல துண்டுகளாகச் சிதறடிக்கப்பட்டு பல திசைகளிலும் தாக்கப்பட்டதையும், தானும் தனது பிரிவுடன் தெற்கில் விரட்டப்பட்டதையும் விவரித்தான் அப்பணன்.

சிங்கணன் முகத்தில் ஈயாடவில்லை. "அப்படியானால் படைத் தலைவரே, அந்தக் கிருஷ்ணமல்லன் உங்களைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறானா என்ன?" என்று கேட்டான்.

பலமாகத் தலையசைத்து மறுத்தான் அப்பணன். "இல்லை சிங்கணா, அந்த அரக்கன் பின் தொடரவில்லை. ஆனால் கண்ணனூர்க் கோட்டைக்கு மூன்றுகாத தூரமிருக்கையில் கொங்கு நாட்டின் கிழக்கு எல்லையிலிருந்து பாண்டிய இளவல் ஆதித்யன் எங்களை வழி மறித்துத் தாக்கினான். மன்னனைப் போல நமது படைப்பிரிவை ஊடுருவிய அவன் புரவிப்படை, பாதிக்குமேல் அழித்துவிட்டு எதிர்ப்புறமாகச் சென்று விட்டது. நமக்கு வடகிழக்கில் ஆதித்யனும், நேர்வடக்கிலிருந்து கிருஷ்ணமல்லனும் வந்து கொண்டிருக்கிறார்கள்."

"அப்படியானால் நாம் மூன்று பக்கங்களிலும் சூழப்பட்டிருக்கிறோமா?" என்ற சிங்கணன் முகத்தில் கவலை தெரிந்தது.

"ஆம் சிங்கணா, ஆனால் யார் நம்மை முதலில் தாக்கப் போகிறார்கள் என்பதோ, பாண்டியரின் உத்தேசம் என்னவென்பதோ விளங்கவில்லை" என்ற அப்பணன், சற்று நேரம் மௌனம் சாதித்தான். தமிழகத்திலிருந்து போசளர் ஆதிக்கம் வேரோடு கிள்ளியெறியப் படப் போவது நன்றாகப் புரிந்தது அவனுக்கு. வறண்ட முறுவல் ஒன்றுடன் எழுந்தவன் கால்களைத் திடமாக ஊன்றி நின்றான். அடுத்து ஒலித்த அவன் சொற்களிலும் திடமிருந்தது: "சிங்கணா, வீரர்களை அணிவகுக்க உத்தரவிடு."

சிங்கணன் முகம் மாறியது. "எதற்கு படைத் தலைவரே?" என்றான் குரலில் சந்தேகமும் கலக்கமும் ஒலிக்க.

அப்பணன் பதில் தெளிவாக வந்தது. "கோட்டையில் அடைபட்டுக் கிடக்க நான் விரும்பவில்லை, சிங்கணா. தலைநகர் திரும்பவும் வழியில்லை. வீரபாண்டியனை எதிர் கொண்டு போரில் வீரனாகவே மடிய விரும்புகிறேன்," என்றான் அப்பணன் திடமாக. வாயிலிலிருந்த வீரனை அழைத்து, உபதலைவர்களை அழைத்து வரவும் ஆணையிட்டான்.

சிங்கணனின் மறுப்பும் வேண்டுகோளும் பயனளிக்கவில்லை. "படைத்தலைவரே! நான் கூறுவதை சற்றுக் கேளுங்கள். நாம் வெளியேறிப் போரிடுவது அபாயகரமானது. கோட்டைக்குள்ளிருந்து போரிடுவதுதான் நமக்கும் நம் வீரர்களுக்கும் பாதுகாப்பு. சற்று நிதானியுங்கள்" என்ற சிங்கணன் குரலில் கெஞ்சல் இருந்தது.

படைத்தலைவன் சிங்கணன் மீது வெறுப்பு வழிந்த விழிகளைத் திருப்பினான். "சிங்கணா, உனக்கு உயிர்பிழைக்க ஆசையிருந்தால், இப்பொழுதே வெளியேறி விடு. கிழக்கே கங்க நாட்டு எல்லையோரமாகச் சென்றால் உயிர் பிழைக்க சந்தர்ப்பம் உண்டு. நான் வீரபாண்டியனை எதிர் கொள்ளத் தீர்மானித்து விட்டேன்," என்ற அவன் சொற்களிலும் வெறுப்பு தொனித்தது.

அப்பணன் உத்தரவின்படி அங்கு வந்து கொண்டிருந்த போசள உபதலைவர்களை விலக்கிக் கொண்டு வீரன் ஒருவன் தலை தெறிக்க ஓடி வந்தான். "படைத்தலைவரே! படைத்தலைவரே! வீரபாண்டியன் படைகளுடன் கோட்டையை நோக்கி வந்து கொண்டிருக்கிறான்!" என்று அறிவித்தான் மூச்சிரைக்க!

சிங்கணனுடன் கோட்டை மதிலுக்கு அவசரமாக விரைந்து வந்து நின்ற அப்பணன், எதிரே விரிந்த காட்சியைக் கண்டு பிரமித்தான். முன்னால் யந்திரப் பொறிகளுடனும், பக்கவாட்டில் போர்க்களிறுகளுடனும் இடது புறத்தில் புரவி வீரர்களுடனும் அணிவகுத்திருந்த பாண்டியர் படை, கண்ணனூர்க் கோட்டையை விழுங்க வரும் பெரும் கால சர்ப்பம் போல் நிதானமாக நெருங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



"எங்க வீட்டுக்கு இன்னிக்கு வேலைக்காரி வரலை. உங்க வீட்டு வேலைக்காரியை இன்னிக்கு மட்டும் அனுப்பேன்...."

"வெரி ஸாரி. எங்க வீட்டுக்காரர் மத்தவங்க வீட்டுக்கு இதுவரை வேலைக்குப் போனதில்லை!"

— சிரிசிரி முரளி

# கணவர் இங்கிலாந்தில்; மனைவியோ பர்மாவில்!



முன்பு பர்மா என்று அழைக்கப்பட்டு வந்த நாடுகள் இன்று மயன்மார்.

அரசியல் நிலைமை அங்கு குழம்பிக் கிடக்கிறது. மக்களின் மூக்குகள் ராணுவக் காற்றை சுவாசித்தே பழக்கப்பட்டு விட்டன. அவர்கள் விரும்புப் காற்று அதுவல்ல. ஆனாலும் வேறு வழியில்லை.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த மக்கள் 1988ல் தெருவுக்கு வந்தார்கள். ராணுவ ஆட்சிக்கு எதிராகக் கொடி பிடித்தார்கள். 'வேண்டும் ஜனநாயகம், மலர வேண்டும் மக்கள் ஆட்சி!' என்று குரல் எழுப்பினார்கள்.

அப்போது அங்கு வந்து சேர்ந்தார் ஒரு பெண்மணி. மெல்லிய உருவம். இருபது ஆண்டுகளாய் தன் வெள்ளைக்கார கணவருடன் லண்டனில் இருந்தபின் சொந்த நாடு திரும்பியவர். மக்களின் உணர்வலைகளை ஆமோதித்தார். அந்த மக்கள் இயக்கத்தைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் பொறுப்பு, மிகக் கச்சிதமாக அவருக்குப் பொருந்தியது.

பர்மா மக்களின் அன்புக்கு 1940களில் பாத்திரமாயிருந்த தலைவரான ஆங் ஸான் அவர்களின் மகள் அவர் என்பதால் அந்த இயக்கத்துக்கே மரியாதை கிடைத்தது.

அந்தப் பெண்மணி ஆங் ஸான் ஸுகி.

தங்களின் ஆட்சிக்கு முடிவு பெண் ரூபத்தில் வந்து விடுமோ என்று ராணுவத் தலைமை பயந்தது.

'89ல் ஸுகி கைது செய்யப்பட்டார். 'ஆறு வருடம் வீட்டுக் காவல்' என்று ராணுவம் தீர்ப்புக் கூறியது. அவர் உள்ளே இருந்தாலும் அவர் கொழித்த போராட்ட தீக்குச்சி அணையவே இல்லை.

அழுகிற பிள்ளைக்கு வாழைப்பழமாய் ஒரு தேர்தலை '90 ஆம் ஆண்டு ராணுவ ஆட்சி நடத்தியது. ஸுகி தலைமையிலான நேஷனல் லீக் ஃபார் டெமாக்ரஸி — **NLD** — எண்பது சதவீத வாக்குகளைப் பெற்று அமோக வெற்றி பெற்றது. பொறுக்குமா ராணுவ ஆட்சியாளர்களுக்கு?

மக்களின் தீர்ப்பை ஒரு தலைப்பட்சமாக ரத்து செய்து, தேர்தல் முடிவுகளை உடைப்பில் போட்டுவிட்டு 'நானே ராஜா' என்றார்கள்.

'ஸுகியை விடுதலை செய்' என்று உள் நாட்டில் மட்டுமல்ல சர்வதேசங்களிலிருந்தும் மயன்மர் ராணுவ தலைமைக்கு அழுத்தம் தரப்பட்டது. 'அவரோடு பேச்சுவார்த்தை நடத்து... மக்களின் தீர்ப்புக்குத் தலை வணங்கு' என்று உலகம் முழுவதிலுமிருந்து குரல்கள். மசியவில்லை ராணுவம்.

'நாட்டுக்கு ஒரு புதிய அரசியல் சட்ட அமைப்பு ஏற்படுத்துவோம்' என்று ஆசை காட்டி ஒரு கூட்டம் போட்டது.

உங்களையும் அதில் சேர்த்துக் கொள்கிறோம் என்று என்.எல்.டி.யைச் சேர்ந்த 86 பேரை அழைத்தது.

ஆனால் அவர்கள் தங்கள் கருத்தைத் தெரிவிக்கக் கூடாதாம். அப்படியே தெரிவித்தாலும் அது ராணுவத்தின் காதில் ஏறாதாம்.

இதற்கிடையில் என்ன தோன்றியதோ திடீரென ஸுகியை விடுதலை செய்தது.

ஆனால் அவர் நாட்டுக்குள்ளேயோ அல்லது நாட்டை விட்டோ எங்கும் பயணம் செய்யக் கூடாது என்று நிபந்தனை!

ஸுகியின் மன உறுதி இரும்பைவிட வலிமையடைந்திருந்தது. அவ்வப்போது தன் வீட்டு மதில் சுவரில் ஏறி நின்று அவர் பேசுவதைக் கேட்க இப்போதும் ஆயிரக்கணக்கில் மக்கள் கூட்டம் காத்திருக்கிறது.

'வெளிநாட்டவர்களை மணந்து கொண்டிருக்கும் பர்மிய பிரஜைக்கு அரசியல் பிரவேசம் அனுமதிக்கப்படாது! என்று 1947ல் பர்மா சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட ஒரு விதியை ராணுவம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அதன்மூலமே ஸுகியை குறி வைக்கிறது.

இப்போதுள்ள நிலைமைகளுக்கேற்ப விதிகளை மாற்று' என்கிறார்கள் பொதுமக்கள்.

கணவர் இங்கிலாந்தில். மனைவியோ மக்கள் இயக்கத் தலைமையில். குடும்பத்தை விட தன் நாட்டு மக்களே முக்கியம் என்று ஸுகி தன் போராட்டத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கிறார். 1991ல் அமைதிக்கான நோபல் பரிசு இவருக்குத் தரப்பட்டது.

இன்று உலக அரசியல் தலைவர்களில்- பெண்களில்- தலை நிறைய பூ வைத்துக் கொள்பவர் அநேகமாக ஆங் சான் ஸுகி ஒருவராகத்தான் இருக்கும்.

பூச்சூடும் அத்தலையில் பிரதமர் பதவியைச் சூட்டி மகிழ மயன்மர் மக்கள் போராடிக் கொண்டிருக்கிறார்கள்.

**-ராணி மைந்தன்**

## 25. சுந்தர காண்டம்

ஸர்ப்பவியூகத்தின் மீது விழிகளை ஓட்டிய சிங்கணனுக்கு, அதுவரையில் விடுபடாதிருந்த புதிர்களுக்கு விடை கிடைத்தது. முக்காலுக்கும் மேல் சோழ நாட்டிலிருந்து கரைந்து விட்டதாகக் கருதிய சோழர் படைகள் சென்ற இடம் எதுவென்பது புரிந்தது.

அவன் அறிந்திருந்த பல சோழ உபதலைவர்கள் அந்தப் படை வரிசைகளில் தெரிந்தனர். சோழர்களும் பாண்டியர்களும் ஏதோ ஒரு வகையில் இணைந்திருக்க வேண்டும் என்று விக்கலன் கூறிய வார்த்தைகளை நிரூபித்தார்கள் அவர்கள். பார்வையை ஸர்ப்பவியூகத்தின் மீது ஓட்டியவன், தலைப் பகுதியில் வந்து கொண்டிருந்த அசுர யந்திரப் பொறிகளையும், அவற்றின் முகப்பில் வந்து கொண்டிருந்தவனையும் கண்டதும் திகைப்பில் உறைந்தான்.

'இடைப்பாடி நாட்டின் கோட்டையிலிருந்து தப்பி, காவிரியின் வெள்ளத்தில் தலைகுப்புற விழுந்து மறைந்துவிட்ட யாங்சின் உயிர் பிழைத்து, எப்படி பாண்டியர் படையில் வந்து சேர்ந்தான்?' என்று குழம்பியவன், சற்று கூர்ந்து கவனித்தான். வருபவன் யாங்சின் அல்ல என்பதையும் அவனைப் போலவே உருவம் கொண்ட வேறு சீனத்து வாலிபன் என்பதையும் புரிந்து கொண்டான். இடைப்பாடி கோட்டையிலிருந்த போது உத்தம பாளையத்திலிருந்து வந்த தூதன் கூறிய வார்த்தைகள் அவன் சித்தத்தில் எதிரொலித்தன. யாங்சின்னைக் கண்டு 'அவன் பிரமித்ததும் இரு தினங்களுக்கு முன்பாக உத்தம பாளையத்தில் கண்டதாகக் குழறியதும் அவன் நினைவுக்கு வந்தன.

குழப்பம் நிறைந்த சித்தத்துடன் திரும்பியவன், கோட்டை வாயிலினருகில் வீரர்கள் அணிவகுத்து நிற்பதையும் படைத் தலைவன் சரமாரியாக உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டிருப்பதையும் கண்டு மளமளவென்று கீழிறங்கினான். அவன் கீழே இறங்கவும் பாண்டியர் படையின் யந்திரங்கள் இயங்கி தீப்பந்தங்களையும் வேல்களையும் எரியம்புகளையும் எறியத் தொடங்கவும் சரியாக இருந்தது. பெரும் வேகத்துடன் வந்து விழுந்த தீப்பந்தங்களினால், இரு மாளிகைகளும் வீரர் குடியிருப்பும் பற்றி எரியத் தொடங்கின. கலையத் தொடங்கிய அணிவகுப்பைத் திறமையுடன் அடக்கிய அப்பணன் எரிந்து கொண்டிருந்த பகுதியை ஒருமுறை வெறித்தான். அடுத்து கோட்டைக் கதவுகளைத் திறக்கும்படி உத்தரவு பிறந்தது அவனிடமிருந்து. தனது வாளையும் கவசங்களையும் தரித்துக் கொண்டு படைத் தலைவனுடன் முன்னணிக்கு விரைந்தான் சிங்கணன்.

# இந்திர தனுசு

இரும்பில் வார்க்கப்பட்ட சிலை போல தனது பெரும் சாம்பல் நிறப் புரவியிலமர்ந்து கோட்டையை உற்று நோக்கியபடி, பாண்டியர் படைகளின் முன்னாலிருந்தான். வீரபாண்டியன் கோட்டைக் கதவுகள் திறக்கப்படுவதை அவன் கழுகுக் கண்கள் கவனித்தன. அடுத்து அவன் இடது கரம் உயர்ந்து, யந்திரப் பொறிகளை நிறுத்துமாறு சைகை செய்தது. அதே சமயத்தில், கிழக்கு வாயிலின் எதிரில் சிங்கணன் அனுப்பியிருந்த படைப்பிரிவு, பாண்டியர் படைகளைப் பக்கவாட்டிலிருந்து தாக்கும் உத்தேசத்துடன் பாய்ந்து வந்ததையும் அவன் விழிகள் கவனித்தன. அவன் கழுகுக் கண்களில் பயங்கரச் சாயை ஒன்றும் படர்ந்தது. தன் நீண்ட வாளை உயர்த்தி, யுவானுக்கு சமிக்ஞை செய்தவன், தனது புரவியைக் கால்களால் உதைத்தான். அந்த சாம்பல் நிறப்புரவி பயங்கரக் கனைப்பொன்றை வெளியிட்டு, திறக்கத் தொடங்கிய வாயிலை நோக்கி அதிவேகமாகப் பாய்ந்தது.

யந்திரப் பொறிகளை கிழக்கு வாயிற்புறத்திலிருந்து வந்த புரவிப் படையை நோக்கித் திருப்பிய யுவான், போர்க்களிறுகளின் வரிசையை நோக்கி நடந்தான். போசள உபதலைவன் அந்தப் பொறிகள் அத்தனை தூரம் தாக்கக்கூடும் என்பதை எதிர்பாராததாலும் அடுத்து யானைகளும் தங்களை நோக்கித் திரும்ப முற்படுவதைக் கவனித்ததாலும் அபாயத்தை உணர்ந்து, வீரர்களை மீண்டும் கிழக்கு வாயிலின் வழியே கோட்டைக்குள் நுழைந்து விட உத்தரவிட்டான். அத்தகைய நிலையில், எந்தப் படைத்தலை

வனும் இடக்கூடிய உத்தரவுதான் அது. ஆனால் அதுவே போசள வீரர்களின் உயிரைப் பறிக்கும் யமனாக மாறியதைக் கண்டு திகைத்தான் உபதலைவன்!

கீழ்முகமாகப் புரவி வீரர்களை நோக்கி இயங்கிய யந்திரப் பொறிகள், கிழக்கு வாயிலை போசள வீரர்கள் அணுகவிடாமல் செய்தது மட்டுமின்றி, சட்டென்று உயர்ந்து வாயிலின் மேற்புறத்தில் நின்ற வீரர்களைத் தாக்கவும் தொடங்கின. அந்த இடைவெளியில் உபதலைவன் திறந்த வாயிலின் வழியே நுழைய, போர்க்களிறுகள் போசள வீரர்களை நெருங்கின. கோட்டை உள்ளே நுழைந்த போசள வீரர்களைத் தொடர்ந்து, கதவுகளை இடித்துத் தள்ளிக் கொண்டு நுழைந்தான் யுவான். யானைகளின் வரிசையைத் தொடர்ந்து, எரியம்புகளை விசிறும் பொறிகளைக் கொண்டு வரப் பணித்தான்.

யுவான் நுழைந்து சென்ற கிழக்கு வாயிலின் வழி முழுவதும் வாட்களும், உடைந்த வேல்களும், நசுங்கிய கவசங்களும், போசள



வீரர் சடலங்களுமாக ஏதோ சூறாவளி கடந்து சென்ற வழியாகவே கிடந்தது. கோட்டையின் நடுப்பகுதியில் யுவானை எதிர் கொண்ட படைத்தலைவன் அப்பண்னுக்கு அவன் விரும்பியபடியே வீர மரணத்தை எளிதில், தாராளமாக அளித்த யுவான், யந்திரப் பொறிகளைக் கொண்டு உட்பகுதி முழுவதையும் தீக்கிரையாக்கத் தொடங்கினான்.

தெற்கு வாயிலில் வீரபாண்டியனுடன் போராடிக் கொண்டிருந்த சிங்கணனுக்குப் படைத்தலைவன் அப்பணன் மடிந்த செய்தியும் எட்டியது. சிவந்து விட்ட விழிகளுடன் வெகு மூர்க்கமாகத் தனது வாளை வீசத் தொடங்கியவன், வீரபாண்டியனின் கழுத்திலும் தோள்களிலும் இரண்டொரு கீறல்களையும் ஏற்படுத்தினான். வீரபாண்டியனின் இதழ்களில் விபரீதமானதொரு புன்னகை மலர்ந்தது. ஒருபுறமாக இழுக்கப்பட்ட இதழ்களின் முறுவலில் தனது விதி தொக்கி நிற்பதை உணர்ந்தான் சிங்கணன். வாளை இடது கரத்துக்கு மாற்றிக் கொண்ட வீரபாண்டியனின் வலது கரம், அதுவரை கச்சையில் உறங்கிக் கிடந்த அவனது பிரத்யேகமான ஆயுதத்தில் பதிந்தது..பாண்டியர் இலச்சினை பதித்த பொற்கோடரி அது!

மன்னன் சுந்தரபாண்டியனின் குறுக்கீடு மட்டும் இல்லாமலிருந்தால் சேர நாட்டுப் போருக்கு முன்பே சிங்கணன் தனது வாளுக்கு இரையாகியிருக்க வேண்டியவன் என்பது வீரபாண்டியனுக்கு நினைவு வந்தது. தமிழகத்து மக்கள் சிங்கணனால் பட்ட இன்னல்களை எண்ணிய போது அவன் வெறி அதிகரித்தது. சக்கரவட்டமாகச் சுழன்று சுழன்று பாய்ந்த சிங்கணனின் வாளைத் தட்டிவிட்டது. அதே கணத்தில் வீரபாண்டியனின் கச்சையிலிருந்து புறப்பட்ட அந்தக் கோடரி ,அசுர வேகத்தில் பறந்து சிங்கணனின் கவசத்தை உடைத்துக் கொண்டு, அதன் பிடி மட்டும் வெளியே தெரிய, ஆழமாக அவன் மார்பில் பாய்ந்து நின்றது.

*எந்த மண்மீது ஆசை வைத்து, அதன் மக்களை வருத்தினானோ, அந்த மண்ணில் சிங்கணனின் உயிரற்ற உடல் விழுந்து புரண்டது. வாளை உயர்த்திப் போரை நிறுத்த உத்தரவிட்ட வீரபாண்டியன், போசள வீரர்களை அழைத்து, சிங்கணன் உடலை எடுத்துச் செல்ல அனுமதித்துவிட்டு கோட்டைக்குள் பிரவேசித்தான்.

உள்ளே நுழைந்த வீரபாண்டியன், எதிரே விரிந்த காட்சியைக் கண்டு பிரமித்தான். எந்த அபாயத்திலும் ரசனையைக் கைவிடாத அவன் சித்தம், யுவான் உள்ளே விளைவித்திருந்த காட்சியைக் கண்டதும் திரேதாயுகத்திற்கே சென்றது!

** லங்காதகனம் முடிந்த பின் இலங்கையை விட்டுக் கிளம்பிய அனுமன், ஒருமுறை திரும்பி நோக்கினான். அந்த இலங்கை பிரளய காலத்தில் பிரும்ம கோபத்தால் அழிக்கப்பட்ட பூமியைப் போலிருந்தது என்ற வால்மீகியின் வர்ணனைக்குப் பொருளை நேரிடையாக உணர்த்திக் கொண்டிருந்தது யுவானால் அழிக்கப்பட்ட கோட்டையின் உட்பகுதி!

கண்ணனூர்க் கோட்டையின் உள்ளேயே படைத்தலைவர்களையும் வீரர்களையும் தகனம் செய்ய உத்தரவிட்ட வீரபாண்டியன், இரண்டாவது தினம், வெள்ளி முளைக்கும் நேரத்தில் படைகளுடன் காடவ எல்லையை நோக்கி நகர்ந்தான்.




**தல்வரின் கவனத்துக்கு...**

கொடுங்கோலர்களை ஆண்டுக் கணக்கில் சகித்துக் கொள்ளும் மக்கள், அவர்களிடமிருந்து தங்களை விடுவிப்பவர்களிடம் சிறிதும் பொறுமையோ, அனுதாபமோ காட்டுவதில்லை. குறுகிய அவகாசத்தில் அற்புதங்களை நிகழ்த்திக்காட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். இதுமனித இயல்பு. இந்த முரண்பாட்டைச் சுட்டிக் காட்டுவதால் பயனில்லை. கூடியவரை அந்த எதிர்பார்ப்புகளை நிறைவேற்ற முயல்வதே புத்திசாலித்தனம்.

–உட்ரோவில்சன் (முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி)

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

---

* சுந்தரபாண்டியனின் கிரந்த மெய்கீர்த்தி by N. சேதுராமன்.

சிங்கணன், அப்பணன் உட்பட பல போசள தளபதிகளும் கண்ணனூர்ப் போரில் கொல்லப்பட்டனர். பாண்டியரின் இந்த வெற்றி பிறகு சிதம்பரம் கல்வெட்டுக்களிலும் பொறிக்கப்பட்டது. (A History of South India. chapter : The Age of Four Kingdoms. Page : 215. by K.A. Neelakanta Sastri.)

** வால்மீகி ராமாயணம். சுந்தரகாண்டம் 54 வது ஸர்க்கம் - ஸ்லோகம் 52.

**கா**டவர் தலைநரான சேந்தமங்கலத்தில், நீண்ட காலத்திற்குப் பின் ஒன்று சேர்ந்திருந்த நண்பர்களுக்கு ஆடம்பரமான வரவேற்பு அளிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. மலைய மானும், வீரசம்பன் சம்புவரையனும், சேதிரா யனும் அமர்ந்திருக்க, எதிரில் இருந்த மன்னன் கோப்பெருஞ்சிங்கனின் முதிர்ந்த முகத்தில் நெடுநாட்கள் காணப்படாத மகிழ்ச்சி தெரிந்தது. விருந்து முடிந்து, தாம்பூலம் தரிக்க நால்வரும் முற்றத்தில் வந்து அமர்ந்து அள வளாவியபோது, வீரசம்பன் தன் வியப்பை நேரிடையாகவே தெரிவித்தான். "காடவ மன்னா, தங்கள் மைந்தனின் சுபாவம் இத் தனை தூரம் மாறக்கூடுமென்று நாங்கள் எதிர் பார்க்கவேயில்லை. இந்த மாறுதல் மிகுந்த மகிழ்ச்சியளிக்கிறது."

மலையமானும் ஆமோதித்தான். "ஆம் மன்னா, நாம் மீண்டும் இப்படி இணைவோம் என்பதையும் எதிர்பார்க்கவில்லை."

காடவ மன்னன் முகத்திலிருந்த மந்தகாசம் விரிந்து, "நானே எதிர்பார்க்கவில்லையே, தஞ் சைத் துறவியார் இதை இத்தனை விரைவில் சாதித்தது அதிசயம்தான்" என்றான் முறுவலு டன்.

காடவராயன் வெகு அடக்கமாக இருப்ப தாகக் காட்டிக் கொள்ள, சிரமப்பட்டு முயன்று கொண்டிருந்தான். அவன் அடக் கத்தை இன்னும் உயர்த்தியது வீரசம்பனின் அடுத்த கேள்வி. "மன்னா, ஏன் காடவ ராயனுக்கு இன்னும் இளவரசுப்பட்டம் கட்டவில்லை?"

காடவ மன்னனின் மந்தகாசம் விரிந்து நகைப்பாகவே ஒலித்தது. "நடத்திவிட வேண் டியதுதான். அவனுக்கு கொங்கு நாட்டு இளவரசியை மணமுடித்துவிட ஏற்பாடு செய்திருக்கிறேன். துறவியாரும் இதுபற்றி சோழ ராஜேந்திரரிடமும் அவநிதனிடமும் பேசி முடிப்பதாகக் கூறியிருக்கிறார். மண விழாவையும் பட்டம் சூட்டுவதையும் உங்கள் ஆதரவுடன் ஒன்றாகவே நடத்தி விடலாம்" என்றான் மன்னன்.

சிற்றரசர்களின் முகங்கள் விளக்கெண்ணெ யில் ஊறவைத்த வேப்பங்காயை விழுங்கியது போலாயிற்று. கொங்கு இளவரசியைக் காடவ ராயனுக்கு மணமுடிக்க துறவியாரே இசைந் தார் என்றால் அதன் பொருள் இன்னதென்ப தும் விளங்கிற்று அவர்களுக்கு. ராஜேந்திரருக் குப் பின் வாரிசற்ற சோழ அரியணையில் இந்த முரட்டு ராட்சதன் அமர்வதா? அவர்கள் மனத்தில் பொறாமைத்தீ கொழுந்து விட்டு எரிந்து அவர்கள் உள்ளங்களைச் சுட்டது. இது பற்றி துறவியாரிடம் பிறகு விவாதிக்க வேண் டும் என்று தீர்மானித்தவர்கள், தங்களது வாரிசுகள் எந்த விதத்தில் குறைந்தவர்கள் என்று சிந்திக்க ஆரம்பித்தார்கள்.

## அருள்வாக்கு

**ம**னஸுக்கு ஏற்படுகிற மலம் தப்பான சிந்தனைகள். அது போனால்தான் ஈச்வரானு பவம் கிடைக்கும்.

*சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி*
*என்று மாணிக்கவாசகர் சொல்கிறார்.*

தப்பான சிந்தனை மட்டுமே மலம், நல்ல சிந் தனை என்பது அமலமான ஸத்வஸ்து என்று ஆரம்ப நிலைகளில் இருக்கும். அப்புறம், 'தப் பானது, நல்லது என்ற பேதமில்லாமல், சிந்தனை என்றும், சித்தம் என்றும், மனஸ் என்றும் ஒன்று இருப்பதே மலம்தான். மாயையால் ஆத்மாவுக்கு ஏற்பட்ட அழுக்குதான் மனஸ். அதனால் எதையுமே சிந்திக்காதபடி மனஸை அழித்துப்

தான் கொட்டிவிட்ட வார்த்தைகளின் விளைவை உணராத காடவ மன்னன், உற் சாகத்துடன் தொடர்ந்து பேசிக் கொண்டே போனான். காடவராயனின் அடக்கம் அபரி மிதமாக உயர்ந்திருந்தது!

வீரசம்பன் இடைமறித்தான், "பாண்டியர் தாக்குதலைப் பற்றி ஏதேனும் செய்தி வந்ததா மன்னா?"

மன்னன் பதில் அலட்சியமாக வந்தது. "நம் ஒற்றர்கள் இதுவரை ஏதும் தெரிவிக்கவில்லை. பாண்டியர் படைப்பிரிவும் ஒன்றும் பெரிதாக இருப்பதாகவும் தெரியவில்லை? அவர்கள் மேற்கிலிருந்துதான் வரவேண்டுமென்பதால் மேற்கெல்லையில் நமது வீரர்கள் நிறுத்தப் பட்டிருக்கிறார்கள். உங்களது படைப் பிரிவுகள் கெடிலத்தின் தென் கரையில் நிறுத்தப்பட்டிருக்கிறது. நாம் இணைந்திருப் பதை அறிந்தால் ஒருவேளை பாண்டியர் அப்படியே திரும்பி விடவும் கூடும்."

**அ**தற்கு மேல் பேச்சை வளர்த்த விரும்பாத வீரசம்பன் நேரிடையாகவே கேட் டான். "மன்னா, இந்தப் போருக்குப் பின்பு பொக்கிஷங்களில் எங்களுக்கு எத்தனை பங்கு அளிக்கப் போகிறீர்கள்?" என்று.

காடவ மன்னனுக்கும் அடக்கமே உருவாக அமர்ந்திருந்த காடவராயனுக்கும் முகம் மாறியது. "பொக்கிஷமா? பங்கா? என்ன கூறுகிறீர்கள்?" என்றார்கள் ஒரே குரலில்.

மிரண்ட விழிகளுடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு விழித்த சிற்றரசர்களை நோக்கிய காடவ மன்னன், "பொக்கிஷங்களை உங்களுக்கு அளிப்பதாக யார் கூறியது?" என் றான்.

வீரசம்பனும் மலையமானும் எழுந்தே விட்டார்கள். திகைப்பில் அவர்கள் விழிகள் தெறித்து விழுந்து விடும் போலிருந்தன. சேதிராயனின் பருத்த சரீரம் அவனைச் சட்டென்று எழுந்திருக்க விடாமல் சங்கடப்

போட்டால்தான் ஆத்மாநுபவம் ஏற்படும்' என்று தெரியும். 'சித்தமலம்' என்று மாணிக்கவாசகர் சொல்லும் போது இப்படித்தான், சித்தத்துக்கு ஏற்படும் தப்புச் சிந்தனையான மலத்தைச் சொல்லாமல், சித்தத்தையே ஆத்மாவுக்கு ஏற்பட்ட மலமாகச் சொல்லியிருக்கிறார். அந்த மலம் ஈச்வரானுக்ரஹத்தில் அகன்று சிவமாவதுதான் ஆத்ம ஸ்வரூபமாக நிற்பது.



சித்த மலம் போக நன்றாக அலம்புவதற்கு ஏற்பட்டதே யோகம்.

யோக ஸாதனைக்கு ஆதார நூலாக உள்ள 'யோக ஸூத்ர'த்தை எழுதியதே பதஞ்ஜலிதான். அதனால் 'பாதஞ்ஜல யோக ஸூத்ரம்' அல்லது வெறுமனே 'பாதஞ்ஜலம்' என்று மட்டுமே அது சொல்லப்படுகிறது.

மனஸை அடக்கிப் பரமாத்மாவோடு சேர்க்கை ஏற்படுத்தித் தருவதாலேயே அதற்கு யோகம் என்று பெயர்.

இன்றைக்கும் மேல் நாட்டினர் உள்படப் பலர் சாஞ்சல்யமயமான ஸம்ஸார வாழ்க்கையிலிருந்து சாந்தியைத் தேடிக் கொண்டு போய், "Yoga" தான் இதற்கு ஸரியான வழி என்று பின்பற்றுவதைப் பார்க்கிறோம். அதற்கான கார்ய க்ரமத்தை ரொம்பவும் நுணுக்கமாக, scientific-ஆகப் பதஞ்ஜலியின் ஸூத்ரத்தில் விளக்கியிருக்கிறது என்று கொண்டாடவும் கேட்கிறோம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

படுத்திக் கொண்டிருந்தது. ஒரு விதமாக தனது இருக்கையைப் பின்னால் தள்ளி சற்றுத் தடுமாறி எழுந்து நின்றவன், "காடவ மன்னா, என்ன இப்படிக் கூறுகிறாய்? இது நியாயமே அல்ல!" எங்களை ஏமாற்ற எண்ணாதே" என்றான் ஆத்திரத்தில் குழறியபடி.

"இதில் என்ன அநீதி இருக்கிறது? பொக்கிஷங்களைப் பற்றி நான் ஏதும் கூறவேயில்லையே. நீங்களாக அப்படி நினைத்துக் கொண்டால் நான் எப்படி அதற்கு பொறுப்பாக முடியும்?" காடவ மன்னன் குரலில் சற்றுக் கடுமை ஒலித்தது.

சேதிராயனின் பருத்த உடல் குலுங்கியது. நாங்களே அப்படி நினைத்துக் கொண்டோமா? எங்களை அழைப்பதையும் அழைத்துவிட்டு இப்போது இப்படிக் கூறுவது முறையல்ல மன்னா, முறைதவறி நடக்க முயலாதே. விளைவுகள் விபரீதமாகி விடும்" என்று இரைந்தான் அவன்.

காடவராயன் வேகமாக எழுந்து சேதிராயன் முன்பாக வந்து நின்றான். அவனது அபரிமிதமான அடக்கம் அடியோடு காணாமல் போயிருந்தது. சேதிராயனின் சிவந்த விழிகளையும் பருத்த உடலையும் ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தவன், "சேதிராயா! என்ன விபரீதம் நிகழும்?" என்றபடியே தன் வாளைப் உருவினான்.

சேதிராயனின் பருத்த உடல் மேலும் குலுங்கியது. பற்களை நறநறவென்று கடித்தவன், "அற்பச் சிறுவனே, என் முன்பாக வாளை உருவ என்ன துணிச்சல் உனக்கு?" என்றபடி தனது பெரும் வாளை உறையிலிருந்து விடுவிக்கவும் முயன்றான். ஆனால் அந்த வாள் சமய சந்தர்ப்பம் அறியாமல் படாடோபமான அவன் உடைகளில் சிக்கிக் கொண்டு அவசரத்திற்கு வெளிவராமல் தடுத்து அவன் பருத்த உடலை மேலும் குலுங்க வைத்தது.

வீரசம்பனின் குரல் மீண்டும் ஒலித்தது: "தஞ்சைத் துறவியார், பொக்கிஷங்களில் பாதியை எங்களுக்கு நீ அளிக்கப் போவதாகக் கூறித்தான் படை உதவி கோரினார், மன்னா! நாங்களும் அதற்கு இசைந்துதான் எங்கள் படைகளை அழைத்து வந்து காடவ வீரர்களுடன் கலக்க விட்டிருக்கிறோம்" என்றான்.

காடவ மன்னனின் சித்தம் குழம்பியது, "அப்படியேதும் நான் அவரிடம் ஒப்புக் கொள்ளவில்லையே" என்றான் குழப்பம் நிறைந்த குரலில்.

சிற்றரசர்களின் எதிர்க்கேள்விகளும், மன்னன் மறுப்பும் காடவராயனின் முரட்டுக் குரலும் சேர்ந்து ஒலித்து, அங்கு ஒரு குழப்பமான சூழ்நிலை நிலவியது சற்று நேரம்.

வாயிலில் நின்ற சிற்றரசர்களின் மெய்க் காவலர்களை விலக்கிக் கொண்டு, மலையமானின் வீரன் ஒருவன் உள்ளே வெகு பதற்றத்துடன் ஓடி வந்தான்.

"பிரபு, பிரபு!" என்று அவன் விடுத்த அழைப்பு சிற்றரசர்களின் செவிகளில் விழாமற் போகவே, பொறுமையிழந்த வீரன், "பிரபு!" என்று பலமாக மூச்சைப் பிடித்துக் கொண்டு இரைந்தான்.

சட்டென்று ஓர் அமைதி நிலவியது அங்கே. வீரன் குரல் மீண்டும் இரைந்து ஒலித்தது. "பிரபு, தெற்கிலிருந்து வீர பாண்டியன் காடவர் எல்லைக்குள் பிரவேசித்து விட்டான்."

அங்கிருந்த அனைவருமே ஏதோ பளீரென்று மின்னல் தாக்கியதாக உணர்ந்தார்கள். அடுத்து அனைவரும் வேகமாக வெளியில் விரைய முற்பட்டார்கள்.

சேதிராயன் மட்டும் இன்னும் தன் வாளை வெளியில் எடுக்க சிரமப்பட்டு முயன்று கொண்டிருந்தான்.

(தொடரும்)

அடித்துக் கொல்வதற்கு முன்பு அந்த நாகப்பாம்மை நான் பார்த்ததில்லை.

என் மனைவி, மாமனார், மாமியார், இரு மைத்துனர்கள், மூன்று மைத்துனிகள்... இவர்கள் தவிர, வயல் வரப்பின் மேல் நடந்து, அந்தக் கொல்லையைக் கடந்து செல்லும் அனேகர் பார்த்திருக்கிறார்கள். அடிக்கடி இங்கே கூட உலவுமாம். நான் பார்வையைச் சுழற்றினேன்.

ஒரு புறம் ஓடுகளும் எதிரில் மஞ்சம் புல்லும் வேய்ந்த எதிரெதிர் வீடுகளுக்கு இடைப்பட்ட முற்றத்து வாசலில் நிலா ஒளி பொழிந்து கொண்டிருந்தது.

சுற்றிலும் எல்லோரும் ஒரு வட்டம் அமைத்தது போல் சூழ்ந்திருக்க, நடுவில், வாசலின் மையத்தில் அடிபட்டு மாண்டிருந்தது பாம்பு.

உயிரின் இறுதிச் சலனமாக பாம்பின் வால் நுனி ஏதோ ஒரு முடிச்சைப் போட்டு அவிழ்ப்பதுபோல் சுருண்டு நெளிந்து, மீண்டும் நிமிர்ந்து முறுக்கியது.

"அடடே... இது நம்ம ராஜய்யா இல்லே?"

கூட்டத்தின் சுவாரஸ்யம் கட்டிக்காத்த மௌனத்தை முதலில் கலைத்தவர் என் மாமியார்.

என் மாமனார் வலது கையை மூன்று விரல்களும் நீட்டி, தரையில் பதிய இடக் காலை முழந்தாளிட்டு மடக்கி, சற்று நெருங்கி வந்தார்.

அவர் பார்வை பாம்பின் மீது சிறிது நேரம் தங்கியது.

**வையவன்**

"ஆமா... ராஜய்யா தான்!"

அவர் ஆமோதித்தார்.

"ஐயையோ..."

எனது முதல் மைத்துனி.

தொடர்ந்து, கூடியிருந்தவர் மத்தியில் ஒரு சலனம். அனுதாப அலை.

"ஏழெட்டு வருஷமா நம்ப புங்க மரத்தடியிலே தான் இருக்கு. யாருக்கும் எந்தக் கெடுதலும் இதுவரைக்கும் செஞ்சதில்லே." என் மனைவி.

"வீட்டைச் சுத்தி வரும் போவும். நான் எத்தனையோ நாள் பார்த்திருக்கேன்." மைத்துனி இரண்டு.

அடுத்து மாமனார் என்ன சொல்லப் போகிறாரோ என்று கிட்டத்தட்ட ஒரு கொலையாளியின் குற்ற உணர்வோடு என் செவிகள் குறுகுறுத்தன.

அவர் என்னை ஒரு தரம் பார்த்துவிட்டு பாம்புக்கு மாறினார்.

"நீ ஏண்டா இந்தப் பக்கம் வந்தே?" முதலில் தூக்கி வாரிப்போட்டது. இல்லை... என்னையல்ல...

இறுதி உயிர் மூச்சை விட்டு நிர்ச்சலனமாகி விட்ட நாகப்பாம்பைப் பார்த்து செய்யத் தகாத ஒரு செய்கையால் உயிரிழந்து விட்ட நெருக்கமான சிநேகிதன் ஒருவரைக் கேட்பது போல் கேட்டார்.

எனக்குள் நச்சென்று பிடரியில் ஓர் அடி.

ஆக இது கொலைக் குற்றம் தான்.

"நாகப்பாம்மை அடிக்கக் கூடாதே!" அடுத்து மாமியார்.

"ஆமாம்... தெய்வக் குத்தமாச்சே." மைத்துனி எண் மூன்று.

என் மனம் நடந்ததை மறுபரிசீலனை செய்தது.

சற்று நேரத்திற்கு முன் நெல் உலர்த்தும் களத்திலிருந்து சிறு சிமெண்டுப்படி ஏறி பழங்கலம் வைத்திருக்கும் பண்டபாத்திர அறைக்குள் நுழைவதை ஒரே லட்சிய நோக்காக வைத்துக் கொண்டிருப்பது போல் அது சரசரவென்று ஊர்ந்து வந்தது.

உடனே கவனித்தது நான். அடுத்து என் இளைய மைத்துனன்.

நிலா வெளிச்சத்தில் நான் கரும்புத் துண்டு ஒன்றைக் கடித்துக் கொண்டிருந்தேன்.

பக்கத்தில் என் சுவாரஸ்யம் நீடித்தால் வெட்டுப்படத் தயாராய் ஒரு நீண்ட கரும்புக் கிடை

வாசல் ஒட்டி, அரையடி உயரத்தில் சிமெண்ட் நடையில் ஓட்டு வீட்டின் சார்பாய் இறக்கிய ஓலைப்பந்தலின் மைய மரக் கழியில் சாய்ந்து கொண்டு என் இளைய மைத்துனன்.

அவனருகில் ஒன்றரையங்குல விட்டத்தில் புளியம்பழத்தின் மேலோடு நொறுக்கப் பயன்படும் மூங்கில் கழி. மூன்றடி நீளம்.

ராஜய்யா (என்ன பெயர் அது? ரா

நாகம் என்பதற்கான அடையாளக்குறியீடா... அல்லது எந்த ராஜய்யாவோ அந்தப் பாம்பு மாதிரி இருந்த ஞாபகார்த்தமா?) இந்த இரு ஆயுதச் சூழலின் இடையே தான் தன் இறுதி யாத்திரை மும்முரத்தில் வந்தது.

பாம்புகளுக்கு நான் பயப்படுவதில்லை. ஏனென்று தெரியாது. சுபாவம். மற்றபடி வீர தீரம் ஒன்றுமில்லை.

“மாமா... பாம்பு...”' என்று இளைய மைத்துனன் கத்தினான்.

அவனும் பயந்து கத்தவில்லை. ஒரு வியப்பில்தான் கத்தினான். பார்த்தால் இரண்டு கைவீசிப் போடும் நீளத்தில் நிலாவொளியின் மினுமினுப்பில் ஒரு பாம்பு.

குரலோசைகளுக்கு தனி சக்திகள் உண்டு. டெஸிபல் மிகுந்தாலோ வேறு அதிர்வு மாற்றம் இருந்தாலோ நாம் துணுக்குறுகிறோம். நம்மை அவை ஸ்விட்ச் போட்டு இயக்கி விடுகின்றன.



தன்னிலை மீளுவதற்குள் அனிச்சையாகச் செயல்பட்டு விடுகிறோம்.

நான் இப்படிப்பட்ட பலவீனங்களுக்கு இரையாகிறவன்.

பக்கத்திலிருந்த கரும்புக் கிடையை எடுத்து ஊர்ந்து வந்த பாம்பின் நடு உடலின் மீது ஓங்கி அடித்தேன்.

குரலோசைகள் போன்றே செயல்பாடுகளுக்கும் ஒரு சக்தி உண்டு. ஒருவன் அடிக்கும் தீவிரம் பார்த்து மற்றவனுக்கு அதே வேலையைச் செய்ய ஓர் அனிச்சை உத்தரவு தோன்றி விடும்.

அப்படித்தான் என் இளைய மைத்துனனின் அருகிலிருந்த மூங்கில் கம்பு இயங்கி இருக்க வேண்டும்.

இரண்டில் எது தாக்கமான அடி என்பதை இப்போது என்னால் சொல்ல முடியவில்லை.

ஆனால் இளைய மைத்துனனின் அடி பாம்பின் தலை மீது விழுந்தது. அறிவு பூர்வமாக அது தான் சரியான இலக்கு.

பாம்புகளை உடம்பில் அடித்தால் அது சீறித் திரும்பும் வாய்ப்பு உண்டு. அது அப்படித் திரும்பி இருந்தால் மீண்டும் நான் அறிவு பூர்வமாக இயங்கியிருக்கக் கூடும். (முதல் வாய்பபைத் தவற விட்டபின் சொல்லும் சமாதானம்!

வாசலில் நிலா வெளிச்சத்தில் நான் உட்கார்ந்திருந்ததால் இரண்டு தாக்குதல்களில் என்னுடையது தான் எல்லார் கவனத்தையும் ஈர்த்திருக்கும். ஈர்த்தது.

அதனால் தான் குற்றத்தின் முழுப்பளுவும்



“பத்து மணிக்கு என் சொத்துக்களை இன்சூர் செய்துவிட்டு மூன்று மணிக்கு அவை தீப்பிடித்தால் எனக்கு என்ன கிடைக்கும்?”

“குறைந்தது மூன்று வருடம்!”

-பிரியாபாலு

---

என் மீது சுமத்தப்பட்டிருக்கிறது.

ராஜய்யா எவ்வளவு சாது, எத்தனை ஆண்டுகளாக என் ம்மாமனார் குடும்பத்தோடு அதற்குப் பரிச்சயம் என்ற விவரங்கள் நகரத்திலிருந்து சிறு இளைப்பாறுதல்களுக்காக கிராமத்து மாமனார் வீட்டிற்கு வரும் எனக்குத் தெரிய நியாயமில்லை.

அதையும் அவர்கள் அறிவார்கள்.

வீட்டிற்குள் நுழைய முயன்ற ஒரு நச்சுப் பாம்பைக் கொன்றதற்கு உரிய பாராட்டுதலுக்குப் பதில், ஒரு குடும்ப சாபத்திற்கு வழி வகுத்துவிட்ட கொடூரச் செயலுக்கு நான் பொறுப்பான குற்றப்பத்திரிகை எல்லார் முகத்திலும் தென்பட்டது.

“நான்... எனக்கு ஒண்ணுமே தெரியாது. பாம்பு, பெண்டு பிள்ளைங்க இருக்கற வீட்டிலே நுழைஞ்சுடப் போவுதுண்ணு அடிச்சுட்டேன்....”

என்னை நியாயப்படுத்திக் கொள்ள முயன்றேன். நான் எதிர்பார்த்த தேற்றுதலோ... ‘அதுக்கென்ன செய்யலாம். அந்தப் பாம்பின் விதி’ என்ற சமாதானத்தையோ காணோம்.

எல்லோரும் மௌனம் காத்தனர்.

குறைந்த பட்சம் என் மனைவி? ஆபத்சகாயியான என் முதல் மைத்துனர்? ம்ஹூம். எவரும் அசைந்து கொடுக்கவில்லை.

அவளைப்பார்ப்பதை உணர்ந்து நிமிர்ந்து என்னை ஒருமுறை முறைத்தாள் என் மனைவி.

எனக்கு ஏனோ எர்னெஸ்ட் ஹெமிங்வே ஞாபகம் வந்தது. அசந்தர்ப்பம்தான். ஆனால் வந்தது. ‘டெத் இன் த ஆஃப்டர் நூனில் மிருகங்கள் படும் வேதனைகளைப் பிரமாதப் படுத்துவார்கள் மிருகாபிமானிகள். அவர்களுக்கு மனிதாபிமானம் இருக்காது!’ கிட்டத்தட்ட இப்படி ஏதோ சொன்ன ஞாபகம்.

நடந்திருப்பது என்னவென்று மீண்டும் நான் நடுவாசலில் நீண்டு கிடந்த நாகப் பாம்பைப் பார்த்தேன்.

அதைக் கொல்கிற கிளர்ச்சிக்கோ இன்பத்துக்கோ இல்லையெனினும் முன்னெச்சரிக்கையாகவோ அனிச்சையாகவோ செய்திருந்தாலும் கொலை கொலைதான்.

அன்னியோன்னியமும் பரிகாசமும் கிண்டலும் சூழ்ந்திருந்த உல்லாசமான ஒரு நிலாவெளிச்ச நேரம் சட்டென்று மாறி சபையெதிரே நடந்த வன்முறை ஒன்றுக்கு சாட்சிக்களமான மௌனம் அங்கு நிலவியது.

நான்தான் குற்றவாளியா? நான் மட்டுமா?

இளைய மைத்துனனைப் பார்த்தேன்.

அவன் தாக்குதலில்தான் பாம்பின் உயிர் பிரிந்திருக்கும்.

அவனுக்கும் இதில் பங்கு உண்டு.

அவன் அடித்தது எதிர்வினை. என் தாக்குதல் தூண்டில் அனிச்சை வேகம்.

எங்குமே முதலில் தாக்குகிறவன்தான் குற்றவாளி. அவன் தான் பிறரைத் தூண்டுகிறான்.

“அடிக்காம விட்டிருந்தா அது பழங் கடத்துக்கா போயி சுருண்டுக்கிட்டு ஒரே கலவரம் பண்ணியிருக்கும்.” என் மூத்த மைத்துனர் என் ‘முதல் உதவிக்கு வந்தார்.

என் மீது அவருக்கு நேசம் அதிகம். அது மட்டுமல்ல. கண்டிப்பும் கண்டனமும் இறுக்கி, மூச்சு முட்டுகிற நிலையில் உள்ள எந்த ஆத்மாவின் மீதும் அதற்கு ரட்சண்ணியம் வழங்குகிற நேசம் அவருடைய ‘டிரேட் மார்க்’.

“பாம்பு! அடித்தாயிற்று. விட்டுவிடு. டேக் இட் ஈஸி. ஒரு விபத்து. ஓக்கே... தட்ஸ் ஆல்.. வி காண்ட் ஹெல்ப் இட்.”

வேறு யாராவது பாம்பை அடித்து விட்டு உழப்பிக் கொண்டிருந்தால் நான்தான் இப்படிக் கவசம் வழங்குவேன்.

ஆனால் அடித்திருப்பது நான்!

சிற்சில கொசுக்கள்... மூட்டைப் பூச்சிகள்... சில எலிகள் தவிர இதுவரை நான் எந்தக் கொலைகளையும் செய்ததில்லை.

எலிகளை அடித்தபிறகு மிகவும் வேதனைப்பட்டிருக்கிறேன்.

சாதுவான நாகப்பாம்பு என்பதே எனக்கு ஒரு புதிய விநோதம்! ஏற்கெனவே சொல்லி விட்டேனே... பாம்புகளுக்கும் எனக்குமுள்ள தொடர்பில் எந்தச் சிக்கலுமில்லை. குறுக்கீடுமில்லை.

அவற்றின் வழி அவற்றுக்கு.

என் வழி எனக்கு.

இதுதான் என் முதலாவது அத்துமீறல். எலி, கொசு, மூட்டை நீங்கலான இதர உயிர்க்குலம் முழுமைக்கும் எதிரான என் முதல் வன்முறை இதுதான்.

“என்ன செய்யலாம்?” என்று பலவீனமாகக் கேட்டேன்.

“பாம்பைத் தூக்கிட்டுப் போய் புளிய

மரத்தடியிலே தகனம் பண்ணிட னும்" என்றார் மாமனார்.

''நாளைக் கார்த்தாலே அந்த இடத்திலே கொஞ்சம் பால் வார்த் துடனும்'' என்று மாமியார் தொடர்ந்தார்.

''நாக தோஷத்துக்கு என்ன பண்றது?'' என்று கவலையோடு என் மனைவி குறுக்கிட்டாள்.

''எல்லம்மா கோவில் புத்துலே முட்டையும் பாலும் ஊத்தி, வெள்ளி யிலே நாக உரு வாங்கிப் போடறதா வேண்டிக்கோ." மாமியார். வேண்டு தல்களிலும் பிராயச்சித்தங்களிலும் அதிக நம்பிக்கை உள்ளவர்.

அது ஒரு வாக்கு மாதிரி என் மனைவி முகத்தில் சற்று நிம்மதி வரவழைத்தது.

மாமனார் யோசனைப்படி கரும் புச் சோகையும் செத்தை சருகுகளும் மாங்குச்சிகளும் வழியோரப் புளிய மரத்தின் கீழிருந்த மண் திடலில் குவிந்தன.

நாகப்பாம்பைத் தான் அடித்த மூங்கில் கழியில் வயிற்றுப் பக்கமாக நுழைத்து, இரு புறமும் தலையும் வாலும் எதிரெதிரே தொங்க இளைய மைத்துனன் எடுத்துச் சென்றான்.

இறுதி மரியாதை செலுத்துவது போல் எல்லோரும் எழுந்து வந்தனர். அக்கம் பக்கத்துவாண்டுகளுக்கு அதற்குள் செய்தி பரவி விட்டதால் அவை ஒரு சிறு கூட்டம்.

பாம்பை மத்தியில் கிடத்தி சோகையும் சருகுகளும் குச்சிகளும் சுற்றிலும் போடப்பட்டன.

கொஞ்சம் கெரஸின் தோய்ந்த கந்தல் ஒன்று கொண்டு வந்தார்கள்.

"மாப்பிள்ளே.. நீங்க தீ வையுங்க." மாமனார் உத்தரவிட்டார்.

முதல் மைத்துனி தீப்பெட்டியை நீட்டினாள்.

நான் குச்சியை உரசினேன். கொழுந்தைக் கந்தல் துணி மீது வைத் தேன்.

தீ பரவத் தொடங்கியது.

பாம்பின் உடல் பஸ்மமாகிறதைப் பார்க்கிற பொறுமையோ, மன உறுதியோ இல்லாததால் உடனே நான் அந்த இடத்திலிருந்து அகன்று விட்டேன்.

என் பின்னாலேயே மூத்த மைத்துனர் வந்தார். என் மனோ நிலைக்கு மாற்று சிகிச்சை தருகிற உத்தேசத்தோடு.

''மச்சான்! இது ஜீவ ஹிம்சைதான்... இல்லே?'' எதிர்மறையாகவே நான் கேள்வி போட்டேன்.

"வெறும் விபத்து. பாதுகாப்பு உணர்விலே ஏற்பட்ட ஒரு வேகம்." அவர் சாந்தமாக பொன் நிறுப்பது போல் வார்த்தைகளை அளந்து போட்டார்.

''அது என்னை ஒண்ணும் செய்ய வரலியே?'' மீண்டும் என்னை உளைத்து அரிக்கும் ஆதங்கத்தோடு நான் கேட்டேன்.

அந்தக் கேள்வியைக் கேட்கும்போது என்னைக் குற்றத்திலிருந்து விடுவிக்கிற அதி காரமும், மீண்டும் என்னை பழைய மனித னாக அங்கீகரிக்கிற உரிமையும் அவரிடம் உண்டு என்பது போல் எனக்குத் தோன்றியது.

"உத்தேசத்தில் குற்றம் இல்லேன்னா இந்த உயிர் நஷ்டத்திலேயும் பெரிய தீமை இல்லே. ராஜய்யா கௌரவமாக மரணமடைந்தது."

"அப்பவும் உயிர் நஷ்டம் தானே?"

கேட்டிருக்கக் கூடாது. கேட்ட பிறகு தான் எவ்வளவு சிறுபிள்ளைத்தனம் என்று தோன்றுகிறது.

உயிர்கள் நஷ்டப்படுவதைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள். இந்தக் காலத்தில்? சுத்த அசட்டுத்தனம். இப்படியெல்லாம் உழப்பிக் கொள்வதிலேயே புரியவில்லை? அப்புறம் நானே வேறு என் மீது 'லேபிள்' ஒட்டிக் கொள்ள வேண்டுமா?

மைத்துனர் பரிவாகச் சிரித்தார்.

"ம்ம்... நாம என்ன செய்யறது? அதுக்கு அவ்வளவுதான் விதி."

**ம**றுநாள் பாம்பின் பிரேத சம்ஸ்காரம் நடந்த இடத்தில் பால் வார்க்கும்போது இளைய மைத்துனன் என் காதருகில் கிசு கிசுத்தான்.

''மாமா... நான் அடிக்கலேன்னா அது உயிரு போயிருக்காது."

எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

"அப்ப நேத்திக்கே நீ அதைச் சொல்ல வேண்டியதுதானே!" என்று சீறினேன்.

"நீங்க ஏன் மாமா சொல்லலே?'' அவன் மடக்கினான்.

ஆமாம், ஏன் குற்றப்பங்கை முழுமையாக நானே ஏற்றுக்கொண்டேன்?

இளைய மைத்துனன் மீது அந்த நேரத்தைய குடும்ப கோபமோ திரங்காரமோ படியத் தேவையில்லை என்றுதானே? மாமனார் வீட்டில் மைத்துனனைக் குற்ற வாளியாக்கிவிடக் கூடாது என்ற கனிவா?

நான் மிருகாபிமானியா.. மனிதாபி மானியா? நான் ஹெமிங்வேயிடம் மானசீக மாகக் கேட்டேன். சந்தேகம் வலுத்தது.

இதைப் போன்ற ஐயங்களை விடுவிப்பதில் வல்லவள் என் மனைவிதான். கேட்டேன்.

"முகரைக்கட்டை" என்று தீர்ப்பளித்தாள்.

நீதிபதி : இந்த திருட்டை நீ தனியாகவா செய்தாய்?
குற்றவாளி : ஆமாங்க, இந்த காலத்தில் யாரையும் நம்ப முடிவதில்லை. - பிரியாபாலு

## 26. உயிரோவியம்

கெடிலத்தின் இரு கரைகளிலுமிருந்த படைகளை இணைத்து விட உத்தேசித்த காடவராயன், வடகரையிலிருந்த தனது வீரர்களை ஆற்றைக் கடந்து தென்கரைக்கு வந்து விட உத்தரவிட்டிருந்தான். வீரர்கள் அந்த உத்தரவைப் பாதி வரை மட்டுமே நிறைவேற்ற முடிந்தது. பாதி ஆற்றைக் கடந்த காடவராயன், தன் பொதி வண்டிகள் வரும் அதே பாதையில் பாண்டியரின் புரவிப் படைப் பிரிவின் முன்னால் ஆதித்யன் கன வேகத்தில் வந்து கொண்டிருப்பதைக் கண்டு திகைத்தான். அவனை மேற்கொண்டு சிந்திக்க விடாத பாண்டியரின் புரவிப் படைப் பிரிவு, காடவர் அணிவகுப்பை ஊடுருவி பல துண்டுகளாகப் பிரித்தது. ஆதித்யன் கரத்திலிருந்த வாள் கரகரவெனச் சுழன்றதையும் காடவ வீரர்கள் வரிசையாக மண்ணில் சரிந்ததையும் கண்ட காடவராயன், எஞ்சிய தனது வீரர்களுடன் புரவியைத் திருப்பிக் கொண்டு, மீண்டும் சேந்தமங்கலத்தை நோக்கி விரைந்தான். அங்கும் அவனுக்கு நிலைமை ஆதரவாக இருக்கவில்லை. தெற்கிலிருந்து எதிர்பாராமல் படைப் பிரிவொன்று சீனத்து வாலிபன் ஒருவனுடன் வந்து சேந்தமங்கலத்தைச் சுற்றி வளைத்திருந்தது. கெடிலத்தின் தென்கரையில் மலையமானும் சம்புவரையனும் வீரபாண்டியனின் படைப் பிரிவால் சுற்றி வளைக்கப்பட்டிருந்தார்கள். மூன்று பக்கங்களிலும் ஏற்பட்ட தாக்குதலில் இனி காடவ அரசோ, சிற்றரசர்களோ தப்பிப் பிழைக்க வழியேதும் இல்லையென்பதை ஒரு ஜாம நேரப் போரில் புரிந்து கொண்ட காடவராயன் தன் வீரர்களுடன் பின்வாங்கி கெடிலத்தின் பாதையிலேயே விரைந்து மறைந்தே போனான்.




விஷ்வக்சேனன்

சுவாரசியமே இன்றி அந்தப் போரை நடத்திய வீரபாண்டியனுக்கு அந்தப் போர் வெறும் விளையாட்டாகவே இருந்தது மட்டுமின்றி, "பல்லவன் நடுங்கப் போர் விளையாடி" என்று அவன் மெய்கீர்த்தி எழுதப்படவும் காரணமாயிற்று. காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனைச் சிறை செய்த வீரபாண்டியன், அவன் முதுமைக்கு மதிப்பளித்து தக்க காவலுடன் ரதமொன்றில் துறவியாரின் உத்தரவின்படி தஞ்சைக்கு அனுப்பி வைத்தான். கொங்கு நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட பொக்கிஷங்களோ, காடவராயனோ சேந்தமங்கலத்தில் இல்லையென்பதை வந்து அறிவித்தான் ஆதித்யன். அது பற்றிக் கவலை கொள்ள வேண்டாமென ஆதித்யனிடம் கூறிய வீரபாண்டியன், துறவியாரின் அழைப்பின் பேரில் அவனைத் தஞ்சைக்குச் செல்லவும் பணித்தான்.

மழையைப் பொழிந்து விட்ட மேகங்கள் விலகிச் சென்று விட்டதால் சுத்தமாகத் துடைக்கப்பட்டிருந்தது நீலவானம். கதிரின் ஒளி பரவத் தொடங்கிய அந்த காலைப் பொழுதில், தஞ்சைக் கோட்டை மதில்களின் பொந்துகளில் மழைக்கு அஞ்சி உள்ளே கிடந்த மைனாக்களும் கிளிகளும் வெளியே தலையை நீட்டி இனிமையாகக் குரலெழுப்பியபடி பறந்தன. நந்தவனத்து மரக்கிளைகளில் வந்து அமர்ந்து நீர்த்துளிகளை உதிர்த்து தரையைச் சிலிர்க்க வைத்தன!

ஈரமான புற்களைச் சுவைத்துக் கொண்டிருந்த மான்கள், திடீரென விழுந்த நீர்த் துளிகளால் திடுக்கிட்டு ஓட முயன்றன. ஓட முற்பட்டால் அப்பாவிகளைக் காரணமின்றி விரட்ட உலகில் பலர் இருக்கிறார்கள் என்பதை நிரூபிப்பது போல், மந்திகள் மரத்தின் உச்சியிலிருந்து சரசரவென இறங்கி அந்த மான்களைத் துரத்திச் சென்றன.

உப்பரிகைச் சாளரத்தினருகில் தலைநீட்டிய மரக்கிளையில் பறந்து வந்து அமர்ந்தது ஒரு குயில். தலையைச் சாய்த்து சாளரத்தினருகில் அமர்ந்திருந்த பூங்கோதையைப் பார்த்தது. எங்கோ வெறித்துக் கிடந்த அவளது பார்வையையும், முகத்தில் அப்பிக் கிடந்த சோகத்தையும் காணப் பொறுக்காமல், இரு முறை தனது இனிய குரலில் அழைத்துப் பார்த்து விட்டுப் பறந்தது.

உணர்ச்சிகளின் கலவையாக நிறைந்து கிடந்தது பூங்கோதையின் சித்தம். தஞ்சை அரண்மனைக்கு வந்தது முதல் அன்பையும் பரிவையும் அள்ளிக் கொட்டிய துறவியார் சில தினங்களாக அவளைக் கவனிக்கவும் நேரமின்றி புரவியிலும் ரதத்திலுமாக எங்கோ செல்வதும், ஓலைகளை வெவ்வேறு திசைகளுக்கு அனுப்பி வைப்பதுமாகத் தோன்றித்

தோன்றி மறைந்து கொண்டிருந் தார். தந்தை அவநிதன், போசளர் பிடியிலிருந்து விடுபட்ட பின்ன ரும் கூட தன்னைக் காண வரவில் லையே என்ற ஏக்கமும் அவள் உள்ளத்தில் வாட்டத்தை ஏற் படுத்தியிருந்தது. அவ்வப்பொழுது வந்து செய்திகளை அறிவித்து, ஆறு தல் கூறிச் சென்ற விஜயன், கண் ணனூர்க் கோட்டை வெல்லப் பட்டதையும், காடவ மன்னன் சிறைப்பட்டதையும் கூறிய போது கூட அவள் வெறித்த பார்வை யுடனேயே கேட்டுக் கொண்டாள். இனந்தெரியாத சோகத்தில் மூழ்கிக் கிடந்தவளுக்கு, காடவ மன்னன் தஞ்சைக்கு அழைத்து வரப்பட்ட தும் தனி சிறைச்சாலையொன்றில் காவலில் வைக்கப்பட்டதும் கூட ஒரு சுவாரசியத்தை உண்டாக்க வில்லை. எவரையோ வரவேற்க கோலாகலமாகத் தயாரான தஞ்சை அரண்மனையும் தோரணங்களும் பந்தல்களும் அவள் சித்தத்தில் பதியவில்லை. பிரமை தட்டிய சித்தத்தின் இடையே எழுந்தது ஒரு விளையாட்டுப் பிள்ளையின் முகம். அதன் விஷம் விழிகள் அவளை உறங்கவோ, உண்ணவோ விடாமல் அடித்து "ஏழையர் ஆவி உண்ணும் இணைக் கூற்றங் கொலோ அறியேன், ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கள் கொலோ அறியேன்" என்று புலம் பிய ஆழ்வாரின் திருவாய்மொழி யின் பொருளைப் புரிய வைத்தன.

சாளரத்தை விட்டு எழுந்த வள் அரண்மனையின் சிற்ப மண் டபத்தை நோக்கி நடந்தாள். தஞ் சையின் அந்தப் பிரசித்தி பெற்ற கலைக்கூடம் அவள் சிந்தைக்கு மெள்ள மருந்தும் விருந்துமாக மாறத் தொடங்கியது. கற்களாலும், தந்தத்தாலும், உலோகங்களாலும் நிறைந்து கிடந்த சிற்பங்கள் நாட் டியக் கலையின் அத்தனை பாவங் களையும், கரணங்களையும் விளக் கின.

இடது பாதம் தூக்கி ஆடும் தாண்டவமூர்த்தியும், மண்ணையும் விண்ணையும் காலால் அளந்து விட்டு மூன்றாவது அடிக்கு இடம் கேட்டுக் கொண்டிருந்த பெருமா ளும் சுந்தரனின் திருமணத்தைப் பாதியில் நிறுத்தி அவன் அடிமையென்று வாதிட்டுக் கொண்டிருந்த கிழ பிராம ணனும், வந்திக் கிழவி அளித்த பிட்டைத் தின்று விட்டு பாண்டியனின் கோபத்தைப் பொருட்படுத்தாமல் உறங்கிக் கிடந்த சிவபெருமானும், போர் துவங்க காத்துக் கிடந்த வர்களைப் பற்றிக் கவலையேதுமின்றி தேர்த்தட்டில் அமர்ந்து காண்டீபனுக்கு உபதேசித்துக் கொண்டிருந்த கண் ணனும் அந்த மண்டபத்தில் அழகிய சிற்பங்களாக நின்றிருந் தனர்.

அடுத்து நீண்ட மண்டபத்தில் நிறைந்து கிடந்த சித்திரங் களை அடைந்த பூங்கோதை, பணிப் பெண்ணொருத்தியிடம் வண்ணங்களை குழைக்கப் பணித்து விட்டு எதிரிலிருந்த சிலையொன்றில் மெள்ள தீட்டத் தொடங்கினாள். வண்ணக் கலவைகளில் மூழ்கி மூழ்கியெழுந்த தூரிகை, சாம்பல் நிறப் புரவியொன்றைப் பாய்ந்து வரச் செய்தது. அதன் நெற்றி முகப்பில் பெரும் முத்து ஒன்றும் ஊசலாடியது.

அரண்மனை வாயிலில் எழுந்த வாழ்த்துக் கோஷங் களோ, ரதங்களும் வீரர்களும் வந்து இறங்கிய ஆரவாரங் களோ, அவள் சித்தத்துக்கு எட்டவில்லை. உருவாகிக் கொண் டிருந்த சித்திரமும், வண்ணங்களும் அவளை ஏதோ கன வுலகத்தில் சஞ்சரிக்க வைத்திருந்தன.

தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்த ஆதித்யனுக்கு அணிவகுத்து நின்ற சோழர் காவற்படை அளித்த வரவேற் பில் அன்பும் மதிப்பும் தெரிந்தது. தாழ்த்திப் பிடித்த வாட்கள் பாண்டியருக்கு நன்றியைத் தெரிவித்தன. அரண்மனை வாயிலில் பேரமைச்சருடன் காத்து நின்ற துறவியாரை வணங்கிய ஆதித்யன், உடன் நின்ற விஜயனை விசாரித்த படியே உள்ளே நுழைந்தான். மேன்மாடத்து அதே அறையில் சாளரத்து இருக்கையிலமர்ந்து ஆதித்யனையும் அமருமாறு பணித்தார் துறவியார். ஆதித்யனின் விழிகள் அங்குமிங்கும் அலைபாய்ந்து யாரையோ தேடுவதைக் கவனித்து விஷமப் புன்முறுவலொன்றைப் படர விட்டுக் கொண்டார்.

கண்ணனூர்ப் போரையும், காடவராயன் தப்பியதையுப் விசாரித்த துறவியார், அவன் விழி களில் இன்னும் சலனம் தென்படு வதைக் கவனித்து, "யாரையேனு எதிர்பார்க்கிறாயா ஆதித்யா?" என்றார் ஏதும் அறியாதவர் போல. துறவியாரையும் அருகில் நின்ற விஜயனையும், அவர்கள் முகத்தில் தெரிந்த விஷமத்தையும் கவனித்த ஆதித்யன், அவர்கள் தன் மனத்திலோடிய எண்ணங் களை ஊகித்து விட்டார்கள் என் பதைப் புரிந்து கொண்டான். சட் டென்று அவன் முகத்தில் ஒரு செம்மை படர்ந்தது. ஆனால் அடுத்து வந்த அவன் சொற்கள் தெளிவாகவே ஒலித்தன. "ஆம் துறவியாரே, கொங்கு நாட்டு இள வரசி இங்கிருப்பது பற்றி அறி வேன். இதுவரையில் என் கண்





களில் தென்படவில்லையென்றுதான் பார்த்தேன்'' என்றான் ஆதித்யன்.

பட்டவர்த்தனமாக வந்த அவனது பதில் ஆதித்யனிடம் சுற்றிவளைத்துப் பேசுவதோ, மழுப்பலான பதில்களோ அறவே கிடையாது என்பதை நிரூபித்தது. அதே முறுவலுடன் துறவி யார் கூறினார். “ஆதித்யா, வீரனாயிருப்பவன் உணர்ச்சிகளை அடக்கப் பழக வேண்டும். உண்மையைக் கூறவும் சமய சந்தர்ப் பங்கள் உண்டு. எனினும் என்னிடம் கூறுவதில் தவறில்லை. ஆனால் சோழ நாட்டுத் தூதுவனாகச் செல்பவன் தனது உணர்ச்சிகளைக் கட்டுக்குள் வைத்திருப்பது அவசியம்.”

“சோழ நாட்டுத் தூதனா? நானா?” ஆதித்யனின் குரல் வியப்புடன் ஒலித்தது.

“ஆம் ஆதித்யா, காகதீய மன்னனிடமும், அவன் மகள் ருத்ராம்பாளிடமும் நீ சோழ நாட்டுத் தூதுவனாகச் செல்லப் போகிறாய். அதற்கு முன்பாக காஞ்சியில் விஜயகண்ட கோபாலனையும் காண வேண்டும்'' என்ற துறவியார், “சரி, ஆதித்யா, நீ சென்று நீராடி விட்டு வா. உணவருந்தியபடியே நம் திட்டங் களைப் பற்றிப் பேசலாம்” என்றார்.

அறையை விட்டு வெளியே வந்த ஆதித்யனை, சிற்ப மண்டபத்தின் வாயில் வரை அழைத்து வந்த வீ... ன், “இளவரசே, வந்தது முதல் நீங்கள் தேடியவ... ள்ளே இருக்கிறார். சென்று கவனித்துக் கொள்ளுங்கள் ...ன் பிறகு வருகிறேன்” என்று இலேசாக நகைத்து விட்டு ...கன்றான்.

உள்ளே நுழைந்த ஆதித்யன் சிற்பங்களின் வரிசை ...பக் கண்டு பிரமித்தான். அவனை இன்னும் பிரமிக்க ...வக்க அவன் தேடி வந்த உயிர்ச் சித்திரம் மண்டபத் ...ன் கோடியில் நின்று சித்திரமொன்றைத் தீட்டிக் கொண்டிருந்தது. அவன் காலடியோசை யைக் கேட்டுத் திரும்பிய பணிப் பெண்ணை விழிகளால் எச்சரித்து விட்டு அவள் கரத்திலிருந்த வண்ணக் கலவைகள் நிறைந்த பலகையை வாங் கிக் கொண்டான். சித்திரத்தில் சா... பல் நிறப் புரவியின் மேல் அமர்ந்தவனின் முகத்தையும் ஆதித்யனையும் மாறி மாறி கவ னித்த பணிப் பெண்ணுக்கு விஷ யம் விளங்கி விட்டதால் சிவந்து விட்ட முகத்துடன் தலையைக் குனிந்தபடியே நடந்து மண்ட பத்தை விட்டு வெளியேறினாள்.

பூங்கோதை எதையும் கவ னித்ததாகத் தெரியவில்லை. அவள் மும்முரமாகத் தீட்டிக் கொண்டிருந்த சித்திரத்தில் அந்தப் புரவி மீது அமர்ந்து வாளை உயர்த்தியபடி வந்து கொண்டிருந்தான் ஒரு விளை



# இல்லத்து புரட்சித்தலைவியின் கருத்து.
















பாக்கேஜ் செய்தது போல் தூய்மையானது

| | பாக்கேஜ் செய்த எண்ணெயின் விலை (1 லிட்டருக்கு) | வெண்டீ நிலையத்தில் (1 லிட்டருக்கு) | உங்கள் சேமிப்பு |
|---|---|---|---|
| சூப்பர் ரீஃபைண்டு சூரியகாந்தி எண்ணெய் | 51.00 | | |
| அனுராக் சூப்பர் ரீஃபைண்டு சூரியகாந்தி எண்ணெய் | | 43.00 | 8.00 |
| டபிள் ஃபில்ட்டர்டு கடலை எண்ணெய் | 48.00 | | |
| டெய்லி டபிள் ஃபில்ட்டர்டு கடலை எண்ணெய் | | 42.00 | 6.00 |
| சூப்பர் ரீஃபைண்டு கடலை எண்ணெய் | 54.00 | | |
| அபூர்வா சூப்பர் ரீஃபைண்டு கடலை எண்ணெய் | | 46.00 | 8.00 |
| பிளெண்டட் வெஜிடபிள் எண்ணெய் | 45.00 | | |
| அனுகூல் பிளெண்டட் வெஜிடபிள் எண்ணெய் | | 37.00 | 8.00 |

அபூர்வா
சூப்பர் ரிஃபைண்ட் கடலை எண்ணை

டெய்லி

டெய்லி சேமிப்பு, டெய்லி அரவணைப்பு.

FOUNTAINHEAD-1929-96



## பாடம் படிக்கும் எம்.எல்.ஏக்கள்!

●● கேரள சட்டசபைக்கு இம்முறை தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற எம்.எல்.ஏக்களில் நாற்பத்தி நான்கு பேர் புதுமுகங்கள்! சட்டசபை வளாகத்தையே முன்பின் பார்த்திராத இவர்களுக்கு சபை நடவடிக்கைகள் எப்படித் தெரியும்?

பார்த்தார், சபாநாயகர் விஜயகுமார். முன்னாள் சபாநாயகர்கள், அனுபவம் மிக்க மூத்த அரசியல் தலைவர்களைக் கொண்டு, எம்.எல்.ஏக்களுக்கு மூன்று நாள் பயிற்சி முகாம் ஒன்று ஏற்பாடு செய்து விட்டார்!

எப்படி கேள்விகள் கேட்பது, எப்படி எழுத்து மூலம் பதில் பெறுவது, மசோதாக்களை எப்படி தாக்கல் செய்வது, பட்ஜெட் விவாதம் என்றால் என்ன, அதில் எப்படிக் கலந்து கொள்வது, பத்திரிகைத் தொடர்பை பலப்படுத்துவது எப்படி என்பதிலிருந்து தொடங்கி, அந்த மூன்று நாள் பயிற்சி வகுப்புகளில் பாடம் சொல்லித் தர ஏற்பாடு செய்து விட்டார்!

பி.கு : சபாநாயகர் விஜயகுமாரும் புதுமுகம் தான்! சபையை நடத்திச் செல்வது எங்ஙனம் என்று அவருக்கு யாரும் பாடம் எடுத்தார்களா என்று தெரியவில்லை!

●● கே.வி. தாமஸ் என்பவர், கேரளாவிலுள்ள தேவரா சேக்ரட் ஹார்ட் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி வந்தவர். பன்னிரண்டு வருடங்கள் முன்பு, தமது அரசியல் ஆர்வம் காரணமாக, கல்லூரிக்கு நீண்ட விடுப்பு சொல்லிவிட்டு, காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து விட்டார் தாமஸ்.

அப்போது நடந்த எம்.பி. தேர்தலில் போட்டியிட்டு, வென்று பாராளுமன்றம் சென்றவர். தம் தொகுதிக்கு நிறைய செய்து, நல்ல பெயரும் எடுத்தார். இதெல்லாம் பழைய கதை.

சமீபத்திய தேர்தலில் காங்கிரஸின் பிற பலரைப் போலவே தாமஸும் தோல்வியைத் தழுவ, அத்தோடு தம் அரசியல் வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு மீண்டும் பேராசிரியர் பணிக்கு வந்து விட்டார்!

பாடம் நடத்தத் தொடங்கியதோடு மட்டுமல்லாமல் தாம் மீண்டும் தம் படிப்பைத் தொடரவிருப்பதாகவும் சொல்லி இருக்கிறார் தாமஸ்.

"எம்.ஏ. அரசியல் படிக்கப் போகிறேன். முடித்து விட்டு, பி.எச்.டி. பண்ணவும் உத்தேசம்" என்கிறார்.

"நீண்ட இடைவெளிக்குப் பின் மீண்டும் பேராசிரியராக வந்திருக்கிறீர்களே, மாணவர்களுடன் தொடர்பு கொள்வதில் (communication) சிரமமாக இல்லையா?" என்று கேட்டால், "இதிலென்ன சிரமம்? நான் அரசியலில் இருந்த காலத்திலும் என் மகளுக்கு வீட்டிலேயே பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தவனாயிற்றே?" என்கிறார்.

திருவனந்தபுரத்திலிருந்து :
**எஸ். எஸ். மணி**

யாட்டுப் பிள்ளை. அருகில் ரதமொன்று நின்றிருக்க, சீனத்து வாலிபன் ஒருவன் அரக்கர்களைப் போல் தோன்றிய சில வீரர்களுடன் போராடிக் கொண்டிருந்தான். ரதத்தில் அழகிய மங்கை யொருத்தியும் அமர்ந்து அச்சத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். சுற்றிலுமிருந்த பகுதி மலை களும் வனமுமாகத் தெரிந்தது. முதன் முதலில் ஆதித்யனைச் சந்தித்த அந்த நிகழ்ச்சி எத்தனை ஆழமாக அவள் உள்ளத்தில் பதிந்திருக்கிற தென்பதை நிரூபித்தது அந்தச் சித்திரம்.

தீட்டி முடித்தவள் தலையைச் சாய்த்து சித்திரத்தை அழகு பார்த்தாள். திரும்பாமலே அவளிடமிருந்து, "பெண்ணே, சித்திரம் எப்படியிருக்கிறது?" என்ற கேள்வியொன்றும் உதிர்ந்தது.

"தத்ரூபமாக இருக்கிறது" என்றான் ஆதித்யன்.

அவன் குரலைக் கேட்டுச் சட்டென்று திரும்பிய பூங்கோதை, அத்தனை நேரமாக வண்ணக் கலவைகளை ஏந்தி நின்றது பணிப் பெண்ணல்ல என்பதையும், யாரை அத்தனை சிரமப்பட்டு சித்திரமாகத் தீட்டினாளோ, அவனேதான் என்பதையும் கண்டு பிரமித்தாள். அவள் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. சந்தனத் தட்டில் கொட்டி விட்ட குங்குமமாக அவள் முகம் மாறியது. நாணமும் கோபமும் ஆற்றாமையும் போட்டியிட, அங்கிருந்து ஓடி விட முயன்றவளின் கால்கள் நகர மறுத்தன. தூரிகையை நழுவ விட்ட மலர்க் கரங்கள் முகத்தைப் பொத்திக் கொண்டன.

நாணமும் தவிப்புமாக முகத்தைப் பொத்தியபடி நின்ற பூங்கோதையைக் கண்ட ஆதித்யன், வண்ணக் கலவைகளின் பலகையைக் கீழே வைத்து விட்டு, அவள் முகத்தை மூடியிருந்த கரங்களை மெள்ள விலக்கினான். கவிழ்ந்து கிடந்த முகத்தை நிமிர்த்தி, படபடத்த அந்தக் கருவண்டுக் கண்களுடன் தன் கண்களைக் கலக்க விட்டான்.

ஆசையும் நாணமும் பொங்கிய கருவிழிகளின் மீது படபடத்த இமைகளும், நெற்றியில் துளிர்த்த குறுவியர்வையும், செவிகளின் நுனி சிவந்து கன்னத்துடன் போட்டியிட, துறவியார் அவளுக்கு அளித்திருந்த சிவந்த கற்கள் பதித்த

காதணிகள் தங்கள் பளபளப்பை இழந்து வெட்க, சங்கடத்தில் அவள் கால்களை மாற்றி அசைத்த போது ஒலித்த மெல்லிடை ஆதித்ய னின் உயிரைப் பறிக்க, "அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்?" – என்று கோலங்காண் படலத்தில் கம்பன் வர்ணித்த நிலையை எட்டியிருந்தான் ஆதித்யன்.

"பூங்கோதை" என்று அழைத்த அவன் குரல் கரகரத்து நெகிழ்ந்து கிடந்தது.

குழலும் யாழும் உள்ளத்தை வருடி அளிக் கும் இன்பத்தை விட, மந்தரஸ்ருதியில் கர கரத்து தன் பெயரை உச்சரித்த ஆண்மகனின் குரல் அதிக இன்பத்தை அளிக்க இயலும் என் பதை உணர்ந்தாள் பூங்கோதை.

மீண்டும் அழைத்தான் அவன். "பூங் கோதை!"

"ம்" என்ற ஒற்றை ஒலியே பதிலாக வந்தது.

"வந்தது முதல் உன்னைக் காணத் துடித்துக் கொண்டிருந்தேன்."

"நானும்தான்."

"அப்படியொன்றும் தெரியவில்லையே?" அவன் குரலில் பொய்க் கோபம் தெரிந்தது.

அவள் புருவங்கள் நாணேற்றிய வில்லாக உயர்ந்தன.

"நான்தான் உன்னைக் காண மாளிகை முழுவதும் சுற்றி வந்தேன். நீ இருந்த இடத்தை விட்டு நகர்ந்ததாகத் தெரியவில்லையே?"

தான் சித்திரமாகத் தீட்டி அவனை ரசித்துக் கொண்டிருந்ததைத்தான் குறிப்பிடுகிறான் என்பதைப் புரிந்து கொண்டாள் பூங்கோதை. அவள் சிவந்த இதழ்கள் விரிந்து முத்துக்களைக் காட்டின.

கைவசமிருந்தால், அந்த முறுவலுக்குக் கொற்கையிலிருந்து காஞ்சி வரை பரிசாக அளித்து விடலாம் என்று தீர்மானித்தான் ஆதித்யன். "ஏன் பதிலில்லை பூங்கோதை?" என்றும் கேட்டான் அவன்.

"பேச்சில் மயக்குவதற்கு இந்த மதுரைக் காரர்களுக்கு கற்றுத் தரவா வேண்டும்?" என் றாள் அவள்.

"கொங்கு நாட்டுப் பெண்கள் வெகு அழுத் தக்காரிகள். மயக்குவது கடினம்" என்றான் அவன் மீண்டும்.

வெள்ளித் தட்டில் முத்துக்களை இரைத்தது போல நகைத்தாள் அவள்.

அர்த்தமற்ற பேச்சும், சிரிப்பும் நிரம்பிய மாயா உலகத்தில் சஞ்சரித்தனர் இருவரும். மாயை என்பது புரிந்தாலும் அதிலிருந்து விடு பட மனித மனம் விரும்புவதில்லையே!

ஆதித்யனைத் தேடியபடி வந்த துறவி யார், சிற்ப மண்டபத்தில் நுழைந்தார். உலகை மறந்து பேசிக் கொண்டிருந்த இருவரையும் கண்டவர் முகத்தில் முறுவலொன்று படர்ந் தது. பூர்வாசிரம நினைவு வந்ததாலோ என் னவோ தலையை ஒருமுறை உலுக்கிக் கொண் டவர் அந்த உலகத்தில் குறுக்கிட விரும்பாமல் திரும்பி நடந்தார்.

வெளியே வந்ததும் சற்று நிதானித்தவருக் குக் காடவ மன்னனின் நினைவு எழவே அவனை அடைத்து வைத்திருந்த சிறையை நோக்கி நடந்தார். சிறைச்சாலையின் உள் ளிருந்தபடி சாளரத்தின் வழியே துறவியார் வரு வதைக் கவனித்த காடவ மன்னன் கோப் பெருஞ்சிங்கனின் முகத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் தோன்றி மறைந்தன. அவன் கரத் தில் எங்கிருந்தோ ஒரு குத்து வாளும் தோன்றி யது. துறவியார் உள்ளே நுழையக் காத்திருந் தான் "வாள் நிலை கண்ட பெருமாள்" காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன்.

(தொடரும்)

## "சொற்களில் அடங்காத சந்தோஷம்!"



**எல். சண்முகசுந்தரி!**

இருபத்தாறு வார 'சுருக்-நறுக்' ரேஸில் ஜெயித்த ராமநாதபுரத்துக்காரர். அங்கே ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவில் பணிபுரிபவரைப் பார்த்து, தங்க கைக்கடிகாரங்கள் இரண்டினைப் பரிசாகத் தரப் போன போது, "என் சந்தோஷத்தை வார்த்தைகளில் சுருக்கி விட முடியாது. நன்றி, நன்றி, நன்றி" என்று குதூகலித்துப் போய் விட்டார்!

சண்முகசுந்தரிக்குக் கிடைக்கிற முதல் பத்திரிகைப் பரிசு இதுதானாம். "எல்லா பத்திரிகைகளையும் படித்து விடுவேன். போட்டிகளில் பங்கேற்கும் ஆர்வத்தைத் தூண்டியவர் என் மாமாதான் (அக்காவின் கணவர்)!" என்றார்.

கல்கியில் 'சுருக்-நறுக்' போட்டி அறிவித்தவுடனேயே, "நீ நிச்சயம் கலந்து கொள். வெற்றி பெறுவாய்!" என்று உற்சாகமூட்டி, இவரை ஈடுபட வைத்திருக்கிறார் இவரது மாமா!

சண்முகசுந்தரி வேலை பார்க்கும் வங்கிக்கே சென்று நாம் பரிசை அளித்த போது, நம்மோடு சேர்ந்து இவரை வாழ்த்திய வங்கி மேலாளர், "இரண்டு கடிகாரங்கள் வந்து விட்டன... கட்டிக் கொள்ள இன்னொரு வரை கூடிய சீக்கிரம் தேடி விட வேண்டியதுதான்!" என்று ஜோக் அடிக்க, "சரிதான். ஆபீசர் எக்ஸாம் எழுதி, உங்கள் சீட்டில் நான் அமர்ந்த பின்தான் திருமணம்" என்று மேனேஜர் எதிரிலேயே தன் லட்சியத்தைச் சொல்லி, வியக்க வைத்தார் சண்முகசுந்தரி!

– நமது நிருபர்




# TAMILNAD HOSPITAL LIMITED

Cheran Nagar (Off Velachery - Tambaram Road), Madras 601 302.
Fax : 2375229. Telex : 041-26053 TNH IN.

NRI PROMOTED HOSPITAL

# CANCER SURVIVAL CENTRE

Call 2375221, 2377707

for the following facilities



## • EARLY CANCER DETECTION

1. Complete physical examination
2. Pap smear (for women)
3. Chest X-ray
4. Mammogram (for women)
5. Stool for occult blood
6. Proctosigmoidoscopy
7. Blood tests: CBC, Hepatitis B Antigen, Hepatitis C Antibody
8. Ultrasound examination of abdomen
9. E.N.T. examination
10. Gynecologic examination (for women)
11. Upper Gastro-intestinal Endoscopy

## • CANCER DIAGNOSTIC PROCEDURES

1. Tumour Makers (CEA, beta HCG, CA 19-9, CA-125, CA 72-4, Alpha Feto)
2. Gamma Camera (Bone scan, Liver scan)
3. Estrogen Receptor
4. Rhino Pharyngo Laryngoscopy
5. ERCP
6. C.T. Guided Biopsy-Brain Lesions
7. C.T. Guided Stereotaxic Biopsy
8. Bone Marrow Biospy
9. Prostate Specific Antigen Test
10. Colonoscopy, Colposcopy, Laryngoscopy
11. Sinus Endoscopy

## • TREATMENT FACILITIES

1. Chemotherapy
2. Immunotherapy
3. Linear Accelerator with simulator
4. Cobalt Teletherapy
5. Brachytherapy - HDR
6. Treatment Planning System
7. Electron therapy
8. Styroform Block Cutting
9. Debulking & Radical-surgery
10. Psychology help and counselling
11. Nutritional support and counselling

## • SPECIALITIES AVAILABLE

1. Surgical Oncology
2. Medical Oncology
3. Radiation Oncology
4. Nuclear Oncology

## QUALITY ASSURANCE PROGRAMME

Tumour Board

Insight - 143-R

**Early detection is the only way to fight cancer**



# 27

## சோழ நாட்டு சிம்மம்

அரசியல் பிரமுகர்களுக்கென்றே பிரத்யேகமாக அமைக்கப்பட்டிருந்தது அந்தச் சிறைச்சாலை. அதில் அடைக்கப்பட்டிருந்த காடவ மன்னன் சாளரத்தின் வழியே பார்த்து, வந்து கொண்டிருப்பவர் துறவியார்தான் என்பதை உறுதி செய்து கொண்டான். அவன் மூர்க்கம் கணத்துக்குக் கணம் உயர்ந்து கொண்டேயிருந்தது. தனது இந்த நிலைக்குக் காரணமான துறவியாரை ஒழித்துக்கட்டி விடுவது, பிறகு சோழ மன்னனே வந்து என்ன தண்டனை அளித்தாலும் கவலையேதுமில்லை யென்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டான். மறைத்து வைத்திருந்த குத்துவாளைக் கரத்திலெடுத்துச் சாதகமாக வைத்துக் கொண்டு, துறவியார் தனித்து உள்ளே நுழையும் தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

துறவியாரின் திடமான காலடியோசையும் அவர் காவல் வீரர்களிடம் ஏதோ விசாரித்துவிட்டு அறையை நோக்கி மீண்டும் நடந்து வருவதும் காடவ மன்னனுக்குக் கேட்டது. தலையைக் குனிந்தபடியே அமர்ந்திருந்தவன், இலேசாக விழிகளை உயர்த்தி, அவர் வாயிலில் இரு கணங்கள் நிற்பதையும் பின்பு தன்னை நோக்கி வருவதையும் கண்டு கொண்டான். திடீரென்று கரத்தில் பிடித்த குத்துவாளுடன் புயலாக எழுந்தவன், வேங்கையைப் போல் அவர் மீது பாய்ந்தான்.

அவன் திடீரென்று எழுந்ததையும், கரத்தில் குத்துவாளொன்று மின்னியதையும், கண் கொத்திப் பாம்பாக கவனித்துக் கொண்டிருந்த வாயிற்காவலர்கள், வாளை உருவிக் கொண்டு உடனே பாய்ந்தனர். துறவியார், கோப்பெருஞ்சிங்கனிருந்த சிறைச்சாலைக்குள் நுழைந்ததைக் கவனித்துவிட்டு விஜயனும் பின்னால் ஓடி வந்தான். ஆனால் அடுத்தகணமே காவலர்களும், விஜயனும் திகைத்து அப்படியே நிற்கும்படியான நிகழ்ச்சியொன்று அவர்கள் கண்ணெதிரில் நடந்தது.

கோப்பெருஞ்சிங்கன் குத்துவாளுடன் தன்னை நோக்கிப் பாய்வதைக் கவனித்தும் அசையாமல் ஆஜானுபாகுவாக நின்ற துறவியாரின் இடதுகரம் உயர்ந்தது. வாள்



வீரமல்ல!" என்று.

சுளீரென்று சாட்டையால் அடிக்கப்பட்டவன்போல் நிமிர்ந்தான் காடவ மன்னன். அவன் சிற்றரசை அமைக்கும் முன் சிறந்த மல்லனாக விளங்கியபோதிருந்த அவனது சொந்தப் பெயர் வீரமல்லன் என்பது. சர்வ சாதாரணமாகத் தன்னைத் தூக்கி விட்டு, தனது பூர்வீகப் பெயரையும் மௌனமாக உச்சரித்த துறவியாரை நோக்கிய காடவ மன்னனின் முகத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் மாறி மாறித் தோன்றின.

அடுத்து அவன் சொற்களும் தடுமாறிய படி வந்தன. "நீர் உண்மையில் யாரென்று தெரியவில்லை. ஆனால் இந்தக் குரலில் ஆணையிடும் தொனியை எங்கோ கேட்டிருக்கிறேன். வாளுடன் வருபவனை இப்படித் தூக்கி எறியும் முறையும் ஒரு சிலருக்கே தெரியும். நிச்சயம் நீர் துறவியல்ல. நீர் போட்டிருக்கும் இந்நத் துறவிக்கோலத்தை மதித்துக் கேட்கிறேன். சிறைப்பட்டவன் ஒரு சிற்றரசனாக இருந்தால் தனி மாளிகையில் காவலில் வைப் பதுதானே சோழர் வழக்கம்? என்னை இப்படி சிறைச்சாலையில் அடைத்திருப்பது தர்மமா? நீதியா? ...ந் துறவியே சொல்"- இரைந்து

# இந்திர தனுசு

... வலதுகரத்தை அவன் தோள்களில் கொடுத்து ...ளைத்து,தேர்ந்த மல்லனைப்போல் ஒருமுறை ...ன்று திரும்பினார் துறவியார். குத்துவாள் ...க்க, மொத்தமாகத் தூக்கி எறியப்பட்ட ...ப்பெருஞ்சிங்கன், பறந்து, சிறைச்சுவரில் ...ாதி விழுந்தான். அசையக்கூட இயலாமல் ...வியாரை வெறித்த அவன் பார்வையில் ...மை தட்டியிருந்தது.

"அவனை எழுப்பி இருக்கையில் அமர்த் ...ங்கள்"- துறவியாரின் குரலில் ஆணையிடும் ...னி பூரணமாக ஒலித்து, பிரமிப்பில் ...ந்துவிட்ட காவலர்களையும் விஜயனை ...டிவர வைத்தது. காடவமன்னனை எழுப் ... சரியாக அமர்த்திய வீரர்களை விலகு ...சைகை செய்த துறவியார், நிதானமாக ...னை அணுகினார். மீண் ... அவர் குரல் ஒலித்தது: ...ந்திரம் அறிவுக்குச் சத்ரு

...கேட்டவன் குரலில் இன்னும் அடங்காத ஆத்திரம் ஒலித்தது.

துறவியாரின் முகம் மாறியது. என்றும் உணர்ச்சிகளை அதிகம் வெளிக்காட்டாத அவர் சிவந்த முகம் இன்னமும் சிவந்து, பெருவிழிகளில் கனல் பறந்தது, "வீரமல்லா! தர்மத்தையும் நீதியையும் பற்றிப் பேச உனக்குத் தகுதியில்லை. சோழ ராஜராஜர் உனக்கு என்ன குறை வைத்தார்? வாள்நிலை கண்ட பெருமான் என்று பட்டமளித்து, அரசவையில் தக்க பதவியளிக்கவில்லையா? தன் சகோதரியை உனக்கு மணமுடித்துத் தர வில்லையா? நீ தனிப்பட அரசாள விரும்பியபோதும் சம்மதிக்கவில்லையா? வீரனுக்கு வெற்றியும் தோல்வியும் சகஜம். அவர் பாண்டியர் போரில் தோற்றுவந்தபோது, உறுதுணையாக இருக்க

**விஷ்வக்சேனன்**

வேண்டிய நீயே அவரை சிறை செய்தாய். எந்த மாளிகையில் அவரைச் சிறைவைத்தாய்? நேற்று முளைத்த சிற்றரசனான உன்னைச் சிறையில் அடைத்ததற்கே இத்தனை கொதிப்பிருந்தால் வேங்கி முதல் குமரி வரை ஒரே குடையில் ஆண்ட சோழ மரபில் வந்தவரை சிறையில் அடைத்ததற்கு அவர் எத்தனை வருந்தியிருப்பார்? உன்னுடைய அந்தச் செயல் தான் தமிழகத்தில் பேரரசர் அடியெடுத்து வைக்கக் காரணமென்பதை என்றாவது எண்ணினாயா நீ? இனியொரு முறை சோழர் நீதியையும், தர்மத்தையும் பற்றிப் பேசினால் உன்னைச் சுருட்டியப் பிண்டமாக அடித்து விடுவேன், எச்சரிக்கை!" இரும்பாக ஒலித்த அந்தக் குரலில் கோப்பெருஞ்சிங்கன் சப்த நாடிகளும் ஒடுங்கிப் போயிருந்தான். அவன் உடலும் இலேசாக நடுங்கியது. அவர் வார்த்தைகளில் தெறித்த உண்மை அவனை நெருப்பாகச் சுட்டது.

துறவியாரின் குரல் மீண்டும் ஒலித்தது. "இப்பொழுது சொல் வீரமல்லா! கொங்கு நாட்டிலிருந்து கொள்ளையடித்த பொற்குவியல் எங்கிருக்கிறது? காடவராயன் எங்கே?"

தடுமாறியபடி பதிலளித்தான் காடவ மன்னன். "துறவியாரே, நான் சற்று நிதானத்திற்கு வர அவகாசமளியுங்கள். இன்னும் இரு தினங்களில் அனைத்தையும் கூறி விடுகிறேன்."

சிம்மத்தின் கர்ஜனை போல் ஓர் ஒலி எழுந்தது, துறவியாரிடமிருந்து. ஒருகணம் அவனை வெறித்தவர் திரும்பி வெளியே நடந்தார். அந்த கர்ஜனையில், தள்ளி நின்ற விஜயனின் உடல் சிலிர்த்தது.

சிறைச்சாலையில் நிகழ்ந்தவற்றை விஜயன் வந்து விளக்கியதும் வியந்த ஆதித்யன், துறவியாரைக் காண விரைந்தான். அதே மேன் மாடத்து அறையில் சாளரத்தருகேயிருந்த இருக்கையில் அமர்ந்து, சாவதானமாக ஏதோ ஓலைகளில் எழுதிக் கொண்டிருந்தார் துறவியார். சாந்தம் தவழும் அந்த முகத்தையும், அவர் நிதானத்தையும் கண்ட ஆதித்யன், 'சற்று முன்பு காடவ மன்னனை ஒரு மல்லனைப் போல் தூக்கியெறிந்ததாக இவரையா விஜயன் குறிப்பிட்டான்?' என்று உள்ளுக்குள் வியந்தான்.

"துறவியாரே, சிறைச்சாலையில்..." என்று தொடங்கியபடியே உள்ளே நுழைந்த ஆதித்யனை, தலையசைத்து வரவேற்றவர், அது ஒன்றும் அத்தனை முக்கியமானதல்ல என்பதைப் போல கரத்தை அசைத்துவிட்டு. "அது கிடக்கட்டும் ஆதித்யா. நீ காஞ்சிக்குச் செல்ல ஏற்பாடுகள் செய்துவிட்டேன். கண்ட கோபாலனுக்கும் காகதீய மன்னனுக்கும் சோழ தூதர் வருவதாகச் செய்தியனுப்பி விட்டேன்"

## அருள்வாக்கு

**தன் வேலையை இன்னொருத்தனிடம் விட்டு விட்டு, தான் 'ஊரானுக்குத் தொண்டு செய்கிறேன்' என்று போனால் அது பரிஹாஸந்தான், fraud (மோசடி)தான். தாயார், தகப்பனார், ஸஹோதரர், பத்னி, புத்ரர் இருந்தால் அவர்களுக்குச் செய்ய வேண்டிய ட்யூட்டிகளைச் செய்யாமல் லோகத்துக்கு உபகாரம் செய்கிறேன் என்றால் அது 'ஹிபாக்ரிஸி' (போலி வேஷம்)தான். இப்படியெல்லாம் பண்ணிவிட்டு மநுஷ்யாள் எடுத்துக் காட்டினால் கோபம் வருகிறது, எரிச்சல் வருகிறது என்றால் பரோபகாரத்தால் இவனுக்கு எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்றுதான் அர்த்தம். 'எல்லாரிடமும் அன்பாயிருக்கணும், மதுரமாய்ப் பழகணும்' என்பதுதான் தொண்டு செய்கிறவனுக்கு லக்ஷணம். பொதுத்தொண்டு என்பதற்காகவே வீட்டு மநுஷ்யர்களிடம் அன்பு போய், எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் இவன் தொண்டு செய்து என்ன புண்யம்? இவனுக்கு என்ன சித்த சுத்தி**

என்றார்.

"நாளைக்காலையிலே புறப்படுகிறேன் துறவியாரே, அதற்கு முன்பாக தங்களிடம் ஒன்று கூற வேண்டும்..." என்றான் ஆதித்யன்.

"சொல் ஆதித்யா."

"பாண்டியருக்குப் பரிசாகத் தாங்கள் இந்திரதனுசை அளித்தீர்கள்."

"ஆம்"

"உண்மையில் அது வரகுண பாண்டியர் காலத்தில் சோழ மன்னருக்குச் சீதனமாக அளிக்கப்பட்டது"

"ஆம். உண்மை"

"தன் முன்னோரால் மகளின் மணப் பரிசாக சோழர்களுக்கு அளிக்கப்பட்டதை, மீண்டும் பெற்றுக் கொள்ள பாண்டிய மன்னர் ஜடாவர்ம சுந்தரபாண்டியர் விரும்பவில்லை. தலைமுறைகள் மாறலாம். தர்மங்கள் மாறாது என்று கூறச் சொன்னார் மன்னர்" என்றான் ஆதித்யன்.

துறவியார் சற்று நேரம் மௌனமாயிருந்தார். சற்றுக் கழித்து "ஆதித்யா, காடவனிடத்தில் குவிந்து கிடக்கும் பொற்குவியலை என்ன செய்வதாக உத்தேசம்?" என்றார்.

"அவை போரிட்டுப் பெற்றவை. எனவே அவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு திருவரங்கத்திற்கும், தில்லைக்கும் திருப்பணிகள் செய்யவும் மூன்றாவது பகுதி கொங்கு மக்களின் நலனுக்காகவும் செலவிடப்படும்" என்ற ஆதித்யன், தனது அறைக்குச் சென்று நீண்ட பேழையொன்றுடன் திரும்பினான்.

"துறவியாரே. தாங்கள் அளித்த இந்திர



ஏற்பட முடியும்? குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்கிற மாதிரி பண்ணிக் கொள்ளக் கூடாது.

தன் லிமிடேஷனை எவனும் எப்போதும் உணர வேண்டும். மனுஷ்யராய்ப் பிறந்து விட்டோம். அதனால் நாம் பல திருஸில் கட்டுப் பட்டுத்தான் கிடக்கிறோம். ஆசைகள், ஆஸ்திகள் பெரிசாய் இருக்கலாம். அவை நல்லதாகவும் இருக்கலாம். லோகத்துக்கு நல்லது பண்ணணும் என்றே ஆர்வமிருந்தாலும் நமக்கும், நம் குடும்பத்துக்கும் செய்தேயாக வேண்டும் என்ற நிர்பந்தம் இருப்பதை உணர்ந்து இந்த ட்யூட்டிக்கு ஹானியில்லாமல்தான் லோக ஸேவை செய்ய வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

தனுசின் பொன்னோலைகள் இதிலிருக்கின்றன. அவற்றை உரிய இடத்திலேயே வைத்து விடுங்கள்'' என்றான்.

துறவியாரின் முகத்தில் விஷமம் படர்ந்தது. "உண்மை ஆதித்யா. உண்மை. கொங்கு நாட்டின் நிலை உயர வேண்டியது அவசியம் தான். மன்னன் அவந்தன் இப்போது சோழர்களுக்கு மட்டுமின்றி பாண்டியருக்கும் நெருங்கியவனாகிவிட்டானல்லவா?'' என்றவர் பலமாக நகைத்தார். நகைத்து முடித்தவர், "சரி, ஆதித்யா, நாளை உதயத்தில் நீ காஞ்சிக்குப் புறப்பட சித்தமாக வேண்டும். விஜயனும் உன்னுடன் வருவான்" என்றார். காஞ்சியின் நிலை பற்றி விளக்கவும் தொடங்கினார்.

"**க**ல்லார் மதில் சூழ் கச்சி நகர்'' என்று திருமங்கை மன்னன் பாடிய காஞ்சியின் உயர்ந்து நீண்ட மதில்கள், ஆதித்யன் முன்னாக எழுந்தன. கண்டகோபாலன் கோட்டைக்கு வெளியே இழுக்காவிட்டால், காஞ்சியை வெல்வது கடினம் என்று துறவியார் கூறியதன் பொருள் ஆதித்யனுக்குப் புரிந்தது.

சோழ தூதர் வருகையை அறிவித்த பேரிகைகளைத் தொடர்ந்து, கோட்டைத் தலைவன் சிறுபடைப் பிரிவுடன் வந்து, ஆதித்யனை எதிர்கொண்டு வரவேற்றான். உயர்ந்து எழுந்த மாளிகைகளையும், கம்பீரமாகத் தெரிந்த கோபுரங்களையும் கண்டு வியந்தபடியே வந்த ஆதித்யன், அரண்மனை வாயிலிலேயே வரவேற்ற விஜய கண்ட கோபாலன், தூதராக வருபவர் வழக்கமாக வரும் பேரமைச்சரின் உறவினரல்ல என்பதையும் விளையாட்டுப் பிள்ளை போன்ற முகத்துடன் வாலிபன் ஒருவன் வருவதையும் கண்டு ஒருகணம் வியப்பைக் காட்டினான். பின்னர் அபரிதமான உபசரிப்புடன் வரவேற்றான்.

சோழ தூதருக்கு அளிக்கப்பட்ட அறையின் அலங்காரங்களும் அபரிமிதமாகவே தெரிந்தன. பணிப்பெண்களாக வந்த யவன மங்கையர் அணிந்திருந்த ஆடைகள் ஆதித்யனின் கண்களைக் கூச வைத்தன. ஏவலுக்கும் காவலுக்கும் வீரர்கள் காத்து நின்றனர். அறையின் வாயில் வரை வந்த கண்டகோபாலன், ஆதித்யனை ஓய்வெடுத்துக் கொள்ளும்படியும் மாலையில் சந்திப்பதாகவும் கூறிச் சென்றான். ஆதித்யனின் கூரிய அறிவு அந்த அதீத உபசரிப்பில் அபாயம் கலந்திருப்பதை உணர்த்தியது. மன்னன் அகன்றதும், விஜயனை அழைத்தவன், "விஜயா, இந்த உபசரிப்பும், அதிகப்படியான மரியாதையும் சந்தேகமளிக்கிறது'' என்றான் ரகசியக் குரலில்.

பதிலுக்கு நகைத்த விஜயன், "இளவரசே இதற்கு முன் தூதராக வந்து கொண்டிருந்தவர் அமைச்சரின் உறவினர். இங்கு நடப்பவற்றையும், ஆட்சியின் குறைகளையும், சோழ மன்னரிடம் தெரிவிக்காதிருக்க இத்தகைய உபசரிப்பையும் பரிசுகளையும் பெறுவது அவர் வழக்கம். தங்களையும் இணங்க வைக்க கண்டகோபாலன் முயற்சி செய்கிறான்'' என்றான்.

**மா**லைப்பொழுது வந்தபின்பு மன்னன் அழைப்பின்பேரில் அவனைக் காணச் சென்ற ஆதித்யன், அந்த அதீத உபசரிப்பின் பின்னால் எத்தனை பெரிய அபாயம் மறைந்திருக்கிறது என்பதை மேலும் தெளிவாகப் புரிந்து கொண்டான். வெகு இனிமையாகவும் சகஜமாகவும் உரையாடத் தொடங்கினான் கண்ட கோபாலன். போகப் போக அவன் நுழைந்தது சரியென்பது புரிந்தது ஆதித்யனுக்கு.

மன்னன் அழைத்ததைத் தொடர்ந்து கோட்டைத் தலைவனுடன் அத்தாணி மண்டபத்தில் நுழைந்தான் ஆதித்யன். மண்டபத்தின் தூண்களும் அவற்றில் நிறைந்து கிடந்த சிற்பங்களும், ஊசலாடிய தோரணங்களும் மேலே தெரிந்த சித்திரங்களும், யவனர் சரவிளக்குகளும் அந்த மண்டபத்தை தேவலோகமாகவே மாற்றியிருந்தன. அந்த பிரமிப்பினூடே ராஜராஜனும் ராஜேந்திரனும் குலோத்துங்கனும் அமர்ந்த ரத்னாசனத்தில் கண்டகோபாலன் அமர்ந்திருப்பதைக் கண்டபோது, சோழர்களின் இழப்பு எத்தகையது என்ற வருத்தமே மேலோங்கியது.

அந்தப் பெரு மன்னர்கள் காலத்தில் அந்த மண்டபத்தில் இல்லாத ஒன்றும் அப்பொழுது அங்கிருந்தது. மன்னனுக்கும், தூதருக்குமிடையே பல வண்ணங்களில் மது

வகைகளும், அலங்கார மதுக்குப்பிகளுமிருந்தன. அந்த அலங்காரங்கள் போதாதென்று அவற்றைப் பரிமாற இரண்டொரு யவன மங்கையரும் தயாராக நின்றனர். ஆதித்யன் முகத்தில் கடுமை படர்ந்தது. மன்னனை நோக்கி லேசாகத் தலை தாழ்த்தி நிமிர்ந்தவன் குரலி லும் கடுமை ஒலித்தது. "மன்னா, முதலில் இந்த மதுவகைகளையும் இதோ நிற்பவர்களையும் அப்புறப்படுத்துங்கள்!" என்றான்.

கண்டகோபாலனின் அடர்ந்த புருவங்கள் மேலேறின. 'இவை அனைத்தும் மிக உயர்ந்த வகையைச் சேர்ந்தவை தூதரே" என்றான் அவன்.

"எந்த வகையானாலும் சரி, நான் மது அருந்தும் வழக்கமில்லை" ஆதித்யன் குரல் திடமாக ஒலித்தது.

'இந்த மங்கையரில் தங்களுக்கு...."

"தேவையில்லை. வெளியேற்றி விடுங்கள்" என்ற ஆதித்யனைப் பார்த்து பலமாக நகைத்தான் கண்டகோபாலன்.

"மதுவும் மங்கையும் தேவையில்லையென்றால் மனிதன் பிறக்கவே தேவையில்லை தூதரே!" என்றான் நகைப்பினூடே.

திடமாக ஒலித்த ஆதித்யனின் குரல் கண்டகோபாலனின் நகைப்பைப் பாதியில் வெட்டியது. "மன்னா, அது உங்கள் எண்ணமாக இருக்கலாம். ஆனால் தமிழன் சித்தாந்தமே வேறு. இவை இரண்டுமே அறிவை மயக்குபவை. இடம் கொடுத்தால் மடம் பிடுங்குபவை. இவற்றை அணுகக் கால் நேரமும் முறையும் அளவும் உண்டு. அதிலும் அயல் தேசத்தில் இவற்றால் அபாயம்தான் விளையும். மேலும் தங்களிடம் தனித்துப் பேசுவதற்கு மன்னரும் உத்தரவிட்டிருக்கிறார்."

பார்வைக்கு விளையாட்டுப் பிள்ளையாகத் தெரியும் சோழ தூதரின் மனம் உண்மையில் மிக உறுதியானது என்பது புரிந்தது கண்டகோபாலனுக்கு. "இந்த இள வயதில் சோழ தூதர் காட்டும் மனஉறுதி மகிழ்ச்சியளிக்கிறது!"

அதற்கும் பதில் வந்தது சோழ தூதரிடமிருந்து. "நான் பிறந்த மண்ணின் தன்மை அது மன்னா. மண், பண்பாட்டை அளிக்கிறது. பண்பு உறுதியையும் அறிவையும் அளிக்கிறது. அறிவு மனிதனை உயர்த்துகிறது. இதில் வேறு விஷயங்கள் குறுக்கிட அனுமதித்ததால்தான் தமிழனின் நிலை தற்போது மாறுபட்டு விட்டது. காஞ்சியில் மன்னனாகத் தாங்கள் அமர்ந்திருக்கவும் தமிழன் தூது வரவும் நேரிட்டிருக்கிறது."



"கேடி கேனப்பன் போதையில் இருந்தப்ப மாமூல் கேக்கப் போனது ஒரு வகையில் நல்லதாப் போச்சு...?"

"ஏன்...?"

"நான் ரெண்டு ஆளா அவன் கண்ணுக்குத் தெரிஞ்சதால டபுள் மாமூல் கொடுத்திட்டான்...!"

– ஜி. செல்லத்துரை

கண்டகோபாலனின் சிவந்த பெரு விழிகள் ஆதித்தயன்மீது நிலை குத்தி நின்றன. அவன் பெருமீசையும் ஒருமுறை பயங்கரமாக அசைந்தது. அடுத்தகணம் அவன் முகத்தில் பலத்த சிந்தனையும் படர்ந்தது.

வந்திருப்பவன் சாமானியப் பேர்வழியல்ல என்பது புரிந்தது கண்டகோபாலனுக்கு. காகதீயரின் பிரதிநிதியாகக் காஞ்சியை ஆள்வதை விடுத்து, சுதந்திர மன்னனாக வேண்டுமென்ற அவனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள ஆதித்யனை பயன்படுத்திக் கொள்வதென்றும் இத்தகைய துணிவும் தெளிந்த அறிவும் உடைய வாலிபன் கிடைப்பது அரிது என்றும் தீர்மானித்த கண்டகோபாலன், தன் வலையை பலமாக வீச ஆரம்பித்தான். அவனுக்குப் பக்க பலமாக, எங்கிருந்தோ ஜில் ஜில் லென்ற சதங்கைகளின் ஒலி அந்த மண்டபத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது.

பலத்த சிந்தனையைக் காட்டிய கண்டகோபாலனின் முகத்தில் அந்த சதங்கைகளின் ஒலி, ஒரு மலர்ச்சியையும் படர விட்டது. களத்திலும் ஆட்சி நடத்துவதிலும் எந்த முடிவையும் கண நேரத்தில் எடுப்பவனென்றும் அதை நிறைவேற்ற பெரும் தந்திரத்தையும் மூர்க்கத்தனத்தையும் கையாள்பவனென்றும் பெயரெடுத்திருந்த கண்டகோபாலனின் புத்தியில், ஏதோ பளிச்சிட்டதற்கான அறிகுறி தென்பட்டது.

அடுத்து உதிர்ந்த அவன் வார்த்தைகளால் கண்டகோபாலனின் எண்ணத்தையும், தொடர்ந்து சதங்கைகளின் ஒலி கட்டியம் கூற, மண்டபத்தில் நுழைந்த அழகிய பெண்ணையும் கண்ட ஆதித்யன், தான் எண்ணி வந்ததை விடப் பெரும் அபாயம் தன்னைச் சூழ்ந்து கொள்வதை உணர்ந்தான்.

(தொடரும்)

...தன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
...சிரியர் : சீதா ரவி.
...ரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : ...45624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
...டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
...மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# ஆஹ்..ஹாஹ்ஹா...




"ஐந்நூறு கோடியாம்....! சுண்டைக் காய்!.... இரண்டு ஊழலுக்குக் கூட காணாது!"




"எல்லாருக்கும் ஒழுங்கா நடந்துக்கற 'மூட்' வரும்வரை என்னை இங்கே வெளியில நிற்கச் சொல்லியிருக்காங்க."




"வேற சில பெயர்களைச் சொன்னால் அவங்களை பலியாடுகளாக்க சௌகரியமாய் இருக்கும்....."

"சார்! இனிமேல் அமைச்சரவைக் கூட்டங்களையெல்லாம் விளையாட்டு மைதானத்துல தான் நடத்தணும்னு நினைக்கறேன்...."




— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

# 28. சித்திரக் கூடம்

காஞ்சி அரண்மனையின் அத்தாணி மண்டபத்தில் கண்டகோபாலனுடன் உரையாடிக் கொண்டிருந்த ஆதித்யன், அடுத்த சில கணங்களில் மன்னன் சித்தத்திலோடிய எண்ணங்களை ஊகித்து விட்டானென்றாலும், தன்னையும், தன்னைக் காரணமாக வைத்து தமிழகத்தையும் விழுங்கக் கூடிய அபாயம், ஜல்ஜலென்று சதங்கைகள் ஒலிக்க உள்ளே நுழைந்த ஒரு பேரழகியாக இருக்கக் கூடும் என்பதை எதிர்பார்க்காததால், பிரமித்தே போனான்.

கருக்கல் நேரத்து இருளைப் பழித்த அவள் கூந்தல் சற்றுப் பிரிந்து முன்னால் வந்து, அவள் விழிகளின் கருமையைக் கண்டு மயங்கிச் சுருண்டு கிடந்தது. வட்ட நிலவாக வார்க்கப்பட்டிருந்தவள் முகத்தில் மாவடுவைப் பிளந்து வைத்தது போலிருந்த விழிகள் துறுதுறுவென்று அலைபாய்ந்தன. சிவந்து பளபளத்த இதழ்களில் தெரிந்த நீரோட்டம், தேவலோகத்து அமுதத்தைப் பழித்துக் கொண்டிருந்தது. சேர நாட்டுத் தந்தத்தில் கடையப்பட்டது போன்ற அவள் கரங்களில் கிடந்த கற்கள் பதிக்கப்பட்ட வளைகள் சற்று மங்கியே தெரிந்தன! அந்தப் பெண்ணுக்கு இடையென்று ஒன்று இருக்கிறது என்று கூறுபவர்களுடன் வாட்போரிடுவதில் தவறில்லையென்று தீர்மானித்தான் ஆதித்யன். மானின் துள்ளல் தெறித்த அவள் நடையில், பாதங்களிலிருந்த சதங்கைகள் கெஞ்சின. அந்தக் கெஞ்சலைக் கேட்டு அவள் சங்குக் கழுத்திலிருந்து இறங்கிய முத்துச்சரம் புரள்வதற்கு இடமின்றி நடுவே சிக்கித் தவித்தாலும் தன் வெண்பற்களைக் காட்டி நகைத்துக் கொண்டிருந்தது.

சோழ தூதராக



விஷ்வக்சேனன்

வழக்கமாக வரும் முதியவருக்குப் பதில், வாலிபன் ஒருவன் அமர்ந்திருப்பதைக் கண்ட அந்தப் பெண்ணின் துள்ளல் நடை சட்டென்று நின்று தயங்கியது. முகத்திலிருந்த இரு கருவண்டுகளும் சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டன. கன்னங்களில் ஒரு செம்மை படர்ந்தது.

ஆதித்யனின் பிரமித்த பார்வையையும் அந்தப் பெண்ணின் சிவந்த முகத்தையும் கவனித்த கண்டகோபாலன், தான் தீர்மானித்த முடிவு சரியானதுதானென்பதை உறுதி செய்து கொள்ளும் உத்தேசத்துடன் அவளை அழைத்தான்: "ஸ்வர்ணமுகி, ஏன் தயங்குகிறாய்? இவர் புதிதாக வந்திருக்கும் சோழ தூதர்...." என்றவன் ஆதித்யனை நோக்கித் திரும்பி, "இவள் ஸ்வர்ணமுகி, என் ஒரே மகள்" என்று அறிமுகப்படுத்தவும் செய்தான்.

பாதங்களில் ஒலித்த சதங்கைகள் ரகசியம் பேச, மெள்ள நெருங்கியவளின் கரங்கள் உயர்ந்து கூப்பின, "சோழ தூதருக்கு வணக்கம்" என்று அவள் குரலும் மிழற்றலாகவே வந்தது. அவளை அருகில் அமரப் பணித்த கண்டகோபாலன் கேட்டான்: "சோழ

# இந்திர தனுசு

தூதரே, நான் சோழ நாட்டுக்குப் பலமுறை வந்திருக்கிறேன். ஆனால் இதுவரை கண்டதேயில்லையே?"

ஆதித்யனின் பதில் சாவதானமாக வந்தது. "நான் தஞ்சைக்குத் தெற்கே பாண்டவ ஆற்றின் கரையிலிருக்கும் சிற்றரசைச் சேர்ந்தவன். ஒரு வகையில் மன்னருககு உறவினன். உறவினர்கள் அரசியலில் கலந்து கொள்வதில் சங்கடங்கள் ஏற்படுமென்பதால் நான் தலைநகருக்கு அதிகம் வருவதில்லை."

"நினைத்தேன். உங்கள் முகத்தில் அரச வம்சத்துக்களை தெரிகிறது. விஜயனும் உங்களை இளவரசனென்று அழைப்பதாக வீரர்கள் கூறினார்கள். உங்களை ஆதித்ய சோழர் என்றும் விஜயன் கூறினான்" என்ற மன்னன், தொடர்ந்து, "உறவினர்களிடம் அதிகாரங்களை அளிக்க விரும்பாததால்தான் சோழ மன்னர் யாரோ துறவியாரிடம் கலவற்றையும் ஒப்படைத்துவிட்டு ஆலயங்களிலேயே காலம் கழிக்கிறாரா?" என்றான்.

சற்றுத் தயங்கிய ஆதித்யன், "ஆம். உண்மைதான். துறவியார்தான் மன்னரின் சார்பாக என்னைத் தூதனுப்பினார்" என்றான்.



## ராஜாங்க ரகசியம்!

இத்தாலி நாட்டின் சர்வாதிகாரியான முசோலினி இருந்த போது நடந்தது, இது...

அரசியல் இரகசியத்தை அம்பலப்படுத்தியதாக ஒருவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. அவரைத் தூக்கில் போட இரு வீரர்கள் அழைத்துப் போனார்கள். அப்பொழுது ஒருவர், ''இவர் என்ன அரசாங்க இரகசியத்தை அம்பலப்படுத்தி விட்டார்?'' என்று கேட்டார்.

மற்றொரு இராணுவ வீரர் சொன்னார் :

''நம் தலைவர் முசோலினிக்கு மூளையில்லை என்று சொல்லிவிட்டார்!''

ஆதாரம் : நகைச்சுவை நந்தவனம்
தகவல் : எஸ்.எஸ். பூங்கதிர்

---

"சோழ நாட்டில் நிகழ்ந்தவற்றை எமது ஒற்றர்கள் கூறினார்கள். சோழ எல்லையில் போசளர் படை அழிக்கப்பட்டதாகவும் தற்போது எல்லை நெடுக பாண்டியர் படை உலவுவதாகவும் அறிந்தேன். ஆனால் இப்போது எமது ஒற்றர்களால் எல்லையை நெருங்கவே இயலவில்லை. தாங்கள் எப்படி பாண்டியர் படைகளைக் கடந்து வந்தீர்கள்?" கண்டகோபாலன் குரலில் இலேசாக சந்தேகம் ஒலித்தது.

மன்னனின் நியாயமான அந்த சந்தேகத்தைக் கவனித்த ஆதித்யனின் முகத்தில் முறுவல் ஒன்று பிறந்தது. எந்த சந்தேகத்தையும் உடைக்கும் அந்த விளையாட்டுப் பிள்ளை போன்ற முகமும், எந்த உணர்ச்சிகளையும் காட்டாமல் முறுவலிக்கும் திறனும் பிற்காலத்தில் பெரும் சாதனைகளை ஏற்படுத்தியதென்றால் அதற்கு அத்தாட்சி அப்பொழுதே தெரிந்தது ஆதித்யன் முகத்தில்.

அதே முறுவலுடன் பதிலளித்தான் ஆதித்யன்: "மன்னா என்னை அழைத்து வந்தவன் விஜயன். சோழ ஒற்றர் படைத்தலைவன். அவன் பெய்யும் மழையின் நீர்த் துளிகளுக்கிடையே புகுந்து நனையாமல் வரக் கூடியவன். தாங்கள் அறியாததா?'' என்ற ஆதித்யன் தொடர்ந்து, "தாங்கள் கூறியவை உண்மைதான். நாட்டில் நடக்கும் போரின் முடிவுக்குக் காத்திருப்பதாக துறவியார் எண்ணுகிறார். அந்தப் போர் முடிந்தவுடன் பாண்டியர் சோழ நாட்டை நோக்கித் திரும்பலாம் என்றும் எதிர் பார்க்கிறார்."

கண்டகோபாலன் முகத்தில் சிந்தனை படர்ந்திருந்தது.

ஆதித்யன் தொடர்ந்தான்: "சோழ நாட்டின் படைபலம் தற்போது வெறும் காவற்படைகள் தாம். இந்த நிலையில் உங்கள் உதவியை எதிர் பார்க்கிறார் துறவியார்."

கண்டகோபாலனின் சித்தம் வேறுவிதமாக இயங்கியது. படைபலமற்ற சோழ மன்னனுக்கு உதவிக்குச் சென்று, மெல்ல சோழ நாட்டில் வேரூன்ற இந்த சோழ தூதரைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தான் அவன். காகதீயரின் பிரதிநிதியாகத் தானிருப்பதை விடுத்து, சோழ நாட்டின் மன்னனாக இருக்க அவன் கொண்டிருந்த கனவுக்குச் சாதகமான சூழ்நிலை ஏற்பட்டு விட்டது என்றே நினைத்தவன், எதிரிலிருந்த வாலிபனை ஏறெடுத்து நோக்கினான். வாலிபனாகவும் வீரனாகவும் தெரியும் இந்த சோழ தூதன் சோழ மன்னரின் உறவினன் என்றும் கூறுகிறான். சோழ ராஜேந்திரனுக்குப் பிறகு நேர் வாரிசு எவருமில்லை. ஸ்வர்ணமுகியை இவனுக்கு மணமுடித்து இவனை சோழ அரியணையில் அமர்த்தினால் மக்கள் ஆதரவும் கிட்டும். மெள்ள சோழ நாட்டை வசப்படுத்துவதும் சாத்தியமாகும் என்று திட்டமிட்டான் கண்டகோபாலன். சோழ தூதனும் ஸ்வர்ணமுகியும் தனியொரு உரையாடலில் ஈடுபட்டிருப்பதை தன் சிந்தனையினூடேயும் அவன் கவனிக்கத் தவறவில்லை.

அருகில் அமர்ந்திருந்த ஸ்வர்ணமுகியின் அழகிய நீண்ட விரல்களையும், விழியோரத்தில் நாணத்தையும் மீறித் தெரிந்த கனவுச் சாயையையும் கவனித்த ஆதித்யன், "காஞ்சியின் இளவரசிக்குக் கலைகளில் நல்ல ஆர்வமிருப்பதாகத் தெரிகிறது" என்றான்.

ஸ்வர்ணமுகியின் விழிகளில் வியப்பு தெரிந்தது. "எப்படிக் கண்டறிந்தீர்கள்?" என்றாள் அவள் கிள்ளைக் குரலில்.

ஆதித்யன் மெள்ள நகைத்தான். பதவியிலிருப்பவர்களை இணங்க வைக்க அவர்களின் அன்புக்குரியவர்களை எதிரிலேயே புகழ்வதும் ஒரு வழியென்பதை அறிந்திருந்தவன், தன் புகழ்ச்சி வலையைப் பலமாகவே வீசத் தொடங்கினான்.

"இளவரசி, உங்கள் விழிகளில் கனவு மிதக்கிறது. இத்தனை அழகிய நீண்ட விரல்கள் தூரிகை பிடிப்பதற்கென்றே படைக்கப்பட்டவை. தவிர, ஒரு கவிஞனுக்கு இன்னொருவரை அடையாளம் காண்பது ஒன்றும் அத்தனை சிரமமல்ல."

கண்டகோபாலன் முகத்திலும் குரலிலும் பெருமை தெரிந்தது. "உண்மைதான் ஆதித்யனே

இவளுக்குச் சிற்பங்களிலும் சித்திரங்களிலும் பித்து அதிகம். அரண்மனைக்குள் ஒரு சிற்பக் கூடமே உருவாக்கி வைத்திருக்கிறாள்."

முகம் மகிழ்ச்சியால் மலர்ந்திருக்கத் தனது கரங்களை ஒரு முறை பார்த்துக் கொண்ட ஸ்வர்ணமுகி, தன் இரு கரங்களையும் அவன் முன்பாக நீட்டினாள். "இந்தக் கரங்கள் வேறென்ன தெரிவிக்கின்றன தூதரே?" என்றும் கேட்டாள்.

"கரங்களைப் பார்த்து மேற்கொண்டு கூற எனக்கு சோதிடக் கலை அவ்வளவாகத் தெரியாது இளவரசி...." என்று இழுத்த ஆதித்யன் "இருந்தாலும்..." என்படியே மன்னன் முகத்திலும் ஸ்வர்ணமுகியின் முகத்திலும் பொங்கிய ஆர்வத்தையும் ஆவலையும் கவனித்தான்.

அடுத்து செந்தாமரையைப் பிரித்து வைத்தது போலிருந்த அவள் கரங்களையும் அதில் ஓடிய ரேகைகளையும் கவனித்தவன், "இளவரசி.... ம்ஹூம்.... ஆகா!" என்று இருவரின் ஆவலையும் சற்று தூண்டவும் செய்தான். ஸ்வர்ணமுகியின் விழிகள் ஜொலித்தன.

"இளவரசி, நடுவிரலை நோக்கி வரும் இந்த ரேகை ராஜயோகத்தைக் குறிக்கிறது. இந்தச் சந்திரமேட்டில் தெரியும் வளைவு, கடல் கடந்தும் உங்கள் கலைபரவும் என்பதைக் குறிக்கிறது. இந்த குரு மேட்டில் இருக்கும் குறிகள் உங்கள் திருமணத்தைக் குறைந்தது மூன்று முடி மன்னர்கள் சேர்ந்து நடத்திவைப்பார்கள் என்று தெரிவிக்கின்றன" என்றான்.

ஸ்வர்ணமுகியின் முகத்தில் நாணத்தையும் கண்டகோபாலன் சித்தத்தில் கனவுகளையும் விரிய வைத்தன ஆதித்யனின் சொற்கள். அவர்கள் மகிழ்ச்சியின் குறுக்கே புகுந்தது வாயிலிலிருந்து உள்ளே நுழைந்த வீரனின் குரல்: "பிரபு, பிரபு!"

அந்த வீரனை நோக்கிச் சட்டென்று திரும்பிய கண்டகோபாலனின் முகம் மாறியது
"உன்னை யார் வரச் சொன்னது உள்ளே
அவன் குரலில் கடுமை ஒலித்தது.

"மன்னிக்க வேண்டும் பிரபு. பொத்தப்
யிலிருந்து நமது ஒற்றன் முக்கியச் செய்தியுட
உடனே தங்களைக் காண வேண்டுமென்
வந்து நிற்கிறான்" என்றான் வீரன்.

கண்டகோபாலன் முகத்தில் கடுமை இ
னும் அதிகரித்தது. சட்டென்று பிரயத்தன
துடன் முகத்தை மலர வைத்துக் கொண்டவ
மகளை நோக்கித் திரும்பி, "ஸ்வர்ணமுகி, ஆதி
யரை அழைத்துச் சென்று உனது சிற்பக் கூட
தைக் காட்டு மகளே!" என்றான்.



"தலைவர் மேலே ஏகப்பட்ட வழக்கு இருந்தும் கொஞ்சமாவது கலங்கணுமே!"

"எப்படி சொல்றே?"

"லேட்டஸ்டா பிறந்த குழந்தைக்கு 'சம்மன்'னு பேர் வைச்சிருக்காரே!"

– எஸ். முகம்மது யூசுப்

ஆதித்யனுக்குப் புரிந்தது. சிந்தித்தபடியே
ஸ்வர்ணமுகியுடன் நடந்தான் அவன். ஸ்வர்
முகியின் நடையில் மீண்டும் துள்ளல் தெரி
தது. அவளுடன் சிற்பக் கூடத்தில் நுழைந்
ஆதித்யன், உண்மையில் பிரமித்தே போனா
ஆர்வமுள்ள ஒரு பெண்ணின் தனி முயற்சியி
இத்தனை சிறப்பாக ஒரு கலைக்கூடம் உ
வாகக் கூடுமென்பதை எதிர்பார்த்திரா
அவன், அவளை மனதாரப் பாராட்டவும் செ
தான். நிகரில்லாத தமிழகத்தின் சிற்பங்களு
சாளுக்கியரின் கலையும், வடநாட்டுக் கலையு
கடாரத்து, காந்தாரத்துப் பதுமைகளும், சீன
துச் சிற்பங்களும், யவன காவல் வீரர் பது
களும் சிறுசிறு வடிவங்களில் செதுக்கப்ப
அங்கு சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. அ
சீனத்துப் பதுமைகளினிடையே சீறும் கட
நாகம் ஒன்றும் இருந்தது.

ஆதித்யனின் விழிகள் அந்தக் கடல் நா
தின் மீதும் தன் மீதும் மாறிமாறிப் பதிவதை
அவன் சித்தம் எங்கோ பறப்பதையும் கவனி
ஸ்வர்ணமுகி, "ஏன் அந்தக் கடல் நாகத்
உற்றுப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்கவும் செ
தாள்.

பார்வை அந்தச் சிற்பத்தின் மீதே ப
திருக்க, "யுவான்" என்று முணுமுணுத்தா
ஆதித்யன்.

"யுவான்?" என்று தானும் அந்தப் பெய
உச்சரித்த ஸ்வர்ணமுகி "யார் அவர்?" எ
றாள்.

"எனது நண்பர். சீனத்துச் சிற்பி. எங்
அரண்மனை சிற்பக்கூடத்தில் இதே பது
யொன்றை அவர் வடித்து அளித்திருக்கிற
ஆனால் அது எழுந்து சீறும். நடந்தும் வரு

ஸ்வர்ணமுகியின் விழிகளில் அதீத விய
தெரிந்தது. "என்ன? பதுமை சீறுமா? நட
வரவும் செய்யுமா?" என்றாள் அடங்காத வி
புடன்.

"ஆம். இது அவரது சீன அரச குடும்பத்
சின்னம். இதைப் பதக்கமாகவும் அணிந்தி
பார்."

ஸ்வர்ணமுகியின் விழிகளிலும் குரலிலும் வல் தெறித்தது. "அவரை காஞ்சிக்கு ஒரு றை அழைத்து வருகிறீர்களா?" என்றாள் கஞ்சும் குரலில்.

"அவசியமில்லை." ஆதித்யன் பதில் டனே வந்தது.

"ஏன்?"

"இன்னும் சில தினங்களில் அவரே இங்கு ருவார்" என்ற ஆதித்யன் சித்திரங்களிருந்த குதியை நோக்கி நடந்தான்.

அந்தப் பகுதி ஸ்வர்ணமுகியின் கை ண்ணத்தில், நிலவும், வானும், மலையும், ருவியும், கடலும் கலமும், வனமும் வயலும், றவைகளும் மனிதர்களுமாகப் பல வண்ணங் ளில் நிறைந்து கிடந்தது. ஆதித்யன் கூறிய ருத்தங்களையும், பாராட்டுதல்களையும், புதி ாக சில வண்ணக் கலவைகளை உருவாக்கும் பாயங்களையும் பிரமிப்புடன் ஏற்றுக் காண்ட ஸ்வர்ணமுகியின் முகம் மகிழ்ச்சியில் சல் ஸ்வர்ணமாகவே மின்னியது. அடை ளம் தெரியாத பல மனிதர்களின் சித்திரங் ளைப் பார்த்தபடியே நடந்த ஆதித்யன் சட் ன்று நின்றான். அவன் எதிரேயிருந்த லையில் சிற்றரசர்களாகத் தோன்றிய ஒரு தியவனும் இளைஞனும் மண்டியிட்டுக் க்க, கண்டகோபாலன் ஒரு காலை அவர் முடிமீது வைத்து, கரத்தில் வாளுடன் கம் மாக நின்றான். பின்புறத்தில் ஒரு போர்க் முடம் தெரிந்தது.

ஸ்வர்ணமுகி விளக்கினாள்: "இவர்கள் ாத்தப்பி சிற்றரசர்கள். இரு ஆண்டுகளுக்கு ளபு தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து க்கப்பட்டதைத் தீட்டியிருக்கிறேன். தற் ாது மீண்டும் அவர்கள் தந்தைக்கு எதிராகக் ம்பியிருப்பதாகக் கேள்வி."

ஆதித்யனின் சித்தத்தில், சற்று நேரத்திற்கு ஒரு வீரன் கண்டகோபாலனிடம் வந்து யவை நினைவுக்கு வந்தன. அவன் புத்தி தமாக இயங்கத் தொடங்கியது. ஸ்வர்ண யுடன் வெளியே வந்தவன், அவளிடம் டபெற்றுக் கொண்டு தன் அறையை க்கி நடந்தான்.

விஜயனின் விஷமக்குரல் ஆதித்யனை வேற்றது: "இளவரசர், கண்டகோபால கு மிக நெருங்கியவராகி விட்டதாகத் கிறது!"

"ஆம்!" என்று ஒப்புக் கொண்ட ஆதித்யன், யா, அடுத்து நாம் எங்கு செல்ல வேண் " என்று வினவினான்.

"காகதீயர் தலைநகருக்கு" என்றான் யன்.

"வேண்டாம் விஜயா. காகதீய மன்னனை இரு தினங்கள் தாமதித்தே சந்திக்கலாம்" என்றவன், "உனக்கு பொத்தப்பிக்கு விரைவாகச் செல்ல வழி தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும் இளவரசே, அங்கு நம் சோழ நாட்டவர் கூட சிலர் இருக்கிறார்கள். ஆனால்..." இழுத்தான் விஜயன்.

"சோழ நாட்டவர்கள் அங்கு என்ன செய்கிறார்கள்?"

"இளவரசே, பொத்தப்பி மன்னன் மகா முரடன். ஆனால் சாப்பாட்டுப் பிரியன். சோழ நாட்டுப் பரிசாரகர் கரங்களுக்கு அவன் அடிமை. சோழ நாட்டு உணவிற்காகவே பலரைப் பணியில் அமர்த்தியிருக்கிறான். ஆனால் அங்கு எதற்குச் செல்ல வேண்டும்?"

"காரணமிருக்கிறது விஜயா" என்ற ஆதித்யன், வாயிலிலிருந்த வீரனை அழைத்து, தூரிகையும், வண்ணக் கலவைகளும் கொண்டு வரப் பணித்தான். சோழ தூதர் எதைக் கேட்டாலும் அளிக்கும்படி உத்தரவிருந்ததால் ஆதித்யன் கேட்டவை உடனே வந்தன.

அன்று இரவு கண்டகோபாலன் அளித்த விருந்துக்குப் பின் திரும்பிய ஆதித்யன், தூரிகையும் கையுமாக நின்றான். இரவு ஏறிய பின்னும் நெடு நேரம் அவன் ஏதோ தீட்டிக் கொண்டிருப்பதைக் கண்ட விஜயன், ஒன்றும் புரியாமல் அந்த சித்திரத்தை விழித்துப் பார்த்தபடி நின்றிருந்தான்.

அதே இரவில், காஞ்சிக் கோட்டையிலிருந்து, காகதீய ருத்ராம்பாளின் ஒற்றன், சோழ தூதர் பற்றிய செய்தியை அறிவிக்க காகதீயரின் தலைநகரை நோக்கி விரைந்து கொண்டிருந்தான். அது போதாதென்று காஞ்சிக் கோட்டையின் தெற்கிலும் சிலகாத தூரத்தில் ஆதித்யனை அடியோடு ஒழித்து விடக் கூடிய சதி ஒன்றும் உருவாகிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



"இந்த கல்லூரி அட்மிஷனுக்காகப் பிரதமரிடமிருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கி வந்தேன்."

"உடனே இடம் கொடுத்துட்டாங்களா...?"

"இல்லே. அதில் நரசிம்மராவ் கிட்டே.. **'forwarded'**ன்னு எழுதச் சொல்லி கையெழுத்து வாங்கிவரச் சொல்லிட்டாங்க!"

— இரா. திலிப்

# மேரேஜ் டே

**கிருஷ்ணா**

"**நா**ளைக்கு நீங்க லீவு போடறீங்க."

சாம்பாரை தட்டில் ஊற்றியபடியே உத்தரவிட்டாள்.

"என்ன? ஓ.... லீவா? எதுக்கு? யாராவது வி.ஐ.பி வராங்களா?

"ஆமாம். நாம இணையறதுக்குக் காரணமாய் இருந்த வி.ஐ.பி."

"யாரு, தரகரா?"

என் கேலிக்கு, முறைத்தாள்.

"நாளைக்கு நம்ம கல்யாண நாள். பத்தாவது ஆனிவர்சரி. நிறைய திட்டம் போட்டிருக்கேன். முதல்ல கோயில், அப்புறம் ஹோட்டல் டின்னர், சினிமான்னு ப்ரோக்ராம் வைச்சிருக்கேன்"

"முக்கியமான ஒண்ணை விட்டுட்டியே."

என் கண் சிமிட்டல் புரிந்து வெட்கப் பட்டாள்.

"நாளைக்கு லீவு நீங்க. ஓகே?"

"உத்தரவு! காலையிலே போன் பண்ணி ஆபீஸ்லே சொல்லிடலாம். இப்ப ஏதும் அட்வான்ஸாய் உண்டா?

"வழியாம போய் கை கழுவுங்க."

**கா**லையில் போன் வந்தது ஹெட் ஆபிசிலிருந்து.

ஃபாரின் டெலிகேட்ஸ் விசிட். எங்கள் எம்.டி.யும் வருகிறார். திடீர் ப்ரோக்ராம் மாறுதல். இன்றும், நாளையும் மூச்சு விட முடியாது.

ஏமாற்றத்தில் முகம் தொங்கிப்போன நீலாவின் புலம்பலையும் மீறி, என் காதில் விமானத்தின் சத்தம். ஓடினேன் ஏர்போர்ட்டுக்கு. பாவம் நீலா.

ஆறே கால் அடி உயரத்தில் 'ஹஷ், புஷ்' ஆங்கிலத்தில் இரண்டு பேர் வந்தனர். அவர்கள் முன் எங்கள் எம்.டி. மிகவும் குள்ளமாகத் தெரிந்தார்.

மதியம் பன்னிரண்டு மணிக்குள் ஆபீசை தலைகீழாக மாற்றி, புத்தம் புது பொலிவைக் கொண்டு வந்தேன்.

புது ப்ராடக்ட் கொலாபரேஷன். கான்பரன்ஸ் ஹாலில் மீட்டிங். எம்.டி. ராஜ மரியாதை கொடுத்தார் அவர்களுக்கு.

பாலி எதிலின், ஃபைபர் என்று சிறிய ப்ரொஜக்டர் மூலம் அந்த வெள்ளைக்காரன் தங்கள் ப்ராடக்டை விளக்கிக் கொண்டிருந்தான்.

அல்வாவை வாய்க்குள் போட்டு மெல்வதைப்போல ஆங்கிலத்தை மென்று கொண்டிருந்தான் வெள்ளைக்காரன்.

எனக்குள் அடிக்கடி நீலாவின் முகம் தோன்றி மறைந்தது

பாவம் அவள்! எவ்வளவு ஆசையாய் திருமண நாளைக் கொண்டாட திட்டமிட்டிருந்தாள்?

என்ன செய்வது? பிரைவேட் கம்பெனி. அதிலும் ப்ராஞ்ச் மானேஜர் நான். சம்பளம் கொடுக்குமளவுக்கு, உழைப்பையும் கொடுத்தாக வேண்டுமே.

"இட் இஸ் வெரி யூஸ்ஃபுல் இன் கெமிக்கல் இன்டஸ்ட்ரிஸ். அவர் ப்ராடக்ட் ப்ளேஸ் எ வைடல் ரோல் இன்..."

அல்வாவை இன்னும் வேகமாய் மென்று கொண்டிருந்தான்.

சடக்கென கான்பரன்ஸ் ஹால் லைட் எரிந்தது. முடித்து விட்டான் டெமான்ஸ்ட்ரேஷனை.

"ஹௌ ஈஸ் இட்?"

எம்.டி. என்னைப் பார்த்தார்.

"ஓகே!"

ஒப்பந்தம் கையெழுத்தானது. எம்.டி.யும் வெள்ளைக்காரர்களும் கை குலுக்கிக் கொண்டனர்.

நாளை மதியம் இரண்டு மணிக்கு ஃப்ளைட்.. அதற்குள் ரிப்போர்ட் தயாரித்தாக வேண்டும். ரிப்போர்ட் எழுத வேண்டுமென்றால், அந்த ப்ராடக்ட் பற்றியும், சாதக, பாதகம் பற்றியும் உள்வாங்கி யோசிக்க வேண்டும்.

பி.ஏ.வை அழைத்தேன். பம்பரமானது

ஆபீஸ் முழுவதும்.

இரவு ஒன்பது மணியாகிவிட்டது அன்றைய கச்சேரி முடிய. முத்துக்கள் ரெடி. நாளை காலை வந்ததும் கோத்துவிட்டால் போதும். கொத்துக் கொத்தாய் இருந்த விவரங்களைச் சேர்த்தால் ரிப்போர்ட் ரெடி.

நல்ல ப்ராடக்ட் என்றுதான் தோன்றியது. நிச்சயம் கம்பெனியின் மதிப்பு உயரப் போகிறது ஷேர் மார்க்கெட்டில்.

"முரளி, புரிஞ்சதா எல்லாம்? நாளைக்கு வந்ததும் நீங்களும், அனுபமாவும் இந்த

என் டென்ஷன் வெடித்துவிட்டது. முரளி சுருங்கிப் போன முகத்துடன் மன்னிப்புக் கேட்டான்.

அடுத்த பத்து நிமிஷத்தில் ஆபீசை விட்டு வெளியே வந்தேன்.

காரை எடுக்கும்போதுதான் கவனித்தேன். ஸ்கூட்டரை உதைத்துக் கொண்டிருந்தான் அவன்.

"முரளி!"

அழைத்தேன். பாவம், மிகவும் கடித்துவிட்டேன். சின்சியர் ஆள் இவன்.

"என்ன சார்?"



ப்போர்ட்டை லேசர் பிரிண்டில் அழகாய் க்லெட் மாதிரி தரணும். காலையில் தினோரு மணிக்கு என் டேபிளில் இது ருக்கணும்...."

நிம்மதியாய் மூச்சு விட்டேன். மூளைக்கு ய்வு கிடைத்ததும், மனசு விழித்துக் காண்டது.

நீலா சாப்பிட்டாளா, இல்லையா? வில் வீட்டிற்கு போன் செய்து கட்டிருக்கலாமே! இந்த டென்ஷனில் அது றந்துவிட்டதே. வீட்டுக்குப் போகும்போது தாவது வாங்கிப் போகலாமா?

முரளி தயங்கி நிற்பது கண்டேன்.

"என்ன? எதும் சந்தேகமா?"

"இல்லை...அது... ஒரு மணி நேரமாவது மிஷன் வேணும் நாளைக்கு!"

"வாட்? கோ டு ஹெல் மேன்! ாத்தமாகவே நின்னுக்கறியா? ர்மினேஷன்தான், ஜாக்கிரதை."

ஸ்கூட்டரை தள்ளியபடி அருகில் வந்தான்.

"சாரி! ரொம்பவும்...."

"ஓகே, பரவாயில்லை சார்."

"எதுக்கு பர்மிஷன் வேணும்?"

"நாளைக்கு என் மேரேஜ் டே. காலையிலே கோவிலுக்குப் போகணும்னு மனைவி ஆசைப்பட்டாள். முழுநாள் லீவு கேட்டால் தப்புன்னு தெரியும். ஆபீசே தீப்பத்திக்கிட்ட மாதிரி பரபரன்னு இருக்கே. அதனாலேதான் ஒன் அவர் பர்மிஷன்....."

நீலாவின், ஏமாற்றத்தில் தொங்கிப் போன முகம் நினைவில் எழுந்தது.

முகம் தெரியாத இவன் மனைவி மேல் பரிதாபம் மூண்டது.

"ஓகே! என்ஜாய் யுவர் மேரேஜ்டே. ஒரு மணி நேரம் பர்மிஷன் எடுத்துக்க."

வாழ்த்தியபடி கை கொடுத்தேன்.

கூடம் வெறிச்சிட்டிருந்தது. அம்மா படுத்திருந்த சுவர் மூலையில் அகல் விளக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. துக்கத்துக்கு வந்திருந்தவர்கள் எல்லாரும் சொல்லிக் கொள்ளாமல் ஒரு பக்கம் விடைபெற்றுக் கொண்டிருக்க, இன்னொரு பக்கம் அம்மாவைத் தெரிந்தவர்கள் யார் யாரோ வந்து துக்கம் விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.

லலிதா எதிலும் பட்டுக் கொள்ளாமல் பின்கட்டு வாசற்படியில் தலைவைத்துப் படுத்திருந்தாள்.

"மகாலட்சுமி மாதிரி உங்க அம்மா... யாருக்கும் இல்லையின்னு சொன்னதே இல்லீங்க... எந்த நேரத்துல வந்தாலும், தயிர் சாதமும், மாவடுவும் எடுத்துட்டு வந்து வயிறு குளிரப் போடுவாங்க... போயிட்டாங்கன்னு கேள்விப்பட்டவுடனே 'பக்'குனு ஆயிடுச்சுங்க..."

"இன்னிக்கு என் பிள்ளை இன்ஜினீயரா இருக்கான்னா அதுக்குக் காரணம் உங்க அம்மாதான்... அவனோட படிப்புச் செலவு முழுக்க உங்க அம்மாதான் கவனிச்சுட்டது... எனக்கு இன்னொரு பிள்ளை இருந்தாச் செய்ய மாட்டேன்னான்னு சொல்லுவா... மகராசி..."

"இன்னும் இந்த சேதி என் பொண்ணுக்குத் தெரியாதுங்கறேன். பம்பாய்லேருந்து ஒவ்வொரு கடுதாசியிலேயும் மாடி வீட்டம்மா சௌக்கியமா... அவருக்கு என் நமஸ்காரத்தைச் சொல்லுன்னு மறக்காம எழுதிண்டிருக்கா... குழந்தை... மாடி வீட்டம்மாவை

# எனக்கென்ன தந்தாய் அம்மா...

இனிமே பார்க்க முடியாதுன்னு நான் எழுதினா கதறிடுவாளாக்கும்...."

வந்தவர்கள் அம்மாவுக்கு செலுத்தும் புகழ் அஞ்சலியைக் கேட்பதற்காகவே லலிதாவின் அண்ணன் தம்பிகளும், அக்கா, தங்கைகளும் கூடத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

அழுகை வருகிறதோ இல்லையோ, மோட்டு வளையையாவது வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். லலிதா மட்டும் இவர்களுடன் சேரவில்லை.

'எதற்காகச் சேர வேண்டும்? தானம் பண்ணினது போக, மிச்சமிருந்ததை எல்லாம் அம்மா, இவர்களுக்குத்தானே கொடுத்தாள்? எனக்கா கொடுத்தாள்...'

இந்த நினைப்பே அருவருக்கத்தக்கதுதான் என்றாலும், லலிதாவினால் இப்படி நினைக்காமல் இருக்க முடியவில்லை.

பெற்ற தாயாரிடம் கணக்குப் பார்ப்பது மகா பாவம்தான் என்றாலும், என்னவோ தான் மட்டும் ஏமாந்த சோணகிரியாகி விட்டோமோ என்கிற தன்னிரக்கம் லலிதாவை அலைக்கழித்தது.

பத்து நாள் இருந்து, அம்மாவின் ஆன்மாவைக் கடைத்தேற்ற வேண்டுமே என்பதற்கா[...] இருக்கிறாள். இல்லாவிட்டா[...] கணவரோடு நேற்றே ரயிலே[...] இருப்பாள்.

ஏதோ காரியமாய் உள்[...] வந்த அக்காள் சரயு – லலிதாவி[...] காதுபடச் சொன்னாள் :

"பால்கார கோவிந்தன் அ[...]றான்... சத்தம் காதுல விழறதா..."

"உம்...உம்..."

"அம்மா போனதுலே அவனு[...]குத்தான் நிறைய நஷ்ட[...] இருக்கோ, இல்லையோ அவ[...] கேட்டப்ப எல்லாம் அம்பது[...] நூறுமா அம்மா கணக்கே இல்லா[...] வாரி விட்டுட்டிருந்தா. இப்[...] எங்கே போய் கேட்பான். அதா[...] நெஞ்சுலேயும், மாருலேயும் அடி[...]சிட்டு அழறான்..."

லலிதா இதற்குப் பதிலேது[...] பேசவில்லை.

கோவிந்தன் ஐம்பதும், நூ[...]





வந்து தங்கினால் சிலாக்கியம் என்று நான் நினைக்கிறேன். மாப்பிள்ளைக்கு தனது ஆசீர்வாதத்தைத் தங்கள் தாயார் சொல்லச் சொன்னார்...'

– இப்படி அம்மாவின் வீட்டில் குடியிருக்கும் கணக்கு வாத்தியார் சீனுவாசன் ஒரு தபால் கார்டு எழுதிப் போட்டால், அடுத்த ரயிலிலேயே ஓடி வருவது லலிதாதான்.

சரயுவினால் முடியாது. கோபக்காரக் கணவன். நாலைந்து குழந்தைகள். பொழுதுக்கும் குற்றம் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கும் மாமியார்.

சரயு வந்து விட்டுப் போனாள் என்று அம்மா சொன்னாலே போதும். அம்மாவின் கைக் காப்போ, இரட்டை வடச் சங்கிலியோ பணமாக மாறி, சரயுவின் குடும்பத்துக்குப் போய்ச் சேர்ந்திருக்கும் என்பது அவளுக்குத் தெரியும்...

இருந்தாலும் அம்மாவின் மூளியாகிப் போன தளர்ந்த கரத்தைப் பிடித்துக் கொண்டு, வெகு நேரம் உட்கார்ந்திருப்பாள் அவள்.

அம்மாவே மெதுவாய் – பஞ்சினால் ஒத்தி எடுத்தாற் போன்ற குரலில் சொல்லுவாள் :

''பாவம்டி... பஞ்சானக் குஞ்சுகள்.. உன் அத்திம் பேருடைய துர்வாச குணத்துக்கு, போகிற எடமெல்லாம் பகை... ஆறு மாசம் ஒரு உத்தியோகத்துல நிலைச்சிருந்தா பெரிசு...: ரோஷப் பட்டுட்டு, வீட்டோட உட்கார்ந்திருந்தா வெங்கலப் பானை என்ன – அட்சய பாத்திரமா...''

"இப்ப நான் உன்னை ஒண்ணுமே கேட்கலையே அம்மா... எதுக்காக இத்தனை நீள விளக்கம்...''

அம்மா, உதடுகள் கோணப் புன்னகைப்பாள். பஞ்சடைந்த கண்களில் கூட அந்த நேரத்தில் கீற்றாய் வெளிச்சம் மின்னலிடும்.

"நீ ஒண்ணும் என்னைக் கேட்டதில்லைதான். ஆனா, நான் சொல்லணுமில்லையா...''

சரயு இப்படி என்றால் – சின்னவள் காயத்ரி அக்காவோடு சண்டை போட்டே பொருட் களைப் பறித்துச் செல்வாள்.

லலிதாவுக்கு இன்றைக்கும் நினைவிருக்கிறது..

கடைக்குட்டியான காயத்ரிக்குப் போட்ட புலி நகம் கோத்த சங்கிலியை சரயு, தனது மூத்த பெண் வயசுக்கு வந்தும் வெறுங் கழுத்தோடு இருக்கிற அவலத்தைச் சொல்லி அம்மாவிடமிருந்து வாங்க முயற்சிக்க, காயத்ரி, லங்கா ராட்சஸி மாதிரி கத்தினது...

"ஆமா... இவ வரிசையாய் பெத்து வச்சிருக்கற பொண் குழந்தைகளைக் காட்டியே ஒவ்வொண்ணா வாங்கிட்டுப் போவா... மத்தவங்க எல்லாரும் வாயில விரலை வச்சிட்டுப் பார்த்துட்டு நிற்கணுமாக்கும்...''

''உனக்குத்தான் ரெண்டும் பையனாச்சே.. .எதுக்கு சங்கிலி?''

மாய் வாங்கினான் என்றால், இந்த சரயு ஐயாயிரமா கவும் பத்தாயிர மாகவும் அம்மா விடமிருந்து வாங் கிக் கொண்டு போன தில்லையா என்ன?

இத்தனைக்கும் அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்றால் லலிதாவுக்குத்தான் கடிதம் வரும்.

'இப்பவும் தங்கள் தாயாருக்கு தேக அசௌக்கியமாக இருக்கிற டியால், தாங்கள் ஒரு வாரம், பத்து நாள் போல கும்மோணம்

**அனுராதா ரமணன்**



“என்னப்பா, இப்படிக் கூட்டமா திருட வந்திருக்கீங்க?”

“எங்கிட்ட திருட்டுத் தொழில் கத்துக்கிற இவங்களுக்கு இன்னிக்கு உங்க வீட்டில் பிராக்டிகல் வகுப்பு சார்!”

– ஞா. ஞானமுத்து

“அது சரி... பாட்டியோட ஆசீர்வாதமா மைனர் செயினாய் போட்டுக்கறான்கள். இதப் பாரு... உனக்குத்தான் அம்மாவோட நகையெல்லாம் சொந்தம்னு நினைக்காதே. நாங்களும் இருக்கோம்...”

காயத்ரி ‘நாங்களும்’ என்று சொன்னதில் லலிதா சேர்த்தியில்லை. இது மாதிரி சண்டை எல்லாம் அவளுக்குப் போடத் தெரியாது என்பதினால் தானோ என்னவோ அவளுக்குக் குழந்தையே இல்லை.

திருமணமாகிப் பத்து வருடங்களாகிறது. இன்று வரையில் ஒருவனும் ஒருத்தியும்தான். அதனால்தான் ஒவ்வொரு முறையும் அம்மாவுக்கு உடம்பு மோசமாகும் போதும் அவளால் வந்து தங்க முடிந்தது.

அவள் கணவன் ரகுவிற்கு மாமியாரிடத்தில் தனி பிரியம்.

“என்ன இருந்தாலும் உங்கம்மா கிரேட்தான் லலிதா... என்னிக்கோ அவங்க பண்ணின தான தருமம்தான் இன்னிக்கும் எண்பது வயசுக்கும் அவங்களைக் காப்பாத்திட்டிருக்கு. பாவம்... அம்மாவுக்கு ரொம்பவும் முடியாமப் போனால்தான் இப்படி லெட்டர் வரும். நான் எப்படியோ சமாளிச்சுப்பேன். நீ போய் இருந்துட்டு வா.”

காயத்ரி அடிக்கடி சொல்வது போல லலிதாவுக்கு மாமியார், மாமனார், குழந்தைகள் போன்ற ‘பிக்கு பிடுங்கல்’ எதுவும் கிடையாது.

லலிதாவும் அம்மாவுக்குச் செய்வதை தன் பாக்கியமாகத்தான் கருதினாள். ஆனாலும் ஒவ்வொரு தடவை வந்து போகும் போதும், அம்மாவிடமிருந்து நாமும் எதையாவது கேட்டு வாங்கிப் போக வேண்டும் என்று நினைப்பாள். கேட்க வாய் வராது. அம்மாவும் தானாகட்டும், ‘அவரவர் பாட்டுக்கு எதையெதையோ எடுத்துக் கொண்டு போகிறார்களே... உனக்கு எதுவும் வேண்டாமா லலிதா’ என்று ஒரு பேச்சுக்காகக் கூட கேட்டதில்லை.

லலிதா பெருமூச்செறிந்தாள்.

அம்மாவிடம் பழைய கெம்பு அட்டிகை
ஒன்று உண்டு. ஒவ்வொரு கல்லும், கனி
மாதுளம் முத்து போல சுடர் விடும்.. .கல்லு
அட்டிகையைக் கட்டியிருக்கும் நேர்த்திய
தான் அதிலுள்ள சிறப்பே தவிர – தங்க
என்று பார்த்தால் நாலு பவுன் தேறாது. உள்
எல்லாம் அரக்கு வைத்து...

ஒருமுறை அதை எப்படியாவது அம்
வைக் கேட்டு வாங்கி விட வேண்டும் என்
தீர்மானத்துடன் போனாள். அந்தத் தட
அம்மாவின் நிலைமை கொ
சம் மோசமாகவே இருந்தத
அண்ணன் பிரபாகரனு
அவன் பெண்டாட்டியும்
திருந்தார்கள். சின்னவ
கோபியும் அவன் மனை
வசுந்தராவும் இவர்களுக்
முன்பே வந்து டேரா அடி
திருந்தார்கள்.

அந்த நாலு பவுன் கெம்
அட்டிகைக்கு ஒரு மௌ
யுத்தமே நடந்தது அங்கே...

லலிதா எதிலும் பட்டுக் கொள்ளாம
அம்மாவின் பக்கத்திலேயே உட்கார்ந்திரு
தாள்.

குழந்தைகளை எல்லாம் ஒன்று சேர
பார்த்த உற்சாகத்திலேயே புதுத் தென்பு வந்
எழுந்து உட்கார்ந்த அம்மாவின் மடியில் இ
கெம்பு அட்டிகையை விட்டெறிந்தான் சின்
வன்.

“ஏம்மா.. இன்னிக்கெல்லாம் இருந்தா நா
பவுன்... என் பெண்டாட்டிக்கு இதைப் போ
டுக்கத் தகுதி இல்லையா... பணம் வேணும்
சொல்லு... எவ்வளவு மதிப்போ தந்துடறே
பிரபாவை வேற அட்டிகை வாங்கிக்க
சொல்லு...”

“அதான் ஏன்னு கேட்கறேன். இத்த
நாளா கேட்பாரில்லாம கிடந்தது. என் பெ
டாட்டி கேட்கறப்ப, அதுக்கு மார்க்கெ
உசந்துதாக்கும். அவளும் ஒண்ணும் அவ
காகக் கேட்கலை. உன் பேத்தி ப்ரியா டான்
கத்துக்கறா... சிவப்புக் கல் அட்டிகை வேணும்
ரொம்ப நாளாச் சொல்லிட்டிருந்தா... இந்
தடவை வர்றப்ப நானே உன்னை வெட்கத்
விட்டுக் கேட்கணும்னு இருந்தேன். அ
குள்ளே இவன் முந்திட்டான்...”

அம்மா, அப்பொழுதே லலிதாவிடம் பீ
சாவியைக் கொடுத்து, நகைப் பெட்டி
கொண்டு வரச் சொன்னாள். பழைய கால
நகைப் பெட்டி... இருந்த நகைகள் எல்ல
காணாமல் போய், பொக்கை வாய் கி
போல.. அடுக்கடுக்காய் அறைகளும், நீல
வெட்டின் வழுவழுப்புமே பழைய சரித்தி
தின் ஞாபகார்த்தச் சின்னங்களாய்...

நடுங்கும் விரல்களால் தடவித் தடவி,

லிருந்த அட்டிகையை எடுத்து, பெரிய மருமகளின் கையில் வைத்தாள் அம்மா. சின்னவளுக்கு அதற்கு ஈடாக சிவப்புக் கல் ராக்கொடி..

"இதுவும் கெம்புதான். ராக்கொடியை இந்தக் காலத்துல யார் வச்சுக்கறா...கல்லை எடுத்துக் கழுத்துக்கு ஏதாவது பண்ணிப் போட்டுக்கோ..."

அம்மா இப்படிச் சொன்ன போது, சின்னவன் காலியான நகைப் பெட்டியை எடுத்து வைத்துக் கொண்டான்.

"இருக்கட்டும், ஒரு காலத்துல இது நிறைய நகை வச்சிருந்தா உங்க பாட்டியின்னு என் குழந்தைகளுக்குக் காட்டுவேன்."

அப்பொழுதும் லலிதா, அம்மாவின் தோல் வற்றிய, நரம்பு புடைத்த, பாதங்களைப் பார்த்துக் கொண்டு பேசாமல்தான் உட்கார்ந்திருந்தாள்.

மனசுக்குள் ஆற்றாமை பொங்கிப் பொங்கி வந்தது. இதே ராக்கொடியையும், அட்டிகையையும் அணிந்து கொண்டு, அவள் எத்தனை நவ



ராத்திரி கொலுவிற்கு குங்குமச் சிமிழுடன் அலைந்திருக்கிறாள்?

அப்பொழுதெல்லாம் சரயுவுக்கும், காயத்ரிக்கும் இந்த நகைகளைப் பிடிக்காது. கல் வைத்து ஜொலிக்கும் இமிடேஷன்களை மாட்டிக் கொண்டு அலைவார்கள்.

இன்றைக்கு ஒரு க்ஷண நேரத்துக்குள் இவைகளைத் தூக்கிக் கொடுத்த அம்மா, அன்றைக்கு லலிதாவுக்கு இதே நகைகளை அணிவித்து அழகு பார்த்திருக்கிறாள்.

"உன்னோட எலுமிச்சை நிறத்துக்குத்தான் இந்தக் கெம்பு அட்டிகை எடுபடறது..."

இப்படிச் சொல்லிச் சொல்லிப் பூரித்த அம்மாவிற்கு, அவைகளைக் கொடுக்கும் கடைசி நிமிஷத்திலாவது தன் நினைவு வந்திருக்க வேண்டாமோ?

அதெப்படி மறந்து போனாள்...

**அ**ம்மாவின் காரியங்கள் நடந்த பத்து நாட்களிலும் லலிதாவினால் எதிலேயும் ஒட்ட முடியவில்லை.

அம்மா தனக்கு எதையுமே தந்திருக்க வேண்டாம். ஏதாவது வேண்டுமா என்று கே டிருந்தால் கூடப் போதும்.. மனசு குளிர்ந் போயிருக்கும் என்றே நினைக்கத் தோன்றுகிற அவளுக்கு.

ஒரு பக்கம் லலிதாவின் சகோதரர்க வைதீகக் காரியங்களில் ஈடுபட்டு, அம்மாவை பித்ருக்களோடு சேர்க்க மந்திரங்களைச் சொ லிக் கொண்டிருக்கும்போதே, உள்ளே அவ களது மனைவிமார்களும், சரயுவும், காயத்ரியு மிச்சம் மீதியிருந்த அம்மாவின் புராதன சமை யல் பாத்திரங்களை உருட்டிக் கொண்டிரு பதை தள்ளி நின்று பார்த்துக் கொண்டிருந்தா லலிதா.

பாத்திரங்களை உருட்டுவது போதாது என்று மாமியாரின் தலையையும் சேர்த்து உருட்டிக் கொண்டிருந்தார்கள் மருமகள்கள்.

"கடைசியிலே இந்த வீட்டு மேல இருக்க கடன் போக ஒண்ணுமே வராதுன்னு சொல்லு..."

"எங்கே... கண்டவன் கேட்டவனுக்கெ லாம் வாரி விட்டாச்சு. இதுல பொண்க வேற... சுத்தமாத் துடைச்சு வச்சிருக்கு. இந்த ஈயச் சொம்பு உனக்கு வேணுமா..."

"உங்க மச்சினருக்கு ஈயச்சொம்பு ரசம்னா பிடிக்கும். எனக்குத்தான் அது

"என் காதலனைப் புரிஞ்சிக்கவே முடியலை....!"
"ஏன்?"
"நாணத்தோட தலைகுனிஞ்சிக்கிட்டு 'ச்சீ போங்க!'ன்னேன். 'விடு விடு'ன்னு போயிட்டாருடீ..."
– ஜூனியர் தேஜ்

சரிப் பட்டு வர்றதே இல்லே... மூணு ஈய சொம்பு காஸ்லே வச்சு காணாமலேயே போயிடுத்து. அப்புறம் தேடினா மேடையிலே உருகி உட் கார்ந்திருக்கு..."

"என்னமோ... இவருக்குத் தெரிஞ்சா இதையெல்லாம் எதுக்கு வாரிக் கட்டிட்டு வர்றே யின்னுதான் கத்துவார். பெரியவா ஆசீர்வா தமா இருக்கட்டுமேயின்னுதான்..."

எதிர் அறையில் சரயு, காயத்ரியிடம் சொல் லிக் கொண்டிருந்தாள்.

"அம்மாவுக்கு இந்தப் பத்து நாளும் பொண் கள் பிண்டம் போட்டதுக்கு வெள்ளிக் கிண் ணம் வாங்கித் தரணும் இவனுங்க. வீட்டுல இருக்கற நசுங்கிய சந்தனப் பேளாவைத் தூக்கி கடையில போட்டு மூணு குங்குமச் சிமிழ் மாதிரி கிண்ணம் வாங்கிட்டு வந்திருக்

கானுங்க...''

''எல்லாம் பெண்டாட்டி சொல்லிக் கொடுத்திருப்பாளா இருக்கும்...''

“அந்தக் கிண்ணத்தைக் கூட லலிதா என் கிட்டயே கொடுத்துட்டா.. அவளுக்கு என் னிக்குமே இதெல்லாம் லட்சியமே இல்லே... அவ பார்க்காத வெள்ளியா, தங்கமா...''

லலிதா குனிந்த தலைநிமிராமல் உட்கார்ந் திருந்தாள். இந்த முறை அவளுடன் அவள் கணவன் ரகுவும் - சகலத்தையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தான்.

“ஏன் லலிதா... அந்தக் கிண்ணத்தையாவது அம்மா நினைவா வச்சிருக்கலாமில்லே?''

“சும்மாயிருங்க... எங்க அம்மா இருந்தா என்ன செய்வாளோ அதைத்தான் செஞ்சேன் நான்...''

அம்மாவை சொர்க்கத்துக்கு அனுப்பி விட்டு, வெறுமையான மன்சுடன் சென் னைக்கு வந்து நாற்பது நாட்களுக்கு மேலாகியும் அவளுள் சின்னதாய் ஓர் உறுத்தல் இல்லாமல் இல்லை...

‘அம்மா கையாலே கொடுக்கலையின்னா லும் அந்த வெள்ளிக் கிண்ணத்தை வாங்கிட்டு வந்திருக்கலாமோ... செத்துப் போனவகிட்ட எதுக்காக எனக்கு இத்தனை ஆங்காரம்...'

ஊஞ்சலில் படுத்தபடி நினைத்துப் பார்த்த வளுக்கு அம்மாவின் நெளிந்த சிரிப்பும், இடுங் கிய கண்களின் பாசப் பார்வையும் நெஞ்சு கனக்கச் செய்ய...

“அம்மா...''

முதல் முறையாய் கண்கள் கண்ணீரில் கரைய...‘ அய்யோ... இதென்ன...

லலிதா வயிற்றைப் பிடித்துக் கொண்டு எழுந்து உட்காருகிறாள். பத்து வருடங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் ஒரு புதிய உணர்வு! நாவில் பித்த நீர்த் துவர்ப்பு... நெஞ்சைக் கரித் துக் கொண்டு வந்தது...

லலிதாவின் கண்கள், அவளையுமறியாமல் காலண்டரைப் பார்க்கிறது..,

ஆனி பத்து... ஆடி முப்பது... ஆவணி நாப் பத்தியாறு...

அம்மா அவளுக்குள் உட்கார்ந்து, தனது நடுங்கும் விரல்களைப் பிரித்து மடக்கி கணக் குப் போட்டு, புன்னகை ததும்ப அவளைப் பார்ப்பது போல...

“அம்மா, கடைசியில உன்னையே எனக்குத் தர்றதுதானா உன்னோட நோக்கம். இது புரிய லையேம்மா எனக்கு... லலிதா சமர்த்து, சமர்த் துன்னு சொல்லுவியே.. நான் அசடுதாம்மா...''

லலிதா.... தனக்குள் சின்ன வித்தாய் வளைய வரும் தாயுடன் பேசிக் கொண் டிருக்க... இப்போதும் அவள் பக்கத்தில் ரகு புன்னகையுடன்.



“எதிர் வீட்டு கமலா கட்டிட்டிருக்கிற புடைவை எப்படிங்க இருக்கு?”

“கண்றாவியா இருக்கு.”

“அதனாலதான் 200/- ரூபா நஷ்டமா னாலும் பரவாயில்லைன்னு நேற்று நீங்க வாங்கிட்டு வந்த அந்தப் புடைவைய ரூ.300/-க்கு அவ தலையில கட்டிட்டேன்!”

- சீர்காழி. வி. ரேவதி



''யோவ் மானேஜரு... பியூன் ஸார் உடனே கூப்பிடறாரு...''

''என்னதான் அவர்கிட்ட கடன் வாங்கியிருந்தாலும் இப்படியா...?''

– எஸ். எஸ். பூங்கதிர்



''வேலைக்கு வர்றப்ப யாரும் தலைக்கு எண்ணெய் தேய்ச்சுட்டு வரக் கூடாதுன்னு மானேஜர் உத்தரவு போட் டிருக்காரே, ஏன்?''

''தலைக்கு வச்சு தூங்குறப்ப ஃபைல்களெல்லாம் எண்ணெய் பிசுக் கேறி அசிங்கமாயிடுதாம் அதான்...!''

– ஜி. செல்லத்துரை



## 29. சிக்கிய ரகசியம்!

**கா**ஞ்சிக்குத் தெற்கே நீண்ட பெரு வழிப்பாதை வளைந்து வளைந்து, பெரும் அசுர நாகம் போல் படுத்துக் கிடந்தது. பெரு வழிப் பாதையுடன் கோபித்துப் பிரிந்த கொடி வழியொன்று சற்று மேற்கில் சென்றது. நேர் வழியிலிருந்து விலகுபவர்களின் முடிவு இப்படித்தானிருக்கும் என்று காட்டிய அந்தப் பாதை, கொன்றையும் அரசும் வேம்பும் நிறைந்த மரக் கூட்டங்களைக் கடந்து போய் முட்களும் புதர்களும் பாறைகளும் நிறைந்த பகுதியில் சென்று முடிந்தது. மேற்கில் கதிரவன் சரியத் தொடங்கியதால், பாறை களின் நிழல்கள் நீண்டு பிசாசுகளைப் போல் தோற்றமளித்தன. ஒற்றை நரியொன்று நீண்ட குரலில் ஆலாபனை செய்துவிட்டு, தன் கீதம் தூரத்திலிருந்து ஒரு மனிதனை வரச் செய்து விட்டதைக் கண்டு தயங்கி நின்றது. வருபவன் கரத்திலிருந்த பந்தத்தையும், அதன் ஒளியில் பளபளத்த வாளையும் பார்த்ததும் சந்தேகம் கொண்டு ஓடி மறைந்தது!

மனித சஞ்சாரமற்ற அந்தப் பகுதியில் இருள் கவிந்து கொண்டிருந்த அந்த வேளை
யில், வந்து கொண்டிருந்த அந்த மனிதனி
புலித் தோலும், கறுத்துப் பெருத்த உருவமு
அவன் உடலெங்கும் பூசியிருந்த நீறு
மண்டையோடும் எலும்புகளும் சேர்ந்
மாலையும் அவன் ஒரு காளாமுகன் எ
பதைத் தெளிவாக்கின. அந்தக் காட்டு
பகுதிக்கு அவன் வந்து கொண்டிருப்பது தவ
புரியவோ அல்லது ஏதும் பூஜை நடத்தவே
இல்லையென்பதை அவன் நடையின் வேகமு
முகத்திலிருந்த பரபரப்பும் பறைசாற்றின. கா
டுக் கொடிகளும் புதர்களும் சூழ்ந்து நின்
சிறு குன்று ஒன்றை நெருங்கியதும் அவனு
வேகம் மட்டுப்பட்டது. வாயைக் குவித்து ஆ
தையைப் போல் ஓர் அலறலை வெளியி
டான். சற்றுக் கழித்து அவன் குரலுக்கு
பதிலளித்து எங்கிருந்தோ மற்றொரு ஆந்
குரல் கொடுத்தது. பாறையைச் சுற்றி
கொண்டு அதன் கிழக்குப் பகுதியை அடை
தவன், மேலிருந்து தொங்கிய காட்டுக் கொ
களை விலக்கினான். பெரும் மண்டபமாக
குடையப்பட்டிருந்த குன்றின் உட்பகுதி கண்
ணெதிரே விரிந்தது.



ழகப்பில் சிற்பத் தூண்களுடன் கூடிய
டபத்தையடுத்து, தரையில் பெரும்
ரை மலர் செதுக்கப்பட்ட அர்த்தமண்
தெரிந்தது. தமிழகத்தின் சிற்பக் கலைக்கு
ட்டவனும் விசித்திர சித்தன் என்று
ழக்கப்பட்ட அறிஞனும், பல்லவச் சக்கர
தியுமான மகேந்திரவர்ம பல்லவன், தன்
நரசிம்மன் பெயரால் ஓர் ஊரையும்,
கே ருத்ரவாலீஸ்வரம் என்ற குகைக்
யிலையும் உருவாக்க முனைந்தபோது,
றகள் விரிசல் விடத் தொடங்கியதால்,
யில் விட்டுச் சென்று விட்ட குடவரைக்
பில் அது. மன்னனாலும் மக்களாலும்
கணிக்கப்பட்டதால் வனப்பகுதியாகி
அந்தக் கோயிலும் சுற்றியிருந்த பகுதி
கள்ளர்களுக்கும் விலங்குகளுக்கும்
விடமாகி, இப்பொழுது காடவராயனுக்
அவன் வீரர்களுக்கும் இருப்பிடமாகியிருந்
தன்றின் மேற்பகுதியில் தெரிந்த நான்கு
டபங்களும் ஆயுதங்களாலும்

னகக் குடைவரைக்
ல்கள்- த.இராசமாணிக்கம்
யாயம்: 1, பக்கம் : 12.)

உணவுப் பொருட்களாலும் வீரர்களாலும் நிறைந்திருந்தன.

மண்டபத்தின் நடுவே கூட்டமாக அமர்ந்திருந்த காடவ வீரர்களின் முன்பாக, கல் மேடையொன்றின் மீது அமர்ந்திருந்தான் காடவராயன். உள்ளே நுழைந்த காளாமுகனைக் கண்டதும், "போன காரியம் என்னவாயிற்று? ஏன் இத்தனை தாமதம்?" என்று இரைந்தான் அவன்.

காளாமுகன் சற்றுத் தயங்கினான். அவன் கொண்டு வந்திருக்கும் செய்தி நிச்சயம் காடவராயன் ரசிக்கும்படியிருக்காதென்பது அவன் தயக்கத்திலிருந்து தெரிந்தது. "பிரபு... பிரபு... நமது மன்னரை... தஞ்சை யில்..."

காடவ

# இந்திர தனுசு

ராயன் முகத்தில் திகில் பரவியது. "உடனே சொல், என்ன செய்தான் அந்தத் துறவி? தந்தைக்கு என்ன ஆயிற்று?" அவன் குரலில் பதற்றம் ஒலித்தது.

"மன்னருக்கு அபாயமேதுமில்லை பிரபு. அவரைச் சிறைச்சாலையிலிருந்து தனி மாளிகையொன்றில் மாற்றி காவலில் வைத் திருக்கிறார்கள்" என்றான் காளாமுகன். காட வராயனுக்கு போன உயிர் திரும்பியது. காளா முகன் தொடர்ந்தான் : "பிரபு, மன்னர் நமது பொக்கிஷங்களைப் பற்றிக் கூறிவிட்டதாகத் தெரிகிறது..."

காடவராயன் தலைக்கு மேல் ஆயிரம் இடிகள் இடித்தன. கண்கள் இருண்டு தலை விர்ரென்று சுழன்றது. சுற்றியிருந்த வீரர்களுக் கும் அந்தச் செய்தி பேரிடியாக இருந்ததென் பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. மெள்ள நிதானப்படுத்திக் கொண்ட காடவராயன், "மன்னர் பொக்கிஷங்களைப் பற்றிக் கூறிவிட் டாரென்று எப்படி அறிந்தாய்?" என்றான் உடைந்த குரலில்.

"மன்னர் மாளிகைக்கு மாற்றப்பட்டதும், நமது காடவமங்கலத்தை நோக்கி வீரர்களும் பல ரதங்களும் சென்றதை நேரில் கண்டேன் பிரபு" என்றான் காளாமுகன்.

காடவர் தலைநகருக்குத் தெற்கே மூன்று காத தூரத்திலிருந்த காடவமங்கலத்தில் தாங்கள் அதுவரை சேர்த்திருந்த பொக்கிஷங் கள் அனைத்தும் பறிபோயின என்பதைக் கேட்ட காடவராயன் மனத்தில் ஆத்திரம் பொங்கியது. காடவ மன்னனுக்கும் தெரியா மல் தான் தனிப்பட சேமித்த பொற்குவியல் மட்டுமே எஞ்சியிருக்கிறதென்பதை உணர்ந்த வன், "இதை முன்னரே வந்து தெரிவிப்பதற் கென்ன?" என்றான்.

"முன்னதாக வந்து கூறியிருந்தாலும் பயனில்லை பிரபு. சோழ, பாண்டிய வீரர் களின் பலமான படைப்பிரிவு அங்கு சென் றிருக்கிறது. அதைவிட முக்கியச் செய்தியொன் றும் இருக்கிறது பிரபு."

"என்ன செய்தி?"

"ஆதித்ய பாண்டியன் சோழ தூதனாக காஞ்சிக்கும் காகதீயர் தலைநகருக்கும் சென் றிருக்கிறான் பிரபு" என்றான் காளாமுகன்.

"என்ன உளறுகிறாய்?" காடவராயன் இதை அடியோடு நம்பவில்லையென்பதை அவன் முகம் உணர்த்தியது.

"உண்மைதான் பிரபு. தஞ்சையில் இதைக் கேட்டபோது நானும் நம்பவில்லை. ஆனால் பாண்டிய இளவலைத் தொடர்ந்து, நானும் காஞ்சி வரை சென்று உறுதி செய்தபின்பே திரும்பி வந்தேன். பேரிகைகள் முழங்க காஞ்சி யின் கோட்டைத் தலைவன் வந்து வரவேற்ற தையும் நேரில் கண்டேன்."

## அருள்வாக்கு

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இந்தியாவுக்கு வந்த மெகஸ்தனிஸ் அப்போது நம் ஜனங்கள் எவ்வளவு ஸத்துக்களாக வாழ்ந் தார்கள் என்பதைக் கூறியிருக்கிறான். 'இந்திய மக்களுக்குப் பொய்யே சொல்லத் தெரியாது; தெருவில் போட்டுக் கிடக்கிற பணத்தைக் கூட எடுத்துச் செல்ல மாட்டார்கள்' என்றெல்லாம் மெகஸ்தனிஸ் சொல்லியிருக்கிறான். அந்தக் காலத்து ஜனங்களின் மனசு மாதிரியே இப் போதும் இருக்கக் கூடாதா என்று ஆசையாக இருக்கிறது.

அன்றைக்கு அவர்கள் அவ்வளவு உயர் வாக இருந்ததற்குக் காரணம் என்ன? இன்று நாம் இவ்வளவு தாழ்ந்து போய் விட்டதற்குக்

காடவராயன் சிந்தித்தான். "இது எப்படி சாத்தியம்? சோழனும் பாண்டியனும் எப்படியி ருந்தாலும் காகதீயருக்கும் பாண்டியர்களுக்கும் இருக்கும் பகையை மறந்து விடக் கார ணமேதுமில்லை. சோழ தூதன் போர்வையில் ஆதித்யன் சென்றிருப்பது நிச்சயம் ஏதோ ஏமாற்று வேலையாகவே இருக்க வேண்டும். சோழ தூதனாக வருபவன் பாண்டியன் என் பதை அறிந்தால் காகதீய மன்னன் லேசில் விட்டுவிட மாட்டான். அதிலும் அந்த காகதீய இளவரசி சரியான அரக்கியென்று கேள்வி. ஆதித்யனை அவள் கொன்றே போட்டு விடுவாள்."

ஆதித்யன் யாரென்பதைக் காட்டிக் கொடுக்கும் ஓலையொன்றை எழுதி முடித்த காடவராயன், அந்தக் காளாமுக உபதலை வனிடமே அதை அளித்து, அப்பொழுதே காகதீயரின் தலைநகர் நோக்கிச் செல்ல உத்தர விட்டான். அடுத்து தஞ்சை மாளிகையில் காடவ மன்னனைச் சந்தித்து வர, தனது வீரர்களையும் அனுப்பி வைத்தான்.

காஞ்சியிலிருந்து கண்ட கோபாலனிட மும் ஸ்வர்ணமுகியிடமும் விடைபெற்ற ஆதித்யனை இறுதிவரை தடுக்க முயன்றான் கண்ட கோபாலன், "ஆதித்யரே, துறவியார் ஏற்கெனவே ஓலையனுப்பி விட்டதாகக் கூறுகிறீர்கள். ஆனால் காகதீய மன்னர் உதவ முன்வருவது சந்தேகம். அவர் வடக்கில் யாத வருடன் போரை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறார்" என்ற கண்டகோபாலன் தன் முத்திரை மோதிரத்தையும் ஓலைக்குழலொன்றையும் ஆதித்யனிடம் அளித்தான். "ஆதித்யரே, காகதீய மன்னர் உதவவில்லையெனில் நீங்கள் வருந்த வேண்டாம். காளத்தியில் எனது

காரணம் என்ன? அந்தந்தக் காலத்தின் சூழ்நிலையே அந்தந்த மனப்பான்மைக்கும் காரணமாக இருக்கிறது. பழங்காலத்தில் பொது ஜனங்கள் எல்லாரும் கோவிலுக்குப் போனார்கள். அங்கே அவர்களுக்கு நல்வழி கூறுவதற்காக மகாபாரதம் முதலிய ஸத்கதைகள் நடைபெற்றன. இதற்காகவே ராஜாங்கத்தில் மானியம் தரப்பட்டு வந்தது. நாடகம், கூத்து எல்லாம் கூடத் தெய்வ சம்பந்தமாகவே இருந்தன. தங்கள் தொழிலைச் செய்வது, ஆலய தரிசனம், ஸத்கதை சிரவணம், இவற்றுக்கே மக்களின் பொழுது சரியாக இருந்தது. இதனால் யோக்கியர்களாகவே இருந்தார்கள். இப்போது ஜனங்களைக் கவர்ந்திழுப்பதற்கு என்ன என்னவோ ஆபத்துக்கள் எல்லாம் வந்து விட்டன. தர்மத்துக்கு விரோதமான படக்காட்சிகள், கதைப் புத்தகங்கள் எல்லாம்



அதிகமாகி விட்டன. ஜனங்கள் இதற்கிடையில் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது, பலவிதமான அரசியல் கட்சிகள் வேறு அவர்கள் புத்தியைக் கலக்கிக் கொண்டிருக்கின்றன. எங்கேயும் சஞ்சலம், அதிருப்தி, யோக்கியதைக் குறைவு, லஞ்சம் இவை அதிகரித்து விட்டன.

இவை நிவிருத்தியாக வழி ஒன்றுதான் : பழைய காலத்தைப் போலக் கோயில்களைச் சமூக வாழ்வின் மத்திய ஸ்தானமாக்கி விட வேண்டும்; அன்றுபோல் இப்போதும் தெய்வ சம்பந்தமான பழம் கலைகளை வளர்க்க வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

படைப் பிரிவொன்று இருக்கிறது. அதன் தலைவன் பிரதாபருத்திரனுக்கு ஓலையொன்றும் எழுதியிருக்கிறேன். இந்த ஓலையை அவனிடம் அளித்து அவனுடனேயே நீங்கள் திரும்பலாம். எனது மொத்தப் படைகளையும் சேர்த்து சோழ நாட்டுக்கு உதவ நானே வருகிறேன். உங்கள் நாட்டையும் உங்களையும் சேர்ந்த நிலையில் வைப்பது என் பொறுப்பு" என்றான் கண்டகோபாலன்.

விடைபெற்றுக் கொண்ட ஆதித்யன், பகதீயர் தலைநகரையோ காளத்தியையோ நோக்கிச் செல்லவில்லை. விஜயன் பின்கொட்டிச் செல்ல, நேர் வடமேற்கில் விரிந்த மலைத் தொடரைக் கடந்து, பெரும் வனங்களையும் பிரதான பாதையையும் தவிர்த்து, வயல்களினூடேயும் சிறு கிராமங்களைக் கடந்தும் சென்றான்.

இரண்டாவது தினம், சித்திராவதிக் கரையிலிருந்த பொத்தப்பியின் கோட்டை அவன் கண்களுக்கெதிரில் எழுந்து நின்றது. அதை அணைத்து ஓடிய மதில்கள் வலுவாக அமைந்திருப்பதையும், வளைந்து உட்புறமாகச் சென்று மீண்டும் நீண்ட இடங்களில் அம்புகளை வீசும் மாடங்கள் தெரிவதையும் கவனித்த ஆதித்யன், அது சாளுக்கியரின் பழைய கோட்டை அமைப்பில் இருந்ததைப் புரிந்து கொண்டான்.

ஆதித்யன் கரத்தில் ஒளிவிட்ட முத்திரை மோதிரத்தைக் கண்டு, கோட்டை வாயிலில் இருந்த காவலன் உட்புறமாகத் திரும்பிக் குரல் கொடுத்தான். திட்டி வாசலைத் திறந்து இருவரையும் உள்ளே அழைத்தான்.

ஆதித்யனும் விஜயனும் உள்ளே நுழைந்த இரண்டாவது கணத்தில் உட்புறத்து மதிலின் மேலில் கோட்டைத் தலைவன் வேகமாக இறங்கி வருவது தெரிந்தது. முத்திரை மோதிரம் கோட்டைத் தலைவனது பார்வையில் பட்ட அடுத்த கணம், அவனிடமிருந்து உத்தரவு பிறந்தது : "இருவரையும் சிறை செய்யுங்கள். அவர்கள் ஆயுதங்களையும் அகற்றுங்கள்!"

உருவிய வாட்களும் கூரிய ஈட்டிகளும் ஆதித்யனையும், விஜயனையும் சூழ்ந்தன.

**கோ**ட்டை மதிலின் மீதிருந்து வேகமாக இறங்கிய கோட்டைத் தலைவன், வந்திருப்பவனின் ராஜதோரணையையும், அவன் கரத்திலிருந்த முத்திரை மோதிரத்தையும் கண்டவுடன் இருவரையும் சிறைசெய்ய உத்தரவிட்டானென்றால் அதற்குக் காரணமிருக்கவே செய்தது. கண்டகோபாலனுக்கெதிராக அங்கு திரட்டப்பட்டுக் கொண்டிருந்த படை குறித்தும் மற்ற ஏற்பாடுகள் பற்றியும் ஒற்றர்கள் மூலமாகக் கண்டகோபாலன் அறிய முற்படுவானென்பதை எதிர்பார்த்திருந்த கோட்டைத் தலைவன், காஞ்சியின் முத்திரை மோதிரத்துடன் அந்த வேளையில் வந்து நின்ற ஆதித்யனையும் விஜயனையும் கண்டகோபாலனின் ஒற்றர்களாகவே நினைத்ததில் வியப்பேதுமில்லைதான்.

ஆனால் தான் உத்தரவிட்டதும் வாட்களையும் வேல்களையும் கொண்டு வீரர்கள் சூழ்ந்து கொண்டபின்பும் வந்தவன் முகத்தில் எந்த மாறுதலும் தெரியாததோடு அவன் சர்வசாதாரணமாக முறுவலித்தது கோட்டைத் தலைவனை இன்னும் வியக்க வைத்தது. அடுத்து அந்த வாலிபன் உதிர்த்த சொற்கள் அவனை மட்டுமின்றி, சுற்றி நின்ற வீரர்களையும் அசரவைத்தன.

"கோட்டைத் தலைவரே, உங்கள் உத்தரவைச் சற்று தாமதப்படுத்துங்கள்; உடனே நிறைவேற்ற வேண்டாம்!"

பொத்தப்பியின் மக்கள் பேசி வந்ததும், ஆதி ஆந்திரம் என்று அழைக்கப்பட்டதுமான

பிராகிருதம் கலந்த தெலுங்கு மொழியில் ஆதித்யன் கூறிய வார்த்தைகள், கோட்டைத் தலைவனின் விழிகளை வியப்பில் விரிய வைத்தன.

மாறன் அமுதனாரிடம் தென்னாட்டின் மொழிகளையும் வடமொழியையும் சற்று ஆழமாகவே பயின்றிருந்த ஆதித்யன், ஸ்பஷ்டமாகவும், சரளமாகவும் உதிர்த்த அந்த வார்த்தைகளும், அவன் தோரணையும் எந்த வகையிலோ இவன் நமக்கு நெருங்கியவன் என்ற உணர்வை கோட்டைத் தலைவனுக்கு ஏற்படுத்தின. எனவே, வீரர்களை விலகுமாறு உத்தரவிட்டவன், ஆதித்யனை நெருங்கி அவனை உற்றுப் பார்த்தான். மனிதன் சித்தத்திலும் ரத்தத்திலும் இணைந்து கிடந்த மொழியென்னும் சக்தியின் வலிமையைப் பற்றி பூரணமாக அறிந்திருந்த ஆதித்யனின் முகத்திலிருந்த முறுவல் நன்றாக விகசித்தது.

"நீங்கள் யார்?" என்ற கோட்டைத் தலைவனின் குரலில் உஷ்ணம் தணிந்திருந்தது. அழைத்த முறையிலும் மரியாதை தெரிந்தது.

பதிலுக்கு அதே முறுவலுடன் அவனை ஏறிட்ட ஆதித்யன், "எதற்காக என்னைச் சிறை செய்ய உத்தரவிட்டீர்கள்?" என்று கேட்டான்.

"நீங்கள் காஞ்சியிலிருந்து வருவதாக வீரனிடம் கூறினீர்கள். கண்டகோபாலனின் முத்திரை மோதிரமும் உங்களிடமிருக்கிறது..." என்றான் கோட்டைத் தலைவன்.

"எனவே நான் கண்டகோபாலரைச் சேர்ந்தவன் என்று தீர்மானித்து விட்டீர்கள்" என்று முடித்த ஆதித்யன், பலமாக நகைத்தான். நகைப்பதை சற்று நிறுத்தியவன், "நீங்கள் கண்டகோபாலருக்கு எதிரியா? பொத்தப்பி காஞ்சிக்கு உட்பட்ட சிற்றரசுதானே?" என்றும் கேட்டான் முறுவலுடன்.

கோட்டைத் தலைவன் முகத்திலும் சுற்றியிருந்த வீரர்களின் முகத்திலும் சங்கடம் நெளிந்தது. உடன்நின்று அனைத்தையும் வியப்புடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த விஜயனையும் இந்த நேரடியான கேள்வி சங்கடப்பட வைத்தது.

ஆதித்யன் தொடர்ந்து கேட்டான் : "பொத்தப்பிச் சிற்றரசு கண்டகோபாலருக்கெதிராகச் செயல்பட்டுக் கொண்டிருப்பதை கண்ட கோபாலரோ, அவரிடமிருந்து வருவதாகக் கூறும் நானோ அறியவில்லையென்று நினைக்கிறீர்களா? அப்படி அறிந்த பின்னும் நானாக வந்து எதிரிகளிடம் சிக்கிக் கொள்கிறேன். அப்படித்தானே?"

கோட்டைத் தலைவனுக்கு ஆதித்யனின் வாதத்திலிருந்த உண்மை புலப்பட்டது. குழப்பமான குரலில் மீண்டும் வந்தது அவன் கேள்வி : "காஞ்சியிலிருந்து நீங்கள் வருவதாகக் கூறியது உண்மைதானே?"

"ஆம், உண்மைதான்."

"அப்படியானால் நீங்கள் கண்டகோபாலரைச் சேர்ந்தவர் என்று எண்ணுவதில் என்ன தவறு?"

மீண்டும் கடகடவென்று நகைத்தான் ஆதித்யன்.

"ஏன் நகைக்கிறீர்கள்?" - கோட்டைத் தலைவனின் குழப்பம் அதிகரித்திருந்தது.

"ஓர் அரசனுக்கெதிராகச் சதிசெய்யும்போது எச்சரிக்கையாக இருப்பது அவசியம்தான். ஆனால் சற்று விவேகமும் அதில் கலந்திருக்க வேண்டும், கோட்டைத்தலைவரே இப்பொழுது உங்கள் கோட்டைக்குள் சோழ நாட்டுப் பரிசாரகர்கள் இருக்கிறார்கள். சாளுக்கிய கல் தச்சர்களும், கடாரத்து வணிகர்களும் கூட இருக்கிறார்கள். அனைவருமே மன்னர் மன்மசித்தரைச் சேர்ந்தவர்களென்று கூறிவிடலாமா? அவரவர் காரிய நிமித்தமாக வந்து தங்கியிருக்கிறார்கள், அவ்வளவே. இதோ என்னருகே நிற்கும் இவன் தஞ்சையிலிருந்து வருகிறான். இவனை சோழ நாட்டு ஒற்றர் படைத்தலைவன் என்று எண்ணிக் கொள்வீர்களா?" என்ற ஆதித்யன் விஜயனைக் காட்டி மீண்டும் நகைத்தான்.

"அப்படியானால்...." இழுத்தான் கோட்டைத் தலைவன்.

"நானும் காரிய நிமித்தமாகக் காஞ்சி வரை சென்று திரும்பியதால்தான் காஞ்சியிலிருந்து வருவதாகக் கூறினேன்."

"என்ன காரியமாகக் காஞ்சி சென்றீர்கள்?"

"காஞ்சியின் நிலை பற்றியும், கண்டகோபாலரின் எண்ணத்தையும் அறிந்து வர உத்தரவிட்டதால் அங்கு சென்றிருந்தேன்."

"யார் உங்களை அனுப்பியது?" கோட்டைத் தலைவன் குரலில் இன்னும் சந்தேகம் மிச்சமிருந்தது.

"தங்களிடம் சொல்ல உத்தரவில்லை" ஆதித்யனின் இந்த பதில் கோட்டைத் தலைவனின் முகத்தில் பெரும் மாறுதலை ஏற்படுத்தியது. ஆதித்யனை நெருங்கியவன், அவன் செவிகளில் ஏதோ ரகசியமாகக் கூறினான்.

எதிர்பாராதவிதமாகத் தன் செவிகளில் ஓதப்பட்ட அந்த ரகசியத்தைக் கேட்ட ஆதித்யன், பிரமித்தான். நிலைமையைச் சமாளிக்க வேண்டி தான் கூறிய மழுப்பலான பதில்கள் பெரும் ரகசியமொன்றைத் தன்னிடம் சிக்க வைத்து விட்டதை உணர்ந்தான்.

(தொடரும்)

● ஏகப்பட்ட வேலைகளைச் செய்து முடிக்கப் போவதாய்ச் சோம்பேறிகள் திட்டமிடும் நாள்தான் 'நாளை'. - நார்வே பழமொழி.
தகவல் : வயலூர் பா. சுகுணா

# சுஜாதா பக்கம்



தமிழிலக்கணத்தில் பெயரெச்சம், வினையெச்சம் என்பதெல்லாம் படித்திருப்பீர்கள். எச்சம், Infinitive என்று ஆங்கிலத்தில் சொல்வதற்கு ஈடான இலக்கண வார்த்தை. பெயரெச்சத்தைப் பயன்படுத்தும்போது நல்ல எழுத்தை விரும்புகிறவர்கள் கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இல்லையேல் அர்த்தம் தடம் புரண்டுவிடும். 'நன்றாகப் படித்த பையன்' என்பதில் 'படித்த' என்பது பெயரெச்சம். இதில் குழப்பம் இல்லை. ஆனால், 'நன்றாகப் படித்த நமச்சிவாயத்தின் பையன்' என்றால் சந்தேகம் வருகிறது. 'நமச்சிவாயத்தின் நன்றாகப் படித்த பையன்' என்றால் வாக்கியம் அவ்வளவு அழகாக இல்லை. பெயரெச்சத்துக்கு முன்பு பெயர்ச் சொற்களையும் இடை, உரிச் சொற்களையும் அடுக்கும்போது வருகிற வம்பு இது. பல எழுத்தாளர்கள் (நான் உட்பட) இவ்வாறு எழுதுவதைப் பார்த்திருப்பீர்கள்.

'வலதுகையில் வாட்சு கட்டிய பெண்ணுடன் வந்திருந்த நாய்க்குட்டி' என்றால் சிரமமில்லை. வாட்சு கட்டியது பெண்தான் ன்பது. ஆனால் 'கட்டிய' பின் ஒரு கமா போட்டுப்பாருங்கள்!

இதனால்தான் 'அவள் பெயரை வைத்துக் கொண்டாடின என் நல்ல சிநேகிதனே நீ ஏன் நடிப்பதை நிறுத்தக் கூடாது' என்று படிக்கும்போது அவள் பெயரைக் கொண்டாடினது வண்ணதாசனா, அவர் சிநேகிதரா என்று சந்தேகம் வருகிறது. இந்தக் குழப்பத்தை சுற்றுப் ட்ட வாக்கியங்களை வைத்து தீர்த்துக் கொள்ளலாம் என்றாலும் அந்த இடத்தில் ஒரு ன்ன தடுக்கல்; ஒரு தயக்கம் ஏற்படுவது ஜமே.

வண்ணதாசன் சிறப்பாக உரைநடை ழுதக் கூடியவர். இயல்பாக ஒரு வேகத்தில் ழுதும்போது, இலக்கணப் பொருத்தம் ார்க்க எந்த எழுத்தாளனுக்கும் சமயமிருப்ப ல்லை. எழுத்தின் அவசரமும் எண்ணங் ளின் அவசரமும் இலக்கணத்துக்காகக் காத் ருப்பதில்லை.

ஆனால் திரும்பப் படிக்கும்போது இதை, ன் நல்ல சினேகிதனே அவள் பெயரை வத்துக் கொண்டாடிய நீ குடிப்பதை ுத்தக் கூடாதா' என்று சந்தேக நீக்கம் செய் ம்போது, வாக்கியத்தில் ஒரு இழப்பு ஏற்படு தும் உண்மைதான். இதற்கு என்னதான் வு?

என்னைப் பொறுத்தவரை கட்டுரைகள் எழுதும்போது இவ்வகைக் குழப்பங்கள் இல்லாதவாறு திருத்துவதை முக்கியமாகக் கருதுகிறேன். கவிதையோ, சிறுகதையோ எழுதும்போது நடை, தொனி போன்றவை இலக்கணக் கட்டாயங்களை விட முக்கியமாக இருக்கலாம். கட்டுரைகளில் பொருள் தெளிவு மிக முக்கியமானது. அதுவும் ஆராய்ச்சிக் கட்டுரைகளிலும், அறிவியல் கட்டுரைகளிலும் நீண்ட வாக்கியங்களையும் கொச்சைகளையும் தவிர்க்க வேண்டும். பெரும்பாலும் செயப்பாட்டு வினையைத் தவிர்க்க வேண்டும். 'பற்ற வைக்கப்பட்டால் வெடிக்கும்' வேண்டாம். பற்றவைத்தால் வெடிக்கட்டும். அங்கவஸ்திரம், அப்யாசம், ப்ரயாசம், போஜனம், அனுஷ்டானம் போன்ற 'எத்னிக்' வார்த்தைகளைத் தவிர்த்து மேலாடை, பயிற்சி, முயற்சி, உணவு, கைக் கொள்ளுதல் போன்ற தமிழ் வார்த்தைகளைப் பயன்படுத்துவது கட்டுரைகளின் நடுநிலைமைக்கு முக்கியமாகும். கட்டுரையாளரின் சமூக அடையாளங்கள் கட்டுரையில் வெளிப்படும்போது அதன் குறிக்கோள் திசை திரும்பிவிடும். அதே போல் கட்டுரையாளர்களின் விருப்பு வெறுப்புக்கள் அவருடைய நடுநிலைமையை பாதிக்காமல் பார்த்துக் கொள்வது முக்கியம். தேவநேயப் பாவாணர் ஒப்பியல் மொழி நூலிலும் வேர்ச்சொல் ஆராய்ச்சியிலும் சிறந்தவர்தான். ஆனால், "என்னன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்", "ஆவற்கு நீரென்றிரப்பினும்" போன்ற குறட்பாக்கள் பார்ப்பன ஒழுக்கத்தை மட்டும் கண்டிப்பனவாகும் என்று எழுதும்போது அவருடைய வெறுப்பு வெளிப்படையாகத் தெரிகிறது.

கட்டுரைகளில் மிக முக்கியம் அவை சுருக்கமாக இருப்பது. கட்டுரைகளை படிக்கவைப்பதே மிகவும் அரிதான காரியமாக இருக்கும்போது, பதினெட்டுப் பக்கம் பொடி எழுத்தில் இருந்தால் முதல் பத்தியிலேயே மூடிவைத்து விடுவார்கள். ஒரு கட்டுரைக்கு அதிகப்படியான அளவு மூன்று பக்கம். குறைந்த அளவு நான் சொல்ல வேண்டியதில்லை.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# இந்திர தனுசு

## 30 கொம்பு சீவிய காளை!



நெடு நெடுவென்று உயர்ந்து கிடந்த மதில்கள் உறுதியாக இருந்தன. முப்பதடிகளுக்கு ஒன்றாக, மேலே செல்ல படிகள் அமைக்கப்பட்டிருப்பதையும், மேலே உலவிய வீரர்களின் எண்ணிக்கை அளவுக்கதிகமாகவே இருப்பதையும் கவனித்தான் ஆதித்யன். கீழ்ப்பகுதியில் பந்தங்களின் ஒளியில் பளபளத்து அடையாளம் காட்டியவை ஆயுதசாலைகளாக இருக்க வேண்டுமென்பதையும், பொத்தப்பிக்குப் பின்புலத்தில் உதவும் அந்தப் பலமான கரம், வீரர்களை மட்டுமின்றி ஏராளமாக ஆயுதங்களையும் அளித்திருக்கிறதென் பதையும் புரிந்து கொண்டான்.

நதியை அணைத்து ஓடிய மதில்கள் வடக்கில் சற்று தூரம் சென்றபின் நின்று விட்டன. பாறைகளும் புதர்களும் அடர்ந்து எழுந்து நின்ற மலைப்பகுதியே அதன் பிறகு அரணாக அமைந்திருந்தது. அரண்மனையும் மற்ற மாளிகைகளும்கூட மலையை ஒட்டியே அமைக்கப்பட்டிருப்பதையும் கவனித்தான் ஆதித்யன்.

மலைச்சரிவை ஒட்டிய



மாளிகையொன்றில் ஆதித்யன் தங்குவதற்கு ஏற்பாடு செய்த கோட்டைத்தலைவன், மன்னனிடம் அறிவித்து விட்டு வருவதாகக் கூறிச் சென்றான். அவன் அகன்றதும் மாளிகையின் முன்னும் பின்னும் ஆராய்ந்தான் விஜயன். "இளவரசே, நம்மை அபாயம் சூழ்ந்திருக்கிறது. மாளிகையைச் சுற்றிலும் காவல் பலப்படுத்தப்பட்டிருக்கிறது. பொத்தப்பியின் மன்னன் மிகவும் மூர்க்கனென்று கேள்வி. சிறு சந்தேகம் எழுந்தாலும் நம்மை ஒழித்து விடுவான். தவிர, என்னையும் இங்குள்ள சோழ நாட்டுப் பரிசாரகர்கள் நன்றாக அறிவார்கள். எவரேனும் கவனமின்றி ஒரு வார்த்தை கூறினாலும் பின்பு தப்புவதென்பது குதிரைக் கொம்புதான்" என்றான்.

ஆதித்யனின் செவிகளில் விஜயனின் வார்த்தைகள் விழுந்தனவே தவிர, அவன் சிந்தனை கலைவதாகவே தெரியவில்லை.

முதல் ஜாம இறுதியில் மன்னனிடமிருந்து அழைப்பு வந்தது. குறுகிய இரு வீதிகளின் வழியே ஆதித்யனை அழைத்துச் சென்ற வீரன், அரண்மனையின் மூன்று சுற்றுக்களையும் கடந்து, இறுதியாக மண்டபமொன்றின் உள்ளே செல்லுமாறு வேண்டினான். சுத்தமாக இழைக்கப்பட்டு மண்டபத்தின் மேற்கூரையைத் தாங்கிய

விஷ்வக்சேனன்

கருங்கல்தூண்கள் மண்டபத்திலிருந்த சர விளக்குகளைப் பிரதிபலித்துப் பளபளத்தன. தூண்களின் உச்சியில் மட்டும் யாளிகள் செதுக்கப்பட்டு, மேற்கூரையைச் சித்திரங்கள் பல அலங்கரித்துக் கொண்டிருந்தன. அறையின் சுவர்களில் பலவகையான ஆயுதங்கள் ஊசலாடின. அந்த அறைக்குள் வீரர்களோ பணிப்பெண்களோ காணப்படாததைக் கவனித்த ஆதித்யன், அது ஒற்றர்களை விசாரிக்கும் அந்தரங்க அறை என்பதையும் புரிந்து கொண்டான்.

மண்டபத்தின் மறுகோடியில் நீண்டு கிடந்த மஞ்சத்திலமர்ந்து ஆதித்யனையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த மனிதனை சற்றுக் கழித்தே கவனித்தான் ஆதித்யன். அவன் உடைகளையும், தோரணையையும், அவன் வலது கரத்தில், மன்னர்கள் பட்டமேற்கும்போது அணியும் மந்திரக் கவசம் சிறு சங்கிலியில் பிணைக்கப்பட்டு ஆடியதையும் கவனித்து, அவன்தான் பொத்தப்பியின் மன்னன் மன்மசித்தனாயிருக்க வேண்டுமென்பதையும் கணித்தான். வலுவாகவே தெரிந்த அவன் புஜங்களும் கரங்களும் அவனுக்குப் போர்ப் பயிற்சி தீவிரமாக இருப்பதை அறிவித்தாலும் முழங்கையில் தொடங்கி தோள்கள் வரை தெரிந்த வாள் வடுக்கள் அவன் போரில் அதிக எச்சரிக்கையில்லாதவன் என்பதையும் தெரிவித்தன.

"பொத்தப்பியின் புதிய மன்னருக்கு வணக்கம்!" என்ற ஆதித்யனை, எதிரில் அமருமாறு சைகை செய்த மன்மசித்தனின் விழிகளில் இலேசாக வியப்பு தெரிந்தது.

"நான் புதிதாக முடி சூட்டினேனென்பது உனக்கு எப்படித் தெரிந்தது?" - மன்மசித்தனிடமிருந்து முதலில் கேள்வியே வந்தது. அவன் தன்னைப் பற்றி விசாரிப்பதையும், தான் யாரென்பதை அறிமுகம் செய்து கொள்வதையும் தவிர்க்க, ஆதித்யன் வீசிய முதல் அஸ்திரம் பலனளித்து விட்டது.

"மன்னா, நான் தங்களைச் சேர்ந்தவன் தானா என்பதைத் தாங்கள் இந்தக் குறுகிய நேரத்திற்குள் உறுதி செய்து கொண்டிருக்க இயலாது. அப்படி முழு நம்பிக்கைக்கு ஆளாகாதவர்கள் இப்படி அந்தரங்க அறையில் தனித்து சந்திப்பது மன்னர்கள் வழக்கமில்லை. மேலும்....

"மேலும் என்ன?"

"தங்கள் வலதுகரத்தில் பட்டமேற்கும் போது கட்டப்படும் மந்தரக்கவசத்தின் மஞ்சள் நூல்கள் இன்னும் புதிதாகத் தெரிகின்றன" என்றான் ஆதித்யன்.

"உண்மைதான்!" என்று ஒப்புக் கொண்ட மன்மசித்தனின் வியப்பு அதிகமாகியிருந்தது. அடுத்து ஒலித்த அவன் கேள்வியிலும் சற்று



மரியாதை கூடியிருந்தது.

"நீங்கள் காஞ்சியிலிருந்து வருவதாகக் கோட்டைத் தலைவர் கூறினார்?"

பொத்தப்பியன் மன்னன், கோட்டைத் தலைவன் கூறியவற்றை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறான் என்பதையும், எளிதில் உணர்ச்சி வசப்படுபவன் என்பதையும் புரிந்து கொண்ட ஆதித்யன், தான் பேச வேண்டிய முறையையும் அணுக வேண்டிய வழியையும் தீர்மானித்துக் கொண்டு மெள்ள தன் வலையை வீச ஆரம்பித்தான். கண்டகோபாலனின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மன்மசித்தன் சித்தத்தில் பெரும் ஆத்திரம் உருவெடுப்பதையும் ஆதித்யன் புரிந்து கொண்டான்.

முட்டாளைப் புகழ்ந்து பேசியும், வீரனிடம் அவன் வீரத்தை உயர்த்திப் பேசியும், கயவர்களைக் கைப்பொருள் கொடுத்தும், அறிவாளியிடம் உண்மையைக் கூறியும், காரியங்களைச் சாதிக்க வேண்டுமென்னும் தமிழ்ப் பழமொழியை நன்கு அறிந்திருந்தான் ஆதித்யன். கோட்டைத் தலைவன் உளறிவிட்ட ரகசியத்தினால் பளிச்சிட்ட உண்மைகளையும், மன்மசித்தனின் முரட்டுத்தனமாக ஆத்திரம் கொள்ளும் போக்கையும் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வதே உசிதமென்று தீர்மானித்துக் கொண்டதால், அவனது கேள்விக்கு நிதானமாக பதிலளிக்க ஆரம்பித்தான். அவன் கேள்விக்குப் பதிலாக, "மன்னா, காஞ்சியில் கண்ட கோபாலரின் நிலை இன்னும் உயரும் ஸ்திதியில் இருக்கிறது. படைபலமும் உயர்ந்திருக்கிறது" என்றான்.

"விளக்கமாகக் கூறுங்கள்" மன்மசித்தனிடம் குழப்பம் தெரிந்தது.

"இதில் விளக்குவதற்கு அதிகமில்லை மன்னா. நீங்கள் திரட்டிக் கொண்டிருக்கும் படையைப் பற்றியும், திட்டமிட்டிருக்கும் தாக்குதலைப் பற்றியும் ஏற்கனவே அறிந்திருக்கிறார். அது மட்டுமல்ல...."

"வேறென்ன?"

"உங்களுக்கும் உதவ முன்வந்திருப்பவருக்கும் அபாயம் காத்திருக்கிறது!"

"காகதீய மன்னருக்கும், இளவரசிக்கும் அபாயமா?" - கோட்டைத் தலைவன் கூறிய ரகசியத்தை முழுவதுமாகப் போட்டு உடைத்து விட்ட மன்மசித்தன் முகத்தில் வியப்பும் ஆத்திரமும் தெரிந்தது.

காகதீய மன்னன் உதவுவதன் உள்நோக்கத்தை கணப்பொழுதில் ஊகித்துவிட்ட ஆதித்யன், "மன்னா, கண்டகோபாலருக்குப் பதிலாகத் தங்களைக் காஞ்சியில் அமர்த்த காகதீய மன்னர் உத்தேசித்திருப்பதையும் கண்டகோபாலர் எப்படியோ அறிந்து தக்க முன்னேற்பாடுகள் செய்திருக்கிறார்" - என்றான்.

ஆதித்யன் விசிறி விட்ட ஆத்திரத்தின் ஜ்வாலை, மன்மசித்தனிடம் இன்னும் உயரத் தொடங்கியது. "மன்னரை எதிர்க்குமளவிற்குக் காஞ்சியில் படைகள் இருக்கிறதா?" என்றான் அவன் ஆத்திரம் குரலில் தொனிக்க.

**"என்னங்க பெண்கள் காவல் நிலையத்தை சாயங்காலமே பூட்டிட்டாங்க?"**

**"ஐயையோ... ஆறுமணிக்கு மேலே காவல் நிலையத்திலே எந்த பெண்ணும் இருக்கக் கூடாதுன்னு ஆர்டர் வந்ததை தப்பா புரிஞ்சுகிட்டிருப்பாங்க போலிருக்கு!"** **— அகில்**

"படைகள் காஞ்சியில் மட்டும் இல்லை..."

"வேறெங்கு இருக்கின்றன?"

"காளத்தியில். படைத் தலைவர் பிரதாபருத்திரர் தலைமையில் அங்கும் படை திரட்டப்பட்டிருக்கிறது!"

"காளத்தியின் படைப்பிரிவைப் பற்றி நான் அறிவேன். ஆனால்...."

"மன்னரையும் உங்களையும் எதிர்க்க அவை போதாதென்று புதிய உறவுகளையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார் கண்டகோபாலர்"

"புதிய உறவுகள் என்றால்....?" மன்மசித்தனின் புருவங்கள் ஒன்று கூடின.

"பாண்டியர்கள் கொங்கு நாட்டிலிருந்தும், சோழ நாட்டிலிருந்தும் போசளரை விரட்டிவிட்டார்கள். அடுத்து சோழ நாட்டையும் பாண்டியர்கள் தாக்க முற்படலாமென்பதால் சோழ மன்னர் மீண்டும் கண்ட கோபாலரின் உதவியை நாடியிருக்கிறார். கண்டகோபாலரும் சோழர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்"

"சோழர்களுடன் ஒப்பந்தமா?" - மன்மசித்தன் இதை அடியோடு நம்பவில்லையென்பதை அவன் முகம் உணர்த்தியது.

பதிலுக்கு, கண்டகோபாலன் காளத்தியின் படைத்தலைவனுக்கு அளித்த ஓலையை எடுத்து நீட்டினான் ஆதித்யன்! சோழ நாட்டிற்கு உதவச் செல்ல, படைகளுடன் வரும்படி உத்தரவிருந்தது அதில்! கண்டகோபாலனின் கையொப்பத்தையும் முத்திரையையும் கவனித்து மீண்டும் குழலுக்குள் அடைத்த மன்மசித்தனின் சித்தம் எரிமலையாயிருந்தது.

"படை பலமற்ற சோழ நாட்டைப் பிரகுகிர்ந்து கொள்ளவும் திட்டமிட்டிருக்கிறார் கண்டகோபாலர். காகதீய மன்னரால் அபாயம் நேர்ந்தால் சோழ மன்னரின் ஆதரவு கண்டகோபாலருக்கு முழுமையாக இருக்குமென்பது ஒப்பந்தம்" என்று இன்னும் விசிறினான் ஆதித்யன்.

ஆரம்ப காலத்தில் பொத்தப்பியிலிருந்து விரட்டப்பட்டு, காகதீய மன்னன் தயவால் காஞ்சிக்கு மன்னனான கண்டகோபாலன் இப்பொழுது வளமிக்க சோழ நாட்டின் ஒரு பகுதியையும் அடைந்து விடுவதை மன்மசித்தனால் ஏற்றுக் கொள்ளவே இயலவில்லை.

அவன் மனத்திலோடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட ஆதித்யன், தனது இறுதி அஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தொடங்கினான்.

"மன்னா, உங்கள் எதிர்ப்பை கைவிட்டு கண்டகோபாலருடன் சேர்ந்து நீங்களும் உதவினால் உங்களைத் தொடர்ந்து தனக்கு உட்பட்ட சிற்றரசாக இருக்க அனுமதிப்பதாகவும் அவர் எண்ணியிருக்கிறார். இணங்க மறுத்தால்...."

"இணங்க மறுத்தால்?" மன்மசித்தன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"மறுத்தால் இரு ஆண்டுகளுக்கு முன் உங்கள் தந்தையும் நீங்களும் ஒடுக்கப்பட்டதைப் போல் ஒடுக்கப் படுவீர்கள். காஞ்சியின் சித்திரச் சாலையில் இருக்கும் ஓவியத்தை பொத்தப்பியில் சிலைகளாகவே நிரந்தரமாக இருக்கும்படி வடித்து விடப் போவதாகவும் கூறினார்!"

"ஓவியமா? என்ன ஓவியம் அது?" மன்மசித்தனின் விழிகளில் கனல் தெரிந்தது.

ஆதித்யன் கச்சையிலிருந்து அந்தச் சீலை வெளிப்பட்டது. மண்டியிட்டுக் கிடந்த மன்மசித்தனையும் அவன் தந்தையையும் வெகு அலட்சியமாகப் பார்த்த கண்டகோபாலனின் ஒரு கால், அவர்கள் மணி முடி மீது பதிந்திருப்பது. உருவிய வாளுடன் கம்பீரமாக நின்றிருந்தான் கண்டகோபாலன்.

மன்மசித்தனின் உக்கிரம் முழுதாக வெடித்து. மஞ்சத்தை விட்டு வேகமாக எழுந்தவன், அதைப் பிடுங்காத குறையாகப் பறித்தான். விழிகள் கோவைப் பழமாகச் சிவந்து கிடக்க, பற்கள் அறைபடும் ஒலி தெளிவாகக் கேட்டது. கசங்கிய சீலையைக் கரத்தில் பிடித்தபடி தட்தட்டென்று அறையில் உலவியவன் "இனி யாருடைய உதவியையும் எதிர்பார்க்கப் போவதில்லை. நானே சென்று காளத்தியிலிருக்கும் படைகளை அழித்துவிட்டு, காஞ்சிக்கு செல்கிறேன்" என்றவன் கரங்களைத் தட்டி வாயிலில் நின்ற வீரனை அழைத்தான். "நீ உடனே சென்று கோட்டைத் தலைவனையும், உப தலைவர்களையும் நான் அழைத்ததாகச் சொல்" என்று உத்தரவிட்டான்.



## அருள்வாக்கு

ரொம்பவும் உசந்த முறை, பண எண்ணமே இல்லாமல் நடக்கிற குருகுல கல்விதான். பரம த்யாகிகளாக வயிற்றைக் கட்டி, வாயைக்கட்டி, வாழத் தயாராக, வித்யை ப்ரசாரம் ஆக வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் போதிக்கிறவர்கள் நடத்தும் குருகுலத்துக்கு எதுவும் ஈடாகாது. இப்படிப் பட்டவரின் அறிவு விசேஷத்துடன் மனஸ் விசேஷமும் சேர்வதால் அப்போதுதான் சிஷ்யர்களுக்கு மிகவும் உயர்ந்த வித்யாவிலாஸம் உண்டாகும். ஆனால், இவன் வயிற்றைக் கட்டிக் கொண்டாலும் சிஷ்யனாக இருக்கிற இள வயசுக்காரனின் வயிறு வாடப்படாதே! அத்யயனம் செய்த ப்ராமணன் என்றால் நிச்சயமாக அவனுக்கு மான்யமாக ஸொத்து இருக்கும் என்ற பழங்கால நிலை இப்போது இல்லையே! தனக்கே 'ததிங்கிணதோம்' போடுகிற வேத பண்டிதர், சிஷ்யனை வேறு எப்படிப் பராமரிப்பார்? இங்கேதான் சிஷ்யனின் பிக்ஷாசர்யம் கை கொடுக்கிறது. அவன் பிக்ஷை எடுத்தே தன்னுடைய பாட்டைக் கவனித்துக் கொண்டுவிட வேண்டும். அது மட்டுமல்ல. தனக்காக நாலு வீட்டுக்குப் போய் பிக்ஷை கேட்க வேண்டுமென்றால், வாத்யாருக்காக இன்னம் நாலு வீட்டுக்குப் போகவேண்டும். அவருக்குப் பக்குவமான (சமைத்த) ஆஹாரம் பிக்ஷையாகக் கிடைக்கக் கூடாதாகையால், அவருக்கானதை அரிசி, பருப்பு, காய்கறி என்று வாங்கி வர வேண்டும்.

கல்வி அளிப்பது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி வாத்யாரைப் போல, கல்வி பெறுவது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி மாணவன்தான் இப்படி பிக்ஷாசர்யம் செய்து குருகுலவாஸம் செய்வான்.

'இம்மாதிரி எல்லாம் இந்தக் காலத்தில் யாராவது கிடைப்பார்களா? இதென்ன கார்யத்துக்கு உதவாத பேச்சு?' என்று நினைக்கலாம். அதற்காக உத்தமமான ஐடியல்களை வாயாலாவது சொல்லி, ஞாபகப்படுத்தக்கூட குருப்பட்டம் கட்டிக் கொண்டவன் தவறி விடக் கூடாது என்பதால்தான் சொல்கிறேன்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ஆத்திரத்திலும் சங்கடத்திலும் தத்தளித்த மன்மசித்தன், பிறகு ஆதித்யனைத் திரும்பியும் பார்க்கவில்லை. "நீங்கள் செல்லலாம்" என்று விடை அளித்தான் திரும்பிப் பாராமலே.

மன்னன் அழைப்பை அறிந்து உபதலைவர்களுடன் விரைந்து வந்த கோட்டைத் தலைவன் அந்தச் சித்திரத்தைக் கண்டதும் மென்று விழுங்கினான். "பிரபு... இந்தச் சித்திரம்... இது... காஞ்சி... இளவரசி" என்று குழறினான் திகைப்பு விரவிய முகத்துடன்.

"கோட்டைத் தலைவரே! கூறுவதைத் தெளிவாகக் கூறுங்கள்...." இரைந்தான் மன்மசித்தன்.

தலையைத் தொங்கவிட்டுக் கொண்ட கோட்டைத் தலைவன் முகத்தில் சந்தேகம் பலமாகப் படர்ந்திருந்தது, "மன்னா, காஞ்சியிலிருந்து வந்தவர் இதை அளித்திருக்க வேண்டும். அவரை இதற்கு முன்பாக காகதீயர் தலைநகரில் நம் வீரர்கள் பார்த்ததில்லையென்றும் உடன் இருப்பவன் சோழ ஒற்றர் படைத் தலைவனென்றும் நம் வீரர்கள் கூறுகிறார்கள்" என்றான் அவன்.

கோட்டைத் தலைவன் எழுப்பிய சந்தேகத்திற்கு ஒரு கணத்திற்கு மேல் சித்தத்தில் இடமளிக்கவில்லை மன்மசித்தன்! "அவசியமானால் அந்த இருவரையும் காவலில் வைத்து விடுங்கள். உடனே நம் வீரர்களை அணிவகுக்க ஏற்பாடுகள் செய்யுங்கள். இப்பொழுதே நாம் செல்ல வேண்டும்!"- மன்மசித்தனது உத்தரவு கணவேகத்தில் வந்தது. மறு பேச்சின்றிக் கிளம்பிய கோட்டைத் தலைவன், ஆதித்யனையும் விஜயனையும் காவலில் வைக்க வீரர்களை அனுப்பிவிட்டு, படைகளை சித்தமாக்குவதில் முனைப்பானான்.

தனது அறைக்குத் திரும்பிய ஆதித்யனை வரவேற்ற விஜயன், "இளவரசே, கோட்டைத் தலைவன் ஏதோ சந்தேகிப்பதாகத் தெரிகிறது. இருமுறை வந்து என்னை விசாரித்துச் சென்றான். அதிருக்கட்டும். மன்னனுடன் பேசினீர்களா?" என்றான்.

"ஆம் விஜயா, மன்மசித்தன் பெரும் ஆத்திரக்காரனாயிருக்கிறான்" என்ற ஆதித்யன், நடந்தவற்றை விளக்கினான். அனைத்தையும் கேட்ட விஜயனின் முகத்தில் விஷமம் படர்ந்தது. மெள்ள நகைத்தவன், "இளவரசே, இதைத்தான் சோழ நாட்டில் கொம்பு சீவி விடுவது என்பார்கள்" என்றான் நகைத்தபடியே!

அவன் நகைப்பு பாதியில் நின்றது! சாளரத்தின் வழியே பார்வையைச் செலுத்தியவன், இருபதுக்கும் குறையாத வீரர்கள் வந்து கொண்டிருப்பதைக் கவனித்தான். "இளவரசே! நீங்கள் கொம்பு சீவியதற்குப் பலன் அதோ வந்து கொண்டிருக்கிறது" என்று அறிவித்தான் இன்னும் பலமாக நகைத்தபடி!

(தொடரும்)

# சுஜாதா பக்கம்



அண்மையில் 83 வயதில் காலமான என் சிற்றப்பா திரு கே. சடகோபாச்சாரி, இன்கம் டாக்ஸ் அப்பெல்லேட் ட்ரைப்யுனலில் பிரசிடெண்டாக இருந்து ஓய்வு பெற்றவர். நான் பிறந்த போதிலிருந்து என்னை அறிந்தவர். "ஒல்லியாக போஷாக்கு குறைவாக இருந்த இந்தக் குழந்தை பிற்காலத்தில் இத்தனை பிரபலமடைவான் என்று எதிர்பார்க்கவில்லை" என்று அடிக்கடி பிறந்த தினக் கடிதங்களில் வியந்து கொள்வார். (நானும் எதிர்பார்க்கவில்லை) அவரிடமிருந்து என் சகோதரர்களுடன் நான் பெற்ற வாழ்க்கைப் பாடங்கள் பல. அவைகளில் முக்கியமானது அலுவலகப் பணியில் மிகுந்த நேர்மை. ஒரு மிகப் பெரிய மதத் தலைவரை தரிசிக்கச் சென்றபோது அந்த மகான் தன் பக்தர் ஒருவர் பெயரைக் குறிப்பிட்டு 'இவர் இன்கம்டாக்ஸ் கேஸ் உங்களிடம் அப்பீலுக்கு வந்திருக்கிறது, கவனித்துக் கொள்ள முடியுமா' என்று கேட்டதற்கு, மறுத்ததுமல்லாமல் அன்றிலிருந்தது அவரை மகான் என்று கருதுவதை நிறுத்தி விட்டார்.

சந்திக்கும் போதெல்லாம் படித்த ஏதாவது புத்தகத்தை அல்லது கட்டுரையைக் குறிப்பிடுவார். தவறாமல் "இன்கம்டாக்ஸ் கட்டிரு. அப்பதான் நிம்மதியா தூங்க முடியும்" என்று அறிவுரை தருவார்.

இப்பக்கத்தில் அவரைப் பற்றி எழுதுவதற்கு முக்கியமான காரணம் அவருடைய நிறைவேறாத ஆசை ஒன்று. என் சிற்றப்பா பிறந்த சில மாதங்களுக்குள் தன் தந்தையை இழந்து விட்டார். அவர் பெயர் பி. கிருஷ்ணமாச்சாரி. பச்சையப்பன் கல்லூரியில் மிக இள வயதில் கணித ஆசிரியராக இருந்தவர், எனக்கு தந்தை வழிப் பாட்டனார். அவர் ஒரு கணிதப் புத்தகம் எழுதிப் பதிப்பித்திருக்கிறார். நூற்றாண்டின் ஆரம்பத்தில் எழுதப்பட்ட அப்புத்தகத்தின் ஒரு பிரதி எங்கள் குடும்பத்தில் இருந்தது. பார்த்திருக்கிறேன். அதைப் பல்வேறு இடப் பெயர்ச்சிகளினால் இழந்து விட்டோம். தேடும் முயற்சியை என் சிற்றப்பா இறுதிவரை செய்து வந்தார்; கிடைக்கவில்லை. 'உனக்குத்தான் நிறைய வாசகர்கள் இருக்கிறார்களே, அவர்கள் யார் வீட்டிலாவது அந்தப் புத்தகம் இருக்குமா கேட்டுப் பாரேன்' என்றார். புத்தகத்தின் பெயர் "காலேஜ் அல்ஜிப்ரா". பி. கிருஷ்ணமாச்சாரி, பி. பார்த்தசாரதி இரு சகோதரர்கள் எழுதியது. முதல் அத்தியாயம் SURDS என்று லேசாக ஞாபகம் இருக்கிறது.

வாசகர்கள் தத்தம் தாத்தாக்களைக் கேட்டு அவர்கள் வீட்டுப் பரணில் அல்லது பழைய கள்ளிப் பெட்டிகளில் இந்தப் புத்தகம் இருந்து தூசுதட்டி அனுப்பினால் அவர்களுக்கு சகல சௌபாக்கியங்களும் ஏற்பட சீரங்கநாதனிடம் சிபாரிசு செய்வதுடன் அன்பளிப்பாக ஆயிரம் ரூபாய் அனுப்பவும் சித்தமாயிருக்கிறேன்.

'பிஸினஸ் லைன்' பத்திரிகையின் சனிக்கிழமை கூட்டத்தில் அதன் இளம் பத்திரிகையாளர்களுடன் கலந்துரையாட சந்தர்ப்பம் கிடைத்தது. டெக்னாலஜியின் அபார முன்னேற்றம். குறிப்பாக இண்டர்நெட் -எவ்விதத்தில் பத்திரிகைத் துறையை பாதிக்கும் என்பது பற்றி கொஞ்ச நேரம் பேசியபின் கேள்வி நேர விவாதம் டெக்னாலஜியைக் கடந்து, இந்திய ஜனநாயகத்துக்கு நழுவியது. நான் என் செல்லக் கருத்தான ஜனநாயகம்தான் இந்தியாவின் மிகப் பெரிய வீண் செலவு என்பதை வெளியிட்டு, சாட்சியாக இத்தனை வருஷம் ஜனநாயகம் செயல்பட்டும் இன்னும் ஏன் நம் குழந்தைகள் தெருவில் பிச்சையெடுக்கிறார்கள், ஏழ்மைக் கோட்டின் அடியில் அனேகம்பேர் இருக்கிறார்களே ஏன், என்று கேட்டபோது ஒரு பெண்மணி ஜனநாயகம் இல்லாவிடில் நாம் இம்மாதிரி சுதந்தரமாக கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ள முடியுமா, என்ன பேசுகிறீர்கள் என்று ஆச்சரியப்பட்டார். இதற்கு உடனே என்னால் பதில் சொல்ல முடியவில்லையெனிலும் திரும்ப வீட்டுக்கு செல்லும் போது பதில் தோன்றியது. 'நாம்' என்று குறிப்பிட்டது மக்கள் தொகையில் ஒரு விழுக்காட்டிற்கும் குறைவான, படித்த அறிவு ஜீவிகளை. அவர்களுக்கு பேச்சு சுதந்திரம் முக்கியமா, அந்த சுதந்திரத்தைப் பயன்படுத்த நேரமில்லாத பெரும்பான்மையினரை வறுமைக் கோட்டிற்கு மேல் கொண்டு வருவது முக்கியமா என்பதுதான் என் அடிப்படை சந்தேகம். அடிக்கடி இந்தியாவில் நினைவு கொள்ள வேண்டியது, நாமெல்லாம் பாக்கியசாலிகள்; நம்மால் பேசி நடிக்க முடிகிறது. ஏஸி அறைகளில் கணிப்பொறிகளின் முன் தேசத்தின் ஏழ்மையை அலச முடிகிறது. ஆனால் ஒரு மௌனப் பெரும்பான்மை வெளியே தெருக்களிலும் குடிசைகளிலும் தம் உரிமை என்ன என்பதையே அறியாமல் தின வாழ்வின் போராட்டத்தில் உழல்கிறது என்பதை மறக்கவே கூடாது.

*(மீண்டும் அடுத்த வாரம்)*



## 31. பிரமித்தாள் ருத்ராம்பாள்!

பொத்தப்பியின் கோட்டை அமளி துமளிப்பட்டுக்கொண்டிருந்தது. புரவிகளின் கனைப்பொலிகளும் உபதலைவர்களின் கூச்சல்களும் வீரர்கள் அளித்த பதில்களும் ஒரு புறம் ஒலித்தன. விற்களும் வாட்களும் ஈட்டிகளும் பெரும் பாரிவண்டிகளில் ஏற்றப்பட்ட ஓசை, கடகடவென்று உருண்டு வாயிலை நோக்கி விரைந்த ரதங்களின் சப்தம் என்று எல்லாம் சேர்ந்து கோட்டையை நிரப்பிக் கொண்டிருந்தன.

வெளியே சென்று பார்க்க முயன்ற விஜயனை வாயிலில் நின்ற வீரர்கள் தடுத்தனர். எங்கும் வெளியே செல்ல அனுமதியில்லையென்பதை அறிவித்தனர். தாங்கள் காவலில் இருப்பதை உறுதி செய்து கொண்ட விஜயன், அதைக் குறித்து லவலேசமும் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. காவலரிடம் உணவுக்கு ஏற்பாடு செய்யும்படி கேட்டுக் கொண்டு ஆதித்யனிடமும் வந்து அறிவித்தான். வெளியில் படைகளின் ஆரவாரம் அதிகரித்துக் கொண்டேயிருக்க காவலில் இருந்தவர்களுக்கு உணவு, முதல் ஜாமத்தில் வந்தது. அந்த சோழ நாட்டு உணவைப் பெரிதும் ரசித்து அருந்திய விஜயன், இரண்டொரு முறை பரிமாறியவர்களை அழைத்துப் பாராட்டவும் செய்தான். உணவருந்திய பின்னர் அறையின் ஒரு மூலைக்குச் சென்று கால்களை நீட்டிப் படுத்து உறங்கவும் முற்பட்டான்.

பஞ்சணையில் படுத்த ஆதித்யனுக்கு உறக்கம் எளிதில் வர மறுத்தது. நல்ல உணவும் மலைக்காற்றும் சுகமான மஞ்சமும் இதமளித்தாலும் உறக்கம் என்பதை மனநிலையைப் பொறுத்ததாக வைத்துவிட்ட இயற்கை, அவன் சித்தத்தில் எழுப்பிவிட்ட எண்ண அலைகள் மீண்டும் மீண்டும் எழுந்து தாக்கியதால் விழிகளை அரைவாசியே மூடிக்கிடந்த ஆதித்யன், பாதி விழிப்பிலும் பாதி உறக்கத்திலுமாகக் கிடந்தான். ஏதோ தெளிவற்ற கனவுகளில் மூழ்கிக் கிடந்த ஆதித்யனின் கால்களைப் பலமாக அசைத்து எழுப்பிக் கொண்டிருந்தான் விஜயன். திடுக்கிட்டு எழுந்த ஆதித்யன், அறை இருளடித்துக் கிடப்பதையும், சாளரங்களும் கதவுகளும் விரியத் திறந்து கிடப்பதையும், வாயிலிலிருந்த காவலர்கள் தரையில் உருண்டு கிடப்பதையும் கண்டான். விஜயனை அடுத்து நிழலுருவங்களாக ஐந்தாறு மனிதர்கள் நிற்பதும் புலப்பட்டது. "இளவரசே வாருங்கள், சீக்கிரம்!" விஜயனின் குரல் அடங்கி ஒலித்தது.

மாளிகையின் பின்புறத்து வாயிலின் வழியே ஆதித்யனை அழைத்துச் சென்றவர்கள், மலைச் சரிவையொட்டியிருந்த கட்டடங்களின் பின்பகுதியினூடே நுழைந்து, ஒதுங்கி, சந்தேகம் எழாதவாறு நடந்து அந்த வரிசையின் இறுதியில் புகையும் கரியும் மண்டிக் கிடந்த பெரும் மடைப்பள்ளியாகத் தெரிந்த கட்டடத்தினுள் நுழைந்தனர். உள்ளே நுழைந்த ஆதித்யன், தனக்காகக் காத்துக் கிடந்தவர்களைக் கண்டதும் பிரமித்தான். ஐம்பதுக்கும் குறையாத சோழநாட்டுப் பரிசாரகர்கள் கரியும் புகையும் அழுக்கும் படிந்த உடைகளுடன் நின்று ஆதித்யனைக் கண்டதும் வணங்கினர். அந்தக் கூட்டத்தில் பெண்களும் குழந்தைகளும் கூட இருந்தனர். விறகும் பாத்திரங்களும் உணவுக்குத் தேவையான இதர பொருட்களும் நிரம்பிக்கிடந்தன அந்த இடத்தில். சோழநாட்டின் சுவைமிக்க உணவைப் படைக்கும் அந்தக் கலைஞர்கள், போசளரின் அதிகார உருட்டல்களுக்கு அஞ்சி பொத்தப்பி நாட்டில் வந்து நடத்திக் கொண்டிருந்த அவல வாழ்வைக் கண்ட ஆதித்யனின் உள்ளம் உருகியது. அவர்களின் தலைவராகத் தோன்றிய முதியவர், முன்னே வந்து விஜயனை அணுகினார்.

"விஜயா, மடப்பள்ளியின் பின்புறம் மலையைச் சுற்றிச் செல்லும் பாதையிருக்கிறது. பாதையின் இறுதியில் சித்திராவதி நதி மலையை அணைத்துப் பிரியுமிடத்தில் படகு ஒன்றும் தயாராக இருக்கிறது. நதி பெண்ணையாற்றில் கலக்குமிடத்தை விடிவதற்குள் அடைந்து விட்டால் பிறகு அபாயமேதுமில்லை. பெண்ணாற்றின் ஓட்டத்திலேயே சென்றால் நெல்லூர்புரத்தை அடைந்து விடலாம்" என்றார் அந்த முதியவர்.

விஜயன் தன் கச்சையிலிருந்து சிறுமுடிப் பொன்றை எடுத்து அவர் கரங்களில் திணித்தான். "பெரியவரே, இதை மறுக்காதீர்கள். சோழ நாடு போசளரிடமிருந்து விடுபட்டு விட்டது. நீங்கள் நாடு திரும்ப வழிச் செலவிற்கு இது உதவும்" என்றான் விஜயன்.

புரிந்து கொண்ட ஆதித்யனும் தன் கழுத்திலிருந்து வீரச் சங்கிலியொன்றைக் கழற்ற முற்பட்டான். கரி படிந்து அழுக்கேறிய இரு முதிய கரங்கள் அவனைத் தடுத்தன. "இளவரசே, எங்கள் சோழ நாட்டை போசளரிடமிருந்து மீட்டது ஒன்றே போதும். உங்களுக்கு உதவ சந்தர்ப்பம் கிடைத்ததே எங்களுக்குப் பெரும் பரிசு. இனி நாங்களும் விரைவில் நாடு திரும்பி விடுவோம்" என்றவர், ஆதித்யன் கரங்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

அனைவரிடமும் விடை பெற்றுக் கொண்ட ஆதித்யனும் விஜயனும் பின்புறத்து வழியினூடே மலைச்சரிவில் நடக்க ஆரம்பித்தனர். மலைக் காற்று அந்த இரவில் குளிரை அள்ளி வீசிக் கொண்டிருந்தது. நரிகளும் சர்ப்பங்களும் குறுக்கில் ஓடி மறைந்தன. மலையை அப்பிரதட்சணமாகச் சுற்றிச் சென்ற பாதையின் இறுதியில் நதி சலசலத்து ஓடும் ஒலி கேட்டது. அலைக் கரங்களில் ஆடியபடி

# இந்திர தனுசு

விஷ்வக்சேனன்

படகு ஒன்றும் அங்கு தயாராக நின்றிருப்பதைக் கண்ட விஜயனின் முகம் மலர்ந்தது. ‘‘இளவரசே, இனி அபாயமேதுமில்லை. நாளை உச்சிப் பொழுதிற்குள் நாம் நெல்லூர்புரத்தை அடைந்து விடலாம்’’ என்றான் அவன்.

நூறு காதங்களுக்குமேல் ஓடிவந்த களைப்பு கடலரசனை நெருங்கிவிட்டதால் நீங்கிவிடவே; பெண்ணாற்றின் பிரவாகம் துள்ளிக் குதித்து கிழக்கு நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. இல்லம் நெருங்கியதும் பெரியவர்களைப் பிரிந்து முன்னால் ஓடும் சிறுவர்களைப் போல் நதியிலிருந்து பிரிந்த சிற்றாறுகள் கடலை நோக்கி ஓடின. காலைக் கதிர்கள் பட்டுப் பளபளத்த நீர் மட்டத்திலும், கரைகளைத் தாக்கிச் சிரித்த அலைகளிலும் நதியின் மகிழ்ச்சி பிரதிபலித்தது. காலை வேளையில் நதியில் நீராடி வேதமோதியபடி திரும்பிக் கொண்டிருந்த அந்தணர்களின் மந்திர ஸ்ருதியும், குடங்களில் நீரை ஏந்தி வந்து கொண்டிருந்த மங்கையரின் வளையல்களும் தண்டைகளும் எழுப்பிய இன்னிசையும், அவ்வப்பொழுது அவர்கள் நகைத்த இன்ப ஒலிகளும், கூப்பிடு தூரத்தில் துறைமுகத்தை நோக்கிச் சென்ற பாதையில் பொதிகளை இழுத்துச் சென்ற காளைகளின் கழுத்து மணி ஒலிகளும், சக்கரங்கள் மண்ணில் பதிந்து எழுந்த கரகரத்த ஒலிகளும் காற்றில் நிரம்பி கரைநெடுக ஒலித்து, கரையை ஒட்டியிருந்த அந்த மாளிகை வரையிலும் கூட எட்டிக் கொண்டிருந்தன.

சாளரத்தினருகே நின்று நதியை வெறித்து நோக்கிக் கொண்டிருந்த காகதீய இளவரசி ருத்ராம்பாளின் சித்தம் நதியின் பிரவாகத்தை விட வேகமாக ஓடிக் கொண்டிருந்ததால், எதிரே விரிந்த இன்பக் காட்சிகளையோ, செவிகளில் விழுந்த ஒலிகளையோ அவள் கவனித்ததாகத் தெரியவில்லை. வீரர்களுக்குரிய உடையுடனும் வாளுடனும் சதா வளைய வரும் அவள் தோற்றமும் சற்று மாறியிருந்தது. அவள் உடலைச் சுற்றி வளைந்த சீனத்து நீலப்பட்டு, வீரர் உடைக்கு எந்தவகையிலும் குறையாத ஒரு கம்பீரத்தை அளித்துக் கொண்டிருந்தது. நகைகளிலோ, அரச மகளிர் அணியும் ஆபரணங்களிலோ அதிகம் விருப்பமில்லாத இளவரசியின் கழுத்தில் பெரும் முத்துச் சரம் ஒன்று மட்டும் புரண்டு கொண்டிருந்தது. அதிக நீளமில்லாமல் அடர்ந்து சுருண்டு கிடந்த குழல்களைக் கட்டியிருந்த பட்டுக் கயிறு, தன் பணியைச் சரிவர செய்ய இயலாததால் இரண்டொரு குழல்கள் முன்னால் வந்து அலைபாய்ந்து

கொண்டிருந்தன. என்றும் அவளை விட்டுப் பிரியாத அவளது உடைவாள் மட்டும் தனித்து சற்றுத் தள்ளியிருந்த பலகைமீது ஏக்கத்துடன் காத்துக் கிடந்தது. வீரம் சொட்டும் கூர் விழிகள் பெரும் சிந்தனையைக் காட்டின.

சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தவளின் தோளில் வலிய கரமொன்று பதிந்தது. "என்ன பலமான யோசனை மகளே?" என்ற கரகரத்த கனமான குரல் ஒன்றும் பின்புறமிருந்து எழுந்தது.

அந்த ஸ்பரிசமும் குரலும் அவள் சிந்தனையைப் பட்டென்று அறுத்ததால் விழிகள் சிந்தனையை விடுத்து அன்புக்கு இடம் கொடுத்தன. திரும்பியவள் எதிரில், ஆறடிக்குக் குறையாத உயரத்துடனும், இடைவிடாத பயிற்சியைக் காட்டிய உடலமைப்புடனும், கூரிய நாசியின்மேல் வல்லூறின் விழிகளைப் போல் ஜொலித்த கண்களுடனும் நின்றிருந்தான் காகதீய கணபதி.

''ஒன்றுமில்லை தந்தையே'' என்றபடி எழுந்த ருத்ராம்பாளை நோக்கிய மன்னன் விழிகளில் பரிவிருந்தது.

"ஏதோ இருக்கிறது மகளே, இந்தக் காலை வேளையில் உன்னைப் பயிற்சிக் கூடத்தில் காண்பதுதானே வழக்கம். உன்னைக்காண அங்கு சென்றுவிட்டுத்தான் திரும்புகிறேன்'' என்றான் மன்னன்.

''தெற்கிலிருந்து முன்னுக்குப் பின் முரணாக வந்த செய்திகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன், தந்தையே." ருத்ராம்பாளின் குரலில் இலேசாக குழப்பம் ஒலித்து.

"என்ன முரணான செய்திகள்?"

"முதலில் சோழ எல்லையில் போசளர் படைகள் அழிக்கப்பட்டதாக செய்தி வந்தது."

"சரி."

"பின்னர் கொங்கு நாட்டில் போர் நடப்பதாக நம் ஒற்றர்கள் தெரிவித்தார்கள்."

"உண்மைதான்."

"நாம் பலமுறை போரிட்ட சிங்கணனையும், அப்பணனையும் பாண்டியர் கொன்று விட்டதாகவும் கூறினார்கள்."

"ஆம். கொங்கு நாட்டுப் போரும் முடியும் தறுவாயிலிருக்கிறது.''

''படைபலமற்ற சோழ நாட்டிற்குள் பாண்டியர் ஏன் இன்னும் நுழையவில்லை? நம் ஒற்றர்கள் தனித்துச் சென்றால் கூட சோழ எல்லைக்குள் நுழைய முடியவில்லை. ஆனால் காஞ்சிக்கு சோழ தூதர் வந்ததாகச் செய்தி வந்தது. இடையேயிருந்த சிற்றரசுகள் என்ன வாயின?''

காஞ்சியைப் பற்றிய பேச்சு எழுந்ததும் மன்னன் முகத்தில் கடுமை தெரிந்தது. "மகளே, தெற்கே யாரோ ஒரு பெரும் ராஜ தந்திரியின் அறிவு அனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கிறது. என் யூகம் சரியானால் காஞ்சியில் கண்டகோபாலன் பலமாக ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறான். ஆனால் வந்தது உண்மையில் சோழ தூதரானால் கண்டகோபாலன் இத்தகைய சந்தர்ப்பத்தை நழுவ விடவும் மாட்டான்" என்றான் மன்னன்.

"விளங்கவில்லை தந்தையே."

"சரி, காஞ்சியிலிருந்து செய்தி கொண்டு வந்தவன் எங்கே?"

குழப்பம் நிறைந்த விழிகளுடன் வாயிலிலிருந்த வீரனை அழைத்த இள்வரசி காஞ்சியிலிருந்து வந்தவனை அழைத்து வரப் பணித்தாள்.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கியவனை நோக்கிய மன்னன், ''வீரனே, காஞ்சியில் நடந்தவற்றை ஒன்றுவிடாமல் விவரமாகக் கூறு" என்று உத்தரவிட்டான்.

''மன்னா, தஞ்சைத் துறவியாரிடமிருந்து தூதரை அனுப்புவதாக முதலில் ஓலை வந்தது."

"பிறகு?"

வழக்கமாக வரும் முதியவருக்குப் பதில் இளைஞன் ஒருவன் தூதனாக வந்தான். கண்ட கோபாலர் அவனுக்கு அளித்த வர



**"நீ விரும்பின பெண்ணைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்க ஒரு டிடக்டிவ் ஆசாமியை நியமிச்சியே, என்ன ஆச்சு?"**

**"நாளைக்கு அவங்க இரண்டு பேருக்கும் கல்யாணம்!"**

**— வெ.ராஜாராமன்**

வேற்பு அபரிமிதமாக இருந்தது."

"சொல் மேலே."

"வந்தவன் சோழ மன்னரின் உறவினன் என்பதை அறிந்தபின்பு உபசரிப்பும் அதிகரித்தது. கண்ட கோபாலர் தனித்து அவனிடம் நெடு நேரம் பேசினார். அதுமட்டுமல்ல..."

''தயங்க வேண்டாம். எதுவானாலும் சொல்."

"தூதர், கண்ட கோபாலருடனிருந்த நேரத்தைவிட இளவரசி ஸ்வர்ணமுகியுடன் கழித்த நேரம் அதிகம் பிரபு!"

மன்னன் விழிகளும் ருத்ராம்பாளின் விழிகளும் ஒருமுறை சந்தித்து மீண்டன.

வீரன் தொடர்ந்தான்: "இளவரசியுடன் தூதர் சிற்ப மண்டபத்தில் நெடுநேரம் கழித்தார். நேற்றைய முன்தினம் தூதர் இங்கு வருவதாகக் கூறிப் புறப்பட்டு விட்டார். ஆனால் இன்னும் வந்து சேரவில்லை."

"சரி, நீ போகலாம்'' என்று வீரனுக்கு உத்தரவிட்ட மன்னன், ருத்ராம்பாளை நோக்கித் திரும்பி "மகளே, இப்பொழுது புரிகிறதா?" என்றான்.

ருத்ராம்பாளின் விழிகளில் கேள்விகளே நிரம்பிக்கிடந்தன.

''மகளே, நம் விரல்களை மீறி வளரும் நகங்கள் ில சமயம் நம்மையே காயப்படுத்தி விடும். அதை அகற்றித்தான் தீர வேண்டும். கண்டகோபாலனை அகற்ற வேண்டிய சமயம் நெருங்கி விட்டது."

"அப்படியானால் தந்தையே, கண்டகோபாலன் சோழ தூதருக்குத் தன் மகளை..." ருத்ராம்பாள் முகத்தில் திகைப்பு தெரிந்தது.

"ஆம், உன் யூகம் சரியானதுதான் மகளே. விஷயங்களைத் தொகுத்துப்பார். ஓராண்டாக கண்டகோபாலன் நமக்கு கப்பப்பொருட்களை சரிவர அனுப்பவில்லை. படைகளையும் வளர்த்திருக்கிறான். தூதனாக வந்தவன் இளைஞன். சோழ மன்னனுக்கும் உறவினன். உதவிகேட்டு வந்திருக்கும் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி தன் மகளை தூதனுக்கு மணமுடித்து விட்டால், நேரடி வாரிசு இல்லாத சோழ ராஜேந்திரனுக்குப்பின் அவனை சோழ அரியணையில் அமர்த்தலாம். சோழ நாடு மெள்ள கண்ட கோபாலனின் வசப்பட்டு விடும். போசளர் அதிகாரத்தால் சாதித்ததை கண்ட கோபாலன் திருமணத்தின் மூலம் சாதிக்க நினைக்கிறான்."

ருத்ராம்பாளின் முகத்தில் பிரமிப்பு தெரிந்தது. "அப்படியானால் கண்ட கோபாலன் நம்மையே பிறகு எதிர்க்கத் துணிவான் என்கிறீர்களா தந்தையே?"

"ருத்ரா, சோழ நாட்டு மண் சுண்டெலியையும் பாயும் வேங்கையாக்கி விடும். அவர்கள் சின்னமே அதுதானே? ஆனால் தூதனாக வந்தவனைப் பற்றி எனக்கொரு சந்தேகமிருக்கிறது. சோழ நாட்டின் உண்மை நிலை பற்றித் தெரிந்தால் இது பற்றி முடிவு செய்யலாம். ஆனால் தூதன் ஏன் இன்னும் வந்து சேரவில்லை?" என்றான் மன்னன். மன்னனின் சந்தேகம் இளவரசியின் சித்தத்தில் ஒரு நினைவைப் பளிச்சிட வைத்தது.

''தந்தையே, சோழ எல்லைப்புறத்து சிற்றரசன் ஒருவனின் தூதன் உங்களைக் காண நேற்று முதல் காத்துக் கொண்டிருக்கிறான்" என்றாள் இளவரசி.

"நேற்றுமுதல் காத்திருக்கிறானா? ஏன்? யார் அவன்?"

"நான்தான் யோசனையாக இருந்ததில் கூற மறந்துவிட்டேன் தந்தையே. இதோ அவனை அழைக்கிறேன்" என்ற ருத்ராம்பாள் வீரனைக் கூப்பிட்டு, வந்திருக்கும் தூதனை அழைத்துவர உத்தரவிட்டாள்.

சற்று நேரத்தில் காடவராயனின் ஓலையுடன் அந்தக் காளாமுக உபதலைவன் உள்ளே நுழைந்து வணங்கினான்.

காகதீய மன்னன், சோழ தூதரைப் பற்றிக் கொண்டிருந்த சந்தேகத்திற்கு விடை அந்தக் காளாமுகனிடம் இருந்தது.

அதே சமயத்தில் ஆதித்யனையும் விஜயனையும் சுமந்து பெண்ணையாற்றில் வந்து கொண்டிருந்த படகு நெல்லூர்புரத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)


* அல்ட்ரா - சவுண்ட் கருவி

# அதென்ன அல்ட்ரா சவுண்ட்?

இன்று மருத்துவமனைகளில் டாக்டர்கள் இல்லாமல் இருக்கலாம்; 'அல்ட்ரா சவுண்ட்' கருவி இல்லாமல் இல்லை என்கிற நிலை உருவாகி விட்டது!

அல்ட்ரா சவுண்ட்?

ஒரு வித ஸ்கேனிங் கருவி. பிறக்கப் போகிற குழந்தை நார்மலா – அப் நார்மலா என்று, கருவுற்ற பனிரெண்டு வாரங்களிலேயே கண்டுபிடித்துச் சொல்வதில் தொடங்கி, 'அல்ட்ரா-சவுண்ட்' செய்கிற தாய்க்குல உபகாரங்களுக்குக் கணக்கே இல்லை!

கரு, கருப்பையில் தான் உருவாகியிருக்கிறதா, இல்லை ஃபெலோபியன் குழாய் எனப்படும் அடை நாளங்களிலா என்று சந்தேகம் வருகிறதா?

அல்ட்ரா சவுண்ட் தீர்த்து வைக்கும்!

அட, வயிறு இத்தனை பெரிதாகத் தெரிகிறதே, ஒருவேளை இரட்டைக் குழந்தையாகப் பிறக்குமோ?

- சந்தேகம் வந்து அல்ட்ரா சவுண்டிடம் போனால், "ஆமாம்பா ஆமாம்!" என்று அறிவுறுத்தி, தாய்க்கு கூடுதல் பராமரிப்பு அளிக்க சிக்னல் கொடுக்கும்!

முன் கர்ப்பத்தில் கோளாறு.... பிள்ளைப் பேறு வாய்ப்பு இல்லாதவர்கள்கூட அல்ட்ரா சவுண்டிடம் வந்து குறையென்ன என்று 'ஜோசியம்' கேட்டு, தகுந்த முன்சிகிச்சை பெறலாம்.

- இதெல்லாமும் இன்னும் பலவும் கருவுற்ற தாய்மார்களுக்கு உதவுகிற விஷயம்.

இது மட்டும்தானா?

"அட இல்லைப்பா... இன்னும் கேளு, பதினாறு, பதினேழு வயசாகியும் பெண் குழந்தைகள் வயசுக்கு வராம இருக்காங்களா... நம்ம கிட்ட கூட்டிட்டு வா.... கருப்பை, அண்டகோசம் எல்லாம் இருக்கான்னு செக் பண்ணிடலாம்!" என்கிறது அல்ட்ரா சவுண்ட்.

"இப்படியாகத் தொடங்கி, 35-40 வயதில் பெண்களுக்கு வருகிற முதுகு வலி, வயிற்று வலி, அடிக்கடி சிறுநீர் கழித்தல் போன்ற உபாதைகளுக்குக் காரணம் கண்டுபிடிப்பது, எங்காவது புற்றுநோய் இருப்பதற்கு சாத்தியம் உண்டானால் அதைக் கண்டுபிடிப்பது எனப் பல சி.ஐ.டி வேலைகள் செய்வது இந்த அல்ட்ரா சவுண்ட்." என்கிறார் டாக்டர் ரேவதி அனந்த்.

நவீன அறிவியலின் அற்புதக் கண்டுபிடிப்பு.

'ஆனால் எல்லாம் கதிர்வீச்சின் மூலம் தான் நடக்கிறது. - அம்மாக்களுக்கு அபாயமில்லையோ?' என்றால் "இல்லவே இல்லை! பாதிப்புகள் இல்லாத வகையில் செயல்படும் படிதான் இது வடிவமைக்கப்பட்டிருக்கிறது!" என்கிறார்.

அல்ட்ரா-சவுண்டின் குறை, அதன் தரத்தில் அல்ல... செயல்பாட்டு முறையில் தான் என்கிறார்கள் ஸ்கேனிங் ஆசாமிகள்.

சுமார் அரைக்கோடி விலையுள்ள இந்தக் கருவி இயங்க, சுத்தமான, இடையூறு இல்லாத மின் சப்ளை தேவை. நம் ஊர் மின்சார சப்ளை பற்றிக் கேட்கவே வேண்டாம். அடிக்கடி ஏற்ற இறக்கங்கள் ஏற்படும். மின் சப்ளையால், இந்த இயந்திரத்தின் ஆயுசு குறையும் என்கிறார்கள். ஒரு சின்ன பகுதிக்குப் பழுது வந்தால்கூட ஆயிரக்கணக்கில் செலவு பழுத்து விடுமாம்!

இந்திரா நகரில் வசிக்கிற மகப்பேறு மருத்துவர் பத்மா ரவீந்திரன் சொன்னார்:

"எல்லாம் சரிதான்.... நோய் எது, நோயின் தன்மை எது.... என்ன தீர்வு என்றெல்லாம் இந்தக் கருவி புட்டுப் புட்டு வைத்து விடுகிறது, கோனார் நோட்ஸ் மாதிரி. புதிதாகப் படித்து விட்டு வரும் இளம் எம்.பி.பி.எஸ்.களுக்கு இதனால் அடிமட்டத்திலிருந்து விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பே இல்லாமல் போய் விடுகிறதே, இதற்கு என்ன பண்ணுவது?"

தொகுப்பு : **எஸ்.வி.என்., கீதா மோகன்**

# 32. ருத்ராம்பாளின் ரௌத்திரம்!

"சோழ தூதர் ஏன் இன்னும் வந்து சேரவில்லை?" என்று காகதீய மன்னன் கேட்ட அதே கேள்வியை, அந்த நகரத்தில் இன்னொருவனும் கேட்டுக் கொண்டிருந்தான்.

நகரத்திற்கு ஒன்றரைக் காத தூரத்திலிருந்த துறைமுகத்தில் நங்கூரமிட்டிருந்த கலங்களில், பல வண்ணக் கொடிகள் படபடத்துக் கொண்டிருந்தன. யவனரும், அராபியரும், சீனரும், கடாரத்தவரும் ஓயாமல் வந்து இறங்கிக் கொண்டிருந்த அந்தத் துறைமுகத்தில் நெல்லூர்புரத்துக்குப் போட்டியாக ஒரு நகரமே உருவாகியிருந்தது. சுங்கத் துறையை விட்டு வெளியேறும் பொதிகளை ஏற்றிக் கொண்டு வணிகத் தலமான கனகபுரிக்கும், நெல்லூர்புரத்திற்கும் செல்ல பொதி வண்டிகள் காத்துக் கிடந்தன. அடிமைகளும், வர்த்தகர்களும் எழுப்பிய குரல்களும், காவலர்களின் அதிகாரக் குரல்களும் துறைமுகத்தை நிரப்பின.

பொதிகளை இறக்கிவிட்டு, வேறு துறைகளுக்குச் செல்ல வேண்டிய கலங்களும் தங்கள் முறைக்காகக் கடலில் காத்திருந்தன. அப்படி நின்றிருந்த கலங்களில், நாகைக்குச் செல்ல வேண்டிய கலம் ஒன்றும் இருந்தது. கலத்தில் வணிகர்களை விட அதிகமாக புத்த துறவிகள் இருந்தனர். தாமதமாகிக் கொண்டிருப்பதை எண்ணி அவர்கள் சங்கடத்துடன் உலவிக் கொண்டிருக்க, ஒரு துறவி மட்டும் பக்கப் பலகையில் சாய்ந்து, துறைமுகத்தையும் தூரத்தில் தெரிந்த நெல்லூர்புரத்தையும் வெறித்து நோக்கிக் கொண்டிருந்தார். அவரது மஞ்சள் முகத்திலும் கூர் விழிகளிலும் பலத்த சிந்தனை தெரிந்தது. காவி உடையிலிருந்து நறுக்கோலையொன்றை எடுத்து நான்காவது முறையாகப் படித்தவர், "ஆதித்யன் ஏன் இன்னும் வந்து சேரவில்லை?" என்றார் கடலை நோக்கி. தடால் தடாலென்று மரக்கலத்தின் பக்கப் பலகையைத் தாக்கிய கடலலைகள் அவருக்கு என்ன மறுமொழி கூறினவோ தெரியவில்லை. அவரது சிறிய கூர் விழிகள் சற்றுத் தள்ளியிருந்த அவரது நீளமான துணிப்பையின் மீது சென்று பதிந்தன. மெலிந்து அதீத நீளத்துடன் விளங்கிய அந்தத் துணிப்பையிலிருந்து தலைநீட்டிக் கொண்டிருந்தன சில அம்புகளின் நுனிகள். குனிந்து அதை எடுத்தவர் அம்புகளைச் சரியாக உள்ளே தள்ளி வாயை இறுகக் கட்டினார். பின்பு பையைத் தோளில் மாட்டியபடியே கலத்தின் மறுமுனையை அடைந்து, பொதிகளை ஏற்றிச் சென்ற படகொன்றில் தாவி ஏறிக் கரையை அடைந்து, வணிகர்களின் நெரிசலைக் கடந்து வெளியே வந்தார்.

பெண்ணை நதியை ஒட்டினாற்போல் நெல்லூர்புரத்தை நோக்கிச் சென்ற பாதையில் விரைந்து கொண்டிருந்த பொதி வண்டிகளொன்றின் பின்பகுதியில் அமர்ந்து கொண்டவர், பக்கவாட்டில் தெரிந்த நதியின் பிரவாகத்தைப் பார்த்தபடியே வந்தார். வலதுபுறம் பிரிந்து வடக்கில் நீண்ட

**இந்திர தனுசு**

பாதையைக் கவனித்தவர், அது கனகபுரிக்குச் செல்லும் பாதையென்பதையும் புரிந்து கொண்டார். கரடுமுரடாக இருந்த அந்தப் பாதையில் ரதங்களும் பொதிவண்டிகளும் விரைந்து கொண்டிருந்தன. துறவி அமர்ந்திருந்த பொதி வண்டி, நேர் மேற்கில் நெல்லூர்புரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. மீண்டும் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தார் அவர்.

உயர்ந்து எழுந்த மாளிகைகளும், குறுக்கிலும் நெடுக்கிலும் பாய்ந்த ரதங்களும் புரவிகளும், சாலையோரங்களில் வெவ்வேறு திசைகளில் விரைந்து கொண்டிருந்த மக்களும் நகரத்திற்குள் நுழைந்து விட்டதை அறிவிக்கவே, புத்த துறவி சுயநினைவுக்கு மீண்டது மட்டுமின்றி, பொதி வண்டியிலிருந்து அனாயாசமாகக் குதித்து இறங்கவும் செய்தார். ஒருமுறை பார்வையை நகரத்தின் வீதிகளில் உலவவிட்டவர், சற்றுத் தூரத்தில் தெரிந்த அரண்மனையை நோக்கி விடுவிடுவென்று நடக்கத் தொடங்

**விஷ்வக்சேனன்**



கினார். அரண் மனை வாயிலுக்குச் சில அடிகள் தூரமேயிருக்கையில் அவரது வேகநடை சட்டென்று நின்றது. அந்த மஞ்சள் முகத்திலும் சந்தேகச் சாயை படர்ந்தது. அரண் மனையின் பிரதான வாயில் திறக்கப்பட்டு, வரிசையாக அணிவகுத்த புரவி வீரர்கள் வெளிவந்தனர். அந்த வீரர்களின் வரிசை மேற்கு வாயிலை நோக்கிச் சென்றதை கவனித் தவர், ஏதோ புரிந்ததற்கடையாளமாகத் தலை யசைத்துக் கொண்டார். வீரர்கள் விலகியதும் உள்ளிருந்து வந்த பணியாளன் ஒருவனை அணுகி விசாரிக்கவும் முற்பட்டார். சோழ தூதர் வந்திருப்பதாகவும் அவரை வரவேற் கவே வீரர்கள் சென்றிருப்பதாகவும் பதில் கிடைத்து அவருக்கு.

அவரது சித்தத்தில் மகிழ்ச்சி பரவியதென் பது ஒரே கோடாக இழுபட்ட உதடுகளிலும், மஞ்சள் முகத்தில் முக்காலுக்கும் மேல் மூடிக்கிடந்த விழிகளிலும் தெரிந்தது. பாதையின் ஓரத்தை அடைந்தவர் அங்கேயே பொறுமையாகக் காத்திருக்கத் தொடங்கினார். இரு நாழிகை நேரம் கழித்து, வீரர்கள் பின் தொடர வந்த சோழ தூதரையும் உடன் வந்த விஜயனையும் கண்ட துறவியின் சிறு விழிகள் இன்னும் சுருங்கின.

ஆனால் சோழ தூதரின் முகத்தில் மகிழ்ச் சியேதும் புலப்படவில்லை. மாறாக ஆழ்ந்த சிந்தனையே தெரிந்தது. கோட்டை வாயி லிலிருந்து வரவேற்பு அளிக்கப்பட்டாலும்

வரவேற்ற கோட்டைத் தலைவன் பார்வையில் ஏதோ விஷமமிருப்பதாகப்பட்டதால் தூதரது விழிகளில் ஓர் எச்சரிக்கையும் சந்தேகச் சாயையும் ஊடே தெரிந்தன. ஆனால் உடன் வந்த விஜயன் எதையும் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. வீதியைத் துழாவியபடியே வந்த அவன் விழிகள், அந்தப் புத்த துறவியையும் நீண்டு கிடந்த துணிப்பையையும் கண்டதும் அதீத மகிழ்ச்சியைக் காட்டின. அரண்மனைக்குள் நுழைந்ததும் நீராட்டமும் உணவும் முடிந்து ஸ்தானிக தூதரை மன்னரிடம் அழைத்துச் செல்லும் வரை பொறுத்த விஜயன், தான் நகரைச் சுற்றிப் பார்த்து வருவதாகக் கூறிவிட்டு அரண்மனையைவிட்டு வேகமாக வெளியேறி துறவி இருக்குமிடத்தை நாடிப் போனான்.

சாளுக்கிய மன்னர்களின் அரண்மனை அமைக்கும் முறைப்படி உயர்ந்த தூண்களையும், கணக்கற்ற சிறு சிற்பங்களையும் கொண்டு அமைக்கப்பட்டிருந்த நெல்லூர்புரத்தின் அந்தப் பெரும் மாளிகையின் நீண்ட தாழ்வரைகளின் வழியே சோழ தூதரை அழைத்துச் சென்றார் ஸ்தானிகர். முன்புறத்து மண்டபத்தில் காத்துக் கிடந்த பிரதானிகளையும், வணிகப் பிரமுகர்களையும் கடந்து, நேராக மன்னனிருந்த அறைக்கே அழைத்துச் சென்றார்.

உள்ளே நுழைந்த ஆதித்யனை பெரும் ஆசனத்தில் அமர்ந்தபடி "சோழ தூதர் வரவேண்டும், வரவேண்டும்" என்று முகமன் கூறிய காகதீய மன்னனின் குரலில் ஏதோ நம்ப இயலாத தொனி ஒன்று ஒலிப்பதாகப்பட்டது




''ஆபரேசன் ஃபெயிலியராயிருமோங்குற கவலையெல்லாம் அந்த டாக்டருக்கு மட்டும் கிடையாது.''

''எப்படி சொல்றே?''

''தன் ஆஸ்பத்திரிக்கே 'ஆபரேசன் சக்ஸஸ்'னு பேர் வச்சிருக்காரே!''

– பி.ஜி.பி. இசக்கி

ஆதித்யனுக்கு. மன்னனின் அருகில் பூரண கவசங்களுடன் நீண்ட வாளை உறையுடன் கரத்தில் பிடித்தபடி அமர்ந்திருந்தவளைப் பார்த்தான். கூரிய விழிகளால் தன்னை அவள் உற்றுநோக்கியதைக் கண்டவன், 'இவள்தான் முன்கோபியென்றும், முரட்டுத்தனம் மிக்கவளென்றும் பெயர் பெற்று விட்ட இளவரசி ருத்ராம்பாளாயிருக்க வேண்டுமென்பதையும் புரிந்து கொண்டான்.

மன்னனையும் இளவரசியையும் வணங்கி விட்டு ஆசனத்தில் அமர்ந்த ஆதித்யனை வல்லூறின் விழிகளைப் போல் ஜொலித்த இரு கூர் விழிகள் ஊடுருவின. இலேசாக உயர்த்தியிருந்த புருவங்களும், நெற்றியில் கீற்றாகத் தெரிந்த இரு கோடுகளும், மன்னனது புத்தி துரிதமாக இயங்கிக் கொண்டிருப்பதை உணர்த்தின. அதே சமயத்தில் அவர் முகத்தில் விரிந்த நிதானமும், புன்முறுவலும் அவன் சிந்தனையிலிருப்பதை லவலேசமும் புலப்படுத்தாததைக் கவனித்தான் ஆதித்யன். தன் எதிரில் அமர்ந்திருப்பவன் மிக அபாயகரமான மனிதன் என்பதையும் தான் மிகுந்த எச்சரிக்கையுடன் பேச வேண்டும் என்பதையும் புரிந்து கொண்டான்.

"சோழ தூதர் காஞ்சியிலிருந்து இங்கு வர இரு தினங்கள் ஆகியிருக்கிறது?" – பாதிக் கேள்வியாக ஒலித்த மன்னன் சொற்களில் சந்தேகம் அறவே இல்லாததையும், முகத்திலிருந்த முறுவலும் மாறாததையும் கவனித்தவன் இவனிடம் அதிகம் உண்மையை மறைப்பது உசிதமல்ல என்ற முடிவுக்கு வந்தான்.

"மன்னிக்க வேண்டும் மன்னா, வழியில் பொத்தப்பியின் வீரர்களால் மறிக்கப்பட்டதால் இங்கு வர சற்று தாமதமாயிற்று" என்றான் ஆதித்யன்.

விளையாட்டுப் பிள்ளை போன்ற அந்த முகமும் சலனமற்ற விழிகளும், எந்தத் தயக்கமுமின்றி வந்த பதிலும் மன்னனை அசர அடித்தன. "பொத்தப்பியின் வீரர்கள் உங்களை வழிமறித்தார்களா?" என்ற கேள்வியும் உதிர்ந்தது மன்னனிடமிருந்து.

"ஆம் மன்னா, அவர்கள் கண்ட கோபாலருக்கெதிராக செயல்படுபவர்களாகத் தெரிகிறது. அவர் ஓலையுடன் நாங்கள் வருவதை அறிந்து, எங்களைக் காவலில் வைக்கவும் முயன்றார்கள். நாங்கள் ஏறக்குறைய தப்பித்து ஓடிவரும் நிலை ஏற்பட்டு விட்டது. இது பற்றிப் பிறகு மன்னர் விசாரிக்க வேண்டும்..." – ஒரு வேண்டுகோளையும் வெகு வினயத்துடன் போட்டு வைத்தான் ஆதித்யன்.

கணநேரமே சிந்தித்த மன்னன், தன் மறைமுகமான உதவி மன்மசித்தனின் துணிவை அதிகப்படுத்தியிருக்க வேண்டுமென்பதையும், காஞ்சியிலிருந்து வருபவர்களை



## அருள்வாக்கு

எதிலும் மிகையாகப் போகாமல் நடுநிலைமையில் இருப்பதுதான் மிதம். "மிதம்" என்றால் "அளக்கப்பட்ட", "அளவறிந்த' என்று அர்த்தம். Measured behaviour என்று சொல்லும்போதும் எதிலும் தீவிரமாகப் பறக்காமல், நிதானமாக, கவனமாகச் செய்வதைத்தானே measured என்பது குறிக்கிறது? Measured-தான் மிதம். "ஜ்யாமெட்ரி" என்கிறோமே அது "ஜ்யா-மிதி" என்ற ஸம்ஸ்க்ருத வார்த்தைதான். "ஜ்யா" என்றால் பூமி. "மிதி"என்பது 'மிதம்'தான்- அதாவது அளக்கிற விதிமுறை. யக்ஞத்தில் வேதிகை நிர்மாணம் முதலானதுகளுக்கு பூமியை அளப்பதிலிருந்தே "ஜ்யாமெட்ரி" உண்டாயிற்று. 'க்ஷேத்ரம்' என்றாலும் பூமிதான். அதனால்தான் இதற்கு 'க்ஷேத்ர கணிதம்' என்றும் பெயர் இருக்கிறது.

செய்கிற காரியம், பேசுகிற பேச்சு, ஸம்பாதிப்பது, செலவழிப்பது, புத்தியை ஓடவிட்டு நினைப்பது, அலைவது, சாப்பிடுவது, ட்ரெஸ் பண்ணிக் கொள்வது, பொழுது போக்கு எல்லாவற்றிலுமே, ஒவ்வொன்றிலுமே 'ஓவராக'ப் போய்விடாமல், மனஸ் எதற்கும் வசப்பட்டு விடாதபடி, அளவறிந்து Measured-ஆக வைத்துக் கொள்வதுதான் மிதம். எல்லாவற்றிலும் இப்படிப் பண்ணுகிற பழக்கம் வந்துவிட்டால் சித்தம் ஸமநிலையில் பரம சாந்தமாக ஆவதற்கு உதவும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

அவன் வேவு பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதையும் புரிந்து கொண்டதால், அதுபற்றிப் பேசுவதைத் தவிர்த்து, அடுத்த கேள்வியை வீசினான் :

"கண்டகோபாலன் உங்கள் தூதுக்கு என்ன மறுமொழி அளித்தான்?"

உரையாடலை மன்னன் வேறு திசைக்கு இழுக்க முயல்வதையும் அதன் காரணத்தையும் புரிந்து கொண்ட ஆதித்யனின் முகத்தில் நெளிந்த முறுவலில் விஷமம் தெரிந்தது. "அவர் படை உதவி அளிக்க ஒப்புக் கொண்டார் மன்னா. காளத்தியிலிருக்கும் அவர் படைத் தலைவருக்கு ஓலையொன்றும் அளித்தார்."

"பிறகு?"

"சோழ நாட்டின் நிலையையும், என் நிலையையும் உயர்த்துவதாகவும் வாக்களித்தார் மன்னா."

அதுவரை மௌனமாக அமர்ந்து கவனித்துக் கொண்டிருந்த இளவரசியின் முகத்தில் ஆதித்யனின் வார்த்தைகள் விஷமப் புன்முறுவல் ஒன்றை மலர வைத்தன. அவள் குரலிலும் விஷமம் ஒலித்தது. "சோழ தூதர் காஞ்சியில் தூது பற்றிப் பேசுவதை விட இளவரசிக்கு சித்திரங்களையும் வண்ணங்களையும் பற்றிப் போதிப்பதில் அதிகம் ஈடுபட்டதாகத் தெரிகிறது" என்றாள் அவள்.

ஆதித்யனின் விழிகள் பளிச்சிட்டன. ருத்ராம்பாளையும் அவள் கரத்திலிருந்த வாளையும் ஒருமுறை நோக்கியவன் அவள் ஒலித்த அதே தொனியில் பதிலளித்தான் : "ஆம் இளவரசி, கண்டகோபாலரின் மகளுக்கு சித்திரங்களில் நாட்டம் அதிகமிருப்பதால் அதுபற்றி எனக்குத் தெரிந்த வரையில் கூறினேன். தங்களுக்குப் போர்க் கலையில் நாட்டமிருப்பதாகத் தெரிகிறது. மன்னர் அனுமதித்தால் உங்களுக்கு அதுபற்றி போதிக்கிறேன்."

ருத்ராம்பாளின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க ஆரம்பித்தன. "பேச்சிலிருக்கும் சாமர்த்தியம் உனக்கு வாளை வீசுவதில் இருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்று வேகமாக எழுந்தவள், உறையிலிருந்து வாளை உருவ முயன்றாள்.

மன்னன் குரல் குறுக்கே புகுந்தது. "ருத்ரா, சொற்போர் வாட் போராக மாறக்கூடாது. சற்றுப் பொறு" என்று மகளை அடக்கியவன், "தூதரே, கண்டகோபாலன் இன்னும் என்ன கூறினான்?" என்றான்.

ஆதித்யனின் கூரிய அறிவில் அபாயம் ஒலித்து, அந்தச் சூழ்நிலையில் ஏதோ தவறு இருப்பதை உணர்த்தியது. பலமிக்க எதிரிகளாக இருந்த காலத்திலும் கூட, பாண்டியரோ, மேலைச் சாளுக்கியர்களோ சோழ மன்னனையோ, அவனது தூதர்களையோ, அனுமதித்ததில்லை. இப்படி வாளை உருவுவதோ எந்தக் காலத்திலும் அறவே இருந்ததில்லையென்பதை எண்ணியவனின் விழிகளில் எச்சரிக்கை படர்ந்தது. தன் சந்தேகத்தை அடக்கியபடியே மன்னனுக்கு பதிலளித்தான்

ஆதித்யன் :

''மன்னர் வடக்கிலிருந்து யாதவரால் தாக்குதல் ஏற்படக்கூடும் என்று எதிர்பார்த்திருப்பதால் உதவியளிக்கத் தயங்கக் கூடுமென்றும், அப்படி அவர் தயங்கும்பட்சத்தில் கண்டகோபாலருக்கு அனுமதியளிப்பது மட்டுமே போதுமானது என்றும் கேட்டுக் கொண்டார். படைகள் சோழ நாடு செல்லும் போது தாமே நேரில் வந்து உதவுவதாகவும் கூறினார்.''

''அது நிறைவேறாது தூதரே'' – மன்னன் குரலில் ஆழம் காண இயலாத அமைதி ஒலித்தது.



''அந்த டாக்டர் ரொம்ப விவரமானவர்னு தோணுது.''

''எப்படி...?''

''2 இட்லிதான் சாப்பிட்டேன், வயிற்று வலி தாங்கலைனு சொன்னதும் சட்னி, சாம்பாரை ஊத்திக்கிட்டு, இஷ்டத்துக்கு குடிச்சிருப்பீங்கன்னு சொன்னாரே!''

-சீர்காழி வி.ரேவதி

''ஏன் மன்னா?'' – ஆதித்யன் குரலில் சந்தேகமிருந்தது.

''காஞ்சியில் கண்டகோபாலனின் காலம் முடியப் போகிறது. எனவே சோழ தூதன் என்ற போர்வையில் வந்திருக்கும் உன் திட்டம் பலிக்கப் போவதில்லை'' என்ற மன்னன் பலமாக நகைத்தான்.

''சோழ தூதன் என்ற போர்வையா?'' – ஆதித்யனின் குரல் திகைப்புடன் வந்தது.

நகைப்பதை நிறுத்திய மன்னன் குரல் தெளிவாகவே ஒலித்தது. ''உன் சாயம் வெளுத்து விட்டது, ஆதித்ய பாண்டியா!'' என்றவன் கரங்களைப் பலமாக இருமுறை தட்டினான்.

இருக்கைக்குப் பின்புறத்திலிருந்து காவலர் உருவிய வாட்களுடன் தன்னை நெருங்கிவரும் காலடியோசை ஆதித்யனின் பாம்புச் செவிகளில் விழுந்தது. அதே சமயத்தில் அடுத்த அறையிலிருந்து உள்ளே நுழைந்தவனைக் கண்டதும் ஆதித்யனுக்கு சகலமும் உடனே விளங்கிற்று. கறுத்த முகத்தைப் பாதிவரை மறைத்த பெரும் மீசையுடனும், வஞ்சம் ஜொலித்த விழிகளுடனும் உள்ளே நுழைந்து மன்னனை வணங்கினான் காடவராயனின் காளாமுக உபதலைவன்.

ஒருகணமே அவனை ஏறெடுத்து நோக்கிய ஆதித்யன், இருக்கையில் நன்றாகச் சரிந்து தாராளமாக அமர்ந்து கொண்டான். அதே சலனமற்ற பார்வையும் விஷமப் புன்முறுவலும் அவன் முகத்தில் தெரிந்தன. காடவ உபதலைவனை நோக்கி உதிர்த்த அவன் சொற்களும் நிதானமாகவே வந்தன : ''காடவர் உபதலைவனே, உங்கள் மன்னன் சோழ நாட்டில் போசளர் நுழைய வழிவகுத்ததைப் போல மீண்டும் காகதீயர் நுழைய காரணமாகப் போகிறானா?''

காடவ உபதலைவன் பதிலில் எகத்தாளம் ஒலித்தது : ''நீ சோழ தூதனாக வந்தது எதற்கு? மன்னர் படைகளை சோழ நாட்டுக்கு அழைக்கத்தானே?''

பதில் மன்னனிடமிருந்து வந்தது. ''காடவனே, நீ நினைப்பது தவறு. யாதவர் தாக்குதலை மீறி நான் காஞ்சிக்கு எந்த அளவிற்கு முக்கியத்துவம் அளிக்கிறேன் என்பதை அறியவும். அப்படி நான் படைகளை அனுப்ப முயன்றால் பாண்டியரை முன்னதாக எச்சரிக்கவும் வந்திருக்கிறான் ஆதித்யன். இங்கிருந்து படைகள் சென்றாலும் சோழ எல்லையில் அடியெடுத்து வைத்ததும் அவை அழிக்கப்படும். நான் கூறுவது சரிதானே ஆதித்யா?'' – மன்னனின் குரலில் அதே நிதானம் காணப்பட்டது.

'ஆம்' என்பதற்கடையாளமாகத் தலையசைத்த ஆதித்யன், நேரிடையாகவே அறிவித்தான் : ''மன்னா, நீங்களாகவே தொண்டைமண்டலத்தைப் பாண்டியரிடம் ஒப்படைப்பது போரைத் தவிர்க்கும்.''

''இல்லையெனில்?''

''தொண்டை நாடு மட்டுமின்றி இந்த நெல்லூர்புரம் வரையில் கூட பாண்டியர் படைகள் வரக்கூடும்'' என்றான் ஆதித்யன்.

ருத்ராம்பாள் ருத்ராவேசமாக எழுந்தாள். விழிகளில் கனல் பறந்தது : ''தந்தையே, என்ன துணிவு இவனுக்கு! இங்கேயே இவனைத் தீர்த்து விடுகிறேன்'' என்றவள் வாளை உருவிக் கொண்டு ஆதித்யனை நெருங்கவும் முற்பட்டாள்.

(தொடரும்)

## 33. பொற்குவியல் ரகசியம்!

"நில் ருத்ரா, நில்!" மந்திரத்தால் இயக்கப்பட்ட பதுமை ஒன்றைப் பாதியில் திடீரென நிறுத்தி வைத்ததுபோல நின்றாள். உருவிய வாளுடன், கண்களில் கனல் பறக்க, முன்னால் வைத்த கால் அப்படியே இருக்க, எழுந்த வேகத்தில் கலைந்த குழற்கற்றை முன்னால் வந்து முகத்தில் மோத, ருத்ராம்பாளைச் சிலையாகவே நிறுத்தி வைத்தது மன்னனிடமிருந்து உதிர்ந்த அந்த மூன்று சொற்கள். கண நேரமே நின்று, அப்படியே திரும்பி மன்னனை நோக்கிய இளவரசியின் குரலில் இன்னும் சீற்றம் தொனித்தது, "தந்தையே, எதற்காக இவனுக்கு இன்னும் கருணை காட்டுகிறீர்கள்? நம் தலைநகரைத் தாக்குவதாக நம்மிடமே வந்து கூறும் இவன் நாவைத் துண்டித்து, கரங்களை அகற்றி விட வேண்டாமா?"என்றாள் ருத்ராம்பாள் உக்கிரமாக.

"பொறு மகளே, சோழ தூதனாக வந்தவன் இப்போது பாண்டியரின் போர்த் தூதனாக மாறியிருக்கிறான், அவ்வளவே! தூதர்களைக் கொல்வது பாவம். அது தர்மமுமல்ல."

"இல்லை, தந்தையே இவன் நம்மை வேவு பார்க்கவும் வந்ததாக நீங்கள்தானே கூறினீர்கள்? வேவு பார்ப்போருக்கு அளிக்கும் தண்டனையை இவனுக்கு அளிப்பதில் தவறேதுமில்லை தந்தையே." படபடவென்று பொரிந்தாள் இளவரசி.

"ருத்ரா, முக்கியமான ஒன்றை நீ மறந்து விட்டாய். உன் ஆத்திரத்தை மட்டுப்படுத்தி அறிவை இயக்கு மகளே!"

"நான் எதை மறந்து விட்டேன் தந்தையே?" ருத்ராம்பாளின் கேள்வி அதே வேகத்தில் தொடர்ந்தது.

"மகளே, இவன் தமிழன்." மன்னனின் குரலில் எச்சரிக்கை இருந்தது.

"அதனாலென்ன?"

"மகளே, தமிழன் தனித்து இயங்கும் போது தன்னை மட்டும் காத்துக் கொள்வான். அவன் ஒற்றுமையாக இணைந்து நின்றால் எந்த மன்னனுக்கும் அவனை வெல்வது மிகக் கடினம். இப்போது இவன் சோழ தூதனாக, துறவியாரின் ஓலையுடன் வந்திருப்பது, சோழரும், பாண்டியரும் இணைந்திருப்பதைக் குறிக்கிறது. அது மட்டுமல்ல...."

"வேறென்ன தந்தையே?"

"இவன் காஞ்சியிலிருந்து நேராக இங்கு வரவில்லை. நடுவில் ஏதோ தந்திரம் செய்துவிட்டு வந்திருக்கிறான். முழு விவரம் அறியாமல் இவனைக் கொன்று விடுவது நமக்கு அபாயமாக மாறலாம். எனவே சற்று பொறு" என்றவன், காடவ உபதலைவனை நோக்கித் திரும்பினான். "காடவ வீரனே, நீ முன்னதாகச் சென்று, காடவராயனிடம் வீரர்களைத் திரட்டச் சொல். நம் படைகள் சோழ நாட்டில் நுழையும் போது, கிடைக்கும் உதவியைப் பொறுத்து, காடவராயனின் வேண்டுகோள் ஏற்கப்படும் என்று தெரிவித்து விடு. நீ போகலாம்" என்றான் மன்னன். காடவ உபதலைவன் வணங்கி விட்டுத் திரும்பி நடந்தான்.

அவன் வெளியேறியதும் ஆதித்யனை நோக்கித் திரும்பிய மன்னன், "சொல் ஆதித்யா, இரு தினங்களாக எங்கே சென்றிருந்தாய்?" என்ன செய்து விட்டு வந்திருக்கிறாய்?" என்றான்.

மெள்ள நகைத்தான் ஆதித்யன். "சற்றுப் பொறுமையாக இருங்கள் மன்னா. என்ன செய்தேனென்பது இன்று மாலைக்குள் தெரிந்து விடும்" என்றான் நகைப்பினூடே.

ஆனால் மன்னன் அன்று மாலை வரை காத்திருக்க அவசியமில்லாமலேயே போனது. தனது அனைத்துக் கேள்விகளுக்கும் ஆதித்யன் சரிவர பதில் அளிக்காததைக் கண்டு பொறுமையிழந்து கொண்டே வந்த மன்னனுக்கு, விஷயத்தை அறிவிக்க அடுத்த இரண்டாவது நாழிகையில் வீரன் ஒருவன் ஓடிவந்தான். "பிரபு, பிரபு, மன்மசித்தன் படைகளுடன் காளத்தியிலிருக்கும் படைகளைத் தாக்குவதாகச் செய்தி வந்திருக்கிறது" என்றான் வீரன் பதற்றத்துடன்.

ஆதித்யன் மீண்டும் பலமாக நகைத்தான்.

காளத்தியில் தாக்குதலை நடத்தும் மன்மசித்தன் அடுத்து காஞ்சியை நோக்கிச் செல்வா



னென்பதும், காஞ்சியை நோக்கிச் செல்லும் மன்மசித்த னுக்கு மட்டுமின்றி, கண்ட கோபாலனுக்கும் பெரும் அபாயம் காத்திருக்கிறதென்பதையும் புரிந்து கொண்ட மன்னன், தனது உதவியோ, அனுமதியோயின்றி, மன்மசித்தன் கண்ட கோபாலனைத் தாக்கச் சென்று விட்டதன் காரணம் புரியாததால் திகைத்தான். தான் வகுத்திருந்த திட்டங்களும் மற்ற ஏற்பாடுகளும் அந்தத் தமிழன் கையாண்டு விட்ட சிறு தந்திரத்தால் குலைந்து விட்டதை உணர்ந்து கொண்ட மன்னன், காஞ்சியைத் தாக்கச் செல்லும் மன்மசித்தனும் கண்டகோபாலனும் அறியாதபடி அங்கே பாண்டியர் படைகள் காத்திருக்கக் கூடும் என்பதையும், அடுத்து அது தொண்டை மண்டலத்தில் ஊடுருவி வரக் கூடுமென்பதையும் வட எல்லையிலிருக்கும் தனது படைகளை அழைத்து வர அவகாசமேயில்லை யென்பதையும் புரிந்து கொண்டான். தற்போதைக்கு மன்மசித்தனைத் தடுத்து நிறுத்துவதைத் தவிர வேறு வழியேதுமில்லையென்பதும் புரிந்ததால் இருக்கையை விட்டு வேகமாக எழுந்தவன், இளவரசியை நோக்கி, "ருத்ரா, இவனைச் சிறைக்குள் தள்ளி வை. நாளைக் காலைக்குள் நான் திரும்பவில்லையென்றால் இவனை நம் உறங்கை நகருக்கு அழைத்துச் சென்று நம் சிறைக் கூடத்தில் அடைத்து விட்டு, படைகளை அழைத்துக் கொண்டு காளத்திக்கும் காஞ்சிக்கும் வந்து சேர்" என்று உத்தரவிட்டு வேகமாக வெளியேறினான்.

மன்னன் அகன்றதும் எதிரில் சலனமற்ற விழிகளுடனும் அதே விஷமப் புன்முறுவலுடனும் அமர்ந்திருந்த ஆதித்யனை வெறித்த ருத்ராம்பாள், "மன்மசித்தனை என்ன செய்தாய்?" என்றாள்.

"ஆற்றுவான் நூற்றுவரைக் கொன்று விடும்" என்றான் ஆதித்யன்.

**விஷ்வக்சேனன்**

"என்ன உளறுகிறாய்?"

"இது உளறலில்லை இளவரசி. தமிழிலக்கியம். பகைவரை அழிக்க தமிழ் நூல்கள் கூறும் பலவழிகளில் இது ஒன்று."

"விளங்கவில்லை."

"உங்களுக்கு விளங்காது. பகைவனுக்குப் பகைவன் யார் என்பதை அறிந்து அவனைக் கொண்டே எதிரியை அழிக்கும் முறை இது...'' 'என்ற ஆதித்யன் மீண்டும் நகைத் தான்.

"ஏன் நகைக்கிறாய்?" சீறினாள் ருத்ராம்பாள்.

"மன்னர் சென்றிருப்பது வீணான வேலை. மன்மசித்தனை அவரால் தடுத்து நிறுத்த இயலப் போவதில்லை. இந்த நெல்லூர் புரத்தைக் காக்க உன்னாலும் முடியப் போவதில்லை."

ருத்ராம்பாள் தந்தைக்கும் தனக்கும் அபாயம் நெருங்குவதைப் புரிந்து கொண்டாள். வாளுடன் ஆதித்யனை நெருங்கியவள்,

"உண்மையைச் சொல். பாண்டியர் படைகள் காஞ்சிக்கு அருகில்தானே இருக்கின்றன? இந்த நெல்லூர்புரத்துக்கு என்ன அபாயம் நேரிட இயலும்?" என்றாள் தன் கரத்திலிருந்த் வாளை நீட்டி.

"பாண்டியர் படைநிலைகளைப் பற்றி நான் கூறுவேனென்று எதிர்பார்க்கிறாயா?" என்றான் ஆதித்யன் நிதானமாக.

"உன்னிடமிருந்து அதை வரவழைக்க வழி தெரியும் எனக்கு. உறங்கை நகரின் சிறைக் கூடத்தைப் பற்றி அறிவாயா நீ?" ருத்ராம்பாளின் குரலில் கடுமை ஒலித்தது.

காகதீயர்களின் விசாரணை முறைகளைப் பற்றி ஏற்கெனவே அறிந்திருந்தான் ஆதித்யன். உறங்கையின் பிரசித்தி பெற்ற பிணைமுறிகளைப் பற்றியும், வேங்கி நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டிருக்கும் கோதண்டத்தைப் பற்றியும், அவர்கள் கிட்டிகட்டி வதை செய்து உண்மைகளை வரவழைக்கும் முறைகளையும் அறிந்திருந்தவன், நிதானமாகவே பதிலளித்தான். "அறிவேன் இளவரசி."

அவன் நிதானத்தையும், மாறாமலிருந்த அலட்சியப் புன்முறுவலையும் கண்ட ருத்ராம்பாளின் சீற்றம் இன்னும் உயர்ந்தது. வீரர்களைக் கூப்பிட்டு, அவனைச் சிறைச் சாலைக்கு அழைத்துச் செல்ல உத்தரவிட்டாள் அவள்.

**ப**னித்துளி கூட ஒரு பெரும் சுமைதான், புல்லுக்கு. கதிரவன் வந்து அதைப் பருகும் வரை புல் தலை குனிந்து காத்திருப்பதைப் போல, ஆதித்யனின் பிரிவால் நைந்துகிடந்த பூங்கோதை காத்திருந்தாள். காகதீயர் சிறையில் அவன் அடைக்கப் பட்ட செய்தி பெரும் அதிர்ச்சியையும் கவலையையும் அளித்து விட்டதால் அவளுக்கு உணவும் உறக்கமும் பிடிக்கவில்லை. கொங்கு நாட்டிலிருந்து வந்த தோழியரால் அவள் சோர்வை விரட்ட முடியவில்லை. அவள் அடிக்கடி நாடிச் செல்லும் சிற்ப மண்டபமும் கூட வெறுத்துப் போயிருந்தது. துறவியாரின் போக்கு அவளுக்கு இன்னும் அதிர்ச்சியளித்துக் கொண்டிருந்தது. ஆதித்யன் காகதீயரால் சிறை செய்யப்பட்ட செய்தியைப் பற்றி அவர் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. தஞ்சை அரண்மனையில் இணைந்து உலவிய சோழ, பாண்டிய வீரர்களின் மகிழ்ச்சியும், கலகலப்பும் அவளுக்கு வேம்பாகக் கசந்தன. நந்தவனத்துச் சாளரமே கதியாக, பொழுதைத் தள்ள முயன்று, என்னவென்று புரியாத பிரமையில் வெற்றுப் பதுமையாகவே அமர்ந்திருந்தாள். மாலையும் இரவும் சந்தித்து மயங்கிக் கொண்டிருந்த அந்திப் பொழுதில், இன்னும் அதிக மயக்கத்தில் ஆழ்ந்து கிடந்த அவள் புலன்கள், சட்டென்று விழித்தன. நந்த வனத்து மரங்களின் மீதும் மதில்களின் மீதும் பற்றிப்

## அருள்வாக்கு

**ஆ**ஸ்பத்திரி வைத்து உடல் வியாதியைத் தீர்ப்பது போதாது. நோயாளிகளது மனசில் கெட்ட எண்ணங்கள் என்ற வியாதி இல்லாமல் செய்வதே அதைவிட முக்கியம். இவ்வாறேதான் பள்ளிக் கூடம் வைத்துப் படிப்பை விருத்தி செய்கிறோம். படித்து வெளிவந்தவர்கள் யோக்கியர்களாக இல்லாவிட்டால் பள்ளிக் கூடம் வைத்த பயன் நமக்கு ஏது? பக்தி, கட்டுப்பாடு, தியாகம் முதலானதுகள் இல்லாமல் படிப்பால் வெறும் புத்தியை மட்டும் வளர்த்துக் கொண்டால், சாதுரியமாக அயோக்கியத்தனங்கள் செய்து தப்பித்துக் கொள்வதற்குத்தான் வழியாகிறது. வித்யாசாலையோடும் வைத்திய சாலையோடும் மநுஷ்யனின் வாழ்வு முடிந்து விடுகிறதில்லை. அவன் நல்லவனாக இருக்க வேண்டும் என்பதுதான் லட்சியம். இப்படி நல்லவனாக்குகிற நிலையங்களாக ஆலயங்களும் ஆஸ்பத்திரி, ஸ்கூல் போலவே, - ஆஸ்பத்திரியை, ஸ்கூலை விடவும் - அவசியம் இருக்கத்தான் வேண்டும். நாம் நல்லவர் ஆவதற்காக பகவத் தியானம், பூஜை இவைதான் அவசியம் இருக்க வேண்டியவை.

மனிதனின் உடம்புக்கு ஆரோக்கியம் தருவது, புத்திக்குப் படிப்புத் தருவது, அவனுடைய தரித்திரத்தை நீக்கிச் செல்வச் சுபிட்சம் தருவது, எல்லாவற்றையும் விட அவனை பகவானிடம் சேர்ப்பதே பேருபகாரம். நாமும் பகவா



னிடம் மனசைச் செலுத்தி, தியானம், பூஜை இவைகளை அநுஷ்டித்தால் தான் மற்றவர்களை இவற்றில் ஈடுபடுத்த நமக்கு யோக்கியதை உண்டாகும். அப்போது தான் நாம் செய்கிற பரோபகாரம் சக்தியோடு பலன் தரும்.

மனிதனையே தெய்வமாக நினைத்து அவனுக்குச் சேவை செய்வது சிலாக்கியம்தான். ஆனால் நாம் அப்படி நினைப்பதோடு நிற்காமல் அவனே உண்மையாகத் தன் தெய்விகத்தைக் கொஞ்சமாவது தெரிந்து கொள்ள நாம் ஆலயங்களை அவசியம் பேண வேண்டும்.

நல்லவனாவதற்குப் பக்தி தேவையில்லை என்று ஒரு வாதம். ஆனாலும் நடைமுறையில் பலவிதமான சுயநல ஆசைகளால் ஆட்டி வைக்கப்படுகிற ஜீவனைப் பரிசுத்தப்படுத்துவதற்கு பக்தியைப் போன்ற சாதனம் வேறு இல்லவே இல்லை. 'பகவான் என்று ஒருவன் சர்வ சாட்சியாகவும், சர்வ சக்தனாகவும் இருந்து கொண்டு நம் கர்மங்களுக்குப் பலன் தருகிறான்' என்கிற பயபக்தி உணர்ச்சிதான் யுக யுகாந்தரமாக மனிதனைத் தர்ம மார்க்கத்தில் நிறுத்துவதற்குப் பெரிய ஊன்றுகோலாக இருந்து வந்திருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய
சுவாமிகள்.

படர்ந்து கிடந்த கொடிகளினூடே வித்தியாசமான அசைவு ஒன்று அவள் பார்வையில் பட்டது. உற்றுக் கவனித்தவளுக்கு அது கொடியல்ல என்பதும், வரிசையான முடிச்சுக்களில் இலைகளும் சிறு கிளிகளும் கோக்கப்பட்ட நீண்ட கயிறு என்பதும் புலப்பட்டது. அப்பொழுது கூட முழு விழிப்பைப் பெறவில்லை அவள் சித்தம். சற்றுக் கழித்து கொடிகளையும், கவியத் தொடங்கிய இருளையும் சாதகமாக்கிக் கொண்டு, அந்தக் கயிற்றைப் பிடித்தபடி வெகு எச்சரிக்கையுடன் யாரோ ஒரு மனிதன் மதிலிலிருந்து இறங்க முற்படுவதைக் கண்டதும் திடுக்கிட்டு விழித்தாள். செடி கொடிகளின் மறைவில் இறங்கி, சற்று நேரம் நின்ற அந்த மனிதன் பதுங்கியபடியே மதிலின் ஓரமாகவே செல்ல ஆரம்பித்தான்.

பதற்றத்துடன் எழுந்த பூங்கோதை, மளமளவென்று கீழேயிறங்கி கூடத்தில் உலவிக் கொண்டிருந்த வீரர்களை அழைத்து, மதிலோரத்துக்குச் சென்று தேடுமாறு கூறினாள்.

பந்தங்களுடனும், உருவிய வாட்களுடனும் அவள் கூறிய இடத்தில் சென்று தேடிய வீரர்களுக்கு அவள் தெரிவித்தபடி கயிறோ வேறு மனிதரோ கிடைக்காததால் இளவரசிக்கு பிரமை அதிகரித்திருக்க வேண்டும் என்றே தீர்மானித்தனர்! அவள் பிரமை படிந்த விழிகளையும் முகத்தையும் பரிதாபமாகப் பார்த்தபடி அனுதாப மொழிகளையும் உதிர்த்துச் சென்றனர்.

காவலரின் விழிகளில் மண்ணைத் தூவிய அந்த மனிதன் அதே சமயத்தில் காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன் சிறையிருந்த தனி மாளிகை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தான். கரங்களில் வேல்களுடன் வெகு சாவதானமாக ஏதோ பேசியபடி மாளிகையைச் சுற்றிக் காவல் புரிந்து கொண்டிருந்த சோழ வீரர்கள் கடந்து செல்லும் வரை காத்திருந்தவன், தாழ்வரையைக் கடந்து, மாளிகையைச் சுத்தம் செய்வோர் செல்லும் பின்புறத்துப் படிகள் வழியே பதுங்கியபடியே ஏறத் தொடங்கினான். உப்பரிகையை அணைத்து நீட்டிக் கொண்டிருந்த தட்டில் சத்தமின்றித் தாவியவன் மேலே பேச்சுக் குரல்கள் ஒலிப்பதைக் கேட்டு அங்கேயே பதுங்கினான்.

"கோட்டைத் தலைவரே, காடவ மன்னருக்கு உடல் நலக் குறைவொன்றுமில்லை. கவலையும் அதிர்ச்சியும் அவர் மனத்தை வாட்டுகின்றன. உணவும் சரிவர ஏற்காததால் பலவீனப்பட்டிருக்கிறார். வேறொன்றுமில்லை."

"நாம் சரிவர கவனிக்கவில்லை என்ற அவப்பெயர் வரக்கூடாது மருத்துவரே. அதற்காகத்தான் உம்மை அழைத்து வந்தேன். இவனைக் கொன்று எறியாமல் துறவியார் ஏனோ பாதுகாக்கிறார்." - சலிப்புடன் கோட்டைத் தலைவன் கூறுவதும் இருவரும் பேசியபடியே வெளியேறுவதும் புரிந்தது. அவர்களின் குரல்கள் தேய்ந்த பின்பு மெள்ள எழுந்த அந்த மனிதன் ஒரே தாவலில் சாளரத்தின் வழியே அறைக்குள் குதித்தான்.

மஞ்சத்தில் படுத்துக்கிடந்த காடவ மன்னன் திடுக்கிட்டு எழுந்தான். அவன் முகத்தில் கட்டுக்கடங்காத வியப்பு தெரிந்தது. "காடவராயா, நீ இங்கு எப்படி?"

சைகையால் காடவ மன்னனை எச்சரித்த காடவராயன், மஞ்சத்தின் அடியில் சென்று பதுங்கினான். வெளியில் வீரர்கள் வரும் ஒலிகள் கேட்டன. ஒருமுறை அறைக்குள் அசிரத்தையாகத் தலை நீட்டி, மஞ்சத்தில் படுத்துக் கொண்டிருந்த காடவ மன்னனை நோக்கியவர்கள், முகங்களில் வெறுப்புப் படர அடுத்த அறைக்குச் சென்று உணவருந்தத் தொடங்கினர்.

காடவ மன்னன் மெள்ள திரும்பினான்.

அவன் குரலும் தழைந்து ஒலித்தது. "காடவ ராயா, இத்தனை தினங்களாக எங்கிருந்தாய்? ஏன் என்னைக் காணவரவில்லை?"

"தந்தையே, சேதிராயனோ, மலையமானோ எனக்கு உதவவில்லை. துறவியார் என்னைக் கண்டவுடன் சிறை செய்யவோ, இயலா விட்டால் கொன்று விடவோ சோழ வீரர் களுக்கு உத்தரவிட்டிருக்கிறார். இத்தனை தினங்களாக காஞ்சிக்கு அருகில் ருத்ரவாலீஸ் வரத்துக் குகைக் கோயிலில் மறைந்து கிடந் தேன்" என்றான் காடவராயன்.

"இப்பொழுது மட்டும் ஏன் வந்தாய்?" காடவ மன்னனின் இயற்கையான முரட்டுத் தனம் குரலில் ஒலித்தது.

காடவராயன், கோப்பெருஞ்சிங்கனின் கோபத்தை லட்சியம் செய்ததாகத் தெரிய வில்லை. "அதிருக்கட்டும் தந்தையே, இங்கிருந்து உங்களை விடுவிக்கவும், நம் சிற்றரசை மீட்கவும் கூட ஏற்பாடு செய்து விட்டேன்."

காடவ மன்னன் முகத்தில் ஏளனம் விரிந் தது. "கனவு ஏதும் காண்கிறாயா மகனே? துறவி யாரைப் பற்றி நீ அறிந்தது அவ்வளவுதான். நம் சிற்றரசும் பொக்கிஷங்களும் இனி யானை வாய்க் கரும்புதான். மீளாது" என்றான் அவன்.

"நான் கூறுவதைச் சற்று கேளுங்கள்" என்று தந்தையை அடக்கிய காடவராயன், ஆதித் யனை காகதீயரிடம் சிக்கவைத்து விட்டதையும் காகதீய மன்னன் சோழ நாட்டுப் படையெடுப் பில் உதவினால், பின்பு காஞ்சிக்கோ, ஏன் சோழ நாட்டுக்கோ கூட தன்னை மன்னனாக்கு வதாக அனுப்பிய செய்தியையும் சுருக்கமாகக் கூறினான். அவன் கூறக்கூற கோப்பெருங் சிங்கன் முகத்தில் வியப்பு விரிந்தது. காடவ ராயன் இத்தனை தீர்க்கமாக சிந்திக்கவோ, திட்டம் வகுத்துச் செயலாற்றவோ கூடும் என் பதை அவன் அடியோடு எதிர்பார்க்கவே யில்லை. தான் செய்திருக்கும் ஏற்பாடுகளைப் பற்றிக் கூறி முடித்த காடவராயன், "எனவே தந்தையே, மீண்டும் நான் படை திரட்ட வேண்டும். சோழ பாண்டியர்களிடம் சிக்கியது போக நமது பொக்கிஷங்கள் வேறெங்கும் இருக் கிறதா?" என்றான்.

இல்லையென்று தலையசைத்த கோப் பெருஞ்சிங்கன், ஏதோ சிந்தனையில் ஆழ்ந் தான். அவன் சித்தம் எங்கோ வெகுதூரம் பின் னோக்கிச் சஞ்சரிப்பதை முகம் உணர்த்தியது. சற்றுக் கழித்து ஒலித்த அவன் குரலும் கிணற் றுக்குள்ளிருந்து ஒலிப்பது போலக் கேட்டது.

"காடவராயா, நம்மிடமிருந்ததைப் போல நூறு மடங்கு பொற்குவியல் ஓரிடத்திலிருக் கிறது!"

"எங்கே? எங்கே? எங்கிருக்கிறது தந்தையே?" காடவராயன் முகமெல்லாம் பல்லாக சப்தமின்றி நகைத்தான்.

"பூந்துறை நாட்டில்."

"தந்தையே, நாம் அங்கிருந்துதானே பொன்னை அள்ளி வந்தோம்?" காடவராயன் குரலில் சந்தேகமிருந்தது.

"ஆம் மகனே, ஆனால் நாம் கொண்டு வந்தது வெளியில் சிதறிக் கிடக்கும் சிறுபகுதி தான். கஞ்சமலையின் உட்பகுதியில் பாறை பாறையாக பொற்குவியல் கிடக்கிறது. அதன் உள்ளே செல்லும் வழிகள் மூடப்பட்டு பல நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. அதன் திறவு கோல் சோழர் பொக்கிஷ மண்டபத்திலிருக் கிறது. பொன்னாலான ஓலைகளில் எழுதப் பட்ட அந்த ரகசியம் ஒரு பேழையில் வைக்கப் பட்டு இதே தஞ்சையில் பூமிக்கடியில் ஒரு பொக்கிஷ மண்டபத்திலிருக்கிறது. சோழ ராஜ ராஜருடன் நான் பழகிய நாட்களில் அதை அந்த மூடன் எனக்குக் காட்டியிருக்கிறான். அந்தப் பேழையின் மீது அந்த இடத்தின் பெயர் எழுதப்பட்டிருக்கும். அதன் பெயர்... பெயர்" என்ற கோப்பெருஞ்சிங்கனின் நெற்றி சுருங்கி, அவன் தீவிரமாக அதை நினைவுக்குக் கொண்டு வர முயற்சி செய்வதை உணர்த்தி யது. அவன் சித்தம் பழைய கனவுகளில் மூழ் கியது.

"என்ன பெயர் தந்தையே?" காடவராயன் பொறுமையின்றித் தவித்தான்.

சற்றுக் கழித்து கோப்பெருஞ்சிங்கனின் குரல் கனவிலிருந்து ஒலித்தது, "இந்திர தனுசு" என்று!

(தொடரும்)



"அந்த டீ.வி. கம்பெனியைப் பாராட்டணும்..."

"எதுக்கு?"

"தங்களோட டீ.வி. விளம்பரத்துல, 'சட்ட பூர்வமான எச்சரிக்கை: டீ.வி. பார்ப்பது மனநலத்துக்குக் கேடு'ன்னு போடறாங்களே!"

— பா. ஜெயக்குமார்

## 34 துறவியார் செய்த மாயம்

"மூவருமாகி இருவருமாகி முதல்வனுமாய் நின்ற
மூர்த்தி
பாவங்கள் தீர்தர நல்வினை
நல்கி..."

-பல தினங்களாகக் காணாமற் போயிருந்த துறவியார் திரும்பி விட்டார் என்பதை அரண்மனை மேல்மாடத்து அறையிலிருந்து உரத்து ஒலித்த ஞானசம்பந்தரின் திருவிழிமிழிலைப் பதிகம் அறிவித்திருந்தது. அந்த கனத்த குரல் எங்கிருந்தோ அமைச்சரை அந்த அறையை நோக்கி இழுத்துக் கொண்டு வரவும் செய்தது. துறவியாரைக் கண்டதும் வணங்கி, கரத்திலிருந்த இரு ஓலைக் குழல்களை அடுத்து நீட்டிய பேரமைச்சரின் முகம் ஏனோ கசந்து வழிந்து கொண்டிருந்தது.

குழல்களைப் பிரித்து ஓலைகளைப் படித்த துறவியாரின் முகமும் சற்றுநேரம் சிந்தனையில் ஆழ்ந்தது. தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டபடியே தலையசைத்தவர், "அமைச்சரே, காடவராயனைப் பற்றி ஏதும் அறிந்தீர்களா?" என்றார் விட்டத்தைப் பார்த்தபடி. அமைச்சர் மென்று விழுங்கினார். "பிரபு, காடவராயன் தஞ்சைக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. ஆனால் எங்கிருக்கிறான் என்பது இன்னமும் தெரியவில்லை" என்றார் அமைச்சர்.

துறவியாரின் விசால விழிகள் ஒருமுறை இறுக மூடித் திறந்தன.

"அமைச்சரே, இன்னும் ஒரு நாழிகை கழித்துத் திரும்பி வாரும். வரும்பொழுது தேர்ந்த புரவி வீரர் நால்வரை அழைத்து வாரும்." மீண்டும் அவர் பார்வை விட்டத்தில் சென்று பதிந்து கொண்டது.

ஒரு நாழிகை கழித்து



# இந்திர தனுசு



அமைச்சர் திரும்பியபோது துறவியாரது கரத்தில் இரு ஓலைக் குழல்கள் இருந்தன. அவர் பார்வை கீழிறங்கி அந்த வீரர்களின் மீது பதிந்தது. திருப்தியுடன் தலையசைத்தவர், முதலில் நின்ற வீரனிடம் ஒரு குழலை நீட்டினார். "வீரனே, நீ போர்க் களத்திற்குச் செல்லப் போகிறாய்" என்றார்.

ஓலையைப் பெற்றுக்கொண்டவன் முகத்தில் பெருமிதம் தெரிந்தது. "என் பாக்கியம் பிரபு!" என்றான் அவன்.

"களத்திலிருக்கும் பாண்டிய மன்னரிடம் இதை அளித்து விடு. இந்த ஓலை வேறு எவர் கரத்திலும் சிக்குவதைவிட....."

"என் உயிரை விடுவேன் பிரபு" என்றான் வீரன்.

"அதனால் பயனேதுமில்லை. ஓலையை அளித்த பின்பு வேண்டுமானால் உயிரை விடு.

விஷ்வக்சேனன்



## அருள்வாக்கு

**மதம் எதற்கு? ஒரு மதகுரு சொல்லுவதை நாம் ஏன் கேட்கப் போகிறோம்? நமக்குக் கஷ்டம் போவதற்காகவும் குறை நீங்குவதற் காகவும் போகிறோம். குறையில்லாவிட்டால் வேண்டியதில்லை. குறை அதிகமானால் அதிகமாகக் கோயிலுக்குப் போகிறோம்; அதிக மாகப் பெரியவர்களைத் தரிசிக்கிறோம்; உபதேசம் கேட்கிறோம். குறை யில்லாவிட்டால் உபதேசம் வேண்டாம். நமக்குள்ள ஸந்தேகங்களையும் கஷ்டங்களையும் போக்கிக் கொள்வதற்காக நாம் பெரியவர்களிடம் போகி றோம்; புஸ்தகங்களை வாசிக்கிறோம்; நல்லவர்களிடம் உபதேசம் பெறுகிறோம்; மஹா க்ஷேத்திரங்களுக்குப் போகிறோம்; தீர்த்த ஸ்நானம் செய்கிறோம். அப்படிச் செய்தால் மனது கொஞ்சம் கொஞ்சமாக சாந்தி அடைகிறது. முழுவதும் சாந்தி அடைந்தவர்கள் வெட்டினாலும் குத்தினாலும் பூஷித்தாலும் தூஷித்தாலும் ஆனந்தமாக இருக்கிறார்கள். புஸ்தகம் வாசித்தல், குரு தரிசனம் செய்தல் முதலியவற்றால் இந்த சாந்தி ஏற்படுகிறது. எல்லா ஜாதிகளிலும் மஹான்கள் கிளம்புகிறார்கள்; மனதில் சாந்தி அடைகிறார்கள். இந்த சாந்திக்குரிய மார்க்கத்தைத்தான் ''மதம்'' என்பது. இதன் பேர் ''தர்மம்'' என்று சொல்லுவார்கள். தர்மமானது சிரேயஸுக்கு ஸாதனம். அதுதான் மதம்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

துணைக்கு ஒருவனையும் அழைத்துக் கொள். இடையே போசளர் படைப்பிரிவு குறுக்கிட லாம். எச்சரிக்கை!'' என்றவர், மற்றொரு குழலை, பின்னால் நின்றவனிடம் அளித்தார். "இந்த ஓலையை காடவர் எல்லையிருக்கும் வீர பாண்டியரிடம் அளித்து விட்டு அந்த சீனத்து வாலிபனை அழைத்து வா'' என்றார்.

"யுவானையா கூறுகிறீர்கள் பிரபு?" வீரன் முகத்தில் ஆர்வம் தெரிந்தது.

யுவான் சோழ வீரர்களை எத்தனை தூரம் வசீகரித்திருக்கிறான் என்று உள்ளுக்குள் வியந்து கொண்ட துறவியார் "ஆம். வீரனே, எத்தனை விரைவில் திரும்ப இயலுமோ அத் தனை விரைவாகத் திரும்பி விடு" என்று உத்தர விட்டார். வீரர்கள் வணங்கிவிட்டு வெளி யேறினர். துறவியாரின் பார்வை மீண்டும் விட்டத்திற்குச் சென்றது. அமைச்சர் குரலைச் செருமிக் கொண்டார், "பிரபு!"

"என்ன அமைச்சரே?"

"ஆதித்ய பாண்டியர் காகதீயர் சிறையில்..."

அசட்டையாக இடதுகரத்தை ஒருமுறை அசைத்த துறவியார், "ஆதித்யனைப் பற்றிக் கவலைப்பட ஏதுமில்லை அமைச்சரே. யாதவ கிருஷ்ணன் வீரர்களை நெல்லூர்புரத்தில் திரட்டிக் கொண்டிருக்கிறான். தவிர, அங்கு விஜயனும், யாங்சின்னும் உடனிருக்கிறார்கள்'' என்றார், விட்டத்தைப் பார்த்தபடியே.

அமைச்சர் நகர்வதாக இல்லை. துறவி யாரின் பார்வை பதிந்து கிடந்த விட்டத்து மூலையைத் தானும் ஒருமுறை பார்த்தவர் மீண்டும் அழைத்தார். "பிரபு!"

"இன்னும் என்ன?"

"நேற்றிரவு இளவரசியார், நந்தவனத்து மதில்மீதிருந்து ஒருவன் உள்ளே இறங்கியதைக் கண்டதாகத் தெரிவித்தார். ஆனால் நம் வீரர்கள் கண்ணில் எவரும் தென்படவில்லை"

துறவியாரின் பார்வை ஒருவழியாகக் கிழி றங்கி அமைச்சரின் முகத்தில் பதிந்தது. ஒரு கணமே சிந்தித்தவர் "சரி, வாரும் என்னுடன்" என்று உத்தரவிட்டு வேகமாக நடந்தார். நந்த வனத்து மாளிகையை அடைந்து மேன் மாடத் துச் சாளரத்தை நெருங்கியவர், முகத்தில் இலே சான அதிர்ச்சி தெரிந்தது. மேகங்களை வெறித் தபடி அமர்ந்திருந்த சோகச் சித்திரத்தைக் கண் டவர், சட்டென்று நின்றார். "ஏன் அமைச்சரே, இவள் ஏனிப்படி இளைத்திருக்கிறா? அதுவும் கவந்தனை நான் இங்கு அழைத்திருக்கும் இந்த சமயத்தில்....'' என்று அமைச்சரிடம் மெள்ள வினவியவர், "சரி, சரி, ஆதித்யன் சிறையிலிருப் பதுபற்றி அதிகம் பேச வேண்டாம்" என்றும் அடிக்குரலில் எச்சரித்தார்.

துறவியாரின் சிந்தனை வேகத்திற்கு ஈடாக உதிர்ந்த அவர் வார்த்தைகள், அமைச்சரின் சித்தத்தில் பதிய இரு கணங்கள் ஆயின. மலங்க மலங்க விழித்த அமைச்சர் மீண்டும் அரை ஓட்டமாகத் துறவியாரைத் தொடர்ந் தார்.

"பூங்கோதை!'' துறவியார் பரிவுடன் அழைத்தபடியே நெருங்கினார்.

சட்டென்று கனவிலிருந்து விழித்ததைப் போலத் திரும்பிய பூங்கோதையின் முகத்தில் ஒரு மலர்ச்சி தெரிந்தது. "துறவியாரே, இத் தனை நாளாக எங்கு சென்றுவிட்டீர்கள்?'' என்றாள் மெலிந்த குரலில்.

"அதிருக்கட்டும். ஏனிப்படி உருமாறி மெலிந்து கிடக்கிறாய்?'' என்ற துறவியார், திரும்பி அமைச்சரை நோக்கி விழிகளை உருட்



ஒரு தொழில் அதிபரைப் பத்திரிகை நிருபர் பேட்டி கண்டார் :

"உங்கள் வெற்றிக்கு என்ன காரணம்?"

"சரியான முடிவுகள்."

"எப்படி சரியான முடிவுகளுக்கு வருகிறீர்கள்?"

"அனுபவங்களை வைத்து!"

"அந்த அனுபவங்கள் எப்படிக் கிடைக்கின்றன?"

"தவறான முடிவுகள் எடுப்பதால்!"



குபீர் சிரிப்புகள் நூலிலிருந்து
தகவல் : ஆர் பார்த்திபன்

டினார். "என்ன அமைச்சரே, பூங்கோதையை சரிவர கவனிப்பதில்லையா?" என்றார் கடுமையான குரலில்.

அமைச்சர் மீண்டும் மலங்க மலங்க விழித்தார்.

மீண்டும் பூங்கோதையின் பக்கம் திரும்பியவர், அவள் முகத்தை ஆராய்ந்தார். பின்னிலவு நேரத்தில் வெளுத்துக் கிடக்கும் ஆம்பலைப் போல நிறமிழந்து கிடந்த அவள் முகத்தையும், உறக்கம் அடியோடு வெறுத்து விட்டதால் சிவந்து, வலைக்குள் சிக்கிய கயல்களாக அலைபாய்ந்த அவள் விழிகளையும், ஏக்கம் வழிந்த அந்தப் பார்வையையும் கவனித்த துறவியார், அவள் ஏக்கத்திற்குக் காரணத்தை அறிந்திருந்ததால் அதை ஓரளவிற்கு மாற்றக்கூடிய முயற்சியிலும் இறங்கினார்.

"எனக்குத் தீராத பழியை ஏற்படுத்தி விடுவது என்று தீர்மானித்து விட்டாயா பூங்கோதை?" என்றார் கோபத்துடன்.

"பழியா? நானா? உங்களுக்கா?" - பூங்கோதையின் குரலில் தடுமாற்றம் தெரிந்தது.

"பிறகென்ன? உன் நிலையைப் பார்த்தால் சோழ நாட்டு அரண்மனையில் உன்னைச் சரிவர கவனிக்கவில்லையென்று இன்னும் ஐந்தாறு தினங்களில் வரப் போகும் உன் தந்தை என்னைப் பழிக்க மாட்டாரா?"

பூங்கோதையின் மலர்விழிகள் நன்றாக மலர்ந்தன. "என்ன? என் தந்தை வரப் போகிறாரா? என்னைப் பற்றிய நினைவும் இருக்கிறதா அவருக்கு?" - அவள் குரலில் மகிழ்ச்சியும் கோபமும் கலந்து ஒலித்தன.

"என்ன பேசுகிறாய் மகளே? உன் நினைவு இல்லாமற்போகுமா உன் தந்தைக்கு? ஆனால் பெற்ற மக்களின் நலனைவிட நாட்டு மக்களின் நலன்தானே தமிழகத்து மன்னர்களின் உயிருக்குயிரான கடமை? உன்னை என்னிடம் ஒப்படைத்தபின்பு உன்னைப் பற்றிக் கவலைப்பட என்ன இருக்கிறது மகளே? போசளரால் சீரழிந்து கிடந்த கொங்கு மக்கள் மீண்டும் சீரான வாழ்வு பெறும்வரை அவனுக்கு உறக்கமேது மகளே? கொங்கு நாட்டு வட எல்லையில் இன்னும் போர் நடந்து கொண்டிருக்கிறதே பூங்கோதை. சற்று எண்ணிப் பார் மகளே" - வாஞ்சையுடன் வந்த துறவியாரின் வார்த்தைகளில் உண்மை நிரம்பிக் கிடப்பதை உணர்ந்தாள் பூங்கோதை.

"இப்பொழுது மட்டும் என் நினைவு எப்படி வந்தது அவருக்கு?" பூங்கோதையின் குரலில் கோபம் இன்னும் மிச்சமிருந்தது.

"நான்தான் ஓலையனுப்பியிருக்கிறேன். உன் தந்தை இன்னும் ஐந்தாறு தினங்களுக்குள் தஞ்சைக்கு வர வேண்டுமென்று."

"எதற்காக?"

"உன் தந்தையில்லாமல் உனக்குத் திருமண ஏற்பாடுகள் நானே செய்து விடுவது அத்தனை முறையல்ல என்பதால்."

பூங்கோதையின் முகத்தில் பலவீனத்தால் படர்ந்து கிடந்த வெளுப்பு மறைந்து மெள்ள செம்மை படர்ந்தது. இமைகள் படபடப்பதும் இதயம் பலமாக ஒலிப்பதும் அவள் செவிகளுக்கே கேட்க ஆரம்பித்தன. "எனக்கு... எனக்குத் திருமணமா?" அவள் வார்த்தைகள் செதுக்கப்பட்டு உதிர்ந்தன.

"ஆம் மகளே, இன்னும் பத்து தினங்களுக்குள் தொண்டை மண்டலம் பாண்டியரால் கைப்பற்றப்படும் என்று எதிர்பார்க்கிறேன். தூதுவனாகச் சென்ற ஆதித்யனைச் சிறை செய்த ஒரு காரணமே போதுமே பாண்டியர் படையெடுப்புக்கு... போர் முடிந்த பிறகு உன் திருமணம்தானே..."

"அவர்... அவர்...."

"ஆதித்யனை மீட்பது ஒன்றும் அத்தனை சிரமமல்ல மகளே. காகதீயர் சிறையிலிருந்து ஆதித்யன் தப்புவதும், தொண்டை மண்டலத்தை வீரபாண்டியன் கைப்பற்றுவதும் பாண்டியர்களுக்கு வெறும் விளையாட்டாகவே முடிந்து விடும் மகளே. நீ அஞ்சத் தேவையே இல்லை"

உணர்ச்சிகளின் கலவை இளவரசியின் உயிருக்கும் உடலுக்கும் வலுவூட்டத் தொடங்கின. தென்றலுக்கு ஆடும் கொடியாக பலவீனமாகச் சாய்ந்து நின்றிருந்தவள், திடமாகக் கால்களைப் பதித்து நின்றாள். முகத்தின் செம்மையும், விழிகளில் படர்ந்த நாணமும், பின்னலை இழுத்து பிரித்துப் பிரித்துப் பின்னிய

விரல்களின் விஷமமும் அந்தத் தந்தச் சிலைக்கு மீண்டும் உயிர் வந்து விட்டதை உணர்த்தின. கனிகளும், காய்ச்சிய பாலும், அரண்மனை மருத்துவரின் மூலிகைகளும் குளிகைகளும், தன் நேரடியான கவனிப்பும் ஏற்படுத்த இயலாத மாற்றத்தை துறவியாரின் வார்த்தைகள் பூங்கோதையிடம் ஏற்படுத்திவிட்டதைக் கண்ட அமைச்சர் விழித்துக் கொண்டிருந்தார்.

துறவியார் மீண்டும் வினவினார், "கோதை, நேற்றிரவு யாரோ ஒருவன் மதிலின் மீதிருந்து இறங்கியதை நீ கண்டதாக அமைச்சர் கூறினாரே, உண்மையாகவா?"

பூங்கோதையின் இமைகள் படபடத்து எங்கோ பறக்கத் தொடங்கிவிட்ட அவள் எண்ணங்கள் மீள்வதைத் தெரிவித்தன. "ஆம். உண்மைதான் துறவியாரே," என்றவளின் விழிகள் சாளரத்தின் வழியே மீண்டும் நந்தவனத்தை நோக்கிப் பாய்ந்தன.

அமைச்சரை நோக்கித் திரும்பினார் துறவியார்: "என்ன அமைச்சரே, தான் உறுதியாகக் கண்டதாக பூங்கோதை கூறுகிறாள். நன்றாகத் தேடினீர்களா?'' என்றார் சற்றுக் கடுமையுடன்.

''நம் வீரர்கள் நந்தவனத்தை நன்றாகத் தேடி விட்டார்கள் பிரபு. ஒரு மூலை முடுக்கையும் விடவில்லை. ஒருவரும் கிடைக்கவில்லை" என்றார் அமைச்சர்.

''நீர் இங்கிருந்து இறங்கி நந்தவனத்தை அடையும் வரை வந்தவன் அங்கேயே நின்றிருப்பான் என்று நினைக்கிறீரா?''

''இல்லையில்லை. நான் அப்படியேதும் நினைக்கவில்லை."

"பிறகு என்ன? மதிற்சுவரை ஒட்டிச் செல்லும் பாதை எங்கு செல்கிறது என்பதை கவனித்தீரா?''

"அது... அது காடவ மன்னன் சிறையிருக்கும் மாளிகை நோக்கிச் செல்கிறது."

"புரிகிறதா உமக்கு. காடவராயன் தஞ்சைக்கு வந்திருப்பதாகக் கூறினீரே, அவன் வேறெங்குமில்லை. அவனோ அவன் வீரர்களோதான் நம் அரண்மனைக்குள் வந்து சென்றிருக்க வேண்டும். மாளிகையின் காவலை பலப்படுத்தி வையும். நம் வீரர்களை விழிப்புடன் இருக்கச் சொல்லும்."

"இல்லை பிரபு. நப் வீரர்கள் கண்களில் படாமல் ஒருவன் எப்படி அரண்மனைக்குள் வந்து செல்ல இயலும் பிரபு? அதிலும் காடவ மன்னனுக்குக் காவல் இரட்டிப்பாக ஆக்கியிருக்கிறேன் பிரபு'' என்று அமைச்சர் தொடர்ந்து "பிரபு, இளவரசியார் ஏதோ பிரமையில் ஒருவனைக் கண்டதாகக் கூறியிருக்கிறார் பிரபு'' என்றார்.

"நான் கண்டது ஒன்றும் பிரமையல்ல" என்று சற்றுக் கோபத்துடன் குறுக்கிட்ட பூங்கோதை, மதிலின் மீதும், சுற்றியிருந்த செடிகளின் மீதும் படர்ந்து கிடந்த கொடிகளைச் சுட்டிக் காட்டினாள். "அதோ அந்தக் கொடிகளுடன் கொடியாகக் கயிறு ஒன்றையும் அதைப் பிடித்து இறங்கிய கறுத்த மனிதனையும் நான் அங்குதான் கண்டேன்."

அரண்மனைப் பந்தங்களும், தீபங்களின் ஒளியும் வீசிய வெளிச்சமோ, நிலவின் கதிர்களோ எளிதில் எட்ட இயலாத நந்தவனத்தின் அந்தப் பகுதி இருளடித்துக் கிடந்தது. அந்தப் பகுதியை மீண்டும் கவனித்த பூங்கோதையின் விழிகள் சட்டென்று விரிந்தன. "துறவியாரே, அமைச்சரே அங்கே பாருங்கள்" என்று பலமாகவே கூவினாள் அவள்.

துறவியாரும் அமைச்சரும் அவள் காட்டிய திசையில் உற்றுக் கவனித்தனர்.

மரக்கிளைகளின் மீதும் மதிலின் மீதும் பற்றிப் படர்ந்து கிடந்த கொடிகளின் மறைவை நன்றாகப் பயன்படுத்தியபடியே முன்தினம் போலவே மதிலின் மீதிருந்து இறங்கிக் கொண்டிருந்தான் ஒருவன்.

(தொடரும்)

''என்ன முகத்தில் காயம்?''

''ஒண்ணுமில்லை. நேற்று ஜாக்கிசான் படம் பார்க்கப் போனேனா, பக்கத்து ஸீட் பையன் படம் பார்த்து உணர்ச்சி வேகத்தில் என்னைப் பதம் பார்த்து விட்டான்!''

— மெய். வெற்றிவேல்



''ஆபரேஷன் செய்ய பீஸ் வாங்கிட்டு நாட்டுக்காக சேவை செய்யறேன்னா எப்படி டாக்டர்?''

''மக்கள் தொகை குறையுதுல்ல!''

— எம். ஏ. ஜலீல்



## 35. மாலை சூடிய வாள்



கிருஷ்ணபட்சம் துவங்கி ஆறு தினங்களுக்கு மேல் ஓடிவிட்டதால் தனது கதிர்களைச் சற்று பலமாகவே தஞ்சை அரண்மனை நந்தவனத்தில் பாய்ச்சிய நிலவு, கிளைகளையும் இலைகளையும் ஊடுருவித் தரையில் திட்டுத் திட்டாக ஒளியோவியங்களை வரைய முயன்று கொண்டிருந்தது. நிலவை வம்பிழுக்க முயன்ற முன்னிரவின் குளிர்க்காற்று, கிளைகளை அசைத்து அந்த ஓவியங்களை அசைத்து, வடிவங்களை மாற்றிக் கொண்டிருந்தது. மதில்களின் மீது பற்றிப் படர்ந்த கொடிகளினூடே தொங்கிய கயிற்றைப் பிடித்தபடி இறங்கியவன், சுற்றிலும் பார்வையால் துழாவினான். தரை தொட்டதும் சற்று நின்றான். தூரத்து மாளிகையில் சாளரத்தினருகே ஒரு பெண் நிற்பதும், மாளிகையின் மேற்புறத்தில் காவலர் உலவுவதும் தெரிந்தன. வெகு அமைதியாகக் கிடந்த அந்த நந்தவனப் பகுதியில் தன்னை எவரும் கவனிக்கவில்லையென்பதை உறுதிப்படுத்தவே, வலதுபுறம் திரும்பிய அந்த மனிதன், செடிகொடிகளினூடே மறைந்தபடி மதிலை ஒட்டி நடக்க ஆரம்பித்தான். சற்றுத் தொலைவு வந்ததும் திடீரென அவன் முன்னே நகர்ந்து, வழியை மறித்த வைரம் பாய்ந்த மரமொன்றின் மீது மோதி, தடுமாறி நின்றான். அந்த மரத்திற்கு வலுவான இரு கரங்கள் முளைத்திருந்தன. அவற்றுள் ஒன்று அவனை நோக்கி நீண்டு அவன் கழுத்தில் பதிந்து அவனை அசையவொட்டாமல் பிடித்து நிறுத்தவும் செய்தது. இரண்டு கணங்களுக்குப் பிறகே தான் மோதியது மரமல்ல என்பதும் தஞ்சைத் துறவியாரின் ஆஜானுபாகுவான தேகம் என்பதும் புரிந்தது அவனுக்கு. திடுக்கிட்டுத் திரும்பியபோது, செடிகளின் மறைவிலிருந்து வீரர்கள் பலர், நிலவொளியில் பளபளத்த ஈட்டிகளுடன் எழுந்து அவனைச் சூழ்ந்து கொள்ள முற்படுவதும் புலப்பட்டது.

அவன் கழுத்தில் பதிந்து அவனை அசையவொட்டாமல் அடித்துவிட்ட துறவியாரின் கரம், அவனை நிலவொளி பாய்ச்சிய இடத்திற்கு இழுத்து வந்தது. அவனது நீண்ட சடைமுடியும், தாடி மீசைகளும் கழுத்தில் கிடந்த மணிகளும் அவன் ஒரு காளாமுகன் என்பதைக் காட்டினாலும் திருதிருவென விழித்த அவன் விழிகள் அவன் மெய்யாக யாரென்பதை உணர்த்திவிட்டதால் துறவியாரின் குரல் கடுமையுடன் ஒலித்தது. "இவன் காடவராயனின் உபதலைவன். இவனை அமைச்சரிடம் ஒப்படைத்து விசாரிக்குமாறு கூறுங்கள்" என்றவர், வீரர்களிடம் அவனை உதறினார். வீரர்கள் அவனை இழுத்துக் கொண்டு அகன்ற பிறகும் அங்கேயே நின்ற துறவியாரின் முகத்தில் சிந்தனை படர்ந்து சற்று நேரம் நிலைத்தது. காஞ்சியிலும் தொண்டை மண்டலத்திலும் மூளவிருந்த போர்களையும், காடவராயனாலும் அவன் வீரர்களாலும் ஏற்படக்கூடிய விவகாரங்



"சரி பிரபு!"

"இரு தினங்களில் மிக முக்கியமான ஒருவர் அங்கு வந்து சேருவார். உடனே கலங்களுடன் வடக்கு நோக்கிப் புறப்படலாம்."

"எங்கு பிரபு?"

"நீர் இதுவரை நெல்லூர் புரத்தைக் கண்டிருக்கிறீரா?"

"இல்லை பிரபு."

"இப்போது சென்று அங்கிருக்கும் கோட்டையையும் காகதீய ருத்ராம்பாளையும் பார்த்து நலம் விசாரித்து விட்டு வாரும்."

"பாக்கியம் பிரபு!" என்ற கோட்டைத் தலைவன், மீண்டும் அழைத்தான் "பிரபு!"

"இன்னும் என்ன?"

"கலத்திற்கு வருபவர் வடமேற்கிலிருந்துதானே வர வேண்டும்?"

கோட்டைத் தலைவனின் யூகத்தை உள்ளுக்குள் வியந்து கொண்ட துறவியார், ஆமென்பதற்கடையாளமாகத் தலையசைத்தார். கோட்டைத் தலைவனின் அடுத்த கேள்வியும் அவர் எதிர்பார்த்தபடியே வந்தது.

"பிரபு, அப்படியானால் வடகிழக்கில் நடந்த போர்...?"

"முடிந்து விட்டது."

"போசள வீரன் சோமேஸ்வரன்...?"

"வீரமரணம் அடைந்து விட்டான்."

கோட்டைத் தலைவனின் உடல் கூரையைத் தொட்டு விடுவது போல் நன்றாக நிமிர்ந்தது. முகத்திலும் விழிகளிலும் ஓர் ஒளிபரவியது. அவன் வலது கரம் நகர்ந்து வாளின் பிடியில் சென்று அமர்ந்தது. துறவியாரை நோக்கித் தலை வணங்கியவன், "சென்று வருகிறேன் பிரபு" என்று திரும்பி நடந்தான். வெகுகாலத்திற்குப் பின்பு அவன் வாளுக்கு வேலை வந்திருப்பதை உணர்ந்ததாலோ என்னவோ, கோட்டைத் தலைவனின் கால்கள் திடமாகப் பதிந்து நடப்பதைக் கவனித்த துறவியாரின் முகத்தில் முறுவ

# இந்திர தனுசு

விஷ்வக்சேனன்

களையும் பற்றி சிந்தித்தவர், திரும்பித் தமது மாளிகையை நோக்கி விடுவிடுவென நடந்தார். மாளிகையை அடைந்ததும் கோட்டைத் தலைவனை அழைத்து வரவும் ஆணையிட்டார். சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கிய கோட்டைத் தலைவனை ஏறெடுத்து நோக்கியவரின் விழிகளில், இன்னும் சிந்தனை மிதந்து கொண்டிருந்தது.

"கோட்டைத் தலைவரே, நமது வீரர்களைத் திரட்டிக் கொண்டு நாகைக்குச் சென்று விடும்."

"உத்தரவு பிரபு."

"நாகையில் நமது கலங்கள் தயாராக நிற்கின்றன. உடன் கொற்கையிலிருந்து வந்த கலங்களும் காத்திருக்கின்றன."

லொன்று படர்ந்தது.

சரியாக முப்பது நாழிகைகள் கழித்து தஞ்சைக் கோட்டையின் வாயிலிலிருந்த முரசுகள் பலமாக முழங்கின. ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் வீரர்களுமாக கோட்டை வாயிலில் திரண்டார்கள். நான்கே வீரர்கள் பின் தொடர, கோட்டைக்குள் நுழைந்தவனை தஞ்சை மக்கள் பார்த்த பார்வைகள் ஏதோ அதிசயப் பிராணியைப் பார்ப்பது போலவே யிருந்தன. வந்தவனின் மஞ்சள் முகமும் பளிச் பளிச்சென்று மின்னிய சிறு விழிகளையும் சற்று மெலிந்தாற்போலிருந்த தேகத்தையும் பார்த்த போது, 'இந்த சீனத்து வாலிபனா சோழ நாட்டிலிருந்த போசளர் படைகளையும் சிங்கணனிருந்த கண்ணனூர்க் கோட்டையையும் நிர்மூலமாக்கியவன்?' என்ற வியப்பும் மகிழ்ச்சியும் மக்களிடையே உண்டாயிற்று. அவர்கள் எழுப்பிய வாழ்த்தொலி மெள்ள மெள்ள உயர்ந்து விண்ணைப் பிளந்தது. அரண்மனையை அவன் அடையுமுன் அவனுக்கும் அவன் அமர்ந்து வந்த புரவிக்கும் மட்டுமின்றி அவன் தோளின் பின்னாலிருந்து தலைநீட்டிய வாளுக்கும் கூட மாலைகளைச் சூட்டியிருந்தார்கள் தஞ்சை நகரத்து மக்கள்!

அரண்மனைக்குள் நுழைந்ததும் அவனை வரவேற்ற அமைச்சர் நேராக துறவியாரது மேன்மாடத்து அறைக்கு அழைத்துச் சென்றார். மாலைகளும், கழுத்துமாகத் தன்னை வணங்கி நிமிர்ந்த யுவானைக் கண்ட துறவியாரின் முகத்தில் முறுவலொன்று படர்ந்தது. குறுகிய காலத்தில் வீரபாண்டியனிடம் பெற்ற பயிற்சியும், கலந்து கொண்ட போர்களும் அவனைப் பட்டை தீட்டியிருப்பதையும், கடல் நாகம் பதித்த பதக்கம் ஊசலாட, திடமாக அடியெடுத்து வைத்த யுவானின் கரங்களில் புதிதாக வாள் வடுக்கள் தென்படுவதையும், பெரும் நிதானம் அவன் முகத்தில் விரவிக் கிடப்பதையும் கவனித்த துறவியாரின் முறுவல் இன்னும் விரிந்தது.

"யுவான், பாண்டியர் சகவாசம் உன்னைப் பெரிதும் மாற்றியிருக்கிறது" என்றார் துறவியார் அதே முறுவலுடன்.

மாலைகளைக் கழற்றியபடியே யுவான் பதிலளித்தான். "துறவியாரே, பூவோடு சேர்ந்திருந்த நாரும் மணம் பெறுவதில் வியப்பென்ன இருக்கிறது?"

துறவியார் பெரிதாக நகைத்தார். "தமிழிலும் நன்றாகத் தேறியிருக்கிறாய்" என்றார் நகைப்பினூடே.

அதற்கும் பதில் வந்தது யுவானிடமிருந்து. "பாண்டியர்கள் தமிழை வளர்ப்பவர்கள். என்னிடமிருந்ததையும் சற்று வளர்த்திருக்கிறார்கள்."

"சரி யுவான். எல்லையில் நிலைமை எப்படியிருக்கிறது?"

"காடவராயனைத் தவிர மற்ற சிற்றரசர்கள் அடங்கி விட்டார்கள். இவன் எங்கிருக்கிறான் என்பதுதான் தெரியவில்லை."

"காடவராயன் தஞ்சையில்தான் இருக்கிறான். அவன் உபதலைவன் ஒருவன் நேற்று இங்கு சிக்கினான்."

யுவானின் விழிகளில் ஆவல் தெறித்தது. "அவனை என்னிடம் விட்டு விடுங்கள். ஒரே நாழிகையில் அனைத்தையும் கக்க வைக்கிறேன்" என்றான் யுவான் ஆவல் குரலில் தெறிக்க.

துறவியார் மீண்டும் நகைத்தார். "அவனை நான் கவனித்துக் கொள்கிறேன் யுவான்.

## அருள்வாக்கு

கர்மா என்றால் என்ன? கர்மம் என்பது காரியம். ஒரு வேஷ்டியை உண்டாக்குவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன! பஞ்செடுத்து, கொட்டை பிரித்து, நூல் நூற்று, தறியில் நெய்து, சாயம் தோய்த்து — என்றிப்படி எத்தனை செய்யவேண்டியிருக்கிறது? அதைப் போல அநேக காரியங்கள் பண்ணி ஒருவனை ஆத்மவித்தாக்க வேண்டும். குணத்தினாலும் சரீரத்தினாலும் சேர்ந்து, ஒன்றையொன்று பரிசுத்தி பண்ணிக் கொள்ளும் முறையில் கர்மா செய்யவேண்டும். இப்படிப் பட்ட கர்மாவுக்கு ஸம்ஸ்காரம் என்று பெயர்.

ஒரு பதார்த்தத்துக்கு உள்ள தோஷத்தைப் போக்குவது எதுவோ, குணத்தைப் புகட்டுவது எதுவோ அதுதான் ஸம்ஸ்காரம். உதாரணமாக கேச ஸம்ஸ்காரம் என்பது க்ஷெளரம் (க்ஷவரம்) செய்து கொள்வது, அழுக்கு, பேன் முதலியவைகளை எடுப்பது, தைலம் தேய்ப்பது முதலியவை. ஜீவாத்மாவுக்கு தோஷங்கள் இருக்கின்றன. தோஷத்தை நிவர்த்தி பண்ணி குணத்தை நிரப்பவேண்டும். சீப்பினால் வாரித் தைலம் தேய்ப்பது போன்றது ஸம்ஸ்காரம். வயலில் சில ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுகின்றன. முதலில் காயப் போட வேண்டும்; பின்பு உழ வேண்டும்; ஜலம் விட்டுப் பரம்படிக்க வேண்டும்; பிறகு விதைக்க வேண்டும்; நாற்றுப் பிடுங்க வேண்டும்; களை பிடுங்க வேண்டும்; ஜலம் பாய்ச்ச வேண்டும்; அதிக ஜலமிருந்தால் மடை திறந்துவிட வேண்டும்; விளைந்த பின் அறுவடை செய்ய வேண்டும்; களத்தில் அடிக்க வேண்டும்; பதர் தூற்ற வேண்டும்; நெல்லைக் கோட்டை கட்டவேண்டும்; பின்பு அந்த நெல் பழக வேண்டும். அப்புறம்தான்



அதை உபயோகிக்க வேண்டும். இவ்வளவு காரியங்கள் இருக்கின்றன. பஞ்சு நூலாகி வேஷ்டியாக வேண்டுமென்றால் பல காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. பஞ்சு யந்திர சாலையில் எவ்வளவு காரியங்கள் செய்யப்படுகின்றன? நூல் சிக்கலாகாமல் நெய்ய எத்தனை ஜாக்கிரதையுடன் எவ்வளவு செய்ய வேண்டியிருக்கிறது? நம்முடைய ஆத்மாவானது இந்திரிய சலனங்களால் சிக்கலாக இருக்கிறது. சிக்கலை எடுத்து எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கச் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதற்குப் பல தடைகள் இருக்கின்றன. ஏதோ சில ஸமயங்களில் மட்டும் இப்போது ஆனந்தம் உண்டாகிறது. வலி இருந்தும் இவ்வளவையும் மீறிக்கொண்டு கொஞ்சம் ஆனந்தம் உண்டாகிறதே. இந்த ஆனந்தம் எப்பொழுதும் இருக்குமாறு பண்ண வேண்டும். அதற்காக ஜீவனைப் பிரம்மலோகத்தில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். ஈசுவர ஸந்நிதானத்தில் சேர்த்துவிட்டால் அப்புறம் துன்பமே இராது. பிரளயத்துக்கு அப்புறம் ஐக்கியம் உண்டாகும். ஆகையால் அங்கே சேர்க்கத் தயார் பண்ண வேண்டும்.

இதற்குத்தான் 40 ஸம்ஸ்காரங்களையும் 8 ஆத்ம குணங்களையும் ரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

உனக்கு வேறு பணி காத்திருக்கிறது.''

“என்ன பணி துறவியாரே?”

“காஞ்சிக்குத் தூதுவனாக நீ செல்ல வேண்டும். சோழர் சார்பாக அல்ல. பாண்டியரின் தூதனாக. விவரம் இந்த ஓலையிலிருக்கிறது” என்ற துறவியார் ஓலைக் குழலொன்றையும் நீட்டினார்.

யுவானின் மஞ்சள் முகத்தில் கேள்விக்குறி எழுந்தது. “துறவியாரே, கண்டகோபாலனைப் பொறுத்தவரை சோழரும் பாண்டியரும் இன்னும் எதிரிகள்தானே?” என்றான் யுவான்.

“ஆம் யுவான். கண்டகோபாலனைக் காஞ்சியை விட்டு வெளியே இழுக்க வேண்டும். வடக்கிலிருந்து மன்மசித்தனும், அவனைத் தொடர்ந்து காகதீய மன்னனும் வேறு, காஞ்சியை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள்.''

“இது போதும் துறவியாரே, கண்டகோபாலனைக் காஞ்சியை விட்டுத் தெற்கில் இழுத்து விடுகிறேன். அவனை உதவிக்கு அழைத்து, சோழ மன்னர் சார்பாக முன்னதாக ஓர் ஓலை மட்டும் மீண்டும் அனுப்பி விடுங்கள்” என்ற யுவான் “நான் நாளைக் காலையே புறப்படுகிறேன் துறவியாரே, செல்லுவதற்கு முன்பாக இளவரசியாரையும் ஒருமுறை காண வேண்டும்” என்றான்.

“தாராளமாக” என்ற துறவியார் யுவானை அழைத்துக் கொண்டு நந்தவனத்து மாளிகையை நோக்கி நடந்தார்.

**ம**றுதினம் யுவான் காஞ்சிமா நகருக்குள் பிரவேசித்தபோது, காஞ்சியின் கோட்டையிலும், வீரர்களிடையேயும் மட்டுமின்றி அரண்மனையிலும் கண்டகோபாலன் அவசரமாகக் கூட்டியிருந்த சபையிலும் கூட குழப்பமான சூழ்நிலையே நிலவிக் கிடந்தது. அத்தாணி மண்டபத்தில் பிரதானிகளுடனும், கோட்டைத் தலைவனுடனும் அவன் உபதலைவர்களுடனும் விவாதித்துக் கொண்டிருந்த கண்டகோபாலன் பாண்டிய தூதன் வந்திருப்பதை அறிவித்த வீரனையும், சபையையும் ஒருமுறை வெறித்தான். சபையிலிருந்தவர்கள் முகங்களில் குழப்பம் கூடியே தெரிந்தது. “வரச் சொல்” என்று கண்டகோபாலன் உத்தரவிட்ட பின்பு சபையில் மௌனமே நிலவியது.

உள்ளே நுழைந்து வணங்கிய யுவானின் அலட்சிய நடையையும் பார்வையையும் கவனித்த கண்டகோபாலனின் முகத்தில் உஷ்ணமும் இலேசான சந்தேகமும் நிலவியது. “வந்த விவரத்தைச் சொல்” என்ற அவன் குரலிலும் கடுமை தெரிந்தது.

திடமாக ஒலித்தது யுவானின் குரல் : “காஞ்சி மன்னா! நான் கூறப் போவது இளைய பாண்டியர் ஜடாவர்ம வீர பாண்டியத் தேவரது வார்த்தைகள்” என்று சற்று நிதானித்த யுவான், “கண்டகோபாலரே, காஞ்சியை அபாயம் சூழ்ந்திருக்கிறது. கொங்கு நாடும் சோழ நாட்டின் தென்பகுதியும் எமது வசமாகிவிட்டன. காஞ்சியையும் தொண்டை மண்டலத்தையும் மீண்டும் தமிழ் மன்னர் வசமாக்க எமது மன்னர் தீர்மானித்திருக்கிறார். காஞ்சியை நீங்களாகவே எம்மிடம் ஒப்படைப்பது போரைத் தவிர்க்கும். இதில் உங்களுக்கும் லாபமிருக்கிறது” என்றான்.

“என்ன லாபம்?”

“உமது படைப்பிரிவை காளத்தியில் பொத்தப்பியின் மன்மசித்தன் முழுவதுமாக அழித்து விட்டான். காஞ்சியைத் தாக்கும் உத்தேசத்துடன் அவன் படைகள் இரண்டு காத தூரத்தில் நெருங்கியும் வந்து விட்டன. அவனைத்

தொடர்ந்து உமது மன்னன் காகதீய கணபதியும் வந்து கொண்டிருக்கிறான். எம்மிடம் காஞ்சியை ஒப்படைப்பது உம்மை இருவரிடமிருந்தும் காத்துக் கொள்ள ஏதுவாக இருக்கும்."

"எமது மன்னர் வருவது என்னைத் தாக்குவதற்காக என்பது உனக்கெப்படித் தெரியும்?"

"உமக்கும் மனமசித்தனுக்குமுள்ள பகையை எண்ணிப் பாரும். உமது மன்னன் தூண்டுதலில்லாமல் அவன் படையெடுக்கத் துணிய மாட்டான். உம்மைக் காஞ்சியிலிருந்து அகற்ற உமது மன்னர் தீர்மானித்து விட்டதாக நெல்லூர்புரத்திலிருக்கும் எமது ஒற்றர்கள் தெரிவித்திருக்கிறார்கள்."

"இது வெறும் கட்டுக்கதை. அப்படியேயிருந்தாலும் எமக்கு சோழ மன்னர் ஆதரவிருக்கிறது. சோழ தூதரின் ஓலையும் என்னிடமிருக்கிறது. சோழர் ஆதரவிருப்பவரைத்தான் எமது மன்னர் காஞ்சியில் மன்னனாக அமர்த்தவும் இயலும்."

யுவான் பலமாக நகைத்தான்.

"ஏன் நகைக்கிறாய்?" கண்டகோபாலன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"உமக்கு ஓலை கொண்டு வந்த சோழ தூதர் தற்போது நெல்லூர்புரத்து சிறையிலிருக்கிறார்."

"இது வெறும் வதந்தி. என் செவிகளுக்கும் இது எட்டியது. ஆனால் சோழ தூதரைச் சிறை செய்யும் அதிகாரம் எமது மன்னருக்குக் கிடையாது; செய்யவும் மாட்டார்" என்றான் கண்டகோபாலன்.

அவையிலிருந்த பிரதானிகளும், படைத்தலைவர்களும் குழப்பத்துடன் பேசிய சொற்கள் தொடர்ந்து எழுந்து, அமைதியற்ற சூழ்நிலை சற்று நேரம் நிலவியது.

யுவானின் முகத்தில் முறுவல் விரிந்திருந்தது. அடுத்து அவன் சொற்கள் ஒலிக்கத் தொடங்கியதும் சபையில் சட்டென்று அமைதி நிலவத் தொடங்கியது.

"மன்னா, சோழ தூதனாக இங்கு வந்தவர் பாண்டியரைச் சேர்ந்தவராக இருந்தால் சிறை செய்யலாமல்லவா?" என்றான் யுவான் முறுவலுடன்.

கண்டகோபாலன் முகத்தில் மட்டுமின்றி அவையிலிருந்தவர்கள் முகங்களிலும் திகைப்பு பரவியது.

"என்ன உளறுகிறாய்?" கண்டகோபாலன் இரைந்தான்.

பதிலுக்குப் பெரும் வெடியை எடுத்து வீசினான் யுவான். "உளறவில்லை மன்னா. உண்மையைத்தான் கூறுகிறேன். இங்கு சோழ தூதனாக வந்தவர் உண்மையில் எமது இளவரசர் ஆதித்ய பாண்டியர்" என்றான் யுவான்.

அந்த அத்தாணி மண்டபம் அப்படியே ஸ்தம்பித்தது.

(தொடரும்)

# சுஜாதா பக்கம்



"இந்தியன்" படத்தின் நூறாவது நாள் விழாவில் பேசினேன். இந்தப் படம் தமிழிலும் தெலுங்கிலும் வெற்றியடைந்து, இப்போது, 'இந்துஸ்தானி' வடிவில் அகில இந்திய ரீதியிலும் பெரிய வெற்றியின் அடையாளங்களைக் காட்டிக் கொண்டிருக்கிறது. வசனம் எழுதியவன் என்கிற ரீதியில் மிக அருகாமையிலிருந்து இதன் பிறப்பு வளர்ப்பைப் பார்த்திருக்கிறேன்.

பொதுவாகவே பத்திரிகைகள் இந்தப் படத்தை பரிவுடன் விமர்சனம் செய்யவில்லை. தராசு பதில்களில் கூட இதன் வெற்றிக்கு காரணம் அதன் ஹாலிவுட் மேக்-அப்மேன் மைக்கேல் வெஸ்ட்மோர்தான் என்று குறிப்பிட்டிருந்தது. டைம்ஸ் பத்திரிகையில் இக்பால் மஸீத், படத்தை லேசாக சிலாகித்துவிட்டு, கடுமையாக விமர்சித்திருந்தார். இதே போக்கில்தான் (கொஞ்சம் பாராட்டு நிறைய திட்டு) குமுதம், ஆனந்தவிகடன் போன்ற பத்திரிகைகளும் எழுதியிருந்தார்கள்.

டைரக்டர் சங்கர் அவருக்கே உரிய சிறுவனின் ஆர்வத்துடன் என்னைக் கேட்டார். 'ஏன் சார் சாதாரண படங்களையெல்லாம் மன்னிச்சு நிறைய மார்க் கொடுக்கறாங்க; இதை மட்டும் கடுமையா தாக்கறாங்க?' என.

அதற்குக் காரணம், படத்துடன் சம்பந்தப்பட்டவர்களின் பிரபலம் என்பதை அறிந்து கொள்ள இன்னும் அவருக்கு வயசாக வேண்டும்.

இத்தனையையும் மீறி இந்தப் படம் அவர்கள் பாஷையில் ஒரு 'மெகா ஹிட்' ஆனதற்கான காரணத்தை, உணர்ச்சிவசப்படாமல், ஆக்கியவர்களின் பிரபலங்களையெல்லாம் மறந்து யோசித்தால், இந்திய சினிமாவின் அனாட்டமி கொஞ்சம் புரியும். இந்தியன் படத்தில் காட்டப்பட்ட லஞ்சம் எல்லாருக்கும் பழக்கப்பட்ட லஞ்சம். நம்மில் அனைவரும் ஏதாவது ஒருநாள் ஆர்.டி.ஓ ஆபீசுக்கோ சப்-ட்ரெஷரிக்கோ போயிருக்கிறோம். போக்குவரத்து கான்ஸ்டபிள்களால் நிறுத்தப்பட்டிருக்கிறோம். மந்திரிகளின் லஞ்சம் செத்த பாம்பான பின், அதிகாரிகளின் லஞ்சம் அதன் பரிச்சய முகத்தினால், மிகையாக சித்திரித்தாலும் உடனே ரசிக்கப்பட்டது. மேலும் எல்லோருக்கும் லஞ்சாதிகாரிகளை குத்திக் கொல்லும் நிறைவேறாத இச்சை இருக்கிறது. அதை தாத்தா நிறைவேற்றுகிறார்.

கதையை நான் சங்கருடன் விவாதித்தபோது இது 'ஓப்பன் சஸ்பென்ஸ்' வகையைச் சேர்ந்தது; தாத்தாதான் கொல்கிறார் என்பது எல்லாருக்கும் தெரியும்; எப்படி எப்போது மாட்டப்போகிறார், மகனை என்ன செய்யப் போகிறார்' என்கிற சஸ்பென்ஸ் சரடை விடாமல் தொடரும் போது, இடைக்கால மனிஷா, ஊர்மிளா, கவுண்டமணி, செந்தில் எல்லாம் தாங்கும் என்றதை சங்கர் உடனே பிடித்துக் கொண்டுவிட்டார்.

கமல்ஹாசன் ஒவ்வொரு படத்திலும் ஏதாவது வித்தியாசமாகச் செய்வதை எல்லாரும் எதிர்பார்க்கிறார்கள். அந்த இச்சையை இந்தப படம் அந்த மேக்-அப் மூலம் நிறைவேற்றியது. ஆனால் மேக்-அப் மட்டும் போதாது; அதைப் போட்டுக் கொண்டு நடிக்கவும் வேண்டும் என்பதை 'தராசு' உணராதவர் அல்ல. மற்றொரு முக்கிய காரணம், மிகவும் ரிஸ்க் எடுத்துக் கொண்டு குழுவின் மேல் நம்பிக்கை கொண்டு எண்ணற்ற இடையூறுகளுக்கிடையே தாராளமாகச் செலவழித்த தயாரிப்பாளர் ரத்தினத்தின் பொறுமை. DTS, ரஹ்மானின் அக்கடா துக்கடாவெல்லாம் அலங்காரங்கள். கதையில் ஒரு பார்வையாளர் பங்கீடு இருந்ததால்தான் வெற்றி பெற்றது. இந்த உத்தி, நாடகம், நாவல் அனைத்துக்கும் முக்கியமான தேவை. எதிர்பார்த்தது நடக்கும் போது கதையில் தாமும் பங்கு பெற்ற திருப்தி அவர்களுக்கு ஏற்படுகிறது. உதாரணமாக தாத்தா அந்த பெல்ட்டை ரிபேருக்குக் கொடுக்கும் போது அதை வைத்து கண்டு பிடிக்கப் போகிறார்கள் என்பதை எதிர்பார்ப்பார்கள். இந்தக் காட்சி பின்னர் வரும் போது மனத்தில் ஒரு முழுமை ஏற்படுகிறது.

சங்கரின் படங்கள் வெற்றி பெறப் பெற அவர் தன்னம்பிக்கை அதிகமானாலும் பயமும் அதிகமாகிறது. அது தேவையில்லை. சங்கர் இப்போது சினிமா பரிபாஷையில் ஒரு 'எம்ஜி' ஆகிவிட்டார்.

கமல் அடுத்த படத்தில் மாமியாக வருகிறார். அந்த மேக்கப்பை பார்த்தபோது, 'இனி என்னதான் செய்யப் போகிறார்?' என்று யோசிக்க வைக்கிறது. ஐயர் கட்டும், கண்ணாடியும் மைலாப்பூரும் லேசான செக்ஷுவாலிட்டியும் கவனித்ததில், "கமல் ஒவ்வொரு படத்திலேயும் ஏதாவது வினோதமாகச் செய்கிற சிண்ட்ரோமிலிருந்து நீங்கள் தப்பிக்க வேண்டும்" என்றேன்.

பத்திரிகை விமர்சனங்கள் ஒருபடத்தின் வெற்றியையோ வீழ்ச்சியையோ பாதிப்பதில்லை. காரணம் பத்திரிகை படிப்பவர்கள் மிஞ்சி மிஞ்சி பத்து லட்சம் பேர். தமிழ்நாட்டின் சனத்தொகை ஐந்து கோடி.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# விஷ்வக்சேனன்

## 38. விதியா? வெற்றித் தேவதையா?

திரோதாயுகத்திலும், துவாபர யுகத்திலும் வீரர்கள் நாகாஸ்திரம், மோகனாஸ்திரம் என்று பல மந்திர அஸ்திரங்களைப் பிரயோகித்ததாகவும், அவை எதிரிகளை அசையவொட்டாமல் அடித்து, நினைவிழக்க வைத்ததாகவும் புராணங்கள் கூறுகின்றன. கண்டகோபாலனது அவையில் யுவான் கூறிய வார்த்தைகள் அத்தகைய ஒரு அஸ்திரத்தின் விளைவை ஏற்படுத்தின.

சோழ தூதனாக வந்தவன் உண்மையில் பாண்டிய இளவல் என்று கேட்டதும், கண்டகோபாலன் சித்தத்தில் ஆதித்யனின் விளையாட்டுப் பிள்ளை போன்ற முகமும், அவனைத் தன் மகள் ஸ்வர்ணமுகியுடன் பழக அனுமதித்ததும் நினைவில் எழுந்தன. அவையிலிருந்தவர்களும் திகைப்பில் உறைந்து போய்க் கிடந்தார்கள்.

கோட்டைக்கு வெளியே எழுந்த பெரும் கூச்சல், அவர்களின் பிரமையை நீக்கி, அவர்களை திகைப்பிலிருந்து விடுபடச் செய்தது. தொடர்ந்து அத்தாணி மண்டபத்தினுள் உபதலைவன் ஒருவன் அவசரமாக நுழைந்தான். மன்னனை வணங்கவும் மறந்தவன், "பிரபு, வடக்கு வாயிலில் மன்மசித்தன் படைகள் அணிவகுத்து நிற்கின்றன. இன்னும் ஒரு நாழிகையில் தாக்குதலைத் தொடங்குவதாகவும் அறிவித்திருக்கிறான்'' என்றான் பதற்றம் நிறைந்த குரலில்.

அவன் வார்த்தைகளை முடிக்குமுன்னர் கண்டகோபாலன் எழுந்தே விட்டான். அவன் முகத்தில் உக்கிரம் பொங்கியது. யுவானை எரித்து விடுபவன் போல பார்த்தவன், "பாண்டிய தூதனே, பாண்டியர் படையையும் இந்த மன்மசித்தனையும் கூட ஒடுக்கும் வல்லமை எமக்கு உண்டு. பொறுத்துப் பார்'' என்றான். காவலரை நோக்கி, ''இவனைக் காவலில் வையுங்கள்'' என்றும் உத்தரவிட்டு வெளியேறினான்.

அணிவகுத்திருந்த புரவி வீரர்களினூடே கண்டகோபாலன் வேகமாக நடந்து, வடக்கு வாயிலை நெருங்க நெருங்க, கோட்டைக் கதவுகளைப் பெரும் மரங்கள் கொண்டு தடார் தடாரென்று மோதும் ஒலி அவன் செவிகளைத் தாக்கியது. கோட்டையின் உட்புறத்து வளைவுகளையும் நிறுத்தப் பட்டிருந்த சுழற்பொறிகளையும் தயாராக நின்ற வீரர்களையும் உயரே மாடங்களில் தலை நீட்டிக் கொண்டிருந்த அம்புகளையும், யந்திரங்களையும் கவனித்து, சற்று அலட்சியமாகவே கோட்டையின் உச்சியை நோக்கிச் சென்ற படிகளில் ஏறினான்.

கோட்டையின் உச்சிக்கு வந்தவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. அவன் எதிர்பார்த்ததைப் போல இருமடங்கு வீரர்கள் மன்மசித்தனின் பின்னால் அணிவகுத்திருந்தனர். பின் பகுதியில் நின்றவர்கள் காகதீய மன்னனின் வீரர்கள் என்பதைப் புரிந்து கொள்ள அதிக நேரமாகவில்லை கண்டகோபாலனுக்கு. தன்னை அகற்ற காகதீய மன்னன் தீர்மானித்து விட்டதாக யுவான் கூறிய வார்த்தைகள் வந்து மீண்டும் அவன் செவிகளில் மோதின. தொடர்ந்து காகதிய மன்னனே வரக்கூடும் என்ற எண்ணம் எழுந்து, அவனைச் சற்று நேரம் திக்பிரமையில் ஆழ்த்தவும் செய்தது.

அவன் பிரமை நீங்குமுன்பாக கோட்டைக் கதவும் பெயர்ந்து பெரும் ஒலியுடன் உட்புறமாக விழுந்து நொறுங்கியது. தொடர்ந்து மன்மசித்தன் உயர்த்திய வாளுடனும், முகத்தில் உக்கிரத்துடனும் வீரர்கள் பின் தொடர கோட்டைக்குள் வேகமாகத் தனது புரவியைப் பாய விட்டான்.

தமிழகத்திலேயே மிகப் பழைமையானதும், பல்லவராலும், சோழ மன்னராலும் பராமரிக்கப்பட்டதுமான அந்தக் காஞ்சிமா நகரம், எதிரிகளின் தாக்குதல்களை எத்தனை தூரம் எதிர்கொள்ள முடியும் என்பதை, அன்று கண்ணெதிரில் கண்டான் கண்டகோபாலன். அதிர்ச்சியினாலும், மன்மசித்தனின் ஆரம்ப வேகத்தினாலும் சற்றுத் தடுமாறினாலும், பிறகு சுதாரித்துக் கொண்ட கோட்டைத் தலைவன், அணிவகுப்பை இறுக்கி வழியை மறிக்கச் செய்தான். மேலிருந்து அம்புகளை மழையாகப் பொழிய விட்டும், பக்கவாட்டு யந்திரங்களைச்



சரமாரியாக இயக்க உத்தரவிட்டும் வீரர்களை ஸ்திரமாக நின்று போராட வைத்தும், உள்ளே நுழைய முயன்றவர்களைத் தடுத்தான். முதலில் மன்மசித்தனுடன் நுழைந்து விட்ட வீரர்களைத் தவிர்த்து, அவன் படைப் பிரிவு கோட்டை வாயிலைத் தாண்ட இயலாமல் தவித்தது.

பெரும் வேகத்துடனும் ஆத்திரத்துடனும் வாளை வீசியபடியே முதன் முறையாக காஞ்சிக்குள் பிரவேசித்துவிட்ட மன்மசித்தன், காஞ்சிக் கோட்டைக்குள் சோழ மன்னர்கள் செய்து வைத்திருந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் எத்தனை வலுவானவை என்பதைப் புரிந்து கொண்டான். வளைவுகளில் எதிர் கொண்ட சுழற் பொறிகளாலும், பக்கவாட்டில் தாக்கிய வீரர்களாலும் தனது வீரர்களில் பாதிக்கு மேல் அழிந்து விட்டதை உணர்ந்தான். இருப்பினும் பின்னால் பெரும் எண்ணிக்கையிலிருந்த தனது படையை எண்ணியவன், இயற்கையான முரட்டு சுபாவத்தால் திரும்பியும் பாராமல் அரண்மனையை நோக்கி, வீரர்கள் பின் தொடரப் பாய்ந்து கொண்டிருந்தான். அரண்மனையின் வீரர்களுடன் தனது வீரர்களைக் கலக்க விட்டவன், உருவிய வாளுடனும், குருதி படிந்த உடையுடனும் உள்ளே நுழைந்து, கண்டகோபாலனைத் தேட ஆரம்பித்தான். ஆத்திரத்துடன் தேடியவன் விழிகளில் அந்த

அ
ரு
ள்
வா
க்
கு

**'நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும்' என்று சரணாகதி செய்வது தான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனசின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும். அப்போது நிறைந்த ஆனந்த மாக இருக்கலாம். 'எனக்கு என்று ஒன்று மில்லை' என்று யாரிடம் சரணாகதி செய்து விட்டாலும் - ஒரு பதியிடம் பத்தினி சர ணாகதி செய்தாலும் (அவன் தூர்த்தனான பதியாகக் கூட இருக்கலாம்); ஒரு குரு விடம் சிஷ்யன் சரணாகதி செய்தாலும் (அந்த குரு போலியாக இருந்தால் கூடச் சரி) - அப்புறம் நிச்சிந்தைதான்; அதன் முடிவான பலனாக மோக்ஷம்தான். ஆனால் ஏதோ புராணங் களில் இப்படிப் பதியிடம், ஆசாரியனிடம் சரணா கதி செய்தே தெய்வமாகி விட்டவர்களைப் பற்றிச் சொல்லியிருந்தாலும், பிரத்தியட்சத்தில் இப்படி நம் மாதிரி குற்றம் குறை இருக்கக் கூடிய ஒரு மநுஷ்ய னிடம் சரணாகதி பண்ணுவது என்றால் முடியத்தான் இல்லை. இப்படிப்பட்ட லாயக்குள்ளவன் என்று தோன்றுகிற குரு கிடைத்து, அவரிடம் சரணாகதி செய்து விட்டால் அப்புறம் ஸ்வாமி கூட வேண்டாம் தான். ஆனால் வாஸ்தவத்தில், நிஜமாகவே திரிபுவ னங்களுக்கும் யஜமானனாக, எல்லாம் தன் சொத் தாகக் கொண்டுள்ள ஸ்வாமியிடம்தான், நம்மால் கொஞ்சத்தில் கொஞ்சமாவது, 'எல்லாம் உன் உடை**

சிற்ப மண்டபம் தென்பட்டது. உள்ளே காவ லர்கள் உதவியுடன் இளவரசி ஸ்வர்ணமுகி சிற்பங்களையும் சித்திரங்களையும் பெரும் பேழைகளில் அடுக்கி, பாதுகாக்க முற்பட்டுக் கொண்டிருந்தாள். தன் வீரர்களை அழைத்த படியே உள்ளே நுழைந்தவன், "உயிரின் மீது ஆசையிருப்பவர் எவரும் அசைய வேண்டாம்" என்று இரைந்தான்.

ஸ்வர்ணமுகியும் காவலர்களும் ஸ்தம்பித்து நிற்க, மீண்டும் அவன் குரல் பலமாக இரைந்து ஒலித்தது, "எங்கே அந்தச் சித்திரம்?" என்று... காவலர்களும் மன்மசித்தன் வீரர்களும் ஒரு வரையொருவர் வெறித்தபடி போரிடத் தயாராக நிற்க, ஸ்வர்ணமுகியின் விழிகளில் திகில் பரவிக் கிடக்க, மன்மசித்தனின் விழிகள் மண்டபத்திலிருந்த சிற்பங்களைத் தாண்டி சித்திரங்களிருந்த பகுதியில் அலை பாய்ந்தன. இறுதியாக அவை ஓரிடத்தில் நிலைக்கவும் செய்தன. பொத்தப்பி மன்னர்கள் வணங்கி மண்டியிட, கண்டகோபாலன் அவர்களின் முடி மீது கால் வைத்து கம்பீரமாக நிற்கும் அந்தச் சித்திரம் அவன் விழிகளில் பட்டு சிவப் பேற வைத்தது.

கனல் கக்கும் விழிகளை ஸ்வர்ணமுகியின் மீது திருப்பியவன் குரலில் ஆத்திரம் வெடித் தது. "இவற்றைத் தீட்டியது நீதானா?" என்று இரைந்தான் அவன். எந்த பதிலும் கூறாமல் அவள் திகைப்பதைக் கண்டவன், அடுத்து தன் வீரர்களை நோக்கி, "அவள் கரங்களைத் துண் டித்து விடுங்கள்" என்று உத்தரவிட்டான். ஒரு கணமே தயங்கிய மன்மசித்தனின் வீரர்கள் உருவிய வாட்களுடன் மூர்க்கமாக ஸ்வர்ண முகியை நெருங்கினர்.

பெண்களையும், அந்தணர்களையும், ஆயுதமிழந்து புறமுதுகிட்டு ஓடுபவர்களையும், சரணடைந்தவர்களையும் தாக்குவது பெரும் பாவம் என்றும், அவை வீரனாயிருப்பவனுக்கு அபவாதத்தை ஏற்படுத்துபவை என்றும் நீதி வாசகம் என்னும் வடமொழி நூல் கூறுகிறது. களவழியைப் பற்றிக் கூறும் தமிழ் நூல்களும் இன்னும் இதை விவரித்துக் கூறுகின்றன. நீதியையோ, தர்மத்தையோ எண்ணிப் பார்க்க ஆத்திரம் இடம் தராததால், பொத்தப்பி மன்னன் அந்த சிற்ப மண்டபத்தில் இட்ட கட் டளை, வீரர்களை சற்று திகைக்க வைத்தது. எனினும் மண்டபச் சுவர்களில் இரண்டு மூன்றுமுறை எதிரொலித்து மீண்டும் மீண்டும் அவன் குரல் ஒலிக்கவே, ஸ்வர்ணமுகியின் கரங் களைத் துண்டித்து விட வேகமாக நெருங்கி னார்கள் பொத்தப்பி வீரர்கள்! அவன் உத்தர வைக் கேட்ட ஸ்வர்ணமுகியும் காவலரும், 'இப் படியும் கூட ஒரு மனிதன் இருக்க முடியுமா' என்று திகைத்தாலும், நெருங்க முற்பட்ட வீரர் களைக் கண்டு வாட்களை உருவிக் கொண்டு முன்னால் பாய்ந்தார்கள்.

ஆனால் வாட்கள் மோதுவதற்கு முன் பாகவே மன்மசித்தனும், ஸ்வர்ணமுகியும், வீரர் களும் எதிர்பாராத விதமாக, மண்டபத்தின் மூலையிலிருந்த பெரும் கதவுகள் தடாரென்ற ஒலியுடன் மோதித் திறந்தன. அந்தக் கதவு களின் வழியே அந்தப்புரத்தை அடைந்து விடலாமென்ற எண்ணத்தில் நகரமுயன்ற ஸ்வர்ணமுகி, அந்த வாயிலில் திடீரென சீனத்து வாலிபன் ஒருவன் தோன்றியதையும், உடன் பாண்டியர் சின்னங்களை அணிந்த வீரர் நால்வர் நுழைந்ததையும் கண்டு திகைத் தாள்.

இரு பக்கத்து வீரர்களும் தயங்கி நிற்க மன்மசித்தன் குரல் பலமாக எழுந்தது. "யார் நீ?" என்று.

அந்த சீனத்து வாலிபன் பதிலேதும் அளிக் கவோ, வெறும் வார்த்தையாடிக் கொண்டு நிற் கவோ அடியோடு விரும்பவில்லை என்பது தெரிந்தது. அந்த அறையிலிருந்தவர்கள் எதிர் பார்க்காத ஒரு வேகத்தில் தோளின் பின்னா லிருந்து தலை நீட்டிய அந்த சீனத்து வாளை உருவினான் அவன். ஒரே பாய்ச்சலில் பொத்

மையே, எனக்கென்று ஒன்றுமில்லை' என்று சரணாகதி செய்து, அதனால் நிம்மதி பெற முடிகிறது.



பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கியமான காரணம்: அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும், என்றோ ஒரு நாள், ஒன்று நாம் அவரை விட்டுப் பிரிகிறோம்; இல்லாவிட்டால் அவர் நம்மை விட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அத்தனையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மை விட்டுப் பிரியாத ஒரே சாசுவத வஸ்து ஈசுவரன் தான். அவனிடம் அன்பு வைத்து விட்டால்? இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்து கொண்டே இருக்கும். இந்த அன்பு முற்றுகிற போது யாவுமே அவனாகத் தெரியும். ஒன்றிடம் அன்பு-அது காரணமாகவே இன்னொன்றிடம் துவேஷம் என்றில்லாமல், எல்லாம் அவனானதால் எல்லாவற்றிடமும் ஏற்றத் தாழ்வில்லாமல் அன்பாக இருப்போம். அன்பற்ற வாழ்வு வாழ்ந்து மநுஷ்ய ஜன்மாவை விருதாவாக்கிக் கொள்ளாமல் இருக்க பக்தியே உதவுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தப்பி வீரர்களின் முன்னால் வந்து நின்றவனின் வாள் அவன் கரத்துடன் இணைந்து உட்புறமாக மடிந்து நின்றது. அடுத்த கணம் கரக்ர வென அசுர வேகத்தில் சுழன்று, பொத்தப்பியின் வீரர்களைத் தாக்கத் தொடங்கியது அந்த வாள்!

முன்னணியில் வந்த பொத்தப்பியின் வீரர்களை மூவராகவும் நால்வராகவும் எதிர்கொண்ட யுவானின் வாள், எதிர்ப்புறமாகச் சுழன்று, நேரிடையாகப் பாய்ந்து, வரிசையாக வீரர்களின் மணிக் கட்டிலும், முழங்கையிலும், தோளிலும் தாக்கி மீண்டுவிட்டதால் மூன்று வீரர்களும் கரங்களைப் பிடித்துக் கொண்டு அலறினர்.

யுவானின் சைகையைத் தொடர்ந்து முன்னால் வந்துவிட்ட பாண்டிய வீரர்கள், தாங்கள் பெற்றிருக்கும் பயிற்சி எத்தனை அசாதாரணமானது என்பதை வாட்களை உருவிக் கொண்டு நிரூபிக்கத் தொடங்கினார்கள். ஸ்வர்ணமுகியின் காவலர்களுக்கும் அந்த வீரர்களின் வேகம் துணிவை அளித்துவிட்டதால் அவர்களும் பொத்தப்பி வீரர்களைத் தாக்கத் தொடங்கினார்கள்.

வாளின் சுழற்சியை சற்று மட்டுப்படுத்திக் கொண்ட யுவான், ஸ்வர்ணமுகியை நெருங்கி சீனத்துப் பாணியில் தலையைத் தாழ்த்தினான். "இளவரசி, அஞ்ச வேண்டாம். நீங்கள் அந்தப்புரத்திற்குச் செல்லுங்கள்" என்றும் கூறினான்.

"நீங்கள்... நீங்கள் யாரென்பது... அந்தப் பதக்கம்..." ஸ்வர்ணமுகியின் திகைப்பு குரலிலும், யுவானின் கழுத்தில் ஊசலாடிய பதக்கத்தை வெறித்த விழிகளிலும் தெரிந்தது.

"நான் பாண்டியர் தூதன். பெயர் யுவான். காஞ்சியையும் உங்கள் தந்தையையும் காக்கத் தூது வந்தவன். ஆனால் உங்கள் தந்தை ஏற்க மறுத்து என்னைச் சிறை செய்யவும் உத்தர விட்டார். தப்பி வந்தவன் உங்களுக்கு உதவ முடிந்தது. தாங்கள் உள்ளே சென்று விடுங்கள்" என்றான் யுவான். அவன் சிறுவிழிகள் தன்னை நெருங்க முயன்று கொண்டிருந்த மன்மசித்தன் மீது பதிந்து கிடந்தன.

ஸ்வர்ணமுகியின் சித்தத்தில் யுவான் என்ற சொல்லைத் தவிர வேறு எதுவும் பதியவில்லை. சோழ தூதர் கூறிய சீனத்துச் சிற்பி இவன்தானென்பதைப் புரிந்து கொண்டவள், சில தினங்களில் யுவான் அங்கு வருவான் என்று தூதர் கூறியதையும் நினைத்துக் கொண்டாள். "சிற்பம் செதுக்குவதாகக் கூறப்பட்ட கரங்கள் இத்தனை லாகவமாக வாளைச் சுழற்ற இயலுமா?" என்ற வியப்பு அவள் சித்தத்தை ஆக்கிரமித்திருந்தது.

மன்மசித்தன் மிக நெருக்கத்தில் வந்து விட்டிருந்தான். "இளவரசி, சீக்கிரம் உள்ளே சென்று விடுங்கள்" என்ற யுவானின் வாள் உயர்ந்து மன்மசித்தனைத் தடுத்தது. வாட்கள் உரசியதும் யுவானின் கவனம் இளவரசியை விடுத்து, முழுவதுமாக மன்மசித்தனின் மீது திரும்பியது.

மன்மசித்தனின் உயர்ந்த ஆகிருதியையும், முழுபலத்துடன் வீசிய அவன் கனத்த வாளின் தாக்குதலையும் இரண்டு மூன்று கணங்களுக்கு கவனித்த யுவான், தீப்பொறி பறக்க வீர பாண்டியன் கற்பித்திருந்த முறையில் தனது வாள் வீச்சை மாற்றிக் கொண்டான்.

யுவானின் மெலிந்த உடலையும் கரங்களையும் கண்டு, அதிக நேரம் அவனால் தாக்குப் பிடிக்க இயலாது என்று குறைத்து மதிப்பிட்டிருந்தான். ஆனால் தனது வாளின் அதிகப்படியான கனத்தையே சாதகமாக்கிக் கொண்ட அந்த சீனத்து வாள், பலதிசைகளிலும் திருப்பி அவனை அலைய விடுவதையும், முகத்தின் அருகிலும் கண்கஞ்க்கு அருகிலும் அதன் வளைந்த முனை அடிக்கடி தோன்றி மறைவதையும் கண்டு வியப்பின் வசப்பட்டான். அடுத்த சில கணங்களில் அந்த வியப்பு திகிலாக உருவெடுத்தது. அனாயாசமாகச் சுழன்ற சீனத்து வாளின் வேகம் திடீரென்று இருமடங்காக அதிகரித்தது. அவனைச் சுற்றி பலவாட்கள் சுழல்வது போன்ற பிரமையை ஏற்படுத்தி,



மனைவி : பையனுக்கு கணக்கு சொல்லிக் கொடுக்காதீங்க...ன்னு சொன்னா கேட்டீங்களா?''
கணவன் : ஏன்?
மனைவி : உங்களைஅடிக்க பையன் டீச்சரைக் கூட்டிட்டு வந்திட்டான்!
— தேனி எஸ். மாரியப்பன்

அவனைப் பின்னடையவும் வைத்தது.

ஸ்வர்ணமுகியின் காவலர்களிருந்த பகுதியை நோக்கி மன்மசித்தனை நெருக்கியது மட்டுமின்றி, திடீரென அவன் வாளின் பிடிக்குள்ளும் நுழைந்து எதிர்ப்புறமாகக் கரத்தை முறுக்கியது சீனத்து வாள். மன்மசித்தனின் கரத்திலிருந்த வாளைப் பிடுங்கி மேலே பறக்க விட்டது!

யுவானின் வலதுகால் உயர்ந்து, மன்மசித்தனைத் தாக்கி, காவலர்களின் நடுவே தடுமாறியபடியே சென்று விழவும் வைத்தது!

மன்மசித்தன் கரங்களைப் பின்புறமாக அசையவொட்டாமல் பிடித்து நிறுத்திக் கொண்டார்கள் காவலர்கள். அவன் மடக்கப் பட்டுவிட்டதைக் கண்டு திகைத்தனர் அவனது வீரர்கள். இதையெல்லாம் ஒருமுறை வெறித்த யுவானின் வாள் மற்ற பாண்டிய வீரர்களுக்கு சமிக்ஞை செய்துவிட்டு, மேலே உயர்ந்து, சட்டென்று இறங்கி, தனது உறைக்குள் சென்று பதுங்கியது.

மன்மசித்தனையும் அவன் வீரர்களையும் சூழ்ந்து கொண்ட காவலர்கள், அனைவரையும் வெளியே இழுத்துச் செல்ல ஆரம்பித்த போது, அரண்மனை நோக்கி கண்டகோபாலன் வீரர்களுடன் வந்தான். அடுத்த இரு நாழிகை நேரத்தில் மன்மசித்தனும் அவன் வீரர்களும் காஞ்சியின் சிறைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர்.

வெளியில் நடப்பவற்றை மண்டபத்திலிருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்த யுவான் திரும்பிய போது, இளவரசி இன்னும் அங்கேயே நிற்பதையும் அவள் விழிகள் தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தான். மற்ற காவலரும் இளவரசியின் உத்தரவுக்காகக் காத்திருப்பதைக் கண்டவன், வேகமாக அவளை நெருங்கி, “இளவரசி, தங்களைக் காக்க சந்தர்ப்பம் அளித்ததற்கு நன்றி. நான் வருகிறேன்'' என்று வணங்கி விட்டுத் திரும்பி, பக்கவாட்டு வாசல் வழியே பாண்டிய வீரர்கள் பின் தொடர வெளியேறினான்.

அவனைத் தடுக்கச் சக்தியற்ற காவலரும், ஸ்வர்ணமுகியும் வெறித்த பார்வைகளுடன் நிற்க, தெற்கு வாயிலை நோக்கி யுவான் விரைவது தெரிந்தது. ஸ்வர்ணமுகியின் உள்ளத்தில், தான் பிரவேசித்து விட்டதை உணராத யுவான், தெற்கு வாயில் வீரர்களை அனாயாசமாக விலக்கியபடி கோட்டையை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தான்.

காஞ்சியின் சிற்ப மண்டபத்தில் புதிதாக வடிக்கப்பட்ட தந்தச் சிற்பமாகவே நின்று கொண்டிருந்தாள் ஸ்வர்ணமுகி. காவலர்கள் வெளியேறிய பின்பும், பணிப் பெண்கள் வந்து அழைத்த பின்பும் கூட அவள் அந்தப்புரம் செல்வதற்கு மனமின்றி, அந்தக் கடல் நாகச் சிற்பத்தையே வெறித்துக் கொண்டு நின்றாள். என்னவென்று விளங்காத உணர்ச்சிகள் அவள் மனத்தை ஆட்டுவித்துக் கொண்டிருந்தன.

மன்மசித்தன் சிறைப்பட்ட செய்தி பரவி விட்டதால், தாக்குதலின் வேகத்தை முழுவதுமாக இழந்துவிட்ட அவன் வீரர்களை, அரண்மனைக் காவலர்களைக் கொண்டே மடக்கினான் கண்டகோபாலன். கோட்டைக்கு வெளியேயிருந்த பொத்தப்பி வீரர்களை அடக்க அவன் அதிக சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை. பின்பகுதியிலிருந்த காகதீய வீரர்களும் இனித் தொடர்ந்து தாக்குவதில் எந்தப் பயனுமில்லையென்பதை உணர்ந்து கொண்டதால், மெள்ள, பின் வாங்கி தங்கள் மன்னனிருந்த காளத்தியை நோக்கி விரைய ஆரம்பித்தனர்.

வெற்றி அளித்துவிட்ட போதை தலைக்கேறிவிட, நிதானத்தை அறவே இழந்துவிட்டான் கண்டகோபாலன். அரண்மனைக் காவலர் தலைவன், இரண்டாவது முறையாக மன்மசித்தன் சிறைப்படுத்தப்பட்ட சம்பவத்தையும், யுவான் தப்பியதையும் பற்றிக் கூறிய பிறகே சற்று நிதானித்தான். பாண்டியர் தூதனாக வந்த அந்த சீனத்து வாலிபன் எச்சரித்தபடி, மன்மசித்தனைத் தொடர்ந்து காகதீய மன்னன் படைகளுடன் வரக்கூடும் என்ற எண்ணம் எழுந்ததும், அவன் போதை சற்றுக் குறையவும் செய்தது. எதற்கும் மன்மசித்தனை விசாரித்து விடுவது என்று தீர்மானித்தவன், சிறைச்சாலையை நோக்கி விடுவிடுவென்று நடந்தான். சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் நின்ற மன்மசித்தனைக் காணக் காண மீண்டும் அவன் நிதானம் மறையத் தொடங்கியது!

அடுத்து மன்மசித்தன் கூறிய விவரங்கள் அவன் சித்தத்தைப் பெரும் குழப்பத்திலாழ்த்தவும் செய்தன. தன்னைப் பார்த்து நகைப்பது வெற்றித் தேவதையா அல்லது விதியா என்பது புரியாமல் விழிக்க ஆரம்பித்தான் கண்டகோபாலன்.

(தொடரும்)

'இதுக்கு நாம என்ன பண்ண முடியும்? மனோதத்துவ டாக்டரானா, மனசுக்குள் புகுந்து பார்க்கலாம்'னு கேப்பீங்க... திக்குவாய் வந்தப்புறம்தான்னு இல்லை. பொதுவாவே பத்து வயசு வரைக்கும் குழந்தைகளுக்கு வீட்டுக் கஷ்டம் பத்தியோ, பணக்கஷ்டம் பத்தியோ மத்த பிரச்னைகள் பத்தியோ தெரியறது நல்லதில்லை.

சந்தோஷமான, தென்றல் மாதிரியான விஷயங்கள் மட்டும்தான் அவர்களுக்குத் தெரியணும். அடிக்கடி கூப்பிட்டு, மடியில உட்கார வெச்சிக் கொஞ்சணும். கிண்டல், கேலியெல்லாம் கூடவே கூடாது.

சில குழந்தைகளுக்குத் திக்குவாய் தீவிரமா இருக்கலாம். அப்ப மட்டும் நல்ல சைக்யாட்ரிஸ்டைப் பார்த்தாக வேண்டியது அவசியம். அவங்க 'சைக்கோ தெரபி' அப்படீங்கற சிகிச்சை தருவாங்க. அதாவது, அவங்க மனசுல இருக்கற கவலை, பயம், இனம்புரியாத நடுக்கம் இதையெல்லாம் பேசிப் பேசியே சரிபண்றது.

அதே மாதிரி பேச்சுப் பயிற்சி தருவாங்க. நூறு வார்த்தை, அம்பது வார்த்தைகளை மொத்தமா குடுத்து படிக்கச் சொல்வாங்க. எந்த வார்த்தை அதிகம் திக்கறது, ஒரு திக்கலுக்கும் அடுத்ததுக்கும் எத்தனை செகண்ட் இடைவெளின்னு எல்லாம் கவனிச்சி, அதுக்கேத்தாப்பல டிரீட்மெண்ட். இந்த சைக்கோ தெரபி, பேச்சுப் பயிற்சியெல்லாம் வீட்டுலயே கூட செய்யலாம்தான்! நான் முன்னாடியே சொன்ன மாதிரி பொறுமையும் அக்கறையும் நிறைய வேணும்!

முக்கியமான விஷயம். இந்த மாதிரி திக்குவாய்க்கெல்லாம் கூட சூரணம் இருக்குன்னு சொல்லிட்டு, இப்ப சிலர் கிளம்பியிருக்காங்க. தப்பித் தவறிப் போய் மாட்டிக்காதீங்க. குழந்தைகளுக்கு அந்த கண்ட மருந்துகளினாலே சைடு-எஃபெக்ட்ஸ் வர வாய்ப்பு அதிகம்.

டாக்டர்களே கூட திக்குவாய்க்கு மாத்திரை, மருந்தெல்லாம் தர்றதில்லை. பொதுவா, நரம்புகளுக்கு வலு கொடுக்கிற டானிக், மாத்திரைகள்தான் தர்றாங்க. அதனால கவனமா இருக்கணும்.

- சுமி

"ஞானபீட விருதுகளை விடச் சிறந்த விருதுகளும், பரிசுகளும் நாள்தோறும் எனக்குக் கிடைத்துக் கொண்டுதான் இருக்கின்றன - நாள்தோறும் வாசகர்களிடமிருந்து வரும் கடிதங்கள் வாயிலாக."

- "இலக்கிய உலகில் நீங்கள் செய்திருக்கும் சிறப்பான பணிகளுக்குரிய பரிசுகளும் விருதுகளும் ஏன் உங்களுக்குக் கிடைக்கவில்லை?" என்று கல்கண்டு இதழுக்காக என்னைப் பேட்டி கண்டபோது கேட்ட கேள்விக்குத்தான் நான் மேலே குறிப்பிட்ட பதிலை அளித்தேன்.

● ஆயிரக்கணக்கான கடிதங்களின் அன்பு மழையில் ஆசையோடு நனைபவன் நான்.

அதனால் - இதயத்தில் படியும் ஈரத்தைத் துவட்டிக் கொள்வதே இல்லை.

இந்த உலகத்தின் பொருமலும், எரிச்சலும், புறக்கணிப்பும் என்னைச் சுடும்போதெல்லாம் உலர்ந்து போகாமல் கவிஞனாக நான் உலவிக் கொண்டிருப்பதற்குக் காரணமே இத்தகைய கடிதங்கள்தாம்!

● ரசிகர்களின் கடிதங்கள்தான் எத்தனை ரகம்! எனக்கு வந்த கடிதங்களில் இது அபூர்வ ராகம்.

● சிறப்பாசிரியராய் இருந்து நான் தயாரித்த குமுதம் இதழ் வெளிவந்தவுடன் இந்தக் கடிதம் குமுதத்தின் கதவுகளைத் தட்டி, பின்

# அதோ இந்தப் பெண்...

என் வீட்டுக் கதவுகளையும் தட்டியது. தட்டியது என்று சொல்வதைவிட, என்னைத் திட்டியது என்று சொல்லலாம்.

நீண்ட காலத்துக்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சியை இதழ் தயாரிப்பில் எனக்கு உதவியாய் இருந்த நண்பர் ஜே. சந்தானம் அவர்களிடம் நினைவு கூர்ந்திருந்தேன்.

என் தமிழ்க் கவிக்கு,

நாம் நலம், நீர் நலமென்பதை நிரூபித்த நின் மலர் கண்டேன். நன்றி!

27.9.90 தேதியிட்ட தங்கள் தயாரிப்பின் குமுதம் இதழ் பக்கம் 77-ல், தாங்கள் இன்று வரை சந்திக்காத எங்கே அந்தப் பெண்?... அதே... அந்தப் பெண்ணின் சிறு மடல், 17.12.88 அன்றைய மலேசிய விமானத்தில் நடந்த சிறு நிகழ்ச்சியைத் தங்கள் எழுத்துக்களோடு இன்று ஞாபகப்படுத்திக் கொண்டதை எண்ணி, வியப்பிலாழ்ந்தும், தங்கள் சிந்தனைக்கு ஒரு சிறு விளக்கத்தையும் இத்துடன் சமர்ப்பிக்கிறேன்.

அன்றைய விமானத்தில் (ஜன்னல்) ஓரமாக அமர்ந்திருந்த தங்களை ஏதேச்சையாகப் பார்க்க நேர்ந்ததும் அதுவும் முதன் முதலாக...! அப்போது ஏற்பட்ட பூரிப்பில் எனது டைரியில் தங்கள் நலம் கேட்டு நான் எழுதி என் அருகே அமர்ந்திருந்த சிறுமியிடம் கொடுத்துத் தங்களிடம் காண்பிக்கச் சொன்னேன். என் 'நலவெண்பாவை'ப் படித்த தாங்கள் அதன் மறுபக்கத்தில் தங்களின் முத்தான கையெழுத்தில்,

வானத்தில் சந்தித்தோம்.
பூமியில் பேசுவோம்!

வாழ்த்துக்களுடன்.

...............

என் விசாரிப்புக்கும், வாழ்த்துக்கிட்டிய சந்தோஷத்தை நினைக்காத நாளில்லை! நீர் மறந்த என் விசாரிப்புகள் இதோ....

என்... தமிழ்க்கவி.
நலம்தானே!
நீ நலமெனில்...

அதனால் வந்த வம்பு - இந்த அம்பு!

கடிதத்தில் இழையோடும் குறும்பை மட்டுமல்ல - கோபத்தையும் ரசித்தேன்.

வழக்கம் போல் இக்கடிதத்திற்கும் நான் பதில் எழுதவில்லை என்று நினைக்கிறேன். இப்போது அதற்காக வருந்துகிறேன்.

எத்தனை சிரமமாக இருப்பினும் இனி மேலாவது வாசகர்களின் கடிதத்திற்கு பதில் எழுதிவிட வேண்டும் என்ற எண்ணத்தை இப்போது எனக்குள் ஏற்படுத்தியிருக்கிறது கல்கி.

"எங்கே அந்தப் பெண்?" என்ற தலைப்பில் குமுதத்தில் வெளியான செய்தி இதுதான் :



கோலாலம்பூருக்கு விமானத்தில் போய்க் கொண்டிருந்தேன். பின்வரிசையிலிருந்து ஓர் ஒன்பது வயதுச் சிறுமி என் அருகில் வந்தாள். அவள் கையில் ஆட்டோகிராஃப் நோட்டு.

"அக்கா உங்கள் ரசிகை. உங்கள் கையெழுத்து வேண்டுமாம்."

திரும்பிப் பார்க்கிறேன். தொலைவில் பளீரென்று ஒரு பெண்ணின் புன்னகை.

நான் எழுதிக் கொடுக்கிறேன். 'ஆகாயத்தில் அறிமுகமானோம். பூமியில் சந்திப்போம்.' அதன் பிறகு அந்தப் பெண்ணை இன்று வரை சந்திக்கவே இல்லை.

தொகுப்பு : **அருண் சரண்யா**

என் தமிழும் நலம்!
உமது விரல் வித்துக்களை
அவ்வப்போது -
நான் அறுவடை செய்தபோது
இப்படித்தான்
'ஆகாயத்தில் பறப்பதாக' நானும்
அதன் கவிச்சுகத்தில் 'கனவு' கண்ட
துண்டு!

இங்கு நிஜத்தில்... 'தமிழோடு
நான்...'!
இனி உலகத்தில் என் பிறவி பயணடையும்.
எம் குருதேவா...!
இஃதென்ன அதிசயம்.
எம் விமானியும் + நானும் அருகருகே!
எம் 'முதல் அநுபவம்' இது....
என் மூச்சுக்காற்றில் -
உன் மூச்சும்... கலக்கிறதே!

தமிழே!
உன் (கவி) வித்தினை புதிதாய்க் கொஞ்சம்
எனக்குத் தூவிடு'
'தட்சணையை'... தாயகம் திரும்பியதும்
தருகிறேன்....!

அன்புடன்...
'அதே..... அந்தப் பெண்!'
(உன் பாஷையில்)

என் விசாரிப்பை மறந்த உனக்கு என்ன தண்டனை தரலாம்? என் 'சிரிப்பை' மறக்காத உனக்கு என் சிந்தையை மறந்த செயல் குற்றமல்லவா? சரி... விட்டுவிடுகிறேன்...! தீர்ப்பை எம் சகோதரி மல்லிகா மேத்தாவிடம் எதிர்பார்க்கின்றேன்!

அன்புடன்,
'அதே அந்தப் பெண்....!'

## வி.ஜ.பி.க்கு வந்த கடிதங்கள் :

## கவிஞர் மு. மேத்தா



ன்று மதியம் என் வண்ணக் கனவுகள் கறுப்பாகும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அப்போது ஓசை இல்லாமல் என் மனசு கிழிந்தது சாய்ராமிற்குத் தெரியாது...

மதியம் –

"தனியா பேசணும்னு கூப்பிட்டீங்களே...?" நான்.

எங்கிருந்தோ வந்து எனக்குள் படபடப்பு உட்கார்ந்து கொண்டது. எதை எதையோ எதிர்பார்த்து, எனக்குள் மிதந்து கொண்டிருக்கும் என்னை ஆழமாய்ப் பார்த்தார் சாய்ராம். தனியாகப் பேச ஆசைப்பட்டவர் தயங்குகிறார். ஏன்...? அதுதானா? நான் எதிர்பார்த்ததுதானா...? இருக்கலாம். எனக்குள் படபடப்பு மேலும் கூடியது.

சாய்ராம் எதுவும் பேசாமல் வானத்தைப் பார்த்தார். அசையும் மரக்கிளையைப் பார்த்தார். கிளையிலிருந்து பறக்கும் புறாவைப் பார்த்தார். அந்தப் புறாவுடன் பறக்கும் என் மனசையும் பார்த்தாரா...? தெரியவில்லை.

'சீக்கிரம் சொல்லுங்க...' என்று அவர் மனசை உலுக்க மனமில்லை. காத்திருந்தேன்.

"கோவிச்சுக்க மாட்டீங்களே...?" தயக்கம் கலந்த பீடிகை.

"உங்ககிட்ட கோவிச்சுக்க யாருக்குத்தான் மனசு வரும்...?"

என் மனத்தில் விரிந்து கிடக்கும் ஆர்வம் என் பேச்சில் வெளிப்பட ஆரம்பித்தது, லேசாய்...

"மிஸ். மீரா... உங்களுக்கே தெரியும். நான் இங்க ட்ரான்ஸ்ஃபர்ல வரும்போது எப்படி இருந்தேன்னு... இங்க வந்த பிறகுதான் நிம்மதி என்னைத் தேடி வந்துச்சு. எனக்கு நிம்மதி கொடுத்த இந்த ஊர்லேயே பொண்ணு பார்த்து கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறேன். இன்னும் ரெண்டு மாசத்துல எனக்கு வேற ஊருக்கு ட்ரான்ஸ்ஃபர் வந்துடும். அதுக்குள்ள கல்யாணத்தை வெச்சுக்கிட்டா நல்லா இருக்கும்... ஸோ..."

எனக்குள் மின்னலா... அல்லது சந்தோஷமும் மனசும் உரசிக் கொண்டதால் ஏற்பட்ட வெளிச்சமா...

"நம்ம பாங்க்லேயும் சரி... வெளியிலயும் சரி, உங்களை விட அதிக பழக்கம் எனக்கு வேற யாரும் கிடையாது. அதனால..."

மனிதர் பேசாமல் சஸ்பென்ஸ் கதை எழுத ஆரம்பிக்கலாம். 'டோன்ட் பி லேட்'. மனசு அவரிடம்

# தள்ளித் தள்ளி நீ இருந்தால்

எஸ். எஸ். பூங்கதி



கஞ்சியது. அதைப் புரிந்து கொண்டார் பாலிருக்கிறது. சட்டென்று சொன்னார் –

"எனக்கு நல்ல பொண்ணா பார்க்க வண்டியது உங்க வேலை..."

இடி என்னை நொறுக்கியது.

"வாட் டிட் யு ஸே?" அதிர்ச்சியில் ர்த்தை நடுங்கியது.

"எனக்காக நீங்க நல்ல பொண்ணா பார்க் ணும். பழகற விதம், பேசற பேச்சு, படிப்பு, ன்பு... எல்லாம் உங்களுக்கு ஈக்குவலா ருந்தாப் போதும். குறிப்பிட்டுச் சொல் ணும்னா உங்களை மாதிரி ஒரு பொண்ணு.."

என்னை மாதிரிதான். ஆனால் நான் வேண்டாம்.

என் கனவுச் செடியில் ஆஸிட் மழை. தாங்குமா...? இப்பச் சொல்லுங்க. சாய்ராம் வெடிவைத்தது என் வண்ணக் கனவுகளுக்கு மட்டுமா... எனக்கும் சேர்த்துத்தானே...?

'என்ன நீ சாய்ராம் மேல தப்பு சொல்லிக்கிட்டு... எப்போதாவது உன்னை லவ் பண்றேன்'னு சொல்லியிருக் காரா?...' என் மனசு கால் மேல் கால் போட்டு உட் கார்ந்து கொண்டு என்னை அதட்டியது.

அதுக்கென்ன தெரியும்... கூட சேர்ந்து கும்மாளம் போட்டுவிட்டு, இப்போது கிழிபட்டதும் ஒதுங்கிக் கொண்டுவிட்டது. அத்துடன் அதிகாரம் வேறு.

'லவ் பண்றேன்'னு சொன்னாத்தான் காதலா...? தொட்டுத் தழுவிப் பேசினாத்தான் காதலா..?

பார்வை போதாதா... உள்ளத்தை கூட்டி சுத்தப் படுத்துகிற மாதிரி சின்ன புன்னகை போதாதா...?

பிஸியான பாங்க் வேலைகளுக்கு நடுவே எதிர்பாராமல் எப்போதாவது இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டால், இரண்டு பேருமே பட்டும் படாமலும் சிரித்து வைப்போமே... இது காதல்தானே... 'நீங்க லீவு போட்டுட்டா அன்னைக்கு பூரா எனக்கு வேலையே ஓட மாட்டேங்குதுங்க...' என்று அவர் அசடு வழிந்தபோதெல்லாம் உச்சி குளிர்ந்ததே.. இது காதல்தானே...? ஒருநாள் என் கர்ச்சீப்பை எடுத்து அவர் முகம் துடைக்க.. அன்று முழுவதும் எனக்குள்ளே நான் மிதந்து கொண்டிருந்தேனே... அது காதலால்தானே...?

நான் அப்படித்தான் நினைத்திருந்தேன். சாய்ராம் நினைக்கவில்லையா...

இரவு முழுவதும் சாய்ராம் நினைவு தூக்கத்தை ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தது.

"என்ன மீரா... கண்ணெல்லாம்

சிவந்திருக்கு?''

குளித்து முடித்துத் தலை துவட்டும் போது அம்மா கேட்டாள். ஏன் முரண்பாடு... மனசு கறுத்திருக்கு. கண் மட்டும் சிவந்திருக்கா...?

'ராத்திரி முழுக்க துளி கூட தூக்கம் இல்ல...' அம்மாவிடம் சொல்ல முடியுமா...? கேள்வி கேட்டுத் துளைத்து விடுவாள். 'ஏன்... உடம்புக்கு என்னாச்சு...? லீவு போட்டுட்டு வர்றியா, டாக்டர் கிட்டப் போகலாம்...?'

''அம்மா...''

அம்மா தோசையின் மேல் சட்னி வைத்தபடி "ம்ம்?" என்றாள்.

''எங்க பாங்க் கேஷியருக்கு நல்ல பொண்ணா வேணுமாம். வரதட்சணை எல்லாம் எதுவும் அதிகமா எதிர்பார்க்கலே. பொண்ணு என்னை மாதிரியே அழகா... கொஞ்சம் படிச்சிருந்தா போதுமாம். உடனே கல்யாணத்தை வெச்சுக்கணும்னு இருக்கார். யாரைப் பார்க்கலாம்? நம்ம மாமா பொண்ணு சீதாவை முடிச்சுடலாமா?''

வெவஸ்தை கெட்ட கண்கள். நேரங்காலம் கிடையாதா? அம்மாவிடம் என்னைக் காட்டிக் கொடுத்துவிடும் போலிருக்கே... அம்மாவிற்கு தெரியாமல் பொங்கும் கண்ணீரை எப்படித் துடைப்பது? இம்சை.

''ஏண்டி... நல்ல இடம்னு சொல்றே. எவளுக்கோ ஏன் பார்க்கணும்?... உனக்கு முடிச்சுட்டா என்ன?..''

அதைக் காதால் கேட்பதில் எவ்வளவு இனிமை... கிழிந்து போன மனசுக்குத் தையல் போடுவது மாதிரி இருந்தது. பிறகுதான் உறைத்தது. வெறும் ஊசியில் நூல் இல்லாமல் போடும் தையல் இது.

அரை தோசையை அரைமணி நேரமாய் நான் சாப்பிடுவதைப் பார்த்து... "என்னாச்சு உனக்கு...?'' அம்மா கேட்டாள், லேசான கவலையுடன்.

"பசிக்கலேம்மா..."

எழுந்தேன்.

"ஏன்...?"

"பசியை மனசு திண்ணுடிச்சு."

அம்மாவுக்குப் புரிந்திருக்குமா?

"எனக்கு பொண்ணு பார்க்க ஆரம்பிச்சுட்டீங்களா...?" லஞ்ச் அவரில் சாய்ராம் கேட்டார்.

"தயக்கமா இருக்கு..." நான்.

"ஏன்?..."

''என் செலக்ஷன்ல தப்பு நடந்திடுமோன்னு...''

"டோன்ட் ஒர்ரி, மீரா. நீங்க ஒரு கழுதையைக் கட்டிக்கச் சொன்னாலும் அது கூட அட்ஜஸ்ட் பண்ணி குடும்பம் நடத்துவேன்..."

அடப்பாவி. அந்தக் கழுதை அளவிற்கு கூடவா நான் இல்லை...?

"சாப்பிடப் போகலையா...?" கேட்டேன்.

"பயமா...? உங்க சாப்பாட்ல பங்கு கேட்பேன்னு..."

''அப்படி நான் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை.''

"ஏன்...?"

''சாப்பாடே எடுத்துட்டு வரலே...''

''வாங்க ஹோட்டலுக்கு போகலாம்...''

''சாப்பிட பிடிச்சா எடுத்துட்டு வந்திருக்க மாட்டேனா...?''

"புரியயலையே..."

''நீங்க ஆம்பளை... பொம்பள மனசு உங்களுக்கு புரியாது!"

"நீங்க ஏன் வெளிமாநிலங்கள்ல கூட சொத்து வாங்கிப் போட்டீங்க, தலைவரே?"
"எவ்வளவு நாள்தான் 'ரீஜனல் பாலிடிக்ஸ் நடத்தறது. தேசிய நீரோட்டத்துல கலந்துடலாம்னுதான்!"
- சீர்காழி வி. ரேவதி



எவ்வளவு நேரம்தான் புரண்டு புரண்டு படுப்பது...

யாரையும் பகைத்துக் கொள்ளா நான் தூக்கத்தை மட்டும் எப்படி பகைத்துக் கொண்டேன்...? தெரியவில்லை. என் உதடுகள் தான் புன்னகையைத் தொலைத்து விட்டன என்றால் கண்களும் போட்டி போட்டுக் கொண்டு தூக்கத்தைத் தொலைத்து விட்டு வந்து நிற்கிறதே... என்ன செய்ய? எனக்குள்ளேயே இன்னொரு மீராவை வள விட்டது என் தவறுதானே...

'மீரா... மாமாகிட்டே பேசினேன். அவன் பெண் பார்க்க அழைச்சுட்டு வர சொன்னார். நாளைக்கு லீவுதானே... நல் நாளும் கூட.. பேசி முடிச்சிடலாம்.'

அம்மா சொன்னதை இப்போது நினை தாலும் நெஞ்சை யாரோ அழுத்துவது மாதி

இருந்தது. நாளை நல்ல நாளாம். அம்மாவிற்கு என்ன தெரியும்... என்னைப் பொருத்தவரை நாளை துக்கமான நாள் என்று.

இந்தக் கல்யாணம் முடியும் வரை என் மனத்தில் இருப்பதை முகம் எதிரொலிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்... எனக்குள் பயம் துளிர்விட ஆரம்பித்தது. சீதாவுக்கோ, மற்றவர்களுக்கோ என் மேல் சந்தேகம் வரக்கூடாது... இந்தக் கல்யாணத்தை நான் சந்தோஷமாக நடத்தி வைப்பது மாதிரி நடிக்க வேண்டும். எனக்கு நடிப்பு வருமா...?

எங்கேயோ கிளம்ப, கையில் பூட்டு சாவியுடன் தயாராய் இருந்த சாய்ராம் "வாங்க... வாங்க..." என்று என்னை உற்சாக மாய் வரவேற்றார்.

அவரைப் பார்க்க எனக்குப் பொறாமை யாக இருந்தது. எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறார்... நான் எப்போது இதுபோல் சந்தோஷமாக இருப்பேன்...? அப்படி ஒரு பாக்கியம் இனி கிடைக்குமா?... எனக்குள் வளர்ந்த கேள்விகள் அவர் வார்த்தைகளால் வெட்டப்பட்டன.

"ஏன் நின்னுட்டீங்க?... உள்ள வாங்க..."

'நின்னுட்டேனா?... இல்லையே, நல்லாப் பாருங்க. செத்துட்டேன்!' தொண்டைக் குழி வரை வந்த வார்த்தைக்குத் தடைபோட்டது எது?

''முதல் தடவையா இங்க வரீங்கன்னு நினைக்கறேன். ஐயாம் வெரி ஹாப்பி...'' சாய்ராம் முகத்தில் பிரகாசிக்கும் புன்னகை.

'தயவுசெஞ்சு நான் இங்கிருந்து போகிற வரைக்கும் சிரிக்க வேணாம்'ன்னு சொல்ல லாமா?.... இல்லை என்றால் எனக்குள் இருக் கும் இன்னொரு மீரா விழித்துக் கொள் வாளே...

"உங்களுக்கு என் மாமா பெண்ணைப் பேசி முடிக்கலாம்னு இருக்கோம்... உங்களுக் குப் பிடிச்சிருந்தா! பெண் பார்க்கப் போ...க... லா...மா...?''

நெருப்பில்லையே அந்த வர்த்தைகள்... பிறகு ஏன் என் தொண்டைக் குழியிலிருந்து நுனி நாக்கு வரை சுட வேண்டும்...?

அவர் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார். அவருடன் பேசிக் கொண்டிருக்கும் பாக்கியம் இன்னும் எத்தனை நாட்களுக்குக் கிடைக்கப் போகிறது...

மௌனத்தை உடைத்தேன்.

"என் சொந்தமே வேணாம்னு நினைக்கறீங் களா...? வேற பொண்ணு வேணா பார்க்கட் டுமா...?"

## பூனா பிள்ளையார்!

எந்த சந்தில் திரும்பி னாலும், ஒரு பிள்ளையார் ஜகஜ்ஜோதியாகக் காட்சி அளிப்பார். கோட் சூட்போட்ட பிள்ளையார், ஹாக்கி மட்டையுடன் பிள்ளையார், அட்லாண்டா காட்சியுடன் ஒரு பிள்ளையார், சித்தி, புத்தியுடன் ஊஞ்சலாடும் பிள்ளையார் என்று ராட்சத அளவில்! எல்லாவற்றிற்கும் சிகரமாக ''தகுடு சேட்'' பிள்ளையார் காட்சி அளிப்பார். லட்சக்கணக்கான சீரியல்பல்பில் அலங்காரம் கண்கொள்ளாக் காட்சி.

போன வருஷம், மைசூர் அரண்மனை செட்டிங், இந்த வருஷம் 'உஜ்ஜயின் மஹாகாளேஸ்வர்' கோயில் மாடல். விநாயக சதுர்த்தியையொட்டி விழாக்கோலம் பூண்டு, பூனா நகர் ''பூலோகத்தின் ஸ்வர்க்கம்'' போல் காட்சி அளிக்கிறது.

— இந்திரா ராகவன்

சாய்ராம் என்னை உற்றுப் பார்த்தார். கண்கள் தகதகத்தன. முகத்தில் என்றும் காணாத மாற்றம்.

"என்னாச்சு... பதிலே காணோம்?!..." நான்.

"ஏன் இப்படி சொல்றீங்க...?"

'திக்'கென்றது.

"புரியலையே...?"

''நீங்க பொம்பள. ஆம்பள மனசு உங்களுக்குப் புரியாது!''

எனக்குள் சிலீரென்று எதுவோ பாய்ந்து குளிரவைத்தது. அவரை ஆசையுடன் நிமிர்ந்து பார்த்தேன்.

அவர் கண்களில் காதல் காத்திருந்தது, எனக்காக!



## 37. பறிபோன பொக்கிஷம்!

கண்டகோபாலனின் சித்தத்தில் வெற்றி யளித்த போதை, நிதானத்தை அறவே துடைத்து விட்டிருந்தது.

சிற்ப மண்டபத்தில் நிகழ்ந்தவற்றைக் காவலர்கள் தெரிவித்தபோது, அதிகமாக அதைப் பற்றிக் கவலை கொள்ளாமல் சிறைக்குள்ளிருந்த மன்மசித்தனைக் காண விரைந்து கொண்டிருந்தான் அவன். எகத்தாள சிரிப்புடன் மன்மசித்தனை நெருங்கியவன், "காஞ்சியைக் கைப்பற்றுவது அத்தனை எளிதல்ல மன்மசித்தா" என்று கூறவும் செய்தான்.

மன்மசித்தனின் பதில் அலட்சியமாக வந்தது, "எந்த நிலையும் யாருக்கும் ஸ்திரமல்ல கண்டகோபாலா, உன் வெற்றியின் நிலை தாற்காலிகமானதுதான். விரைவில் மாறிவிடும்" – மன்மசித்தன் பதிலில் பெரும் தத்துவம் ஒலித்தது.

தோல்வியடைந்த பின்பு தத்துவம் பேசும் மன்மசித்தனை இன்னும் சற்று சீண்டிப் பார்க்க விரும்பிய கண்டகோபாலன், "மன்மசித்தா, ஒன்று மட்டும் எனக்கு விளங்கவில்லை" என்றான் போலிப் பரிவு ஒலித்த குரலில்.

"என்ன விளங்கவில்லை?" – எரிச்சலுடன் வந்தது மன்மசித்தனின் எதிர்க்கேள்வி.

"பகை உனக்கும் எனக்கும்தானே? நீ வீரன்தானே? எதற்காக சிற்பமண்டபம் சென்றாய்? என் மகளின் கரங்களைத் துண்டிக்க ஏன் கட்டளையிட்டாய்? அதற்கு எப்படி உனக்கு மனம் வந்தது?"

மன்மசித்தன் ஒருகணம் தாமதித்தே பதில் கூறினான். "எந்த சித்திரத்தைப் பொத்தப்பியில் சிலையாகவே வடிக்கப் போவதாகக் கூறி மன்னரின் தூதரிடம் என்னை எச்சரித்து அனுப்பி வைத்தாயோ, அந்த சித்திரத்தைத் தீட்டியது உன் மகள்தானே? சிற்ப மண்டபத்தில் அதைக் கண்டதும் உணர்ச்சியுடைய எந்த மனிதனுக்கும் ஏற்படும் ஆத்திரம் எனக்கும் ஏற்பட்டது" என்றவன் சற்று நிதானித்தான். தொடர்ந்து, "அந்த மஞ்சள் முகச்



சீனன் மட்டும் குறுக்கிடாவிட்டால் அவள் கரங்களைத் துண்டித்தும் இருப்பேன்" என்றான் எரிச்சலுடன்.

கூட்டைத் தட்டியதும் பறந்து பரவும் தேனீக்களாக கண்டகோபலன் சித்தத்தில் கேள்விகள் பல பறந்து குழப்பத்தில் அவனை ஆழ்த்தின. "மன்னரின் தூதரை உன்னை எச்சரிக்க அனுப்பி வைத்தேனா? யார் அந்தத் தூதர்? என்ன சித்திரம்? என்ன சிலை?" - அவன் கேள்விகள் குழப்பத்திலேயே உதிர்ந்தன.

"ஆம். மன்னரின் தூதர்தான். இங்கிருந்தும் தலைநகர் செல்லும் வழியில் பொத்தப்பிக்கு வந்து என்னை எச்சரித்தார். அந்த சித்திரத்தையும் காட்டினார். அவர்... அவர் பெயர்... ஆதித்யர்" என்று முடித்தான் மன்மசித்தன். இதற்குள் அவன் முகத்திலும் குழப்பமும் சந்தேகமும் படர்ந்திருந்தன.

மேற்கொண்டு மன்மசித்தன் விவரிக்க விவரிக்க, கண்டகோபாலனின் தலை சுழலும் நிதிக்கே வந்தது. பாண்டிய தூதனாக வந்த சீனன் கூறியபடி, காகதீய மன்னன் தன்னை அகற்றிவிடத் தீர்மானித்திருப்பது உண்மைதான் என்ற விவரம் அவனைத் தாக்கியது. சோழ தூதனாக வந்த ஆதித்யன், சித்திரத்தைக் கொண்டு மன்மசித்தனை ஆத்திரமூட்டித் தன்னிடம் சிக்க வைத்திருப்பது பெரும் லாபம் என்பது புரிந்தாலும், காகதீய மன்னர் நேரிடையாக காஞ்சியை நோக்கி வந்தால், தான் தாக்குப்பிடிப்பது கடினம் என்பதும் புரிந்தது அவனுக்கு. மன்மசித்தனைத் தான் சிறை வைத்த பின்பு, மன்னன் கைகளைக் கட்டிக் கொண்டு பார்த்துக் கொண்டிருக்க மாட்டான் என்பதும் தெளிவாகவே புரிந்தது. ஆனால் சீனன் கூறியபடி ஆதித்யன் பாண்டிய இளவலா? - கண்டகோபாலன் குழம்பிய சித்தத்துடன் திரும்பி நடந்தான்.

சிறைக் கம்பிகளைப் பிடித்தபடி வெறித்த மன்மசித்தன் நிலையும் பெரும் குழப்பத்திலாழ்ந்தே கிடந்தது.

அரண்மனையை அடைந்து தன்

அறைக்குள் உலவியபடியே சிந்தனையில் மூழ்கிவிட்ட கண்டகோபாலனுக்கு, காகதீய மன்னன் திருக்காளத்தியில் பாசறை அமைத்து விட்ட செய்தியும் வந்து சேர்ந்தது. இத்தனை காலம் காஞ்சியின் மன்னனாக சோழச் சக்க ரவர்த்திகள் அமர்ந்த அரியணையில் அமரும் பாக்கியம் கிடைத்தவனுக்கு, காகதீய மன்னனுக்கோ, மன்மசித்தனுக்கோ அடங்கி வாழும் நிலை கிட்டுவதை விட உயிரை இழப் பதே மேல் என்ற எண்ணம் திடமாகவே எழுந் தது.

சிந்தனையுடன் உலவியவன் சட்டென்று நின்றான். அறையின் மூலையிலிருந்த பெரும் மரப்பேழையை விறுவிறுவென்று அணுகிய வன், அதிலிருந்து சோழ தூதர் கொண்டு வந்த ஓலையுடன் முன்பு சோழர்களிடமிருந்து வந்திருந்த பல ஓலைகளையும் எடுத்துப் பிரித்தான். சோழ மன்னன் ஒப்பமும், சைவத் துறவியாரின் ஒப்பமும், இலச்சினைகளும், சோழதூதர் அளித்த ஓலையுடன் ஒத்திருப்ப தையும், எழுத்துக்களும் ஒரே விதமாக இருப்பதையும் கவனித்தவன், தூதராக வந்த ஆதித்யன் அளித்த ஓலை, போலியாக இருக்க முடியாது என்ற தீர்மானத்துக்கு வரவும் செய் தான். அடுத்து அவன் புத்தி துரிதமாக இயங் கத் தொடங்கியது. சோழ மன்னன் அழைப் பின் பேரிலேயே சோழ நாட்டை அடைந்து விட்டால், அவர்களுக்கு உதவவும், தான் அங்கேயே ஸ்திரப்படுத்திக் கொள்ளவும் செய்வது மட்டுமின்றி காக்தீய மன்னனும் சோழ மன்னர் ஆதரவை மீறி எதுவும் செய்ய இயலாது என்ற தீர்மானத்திற்கும் வந்தான். நெருங்கி வரும் அபாயத்திலிருந்து மீள இதைவிடச் சிறந்த வழியேதும் புலப்பட வில்லை அவனுக்கு. இருக்கும் காலமும் குறைவு என்ற உண்மை அவனை உடனே செயலில் இறங்கவும் வைத்தது.

பிரதானிகளையும் படைத்தலைவர் களையும் அழைத்து தனது தீர்மானத்தை வெளியிட்டவன், காஞ்சியின் செல்வங்களை யும், விலைஉயர்ந்த மணிகளையும் பொன்னை யும், கற்களையும் பேழைகளில் ஏற்றி, போர்க்களிறுகளின் மீது கயிறுகளைக் கட்டிச் சுமக்க ஏற்பாடுகள் செய்யும்படி உத்தரவிட் டான். ஸ்வர்ணமுகி, ரதமொன்றில் தகுந்த பாதுகாவலுடன் பின்தொடர ஏற்பாடு செய்தவன், உடன்வர விரும்பிய படைத் தலைவர்களுடன் புறப்பட்டான். கதிரவன் மறைந்து முதல் ஜாம தொடக்கத்தில் தெற்கு நோக்கிய அவன் பயணம் ஆரம்பமானது.

'எந்த நிலையும் யாருக்கும் ஸ்திரமல்ல' என்ற மன்மசித்தனின் வார்த்தைகள் வேத வாக்கு போல் தோன்றியது கண்டகோபா

அருள்வாக்கு



லனுக்கு. பின்புறத்தில் விலகிக் கொண் டிருந்த காஞ்சியின் உயர்ந்த மதில்களைப் பார்த்த படியே ரதத்தில் அமர்ந்திருந்த ஸ்வர்ணமுகியின் உள்ளத்தில் பெரும் துக்கம் சூழ்ந்து கிடந்தது. காஞ்சிமா நகரையு தான் சேர்த்த கலைச் செல்வங்களையு விட்டுப் பிரிவது பெரும் சோகத்தையளி தாலும் காவிரி பாயும் சோழ நாட்டிற்குத்தான் செல்கிறோம் என்ற நினைவு சற்று ஆறுதலை யும் ஏற்படுத்தியது அவளுக்கு.

ஏறக்குறைய பத்து காதங்கள் வந்தபின்பும் சோழ எல்லையில் உலவுவதாகக் கூறப்பட்ட பாண்டியர் படைகளின் எந்த அறிகுறியு தென்படவில்லை. எந்த இடையூறும் ஏற்படாத கண்டகோபாலனுக்கு நம்பிக்கையையும் தானிட்ட திட்டம் சரியானதுதான் என்ற திருப்தியையும் ஏற்படுத்தியது. அதிகமாகப் பந்தங்களை ஏற்ற வேண்டாமென்றும், துரித மாக அணிவகுப்பை நடத்தவும் உத்தரவிட்ட வன், கவசங்களுடனும் இடையில் தரித்த வாளுடனும் புரவியிலமர்ந்து முன்னால் சென்றான்.

அதே சமயத்தில் காஞ்சிக்குத் தெற்கில் – கண்டகோபாலன் விரைந்து கொண்டிருந்த பிரதானப் பாதையிலிருந்து விலகிய கிளைப் பாதையின் முடிவிலிருந்த ருத்ரவாலீஸ்வரத்து குகைக் கோயிலில் – பெரும் பரபரப்பு நிலவிக் கொண்டிருந்தது. குகை வாயிலில் காடவ வீரர்கள் வாட்களுடனும் வேல்களுடனு பந்தங்களின் ஒளியில் காத்துக் கொண்டிருக்க உட்பகுதியில் காடவராயன் தன் உபதலைவா களிடம் தனது திட்டத்தை விளக்கிக் கொண்டி ருந்தான். காஞ்சியிலிருந்து வந்து கொண்டிருந்த செல்வங்களும் போர்க்களிறுகளில் வரு பொற்குவியல்களும் தனது சிறுபடையை நிர்வகிக்கப் போதுமானவை என்பதை உணர்ந் தவன், அவற்றை அபகரிக்கும் தனது திட் டத்தை விளக்கத் தொடங்கினான்.

உபதலைவனொருவனின் குரல் எழுந்தது "பிரபு, கண்டகோபாலன் படையில் மூவாயி ரத்துக்கும் குறையாத வீரர்கள் இருக்கிறா களே பிரபு... நம் திட்டம் நிறைவேறுமா?" என்று.

காடவராயன் அவனை எரித்து விடுவது போல பார்த்தான். "முட்டாளே! எடுத்த எடுப்பிலேயே அவநம்பிக்கையுடன் பேசாதே

பிள்ளையார் யானைக்கு யானை; குழந்தைக்குக் குழந்தை. அதனால் அவரை எத்தனை பார்த்தாலும் போதும் என்ற திருப்தி உண்டாவதில்லை. கள்ளம் கபடம் இல்லாத குழந்தை மனசு அவருக்கு. குழந்தை போல் நல்ல உள்ளம்; யானை மாதிரி தேகபலம், புத்திக் கூர்மை; எல்லாவற்றுக்கும் மேலாக தெவிட்டாத அழகு; ஆனந்தம் பொங்கிக் கொண்டிருக்கிற ரூபம்.

சேராததெல்லாம் அவரிடம் ஸ்வபாவமாகச் சேருகிறது. கழுத்துக்குக் கீழே குழந்தை; மனித வர்க்கம். மேலே முகம் யானை; மிருக வர்க்கம். ஆனால் அவர் வாஸ்தவத்திலே தேவ வர்க்கம். தேவர்களுக்குள் முதல் பூஜை பெறும் தெய்வமாக இருக்கிறார்.

குழந்தையாக இருந்துகொண்டே மஹா பெரிய தத்வங்களுக்கு ரூபகமாக (personification) இருக்கிற பிள்ளையாரிடம் பல தினுசான மாறுபாடுகள் (contrasts). இதிலே ஓர் அழகு. வித்தியாசமானதெல்லாம் அவரிடம் சேர்ந்திருப்பதாலேயே அவரிடம் எல்லாம் ஐக்கியம் என்றாகிறது. உதாரணமாக, ஒரு கையில் ஒடிந்த தந்தம் என்றால், இன்னொரு கையிலே கொழுக்கட்டை வைத்திருக்கிறார். அதற்குள் தித்திப்பாக இருக்கிற வஸ்துவுக்குப் பெயர் பூர்ணம். பூர்ணம் என்றால் முழுமை. ஒரு கையில் இருக்கிற தந்தம் மூளி; இன்னொன்றிலோ முழுமை. எல்லாம் நிறைந்த பூரணப் பொருள் பிள்ளையாரேதான். இதை அறிந்து கொள்வதுதான் பேரானந்தம். ஆனந்தத்துக்கு இன்னொரு பேர் மோதம், மோதகம். கொழுக்கட்டைக்கும் மோதகம் என்றே பெயர்.

இன்னொரு மாறுபாடு; பிள்ளையார் குழந்தை. அதனால் பிரம்மசாரி. ஆனால் இவர் யானையாக வந்து வள்ளியை மிரட்டியதால் தான் அவள் ஸுப்ரம்மண்ய ஸ்வாமியைக் கல்யாணம் செய்து கொண்டாள்! இன்றைக்கும் கல்யாணம் ஆக வேண்டுமானால் இந்தக் கட்டைப் பிரம்மசாரியை வேண்டிக் கொள்கிறார்கள். இதற்கு என்ன அர்த்தம்? அவர் இருக்கிற நிலையில் அவருக்கு வேண்டாததையெல்லாம் கூட, அவர் நிலைக்கு மாறாக இருக்கிற நமக்குப் பரம கருணையோடு கொடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கி விடுகிறார். தாம் உட்கார்ந்த இடத்தை விட்டு அசையாமலே இருந்தாலும், பக்தர்களை ஒரே தூக்காகத் தூக்கி உச்சத்தில் சேர்த்து விடுவார்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

காஞ்சியிலிருந்து கண்டகோபாலன் வெளியேறி வரும் செய்தியை அறிவித்தவனே நீதான். உடன்வரும் செல்வங்களின் அளவும் நீ கூறியவைதான். அதை நாம் அடைய வகுக்கும் திட்டத்தில் நீயே அவநம்பிக்கை காட்டலாமா? நாம் கண்டகோபாலனுடன் சென்று போரிடவா போகிறோம்?" என்றான் உஷ்ணம் தெறித்த குரலில்.

"விளங்கவில்லை பிரபு.. போரிடாமல் அந்தப் பேழைகளை அடைவது எப்படி?" என்ற அந்த உபதலைவனைத் தொடர்ந்து பல குரல்கள் ஒலித்தன.

இருக்கையிலிருந்து எழுந்து அனைவரையும் கையமர்த்திய காடவராயன், "கவனமாகக் கேளுங்கள். நம் உபதலைவன் கூறியபடி கண்டகோபாலன் மூவாயிரம் வீரர்களுடன் வந்து கொண்டிருப்பது உண்மைதான். அதிலும் பாதிக்கு மேல் புரவி வீரர்கள். ஒரு பகுதி முன்னணியிலும் மறுபகுதி காலாட்படைகளின் பின்னால் பேழைகளைச் சுமந்த யானைகளைச் சுற்றியும் வந்து கொண்டிருக்கிறது. நாம் இறுதிப் பகுதியை மட்டுமே தாக்க வேண்டும்."

உபதலைவன் குரல் மீண்டும் ஒலித்தது : "முன்னாலிருக்கும் புரவி வீரர்கள் நம்மைத் தாக்க மாட்டார்களா பிரபு?"

"பொறுமையாகக் கேள். தெற்கே செல்லும் பாதை பாலாற்றைக் கடந்தபின் தெள்ளாறு வரையில் நேர்ப்பாதையாகச் செல்கிறது. பிறகு கிழக்கு நோக்கி வளைந்து மல்லைத் துறையிலிருந்து வரும் பிரதான பாதையுடன் இணைகிறது. இடைப்பட்ட அந்தப் பகுதி மலைகளும் குன்றுகளும் நிறைந்த காட்டுப் பகுதி. பாதையும் குறுகலாகி வளைந்து வளைந்து குன்றுகளினிடையே செல்கிறது. அந்த இடத்தை கண்டகோபாலன் வெள்ளி முளைப்பதற்குச் சற்று முன்னதாக அடையலாம். நாம் முன்னதாகக் குறுக்கு வழியில் சென்று காத்திருக்க வேண்டும்" – காடவராயன், தான் கூறியவை வீரர்கள் மனத்தில் பதிய சற்று அவகாசமளித்து விட்டுத் தொடர்ந்தான்.

"முன்னாலிருக்கும் புரவி வீரர்கள் குன்றுகளின் வளைவு திரும்பியதும் நான் சமிக்ஞை தருகிறேன். உடனே இறுதிப் பகுதியில் தாக்குதலைத் தொடங்குங்கள். புரவியிலிருந்தபடியே களிறுகளின் பொக்கிஷக் கயிறுகளை அறுத்து விட்டால் பேழைகளைக் கைப்பற்றி விடலாம். துரிதமாக பேழைகளைத் தயாராக இருக்கும் எனது ரதத்தில் ஏற்றி விட்டால் பிறகு கவலையில்லை. நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்து விடுங்கள். ஆனால் ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்

ளுங்கள். நம் நோக்கம் போரிடுவது அல்ல. நம் வீரத்தைக் காட்டுவதுமல்ல. பேழைகளைக் கைப்பற்றுவது மட்டுமே. புறப்படுங்கள்'' என்ற உத்தரவுடன் முடித்தான் காடவராயன்.

சோழ நாட்டை விழுங்க வரும் பெரும் சர்ப்பம் போல் இருளில் நகர்ந்து கொண்டிருந்த கண்டகோபாலனின் படைப்பிரிவு தெள்ளாற்றைக் கடந்து கொண்டிருந்தது. இரு பக்கங்களிலும் கரிய பூதங்களைப் போல் எழுந்து நின்ற குன்றுகள், பல ரகசியங்களை மறைத்து வைத்திருக்கும் குகைகள் போலத் தெரிந்தன. காற்றில் அபாயம் கலந்திருப்பதை நுகர்ந்த புரவிகள் ஓரிருமுறை கனைத்து வீரர்களை எச்சரிக்க முயன்றன. அச்சத்தில் கண்சிமிட்டிய விண்மீன்கள் துணைக்கு விடிவெள்ளியை அழைத்து விட்டு ஒவ்வொன்றாக மறைய முற்பட்டன. விண்மீன்களுக்கு ஆறுதல் கூற முயன்ற பின்னிரவின் நிலவும் அச்சத்தில் வெளுத்துக் கிடந்தது.

அழகிய பெண்ணின் இடைபோல குறுகிக் கிடந்த பாதையில் புரவிகளும் வீரர்களும் பின்தொடர்ந்த களிறுகளும் மிக நெருக்கமாகவே சென்றன. அணிவகுப்பு, சர்ப்பத்தின் வால் போல் நீளமாகத் தொடங்கியது. எங்கோ ஒற்றை நரியொன்று ஓலமிட்டு ஓய்ந்தது. பாறையொன்றின் மீதிருந்து தீப்பந்தமொன்று கொள்ளிவாய்ப் பிசாசாக ஆடியது. அடுத்து, அணிவகுப்பின் பின்பகுதியில் எழுந்தது பெருங்கூச்சல்! உயர்த்திய வாட்களுடன் அணிவகுப்பைத் திடீரென ஊடுருவிய காடவராயனின் படையினர், யானைகளின் மீது அமர்ந்து வந்த பாகர்களையும் வீரர்களையும் குறிவைத்து ஈட்டிகளை எறிந்தபடியே நெருங்கினர். ஈட்டிகளில் சில, களிறுகளின் மீதும் பாய்ந்ததால் திடீரென எழுந்த பிளிறல்கள் அந்தப் பிராந்தியத்தையே கலங்க அடித்தன. வாட்கள் மோதும் ஒலியும், வீரர்களின் கூக்குரல்களும் தொடர்ந்து கேட்டன. பேழைகளைக் கட்டியிருந்த கயிறுகளை வாட்களால் வெட்டி, பேழைகளைப் புரவியிலிருந்தபடியே தாங்கிக் கொண்ட காடவர்கள் மற்ற வீரர்கள் அளித்த பாதுகாப்பில் தூரத்தில் இருளில் தயாராக நின்ற ரதத்தை நோக்கி விரைந்தனர்.

நேர்ந்த அபாயத்தை உணர்ந்து கொண்ட கண்டகோபாலன், வீரர்களிடையே வழியேற்படுத்திக் கொண்டு பின்பகுதிக்கு விரைந்தான். புரவி வீரர்களைப் பக்கவாட்டிலும், காலாட்படை வீரர்களை நேர் எதிரிலும் நிற்கச் செய்து, அம்புகளைப் பொழிய உத்தரவிட்டான். வந்தவர்கள் நிச்சயம் பாண்டியர்கள் அல்ல, காடவராயனின் வீரர்கள் என்பதை உணர்ந்து கொண்டான். சினம் தலைக்கேற வாளைச் சுழற்றியவன், காடவர்கள் தப்பிக்க முற்படுவதையும் தனது பொக்கிஷப் பேழைகளில் பாதிக்கும் மேல் பறிபோயிருப்பதையும் கண்டு, புரவி வீரர்களின் ஒரு பிரிவை காடவ வீரர்களைத் தொடர்ந்து சென்று தாட்சண்யமின்றிக் கொன்று விடுமாறும் உத்தரவிட்டான். கள்ளர்களைப் போல தாக்கி, பேழைகளுடன் ஓடத் தொடங்கிவிட்ட காடவர்களைக் கண்டு திகைப்பில் நெடுநேரம் நின்றான் கண்டகோபாலன்.

இடையில் ஏற்பட்ட அந்தக் குறுக்கீட்டினால் சற்றுக் கலக்கம் உண்டானாலும் எடுத்த தீர்மானத்தின்படி சோழநாட்டை அடைந்து விடுவதே உசிதம் என்ற எண்ணம் அவனுக்கு மட்டுமின்றி உடன் வந்த படைத் தலைவர்களுக்கும் உறுதிப்பட்டது. கருக்கல் முடிந்து, ஒளிபரவத் தொடங்கிய தருணத்தில் அணிவகுப்பை ஒழுங்குபடுத்திய கண்டகோபாலன், மீண்டும் பயணத்தைத் தொடர முற்பட்டான்.

பாதையை மூடிக்கிடந்த இருளையும், குன்றுகள் பொதித்து வைத்திருந்த ரகசியங்களையும் வெளிப்படுத்தியபடி கதிரவன் உதயமாகிக் கொண்டிருந்தான். கிழக்கு நோக்கித் திரும்பிய பாதையில் நகர்ந்த அணிவகுப்பு, அரை ஜாம நேரத்தில் மல்லையிலிருந்து வரும் பிரதானப் பாதையை அடைந்தது.

குன்றுகளைத் தாண்டி சமவெளிக்கு வந்த பாதையின் வளைவில் திரும்பிய கண்டகோபாலன், எதிரே விரிந்த காட்சியைக் கண்டு திக்பிரமையில் உறைந்தான். உடன் வந்த படைத்தலைவர்களும் பிரமிப்பில் அடித்து வைத்த சிலைகளாக உறைந்தனர்.

எங்கோ இன்னும் பல காதங்களுக்கப்பால் இருப்பதாகக் கருதிய பாண்டியர் படை அவன் எதிரில் அணிவகுத்து நின்றிருந்தது! பின்புறத்திலிருந்து வீரர்களின் வாட்களும் வேல்களும் கதிவரன் ஒளியில் மின்ன, தனது சாம்பல் நிறப் புரவியில் ஆரோகணித்து, சலனமற்ற கூர் விழிகளால் கண்டகோபாலனை உற்றுநோக்கியபடி அமர்ந்திருந்தான் ஜடாவர்ம வீரபாண்டியன்.

தோளின் பின்புறமிருந்து அந்த சீனத்து வாளின் பிடி மட்டும் எட்டிப் பார்க்க, புரவியொன்றில் அமர்ந்திருந்தான் தூதனாக வந்த சீனன். வீரபாண்டியன் அடுத்து ஏதோ கூறியதைத் தொடர்ந்து சீனனின் புரவி சமத்கார நடையுடன் கண்டகோபாலனை நெருங்கியது.

(தொடரும்)

## 38. பூத்த புது உறவு

ராட்சதப் பறவையொன்று சிறகுகளை விரித்துத் தரையில் படுத்துக் கிடப்பதைப் போலப் பாண்டியர் படை கருட வியூகம் வகுத்து நிற்பதைப் பார்த்தான் கண்டகோபாலன். அதன் முன்னணியில் அந்தக் கருடனைவிடக் கூர்மையான விழிகளுடன் வீரபாண்டியன் தனது சாம்பல் நிறப் புரவியில் அமர்ந்திருப்பதையும் கண்டான். தான் காஞ்சியின் படைகளை சர்ப்ப வியூகத்தில் அழைத்து வருவதை அறிந்தே இளைய பாண்டியன் தன் படைகளை அணி வகுத்திருக்கிறான் என்பது புரிந்தது அவனுக்கு. தன் படைகளை விடப் பாண்டியர் படை சற்றுக் குறைவாக இருப்பதாகவும் பட்டது. மஞ்சள் முகச் சீனன் மட்டும் கருட வியூகத்தை விட்டுப் பிரிந்து கம்பீரமாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கவனித்தான்.

சிறு விழிகள் ஈட்டிகளின் முனைகளைப் போல ஜொலிக்கக் கண்ட கோபாலனை உற்று நோக்கிய யுவான், "கண்டகோபாலரே! காஞ்சியில் தூது வந்த போது கூறியதையே மீண்டும் கூறுகிறேன். இப்பொழுது கூட இந்தப் போரைத் தவிர்க்க உங்களுக்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. உமது முடிவ்வ அறிந்துவர இளைய பாண்டியர் உத்தரவிட்டிருக்கிறார்" என்றான்.

தனது மன்னனான காகதீய மன்னனிடமே சரணடைய விரும்பாத கண்டகோபாலன், இரு கணங்களே சிந்தித்தான். தனது முடிவு போர்தான் என்று திட்டவட்டமாக அறிவித்தவன், உடனே தாக்குதலைத் தொடங்கவும் உத்தரவிட்டான்.

அவன் உத்தரவை முடிக்குமுன்பாக யுவானின் கரத்தில் அந்த சீனத்து வாள் முளைத்து மேலே உயர்ந்து, இருமுறை ஆடியது. பின்பு, தன்னை நோக்கிப் பாய்ந்த வீரர்களை நோக்கி இறங்கி கரகரவென சுழலத் தொடங்கியது. யுவானின் வாள் உயர்ந்த அதே வினாடியில் வீரபாண்டியனின் உத்தரவு பாண்டிய வீரர்களை முன்னோக்கிப் பாய வைத்துவிட்டதால் அடுத்த கணத்தில் இரு படைகளும் கலந்தன. காற்றைக் கிழித்து ஜிவ்வென்று உயர்ந்து இறங்கிய வேல்களும், வாட்கள் மோதியதால் எழுந்த ஒலிகளும், புரவிகளின் கனைப்பொலிகளும், வீரர்களின் மரணக் கூச்சல்களும் அந்தக் காலை வேளையில் மல்லை பெருஞ்சாலையில் சற்று நேரத்திலேயே உக்கிரமான ரணகளத்தை சிருஷ்டித்தன. பெரும் போர்ப் பறவை போன்று சிறகுகளை விரித்துக் கிடந்த பாண்டியர் படைப் பிரிவு இருமுறை சிலிர்ப்பதுபோல அம்புகளை வீசும் யந்திரப்



பொறிகளை இயக்கிவிட்டு, முன்னே நகர்ந்தது. இரு பக்கங்களிலும் கண்டகோபாலன் படைகளை நெருக்கி அவனது அணிவகுப்பை இரு துண்டுகளாக உடைக்கவும் செய்தது. கண்டகோபாலனைச் சந்திக்கப் புரவியைத் தூண்டிய யுவானை வீரபாண்டியனின் சமிக்ஞை தடுத்தது. வீரபாண்டியனின் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட யுவான், போர்க்களிறுகளிருந்த பகுதியை நோக்கித் திரும்பி ஊடுருவினான். களிறுகளின் பின்னாலிருந்த புரவி வீரர்களின் நடுவே ஒரு ரதத்தையும், பிரமை தட்டிய விழிகளில் அச்சம் வழிய போரை வெறித்துக் கொண்டிருந்த ஸ்வர்ணமுகியையும் கண்டான் யுவான்.

யுவான் அகன்ற இரண்டாவது கணத்தில் வீரபாண்டியனின் சாம்பல் நிறப்புரவி காற்றில் பறப்பது போலப் பாய்ந்து கண்டகோபாலனின் எதிரில் வந்து நின்று, தன் மொச்சைப் பற்களைக் காட்டி பலமாகக் கனைத்தது. அடுத்து கண்டகோபாலனுக்கும் அவனுடனிருந்த இரு உப தலைவர்களுக்கும் ஏக காலத்தில் வாட் பயிற்சியளிக்கத் துவங்கினான் வீரபாண்டியன்!

உறக்கமின்றி இரவு முழுவதும் நடந்த காஞ்சிப்படையின் களைப்பும், இடையில் காடவராயனால் ஏற்பட்ட குறுக்கீடும், பொக்கிஷப் பேழைகளைப் பறிகொடுத்ததால் உண்டான ஆயாசமும் மட்டுமின்றி, பாண்டியரின் வேகமும், திட்டமிட்டு வியூகம் வகுத்துத் தொடுத்த தாக்குதலும் போரின் முடிவை ஒரு ஜாம நேரத்திலேயே நிர்ணயிக்கத் தொடங்கின.

ஏராளமான மலைப்புஷ்பங்களும் மூலிகைகளும் நிறைந்து கிடந்ததால் புஷ்பகிரி என்று அழைக்கப்பட்ட அந்த மலைப்பகுதியும் அதையொட்டி, சுற்றிலும் குன்றுகள் ஆங்காங்கே எழுந்து நின்ற பகுதியும், வளமாகத் தெரிந்தன. குன்றுகளினூடே நெளிந்து வளைந்து சென்ற பாதை ஏற்ற இறக்கங்களுடன் உயர்ந்து கொண்டே போய் குன்றின் உச்சியை அடைவதைப் பார்த்தபோது மறுபுறம் நீலவானமும் மேகங்களும் மட்டுமே தெரிய, அத்துடன் பூமியின் எல்லையே முடிந்து விடு

# இந்திர தயம்



வது போன்ற பிரமையை ஏற்படுத்தியது.

காஞ்சியின் பொக்கிஷப் பேழைகள் நிறைந்த ரதத்துடன் காடவ வீரர்கள் பின் தொடர, தூரத்தில் வந்து கொண்டிருந்த கண்டகோபாலன் அனுப்பிய புரவிப்படைப் பிரிவைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே அந்தப் பாதையில் விரைந்து கொண்டிருந்தான் காடவராயன். சம்புவரையர் நாட்டு எல்லையிலிருந்த அந்தப் புஷ்பகிரியின் அடிவாரத்தில் வீரசம்பனின் படைப் பிரிவு பாசறை அமைத்திருப்பதை அறிந்திருந்தான் அவன். அதை அடைந்துவிட்டால் பின் தொடரும் காஞ்சியின் புரவி வீரர்களை அழித்துவிடுவது எளிது என்றும் தீர்மானித்திருந்தான். ஆனால் வலப்புறமாகச் சுழன்று இறங்கிய பாதையில் சென்று; பாறைகளின் மறைவைத் தாண்டியதும், எதிரே விரிந்த காட்சியைக் கண்ட காடவராயன் திகைப்பில் உறைந்து போனான்.

மலையின் மறுபுறத்திலிருந்து தொடங்கி, வெகு தூரம் வரையிலும் கூடாரங்கள் பல தெரிந்தன. புரவிகளும், வீரர்களும், களிறுகளும்,

பளபளத்த வாட்களும் வேல்களும் ஏராள மாகத் தெரிந்த அந்தப் பாசறை, நிச்சயம் வீரசம் பனின் பாசறை அல்ல என்பது பார்த்ததும் புரிந்தது காடவராயனுக்கு. முகப்பிலிருந்த பெரும் கூடாரத்தின் மீது அவனை விழுங்கி விடத் துடித்த மீன் கொடியைக் கண்ட காடவ ராயனின் இதயம், அந்தக் கொடியைவிட வேகமாகப் படபடத்தது. கொங்கு நாட்டில் போசளருடனான போரை போசள வீர சோமேஸ்வரனின் வீர மரணத்துடன் முடித்து வைத்த ஜடாவர்ம சுந்தரபாண்டியன், அதே வேகத்தில் வடகிழக்காக நகர்ந்து பாலாற்றை அதன் ஆரம்பக் கட்டத்திலேயே கடந்து, காஞ் சியை நோக்கி வந்து கொண்டிருப்பதை அது வரை அறிந்து கொள்ளாத காடவராயனுக்கு எதிரில் விரிந்த காட்சி வெறும் பிரமையோ என்ற சந்தேகத்தையும் ஏற்படுத்தியது.

அவன் பிரமையை உடைக்க கூடாரத்தி னுள்ளிருந்து வெளியே வந்தார் ஓர் ஆஜானு பாகுவான மனிதர். அவர் கனத்த வாளைப் பார்த்தான். கட்டுக்கடங்க விரும்பா முரட்டுப் புரவியொன்றின் மீது ஏறி, தன்னை நோக்கி அவர் வரத் தொடங்கியதையும் கண்டான். காடவராயனுக்கு இனி தான் கொண்டு வந்த ரதமோ, ரதத்தினுள்ளிருந்த பேழைகளோ அத் தனை முக்கியமல்ல என்பதும், தான் உயிர் பிழைப்பது மட்டுமே அதிமுக்கியம் என்பதும் புரிந்தது. ரதப் புரவியை விடுவித்துத் தாவியவன், பக்கவாட்டில் திரும்பி புஷ்பகிரி யின் அடர்ந்த காட்டுப் பகுதியை நோக்கித் தலைதெறிக்க விரைந்தான்.

காடவ வீரர்கள் தங்கள் தலைவனின் அந்த அபார ஓட்டத்தை ரசிக்கவில்லையென்றாலும் எதிரில் வந்து கொண்டிருப்பது அதுவரை தங்கள் வாழ் நாளில் சந்தித்திராத அபாயம் என்பதை உணர்ந்து கொண்டதால் முற்பிறவி யில் தாங்கள் மான்களாகப் பிறந்திருந்ததை நிரு பிப்பது போல் காடவராயனைத் தொடர்ந்து காட்டுப் பகுதிக்குள் பாய்ந்தனர். பேழைகளைச் சுமந்த ரதம் மட்டும் ஒற்றைப் புரவியுடன் அந்த மலைப்பாதையில் தனித்து நின்று கொண்டிருந் தது.

---

"நீ மட்டும் எப்படிடா நம்ம ஆசிரியர் கிட்ட நெருங்கி, தைரியமா பழகறே?"

"நானும் அவரும் ஒண்ணா படிச் சோமே!"

— பா. ஜெயக்குமார்.



ரதத்தை நெருங்கி, அதில் கிடந்த பேழை
களையும், பேழைகளின் மீது தெரிந்த காஞ்சி
யின் முத்திரைகளையும், காட்டுக்குள் ஓடி
மறைந்த காடவ வீரர்களையும் கவனித்த
கிருஷ்ணமல்லர், நடந்தவற்றை கணப்பொழு
தில் யூகித்துக் கொண்டார். அவர் யூகத்தில்
ஏதும் சந்தேகமிருந்தால் அதைப் போக்க சற்றுத்
தூரத்தில் கண்டகோபாலனின் புரவி வீரர்கள்
கனவேகமாக வந்து கொண்டிருந்தனர்.

மீண்டும் கூடாரங்களை நோக்கித் திரும்பிய
கிருஷ்ணமல்லர், கூடார வாயிலில் தனது
உத்தரவுக்காகக் கரங்களைக் கட்டியபடி காத்
திருந்த தமது அருமைச் சீடன் ஒப்பிலிமல்ல
னையும் அவன் சகாக்களையும் சைகையால்
அழைத்தார். சீடர்கள் நெருங்கியதும், "ஒப்பிலி
அதோ வருபவர்கள் கண்டகோபாலனின் வீரர்
கள். கவனித்துக் கொள்" என்று உத்தரவிட்டு
விட்டு, திரும்பியும் பாராமல் தமது முரட்டுப்
புரவியைச் செலுத்திக் கொண்டு பாண்டிய
மன்னனிருந்த கூடாரத்தை நோக்கி விரைந்தார்

அவர் மன்னன் கூடாரத்தில் நுழைந்த
போது, ஜடாவர்ம சுந்தர பாண்டியன் பக்கச
சீலையினருகில் நின்று கொண்டிருந்தான்
மன்னனின் சிங்க விழிகளில் தெரிந்த கேள்வி
யைப் புரிந்து கொண்ட கிருஷ்ணமல்லர்
"மன்னவா, காடவராயன் தப்பியோடி விட்
டான்!" என்றார்.

"பார்த்தேன்" மன்னன் பதில் சுருக்கமாக
வந்தது.

"இளைய பாண்டியரை கண்டகோபாலன்
சந்திக்கும் முன்பாக காடவன் இந்தக் கொள்
ளையை நடத்தியிருக்க வேண்டும் மன்னா
காஞ்சியின் பொக்கிஷப் பேழைகள் ரதத்
திலிருக்கின்றன."

ஆமென்பதற்கடையாளமாகத் தலை
யசைத்த மன்னன், "படைத் தலைவரே, இன
நாம் பாசறையைக் கலைத்துப் புறப்படலாம்
வீரபாண்டியனுக்கு மல்லித் துறைக்குச் செல்லு
மாறு ஓலையனுப்பி விடுங்கள். கொற்கைய
லிருந்தும் நாகையிலிருந்தும் கலங்கள் ம
லைக்கு வந்து சேர்ந்திருக்கும். தஞ்சைத் துற
யாருக்கும் காஞ்சிக்கு வர ஓலையனுப்ப
விடுங்கள்" என்று உத்தரவிட்டான்.

திருப்தியுடன் தலையசைத்துக் கொண்ட
கிருஷ்ணமல்லர், மன்னனை வணங்கி வெ
யேறினார். வாயிலிலேயே கைகளைக் கட்டிய
படி நின்றிருந்தான் சீடன் ஒப்பிலி மல்லன்
அவரைக் கண்டதும் தலைதாழ்த்தியவன்
"கண்டகோபாலன் வீரர்களைக் கவனித்து
விட்டேன் பிரபு" என்றான்.

"சரி, கூடாரங்களைக் கலைத்து விட்டு வீர
களை அணிவகுக்கச் சொல். நாம் காஞ்சியை
நோக்கிக் கிளம்புகிறோம்" என்றார் கிருஷ்ண
மல்லர்.

அரிய பொருள் ஒன்றை இழந்து மீண்டும் திரும்பப் பெறும் போது இன்பம் இருமடங்காக உயர்ந்து விடுகிறது என்பதைக் காஞ்சிமாநகரின் மக்கள் உணர்ந்தார்கள். கண்டகோபாலனின் அதிகாரமும், முரட்டுத்தனமான ஆட்சியும் நீங்கி மீண்டும் தமிழ் மன்னன் ஒருவன் ஆட்சி மலர்வதை வரவேற்ற மக்கள், மாவிலைத் தோரணங்களும், பந்தல்களும், இல்லங்களின் வாசல்களின் வண்ணக் கோலங்களும், நகரை அலங்கரிக்க, பாண்டிய மன்னனை வரவேற்க ஆயத்தமானார்கள். பாவலர்கள் கவியிசைக்க, அவற்றைக் காஞ்சியின் ஆலயத்துச் சுவர்களில் பொறிக்க சிற்பிகள் தயாரானார்கள். எந்த சேதமுமின்றி காஞ்சி நகரைக் கைப்பற்றிய ஜடாவர்ம சுந்தர பாண்டியன், மாறன் அமுதனார் குறித்த முகூர்த்தத்தில் பட்டினப் பிரவேசம் நடத்தி முடி சூடவும் செய்தான். பெரும் புலிக்கொடி பறக்க, சோழ மன்னனின் பவனி ரதத்திலேயே வந்து இறங்கிய தஞ்சைத் துறவியாரைக் கண்டதும் சுந்தர பாண்டியன் காஞ்சி அரியணையில் அமர்வது பற்றி எவருக்கேனும் ஆட்சேபமிருக்குமானால் அது அடியோடு நீங்கியது.

அத்தாணி மண்டபத்தில் தனக்கும், மாறன் அமுதனாருக்கும் இணையாக துறவியாருக்கும் ஒரு ரத்னாசனமளித்திருந்தான் பாண்டிய மன்னன். அரியணையேறியதும் முதலில் கண்டகோபாலனிடமிருந்து மீட்ட செல்வங்களைப் பிரதானிகளிடம் அளித்தான். சோழ மன்னர் முன்பு விதித்திருந்தவை நீங்கலாக, பிறகு விதிக்கப்பட்ட வரிகள் அனைத்தையும் நீக்கி விடுவதாகவும், ஆலயங்களுக்கு இன்னும் சில நிலங்களையும் மானியங்களையும் அளிப்பதாகவும் அறிவித்து, கல்தச்சர்களைக் கொண்டு அவற்றை ஆலயச் சுவர்களில் பொறிக்கவும் உத்தரவிட்டான்.

சடங்குகளையும் அனைத்து சம்பிரதாயங்களையும் முடித்து மன்னன், அரண்மனைக்குத் திரும்பியபோது முதல் ஜாமம் தொடங்கியிருந்தது. சந்தியா காலக் கடன்களை தாமதமாகவே செய்து முடித்து, கூடத்தினுள் நுழைந்த மன்னன், மாறன் அமுதனார் காத்திருப்பதையும், என்றும் கவலையைக் கண்டறியாத அவர் முகத்தில் கவலையின் ரேகைகள் தென்படுவதையும் கவனித்தான். அதன் காரணத்தை யூகித்து விட்டதால் முறுவல் ஒன்றைப் படர விட்டபடியே அவர் எதிரில் வணங்கி அமர்ந்தான். மன்னனை ஏறெடுத்து நோக்கிய அவர் விழிகளிலும் கவலை தெரிந்தது. "சுந்தரா, ஆதித்யனைப் பற்றி செய்தி ஏதேனும் வந்ததா?" என்றார் குரலிலும் கவலை தொனிக்க.

மன்னன் பதில் கூறுமுன்பாக வாயிலிலிருந்து கிருஷ்ணமல்லரின் கனத்த குரல் சலிப்புடன் ஒலித்தது. ''என்ன வீரன் இவன்? வாளைப் பிடித்துச் சுழற்ற வலுவற்றவனுக்குச் சிற்றரசன் என்ற பட்டம் எதற்கு?" சலிப்புடன் இரைந்து கூறியபடியே உள்ளே நுழைந்தவர், மன்னனும் அமுதனாரும் அமர்ந்திருப்பதைக் கண்டு குரலைத் தாழ்த்திக் கொண்டார். துறவியாரும் ஏதோ விவாதித்தபடி பின்னால் நுழைந்தார்.

"படைத்தலைவரே, என்ன நேர்ந்தது?" விசாரித்தான் மன்னன். துறவியாரையும் எழுந்து வரவேற்றான்.

"பெரிதாக ஒன்றுமில்லை மன்னா. சிறைச்சாலை வரை சென்று வந்தேன்'' என்றார் கிருஷ்ணமல்லர் சலிப்புடன்.

"ஆனாலும் உன் படைத்தலைவருக்கு இத்தனை முரட்டுத்தனம் ஆகாது மன்னா" - பாண்டிய மன்னனிடம் முறையிட்டபடியே இருக்கையில் அமர்ந்தார் துறவியார்.

மன்னன் விழிகள் கிருஷ்ணமல்லரை நோக்கித்திரும்பின. "மன்மசித்தனை சந்தித்தீர்களா படைத்தலைவரே?" என்ற கேள்வியும் உதிர்ந்தது மன்னனிடமிருந்து.

"ஆம், மன்னா. கண்டகோபாலனால் சிறை வைக்கப்பட்டவன் இப்போது விடுவிக்கும்படி வேண்டினான். மறுத்து விட்டேன்."

"பிறகு?"

''என்னிடம் தனிப்பட போரிட்டு,நான் வென்றால் விடுவிப்பீர்களா என்றும் கேட்டான்."

மன்னன் சற்றே நகைத்தான். மன்மசித்தனுக்குத் துணிவு அதிகம்தான்'' என்றவன், "பிறகு?...." என்று வினா எழுப்பினான்.

துறவியார் மீண்டும் முறையிட்டார். "மன்னா, நான் எத்தனை கூறியும் இவரைத் தடுக்க முடியவில்லை. சிறைக்கதவுகளைத் தாமே சென்று திறந்து விட்டார்!"

"ஆமாமாம், வீரனின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியது தமது கடமை என்று நமது



(நெடுநேரமாக சாப்பிடக் காத்திருந்தவர்)
''எங்க ஆபீஸிலே மதிய இடைவேளை ஒரு மணி நேரம்தான்.''
''இந்தப் பிரச்னையையெல்லாம் உங்க நிர்வாகத்துகிட்டே பேசித் தீர்த்துக்குங்க!''
— குல்லூ

படைத்தலைவர் எண்ணியிருப்பார்!" என்றான் மன்னன் புன்முறுவலுடன்.

கிருஷ்ணமல்லர் சற்றுத் தயங்கி துறவியாரின் முகத்தைப் பார்த்துவிட்டுக் கூறினார்: "சிறையின் கதவுகளைத் திறந்ததுமே அவன் எதிர்பாராத விதமாக ஒரு காவலனின் வாளைப் பிடுங்கிக் கொண்டு என் மீது பாய்ந்து விட்டான், மன்னா! வாளை எடுக்கவும் எனக்கு அவகாசமளிக்கவில்லை!"

"அடடா! அப்புறம்?"

துறவியார் தொடர்ந்து கூறினார்: "நான் எதிர்பார்த்தபடியே ஆயிற்று மன்னா. வாளைப் பிடித்த அவன் கரத்தை படைத்தலைவர் தடுத்துப் பிடித்த வேகத்திலேயே அவன் கரம் முறிந்து விட்டது மன்னா! முறிந்த கரத்தை இவர் இன்னும் முரட்டுத்தனமாக இழுத்து வாளைப் பறித்ததில் தோளிலும் முறிவு ஏற்பட்டுவிட்டது!"

மன்னன் இளநகை புரிந்தான். "கிருஷ்ணமல்லரே! யானை பலத்தை உங்கள் தோள்களில் இப்படி நீங்கள் ஒளித்து வைத்திருக்கலாமா? அதனால் எத்தகைய விபரீதம் பாருங்கள்!"

கிருஷ்ணமல்லரின் குரல் சங்கடத்துடன் ஒலித்தது: "மன்னிக்க வேண்டும் மன்னா. சற்று உணர்ச்சிவசப்பட்டு விட்டேன். மற்றபடி நமக்கு நேரிடையான எதிரியில்லாத அவனைத் துன்புறுத்தும் நோக்கம் ஏதும் எனக்கில்லை. உடனே மருத்துவரையும் சென்று கவனிக்குமாறு கூறி அனுப்பிவிட்டேன்."

அத்துடன் அந்த உரையாடலுக்கு முற்றுப் புள்ளி வைக்க விரும்பிய அமுதனார், "சுந்தரா, ஆதித்யனைப் பற்றி ஏதேனும் செய்தி வந்ததா?" என்றார் கவலை தொனித்த குரலில் மீண்டும்.

துறவியாரிடமிருந்து பதில் வந்தது: "அமுதனாரே! ஆதித்யனைக் குறித்து கவலைப்பட ஏதுமில்லை. தாக்குதலைத் தொடங்க யாதவ கிருஷ்ணனுக்கு ஓலையனுப்பி விட்டேன். இளைய பாண்டியர் மல்லைத் துறையிலிருந்து கலங்களுடன் புறப்பட்டாகி விட்டது. நாமும் நாளைக்காலை காளத்தியை நோக்கி நம் வீரர்களை அணிவகுத்து அனுப்பலாம். கிருஷ்ணமல்லரும் தயாராக இருக்கிறார்."

துறவியார் வெகு சகஜமாகக் கூறினாலும் அவரது சொற்களுக்குள் அடங்கியிருந்த போர்த்திட்டம் மாறன் அமுதனாருக்குப் பெரும் திருப்தியை அளித்து விட்டதால் அவரது முகத்திலிருந்த கவலை மறைந்து திருப்தி நிலவத் தொடங்கியது.

இறுதியாக கிருஷ்ணமல்லர் ஒரு சந்தேகம் கேட்டார்: "மன்னவா, காஞ்சியின் செல்வங்களை மீண்டும் கொண்டு வந்து சேர்த்துவிட்டோம். கண்டகோபாலனின் மகளை அவள்

உறவினரிடம் ஒப்படைக்க வேண்டாமா?"

மன்னன் முகத்தில் இலேசாக விஷமம் படர்ந்தது. "அவசியமில்லை படைத்தலைவரே. அவளுக்குப் பாண்டியருடன் புது உறவுகள் ஏற்பட்டுவிட்டன. எனவே இனி அவள் நம்மைச் சேர்ந்தவள். திருப்பியனுப்புவது சாத்தியமல்ல" என்றான் மன்னன்.

படைத்தலைவர் முகத்தில் மட்டுமின்றி துறவியாரின் விசால விழிகளிலும் கூட வியப்பு தெரிந்தது. "மன்னர் கூறுவது விளங்கவில்லை. கண்டகோபாலன் மகளுக்குப் பாண்டியருடன் உறவா?" என்றார் கிருஷ்ணமல்லர்.

"ஆம் படைத்தலைவரே, சந்தேகமிருந்தால் அதோ அந்த சாளரத்தினருகில் சென்று பாருங்கள்" - மன்னன் பதிலில் இன்னும் விஷமம் தொனித்தது.

விடுவிடுவென்று சாளரத்தையடைந்து வெளியே நோக்கிய கிருஷ்ணமல்லர், பலமாக நகைத்தார். அந்தப்புரத்தை நோக்கிச் சென்ற பாதையின் வளைவிலிருந்த செண்பக மரத்தினடியில் அமர்ந்து உலகையே மறந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தாள் ஸ்வர்ணமுகி. அவளையும், அவள் கிள்ளைத் தமிழையும் ரசித்தபடி எதிரில் நின்றிருந்தான் யுவான். கிருஷ்ணமல்லரின் பலமான நகைப்பு இருவரையும் திரும்பி நோக்க வைத்தது.

கிருஷ்ணமல்லரின் பின்னாலிருந்து மன்னனின் குரல் திடமாக ஒலித்தது. "படைத்தலைவரே, இதில் நகைப்பதற்கு ஏதும் இல்லை. யுவான் நம்மைச் சேர்ந்தவன். தந்தையையும் அரசையும் இழந்த ஸ்வர்ணமுகிக்கு அவள் உறவினரிடம் சென்றாலும் சீரான வாழ்வு அமைவது சந்தேகம். இயற்கை வேகங்களும் கலையில் இருவருக்கும் உள்ள நாட்டமும், இந்தப் போரின் சந்தர்ப்பங்களும் இருவரையும் இணைத்திருக்கின்றன. யுவானும் நேற்றே இதைப் பற்றி என்னிடம் தெரிவித்து அனுமதி கேட்டான். நம்மைச் சேர்ந்தவர்களுக்கு நம் ஆதரவைத் தருவதுதான் முறை" என்றான் மன்னன்.

அயல் நாட்டவனை மட்டுமின்றி எதிரிகளைச் சேர்ந்தவர்களையும் கூடத் தம்மைச் சேர்ந்தவர்களாக எண்ணும் பாண்டிய மன்னனின் உயர்ந்த உள்ளத்தைப் புரிந்து கொண்டதால் அந்த அறையிலிருந்தவர்கள் மனத்தில் சந்துஷ்டி நிலவியது.

காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பையும் நிர்வாகத்தை சீர் செய்யும் பணியையும் யுவானிடம் ஒப்படைத்து அவனைக் காஞ்சியிலேயே இருக்க உத்தரவிட்ட பாண்டிய மன்னன், மறுதினமே படைகளை அணிவகுத்து காளத்தியை நோக்கிச் செல்ல உத்தரவிட்டான்.

(தொடரும்)

பரபரப்பான கோபாலபுரம் நான்காவது தெரு. முதல்வர் குடியிருக்கும் அதே தெருவில் தான் குடியிருக்கிறார் மு.க. முத்து. அடித்தளத்தையும், முதல்தளத்தையும் வாடகைக்கு விட்டுவிட்டு இரண்டாவது மாடியில் இரண்டு அறைகள் கட்டி, அதில் குடியிருக்கிறார். திறந்த மார்புடன், லுங்கியோடு, நம்மை வரவேற்கும் முத்துவுக்கு, ஐம்பது வயது நெருங்கினாலும் இன்னமும் இளமை மிச்சமிருக்கிறது.

"ரொம்ப நாட்களாக உங்களைப் பற்றி செய்தி ஏதுமில்லை. திடீரென்று, ஸ்டாலினுக்கு எதிராக அ.தி.மு.க. சார்பில் போட்டியிடப் போவதாகச் செய்திகள் அடிபட்டனவே!"

"உங்களுக்கு அந்தச் செய்தி எப்படி ஆச்சர்யத்தைக் கொடுத்ததோ அதுபோன்ற நிலைதான் எனக்கும். பல மாதங்களாக நான் ஜெயலலிதா அவர்களைச் சந்திக்கவேயில்லை. அ.தி.மு.க. விலும், தீவிர ஈடுபாட்டுடன் இல்லை. அந்த நிலையில் இந்தச் செய்தி எப்படிக் கிளம்பியது என்பது புதிர். ஒருவேளை, என் அப்பாவை (கலைஞர்) சங்கடப்படுத்துவதற்காக யாராவது இந்தச் செய்தியை விதைத்திருக்க வேண்டும்."

"அப்பாவைச் சங்கடப்படுத்துவது என்றால்..."

"எனக்கும் என் அப்பாவுக்கும் உறவு சரியாக இல்லை என்பது தெரிந்த விஷயம். நான் மீண்டும் அப்பாவுக்கு நெருக்கமாக ஆகக் கூடாது என்பதற்காக, "சிலர்" இந்தச் செய்தியைக் கிளப்பி விட்டிருக்கலாம் அல்லவா?"

எஸ்.டி.எஸ். ஆகியோர் வலியுறுத்தி அ.தி.மு.க வில் சேர்த்தார்கள். 1991-ல் அ.தி.மு.க. பதவிக்கு வந்தபோது திரைப்பட வளர்ச்சி நிறுவனத் தலைவர் பதவி கொடுக்க வேண்டி ஜெ.வை அணுகினேன். அவர் கொடுக்கவில்லை. ஆனால் ஐந்து லட்ச ரூபாய் கொடுத்தார். அதற்காகப் பல மேடைகளில் அப்பாவைத் திட்டினேன். மற்றவர்கள் திட்டும்போது கேட்கக்கூடிய நிலையில் வைக்கப்பட்டேன். அதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது



## — மனம் திருந்திக் கேட்கிறார் மு.க. முத்து

"இப்போது நீங்கள் அ.தி.மு.க.வில் இருக்கிறீர்களா?"

"இத்தனை வயதாகியும் வாழ்க்கையில் இன்னமும் செட்டில் ஆகவில்லையே என்ற ஆதங்கத்தின் காரணமாக, பல அவசர முடிவுகளை எடுத்துவிட்டு, அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அந்த அடிப்படையில், 1989-ல் அப்பா ஆட்சிக்கு வந்தபோது கிரானைட் வியாபாரம் செய்யலாம் என்று அப்பாவை அணுகினேன். ஆனால், எனக்கு உதவி செய்தால் ஏதாவது சர்ச்சை வருமே என்ற காரணத்தால் அப்பா எந்த உதவியும் செய்யவில்லை. அந்தக் கோபத்தில் இருந்த என்னை, இப்போது பிரிந்து வாழும் என் மனைவி (சிதம்பரம் ஜெயராமன் மகள்), லீலாவதி (எம்.ஜி. ஆருக்கு கிட்னி கொடுத்தவர்) மற்றும்

'எப்படிப்பட்ட தவறுகள் செய்து விட்டோ மென்று' எண்ணத் தோன்றுகிறது. அதன் காரணமாக இப்போது குற்ற உணர்வோடு தடுமாறிப் போகிறேன். எம்.ஜி.ஆருக்கு என்னிடம் இருந்தது போன்ற பாச உணர்வெல்லாம் ஜெ.க்கு கிடையாது. என் அப்பாவை அவமானப்படுத்த என்னைப் பயன்படுத்திக் கொண்டார் அவர்."

"ஸ்டாலின் இப்போது மேயர் தேர்தலில் போட்டியிடுவதைப் பற்றிப் பலமான சர்ச்சை அடிபட்டுக் கொண்டிருக்கிறதே?"

"ஸ்டாலின் என் சகோதரன் என்பதற்காக சொல்லவில்லை. துவக்க காலத்தில் அப்பா ஸ்டாலினை வளர்க்க விரும்பியிருக்கலாம். ஆனால் மிசாவில் அடிபட்டு, உதைபட்டு அரசியலில், ஒரு கட்டத்துக்கு அப்புறம், தானே

# இந்திர தனுசு

## 39. அசுரத் தாக்குதல்!

காகதீய இளவரசி ருத்ராம்பாளைக் குறிவைத்து கனவேகத்தில் பறந்தது அந்தக் குறுவாள். அடுத்து கனத்த வாளொன்றும் அவள் தலைமீது வேகத்துடன் இறங்க முற்பட்டது. போதாக்குறைக்கு சற்றுத் தொலைவிலிருந்த போர் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பொன்றும் அவள் கழுத்தைக்



குறிவைத்துப் பறந்தது.

ருத்ராம்பாளின் இடதுகரத்திலிருந்த கேடயம் உயர்ந்து குறுவாளையும், கழுத்தை நோக்கிப் பறந்து வந்த அம்பையும் லாகவமாகத் தடுத்தது. அவள் வலது கரத்திலிருந்த வாள் உயர்ந்து, தலைக்கு மேல் இறங்கிய வாளைத் தடுத்து, தீப்பொறி பறக்கப் பின் வாங்கி, மீண்டும் சுழன்றது. தொடர்ந்து அவளை நோக்கிப் பறந்த அம்புகளும், தாக்க முயற்சி செய்த வாளும் அவளது வேகத்திற்கு முன் பயனற்று அந்தப் பயிற்சிக் கூடத்தில் பெரும் ஒலிகளை எழுப்பி எதிரொலித்தன. சற்று நேரத்தில் அவள் வாளுடன் மோதிய வாள் ஒரு மூலையை நோக்கிப் பறந்து, கீழே சிதறிக் கிடந்த ஆயுதங்களின் மீது மோதி, பெரும் ஒலியை எழுப்பியபடி விழுந்தது.

தலைக் கவசத்தைக் கழற்றி, வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்ட இளவரசியின் விழிகள், எதிரில் நின்ற உபதலைவனையும் வீரர்களையும் உஷ்ணத்துடன் பார்த்தன. "இதைவிட வேகமாகத் தாக்க உங்களால் முடியாதா?" என்ற கேள்வியும் அதே உஷ்ணத்துடன் வெளிப்பட்டது அவளிடமிருந்து.

அச்சத்தில் இன்னும் வியர்த்து வழிந்தபடி திருதிருவென விழித்த உபதலைவனின் முகத்தை நோக்கி இடதுகரத்திலிருந்த கேடயத்தை விட்டெறிந்தாள். வாளை ஒரு சுழற்றலில் திருப்பி உறையிலிட்டபடியே பயிற்சிக் கூடத்தை விட்டு வெளியே நடந்தாள். கிழக்கிலிருந்து வீசிய குளிர்ந்த காற்று அவள் உஷ்ணத்தைத் தணிக்க முயன்று தோற்றது. ஆதித்யன் சிறைப்பட்டபோது, மன்னன் அனுமதித்தால் தனக்குப் போர்க்கலையில் பயிற்சியளிப்பதாக அவன் கூறிய வார்த்தைகள் அவள் செவியில் மீண்டும் ஒலிக்கவே, அதே வேகத்தில் சிறைக்கூடத்தை நோக்கி விறுவிறுவென்று நடந்தாள் அவள்.

இளவரசியின் வருகையைக் காவலர் அறிவித்தபின்பும் சிறைக்கூடத்தின் சாளரத்தின் வழியே தெரிந்த நீலவானத்தையும், மேகக் கூட்டங்களையும் ரசித்தபடி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தான் ஆதித்யன். சற்று கழித்தே அவளைத் திரும்பி நோக்கியவனின் விழிகளில் விஷமம் படர்ந்தது. கவசங்களுடனும், விழிகளில் தெறித்த உஷ்ணத்துடனும் அவள் நின்ற கோலத்தைக் கண்டவனின் இதழ்களில், முறுவல் ஒன்றும் நெளிந்தது.

"இளவரசியார் ஏதோ போருக்கு ஆயத்தமாக வந்திருப்பதாகத் தெரிகிறது" என்றான் அந்த விஷமம் குரலிலும் ஒலிக்க.

"ஆம்!" என்ற இளவரசி தொடர்ந்து, "நீ இங்கு வந்த அன்று எனக்குப் போர்ப்பயிற்சி அளிப்பதாகக் கூறினாயல்லவா?" என்றாள்.

ஆதித்யன் நகைத்தான்.

"ஏன் நகைக்கிறாய்?"

"அந்த உத்தேசத்தை நான் மாற்றிக் கொண்

## விஷ்வக்சேனன்

டேன்" என்றான் நகைப்பினூடே.

"ஏன்? அச்சமாக இருக்கிறதா? அல்லது நான் பெண் என்பதால் குறைவாக மதிப்பிடுகிறாயா?" - இளவரசியின் கேள்வியில் வேகமிருந்தது.

ஆதித்யன் விழிகளில் ஒருகணம் கூர்மை பளிச்சிட்டது. செதுக்கப்பட்ட கருங்கல் இருக்கையில் நிதானமாக அமர்ந்து அவளை ஏறிட்டவன், "பாண்டிய வம்சம் அச்சமென்பதை அறவே அறியாதது இளவரசி. தவிர...."

"தவிர...?"

"தவிர, உங்களைப் பெண் என்று யார் கூறியது?" என்ற ஆதித்யன் பலமாக நகைத்தான்.

"ஆதித்ய பாண்டியா...!" ருத்ராம்பாளின் குரல் ரௌத்ராகாரமாக உயர்ந்து ஒலிக்க, ஒருகால் தரையில் ஓங்கி அறைந்தது. அவள் கரமும் வாளின் பிடி மீது அமர்ந்து அதைப் பாதிவரை

உருவவும் செய்தது.

"அப்படி யாரும் நிரூபித்தால் முதலில் அவர்களுடன் போரிடத் தயாராக இருக்கிறேன் இளவரசி" என்றான் ஆதித்யன் நகைப்பினூடே.

ருத்ராம்பாளின் விழிகள் சிவந்து, வெளியே உருவப்பட்டுவிட்ட வாளுடன் சேர்ந்து மின்னின.

அவளைக் கையமர்த்திய ஆதித்யன், "இன்னும் இரு தினங்களுக்கு உங்கள் வேகத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள் இளவரசி" என்றான் முறுவலுடன்.

"இரு தினங்களா? எதற்கு?" - உஷ்ணத்துடன் வந்தது இளவரசியின் கேள்வி.

"உங்களுக்குப் பயிற்சியளிக்க ஒருவர் வந்து கொண்டிருக்கிறார். பெண்களுக்கு வாட் பயிற்சியளிப்பதில் தமிழகத்தில் அவருக்கு இணையானவர் கிடையாது" என்றான் ஆதித்யன் அதே முறுவலுடன்.

"யார் அவர்?"

"வீரபாண்டியர். என் தமையன். பெண்களுக்குப் பயிற்சியளிப்பதில் வல்லவர்."

ருத்ராம்பாளின் குரலில் ஆத்திரம் வெடித்தது. "வீரபாண்டியன் வரும்வரை நீ இங்கிருக்கப் போவதில்லை ஆதித்ய பாண்டியா!" என்றவள் தொடர்ந்து இரைந்தாள். "நாளையே உன்னைத் தலைநகர் உறங்கைக்கு இழுத்துச் செல்கிறேன். அங்கு உனக்கு அளிக்கும் தண்டனையை வாழ்நாள் முழுவதும் மறக்க இயலாதபடி செய்து விடுகிறேன் பார்! பெட்டிப் பாம்பாக உன்னை அடக்காவிட்டால் நான் ருத்ராம்பாளில்லை..." என்றவள் திரும்பி நடந்தாள் வேகமாக. அவள் எடுத்து வைத்த ஒவ்வொரு அடியிலும் ஆத்திரம் பிரதிபலித்தது.

ஆதித்யனின் நகைப்பொலி சிறைச்சாலையை விட்டு வெளியேறிய பின்பும் அவளைத் தொடர்ந்து வந்தது. கோட்டைத் தலைவனை அழைத்து பாதுகாவலுக்கான அனைத்து ஏற்பாடுகளையும் உடனே செய்யும்படி உத்தரவிட்டவள், ஆதித்யனை அழைத்துச் செல்ல ரதத்தையும் வீரர்களையும் தயாராகும்படி ஆணையிட்டாள். காஞ்சியிலிருக்கும் பாண்டியரது படைகள் அத்தனை எளிதில் நெல்லூர்புரத்திற்கு வருவதோ, இடையில் காளத்தியிலிருக்கும் தந்தையின் படைகளைக் கடப்பதோ சாத்தியமல்ல என்று தீர்மானித்தவள், மறுதினம் உதயத்திற்கு முன்பாகவே ஆதித்யனை அழைத்துச் சென்று விடவும் தீர்மானித்தாள்.

**உ**தய நேரத்தில் அரண்மனையிலிருந்து முன்னும் பின்னும் இருபது புரவி வீரர்கள் தொடரப் புறப்பட்ட அந்த ரதத்தினுள், பிணைக்கப்பட்ட கரங்களுடன், அதே விஷம புன்முறுவலுடன் அமர்ந்திருந்தான் ஆதித்யன் அவன் எதிரில் வாளுடன் அமர்ந் அவனைப் பார்த்தபடியே வந்த ருத்ரா பாளுக்கு அவன் போக்கு பெரும் புதிரா இருந்தது. 'எதிரிகளின் நடுவில், பிணை க்கப்பட்ட கரங்களுடன் சித்ரவதைக் கூட திற்கு அழைத்துச் செல்லப்படுகிறோம் எ பதை அறிந்த பின்பும், ஒருவன் இத்தனை நிதானத்துடனும், முகத்தில் விரிந்த முறுவ மாறாமலும் இருக்க இயலுமா' என்ற வியப் அவளை ஆட்கொண்டிருந்தது.

பெண்ணையாற்றையொட்டி துறை முகத்தை நோக்கி நீண்ட பாதையில் சென் ரதம், ஆற்றைக் கடந்து வடக்கு நோக்கி திரும்பியது. கடற்கரையை ஒட்டியிருந் பாதையில் கனகபுரியை நோக்கிச் சென் கொண்டிருந்த வணிகர்களின் பொதிவண் களைக் கடந்து, ரதம் அதிவேகமாகச் செ லவும் தொடங்கியது.

பாண்டிய இளவலை சிறைப்படுத் அழைத்துச் செல்வதைக் கண்டதாலே என்னவோ, நீலக்கடலில் அலைகளுக் கோபம் அதிகரித்திருக்க வேண்டு மணல்வெளியைத் தாண்டிய அலைக அந்தப் பாதையை நோக்கிக் கோ அலைகளாகச் சீறி எழுந்து தாழ்ந் கொண்டிருந்தன. மணல்வெளியை அடுத் எழுந்து நின்ற பரதவர் இல்லங்களி லிருந் வெளியே வந்து விழுந்த உணவு துண்டுகளுக்காகக் கடற்பறவைகளும் காக களும் பெரும் இரைச்சலுடன் போட் யிட்டுக் கொண்டிருந்தன. பறவைகளை விரட்டி விளையாடிய சிறுவர்கள், இளவர யின் ரதத்தையும் வீரர்களையும் ஏதோ அ சயத்தைக் காண்பதுபோல் பார்த்தப நின்றார்கள். முன்னே சென்ற பொதி வண் கள் இளவரசியின் ரதத்தைக் கண்டது ஒதுங்கி, வழி விட்டன. சாலையோரத்து சத்திரங்களில் வணிகர்கள் உணவுக்காக காத்துக் கிடந்தனர்.

நகரப் பகுதியைத் தாண்டியதும் வேக அதிகரித்து விட்ட ரதம், ஐந்தாவது காதத்தி

''நீங்கள் முதன்முதலில் தயாரித்த பட எது?''

''ஒருகை பார்க்கிறேன்!''

''கடைசியாகத் தயாரித்த படம்?''

''இரு கை ஏந்துகிறேன்!''

– ஆ. பென்னியமி



வேகம் குறைந்தது. வெளியே தலைநீட்டிய இளவரசியின் விழிகள் விரிந்தன. பொதி மூட்டைகள் பாதையெங்கும் சிதறிக் கிடக்கக் கவிழ்ந்து கிடந்தது ஒரு பொதிவண்டி! மூட்டைகளினிடையே சீனத்து வணிகர்களாகத் தோன்றிய நான்கைந்து பேர் விழுந்து வேதனையுடன் நெளிய, அவர்களின் உடைகள் குருதியில் நனைந்து கிடந்தன. அருகில் அடிமைகள் இருவர் கறுத்த உடலில் காயங்களுடன் குருதியைப் பரப்பியபடி விழுந்து கிடந்தனர். அடுத்து மூன்று பொதிவண்டிகளும் சரிந்து கிடந்தன. சற்றுத் தூரத்திலிருந்த சத்திரமொன்றிலிருந்து பெரும் கூச்சலும் எழுந்து கொண்டிருந்தது.

கீழே விழுந்து கிடந்த சீன வணிகரில் ஒருவன், புரண்டு ஏதோ முனகுவதைக் கவனித்து, அவனை எழுப்பி அமரவைக்க உத்தரவிட்டாள் காகதீய இளவரசி. வீரர்கள் அளித்த நீரை இரண்டு மடக்கு விழுங்கிய சீன வணிகன், விழிகளைத் திறந்து இளவரசி நிற்பதைக் கவனித்ததும் வணங்க முயன்றான். “கொள்ளை, கொள்ளை! அதோ..” என்ற சொற்களை மிகுந்த சிரமத்துடன் உதிர்த்தவனின் கரம் உயர்ந்து, தூரத்துச் சத்திரத்தைச் சுட்டிக்காட்டியது.

வணிகனின் வார்த்தைகள் செவிகளில் விழுந்ததும், ருத்ராம்பாள் திகைத்தே போனாள். காகதீயர் ஆட்சியில் வழிப்பறிக் கொள்ளையா? அதுவும் கனகபுரிக்குச் செல்லும் அயல்நாட்டு வணிகர் கொள்ளையடிக்கப்பட்டனர் என்றால், வணிகமும், நெல்லூர்புரத்தின் வருவாயும் எப்படியெல்லம் பாதிக்கப்படும் என்று எண்ணியவளின் ஆத்திரம் பொங்கியது. ஆதித்யனுக்குக் காவலாக வீரர் நால்வரை நிறுத்தியவள், மற்ற வீரர்களைப் பின்தொடர உத்தரவிட்டு சத்திரத்தை நோக்கி விடுவிடுவென்று நடந்தாள். சத்திரத்தை நெருங்க நெருங்க, வாட்கள் மோதும் ஒலிகளும், வணிகர்களின் கூச்சலும் உயர்ந்து ஒலிப்பதை உணர்ந்தவள், வாளை உருவியபடி சத்திரத்தின் வாயிலில் நுழைந்து நின்றாள். அவள் அது வரை கேட்டும் பார்த்தும் அறியாத காட்சி விரிந்தது, அவள் கண்ணெதிரே. தலையில் சுற்றப்பட்டிருந்த முண்டாசுகள் முகத்தைச் சேர்த்து மறைத்திருக்க, கொள்ளையர்களாகத் தோன்றிய பதின்மர் அங்கு வணிகருடனும் அடிமைகளுடனும் போரிட்டுக் கொண்டிருந்தனர். உருவிய வாளை உயர்த்தி தன் வீரர்களை அந்தக் கொள்ளையரைத் தாக்க உத்தரவிட்ட காகதீய இளவரசி முன்னே பாய்ந்தாள்.

அடுத்து நிகழ்ந்தது விபரீதம்! அதுவரை கொள்ளையருடன் போராடிக் கொண்டிருந்த வணிகர்களும், அடிமைகளும், முகத்தைத் துணியால் மறைத்திருந்த அந்தக் கொள்ளையரும் சேர்ந்து இளவரசியையும், வீரர்களையும் தாக்கத் தொடங்கினர்! ருத்ராம்பாளின் திகைப்பு உச்சத்தை எட்டியது. எதிர்பாராத அந்தத் தாக்குதலால் வணிகர்களுக்கு இடையே ருத்ராம்பாளின் சில வீரர்கள் சென்று சிக்கி விட்டிருந்தனர். மேலும் தனது வீரர்கள் நால்வர் தரையில் உருண்டதைக் கண்ட ருத்ராம்பாள், இனியும் தாமதிப்பது பெரும் அனர்த்தத்தை ஏற்படுத்தும் என்பதை உணர்ந்தாள். அந்தக் கொள்ளை நிகழ்ச்சியே ஏதோ சதியென்பது புரிந்ததால் தனது வீரர்களைத் திரும்ப உத்தரவிட்டுத் தானும் வாயிலை நோக்கி நகர முயன்றாள்.

அவள் உத்தரவு என்னவோ துரிதமாகத் தான் வந்தது. ஆனால் அதை நிறைவேற்றுவதோ, அந்த சத்திரத்தை விட்டு வெளியேறுவதோ அவளுக்கும் காகதீய வீரர்களுக்கும் அத்தனை எளிதாக இல்லை. அந்தச் சிறு போரிலிருந்து மீண்டு சத்திரத்தின் வாயிலை இளவரசி அடையுமுன்பாக, இன்னும் சில வீரர்களும் காயங்களுடன் உருண்டு விழுந்ததைக் கண்டாள். வெகு ஆத்திரத்துடன் வாளை வீசியபடியே மெள்ள வெளியேறி, எஞ்சிய வீரர்களை ரதத்தை அடைய உத்தரவிட்டுத் தானும் கடற்கரைப் பாதையை நோக்கி விரைந்தாள்.

அங்கும் அவளுக்காகக் காத்திருந்தது பேரதிர்ச்சி! பிணைக்கப்பட்டிருந்த கரங்கள் விடுவிக்கப்பட்டு, முன்புறம் கரங்களைக் கட்டியபடி வெகு சகஜமான பாவத்துடன் ரதத்தின் படிகளில் அமர்ந்து இளவரசி வாளுடன் விரைந்து வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தான் ஆதித்யன். பொதிமூட்டைகளுக்கிடையே உருண்டு கிடந்த சீன வணிகர்களின் இடத்தில், தான் காவலுக்கு நிறுத்திய காகதீய வீரர்கள், காயங்களுடனும், கரங்கள் கட்டப்பட்டும் உருண்டு கிடப்பதையும், சீன வணிகர்கள் உருவிய வாட்களுடன் எழுந்து நிற்பதையும் கண்டவள் திகைத்தாள். அதையும்விட ஆதித்யனின் அருகில் நின்றிருந்த சீனனையும்

அவன் கரத்திலிருந்த சீனத்து வில்லையும் கண்டவளுக்கு, திகைப்பில் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

சிங்கவேள் குன்றத்தில், யாதவ இளவலை அவளிடமிருந்து மீட்ட ஐந்துகணைகளுடன் கூடிய அதே சீனத்து விசித்திர வில் அது! உற்றுக் கவனித்தவளுக்கு அன்று சீனத்து முதிய வணிகனாக வந்தவன்தான் இப்போதும் சாதாரண சீனத்து வணிகனாக எதிரில் நிற்கிறான் என்பது புரிந்தது. ரதத்தின் புரவிகளைப் பிடித்தபடி நின்றவன், சோழ தூதனாக ஆதித்யன் வந்தபோது உடன் வந்தவன் என்பதும் புரிந்தது அவளுக்கு. திகைப்பு என்ற சொல்லுக்குப் பொருளை முழுவேகத்தில் அனுபவித்த இளவரசியும் அவள் வீரர்களும் அடித்துவைத்த சிலைகளாக அப்படியே நின்றிருந்தனர்.

உயர்த்திய அந்த விசித்திர வில்லுடன் நெருங்கிய சீனன், "மன்னிக்க வேண்டும் இளவரசி. மறுபடி உங்களிடமிருந்து ஒரு இளவலை மீட்க நேரிட்டிருக்கிறது. முன்பு உங்களிடமிருந்து மீட்ட யாதவ இளவலிடமிருந்து உங்களுக்காக ஓர் ஓலையும் இருக்கிறது" என்றவன், கச்சையிலிருந்து ஓலைக் குழலொன்றை எடுத்து அவளை நோக்கி எறிந்தான். அடுத்து அந்த சீனன் செய்த சமிக்ஞையால் பின்புறத்தில் வந்து கொண்டிருந்த கொள்ளையரும் வீரர்களும், வணிகர் வேடமிட்டவர்களும், காகதீய வீரர்களின் புரவிகளை நெருங்கித் தாவியேறினார்கள். சத்திரத்தின் பின்னாலிருந்தும் பல புரவிகள் வெளிப்பட்டன. சீனனும் புரவியொன்றில் தாவியேறிக் கொள்ள, ஆதித்யனைச் சுமந்த ரதமும் புரவிகளும் இரண்டொரு கணங்களில் அங்கிருந்து துறைமுகத்தை நோக்கிச் சென்ற பாதையில் விரைந்து மறைந்தன. ரதமும் புரவிகளும் விரைவதைப் பார்த்தபடி நின்ற இளவரசிக்கு, நடந்தவை அனைத்தும் கனவோ என்ற பிரமை கூட ஏற்பட்டது.

நெடுநேரம் பிரமை தட்டிய விழிகளுடன் நின்ற இளவரசி, மெள்ளப் பார்வையைத் திருப்ப பிரயத்தனப்பட வேண்டியிருந்தது. கரத்திலிருந்த ஓலையைப் பிரித்தவள், அது யாதவ கிருஷ்ணனின் முத்திரையுடனும் கையொப்பத்துடனுமிருப்பதையும், அன்றே அவனது படைகள் தலைநகர் உறங்கையை நோக்கி நெருங்கிக் கொண்டிருப்பதை அறிவித்ததையும் கண்டாள். தெற்கில் பாண்டியர் தாக்குதலைத் தொடங்கியிருப்பதற்கும் யாதவரின் தாக்குதலுக்கும் தொடர்பிருப்பதும் புரிந்தது அவளுக்கு. பொதிவண்டிகளைத் தவிர தான் விரைந்து செல்ல மருந்துக்குக் கூட ஒரு புரவி அங்கில்லாததையும், தான் துரிதமாகச் செல்லாவிட்டால் யாதவ இளவலின் பணி எளிதாகவே முடிந்துவிடும் என்பதையும் உணர்ந்தவள் விட்ட பெருமூச்சு, உண்மையில் அனல் மூச்சாகவே வெளிவந்தது. துறைமுகத்தை நோக்கிச் சென்ற வணிகர்களிடம் கோட்டைத் தலைவனுக்குச் செய்தினுப்பி விட்டுக் காத்திருந்தாள் இளவரசி.

வேறுவழியின்றி அரைஜாம நேரத்திற்கு சத்திரத்தின் முகப்பில் காத்துக் கிடந்த காகதீய இளவரசிக்கு இன்னும் அதிர்ச்சியளிக்கக்கூடிய செய்தியுடன் நெல்லூர்புரத்திலிருந்து காகதீய வீரர்கள் புரவிகளில் விரைந்து வந்து கொண்டிருந்தார்கள். நெல்லூர்புரத்துக் கோட்டைத் தலைவன் அனுப்பியிருந்த அந்த வீரர்களின் முகங்களில் எல்லையற்ற கலவரம் விரவிக் கிடப்பதையும், அவளை நெருங்கி வணங்கிய வீரர் தலைவன் வார்த்தைகளின்றிக் கூறவந்ததைக் கூற இயலாது தவிப்பதையும் கண்டவள், இன்னும் விரும்பத்தகாதவைகள் ஏதோ நிகழ்ந்திருக்க வேண்டுமென்பதைப் புரிந்து கொண்டாள். வீரர் தலைவனின் தவிப்பை எரிச்சலுடன் நோக்கியவள், "வீரனே, கூறவந்ததை விரைவாகக் கூறு" என்றாள் உஷ்ணம் நிறைந்த குரலில்.

சொற்களை மென்று விழுங்கி, அவளை ஏறெடுத்து நோக்கவும் அஞ்சிய அந்த வீரனின் கரம் உயர்ந்து, துறைமுகமிருந்த திசையைச் சுட்டிக்காட்டியது. "இளவரசி, அதோ பாருங்கள்!" என்றான் வீரன் திணறியபடி.

துறைமுகமிருந்த பகுதியில் மெலிதாகத் தெரியத் தொடங்கிய கரும்புகை மெள்ள மெள்ள அதிகரித்து, கரிய பூதங்களைப் போல் உயர்ந்து மேகங்களைக் கறைப்படுத்தும் உத்தேசத்துடன் எழுந்து கொண்டிருந்தது.

"துறைமுகம் தாக்கப்படுகிறது இளவரசி! பாண்டியர் போர்க்கலங்கள் நமது கலங்களை அழித்து தீயிட்டுக் கொண்டிருக்கின்றன. உடன் யாதவ இளவலின் கலங்களும் வீரர்களும் துறைமுகத்தை ஆக்கிரமித்து விட்டார்கள். பாண்டிய வீரர்கள் இளையபாண்டியர் ஜடாவர்ம வீரபாண்டியர் தலைமையில் நமது கோட்டையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள்" என்று திணறியபடியே முடித்த வீரனை ஒதுக்கிய ருத்ராம்பாள், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, புரவியொன்றில் தாவியேறி துறைமுகத்துப் பாதையில் புழுதி பறக்க அதனைப் பறக்க விட்டாள்.

அதே சமயத்தில் நெல்லூர்புரத்துக் கோட்டை வீரபாண்டியனின் அசுரத் தாக்குதலில் விழுந்து கொண்டிருக்க, கிழக்கு வாயிலைப் பெயர்த்துவிட்ட வீரபாண்டியன், உயர்த்திய வாளுடன் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

# சுஜாதா பக்கம்



பினாங்கு பயனீட்டாளர் சங்கத்தினர், வாலி + வைரமுத்து = ஆபாசம் என்கிற புத்த கத்தை எனக்கு அனுப்பியிருந்தார்கள். 'நஞ்சு கலக்குகிற கொலை பாதகச் செயல்' எனும் தலைப் பில் திலகவதியின் கோபமான முன்னுரையோடு, 'பாமரன்' என்னும் புனைபெயரில் ஓர் அன்பர் இரு கவிஞர்களின் ஆபாசமான (பாதி ஆபாசம் படிப்பவர் மனத்திலிருந்து வருவது) வரிகளைத் தேர்ந்தெடுத்து அவைகளை விவரமாகப் பிரசுரித்து "இந்த அநியாயத்தைக் கேட்க ஆளில்லையா? எழு பது வயசாகப் போகும் வாலிக்கு பெண் சமைஞ்சா என்ன, சமையாட்டா என்ன? வடுகப்பட்டி 'வக்கிர முத்து'வுக்கு கிச்சுக் கிச்சு மூட்ட எந்த இடம் என் றெல்லாம் ஏன் விசாரம்? காலிகளுக்கு எதற்கடா கவிஞர் பட்டம்?த்தூ" என்று முடித்திருக்கிறார். சுவாரஸ்யமான புத்தகம் (விலை ரூபாய் 13. 586 திவான் பகதூர் சாலை, கோவை - 641 002) சினிமா வின் கிளுகிளுப்பான வரிகள் அனைத்தையும் இத் தனை சிரத்தையுடன் யாரும் இதுவரை தொகுத்த தில்லை. சினிமாவின் ஆபாசத்தைச் சாடுவது ஒரு சம்பிரதாயமான ஒழுக்கம். கவிஞர்களை கண்டபடி திட்டுவதன் மூலம் பயனீட்டாளர் களின் பொறுப்பு முடிவதில்லை. இந்த வகைப் பாடல்களைத் தேர்ந்த கவிஞர்களான அவர்களை எழுத வைக்கும் சமுதாய அமைப்பை ஒரு சமூக இயல் கண்ணோட்டத்தோடு பார்க்கும்போது இந்த சரிவு அல்லது வீழ்ச்சி (நான் இதை மாற்றம் என்று கூடச் சொல்வேன்) நம் பொதுவாழ்வின் எல்லாத் துறைகளிலும் இருப்பதை கவனிக்க முடியும். இதைப் பற்றி உணர்ச்சிவசப்பட்டு கவி ஞர்களை திட்டித் தீர்த்துவிட்டு பயனீட்டாளர்கள் வீட்டுக்குப் போய்விடக் கூடாது. இந்தப் பாடல் வரிகள் நாம் ஏதோ ஒன்றைப் பெறுவதற்காகக் கொடுத்த விலை என்பதை மறக்கக் கூடாது. அந்த ஏதோ ஒன்று என்ன? மிகவும் பரபரப்பாகப் பேசப் படும் நம் பேச்சு சுதந்தரம். எந்த சமூகத்திலும் சில உரிமைகளை இழந்து அல்லது கட்டுப்படுத் தித்தான் ஆபாச எழுத்துக்களை நீக்க முடியும். பூரண சுதந்தரத்துடன் வரும் இலவச இணைப்பு கள் ஆபாசம், வன்முறை போன்றவை. இவற்றைத் தடுக்க நாம் சிலவற்றை இழக்கத் தயாரா என் பதைத் தீர்மானிக்க வேண்டும்.

மலேசியா போன்ற முன்னேற்ற நாடுகளின் கூட்டரசின் அரசமைப்பைக் கூர்ந்து கவனித்தால் அதன் நாடாளுமன்றம், "நாட்டின் ஒழுக்கப் பண் பினைக் காக்கும் பொருட்டுத் தேவையென அல் லது உகந்ததென தான் கருதுகிற வரையறைகளை விதிக்கலாம்" என்று சொல்கிறது. அது போன்ற ஒரு வசதி நம் சாசனத்திலும் இருந்தாலும் இந்தியா போன்ற துணைக்கண்ட நாட்டில் இதைத் (தடா போல தவறாகப் பயன்படுத்தலாம் என்று பெரியவர்கள் தயங்கு கிறார்கள். அதனால்தான் அடிப் படை உரிமைகளைக் கட்டுப்படுத்துவதை நாம் அதிகம் விரும்புவதில்லை. சினிமாப் பாடல்களின் வரிகள் சமூகத்தை கவலைக்கிடம் தரும்படி பாதித் தால் அவைகளைத் தடை செய்ய அரசியல் சாசனம் அனுமதி தருகிறது. இதை யார் தீர் மானிப்பது? சென்ஸார் போர்டுக்கு இந்த உரிமை இருக்கிறது. இதற்கு மேல் இயங்க ஒரு 'மக்கள் சென்ஸார்' அமைக்கலாம். இந்தியா போன்ற நாடுகளில் இதற்கெல்லாம் இன்னும் அவசரம் ஏற்படவில்லை. ஏழைமை நீக்கம்தான் நம் முழு முதல் பிரச்னை. மேலும் சினிமா, டீ.வி. எல்லாம் நாம் காசு கொடுத்துத் தேர்ந்தெடுப்பது. அதைத் தவிர்க்கும் உரிமை நமக்கு இருக்கும் வரை அரசியல் சாசன மாற்றத்துக்கு அவசரமில்லை. மலேசியா போன்ற முன்னேற்ற நாடுகளில் ஏழைமை இல்லை. பயனீட்டாளர்கள் அவர்கள் அரசியல் சாசனத்தின் உதவி கொண்டு தமிழ் சினிமாக்களில் பாடல்களையே தடை செய்யலாம். வேண்டுமெனில் தமிழ் சினிமாவையே. அதற்கெல் லாம் அவர்களுக்கு வசதியும் நேரமும் செல்வமும் உள்ளது.

நான் வாலிக்கோ, வைரமுத்துவுக்கோ வக் காலத்துக்கு வரவில்லை. அவர்களைத் திட்டுவ தால் தன்னை மட்டும் ஞானஸ்நானம் பண்ணிக் கொள்ளும் போக்குக்குத்தான் நான் எதிரி. உலகின் எந்த இலக்கியத்திலும் ஆபாச வரிகள் உண்டு. அண்ணாவின் கம்பரசம் படித்திருக்கிறோம். அது போல் காளிதாசனில், ஷேக்ஸ்பியரில், பைபிளில், அருணகிரிநாதரில், ஆழ்வார்களில், சித்தர் பாடல் களில் எதிலும் ஆபாச வரிகளை முனைந்து தேர்ந் தெடுக்கலாம். இவைகளை மட்டும் புத்தகமாகப் போட்டால் உலக இலக்கியமே ஆபாசம் என்ற முடிவுக்கு வர முடியும். ஆபாசமே இல்லாதது எது என்று தேடினால் எண் சுவடி வாய்பாடு தான் மிஞ்சும். அதில் கூட ஒன்பதாம் வாய்பாட் டுக்கு சில பயனீட்டாளர்கள் ஆட்சேபிக்கலாம். வாலியும் வைரமுத்துவும் பல நல்ல வரிகளும் எழுதியிருக்கிறார்கள். அவைகளைத்தான் மக்கள் நினைவு வைத்திருக்கிறார்கள். அவர்களின் ஆபாச வரிகள் பிறந்த உடன் இறந்து போகின்றன. கண்ண தாசன் நதியில் விளையாடி கொடியில் தலை சீவினதற்குத்தான் நினைவில் நிற்கிறார். இலந்தைப் பழத்துக்கு அல்ல.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# காலி செய்யாவிட்டால் கொலைக்கும் துணிவார்கள்!

நிலம், வீட்டுமனை விலைகள் மும்பையில்தான் மிக அதிகம். டோக்கியோ போல் இரண்டு மடங்கு! உலகிலேயே உச்சகட்ட விலை! வாடகையும் அப்படியே! வானளாவிய வாடகைகளுக்கு அஞ்சியே, சில பெரிய கம்பெனிகள், தங்கள் மேலதிகாரிகள் குடும்பத்துடன் தங்குவதற்கென்று, ஐந்து நட்சத்திர ஓட்டல்களில் நிரந்தரமாகச் சில அறைகளை 'புக்' செய்து, வயிற்றெரிச்சலை விளம்பரப்படுத்துகின்றன. 'சொந்த வீடு பகல் கனவு', 'வாடகை வீடு வெறுங்கனவு' என்றாகி விட்டது முக்கால்வாசி மும்பைவாசிகளுக்கு.

இப்படி ஒரு சூழலில், இன்றளவும், தாதர், மாதுங்கா போன்ற பிரதான குடியிருப்புப் பகுதிகளில், விஸ்தாரமான இரண்டு மூன்று ரூம் – கிச்சன் ஃப்ளாட்டுகளில், நூறு ரூபாய் வாடகையில் சில பல குடும்பங்கள் குஷாலாகக் காலம் தள்ளுகிறார்கள்! சட்டம் தரும் பாதுகாப்பை இவர்கள் முற்றிலும் பயன்படுத்திக் கொள்வதால் இந்த 'நந்தி தேவர்களை' அப்புறப்படுத்துவது மிகக் கஷ்டம்!

பழைய கட்டட உரிமையாளர்கள் அவற்றை இடித்து விட்டு, புதிய அடுக்கு மாடிகளை உருவாக்கி, விற்றுப் பணம் பண்ணும் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள முடிவதில்லை! எனவே, அசைய மறுக்கும் குடித்தனக்காரர்களை அதட்டி மிரட்ட என்று அரசியல்வாதிகளையும், அவர்களின் அடியாட்களையும் உபயோகப்படுத்தி வருகிறார்கள். கிடைக்கும் லாபத்தை அவர்களுடன் பங்கிட்டுக் கொள்வதும் அவசியமாகிறது.

பம்பாயைக் கலக்கும் கினி கொலை வழக்கை இந்தப் பின்னணியில் பார்க்க வேண்டும். இதில் பால் தாக்கரேயின் மருமகன் ராஜ் தாக்கரே சம்பந்தப்பட்டிருப்பதாகப் பரபரப்பாகப் பேச்சு அடிபட்டு வருகிறது.

நடந்தது இதுதான் – மாதுங்கா ஹிந்து காலனியில்,, பாலச்சந்திரா ரோடிலுள்ளது 'லக்ஷ்மி நிவாஸ்'. சொந்தக்காரர் லக்ஷ்மிசந்த் ஷா, கீழ்த்தளத்தில் குடியிருந்தது 'கினி' குடும்பம். '84லிருந்தே குடித்தனக்காரர்களைக் காலி செய்யச் சொல்லிக் கொண்டிருந்திருக்கிறார் ஷா. கினி காலி செய்யவில்லை. கடந்த ஜூலை 23-ம் தேதியன்று மதியம், 'சாம்னா' (சிவசேனை செய்தித்தாள்) அலுவலகத்திலிருந்து தமக்கு அழைப்பு வந்திருப்பதாகச் சொல்லி, வீட்டை விட்டுக் கிளம்பினார் கினி.

அன்று நள்ளிரவில், புனாவிலுள்ள 'அல்கா' தியேட்டரில் மயங்கிய நிலையில் கண்டெடுக்கப்பட்டு, மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அங்கு அவர் 'ஹார்ட் அட்டாக்கில்' இறந்து விட்டதாகச் சொல்லி, போஸ்ட்மார்ட்டம் செய்து, அவர் எந்தவிதத் தாக்குதலுக்கும் ஆளாகவில்லை என்ற சான்றிதழும் வழங்கி அனுப்பி விட்டார்கள்.

எஃப்.ஐ.ஆரைப் பதிவுசெய்த போலீசார், கினியுடன் சென்றவர்களை எந்தவித விசாரணையும் செய்யவில்லை; கினி தற்கொலை செய்து கொண்டு விட்டதாக அவர் கைப்பட எழுதிய கடிதம் இருப்பதாகவும் சயனைட் குப்பியும் அவர் பையிலிருந்ததாகவும் சொல்லி, வழக்கை மூடிவிட்டனர்!

செய்தியறிந்த திருமதி ஷீலா கினி துடித்துக் கதறினார். கினி மரணம் இயற்கையானதல்ல என்றும், சில நாட்களாகவே ராஜ்தாக்கரேவும், அவரது அடியாட்களும் தங்களை மிரட்டித் துன்புறுத்துவதாகவும், இது தற்கொலை அல்ல, கொலை என்றும் குற்றம்சாட்டினார்.

முன்னாள் சிவசேனைக்காரரும் இன்றைய காங்கிரஸ்வாதியுமான சஜன் புஜ்பல் இதுவே தக்கதருணமென்று, ஷீலாவுக்கு அனுதாபம் தெரிவித்து, ஒரு "பிரஸ் மீட்"டும் ஏற்பாடு செய்து விட்டார்.

ஷீலாகினியின் குற்றச்சாட்டுகள் எழுப்பிய சில வினாக்கள் : பையில் பத்தே ரூபாயுடன் கிளம்பிய கினி, எவ்வாறு கொட்டும் மழையில், ரயில் போக்குவரத்தும் துண்டிக்கப்பட்டிருந்த நிலையில், புனா சென்றார்?

கினி மது அருந்தாதவர்; போஸ்ட்மார்ட்டத்தில் மது அருந்தியதாக எவ்வாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது?

தற்கொலைக் கடிதம் ஷீலாவிடம் காட்டப்படவில்லை; அது கினியின் கை எழுத்துத்தானா? தற்கொலை முயற்சிக்குப் புனா செல்ல வேண்டுமா? வாஷியில் (பம்பாயின் புறநகர்ப் பகுதி) வேலைக்குச் செல்லும் கினியின் பையில் பம்பாய் – புனா சீசன் டிக்கெட் எப்படி முளைத்தது?

எதிர்ப்புக்குரல் ஓங்கவே, மும்பையில் மீண்டுமொரு போஸ்ட்மார்ட்டத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த ரிப்போர்ட்டில், கினி தாக்கப்பட்டிருப்பதற்குச் சாதகமான அடையாளங்கள் கண்டுபிடிக்கப்பட்டன; சி.ஐ.டி.யிடம் வழக்கு ஒப்படைக்கப்பட்டது.

லக்ஷ்மிசந்த்ஷா, அவர் மகன், பாரதீய வித்யார்த்தி சேனாவின் தலைவரும் ராஜ்தாக்கரேயின் நண்பருமான அசுதோஷ்ரானே முதலியவர்கள் விசாரணைக்குள்ளானார்கள்.

இவர்களுக்கு 'பெயில்' மறுக்கப்பட வேண்டுமென போராடிய ஸ்பெஷல் பப்ளிக் ப்ராசிக்யூட்டர் காரணமில்லாமல் பணியிலிருந்து மாற்றப்பட்டார்.

இதற்கெல்லாம் தாக்கரே தரப்பிலிருந்து தரப்பட்ட சமாதானங்கள்: ராஜ், ஷாவின் நண்பரே தவிர, கினியைக் கண்ணாலும் கண்டதில்லை! சிவசேனையின் பரம வைரியான புஜ்பாலின் சூழ்ச்சியிது. தாக்கரேயின் மூத்த மகன் சாலை விபத்தில் மரித்த போது, எந்தவித விசாரணையும் செய்யப்படவில்லை. அசுதோஷ் ரானே ஒன்றுமறியாதவர்; அவரைக் குரூரமான கைதியைப் போல முகமூடியிட்டு விசாரணைக்கு அழைத்துச் செல்கிறார்கள்!



• ராஜ்தாக்கரே

தினந்தோறும் இருதரப்புச் செய்திகளையும் சுடச்சுட பத்திரிகைகள் பிரசுரித்துக் களைத்தன. இடையே, காற்றுப் புக வேண்டுமெனினும் அனுமதி கோர வேண்டிய நிலையில், கினியின் வீட்டு வாயிலில் அணிவகுத்து நிற்கும் போலீ சாரை மீறிக் கொண்டு, கினியின் உறவினர் என்ற போர்வையில் யாரோ ஒருவர் உள்ளே நுழைந்து, ஐம்பது லட்சம் கொடுத்தால் கேஸை வாபஸ் பெற்றுக் கொண்டு, வீட்டை காலி செய்ய முடியுமா என்று ஷீலாவிடம் கேட்டிருக்கிறார்!

கினியை, அசுதோஷ்ரானேவும் இன்னும் இருவரும் ஒரு காரில் கடத்திச் சென்றதாகவும், காருக்கு உரிமையாளர் தாக்கரேயின் இளைய மகன் ஜீது என்பதும் தெரிய வந்திருக்கிறது.

பூலான் தேவியும், வி.பி.சிங்கும் வேறு ஷீலா கினியை "துக்கம்" விசாரித்து, அரசியல் பூச்சில் புதிய வர்ணங்களைச் சேர்த்திருக்கின்றனர். விசாரணை சி.பி.ஐ.க்கு மாற்றப்பட வேண்டுமென்கிறார் வி.பி.சிங். "உங்களுக்கு அவார்டே கொடுக்க வேண்டும்! தைரியமாகப் போராடுங்கள்... நானிருக்கிறேன்" என்று கூறியிருக்கிறார் பூலான்!

ஒரே பிள்ளையுடன், வற்றிய உடலில் ஒட்டியிருக்கும் உயிருடன் போராடி வரும் ஷீலா, "நான் விடப் போவதில்லை! என்னிடம் இழப்பதற்கு என் உயிரைத் தவிர வேறெதுவுமில்லை! என் பிள்ளை அனாதையாகி விடுவானே என்ற வேதனைதான்" என்கிறார் உறுதியுடன்.



கினி வழக்கு இவ்வாறு தூள் கிளப்பி வருவதால், வீட்டுக்காரர் – வாடகைக்காரர் பிரச்னைகள் பல இன்று வெளிச்சத்துக்கு வந்திருக்கின்றன. போலீஸ் ஸ்டேஷன்களில் இன்று, "வீட்டுக்காரர் தொல்லை" கேசுகள் அதிகமாகப் பதிவாக ஆரம்பித்திருக்கின்றன.

சிகரம் வைத்தது போல் ஜீனேஜா – ஜீல்ஃபிகர் வழக்கு! முதலாமவர் பழம்பெருச் சாளியான வாடகைக்காரர். இரண்டாமவர் "கல்ஃப்'பிலிருந்து திரும்பியிருக்கும் சொந்தக்காரர். இருவரும் ஒரே வீட்டில் இருந்து கொண்டு த்வந்த யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர் குழந்தை மீது அவர் குப்பையைக் கொட்ட, அவர் டீ.வி. மீது இவர் சோப்பைத் தடவ, இவர் அம்பாளைக் கும்பிட, அவர் அல்லாவை அழைக்க, ஒரே அல்லோல கல்லோலம்தான். பால்தாக்கரேயின் பெரிய படத்தை ஹாலில் மாட்டி வைத்து, ஜீனேஜா சவால் விட, கோர்ட்டில் அவருக்கு சாதகமாகத் தீர்ப்பு வெளியாகியிருப்பது சிலருக்குப் புளியைக் கரைக்கிறது. சாம்னா அலுவலகம் பில்டர்களின் பிருந்தாவனமாக மாறி வருவதாக வந்திருக்கும் சில செய்திகள் வேறு மும்பைக்காரர்களை கவலைப்பட வைத்திருக்கின்றன!

ஏனென்றால், மும்பையில், இன்றைய நிலையில், 19,642 வாடகை வீடுகள் மிச்சமிருக்கின்றன; அவற்றில் எத்தனை 'கினி'க்கள் வசிக்கிறார்களோ? அந்த வீடுகளுக்கெல்லாம் என்ன விலையோ?

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீராஜ்**

## 40. வசப்பட்ட நெல்லூர்புரம்

காகதியரின் இரண்டாவது தலைநகரான நெல்லூர்புரத்தின் துறைமுகத்தை இயற்கை செப்பனிட்டு வைத்திருந்த விதத்திலும், இயற்கை ஏற்படுத்திக் கொடுத்திருந்த வசதியை மிகச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டு ஏற்பாடு செய்திருந்த பாதுகாப்பு முறைகளிலும் எந்தக் குறைவும் இல்லாமல் தானிருந்தது. துறைமுகத்திலிருந்து கால்காத தூரத்திலேயே வளைந்து உட்புறம் குழிந்து, மீண்டும் வடக்கு நோக்கி நீண்டு கிடந்த கடற்கரைப் பகுதியில் நின்றிருந்த காகதீயரின் கலங்கள் துறைமுகத்தில் நுழையும் வணிகக் கலங்களையும், வெளியேறும் கலங்களையும் கண்காணிக்கவும் அவசியமானால் தடுத்து மடக்கவும் சித்தமாகவே நிறுத்தப்பட்டிருந்தன. தெற்கு நோக்கி நிறுத்தப்பட்டிருந்த அந்தக் கலங்களின் தலைவனும் துறைமுகத்தின் உள்ளே நுழைந்து கொண்டிருந்த பெரும் கலங்களை அசட்டையுடன் கவனித்தபடியே தான் தளத்தில் உலவிக் கொண்டிருந்தான். அவன் அலட்சிய நடையையும் நிதானத்தையும் குலைக்க, பாய்மரத் தண்டின் உச்சியில் காற்றின் திசையறிய உதவும் மரச் சிறகுகளை இணைத்த உருளைகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்த மாலுமி ஒருவன் பலமாகக் குரல் கொடுத்தான். நிமிர்ந்து மேலே நோக்கிய தலைவன் மாலுமியின் திகிலடித்துக் கிடந்த முகத்தையும் தெற்கு நோக்கி நீண்ட கரங்களையும் கண்டு பார்வையைத் தென்திசைக்குத் திருப்பினான். அடுத்து அவன் முகத்திலும் கலவரம் படரத் தொடங்கியது. மாலுமியின் கூச்சலால் தளத்தில் கூடிநின்ற காகதீய வீரர்களின் பார்வைகளும் தெற்கில் வெறித்தன.

காகதீயர் போர்க்கலங்களுக்கு நேர் தெற்கில் இரண்டு மூன்று கலங்களாக அணிவகுத்து, இரையைத் தேடி வரும் பெரும் நீர்ப் பறவைகளைப் போல வந்து கொண்டிருந்தன பாண்டியர் போர்க்கலங்கள்! முன்னால் பெரும் மீன் கொடி பறக்க வந்த பெரும் மரக்கலத்தையும் அதன் வேகத்தையும் கண்ட தலைவன், தன் உபதலைவர்களையும் மாலுமிகளையும் நங்கூரத்தை எடுத்து, போர்க்கலங்களை முன்னால் செலுத்த உத்தரவிட்டான். கடல் நீர் வளைந்து உள்ளே பாய்ந்திருந்த பகுதியை விடுத்து, தலைவன் கலமும் பின் தொடர்ந்த ஆறு கலங்களும் துறைமுகத்தின் வாயிலைக் கடந்து, பாண்டியர் கலங்களை எதிர் கொள்ளும் உத்தேசத்துடன் விரையவும் செய்தன. துறைமுக வாயிலை அவை பாதிக்குமேல் கடக்கவும், பாண்டியர் கலங்களிலிருந்து போர்த் தாரைகள் நீண்டு ஒலிக்கவும் சரியாயிருந்தது. எரியம்புகளோ, பந்தங்களோ இன்னும் எட்ட இயலாத அந்த நிலையில், எதிரி தாரைகளை ஏன் முழக்குகிறான் என்று குழம்பிய காகதீயர் மரக்கலத் தலைவன், பாண்டிய மாலுமிகள் அவசரக்காரர்கள் என்றே தீர்மானித்தான். ஆனால் அந்தத் தாரைகளின் ஒலி வேறு திசையிலிருந்து அபாயத்தை விளைவிக்கவேயென்பது இரண்டொரு கணங்களுக்குப் பிறகே புரிந்தது அவனுக்கு. துறைமுகத்திற்குள் நுழைவதாக, தான் எண்ணிய வணிகக்கலங்கள், மீண்டும் வெளியேறி தனது கலங்களைப் பக்கவாட்டில் நெருங்க முற்படுவதையும், அவற்றிலிருந்து சரமாரியாக எரியம்புகளும் பந்தங்களும் சினத்து வாணங்களும் பின் தொடர்ந்த ஆறு கலங்களின் மீது பறக்க முற்பட்டதையும் கவனித்த மரக்கலத் தலைவன், செய்வதறியாது திகைத்தான். நெருக்கமான இலக்காக இருந்த தனது கடைசி இருகலங்களிலும் சீலைகள் பற்றி எரியத் தொடங்கியதையும் பாய்மரங்கள் படார் படாரென்ற ஒலியுடன் வெடிக்கத் தொடங்கி விட்டதையும் கண்ட தலைவன், நிதானத்தை அறவே இழந்து விட்டான். அந்தப் பக்க வாட்டுத் தாக்குதலை எதிர்க்க எஞ்சிய கலங்களைத் துறைமுகத்தை நோக்கித் திருப்ப உத்தரவிட்டான்! வேகத்தைக் குறைத்து அரைவட்டமாகத் திரும்பிய காகதீயர் கலங்கள் துறைமுக வாயிலிலிருந்து எரியம்புகளை வீசிய இரு கலங்களை நெருங்கி வளைக்க முயன்றன. ஆனால், அவை சற்று நெருங்கிய பின்னரே அந்தக் கலங்களில் நின்ற வீரர்கள் யாதவ கிருஷ்ணனின் வீரர்கள் என்பதும் மரக்கலங்களை இயக்குவதில் பெரும் திறமைசாலிகளென்பதும் புரிந்தது அவனுக்கு. எரியம்புகளை வீசியபடியே பின்னடைந்த அந்தக் கலங்கள் மீண்டும் துறைமுகத்தினுள் நுழைந்து, வேகத்தைக் குறைத்து காகதீயர் கலங்களை நன்றாக நெருங்கவிட்டன. துறைமுகத்

தினுள் நின்றிருந்த மற்றுமிரு காகதீயர் கலங்கள் மறுபுறத்தில் நெருக்கமுற்றபட்டதையும் அந்தக் கலங்கள் சட்டை செய்யவில்லை..

ஏறக்குறைய அந்த இருகலங்களையும் முன்னும் பின்னுமாக மோதி நொறுக்கிவிடக் கூடிய நிலையில், அவற்றிலிருந்த சொற்ப யாதவ வீரர்கள் தளத்திலிருந்து கடலை நோக்கிப் பாய்ந்து, நீருக்குள் முழ்கினர். தளத்திலிருந்த யந்திரப் பொறிகள் தொடர்ந்து எரியம்புகளையும் வேல்களையும் பொழிந்து கொண்டிருக்க, நடுப் பகுதியிலிருந்து திடீரெனப் பெரும் வெடியோசையும் தொடர்ந்து பெரும் தீப்பந்துகளும் கிளம்பி, சுற்றி நின்ற காகதீயர் கலங்களை முழுவதுமாகத் தாக்கின. தீக்கங்குகள் பரவியதால் ஏறக்குறைய அந்தக் கடற்படைப் பிரிவின் அனைத்துக் கலங்களும் எரியத் தொடங்கிவிட்டதையும், அதே சமயத்தில் பாண்டியர் கலங்கள் துறைமுகத்தில் நுழைந்து கொண்டிருப்பதையும் கண்டு திகைத்தபடியே, பாதி வரை நீரில் சரிந்து மூழ்கத் தொடங்கிய கலத்தில் நின்றான் காகதீய மரக்கலத் தலைவன். துறைமுகத்திலிருந்து கிளம்பிய புகை, பெரும் கரும்பூதங்களைப் போல உயர்ந்து, வெகு தூரம் வரை பரவத் தொடங்கின. துறைமுகத்திலிருந்த மற்ற வணிகக் கலங்களை எதிர்ப்புறமாக ஒதுங்கி வெளியேற சமிக்ஞை செய்தபடியே கரையை நெருங்கின பாண்டியர் கலங்கள். அவற்றிலிருந்து இறக்கப்பட்ட பெரும் படகுகளிலும், கரையிலிருந்து விரைந்து வந்த படகுகளிலும் பாண்டிய வீரர்களும் சோழ வீரர்களும் தாவி கரையை அடையவும் முற்பட்டனர். முன்னால் சென்ற படகில், உருவிய நீண்ட வாளுடனும் வாளை விடக் கூர்மையான விழிகளுடனும் நின்றிருந்தான் ஜடாவர்ம வீரபாண்டியன். உடன் நின்ற தஞ்சைக் கோட்டைத் தலைவனையும் வீரர்களையும் வரவேற்க, கரையில்

# விஷ்வக்சேனன்

ஆவலுடன் நின்றிருந்த யாங்சின்னையும் ஆதித்யனையும் தூரத்திலிருந்தே கவனித்துவிட்ட பாண்டியன் விழிகளில் ஆனந்தம் பரவத் தொடங்கியது.

நெல்லூர்புரத்துக் கோட்டைத் தலைவனுக்கு அஸ்தியில் குளிர் கண்டிருந்தது. பாண்டியரின் தாக்குதலைத் தெற்கிலிருந்து எதிர் பார்த்து, இளவரசியின் உத்தரவின்படி வீரர்களையும் சுழற் பொறிகளையும் தெற்குப்புற கோட்டை வாயிலில் குவித்திருக்க, எதிர்பாராத விதமாக துறைமுகம் தாக்கப்பட்டதையும், வீரபாண்டியன் துறைமுகத்தைக் கைப்பற்றி விட்டதையும் அறிந்தவன், மீண்டும் கோட்டையிலிருந்த வீரர்களைக் கிழக்கு வாயிலில் அணிவகுக்க உத்தரவிட்டு, துறைமுகத்தில் நடந்து கொண்டிருந்த வாண வேடிக்கையையும் புறப்பட்ட கரும் புகையையும், துறைமுகப் பாதையில்



படைகளின் வரவை அறிவித்த புழுதி மண்டலத்தையும் வெறித்தபடி மதிலின் மீது நின்றிருந்தான்.

கோட்டைக்கு அம்பு எறியும் தூரத்திலேயே பாண்டியர் படைப்பிரிவு நின்றது. தரையில் பெரும் போர் வில்களை நாட்டிக் கொண்டு மதிலின் மீது நின்ற வீரர்களைத் தாக்கி வில்லாளிகள் பாதுகாப்பு அளித்தனர். அரை நாழிகை நேரத்தில் யந்திரப் பொறிகளைக் கொண்டு நிறுத்திய யாங்சின், கோட்டைக் கதவுகளின் இணைப்புக்களில் சரமாரியாக வேல்களைப் பொழியச் செய்து அதை அரை ஜாம நேரத்தில் பல துண்டுகளாக உடைத்துச் சரித்தான். தொடர்ந்து வீரபாண்டியனின் புரவி, நெல்லூர்புரக் கோட்டைக்குள் வீரர்கள் பின் தொடர பிரவேசித்தது. அவனிடமிருந்து சர மாரியாக உதிர்ந்த உத்தரவுகள் பாண்டிய வீரர்களை ஏதோ பிசாசுகளைப் போல் இயங்கச் செய்ததையும், யந்திரங்கள் விளைவித்த நாசத் தையும், யாங்சின்னின் சீனத்து வில் விளை வித்த இந்திர ஜாலத்தையும் கண்ட கோட்டைத் தலைவன், பாதிக்கும் மேல் கோட்டைப் பகுதிகள் பாண்டியர் வசப்பட்டதை உணர்ந்து, ஒரு ஜாமப் போருக்குப் பின் சரணடைந்துவிட வும் தீர்மானித்தான். எஞ்சிய வீரர்களுடன் கோட்டையின் நடுப்பகுதியில் வீர பாண்டியனை எதிர் கொண்ட கோட்டைத் தலைவன், தன் வாளை இருகரங்களிலும் ஏந்தி சரணடை வதை உணர்த்தவும் செய்தான்.

புரவியிலமர்ந்தபடியே கோட்டைத் தலைவனை நெருங்கிய வீரபாண்டியனது விழிகளில் அனுதாபமே நிரம்பிக் கிடந்தது. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் அது தெரிந்தது. "கோட்டைத் தலைவரே, உமது மன்னரோ, இளவரசியோ இல்லாத இந்த நிலையில் உம்மைச் சிறை செய்யவோ, அடைத்து வைக்கவோ நான் விரும்பவில்லை. கனகபுரிப் பாதையின் முகப்பிலேயே எம்மிடம் சிக்கிவிட்ட உமது இளவரசி, கோட்டைக்கு வெளியே உமக்காகக் காத்திருக்கிறார். உமது வீரர்களுடன் நீர் இப்போதே வெளியேறலாம். உமது நிலை எமக்குப் புரிகிறது" என்றான் வீரபாண்டியன் அனுதாபம் நிரம்பிய குரலில்.

பதிலேதும் கூறாமல் இளைய பாண்டி யனை யும் நெருங்கி வந்து விட்ட யாங்சின் னையும், ஆதித் யனையும் வெறித்த கோட்டைத் தலைவன், வீரர்கள் பின் தொடர வடக்கு வாயிலை நோக்கி நடந்தான். துறைமுகத்தின் அருகிலேயே கனகபுரிப்பாதையில் வீரபாண்டி யனால் சிறை செய்யப்பட்டு விட்ட காகதீய இளவரசி வடக்கு வாயிலின் வெளியே க்னல் பறந்த விழிகளுடன் கோட்டைத் தலைவனை வரவேற்க நின்றிருந்தாள். நெருங்கி வந்த கோட்டைத் தலைவனையும் வீரர்களையும் கோட்டையைச் சுற்றிக் கொண்டு காளத்தியை நோக்கி விரையவும் உத்தரவிட்டாள். ஏறக்குறைய நெல்லூர்புரத்திலிருந்த அதே நிலையில், காளத்தியிலிருந்த காகதீய மன்னனுமிருந்ததையும், காளத்தியிலும் முதுகூற்றத்திலும் சுந்தரபாண்டியனை எதிர்த்து விட்டு காகதீயர் படைகள் பின் வாங்கிக் கொண்டிருப்பதையும் அவள் அறியவில்லை.

ஜடாவர்ம சுந்தர பாண்டியன் காளத்தியலிருந்த காகதீயரை முழுவதுமாக அழித்தானென்றும், பொன்முகரியாற்றின் கரையில் முதுகூற்றத்துப் போரில் காகதீயர் சடலங்களும், புரவிகளும், யானைகளும், ஆற்றின் இரு கரைகளிலும் குன்றுகளாகக் குவிந்து கிடந்தன என்று பிற்காலத்தில் தில்லையம்பதி ஆலயத்தில் பொறிக்கப்படக் காரணமாயிருந்த அந்தப் போர் முடிந்த போது, காகதீயர் அடைந்த சேதம் அளவிடமுடியாததாக இருந்தது. அதே சமயத்தில் வடக்கே யாதவரின் தாக்குதலிலிருந்து தலைநகர் உறங்கையைக் காத்துக் கொள்ள காகதீய கணபதி பின் வாங்கி விரைந்து விட்டானென்றும் ஜடாவர்ம

## அருள்வாக்கு

சிக்கனமாயிருந்தாலொழிய, இப்போது இருக்கிற போக போக்ய இழுப்பில், எவனுக்குமே மிச்சம் பிடிக்க முடியாது. அதனால் சிக்கன வாழ்க்கை நடத்தினால்தான் "தனக்கு மிஞ்சி" தர்மம் பண்ண முடியும். அதாவது எத்தனை சிக்கனமாயிருக்க முடியுமோ அப்படியிருந்து தனக்கு மிஞ்சும்படியாகப் பண்ணிக் கொண்டு தர்மம் பண்ணணும்.

கீதை முதல் ச்லோகத்தில் வருகிற தர்ம க்ஷேத்ரம் என்பது இந்த சரீரம்தான். ஒரு வயல் என்றால் அதில் விளைச்சல் பண்ணுவதற்கு பூஸாரம் வேண்டும்; அப்புறம் ஒவ்வொரு தானியத்துக்குரிய பருவகாலம் பார்க்க வேண்டும். க்ஷேத்ரம் என்றால் வயல். நம்முடைய சரீர வயலுக்கு எது பூஸாரம்? புத்தி பிரஸன்னமாயிருப்பது, இந்திரியங்கள் பழுதாகாமல் சுத்தமாயிருப்பது (விஷயங்களைக் க்ரஹித்துக் கொள்ளும் ஞானேந்திரியங்கள், கார்யங்கள் பண்ணும் கர்மேந்திரியங்கள் இரண்டும் தீக்ஷண்யமாயிருப்பது)தான் பூஸாரம். ஓடியாடவும்

சுந்தர பாண்டியன் நெல்லூர்புரத்தில் வீராபிஷேகம் செய்து கொண்டான் எனவும் தில்லையம்பதியின் கல்வெட்டு அந்தப் போரை விவரிக்கிறது.

நெல்லூர்புரத்தில் விஜயாபிஷேகம் செய்து கொண்ட சுந்தர பாண்டியன், அன்றே படை களுடன் தெற்கு நோக்கித் திரும்பவும் உத்தர விட்டான். தஞ்சைத் துறவியாரின் ஓலை, பாண்டிய மன்னனை உடனே திரும்பவும், முன்னதாக யாங்சின்னையும், ஆதித்யனையும் அனுப்பி வைக்குமாறும் கேட்டுக் கொண்டது. தஞ்சையில் அதிகமாக உலவத் தொடங்கிய காடவ வீரர்களால் அபாயம் ஏற்படலாமென அந்த ஓலை தெரிவித்ததால், யாங்சின்னையும், ஆதித்யனையும் உதவிக்குக் கிருஷ்ணமல்லரின் சீடர்களுடன் தஞ்சைக்கு அனுப்பி வைத்தான் பாண்டிய மன்னன்.

தஞ்சைக் கோட்டையின் உட்புறத்தில், கிழக்கு வாயிலை அடுத்து, கோட்டை மதிலுக் குக் குறையாத உயரத்துடனும், சதா உலவிய வீரர்களுடனும் மதிலொன்று நீண்டு வளைந்து உட்புறமாகச் சென்றது. சோழ வீரர்களைத் தவிர மக்கள் நடமாட்டமேதும் அங்கு காணப் படவில்லை. ஆங்காங்கே புலிச்சின்னம் பொறிக்கப்பட்டு நீண்டு கொண்டே சென்ற மதிலின் இறுதியில் அமைந்த பெரும் கதவு களின் அருகில் நின்ற வீரர்கள் தனிப்படத் தேர்ந்தெடுக் கப்பட்டவர் கள் என்பது முதல் பார் வையிலேயே புரிந்தது. கதவிலிருந்து உள்ளே நீண்ட பாதையின் வளைவுகளிலும் வீரர்கள் நடமாட்டம் தெரிந் தது. பாதையின் முடிவில் புலிக்கொடி பறந்த பெரும் மாளிகை யொன்றும் எழுந்து நின்றது. மாளிகையின் வாயிலில் உலவிய வீரர்களின் விழிகளில் சதா ஓர் எச்சரிக்கையும் தெரிந்தது. மாளிகைத் தாழ் வரையை அடுத்திருந்த அறை யிலிருந்து, கரங்களில் ஓலைக் குழல்களுடன் வந்து கொண்டிருந்தார் ஒரு முதியவர். தோற் றம் முதுமையைக் காட்டினாலும் அவர் நடை யில் தளர்ச்சி யேதும் தெரியவில்லை. தோள் கள் வரை நீண்டு சுருண்ட குழல்களுடனும், நெற்றியில் கீற்றாகத் தெரிந்த சந்தனத்துடனும், தீட்சண்யம் தெறித்த விழிகளுடனும் வந்த அந்த மனிதரைக் கண்டதும் வீரர்களின் தலை களும், கரங்களிலிருந்த வேல்களும் தாழ்ந்தன.

உள்ளே விரிந்த பெரும் கூடத்தை நோக்கி விரைந்தவரது வேக நடை, உள்ளேயிருந்து ஒலித்த சைவத் துறவியாரின் கனத்த குரலைக் கேட்டதும் சற்றுத் தயங்கியது. கரத்திலிருந்த ஓலைகளை ஒருமுறை சரிபார்த்துக் கொண் டவர் கூடத்தினுள் நுழைந்தார். பணியாட் களிடம் ஏதோ கேட்டுக் கொண்டிருந்த துறவி யாரின் விசால விழிகள் ஓலைகளைக் கண்ட தும் மலர்ந்தன. முதியவரிடமிருந்து ஓலைகளை வாங்கி ஒருமுறை படித்து முடித்தவர் முதிய வரை நோக்கி, "இன்னும் பத்து தினங்களுக்குள் அனைத்தும் முடிந்து விடுமல்லவா?" என்றார்.

"ஏறக்குறைய அனைத்தும் முடிந்து விட்டன பிரபு. தாங்களே வந்து பாருங்கள்" என்று பவ்ய மாக பதிலளித்த முதியவர், அடுத் திருந்த பெரும் அறைக்கு துறவியாரை அழைத்தபடியே நடந்தார். அறைக்குள் நுழைந்த துறவியார் சற்று நின்றார்.

காடவராயனையும், காடவர்களையும் கள்ளர்களைப் போல இருளில் அலையச் செய் ததும், சாதாரண மனிதர் முதல் மன்னாதி மன்னர் வரையிலும் அடையத் துடிப்பதுமான பொற்குவியல் அந்த அறையில் பாளம் பாள மாகக் கொட்டிக்கிடந்தது. பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தவர்கள் துறவியாரைக் கண்டதும் விழிகளில் பக்தியும் அச்சமும் படர எழுந்து நின்றனர். அடுத்து விரிந்தது ஒரு பெரும் கூடம். நூற்றுக்கும் அதிகமான பொற் கொல்லர் களின் சிறு சுத்தியல் ஒலி தொடர்ந்து அங்கு எழுந்து கொண்டிருந்தது. வளைந்தும், நெளிந்தும், குவிந்தும் அழகிய வேலைப்பாடுகளுட னும், கற்கள் பதிக்கப்பட் டும் பொன் தகடுகளும் ஆபரணங்களும் கூடம் முழுவதும் மின்னின.



**தளர்ச்சியில்லாமல் ஆலோசிக்கவும் சக்தி இருப்பதுதான் பருவ காலம். இதை யெல்லாம் பொருத்து இந்த சரீர வயலில் தர்மப் பயிரை வளர்த்து, தர்ம க்ஷேத்ரமாக்க வேண்டும். அந்தப் பயிரை வளரவொட்டாமல் ஹானி செய்கிற களைதான் தனக்காக அவசியத்துக்கு மீறிச் செல வழிப்பது. வயல் நிறையக் களை மண்டியிருப்பதைப் பார்த்து நன்றாக விளைந்திருப்பதாக ஸந்தோஷப்படுவது போலத்தான், தனக் காகச் செலவழித்து அதில் ஏற்படும் ஸௌகர்யங்களைப் பார்த்து ஸந்தோ ஷிப்பது. களை பிடுங்குவதில் எத்தனை கவனமாயிருக்கிறோமோ அத்தனை கவனமாக அத்யாவச்யத்துக்கு மேலான செலவுகளைப் பிடுங்கிப் போட வேண்டும்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

"பிரபு, பாண்டிய மன்னரின் ஓலைகளைச் சற்று தாருங்கள்" என்றபடியே துறவியாரிடமிருந்து ஓலைகளைப் பெற்ற முதியவர் அங்கிருந்தவற்றை விளக்க ஆரம்பித்தார்.

"பிரபு, பாண்டிய மன்னரின் விருப்பப்படி கொங்கு நாட்டுப் பொற்குவியல் இரு ஆலயங்களுக்குமான ஆபரணங்களாக வடிக்கப்பட்டு விட்டன. மகுடங்கள், பொற்கலசங்கள், சோமசுந்தரரின் பொன்னாடை, தாண்டவ மூர்த்தியின் மாணிக்கக் கழல்கள், மரகத மாலைகள், கங்கணங்கள், கற்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்கள், சித்சபையின் பொற்படிகள், பிரும்ம பீடத்திற்கும் பத்துத் தூண்களுக்குமான தகடுகள். அவை தேவசபைக்கும் ராஜ சபைக்கும் உரியவை, நாகாபரணங்களின் வரிசை அதோ..."

துறவியாரின் விழிகளில் கனவுச் சாயை விரிந்திருந்தது. முதியவர் தொடர்ந்தார், "இவை அரங்கனுக்கு. அலங்காரப் பிரியனுக்கு, திருமுடி முதல் திருவடிவரை ஆபரணங்கள், தாயாருக்கான ஆபரணங்கள், சேஷ சயனத்திற்கு முழுவதும் மூடக்கூடிய தகடுகளிவை, முத்துப் பந்தல், பெரிய திருவடியின் கவசங்கள், திருமஞ்சனத் தொட்டிகள், தெப்போற் சவத்திற்கான பொன் னோடம் வெளியில் தயாராகிறது, ஐந்து விமானங்களுக்கான தகடுகளும் துலாபாரத்திற்கான பொற்காசுகளும் இன்று செய்து முடித்து விடுவோம்" என்று மூச்சு விடாமல் கூறி முடித்தார் முதியவர்.*

ஆனந்தபாஷ்பம் விசால விழிகளை நிறைத்திருக்க, மனக்கண்களில் பொற்சபையையும், ஸ்ரீரங்க விமானத்தையும் கண்டு பரவசப்பட்டுக் கொண்டிருந்த துறவியாரது செவிகளில் முதியவர் இறுதியாகக் கூறிய துலாபாரம் என்ற சொல் சட்டென்று எதையோ நினைவுக்குக் கொண்டு வந்ததாகத் தெரிந்தது. கனவிலிருந்து விழித்துக் கொண்டவர் விடை பெற்றுக் கொண்டு அரண்மனையை நோக்கி விரைந்தார்.

மூன்றாம் குலோத்துங்னின் குருவும், சித்தாந்த ரத்னாகரம் எழுதியவருமான சுவாமி தேவர், தில்லையில் நிறுவியிருந்த சரஸ்வதி பண்டாரம் என்னும் நூலகம் துலாபார மண்டபத்தை ஒட்டியிருந்தது. அவற்றைச் செப்பனிடும் வரை அங்கிருக்கும் அரிய நூல்களைக் கொண்ட ஓலைச் சுவடிகளுக்குப் பாதுகாப்பளிக்க அவற்றைத் தஞ்சைக்குக் கொண்டு வந்துவிட உத்தரவிட்டிருந்தார் துறவியார்.**

பேரமைச்சரிடம் விசாரித்தவருக்கு ஓலைச் சுவடிகள் வண்டிகளில் வந்து கொண்டிருப்பதாகவும் பதில் கிடைத்தது. ஆனால் அந்த வண்டிகள் பெரும் அபாயத்தையும் கொண்டு வந்து சேர்க்குமென்பதை பேரமைச்சரோ, துறவியாரோ அப்போது அறியவில்லை.

(தொடரும்)

---

* இந்த ஆபரணங்களை சுந்தரபாண்டியன் கொங்குநாட்டுப் பொன்னைக் கொண்டு தமக்குச் செய்வித்ததாக அரங்கனே தெரிவிப்பதாக பொறிக்கப்பட்ட கல்வெட்டு திருவரங்கத்தில் இருக்கிறது.
ஸ்ரீரங்கம் கல்வெட்டுகள் **S.I.I. XXIV-203.** 10வது நாள் புரட்டாசி மாதம், 1259ம் ஆண்டு.

** சுவாமி தேவரின் சரஸ்வதி பண்டாரமென்னும் நூலகத்தை சுந்தர பாண்டியன் செப்பனிட்டது மட்டுமின்றி ஓலைகளைப் படித்துக் காட்டவும் பண்டிதர்களை நியமித்தானென்றும், சோழ மன்னன் அதற்கு உதவினானென்றும் கூறும் கல்வெட்டு. இது இன்னும் தில்லையில் சுப்பிரமணியப் பிள்ளையார் சன்னதியில் வடக்குச் சுவரில் உள்ளது.
வரிகள் 168, 169 -- 1962ல் படியெடுக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டுள்ளது.

கான காசோலை ஒன்று விகடன் நிர்வாகத்தினரால் அனுப்பப்பட்டது.

'உங்கள் வாசகர்களிடம் – முக்கியமாக இளையதலைமுறையினரிடம் – என் கருத்துக்களை வெளியிட ஓர் அரிய வாய்ப்பைத் தந்ததற்காகவே நான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். பணம் கொடுத்து என்னை மேலும் கடனாளி ஆக்கி விடாதீர்கள். எழுத்துக்குச் சன்மானம் வாங்கும் நிலையை விட வசதியாகவே ஆண்டவன் என்னை வைத்திருக்கிறான்' என்கிற வகையில் விகடனுக்கு ஒரு கடிதம் எழுதி, கூடவே அந்தக் காசோலையையும் திருப்பி அனுப்பியிருந்தேன்.

சில நாட்களில் விகடன் ஆசிரியரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. கூடவே ஒரு ரூபாய்க்கான காசோலை ஒன்றும் இணைக்கப்பட்டிருந்தது. அந்தக் கடிதம் என்னை அசரவைத்தது. நடிப்பு வாசனையே தெரியாத எனக்கு ஏவி.எம்., ஜெமினி ஆகிய நிறுவனங்கள் தாய்வீடு போல. திரு. வாசனின் இயக்கத்தில் 'மோட்டார் சுந்தரம் பிள்ளை' படத்தில் சில காட்சிகள் நடித்திருந்தேன். ஜெமினி நிறுவனம் தயாரித்த 'விளையாட்டுப் பிள்ளை' படத்திலும் நடித்திருக்கிறேன். படத் தயாரிப்பு முடிந்தவுடன் 'உங்கள் ஒத்துழைப்புக்கு என் நன்றி' என்று தம் கைப்படவே அந்தத் திரையுலக மேதை எனக்குக் கடிதம் எழுதியதுண்டு. அவர்களின் பெருந்தன்மையை ஒரு நடிகனாக ஏற்கெனவே அனுபவித்தறிந்திருந்தேன். ஓர் எழுத்தாளன் என்கிற முறையில், அதே குடும்பத்தினரின் பெருந்தன்மையை நான் உணர இந்தக் கடிதம் எனக்கு உதவியது.

தொகுப்பு :

**அருண்சரண்யா**

# என்னை அசர வைத்த கடிதம்!

வைத்திருக்கிறான்" என்ற உங்கள் வாதத்திற்கேற்பவே, 'எழுத்தை இலவசமாக வாங்கும் நிலையை விட வசதியாகவே ஆண்டவன் ஆனந்த விகடனை வைத்திருக்கிறான்' என்று நாங்களும் வாதிக்கலாமல்லவா?

தயவுசெய்து மேலே கூறியவை தங்களைப் புண்படுத்த அல்ல. மனவருத்தம் கொள்ளாதீர்கள். எங்கள் நிலையை சிந்தித்துப் புரிந்து கொள்ளுங்கள்.

எந்த வேலைக்குமே ஊதியம் பெற்றால்தான் அந்த வேலையின் மீது அவர்களுக்கு சட்டப்படி உரிமை பிறக்கிறது. அதற்காகவே, உங்கள் தொடரின் மீது உங்களுக்கு முழு சட்ட உரிமை ஏற்படுத்தும் வகையில் ஒரு காசோலையை இணைத்திருக்கிறேன். அதன் மதிப்பு ரூபாய் ஒன்றுதான். தயவுசெய்து ஏற்றுக்கொண்டு எங்களை கௌரவியுங்கள்.

சினிமாத் துறையை விட்டு முழுவதுமாக விலகிப் பத்து ஆண்டுகள் ஆகியும் அத்துறையில் உள்ள சில நல்லோரை என் மனம் மறந்ததேயில்லை. அதில் நீங்களும் ஒருவர்.

நன்றி.

இப்படிக்கு,

எஸ். பாலசுப்ரமணியன்.

# இந்திர தனுசு

## 41. சீனத்து விசாரணை!

பெரும் காளைகள் பூட்டப்பட்ட அந்த எட்டு வண்டிகளும் தில்லையிலிருந்து தஞ்சையை நோக்கி ஊர்ந்து கொண்டிருந்தன. ஓலைச் சுவடிகளுக்கும் அந்த வண்டிகளுக்கும் எந்த அபாயமும் நேரக் காரணமில்லையென்று தீர்மானித்திருந்ததால் பேரமைச்சர் நான்கு காவலர்கள் போதுமென்றே எண்ணியிருந்தார். காவலர்கள் அந்த ஓலைச் சுவடிகளில் பொதிந்திருந்த அறிவைப் பற்றி உணராததால் சற்று அசட்டையாகவே பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தனர்.

கதிரவன் மேற்கில் சரியத் தொடங்கி விட்டதால், கொள்ளிடத்தைக் கடந்த வண்டிகளை, நேராக குடந்தையை நோக்கிப் பிரதானசாலையில் செலுத்தாமல் கரையோரமாகவே செலுத்தினர். பிறகு தெற்கில் திரும்பி, தஞ்சையை அடைந்து விடலாமென்று காவலர்கள் எண்ணினார்கள். ஆற்றை ஒட்டி வளர்ந்திருந்த மரக் கூட்டங்களில் காத்திருந்த அபாயத்திற்கு அந்த முடிவு அழைப்பு விடுக்குமென்பதை அவர்கள் உணர ஆரம்பித்த போது, நிலைமை கட்டு மீறிச் சென்று விட்டிருந்தது.

கொள்ளிடக்கரையை ஒட்டி நீண்டிருந்த பாதை சற்று கரடு முரடாக இருந்தாலும், வலதுபுறத்தில் சலசலத்து ஓடிய நீர்ப்பரப்பு மாலை வெயிலில் தங்கத் தகடாக மின்னிக் கொண்டிருக்க, இருபுறமும் செழித்துக் கிடந்த கோரைகளினூடே வெள்ளைக் கொக்குகளும் நாரைகளும் கடும் தவத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தன. அவற்றின் தவத்தைக் கெடுக்க முயன்ற கிளிகளும் மைனாக்களும் பெரும் இரைச்சலுடன் ஆற்றோரத்துத் தோப்புகளிலிருந்து ஜிவ்வென்று கிளம்பி, நீர்ப்பரப்பின் மீது பறந்து, வட்டமடித்து, மீண்டும் தோப்புகளை நோக்கி இறங்கின. குறுக்கிட்ட சிறு கிராமங்களும், தலை சாய்த்துக் கிடந்த வயல் வெளிகளும் பார்வைக்கு மிக ரம்மியமாகவே தெரிந்தன. மெல்ல இருள் கவியத் தொடங்கியிருந்தது.

சலங்கைகள் ஒலிக்கச் சென்று கொண்டிருந்த காளைகள் திடீரென நின்றன. பின்னால் வந்து கொண்டிருந்த காவலர்கள், வண்டிகள் நின்றதன் காரணத்தை அறியும் பொருட்டு புரவிகளைத் தாண்டி முற்பகுதிக்கு வந்ததும் திகைத்தனர்.

பாதையின் குறுக்கே பல புரவிகள் நின்றிருந்தன. நடுவிலிருந்த புரவியில் காடவராயனையும், மற்ற காடவ வீரர்களையும் கண்ட காவலர் நால்வரும் வாட்களை உருவிக் கொண்டு முன்னால் பாய்ந்தனர். ஆனால் எண்ணிக்கையில் அதிகமாயிருந்த காடவ வீரர்களின் மூர்க்கமான தாக்குதல்களில், நான்கே காவலர்களும் வெறும் கழிகளுடன் காவலருக்கு உதவ முற்பட்ட வண்டியோட்டிகளும் ஈடு கொடுக்க இயலாததால், நாழிகை நேரத்தில் அந்தச் சிறு சண்டை முடிந்து போனது. தனது வீரர்களை வண்டியோட்டிகளாக்கி, தானே தலையில் சுற்றிய முண்டாசுடன் வண்டிகளில் அமர்ந்த காடவராயன், எஞ்சிய வீரர்களைத் தஞ்சைக்கு வந்து சேரவும், அரண்மனையில் புகையும் நெருப்புத் தோன்றும் அடையாளத்தை வைத்து ஒன்று கூடவும் உத்தரவிட்டு, வண்டிகளை மீண்டும் தஞ்சைப் பாதையில் செலுத்த ஆரம்பித்தான்.

தஞ்சை அரண்மனை மேன்மாடத்து உப்பரிகையில் அமர்ந்து, எதிரி



விருந்த பூங்கோதையை நோக்கிய கொங்கு மன்னன் அவந்தனின் மனம் நிறைந்து கிடந்தது. மகளிடம் பரிவு தொனித்த குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தவன், வாசலில் ஒலித்த திடமான காலடியையும், கனத்த குரலையும் கேட்டதும் பதறி எழுந்தான். உள்ளே நுழைந்த துறவியாரைக் கண்ட அவன் முகத்தில் இலேசான படபடப்பும் சற்று அச்சமும் கூடத் தெரிந்தன.

அவனது அதிகப்படியான மரியாதையையும், படபடப்பையும் கவனித்த துறவியார் நிதானமாக இருக்கையில் அமர்ந்தபடியே அவனையும் அமரப் பணித்தார். அடுத்து சம்பந்தமே இல்லாத கேள்வியொன்றும் அவரிடமிருந்து உதிர்ந்தது.

"அவநிதா, உனக்கு சுப்ரதீபத்தைப் பற்றித் தெரியுமா?"

"தெரியும் துறவியாரே, சோழ மன்னரின் பட்டத்து யானை சுப்ரதீபம். பல போர்க் களங்களைக் கண்ட போர்க்களிறு" என்றான் அவநிதன்.

"ஆம். சர்வ லட்சணங்களும் பொருந்திய போர்க்களிறு அது. அதற்கு ஒரு வயது கூட நிரம்பாத நிலையில்தான் தஞ்சைக்கு வந்து சேர்ந்தது. அப்போது அதை அரண்மனைக்குப் பின்புறத்தில் கொட்டடிக்கு வெளியே சிறிய வேங்கை மரக் கன்று ஒன்றில்தான் கட்டிவைப்பார்கள்."

துறவியார் எதற்காக இதைக் கூறுகிறார் என்பதை அறியாத அவநிதனின் விழிகளில் குழப்பம் தெரிந்தது. "ஆம், துறவியாரே! நானும் பலமுறை அதைப் பார்த்திருக்கிறேன்" என்றான் குழப்பம் குரலிலும் ஒலிக்க.

"அவநிதா! சுப்ரதீபம் ஆரம்பத்தில் அந்த வேங்கை மரக்கன்றில் பிணைத்த சங்கிலியிலிருந்து விடுபட முயன்று முடியாததால், அங்கேயே நின்று பழகி விட்டது."

துறவியார் கூறவந்தது என்ன என்பதைப் புரிந்து கொண்ட பூங்கோதையின் மலர் விழிகள் இன்னும் மலர்ந்து தந்தையை அனுதாபத்துடன் நோக்கின. துறவியார் தொடர்ந்தார்,

''இப்போது சுப்ரதீபம் அந்த வேங்கை மரத்தையே அனாயாசமாகப் பிடுங்கி எறியக் கூடிய வலிமை படைத்தது. ஆனாலும் அந்த மரத்தை விட்டு நகராமல் அங்கேயே நின்று கொண்டிருக்கிறது.

''அவநிதா, நீ இப்போது சோழருக்கும் பாண்டியருக்கும் இணையான சுதந்திர மன்னன். கொங்கு நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட சுப்ரதீபத்தைப் போல ஏன் இன்னும் அடிமைத் தளையில் உன்னைப் பிணைத்திருப்பதாக எண்ணிக் கொண்டு என்னைக் கண்டு பதறுகிறாய்? நான் ஒரு சாதாரணத் துறவி அவநிதா. நீ இருபத்து நான்கு உபநாடுகளைக் கொண்ட கொங்கு நாட்டு மன்னன். சோழ மன்னரின் மருமகன். உன் நிலையைச் சரியாக உணர்ந்து கொள்'' என்றார் துறவியார்.

"என்ன இருந்தாலும் நான் சோழ மன்னருக்கும், இப்போது சுந்தர பாண்டியத் தேவருக்கும் கட்டுப்பட்ட சிற்றரசன்தானே?'' என்றான் அவநிதன் சற்றுக் கழித்து.

''யார் சொன்னது அவநிதா? சோழ ராஜேந்திரனுக்குப் பின் பாண்டியரின் சார்பாக சோழ மண்டலத்தை ஆளப் போகிறவன் ஆதித்யன். உன் மகள் பூங்கோதை அவன் பட்டத்தரசி. புரிகிறதா?" என்றார் துறவியார்.

துறவியாரின் பேச்சு சுற்றி



வளைத்து தன் திருமணத்தில் வந்து நிற்பதையும் அடுத்து அவரது பரிகாசப் பேச்சு துவங்கி விடும் என்பதையும் உணர்ந்து கொண்ட பூங்கோதை முகம் சிவக்க எழுந்தாள். அவளைக் கையமர்த்தியபடியே எழுந்த துறவியார், "பூங்கோதை, பட்டத்தரசி என்றதும் வேறொன்று நினைவுக்கு வருகிறது. சோழ மன்னரின் பட்டத்தரசியார் தமது ஆபரணங்கள் அனைத்தையும் உனக்கு வழங்கி விட உத்தரவிட்டு, தில்லையிலிருந்து ஓலையனுப்பியிருக்கிறார். நான் சென்று பொக்கிஷ அறையிலிருந்து அவற்றை எடுத்து வருகிறேன்" என்றபடியே முறுவலுடன் வெளியே நடந்து மன்னரின் அந்தரங்க அறையை நோக்கி விரைந்தார்.

மரக்கிளைகளிலும், பாழ் மண்டபங்களிலும் வெளவால்கள் மட்டுமே தலைகீழாகத் தொங்குவதில்லை. சில சமயங்களில் மனிதர்கள் கூட அப்படித் தொங்குவதுண்டு என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தான் அந்தக் காடவ வீரன்! ஆனால் அவன் விரும்பி அந்தச் செயலைச் செய்யவில்லையென்பதை அவன் கால்களை மரக்கிளையுடன் இணைத்த கயிறுகள் நிரூபித்தன. தலைகீழாக ஊசலாடிய அவனது கறுத்த முகத்தில் எல்லையற்ற அச்சம் விரவிக் கிடந்தது. அவனது வாயும் திறந்து திறந்து மூடியதே ஒழிய வார்த்தைகள் ஏதும் வெளிவராமல் அர்த்தமற்ற ஒலிகள் மட்டுமே வந்தன.

அவனது இந்த நிலைக்குக் காரணமான யுவான் அவன் எதிரில், கரங்களில் இரு மெல்லிய ஊசிகளுடன் நின்று கொண்டிருந்தான். ஊசிகளைக் கண்ட காடவ வீரனின் விழிகளில் திகில் அதிகரித்தது. யுவானின் குரல் கடுமையுடன் ஆனால் நிதானமாக ஒலித்தது. "காடவனே, நீ இப்போது பதில் கூற மறுத்தால் இப்படியே நிரந்தரமாக ஊமையாகி விடுவாய். என்ன சொல்கிறாய்?"

தாற்காலிகமாக ஊமையாக்கப்பட்டிருந்த அந்தக் காடவ வீரனின் தலை வேண்டாமென்பதாக பலமாக ஆடியது. மீண்டும் அர்த்தமற்ற ஒலிகள் அவனிடமிருந்து எழுந்து, பதிலளித்து விடுவதாகவும் உணர்த்தின. ரத்தம் முழுக்கத் தலையை நோக்கிப் பாய்ந்ததால் சிவந்து கிடந்த அவன் விழிகள் யுவானைப் பரிதாபத்துடன் பார்த்துக் கெஞ்சின.

நிதானமாக அவனை நெருங்கிய யுவான் அந்த ஊசிகளை லாகவமாக காடவனின் கழுத்தில் பதித்து எடுத்தான். அடுத்த கணம் காடவனின் குரல் உயர்ந்து ஒலித்தது. "வேண்டாம் யுவான், வேண்டாம். என்னை விட்டுவிடு. விட்டுவிடு. நான் அனைத்தையும் கூறி விடுகிறேன்." எறக்குறைய கதறலாகவே ஒலித்தது காடவனின் குரல்.

## அருள்வாக்கு

**ரொம்ப ஜலக் கஷ்டமுள்ள இடத்தி கிணறு, குளம் வெட்டுவதை ரொம்பவும் பெரி தர்மமாக ஆதிநாளிலிருந்து ச்லாகித்துச் சொல் யிருக்கிறது. இப்போது ராஜஸ்தான் ஸ்டேட்டு சேர்ந்துவிட்ட ராஜபுதனம் ஒரே பாலைவனப் தேசம் அல்லவா? அங்கே ஏழெட்டு மைலுக்கு ஒ இடத்தில்தான் எவனாவது ராஜாவோ, பிரபுவே கிணறு வெட்டியிருப்பான். ரொம்ப ஆழத்தி ஆதிசேஷன் தலைவரைக்கும் என்பார்களே, அ படிப் பாதாளம் வரைக்கும் தோண்டிக் கொண் போய்த்தான் இப்படி அபூர்வமாக எங்கேயாவ கிணறு வெட்டியிருக்கும். அந்தக் கிணற்றுக் கட் களில் இந்த மஹா பெரிய தர்மத்தை இன்னா இன்ன ராஜா காலத்தில் பண்ணினான் என்**

"சொல். காடவராயன் எங்கே?" கடுமையுடன் ஒலித்தது யுவானின் குரல்.

காடவராயனுடன் கலந்து கொள்ளத் தாமதித்து வந்து, யுவானிடம் சிக்கிக் கொண்ட அந்தக் காடவ வீரன் மளமளவென்று காடவராயரின் திட்டங்களை ஒப்பிக்கத் தொடங்கினான்.

காடவராயனின் வீரர்களின் நடமாட்டம் தஞ்சையில் அதிகரித்திருப்பதாக காவற்படைகள் கூட அதிகமில்லாத அந்த நிலையில் பாண்டிய மன்னனுக்கு ஓலையனுப்பிய துறவியார், காஞ்சியிலிருந்த யுவானுக்கும் ஓலையொன்றை அனுப்பியிருந்தார். அன்றே காஞ்சியிலிருந்து கிளம்பிய யுவான், தன் பார்வையில் பட்ட இரண்டொரு காடவ வீரர்களிடமிருந்தும் இறுதியாக கொள்ளிடக் கரையில் சிக்கியவனிடமிருந்தும் காடவராயனின் திட்டங்களைப் பூரணமாக அறிந்து கொண்டான். ஏற்கெனவே தான் தாமதித்துவிட்டதை உணர்ந்தவன், காடவராயன் தஞ்சையை அடைந்திருப்பானென்பதையும் புரிந்து கொண்டதால் மரக்கிளையிலிருந்து தொங்கிய காடவனை அவசரமாக இறக்கித் தரையில் அமரவைத்தான், "காடவனே, உன் கால்களை மடக்க முயற்சிக்காதே. நரம்புகள் பிசகி விடும். நான் சென்று வீரர்களை அனுப்பும் வரை இங்கேயே இரு" என்றபடியே தனது புரவியை அடைந்து ஒரே தாவலில் ஏறி அதை கொள்ளிடத்துப் பாதையில் பறக்கவிட்டான்.

இரண்டு காதங்கள் சென்றவன், கிராமத்து மக்கள் பலர் பந்தங்களுடன் கூட்டமாக நிற்பதையும் உடன் சோழ வீரர் சிலர் இருப்பதையும் கவனித்து, புரவியின் வேகத்தை மட்டுப்படுத்தினான். இருளில் புரவியின் வேகமான குளம்பொலி கேட்டுத் திரும்பிய கிராமத்தவர் வருபவன் யுவான் என்பது தெரிந்ததும் முகம் மலர்ந்தார்கள். கீழே குதித்தவனை வணங்கி

details எல்லாம் ஸம்ஸ்க்ருதத்தில் கல்வெட்டுக்களாகப் பொறித்திருக்கும். நம்முடைய ஹிஸ்டரி, கல்ச்சர் இவற்றை 'ஷேப்' பண்ணுவதற்கு ரொம்பவும் உதவியாயுள்ள இந்தக் கல்வெட்டுகளுக்கு, 'வாபீ ப்ரசஸ்தி' என்று பேர். 'வாபீ' என்றால் ராஜஸ்தானியர்களான மார்வாரிகள் - அவர்களுக்கு ஜலக் கஷ்டம் நன்றாகத் தெரியுமாதலால் - கிணறு வெட்டும் தர்மத்தில் விசேஷமாக ஈடுபட்டிருக்கிறார்கள்.



க்ராமப் புறங்களில் எல்லாரும் சேர்ந்து குளம் வெட்டலாம். இருக்கிற குளங்களைத் தூர் வாரி சுத்தம் பண்ணலாம். பெரியவன் - சிறியவன் என்றில்லாமல் எல்லோரும் சேர்ந்து பண்ணுவது முக்யம். கோடீச்வரனானாலும், பெரிய பண்ணை யாரானாலும், அவனும் மண் வெட்டி கொண்டு வந்து போட வேண்டும். சாஸ்த்ரங்களில் அப்படித்தான் எழுதியிருக்கிறது. அஸ்திவாரக்கல் நாட்டுவது, டேப் வெட்டுவது முதலானதுகள் சாஸ்த்ரத்தில் இல்லை. எத்தனை பெரியவனானாலும் அவனும் வாஸ்தவமாகவே உடம்பு வேர்க்க மற்றவர்களோடு ஸரி ஸமமாகப் பூர்த்த தர்மம் பண்ணவேண்டும்; ரதோத்ஸவத்தில் எல்லா ஜாதிக்காரர்களும் ஒன்றாகச் சேர்ந்து வடம் பிடித்து இழுக்கிற மாதிரிதான் இதுவும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அழைத்துச் சென்றவர்கள் பாதையின் ஓரத்தில் காயமுற்றும் இறந்தும் விழுந்துகிடந்த சோழ வீரரையும் வண்டியோட்டிகளையும் காட்டினார்கள்.

யுவானின் முகம் இறுகியது. கீழே கிடந்தவர்களைச் சற்று நேரம் வெறித்தவன், அனைவரையும் தஞ்சைக்கு எடுத்து வரும்படி உத்தரவிட்டான். சற்றுமுன்பாக தன்னால் விசாரிக்கப்பட்ட காடவனைப் பற்றித் தெரிவித்தவன், புரவி மீது தாவியேறி தஞ்சையை நோக்கி காற்றாகப் பறந்தான். இரவு நடுநிசியை எட்ட முயன்று கொண்டிருந்தது.

அதே சமயத்தில் பல காதங்களுக்கப்பால் ஆதித்யனையும் யாங்சின்னையும் சுமந்த ரதம், கிருஷ்ணமல்லரின் சீடர்களான உப்பிலிமல்லனும் அவன் சகாக்களும் பின் தொடர, நேர் வடக்கிலிருந்து குடந்தையை இணைத்த பிரதானப் பாதையில் விரைந்து வந்து கொண்டிருந்தது. துறவியாரின் ஓலைகள் கிடைத்தவுடன் யாங்சின்னையும் ஆதித்யனையும் கிருஷ்ணமல்லரின் சீடர்களையும் உதவிக்கு அனுப்பிவைத்த மன்னன், நெல்லூர்புரக் கோட்டையை நிர்வகிக்க வீரர்களை நியமித்து விட்டுத் தானும் மறுதினமே திரும்பி விடுவதாகவும் தெரிவித்திருந்தான்.

ஓலைச் சுவடிகள் வரும் செய்தி முன்னதாகவே அறிவிக்கப்பட்டிருந்ததால் தஞ்சைக் கோட்டைக்குள் வண்டிகள் எந்தத் தடையுமின்றிப் பிரவேசித்தன. இரவு இரண்டாவது ஜாமம் நடந்து கொண்டிருந்தாலும் தஞ்சைக் கோட்டையினுள்ளே பந்தங்களும் தீபங்களும் இரவைப் பகலாகவே அடித்துக் கொண்டிருந்தன. வீதிகளில் ஆங்காங்கு நின்ற பந்தல்களும், தோரணங்களும், கண்களைக் கவர்ந்திழுத்த அரண்மனையின் அலங்காரங்களும் மக்களின் மகிழ்ச்சியைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தன.

காடவராயன் உள்ளே எழுந்த பொறாமைத் தீயை மறைக்க துணியால் முகத்தைப் பாதி வரை மறைத்தபடி வண்டியைச் செலுத்தினான். மக்களோடு மக்களாக நின்று வண்டிகளை வேடிக்கை பார்த்த தனது வீரர்களை விழிகளால் எச்சரித்தவன், பந்தங்களின் ஒளியில் அதிகம் முகத்தைக் காட்டாமல், தனது வண்டியை இரண்டாவதாகச் செலுத்தினான்.

ஓலைச் சுவடிகளைச் சுமந்த வண்டிகளைப் பற்றிய உத்தரவு திட்டவட்டமாக இருந்ததால் அவற்றை வரவேற்ற வீரர்கள், அரண்மனையின் பக்கவாட்டில் வளைந்து திரும்பிய கிளைப்பாதையில் வண்டிகளைச் செலுத்துமாறு கூறிவிட்டு, சுவடிகள் சேர வேண்டிய மாளிகையையும் சுட்டிக் காட்டினர். மாளிகையின் கதவுகள் தட்டப்பட்டவுடன் திறந்து கொண்டன. உள்ளே இளம் புத்தத் துறவியொருவர் அமைதியான முகத்துடனும் கரத்தில் பிடித்த சர விளக்குடனும் காத்திருப்பது தெரிந்தது. ஓலைச் சுவடிகளைக் கண்ட அவரது முகம் மலர்ந்தது. துறவியைக் கண்ட வீரர்கள் வணங்கிவிட்டு அவர் சுட்டிக்காட்டிய இடத்தில் சுவடிகளை அடுக்க ஆரம்பித்தனர். தனது வீரர்களுக்கு சமிக்ஞை செய்த காடவராயன், தானும் சுவடிகளைச் சுமந்து மாளிகையின் உள்ளே குவிக்க ஆரம்பித்தான். அவன் சிரத்தையையும் வேகத்தையும் கண்ட காவலர்கள் வண்டியோட்டிகளுக்கு உணவுக்கு ஏற்பாடு செய்திருப்பதாகவும் அனுப்பி வைப்பதாகவும் கூறிவிட்டு வெளியேறினர். புத்தத் துறவியை அணுகிய காடவராயன், "ஐயா, இந்த இரவுப் பொழுதை நாங்கள் இங்கேயே கழித்து விட்டு விடிந்த பின்பு, தில்லைக்குத் திரும்பிவிடுகிறோம்" என்று கேட்டுக் கொண்டான், வெகு பவ்யமாக.

அந்த இளம் புத்தத் துறவியின் கவனம்

ஓலைச்சுவடிகள் மீதே பதிந்து கிடந்தது. தலையசைத்தபடியே சுவடிகளை ஆராய்ந்தவர் அவற்றை ஒவ்வொன்றாக ஆராய்ந்து மூலையி லிருந்த பேழைகளில் நிதானமாக அடுக்கத் தொடங்கினார்.

அரண்மனையின் பக்கவாட்டுப் பகுதியில் திரங்களிருப்பதை உணர்ந்து கொண்ட காடவ ராயன், சந்தடியின்றி நகர்ந்து மறு முனையி லிருந்த சாளரத்தை அணுகினான். சாளரத்தின் வழியே பார்வையைச் செலுத்தியவனுக்கு ஆனந்தம் காத்துக் கிடந்தது. மறுபுறத்தில் விரிந்து கிடந்தது தஞ்சையின் சிற்ப மண்டபம். காடவ மன்னன் கூறிய சிற்பமண்டபம் அது தான் என்பதையும், பொக்கிஷ நிலவறைக்குச் செல்லும் ரகசியப்பாதை அங்கு எங்கோதா னிருக்க வேண்டுமென்பதையும் புரிந்து கொண்டவன், தனது வீரர்களை அழைத்து, சாளரத்தின் வழியே சுட்டிக்காட்டியபடி ரகசியம் பேச ஆரம்பித்தான்.

எதையும் கவனிக்காமல் சுவடிகளைப் புரட்டிக் கொண்டிருந்த இளம் புத்தத் துறவி யின் விழிகளில் அறிவுத் தாகம் பளபளத்துக் கிடந்தது.

இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள், யோக சாத்திரங்கள், திருமுறைகள், பிரபந்தங் கள், தொல்காப்பியம், குறள், இரட்டை மணி மாலை, யாப்பருங்கலக் காரிகை, சூளாமணி, வீர சோழியம், தண்டியலங்காரம், நேமி நாதம், நன்னூல், வச்சணந்தி மாலை, கீழ்க்கணக்கு நூல்கள், தொகை நூல்கள், புறப் பொருள் அகப்பொருள் வெண்பாக்கள், பிங்களம், நந்திக் கலம்பகம், பெருந்தேவனாரின் பரதம், கலித் தொகை, பரிபாடல், வாகுவலயம், இசை நூல் கள், முதுமொழிக் காஞ்சி, நான்மணிக் கடிகை, பழமொழி வெண்பா, சிறு பஞ்சமூலம், ஏலாதி, க்ஷேத்திர வெண்பாமாலை, மற்றும் அயல் மொழியில் தத்துவார்த்த மகா சாஸ்திரம், காளி தாஸனின் காவியங்கள், அர்த்த சாஸ்திரம், காவ்ய தர்ஸம், விக்ரமார்ச்சுன விஜயம், சங்க தேவரின் வான சாஸ்திரம், மங்கள ஹர்த்துலு, வாகனுசாஸனா.... - சுவடிகளைப் பார்த்துப் பார்த்து மெய்மறந்து வியப்பில் விரிந்த விழி களுடன் அடுக்கிக் கொண்டிருந்த துறவியின் சித்தம் இத்தனை நூல்களையும் சேகரிக்க சுவாமி தேவர் எத்தனை சிரமங்கள் பட்டிருக்க வேண்டும் என்பதை எண்ணியதால் நெகிழ்ந்து கிடந்தது. நடுநிசி கடந்து கொண்டிருப்பதையும் உணராமல் சுவடிகளில் ஆழ்ந்து கிடந்தவரது கவனம், மறுபுறத்திலிருந்து எழுந்த சரசர வென்ற ஒலியால் களைந்தது. திரும்பியவர், வண்டியோட்டிகளின் தலைவனாக வந்து இருக்க இடமும் கேட்டவன், சுவடிகளின் அடிப்பகுதியில் ஏதோ துழாவிக் கொண்டிருப் பதைக் கண்டு எழுந்து, "என்ன செய்கிறாய் அப்பனே?" என்று கேட்டபடியே அவனை நெருங்கினார்.

அவர் நெருங்கியதும் சட்டென்று எழுந்த வனது கரத்தில் வாள் ஒன்று பளபளத்தது. துற வியைப் பார்த்து கொடூரமாக இளித்தவன், நகர்ந்து தூணில் செருகப்பட்டிருந்த பந்த மொன்றை எடுத்துக் கொண்டு ஓலைச் சுவடி களை நெருங்கினான். அவன் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட துறவி அலறினார். "மூடனே, என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? இவை யனைத்தும் அறிவு நூல்களடா...." என்று கூவி யவர் பாய்ந்து அவன் கரத்திலிருந்த பந்தத்தைப் பிடுங்கவும் முயன்றார்.

"ஆம் துறவியே. என் வீரர்களுக்கு அடை யாளம் காட்ட இவை பயன்படட்டுமே. அறிவு நூல்கள் எனக்கு இப்படித்தான் உதவும்" என்ற படியே அவரை வெகு அலட்சியமாக வாள் பிடித்த கரத்தால் ஒதுக்கியவன், பந்தத்தைச் சுவடிகளின் அடியில் செருகினான்.

இளம் துறவியின் இதயம் நின்றுவிடும் போலானது. பாய்ந்து சென்று பந்தத்தை எடுக்கக் குனிந்தவரது பின் கழுத்தில் வேகமாக இறங்கியது காடவராயனின் வாள்.

(தொடரும்)

## மூன்று மணி நேரம் கையெழுத்துப் போட்டார்!



பல்வேறு குற்றங்களுக் காக சசிகலாவை செயலாக்கப் பிரிவினர் காபிபோசா சட்டப் படி கைதாக்கி ஓராண்டு சிறை யில் வைத்து விட்டது தெரி யும். இதற்காக 1533 பக்கங் களில் குற்ற ஆவணம் தயாரித் தது செயலாக்கப்பிரிவு. குற்ற வாளியிடம் இந்த ஆவணங் களின் எல்லாப் பக்கங்களிலும் கையொப்பம் வாங்குவது முறை. கையெழுத்துப் போட்டு முடிக்க சசிக்கு மூன்று மணி நேரம் பிடித்தது.

— பிரதீப்

## 42. வாட்கள் மோதின!

கூக்குரலிடவும் அவகாசமின்றி கழுத்தின் நரம்புகள் வெட்டப்பட்டதால் அந்த இளம் துறவி சுவடிகளின் மீதே குருதி பொங்கச் சரிந்து உயிரற்று விழுந்தார். காய்ந்து கிடந்த ஓலைகளில் பஞ்சை விட வேகமாகப் பற்றிய நெருப்பு, பக்கங்களிலிருந்த சீலைகளிலும், மரப்பொருட்களிலும் பாய்ந்து பரவத் தொடங்கியது. புகை வெளியே தெரிந்த அரை நாழிகை நேரத்தில் காடவ வீரர்கள் அந்த மண்டபத்தை நோக்கி குவியத் தொடங்கினார்கள். அரண்மனை வீரர்களும், கோட்டை மீதிருந்து புகையைக் கண்டு ஓடிவந்த வீரர்களும் காடவராயனின் வீரர்களைக் கண்டு திகைத்தாலும் வாட்களை உருவிக் கொண்டு உள்ளே நுழைய முற்பட்டதால், அரண்மனையின் அந்தப் பகுதியில் துவங்கி வாட்களின் ஒலி பரவத் தொடங்கியது. வீரர்களில் பாதிப் பேரை காடவ மன்னன் சிறையிருந்த மாளிகையை நோக்கி விரையுமாறு உத்தரவிட்ட காடவராயன், தனது வீரர்களை அழைத்துக் கொண்டு சிற்ப மண்டபத்தை நோக்கிப் பாய்ந்தான். மண்டபத்தின் வலது மூலையில் புலிச்சின்னம் வரையப்பட்ட சீலைகளால் மூடப்பட்டுக் கிடந்த பகுதியைக் கண்டவன், காடவ மன்னன் அடையாளம் கூறிய பகுதி அதுவாகத்தானிருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டதால் விரைந்து சென்று சீலைகளை விலக்கினான். உச்சியில் சூரிய பிரபை வரையப்பட்ட பெரும் சிம்மாசனம் ஒன்று வெகு கம்பீரமாக நின்றது. அதன் கைப்பிடியிலும் கால்களிலும் கூட யாளியின் வடிவமும் புலியின் வடிவமும் செதுக்கப்பட்டு பொன் தகடுகளால் மூடிக் கிடந்தது. சிவப்புக் கற்கள் பதிக்கப்பட்ட புலியின் கண்கள் காடவராயனை நோக்கித் தீ விழி விழித்து அங்கு அத்துமீறுவது அபாயம் என்று எச்சரிப்பது போல் தோன்றின. காடவராயன் எதையும் கவனிக்கும் நிலையில் இல்லை. தனது வீரர்களை அழைத்து அந்த சிம்மாசனத்தைப் பின்புறமாகத் தள்ள உத்தரவிட்டான். நீரில் ஒரு சலனம் ஏற்பட்டதும் வழுக்கிச் செல்லும் மீனைப் போல சிம்மாசனம் பின்நோக்கி நகர்ந்து, அது நின்ற இடத்தில் சதுரமான பள்ளம் ஒன்றும் தோன்றியது. இருபுறங்களிலும் யாளிகளின் வரிசை கைப்பிடிக்கு வசதியாக அணிவகுத்திருக்க, படிகள் சுழன்று சுழன்று கீழே சென்றன. வீரர் பதின்மரைத் தன்னுடன் வரவும் எஞ்சியவர்களை மேலே காவலுக்கு நிற்கவும் உத்தரவிட்டான் காடவராயன். படிகளில் இறங்கத் தொடங்கினான். பூமிக்குள் குடைந்து சென்ற படிகள் சுழன்று சுழன்று ஏதோ பாதாள உலகிற்கே செல்வதாகத் தோன்றின. காடவராயனின் கால்கள் மடங்கி மடங்கித் தொய்ந்து, கண்கள் இருண்டு தலையும் சுழலும் நிலை வந்து சேர்ந்தபொழுது படிகள் முடிவுற்று, சிறிய அறையொன்று தெரிந்தது. சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டவன், அங்கு எந்தப் பொருட்களுமில்லாததையும் அறையின் எதிர்புறம் கருங்கற்சுவர் ஒன்று தெரிவதையும் கண்டு திகைத்தான். கருங்கற்சுவரை வாளால் தட்டிப் பார்த்தவனுக்கு, அது கருங்கல் அல்ல என்பதும் கரியவர்ணம் பூசப்பட்ட மரச்சுவர் என்பதும் புரிந்தது. நிதானத்தை அறவே இழந்து விட்ட காடவராயன், அதைத் திறப்பதற்குரிய விசையேதும் அவனுக்குத் தென்படவில்லை. ஒதுங்கி நின்றவன், வீரர்களை அழைத்து அந்த மரச்சுவரை மோதி உடைத்துத் திறக்க உத்தரவிட்டான்.

# இன்திர சுந்தரி

அரண்மனையைச் சுற்றிலும் கேட்ட வாட்களின் ஒலியும், வீரர்களின் கூச்சல்களும், காற்றில் உடன் கலந்து துளைத்த நெடியும், புகையும் இனிய கனவுகளுடன் உறங்கிக் கொண்டிருந்த பூங்கோதையைத் திடுக்கிட்டு எழ வைத்தன. பணிப்பெண்களும் வீரர்களும் அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருப்பதையும் கீழேயிருந்து வாட்களின் ஒலிகள் கேட்பதையும் உணர்ந்தவள் குழப்பத்துடன்



வெளியே வந்தாள். கொங்கு மன்னன் அவநிதன் அவளை நோக்கி விரைந்து வருவது புலப்பட்டது. கலவரமும் அச்சமும் அவள் முகத்தில் படர்ந்து கிடக்க, பூங்கோதை "தந்தையே, என்ன நேர்ந்தது? ஒன்றும் விளங்கவில்லையே?" என்றாள் குரலே எழாமல்.

அவநிதன் குரலில் இன்னமும் பதற்றம் தெரிந்தது. "மகளே, உள்ளே சென்று விடு. அரண்மனையைக் காடவர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். சிற்ப மண்டபத்தில் தீப்பிடித்திருக்கிறது. நம் துறவியாரையும் எங்கும் காணவில்லை. காடவர்களால் ஏதும் தீங்கு நேர்ந்து விட்டதோ என்றும் தெரியவில்லை. நீ அறைக்குள் வந்து விடு மகளே."

திகைத்து நின்றுவிட்ட பூங்கோதையின் செவிகளில் சிற்ப மண்டபத்தில் தீப்பிடித்திருப்பதாக அவநிதன் கூறிய வார்த்தைகளைத் தவிர வேறு எதுவும் விழவில்லை. அடுத்த கணம் சட்டென்று திரும்பியவள், சிற்ப மண்டபமிருந்த திசையை நோக்கிப் படிகளிலிறங்கி ஓட ஆரம்பித்தாள். பதற்றத்துடன் அவளை அழைத்தபடி பின்தொடர்ந்த அவநிதனின் குரல் அவளுக்கு எட்டவேயில்லை.

எதிர்பாராத இந்தத் தாக்குதலில் தஞ்சையின் வீரர்கள் முதலில் சற்றுத் திகைத்தாலும், பின்னர் இயற்கையான துணிவாலும், சோழ வீரர்களுக்கே உரிய வாட்போர் லாகவத்தாலும் காடவ வீரர்கள் எதிர்த்துத் தாக்கத் தொடங்கி விட்டிருந்தனர். போதாக்குறைக்கு தஞ்சைக் கோட்டைத் தலைவனின் நீண்டகாலப் போர் அனுபவமும், எந்தச் சிக்கலான சூழ்நிலையையும் எதிர்கொள்ளும் திறமையும், சிறு சிறு பிரிவுகளாக வீரர்களை அணி வகுக்கச் செய்து காடவர்களை மடக்கியவிதமும் சோழ வீரர்களுக்குத் துணிவையும் காடவ வீரர்களுக்கு அச்சத்தையும் ஏற்படுத்தின. ஆனால் எங்கிருந்தோ கோட்டைக்குள் நுழைந்து வந்துகொண்டேயிருந்த காடவர்களின் எண்ணிக்கையும் கூடி விட்டதால், போரின் உக்கிரம் உயர்ந்து கொண்டே போனது. போரிட்டபடியே அரண்மனையெங்கும் நுழைந்து தேடிய கோட்டைத் தலைவன் இளவரசியையும் கொங்கு மன்னனையும் காணாமல் திகைத்தான். அதைவிட, துறவியாரைக் காணாததால் அதிகமாகத் திகிலடைந்தான். அவனை வழியில் சந்தித்த அமைச்சருக்கும் துறவியார் போன இடம்



இங்கிலாந்தில் செஸ்டர் மிருகக் காட்சிசாலையில் இருக்கிறது இந்த ஆசிய யானைக் குட்டி. தாயிடமிருந்து பிரிந்த இந்த குட்டி, புட்டிப் பால்தான் குடிக்கிறது. அது மட்டுமில்லை. தினமும், மிருகக்காட்சிசாலை ஊழியரான கவின் போர்செர், யானைக்குட்டியைப் படுக்க வைத்து, அன்புடன் தட்டிக் கொடுத்தால்தான் தூங்குகிறது. தாலாட்டு பாடச் சொல்லிக் கேட்குமோ?

— கௌதம்

தெரியவில்லை.

கோட்டைத் தலைவனும் பேரமைச்சரும் அரண்மனை வீரர்களும் பதற்றத்துடன் தேடிக் கொண்டிருந்த துறவியார், எந்த ஒலிகளும் எட்ட இயலாத இடத்தில் ஏகாந்தமாகப் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார். சோழ மன்னனின் அந்தரங்க அறையின் வழியே பொக்கிஷ நிலவறையை அடைந்திருந்தவர் தரையிலமர்ந்து பூங்கோதைக்காக ஆபரணங்களையும், முத்துச் சரங்களையும், இதர நகைகளையும் பார்த்துப் பார்த்துத் தேர்ந்தெடுத்து, பேழையொன்றில் அடுக்கிக் கொண்டிருந்தார். அவரது விசால விழிகளில் பெரும் சந்துஷ்டி நிலவிக் கிடந்தது. புலிச் சின்னம் பொறிக்கப்பட்ட பெரும் தந்தப் பேழையொன்றைத் திறந்தவர், உள்ளிருந்து ஒளிவீசிய கற்களையும், மாணிக்க மாலைகளையும், அணிகலன்களையும் கண்டு, அவை சோழ ராஜேந்திரனின் பட்டத்தரசிக்கு உரியவை என்பதைப் புரிந்து கொண்டதால் அவர் இதழ்களிலிருந்த முறுவல் இன்னும் விரிந்தது. அந்தப் பேழையை அப்படியே நகர்த்தி பூங்கோதைக்காகத் தாம் தேர்ந்தெடுத்த ஆபரணங்களுடன் சேர்த்தார்.

பேழையை நகர்த்திவிட்டு நிமிர்ந்தவரை அடுத்திருந்த அறையிலிருந்து எழுந்த ஒலிகள் திடுக்கிட வைத்தன. சோழவம்சத்தின் வம்சாவளிகளும், பட்டயங்களும், அரசகுலத்து ரகசியங்களும் ஓலைகளாகப் பேழைகளில் அடுக்கப்பட்டிருந்த அந்த அறையின் ரகசிய வாயிலான மேற்குப்புற மரக்கதவை எவரோ பலமாக மோதும் ஒலி எழுந்து, மண்டபத்தில் எதிரொலித்தது. துறவியார் இரண்டடி எடுத்து வைக்குமுன் அந்த மரக்கதவு உட்புறமாகப் பெயர்ந்து பேழைகளைச் சரித்தபடி தடாலென்ற பெரும் ஒலியுடன் விழுந்தது.

அறையெங்கும் பரவிய தூசிப் படலத்தினூடே பலகையை மிதித்துக் கொண்டு பந்தங்களுடனும் வாட்களுடனும் பலர் நுழைவதும் புலப்பட்டது. முன்னால் உருவிய வாளுடன் நுழைந்தவன் காடவராயன் என்பதைக் கண்டுகொண்ட துறவியாரின் விழிகளில் அவரது பூர்வாசிரமத்திலிருந்ததும், துறவு பூண்ட பிறகு அடியோடு மறைந்து விட்டதுமான போர் வெறியும், அசாத்திய கோபமும் தோன்றி, அவை சிவக்கத் தொடங்கின. சிவந்த விழிகள் கொலைப் பார்வையாக அவனை வெறித்தன.

உள்ளே நுழைந்து நின்ற காடவராயனும் மறுபுறத்தில் ஆஜானுபாகுவாக நின்றிருந்தவர்களும் துறவியாரைக் கண்டதும் ஒருகணம் திகைத்தனர். அடுத்து அவன் குரலில் பெரும் ஆத்திரம் ஒலித்தது. "வீரர்களே, முதலில் அந்தத் துறவியைக் கொன்று விடுங்கள்!"

பொக்கிஷ அறையை இணைத்த குறுகிய வாயிலின் வழியே காடவ வீரர் பதின்மரும் ஓங்கிய வாட்களுடன் துறவியாரை நோக்கிப் பாய்ந்தனர்.

தம்மருகில் வெறும் ஆபரணங்களே சிதறிக் கிடப்பதையும், வேறு ஆயுதங்களேதும் இல்லாததையும் கவனித்தார் துறவியார். அவருடைய பெருவிழிகள் அருகில் வெளிச்சத்திற்காக எரிந்து கொண்டிருந்த உயரமான பாவை விளக்கின் மீது பதிந்தன. இருவர் சேர்ந்து நகர்த்தக்கூடிய அந்த கனமான வெண்கல விளக்கைப் பற்றி உயர்த்தி, இரு கரங்

களாலும் முழுவேகத்துடன் காடவ வீரர்களை நோக்கி எறிந்தார். இரண்டு மூன்று காடவ வீரர்களை அந்தக் கனமான பாவை விளக்கு வீழ்த்தி விட, வேகத்துடன் பாய்ந்த துறவியார், அடுத்து நின்ற காடவ வீரனின் வாள் பிடித்த கரத்தைப் பற்றி, அதை அவன் உடலிலிருந்து பிய்த்து எறிபவர் போல ஓர் இழுப்பு இழுத்தார்! தரையில் கால்கள் பாவாமல் ஏறக்குறைய பறந்தே சென்ற அந்த வீரன், எதிர்ச் சுவரில் பலமாக மோதி விழுந்தான்! அந்தக் குறுகிய வாயிலை ஏறக்குறைய அடைத்தே நின்ற துறவியாரின் மீது மற்றொரு வாள் இறங்க முற்பட்டது. அதைத் தவிர்க்க, சுழன்று தழைந்து வெகு லாகவமாகத் திரும்பிய துறவியாரை பக்கவாட்டிலிருந்து தாக்கிய மற்றொரு வாள், அவரது இடது புஜத்தில் பதிந்து, வேகத்துடன் முன்புறமாக இழுக்கப்பட்டது.

ஒருகணம் தடுமாறிய துறவியார், அந்தக் காடவ வீரனின் அடுத்த வீச்சைத் தவிர்த்து சுழன்று திரும்பினார். சுழன்ற வேகத்தில் பக்கச் சுவரின் மேல் பகுதியில் பதிந்த அவரது வலது கரத்தில் ஏதோ தட்டுப்பட்டது. நீண்ட காலமாக அங்கேயே தொங்கிக் கொண்டிருந்த வாள் அது. அதைத் தொடுவதற்குக் கூட எந்த சோழ வீரனுக்கும் அருகதையில்லையென அவரே பல திங்களுக்கு முன்பாகக் கூறியிருந்தார்!

வேங்கி முதல் குமரி வரை ஒரே குடையின் கீழ் ஆண்ட குலோத்துங்கனின் அற்புத வாள் அது. அதைத் தொட்டதுமே துறவியாரின் உடலில் மின்னல் பாய்ந்தது. இமைக்கும் நேரத்தின் பாதிப் பொழுதில், அந்த வாளை உருவியவர், திடமாகக் கால்களைப் பதித்து நின்றார். சிம்மத்தின் கர்ஜனையைப் போல் ஓர் ஒலி எழுந்தது அவரிடமிருந்து.

வீரர்களிடம் துறவியாரைக் கொல்ல உத்தரவிட்ட காடவராயன் பின்னர் எதையும் கவனிக்கும் நிலையில் இல்லை. அறைக்குள் உருண்டு கிடந்த பேழைகளைப் புரட்டிப் புரட்டிப் பந்தத்தால் ஆராய்ந்தவனின் விழிகளில் இறுதியாக அந்தப் பேழை தென்பட்டது. ''இந்திர தனுசு'' என்று பொறிக்கப்பட்டிருந்த அந்தப் பேழையைப் பாய்ந்து எடுத்தவன், திரும்பிப் படிகளில் ஏறி, மேலே விரைய ஆரம்பித்தான். வளைந்து சுழன்று மேலே ஏறிய படிகளில் நான்காவது வளைவை எட்டும் போதுதான் அவனுக்குக் கீழேயிருந்து ஒரு சிம்மத்தின் கர்ஜனை கேட்டது. அடுத்து காடவ வீரர்களின் அலறல் ஒலிக்கத் தொடங்கியது. வேகத்துடன் படிகளைத் தாவித் தாவிக் கடந்தவன், மீண்டும் சிற்ப மண்டபத்தை அடைந்தான்.

சிற்ப மண்டபத்திலும் வெளியிலும் உக்கிரமான போர் தொடங்கியிருந்தது. பேழையுடன் இரண்டடி எடுத்து வைத்தவன், ஏதோ மின்னலால் தாக்குண்டவன் போல சட்டென்று நின்றான். சிற்ப மண்டபத்தின் வாயில் வழியே அதிவேகமாக நுழைந்து கொண்டிருந்தான் யுவான். கடல் நாகம் பதித்த அந்தப் பதக்கம் சீற்றத்துடன் விழிக்க, அந்த சீனத்து வாள் அசாத்திய வேகத்தில் சுழன்று காடவ வீரர்களைப் பட்பட்டென்று சரித்துக் கொண்டே முன்னேறத் தொடங்கியிருந்தது. யுவானின் சிறு விழிகள் தன்னையே நோக்குவதையும் அவன் வாளின் வேகம் கூடுவதையும் கவனித்த காடவராயனுக்கு நெருங்கி வரும் அபாயம் புரிந்ததால் கரத்திலிருந்த பேழையையும் மண்டபத்தின் பல்வேறு பகுதிகளையும் மாறி மாறி நோக்கி விழித்தான். அவன் பார்வையில் மண்டபத்தின் ஒரு கோடியில் பூங்கோதை காடவ வீரர்களுக்கு இடையே நிற்பதும், கொங்கு மன்னன் அவநிதன் ஆவேசமாக வாளை வீசிக் கொண்டிருப்பதும் புலப்பட்டது. என்ன செய்ய வேண்டுமென்பதை உடனே தீர்மானித்த காடவராயன், தன் கரத்திலிருந்த பேழையை உபதலைவன் ஒருவனிடம் அளித்து விட்டுப்





''நேயர்களே ஆயுத பூஜையையொட்டி இன்று சிறப்பு நிகழ்ச்சியாக பிளேடு பக்கிரி, பிச்சுவா பிச்சுமணி, ஹாக்ஸா ஹரி, சைக்கிள் செயின் சிங்காரம் ஆகியோரைச் சந்திப் போமா?''

– அலமு

பூங்கோதையை நோக்கிப் பாய்ந்தான். அவள் கரத்தைப் பற்றி முரட்டுத்தனமாக இழுத்தவன், தன் வாளை உயர்த்தி அவள் கழுத்தில் பதித்து யுவானை நோக்கி இரைந்தான்; ''யுவான், இன்னும் ஓர் அடியெடுத்து வைத்தாலும் இந்த வாள் இளவரசியின் உயிரைக் குடித்து விடும். அங்கேயே நில்.''

வாட்கள் மோதிய ஒலிகள் சட்டென்று ஓய்ந்து மண்டபத்தில் அமைதி நிலவியது. அவநிதனும் யுவானும் சோழ வீரர்களும் அசைவற்று நிற்க, இளவரசியை இழுத்தபடி வாயிலை நோக்கி ஓடினான் காடவராயன். வெளியில் இன்னும் உக்கிரமான போர் நடந்து கொண்டிருக்க, தூரத்தில் போர் ரதமொன்றில் காடவமன்னனை விடுவித்து விட்ட வீரர்கள், தன்னை நோக்கி வருவதையும் கவனித்தான். பூங்கோதையையும் இழுத்தபடியே படிகளில் இறங்கியவன், ரதத்தை நோக்கி விரைய ஆரம்பித்தான்.

சிற்ப மண்டபத்திலிருந்து காடவராயனைப் பின்தொடர்ந்து வந்த யுவானைப் படிகளி லேயே காடவ வீரர்கள் சூழ்ந்து கொண்டனர். தனது கண்ணெதிரிலேயே இளவரசியைக் காடவராயன் கடத்திச் செல்லவிட்டால் பிறகு ஆதித்யனும் இளைய பாண்டியரும் தன்னை மன்னிக்கவே மாட்டார்கள் என்பதை உணர்ந் தாலும், அபாயமின்றி இளவரசியை மீட்க வழியை சிந்தித்தபடியிருந்தான் அவன். மஞ்சள் முகத்தில் சீற்றம் அதிகரித்திருந்தது. நெருங்க முயன்ற காடவ வீரர்களை மளமள வென்று அவனுடைய வாள் சரித்துக் கொண்டே வர, காடவராயனை நோக்கி முன் னேறிக் கொண்டிருந்தான் யுவான்.

அதே சமயத்தில், துறவியார் குருதியில் நனைந்த நீண்ட வாளுடன் சிற்ப மண்டபத் தில் தோன்றினார். உடலெங்கும் வழிந்த குருதியையும், இடதுபுஜத்திலிருந்து குருதியைப் பொங்க விட்ட காயத்தையும், சிவந்து கிடந்த அவரது பெருவிழிகளையும், அவரது வயதிற் கும், துறவி உடைக்கும் சற்றும் பொருந்தாமல், காடவ வீரர்களைச் சரமாரியாக வெட்டிச் சாய்க்கத் தொடங்கிய அந்த வாள் வேகத்தை யும் கண்ட சோழ வீரர்களும், அவநிதனும் கால ருத்திரன் இப்படித்தானிருந்திருக்க வேண்டும் என்றே தீர்மானித்தார்கள். சிற்ப மண்டபத்திலிருந்த காடவ வீரர்களை துவம் சம் செய்தவாறே துறவியார் வாயிலை நோக்கி விரைந்தார்.

காடவ கோப்பெருஞ்சிங்கனிருந்த ரதத்தை நெருங்கிவிட்ட காடவராயன், இளவரசியை ரதத்தில் காடவ மன்னனிடம் தள்ளி, உபதலைவனிடமிருந்த இந்திர தனுசு பேழை யையும் ரதத்தினுள் வைத்து விட்டுத் திரும்பி னான். யுவானிருந்த திசையில் பார்வையைச் செலுத்தியவன், அந்த சீனத்து வாள் மின்னல் வேகத்தில் சுழல்வதையும், காடவ வீரர்கள் வரிசையாகச் சரிந்து விழுவதையும், சொற்ப மாக இருந்தாலும் சோழ, பாண்டிய வீரர்கள் தனது வீரர்களைப் பலமாகத் தாக்குவதையும் கண்டான். அவன் மனத்தில் ஆத்திரம் பொங்கியது. சிற்ப மண்டபத்துப் படிகளில் துறவியாரும் காடவ வீரர்களைத் தீர்த்து விட்டு வந்து கொண்டிருப்பதைக் கண்ட வனின் நிதானம் அறவே தொலைந்து போன தால் இருவரில் ஒருவரையாவது கொன்று பழிவாங்கிவிடுவது என்று தீர்மானித்தான். அருகிலிருந்த உபதலைவனிடமிருந்து ஈட்டி யொன்றைப் பிடுங்கியவன், சற்று நெருக்கத்தில் போராடிக் கொண்டிருந்த யுவானைக் குறி வைத்துப் பலமாக வீசினான்.

(தொடரும்)



"இந்த ஆயுதமெல்லாம் பூஜையிலே வைக்கணும்னு பய ஒரே பிடிவாதம்!"

- மலர்

என்கிறார் வி.என்.எஸ்.

தினசரி சென்னையில் உருவாகும் சுமார் 3000 டன் குப்பையில், சுமார் 1000 டன்



• கழிவிலிருந்து மரத்தூளைப் பிரிக்கிறார்கள்

இடிபாடுகளின் பொருட்களாகத்தான் இருக்கிறதாம் - செங்கல், காரை, மரத்துண்டுகள் என்று.

"கலிபோர்னியாவில், சான்பிரான்ஸிஸ்கோ அருகே உள்ள சான்ஜோஸில் இருக்கிற ரீசைக்ளிங் தொழிற்சாலைக்குக் கூட்டிக் கொண்டு போய்க் காண்பித்தார்கள். செங்கல்லை, சிமெண்ட்டை, மரத்தை, இரும்பு, பிளாஸ்டிக் பொருட்களை, குப்பையிலிருந்து எப்படி எந்திரம் மூலம் பிரித்து எடுக்கிறார்கள் என்பதைக் காண்பித்தார்கள். பக்கத்திலேயே ரீசைக்கிள் பண்ணி, உபயோகிக்கத் தகுந்த வடிவில் தயாராக்கி வைத்திருக்கிறார்கள்.

இங்கே ரோடு போடவும், அடித்தளம் அமைக்கவும், கான்க்ரீட்டுடன் தார்க் கலவை கலந்து போடுகிறார்கள். சாலைகளில் தார் ரோடு போடுமுன் இதை உபயோகிக்கலாம்.

சென்னையை அடுத்துள்ள ஏரிகளைச் சுரண்டி சிவப்பு மண்ணை எடுத்து வந்து போடவே வேண்டாம். நாளடைவில் ஏரிதான் பாழாகிறது என்கிறார் வி.என்.எஸ்.

இந்த உடைசல்களை எல்லாம் பிரித்துச் சுத்தப்படுத்தி, உடைத்து, புது ரோடு போட தாழ்வான பகுதிகளை கீழே நிரப்ப, உபயோகிக்கலாம். தனியார் துறையில் யாராவது முன்வரும் பட்சத்தில், அரசு நிலம் ஒதுக்கி, மானியம்கூட வழங்கலாம். ஏனென்றால் அரசின் பிரச்னை குறையும். சுற்றுச் சூழல் பாதிக்கப்படாது. நடைபாதைச் சதுரக் கற்கள், ஃபுட்பாத் பிரிப்புப் பகுதிகள் ஆகியவற்றுக்கு ரீசைக்கிள் செய்யப்பட்ட கலவையைப் பயன்படுத்தலாம்.

தண்ணீர் கிடைக்காமல் தரிசாகக் கிடக்கிற நிலமாக இருந்தால் போதும். விவசாய நிலத்தைத் தவிர்த்து விட வேண்டும். கல் உடைக்கும் குவாரிகளின் அருகிலேயேகூடத் தொழிற்சாலையை அமைக்கலாம்.

"இப்போதும்தான் செங்கல் உடைசல், காரை எல்லாவற்றையும் கொண்டு போய்க் கொட்டுகிறார்கள். ஆனால் குப்பை கூளத்துடன் இவை கலந்து விடும்போது யார் போய்ப் பிரித்து எடுப்பார்கள்?" என்கிறார் வி.என்.எஸ்.

'யு.எஸ்.ஏஷியா என்வயர்மென்டல் பார்ட்னர்ஷிப்' (USAEP) ஆதரவில் நடைபெற்ற இந்தக் கருத்தரங்கில் கலந்து கொண்டுவிட்டுத் திரும்பியிருக்கும் வி.என்.எஸ்., எக்ஸ்னோரா சார்பில், இங்கும் இது பற்றிய கருத்தரங்கு நடத்த இருக்கிறார்.

"அங்கே போனபிறகுதான் தெரிந்தது - இந்த ரீசைக்ளிங் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள் எல்லாம் கோடீசுவரர்கள் ஆகியிருக்கிறார்கள் என்பது! இங்கேயும் செய்து காட்டினால் அதைப் போலச் சாதிக்க முடியும்!" என்கிறார் வி.என்.எஸ்.

**-சாருகேசி**

## 43. ஸ்ரீரங்க விமானம்!

படிகளில் வேகமாக இறங்கிக் கொண்டிருந்த துறவியார் ஒருகணம் உறைந்தார். சுற்றி நின்ற காடவர்கள் மீது வாளைச் சுழற்றிக் கொண்டிருந்த யுவான், அந்த ஈட்டியை அறவே கவனிக்கவில்லையென்பதை உணர்ந்தவர், அத்துடன் யுவான் தொலைந்தான் என்றே தீர்மானித்தார். அவர் குரல் "யுவான்" என்று பெரிதாக உயர்ந்து ஒலித்தது. அந்த எச்சரிக்கைக் குரலால் பக்கவாட்டில் திரும்பிய யுவான், அந்த ஈட்டியை மிக நெருக்கத்தில் வந்தபின்பே கவ னித்ததால் உடனே தழைந்து தப்ப முயன்றான். அவன் புறங்கழுத்தின் மீது ரத்தக்கோடு ஒன்றைக் கிழித்த அந்த ஈட்டி மறுபுறத்திலிருந்த காடவவீரன் மீது பாய்ந்தது.

அடுத்தகணம் கழுத்திலிருந்து ரத்தம் பொங்க சிலிர்த்துக் கொண்டு நின்ற யுவானிடமிருந்து சீனத்துப் போர்க்கூச்சல் ஒன்று எழுந்தது. கீழே சரிந்த காடவனின் வாளையும் பறித்த யுவான், இரு கரங்களிலும் வாட்களுடன் வெகு உக்கிரமாகச் சுழன்றான். அவன் போர் முறையையும், கால்களை அடிமாற்றி வைத்துச் சுழன்ற முறையையும் கண்ட துறவியார், சீனத்துப் போர் முறையான "தாய்-சி-சுவான்" வாட்போர் முறையின் உச்சம் அது என்பதை உணர்ந்தார்.

ஆயுளில் கண்டறியாத அந்தப் போர்முறையையும், அவன் மார்பிலிருந்து சீறிய கடல் நாகத்தையும் அவன் தன்னை அதிவேகமாக நெருங்குவதையும் கண்ட காடவராயன் மனத்தில் திகில் தீப்பிடித்தது. அச்சம் பிடரியைத் தாக்க, ரதத்தில் தாவியேறியவன், வீரர்களை இன்னும் கடுமையாகத் தாக்க உத்தரவிட்டு ரதத்தைக் கோட்டை வாயிலை நோக்கிச் செலுத்த ஆரம்பித்தான்.

படிகளில் வேகமாக இறங்கிய துறவியார், புரவியொன்றின் மீது உயர்த்திய வாளுடன் அமர்ந்தபடி தம்மை நோக்கி வந்த காடவன் ஒருவனைத் தடுத்து வீழ்த்தினார். தாவி அந்தப் புரவியின் மீது ஏறினார். குறுக்கிட்டவர்களைக் கடந்து தமது புரவியை ரதத்தின் பின்னால் செலுத்த முற்பட்டார். துறவியார் தொடர்வதையும் யுவானும் புரவியொன்றைத் தேடுவதையும் கவனித்த காடவராயன், ரதத்தின் புரவிகளைப் பலமாகத் தூண்டி கோட்டை வாயிலைத் துரிதமாக அடைய முயன்றான். கோட்டைக் கதவுகளை நெருங்கிவிட்ட காடவராயனும் பின்தொடர்ந்த துறவியாரும் கூட எதிர்பார்க்காத ஒன்று அப்போது அவர்கள் எதிரில் நிகழ்ந்தது.

ரதம் கதவுகளை நெருங்கியதும் அதைத் திறக்க வைப்பதற்கு தானும் தன் வீரர்களும் போராட வேண்டியிருக்கும் என்று எண்ணியிருந்த காடவராயன் பிரமிக்க, அந்தக் கதவுகள் ஏதோ பெரும் ராட்சதப் பறவையின் இறக்கைகளைப் போல ஒரே சமயத்தில் விரிந்து திறந்து கொண்டன. திறந்த கதவுகளின் மறுபுறத்தில், பாண்டியரின் போர் ரதம் ஒன்று வானத்திலிருந்து இறங்கிய அசுரப் பறவையைப் போல் நின்றது. ரதத்தில், தான் காகதீய மன்னனிடம் சிக்கவைத்து விட்டதாக எண்ணிய இளவல் ஆதித்யன் அமர்ந்திருப்பதையும், அருகில் அப்படியே அச்சில் வார்த்து எடுத்தது போல் மற்றொரு யுவான் அமர்ந்திருப்பதையும் கண்ட காட்வராயன் மட்டுமின்றி கோப்பெருஞ்சிங்கனும் கூட மலைத்தான். காடவராயனிடம் சிக்கி ரதத்தில் அமர்ந்து விழித்துக் கொண்டிருந்த பூங்கோதையின் இமைகள் படபடவென்று அடித்துக் கொள்ள, இதயம் அதைவிட வேகமாக அடிப்பது அவளுக்கே புரிந்தது.

ஆதித்யனின் ரதத்துக்குப் பின்னால் மல்லர்களைப் போல ஆகிருதியுடன் நின்றவர்களைக் கண்ட காடவராயனுக்கு, தான் இது வரை கடந்து வந்த அபாயங்களை விடப் பெரும் அபாயம் எதிரில் நிற்பது புரிந்தது. அதிலிருந்து மீள, தான் ஏற்கெனவே கடைப்பிடித்த உபாயத்தை விடச் சிறந்தது வேறு எது

# இந்திர தனுசு

### விஷ்வக்சேனன்

வுமில்லையென்று தோன்றியது. புரவிகளின் கயிற்றைக் காடவமன்னனிடம் அளித்தவன், இளவரசியை இடதுகரத்தில் பற்றியபடி வாளை உயர்த்தி மீண்டும் அவள் கழுத்தில் பதித்தான். "ஆதித்யா, விலகி நில். பின்னா லிருப்பவர்களையும் விலகச் சொல். இல்லை யேல்..." என்று இரைந்தான் ஆதித்யனை நோக்கி.

புகைந்து கொண்டிருந்த அரண்மனையை யும், நடந்து கொண்டிருந்த போரையும், காடவ

டான். ஆனால் அவன் தந்தை கொல்லப் படுவதையும் விரும்ப மாட்டான். எனவே அஞ்ச வேண்டாம். நீ முன்னால் செல். அந்த வாளை நான் விலக வைக்கிறேன்" என்றான். லேசாகப் பின்புறம் திரும்பிய ஆதித்யன், "உப் பிலி மல்லா" என்று குரல் கொடுத்தான். உப் பிலி மல்லன் அமர்ந்திருந்த புரவியை விட்டுக் குதித்து இறங்கி ஆதித்யனை அதில் தாவியேற விட்டு, தான் கால்நடையாகப் புரவியைத் தொடர்ந்தான்.



ராயன் வாளையும், அது பதிந்து நின்ற அழகிய கழுத்தையும், அச்சத்தில் முகம் வெளுக்க நின்ற பூங்கோதையையும், தூரத்தில் காடவர் களை வெட்டிச் சாய்த்தபடி புரவியில் வந்து கொண்டிருந்த துறவியாரையும் கண்ட ஆதித் யன், நிகழ்ந்தவற்றை ஒருகணத்தில் யூகித்துக் கொண்டான். அவன் புத்தி அதிதுரிதமாக இயங்கத் தொடங்கியது.

அவன் மலைத்து நின்ற கணத்தில், வலது புறத்திலிருந்து யாங்சின்னின் குரல் அவன் செவிகளில் மெள்ள ஓதியது : "ஆதித்யா, அவன் இளவரசியைக் கொல்லத் தயங்க மாட்

அத்தனை வீரர்களும் மல்லர்களும் அப் படியே நின்றிருக்க, ஆதித்யனும் ஒரு மல்லனும் மட்டும் தன் ரதத்தை நோக்கி நிதானமாக நெருங்க முற்படுவதைக் கண்ட காடவராய னுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"ஆதித்யா, நெருங்காதே. நில் அப்படியே" என்று மீண்டும் இரைந்த காடவராயன், பூங் கோதையின் கழுத்தில் பதித்திருந்த வாளைச் சற்று அழுத்தினான். அவளிடமிருந்து தீன மான அலறல் ஒன்று எழுந்து ஆதித்யன் இத யத்தில் பாய்ந்தது.

அதே கணத்தில் ரதத்திலிருந்த யாங்சின்

னின் கரத்தில் அந்த சீனத்து விசித்திர வில் ஐந்து கணைகளுடன் தோன்றியது. தோன்றிய வேகத்தில் ஐந்து அம்புகளும் காடவ மன்ன னைக் குறிவைத்துப் பறந்தன. எதிர்பாராது தன்னை நோக்கிப் பாய்ந்த அம்புகளிலிருந்து காடவமன்னன் தழைந்து தப்ப முயற்சிக்க, காடவராயன் தன் வாளை அம்புகளின் பாதை யில் குறுக்கே பலமாக வீசி காடவ மன்ன னைக் காக்கவும் முயன்றான்.

பூங்கோதையின் கழுத்திலிருந்து வாள் விலகிய அதே கணத்தில் புரவியிலிருந்து பாய்ந்துவிட்ட ஆதித்யன், அவள் இடதுகரத் தைப் பற்றி இழுத்து ரதத்திலிருந்து அவளுடன் சேர்ந்தே தரையில் உருண்டான்.

ஆதித்யனும் பூங்கோதையும் மண்ணில் புரண்ட அதே கணத்தில், யாங்சின்னின் ரதம் முன்னால் பாய்ந்தது. மீண்டும் அந்த விசித்திர வில் ஐந்து அம்புகளை காடவராயனை நோக் கிப் பறக்க விட்டது. உப்பிலிமல்லன் கரங் களை அகல விரித்தபடி காடவராயன் ரதத் தைப் பக்கவாட்டில் நெருங்கி ஒரே மூச்சில் நெம்பிக் குடைசாய்த்து காடவமன்னனையும் காடவராயனையும் எதிர்ப்புறமாக உருண்டு விழவைத்தான். புரவிகள் கனைத்தபடியே தடு மாறிச் சாய்ந்தன. சரிந்த ரதத்தை மிதித்துத் தாவியேறி, மறுபுறம் வந்த உப்பிலி மல்லன், தடுமாறி எழமுயன்ற காடவராயனின் வாள் பிடித்த கரத்தைப் பலமாகப் பற்றினான். அடுத்து காடவராயனிடமிருந்து காட்டுக் கூச்ச லாக ஒரு பெரும் அலறல் எழுந்தது.

ரதத்திலிருந்து சற்றுத் தள்ளி உருண்டு எழ முயன்ற காடவமன்னனைப் புரவி மீதிருந்தே நெருங்கிய துறவியாரின் வலதுகால், அவனைப் பலமாக உதைத்தது. வேகமாகத் தூக்கி எறியப் பட்ட காடவமன்னன், யாங்சின்னின் பின் னால் வந்து கொண்டிருந்த மல்லர்களின் நடுவே போய் விழுந்தான். பொங்கி வழிந்த அன்புடன் காடவ மன்னனை அணைத்துக் கொண்டனர் கிருஷ்ணமல்லரின் சீடர்கள்!





எஞ்சிய சீடர்களுடன் யாங்சின்னின் ரதம் அரண்மனையை நோக்கி விரைந்தது. காடவ வீரர்களுக்கிடையே யுவான் அசுரகதியில் வாளைச் சுழற்றிக் கொண்டிருப்பதைக் கவ னித்த யாங்சின்னின் மஞ்சள் முகத்தில் ஆனந் தம் வழிந்தது. நீண்ட காலத்திற்குப் பின்பு சந்திக்கும் தனது மகனை அந்தப் போர்க் கோலத்தில் கண்ட யாங்சின், அவன் வாள் வீச்சை ரசித்தபடியே தனது விசித்திர வில்லில் கணைகளைப் பொருத்த ஆரம்பித்தான்.

சோழ வீரர்களுக்கும் பாண்டிய வீரர்களுக் கும் கிருஷ்ணமல்லரின் சீடர்களைக் கண்ட தும் புதுவேகம் பிறந்தது. போர்க்களத்தில் புகுந்த களிறுகளைப் போல் காடவ வீரர் களிடையே புகுந்த கிருஷ்ணமல்லரின் சீடர் கள் காடவர்களைத் தூக்கி ஆகாயத்தில் எறிந் தும், கால்களால் மிதித்தும் துவம்சம் செய்யத் துவங்கினார்கள்.

காடவர்களின் கொட்டம் மெள்ள அடங் கிக் கொண்டிருக்க, சோழ வீரர்கள் அரண் மனையில் பரவியிருந்த தீயை அணைக்க விரைந்தார்கள்.

**வ**ங்கக் கடலிலிருந்து எழுந்த பங்குனி மாதத்துத் தங்க நிலவு தமிழகத்தில் வீசிக் கொண்டிருந்த சூறாவளியும் குழப்பங்களும் ஓய்ந்து அமைதியும் ஆனந்தமும் நிலவத் தொடங்கியதை உணர்ந்ததாலோ என்னவோ முழுவதுமாக மலர்ந்தபடியே உதயமானது. உதயமான நிலவு சற்று உயர்ந்து கீழே நோக் கியதும் பிரமித்து நின்றது.

"கைந்நாகத்திடர் கடிந்த கனலாழிப்
படையுடையான் கருதுங் கோயிலின்"

இரண்டாம் பிராகாரமும் ஐந்து விமானங் களும், கம்பீரமாக எழுந்து நின்ற துவஜஸ்தம்ப மும் முழுவதும் பொன்னால் மூடப்பட்டு ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்ததைக் கண்ட நிலவு தனது தங்க நிறம் மங்கி விட்டதாக எண்ணி வெட்கியது. நிலவின் வெட்கத்தைக் கண்டு பரிகசித்த விண்மீன்களும் அந்த ஸ்ரீரங்க விமானத்தை கண்களைச் சிமிட்டியபடி உற்று நோக்கிக் கொண்டிருந்தன.

ஜடாவர்ம சுந்தரபாண்டியன் அளித்திருந்த பொற்பீடமும், மரகத மாலைகளும், முத்தாரங் களும், பொற்பிரபையும், முத்து விதானமும், பந்தலும் எல்லையற்ற அழகை அளித்துக் கொண்டிருக்க, தாயாருக்கு அணிவித்திருந்த ஆபரணங்களையும் கண்டதால் என்றைக்கும் மாறாத ஆனந்த முறுவலுடன் அனந்த சயனத் திலிருந்த அரங்கனின் திருவிழிகள் மேலும் ஆனந்தத்துடன் மலர்ந்ததாகத் தோன்றின. அவர்களைத் தாங்கி நின்ற சேஷனையும் பொற்கவசங்கள் முழுவதுமாக மூடியிருந்த தால் தலையை உயர்த்தி நின்ற அவன் விழி

களிலும் ஆனந்தம் தெரிந்தது. உச்சியிலிருந்து, திருவடிகள் வரை அரங்கனை மனம் குளிரக் குளிர பொன்னும் முத்தும் மணியுமாக அலங்கரித்திருந்த சுந்தரபாண்டியன், அவை போதாதென்று வெண் கொற்றக் குடையும் பொற் சாமரமும் தொடங்கி, பாத்திரங்கள், குவளைகள் வரை அனைத்தையும் பொன்னாலேயே செய்து வழங்கியிருந்தான்.

"நம் சுந்தரபாண்டியன்" என்று அரங்கனே உரிமையுடன் அழைத்து மகிழ்ந்து எழுதியும் வைக்குமளவிற்கு திருப்பணிகள் செய்திருந்த சுந்தரபாண்டியன், இரண்டாம் பிராகாரத்தில் பெரும் மண்டபமொன்றையும் எழுப்பியிருந்தான். அரங்கனைச் சேவித்துத் திரும்பிய மக்கள் வெள்ளம் அந்த மண்டபத்தில் அலை மோதிக் கொண்டிருந்தது. சோழ, பாண்டிய மண்டலத்து மக்களும் கொங்கு நாட்டு மக்களும், தொண்டை மண்டலத்தவர்களுமாக முழுத் தமிழகமே அங்கு நிறைந்து இருந்தது.

அரங்கன் சன்னிதியில் ஆதித்யனுக்கு மணமுடித்த அதே முகூர்த்தத்தில் தன் சகோதரனாகவே ஏற்றுக்கொண்ட யுவானுக்கும் ஸ்வர்ணமுகியை மணமுடித்திருந்தான் பாண்டிய மன்னன். மண்டபத்தின் நடுவில் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட ஊஞ்சல்களில் அமர்ந்து மெள்ள ஆடிக்கொண்டிருந்த மணமக்களைக் கண்ட பாண்டிய சகோதரர்களுக்கும், துறவியாருக்கும், அவநிதனுக்கும் யாங்சின்னுக்கும் மனம் நிறைந்து கிடந்தது. வீரபாண்டியனின் அருகிலமர்ந்து விழிகளில் விஷமம் வழிய அவர்களைப் பரிகசித்துக் கொண்டிருந்த கொற்கைச் செல்வி இளநங்கையின் கருவிழிகள் அடிக்கடி திரும்பி இளையபாண்டியனை சந்தித்து சந்தித்து மீண்டன. வீரபாண்டியனின் கூர்விழிகளில் ஸ்திரமான முறுவல் ஒன்று தெரிந்து அவன் பழைய நினைவுகளில் மிதப்பதைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது. கிருஷ்ணமல்லர் நேரம் ஓடிக் கொண்டிருப்பதாகப் பெரிதாக யாங்சின்னிடம் சலித்துக் கொண்டிருந்தார்.

மகிழ்ச்சியும் நாணமும் போட்டியிட, ஊஞ்சலில் அமர்ந்திருந்த ஸ்வர்ணமுகியின் விழிகள் திடீரென பளிச்சிட்டு அவள் சித்தத்தில் ஏதோ நினைவு ஓடியதற்கான அறிகுறிகள் தெரிந்தன. சுற்றியிருந்தவர்களை ஒருமுறை நோக்கியவள் ஊஞ்சலை விட்டு எழுந்தாள். மண்டபத்தில் ஒலித்துக் கொண்டிருந்த குரல்கள் சட்டென்று ஓய்ந்தன. யுவான் விழித்தான். ஆதித்யனை நோக்கி மெள்ள நடந்த ஸ்வர்ணமுகி அவனெதிரில் வந்து அமைதியாக நின்றாள். பூங்கோதையின் விழிகளில் கேள்வி பூத்திருந்தது. அனைவரது பார்வைகளும் தங்கள் மீது திரும்பி விட்டதை உணர்ந்த ஆதித்யனின் நிலை சங்கடத்திலிருந்தது.

## எறும்பார் கடிக்கிறார்!

"நான் ஐ.ஏ.எஸ். அதிகாரி. மாவட்ட கலெக்டராகப் பணியாற்றியுள்ளேன். அரசுத் துறை செயலராகப் பணியாற்றியுள்ளேன்... எனக்கு ஜாமீன் வழங்க வேண்டும்."

—கைதாகியிருக்கும் கலெக்டர் சம்பத்.




"ஸ்வர்ணமுகி, ஏன் எழுந்து விட்டாய்?" – அவன் குரலிலும் சங்கடம் ஒலித்தது.

"இளவரசே, காஞ்சிக்கு நீங்கள் சோழ தூதராக வந்தீர்கள்."

"ஆம். வந்தேன்" ஆதித்யன் குரலில் குழப்பம் ஒலித்தது.

"அப்போது என்ன கூறினீர்கள்?"

"என்ன கூறினேன்?" – திருப்பிக் கேட்டான் ஆதித்யன்.

"இப்போது உங்களுக்கு எதுவும் நினைவிலிருக்காது" என்ற ஸ்வர்ணமுகியின் விழிகள் அருகிலிருந்த பூங்கோதையின் மீது படிந்தன.

"உனக்கு மட்டும் இப்போது என்ன நினைவு வந்து விட்டது?" மெல்லிய குரலில் கேட்டாள் பூங்கோதை.

"காஞ்சியில் இவர் என் கரங்களைப் பார்த்துவிட்டு எனக்கு ராஜயோகமிருப்பதாகவும், என் திருமணத்தை மூன்று நான்கு மன்னர்கள் சேர்ந்து நடத்தி வைப்பார்கள் என்றும் கூறினார்" என்றாள் ஸ்வர்ணமுகி.

"அதற்கு என்ன வந்தது இப்போது?"

"இங்கிருப்பது பாண்டிய மன்னர் ஒருவர்தாம். மற்ற மன்னர்கள் எங்கே?"

காஞ்சியில்தான் ஏதோ சாதாரணமாகக் கூறிய சோதிடத்தை அவள் நினைவு வைத்துக் கொண்டு இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்கக்கூடும் என்று எதிர்பார்த்திராத ஆதித்யன் பரிதாபமாக விழித்தான். அவனைக் காப்பாற்ற வழியேதும் அறியாத யுவானும் ஆதித்யனை நெருங்கி விழித்துக் கொண்டிருந்தான்.

"உங்களை யார் அப்படிக் கூறச் சொன்னது?" – பூங்கோதையின் விழிகள் ஆதித்யனைச் சுட்டன.

(தொடரும்)

"ஒரு படம் தொடங்கிவிட்டால் நாங்களெல்லாம் லொக்கேஷன் தேடி ஊட்டிக்கும் மைசூருக்கும் கிளம்பி விடுகிறோம். புதிய புதிய இடங்களைத் தேடிப் பிடிப்பதிலேயே அதிக நேரம் செலவாகி விடுகிறது. உங்களால் எப்படி ஒரு முழுப்படத்தின் எழுபது சதவீத படப்பிடிப்பை அருணாசலம் ஸ்டுடியோவிலேயே எடுத்துவிட முடிந்தது? அதுவும் 'ஒரே இடம்' என்கிற அலுப்பே வராதபடிக்கு?"

புள்ளகுட்டிக்காரன்' படத்தைப் பார்த்துவிட்டு, அதன் ஒளிப்பதிவாளர் பன்னீர்செல்வத்திடம் இப்படி வியந்து கேட்டவர் இயக்குநர் பாரதிராஜா.

அர்ஜுன், தமது ஆயுதபூஜை படத்தைத் தொடங்கவிருந்த சமயம். தயாரிப்பாளரிலிருந்து ஹீரோ, ஹீரோயின் வரை அத்தனை பேரும் தயார். அர்ஜுன் சொன்னார் : "இந்தப் படம் தொடங்க எத்தனை தாமதமானாலும் பரவாயில்லை. பன்னீர், அவரது பணிகளையெல்லாம் முடித்துவிட்டு வரட்டும். அவர்தான் இதற்கு ஒளிப்பதிவாளராகப் பணியாற்ற வேண்டும்!"

அர்ஜுன் மட்டுமல்ல... ஆர்.கே. செல்வமணி, பார்த்திபன் போன்ற முன்னணி இயக்குநர்களெல்லாம் கூட, தம் படங்களுக்குப் பன்னீர்தான் கேமராமேனாக இருக்க வேண்டும் என்பதில் மாறாத உறுதியுடன் இருக்கிறார்கள்.

ஏன் அப்படி?

கேட்டால், "அவர் ஒரு பர்ஃபெக்ஷனிஸ்ட்" என்கிற பதில் உடனடியாக வருகிறது.

இத்தனைக்கும் பன்னீர் திரைத் துறையில் நீண்ட நாள் அனுபவம் பெற்றவரெல்லாம் இல்லை. 1991-ல் 'உன்னை வாழ்த்திப் பாடுகிறேன்' என்கிற ஓடாத படத்தின் மூலம்தான் அறிமுகமானார். ("அதற்கு முன்னால் பெயர் வராமல் சில படங்களில் செய்திருக்கிறேன்.")

நடிக - நடிகையரைப் போலவே, ஃபெயிலியர் ஆன படத்தில் பணியாற்றிய டெக்னீஷியன்களுக்கும் அவர்கள் என்னதான் திறமைசாலியானாலும் தொடர்ந்து வாய்ப்புத் தரத் தயங்கும் நம் சினிமா உலகம்.

"என் விஷயத்தில் அது பொய்த்து விட்டது. உண்மையில் இந்தத் துறையில் எனக்கு ஏமாற்றங்கள் மிகக் குறைவு என்றே சொல்ல வேண்டும்" என்கிறார், சினிமாவில் நுழைவதற்காக வீட்டாரைச் சமாளிக்க ஜகஜ்ஜாலங்கள் புரிந்திருக்கும் பன்னீர்.

"என் பெற்றோர் இருவரும் பள்ளி ஆசிரியர்கள். வாத்தியார் பிள்ளை மக்காக இருக்கக்கூடாதே என்கிற கவலையால், என்னைத் தீவிரமாகப் படிப்பில் கவனம் செலுத்த வைத்தார்கள்.

# "எனக்குள்ளே வேள்வி நடக்கிறது...!"

"அது என் விடலைப் பருவத்தின் உச்சக்கட்டம். பொதுவாக, பையன்கள் அந்த வயதில் காதலிக்க யாராவது பெண் கிடைக்க மாட்டாளா என்று அலைந்து கொண்டிருக்கும் வயது. நானும் அப்படித்தான் போயிருப்பேன் - உதிரிப் பூக்களும், பன்னீர் புஷ்பங்களும், பாலைவனச் சோலையும் ரிலீஸாக மலிருந்திருந்தால்" என்று சொல்கிற பன்னீர், தம் வாழ்க்கையின் ஒரே லட்சியம் சினிமாதான் என்கிற முடிவுக்கு வந்ததற்குக் காரணம் இயக்குநர்கள் ராபர்ட் - ராஜசேகர்தாம்!

அண்ணா நகரில், பன்னீர்செல்வத்தின் எதிர் வீட்டில் அப்போது அவர்கள் குடியிருந்திருக்கிறார்கள். பாலைவனச்சோலை ரிலீஸாகிற வரைக்கும் எல்லாரைப் போலவும் சாதாரணமாக இருந்து வந்தவர்களை அந்தப் படத்தின் வெற்றி எந்த அளவுக்கு உயரே

கொண்டு போனது என்பதைப் பார்த்ததும் சினிமாவின் பலம் தனக்குப் புரிந்ததாகச் சொல்கிறார் பன்னீர்.

''ஆனால், 'நான் சினிமாவில் சேரப் போகிறேன்' என்று வீட்டில் சொல்ல முடியாது. கொன்றுவிடுவார்கள். பிளஸ் டூ முடித்து, கல்லூரிகளுக்கு அப்ளை செய்தபின், 'எப்படியாவது பச்சையப்பாவில் இடம் கிடைக்க வேண்டும்' என்று மிகவும் விரும்பினேன். லயோலா, விவேகானந்தாவிலெல்லாம் கூட இடம்கிடைக்கிற அளவுக்கு மார்க் நிறையத்தான் எடுத்திருந்தேன். ஆனால் என் லட்சியத்துக்குப் பச்சையப்பாதான் சரி என்று பட்டது'' என்கிறார்.

ஏன்?

"வேறு எந்த காலேஜில் நினைத்த நேரத்துக்கு கட் அடித்துவிட்டு சினிமா போக முடியும்?" என்று தமாஷாகக் கேட்டாலும், தம் எதிர்கால முயற்சிகளுக்கான பலமான அஸ்திவாரத்தை அந்தக் காலகட்டத்தில்தான் பன்னீர் போட்டிருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

"வடக்கே மகாராணியிலிருந்து தெற்கே தியாகராஜா வரை சென்னையின் ஒரு தியேட்டர், ஒரு படம் விட்டு வைக்கவில்லை. நல்ல படம், நன்றாக இல்லாத படம், ஓடிய படம், விருதுப்படம் எதையும் விடவில்லை. 'சினிமா என்றால் என்ன' என்கிற தெளிவு வர அந்த மூன்று வருட பச்சையப்பன் கல்லூரிப் படிப்பு எனக்கு அவசியமாயிருந்தது'' என்கிறார்.

அதன் பின்னும் வீட்டில், தம் சினிமா ஆசையை நேரடியாகச் சொல்லத் துணிவு வராமல், சினிமாவையும் ஒரு தொழில்தான் என்று அறிமுகப்படுத்தி, 'நான் அந்தத் தொழில் நுட்பம் படிக்கப் போகிறேன்' என்று அதிலும் படிப்பை முதன்மைப்படுத்தி, பிலிம் இன்ஸ்டிடியூட்டில் சேர்ந்திருக்கிறார்.

''இன்ஸ்டிடியூட்டில் கூட நான் வகுப்புகளுக்குப் போனது கிடையாது. மரத்தடி அரட்டைதான். கடைசி வருஷத்தில் 39 நாட்கள் மட்டுமே கிளாஸுக்குப் போயிருக்கிறேன். கேமரா பயில்பவன் என்று பெயர். ஸ்டில் ஃபோட்டோகிராஃபி கூடத் தெரியாது. "சொந்தமாக ஒரு கேமரா கூட இல்லாத நீ எப்படி ஓர் ஒளிப்பதிவாளனாகப் போகிறாய்?" என்று என் ஆசிரியர் ஒருவர் கிண்டல் செய்வார். நான் கேமரா வைத்திருக்கவில்லைதான்; வகுப்புகளுக்கும் போகவில்லைதான்; ஆனால் என் மனம் அப்போது சினிமாவைத் தவிர வேறெதையும் சிந்திக்கவில்லை என்பது உண்மை. ரவிராஜ், பொன்னுசாமி, தரணிசிலன் போன்ற என் ஆசிரியர்களிடம் அப்போது மரத்தடியிலேயே சந்தேகங்கள் கேட்டுத் தெளிவு பெறுவேன். அவர்கள் உதவி கொஞ்ச நஞ்சமல்ல'' என்கிறார்.

"இத்தனை ஆர்வம் இருக்கிறதே சினிமாவில்... நீ ஏன் வகுப்புகளுக்கு வருவதில்லை?'' என்று அவர்கள் கேட்பார்களாம்.



**வித்தகர்:**
**ஒளிப்பதிவாளர்**
**எம்.வி.பன்னீர்செல்வம்**



''நம்ம ஊர்லே நீங்க புதுசா ஆரம்பிச்சிருக்கிற 'துயர் துடைப்புக் குழு' வோட பணிகள் என்னங்க?''

''உள்ளாட்சி மற்றும் நகராட்சித் தேர்தலில் தோற்றவர்களுக்கு 'ஆறுதல்' சொல்றது... பைனான்ஸ் கம்பெனிகளிலே பணம் போட்டு ஏமாந்தவங்களுக்கு 'ஆறுதல்' சொல்றது... மனைவிகளிடம் வாங்கிக் கட்டிக் கொள்ளும் கணவர்களுக்கு 'ஆறுதல்' சொல்றது... இப்படி!''

-கே.ஜி.எஸ்.கோவிந்தன்

---

அதற்குப் பன்னீரின் பதில்: "எனக்குள்ளே வேள்வி நடக்கிறது. சினிமா வெறி இருக்கிறது. போலித்தனமாக வகுப்புகளில் உட்கார்ந்து நேர விரயம் செய்வதில் விருப்பமில்லை!"

படித்துக் கொண்டிருக்கும்போதே கமர்ஷியல் சினிமா ஒளிப்பதிவாளர் சபாபதியிடம் உதவியாளாராகவும் சேர்ந்திருக்கிறார் பன்னீர்.

''சத்யஜித்ராய், மிருணாள்சென் என்று படித்துவிட்டு கமர்ஷியலாக இறங்குகிறாயே...?'' என்று அப்போதும் என் நண்பர்கள் கேட்டார்கள். ஆனால் எனக்குள் நான் தெளிவாக இருந்தேன். கோடார்ட், குரசேவா என்று படித்தாலும் நாம் புழங்கப்போவது கோடம்பாக்கத்தில்தானே? அதனால், விமர்சனங்களை நான் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளவில்லை'' என்கிறார்.

**ப**ன்னீர்செல்வத்தின் திறமைகள் திரையுலகுக்குத் தெரிய வழி வகுத்தவை ஆர்.கே. செல்வமணியின் அதிரடிப் படங்கள் தாம். என்றாலும் 'நான் நிறைய கற்றுக் கொண்டது பார்த்திபனிடமிருந்துதான்' என்கிறார்.

"அவர் ஓர் அற்புதமான கலைஞர். சினிமா பற்றி முழுக்கத் தெரிந்த மிகச் சில சினிமாக்காரர்களுள் ஒருவர். ஆனாலும் எங்கோ சறுக்குகிறார். அதன் காரணம்தான் புரியவில்லை'' என்கிற பன்னீர், தம் ஒளிப்பதிவின் மூலம் சில புதிய எல்லைகளைத் தொட்டுக் காட்டிய படங்கள் அதிரடிப்படை, ராஜமுத்திரை, சுகமான சுமைகள், உள்ளே வெளியே போன்றவை.

"கேமரா என்பது ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவைக்கிற விஷயமல்ல. ஆடியன்ஸுக்குத் தெரியாமல் அது நகர்ந்து கொண்டே இருக்க வேண்டும். என் படங்களில் இதுதான் என் முதல் கவலை'' என்கிற பன்னீருக்கு 'ஒளி' என்பது இரண்டாம்பட்சம்தான்.

''வித்தியாசமான லைட்டிங் என்பது மட்டுமே சாதனை ஆகிவிடாது. ஒரு காட்சிக்கு 'லைட்டிங்' பண்ணுகிறோமென்றால் வசனம், இசை ஏதுமில்லாமலேயே அந்தக் காட்சியின் 'மூட்' லைட்டிங் மூலமாகவே வெளிப்பட்டுவிட வேண்டும். அதுதான் சவால். அதைச் செய்வதற்குத்தான் நான் மெனக்கெடுகிறேன். வெறும் ஒளி ஜாலங்களில் எனக்கு உடன்பாடில்லை'' என்கிறார்.

**இ**ன்றைக்கு, தமிழ்த் திரையுலகில் கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கும் ஒளிப்பதிவாளர்கள் சரவணன், மணிகண்டன், ஆர்தர் வில்சன், எம்.வி. கல்யாண், ராமநாதன் அத்தனை பேரும் பன்னீர்செல்வத்தின் சிஷ்யர்கள்.

எப்படி இவரிடமிருந்து மட்டும் இத்தனை பேர் வருகிறார்கள்?

"முதல் விஷயம் - என் உதவியாளர்களை, உதவியாளர்களாக மட்டும் நான் நினைப்பதில்லை. ஆரம்பத்தில் எனக்கிருந்த அதே வெறிதானே அவர்களுக்கும் இருக்கும்? ஒளிப்பதிவாளராக வேண்டும் என்பதுதானே அவர்களது இலக்கும்? எனக்குத் தெரிந்தவரை சொல்லிக் கொடுத்து, அனுப்பி விடுகிறேன். முடிந்தால் ஒரு வாய்ப்பும் வாங்கிக் கொடுத்து!" என்கிறார் பன்னீர்.

இவர் தம் மாணவர்களிடம் எப்படி நடந்து கொள்கிறார் என்பதை அவர்கள் பணியாற்றும் படங்களின் ஷூட்டிங்களுக்கு நேரில் போய்ப் பார்த்தால்தான் புரியும்.

தன் சிஷ்யன் கேமராவைக் கையாள, இவர் 'கட்டர்' பிடிக்கவோ, டிராலி தள்ளவோ கூடத் தயங்குவதில்லை.

''ஒரு மூன்றாவது மனிதர் திடீரென்று இவரை வந்து பார்த்தால் இவர் சினிமா உலகைச் சேர்ந்தவர் என்றே ஒப்புக் கொள்ள மாட்டார். பந்தா இல்லாத ஆச்சர்யமான சினிமாக்காரர் இவர்'' என்று ஒருதரம் இயக்குநர் சோலைராஜா சொல்லியிருக்கிறார்.

''சினிமா மூலம் சாதிக்கக்கூடிய எத்தனையோ விஷயங்கள் இன்னும் செய்ய ஆளில்லாமல் பாக்கியிருக்கின்றன'' என்று சொல்லும் பன்னீரின் லட்சியம் - ஒரு படம் முழுக்க, ஒவ்வொரு காட்சியையும் ஒரே ஷாட்டில் எடுத்து முடிப்பது!

முப்பத்திரண்டு வயதாகும் பன்னீர் செல்வத்துக்கு இன்னும் திருமணமாகவில்லை.

"தேடிக் கொண்டிருக்கிறேன். இதுவரை பொருத்தமான பெண் கிடைக்கவில்லை. அசைவம் சாப்பிடாத பெண் யாராவது இருந்தால் சொல்லுங்கள்!" என்கிறார் சிரித்தபடி.

- **ஔரங்கசீப்**

## 44. பிரியாவிடை!



மணமக்களிடையே ஏதோ குழப்பம் நிலவுவதையும், வீரர்கள் இருவரும் அந்தப் பெண்களுக்கிடையில் பரிதாபமாக விழிப்பதையும் கண்ட துறவியார், அவர்களை நெருங்கி விசாரித்தார். மற்றவர்களும் சூழ்ந்து கொண்டனர்.

விஷயத்தை அறிந்து கொண்டதும் இளநங்கையின் குரல் ஒலித்தது : "ஸ்வர்ணமுகி, இந்த ஆண் பிள்ளைகள் காரியத்தைச் சாதித்துக் கொள்ள ஆயிரம் கூறுவார்கள். அவற்றையெல்லாம் பெரிதாக நினைத்துக் கொள்ளாதே" என்றவள், திரும்பி துறவியாரை நோக்கினாள், "இருந்தாலும் துறவியாரே, சோழ மன்னராவது வந்து கலந்து கொண்டிருக்கலாம்" என்றாள்.

ஸ்வர்ணமுகியை நெருங்கிய துறவியார், "ஸ்வர்ணமுகி, இதோ பாண்டிய மன்னரும், கொங்கு மன்னரும் இருக்கிறார்கள். யாங்சின்னும் சீனத்து அரச குலத்தவர்தானே. இவர்கள் போதாதா, மகளே?" என்றார்.

யாங்சின்னின் குரல் இடைமறித்தது, "இல்லை துறவியாரே, சீனத்தில் பேரரசர் வேறு ஒருவர் இருக்கிறார். நான் அரசவம்சத்தின் கிளை வம்சம்தான்" என்றார் பவ்யமாக.

கிருஷ்ணமல்லர் சலித்துக்கொண்டே, தமது சீடனின் உதவிக்கு வந்தார். "என்ன கேள்வியிது ஸ்வர்ணமுகி? இதோ சோழ மன்னரின் சகல அதிகாரங்களையும் பெற்ற துறவியார் இருக்கிறார். அது ஒன்று போதாதா? சோழப் பே மைச்சரும் பிரதானிகளும் கூட இரு கிறார்கள்...." என்றார் அவர்.

தான் கேட்ட ஒரு கேள்விக்குப் பலவிதம வந்த பதில்களைக் கேட்ட ஸ்வர்ணமுகி தல யைக் குனிந்து கொண்டாள்.

அடுத்த கேள்வி பூங்கோதையிடமிருந்து தது. அவள் மெல்லிய குரலில் சற்றுத் திடமு ஒலித்தது, "சோழ மன்னர் ஏன் வரவில்லை

அவள் கேள்விக்கு எவரும் பதில் வில்லை. சற்று நேரம் அமைதி நிலவிய அங்கே. துறவியாரின் குரல் மீண்டும் ஒலித்த "சோழ மன்னர் ராஜேந்திரர் வந்து கொ



கமும் பளீரிட, இடையில் தரித்த நீண்ட வாளுடன் ஆஜானு பாகுவாக ராஜநடை நடந்து உள்ளே பிரவேசித்தான் சோழ ராஜேந்திரன்.

மணமக்களும் மற்றவர்களும் ஸ்தம்பித்து பிரமிப்பில் உறைந்து நிற்க, "ராஜகம்பீரன்" என்ற பட்டப் பெயருக்கேற்ப கம்பீர நடையுடன் அவர்களை நெருங்கிய சோழ மன்னனை இரண்டடி முன்னே எடுத்து வைத்து வரவேற்ற சுந்தரபாண்டியன் அகன்று கிடந்த தோள்களுடன் சேர்த்து அணைத்துக் கொண்டான். "எத்தனை காலம் கழித்து உன்னை இப்படிக் காண்கிறேன் ராஜேந்திரா?" என்ற சொற்களும் உதிர்ந்தன பாண்டிய மன்னனிடமிருந்து. தமிழகத்தின் இரு பெரும் மன்னர்களின் பரஸ்பர அணைப்பைக் கண்ட மக்களின் வாழ்த்துக் கோஷங்கள் மண்டபக் கூரையைப் பிய்த்துக் கொண்டு விண்ணை எட்டியது. கிருஷ்ண மல்லரின் வெண்கலத் தொண்டை ஏனோ அடைத்துக் கிடக்க, விழிகளில் ஆனந்த பாஷ்பம் துளிர்த்துக் கிடந்தது. மாறன் அமுதனாரின் வாழ்த்து உயர்ந்து ஒலித்தது.

மெள்ள விடுபட்ட மன்னர் இருவரும் மக்களைக் கையமர்த்தினார்கள். சோழ ராஜேந்திரன் திரும்பி மணமக்களை நெருங்கி வந்து, "பூங்கோதை, சோழ ராஜேந்திரன் வந்து விட்டேன். இப்போது உனக்குத் திருப்திதானே?" என்றான் முறுவலுடன்.

அந்தக் குரலையும், விசாலமான விழிகளில் வழிந்த அன்பையும் கண்ட பூங்கோதை பிரமித்து நின்றாள்.

அந்தப் பரந்த மார்பும், இடது புஜத்திலிருந்த காயத்திற்கான கட்டும், தெளிவாக நிறுத்தி ஒலித்த குரலும் அப்படியே துறவியாரை மனக்கண்முன்பாகக் கொண்டு நிறுத்தியதால் அவளிடமிருந்து உதிர்ந்த சொற்கள் குழறியே ஒலித்தன. "தாங்கள்... துறவியார்... துறவியார்...!"

"துறவியார் இதோ இருக்கிறார்" என்ற ராஜேந்திரன் அடுத்து நின்ற அமைச்சரின் கரத்திலிருந்த தட்டின் சீலையை விலக்கினான்.

டிருக்கிறார். நான் சென்று ஒரு நாழிகைக்குள் அவரை அழைத்து வருகிறேன்'' என்ற துறவியார் பேரமைச்சரும் விஜயனும் பின்தொடர, மண்டபத்திலிருந்து வெளியே விடுவிடுவென்று நடந்தார்.

ஒரு நாழிகை நேரம் முடிந்து இரண்டாவது நாழிகையும் கடந்து கொண்டிருந்தது. "என்ன துறவியார் இவர்," கிருஷ்ணமல்லரின் குரல் சலிப்புடன் நான்காவது முறையாக ஒலித்தது.

திடீரென்று மண்டபத்தின் கோடியிலிருந்து பெரும் ஆரவாரம் ஒலித்தது. சோழ நாட்டு வீரர்களின் குரல்களும் மக்களின் குரல்களும் எழுப்பிய வாழ்த்துக் கோஷங்கள் மண்டபத்தின் கூரையைப் பிளக்க, பேரமைச்சரும், பிரதானிகளும், விஜயனும், வரிசையாகத் தட்டுக்களை ஏந்திய பணிப்பெண்களும் பின்னால் வர, நீறு பூசிய அகன்ற நெற்றியின் மீது புலிச்சின்னம் பதித்த மணிமகுடம் பளீரென்று மின்ன, கழுத்தில் மணிமாலைகளும் புலிச்சின்னம் பதித்த பதக்

**விஷ்வக்சேனன்**

"இந்த ஆட்சி போற போக்கு சரியில்லை!"
"தலைவரே என்ன விசயம்?"
"எனக்கு மட்டும் சம்மன் தராம அரசியல்ல இருந்து என்னைத் தனிமைப்படுத்த சதி பண்றாங்க!"

-அம்பை தேவா



தட்டி விருந்து நீண்ட தாடியும் மீசையும் ருத்ராட்சமும் அவளைப் பார்த்து நகைத்தன. கணீரென்று ஒலித்தது சோழ மன்னன் குரல். "ஆம் மகளே, இதுவரை துறவியாக இருந்தவன் சோழ ராஜேந்திரன் தான். அடிமைப் பட்டுக் கிடந்த சோழ நாட்டின் மன்னனாக இருக்க நான் விரும்பவில்லை. எனவே மன்னனுக்குரிய அடையாளங்களையும், மணிமுடியையும், வாளையும் துறந்திருக்கிறேன்" என்ற ராஜேந்திரன் திரும்பி பாண்டிய மன்னனின் வலிய கரங்களைப் பிடித்துக் கொண்டான்.

"இன்று சுந்தர பாண்டியரின் உதவியால் மீண்டும் சோழ மன்னனுக்குரிய அடையாளங்களைத் திரும்பப் பெற்றேன்" என்று முடித்தவன் குரலில் உணர்ச்சி நிறைந்து கிடந்தது.

பாண்டிய மன்னன் பலமாகத் தலையசைத்து மறுத்தான். "இல்லை ராஜேந்திரா, இந்த வெற்றிக்கு முழுவதுமாகத் திட்டம் வகுத்தவன் நீதான். அதைச் செயல்படுத்த நான் உதவினேன். அவ்வளவே."

"எப்படியிருந்தாலும் சரி. தமிழகம் விடுதலை பெற்று சுதந்திர நாடாக அமைவதுதானே முக்கியம். சுந்தரபாண்டியா! உன்னிடம் எனக்கொரு வேண்டுகோளும் இருக்கிறது."

"வேண்டுகோள் எதற்கு ராஜேந்திரா? உத்தரவிடு! உடனே நிறைவேற்றுகிறேன்" என்ற சுந்தரபாண்டியனின் முகத்தில் மந்தகாசம் விரிந்து கிடந்தது.

திரும்பி ஆதித்யனையும் பூங்கோதையையும் அணைத்தபடி சுந்தர பாண்டியனை நோக்கிய ராஜேந்திரன், "சுந்தரபாண்டியா, பூங்கோதை எங்கள் சோழர் குலக்கொடி. சோழ வம்சத்தின் ஒரே வாரிசு. எனக்குப் பின் சோழ அரியணையில் ஆதித்யனும் பட்டத்தரசியாக பூங்கோதையும் அமர வேண்டும்" என்றான் நெகிழ்ந்த குரலில்.

சுந்தரபாண்டியனின் பதில் நிதானமாக வந்தது. "உன் விருப்பப்படியே நடக்கும் ராஜேந்திரா. இந்தக் கணம் முதல் அவள் கொங்கு நாட்டின் ராணியாக இருப்பாள். நீ விரும்பும் பொழுது சோழ நாட்டின் அரியணையிலும் வந்து அமர்வாள். இனி வாழ்நாள் முழுவதும் அவள் அரசியாகவே வாழ்வாள். அவர்களின் இந்த இணைப்பு இனி தமிழ் மக்களுக்கு அமைதியான, சுதந்திர வாழ்வை அளிக்கும்."

சோழ ராஜேந்திரன் பெரு விழிகளில் உணர்ச்சிகள் பொங்கிக் கிடந்தன. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் அது நிரம்பிக் கிடந்தது. "சுந்தர பாண்டியா, மன்னர்களின் ஒற்றுமையே மக்களின் நலவாழ்வு என்பதை நிரூபித்த உன்னைத் தமிழகம் மறக்காது. சோழ வம்சமும் மறக்காது. பொக்கிஷங்களை மீட்டு அளித்ததால் இந்த ஆலயங்களும் உன்னை மறக்காது. எத்தனை மன்னர்கள் இனி வந்தாலும் தமிழகம் இருக்கும் வரை உன் பெயரும் உன் குலப் பெயரும் மறையவே மறையாது."

அரங்கனது ஆலயத்தில் சுந்தரபாண்டியனை சோழ மன்னன் மனதார வாழ்த்திக் கூறிய அந்த வார்த்தைகள் வேதவாக்காக ஒலித்தன.

வங்கக் கடலிலிருந்து உதயமான சித்திரைத் திங்களின் தங்க நிலவு, கடலின் அலைகளைப் பொன்னிறமாக அடித்துக் கொண்டிருந்தது. பொன்னிறத்தைப் பெற்றாலும் மகிழ்ச்சியைக் காட்டாத அலைகள் உருண்டு உருண்டு துறைமுகத்தில் நின்ற அந்தப் பெரும் சீனத்துக் கலத்தைத் தாக்கி, தமிழகத்தை விட்டுச் செல்ல வேண்டாமென சோகத்துடன் தடுக்க முயன்று கொண்டிருந்தன. அந்தச் சீனத்து மரக்கலத்தில் பாய்மரச் சீலையில் தீட்டப்பட்டிருந்த பெரும் கடல் நாகம், படபடத்து அலைகளைச் சமாதானப்படுத்த முயன்று கொண்டிருந்தது. ஆனால் கரையில் நின்று அந்தக் கலத்தை வெறித்துக் கொண்டிருந்தவர்கள் எந்த சமாதானத்திற்கும் இணங்குவதாகத் தெரியவில்லை.

கரையில் நின்றிருந்த யாங்சின்னையும் யுவானையும், ஸ்வர்ணமுகியையும் கண்ட ஆதித்யனுக்கும் பூங்கோதைக்கும் மனம் கனத்துக் கிடந்தது. பாண்டிய மன்னனும் இளையபாண்டியனும் கூட நெகிழ்ந்து கிடந்த மனத்துடன் பேச வார்த்தைகளின்றி நின்றிருந்தனர். கிருஷ்ணமல்லர் சலித்துக் கொண்டார். "என்ன பிரிவு இது? என்னையே மனம் தள

## அருள்வாக்கு



வெறும் ரீஸன் என்று மட்டும் எடுத்துக்கொண்டால் அதற்குப் பொருந்தாத அனேக விஷயங்களை எவருமே பண்ணத்தான் வேண்டியிருக்கிறது; அப்போதுதான் நம்முடைய லக்ஷ்யத்தில் நமக்கு ஒரு ஆர்வத்தை, ஈடுபாட்டை எழுப்பி அதற்கு மற்றவர்களின் ஆதரவையும் திரட்டமுடிகிறது. இதற்குச் சின்னங்களும் காரியமும் இருந்தேயாக வேண்டியிருக்கிறது. இப்படி கறுப்பு-சிவப்பு அல்லது கதர் போட்டுக் கொண்டு கொடியையும் ஸ்லோகன் அட்டையையும் தூக்கிக் கொண்டு பாதயாத்ரை, ஸைகிள் ஊர்வலம், மாட்டு வண்டி ஊர்வலம் என்று நடக்கும் போது இதில் பகுத்தறிவுக்குச் சேராத எத்தனை விஷயம் இருக்கிறது என்று பார்ப்பதில்லை. அதுவே பஞ்சகச்சம், பரிவட்டம், ஜால்ரா, நாமகீர்த்தனம் என்று பஜனை கோஷ்டி போனால் பரிஹாஸமாகிறது. பொலிடிகல் இன்டரஸ்ட் (அரசியல் ஈடுபாடு) லேபர் இன்டரஸ்ட் என்பது போல இந்த லோகத்தை மட்டுமே சேர்ந்த விஷயங்களுக்காக இப்படி ரீஸனை விட்டு விட்டு, மண்ணெண்ணையை கொட்டிக் கொளுத்தி கொண்டு உயிரை விடுகிற அளவுக்குப் போனால் martyr (தியாகி) பட்டம் கொடுக்கிறார்கள்; அதுவே சாச்வதமான தர்மத்துக்காக, மதத்துக்காக விட்டால் "ஸூபர்ஸ்டீஷியஸ், அசடு" என்று மட்டம் தட்டுகிறார்கள்!

"நாமே பெரியவர்கள்; நமக்கு status வேண்டும்; நாம் எதற்கும் கட்டுப்படக் கூடாது, இஷ்டப்படி பண்ண வேண்டும்; நம் புத்திக்குப் புரிவதற்கு மேலே எதுவும் கிடையாது; எதையும் ஒப்புக்கொள்ள முடியாது; புத்திக்குப் பொருந்தாமலே நாமே கூட அநேகம் பண்ணினாலும் பண்ணுவோம் - ஆனாலும் சாஸ்த்ரகாரர்கள் சொல்கிறார்களென்றால் அப்போது மாட்டோம்" என்று இந்த ரீதியில் பல பேரையும் நினைக்கும்படியாக்கி, இந்த லோகத்தில் நடைமுறை வாழ்க்கையிலும் ஒழுங்கு இல்லாமல், பரலோகத்துக்கும் வழியில்லாமல் ஒரேயடியாகக் குளறி வைத்திருப்பதுதான் ஆசாரங்களைக் கைவிட்டிருப்பதன் பலன்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

வைக்கிறது!" என்று.

பெரும் புலிக்கொடி பறக்க சோழ மன்னன் ரதம் வந்து கொண்டிருந்தது. மணற்பரப்பை அடைந்ததும் கீழே குதித்த சோழ ராஜேந்திரன், நீண்ட பேழையொன்றைச் சுமந்து விஜயன் பின்தொடர படகை நெருங்கினான். "யாங்சின், இதைப் பெற்றுக் கொள்" என்றவன் அந்தப் பேழையை யாங்சின்னிடம் அளிக்கவும் செய்தான்.

"இந்திர தனுசு" என்று முழுவதும் பொன்னால் பொறிக்கப்பட்ட பேழையைத் திறந்த யாங்சின்னின் விழிகள் விரிந்தன. அவனது சீனத்து விசித்திர வில்லைப் போலவே பொன்னால் வடிவமைக்கப்பட்ட வில் ஒன்று உள்ளே மின்னியது.

ராஜேந்திரனின் குரல் ஒலித்தது : "யாங்சின், இளவல்களையும், இளவரசியையும் அபாயத்திலிருந்து மீட்ட உனது வில்தான் உண்மையில் இந்திரனின் தனுசு. அதன் அடையாளமாகவே இதை அளிக்கிறேன். நீயும் உன் மகன் யுவானும் செய்திருக்கும் சேவைக்கு இந்திர தனுசோ, அல்லது நானும் பாண்டிய மன்னரும் கலங்களில் அனுப்பியிருக்கும் பரிசுகளோ ஈடாகாது."

சுந்தரபாண்டியனின் குரல் தொடர்ந்தது. "யாங்சின், நீ கேட்டுக் கொண்டபடி தமிழகத்துச் சிற்பிகளை நான்கு கலங்களில் உன்னுடன் அனுப்பியிருக்கிறேன். அதைவிட எங்கள் மனங்களையும், அதன் அன்பான நினைவுகளையும் உன்னுடன் பரிசுகளாக அனுப்புகிறோம். பாதுகாத்துக் கொள்."

ஆதித்யனையும் விஜயனையும் ஒருமுறை தழுவிக் கொண்ட யுவான், யாங்சின்னுடன் சேர்ந்து சீனத்துப் பாணியில் அனைவரையும் வணங்கி நிமிர்ந்தான். மூவரும் படகில் ஏறிக் கொள்ள படகும் கலத்தை நோக்கி நகர்ந்தது.

சற்றுக் கழித்து கலங்களும் நகர்ந்தன. நகர்ந்த கலங்கள் மெள்ள மெள்ள பார்வையிலிருந்தும் மறைந்தன. ஆனால் கரையிலிருந்தவர்களின் மனங்களை விட்டு யாங்சின்னும், யுவானும், ஸ்வர்ணமுகியும் இறுதிவரை மறையவே இல்லை.

(முற்றும்)

**எஸ்**.ஐ.இ.டி.யில், பி.எஸ்ஸி., படித்துக் கொண்டிருந்த அந்த மாணவிக்கு, கதைகள், கவிதைகள் மீது ஆர்வம் அதிகம். குறிப்பாக ஒரு பெண் எழுத்தாளரின் கதைகளை மிகவும் விரும்பிப் படிப்பார். அந்த எழுத்துக்களைப் படிக்கும்போது, ஓர் இனம்புரியாத பாச உணர்வு, அந்த எழுத்தாளரின் மேல் உண்டாயிற்று அந்த மாணவிக்கு. அந்த உணர்வு "அம்மா" என்ற உருவகமாக மாறியது. "கடிதம் போட்டாலென்ன?" என்ற சிந்தனையின் விளைவாக, பத்திரிகை ஆபீஸில் முகவரி வாங்கி, 'அன்புள்ள அம்மா...' என்று துவங்கிக் கடிதம் எழுதியவுடன், உடனடியாக பதில் வந்தது. கடிதப் போக்குவரத்து துவங்கியது.

எழுத்தாளரின் கதைகளைத் தீவிரமாக விமர்சிப்பதிலிருந்து, தம்முடைய அப்பா, அம்மா, தங்கைகள் என்று தமது குடும்பத்தை அந்த எழுத்தாளருக்குக் கடிதத்திலேயே அறிமுகம் செய்தார் அந்த மாணவி. 'சென்னையிலிருந்து நான்கு மணி நேரத்தில் விழுப்புரம் வந்துவிடலாம், வாயேன்' என்று அன்பு அழைப்பு விடுத்தார் எழுத்தாளர்.

ஒருநாள் விழுப்புரத்துக்குச் சென்று எழுத்தாளரைப் பார்த்தவுடன், மனத்தில் கிட்டத்தட்ட பூரண நிலை பெற இருந்த அந்த 'அம்மா' உருவகம் முழுமையாயிற்று. "அம்மா...." – வாய் நிறைய அழைத்து மகிழ்ந்தார் அந்த மாணவி.

'அது சரி. அவுங்களை அம்மான்னு கூப்பிட்டா என்னை எப்படி கூப்பிடுவே...?' – கேட்டது எழுத்தாளரின் கணவர்.

'அவுங்க அம்மாவென்றால்... நீங்க எனக்கு அப்பா!' என்றார் அந்த

மாணவி. எந்தவிதத் தயக்கமும் இல்லாமல். எழுத்தாளர் - சிவசங்கரி. அந்த மாணவி - லலிதா.

இது நடந்தது 1977-ம் ஆண்டு. அதன் பிறகு கிட்டத்தட்ட ஏழு வருடங்கள் கழித்து எழுத்தாளரிடமிருந்து வந்த கடிதத்தின் ('டிவில் அந்த மகிழ்ச்சிதரத்தக்க அதிர்ச்சி இருந்தது. 'அன்புடன்... அம்மா' என்று அந்தக் கடிதம் முடிக்கப்பட்டிருந்தது. இப்போது வெளியுலகத்துக்கு எழுத்தாளர் சிவசங்கரியின் செயலாளராக லலிதா காட்சியளித்தாலும் இரு வருக்குள்ளும் இருக்கிற மகள் - அம்மா பாச உணர்வை, தெரிந்தவர்கள் மட்டுமே உணர முடியும்.

"அவரது எந்தக் கதை என்னைக் கவர்ந்தது என்று கேட்டால் எனக்குக் குறிப்பிட்டுச் சொல்லத் தெரியாது. பொதுவாகவே, அவரது எல்லா எழுத்துமே என்னை அவருடன் கட்டிப் போட்டு விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். பல எழுத்தாளர்கள் எழுத்து வேறு; வாழ்க்கை வேறு என்றிருப்பார்கள். ஆனால் சிவசங்கரி அவர்கள் அப்படி கிடையாது. எழுத்தில் போதிக்கும் நியாயங்களை, தர்மங்களை வாழ்க்கையிலும் கடைப்பிடிப் என்று சொல்லுவேன். எண்ணம் காற்றை விட விரைவாக இருக்கும். வீடு சுத்தமாக இருக்க வேண்டும் என்று சொல்லுவார். நேரந் தவ றாமை அவர் தவறாமல் கடைப்பிடிப்பது. 'ஒவ் வொருவரும் தன் கடமை, தன் குடும்பத்துக்கு செய்ய வேண்டிய கடமை ஆகியவற்றைச் செய்து விட்டுத்தான் மற்ற பணிகளுக்கோ, பொதுநலச் சேவைக்கோ வர வேண்டும்' என்று சொல்லுவார். வாசகர்களிடம் இருந்து கடிதம் வந்தால் உடனே பதில் சென்றாக வேண்டும். யாராவது அவரை ஏமாற்றினால் கூட, 'நம்ப வைத்த நம்பிக்கைக்குப் பாத்திரமாக அவர்க ளால் நடந்து கொள்ள முடியவில்லை' என்று சொல்லி ஆறுதல் அடைவார். இப்போதெல் லாம் சிலரது செயல்களில் perfection இல்லாத போது, கோபத்துக்கு பதில் வருத்தமே வருகிறது அவருக்கு. அவர் ஒரு உசந்த மனுஷி ஸார்."

சிவசங்கரியின் கதைகளை டைப் செய்து தருவதுடன் கடிதப் போக்குவரத்து, வங்கிக் கணக்கு ஆகியவற்றையும் கவனித்துக் கொள் கிறார் லலிதா. சென்னையில் எந்த நிகழ்ச்சியில் சிவசங்கரி கலந்து கொண்டாலும், கூடவே செல்கிறார். பத்திரிகைகளில் வரும் சிவசங்கரி யின் கதை, கட்டுரைகளை வெட்டியெடுத்துத் தொகுத்து பைண்ட் செய்வது, பின்னர்

# சிவசங்கரியின் மகளான

# வாசகி!

பவர். அவர் ஒரு perfectionist" என்று மனம் நிறைந்து சொல்கிறார் லலிதா.

சிவசங்கரியின் அறிமுகத்துக்குப் பிறகு தான் லலிதாவுக்குக் கல்யாணம் நடந்தது. கணவர் வெங்கடேசனும், மனைவியைப் போன்று திருமதி சிவசங்கரியையும் அவரது துணவரையும் 'அம்மா, அப்பா' என்றுதான் அழைப்பார். அதேபோல் லலிதாவின் பெற்ற தாயார் கங்கா, அப்பா பாலசுப்பிரமணியம் ஆகியோரும் சிவசங்கரி குடும்பத்தின் மீது, மகள் வைத்திருக்கும் பாச உணர்வைக் கண்டு பெருமைப்படுபவர்கள். லலிதாவின் குடும்பத் தில் ஏதேனும் விசேஷம் இருந்தால், தவறாமல் ஆஜராகி விடுவார் சிவசங்கரி.

"அம்மா (சிவசங்கரி) ஒரு அஷ்டாவதானி வெளியீட்டாளர்களிடம் கொடுப்பது என்றும் அவரது பணி நீள்கிறது.

"அப்பாவுக்கு (சிவசங்கரியின் கணவர்) உடம்பு சரியில்லாமல் அப்போலோவில் நான் கைந்து மாதங்கள் சிகிச்சை பெற்றார். பின்னர் சிகிச்சை பலனிக்காமல் இறந்து போனார். அந்தக் கட்டத்தில் நானும் என் கணவரும் பெரும்பாலும் ஆஸ்பத்திரியில் அம்மா வுடன்தான் இருப்போம். அப்பா காலமான பிறகு, இந்து சாஸ்த்திரங்களுக்கு ஏற்ப ஒரு மகள் செய்யும் சில அந்திமக் கடமைகளை அப்பாவுக்காக நான் செய்தேன்!" என்கிறார் லலிதா.

சந்திப்பு : ப்ரியன்

வண்ணப்படம் : பேஜர் கே. மூர்த்தி

# ரிலாக்ஸ்

''நீங்க ஏன் அந்தம்மாவுக்கு அளித்த ஆதரவை வாபஸ் வாங்கினீங்க?''

''கட்சித் தலைவராக இருந்து என்னத்தை வாங்கினீங்க... என்னத்த வாங்கினீங்கன்னு என் மனைவி தொண தொணத்ததுக்காக ஏதோ என்னால முடிஞ்சதை வாங்கினேங்க...''

''பத்திரிகைகளில் வரும் எல்லாவற்றையும் உண்மை என்று நம்பாதீர்கள்னு அறிக்கை குடுத்தது தப்பாயிடுச்சு, மேடம்.''

''என்னாச்சு?''

''நம்ம அறிக்கையை உண்மைன்னு நம்ப மறுக்கறாங்க...''

''இது நம்ம ஆட்சியிலா நடந்தது? இது நம்ம ஆட்சியிலா நடந்ததுன்னு தலைவி புலம்பிக்கிட்டு இருக்காங்களே... ஏன்? என்ன விசயம்?''

''அஞ்சு வருச ஆட்சியில ஏதோ ஒரு நல்ல திட்டம் நடந்ததை தலைவியால கூட நம்ப முடியலையாம்... அதான்.''



# எங்கிருந்தோ வந்தான்

கிருஷ்ணா

கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே வந்தான் அவன்.

க்ரூடு ஆயில் ஏற்றி வந்த லாரி, அந்த வீட்டின் மேல் மோதியபடி நின்று கொண்டிருந்தது.

லாரியின் மோதலால், வீட்டின் முன் பகுதி இடிந்து போயிருந்தது.

லாரியோ எக்குத்தப்பாய் சாய்ந்த படி பாதி சயனத்தில் இருந்தது.

எண்ணெய் அதிலிருந்து ஒழுகிக் கொண்டிருப்பதைக் கண்டான்.

'ஹைலி இன்ஃப்ளேமபிள்' என்று சிவப்பு நிறத்தில் லாரியின் பின்புறமுள்ள டாங்கரில் எழுதப் பட்டிருப்பதை நோக்கினான்.

"பாத்ரூமிலே பல் தேய்ச்சுக் கிட்டிருந்தேன். மடேல்னு சத்தம். போட்டது போட்டபடி ஓடி வந்து பார்த்தா இது நிக்குது வீட்டுக் குள்ளே. எமனோட வாகனமாச்சே இப்ப இது!"

லாரியை சுட்டிக் காண்பித்த படி பேசிக் கொண்டிருந்த பெரியவரை கவனித்தான் அவன்.

வேட்டி, பனியன், மேல் துண்டு, வழுக்கைத் தலை, ஒல்லியான தேகம். அறுபது வயதிருக்கும். அவர்தான் வீட்டுச் சொந்தக்காரராய் இருக்க வேண்டும்.

"எல்லாம் விதி! காலையிலே எழுந்ததுமே நஷ்டம்னு தலை யெழுத்து!"

பெரியவரின் குரலில் கோப மும், விரக்தியும் வெளிப்பட்டது.

முப்பது, நாற்பது பேர் சுற்றி நின்று பெரி யவர் பேச்சை சுவாரஸ்யமாய் கவனித்துக் கொண்டிருந்தனர்.

"டிரைவர் ஓடிட்டான் போலிருக்கு. நல்ல வேளை, கொஞ்சம் தள்ளி மோதியிருந்தா, என் பேத்தியும், பேரனும்.... நினைக்கவே பயமா யிருக்கு. அந்த ரூமில்தான் தூங்கிக்கிட்டிருந் தாங்க!"

பெரியவர் குரல் நடுங்கியது.

லாரியிலிருந்து ஒழுகும் எண்ணெயைக் கவலையுடன் பார்த்தான் அவன்.

"ஜி.எஸ்.டி. ரோடு ஓரம் வீடு கட்டினாலே பிரச்னைதான். எப்ப, எது வந்து மோதும்னு சொல்ல முடியாது!"

"எல்லா டிரைவருமே இப்ப குடிச்சுட்டு தான் ஓட்டுறாங்க, கலிகாலம்!"

கைலி, சட்டையில் இருந்த ஒருவன் சிக ரெட்டை எடுத்து வாயில் வைத்தபடி 'காலத் தைப்' பற்றிச் சொன்னதும், பதறிப் போனான் அவன்.

"சார், பத்த வைச்சிடாதீங்க!"

ஓடிப் போய் அவர் கையிலிருந்த தீப் பெட்டியைப் பிடுங்கினான் அவன்.

"என்னங்க, படிச்சவர் மாதிரி தெரியறீங்க. ஆயில் எப்படி கொட்டிக் கிடக்குது பார்த்தீங் களா? வீடும் லாரியும் குப்புனு பத்திக்கும், சின்ன தீப்பொறி பட்டாலும்."

இரைந்த குரலில் அவன் அதட்டியதும் எல்லோர் பார்வையும் அவன் மேல் பதிந்தது.

"இப்படி வேடிக்கை மட்டும் பார்த்தால் சரியாயிடுமா?"

பொதுப்படையாய் அவன் கேட்டான்.

"வேற என்ன பண்றதாம்?"

அந்த குண்டு ஆள் குத்தலாய்ப் பேசினான்.

அவன், வீட்டின் சொந்தக்காரரான பெரிய வரை அணுகினான்.

"சார், வீட்டுல யார் இருந்தாலும் உடனே வேற இடத்துக்குக் கூட்டிட்டுப் போயிடச் சொல்லுங்க. எண்ணெய் எவ்வளவு சிந்திக் கிடக்குது பாருங்க? முன்ஜாக்கிரதை வேணாமா?"

பெரியவருக்கு ஆபத்து புரிந்து போய்ப் பதறினார்.

"என் பையன் வேற ஊரிலில்லே. மருமகளும், குழந்தைகளும் மட்டும்தான் இப்ப இருக்காங்க."

"அதனாலென்ன? பதறாம இருங்க. நான் இருக்கேன் கூட."

அடுத்த ஐந்து நிமிடத்தில் தெரிந்தவர் மூலம் வீட்டு நபர்கள் அழைத்துச் செல்லப் பட்டனர் வேறிடத்துக்கு.

"பெரியவரே, பூட்டு, சாவி எங்கேயிருக்கு?"

"எதுக்கு தம்பி?"

"கூட்டம் வரவர அதிகமாயிட்டே போகுது. வீட்டு அறைகளைப் பூட்டிடலாம். முன்பக்கமா யாரும் உள்ளே புக முடியாதபடி லாரி நிக்குது. பின் பக்கம் கொல்லைக்கதவு இருக்கா? இருக்கற பொருளை காபந்து பண்ணிடறது நல்லது."

பெரியவர் சுறுசுறுப்பானார்.

"தம்பி, ரொம்ப நன்றிப்பா. எல்லாத்தையும் பூட்டிட்டேன். சமயசஞ்சீவியாய் வந்திருக்க!"

அவன் கையைப் பிடித்துக் கொண்டு தழுதழுத்தார்.

"போலீசுக்கும் தீயணைப்பு நிலையத்துக்கும் தகவல் கொடுக்கணும், போன் பண்ணிடலாம். பக்கத்துல போன் இருக்கா?"

"பெரியவரே, யாரையாவது அனுப்புங்க. போன் பண்ண ரூபாய் இருக்கா?"

"அது.... உள்ளேயிருக்கு."

---

**"தொடர்ந்து இந்த இடத்தில ஏகப்பட்ட விபத்துக்கள் நடக்குதே, என்ன நடவடிக்கை எடுத்தீங்க?"**

**"பக்கத்தில பெரிய ஆஸ்பத்திரி கட்ட அனுமதி வழங்கிட்டோம்!"**

**— லலிதா செல்லப்பா**





"நோ ப்ராப்ளம்."

தன் பையிலிருந்து ஐந்து ரூபாயை எடு[த்து] நீட்டினான்.

பக்கத்து வீட்டுப் பையனைக் கூப்பி[ட்டு] பெரியவர் போன் பண்ணச் சொன்னார்.

அதற்குள் அவனின் செயல்பாடு க[ண்ட] கூட்டம் அவனை மதிப்பாய்ப் பார்த்தது.

அவன் சுற்றுமுற்றும் பார்ப்பதைக் க[ண்டு] பெரியவர் கேட்டார்:

"என்னப்பா?"

"பக்கத்துல மண்... அதோ... ஏதோ கட்[டட] வேலை நடக்குது போலிருக்கே. ஆபத்து[க்கு] பாவமில்லே."

அவன் நடக்க ஆரம்பிக்க, கூட்டம் [தொடர்ந்து] விட்டது. பின்னே ஏழெட்டு பேர் அவனை[த்] தொடர்ந்தனர்.

"தம்பி மட்டும் இல்லேன்னா கஷ்டமாயி[ருக்]கும் பெரியவர் நிலைமை..."

"ப்ளீஸ், என் பெருமை இப்ப எதுக்[கு]? அதோ, வாட்ச்மேன் வராரே?"

குடிசையிலிருந்து வெளிப்பட்ட ஆ[ளை] நிறுத்தினான்.

"இவரிடம் பத்து, பன்னிரண்டு சட்[டி] இருக்கு. ஆளுக்கொரு சட்டியிலே மண[ல்] எடுத்துட்டுப் போய் தேங்கிக் கிடக்கற எ[ண்]ணெய் மேலே கொட்டுவோம். நெருப்புப் பி[டிக்]கற வாய்ப்பு குறையுமே!"

மளமளவென்று வேலை நடந்தது.

"தம்பி, இனி நீயும் எனக்கொரு மகன்தா[ன்]. வேடிக்கை பார்க்க ஆயிரம் பேர் கூடுவா[ங்க]. ஆனால் சமயத்துல இப்படி கை கொடு[த்து] உதவறது...."

போலீசும் தீயணைப்பும் பெரிய[வரின்] பேச்சை நிறுத்தியது.

"நல்லா செயல்பட்டிருக்காங்க சார். எ[ங்க]ளுக்கு அதிகமா வேலையே இல்லை."

தீயணைப்பு ஆபீசர் போலீஸ் இன்ஸ்பெக்[ட]ரிடம் பாராட்டினார்.

போலீஸ் தன் வழக்கமான பணியை[த்] தொடர்ந்தது.

பெரியவரிடம் விசாரணை, லாரி நம்ப[ர்], பெயர் குறித்தல், லாரி மோதியதால் ஏற்பட்[ட] சேதம் பற்றிய குறிப்பு என்று எல்லாம் வழக்க[ப்]படி நடந்தது.

"இன்ஸ்பெக்டர் சார், இந்த தம்பி இ[ல்]லைன்னா ரொம்ப திண்டாட்டமாயிருக்கு[ம்]."

பெரியவரும் மற்றவர்களும் சொல்ல, கூ[ச்ச]மாய் நெளிந்தான் அவன்.

"வெல்டன் மிஸ்டர்! யாரு நீங்க?"

இன்ஸ்பெக்டரின் கேள்விக்கு, பதி[ல்] சொல்லத் தயங்கி, சுற்று முற்றும் பார்த்தா[ன்].

"நான்தான் இந்த லாரியோட டிரைவ[ர்]" என்றான் மெதுவாய்.




அந்த தூதர்கள் ரகசியப் பயணம் மேற்கொண்டு, புலிகள் தலைமையிடமும் அதிபர் சந்திரிகாவிடமும் தனித்தனியே பேசிப் பார்த்து, பின்னர் ராஜதந்திரத்தைக் கையாண்டு, இரு தரப்பினரும் ஏற்கக் கூடிய ஒரு திட்டத்தை வகுக்கலாம். பிறகு, அவர்கள் சந்தித்துப் பேசவும் ஏற்பாடு செய்து விடலாம்.

இந்திய அரசாங்கப் பிரதிநிதிகள் நேரடியாகச் சென்று, இத்தகைய முயற்சியில் ஈடுபட்டால், புலிகள் தரப்பில் நியாயமான பயங்களும் சந்தேகங்களும் எழும். அதையே மூன்றாம் நபர் செய்யும்போது, அவரது நோக்குகளுக்கு உள்ளர்த்தம் கற்பிக்காமல், திறந்த மனத்துடன் இரு தரப்பினரும் அந்தத் தூதர்கள் மூலம் பேச்சு வார்த்தை நடத்த வாய்ப்பு இருக்கிறது.

அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, 'தனித் தமிழ் ஈழம் என்ற கோட்பாடு, சொல்வதற்குச் சிறப்பாக இருக்கக் கூடும்; ஆனால் நடைமுறைக்கு உகந்தது கூட்டாட்சி தத்துவம்தான் **(federal state)** என்பதை தூதுக்குழு பிரபாகரன் பிரிவினருக்கு உணர்த்தலாம்.

இந்த மாதிரி முயற்சியும் விரைந்து பலன் அளித்துவிடும் என்று சொல்ல முடியாது. தொடர்ந்து சில ஆண்டுகள் முயன்று வெற்றி பெறலாம்.

இலங்கைப் பிரச்னையானது தமிழ் நாட்டையும் தமிழக மக்களையும் உணர்வு பூர்வமாய் பாதிக்கும் விஷயம். எனவே, அயல்நாடுகளைச் சேர்ந்த ஒரு நடுநிலைக் குழுவை மத்திய அரசு நிறுவ வேண்டும், இலங்கைக்கு அதை ரகசியமாகத் தூது அனுப்ப வேண்டும் என்று தமிழக முதல்வரே மத்திய அரசுக்கு எடுத்துச் சொல்லி வலியுறுத்தலாம்.

மத்திய அரசும் தனக்கு இருக்கும் 'மெஜாரிட்டி' தலைவலிகளைக் கொஞ்சம் மறந்து விட்டுச் செயல்படலாம்.

ஆட்சி அமைப்பதில் காட்டிய ராஜதந்திரத்தை, ஐக்கிய முன்னணி அரசு, அண்டை நாட்டின் பிரச்னையைத் தீர்ப்பதில் ஏன் காண்பிக்கக் கூடாது!

# சும்மா இருங்க



கண், காது, மூக்கு போன்ற உறுப்புகள் மனிதவேடம் தரித்த அத்தனை பேருக்கும் பொதுவான அம்சம் என்றாலும், இவற்றுள் ஏதாகிலும் ஒன்று அபூர்வமாய் யாரேனும் சிலருக்கு வித்தியாசமான 'சைஸில்' அமைந்து வேடிக்கை காட்டுவதுண்டு!

இந்த வகையில் காஞ்சனமாலாவின் கவலைக்குரிய விஷயம் –

காது!

இரண்டு பேருக்கான ரேஷனை ஒரு வருக்கே அள்ளி விட்டது போல் பெரிய காது.

மேற்படி (ெ)மகா காதுகளுக்குத் தோடு போட்டுக் கொள்ளப் பிரியப்படும் பட்சத்தில், ஒட்டியாணத்துக்கான கிரயத்தை விரயம் செய்ய வேண்டி இருக்கும் என்பதால் காஞ்சனமாலா தோடு போட்டுக் கொள்ளவில்லை!

செல்வி(27) காஞ்சனமாலா எனக்கு ஆன்ட்டி!

'ஆன்ட்டி' என்ற ஆங்கிலப் பதத்துக்கு தாங்கள் 'எதிரி' என அர்த்தம் பண்ணிக் கொண்டிருந்தால் கூட பரவாயில்லை; அந்த அளவுக்கு என்னை அன்னாருக்கு (அவ்வப்போது) பிடிக்காது!

என்றாலும் –

அடியேன் 'ஆன்ட்டி' எனப் பதப்பிரயோகம் செய்தது, அப்பாவின் ஒன்று விட்ட தங்கை என்ற உறவு முறையை விளம்ப!

பெற்றோரை இழந்த நாள் முதல் அப்பாவின் பாதுகாப்பில் உள்ள ஆன்ட்டி, என்னிலும் ஈராண்டு சீனியர். மாநில அரசின் 'கொடுக்கல் – வாங்கல்' இல்லாத அலுவலகத்தில் தட்டச்சர். வீட்டின் முகப்பு அறையில் வாசம்...

போன வாரம் –

மகளிர் மன்ற ஆண்டு விழாவுக்கு மகிழ்ச்சி பொங்கப் புறப்பட்டுப் போன ஆன்ட்டி, திரும்பி வந்தபோது தேவைக்கதிகமாய் துக்கத்தைத் தூக்கிக் கொண்டு வந்திருந்தார்...

காரணம் தெரியவில்லை. யார் கேட்டும் பதில் இல்லை. ஒருவழியாய் அப்பா வந்து வினவியபோதுதான் விவரம் தெரிந்தது –

மன்றத்தில் இரண்டு காஞ்சனமாலாக்கள் அங்கத்தினராய் உள்ளபடியால், தன்னை 'காது பெருத்த காஞ்சனமாலா' என்று குறிப்பிடுவது அரசல் புரசலாய்க் காதில் விழுகிறது என்று ஆன்ட்டி சொல்லவும் –

# காதை...

கொதித்தது ரத்தம் எனக்கு!

"டிஷ் ஆன்ட்டனா மாதிரி காதை வைத்துக் கொண்டு, அரசல்புரசலாய் கேட்டுக் கொண்டு வந்து நிற்பானேன்..." என்று நான் குதிக்க –

'பளார்' என்ற அறையில் பழுத்தது கன்னம்!

அப்பாதான்.

உணர்ச்சிவசப்பட்டு ஆன்ட்டியின் காதுகளை விமர்சித்த குற்றத்துக்குக் கன்னத்தின் மேல் பலன்!

மறுநாள்.

கொள்ளை மகிழ்ச்சியை அள்ளிக் கொண்டு வீடு திரும்பிய ஆன்ட்டியின் கையில் 'செல்லம்' தினசரியின் 'செவ்வாய் மலர்'.

மலரில், மலர்ந்த முகத்துடன் பிரபல நடிகை பாதமா பஞ்சகியின் படம் – பேட்டி.

தேவைக்கு அதிகமாய் இருந்த தன் மூக்கை பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் சின்னது பண்ணிக் கொண்டது பற்றியும், சிக்கனமாக்கப்பட்ட மூக்கு கொண்டு வந்த புதிய படவாய்ப்புகளால் இன்னும் கால் நூற்றாண்டுக்கு 'கால்ஷீட்' இல்லை என்பதையும் தெரிவித்திருந்தார், பஞ்சகி.

கால் பக்கத்தில் பஞ்சகியின் படமும் அரைப் பக்கத்தில் புதிய மூக்கு(மட்டு)ம் பிரசுரிக்கப்பட்ட வகையில் பேட்டி துணுக்காகிப் போயிருந்தது.

"மூச்சு விடுவதற்கு மூலகாரணமான மூக்கையே மாற்றி அமைக்கும்போது, காதுக்கென்ன?" என்ற ஆன்ட்டியின் கேள்வியில் பிறவிப் பயனை அடைந்து விட்ட பெருமை.

"தாராளமாகச் செய்யலாம்" என்றேன்.

"நாளை மாலை ஐந்து மணிக்கு டாக்டர் மேனனிடம் அப்பாயிண்ட்மென்ட் கூட வாங்கி விட்டேன்" என்று குதூகலத்துடன் சொன்ன ஆன்ட்டியின் காதுகளை குத்துமதிப்பாய் ஒருமுறை பார்த்து வைத்தேன்.

"பகவான் படைத்த உடல் உறுப்புகளை – அவை பழுதில்லாமல் இருக்கும் பட்சத்தில், திருத்தி அமைக்க மனிதனுக்கு உரிமை இல்லை" என்று அப்பா கொள்கை ரீதியாக ஒதுங்கிக் கொண்டு விட –

அம்மாவையும், பக்கத்து வீட்டு மிலிட்டரி மாமியையும் அங்கத்தினர்

லைஃபான்



''நான் எது சொன்னாலும், நீ காதிலேயே போட்டுக்க மாட்டேங்கறியே?''
''மாட்டல் வாங்கித் தரேன்னு சொல்லுங்க. போட்டுக்கிறேன்.''
– ஆர். வசந்தகுமார்



களாய் கொண்ட, 'ஆன்ட்டி காது சீரமைப்புக் குழுவை' நான் தலைமைதாங்கி ஏகுவதாக முடிவாயிற்று!

அடுத்த நாள்.

டாக்டர் மேனனின் கிளினிக்...

– சுத்தமான விட்டலாச்சார்யா ஸ்டைல்.

''இவங்கதான் காஞ்சனமாலா'' என்று ஆன்ட்டி'யை முன்னிறுத்தி, நாங்கள் புடை சூழ –

"ஒருவர் மட்டும் உடன் வரலாம்" என்ற சேவகரின் கண்டிப்பில், அம்மாவும் மிலிட்ரி மாமியும் வாசலிலேயே சுத்திகரிக்கப்பட்டு, நான் மட்டும் ஆன்ட்டியுடன் உள்ளே பிரவேசித்தேன்.

புதிதாக வந்த ஆங்கில திகில் படத்தைப் பார்ப்பது போல் ஆன்ட்டியின் காதுகளையே பார்த்தார்...

செவிகளை ஆழ்ந்து அவதானித்த பின்பு டாக்டர் பார்வையைத் திருப்பவும், அவசர அவசரமாகத் தன் காதுகளை ஒருமுறை தொட்டுப் பார்த்துக் கொண்ட ஆன்ட்டியின் செய்கை என்னை சிரிப்பின் உச்சத்துக்குக் கொண்டு சென்றாலும், சிரிக்க முடியாத அவஸ்தை.

இதற்குள் பல்வேறு வகையான காதுகளின் படங்கள் சேகரிக்கப்பட்ட ஆல்பம் ஒன்றைச் சேவகர் கொண்டு வந்து மேஜையில் வைக்க, ஒவ்வொன்றாய் புரட்டிப் பார்த்து ஆன்ட்டியின் காது போன்ற ஒரு படத்தை எடுத்தார் டாக்டர்.

ஓரிரு நிமிடங்கள் படத்தையும் காதையும் மாறி மாறிப் பார்த்து விட்டு, சட்டென்று கத்தரிக்கோலை எடுத்துக் காதில் (படத்தில்தான்) உபரியாக இருந்த பகுதியை டாக்டர் கத்திரிக்கவும் பதறிப் போய் என்னிடம் வந்தார் ஆன்ட்டி.

"காதின் மொத்தப் பரப்பிலும் டாக்டர் கை வைப்பார் போலிருக்கு! எனக்கு அந்த அவஸ்தை வேண்டாம். முடிந்தால் இந்த சோனைப் பகுதியை மட்டும் சரிசெய்ய சொல். இல்லாவிட்டால் போய் விடலாம்" என்று படபடத்த ஆன்ட்டிக்கு ஆறுதல் சொல்லி அமரவைத்து விட்டு, டாக்டரிடம் ஆன்ட்டியின் 'அவா'வைச் சொன்னேன்.

'அற்பப் பதரே! எனக்கே சர்ஜரி சொல்லித் தருகிறாயா! என்பது போல் பக்கவாட்டில் பார்த்து விட்டு, "டாக்டர் பெல்லிதான் இந்த சர்ஜரியை செய்யப் போகிறவர்" என்று முதல் முறையாகத் திருவாய் மலர்ந்தார், டாக்டர்.

– டாக்டர் பேசுவார் என்பது இதன் மூலம் நிரூபணமாயிற்று!

"சர்ஜரி என்றைக்கு?" என நான் ஆவலுடன் கேட்க,

''உங்க அதிர்ஷ்டம்! டாக்டர் பெல்லி நாளைக்கே ஸ்விட்சர்லாந்திலேருந்து வந்துடறார்'' என்ற பதில், சேவகருடையது.

மீதி விவரங்களையும் சேவகரிடமே தெரிந்து கொள்ளலாம் என்ற பாவத்தில் நான் ஆன்ட்டியைப் பார்க்க –

தனது லெட்டர் ஹெட்டில் எதுவோ எழுதி முடித்த டாக்டர், அதை உறையிலிட்டு முகவரியை எழுதியபோதுதான் அவர் எழுதப் பிரயோகித்த மொழி ஆங்கிலம் என்பதும் நகரின் உலகப் புகழ்பெற்ற மருத்துவமனையில் சர்ஜரி என்பதும் தெரியவந்தது.

வெளியில் வந்து பார்த்தபோது ஆச்சரியம் –

அம்மா – மிலிட்ரி மாமி தவிர வேறு சிலரும் வந்து காத்திருந்தார்கள்.

''ஒரு நாளைக்கு மூணு பேருக்கு மேல் பார்க்க மாட்டார்களாம்'' என்று தகவல் சேகரித்துச் சொன்னார், மிலிட்ரி மாமி.

சேவகரிடம், "டாக்டர் பீஸ்?" என்றேன்.

"சர்ஜரிக்குப் பிறகு" என்றார்.

ஆன்ட்டியிடமிருந்து முதுகுப்புறமாய்ப் பெயர்ந்து வந்த பத்து ரூபாயை வாங்கி அன்பளிப்பாக சேவகரிடம் நீட்டினேன்.

"வேண்டாம்! நாளொன்றுக்கு டாக்டர் தரும் நூத்தைம்பது ரூபாய் போதும் எனக்கு" என்றார்.

தூக்கிவாரிப்போட்டது.

நித்தம் மூன்று கேஸ் மட்டுமே பார்க்கிற டாக்டர், சேவகருக்கே நூற்றைம்பது படி அளக்கிறார் என்ற ரீதியில் சர்ஜரியின் விலையைக் கணக்கிட்ட போது தலையைச் சுற்றியது.

எனினும், ஆன்ட்டியிடம் பொருளாதாரம் பேசி புதிய சிக்கலைத் தோற்றுவிக்கக் கூடாது என்ற வைராக்கியத்தில் வாயைக் கட்டிக் கொண்டு விட்டேன்.

பிரம்மாண்டமான மருத்துவமனையின் 'பிளஸ்' விங்.

டாக்டர் பெல்லியிடம் முன்னிலைப் படுத்தப்பட்டு, நானும் ஆன்ட்டியும்...!

பெல்லி என்ற பெயரைக் கேட்டதும் தொந்தியும் தொப்பையுமாய் இருப்பார் என்று நினைத்துப் போன எனக்கு, வாயும் வயிறும் ஒட்டிப் போய், அகன்ற ஆசனத்தின் அரைக் கால் பகுதியில் மட்டுமே உட்கார்ந்திருந்த டாக்டர் பெல்லியைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஆன்ட்டியின் முகத்திலும் அனுதாப அலைகள்...

உலகம் முழுமையும் பயணித்து மனித அவயவங்களை மாற்றி அமைக்கிற பெல்லி, பிளாஸ்டிக் சர்ஜரியின் முதல் இலக்கே தான் தான் என்பதை உணராமல் இருந்தார் என்ப தற்கு இடம் மாறி இருந்த அன்னாரின் கண்ணும், மூக்கும் கட்டியங்கூறின. அவை களை முதலில் திருத்தி அமைக்க வேண்டும் போலிருந்தது.

அதென்னவோ, சர்வதேச ரீதியில் மேதை களின் தோற்றத்தில் மேம்பாட்டுக்கே வழி இல்லை போலும்!

டாக்டர் மேனன் கொடுத்தனுப்பியிருந்த கடிதக் குறிப்பைப் படித்து விட்டு, பெரிய தாளில் அச்சிடப்பட்ட காது படம் ஒன்றை ஆன்ட்டியிடம் வழங்கி, "ஆஸ் யூ ப்ளீஸ்" என்றார் டாக்டர் பெல்லி.

விடைத்தாளைப் பெற்றுக் கொண்ட +2 மாணவி மாதிரி, காது பற்றின கஷ்டம் இன்றோடு தொலைந்தது என்ற குதூகலத்தில், படத்தைப் பெற்றுக் கொண்ட ஆன்ட்டி, டாக்டர் மேசையில் இருந்த பென்சிலை எடுத்து (விமர்சனத்துக்குரிய) காதின் கீழ்ப் பகுதியை பென்சிலால் வெட்டி, நீக்கப்பட வேண்டிய பரப்பளவு முழுமைக்கும் பென்சிலால் வண்ணம் தீட்டினாள்...

"போதுமே" என்று நான் சொல்லவும், வெட்கித்து, சிரித்து, படத்தை டாக்டரிடம் நீட்டவும் –

"ஓ.கே?" என்றார் பெல்லி.

"ஓகே" என்று தலையாட்டிய ஆன்ட்டியின் முகத்தில் கோடிப் புன்னகை.

"நாளை அதிகாலையில் சர்ஜரி" என்று சொல்லவும் புன்னகை பன்மடங்காயிற்று.

வெளியில் வந்ததும் ரிசப்ஷனில் இருந்த டெக்னீஷியனிடம் கேட்டேன் :

"முரண்பாடாய் இருக்கிற அவயவத்தை இயல்பாக மாற்றி சர்ஜரியைச் செய்ய வேண்டியதுதானே? இதற்கு நம் விருப்பத்தைக் கேட்டு படமெல்லாம் வரைய வேண்டுமா?" என்ற என் கேள்விக்கு டெக்னீஷியன் சொன்ன பதில் திகைப்பைத் தந்தது.

"முரண்பட்ட உடலுறுப்பை முறைப்படி மாற்றி அமைக்க சர்ஜரி பயன்பட்டதெல்லாம் ஆரம்ப காலத்தில். இப்போதெல்லாம் சதுர முகம், செவ்வகக் காது, குத்தினால் ரத்தம் வருகிற மூக்கு என்று மனம் போனபடி மாற்றி அமைக்கச் சொல்கிறார்கள். அதனால்தான் உங்கள் விருப்பத்துக்கே விட்டு விடுகிறோம். நீங்கள் வரைந்து கொடுத்த படத்தில் மில்லி மீட்டர் பிசகாது. இந்த வகையில் டாக்டர் பெல்லி உலகின் நம்பர் ஒன்'' என்றார் டெக்னீஷியன்.

விஞ்ஞானத்தின் எதிர்த்திசை பயணத்தை எண்ணி நொந்து கொண்டேன்.

இன்று ஆன்ட்டிக்கு டிஸ்சார்ஜ்.

இன்னும் கால் மணி நேரத்தில், காதைச் சூழ்ந்திருக்கும் காட்டன் அகற்றப்பட்டு, ஆன்ட்டியின் காதுகள் உலகக் காது வரிசையில் சேர்ந்து விடும். காது பெருத்த காஞ்சனமாலா என்று கிண்டலடித்தவர்களின் வாய் பூட்டப்படும்.

ஆன்ட்டியைப் பார்க்க சுற்றமும் நட்பும் சூழ வந்திருந்தார்கள்.



''டாக்டர் என்னோட கால்ல முள் குத்திடிச்சு!''

''அப்படியா! இந்தாங்க சி.டி. ஸ்கேன், எக்கோ, எண்ட்ராஸ்கோப் எல்லாம் எழுதியிருக்கேன். போய் எடுத்திட்டு வந்திடுங்க!''

– புளியரை கணேசன்

சும்மா இருக்க மாட்டாமல், ஆன்ட்டியின் தலைக்கு மேல் தொங்கிய சார்ட்டை எடுத்துப் பார்த்தேன். ஆன்ட்டி வரைந்து கொடுத்த காது படம் இணைக்கப்பட்டிருந்தது.

படத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய் மீண்டும் பார்த்...தேன்...

– அதிர்ச்சி!

நடந்து விட்ட தவறு மெல்ல தெரிய வந்ததும் கை லேசாக நடுங்கியது...

ஆம்!

ஆன்ட்டிதான், ஆர்வத்தில், அந்த தவறைச் செய்து விட்டிருந்தாள்...

படத்தை சரியாகப் பார்க்காமல், காதை தலைகீழாக வைத்து சர்ஜரிக்கான பகுதியை குறிப்பிடப் போக –

நீக்கப்பட வேண்டிய காதின் கீழ்ப்பகுதி சிரித்துக் கொண்டிருக்க, அவசியமான மேல் பகுதி வெட்டி நீக்கப்பட்டிருந்தது!

# காவிரிக் கரையில் கால் ஏக்கர் நிலம், முதலீட்டாளர்களுக்கு காய்கறி இலவசம்



## தொடர்ந்து 7 ஆண்டுகளுக்கு
## ஒவ்வொரு 7 நாட்களுக்கு ஒருமுறை
## உங்களுக்கு 7 கிலோ காய்கறி தர
## வருகிறான்

# காய்கறிகாரன்

- விலைவாசி ஏற்றத்தின் பாதிப்பின்றி நீங்கள் விரும்பும் 7கிலோ காய்கறிகள் உங்கள் இல்லம் தேடி இலவசமாக வருகிறது, அல்லது விவசாய வருமானமாக ஆண்டுக்கு ரூ. 3000/- முன் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.
- கால் ஏக்கர் நிலத்தை 7 வருடங்களுக்குப்பிறகு வீட்டுமனைகளாக நல்ல விலைக்கு விற்கலாம்.
- முதலீட்டிற்கு சிறந்த வருமானம் - வருமான வரி விலக்கு உண்டு.

## முதலீட்டுத் திட்ட விவரம்

| திட்டம் 'A' சுலப தவணைத்திட்டம் | | திட்டம் 'B' குறுகிய தவணைத்திட்டம் | | திட்டம் 'C' * ஒரே தவணைத்திட்டம் |
|---|---|---|---|---|
| முன்பணம் | ரூ. 3,500/- | முன்பணம் | ரூ. 11,800 | ஒரே தவணை ரூ. 32,900/- |
| மாதத் தவணை | ரூ. 2,675/- | மாதத்தவணை | ரூ. 11,000 | |
| மாதங்கள் | 12 | மாதங்கள் | 2 | |

* B மற்றும் C திட்டத்தில் சேருபவர்களுக்கு உடனடியாக காய்கறி வழங்கப்படும்.
பதிவுக் கட்டணமாக ரூ. 2,500/- கூடுதலாக செலுத்த வேண்டும்.




**B K எஸ்டேட்ஸ்**
109, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை
நுங்கம்பாக்கம், சென்னை 600 034
தொ.பேசி 8266978, 8277234
பேக்ஸ் : 91-044-8282792

கிளை : A-3, S V V காம்ப்ளக்ஸ், 9,சாஸ்திரி சாலை,
தில்லை நகர், திருச்சி - 620 017. போன் : 33076.




**சிறப்பு பரிசு!**

ஆகஸ்ட் 1 முதல் 31 தேதிக்குள் எங்கள் B&C திட்டங்களில் சேரும் முதல் 100 நபர்களுக்கு ரூ.1,400/- மதிப்புள்ள காபி மேக்கர் அன்பளிப்பாக தரப்படும்.

JEGI/BKE/

# "பார்த்துடு... பர்மா நோட்டு இல்லியே?"

**ம**காராஜபுரம் விசுவநாதய்யருக்கு இது நூற்றாண்டு விழா. அவருடன் நீண்டநாள் தொடர்புடையவர் 'விகடம்' கிருஷ்ணமூர்த்தி. இவர், முன்னாள் நடிகர். பாடகி எம்.எல். வசந்தகுமாரியின் கணவர். 'சங்கீத பூபதி' மகாராஜபுரம் விசுவநாதய்யரிடம் ஏற்பட்ட நட்பு பற்றி இங்கு நினைவு கூர்கிறார் கிருஷ்ணமூர்த்தி.




"**நா**ன் சொல்றது சுமார் 50 வருஷத்துக்கு முந்தைய சமாசாரம். அப்போ, ஏவிஎம் ராஜேசுவரி கல்யாண மண்டபம் இருந்த இடத்துல தேவகோட்டை ஏஎல்ஏஆர் ஜமீனைச் சேர்ந்த பெரிய பங்களா இருந்தது. அங்கே இருந்த ஹால் மிக முக்கியமான இடம். சதா அங்கே சங்கீதம் தான் கேட்கும். அங்கே வராத வித்துவான்களே கிடையாது. ஜமீந்தார் ஏஎல்ஏஆர் சொக்கையா செட்டியாருக்கு, சங்கீதம் என்றால் உயிர்.

"இப்போ மியூசிக் அகடமி இருக்கே, அதுக்கு எதுத்தாப்பல இருக்கிற வீட்டில் என் அப்பாவின் நண்பர் அருணாசலம் செட்டியார் இருந்தார். அதனால் நான் சென்னைக்கு வந்த போது அங்கே தான் தங்கினேன். மேற்படி சொக்கையா செட்டியார் வீட்டுக்குப் போக ஆரம்பிச்சேன்.

"எல்லா வித்துவான்களையும் போல, ஒரு நாள் மகாராஜபுரம் விசுவநாதய்யர் அங்கே வந்தார். நான் எல்லோரையும் இமிடேட் செய்து அவரவர் குரல்களில், அவர்கள் மாதிரியே பாடுவது வழக்கம். சும்மா தமாஷுக்கு அப்படிப் பண்ணுவேன்.

"யாரோ விசுவநாதய்யரிடம் நான் மிமிக்ரி பண்ணுவதைச் சொல்லியிருக்கிறார்கள். அங்கே பாட வந்த அவர், "எங்கேடா, பாடு!" என்றார். நான் அவர் பாடுவது மாதிரியே 'ஆசை முகம் மறந்து போச்சே, இதை யாரிடம் சொல்வேனடி தோழி' என்று பாடினேன்.

"விசுவநாதய்யருக்கு என்னை ரொம்பவும் பிடிச்சுப் போச்சு. எங்கே போவதானாலும் என்னைக் கூடவே அழைத்துக் கொண்டு போக ஆரம்பித்தார். அவரோடு, அவர் போகிற இடங்களுக்கு எல்லாம் காரில் சுற்றுவேன்!

"ஒரு தரம் அந்தக் கால நடிகை வசுந்தராவைச் சந்திக்க, அவர் வீட்டுக்குப் போனார். "சிஷ்யனா?" என்று அவர் அம்மா கேட்டபோது, "ஆமாம்!" என்றார் விசுவநாதய்யர். "பாடுவானா?" என்று கேட்டார்கள். "ஓ, பேஷா!" என்றார். எனக்கு உள்ளூர உதறல். பாடச் சொன்னார். 'இனி ஒரு கணம் மறவேன்' பாடினேன். "எங்கேயும் முழுசாக ஒரு பாட்டைச் சொல்லிக் கொடுத்து நான் பார்த்ததில்லை!"

"முழுசா ஒரு கீர்த்தனையைச் சொல்லிக் கொடுக்க மாட்டீர்களா?" என்று கேட்க வாய் துடிக்கும். ஆனால் கேட்க மாட்டேன்.

"விசுவநாதய்யரிடம் எனக்கு இப்படி ஏற்பட்ட நட்பு அவர் மீது பெரிய விசுவாசமாக மாறிவிட்டது. அவருடைய அந்தரங்கக் காரியதரிசி மாதிரி தான்!

"வெளியே யாரிடமும் சங்கீத சர்ச்சைகளில் அல்லது சங்கீத சமாசாரங்களில் புகுந்து கொள்ளவே மாட்டார். யாரோட பாட்டு, நிஷாதம் எந்த இடத்துல, ஷட்ஜமம் சரியா, ராகம் என்ன பவானியா, ஈரோடா - ஒண்ணைப் பத்தியும் பேச மாட்டார்!

"கும்பகோணத்தில் ஒரு நாள், தலையில் எண்ணெய் வைத்துக் கொண்ட பிறகு, குளிக்கிற நேரத்துக்குள்ளாக - திடீரென்று ஒரு காம்போதி பாடியிருக்கார் பாருங்கள். என் ஆயுசில் அது மாதிரி ஒரு பாட்டை நான் கேட்டதில்லை!"

"கச்சேரிக்குக் கிளம்பிட்டா அவருக்கு ஒரு தனிக் களை வந்துடும். கம்பீரமா இருப்பார். குழந்தை மாதிரின்னும் சொல்ல முடியாது, முதிர்ந்தவர்னும் சொல்ல முடியாது - அப்படிப்பட்ட மனசு. கச்சேரிக்கு ரேட் விஷயத்தில் எல்லாம் தடபுடல் செய்யவே மாட்டார். ஆனால் பணம் வந்ததும், "பார்த்துடு, அதுல பர்மா நோட்டு ஏதும் இல்லியே?" என்று கேட்பார்.

(சுதந்தரத்துக்கு முந்தைய காலகட்டத்தில் பர்மா கரென்ஸி, நம் கரென்ஸியுடன் கலந்து வந்து விடும். அதனால் உபயோகம் இல்லையே..?)

"பாசத்தைப் பெண்ணிடம் ஆகட்டும், பிள்ளைகளிடம் ஆகட்டும், மனைவியிடம் ஆகட்டும் - வெளிப்படையாக ஒரு போதும் காட்டியதில்லை. ஜி.என்.பி.யிடம் அசாத்திய மதிப்பு. ஜிஎன்பிக்கும் விசுவநாதய்யரிடம் அளவு கடந்த மரியாதை!"

**- சித்தார்த்**

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போ

நாக்கில் நறநறவென்று உறுத்தல். பூஞ்சோலை சுவரோரமாய் இருந்த தொட்டியில் உமிழ்ந்தாள். எச்சில் கறுப்பாய் ரசாயன மண் கலந்து வந்தது.

சற்றுத் தள்ளி ஜோல்ட்டிங் இயந்திரத்தின் அருகே நிற்கிற பதினெட்டு வயது இளைஞனுக்குக் குரல் கொடுத்தாள்.

"ரத்தினம், கடைசி பேட்ச் பெட்டிங்க வருது பாரு. மெஷின்ல ஏத்து."

காலையிலிருந்து இந்த நிமிஷம் வரை பூஞ்சோலையை அதி அதிசயமாய்ப் பார்த்துக் கொண்டிருந்த அந்த ரத்தினம் சுதாரித்து தன்னருகே ஓடும் தண்டவாளத்தில் பார்வையைப் போட்டான்.

கனத்த மோல்டிங் பெட்டிகள் வேகமாய் ஓடி வந்தன. இயந்திரத்தின் அருகே வந்த பெட்டியைத் தடுத்து நிறுத்தினான். பெட்டியின் கனமும், அதன் உலோக உடம்பில் ஒட்டியிருந்த மண் துகள்கள் உண்டாக்கிய சிராய்ப்பும் அவன் கையைச் சிவக்க வைத்தன.

அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று புரியாமல் நிற்கிறபோது அவள் அருகில் வந்து விட்டாள்.

"காலைலேர்ந்து நான் வேலை செய்யறதை எத்தனை வாட்டி பார்த்திருப்பே? செயின் புல்லி ப்ளாக்கைத் தட்டி விடு."

பச்சையாய் இருந்த பொத்தானை அழுத்த, இருப்புச் சங்கிலி சலசலவென கிழிறங்கியது. சங்கிலியின் நுனியில் இருந்த கொக்கியை மோல்டிங் பெட்டியில் மாட்ட முயற்சித்துத் தோற்றான் ரத்தினம்.

"தள்ளிக்க. இன்னும் உனக்கு பழக்கமாகலை."

"இன்னொரு தடவை முயற்சி பண்ணிப் பார்க்கறேன்க்கா."

"அதுக்குள்ளே மெட்டல் வந்துரும். மோல்டிங் ரெடி ஆகலைன்னா சூப்பர்வைசர் கத்துவாரு."

கொக்கியைப் பெட்டியோடு இணைத்தாள். புல்லி ப்ளாக்கில் மாட்டிக் கொண்ட பிணமாய்க் கனக்கும் அந்தப் பெட்டியைப் படு லாகவமாய் ஒரு சுழற்றுச் சுழற்றி, இயந்திரத்தின் படுக்கையில் உட்கார வைத்தாள்.

மேலிருந்த திறப்பை விடுவிடுக்க கறுத்த சிலிகான் மண் - மழையாய்க் கொட்டியது. மோல்டிங் பெட்டிக்குள் விழுந்தது போக ஏராளமாய் காற்றிலும் துகள்களாய்ப் பரவியது.

மூக்கைப் பொத்திக் கொள்ள முயலும் ரத்தினத்தைப் பார்த்துச் சிரித்தாள்.

"மூக்கைப் பொத்திக்கிட்டெல்லாம் ஃபவுண்ட்ரிக்குள்ளே வேலை பார்க்க முடியாது தம்பி. உள்ளே வந்தாலே நீ மண்ணைத்தான் சுவாசிச்சாகணும்."

அவள் சிரிப்புக்கு பயந்து மூக்கருகே கொண்டு போன கையை விலக்கிக் கொண்டான்.

பூஞ்சோலை சுவிட்சைத் தட்ட ஜோல்ட்டிங் இயந்திரம் தடதடவென அதிர்ந்து, பேட்ச் பேட்டனின் வடிவத்தை மண்ணில் அச்சாய்ப் பதிந்து அடைத்தது. அதே பழைய லாகவத்தோடு மோல்டிங் பெட்டியை ட்ராலியில் திரும்ப வைத்து அதன் மேல் ரைசர் பெட்டியைக் கவிழ்த்தாள். அசுர வேகத்தில் பத்துப் பெட்டிகள், மெல்ட்டிங் செக்ஷனை நோக்கி அவைகளைத் தள்ளி விட்டு விட்டு வழியும் வியர்வைக் கோடுகளைத் துடைத்தபடி ரத்தினத்தைப் பார்த்தாள்.

"இந்த வேகம் வேணும் ரத்தினம். இல்லைன்னா வீட்டுக்கு அனுப்பிருவாங்க. பர்னர்ல மெட்டல் ரெடியாகறப்போ மோல்டிங் தரலைன்னா அத்தனை மேலதிகாரிகளும் நம்ம மேல புலிப் பாய்ச்சல் பாய்ஞ்சிருவாங்க."

அவள் சொன்னபோது பெரிய சைரன் ஓசை கேட்டது.

"ஷிஃப்ட் முடிஞ்சது. வா கை கழுவலாம்."

ரத்தினம் அவள் பின்னே நடந்தான். இரும்பை உருக்கும் மின்சார உலையின் அனல் வெப்பத்திலிருந்தும் ஷாப் ஃப்ளோரின் மண் புழுதியிலிருந்தும் மீண்டபோது விடுதலை சந்தோஷம் கிடைத்தது.

குழாயடியில் தண்ணீரில் கையை நனைத்துக்கொண்டே சொன்னான் ரத்தினம்.

"இங்க ஒரு பொம்பளையை எதிர்ப்பார்க்கலைக்கா நான்..."

சோடியம் சிலிகேட்டால் கை அழுக்கைச் சுத்திகரித்தபடியே அவனைப் பார்த்தாள். "ஏன்?"

"ரொம்பக் கஷ்டமான

சத்யராஜ்குமார்

வேலை. ஆம்பளைங்க செய்யற வேலை."

"ஆம்பளைங்க செய்யற வேலை தானே? உன்னால ஏன் செய்ய முடியலை?"

"இன்னிக்கு மொத நாள். போகப் போகப் பழக்கம் ஆனா சரியாப் போயிரும்"

"அதான். பழக்கம்தான். இந்தக் கஷ்டமான வேலையைச் செய்ய நான் பழகிட்டேன். இங்க வேலை பார்க்கற ஆம்பளைங் களைவிட அதிகமா ப்ரொ டக்ஷன் தர்றேன் தெரி யுமா?"

"இங்கே எப்படிக்கா சேர்ந்திங்க?"

"குடும்பச் சூழ் நிலை. சம்பாதிக்க வேண்டிய நிர்ப் பந்தம். நான் வேலை தேடினப்போ இந்த கம்பெனி விளம்பரம் வந்தது. மோல்டர் அசிஸ் டெண்ட் தேவை. தகுதி ப்ளஸ் டூ. முன் அனுபவம் தேவையில்லை. ஒரு வருட பயிற்சிக்குப் பின் பணி நிரந் தரம்னு போட் டிருந்தாங்க. சம் பளம் ஆயிரம் ரூபான்னு போட் டிருந்ததுதான் என் னைத் தூண்டிச்சு. ஏதாவது துணிக் கடையில அலுங்காம துணி கிழிச்சிட்டிருக் கலாம் தான். ஆனா சம் பளம் எவ்வளவு குடுத்துடப் போறாங்க? கொஞ்சம் கஷ் டப்பட்டு உழைச்சா ஆம்பளைக் குச் சமமா சம்பாதிக்கலாமே? முயற்சி பண்ணினேன். மானேஜர் ரொம்ப யோசிச்சாரு. நீ இப்ப சொன்ன மாதிரி இது ஆம்பளைங்க செய்ய வேண்டிய வேலைம்மா. ஆபீசுக்குள்ளே வேலை காலி ஆச்சுன்னா உனக்கு தபால் போட றேன்னு தட்டிக் கழிக்கப் பார்த்தார். நான் விடலை. ஆபீஸ் வேலைக்கு இதே சம்பளம் தருவீங்களா? மாட்டீங்க! ஏன் ஸார் ஆம்பளை,





''அவ் பயில்வானோட சம்சாரம்''

''இருக்கட்டுமே! அதுக்காக சப்பாத்தியை அப்பளக் குழவியால உருட்டாம, கர்லாக் கட்டையாலே உருட்டணுமா?''

-டி.என்.பாலகிருஷ்ணன்

பொம்பளைன்னு பிரிச்சுப் பார்க்கறீங்க. எனக்கு வேலை குடுங்க. எந்த விதத்திலாவது நான் குறைச்சலா இருந்தேன்னா அந்த நிமிஷமே என்னை வீட்டுக்கு அனுப்சிருங்கன்னு சொன்னேன். என் தைரியத்தை மதிச்சு பாதி ___ நம்பிக்கையோடதான் வேலை குடுத்தார். இன்னிக்கு ஒரு பெட்டிகூட உன்னால தனியா அடிக்க முடியலை. ஆனா நான் வெறியோட இல்ல வேலைக்குச் சேர்ந்தேன். மொத நாளே தன்னந்தனியா இருபத்தஞ்சு பெட்டி அடிச்சுக் காட்டினேன்.''

''ஆயிரம்தான் சொல்லுங்க. காலையிலேர்ந்து நீங்க படற கஷ்டத்தைக் கண்ணால பார்த்தவன் நான். காலைல கோத்த மல்லிகைச்சரம் மாதிரி லட்சுமிகரமா வந்திங்க. இந்த முரட்டு வேலையில், ஃபர்னர் வெப்பத்தில் வாடிப் போய் இப்போ கசங்கின சருகு மாதிரி தெரியறீங்க.''

சிரித்தாள்.

''மறுபடி காலைல மல்லிகைச் சரமாத் திருப்பி வருவேன்.''

''அக்கா, சிரிச்சு மழுப்பாதீங்க. உங்க மனசைத் தொட்டுச் சொல்லுங்க. ஒருநாள் ரெண்டு நாள் இல்லை. தினந்தோறும் இந்த வேலையைச் செய்யறது கஷ்டம் இல்லையா?''

பூஞ்சோலை அவனுக்கு பதில் சொல்லாமல் டயம் ஆஃபீஸில் நுழைந்தாள். காஷியர் புன்னகைத்தார். லெட்ஜரை திருப்பி வைத்தார்.

''பூஞ்சோலை, ஸ்டாம்ப் மேல கையெழுத்தைப் போடு.''

தடிமனான கவரை நீட்டினார்.

''பிடித்தம் போக ஆயிரத்து ஐநூறு ரூபா. எண்ணிப் பார்த்துக்க. இந்தப் பையன் யாரு? ஓ புதுசா சேர்ந்த அசிஸ்டண்ட்டா?''

வெளியே வந்தவள் ரத்தினத்திடம் புன்னகைத்தாள்.

''கஷ்டமான்னு கேட்டியே. கஷ்டம்தான். ஆனா இப்படி ஒண்ணாந்தேதி கத்தையா வாங்கறப்போ அத்தனை கஷ்டமும் இலவம் பஞ்சு மாதிரி காத்துல பறந்துடுது.''

கைப்பைக்குள் பணக் கவரைத் திணித்தாள். சாலையைக் கடந்து எதிர்ச்சாரி பஸ் ஸ்டாப்புக்கு வந்தார்கள். கேள்விகளே இல்லாமல் வாயடைத்துப் போயிருந்தான் ரத்தினம்.

''நீ எங்கே போகணும்?''

''காந்தி பார்க்.''

''நான் போகவேண்டிய பஸ் வந்துருச்சு. நாளைக்குப் பார்க்கலாம் ரத்தினம்.''

பூஞ்சோலை ஜனக்கூட்டத்தால் பிதுங்கி வழியும் அந்த டவுன் பஸ்ஸை வேகமாய் நெருங்கினாள். முண்டியடித்து உள்ளே போனாள். கால் வைக்க இடமில்லை. மேல் கம்பியைப் பிடிப்பதற்குள் திணறிப் போனாள். சுற்றிலும் முளைத்த அக்குள்களின் வியர்வை நாற்றம் குடலைப் புரட்டியது. அரவை இயந்திரமாய் அரைத்துப் போடும் இந்த டவுன் பஸ் பிரயாணத்தை விடவா ஃபாக்டரி வேலை கஷ்டமானது?

ஃபாக்டரி ஞாபகம் வந்ததும் வாங்கிய சம்பளத்தின் மேல் நினைப்பு சென்றது. பக்கவாதம் வந்து படுத்த படுக்கையாய்க் கிடக்கும் அப்பா ஞாபகம் நெஞ்சை உறுத்தியது. அண்ணா அவரைக் கவனிப்பதே இல்லை. பணம் இல்லை என்று சாக்குப் போக்குச் சொல்லி, ஒழுங்காய் சிகிச்சை செய்யாமல் தட்டிக் கழிக்கிறான். டவுன் பஸ் தொகை போக இந்த மாதத்து சம்பளம் மொத்தமும் அப்பாவின் மருத்துவச் செலவுக்குத்தான்.

சட்டென இடுப்பில் ஏதோ ஊர்கிற மாதிரி உணர்வு ஏற்பட்டு யோசனைகளிலிருந்து கலைந்தாள். கூட்ட நெருக்கத்தைச் சாதகமாக்கிக் கொண்டு, எந்த ராஸ்கலோ இடுப்பில் சில்மிஷம் செய்கிறான்.

விருட்டென்று திரும்பினாள்.

அருவருப்பான முள்தாடி முகத்தோடு ஓர் ஆசாமி அவளுக்கு நேர் பின்னே நின்றிருந்தான். சாராய நாற்றம் குப்பென்று நாசியில் அறைந்தது. பூஞ்சோலை உஷ்ணப் பார்வையில் அவனை முறைத்ததும் கை பின்வாங்கியது. சாரரய நெடியைத் தாங்க முடியாமல் உடனடியாய்த் திரும்பிக் கொண்டாள். விலகிச் செல்ல வழியில்லாமல் கூட்ட நெரிசல்.

சற்று நேரத்தில் மீண்டும் அவன் கைவரிசை துவங்கியது. இந்த முறை கைப்பை இழுபடத் துவங்க - அவனுடைய நோக்கம் புரிந்தது.

ஆனால் யோசிப்பதற்குள் கைப்பையின் வார் அறுபட்டு, பை அவன் வசம் போயிற்று. பூஞ்சோலைக்கு உடம்பெல்லாம் நிமிஷத்தில் பதறிப் போனது.

ஒரு மாச கடும் உழைப்பு.

''திருடன்... திருடன்....''

அவளுடைய திடீர்க் கத்தலில் கூட்டம்

ஸ்தம்பித்து, பின் சுதாரிப்பதற்குள் பை கை மாறப் போனது.

"டேய்... திருட்டு நாய்களா..." ஆவேசம் வந்தவளாய்க் கத்தினபடி நெரிசலில் திமிறிக் கொண்டு பையைப் பறிக்க முயற்சிப்பவனின் சர்ட் காலரை எட்டிப் பிடித்து விட்டாள்.

"விடுடி பையை. கீசிடுவேன்."

ப்ளேடை நீட்டியவனின் மிரட்டலுக்கு அசராமல் போராடினாள். அவன் ப்ளேடினால் அவள் உடம்பைப் பதம் பார்க்க முயல்கிறபோது, பஸ்ஸுக்குள் இருந்த சில துணிச்சல் இளைஞர்கள் உதவிக்கு வந்தார்கள். ஜேப்படி ஆசாமியின் சக ஆட்கள் நழுவி ஓடினார்கள். பூஞ்சோலை ஒரு கையில் கைப் பையையும் மறு கையில் அவன் சர்ட் காலரையும் விடாமல் பற்றியிருக்கவே அவன் மட்டும் அகப்பட்டான். வினாடிக்குள் துவைத்தெடுக்கப்பட்டான்.

"வண்டியை ஸ்டேஷனுக்கு விடுண்ணே." குரல்கள்.

**கை**ப்பை கிடைத்தபின்னும் பூஞ்சோலைக்கு வெகு நேரம் உடல் நடுக்கம் அடங்கவில்லை.,

குளிர்ந்த நீரை களைப்புத் தீர முகத்தில் வாரி யிறைத்தாள் பூஞ்சோலை. கொடியில் உலர்ந்த ஈரிழைத் துண்டால் முக ஈரத்தை ஒற்றிக் கொண்டு உள்ளே வந்தாள்.

முன்னறையில் பேச்சுக்குரல் கேட்டது. கணவன் வேலு அதற்குள் வந்து விட்டானா? யாருடனோ பேசிக் கொண்டிருந்தான்.

பூஞ்சோலை இன்லாண்ட் லெட்டரை மேஜை மேல் எடுத்து வைத்தாள். அப்பாவுக்கு எழுத வேண்டிய விஷயங்களை மனசுக்குள் ஒருதரம் ஓட விட்டாள். "பணம் இல்லை என்பதற்காக சிகிச்சையைத் தள்ளிப் போட வேண்டாம். உங்கள் மருத்துவச் செலவுக்காக இத்துடன் ரூபாய் ஆயிரத்துக்கான டிராஃப்ட் அனுப்பியுள்ளேன். மேலும்.... '

யோசித்தபடியே பார்வை மர செல்ஃபில் வைத்திருந்த கைப்பையின் மேல் விழுந்த போது- திடுக்கிட்டுப் போனாள்.

கைப்பை ஜிப் திறந்திருந்தது.

அவசரமாய் அதை எடுத்து உள்ளே பார்க்க- சம்பளக் கவர் சருகாய் இளைத்திருந்தது.

திகைப்பும், கோபமும் உக்கிரமாய்த் தாக்கியது. வேகமாய் முன்னறைக்குப் போனாள். வேலு அந்த ஆளிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

"இந்தா உன் பிச்சைக் காசு ஆயிரம் ரூபா. நான் சம்பாதிக்கறேனோ இல்லியோ, கணக்கை கரெக்ட்டா பைசல் பண்ணிட்டேன். பொண்டாட்டியோட சம்பளப் பணத்தை எடுத்து ரொக்கமா உன் கையில கொடுத்திருக்கேன்...நான் மானஸ்தன்டா! இந்தத் தடவை எங்க கட்சி ஜெயிக்காமப் போனா என்ன? அடுத்த எலக்ஷன்ல கண்டிப்பா நாங்கதான் வருவோம் பாரு. ரெண்டாயிரம் ரூவா பந்தயம்."

பூஞ்சோலை அதிர்ச்சியோடு, "அடப்பாவி மனுஷா..." என வீறிட்டபோது - அந்தக் கரை வேட்டி ஆசாமி பணத்தோடு தலைமறைந்திருந்தான்.

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி— 1996 பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள்...

1. வாழும் மனிதருக்கெல்லாம் -திருவருணை சிவசு (சிவ.சுந்தரராஜன்)
2. இப்படியும் ஒருவர் - அ.சி.மணியன்
3. காதல் சக்கரம் -சூர்யலதா (ஆர்.சூர்யநாராயணன்)
4. பலன் நோக்கி... - நா.ஜெயபாலன்
5. பாராட்டு விழா - எஸ்.சங்கர நாராயணன்
6. அழியத் தொடங்கும் அழுத்தமான தடங்கள் - ஜி. சத்யகிரிராஜன்
7. பலி - விஜயசாரதி (பி.ரங்க ஸ்வாமி)
8. நியாயஸ்தன் - கிருஷ்யா (என்.பாஸ்கர்)
9. வெளியே கொஞ்சம் வெளிச்சம் -ஜி.நாராயணன்
10. நம்பிக்கை - சு.கிருஷ்ணமூர்த்தி
11. முகவரி - வேதா கோபாலன்
12. தீயுக்கும் தமிழென்று பேர் - உதாதிபன் (ஆர். பார்த்திபன்)
13. சில முரண்பாடுகள் - (எஸ்.மனோரமா - அறிமுக எழுத்தாளர்)
14. ஒரு விடியலின் வெளிச்சம் - பொன்மலை ஆர்.பிரகாஷ்

# "கிரிக்கெட்டுக்கு மட்டும்தான் முக்கியத்துவமா?"



**கைப்பந்து, கூடைப்பந்து, ஹாக்கி போன்ற விளையாட்டுக்களில் வீரராகத் திகழ்ந்த வை. கோபால்சாமி கேட்கிறார்...**

கிரிக்கெட்டுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம் ஹாக்கி, கால்பந்து போன்றவற்றுக்குக் கொடுப்பதில்லை என்று குற்றம்சாட்டும் நிலைதான் இங்கு இருக்கிறது. இது தவிர, பல சாதனைகள் செய்து தங்கப் பதக்கம் வாங்கும் போது, 'ஓஹோ' என்று உச்சாணிக் கொம்பில் வைத்துப் பாராட்டுவார்கள். தோல்வியைத் தழுவினால் அதளபாதாளத்தில் தள்ளி மண்ணைப் போட்டு மூடுவார்கள் என்பதற்குப் பி.டி. உஷாவே சாட்சி. ஆசிய விளையாட்டுக்களில் பிரகாசித்த உஷா, பின்னர் தோல்வியைத் தழுவி ஊர் திரும்பும் போது முட்டையால் அடித்திருக்கிறார்கள். இது சரியா?

சமீபத்தில் நடந்த ஐரோப்பிய கால்பந்து போட்டியில் ஜெர்மனியோடு சரிக்குச் சரி ஆடியும் இங்கிலாந்து தோற்றது; காரணம் வெற்றி தோல்வியை முடிவு செய்ய கடைசி வாய்ப்பாகக் கொடுக்கப்பட்ட பெனால்டி வாய்ப்பை இங்கிலாந்து வீரர் ஒருவர் நழுவ விட்டதுதான்!

அந்த வீரரோ, 'தம்மால் நாடு தோற்று விட்டதே' என்று நொந்து, வெந்து வேதனையுடன் வீடு திரும்பியிருக்கிறார். வீட்டிற்குச் சென்றவுடன் அவருக்கு ஒரு போன் வருகிறது. பேசியவர் : பிரதமர் ஜான் மேஜர்! "விளையாட்டில் வெற்றி தோல்வி சகஜம்; நீங்கள் நன்கு விளையாடினீர்கள். கவலைப்பட வேண்டாம், அடுத்த முறை பார்த்துக் கொள்ளலாம்" என்கிறார் பிரதமர். பிரதமரின் இந்த வார்த்தைகள் அந்த வீரருக்கு எப்படிப்பட்ட ஆறுதலாக இருந்திருக்கும்! இந்தியாவில் இது போன்ற நிலையை நினைத்துப் பார்க்க முடியுமா?

சைனாவில், பத்துப் பன்னிரண்டு வயதிலேயே சிறுவர், சிறுமிகளின் ஆர்வத்தைக் கணித்து, அவர்களுக்குப் பிடித்தமான விளையாட்டுக்களில் பயிற்சி கொடுக்கிறார்கள். குறிப்பிட்ட எண்ணிக்கை உடைய குழுக்களாகப் பிரித்து, அவர்களை கவனிக்க டாக்டர், மனநல நிபுணர் என்று நியமிக்கிறார்கள். இந்தியாவிலும் குடத்திலிட்ட விளக்காகப் பல திறமைசாலிகள் இருக்கிறார்கள். அவர்கள் திறமைகள் பளிச்சிட, முதலில் அவர்கள் அடையாளம் காணப்பட வேண்டும். இது ஒரு தனிப்பட்ட மனிதரோ, இயக்கமோ செய்யக்கூடிய காரியமல்ல. அரசே முழு மூச்சோடு செய்ய வேண்டும். இல்லையேல் எதிர்கால ஒலிம்பிக்ஸின் பதக்கப் பட்டியலிலும் நமது நாட்டைத் தேட வேண்டியிருக்கும்!

சந்திப்பு : **ப்ரியன்**

வண்ணப்படம் : **பேஜர் கே. மூர்த்தி**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.

"என்ன இருந்தாலும் பத்திரிகையாளனாக இருப்பதில் உள்ள சுகமே அலாதியானதுதான். எத்தனை பெரிய மனிதர்கள், தலைவர்கள், தொழிலதிபர்கள், மேதைகள்! அவ்வளவு பேருடனும் வெகு இயல்பாக அமர்ந்து உரையாட முடிகிற ஆனந்தம் வேறு எந்தத் தொழிலில் கிடைக்கும்? அதனால்தான் அறுபத்திரண்டு ஆண்டுகளாக இப்படி ஒரே துறையில் கொஞ்சம் கூடக் களைப்போ, அயர்வோ ஏற்படாமல் ஈடுபாட்டோடு செயல்பட முடிகிறது" என்கிறார் சேஷன்.

சேஷன்....? 'ஹிந்து' பத்திரிகையின் பொருளாதாரப் பக்கங்களின் முதுகெலும்பு இந்த் அனந்தநாராயண சேஷன். "Leo's Notes" தவறாமல் படிக்கிறவர்களே, இவர்தான் லியோ!

"பாரதம் சுதந்திரம் பெற்ற பிறகு அடைந்துள்ள பொருளாதார வளர்ச்சியைப் பற்றிய குறிப்புக்களைத் தொடர்ந்து எழுத வேண்டும். அந்தப் பகுதிக்கு என்ன பெயர் வைக்கலாம்...? சின்னதாய் ஆறேழு எழுத்துக்களில் வருகிற பெயராய்ச் சொல்லேன்..." கேட்டார் ஹிந்து ஆசிரியர் ஜி. கஸ்தூரி.

சேஷன் சொன்னது அந்தத் தலைப்பு : 'லியோவின் குறிப்புகள்' (Leo's Notes)!

சேஷனின் சிம்மராசியே 'லியோ'!

மதுரையிலிருந்து திருநெல்வேலி பாலாமடையில் குடியேறிய குடும்பம் சேஷனுடையது. திருநெல்வேலி செயின்ட் சேவியரில் இண்டர் மீடியட்டும் திருச்சிராப்பள்ளி செயின்ட் ஜோசப்பில் பொருளியலில் பி.ஏ.வும் முடித்தவர். கல்கத்தாவில், இவருடைய மாமா பி.ஆர். ஸ்ரீநிவாசன் நிர்வாக ஆசிரியராக இருந்த 'இந்தியன் ஃபைனான்ஸ்' வார இதழில் வேலைக்குச் சேர்ந்தார். 1934 முதல் 1950 வரை அங்கு வேலை பார்த்தபோதே ஹிந்துவுடன் தொடர்பு



# இந்தச் சுகம் வேறு எதில் வரும்?

ஏற்பட்டது. 1947 முதல், நிதி நிர்வாகம் பற்றிய கட்டுரைகளை எழுதத் தொடங்கினார்.

தொழிலதிபர் பிர்லா தொடர்பு கொண்டிருந்த "எம்ப்ளாயர்ஸ் அசோசியேஷன்" அமைப்பில் ஏழு ஆண்டுகள் ஆராய்ச்சித் துறை இயக்குநராகவும் பணியாற்றியிருக்கிறார். அப்போதும் ஹிந்துவுக்குக் கட்டுரைகள் எழுதுவதை நிறுத்தவில்லை.

1957 ஆம் ஆண்டு, ஹிந்துவில் முழு நேரத் துணை ஆசிரியர் பதவியில் சேர்ந்த சேஷன். புகழ்பெற்ற 'ஹிந்து தொழில் மதி பீட்டுச் சிறப்பு மலரை' ஆண்டு தோறும் தயாரிப்பது இவர்தாம்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் பார்வைக் கோளாறு ஏற்பட்டு, உதவியாளர் இல்லாமல் எங்கும் செல்லவோ, எதையும் படித்து எழுதவோ முடியாத நிலை ஏற்பட்டது இவருக்கு. ஆனால் என்ன? அற்புதமான நினைவாற்றல் கைவரப் பெற்றிருக்கிறார்! கம்ப்யூட்டர் நினைவாற்றல்! ஆறு உதவியாளர்கள், சுருக்கெழுத்தாளர்களை வைத்துக் கொண்டு ஒரு நாளைக்குப் பன்னிரண்டு மணி நேரம் உழைக்கிறார் இந்த 'இளைஞர்'!

"வாய்ஸ் ஆஃப் அமெரிக்கா, பி.பி.ஸி. செய்தி அறிக்கைகள் என்று பாதி நேரம் விஷயங்களைக் கேட்டு நினைவில் பதிவு செய்து கொள்வதற்கே சரியாய் இருக்கிறது" என்கிறார்.

பொருளாதாரம் சம்பந்தமான ஆய்வு அரங்குகளில் உரையாற்றுவதற்காக முன் கூட்டியே நன்றாகத் தயாரித்துக் கொள்கிறார். அதன்பின் மேடைக்குப் போனால் சாதாரணமாக ஒரு மணி ஒன்றரை மணி உரையாற்றுகிறார்.

வியென்னாவிலிருக்கும் 'ஐக்கிய நாடுகளின் தொழில் வளர்ச்சி அமைப்பு' (United Nations Industrial Development Organisation) ஒவ்வொரு நாட்டுத் தொழில் வளர்ச்சி பற்றியும் ஆராய்ந்து நூல்கள் வெளியிடுவது வழக்கம். பாரதம் பற்றியும் ஒரு தொகுதி வெளியிட்டார்கள். அந்தப் பணியில் உதவுவதற்காக அவர்கள் தேடிப் பிடித்த ஆள் 'லியோ'தான்.

"பொருளாதார வளர்ச்சியில் நாம் எவ்வளவோ முன்னேறி விட்டோம். அதுவும் கடந்த ஐந்து ஆண்டுகளில் - மன்மோகன் சிங் காலத்தில் ஏற்பட்ட அபரிமிதமான

வளர்ச்சி அப்படியே பின்பற்றப்பட்டால் இன்னும் ஒரு பத்தாண்டுகளில் நாம் மிகவும் உயர்வான நிலையை எட்ட முடியும்'' என்று நம்பிக்கையோடு, உறுதியாகச் சொல்கிறார் சேஷன். இந்த் வளர்ச்சிச் சாதனையில் தமிழ் நாடு சமச்சீரான நிலையில் முன்னேறி வருகிறது. தவிர மகாராஷ்டிரா, குஜராத், அரியானா, பஞ்சாப் ஆகியவையும் சிறப்பாக முன்னேறுகின்றன என்றும் வரிசைப் படுத்துகிறார் சேஷன்.

"நிதி ஆதாரங்களைக் குவிப்பது, விரயம் ஏற்படாமல் சேமிப்பது. இதுதான் பொருளாதார பலம். வெளிநாட்டு முதலீடு நிறைய வரவேண்டும். வேளாண்மை வளர்ச்சிக்கு நிறைய முதலீடு வேண்டியிருக்கிறது. அதற்கான வேலைகள் முனைப்போடு மேற்கொள்ளப்பட வேண்டும்'' என்கிறார். தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு அடித்தளமிட்டவர் என்கிற முறையில் ஆர்.வி.யிடம் அதிக ஈடுபாடுள்ளவர். ஆன்மிகத் துறையிலும் சிருங்கேரி ஆசார்யாளின் தீவிரமான பக்தர்.

கல்லூரிப் படிப்பை முடித்த கையோடு, கல்கத்தாவுக்கு அதுவும் பத்திரிகையாளனாக வேலைக்குப் போவதில் இவருடைய தகப்பனாருக்கு விருப்பமில்லை. 'என்ன பிரமாதமாகச் சம்பாதிக்கப் போகிறாய்?' என்று தயங்கினார். "என்னால் டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் என்று படித்து விட்டுச் சாதாரண வேலைக்கெல்லாம் போக முடியாது'' என்று பதில் சொன்னார் சேஷன்.

சேஷனுக்கு அறுபது வயதான போது, அவருடைய சாதனைகளைப் பாராட்டி ஒரு விழா ஏற்பாடு செய்தார்கள். 1973-ல், அப்போதைய அமைச்சர் கே. ராஜாராம் தலைமையில் நடைபெற்ற விழா அது. இதற்காகத் தொழிலதிபர்களும் பங்குச் சந்தை உறுப்பினர்களும் சேர்ந்து என். மகாலிங்கம் தலைமையில் திரட்டிய நிதியில், செலவு போக மீதமிருந்ததை சேஷன் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று அமைப்பாளர்கள் விரும்பினார்கள். ஆனால் சேஷன் அதைத் தாம் ஏற்றுக் கொள்ளாமல், பொது நலனுக்குப் பயன்படும் வகையில், ஓர் அறக் கட்டளையாக நிறுவக் கேட்டுக் கொண்டார். இருபது ஆண்டுகளாக இந்த அறக்கட்டளையிலிருந்து வரும் வருமானத்திலிருந்து சென்னைப் பல்கலைக் கழக மாணவர்கள் நால்வருக்கு உதவித் தொகை வழங்கப்படுகிறது. அதே போல், பத்திரிகைப் பணியில் சிறப்பாகச் செயல்படுவதற்காக டாக்டர் எம்.ஏ.எம். ராமசாமி, தென்னிந்திய சேம்பர் ஆப் காமர்ஸ் ஏற்பாடு செய்த பாராட்டில், இருபதாயிரம் ரூபாய் வழங்கினார். இத்தொகையையும் சேம்பர் ஆப் காமர்ஸ் வழங்குகிற உதவித் தொகை அறக் கட்டளைக்கே தந்து விட்டார் சேஷன்!

சந்திப்பு : **சுப்ரபாலன்**
வண்ணப்படம் : **யோகா**



''என்னதான் டாக்டருக்கு இது முதல் ஆபரேஷன்னாலும் அதுக்காக இப்படியா?''
— டீ.எஸ். திருமலைராயன்



''ஆயிரம் பொய்யைச் சொல்லி ஒரு கல்யாணத்தைப் பண்ணுன்னு சொல்லுவாங்க. நான் ஒரே ஒரு பொய் சொல்லி கல்யாணம் பண்ணிக்கிட்டு மாட்டிக்கிட்டேன்.''
''என்ன பொய் சொன்னே?''
''எனக்குக் கல்யாணம் ஆகலைன்னு!''
— வெ. ராஜாராமன்



● ஆயிரம் எதிரிகளை விட, ஒரு போலி நண்பனால்தான் அதிக தீமை.
— அர்மீனியப் பழமொழி
தொகுப்பு : ஆர். பிரகாசம்

டவுன் பஸ்சுக்காகக் காத்து நின்னுக்கிட்டிருக்கான் அந்த இளைஞன். வர்ற பஸ்செல்லாமே நிக்காமப் போயிடுது. பஸ் ஸ்டாப்புல அவ்வளவு கூட்டம்.

ஒல்லியான இளைஞன் அவன். பேண்ட், முழுக்கைச் சட்டை போட்டு, இன் பண்ணியிருக்கான். கழுத்துல தங்கச் சங்கிலி, கையில பிரீப்கேஸ். அடிக்கு ஒருதரம் மணிக்கட்டைத் திருப்பி, கடிகாரத்தைப் பார்க்கிறான். ''சை'' அவன் உதடு எரிச்சலோட நெளியுது.



கூட்டத்துல நின்னுக்கிட்டிருந்த ஒருத்தன் நகர்ந்து, அவன் முன்னாடி வர்றான். ரெண்டுங்கெட்டான் தோற்றம். முப்பது வயசு இருக்கலாம். தலை கலைஞ்சு, சட்டை கசங்கி பரிதாபமாத் தெரியிறான். கையில கனமான பை வேற.

பையைக் கீழே வெச்சிட்டு, சட்டைப் பையிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்த எடுத்து, இளைஞன் கிட்ட நீட்டறான் அவன்.

"இந்த அட்ரஸ் எங்கிருக்குது சார்?"

"அதோ டிராபிக் போலீஸ் நிக்கிறாரு பாரு, அவருக்கு இடதுபுறமாத் திரும்புற ரோட்ல ஒரு நூறு அடி உள்ள போயி, இடது பக்கம் திரும்பி, வலது பக்கம் முதல் சந்துல...."

''நான் வெளியூர் சார். இடம் கண்டு பிடிக்க முடியாம ரொம்ப சிரமப்பட்டுட்டேன். இந்தப் பையில ரேடியோ, டேப்ரிக்கார்டர், கேமரா இப்படி விலையுள்ள சாமான்கள் நிறைய இருக்கு. தனியாப் போக பயமா இருக்குது சார். கொஞ்சம் வந்து வழிகாமிச்சி விட்டிட்டிங்கன்னா...."

"இல்லப்பா, ரொம்ப அவசரமாப் போகணும் எனக்கு."

"சார், எல்லாம் வெளிநாட்டு அயிட்டம் சார். எனக்குப் பணம் ரொம்பத் தேவை. அதுதான் அந்த ஆளத்தேடிக்கிட்டுப் போறேன். உங்களுக்குக் கூட தேவையின்னா ஏதாவது எடுத்துக்கலாம். பாதி விலை - கால் பங்கு விலையில தர்றேன்.... பிடிச்சத எடுத்துக்குங்க. கொஞ்சம் உதவுங்க சார்... ப்ளீஸ்....."

எல்லோருடைய கண்களும் டெலிவிஷன் பெட்டியிலேயே நிலைகுத்தியிருந்தன.

"டொக், டொக், டொக்"... வீட்டுக் கதவு தட்டப்படுது. யாரும் கவனிக்கல்ல. டீ.வி. பெட்டிக்குள்ள நடக்குற நாடகத்தில் அந்த அளவுக்குக் கரைஞ்சு போய்க் கிடந்தாங்க வீட்டுக்காரங்க.



**பொன்னீலன்**

கதவு தட்டும் ஓசை பலமாக் கேட்குது. எல்லாருக்கும் கேட்குது. ஆனாலும் யார் போயி திறக்குறது? தை ரொம்ப தூரத்துக்கு நகண்டு போயிடுமே! பார்வையால வீட்டுத் தலைவன் தலவியைக் கெஞ்ச, தலைவி மகளைக் கெஞ்ச, மகள் தம்பியைக் கெஞ்ச, தம்பியோ பக்கத்து அறையில் வாரப் பத்திரிகையைப் புரட்டிக்கிட்டிருந்த தாத்தாவைக் கெஞ்சினான்.

''தாத்தா தாத்தா, யாரோ கதவத் தட்டுறா, பாரு.''

மூக்குக் கண்ணாடியச் சரி செய்துட்டு, சிவந்த வழுக்கைத் தலையைத் தூக்கினார் தாத்தா.

"ஏன், நீ திறந்தா என்ன?"

"டீ.வியில கதை போயிடும் தாத்தா."

இந்த உரையாடல் இடஞ்சலக் கூட குடும்பத் தலைவனால சகிச்சுக்க முடியல்ல. கடுகடுப்பா முகத்தைத் திருப்பி, மகனை அதட்



"உங்க கட்சிக் காரங்க நிறையப் பேர் இந்த ஜெயில்ல இருக்கலாம்; அதுக்காக மாநாட்டை இந்த ஜெயில் லயே நடத்தலாம்னு கேட் கிறது சரியில்லே, சொல்லிட் டேன்!"

– சீர்காழி வி.ரேவதி.

டினார். "ஏண்டா இப்படி நாய் மாதிரி கத்துற?"

வேற வழி இல்ல. இனியும் இடைஞ்சல் செய்தா உதை கிடைக்கும். முகத்தைச் சுளிச் சிட்டே எந்திரிச்சிப் போயி கதவைத் திறக் குறான் மகன். கிராமத்து ஆளு ஒருத்தர் ஒரு முகவரியை அவன்கிட்ட பரிதாபமா நீட்டினாரு. "இந்த வீடு எங்க இருக்குது தம்பி?"

"போய்யா, அடுத்த தெருவுல போயி கேளுய்யா!" கடுப்பாகிப் போயி கதவை அறஞ்சி சாத்திட்டு, சோபாவுல பாய்ஞ்சான் தம்பி.

"இது திரைடா, வாழ்க்கை இல்ல. திரையி லேயே மூழ்கிப் போயிடாதே. தன் அறையில இருந்து பேரனுக்குப் புத்தி சொன்னார் தாத்தா.

"திரையும், வாழ்க்கையும் எங்களுக்கு ஒண்ணாயிடுச்சி தாத்தா."

தாத்தா வாயைத் தன் பதிலால் சாத்திட்டு, திரையைத் தேடினான் பேரன். நல்ல காலம், உச்சகட்டம் இன்னும் வரல. இளைஞன் முன் னாடி, கையில சுமையோட அந்த இரண்டுங் கெட்டான் புதியவன் பின்னாடியுமா நடந்துக்கிட்டிருக்காங்க. குறுகலான சந்து. ஆள் நடமாட்டம் இல்லை. திடீர்னு பார்த்தா, அங்கிட்டு இருந்து ரெண்டு பேரு, இங்கிட்டு இருந்து ரெண்டு பேரு இவுங்கள நோக்கி வேகமாக வராங்க. ரெண்டு செகண்டுதான். நாலு பேரும் இவுங்க ரெண்டு பேரையும் சூழ்ந் துட்டாங்க. குள்ளமான மொட்டத் தலையன் தன் இடுப்பிலிருந்த பட்டாக் கத்தியை உருவி அந்த இளைஞனுக்கு நேரே பிடிக்கிறான். "பையில இருக்கிற பணத்தை எடுடா."

இன்னொருத்தன் அவன் கழுத்துச் சங்கிலிக்குக் கையை நீட்டுறான். ஒருத்தன் அவன் சட்டையைக் கிழிச்சி உள் பாக்கெட் டைத் துழாவுறான். இளைஞனை அழைச்சி வந்தானே அவன் இளைஞனோட மூஞ்சி குத்துறான்.

பயங்கரமான சூழ்நிலை. என்ன ப துன்னு புரியாத தவிப்பு. தலைவன், தலை மகள், மகன்... டீ.விப் பெட்டி முன்ன உக்காந்திருக்கிற அத்தனை பேருமே து கிறாங்க, பதைக்கிறாங்க....

திடீர்னு ஒரு உறுமல். மின்னல் வேகத் ஒரு மோட்டார் பைக் அங்க வருது. ெ நாட்டு பனியனும், ஜீன்சும் அணிஞ்ச இ ஞன் பைக்கிலிருந்து நேரே அந்தர் கர மடிச்சி, ரவுடிகளுக்கு மத்தியில குதிக்கிறா

"டிஷ்ம், டிஷ்ம், டிஷ்ம்...."

"அய்யோ, என்னைக் காப்பாத்துங் காப்பாத்துங்க..."

ஜன்னல் வழியாகத் தெருவில இரு பாயுது ஒரு பெண்ணோட அலறல். டீ.வி. ப துக்கிட்டிருந்தவங்களுக்கு ஏக குழப்ப டீ.வியைப் பார்க்கவா, தெருவைப் பார்க்கவ சட்டுன்னு ஒரு தீர்மானத்துக்கு வந்தவ தம்பிதான். எந்திரிச்சி வேகமா ஜன்னலு வந்தான். அவனுக்குத் திருப்தியா இருந்த டீ.வியை விட இந்தக் காட்சி அபாரமா இ தது. ரெண்டு ரவுடிகளுக்கிடையில மாட் கிட்டிருந்தாள் ஓர் இளம் பெண். ஒருத்த அவளைப் பிடிச்சிக்கிட்டிருந்தான். மத்தவ அவளோட நகைகளை உருவிக்கிட்டு இ தான். பயங்கரமா அலறிக்கிட்டு இருந் அவ....

"வாங்க... வாங்க, எல்லாரும் வாங்க அவசரமா மத்தவங்கள அழைச்சான் தம் "எந்த டீ.வியிலயும் பார்க்காத தத்ரூபக் காட் ஓடிவாங்க!"

எல்லாரும் ஜன்னலுக்கு வந்தாங்க. தம சொன்னது நிசந்தான். அறுபடாத அவ தா சங்கிலிய, அவனுக ஒரு பக்கம் இழுக்க, அ மறு பக்கம் இழுக்க, ரொம்ப அருமையா காட்சிதான்!

தாத்தாவால தாங்க முடியல. கத்துறா "தடிமாடு போல பார்த்துக்கிட்டு நிக்கிறீங்கட ஓடிப் போயி காப்பாத்துங்கடா!"

தாத்தாவோட அப்பாவித்தனத்தை பார்த்துச் சிரிச்சாள் பேத்தி.

"பொறு தாத்தா, அவசரப்படாதே. இ வந்துடுவான் கதாநாயகன். எங்கியோ ை சத்தம் கேக்கற மாதிரி இருக்குது பாத்திய வந்துக்கிட்டிருக்கான்... கத்தாதே....."

அத ஆமோதிக்கிற மாதிரி எல்லார தாத்தாவ ஏளனமாய்ப் பார்த்தாங்க.

பிறகு...

கதாநாயகனோட வருகைக்காக ஜன்ன கம்பிகளைப் பிடிச்சிட்டு மொத்தக் குடும்பம் காத்து நிக்குது....

# பணத்திற்கு கைகள் இல்லை. ஆனால் அதையே உங்களுக்காக உழைக்க வைக்கும் எங்கள் கைகள்.

நீங்கள் கடுமையாக உழைத்து சம்பாதித்த ஒவ்வொரு காசையும் உங்களுக்காக, உங்களது வளமான எதிர் காலத்திற்காக உழைக்க வைப்பதையே தனது குறிக்கோளாகக் கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. 20 வருட அனுபவமும், ரூ.100 கோடிக்கு மேல் வியாபாரமும் உடைய 'ஷாஸன் குரூப்' பின் ஒரு அங்கமான 'ஷாஸன் ஃபைனான்ஸ்'ஸில் முதலீடு செய்வதன் மூலம் உங்கள் பணம் நம்பகமான, பாதுகாப்பான கைகளைச் சென்றடைகிறது. ஏனெனில் அனுபவச் செறிவும், இளமையின் துறுதுறுப்பும் உடைய எங்களால் பணத்தைப் பெருக்குவதற்கான வாய்ப்புகளையும், பாதுகாப்பையும் அளிக்க முடியும். இதனை உறுதி செய்யும் வகையில், அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும், உரிய நேரத்தில் வட்டி வழங்குவதிலும் போதிய பாதுகாப்பிற்கு CARE நிறுவனத்தாரின் மதிப்பீடு பெற்றுள்ளது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. சேவையிலாகட்டும், உத்திரவாதத்தை உறுதி செய்வதிலாகட்டும் தனது வாடிக்கையாளர்கள் எப்போதும் சிறந்தவற்றையே பெறுதல் வேண்டும் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'.






Member Shasun Group

## ஷாஸன் ஃபைனான்ஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம் :** 21, கோபால கிருஷ்ணா ரோடு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 8281138
**டெபாசிட் மையம் :** 2, துரைசாமி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 4347128, 4348930, 4348931.
**கோயம்புத்தூர் :** சேரன் டவர்ஸ், 80/27, முதல் மாடி, அரசு கலைக் கல்லூரி ரோடு,
கோயம்புத்தூர் - 641 018. போன் : 201256.
**பாண்டிச்சேரி :** 2வது மாடி, நெ.80, காமராஜ் சாலை, பாண்டிச்சேரி - 605 011.
**திருச்சி :** 5வது மாடி, கணேஷ் காம்ப்ளெக்ஸ், நெ.6-A, லாசன்ஸ் ரோடு,
கண்ட்டோன்மெண்ட், திருச்சி - 620 001.
**மதுரை :** ஜூலைஹா பில்டிங், 26A மேற்கு ஆவணி மூல தெரு, மதுரை – 625 001.
**சேலம் :** 5/271B, ஜங்ஷன் மெயின் ரோடு, முதல் மாடி, ஐந்து ரோடு, சேலம் – 636 004
**கொச்சி :** பிஸினஸ் கம்யூனிகேஷன் சென்டர், சிராமல் சேம்பர்ஸ், குரிஷீபள்ளி ரோடு,
ரவிபுரம், கொச்சி -682 015. போன் : 365492, 369627.
**பெங்களூர் :** பிரனெவ் காம்ப்ளெக்ஸ், நெ.3, 5வது கிராஸ், மல்லேஸ்வரம்,
பெங்களூர் -560 003.

Insight-360

வாடிக்கையாளரின் திருப்தியே எமது முயற்சியின் குறிக்கோள்

சட்டபூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 8.7.96 தேதியிட்ட "நியூஸ் டுடே" மற்றும் "மாலைச் சுடர்" நாளிதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – ரூ. 500 பரிசு பெறும் மூன்றாம் பரிசுக்கதை – 1

# எல்லாம் நீ இருக்கையில்...

சாந்தி குமார்

படபடவென்று ஓரே சீராய், பள்ளிக் குழந்தைகளின் சீருடை அணிவகுப்பாய் எழுந்த கரவொலி அடங்க வெகுநேரந்தான் ஆயிற்று.

மேடையில், பளிச்சென சிரித்தபடி மத்திய இணை அமைச்சரின் கையால் பரிசினை பெற்றுக் கொண்டிருந்தான் மாதவன். பொறியியல் கல்லூரியில் இறுதியாண்டு படிக்கும் அவன், ப்ராஜெக்ட் வொர்க்கிற்காய் செய்த ஒரு சோதனை முயற்சி, சாதனையாய் அமைந்து விட, இதோ இந்த பரிசளிப்பு விழா.

மேடையில் நின்ற மற்றவரிடமிருந்து ஏதோ வகையில் அவன் வித்தியாசப்பட்டு நிற்பதாய்த் தோன்றியது பார்வதிக்கு. அவன் தலையைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் சுழல்வதாய்க் கூட பிரமையேற்பட்டது.

எப்பேர்பட்ட பிள்ளை இவன்! நினைக்க நினைக்க மனம் பெருமையில் பொங்கியது.

மலர்ந்தும் மணக்கவில்லை. சுகமேதும் சுகிக்கவில்லை. பத்து மாதம் சுமக்கவில்லை. வலியில் அரற்றவில்லை. மணியாய் பிள்ளை மடியில்... எத்தனை கொடுத்து வைத்தவள் நான்.... கண் சட்டென்று கலங்கியது. உணர்ச்சிப் பெருக்கில் உதடு நடுங்க, கை ஆதரவு நாடி, நாற்காலியின் முனையை இறுகப் பற்றியது.

'பலவீன மனத்தின் அறிகுறிதான் கண்ணீர்' காலண்டரில் என்றோ, எங்கோ படித்த வாசகம் நினைவில் வந்தது. வாழ்வில் இடிகளையே சந்தித்து மரத்துப் போன மனத்தில் பலவீனமா? ம்... உதடுகள் விரக்தியில் கேலியாய் நெளிய உள் மனம் கேலி செய்தது. "அடி பைத்தியமே, மனம் துக்கத்தில் மட்டுமல்ல, தாங்க முடியாத சந்தோஷத்திலும் கூடத்தான் பலவீனப்படுகிறது. இது உனக்குத் தெரியாதா?"

உண்மைதான். மனம் நெஞ்சு கொள்ளா பூரிப்பிலும் தான் பலவீனப்படுகிறது. தனக்குத் தானே போட்டுக் கொண்ட வேலியை விடுத்து, பகிர்ந்து கொள்ள ஆள் தேடி அலைகிறது.

திடீரென்று எல்லோரும் தன்னையே பார்ப்பது போல் உணர்வு எழ விழித்துக் கொண்டாள். ஆம்... எல்லோரும் இவளையே தான் பார்த்துக் கொண்டிருந்தனர். சூழ்நிலை புரியவே சில நிமிடம் பிடித்தது அவளுக்கு. பரிசு பெற்றதற்கு நன்றி சொல்ல வந்த மாதவன் இவளைப் பற்றி ஏதோ சொல்லியிருப்பான் போலிருக்கிறது. இவள் திடுக்கிட்டு விழிப்பது கண்டு அவன் மீண்டும் அழுத்தமாக, "எல்லாத்துக்கும் காரணம் என் அம்மாதான்." குரல் கரகரக்க அவன் சொல்லி முடிக்க, கூட்டம் புது மரியாதையுடன் இவளைப் பார்த்தது.

சபை மரியாதைக்காக கூச்சத்துடன் அவள் எழுந்து நின்றாள். உணர்ச்சிப்பெருக்கில் கைகளும், கால்களும் படபடவென்று ஆட, உதட்டை

இறுகக் கடித்துக் கொண்டாள். மேடையிலிருந்து இவளையே பார்த்துக் கொண்டிருந்த மாதவன் “ஈஸி... ஈஸி” என்பது போல் கண்களை ஒருகணம் மூடித் திறந்தான்.

அவனை அந்தக் கோலத்தில் பார்த்த பார்வதிக்கு, எப்போதும் தோன்றும் உணர்வு இப்போதும் மின்னலாய் நெஞ்சில் வெட்டியது. இவன் எப்படி.. பேச்சு, செயல், சிந்தனை, நடை, உடை, பாவனை என அனைத்திலும் அச்சு அசல் ரமணனாய்... இது எப்படி சாத்தியம்?

பலமுறை சொல்வதால் பொய்யே, மெய்யாய்த் தோன்றுவது போல், திரும்பத் திரும்ப நினைப்பதால் பிரமையே நிஜமாகி விடுமா என்ன? ஆச்சரியமாகத்தான் இருந்தது.

விழா முடிந்து ஆட்டோவில் வீடு திரும்பும் போது, முகத்தில் ஜில்லென்று வந்து மோதும் எதிர்க்காற்றாய், ரமணனின் ஞாபகம் நெஞ்சில் அலைமோதியது. திருச்சி தெப்பக் குளமும், பர்மா பஜாரும், உச்சிப் பிள்ளையார் கோவிலும், காவிரிப் பாலமும் கண்முன் விரிந்தன.



‘என் பையனுக்கு விஷமம் ஜாஸ்தி...’
‘‘எப்படி சொல்றீங்க?’’
‘‘தேதி காலண்டரை மொத்தமாகக் கிழிச்சிட்டு, ‘காலத்தை வென்றவன் நான்...நான்’னு பாடறான்!’’
– இரா. இரமேஷ்பாபு

ரமணன்... பார்வைக்கு வெகு சாதாரணன். ஆனால் அறிவுஜீவி. எப்போதும் கண்களில் ஒரு கூர்மை மின்னும். கல்லூரிகளுக்கிடையே நடைபெற்ற ஒரு விழாவில்தான் முதல் சந்திப்பு நிகழ்ந்தது. எல்லாப் போட்டிகளிலுமே தன் திறமையைக் காட்டியிருந்தான் அவன்.

குடும்பத்திலேயே, ஏன் பரம்பரையிலேயே முதல் ஆளாய் கல்லூரியில் காலடி எடுத்து வைத்திருக்கும் இவளுக்கு, அவனின் திறமை பிரமிப்பையும், இவளின் பிரமிப்பு அவனுக்கு ஆச்சரியத்தையும் ஏற்படுத்தியது. இவளின் குழந்தைத்தனத்தால் அவனும், அறிவுத் தாகத்தால் இவளும் ஈர்க்கப்பட, நட்பு வெகு வேகமாய் காதலாய்க் கனிந்தது.

அப்போதுதான் அந்தப் பேரிடி விழுந்தது அவள் தலையில்.

கல்லூரித் தேர்விற்கென வெகு வேகமாய் சாலையைக் கடந்த ரமணனின் கண்களில், எதிரே அசுர வடிவில், புயல் வேகத்தில் வந்த லாரியும், குறுக்கே அழுதபடி ஓடிவந்த அம்மணக் குழந்தையும் பட்டுவிட, குழந்தையைக் காப்பாற்றப் போனவன், போயே விட்டான்... கூழாய், குழந்தையை மட்டும் காப்பாற்றி விட்டு!

செய்தி கேட்டதும் துடித்துத்தான் போனாள் பார்வதி. ஓடிப் போய் அவன் மேல் விழுந்து கதறிட துடித்தாள். வேகமாய் வந்தவளின் கால் வாசற்படியில் தடுக்கியது.

விழப் போனவளை தாங்கிப் பிடித்தாள் அக்கா. முன்தலை நரைக்கத் துவங்கிய வயதில் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருப்பவள். இப்போதுதான் புன்னகை இவள் முக விலாசத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறது. அதற்கடுத்தாற்போல், அடுத்த அக்கா, லைன் கிளியராகி விட்ட மகிழ்ச்சியில் நிம்மதிப் பெருமூச்சுடன்.

மைகாட்! என்ன காரியம் செய்ய இருந்தேன் நான்! என் உணர்ச்சிகளுக்கு மட்டும் மதிப்புக் கொடுத்து நான் அங்கு சென்று எங்கள் உறவைச் சொல்லிக் கதறுவதால் என்ன என்ன விளைவுகள் உண்டாகும்?

“ஓ... தங்கச்சியே எவன் பின்னாடியோ சுத்திக்கிட்டு இருந்திருக்காப்பா; அக்காமார் லட்சணமெல்லாம் எப்படியோ? சும்மாவா கல்யாணம் இத்தனை நாள் தள்ளிப் போயிருக்கும்?” அக்காக்கள் கற்பும் இந்த விவஸ்தை கெட்ட உலகத்தால் விமர்சிக்கப்படும். கல்யாணம் கூட நின்று விட வாய்ப்பு இருக்கிறது.

அத்துடன் ரமணனின் பெற்றோருக்கு எங்கள் உறவு இப்போது தெரிந்தால் எவ்வளவு அதிர்ச்சி உண்டாகும்? “ஏதோ பொம்பளை விவகாரம்பா; அதான் லாரி விட்டு அடிச்சுட்டான்” என்று மற்றவர்களால் அவனின் உயிர்த் தியாகம் கூட கொச்சைப்படுத்தப்படும்.

இவை எல்லாம் எதற்கு? எல்லாமாய் இருந்தவனே, இல்லாமல் போன பின், “அவன் என்னுடையவன்தான்” என்று ஊருக்குப் பறையடித்து யாருக்கு என்ன இலாபம்? முதல் நாள் மாலை கூட கண்களில் பளபளப்புடன், எதிர்காலம் பற்றி அத்தனை உற்சாகத்துடன் பேசியவன், இப்போது இல்லை என்றால் நம்ப முடியவில்லையே. ஆனால் நம்ப முடியாதவை எல்லாம் நடக்கக் கூடாது என்று சட்டமா என்ன?

சட்டென்று வீட்டினுள் திரும்பி தனிமையில் தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் பொங்கிப் பொங்கி அழுதாள். கண்களே வற்றிய பின் நிதானமாய்ச் சிந்தித்து, திடமாய் ஒரு

முடிவுக்கு வந்தாள்.

இது என் துக்கம். மற்றவர்க்குத் தெரியாமல் நான் விழுங்கித்தான் ஆக வேண்டும். முடிவை என்னவோ சுலபமாய்த்தான் எடுத்து விட்டாள். செயல்படுத்துவதற்குள் பட்டபாடு... அப்பப்பா...

எங்கும் ரமணனாய், எதிலும் ரமணனாய் அவன் வியாபித்து நிற்க, மூச்சு முட்டி திணறித்தான் போனாள் அவள். மற்றவை எல்லாம் சூன்யமாய்த் தோன்ற, எதிலும் பற்றில்லாமல், ஆனால் எதையும் வெளிக்காட்டாமல், நடைப்பிணமாய் அவள் பட்டபாடு... நரக வேதனைதான்.

இவள் அழுதால் என்ன? சிரித்தால் என்ன? காலம் ஓடாமலா இருக்கிறது? நல்லவேளை, இவள் வாழ்க்கையில் விளையாடிய விதி வேலை விஷயத்தில் விளையாடவில்லை. படித்து முடித்த கையோடு மத்திய அரசில் வேலை கிடைத்தது. அதற்குள் அம்மாவும், அப்பாவும் ஒருவர் பின் ஒருவராய் இறந்து போக, உறவுகள் இவள் திருமண பொறுப்பிற்கு பயந்து விலகிக் கொள்ள, தனிமரமானாள் அவள்.

அப்போதுதான் இவள் வாழ்வின் திருப்பு முனை நாளான அந்த நாள் வந்தது. அன்றும் வழக்கம் போல் அந்த முச்சந்தியில் ஆபீஸ் விட்டு திரும்ப, பஸ்ஸிற்காக நின்று கொண்டிருந்தாள். அப்போதுதான் அந்தச் சம்பவம் இவள் கண் எதிரில் நடந்தது.

எதிரில் ஒரு டீக்கடைக்காரர் தன் கடைக்கென பாலை டெப்போவில் இருந்து வாங்கிக் கொண்டு திரும்ப, தெருநாயின் துரத்தலுக்குப் பயந்து, குறுக்கே ஓடிவந்த ஒரு சிறுவன் அவர் காலைத் தடுக்க, அத்தனை பாலும் அந்தச் சிறுவன் தலையில் கவிழ்ந்தது.

“அனாதைப் பயலே, தினந்தினம் ஒன்னோட ரோதனையாய்ப் போச்சு; காலைச் சுத்தின பாம்பாட்டம் ஏண்டா இப்படித் தொல்லை பண்றே! அப்பன், ஆத்தாளை முழுங்கின மாதிரி, அத்தினி பாலையும் முழுங்கிட்டியேடா பாவி! போய்... போய்த் தொலைய வேண்டியதுதானே, எங்கியாச்சும். சாவு வந்து உன்னை வாரிக்கிட்டு போக மாட்டேங்குதே.”

பால், பாழாய்ப் போன பதற்றத்தில், வார்த்தைகளை விஷமாய்க் கொட்டியபடி நையப் புடைக்க, உள்ளிருந்து பத்ரகாளி போல் வெளிவந்தாள் அவன் மனைவி.

“சாவா. இந்த சைத்தானுக்கா, இது போற கட்டைன்னா, அன்னிக்கே அந்த லாரிக்கடியில போயிருக்கணுமே; ராசாக் கணக்குல இருந்த அய்யர் வீட்டுப் புள்ளைய முழுங்கிட்டு இது நிக்குதே திம்முன்னு. இந்தச் சனியனை காப்பாத்தப் போய்த்தானே அந்த புள்ள உயிரை விட்டுச்சு. பாவம் கரீக்டா அதோ அந்த சைக்கிள் கடையாண்டதான். ஒரு மூணு, நாலு வருஷம் இருக்குமா? இந்நேரம் அந்தப் புள்ள இருந்திச்சுன்னா கண்ணாலம், காட்சின்னு கட்டிக்கிட்டு சொகமா இருந்திருக்கும். தினமும் இந்த வழியாத்தான் காலேஜிக்கு போகும், வரும். நல்ல புள்ள; இன்னமும் என் கண்ணுலேயே நிக்குதே; இது கிடந்து என்னத்தை சாதிக்கப் போவுதுன்னு இதைக் காப்பாத்தப் போனிச்சோ?” ஆற்றாமையுடனும், கோபத்துடனும் சொல்லியவாறு அந்தச் சிறுவனை எரிச்சலுடன் முடியைப் பிடித்து உலுக்கியவாறு கீழே தள்ளினாள்.

அதுவரை சலனமின்றிப் பார்த்துக் கொண்டிருந்த பார்வதி, விதிர்விதிர்த்துத் திரும்பினாள். என் ரமணனுக்கு எமனாய் வந்தவன் இவன்தானா?

என் ரமணனை என்னிடமிருந்து மொத்தமாய்ப் பிரித்தது இந்தக் குட்டிப் பிசாசுதானா?

அடிவயிற்றிலிருந்து புறப்பட்ட ஆங்காரத்துடன், ஆவேசத்துடன் அந்தச் சிறுவனைப் பார்த்தாள் பார்வதி.

தலையிலிருந்து கால்வரை பால் வடிய, கீழே விழுந்த அதிர்ச்சியில் அம்மா, ‘அம்மா’ வென அரற்றியபடி, இவளையே பார்த்துக் கொண்டிருந்தான் அந்தச் சிறுவன்.

பஸ் ஸ்டாப்பில் அத்தனை பேர் இருக்க, தன்னை மட்டும் ஏன் அப்படிப் பார்க்கிறான்? ஏன் தன்னைப் பார்த்து ‘அம்மா, அம்மா’ என அலறுகிறான்? புரியவில்லை பார்வதிக்கு.

அவன் கண்கள்... கண்களா அவை? இல்லை... இல்லை... ரமணனின் கண்களாய்த் தோன்றுகிறதே; ஏன் அந்தக் கண்கள் தன்னையே யாசிப்பது போல் பார்க்க வேண்டும்?

ஒன்றும் புரியாமல், வியர்வை ஆறாகப்



''இவ்வளவு உசரமான கட்டடத்துல ஃபிளாட் வாங் காதீங்கன்னு சொன்னேன், கேட்டீங்களா?''

''ஏன், என்ன ஆச்சு?''

''எப்பப்பாரு தேவர்கள் ஸ்டார் டீ.வி. பார்க்க நம்ம வீட்டுக்கு வந்துடறாங்க!''

—பார்கவி

21st Century's

# "Family-Deposit"



எக்காலத்திற்கும் உற்ற துணை




A happy family, is a 21st Century Fami



"ஆட்சி மாறினதிலிருந்து தினம் காலை பேப்பர் படிக்கிறச்சே இவருக்கு ஒடுக்கு ஜுரம் வந்துடுது டாக்டர்!"

"இது பயப்படற அளவுக்கு ஒண்ணுமில்லைம்மா.. ஜெயில் ஃபீவர்தான். சரியாப் போயிடும்!"

- பிரசன்னகுமார்

பெருக, ஒரு மாதிரியாக படபடவென்று வந்தது பார்வதிக்கு. கிடைத்த பஸ்ஸில் ஏறி வீட்டிற்கு வந்தும் அந்தப் பார்வை தன்னைத் துரத்துவதை உணர்ந்தாள்.

அன்று இரவு. அரைகுறை உறக்கத்தில், கனவில் வழக்கம் போல் ரமணன், ராஜநடை போட்டு வர, ஆனால் அவன் முகத்தில் ஏன் இந்தக் கலக்கம்? ஏன் எதையோ கண்டு, தன்னுயிரே போவது போல இப்படிப் பரிதவிக்கிறான்? அவன் கண்கள் சென்ற திசையில் இவளும் பார்க்க முற்பட, ஓர் உருவம், தீ நாக்குகளுக்கு இடையில் மாட்டிக் கொண்டு சித்திரவதைப்படுவதாய்த் தோன்ற, யாராய் இருக்கும்? இவள் யோசித்துக் கொண்டிருக்கும் போதே, அந்த உருவம் பெரிதாகி, அடக் கடவுளே.. இது அந்த அம்மண சிறுவனாயிற்றே...

சட்டென சிலிர்த்தது பார்வதிக்கு. கனவின் பொருள் புரிந்தும், புரியாமல் இருப்பது போல் ஒரு மயக்கம்.

எத்தனையோ நாள் யோசித்திருக்கிறாள் பார்வதி. ரமணன் கண்ட கனவுகளின் கதி என்ன? தான் இப்போது நடைப்பிணமாய் வாழும் வாழ்க்கையின் பொருள் என்ன? அல்லது ரமணனின் உயிர்த் தியாகத்தின் மதிப்புதான் என்ன? இப்போது அவளின் அத்தனை கேள்விகளுக்கும் ஒருசேர கனவின் மூலம் விடை கிடைத்தது போல் இருந்தது.

மைகாட்! இத்தனை நாள் இது ஏன் தோன்றாமல் போயிற்று எனக்கு? என் ரமணன் என் இழப்பு என்று இதுவரை என்னைப் பற்றியே கழிவிரக்கத்தில் யோசித்திருக்கிறேனே தவிர, இப்படி ஒரு கோணத்தில் பார்க்க, ஏன் தோன்றவில்லை எனக்கு?

உயிர் கொடுத்தவன் தந்தையென்றால், அந்த அம்மணச் சிறுவனுக்கு உயிர் கொடு... வன், அதுவும் தன்னுயிர் கொடுத்து அவனு... உயிர் காப்பாற்றிக் கொடுத்தவன் ரமண... யிற்றே. அப்படியென்றால் ரமணன் தா... அவனுக்குத் தந்தை. ரமணன் தந்... யென்றால் நான்... நான்தானே அவனுக்... தாய்.

விடியும் வரை கூட இருப்புக் கொ... வில்லை பார்வதிக்கு. தாய்மை உணர்ச்சி... உடல் விம்மியது. தலையில் இருந்து கால் வ... பால் வடிய அழுதவாறு அந்தச் சிறுவன் நி... கோலமே கண்முன் நிறைந்தது.

அதன்பின் காரியங்கள் மளமளவெ... நடந்தன. விடிந்ததும் முதல் வேலைய... அவனைத் தன்னுடன் அழைத்துக் கொ... டாள்.

உறவுகள், இவள் தனிமரமாய் நிற்ப... விடவும், தன் பிள்ளையைத் தத்தெடுக்காம... ஏதோ ஓர் அனாதை குழந்தையைக் தத்தெ... ததைக் கண்டு குதறின. இல்லாத, பொல்ல... கதை கட்டி, ஊரெங்கும் பரப்பின.

இவள் சத்தம் போடாமல், வடக்கே ம... றல் வாங்கினாள். மறந்தும் ஊர்ப் பக்... திரும்புவதில்லை என்ற முடிவுடன் புறப்... டாள்.

டெல்லியில் இவள் திருமதி பார்... ரமணனானாள். ரமணனுக்கு மிகவும் பிடி... பெயரான மாதவனை குழந்தைக்குப் பெய... டாள். மாதவனின் பள்ளி பதிவேட்டில் தந்... பெயரில் 'லேட் ரமணன்' எனப் பதிவான...

மாதவன் கற்பூர புத்தியுடன் இருந்தா... ரமணனே அரூப சொரூபத்தில் மாதவ... உடலில் புகுந்தது போல் அத்தனை பு... சாலியாய் இருந்தான். அவனைப் பொ... யலில் சேர்க்க திருச்சிக்குக் குடிபெயர்ந்த... வீடு முழுவதும் அவன் வாங்கிய பரிசுகள... நிரம்பி வழிந்தது. எல்லாவற்றிற்கும் சிகர... இன்று பெற்ற, "இன்றைய வருடத்தின் சி... இளம் விஞ்ஞானி" விருது.

**வீ**ட்டை அடைந்ததும் பூஜையறைக்... நுழைந்தாள் பார்வதி. தன்னிடமிருந்த சி... போட்டோவை பெரிதாக்கி, ரமணனை ... அறையின் மையமாக்கி இருந்தாள் அவ...

"எனக்கு எல்லாமாய் இருப்பவனே, இ... பார்... உன் பிள்ளையின் வெற்றியைப் ... கண்கள் பொங்க மனத்திற்குள் பேசினா...

"அம்மா, கொஞ்சம் அப்பா படத்தி... பக்கத்திலே நில்லுங்க. சேர்த்து ஆசீர்வா... வாங்கிக்கிறேன்" என்று மாதவன் சொ... அவளை ரமணன் படத்திற்கு அருகில் ... கவைத்து நமஸ்கரிக்க...

ரமணன் அருகில் மணக்கோலத்தில் நி... போல் உடல் சிலிர்த்தது பார்வதிக்கு.




வழக்குகளில் திருப்பங்களை ஏற்படுத்தியிருக்கிறது. அதே அதிகாரத்தைப் பயன்படுத்தி, ஆயிர மாண்டுகளுக்கும் மேலாக தமிழக மக்கள் அனுபவித்து வரும் ஆயக்கட்டு உரிமைகள் மதிக்கப்பட வேண்டும் என்று உச்சநீதி மன்றம் நேரடி உத்தரவையே பிறப்பிக்கலாம்.

ஆனால், காவிரி நடுவர் மன்றத் தலைவரின் திடீர் ராஜினாமாவுக்கான காரணம் என்ன? அவருக்குப் பதிலாகப் புதிய தலைவர் ஏன் இன்னும் நியமிக்கப்படவில்லை? என்ற கேள்விகளைக் கூட உச்சநீதி மன்றம் எழுப்பவில்லை. வெறுமே 'பேச்சு வார்த்தை நடத்துங்கள்' என்று சொல்லி தண்டச் செலவுக்குத்தான் வழிவகுத்திருக்கிறது.

பருவமழை கணிசமாகப் பெய்து, தண்ணீர் அதிகமாக உள்ள நிலையில், பிரச்னையே எழப்போவதில்லை. 'பகிர்வு' என்பதே, குறைவாக நீர் உள்ள காலத்திலும் தமிழகத்துக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தியதுதான். எனவே 'காவிரியில் தண்ணீர் இல்லை. இருந்தால்தானே கொடுப்போம்' என்ற கர்நாடகத்தின் வாதம் எந்தக் கட்டத்திலும் ஏற்கக்கூடியது இல்லை.

காவிரியையே முழுதும் நம்பாமல், தமிழகத்தின் - குறிப்பாக தஞ்சைப் பகுதியின் - சாகுபடி முறைகளை மாற்றி அமைத்து விடலாமே என்பது ஒரு வாதம்.

இத்தகைய நீர் நிர்வாகத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்தும் அறிவும் திறனும் நமது விவசாயி களுக்கு இருக்கிறது. அதன் மூலம் தண்ணீர் தேவை சற்று குறையலாம். அந்நிலையிலும் கர்நாடகம் காவிரி நீரை ஓரளவு குறைத்து அனுப்பலாமேயொழிய ஒட்டுமொத்தமாக நமது உரிமையை மறுக்கலாகாது.

எனவே, தொன்றுதொட்டு அனுபவித்து வரும் ஆயக்கட்டு உரிமைகளுக்காகப் போராடுவதும் அதைச் சட்டபூர்வமாகப் பெற்றுத்தர உச்சநீதி மன்றத்தை வற்புறுத்துவதும் தமிழக முதல்வரின் முக்கியமான கடமையாகிறது. கூட்டணி கண்ணோட்டங்களை மறந்து, இந்த விஷயத்தில் கருணாநிதி கண்டிப்புக் காட்டியாக வேண்டும்.



* வைதேகி

* ஷ்ரேயா





* ரங்கநாதன்

* இந்துமதி





* உஷா நந்தகுமார்

* சங்கர்





* அகிலா

# ஐம்பதாண்டு சுதந்தரம்;

* சாரதி

* கார்த்திக்





* இக்பால்

* விநாயகன்







* கல்யாணி

* கிருஷ்ணம்மாள்



* சிவகாமி



# ஒரு குவிஸ்!

* சங்கீதா



* மனோகர்





* பாஸ்கரன்

* ஹேமானந்த்



* முரளீதரன்



* ராமகிருஷ்ணன்



* [illegible]





* விட்டல்



* சித்ரா



* மணிகண்ட பிரசாத்

* முத்து கிருஷ்ணன்



* பாஸ்கர்





நம் நாட்டுக்கு சுதந்தரம் கிடைத்து 49 ஆண்டுகள் முடிந்து விட்டன. ஐம்பதாமாண்டு ஆரம்பிக்கும் இந்த நேரத்தில், சுதந்தரம் தொடர்பாகத் தாங்கள் கண்ட, கேட்ட அல்லது படித்த விஷயங்களை மக்கள் எந்த அளவு நினைவில் பதிய வைத்துக் கொண்டிருக்கிறார்கள்? அறிந்து கொள்ள ஐம்பது பேரைத் தொடர்பு கொண்டு ஆளுக்கொரு கேள்வி கேட்டோம். சிலர் டக்கென்று பதிலளித்தனர். வேறு சிலருக்கு க்ளூக்கள் தேவைப்பட்டன. இன்னும் சிலருக்கு நாம் கேட்ட

* ராஜலட்சுமி



* கௌசல்யா



* சாந்தி



* கணேஷ்



* குணசேகரன்



* சந்திரபானி



* நாகராஜன்



* சந்திரகுமார்



* துரைராஜன்



* திருமலை



* பாலகோபால்



* தங்கராஜ்



* உஷா



* ரவிச்சந்திரன்



* லலிதா



* சதீஷ்



* பார்வதி



* சுமித்ரா



* தீபா





* விநாயக மூர்த்தி

* வைதேகி முரளி





* பவானி



* ஸ்ரீனிவாசன்

*முதல் கேள்விக்குப் பதில் தெரியாததால் வேறொரு கேள்வியைக் கேட்க வேண்டி வந்தது...*

1) ● சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமர்...
**வைதேகி:** நேருதான்.
● கேள்வியை முடிக்கலையே! சுதந்தர இந்தியாவின் முதல் பிரதமர் ஜவாஹர்லால் நேருன்றது நமக்குத் தெரியும். முதல் துணைப் பிரதமர் யார்? மிகவும் பிரபலமான சுதந்தரப் போராட்ட வீரர் இவர்... ஓ.கே. இதோ இன்னொரு க்ளு. அவரை 'இரும்பு மனிதர்னு' சொல்வதுண்டு.
**வைதேகி:** வல்லபாய் பட்டேல்


* காந்தி


* நேரு

2) ● நவம்பர் 14ஆம் தேதியை யாருடைய நினைவாகக் கொண்டாடுகிறோம்?
**ஷ்ரேயா:** சில்ரன்ஸ் டே.
● அதில்லே. எந்த தேசியத் தலைவரின் பிறந்த நாள் அது?
**ஷ்ரேயா:** ஜவாஹர்லால்நேரு.

3) ● முதலாம் சுதந்திரப் போரைத் தலைமை ஏற்று நடத்தியவர் முகலாய பரம்பரையின் கடைசி சக்கரவர்த்தியும் கூட. அவர் யார்?
**ரங்கநாதன்:** பகதூர் ஷா ஜபர்.

4) ● குஜராத்தில் காந்திஜியின் ஆசிரமம் எந்த நதியின் கரையில் அமைந்துள்ளது?
**இந்துமதி:** சரயு நதி... சரியில்லேன்ற மாதிரி பார்க்கறீங்களே. ஓ, சரயு அயோத்தியிலே ஓடுதில்லே? இப்போ ஞாபகம் வந்துடுத்து. குஜராத்தில் சபர்மதி நதிக்கரையிலேதான் காந்திஜியின் ஆசிரமம் இருக்குது.

5) ● சுதந்திரப் போராட்ட காலத்தில் காங்கிரஸின் தீவிரவாத பிரிவைச் சேர்ந்தவர்களில் மூன்று பேரை 'லால், பால், பால்' என்று அழைத்தார்கள். அவர்கள் யார்?
**உஷா நந்தகுமார்:** லாலா லஜபதி ராய், பிபின் சந்திரபால், பாலகங்காதர திலகர் ஆகியோர்தான் அவர்கள்.

6)● நம் தேசியக் கொடியின் நடுவில் இப்போது சக்கரம் இருக்கிறது. அதற்கு முன் இதன் இடத்தில் என்ன இருந்தது?
**சங்கர்:** கை ராட்டினம் இருந்தது. காங்கிரஸ் கட்சியின் கொடியிலும் இது இருந்ததால், இது தேசிய கொடியில் அசோக சக்கரமாக மாற்றப்பட்டது.


* அன்னி பெசண்ட்

7) ● தென்னிந்தியாவைச் சேர்ந்த இந்த சுதந்தர போராட்ட வீரர். இலக்கிய அறிவுக்கும் மீசைக்கும் பேர் போனவர். அவர் யார்?
**சாரதி:** ம.பொ.சி. தானுங்களே. முன்னேயெல்லாம் தேனாம்பேட்டை பகுதியெல்லாம் ஏதோ பாலைவனம் மாதிரி இருக்கும். அப்போ சுதந்திரப் போராட்ட மீட்டிங்குகளுக்கு நான் விடாமல் போவேன். ம.பொ.சி.யின் பேச்சு என்றால் நிறையக் கூட்டம் வரும்.

8) ● சில சுதந்தரப் போராட்ட வீரர்களின் வாழ்க்கை வரலாறு திரைப்படங்கள் ஆனதுண்டு. அப்படி ஒரு படத்தைக் குறிப்பிடுங்களேன்.
**இக்பால்:** ஜனங்களை அடிமையாக்குவதே சினிமாதானே? நான் சினிமா தியேட்டர் பக்கமே தலைவச்சிப் படுத்ததில்லே.

9) ● 'கப்பலோட்டிய தமிழன்' படத்தில் ஒரு சிறந்த சுதந்தர தியாகியின் பாத்திரத்தை டி.கே. சண்முகம் ஏற்று நடித்திருந்தார். அந்த பாத்திரம் எது?
**விநாயகன்:** சுப்ரமண்ய சிவா.

10) ● சுதந்திர இந்தியாவின் முதல் ஜனாதிபதி மற்றும் உதவி ஜனாதிபதி யார்?
**கார்த்திக்:** முதல் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத். உதவி ஜனாதிபதி... டக்குனு நினைவுக்கு வரமாட்டேங்குது.
(சுதந்திர இந்தியாவின் முதல் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதா கிருஷ்ணன். -நாம் சொல்லுகிறோம்!)

11) ● வழக்கறிஞர் தொழில் செய்ய வெளிநாடு ஒன்றுக்குச் சென்றிருந்த மகாத்மா காந்தி, அங்கு இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டுதான், போராட்ட களத்தில் குதித்தார். அந்த நாடு எது? சரி, இதோ ஒரு க்ளு. நெல்சன் மண்டேலா இப்போது அந்த நாட்டின் தலைவராக இருக்கிறார்.
**அகிலா:** தென் ஆப்பிரிக்கா.

* திலகர்



12) ● 'திருப்பூர்'ன்ற ஊரின் பெயரை சொன்னதுமே எந்த சுதந்தர வீரரின் நினைவு வருகிறது?

• சுபாஷ் சந்திரபோஸ்

**கிருஷ்ணம்மாள்:** கொடி காத்த 'குமரன்' தானே. மறக்க முடியுமா?

13) ● 'இந்திய தேசிய ராணுவம்'ங்கிற அமைப்பை உருவாக்கியவர் யார்?
**கல்யாணி:** ஒரு சந்தேகம். அவர் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் தானே?
(சந்தேகம் இல்லாமல் அவர்தான்)

14) ● சுதந்தரப் போராட்ட உணர்வுகளை, பொதுக் கூட்டங்களில் வெளிப்படுத்தத் தடை போட்டதால் இரண்டு விழாக்களை கேடயமாக்கிக் கொண்டு, அந்த விசேஷங்களில் ஊர்வலங்களின் போது சுதந்திரக் கருத்துக்களைப் பரப்பினார் பால கங்காதர திலகர். அந்த இரு விழாக்களும் எவை?
**சிவகாமி:** மராத்திய மன்னன் சிவாஜியின் பிறந்த நாள் விழா. இன்னொன்று கோகுலாஷ்டமி.
(விடையின் முதல் பாதி சரி. மற்றொரு திருநாள் விநாயக சதுர்த்தி.)

15) ● ஜாலியன் வாலாபாக் படுகொலைக்குக் காரணமான பிரிட்டிஷ் ராணுவ தளபதியின் பெயர் என்ன?
**சங்கீதா:** ஜெனரல் டயர்.

16) ● சென்னையில் பிரபல சுதந்தரப் போராட்டத் தலைவரின் பெயரைக் கொண்ட ஒரு தெருவில், மூன்று தலைவர்களின் நினைவகங்கள் இருக்கின்றன. அது எந்தத் தெரு? அந்த நினைவகங்கள் யாருடையவை?
**மனோகர்:** கிண்டி பகுதியில் இருக்கும் சர்தார் படேல் சாலையில் தான் காந்திஜி, ராஜாஜி, காமராஜ் ஆகிய மூன்று பேரின் நினைவகங்கள் இருக்கின்றன.

17) ● சுதந்தர இந்தியாவின் முதல் சட்ட அமைச்சர் யார்?
**பாஸ்கரன்:** பிற்பட்டவர்களுக்காகப் பாடுபட்டவர். கண்ணாடி கூட போட்டுக்கிட்டு இருப்பார். அரசியல் அமைப்பு சட்டத்தை உருவாக்கக் கூட ரொம்ப உதவினார். டக்குனு பேரு வரமாட்டேங்குதே ஊங், ஞாபகம் வந்திருச்சி, டாக்டர் அம்பேத்கர்தான் அவர்.

18) ● நமது அரசியல் அமைப்புச் சட்டம் எந்த வருடத்தில் இருந்து நடைமுறைக்கு வந்தது?
**ஹேமானந்த்:** ஜனவரி 26ஆம் தேதி. வருஷம் தான் 1948ஆ அல்லது 1950ஆன்னு உடனடியா சொல்லத் தெரியல்லே.
(சரியான விடை - 26.01.1950)

19) ● நவீன இந்தியாவின் தந்தைன்னு அழைக்கப்படுபவர் இவர். பெர்ஷியன், ஆங்கிலம், சமஸ்கிருதம் மூன்றிலும் புலமை மிக்கவர். அராபிக், லத்தின், கிரேக்கம் ஆகிய மொழிகள் கூட தெரிந்த, பிரம்மோ சமாஜத்தின் நிறுவனரான இவர் யார்?
**முரளீதரன்:** ராஜா ராம் மோகன் ராய் தானே. உங்கள் கேள்வியின் பிரம்மோ சமாஜம் பகுதி தான் பதில் சொல்ல உதவியா இருந்தது.

20) ● முஸ்லிம்களுக்குத் தனி நாடு வேண்டும் என்ற முடிவில் தீர்மானமாக இருந்த அன்றைய முஸ்லிம் லீகின் தலைவராக இருந்தவர் யார்?
**ராமகிருஷ்ணன்:** முகமத் அலி ஜின்னா.

• படேல்



21) ● பாரதியார் பாடல்கள் மட்டுமே அமைந்த, சுதந்தரத்துக்கு முன் வெளி வந்த தமிழ்த் திரைப்படம் எது?
**விட்டல்:** நாம் இருவர். சுதந்தரம் கிடைத்த அன்று தஞ்சாவூரில் உள்ள ஐயம்பேட்டையில் இருந்தேன். எல்லா மூலைகளிலும் இந்த படப் பாடல்கள்தான். தமிழகத்தில் அந்த வாரத்தில் 'நாம் இருவர்' இசைத் தட்டுக்கள் விற்பனையில் சாதனை படைத்தன.



• ம.பொ.சி

22) ● 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோம் என்று' என்று பாரதியார் பாட்டு இயற்றியிருக்கிறார். நாடு சுதந்தரம் அடைந்து எவ்வளவு வருடங்கள் ஆனபின் அவர் இறந்தார்?
**சித்ரா:** இளம் வயதிலேயே யானை மிதித்ததன் காரணமாக அவர் இறந்தது தெரியும். வெயிட். நீங்கள் கேட்டது 'ட்ரிக்கி கொஸ்சன்'. சுதந்தரத்துக்கு முன்னாலேயே பாரதியார் இறந்துட்டதா கேள்விப்பட்டிருக்கேன்...
(1921-ல் காலமானார் பாரதியார்)

23) ● நம் தேசிய கொடியில் உள்ள அசோக சக்கரத்தின் ஆரங்களின் எண்ணிக்கை எவ்வளவு?
**ராஜலட்சுமி:** 24.

24) ● 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா'ன்ற நூல் இந்தியாவின் கடந்த கால சரித்திரத்தை வெவ்வேறு கட்டங்களாக விளக்குகிறது. இதன்



''அந்த ஸ்கூல் உதவி ஆசிரியர் ஒருவர் இங்க் பாட்டிலை தன் தலையில் கவிழ்த்துக் கிட்டார்! ஏன் தெரியுமா?''

''ஏன்?''

''தலை'மை' ஆசிரியராகணும்னு அவருக்கு ஆசை! அதனால்தான்!''

– உ. ராஜாஜி

நூல் ஆசிரியர் யார் தெரியுமா?
**பாஸ்கர்:** ஜவாஹர்லால் நேரு.

25) ● *காந்திஜியின் ஒரு திட்டத்தை 1920ல் நாக்பூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாடு ஒத்துக் கொண்டது. அந்த பிரபல திட்டம் எது?*
**விநாயக மூர்த்தி:** பிரிட்டிஷாருக்கு எதிரான 'ஒத்துழையாமை இயக்கம்.'

26) ● *சேலம் என்றவுடனேயே நினைவுக்கு வரும் சுதந்தரப் போராட்டத் தலைவர் யார்?*
**குணசேகரன்:** சுதந்தரா கட்சியின் தலைவரும் அவர்தானே? 'சோக்கிரகர்' (சாக்ரடீஸ்) என்ற நூலில் ராஜாஜியுடைய மொழிபெயர்ப்புத் திறமையை நான் நிறைய ரசித்திருக்கிறேன்.

27) ● *நமது தேசியப் பாடலை (தேசிய கீதமல்ல; National song) இயற்றியது யார்?*
**கௌசல்யா:** தேசிய கீதமான 'ஜன கன மண'வை எழுதியவர் ரபீந்திரநாத் தாகூர். தேசிய பாடலான 'வந்தே மாதரத்தை' எழுதியவர் பங்கிம் சந்திர சட்டர்ஜி.

28) ● *'ஜெய் ஹிந்த்' என்ற எழுச்சி வாசகத்தை பிரபலப்படுத்தியது யார்?*
**சந்திரபானி:** சுபாஷ் சந்திர போஸ். எனக்கு இந்த கேள்வி வந்தது. ஒரு இனிமையான ஆச்சர்யம். அவர் உருவாக்கின 'பால சேனா'ங்கிற ஸ்கௌட்ஸ் இயக்கத்திலே சின்ன வயசில நானும் இருந்திருக்கேன்.

29) ● *1952ம் ஆண்டு பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்து நாம் மீட்ட பகுதிகள் என்னென்ன?*
**அபிதா பாபுராவ்:** பாண்டிச்சேரி, மாஹே, யானம்.
(காரைக்காலும் இந்த பட்டியலில் உண்டு)

30) ● *பிரபலமான தண்டி யாத்திரை எங்கே தொடங்கி எங்கே முடிந்தது?*
**துரைராஜன்:** தண்டியில் முடிஞ்சதுன்றது மட்டும்தான் நினைவுக்கு வருது.
(தொடக்கம்: அஹமதாபாத்).

31) ● *வ.உ.சி. பிறந்தது எந்த ஊரில்?*
**திருமலைராமானுஜதாஸன்:** பாளையங்கோட்டை சிறையிலே அவர் செக்கிழுத்தது தெரியும். அவர் பிறந்த ஊர். கண்டு பிடிச்சிட்டேன். ஓட்டப்பிடாரம்.

32) ● *சுதந்திர இந்தியாவின் முதல் கல்வி அமைச்சர் யார்?*
**உஷா:** ஒரு க்ளு கொடுங்களேன்.
● அவர் ஒரு முஸ்லீம்.
**உஷா:** அபுல் கலாம் ஆசாத்.

33) ● *நம் நாட்டு சுதந்திரப் போராட்ட சம்பவங்களை சுவையாக விளக்கி சர்ச்சையிலும் மாட்டிக் கொண்ட ஒரு ஆங்கில நூலை டொமினிக் லேப்பியர் என்பவர் இன்னொருவரோடு சேர்ந்து எழுதியிருக்கிறார். அந்த நூலின் பெயர் என்ன?*
**ரவிச்சந்தின்:** நான் ரசித்துப் படித்த புத்தகம் அது - 'ஃப்ரீடம் அட் மிட்நைட்'

34) ● *வணிகர்கள் என்ற போர்வையில் தான் பிரிட்டிஷ்காரர்கள் நம் நாட்டிற்குள் முதலில் நுழைந்தார்கள். அந்த வணிக நிறுவனத்தின் பெயர் என்ன?*
**நாராயணசாமி :** ஈஸ்ட் இந்தியா கம்பெனி

35) ● *தண்டியாத்திரை எதற்காக நடத்தப் பட்டது?*
**பார்வதி :** ஏழைகளிலிருந்து எல்லோரும் பயன்படுத்தும் உப்பின் மீது பிரிட்டிஷ் சர்க்கார் வரி விதிச்சதை எதிர்த்துத் தான் அந்த யாத்திரை. அந்தக் காலகட்டத்தில் காந்திஜி தமிழகத்துக்கு வந்திருந்தார். மதுரையிலோ திண்டுக்கல் ரோடிலோ அவரைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்தது.

36) ● *'சுதந்திரம் எனது பிறப்புரிமை'ன்னு முழங்கியவர் யார்?*
**சுமித்ரா :-** பால கங்காதர திலகர்தான்.

37) ● *'வெள்ளையனே வெளியேறு' போராட்டம் எந்த வருடத்திலே நடந்தது?*
**பவானி :** ஒத்துழையாமை இயக்கம், ஜாலியன் வாலா படுகொலை இதுக்கெல்லாம் அப்புறம் 1942-லே அந்த இயக்கம் நடந்தது.

(தொடர்ச்சி 57ம் பக்கம்...)

(...24ம் பக்கத் தொடர்ச்சி..)

38) ● சுதந்திரப் போராட்ட வீரன் வாஞ்சி நாதன், ஆஷ் துரையை சுட்டுக் கொன்றது எந்த ரயில்வே ஸ்டேஷனில்?
சாந்தி : ம்..ம் மணியாச்சி.

39) ● ஹோம் ரூல் இயக்கத்தைத் துவக்கிய பெண்மணியின் பெயரென்ன? அவர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?
கணேஷ் : அன்னி பெசண்ட் அம்மையார்... நாடு தெரியவில்லை.
(அவர் அயர்லாந்து நாட்டைச் சேர்ந்தவர்.)

40) ● 'செய் அல்லது செத்து மடி' (Do or Die) என்று முழக்கமிட்டது யார்?
தீபா : மகாத்மா காந்தி

41) ● லாலா லஜ்பத் ராயைக் கொன்ற பிரிட்டிஷ் போலீஸ் ஆபீசரை சுட்டுக் கொன்ற இந்த சுதந்திர போராட்ட வீரனை 1931-ஆம் ஆண்டு தூக்கிலிட்டது பிரிட்டிஷ் அரசு. இவர் யார்?
நாகராஜன் : பகத் சிங்

42) ● காந்திஜிக்கு பிடித்த பாடலான...
வைதேகி முரளி : வைஷ்ணவ ஜனதோ.
● இந்த பாடலை எழுதியது யார்?
வைதேகி முரளி : தெரியவில்லை.
(அதை எழுதியவர் நரசி மேத்தா)

43) ● தென்னகத்தைச் சேர்ந்த ராணி சென்னம்மா, பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராகப் போரிட்டு இறந்தவர். இவர் எந்த ஊர்க்காரர்?
டி.எஸ்.சீனிவாசன்: கிட்டூர்

44) ● 'எல்லை காந்தி என்றழைக்கப்பட்ட வரின் முழுப் பெயர் என்ன?
சதீஷ் : கான் அப்துல் கபார் கான்.

45) ● இதுவரை நம் அரசியல் அமைப்பு சட்டம் எவ்வளவு முறை திருத்தப்பட்டிருக் கிறது?
சந்திரகுமார்: 67 முறை... சாரி 76 முறை. கடைசி அரசியல் அமைப்பு திருத்தம்கூட பிற்பட்டவர்கள் மற்றும் பழங்குடியினர் தொடர்பானதுதான்.

46) ● ராஜீவ் காந்தியைப் பார்த்திருப்பீர்கள். சுதந்திரப் போராட்டத்தில் பெரிதும் ஈடுபட்ட அவரது முன்னோர்களில் மூத்தவர் யார்?
முத்து கிருஷ்ணன் : ஜவாஹர்லால் நேருவின் தந்தை மோதிலால் நேரு.

47) ● பிரபல கவிஞர் முகமது இக்பால் எழுதிய நாட்டுப்பற்றுப் பாடல் ஒன்று மிக பிரபலம். அது என்ன?
பாலகோபால்: தெரியுமே, 'ஸாரே ஜவான் ஸே அச்சா'

48) ● 1883ல் பாராளுமன்றத்தில் கொண்டு வரப்பட்ட கில்பர்ட் மசோதாவை பிரிட்டிஷ் அரசு நிறைவேறவிடாமல் செய்தது. இது எது பற்றியது?
மணிகண்ட பிரசாத்: ஒரு க்ளு கொடுங் களேன்...

இது கிரிமினல் வழக்குகளில் நடைபெற்று வந்த ஒரு அநீதியை மாற்றக் கோரும் மசோதா.
மணிகண்டப் பிரசாத்: ஐரோப்பியர்களையும் இந்தியர்களையும் இது போன்ற வழக்குகளில் சமமாக நடத்த வேண்டும் என்றுதான் அந்த மசோதா கொண்டுவரப்பட்டது.



''கனவு தான்னாலும் பயந்து நடுங்கிட் டேன்!''
''அப்படியென்ன கனவு?''
''பத்திரிகை போட் டோகிராபர்கள் முண்டியடித்து என்னைப் படம் பிடிக்கிற மாதிரி!''
– ஞா. ஞானமுத்து

49) ● விமான விபத்தொன்றில் மர்மத்துக் குரிய முறையில் மறைந்தார் சுபாஷ் சந்திர போஸ். அந்த விமானம் எந்த நகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தது?
தங்கராஜ் : 'ஜெர்மனியை நோக்கிப் போய்க் கிட்டிருந்ததுன்னு நினைக்கிறேன்... இல் லையா? நவ் ஐ காட் இட். டோக்கியோவை நோக்கித்தான்.

50) ● சுதந்திர இந்தியாவின் முதல் வெளி உறவு அமைச்சர் யார்?... சீன போருக்குப் பிறகு எழுந்த எதிர்ப்பலையைத் தொடர்ந்து, இவர் தமது பதவியிலிருந்து ராஜினாமா செய்து விட்டார்.
லலிதா வெங்கடசுப்ரமண்யம்: கொஞ்ச நேரம் யோசிக்கறேன். நினைவுக்கு வந்தாச்சு. கிருஷ்ணமேனன்.

-அருண் சரண்யா
படங்கள் : பேஜர் கே. மூர்த்தி



# பிள்ளையார் சாட்சி

"மகனே, பொய் சொன்னா நீ தொலைஞ்சே. நர்மதாவை நீ காதலிக்கறே. ஒத்துக்கோ!"

தாச்சாமி என்கிற ராமசாமியின் சட்டையைப் பிடித்துக் கேட்டான் ஹரி.

திருவிளையாடல் சிவாஜி பாடினாற்போல, ஹேமமாலினி கல்யாண மண்டபத்தில் மேளம் ஒருமுறை நின்று ஒலித்தது. லாயிட்ஸ் ரோடு போக்குவரத்து கூட நின்று, பறந்தது.

ராமசாமி ஆடிப் போயிருந்தான். முகமெல்லாம் வியர்த்து, கால்கள் துவள, நின்றவாக்கில் நாற்காலியில் விழுந்தான்.

அவன் ஆயுசில் இப்படியொரு நேரடித் தாக்குதலை முன்னதாக எதிர்கொண்டிருக்க மாட்டான்.

ஒரு புத்தர் போலவும் விவேகானந்தர் போலவும் ராமகிருஷ்ணர் போலவும் அதுவரை அவன் எழுப்பி வந்திருந்த இமேஜை, இரக்கமில்லாமல் தூள்தூள் ஆக்கியிருந்தான் ஹரி.

'ஆமாம் காதலிக்கிறேன்' அல்லது 'இல்லை; நீ சொல்வது தவறு' என்று இரண்டு பதில்களில் ஒன்றைச் சொல்லியிருந்தால் ஹரி சும் போயிருக்கக்கூடும்.

ஆனால் ராமசாமியை அத்தனை மேலே டமான மனிதனாகச் சுலபத்தில் கருதிவ வேண்டாம். அவனது பரிமாணங்கள் எல்ல யில்லாதவை. அவனது சிந்தனைத் திறன் எத்தன ஈடுஇணையற்றது என்பதற்குத் திறந்த புத்தகமான அவன டைரி சாட்சி. "கேவலம் நட்புக்கும் காதலுக்கும் வி யாசம் தெரியாமல் இருபத்தைந்து வருடங்கள் பூமிய வாழ்ந்து என்ன பிரயோஜனம்?"

– ராமசாமி கேட்டான்.

ஹரி முகத்தில் தீப்பொறி பறக்க, என்னைப் பா தான்.

'இப்போது வேண்டாம்; பிறகு பார்த்துக் கொள்ளலா என்று அவனுக்குச் சைகை காட்டினேன்.

விஷயம் அத்தனை சீக்கிரத்தில் ஒரு முடிவுக்கு வ கூடியது என்று எனக்குத் தோன்றவில்லை.

தவிர, கல்யாண மண்டபத்தின் ஹீரோவான கிஷே இன்னும் ஷர்மிளா கழுத்தில் தாலி கட்டியிருக்கவில்லை.

உள்ளபடியே இன்றைய தினம் இந்தத் தகராறு எழுந்த குறித்து எனக்கு மிக வருத்தம்தான். காரணம் கிஷே கல்யாணம் என்பது, அவன் பெற்றோரைக் காட்டிலும் எங்க மூவருக்குத்தான் திருவிழா. எங்கள் நால்வர் குழுவிலிரு முதன் முதலில் பெரிய மனுஷ உலகத்தில் உதிர்க்கப்ப கிறவன் அவன்தான். புடைவை வாசனை, புன்னகை வாசன பற்றியெல்லாம் இன்று மாலையே அவனிடம் கேட்( தெரிந்து கொண்டு விட வேண்டும் என்றுதான் க திருந்தோம்.

கடங்காரி நர்மதா ஏன் மஞ்சள் சுடிதாரில் வந்து பூத்தா (சிஸ்டம்ஸ் அனலிஸ்ட் – ஏழாயிரம் சம்பளம் – கிஷோர் ஆபீஸில் உத்தியோகம் – அவன் மூலமே எங்களுக்குப் பரிச்சயப அடிக்கடி சந்திப்போப தவறாமல் டெலிபோனில்.)

மண்டபத்தில் அவள் நுழைந்ததை முதலில் ஹரித பார்த்தான். உட்கார்ந்த இடத்திலிருந்தே கையசைத்தா கூடவே அவனது டிரேட் மார்க் கண்ணியப் புன்ன நானும் அவ்வண்ணமே செய்ய, ராமசாமியும் அப்படித்தா செய்திருக்க வேண்டும்?

மாறாக, கால் தடுக்க எழுந்து ஓடி, அவள் கைகள பற்றி 'ஹாய்' என்றான்.

இதைப் போய் தவறாக எடுத்துக் கொள்ள நானும் ஹரியும் மடையர்கள் அல்ல. ஆனால் ஒருவரையொருவர் ஒருகணம் அர்த்தமாகப் பார்த்துக் கொண்டோம்.

# பா. ராகவன்

வந்து உட்கார்ந்த நர்மதாவிடம் சவுக்கார்பேட்டை பேல்பூரி, அஜீத்குமார், ரம்பா என்று கொஞ்சம் போல் உலக விஷயங்கள் பேசிவிட்டு, நானும் ஹரியும் டிஃபனைப் பார்க்க எழுந்து போனோம். தற்சமயம், சாப்பிட இஷ்டமில்லை என்று நர்மதா சொல்லி விட்டாள்.

பொங்கலை முடித்துவிட்டு, இட்டலியைத் தொட்ட போதுதான் ராமசாமி எங்களுடன் எழுந்து வராதது உறைத்தது.

"ஐயோ, அவன் வரலையேடா?" என்று ஹரி பதைத்தான்.

"நான் போய்க் கூப்பிட்டு வந்துடறேன்" என்று ஹரி, பாதி இலையில், கையைக் கூட அலம்பாமல், நக்கிக் கொண்டே எழுந்து போனான்.

பின்வரும் பகுதி, தான் பார்த்ததாக ஹரி என்னிடம் சொன்னது :

ராமசாமியைத் தேடிக் கொண்டு போனவன், மண்டப நெரிசலில் சுற்றிச் சுற்றித் தேடியும் அவன் அகப்படாதது பற்றிக் கவலைப்பட ஆரம்பித்தான். காரணம், அவன் டிஃபனாவது சாப்பிட்டால்தான் உண்டு. சாப்பாட்டுக்குப் பதினோரு மணி ஆகிவிடும் பட்சத்தில் தன்னால் அதற்காகக் காத்திருக்க முடியாது என்று ராமசாமி சொல்லியிருந்தான்.

ஒரு சார்ட்டட் அக்கவுண்டன்ட்டின் பிரத்யேகப் பிரச்னைகள் காரணம். இன்டர்னல் ஆடிட்டிங் இன்று முடித்தாக வேண்டும் என்று சொல்லியிருக்கிறான்.

ஆகவே தாலிகட்டி முடித்த கையோடு, கிஷோரின் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு, ஆட்டோ பிடித்து ஆபீஸ் போய்விட வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

சாப்பிட வராமல் எங்கே போய்த் தொலைந்தான்?

ஹாலில் இல்லை. மாடியில் இல்லை. மொட்டை மாடி? 'தம்' போன்ற ரகசியப் பழக்கங்கள் ஏதும் ராமசாமிக்குக் கிடையாது. ஆகவே அவன் மொட்டை மாடியை நாட வேண்டிய அவசியம் இல்லை. இருப்பினும் ஒரு நடை பார்த்து வந்து விடுவது என்று ஹரி இரும்பு ஏணி பொருத்தப்பட்ட சுவரோரம் நடந்து, ஏறி, வெளியை அடைந்தான்.

அங்கே பார்த்த காட்சிதான் தனக்கு முதன் முதலில் அப்படியொரு சந்தேகம் வரக் காரணமாயிருந்தது என்று ஹரி சொன்னான்.

கைப்பிடிச் சுவர் ஓரம், வாட்டர் டேங்க் மீது சாய்ந்தபடிக்கு நர்மதா. அவளுக்கு மிக அருகில் உரசினாற்போல அவள் கரங்களைப் பற்றியபடி உணர்ச்சி வசப்பட்டவனாக ஏதோ கள்ளக் குரலில் பேசியபடி



ராமசாமி.

ஐந்தாயிரம் சதுர அடிப்பரப்புள்ள ஹேமமாலினியின் பிரதான மண்டபத்தில் பேச முடியாத எந்த விஷயத்தை இத்தனை உயரத்தில் வந்து ரகசியமாகப் பேசுகிறான்?

சற்று நேரம் மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தான் ஹரி. முகம் சிவக்க, தன்னை மறந்து பேசிக் கொண்டிருந்த ராமசாமி அவனுக்குத் தன் புதிய பரிமாணத்தைக் காட்டியிருக்கிறான்.

பொதுவில் ராமசாமியைப் பற்றிய எங்கள் அபிப்பிராயம் சற்று உயர்வானது. முதல் அட்டெம்ப்டில், தனது இருபத்தி நாலாவது வயதிலேயே சி.ஏ.வைக் கிளியர் செய்த மேதை அவன். சினிமா, டீவி போன்ற லாகிரி வஸ்துக்களால் எள்ளளவும் பாதிக்கப்படாத கர்ம யோகி. பெண்களைப் பற்றிப் பேசும் போதெல்லாம் அவன் காட்டுகிற கண்ணியமும் கொடுக்கிற மரியாதையும் அவன் வயதொத்த இதர இளைஞர்களிடம் காண முடியாதது. 'ஜொள்ளர்கள்' என்று எங்களைக் குறிப்பிட்டு அவன் கிண்டல் செய்கிறபோதெல்லாம் அதைத் தலைகுனிந்து ஏற்றுக் கொள்வது தவிர, எங்களுக்கு வேறு வழி இருந்திருக்கவில்லை.



"நீங்கதான் தலைவியை எதிர்த்து எதுவுமே பேசலையே, அப்படியும் ஏன் உங்களை கட்சியைவிட்டு நீக்கினாங்க?"

"என்பேர்ல குற்றப் பத்திரிகை எதுவுமே தாக்கல் ஆகலைங்கிற கடுப்புதான் காரணமாம்!"

– சீர்காழி வி. ரேவதி.

தொழில்முறையில் நிறைய பெண்களோடு அவனுக்குப் பரிச்சயம் உண்டுதான். ஆனால் இத்தனை நெருக்கம் சத்தியமாகக் கிடையாது என்று ஹரி சொன்னான்.

"நீ நம்ப மாட்டே ராகவா! அவ கையைப் பிடிச்சிண்டு, பேசறான், பேசறான், அப்படிப் பேசறான்! என்ன சிரிப்பு! என்ன பரவசம்! என்ன லயிப்பு! அவன் நர்மதாவைக் காதல
கறதுல நமக்கொண்ணும் பொறாமை இல்ல
ஆனா, ஏன் மறைச்சான்? அதைக் கே
முதல்ல" என்றான் ஹரி.

ராமசாமி வராமலேயே நாங்க
டிஃபனை முடித்து விட்டு ஹாலுக்கு வந்தோ

மேடையில் கிஷோர் தாலி கட்டத் தயா
னான். அங்கிருந்தே எங்களைப் பார்த்து ஒ
புன்னகை. கூடவே 'எங்கே ராமசாமி?' எ
றொரு சைகைக் கேள்வி.

இன்னும் அவன் கீழிறங்கி வந்திருக்
வில்லை என்பதை அப்போதுதான் நாங்க
கவனித்தோம்.

"போய்க் கூப்பிட்டு வந்துடட்டுமா?" எ
றேன் நான்.

"வேணாம் விடு. அவன் மோனத்தி
இருக்கான். ராட்சஸன் மாதிரி யாககுண்ட
திலே மாமிசம் போடாதே. பத்து மணிக்
முகூர்த்தம்னு அவனுக்கும் தெரியும்தானே
வரட்டும். பேசிக்கலாம்" என்றான் ஹரி.

மேளம் உச்சஸ்தாயியில் முழங்க, அட்சன
களும் பூவும் கிஷோரை நோக்கிப் பாய
ஃபிளாஷ்கள் மின்ன, வைபவம் முடிந்
பின்னும் அவன் கீழிறங்கி வராததில்தா
ஹரி உக்கிரமானான்.

"திஸ் இஸ் டூ மச் ராகவா!" என்றான்.

"பொறு. அவசரப்படாதே. அவனுக்
என்னவோ ஆயிடுச்சின்னு நினைக்கறே
வரட்டும், பேசிக்கலாம்" என்றேன்.

சரியாக இருபது நிமிடம் கழித்து ரா
சாமி கீழிறங்கி வந்தான். பின்னாலே
நர்மதா. மஞ்சள் சுடிதாரும் மயக்கும் புன்
கையும்.

நான் ஹரியைப் பார்த்துக் கண்ணடித்தே
"ஜோடி பிரமாதம் இல்லே?"

"சகிக்கலை" என்றான் ஹரி. உதடு துடிக்
முகம் சிவக்க, நாற்காலிகளைத் தாவி, ரா
சாமியை நெருங்கி, "கொஞ்சம் பேசணும், வ
என்றான் அடிக்குரலில்.

அப்போதாவது அவன் சமர்த்தாக
திருக்கலாம். விதி யாரை விட்டது?

"அஞ்சு நிமிஷம் இரு ஹரி. நர்மதாவோ
ஒரு முக்கியமான விஷயம் பேசிட்டிருக்கே
முடிச்சிட்டு வந்துடறேன். தாலி கட்டியாச்சா
என்றான் சாவகாசமாக.

ஒரு கொலை நடந்து விடுமோ என்று நா
பயந்தேன். ஹரி பல்லைக் கடித்தபடி, "சீ
த்மே வந்துடும்" என்றான்.

"ஸாரி. பேச்சு சுவாரஸ்யத்துல மறந்
விட்டேன்" என்றான் கூலாக.

என்ன மனிதன் இவன்!

ஹரிக்கு அதற்கு மேல் பொறுமை காக்



"அந்த ஆள் முன்பெல்லாம் தூக்கத்திலேயும் ஆபீஸைப் பற்றியே நினைச்சுக்கிட்டிருப்பார். இப்ப மாறிடுச்சு."

"எப்படி?"

"ஆபீஸ்லேயே தூங்கறார்!"

-வெ.ராஜாராமன்.

தன்பு இல்லை. அவன் சட்டையைப் பிடித்து, தரதரவென்று மண்டபத்துக்கு வெளியே இழுத்து வந்தான்.

"நீ நர்மதாவைக் காதலிக்கிறியா? பொய் சொன்னா, தொலைஞ்சே!" என்றான்.

ராமசாமி ஏதும் பேசவில்லை. அவன் முகபாவத்திலிருந்து ஏதும் புரிந்து கொள்ளவும் முடியவில்லை.

"இப்படியே எத்தனை நேரம் இருக்கறதா உத்தேசம்?" என்றேன் நான்.

அவன், திருவாய் மலர்ந்தான்.

"இதோ பார். மனசு இருக்கே, அது கண்ணாடி தம்ளர் மாதிரி. தண்ணி ஊத்தினா தண்ணியா தெரியும். பால் ஊத்தினா பாலா தெரியும். சாக்கடை ஊத்தினா சாக்கடையாத் தான் தெரியும். ஏன் தப்பாவே யோசிக்கறே ஹரி? நான் நர்மதாவோட பேசிட்டிருந்தா உடனே காதல்னு சொல்லிடறதா? நான் சென்ஸ். தவிர, நீ என்னைப் பத்தி முழுசா தெரிஞ்சுண்ட லட்சணம் இதானா?" என்றான்.

வந்ததே ஆத்திரம்.

"மகனே, என்னைக் கொலை காரனாக்காதே. ரெண்டடி 'கேப்' விட்டுப் பேசினா, அவ காதுல விழாதா? அதென்ன கையைப் பிடிச்சி உருவி விட்டுட்டேதான் பேசணுமா?" என்றான் ஹரி.

"மாடிக்கு வந்தியா?"

"ஏன், கூசறதோ? தபார், நீ காதலிச்சுட்டுப் போ. கல்யாணம் பண்ணிட்டுப் போ. அதில்லை விஷயம். எங்ககிட்ட மறைச்சே பார். உன்னை மன்னிக்க முடியாது."

"தப்புப் பண்றீங்க!" என்றான் ராமசாமி. "என் மனசுல வக்கிரம் ஏதும் இல்லை. காத லெல்லாம் எனக்கு சத்தியமா இல்லை. நம் பறதும் நம்பாததும் உன் இஷ்டம். ஷி இஸ் மை பெஸ்ட் ஃபிரெண்ட். உன்னைப் போல ராகவனைப் போல. கிஷோரைப் போல வரேன்."

சொல்லிவிட்டு வேகமாக மண்டபத்துக் குள் போய் விட்டான்.

நான் ஹரியை மெள்ள தள்ளிக் கொண்டு உள்ளே போனேன்.

"எல்லாரும் சாப்டிங்களா?" என்றான் கிஷோர். பஞ்சகச்சமும் தலையில் நிறைய மஞ்சள் அரிசியும் கையில் கட்டிய கங்கணமும் புதுப் பொலிவுமாக இருந்தான். தாற்காலிகமாக எங்கள் குமுறல்களை மறைத்துக் கொண்டு அவன் கையைப் பற்றிக் குலுக்கி, அவன் புதுப்பெண்டாட்டியிடம் ஒருசில வார்த்தைகள் மரியாதையாகப் பேசிவிட்டுத் திரும்பினோம்.

"சாப்பாடு ஆயிடுத்து. ராமசாமியை வேணா சாப்டுட்டுக் கிளம்பச் சொல்லு" என்று அக்கறையாகச் சொன்னான் கிஷோர்.

அவனுக்கு இன்று லீவ் கிடைக்காதது பற்றி எங்களுக்கு மிக வருத்தம். முகூர்த்தத்துக்குப் பின் நாலு பேரும் சேர்ந்து ஒரு கோர்ஸ் அரட்டை - கிஷோரின் புது மனைவியுடன் நடத்துவதாகவும் மாலை நாங்கள் மூவர் மட்டும் சினிமா செல்வதாகவுமெல்லாம் பிளான் வைத்திருந்தோம். பழிவாங்கிய அவனது ஜப்பானிய முதலாளியை சபித்துக் கொண்டிருந்தோம்.

ஆனால், கிஷோர் கேட்டுக் கொண்டபடி அவனை சாப்பிட்டுப் போகச் சொல்லச் சென்ற போது, அடுத்தக் கட்ட அதிர்ச்சி காத்திருந்தது. அப்போதும் அவன் நர்மதா வுடன்தான் பேசிக் கொண்டிருந்தான். இம் முறை போதிய இடைவெளி விட்டே அமர் திருந்தான்.

பத்து நிமிடம் முன் நடந்ததையெல்லாம் மறந்து விட்டு ஹரி அவனிடம் சென்று "சாப்பிட்டு வந்துடு ராமு. நீ ஆபீஸ் கிளம்பணு மில்லை?" என்றான்.

"இல்லைடா. போன் பண்ணி, வரவே முடியாது, ஸாரின்னு சொல்லிட்டேன். நர் தாதான் சொல்லச் சொன்னா" என்றான்.

ஹரியின் கண்களில் மறுபடி கொலைவெறி தெரிந்தது. முன்னதாக நாங்கள் எத்தனையோ கேட்டுப் பார்த்தோம்.

"அப்படி லீவ் தரவே முடியாதுன்னான்னா நீயுமாச்சு உன் வேலையுமாச்சுன்னு விட்டுட்டு வாடா! உன் படிப்புக்கு அவனவன் வெத்தலை பாக்கு வெச்சிக் கூப்பிடுவான்" என்றபோது "சே. கஷ்டம்டா ராகவா. ஆடிட்டிங் நடந் துட்டிருக்கு. ஆனுவல் அக்கவுண்ட் குளோஸ் பண்ணியாகணும். பாஸ் சொல்ற

லையும் நியாயமிருக்கு" என்றான்.

இப்போது நர்மதா சொன்னதால் மட்டும் எப்படி நியாயம் மாறிவிடும்?

"விட்டுடு. அவன் பூட்டகேஸ்" என்றேன் நான்.

**நா**ள் முழுக்க அவன் எங்கள் பக்கம் வரவே இல்லை. நர்மதாவோடே சாப்பிட்டு, நர்மதாவோடே பேசி, நர்மதாவோடே சுற்றி, நர்மதாவோடே கரைந்து போயிருந்தான்.

இரவு ரிஸப்ஷன் முடிந்து, சாப்பாடு ஆனபின் கிஷோரை முதலிரவு அறைக்கு அனுப்பிவிட்டு, நாங்கள் வீடு திரும்ப வேண்டியதுதான். மூன்று பேராக வந்து, இரண்டு பேராகத் திரும்பவிருக்கிற சோகம் சாதாரணமானதாக இல்லை. ராமசாமி. அவன் ஏன் இப்படி அடிமையாகி விட்டான்? கண்முன்னால் தன் சுயத்தைத் தொலைத்து விட்டு, மஞ்சள் சுடிதாரில் மயங்கிக் கிடக்கிறான்?

இவ்வாறு நாங்கள் யோசித்தபடியே லாயிட்ஸ் ரோடில் கொஞ்சம் நடைபயின்று விட்டுத் திரும்பி வந்தோம். நர்மதா போய் விட்டிருந்தாள். ராமசாமி எங்களைப் பார்த்ததும் அதே மாறாத புன்னகையுடன் எழுந்து வந்தான். எதுவுமே நடக்காதது போல "எங்கடா போயிட்டீங்க? நர்மதா தேடினா" என்றான்.

"நீ தேடலியே?"

அவன் எங்களை உற்றுப் பார்த்தான். "சந்தேகப்படறீங்க இல்லை? ஓ.கே. உண்மையைச் சொல்லிடறேன். நானும் அவளும் சேர்ந்து பிரைவேட்டா ஒரு சாஃப்ட்வேர் கன்ஸல்டன்ஸி ஆரம்பிக்கிறதா பிளான். அவ டெக்னிகலாகவும் நான் அக்கவுண்ட்ஸ் பக்கமும் பொறுப்பு எடுத்துண்டு நடத்தறதா யோசனை. அது முடியுமா, எப்படித் தொடங்கறது, எத்தனை இன்வெஸ்ட்மென்ட், சட்டப்படி ஆரம்பிக்க என்னென்ன நடவடிக்கைகள் அப்படீங்கறதைப் பத்தித்தான் பேசிட்டிருந்தோம். போதுமா?"

இது எங்களுக்கு மற்றொரு புதிய தகவலாக இருந்தது. இப்படி ஒரு திட்டம் யோசனையில் இருப்பது பற்றிக்கூட இதுவரை ராமசாமி எங்களிடம் மூச்சு விட்டதில்லை.

"இன்னும் என்னென்ன பிளான், ரெண்டு பேரும் சேர்ந்து செய்யறதா? இப்பவே சொல்லிடு. சேர்ந்து காதலிச்சு, சேர்ந்து கல்யாணம் பண்ணிண்டு, சேர்ந்து குழந்தை பெத்துண்டு..."

ராமசாமி ஹரியை முறைத்தான்.

"என் கூட வா!" என்று மண்டபத்தின் பின்பகுதிக்குக் கூட்டிப் போனான்.

**அ**ரசமரத்தடியில் அழகான ஒரு சின்ன பிள்ளையார். சீரியல் பல்பும் சில்லறை, விபூதியுமாக.

அவர் எதிரே நிற்கவைத்து ஹரியின் கையைப் பற்றி உயர்த்தி, சத்தியம் செய்தான்.

"தயவுசெய்து நம்பு. இந்தப் பிள்ளையார் சாட்சியா சொல்றேன். எனக்கும் நர்மதாவுக்கும் நீ நினைக்கறாப் போல எந்தவிதத் தொடர்பும் இல்லை. ஃபிரெண்ட்ஷிப்! வெறும் ஃபிரெண்ட்ஷிப்! நம்ம ஃபிரெண்ட்ஷிப் மேல சத்தியம்! இதான் உண்மை. தயவுசெய்து என்னைத் தப்பா நினைக்காதே! உங்களுக்குத் தெரியாம நான் அப்படியெல்லாம் செய்வேனா?" என்றான்.

மிகவும் உணர்ச்சிவசப்பட்டவனாக, உதடு துடிக்க, கண்ணில் நீர் எட்டிப் பார்க்க – அழுதே விட்டான் ராமசாமி.

ஹரி, இப்படி ஒரு ட்விஸ்டை எதிர்பார்க்கவில்லை. பதறி விட்டான்.

"சே, என்னடா இது! எதுக்கு அழறே? விடு. நான் நம்பறேன். லீவ் இட். உன்னோட



நிருபர்: நீங்க அரசியலுக்கு வந்ததால சந்தோஷப் படறீங்களா, வருத்தப் படறீங்களா..?

**அரசியல்வாதி:** நான் எதுக்கு வருத்தப்படணும்? அதுக்குத்தான் பொது மக்கள் இருக்கிறாங்களே...''

–செங்குன்றம் ரமேஷ்ராமன்.

வினோதமான நடவடிக்கைகளாலதான் சந்தேகம் வந்தது. விட்டுடு. நாங்களும் மறந்துடறோம்" என்றான் நெகிழ்ந்து.

ராமசாமி, கண்களைத் துடைத்துக் கொண்டு, "இரு வரேன்" என்று குழாய்ப் பக்கம் போனான்.

நான் ஹரியைப் பார்த்தேன்.

"இருந்தாலும் ரொம்பத்தான் அவனைப் போட்டுப் பார்த்துட்டே!" என்றேன்.

"வேற வழியில்லை ராகவா. இந்த விஷயத்துல எனக்கு நூறு சதம் உண்மை தெரிஞ்சாகணும்னு விரும்பினேன். அதான் கொஞ்சம் ஓவரா ரியாக்ட் பண்ணிட்டேன்."

"அதென்ன?"

"நான் நர்மதாவை லவ் பண்றேண்டா!" என்றான் ஹரி.



# செய்திகள், வாசிப்பது செம்பியன்...

முதல்வருடைய படத்தை இலவச பஸ் பாஸில் அச்சிட்டது புத்திசாலித்தனமல்ல. இலவச பஸ் பாஸ் காரணமாக போக்குவரத்துத் துறைக்கு ஏற்படும் நஷ்டத்தை வரி செலுத்தும் மக்கள்தான் தாங்குகிறார்கள். ஏதோ முதல்வர் தாமே அளித்த நன்கொடை போல் தோன்றச் செய்வது தவறு. அரசு நிகழ்ச்சிகளுக்கு அழைப்பிதழ்களில் முதல்வர் படத்தைப் போடுவதை விட அசிங்கமானது. 'ஜெ' ஆட்சியில் நடந்த அநாகரிகங்கள் தொடரக்கூடாது. அமைச்சர்கள் முதல்வரைத் திருப்திப்படுத்த இதுவல்ல வழி. தங்கள் தங்கள் துறைகளில் ஊழலற்ற, சிறந்த நிர்வாகத்தை அளித்து முதல்வரை மகிழ்விக்கட்டும்.

"பழிவாங்குகிறார்களே!'' என்று புலம்புகிறார் ஜெ. அ.தி.மு.க. ஆட்சியில் கொள்ளையடித்த அமைச்சர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கைதாக, வலை தம்மையும் சுற்றி வளைக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு, முன்னதாகவே பழிவாங்கல் பல்லவியை ஆரம்பித்திருக்கிறார். ஜெயலலிதா புரிந்துள்ள குற்றங்களுக்கு அவருக்கு தண்டனை கிடைத்தே ஆக வேண்டும்; அதே சமயம் பழிவாங்கல் போலவும் தோன்றக் கூடாது. இதற்கேற்ப அரசும் நீதித்துறையும் கண்டிப்புடன் கருணையும் காட்ட வேண்டும். இல்லையெனில் 'பழிவாங்கல்' என்ற பொய்ப் பிரசாரம் மக்களைக் கவர்ந்து விடுகிற அபாயம் உண்டு. கருணாநிதியே சொல்லியிருக்கிறார், "முன்னாள் முதல்வரைக் கூண்டில் நிறுத்த, அவர் கையெழுத்துப் போட்டிருக்கிற ஆவணங்களே போதும்'' என்று. எனவே, இப்போதைக்கு மூன்று வழக்குகளில் சிக்கியுள்ள அவர் விஷயத்தில், சம்மன்ஸ் அனுப்புவது, ரிமாண்டில் வைப்பது, ஜாமீன் மறுப்பது போன்றவற்றில் சாணக்கியம் தேவை. எல்லாவற்றையும் விட முக்கியம், வழக்குகள் இழுத்தடிக்காமல் சட்டுப்புட்டென்று முடிவது.

'ரேஷனில் ஏழைகளுக்கு மட்டுமே மலிவான விலையில் உணவுப் பங்கீடு; மற்றவர்கள் அதிகப் பணம் தந்து பெற வேண்டும்' என்ற மத்திய அரசின் யோசனைக்கு முதல்வர்கள் மாநாடு ஆரம்ப கட்டத்திலேயே சமாதி கட்டி விட்டது. ரேஷன் பொருள்களை பணக்காரர்கள் வாங்க மாட்டார்கள். மத்தியதர வகுப்பினரும் ஏழைகளும்தாம். இதில் மத்தியதர வகுப்பினரை ஒதுக்குவது, அதிக அளவில் நேர்முக வரி செலுத்துகிற, அரசியல் போக்குகளை நிர்ணயிக்
கிற, குடும்ப பட்ஜெ
டில் பற்றாக்குறை காண
கிற ஒரு சாராரை ஒது
குவதாகும். எனவே தி
டத்தை முதல்வர்க
நிராகரித்ததில் விய
பில்லை. மத்திய அர
ஏழைகளுக்கு உத
விரும்பினால், வேலை
வாய்ப்புக்கள் மூல
அவர்கள் வாழ்க்கை
தாத்தை உயர்த்த மு
படுவதே சிறந்த வழி

முதல்வர் பல்வேறு நிகழ்
சிகளில் கலந்து கொள்வதை
பார்க்க மகிழ்ச்சியாக இருக்கிறது
அவர் பேச்சைக் கேட்பது ஒ
இலக்கியத்தரமான நூலை
படித்து முடித்த திருப்தியை அளி
கும். ஆனால் துரதிர்ஷ்டம் என்ன
வென்றால், அவர் நேரம் பொன
னானது என்பதை உணராமல்
அவர் முன்னிலையில் பேச பல
ரும் ஆசைப்பட்டு, பல சந்தர்
பங்களில் உளறிக் கொட்டி, ந
பொறுமையைச் சோதிப்பதுதான்
மூன்று முதல் மூன்றரை மண
நேரம் முதியவரை (உள்ளத்தி
இளைஞர்தான் என்றாலும்) ஒ
நாற்காலியில் முடக்கி வைப்ப
கொடுமை. முதல்வர் கலந்
கொள்ளும் எந்த நிகழ்ச்சியும் ஒ
மணி நேரத்தில் முடிய வேண்டு
அதில் அவருக்குப் பேச இருப
நிமிஷங்கள் ஒதுக்கப்பட வே
டும். முதல்வருடைய நேர
இன்று தமிழக மக்களின் உ
மையாகிப் போன விஷயம். அ
வீணாகக் கூடாது. ஒவ்வொ
நிமிஷமும் தமிழகத்துக்குப் பய
தர வேண்டும்.

கிளின்டனைக் கதாநாய
னாக்கி (பல இடங்களில் கேவல
படுத்தி) நாவல் எழுதினார் ஒ
"நியூஸ்வீக்" நிருபர். எழுதியது ய
என்பதை மறைத்து "Anonymou
என்றே குறிப்பிட்டார். இப்போ
உண்மை வெளியாகி, அவருக்கு
பத்திரிகைக்கும் ரொம்பத் த
குனிவு. எழுத்தாளர் பெய
மறைத்ததினால் அல்ல; 'இவர்தா
என்று சிலர் மர்மத்தை உடை
போது, புத்தகத்தின் விற்ப
கருதி, 'தாம் அல்ல' என்று மறு
பொய் சொன்னதால்!

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு பெறும் கதை – 2

# புதிய ஒதுக்கீடுக

கொஞ்சம் தவறிவிட்டது. ரிவர்ஸ் எடுத்தபோது, பூந்தொட்டி தெரிந்தது. சுவர் தெரிந்த ஆனால் கவனம் இல்லாததால் கார் பூந்தொட்டியைச் செல்லமாகத் தட்டி, சுவரில் எருமை உரசலாக உரசி நின்றது.

கதவு திறந்து குருமூர்த்தி இறங்கினார். வலம் வந்து பார்த்தார். மட்கார்டில், 'நச்'சென் ஒரு உள் வாங்கல். கையகலத்திற்கு நசுங்கல்.

"சகுனம் சரியில்லே! உள்ளே வந்து தண்ணி குடிச்சிட்டுப் போங்க வழியனுப்ப வந்த கமலம் பதைத்தாள். "டிரைவருக்கு என்ன ஆச்சு லீவா? வரவர சுப்பையா ரொம்ப லீவு போடறான். நீங்கதான் கே கிறதே இல்லே!"

"விடேன்!" என்றார்.

"பாவம்! பையனோட வேலை விஷயமா அவன் அலை அலைன்னு அலையறான்..."

"வேலையா? எதற்கு வேற இடத்திலே போய் அலையணு அந்தப் பையன் பேர் என்ன? 'ராஜா'தானே? போன வருஷ ஊட்டிக்கு நம்ப காரை டிரைவ் பண்ணிட்டு வந்தானே! அவ தான். நான் என்ன சொல்றேன்னா சுப்பைய்யாவுக்கு வயச யிடுத்து. மெதுவா கழட்டி விட்டுட்டு, அந்த ராஜாவைக் கூப்பி லாம்! உங்களுக்கு சுப்பையா டிரைவரா இருந்த மாதிரி, நம் குமாருக்கு ராஜா இருக்கட்டுமே! அழகா அமைஞ்சிடும்."

பதில் சொல்லவில்லை.

"டைரக்டர் மகாதேவன்கிட்டே நம்ப குமார் விஷயமா இ னிக்குப் பேசறீங்களா...?"

"எதற்கு...?"

"எதற்கா...? மியூசிக் டைரக்டர் கு மூர்த்தியோட பிள்ளை. உங் வாரிசும் உங்களை மாதிரிே பெரிய இசையமைப்பாளர வர வேண்டாமா?"

"பேசறேன்."

"சொல்றேன்'னு பளிச்சுன்னு வரமாட்டேங்குதே எப்பப்பாரு இழுத்த மாதிரிதான் பதில்."

"கமலம், அவன் போக்கிலேயே விடு. அவனுக்கு எதில் ஆர்வம் இருக்கோ, அதைச் செ யட்டும்...!"

"நம்ப குமாரா? சந்தேகமில்லாம மியூசிக்கிலேதான் இண்ட்ரஸ்ட்! அதுதான் அந்த ரத்தத் லேயே இருக்கே."

குமாருக்கு இந்த இருபதுக்கு, இதமான பேச்சு இல்லை. விட்டுக் கொடுக்கிற மனசு இல்ல கெட்ட சகவாசம் இருக்கிறது. மமதை இருக்கிறது. இதையெல்லாம் மீறி, திறமை இருக்கிறதா? கற்பனை இருக்கிறதா? இசையில் நாட்டம் இருக் கிறதா? 'அதுதான் அந்த ரத்தத்திலேயே இருக்கே!'

- குபீரென்று சிரிப்பு பொங்கிற்று! அலை அலையாக ஒரு சிரிப்பு வந்து கொண்டேயிருந்தது, அடக்க முடியாமல். நினைத்து நினைத்து கண்களிலே ஜலம் வந்தும் இந்தச் சிரிப்பு நிற்கிறாற் போல் இல்லை. என் பாட்டன்...? முப்பாட்டன்? அவர்கள் ரத்தத்தில்...? ஹா... ஹா... ஹா...

ஸ்டுடியோவைத் தொடும்போது நன்றாக விடிந்து விட்டது! கேட்டை ஒட்டின மாதிரி, கொத்தாக நாலைந்து பேர் நின்றிருந் தார்கள். இவரைப் பார்த்ததும் அதிலிருந்து ஒரு இளைஞன் ஓடி வந்தான். முகம் மலர்ந்தான்.

"வணக்கம் சார்... என் பெயர் ராமநாதன்! நான் 'பரதன் ஸ்ருதி'ன்னு ஒரு மியூசிக் குரூப் நடத்தினேன். நீங்ககூட போன வருஷம் தலைமைதாங்கி... காமராஜர் அரங்கில்..."

லேசாக நினைவு வந்தது.. பழம்பெரும் மியூசிக் டைரக்டர்... பெரியவர் பெயரை வைச்சிண்டு இருக்கே... அவரைப் போல் நீயும் பெயர் எடுக்க வேண்டும் என்று ஏதோ சொன்னதாக... ஆமாம்... அன்று இவன் ஏதோ புதிதாகச் செய்தானே? நினைவில்லை. ஆனால்... அந்த இரண்டு மணி நேரத்தில் கிடைத்த நிறைவு!

"நஷ்டம் வந்தது. நிறுத்திட்டேன். அப்புறம்.. மெல்லிசை கேசட்டுகள். ரெண்டு நாடகம். டீ.வி. விளம்பரம்.. .எல்லாம் செஞ் சேன். நிறைய டியூன் போட்டு வைச்சிருக்கேன். பார்க்கிறீங் களா?"

"இப்ப நேரம் இல்லையே...!"

"உங்க அஸிஸ்டெண்டா எடுத்துக்கிட்டு.. ஒரே ஒரு சான்ஸ் கிடைச்சா... எனக்கு புதுசு புதுசா ஏதாவது செய்யணும்னு ஆசை இருக்கு. வெறி இருக்கு. அதற்கு வடிகாலா..."

"எதுவும் இல்லையா...?"

"ஒரே சான்ஸ்! தூள் கிளப்பிடுவேன். பிரமாதப் படுத்திடுவேன். நம்பிக்கை இருக்கு. ஒரு வாய்ப்பு கிடைக்கணும். நீங்கதான் உதவணும்."

இரண்டு நிமிடங்கள் இருக்குமா...? அதற்குள் அந்தத் துடிப்பா...? தன்னம்பிக்கையா? ஆர் வமா? எதனால்? தெரியவில்லை. அந்த உரு வம் மனத்தில் சற்று நின்றது.




மத்தியானம் போன் வந்தது. டயர் கம் பெனியிலிருந்து வெங்கடேஷ் பேசி னார்.

"என்ன, குரு மூர்த்தி சார்! ரொம்ப 'பிஸி'யா?"

"ஓடறது..."

"வந்து... இன் னிக்கு காலையிலே உங்க ஞாபகம் சூர்னு வந்தது. எப்படின்னு கேட் கலியே? ஆபீஸ்லே 'ப்ரோகராமர்' இண் டர்வியூ நடக்கிறது. அதிலே... ஒரு பையன் 'ராஜா'ன்னு. உங்க பேரை 'ரெஃபரென்ஸா' கொடுத் திருந்தான். 'உங்களை நல்லாத்

தெரியும்'னு சொன்னேன் அவன்கிட்டே..."

"சுப்பையான்னு என்கிட்டே ஒருத்தர் ரொம்ப வருஷமா இருக்கார்... அவர் பையன் இந்த ராஜா."

"நீங்களே 'போன்' பண்ணுவீங்கன்னு கூடக் கொஞ்சம் ஏமாந்துட்டேன்!"

எதற்கு? கேட்கவில்லை. மனத்திற்குள் குடைந்து கொண்டார். ஓ சிபாரிசா? ச்சு... ராஜாவிற்கு இவர் குணம் தெரியும். சிபாரிசு என்று யாரும் இவரை நெருங்க முடியாது. 'சரக்கு நல்லா இருந்தா தானே வித்துப் போகும். லொட்டு லொசுக்கு ஓட்டை, உடைசல், இதற்கெல்லாம்தான் தாங்கல் வேணும்! முட்டுக்கால் கொடுத்து நிறுத்தணும். முட்டுக் கால் வேலையை என்னாலே செய்ய முடியாது.'

"எப்படி பண்ணியிருக்கான்?"

"ஓகே...!"

"கிடைச்சுடும் இல்லியா...?"

"ச்சு..." சற்று தொய்ந்தாற்போல் பதில் வந்தது. எங்க கம்பெனியிலே, ஒரு பழக்கம். வந்து... ஏதாவது வேலை காலியானா அந்த இடத்திற்கு இங்கே வேலை செய்கிறவர்களோட வாரிசுக்குத்தான் முன் பாத்தியதை...! எழுதாத சட்டமா இருக்கு! எப்படின்னா அப்பா சீட்டிலே, பிள்ளை உட்கார்ந்துடுவான். யார் ஆரம்பிச்சான்னு தெரியல்லே. எப்பவுமே கெட்ட பழக்கம் 'சட்டு'ன்னு பிடிச்சுக்கும். அதே கதை தான் இங்கேயும்..."

போனை வைத்த பின்பும் ஆச்சரியம் விடவில்லை. நமக்குத் தெரியாத விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. நடக்கின்றன. காலையில், கமலம் சொன்னது போல் டிரைவர் மகன் ஒரு டிரைவர்தானா? கம்ப்யூட்டர் செய்யக் கூடாதா? இதுதான் யுக தர்மமோ? பொருந்துமோ? இந்தச் சங்கிலி அறுபடாதா? கூடாதா?

கடைசியில் கமலம் ஜெயித்து விட்டாள். ஒரு சந்திப்பில், சந்தர்ப்பத்தில் தயாரிப்பாளரின் மனைவியிடம் பேசி, சரிக்கட்டி, டைரக்டர் மகாதேவனை மசிய வைத்து குமாருக்கு வாய்ப்பு வாங்கி விட்டாள்.

முதல் நாள் எல்லோரும் மாங்காடு போனார்கள். அப்படியே ஸ்டுடியோ வந்த போது வாசலில் வழக்கம் போல் கூட்டம்! இன்றும் அந்த இளைஞன் ராமநாதன் தெரிந்தான். இவரைக் கண்டதும் ஓடி வந்தான்.

"சுப்பையா...! வண்டியை நிறுத்து...!"

"எதற்காக?" குமார் முகம் சுளித்தான்.

"இந்தப் பயல்களுக்கு வேற வேலையில்லை...! ஒவ்வொரு கார் பின்னாலும் ஓடிண்டு.. சே..."

"சார், நான் கேட்டேனே...! உங்க அஸிஸ்டெண்டா?"

"நானே ரிடையர் ஆயிடலாம்னு இருக்கேன். இந்த நிலையில் எதுவும் முடியும்னு..."

"முடியும் சார். மனசிலே இடம் இருந்தா..." கையைப் பிடித்தான்; இறைஞ்சினான்.

"ஏய்...! போடா!" என்றான் குமார். கையை ஓங்கினான். "இப்ப போறியா இல்லியா?"

குமார் கீழே இறங்கினான். "வாட்ச்மேன்.. வாட்ச்மேன்..." என்று இரைந்தான்.

"சார்...! இந்த ஃபீல்டுலே நீங்க ஒருத்தர்தான் மாறுபட்டவர். திறமைக்கு மதிப்பு கொடுக்கிறவர்னு சொல்றாங்க. உங்க மகனையும் இசையமைப்பாளரா கொண்டு வரீங்க. சந்தோஷம்! நியாயமா கூட இருக்கலாம். ஆனா நீங்களெல்லாம் சேர்ந்து இப்ப புதுசா ஒரு வருணாசிரமத்தை உருவாக்கிட்டீங்க. 'குலக்கல்வி'ன்னு கேலி செஞ்சு அந்தப் பழையதையே அழகா 'வாரிசு'ன்னு சொல்றீங்க. அரசியல் தலைவரோட மகன் ஒரு குட்டித் தலைவர்தான்னு ஆயிடுத்து. அதே மாதிரி நடிகர் மகன் நடிகன். பாடகர் பிள்ளை பாடகன். டாக்டர் மகன் டாக்டர். இது நல்லதுக்கு இல்லே. வளராது. புதுசு புதுசா வராது. தேங்கிப் போயிடும்..."

"தம்பி! யாராக இருந்தாலும் சுயபலம்தான் அஸ்திவாரம்...! அதுதான் நிற்கும். இல்லேன்னா காலப்போக்கில் விழுந்துடும்! சரிஞ்சிடும்!"

"ஆனா... பந்தியிலே இடம் ஒதுக்கிடுறீங்களே. முதல் ஆளா உங்க வாரிசுகள்தானே உட்காருது! அவங்களை கவனிச்சது போக... மிச்சம் இருந்தால்தான் என்னைப் போல் கடைசி ஆள் வரை வரும். அதுவரை ஏழைக்குப் பிறந்தவன் காத்திருக்கணும் பசியோட..."

அழுத்தமும் கனமும் குரலில் ஏற... வாட்ச்மேன் அவன் கையைப் பிடித்து இழுத்து இழுத்து..

குமாரைச் சுற்றி எல்லோரும் உட்கார, டைரக்டர் காட்சியை விவரிக்க ஆரம்பித்தான்.

"தன்னன்னதானே... தன்னன்னதானே... தானே..."

டைரக்டர் எதுவும் சொல்லவில்லை. நெட்டுக்குத்தலாகப் பார்த்தார். அந்தக் கண்களில், புருவச் சுருக்கலில் திருப்தி தெரியவில்லை. 'அடுத்தது வரட்டும்' என்கிற மாதிரி தலையை மட்டும் ஆட்டினார். அடுத்தது, அதற்கும் அடுத்தது...

"உன்கிட்டே நிறையவே எதிர்பார்த்தேன்" என்றார். 'அடாசு' என்று முணுமுணுத்தார்.

"இதெல்லாம் நல்லா இல்லியா...?"

"இருக்கு! உன்கிட்டே நிறையவே எதிர்பார்த்ததேன்! நீ சின்னப் பையன். யாரும் செய்யாததை செஞ்சு காட்டணும். 'இவனா...'ன்னு கேட்க வைக்கணும். அந்த உந்துதல் வரணும்.

ாடு பார்க்கலாம்."

திரும்பவும்... திரும்பத் திரும்ப...

குருமூர்த்தி யோசனையில் இருந்தார். வர் காதருகில் ஒரு குரல் கேட்டது. விடா ் ஒலித்தது. வேறு எதையும் கேட்க விடா ் அடித்தது. 'நீங்கள்ளாம் சேர்ந்து இப்ப ுசா ஒரு வருணாசிரமத்தை உருவாக்கிட் ங்க. இது நல்லதுக்கில்லே. வளராது! பந்தி லே இடம் ஒதுக்கி...'

"என்ன...?" தூக்கத்திலிருந்து விழித்த ணர்வு.

"எல்லாத்துக்கும் இப்ப, சாஃப்ட்வேர் டைக்கிறது. டிஸ்கிலே வந்துடுத்து. உன் யன் அதை அப்படியே கார்பன் காப்பி டுத்து வைச்சுக்கோன்னு என்கிட்டே கொடுக் ான். எதையாவது போடச் சொல்லு. கேட் பாம்."

மீண்டும் தொடர... ஒரு இடைவெளியில், பாதும்' என்று குருமூர்த்தி கையை உயர்த்தி ார். முகம் இறுகியிருந்தது.

"எத்தனை கேட்டாச்சு? இதற்கு மேலே ன்ன? இதிலியே நல்லதா பார்த்து பொறுக் ்க..."

டைரக்டர் அயர்ந்துதான் போனார். குரு ர்த்தியிடமிருந்து இப்படி ஒரு பாய்ச்சலை திர்பார்க்கவில்லை என்று முகம் சொல்லிற்று!

"இது என்ன...? வெண்டைக்காயா? நுனி டிச்சு பொறுக்க? இஷ்டமிருந்தா நான் சால்றதை கேட்கணும். இல்லே..."

"ஏய்! மகாதேவா! நீ வேணும்னே விவகாரம் ண்றே! எது நல்லது, எது சப்பைன்னு உனக்கு ன்னும் புரியலே! தெரியலே! இவனை வர டக்கூடாதுன்னு அமுக்கறே. முளையிலேயே ள்ளப் பார்க்கிறே. பார்றா... உனக்கு முன் ாடியே இவனைக் கொண்டு வரேன். பிர ாதப்படுத்தறேன். உனக்கு? ஸ்டூடியோ ாசல்ல ராமநாதன் உலகநாதன்னு எவனா து கிடைப்பான். அட்ரஸ் இல்லாதவன். வனைக் கூப்பிட்டு போடு! அவன்தான் னக்கு லாயக்கு."

டைரக்டர் முகத்தில் ஒரு ஒளிக்கீற்று. இந்த முட்டுச் சிரிப்பில், கோபத்தில் தனக்கு ஏதோ சய்தி இருப்பது போல் இவ்வளவு வருடங் ள் இல்லாமல் குருமூர்த்தியிடமிருந்து இப்படி ன்று! அவரும் நக்கலாக சிரித்தார்.

"போடறேன்... இதற்காகவாவது செஞ்சு ாட்டறேன்."

"போட்றா! ஆலை இல்லாத ஊருக்கு ஒரு ாமநாதன்...! உனக்கு ஏத்த மாதிரி 'பேபே'ன்னு த்து ஊதுவான்."

"அவனையே கொண்டு வந்து உன் மூஞ்சி லே கரியைப் பூசலலே...!"

"சொல்லாதே? செய் பார்ப்போம்."

வெளியில் வந்தார்கள். சற்று கழித்து ஒரு ஆள் வேகமாக வாசலை நோக்கி விரை வதைப் பார்த்தார்கள்.

"அப்பா...!" குமார், இவரைத் தொட்டுக் காட்டினான். நோட்டுப் புத்தகத்தை இடுக்கிய படி ராமநாதன், அந்த ஆளுடன் உள்ளே வந்து நம்ப முடியாமல் கை, கால்கள் பரபரக்க, வியர்க்க, ஓட்டமும் நடையுமாகக் கடந்து போகிறபோக்கில் ஒரு ஆச்சரியம் கலந்த பரவசத்துடன் இவரைப் பார்த்து வணங்கி...

"நிஜமாவே இவனை இந்தப் படத்திலே போடப் போறாங்க போல் இருக்கு...!" என்றான் குமார்.

பதில் சொல்லவில்லை. சுற்றி வந்து, காரில் ஏறும் சமயம், அந்த நசுங்கல் கண்ணில் பட்டது. கைகளால், அதைப் பற்றி, வலிந்து இழுத்து நிமிர்த்துப் பார்த்தார். அசைய வில்லை. ஒருபெரிய கல்லை எடுத்துத் தட்டினால்....

"ஐயா! இப்படி வேண்டாமுங்க." என்றான் சுப்பையா. "வேகமா ஒரு அடி விழுந்தா இன் னும் மோசமாயிடும். நெளியும்! விரியும். சில சமயம் உடைஞ்சிடும். நசுங்கல் என்னமோ அரை நொடியில் வந்துடுத்து. எடுக்கறப்ப... நேராக்கிறப்ப... பொறுமை வேணும். நிதானம் வேணும். மெதுவா... மெதுவா.. மரச்சுத்தியாலே மாத்தி மாத்தி தட்டிக்கிட்டே இருக்கணும். தட்டத் தட்டத்தான் நிமிரும். கொஞ்சம் கொஞ்சமாக சரியாயிடும். என்ன? நேரம் பிடிக் கும்...!"

பிடிக்கட்டும்.

---



புகழ் பெற்ற எழுத்து வேந்தரான ஜின்காக்டு என்பவரிடம் அவர் நண்பர் கேட்டார்: 'அதிர்ஷ்டத்தை நீங்கள் நம்புகிறீர்களா?' எழுத்தாளர் பதில் சொன்னார் : 'நிச்சயமாக நம்பு கிறேன். நமக்கு வேண்டாதவர்கள் அடையும் வெற்றிக்கு அதைத் தவிர வேறு என்ன காரணத்தைச் சொல்ல முடியும்!'

— எஸ். ராஜகோபாலன்



நம்பிக்கையை ஊட்டுகின்றன. கடந்த ஆட்சியில், 'வசூல் மன்னர்களுக்குத்'தான் முக்கியப் பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டது என்பதையும் நினைத்துப் பார்க்க வேண்டும்.

கடந்த ஆட்சியில் எரிச்சலூட்டக்கூடிய அளவில் இருந்த ஊதாரித்தனம், பகட்டு, படாடோபம் இவையெல்லாம் காணாமல் போய்விட்டது, சாதாரண மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் விஷயம். முதல்வரின் பின்னால் ஆயிரம் கார் பவனி கிடையாது. அவர் செல்லும்போது போக்குவரத்து தடை கிடையாது. கட்-அவுட்டுக்கு கெட்-அவுட் சொல்லியிருக்கிறார் கலைஞர். எளிமை எங்கும் தெரிகிறது. நான் கேள்விப்பட்ட வரையில் அநாவசியமாக சுற்றுலாக்கள் சென்று அரசுக்குச் செலவு வைக்க வேண்டாம் என்று கூட கலைஞர் அமைச்சர்களுக்குச் சொல்லியிருக்கிறார்! பிறந்த நாள் கொண்டாட்டத்தை அடக்கமாக வைத்துக் கொண்டு 'மரம் நடச் சொன்னது' வரவேற்கத்தக்க விஷயம். பதவி ஏற்பின்போது, மிகக் குறைந்த வயதுடைய அமைச்சர்களைக் கூட காலில் விழ அனுமதிக்காததன் மூலம், காலில் விழும் கலாச்சாரத்திற்கு விடை கொடுத்து அனுப்பியவர் கலைஞர் என்று சந்தோஷம் உண்டாகிறது.

# நம்பிக்கை தரும் ஆட்சி!

ஒரு மோசமான, ஊழல் நிறைந்த நிர்வாகத்திற்குப் பின், பொறுப்பு ஏற்கும் முதல்வருக்குச் சற்றே சுமை கூடத்தான். அப்படியும், கலைஞர் தேர்ந்தெடுத்திருக்கிற உயர் அதிகாரிகளை வைத்தே அவருடைய ஆட்சி முறை எப்படி இருக்கும் என்பதை ஊகிக்க முடியும். அந்த அடிப்படையில் பார்க்கப் போனால், முதலமைச்சரின் அலுவலக அதிகாரிகள், தலைமைச் செயலாளர் முதல், மற்ற முக்கியத் துறை அதிகாரிகள் மற்றும் காவல் துறை அதிகாரிகள் ஆகியோரின் நியமனங்கள் கலைஞர் நல்ல நிர்வாகத்தைத் தருவார் என்ற

சட்டம்-ஒழுங்கைப் பொறுத்தவரையில் எங்கேயும் கொலையோ, கொள்ளையோ அல்லது வன்முறைச் சம்பவங்களோ நிகழாமலேயே இருந்து வரும் என்று எந்த நாட்டிலும் எதிர்பார்க்க முடியாது. ஆனால் அப்படிப்பட்ட வன்முறைச் சம்பவங்கள், சட்ட மீறல்கள் நடக்கும்போது ஒரு அரசு, அதன் மீது எப்படி நடவடிக்கை எடுக்கிறது, வன்முறை வளராமல் எப்படித் தடுக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். அந்த வகையில் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கும் விஷயத்தில் இது

## த.மா.கா. எம்.எல்.ஏ. சொக்கர் விமர்சிக்கிறார்

வரை திருப்தியான நிலை இருக்கிறது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் தேர்தல் முடிவுகள் வெளிவந்த நேரத்தில் துவங்கிய தூத்துக்குடி இனக்கலவரத்தை மேலும் அதிக அளவில் பரவாமல் தடுத்து அமைதி ஏற்படுத்த, அமைச்சர்கள் ஆலடிஅருணாவையும், ஜெனி பர்சந்திரனையும் அனுப்பியது. சென்னை நகரைக் கலங்கடித்துக் கொண்டிருந்த ரவுடிக் கூட்டத்தை ஒழித்துக் கட்டியது. ஆனால் சட்டமன்றத்தில் பேசும்போது "போலீஸ் துறை எழுபத்தைந்து சதவீதம் கெட்டுப் போய் விட்டது" என்று சொன்னதை மட்டும் அவர் தவிர்த்திருக்கலாம்!

நான் நம்பினாலும் கூட, விடுதலைப் புலிகள் விஷயத்தில் எச்சரிக்கையோடு செயல்பட வேண்டும்.

ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் தரை வரி, கூரை வரி ஆகியவற்றை எடுத்து கிராமத்து மக்களிடம் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டார் கலைஞர். அரசுக்கு வர வேண்டிய வருவாய், போயஸ் தோட்டத்துக்குப் போய்க் கொண்டிருந்ததைக் கண்டுபிடித்து, சரிசெய்தார். குறிப்பாகச் சொல்வதென்றால் Vend fee என்னும் மதுவிலக்கு ஆயத்தீர்வை கோடிக்கணக்கில் அரசு கஜானாவுக்குக் கூடுதலாக வர வழி செய்யப்பட்டது. எனக்குத் தெரிந்தவரை சென்ற ஆட்சியில் கப்பம் கட்டி சலுகைகள் பெற்று வந்த சில தொழிலதிபர்கள், அதே நிலை தொடர இப்போதைய ஆட்சியாளர்களைச் சந்தித்தபோது கண்டிப்பு காட்டப்பட்டு திருப்பி அனுப்பப்பட்டார்கள். ஊழல் குற்றச்சாட்டு, இதுவரை இந்த அரசு மீது கூறப்படவில்லை என்பது மிகவும் ஆறுதலான விஷயம்.

ஆனால் நிர்வாகத்தில் கீழ் மட்டத்தில்



• சொக்கர்

கலைஞர் அரசு பொறுப்புக்கு வந்தவுடன் விடுதலைப் புலிகளின் நடமாட்டங்கள் கூடி விட்டது என்றோ, குறைந்து விட்டது என்றோ ஒன்றும் சொல்வதற்கில்லை. இருந்தாலும் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக உள்ள சிலர் அவர்களுக்கு சாதகமான அரசு தமிழகத்தில் வந்து விட்டதாகக் கூறி கடிதங்களையும் துண்டுப் பிரசுரங்களையும் விநியோகித்து வருகிறார்கள். இந்த அரசுக்கு அதுபோன்ற அமைப்புகளோடு, நிச்சயம் தொடர்பு இருக்காது என்று




கட்சிக்காரர்கள் தலையீடு இருக்கிறது. அந்தத் தலையீடு ஆட்சிக்கு அவப்பெயரைத் தேடித் தராமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு கலைஞருக்கு இருக்கிறது.

கலைஞரின் முதல் பட்ஜெட் வரவேற்கப் பட வேண்டியது தான். குறிப்பாகப் பருப்பு, தானிய வகைகளுக்குப் பலமுனை வரி இருந்ததை ரத்து செய்து, ஒரு முனையாக மாற்றிய தன் மூலம், ஏறிக் கொண்டிருந்த விலைவாசி ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டது. காஸ் சிலிண்டர் விலையை மத்திய அரசு ஏற்றியதால் அதிருப்தியாக இருந்த மத்திய தர மக்கள் தமிழக அரசின் வரிக் குறைப்பு மூலம் சிலிண்டர் விலை சிறிது குறைந்தது கண்டு ஆறுதல் அடைந்திருப்பார்கள். சென்னைக்கு அருகே கார் தொழிற்சாலை அமைய, கொரிய நாட்டு கம்பெனியுடன் செய்து கொண்ட ஏற்பாடு தொழில் வளர்ச்சியிலும் அரசு சுணக்கம் காட்டாது என்பதைத் தெரிவிக்கிறது.

காவிரிப் பிரச்னை கலைஞர் அரசுக்கு சங்கடத்தைத் தோற்றுவித்தது. ஆனால் அவர் கையாண்ட அணுகுமுறை, திருப்திகரமாக இருக்கிறது. மதுவிலக்கு பிரச்சாரத்திற்கு 25000 பெண்கள் மாநிலம் முழுவதும் நியமிக்கப்படுவார்கள் என்ற அறிவிப்பை ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் எதிர்த்துப் பேசினார்கள். சில ஆளும் கட்சி உறுப்பினர்களும் எதிர்த்தார்கள் என்பது என் நினைவு. ஆனால் 'சாராயப் பானையில் குண்டுகள் பாயும்' என்று சொன்னதன் மூலம் மதுவிலக்கில் உள்ள நம்பிக்கையினை சொல்லியிருக்கிறது அரசு. கிருஷ்ணா நீரை சென்னைக்கு விரைவில் கொண்டு வர எடுக்கப்படும் நடவடிக்கைகள் பாராட்ட வைக்கின்றன.

சட்டமன்றத்தில் ஜனநாயகக் காற்று கிறது. வாதமும் எதிர்வாதமும் செய்வதை கலையாகக் கொண்ட கலைஞர், கடுமைய விமர்சனங்களைச் செய்ய அனுமதித்து, அ குரிய விதத்தில் பதிலளிக்கும் முறையால் ச நடவடிக்கைகளில் களை கூடுகிறது.

கடந்த காலத்தில் சபாநாயகர், முதல்வா காலில் விழுந்து, அவர் கண் ஜாடைக் செயல்பட்டு அவை மரபுகளை ஆழக் தோண்டிப் புதைத்தார். ஆனால் தற்போது சபாநாயகர், பல சந்தர்ப்பங்களில் முதலமை சரே சொல்லியும் கூட அவர் சொல்லுக் கட்டுப்படாமல் தமக்கு எது சரியோ அ செய்து வருகிறார்! 'நான் ஒரு அடங்க பிள்ளை என்று தெரிந்திருந்தும், எனக் கலைஞர் இந்த பொறுப்பை கொடுத்தி கிறார்' என்று சற்றுக் கிண்டலுடன் அ யிலேயே சொன்னார் சபாநாயகர்!

கலைஞரே கூட சபாநாயகருக்கு உரிய யாதை கொடுத்து, பல நேரங்களில் எழுந் அவரது இருக்கைக்கே சென்று ஆலோசனை கேட்பதை அடிக்கடி பார்க்க முடிகிறது! மா றுக் கட்சிக்காரர்களின் கருத்துக்கு முழு மதி புக் கொடுத்துக் கேட்கிறார்கள். அதே நேர தில் குறும்புக்கும், நகைச்சுவைக்கும் பஞ்சமே இல்லை! கரும்பு விவசாயிகளுக்கு மானிய உயர்த்தப்படுமா என்று ஸ்டாலின் கேட் போது, 'மகனே கேட்டாலும் மானியத்தை உயர்த்த முடியாது' என்று சொன்ன பதிலா அவையில் கிண்டலலை!

சென்ற ஆட்சியின்போது செய்ய பட்ட தவறுகளுக்கும் ஊழல்களுக்கும் காரண மானவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படு அதே சமயத்தில் 'பழிவாங்கும் நடவடிக்கை இருக்காது' என்றார் முதல்வர். அதே சமய ஜெ.மீதும், மற்ற அ.தி.மு.க. அமைச்சர்கள் மீ எடுக்கப்படும் நடவடிக்கைகள் துரிதப்படு தப்பட வேண்டும் என்ற கருத்தும் பரவலா இருக்கிறது. சட்ட நுணுக்கங்களை ஆராய்ந் குற்றவாளிகள் நீதிமன்ற விசாரணையில் போது தப்பி விடாமல் இருக்கக்கூடிய அ வில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்ப வேண்டும் என்பதால் ஏற்படக்கூடிய தாமத இயற்கையானதுதான். அதனால் எல்லா துறை யிலும் கோடிக்கணக்கான ரூபாய் ஊழல் நட துள்ள நிலையில், வழக்குகளின் எண்ணிக்கை யும் அதிகமாகிக் கொண்டே போகிறது.

எனினும் இதுவரை அரசு எடுத்துள்ள ந வடிக்கைகளைப் பார்க்கும்போது தவறு செய் வர்கள் தப்ப முடியாது என்ற நம்பிக்கை உ டாகிறது.

தொகுப்பு: ப்ரியா

வண்ணப்படம்: பேஜர் கே. மூர்த்

# ஆப்பிள் வர

'இன்று பெய்தால்தான் ஆச்சு' என்
அடம் பிடித்தபடி கொட்டோ கொ
டென்று கொட்டியது மழை.

தீப்பெட்டியை ஞாபகப்படுத்தும் த
வீட்டின் வாயிலருகே அமர்ந்தப
வெளியே மழையின் வீச்சை அள
கொண்டிருந்தார் டிரைவர் பாலு

அவரருகே தன் செல்ல நா
குட்டியைக் கட்டியணைத்தபடி நி
றிருந்தான் எட்டு வயது சக்
வர்த்தி.

அவனுக்கு அந்தப் பெயர
சூட்டியவர் பெரிய தீர்க்கதரிசியா
இருக்க வேண்டும். அவன் பிற
நாளிலிருந்து அவனுடைய
தையின் தங்க நகை வியாபா
சூடு பிடித்து, ஜுவாலையா
இன்று ஒற்றைச் சூரியனாய் ஒளி விட்
கொண்டிருக்கிறது.

அவர் கடையைச் சுற்றித்தான் உலகமே சு
வதைப் போன்ற பிரமையை ஏற்படுத்தும் அ
விற்குக் கூட்டம்.

கோடிகளையெல்லாம் எப்போ
கடந்து விட்டவரின் ஒரே வாரிசா
சக்கரவர்த்தி, வெளியே காற்று வா
டிரைவர் பாலுவோடு நடந்து வ
போதுதான் அந்த அசுர மழை பி
துக் கொண்டது.

வேறு வழி தெரியாமல்,
சின்ன முதலாளியை அருகேயிரு
தன் வீட்டிற்கு அழைத்து வந்தி
தார் பாலு.

தன்னுடைய சொற்ப சம்பாத்ய
இரண்டு தங்கைகளுக்கு அவர் திருமண
செய்து கொடுத்திருக்கிறார் எ
செய்தியிலிருந்தே அந்த வீட்
வரட்சிக்கு எத்தனை அதிகார
ஆளுமையும் இருக்கும் என்
புரியும்.

கடமைகளை முடி
அவர் மணம் செ
கொண்டு, பின் பிறந்த

னுக்கு மூன்று வயதான அந்த நிலையிலும் அவருடைய பொருளாதார நிலை முன்னேறவில்லை.

“என்ன டிரைவர்? உம்முனு உட்கார்ந் திருக்கீங்க? எனக்குப் போரடிக்குது.”

“மழை விட்டதும் கிளம்பிடுவோம் தம்பி. நீ என் வீட்டுக்கு வந்தது எனக்கு எவ்ளோ பெருமை தெரியுமா? எனக்கு ரொம்ப சந்தோஷம். இப்ப என் பையன் வந்துடுவான். குட்டிப் பையன். அது வரைக்கும் ஜிம்மியோடு விளையாடு. உனக்கு போரடிக்காது.”

“ரொம்ப குட்டிப் பையனா? அப்ப ஜாலி.”

வாழ்க்கைப் பிரச்னைகள் அவரை கழுகாய் வட்டமிட்டபோது, அவருக்கு வேலை போட்டுக் கொடுத்து, அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றியவர் முதலாளி.

முதலாளியைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அந்த நாளும் நினைவில் வந்து நின்றது.

“என்ன பாலு? எப்பக் கல்யாணம் பண்ணிக்கப் போறே?”

“ஐயா, எனக்கு மூணு தங்கச்சி, மூணுமே கல்யாண வயசுல...!”

“அடப்பாவமே! இப்பவே உனக்கு முப்பது வயசாச்சே?”

“என்னைப் பத்தி ஒண்ணுமில்ல முதலாளி. என் கவலையெல்லாம் என் தங்கச்சிங்களப் பத்தித்தான்.”

நெற்றி சுருங்க யோசித்த முதலாளி, தீர்மானமாகச் சொன்னார்.

“கவலைய விடு பாலு. மொத்தமா கணக்கு பண்ணிச் சொல்லு. உன் மூணு தங்கச்சிகளோட கல்யாணத்தையும் ஒரே பந்தல்ல முடிச்சிடுவோம். எவ்வளவு பணம் வேணும்னு சொன்னா மொத்தமா குடுத்துடறேன்.”

“முதலாளி...!”

“யோசிக்காத பாலு. இது கடன்தான். மாசா மாசம் ஒரு தொகையை உன் சம்பளத்தில புடிச்சு கடனைத் தீத்துடலாம். சரிதானே?”

வியாபாரத்தோடு சேர்ந்த பண உருட்டல் உத்தியாக இருக்கலாம். ஆனால் காலத்தால், முதலாளி செய்த அந்த உதவியை ஒவ்வொரு நிமிடமும் நினைத்து தன் விசுவாசத்தை, சுவாசமாக்கி இருந்தார் பாலு.

மாதா மாதம் பிடித்தம் போக மிஞ்சிய வருமானத்தை வைத்து, அந்தக் குடும்பத்தின் அத்தியாவசிய, அடிப்படைத் தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்வது கஷ்டமாக இருந்தது.

அடுத்த வருடம் அவருடைய மகன் முத்துவைப் பள்ளியில் சேர்க்க வேண்டும்.

அந்தக் காரணத்தால், அன்றாட உணவிலும் அவர் குடும்பம் சில தியாகங்களைச் செய்ய வேண்டியிருந்தது.

“என்ன டிரைவர்? உங்க பாப்பாவை எங்க காணும்?”

தன் பெயருக்கேற்றாற்போல் தோரணையாகக் கேட்டான் சக்கரவர்த்தி.

“அவங்க அம்மாதான் எங்கயோ வெளியே கூட்டிட்டுப் போயிருப்பா. மழைக்காக எங்கயாவது ஒதுங்கியிருப்பாங்கன்னு நினைக்



புதுயுகன்

கறேன்."

அவர் வாய் முணுமுணுக்க, கண்கள் வாசலைத் துழாவின.

தன் வீட்டுக்கு முதல்முறையாக வந்திருக்கும் சக்கரவர்த்திக்கு ஏதாவது சாப்பிடக் கொடுக்க வேண்டும் என்று அவர் மனம் ஆசைப்பட்டது. மனைவி திரும்பினால் வசதியாக இருக்கும்.

அவருடைய எண்ணத்திற்கு பதிலுரைப்பதைப்போல, கொட்டும் மழையில் நனைந்தபடி ஓட்டமும் நடையுமாக ஓடி வந்து கொண்டிருந்தாள் அவர் மனைவி.

அவள் கையிலிருந்த முத்துவை வாங்கிக் கொண்டபடி 'என்ன இப்டி வரீங்க? அது சரி, யார் வந்திருக்கா பாரு'' அவர் அறிமுகம் செய்து வைக்க, தலை துவட்டுவதை விட்டு, கண்கள் விரிய ஆச்சரியமாய்ப் பார்த்தாள் அவள்.

மறுகணம், கணவனின் பார்வையிலேயே அவர் மனத்தைப் புரிந்து கொண்டவள், அவசரமாக உட்புறமாக ஓடினாள்.

கையில் முத்துவோடு, அவளைத் தொடர்ந்தவர் அடுக்களைக்குச் சென்றதும் சோர்ந்து போனார். கொஞ்சம் பழைய சோறும், குழம்புமே அங்கு இருந்தன.

எரிச்சலோடு திரும்பியவரின் கண்களில் முத்துவின் கையிலிருந்த அழகான ஆப்பிள் பட்டது.

அவருக்கு அப்போதுதான் புரிந்தது. அந்த ஆப்பிள், முத்துவின் பலநாள் தவத்தின் வரம். சீசனில்லாத நேரத்து அந்த ஆப்பிள் பாலுவின் ஒரு வார கால சாதனை.

அவரைப் பார்த்தபடி அருகே வந்த மனைவி, முத்துவை வாஞ்சையோடு தடவினாள்.

"கண்ணா, உனக்கு அப்புறமா இன்னொரு ஆப்பிள் வாங்கித் தரேன். இதக் குடுக்கிறயா?"

மின்சாரம் தாக்கியதைப் போல், கையை பின்னுக்கிழுத்துக் கொண்டது குழந்தை.

"சொன்னா கேக்கணும்ப்பா. வெளிய, அண்ணனுக்கு குடுக்கணும்ல? நம்ம வீட்டுக்கு வந்திருக்காங்க பாரு."

ஆதரவுக்காகத் தன் தந்தையைப் பார்த்தவன், அது கிடைக்காததால் வேறு வழியின்றி, தன் பொக்கிஷத்தைப் பண்டமாற்றி ஒரு முத்தத்தைப் பெற்றுக் கொண்டான்.

வெளியே வந்தவர்கள், முத்துவை, சக்கரவர்த்தியிடம் விளையாட விட்டனர்.

"தம்பி, எங்க வீட்டுக்கு முதல் தடவையா வந்துருக்கே. இந்த ஆப்பிளைச் சாப்பிடுப்பா. கட் பண்ணி தரச் சொல்லவா?"

"வேணாம், நான் அப்படியே சாப்பிடுவேன். தேங்க் யூ."

முத்துவோடும் நாய்க்குட்டியோடு விளையாடியபடியே ஆப்பிளைக் கடித்தவ[ன்] மறுகணம் அந்தப் பழத்தைத் தன் செ[ல்ல] நாய்க்குட்டிக்குக் கொடுத்தான்.

"என்னைவிட, இந்த ஜிம்மிக்குத்தா[ன்] ஆப்பிள் ரொம்பப் பிடிக்கும்."

அந்த ஜீவன் இரண்டு முறை பழத்[தை] கவ்வி சின்னாபின்னப்படுத்தியபடி, கால[ால்] உதைத்து வெளியே மழையில் தள்ளியது.

தன்னிச்சையாய், அதை எடு[க்க] வெளியே ஓடிய முத்துவை நிறுத்தின[ார்] சக்கரவர்த்தி.

"சீ! அசிங்கம்! அதைப்போய் யாரா[வது] எடுப்பாங்களா? எங்க வீட்டுக்கு வா, பாப்[பா] உனக்கு நெறைய ஆப்பிள் குடுக்கறேன்."

முத்து ஓடிப் போய், தன் தாய் மீது ஏ[றி]க் கொண்டான். நடந்த நிகழ்ச்சியில் நில[ை] குலைந்து போயிந்தவளால், தன் மகன[ை] சமாதானப்படுத்த முடியவில்லை.

அவளையும் குழந்தையையும் வெறு[மை]யாகப் பார்த்தார் பாலு.

"மழை விடப் போகுதே டிரைவ[ர்] போவோமா?"

அவருடைய நெஞ்சில் அப்போதுதா[ன்] மழை ஆரம்பமாகியிருந்தது.

அவர் பாலுவின் கைகளைப் பிடித்[துக்] கொண்டு வெளியே வந்தார்.

சிதைந்து கிடந்த ஆப்பிள் துண்டை ச[...] பந்தாடியபடி நடந்தான் சக்கரவர்த்தி.

அவனிடமும் குற்றமில்லை.

அவனைப் பொறுத்தவரை அந்த ஆப்பி[ள்] 'சிவப்பு நிறத்திலிருக்கும் இனிப்பான [...] பழம்'. அவ்வளவுதான்.

பாலு நடந்தபடியே வெறுமையா[க] சாலையைப் பார்த்தார். அங்கே சில [...]வர்கள் 'பச்சைக்குதிரை' விளையா[டிக்] கொண்டிருந்தார்கள்.

தன் நண்பர்கள் தாண்டிக் குதித்து வி[ளை]யாட ஒருவன் குனிய வேண்டியிருந்[தது.] அவன் குனிந்தால் தான் மற்றவர்கள் தா[ண்ட] முடியும். எல்லோரும் தாண்டி முடிந்த[தும்] குனிந்திருந்தவன் நிமிர்ந்தான்.

"டேய், இப்ப வேற யாராவது குனிங்[க...] நான் தாண்டறேன்."

குனியும் கட்டம் முடிந்து அவனு[க்கு] தாண்டும் கட்டம் வந்தது.

பாலுவிற்குப் புரிந்தது. அவர் [...]மையாக முறுவலித்தார். அந்த முறுவலு[க்குள்] ஒரு பெரிய நம்பிக்கை அலை, ச[...] போடாமல் ஒளிந்து கொண்டிருந்தது.

# வித்வத் சபையில் வித்தியாசமான விழா!

பெண்களுக்கு சம உரிமை என்று இன்று பேசுவதும் காரியத்தில் நடத்திக் காட்டுவதும் எளிது. ஆனால் 1930களின் இறுதியிலேயே அமரர் கல்கி உருவாக்கிய ஒரு புரட்சிப் பெண், 'என்னை அவமதித்த கணவனோடு வாழ மாட்டேன்; தேவையானால் அவனுக்கு ஜீவனாம்சம் தருகிறேன்!' என்று நீதிமன்றத்திலேயே பேசி கைதட்டலைப் பெறுகிறாள். அவள்தான் உமாராணி. "தியாகபூமி" நாவலின் கதாநாயகி. அப்போது அவள் தந்தை, "அம்மா இந்த நாடு எவ்வளவோ தியாகங்களைக் கண்டிருக்கிறது; நீயும் கொஞ்சம் தியாகம் பண்ணக் கூடாதா?" என்று கேட்க, "சுதந்தரத்துக்காக எவ்வளவு தியாகம் வேணுமானாலும் செய்வேன்; ஆனால் அடிமைத்தனத்துக்காக தியாகம் செய்யவே மாட்டேன்" என்று பதிலளிக்கிறாள் அந்தப் புதுமைப் பெண்.

பெண் விடுதலை பற்றி மட்டுமின்றி தேச விடுதலை, தீண்டாமை ஒழிப்பு போன்ற அம்சங்கள் குறித்தும் புரட்சிகரமான கருத்துக்களைக் கொண்டிருந்த தியாகபூமி திரைப்படத்தை அன்றைய ஆங்கிலேய அரசு தடைசெய்தது. அந்தத் தடை உத்தரவு அமலாவதற்கு முன் இருந்த அவகாசத்தில், "திரைப்படத்தை இடைவிடாமல் காட்டுங்கள், எத்தனை மக்கள் பார்க்க முடியுமோ, பார்க்கட்டும்" என்று தியேட்டர் உரிமையாளர்களைக் கேட்டுக் கொண்டார் படத் தயாரிப்பாளரான டைரக்டர் கே. சுப்பிரமணியம். அப்போது அலை மோதிய கூட்டத்தில் கெயிட்டி தியேட்டரின் சுற்றுச் சுவரே இடிந்து போயிற்று!

இவ்வாறு பல்வேறு கலைகள் மூலமாக தேச விடுதலைப் போராட்டத்தில் மகத்தான பாதிப்புகளை ஏற்படுத்திய பெரியவர்களை இவ்வாண்டு சுதந்தர தினத்தன்று சென்னை மியூஸிக் அகாடமி கௌரவித்தது. வழக்கமான கொடியேற்றுதல், சொற்பொழிவுகள் என்று இல்லாமல், சங்கீத வித்வத் சபையின் தலைவர் டி.டி.வாசு வித்தியாசமாக நடத்திய இந்த விழாவின் ஒரே பேச்சாளரான திரு. சி. சுப்பிரமணியமும், 'எல்லோரும் ஒழுக்க சீலர்களாக வாழ்வதாக இந்த நந்நாளில் உறுதிசெய்து கொள்வோம்' என்று கூறியதுடன் தமது பேச்சை நிறுத்திக் கொண்டார்!

செம்மங்குடி, சதாசிவம், எம்.எஸ்., டி.கே.பி., மகாகவி பாரதியார், கல்கி, நாமக்கல் கவிஞர், அவ்வை ஷண்முகம், வாசன், கொத்தமங்கலம் சுப்பு, டைரக்டர் கே. சுப்பிரமணியம், ஏ.வி.எம். என்று பலரையும் (மொத்தம் 19 பேர்) நினைவுகூர்ந்து, பட்டியலிட்டு, அவர்களை அல்லது அவர்களது வாரிசுகளை வரவழைத்து கௌரவித்தது அகாடமி. அத்துடன் இளைய பாரதத்தை மறந்து விடாமல், பள்ளி மாணவ, மாணவியருக்கு தேசிய கீதங்கள் பாடச்சொல்லி, போட்டி வைத்துப் பரிசுகள் வழங்கியது.

* ராஜ்குமார் பாரதி

மாலையில் பாபநாசம் சிவன் பாடல்களை பாபநாசம் அசோக் ரமணியும், மாயூரம் விசுவநாத சாஸ்திரி பாடல்களை டி.வி. கோவிந்தராஜனும், மகாகவி பாரதியார் பாடல்களை ராஜ்குமார் பாரதியும் முந்நாள் ஜனாதிபதி ஆர். வேங்கடராமன் முந்நிலையில் பாடி, தேசபக்தியையும் எழுச்சியையும் ஊட்டினார்கள். மூவருமே இளம் கலைஞர்கள் வட்டத்தில் முன்னணிப் பாடகர்கள். அவர்களது உற்சாகம் ரசிகர்களை எளிதாகத் தொற்றிக் கொண்டது.

அதிலும் ராஜ்குமார் பாரதி தமது கொள்ளுத் தாத்தாவின் பாடல்களைப் பாடக் கேட்பது என்பது ஒரு மெய்சிலிர்க்கும் அனுபவம். தமது பாடல்களை இத்தனை அழகாக, கர்நாடக சுத்தமான ராகங்களில் இசை அமைத்து, இவ்வளவு உணர்ச்சியோடு தமது கொள்ளுப் பேரன் பாடப் போகிறான் என்பதை மகாகவி கனவு கூடக் கண்டிருக்க முடியாது. அதனால் அவருக்குப் பதிலாக நாமெல்லாரும் பெருமிதப் பூரிப்புடன் சொல்லி விடுவோம் : "சபாஷ் பாண்டியா!"

- குட்டிகிருஷ்ணன்

* விழா மேடையில்





# இடி-அமீன் துக்ளக் ஆ கதை

ஆபீஸ்களில்
காண்டீன் மிகவும் முக்
கியமான அங்கம் வகிக்
கிறது. பளுவிலிருந்து தப்
பித்துக் கொள்ள ஒரு
நல்ல புகலிடமாக
விளங்குகிறது. 'சம்திங்'
வாங்குவதற்கும் காண்
டீனை விட வசதியான
இடம் வேறு எதுவும்
இருக்க முடியாது.
இரண்டு ரூபாய்க்கு
டீயை வரவழைத்துவிட்டு,
இரண்டாயிரம் ரூபாய் வரை
யில் மாமூலை பேரம் பேசி முடித்துவிடலாம்.
பரபரப்பான நாட்டு அரசியல் அல்லது அலு
வலக அரசியலை அலசவும், பெண் ஊழியர்
கள் ஆபீஸிற்கு வந்ததும் வராததுமாக, அன்று
காலையில் மாமியாருடன், அல்லது கணவ
னுடன் நடந்த சண்டை சச்சரவுகளை புலம்பித்
தீர்த்துக் கொள்ளவும், காண்டீன் போல ஒரு
வாய்ப்பான இடம் கிடையாது.

இப்படி, அலுவலர்களுக்கு சகல விதங்களி
லும் அனுகூலமாக விளங்கும் ஆபீஸ் காண்
டீனை மூடிவிடுவது என்று திடீர் முடிவெடுத்
தார், எங்கள் டைரக்டர். அதுவும் ஓர் அற்ப
காரணத்துக்காக! அரசாங்கத்தின் மானியத்தை
நம்பி வாழும் எங்களது அலுவலகம்
சார்பில் கையில் கோப்புகள் ஏந்தி,
டைரக்டர் நிதியமைச்சகத்துக்கு பிட்
சைக்குச் செல்லும் நன்னாள் அன்று.
தேவையான கோப்புக்களை எடுத்துத் தரு
வதற்காக, தமது காரியதரிசி, பியூன் என்று
ஒவ்வொருவராகத் தேடினால், எல்
லோருமே காண்டீனில் ஐக்கியமாகி
விட்டனர் என்று தெரிய வந்தது.
டைரக்டருக்கு வந்ததே கோபம்? தஸ்சு
புஸ்ஸென்று மூச்
சிரைக்க, தானே கோப்புக்
களைத் தேடி எடுத்து, தனது ஆஜானுபா
வான உடலையும், கோப்புக்களையும் சுமந்
வாறு மீட்டிங்கிற்குப் போய்ச் சேர்ந்தார்.

அங்கு நடந்த சம்பவமோ, அவருடை
கோபத்தை பன்மடங்கு அதிகரிக்க வைத்த
திருவாளர் டைரக்டர், தன்னுடைய பெய
யும் நிறுவனத்தைப் பற்றியும் அறிவித்த உட
அங்கு குழுமியிருந்த சில சாப்பாட்டு ராம
கள், "அடாடா! தாங்கள் பிரதாப் பவனிலுள்
ஆபீசின் டைரக்டரா? உங்க ஆபீஸ் கா
டீனின் சமோசாவும், குலாப் ஜாமூனும் மிக
பிரபலமாயிற்றே!" என்று சொல்லி எல்லே
பசியையும், நமது டைரக்டரின் ஆத்திரத்

யும் கிளறி விட்டார்கள். மாதம் ஒரு முறையாவது தனது உருவம் தொலைக்காட்சியில் காட்சியளிக்கிறது, அவ்வப்பொழுது பத்திரிகைகள், செய்தித் தாள்களில் தனது எழுத்துக்களும், திருவுருவமும் வெளியாகின்றன; அப்படியிருந்தும் இவர்கள் தன் புகழைப் பாடாமல், தனது ஆபீஸ் காண்டீனின் துதி பாடுவதாவது, என்று டைரக்டருக்கு கெட்ட கோபம் வந்தது.

மீட்டிங் முடிந்து ஆபீஸ் திரும்பிய டைரக்டர், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, எமர்ஜென்ஸி காலத்து இந்திரா காந்தியாக மாறி, "நாளையிலிருந்து காண்டீன் பந்த்!" என்று ஆணையிட்டார்.

அத்வானக் காட்டில் ஆபீஸைக் கட்டிவிட்டு, காண்டீனையும் மூடிவிட்டால், ஊழியர்களின் கதி என்ன ஆவது? மறுநாள் காலையில் ஆபீசுக்கு வந்த உடன், அலுவலர்களுக்கு ஒரு கப் டீயும், சமோசாவும் வயிற்றுக்குள் போகாமல் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. வேலையும் ஓடவில்லை என்று சொல்லத் தேவையில்லை. வேலை என்றைக்குத்தான் ஓடியிருக்கிறது! அண்டை அசலில் உள்ள பெட்டிக்கடை என்று அலுவலர்கள் அலையாக, அலைந்து ஒரு கப் டீ குடித்துவிட்டு வேலையைத் துவங்குவதற்குள் (?) போதும், போதும் என்றாகி விட்டது. இப்படி எத்தனை நாட்களுக்கு நாயாக அலைய முடியும் என்று கவலைப்பட்ட ஊழியர்கள், டைரக்டரிடம் சென்று முறையிடுவது என்று தீர்மானித்தனர். 'இடி அமீனின்' இடிமுழக்கத்திற்கு பயந்த அலுவலர்கள், பூனைக்கு (யானைக்கு என்று மாற்றிப் படிக்கவும்) யார் மணி கட்டுவது என்று தயங்கினார்கள். ஒரு வழியாக, தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, டைரக்டரைச் சந்தித்து, டீ, காப்பி குடிக்காமல் தொண்டையும், நாக்கும் வறண்டு போகிறது, இந்நிலையில் எப்படி வேலை செய்ய முடியும் என்று கண்ணீர் விடாத குறையாகக் கதறினார்கள்.

டைரக்டரோ, "உங்களுக்கு காப்பி, டீ தானே வேணும்! ஆங்காங்கே மின்சார பாயிலர் வைத்து சுடு தண்ணீருக்கு ஏற்பாடு பண்ணி விடுகிறேன். இனிமேல் எல்லோரும் தங்களுக்கு வேண்டிய டீ, காப்பியை தானே தயாரித்துக் கொள்ள வேண்டும். அமெரிக்காவில் எல்லோரும் தம் வேலையைத் தாமேதான் செய்து கொள்கிறார்கள். காண்டீனில் போய் உட்கார்ந்து காலத்தை விரயம் பண்ணாமல், டீயோ காப்பியோ குடித்துக் கொண்டே, வேலையையும் தொடர்ந்து கவனிக்கிறார்கள்" என்று தாம் அடிக்கடி அமெரிக்காவிற்குச் சென்று வரும் பெருமையை அளந்து கொண்டார். அமெரிக்காவில் கிடைப்பது போல், இங்கும் டாலரில் சம்பளம் கிடைக்குமா என்று கேட்க யாருக்கும் துணிச்சல் இல்லை.

டைரக்டரின் கட்டளையின்படி, மறுநாளே ஒவ்வொரு தளத்திலும் ஒரு சுடு தண்ணீர் பாயிலர் வைக்கப்பட்டது. எல்லா ஊழியர்களுக்கும் போனஸாக டீ குடிப்பதற்கு பீங்கான் கோப்பை ஒன்றும் வழங்கப்பட்டது. ஊழியர்கள் அனைவரும், விம்பிள்டன் ஆட்டத்தில் வெற்றி பெற்று, இங்கிலாந்து இளவரசியிடமிருந்து கோப்பையைப் பெற்றது போல், அல்ப சந்தோஷத்துடன் அன்று முழுவதும் கோப்பையும் கையுமாக வளைய வந்து கொண்டிருந்தனர்.

காண்டீனை மூடினாலும் மூடினார்கள், மெதுவாக ஒவ்வொரு அறையும் ஒரு மினி சமையலறையாக மாற ஆரம்பித்தது! கோப்புகளுக்கும், காகிதங்களுக்கும் பதிலாக, பிளாஸ்க், கோப்பைகள், ஸ்பூன், பால் பொடி, சர்க்கரை, திடீர் காப்பித்தூள், டீ பைகள் போன்ற அத்தியாவசிய சாமான்கள் மேஜையை அலங்கரிக்க ஆரம்பித்தன. வெறும் டீ, காப்பியுடன் திருப்தியடையாத ஊழியர்கள், கொறிப்பதற்கு மிக்ஸர், பிஸ்கெட் என்று விதவிதமான தின்பண்டங்களை பாட்டில்களில் நிரப்பி மேஜைகளில் கொலுவைத்தனர். வெளியிலிருந்து வருபவர்களுக்கு, அலுவலகமா, பெட்டிக்கடையா என்று சந்தேகம் வரும் அளவிற்கு ஒவ்வொரு அறையும் உருமாறியது.

ஆபீஸில் ஏற்கெனவே உள்ள பத்திரிகை கிளப், சீட்டு கிளப்புகள் போதாது என்று, ஆங்காங்கே ஐந்தாறு ஊழியர்கள் கூட்டுச் சேர்ந்து காப்பி கிளப், டீ கிளப் என்று துவங்கி காண்டீன் இல்லாத குறையைத் தீர்த்துக் கொள்ள ஆரம்பித்தனர்.

அதோடு மட்டுமல்லாமல், மாதக் கடைசியில் குடும்பப் பெண்கள், வீட்டில் தட்டுப்பாட்டை சமாளிக்க, கரண்டி ஏந்தி அக்கம்பக்கத்து வீடுகளில் சர்க்கரை, காப்பித்தூள் என்று கடனுக்கு அலைவது போல், அலுவலக ஊழியர்களும் ஒவ்வொரு அறையாக மாறி மாறி கடன் வாங்கவும் பழகிக் கொண்டார்கள்.

காண்டீன் இல்லாத ஆபீசும் ஒரு ஆபீசா என்று, ஆரம்பத்தில் அழுது கொண்டிருந்த ஊழியர்கள், நாளாவட்டத்தில் காண்டீன் சமோசாவையும், குலாப் ஜாமூனையும் மறந்து மிக்ஸர், பிஸ்கெட் வகைகளை ரசிக்கக் கற்றுக் கொண்டார்கள். காப்பி, டீ கிளப்புகளில் குஷியில் தன்னையே மறந்தார்கள். பார்க்கப் போனால், பெரும்பாலான ஊழியர்களுக்கு,

ரமாமணி சுந்தர்




இந்தக் கிளப்புகள் ஒரு நல்ல பொழுதுபோக்காக அமைந்தன. தினமும் இரண்டு தடவை ஒன்றாகக் கூடி மிக்ஸர், பிஸ்கெட் என்று பந்தாவுடன், ஜப்பானின் டீ வைபவத்தை நினைவுபடுத்தும் விதத்தில், டீ குடித்து முடிக்க, குறைந்தபட்சம் அரைமணி நேரமாவது செலவழித்தார்கள். டீ குடித்த உடன் வேலையைத் தொடர்ந்தார்களா? அவரவர்கள் டீ குடித்த கோப்பை, ஸ்பூன் எல்லாவற்றையும் அலம்பி வைத்து சிரம பரிகாரம் பண்ணி வேலையைத் துவங்குவதற்குள், அடுத்த வேளை டீ அல்லது சாப்பாட்டு நேரம் வந்துவிடும்!

**கா**ண்டீன் இல்லாத ஆபீசில் அலுவலர்கள் அடிக்கும் லூட்டி, டைரக்டரின் காதுகளுக்கு எட்டாமல் இல்லை. ஆனால், அவருக்குத்தான் இப்பொழுது வாயைத் திறக்க வழியில்லாமல் ஆகி விட்டதே! இப்படித்தான், ஒரு நாள் அக்கவுண்ட்ஸ் கிளர்க் மூர்த்தி, ஒன்பதரை மணி ஆபீசுக்கு சாவகாசமாக பதினோரு மணிக்கு வந்து கொண்டிருந்தான். ஏன் லேட் என்று டைரக்டர் தப்பித்தவறி கேட்டு விட்டார். அவ்வளவுதான், நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டார். அன்று காலை தன் வீட்டில் சமையல் காஸ் தீர்ந்து விட்டதில் ஆரம்பித்து, மண்ணெண்ணெய் அடுப்பில் சமையல் செய்து முடிக்க நேரம் ஆகி விட்டது என்றும், காண்டீன் இருந்தால் இவ்வளவு சிரமப்பட்டாவது லஞ்ச் டப்பா கொண்டு வர வேண்டிய அவசியமில்லை என்றும், நீள்மாக வியாக்கியானம் செய்ய ஆரம்பித்தான், மூர்த்தி. ஆளை விட்டால் போதும் என்று டைரக்டர் அங்கிருந்து எடுத்தார் ஓட்டம்!

**யா**னைக்கும் அடிசறுக்கும் (இந்தப் பழமொழிதான் நமது டைரக்டருக்கு எவ்வளவு நன்றாகப் பொருந்துகிறது!) என்று தன் தவறை உணர்ந்து காண்டீனைத் திறக்கவும், அவருடைய ஈகோ இடம் தரவில்லை. நிலைமையை எப்படி சமாளிப்பது என்று டைரக்டர் முழிமுழியென்று முழித்துக் கொண்டிருக்கையில், நிதியமைச்சரகத்துடன் அடுத்த வருடாந்தர மீட்டிங்கிற்கான தருணம் வந்தது.

திருவாளர் டைரக்டர் தமது ஆண்டு அறிக்கையை சமர்ப்பித்து முடித்த உடன், அங்கு குழுமியிருந்த உறுப்பினர்கள், "உங்கள் கணக்கு வழக்கெல்லாம் இருக்கட்டும். தாங்கள் யாரைக் கேட்டுக்கொண்டு ஆபீஸ் காண்டீனை மூடினீர்கள்? முன்பெல்லாம் உங்க ஆபீசுக்கு வந்தால் வாய்க்கு ருசியாக சாப்பிடக் கிடைக்கும். கடந்த ஓராண்டு காலமாக வெறும் பிஸ்கெட்டும், டீயும் தான். யாருக்கு வேணும் உங்க பிஸ்கெட்டும் டீயும்? நாங்க அடுத்த மீட்டிங்கிற்கு வருவதற்குள், காண்டீனைத் திறக்க ஏற்பாடு பண்ணுங்கள்" என்று ஒரு அதட்டும் போட்டார்கள்.

பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று, டைரக்டருக்கு. காண்டீனைத் திறந்தால் தான், அடுத்த ஆண்டிற்கான மானியம் கிடைக்கும் போலிருக்கிறது என்று சாக்குப் போக்கு சொல்லி, காண்டீனை மூடிய அதே வேகத்தில் காண்டீனைத் திறக்கும்படி கட்டளையிட்டார் திருவாளர் டைரக்டர்.

இப்பொழுது அலுவலர்கள் டைரக்டருக்கு "இடி அமீன்" என்ற பட்டப் பெயருடன் முகமது பின் துக்ளக் என்ற செல்லப் பெயரும் சூட்டி மகிழ்ந்தனர்.

# ஏ கிளாஸ் ஜெயில்



"வா!" என்றாள் அம்மா. சருகு மாதிரி ஆகி விட்ட முகத்தில் நிரந்தரமான சோக ரேகைகள். என்றாவது அம்மா மலர்ந்து சிரித்துப் பார்த் திருக்கிறோமா என்று புவனா நினைத்துப் பார்த்தாள். ஞாபக மில்லை.

அப்பா, அம்மாவுக்குத் தாலி கட்டி விட்டு, குதிரைகளோடு குடித்தனம் நடத்தத் தொடங்கின தினத்தில் சுருங்கிய முகம் அது.

ஆனால் ஒரு வார்த்தை அவள், அப்பாவை எதிர்த்துப் பேசியது கிடையாது! மனசுக் குள் புழுங்கிப் புழுங்கி லட்சம் தடவை செத்துப் போயிருப் பாள்!

அது பற்றி புவனா கேட்கிற போதெல்லாம், "இது சிறை புவனா. மீள முடியாத சிறை. ஆனா எனக்குன்னு விதிச்சதை அனுபவிச்சுத்தானே ஆகணும்? நீ போயிடு. யாரையாவது காத லிச்சி, கல்யாணம் பண்ணிண்டுடு. இவர் பண்ணி வெப்பார்னு காத்திருக்காதே!" என்பாள்.

ஒரு அம்மா பேசுகிற பேச்சா? ஆனால் கார ணமில்லாமல் இல்லை. புவனாவின் கலை வெறி.. அரிசியில் படம் வரைகிற பொறுமையும் திறமையும்... தரையில் பாதம் படுவது தெரியா மல் பரதம் ஆடுகிற லாகவம்... மணிக்கணக்கில் உட்கார்ந்து, கிரங்கிப் போய் கோலங்களில் ஜாலம் காட்டும் நேர்த்தி...

லட்சுமணனைக் காதலித்து, கைப்பிடித்து, வீட்டை விட்டு வந்து தனிவாழ்க்கை தொடங் கியபோது சிறகடிப்பது போலத்தான் இருந்தது. ஆனால் பறவைகளும் தரையிறங்கத்தானே வேண்டியிருக்கிறது?

"புவனா, நீ படிச்சவள். வாழ்க்கைக்குக் காசு முக்கியம். அதுதான் கடவுள். உன் நடனமும் அரிசி பொம்மையும் நாலு பைசாவுக்குப் பிர யோஜனப்படுமா? எல்லாரும் பத்மாசுப்ரமணி யம் ஆகறதில்லை. தப்பா எடுத்துக்காதே. நீ என்ன பண்றே..."

வேலைக்குப் போனாள். நட்சத்திர ஓட்ட லில் ரிசப்ஷனிஸ்ட். முகம் நிறையப் புன்ன கையும் மடி நிறையப் பணமும்.

ஃப்ரிட்ஜ், டீவி, வாஷிங்மெஷின், வாரம் ஒரு புடைவை... மாதம் இரண்டு சினிமா என்று வாழ்க்கை சுகமாகத்தான் ஓடுகிறது...

நாட்டியமும் அரிசி ஓவியமும் வண்ணக் கோலங்களும் அவ்வப்போது எண்ணிப் பெரு மூச்சு விட உதவின.

படுக்கையறையில் கண்ணை மூடி, 'எத் தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா' என்று லட்சுமணன் எப்போதாவது பாடுவான். புவனா சிரித்துக் கொள்வாள்.

**ஊ**ர்க்கதை, சொந்தக் கதை, சோகக் கதை எல்லாம் பேசிவிட்டு, அப்போதுதான் ஞாபகம் வந்தவளாக அம்மா கேட்டாள் : "எனக்குத்தான் ஜெயில்னு ஆயிடுத்து. நீயாவது நல்லாருக்கியா புவனா?"

புவனா சிரித்தாள். அம்மாவை உற்றுப் பார்த்துச் சொன்னாள் : "ஓ யெஸ்! ஏ கிளாஸ் ஜெயில்!"

ஸ்ரீராம்













— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

# புதிய ஊழல்




**வேதா கோபாலன்**

நான் கையைப் பிசைந்தேன். மனசு படபடத்தது. வியர்த்துப் போனது. கண்ணாடியில் நான் நானைப் பார்த்து... சே... என்னைப் பார்த்துக் கேலி செய்தது. பாருங்கள். வார்த்தை குழறுகிறது. அத்தனை குழப்பம். பதற்றம்.

இன்றைக்கு எப்படியாவது ராமநாதனின் புதிய ஊழலைக் கண்டுபிடித்தே தீர வேண்டும். அதனால் உனக்கென்ன லாபம் என்று கேட்கிறீர்களா? இல்லாமலா இத்தனை மெனக்கெடுவான் ஒரு மடையன்?

தலையைச் சொறிந்து யோசித்தேன். மண்டை காய்ந்ததே கண்ட பலன். என்ன செய்ய? என்ன செய்ய?

ஆங். சினிமாவில் 'ஃபாஸ்ட் மோஷனில்' காண்பிப்பார்களே. அப்படி ஒரு வேகம் என்னைத் தொற்றிக் கொண்டது. மேஜையின் இழுப்பறையில் பார்த்தேன். உதடு பிதுங்கியது தன்னிச்சையாய். காணோம். அதற்கான தடயம் எதுவும். ஒருவேளை அப்படி இருக்குமோ? வாரப் பத் திரிகைகளைத் தலைகீழாய்ப் புரட்டிப் போட்டதில், தேதி வாரியாய் இருந்த அவை, குப்பை வாரியம் போல் ஆகியதே மிச்சம். எங்கே? எனக்கு அது பற்றி ஒரு சின்ன 'க்ளூ' கொடுப்பவருக்குப் பாதி ராஜ்ஜியம் கொடுக்கத் தயாராய் இருந்தேன். என்றைக்கேனும் எனக்கு முழு ராஜ்ஜியம் கிடைத்தால்.

சட்டென்று சீனா லெண்டிங் லைப்ரரி நினைவுக்கு வந்தது. என் மனசில் ஒரு பளிச். "வருகிறேன் ராமநாதா... வருகிறேன்..." மனசுக்குள் கூவினேன். கரெக்ட். அப்படித்தான் இருக்க வேண்டும். இறைவா... என் ஊகத்தைப் பொய்யாக்கி விடாதே. நான் நினைத்தது மட்டும் சரியாக இருக்கட்டும். உனக்குத் தேங்காய் உடைக்கிறேன் என்று எத்தனையோ முறை பிள்ளையாருக்கு ஆசை காட்டினேன்.

இன்றைக்கென்று பார்த்து லைப்ரரி லீவாய் இருந்து விடப் போகிறது என்று உள்ளூர பயம்தான். இருந்தாலும் பிள்ளையார் என் ஒற்றைத் தேங்காய்க்கு ஆசைப்பட்டு லைப்ரரியைத் திறந்து வைத்திருப்பார் என்று மனசோர நம்பிக்கை!

கடவுளே. வாழ்க்கையில் உயரப் போகும் ஒரே வாய்ப்பை நழுவும்படிச் செய்துவிடாதே. நான் கண்டுபிடித்தே ஆக வேண்டும். ப்ளீஸ். ப்ளீஸ்... இறைவனை இறைஞ்சியவாறு லைப்ரரியைத் தெருக்கோடியிலிருந்தே பார்த்தேன். அப்பாடா. திறந்திருக்கிறது. இதுவே சகுனம் தான்.

**லை**ப்ரேரியனை அணுகினேன்.

"என்ன சார்..." அவர் எரிந்து விழுந்தது புரிந்தும் புரியாத மாதிரி கேட்டேன்.

"சார்... ராமநாதன் எழுதின 'புதிய ஊழல்'ங்கற புத்தகம் இருக்கா? முந்தாநேத்தி கொண்டு போனேன். அதில் என் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் இருந்தது. கவனிக்காமல் எங்க வீட்டில் யாராவது திருப்பிக் கொடுத்திட்டாங்களோன்னு..."

## போட்டிக் கதை - 1

# வாழ்வின் திருப்பங்கள்

இரமணாஸ்ரமம். அப்பா தியான மண்டபத்தில் இருப்ப தாகச் சொன்னார்கள். காத்திருந் தாள் நிவேதிதா.

காத்திருத்தல்கள், சில சமயம் அவசியமானது. சில சமயம் எரிச்சல் ஊட்டக்கூடியது. நிவேதிதாவிற்கு காத்திருத்தல்கள் புதியவை அல்ல. மந்திரியின் வருகைக்காக, எம்.எல்.ஏ.யின் வருகைக்காக, சில சமயம் முதல் வரின் வருகைக்காக மணிக் கணக்கில் காத்திருந்திருக்கிறாள். தற்போது அப்பாவின் வருகைக் காகக் காத்திருப்பது சற்றே மாறு தலாய், பெரும் சுகமாக இருந் தது. எதிரே 'சும்மா' பரந்து விரிந்திருக்கும் அண்ணா மலை கூடுதல் சுகம் தந்தது.

நிவேதிதாவின் பார்வை மலை மீதிருந்த பல திருப்பங்களின் மீதும், அழகான வளைவுகளி லும் இருக்க, மனம் மட் டும் வாழ்வின் திருப்பங் கள் மீது.

நிவேதிதாவின் பள்ளி இறுதித் தேர் வில் முதல் திருப்பு முனை வந்தது. மாநிலத்தில் முதலாவதாகத் தேறியிருந்தாள். சந்தோஷப்பட அம்மா இல்லாது போனாள்.

அப்பா, சுமை கூடினா லும் கனம் தெரியாது சுமந் தார். ஆர்.கே. நியூக்ளியர் பிஸிக்ஸ் பி.எச்.டி. முடிந்த கையோடு கல்பாக்கத்தில் தலைமை என்ஜினியர் வேலை. வேலை நிமித்த மாக கம்ப்யூட்டர் பற்றித் தெரிந்து கொள்ள நேர்ந்த போது, முழுக் கவனமும் அதில் திரும்பியது. கம்ப் யூட்டரின் கன பரிமாணத் தைக் கண்டுணர்வது சற்றுக் கடினம். ஆர்.கே. கண்டுணர முயற்சித்தார். ஆபரேட்டிங் சிஸ்டத்திலிருந்து, ஆப்டிகல் பைபர் வரை. விளைவாய், சென்னையில் மிகப் பெரிய



**திருவருணை சிவசு**

ம்ப்யூட்டர் கன்சல்டன்சியின் உயர் பதவிக்கு ாறியாயிற்று.

வழிகாட்டுதல் என்பது மிகப் பெரிய விஷயம். இதுதான் வழியென்று சொல்வது கஷ்டம். 'இஷ்டப்படி செல்' என்பதும் வழி காட்டுதல் இல்லை. அம்மா இல்லாத பெண்ணுக்கு வழிகாட்டுதல் சிரமம்.

பெண்ணின் விருப்பு, வெறுப்பு அறிந்து வழிகாட்டினார் ஆர்.கே. பட்டப் படிப்புக்குப் பின் அண்ணா யூனிவர்சிடியில் கம்ப்யூட்டர் மேற்படிப்பு- எம்.சி.ஏக்கு செல்லுகையில் பெண்ணை உச்சிமோர்ந்து கேட்டார்.

"நிவேதி, அப்பா இருக்கிற துறையிலதான் பெண்ணும் பிரகாசிக்கணும்கிறது இல்லை..."

பதிலாய் நிவேதிதா ஒரு கடிதம் காண்பித்தாள். கம்ப்யூட்டர் மாதப் பத்திரிகை ஒன்றில் அவள் எழுதி வெளிவர இருக்கும் கட்டுரை. ஆணைத் தொடர் சம்பந்தமாக சில சிக்கலான வினாக்களுக்கு விடையிருந்தது கட்டுரையில்.

"சரிம்மா. ஆனா, அதுக்காக யு.எஸ். போய் செட்டிலாகிற எண்ணம் மட்டும் வேணாம்மா..." என்றார்.

எம்.சி.ஏ. முடித்த கையோடு டாடா கன்சல்ட்டன்சியின் வேலைக்கான உத்தரவுக் கடிதம் வந்தது. கூடவே இன்னுமொரு அரசாங்க கவர். ஐ.ஏ.எஸ். தேர்வில் தேசிய அளவில் மூன்றாவதாக வந்திருந்தாள்.

ஒருநாள் முழுக்க யோசித்தார்கள் தகப்பனும் பெண்ணும். ஒரு முடிவுக்கு வரவில்லை.

நிலவொளியில் மலை சுற்றும் பாதையில் அப்பாவும் பெண்ணும்.

"நிவேதிதா. கம்ப்யூட்டர் கம்பெனிக்கு உன்னைப் போல ஆள் கிடைக்கிறது சிரமம் இல்லை. நம்ம





நம் ஊரில், பிளாட்பாரத்தில், கடவுள் உருவங்களைத் தீட்டி வைப்பதும், அதைப் பார்த்துவிட்டு, நாம் காசு போடுவதும் வழக்கம். அதைப்போல், பிரேசில் நாட்டில் ரியோ-டி-ஜெனிரோ நகரில் உள்ள கடற்கரையில் இந்த இளைஞர், மணலில் கோட்டை கட்டுகிறார். மக்கள், மணற்கோட்டையை ரசித்துவிட்டுக் கொடுக்கிற பணம்தான் இவருக்கு வயிற்றுப் பிழைப்பு.

—எஸ்.ஷி.

இரண்டு பேருக்குமே பணம் குறியில்லை. என்னோட புத்தகங்களோட ராயல்டியே போதும். ஆனா நீ ஐ.ஏ.எஸ். முடிச்சுட்டு கலெக்டரா வந்தா நிறைய செய்வேன்னு தோணுதும்மா...''

அவள் அப்பாவிற்குக் கட்டுப்பட்டாள். பயிற்சிக்கு, பஞ்சாபுக்குப் போனாள்.

ஆர்.கே. பணியிலிருந்து விடுபடும் வயது வந்தாலும், இன்னொரு புதிய பதவி தந்து வைத்துக் கொள்ள முயன்றது அந்த நிறுவனம்.

"இல்ல... போறும்... நான் வர்றேன்...'' என்று சொல்லி விட்டார். சொல்லி இரண்டு மாதம் இருக்கும். செழிப்பான அந்த மாவட்டத்துக்கு கலெக்ட்ராக நியமனம் வந்தது, நிவேதிதா விற்கு.

"நிவேதி, நீ மட்டும் புதிய இடத்துக்கு போம்மா. கூடவே நம்ம சமையல் மாமியை வெச்சுக்கோ. எனக்குள்ள நான் யார்னு தேடற சமயம் இது. அதுக்கு உன்னோட ஒட்டம் சரியா வராது. இப்போதைக்கு எனக்குச் சரியான இடம் ரமணாஸ்ரமம்தான்...''

மௌனமாக அப்பாவைப் பார்த்தாள் நிவேதிதா. பார்வையில் பிரிவு தெரிந்தாலும் அப்பாவின் எண்ணத்திற்குக் குறுக்கே நிற்க வில்லை.

கண்டிப்பும் கருணையும் அதே சமயம் ஆணவமும் பிடிவாதமும் இல்லாத ஒரு கலெக்டரை அந்த மாவட்டம் முதன் முதலாக சந்தித்தது. டிரைவர் தாணுவைக் கூட மரியாதையோடு கூப்பிடுவதை ஆச்சர்யத் தோடு பார்த்தது, கலெக்டர் அலுவலம். ஆச் சர்யம் ரொம்ப நாள் நீடிக்கவில்லை.

தன்னிடம் இருப்பதைப் பிறரிடமும் எதிர்பார்ப்பது மனிதம். நேர்மையையும், கண்ணியத்தையும் பிறரிடமும் எதிர்பார்த்தாள் நிவேதிதா. அவளின் எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டவர்களாக இருந்தனர் ஊர் அரசியல்வாதிகள்.

செழிப்பான அந்த மாவட்டத்தின் நெல் லெல்லாம் அரசாங்க கிடங்குக்குப் போகாமல் ஒரு தனியார் மில்லுக்குப் போவதை அறிந் தாள் நிவேதிதா. மில்லுக்கு சீல் வைத்து, அரசாங்கத்திற்கு ஓர் அறிக்கை அனுப்ப, பரிசாய் மாறுதல் உத்தரவு வந்தது!

மாற்றம் இடத்திற்கு மட்டும்தான். மனதிற்கோ, நிவேதிதாவின் செயல்களுக்கோ அல்ல. ஒரு வருட இடைவெளியில் மூன்று இடம் மாறியாயிற்று. இதோ இப்போது இந்த பின்தங்கிய மாவட்டம் வந்து மூன்று மாதம் ஆகிறது.

நிவேதிதாவின் வரவு ஆளும் கட்சி யினருக்கு அதிர்ச்சியாக இருந்தது. எம்.எல். ஏ.வின் ஏ.சி. தியேட்டரின் லைசென்சை கேன்சல் செய்த முதல் கலெக்டர் நிவேதிதா வாகத்தான் இருக்க முடியும். அளவுக்கு அதிகமாகக் கட்டணம் வசூல் செய்தது தியேட்டர்.

'மாறுதல் நிச்சயம்' என்று பேசிக் கொண்டார்கள். அதுவும் அந்த விபத்து நேர்ந்த பிறகு! ஊருக்கு வெளியே இணைப்பாய் இருந்தது அந்தப் புதிய பாலம். பாலத்தைக் கட்டியது ஆளும்கட்சியின் செயலாளர். கட்டுமானப் பணியில் ஊழலால் பாலம் வலுவற்றதாக இருக்க, ஒருநாள் பயணிகளுடன் கூடிய பஸ் விழுந்தது.

கான்ட்ராக்டரின் மேல்தான் குற்றம் என்றும், உறுதியான நடவடிக்கையும் நஷ்ட ஈடும் அவர்தான் தரவேண்டும் என்றும் குறிப் பெழுத, விவகாரம் விவாதமானது சட்ட சபையில்.

நிவேதிதா நிலைகொள்ளாமல் இருந்தாள். உருப்படியாக ஏதும் செய்யாமல், இப்படி ஊர் ஊராகச் செல்வதில் என்ன அர்த்தம் என்ற நினைவு அடிக்கடி எழ ஆரம்பித்து விட்டது. செழிப்பிலோ, செல்வத்திலோ குறையில்லாத தான் இப்படி அல்லல் பட வேண்டுமா என்ற எண்ணம் மேலோங்கி விட்டது நிவேதிதா விற்கு. கலெக்டர் வேலையை உதறி விடலாமா என்று யோசிக்க ஆரம்பித்தாள். விளைவு இப்போது ஆஸ்ரமத்தில் இருக்கிறாள்.

தியான மண்டபம் விட்டு வெளியே வந்த ஆர்.கே., வெளியில் நிவேதிதா இருப்பதை அறிந்து, ஆவலாய் பின்பக்கம் சென்று பரிவுடன் தொட்டார், பெண்ணை.

"என்னம்மா... திடீர்னு.. நாளைக்கு ரமணரோட ஆராதனை. பார்த்துட்டுப் போகலாம்ல?"

"போற மாதிரி இல்லப்பா..."

"என்னம்மா சொல்றே?"

நிவேதிதாவின் அனைத்து மாறுதல்களையும் அறிந்தவர்தான் ஆர்.கே. கூடவே நிவேதிதாவின் தெளிவான சிந்தனைகளையும் அறிந்தவர் என்பதனால் அதிக முக்கியத்துவம் தரவில்லை, எந்த செய்திகளுக்கும்.

எந்த பாவனையும் காட்டாமல் பெண் சொன்னதை கவனமாகக் கேட்டுக் கொண்டார் ஆர்.கே.

மறுநாள் ஆராதனை. நிரம்ப கூட்டம். "இங்க ஆராதனைக்கு நல்ல சாப்பாடு உண்டும்மா... ஆனா என்னோட வழக்கம் வேற. ராத்திரி வரைக்கும் விரதம். முடிஞ்சா இருந்து பாரேன் நீயேன்..."

"வழக்கமில்லையேப்பா..."

"சும்மா இருந்து பாரேன். பட்டினி இருக்கிறது கூட ஒரு சுகம்தாம்மா."

'சரி' என்றாள் நிவேதிதா. இதுவரை பட்டினி என்றால் என்னவென்றே அறியாத நிவேதிதா. கேம்ப் போனால் கூட கையோடு சமையல் மாமியின் சாப்பாடு போகும். பூஜைக்குப் பின் பசி கூடியது.

"எப்படிப்பா... உங்களால பட்டினி இருக்க முடியுது?"

"கஷ்டமில்லம்மா. பழகிட்டா சரியாயிடும்."

மாலை பூஜைக்கு சென்றவர் கையில் மாலைப் பத்திரிகையுடன் திரும்பினார்.

"உன்னோட மாவட்டச் செய்தி தலைப்பா வந்திருக்கும்மா."

"என்னோட மாறுதல் உத்தரவாப்பா.."

"இல்லம்மா.. பட்டினிக்கு ஒரு குடும்பமே பலின்னு..."

"என்னப்பா சொல்றீங்க? நாம இருக்கிறது இந்தியா. எத்தியோப்பியா இல்லை!"

"தமிழ்நாட்டுல உன்னோட மாவட்டம் ஒரு எத்தியோப்பியா மாதிரின்னு தெரியாதாம்மா...?"

"பட்டினியால் சாவா, நிஜமா?" பேப்பரை நடுக்கத்துடன் வாங்கிப் பார்த்தாள். காலையிலிருந்து பட்டினி என்பதனால் கூடுதல் நடுக்கம்.

"நிஜம்தாம்மா நிவேதி. இன்னமும் இந்தியாவிலே ஒருவேளை சோத்துக்கு கஷ்டப்படற ஜனங்க இருக்கிறது நிஜம்மா. இங்க ஆஸ்ரமத்தில் பகல்ல ஏழைகளுக்கு அன்னதானம் உண்டு. தினம், தினம் ஒரு புது முகம் பார்க்கறேம்மா."

நிவேதிதா மௌனமாக இருந்தாள். அப்பாவே தொடர்ந்தார்.

"போம்மா, போ உன்னோட இடத்துக்குப் போ. நான் இங்க எப்படி ஒரு யோகி கணக்கா இருக்கிறேனோ அது மாதிரிதான் நீயும். கஷ்டம் யாருக்கு இல்ல? எங்க இல்ல? உன்னோட வேலையே மத்தவங்களோட கஷ்டங்களைத் துடைக்கிறதுதான். அதில உன்னோட கஷ்ட நஷ்டங்களைப் பார்க்காதே.

## அமைச்சர்களை அதிகம் பெற்ற மாநிலம்

தேவகௌடா மந்திரி சபையில் பிரதிநிதித்துவம் உள்ள மாநிலங்கள்:11. பிரதிநிதித்துவம் இல்லாத மாநிலங்கள் : 14. அமைச்சர்களை அதிகம் பெற்ற மாநிலம் பீகார். மாநில வாரியாக அமைச்சர்கள்:

பீகார் - 9, தமிழ்நாடு - 8, உ.பி. - 5, கர்நாடகா - 4, ஆந்திரா - 4, ஒரிசா -2, அஸ்ஸாம் - 2, பஞ்சாப்- 1, ராஜஸ்தான் - 1, கோவா - 1, மே.வங்காளம் - 1,

மொத்தம் 38.

- எம்.எஸ். குமார்.

அரசியல்வாதிங்க மாறிக்கிட்டே இருப்பாங்க. நீ அது மாதிரி இல்ல...?"

"இல்லப்பா நானும் ஒரு இலட்சியத் தோடதான் இருந்தேன். ஆனா."

"நிஜம்தாம்மா. யாரை எங்கு அனுப் பணும்னு ஆண்டவனுக்குத் தெரியும்மா..."

"ஆளரவங்களுக்கு தெரியலையேப்பா."

"பரவாயில்லை. உனக்கு ரமணரோட அட்சர மணமாலை வரி ஞாபகம் இருக்கா? லட்சியத்தை பத்தி?"

"லட்சியம் வைத்தருள் அஸ்திரம் விட் டெனை

பட்சித்தான் பிராணனோடு அருணா சலா..."

என்றாள் நிவேதிதா.

"ஆமாம்மா... அதுதான். நீ வெறும் அஸ்திரம் இல்லை, பிரம்மாஸ்திரம்... உனக்கு ஜெயம் நிச்சயம்மா!"

நிவேதிதா கிளம்பிப் போனாள். அடுத்த இரு வாரம் கலெக்டர் அலுவலகம் அமளி துமளிப்பட்டது. பட்டினி சாவு இல்லை யென்றும், வெறும் வயிற்றுப்போக்கு என்றும் பொய் சொல்லச் சொன்னது அரசு. முதன் முறையாகப் பொய் சொன்னாள். நிலை மையை மாற்றிக் காண்பிக்க வேண்டும் என்ற உந்துதல் பொய் சொல்லத் தூண்டியது.

அனைத்து அலுவலர்களையும் ஒன்று கூட்டினாள்.

"புதுசா நான் ஒரு முயற்சியில இறங்கப் போறேன். எனக்கு உங்களோட உதவி வேணும்."

"அவசியம் உதவறோம் மேடம்" என் றார்கள்.

"நம்ம மாவட்டம் வறட்சியான மாவட் டம்தான். ஆனா பட்டினியால மனுஷங்க சாகற அளவுக்கு வறட்சி இருக்கும்னா, அதுக்கு நாமதான் காரணம். நாம நினைச்சா நிலைமையைத் தலைகீழா மாத்திடலாம். நீங்க எல்லா வகையிலும் உதவணும்."

மாவட்டம் முழுதும் அலைந்தாள். பல பெரிய மனிதர்களிலிருந்து, கிராமத்து விவசாயி வரை பலரை நேரடியாகச் சந்தித்தாள். தரிசு நிலத்திலிருந்து, நன்செய் நிலம் வரை பல விவரங்களைச் சேகரித்தாள். நீர்வளம் குறித்து பல செய்திகளைச் சேகரித்தாள். ஒவ் வொரு விவரமும் கணிப்பொறிக்குச் சென்றது.

பல்வேறுவிதமான, பல கோணங்களில் பெற்ற விவரங்களைத் தகவல்களாகத் தந்தது கம்ப்யூட்டர். கொஞ்சம் கொஞ்சமாக தனது சிந்தனைக்குப் பல்வேறு மட்டங்களில் மாவட் டம் முழுவதும் வலு கூடுவது தெரிந்தது.

கம்ப்யூட்டரில் மாவட்டத்தின் வரைபடம் ஸ்கேன் செய்து புகுத்தியிருந்தாள். மௌஸ் பட்டனை நகர்த்திக் கொண்டிருக்க, பின்னே நிழலாடியது.

சமையல் மாமி நின்றிருந்தாள்.

"என்ன மாமி, நீங்க போய்த் தூங்குங்க. எனக்கு இன்னும் கொஞ்சம் வேலை இருக்கு. முடிச்சிட்டுப் படுத்துக்கறேன்..."

"இல்ல, நிவேதி... போன மூணு வாரமா நீ ராத்திரியில சாப்பிடறதில்லை. பால் கூட வேணாம்கிற. அமாவாசைக்குக் கூட விரதம் இருந்தவ இல்ல..உன்னோட அம்மா திதிக்கு கூட அப்பா உனக்குத் தனியா காலைல டிபன் தரச் சொல்லிடுவார். ஆனா..."

"இருக்கட்டும்; பரவாயில்லை மாமி. நான் ராத்திரியில சாப்பிடறதில்லைன்னு முடிவு பண்ணியிருக்கேன். என்னோட இலட்சியத் துல வெற்றி பெறணும்னா எனக்கு பட்டினியோட அருமை தெரியணும். அது மட்டுமல்ல, பட்டினியிருந்தா ராத்திரியில கண் முழிச்சு வேலை செய்ய முடியுது. எனக்கு நம்பிக்கை இருக்கு மாமி. என்னோட இலட் சியம் நிறைவேறும்னு..." சொல்லிவிட்டு கம்ப்யூட்டரை இயக்கத் துவங்கினாள்.

# காதல் ஜெயிப்பு

போட்டிக் கதை - 2

சூர்யலதா

என் மனைவி யாருக்கோ எழுதிய காதல் கடிதம் அவளது இன்டீரியர் டெகரேஷன் பற்றிய புத்தகத்தில் கிடைத்தது.

ஆச்சரியப்பட்டேன்.

'என் இதயத்தைக் கவர்ந்தவருக்கு....' என்று ஆரம்பிக்கப்பட்டிருந்ததே தவிர, யார் பெயரும் குறிப்பிடப்படவில்லை.

யார் அவன்? இப்போதைய காதலா, முந்தைய காதலா? அடி கள்ளி! என்னிடம் இதைப் பற்றி மூச்சு விட்டதே இல்லையே!

பொதுவாகவே எனக்கு இந்தக் காதல், கத்திரிக்காயில் எல்லாம் நம்பிக்கை கிடையாது. எல்லாம் வெறும் 'இன்ஃபாச்சுவேஷன்' - இனக் கவர்ச்சி படுத்தும் பாடுதான்.

என் சொந்த வாழ்க்கையில் காதல் என்பது, எனக்குத் தெரிந்த வரை... என் நண்பனின் தங்கை.. அவளது ஷார்ட்ஹாண்ட் புத்தகத்தில்... ஷார்ட்ஹாண்டில் அப்படி என்னதான் இருக் கிறது என்று அறிவதற்காக அவளிடம் வாங்கிப் பார்த்த அந்தப் புத்தகத்தின் நடுவில் இருந்த அந்த நாலாய் மடித்து வைத்திருந்த காகிதம்...

அந்தக் காகிதத்தில் ஷார்ட்ஹாண்டில் எழுதப்பட்டிருந்ததை மொழி பெயர்த்துப் பார்த்தால்....

'ராம்சுந்தர் ஒரு ஜெண்டில் மேன். அவருக்கு என்னைப் பிடிக்குமா?' என்று எழுதி யிருந்தது.

ஏதோ ஓர் ஆர்வ உந்துதலில் அந்தக் காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டுவிட்டேன். அந்தக் காகிதம் இன்னும் என்னிடம் இருக்கிறது. மற்றபடி காதல், கீதல் இத்யாதிகளில் எனக்கு நம்பிக்கை இல்லை.

இப்போது என் கையில் என் மனைவி எவனுக்கோ எழுதிய கடிதம்.

யார் அவன்?

இனக்கவர்ச்சி என்று சொன்னவுடன் இன்னொருத்தியும் என் நினைவுக்கு வருகிறாள். வெளியில் சொல்லக்கூடாது. சொன்னால் வேலை போய்விடும் அபாயம்.

எங்கள் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் ரஞ்சனியைப் பற்றித்தான் சொல்கிறேன். அவள் நடை என்ன, உடை என்ன, நுனிநாக்கு ஆங்கிலம் என்ன... அழகான உயரம்... பணக்காரப் பளபளப்பு... படிப்பறிவு விஷய ஞானம். இளம் வயது. பெரிய பதவி.

அவள் எங்களை எல்லாம் கூட்டி வைத்துக் கொண்டு மார்க்கெட்டிங் ஸ்ட்ராட்டஜியைப் பற்றி விலாவாரி யாகப் பேசிக் கொண்டிருப்பாள் அடிக்கடி.

"ஐ டோண்ட் வான்ட் ஜஸ்ட் பர்ஃபார்மர்ஸ்! ஐ வான்ட் ஒன்லி அச்சீவர்ஸ் இன்மை கம்பெனி!" என எங்களை அடிக்கடி அதட்டுவாள்.

என் கனவுகளில் பலமுறை இந்த ரஞ்சனி வந்து தொலைத்திருக்கிறாள். தொல்லை தந்திருக்கிறாள். எனக்கும் என் கனவுக்கன்னி ரஞ்சனிக்கும் இடையில்தான் கோபி வருகிறான்.

"கோபி சாதனை படைக்க என்றே பிறந்தவன்" என்று எங்கள் எல்லோர் மத்தியிலும் ரஞ்சனி அவனை அடிக்கடி புகழ்வாள்.

ஒரு மார்க்கெட்டிங் கம்பெனியில் நான், கோபி, பூனைக்கண் பாலு எல்லோரும் ஊழியர்கள். ஒரு வேடிக்கை என்னவென்றால் நான், கோபி, பாலு எல்லோருமே ஒரே ஊர்க் காரர்கள். மாயவரம்.

ரஞ்சனிக்கு கோபியின் மீது ஒரு ஈடுபாடு இருப்பது நிதர்சனமாகத் தெரிந்தது. அந்த ஈடுபாடு கோபியின் அலுவலக சாதனைகளுக்கான அங்கீகாரமான, பாராட்டு வடிவ ஈடுபாடு மட்டும்தானா அல்லது அதற்கும் மேல் ஏதாவது ஒன்றா என்று நாங்கள் - குறிப்பாக நான் அடிக்கடி சிந்தனை செய்வதுண்டு.

போன வாரம் எங்கள் கம்பெனி, மார்க்கெட்டில் விலை போகாத ஒரு பிராண்ட் சோப்பை மார்க்கெட்டிங் செய்யும் பேராசைத் திட்டத்தை எடுத்துக் கொண்டது. அதை எப்படி கவர்ச்சிகரமாக மார்க்கெட்டிங் செய்வது என்ற பூதாகாரமான பிரச்னை எங்கள் முன்பு. விளம்பரப் பொறுப்



எங்களுடையது.

உடனே ஒரு மீட்டிங் வைத்துவிட்டாள் ரஞ்சனி. நாங்கள் எல்லோரும் ஐடியா சொல்லி யாக வேண்டும்.

"சினிமா நட்சத்திரங்களின் ஸோப்" என்றேன் நான். "இன்னொரு கம்பெனியின் விளம்பரத்தை காப்பி அடிக்காதே" என்றாள் ரஞ்சனி.

"அழகுக்கு அழகு சேர்க்கும் சோப்" என் றான் பாலு. "அழகாய் இல்லாதவர்கள் உபயோ கிக்கக் கூடாத சோப்பா இது?" என்று அவ னைச் சாடினாள் ரஞ்சனி.

இன்னும் சிலர் நாலந்து ஐடியாக்களைச் சொன் னார்கள். ஹெல்த் சோப், குடும்பத்திற் கேற்ற சோப், பாரம் பரியம் மிக்க புனிதமான சோப்.... எல்லாம் நிராகரித்தாள் ரஞ்சனி.

இப்போது கோபியின் முறை. கோபி யின் அணுகுமுறை என்னவென்று அறிய ரஞ்சனியைப் போலவே எங்களுக்கும் ஆசை. "சொல்லு, கோபி" என்றாள் ரஞ்சனி.

கோபி ஒரு அந்தக்கால கனவுக் கன்னியான சினிமா நடிகையின் பேரைச் சொல்லி, "மேடம், அந்த எக்ஸ் நடிகை இன்னமும் அந்தப் போட்டிக் கம்பெனியின் சோப்பைத்தான் உபயோகிக்கிறாளாம்" என்றான்.

"உபயோகித்தால் நமக்கென்ன. அவளைக் கூப்பிட்டு நமது இந்த சோப்புக்கு மாடலிங் செய்யச் சொல்லலாம் என்கிறாயா?" என்றாள் ரஞ்சனி. ஒரே சிரிப்பு. பயல் மாட்டிக் கொண் டான் என்று எங்களுக்கு ஒரே சந்தோஷம்.



ஆள் இல்லாத விமானத் தயாரிப்பில் இந்தியா வெற்றி பெற்று உள்ளது. "நிஷான்" என்ற பெயர் வைக்கப்பட்ட இவ்விமானம், எல்லையில் உளவு பார்க்க, படம் எடுக்கப் பயன்படுத்தப்படும். 1998 முதல் நமது ராணுவத்தில் இவ்விமானம் இணைக்கப்படும்.
— ஈ.டி. விஜயகுமார்

"இல்லை மேடம். சினிமா நடிகைகளின் சோப் என்றால் அதில் வயசு ஃபாக்டர் இடிக்கிறது பாருங்கள். எனவே வயசைக் கடந்த ஒரு கவர்ச்சியை நமது இந்த சோப்புக்கு வழங்க வேண்டும்" என்றான் கோபி.

"விஷயத்துக்கு வா" என்றாள் ரஞ்சனி.

"நாம் செய்யப் போவது என்ன என்றால் அழகான ஒரு இளைய மாடலிங் பெண்ணைக் காட்டுகிறோம். அது மிஸ் யுனிவர்ஸா, மிஸ் இண்டியாவா, மிஸ் தி. நகரா என்பது அப்புறம். நமது புரொஜக்ஷன் என்ன என்றால் அவளது கட்டான, இளமை பூரிக்கும் அழகு மேனி. அப்புறம் இந்த சோப்பு. வாசகம் என்ன தெரியுமா... என்றும் இளமை தரும் இதமான சோப்" என்றான் கோபி.

"வாரே வா" என்றாள் ரஞ்சனி. "ஐ லைக் இட்.... இதுதான் எனக்கு வேண்டும்" என்று பாராட்டியவள் எங்களைத் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வையின் பொருள் "இது கூடத் தெரியாதா, மண்டுகளே!"

கோபியின் அடுத்த ஐடியாதான் அவனது மாஸ்டர் பீஸ்.

"மேடம், இந்த சோப்புக்கு நீங்களே கூட மாடலிங் செய்யலாம். பொருத்தமாவும் இருக்கும், நம் விளம்பரம் நம்பகமானதாகவும் இருக்கும்" என்றான் கோபி! போட்டானே ஒரு போடு. "சோப்பு, சோப்பு!" என்று என்னிடம் கிசுகிசுத்தான் பாலு.

கோபியின் ஐடியா அங்கீகரிக்கப்பட்டது.

**மா**டலிங் பற்றி கோபி சொன்ன யோசனையை செயல்படுத்துவதற்காக அடுத்தக் கட்ட வேலைகள் ஜரூராகத் தொடங்கின. விளம்பரப் படம் எடுக்க லொகேஷன் பார்க்க ரஞ்சனியும், கோபியும் (மட்டும்) கிளம்பிப் போனார்கள்.

மச்சம்டா கோபி, மச்சம் என்று நாங்கள் நினைத்துக் கொண்டோம்.

ஆனால் அவனது மச்சம் - ராசி - யோகம் பற்றி கோபிக்கே தெரியாது. அதுவும் தங்கப் புதையலின் மேல், அது தங்கப் புதையல் என்று அறியாமல் அமர்ந்திருக்கும் பிச்சைக்காரனை போல.....

ரஞ்சனியோடு சகவாசம் இல்லாத கோ[illegible]யின் ஆரம்ப நாட்களில் நானும் கோபியு[illegible] மணிக்கணக்காகப் பேசுவது உண்டு.

அப்போது கோபி தன் கடந்தகால காத[illegible] நினைவுகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறா[illegible] என்னிடம்.

சம்பந்தப்பட்ட அந்தப் பெண்ணின் பெய[illegible] மட்டும் இதுவரை சொல்லவில்லை அவ[illegible] அவனது நண்பனின் சகோதரியாம். மக[illegible] லட்சுமி போல அழகாம். கோபியின் கவி[illegible]யால் இவள் ஈர்க்கப்பட்டிருக்கிறாள். "கவி[illegible] சொல்லித்தா!" என்று கேட்டிருக்கிறா[illegible] கவிதை சொல்லிக் கொடுத்துக் கொண்[illegible] அவளைக் காதலிக்க ஆரம்பித்திருக்கிறா[illegible] கோபி.

சங்கீதம் கற்றுக் கொள்வது போல, எம்[illegible]ராய்டரி கற்றுக் கொள்வது போல கவிதையு[illegible] கற்றுக் கொள்கிறாள் போலும் என்று அந்த[illegible] பெண்ணின் பெற்றோர்கள் அனுமதித்திரு[illegible]கிறார்கள்.

ஆனால் காதலைச் சொல்லிவிட மன[illegible] வராமல் இருந்தானாம். புனிதமான காதலா[illegible] அடைகாப்பது போல் காதலைக் காக்[illegible] வேண்டுமாம். அவசரப்பட்டால் காதலி[illegible] புனிதமும், த்ரில்லும், சுகமும் போய்விடுமா[illegible]

"ஸில்லி!" என்றேன். "அப்புறம் என்[illegible] ஆனாள் உன்னவள்?" என்றேன்.

"ஒரு வில்லன் வந்தான். வில்லன் என்றா[illegible] மகா வில்லன். அவன் செய்யாத தப்[illegible] காரியமே கிடையாது.

"அந்த வில்லன் ஒருமுறை என்னவ[illegible] வழியில் மடக்கி கணக்குப் பண்ணப் பா[illegible]திருக்கிறான். 'ஐ லவ் யூ!' என்று சொல்[illegible] அவள் கையைப் பிடித்து இழுத்திருக்கிறா[illegible] பார்த்தாலே பரவசம் ஊட்டும், நிலை குலை[illegible] செய்யும் அழகு என்னவளிடம். பாவம், என்[illegible] பண்ணுவாள்?

"என்னவள் அவனை பளாரென்று கன்[illegible]தில் அறைந்துவிட்டு, அவன் தந்த கடிதத்[illegible] சுக்குநூறாகக் கிழித்து எறிந்துவிட்டு வந்தி[illegible]கிறாள். வீட்டில் போய் அழுதிருக்கிறாள்."

"அந்த வில்லன் யார்? அவனுடை[illegible] பேராவது சொல்லேன்" என்றேன் நான்.

"சொல்கிறேன். ஆனால் அவனிடம் பே[illegible] நடந்ததைக் கேட்கக் கூடாது. சத்தியம் செ[illegible] என்றான் கோபி. செய்தேன்.

"அந்த வில்லன் ஒரு பூனைக் கண்ண[illegible] அவன் பெயர் பாலசுப்பிரமணியன்" என்ற[illegible] கோபி. திடுக்கிட்டேன் நான். "நம்ப பாலு[illegible] பூனைக் கண்ணன்தான்" என்றேன்.

"ஆம். அவனேதான்" என்றான் கோபி

"அப்புறம்?" என்றேன்.

"பிற்பாடு எனக்கு பாம்பேயில் வே[illegible]

கிடைத்து என்னவளை விட்டுப் பிரிய முடியாமல் கிளம்பி விட்டேன். முதலில் சொந்தக் காலில் ஸ்திரமாக நிற்க்க கற்றுக் கொண்டு விட்டு, பிற்பாடு என் காதல் பெட்டகத்தைத் திறக்கலாம் என்றிருந்தேன்'' - கோபி.

"ஏன் திறக்கவில்லை இன்றுவரை?''

"ஒரு நாள் என்னவளின் கல்யாண இன்விடேஷன் வந்து சேர்ந்தது. மணப் பையன் பெயர் நினைவில்லை. இன்விடேஷனைக் கிழித்துப் போட்டேன். என் காதல் பெட்டகம் களவு போன வெறுப்பில் அங்கே இங்கே அலைந்து... இப்போது இங்கே ரஞ்சனியின் கம்பெனியில்... உன்னோடு'' என்றான் கோபி.

''வேறு எந்தப் பெண்ணையாவது கல்யாணம் செய்து கொள்வதுதானே?'' என்றேன்.

"என்னுடைய அந்தக் காதலிக்கு முன்னால் உலகத்தின் எந்தப் பெண்ணும் ஈடாக முடியாது. அவளுடைய அழகைப் பார்த்த என் கண்களுக்கு வேறு எவளும் அழகாகவே தெரியவில்லை. எனவே இன்று வரை கல்யாணம் இல்லை. இனிமேலும் கிடையாது. ஏதோ நான் உண்டு, அவள் நினைவு உண்டு'' என்றான் கோபி.

"பைத்தியம்டா நீ'' என்றேன்.

"அப்படிப் பைத்தியமாக இருப்பதிலும் ஒரு சுகம் இருக்கே. நீ காதலித்தது இல்லை. காதலித்திருந்தால் தெரியும் உனக்கு'' என்றான்.

என்னுடைய தொழில்முறைப் போட்டியாளனின் வாழ்வில் இப்படி ஒரு சோகம் இருப்பதில் எனக்கு சந்தோஷமா, புரியவில்லை.

நாங்கள் எடுத்திருந்த சோப் விளம்பரம் 'கிளிக்' ஆகிவிட்டதைக் கொண்டாடுவதற்காக ஒரு பெரிய பார்ட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தாள் ரஞ்சனி. பார்ட்டியில் என் மனைவியை ரஞ்சனியிடம் அறிமுகப்படுத்தி வைத்தேன்.

"வீட்டில் உங்களைத் தொல்லைப் படுத்துகிறாரா ராம்சுந்தர். படுத்தினால் என்கிட்டே சொல்லுங்க'' என்றாள் ரஞ்சனி, தள்ளாடிய வண்ணம். லைட்டாக 'ஜின்' ஏற்றியிருப்பாளோ.

''என் ஜாய்!'' என்றாள். தொடர்ந்து, "கோபி எங்கே... கோபி... கோபிக்கண்ணா!'' என்று தொலைந்து விட்ட குழந்தையைத் தேடுவது போல தேடிக்கொண்டு போனாள் ரஞ்சனி. மனைவி அருவருப்புக் காட்டினாள்.

என் தோளில் ஒரு கை விழுந்தது.

திரும்பிப் பார்த்தேன்.

பாலு டிப்-டாப்பாக நின்றிருந்தான். "மேடம் செம பூஸ்ல இருக்காங்க போல இருக்கு இல்லே?'' என்றவன்... "பை த பை! இதுதான் என் மனைவி அர்ச்சனா'' என்று அறிமுகப்படுத்த...

கொள்ளிக் கட்டையை மிதித்தவன் போல திடுக்கிட்டேன்.

அர்ச்சனா....! இங்கே பாலுவின் மனைவியா? அர்ச்சனாவின் ஷார்ட்ஹாண்ட் புத்தகம் நினைவுக்கு வந்தது. (ராம்சுந்தர் ஒரு ஜெண்டில்மேன். அவருக்கு என்னைப் பிடிக்குமா?)

கல்யாணத்துக்குப் பிறகு அர்ச்சனாவிடம் இன்னும் அழகும், மெருகும் கூடியிருப்பதாகத் தோன்றியது. பயல் பாலு நன்றாக பாலிஷ் செய்து வைத்திருக்கிறான் இந்த ரோமன் சிலையை.

"ஹலோ!'' என்றேன்.

"ஹலோ'' என்றாள் அர்ச்சனா. அவளது பார்வையில் மின்னிய அந்தக் கேள்வி என்ன? 'என்னை ஞாபகம் இருக்கா? இல்லை... என்னை விட்டு விட்டாயேடா பாவி?'.. என்னவென்று சொல்லத் தெரியவில்லை.

ஏனோ அதற்குமேல் பாலுவின் அருகே நிற்கப் பிடிக்கவில்லை எனக்கு.




மனைவியை அழைத்துக் கொண்டு கோபிப் பயலைத் தேட ஆரம்பித்தேன்.

ஆடம்பரமான பார்ட்டி. நிறைய விருந்தினர்கள். மேடையில் வெஸ்டர்ன் மியூசிக் ஆர்க்கெஸ்ட்ரா. மடோன்னா போல் ஒருத்தி, பாடி ஆடிக் கொண்டிருந்தாள்.

கோபி எங்கே?

தூரத்தில், உயரத்தில் மலைப் பாறைகள் போன்ற ஜோடனையில், செயற்கை அருவி வழிந்து கொண்டிருக்க, பளிங்கு சரஸ்வதி சிலை ஒன்று கலர் பல்புகளின் ரம்மியமான வெளிச்சத்தில் குளித்துக் கொண்டிருக்க.... அதற்கு அந்தப் பக்கம் ஒரு தலை தெரிய....

ஏறிப் போய் பார்த்தேன்.

கோபியேதான்! அடப்பாவி இது என்ன கோலம்?

வழக்கமான குறுந்தாடியுடன், இப்போது கலைந்த தலையும், வெளிறிய முகமுமாக... குடி போதையில் பித்துப் பிடித்தவன் போல அமர்ந்



ஆள் இல்லாத விமானத் தயாரிப்பில் இந்தியா வெற்றி பெற்று உள்ளது, ''நிஷான்'' என்ற பெயர் வைக்கப்பட்ட இவ்விமானம், எல்லையில் உளவு பார்க்க, படம் எடுக்கப் பயன்படுத்தப்படும். 1998 முதல் நமது ராணுவத்தில் இவ்விமானம் இணைக்கப்படும்.
— ஈ.டி. விஜயகுமார்

"இல்லை மேடம். சினிமா நடிகைகளின் சோப் என்றால் அதில் வயசு ஃபாக்டர் இடிக்கிறது பாருங்கள். எனவே வயசைக் கடந்த ஒரு கவர்ச்சியை நமது இந்த சோப்புக்கு வழங்க வேண்டும்" என்றான் கோபி.

"விஷயத்துக்கு வா" என்றாள் ரஞ்சனி.

"நாம் செய்யப் போவது என்ன என்றால் அழகான ஒரு இளைய மாடலிங் பெண்ணைக் காட்டுகிறோம். அது மிஸ் யுனிவர்ஸா, மிஸ் இண்டியாவா, மிஸ் தி. நகரா என்பது அப்புறம். நமது புரொஜக்ஷன் என்ன என்றால் அவளது கட்டான, இளமை பூரிக்கும் அழகு மேனி. அப்புறம் இந்த சோப்பு. வாசகம் என்ன தெரியுமா... என்றும் இளமை தரும் இதமான சோப்" என்றான் கோபி.

"வாரே வா" என்றாள் ரஞ்சனி. "ஐ லைக் இட்.... இதுதான் எனக்கு வேண்டும்" என்று பாராட்டியவள் எங்களைத் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வையின் பொருள் "இது கூடத் தெரியாதா, மண்டுகளே!"

கோபியின் அடுத்த ஐடியாதான் அவனது மாஸ்டர் பீஸ்.

"மேடம், இந்த சோப்புக்கு நீங்களே கூட மாடலிங் செய்யலாம். பொருத்தமாவும் இருக்கும், நம் விளம்பரம் நம்பகமானதாகவும் இருக்கும்" என்றான் கோபி! போட்டானே ஒரு போடு. "சோப்பு, சோப்பு!" என்று என்னிடம் கிசுகிசுத்தான் பாலு.

கோபியின் ஐடியா அங்கீகரிக்கப்பட்டது.

**மா**டலிங் பற்றி கோபி சொன்ன யோசனையை செயல்படுத்துவதற்காக அடுத்தக் கட்ட வேலைகள் ஜரூராகத் தொடங்கின. விளம்பரப் படம் எடுக்க லொகேஷன் பார்க்க ரஞ்சனியும், கோபியும் (மட்டும்) கிளம்பிப் போனார்கள்.

மச்சம்டா கோபி, மச்சம் என்று நாங்கள் நினைத்துக் கொண்டோம்.

ஆனால் அவனது மச்சம் - ராசி - யோகம் பற்றி கோபிக்கே தெரியாது. அதுவும் தங்கப் புதையலின் மேல், அது தங்கப் புதையல் என்று அறியாமல் அமர்ந்திருக்கும் பிச்சைக்காரனை போல.....

ரஞ்சனியோடு சகவாசம் இல்லாத கோபியின் ஆரம்ப நாட்களில் நானும் கோபியு மணிக்கணக்காகப் பேசுவது உண்டு.

அப்போது கோபி தன் கடந்தகால காத நினைவுகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறா என்னிடம்.

சம்பந்தப்பட்ட அந்தப் பெண்ணின் பெய மட்டும் இதுவரை சொல்லவில்லை அவன் அவனது நண்பனின் சகோதரியாம். மக லட்சுமி போல அழகாம். கோபியின் கவிதை யால் இவள் ஈர்க்கப்பட்டிருக்கிறாள். "கவிதை சொல்லித்தா!'' என்று கேட்டிருக்கிறாள் கவிதை சொல்லிக் கொடுத்துக் கொண்டே அவளைக் காதலிக்க ஆரம்பித்திருக்கிறா கோபி.

சங்கீதம் கற்றுக் கொள்வது போல, எம்ப ராய்டரி கற்றுக் கொள்வது போல கவிதையு கற்றுக் கொள்கிறாள் போலும் என்று அந்த பெண்ணின் பெற்றோர்கள் அனுமதித்திரு கிறார்கள்.

ஆனால் காதலைச் சொல்லிவிட மன வராமல் இருந்தானாம். புனிதமான காதலா அடைகாப்பது போல் காதலைக் காக் வேண்டுமாம். அவசரப்பட்டால் காதலி புனிதமும், த்ரில்லும், சுகமும் போய்விடுமா

"ஸில்லி!'' என்றேன். "அப்புறம் என்ன ஆனாள் உன்னவள்?" என்றேன்.

"ஒரு வில்லன் வந்தான். வில்லன் என்றா மகா வில்லன். அவன் செய்யாத தப்பு காரியமே கிடையாது.

"அந்த வில்லன் ஒருமுறை என்னவ வழியில் மடக்கி கணக்குப் பண்ணப் பார் திருக்கிறான். 'ஐ லவ் யூ!' என்று சொல் அவள் கையைப் பிடித்து இழுத்திருக்கிறா பார்த்தாலே பரவசம் ஊட்டும், நிலை குலைய செய்யும் அழகு என்னவளிடம். பாவம், என் பண்ணுவாள்?

"என்னவள் அவனை பளாரென்று கன்ன தில் அறைந்துவிட்டு, அவன் தந்த கடிதத் சுக்குநூறாகக் கிழித்து எறிந்துவிட்டு வந்திரு கிறாள். வீட்டில் போய் அழுதிருக்கிறாள்."

''அந்த வில்லன் யார்? அவனுடை பேராவது சொல்லேன்" என்றேன் நான்.

"சொல்கிறேன். ஆனால் அவனிடம் போ நடந்ததைக் கேட்கக் கூடாது. சத்தியம் செ என்றான் கோபி. செய்தேன்.

"அந்த வில்லன் ஒரு பூனைக் கண்ண அவன் பெயர் பாலசுப்பிரமணியன்" என்றா கோபி. திடுக்கிட்டேன் நான். "நம்ப பாலு கூ பூனைக் கண்ணன்தான்" என்றேன்.

"ஆம். அவனேதான்" என்றான் கோபி.

"அப்புறம்?" என்றேன்.

"பிற்பாடு எனக்கு பாம்பேயில் வே

கிடைத்து என்னவளை விட்டுப் பிரிய முடியாமல் கிளம்பி விட்டேன். முதலில் சொந்தக் காலில் ஸ்திரமாக நிற்க கற்றுக் கொண்டு விட்டு, பிற்பாடு என் காதல் பெட்டகத்தைத் திறக்கலாம் என்றிருந்தேன்'' - கோபி.

"ஏன் திறக்கவில்லை இன்றுவரை?"

"ஒரு நாள் என்னவளின் கல்யாண இன்விடேஷன் வந்து சேர்ந்தது. மணப் பையன் பெயர் நினைவில்லை. இன்விடேஷனைக் கிழித்துப் போட்டேன். என் காதல் பெட்டகம் களவு போன வெறுப்பில் அங்கே இங்கே அலைந்து... இப்போது இங்கே ரஞ்சனியின் கம்பெனியில்... உன்னோடு'' என்றான் கோபி.

''வேறு எந்தப் பெண்ணையாவது கல்யாணம் செய்து கொள்வதுதானே?'' என்றேன்.

"என்னுடைய அந்தக் காதலிக்கு முன்னால் உலகத்தின் எந்தப் பெண்ணும் ஈடாக முடியாது. அவளுடைய அழகைப் பார்த்த என் கண்களுக்கு வேறு எவளும் அழகாகவே தெரியவில்லை. எனவே இன்று வரை கல்யாணம் இல்லை. இனிமேலும் கிடையாது. ஏதோ நான் உண்டு, அவள் நினைவு உண்டு'' என்றான் கோபி.

"பைத்தியம்டா நீ" என்றேன்.

"அப்படிப் பைத்தியமாக இருப்பதிலும் ஒரு சுகம் இருக்கே. நீ காதலித்தது இல்லை. காதலித்திருந்தால் தெரியும் உனக்கு'' என்றான்.

என்னுடைய தொழில்முறைப் போட்டியாளனின் வாழ்வில் இப்படி ஒரு சோகம் இருப்பதில் எனக்கு சந்தோஷமா, புரியவில்லை.

**நா**ங்கள் எடுத்திருந்த சோப் விளம்பரம் 'கிளிக்' ஆகிவிட்டதைக் கொண்டாடுவதற்காக ஒரு பெரிய பார்ட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தாள் ரஞ்சனி. பார்ட்டியில் என் மனைவியை ரஞ்சனியிடம் அறிமுகப்படுத்தி வைத்தேன்.

"வீட்டில் உங்களைத் தொல்லைப் படுத்துகிறாரா ராம்சுந்தர். படுத்தினால் என்கிட்டே சொல்லுங்க" என்றாள் ரஞ்சனி, தள்ளாடிய வண்ணம். லைட்டாக 'ஜின்' ஏற்றியிருப்பாளோ.

''என்ஜாய்!'' என்றாள். தொடர்ந்து, "கோபி எங்கே... கோபி... கோபிக்கண்ணா!'' என்று தொலைந்து விட்ட குழந்தையைத் தேடுவது போல தேடிக்கொண்டு போனாள் ரஞ்சனி. மனைவி அருவருப்புக் காட்டினாள்.

என் தோளில் ஒரு கை விழுந்தது.

திரும்பிப் பார்த்தேன்.

பாலு டிப்-டாப்பாக நின்றிருந்தான். "மேடம் செம பூஸ்ல இருக்காங்க போல இருக்கு இல்லே?" என்றவன்... "பை த பை! இதுதான் என் மனைவி அர்ச்சனா" என்று அறிமுகப்படுத்த...

கொள்ளிக் கட்டையை மிதித்தவன் போல திடுக்கிட்டேன்.

அர்ச்சனா....! இங்கே பாலுவின் மனைவியா? அர்ச்சனாவின் ஷார்ட்ஹாண்ட் புத்தகம் நினைவுக்கு வந்தது. (ராம்சுந்தர் ஒரு ஜெண்டில்மேன். அவருக்கு என்னைப் பிடிக்குமா?)

கல்யாணத்துக்குப் பிறகு அர்ச்சனாவிடம் இன்னும் அழகும், மெருகும் கூடியிருப்பதாகத் தோன்றியது. பயல் பாலு நன்றாக பாலிஷ் செய்து வைத்திருக்கிறான் இந்த ரோமன் சிலையை.

"ஹலோ!" என்றேன்.

"ஹலோ" என்றாள் அர்ச்சனா. அவளது பார்வையில் மின்னிய அந்தக் கேள்வி என்ன? 'என்னை ஞாபகம் இருக்கா? இல்லை... என்னை விட்டு விட்டாயேடா பாவி?'.. என்னவென்று சொல்லத் தெரியவில்லை.

ஏனோ அதற்குமேல் பாலுவின் அருகே நிற்கப் பிடிக்கவில்லை எனக்கு.




மனைவியை அழைத்துக் கொண்டு கோபிப் பயலைத் தேட ஆரம்பித்தேன்.

**ஆ**டம்பரமான பார்ட்டி. நிறைய விருந்தினர்கள். மேடையில் வெஸ்டர்ன் மியூசிக் ஆர்க்கெஸ்ட்ரா. மடோன்னா போல் ஒருத்தி, பாடி ஆடிக் கொண்டிருந்தாள்.

கோபி எங்கே?

தூரத்தில், உயரத்தில் மலைப் பாறைகள் போன்ற ஜோடனையில், செயற்கை அருவி வழிந்து கொண்டிருக்க, பளிங்கு சரஸ்வதி சிலை ஒன்று கலர் பல்புகளின் ரம்மியமான வெளிச்சத்தில் குளித்துக் கொண்டிருக்க.... அதற்கு அந்தப் பக்கம் ஒரு தலை தெரிய....

ஏறிப் போய் பார்த்தேன்.

கோபியேதான்! அடப்பாவி இது என்ன கோலம்?

வழக்கமான குறுந்தாடியுடன், இப்போது கலைந்த தலையும், வெளிறிய முகமுமாக... குடி போதையில் பித்துப் பிடித்தவன் போல அமர்ந்



''எல்லா அரசியல்வாதிகளையும் நம்ம ஆபீஸ் ஸ்டேனோ தோற்கடிச்சுடுவா போலிருக்கு!''
''அப்படி என்ன பண்ணினா?''
''ஷார்ட்ஹேண்ட் மெசின் ரிப்பேர்னு அப்பப்ப பணத்தை வாங்கி ஏப்பம் விட்டிருக்கா!''
— கிட்டு

திருந்தான் கோபி.

"கோபி, கோபி... என்ன இது? உன்னை அங்கே ரஞ்சனி தேடிக்கிட்டிருக்கா... இறங்கி வா... என் மனைவியும் வந்திருக்கிறாள்.. வா" என்றேன்.

தள்ளாடும் அவனை நான் தாங்கிப் பிடித்திருக்க, இறங்கினோம்.

"கோபி, இதுதான் என் மனைவி பரிமளா" என்றேன்.

"ஹாய்!" என்றான் கோபி.

"அய்யய்யோ, என்ன கோலம் இது" என்று அலறிய பரிமளா மூக்கைப் பிடித்துக் கொண்டு, ஓடாத குறையாக விலகிப் போய் ஆர்க்கெஸ்ட்ராவை வேடிக்கை பார்க்கப் போனாள்.

"என்ன கோபி இது. நீதான் இன்றைய ஹீரோ. உனக்கான வெற்றி விழா இது... பாவி, நாங்கள் எல்லாம் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டுக் கொண்டிருக்கிறோம், நீ என்னடா என்றால்... இங்கே... இது என்னடா கோலம்" என்று கோபியை உரிமையுடன் கண்டித்தேன்.

"வென்றவன் இல்லை நான். ராம்சுந்தர், நான் தோற்றவன். மோசமாகத் தோற்றவன். ஜெயிக்கத் திராணி இல்லாமல் கேவலமாகத் தோற்றவன் நான்!" என்றான் கோபி குழறியபடி.

"என்னடா சொல்கிறாய் நீ?" என்று சற்று அதட்டினேன்.

"அவளைப் பார். அவளைக் கேள், ஏன் இப்படிச் செய்தாள் என்று" என்றான் கோபி.

"எவள் என்ன செய்தாள்?" - புரியாமல் கேட்டேன்.

"அர்ச்சனாவை... ஆமாண்டா பாலுவின் பெண்டாட்டி அர்ச்சனாவை... புனிதமான காதலை அவள் மேல் வளர்த்து வந்த என்னை நிராகரித்து விட்டு, ரௌடித்தனம் செய்து அடி வாங்கிய அவனைப் போய் கல்யாணம் செஞ்சுக்கிட்டாளே. அது ஏன் என்று அர்ச்சனாவைப் போய்க் கேள்..." என்று வெடித்து விம்மினான் கோபி.

அதிர்ந்தேன் நான். என்ன விதமான சக்கரம் இது? அர்ச்சனாவை கோபி விரும்பியிருக்கிறான்; அர்ச்சனா என்னை விரும்பியிருக்கிறாள். ஆனால் அவளை அடைந்தது என்னவோ பாலு!

நான் யோசித்துக் கொண்டிருக்கும் போது கோபியைத் தேடிக் கொண்டு அங்கு வந்த ரஞ்சனி, "ஹேய் கோபி, உன்னை எங்கெல்லாம் தேடுவது? வா... லெட் அஸ் செலிபிரேட்" என்று அவன் கையைப் பற்றி இழுக்க....

"போடி...." என்று ரஞ்சனியின் கன்னத்தில் சீற்றத்துடன் அறைந்த கோபி, தள்ளாடியபடியே போய் வாசலில் காத்திருந்த ஓர் ஆட்டோவில் ஏறிப் போய்விட்டான்.

கோபி கோபமாக அடித்துவிட்டுப் போய் விட்ட உணர்வுகூட இல்லாமல் தள்ளாடிக் கொண்டிருந்த ரஞ்சனியை எனது மனைவி பரிமளா கைத்தாங்கலாகப் பிடித்து ரெஸ்ட்டிங் ரூமில் கொண்டு விட்டு வர....

என்ன நடந்தது என்று புரியாமல் பாலுவும் அர்ச்சனாவும், மற்றவர்களும் தூரத்தில் நின்றவாறு விழித்துக் கொண்டிருக்க...

நான் மனைவியுடன் வீடு வந்து சேர்ந்தேன்.

மனைவி தன் வேலைகளில் பிஸியாக இருக்க... நான் காதலின் பரிமாணம்... அல்லது பரிணாமம் பற்றிய குழப்பத்தில் சிந்தித்தவாறே எனது ஸ்டடி ரூமுக்குப் போய் அந்தக் கடிதத்தை எடுத்துத் திரும்பவும் பார்வையிட்டேன்.

'யாருக்கு எழுதியிருப்பாள் என் பரிமளா?"

புரட்டிப் பார்த்தேன். திருப்பிப் பார்த்தேன். கடிதம் யாருக்கு என்று தெரியவில்லை...

அட, இது என்ன... காகிதத்தின் மூலையில் ஏதோ பென்சில் கிறுக்கல்... கிறுக்கலா... ஏதோ ஷார்ட்ஹாண்ட் ஸ்ட்ரோக் போலத் தெரிகிறது... Kay... pee.... என்ன அர்த்தம்... இல்லை... இது ஜீ...பீ... ஜிப்?... அட இது உயிரெழுத்து இல்லாத Gopi... கோபி... கோபியேதானா.

பரிமளா மாயவரத்துக்காரியா? பக்கத்தில் ஏதோ ஊர் என்றார்களே.

கடிதம் கல்யாணத்துக்கு முன்பு எழுதப்பட்டதா இல்லை பின்பு எழுதப்பட்டதா? பரிமளாவின் கையெழுத்துதானே?

பார்ட்டியில் கோபியைக் கண்டு பரிமளா அலறியதும், ஓடியதும் விஸ்கி வாடையினால் மட்டும் இல்லையோ?

எனக்கு, கோபிக்கு, அர்ச்சனாவுக்கு என எல்லோருக்கும் கடந்தகாலம் என்று ஒன்று இருக்கிறது. பரிமளாவுக்கும் இருக்கக் கூடாதா என்ன?

அது கோபியாய் இருந்தால் என்ன கோவர்த்தனனாய் இருந்தால்தான் எனக்கு என்ன?

நான் - ராம்சுந்தர், என் மனைவி - பரிமளா.

அமைதியாக அந்தக் கடிதத்தைச் சுக்கலாகக் கிழித்துப் போட்டேன்.

# காதல்தேசம்

இரண்டு கல்லூரிப் பையன்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறார்கள். அவள், இருவரையும் கடைசியில் நண்பர்களாக மட்டும் அங்கீகரிக்கிறாள் என்ற இரண்டு வரிக் கதை. இதை வைத்துக் கொண்டு என்னவெல்லாம் பண்ணலாம்?

மகாபலிபுரக் கடற்கரை மணலில் வானளாவிய கல்லூரிப் பிரதேச செட் போடலாம். லட்சம் பூக்கள் கொட்டிச் சிரிக்கும் மரங்கள் நட்டு, நடுவே தபுவை மிதக்கவிட்டு மயக்கலாம். கலர்க் கலராக உடை போட்டுக் கொண்டு கனவு பாடலாம். வடிவேலுவை விட்டு, கொஞ்சம் சிரிப்புக் காட்டலாம். ரகுமானைக் கொண்டு, போதையூட்டலாம். கே.வி. ஆனந்த் கேமராவுக்கு இரண்டாவது தேசிய விருது வாங்கித் தரலாம்.

தமது முந்தைய இரு படங்களின் பாணியை மொத்தமாகக் கழற்றி வைத்துவிட்டு, நூறுசதம் கமர்ஷியல் சமரசத்துக்குத் தயாராகி விட்டார் டைரக்டர் கதிர். ஆனாலும் கொச்சைக்கும் ஆபாசத்துக்கும் அரைகுறை உடை ஆட்டங்களுக்கும் நிறைய வாய்ப்பிருந்தும் அவற்றின் பக்கம் ஒதுங்காத கண்ணியம், அவரது தரத்தைக் கட்டிக் காத்து, கடை விரிக் கிறது; சந்தோஷத்துடன் பாராட்டத் தோன்றுகிறது.

பொதுவாக இரண்டு ஹீரோக்கள், ஒரு ஹீரோயின் விஷயம், இங்கே மக்களுக்கு அஜீரணம் தரக்கூடியது. ஆனால், இது சினிமா என்கிற நினைவே வராமல் பாத்திரங்களோடு கரைந்து போகிறபடிக்குச் செய்திருக்கிற நேர்த்தி, கிறங்க வைக்கிறது.

படத்தில் வாலியின் பங்கு, கணிசமானது. பல வருஷங்களுக்குப் பின் பழைய வாலி! அர்த்தமும் கவித்துவமும் எழிலும் துள்ளலுமாக, சந்தர்ப்பங்களுக்குப் பொருந்தி வருகின்றன, மூன்று பாடல்கள். (மேலும் இரண்டில் இன்றைய வாலி.)

தமிழுக்குப் புதிதாக மூன்று பேர் இந்தப் படத்தில் அறிமுகமாகியிருக்கிறார்கள். அப்பாஸ், தபு, கே.வி. ஆனந்த். ஆனந்தைப் பற்றி முன்பே சொல்லியாகிவிட்டது.

நர்சரியிலிருந்து நேரடியாக எழுந்து நடிக்கவந்தாற்போல இருக்கிறார் அப்பாஸ். சண்டைகள் சரி. நடிப்பு? அப்பாஸ் பாஸ் ஆக, நிறைய உழைக்க வேண்டும்.

தபு. லட்சங்களை விழுங்கிய செட்களுக்கும் படத்தில் அடிக்கடி காட்டப்படுகிற அந்த வெளிர் சிவப்புப் பூசல்களுக்கும் அழகு கொடுப்பதற்காக பம்பாயிலிருந்து வந்திருக்கிறார். அந்தத் தேனில் தோய்த்த புன்னகைக்காக மட்டும் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

தேவையே இல்லாத அந்த வில்லன் ட்ராக், குஞ்சுமோனின் நடிக்கிற ஆசைக்காகவே உருவாக்கப்பட்ட அந்த போலீஸ் கமிஷனர் மாணவர்களுக்கு அறிவுரை சொல்லும் டாப் கிளாஸ் நகைச்சுவைக் காட்சி, வடிவேலு ஒரு ரூபாயில் சினிமா காட்டுகிற 'நறநற' - இதையெல்லாம் தவிர்த்திருக்க வேண்டும். கூட்டியிருக்க வேண்டியது, இன்னும் கொஞ்சம் வேகம்.

- ஆர்.பி.ஆர்.

● முன்னாள் பிரதமர்களுக்கு, காபினெட் அமைச்சர் அந்தஸ்து கொடுக்கப்பட இருப்பதாக ஒரு மூன்று வரிச் செய்தி வந்ததை யாரும் கவனித்திருக்க மாட்டார்கள். காபினெட் அமைச்சர் அந்தஸ்து கொடுக்கப்பட் டால், அவர்கள் கைது செய்யப்பட, அரசின் அனுமதி வேண்டும். ராவ் கைது செய்யப்படும் நிலை உருவானால், அதிலிருந்து அவரைத் தப்புவிக்கவே இந்த யோசனையை தேவே கௌடா ஏற்றுக் கொண்டாராம்!

இதற்கும் ஒருபடி மேலே போய், இரண்டாவது பிரதான எதிர்க்கட்சியான காங்கிரசைத் திருப்திப் படுத்த, இன்னொரு யோசனை அரசின் பரிசீலனையில் இருக்கிறதாம். பிரணாப் முகர்ஜி (ராஜ்ய சபா உறுப்பினர்)க்கும், லோக் சபா காங்கிரஸ் கொறடா சந்தோஷ் மோகன் தேவுக்கும், எதிர்க்கட்சித் தலைவர் அந்தஸ்தைக் கொடுத்துச் சந்தோஷப்படுத்தலாமா என்ற யோசனைதான் அது.

● குடியரசுத் தலைவர் சங்கர் தயாள் சர்மா 'இனியாவது நான் முன்னால் குறிப்பிட்ட ஐந்து நாடுகளுக்கும் போய் வரலாமா?' என்று ஐக்கிய முன்னணி அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பயணத்தின்போது தமது உடல்நிலையைப் பரிசோதித்துக் கொள்ளும் எண்ணமும் சர்மாஜிக்கு இருக்கிறது. இதைக் கேள்விப்பட்டு, "நானும் அயல்நாடுகளுக்கு, மெடிகல் செக் அப் செய்து கொள்ளப் போகலாமா?" என்று நரசிம்ம ராவ் கேட்கிறாராம்.

● அமீர்பாயை இந்தியாவுக்குக் கொண்டு வரும் விஷயமாக மட்டுமே சி.பி.ஐ. அதிகாரி ஜோகிந்தர் சிங், ஹாங்காங் போய் விட்டு வந்தார் என்று யாராவது நினைத்திருந்தால், தயவு செய்து அதைத் திருத்திக் கொள்ள வேண்டும்! ஹாங்காங் இந்திய தூதரக அதிகாரிகளின் கூற்றுப் படி, "அவர் வந்தது, நம் இரு நாடுகளுக்கிடையே ஆன ரகசிய போலீஸ் துறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் பேச்சு வார்த்தை நடத்தத்தான்!" சிங், முன்னாள் பிரதமர் நரசிம்ம ராவுடன், அவர் காரிலேயே ஏறி, அவர் வீட்டுக்கே போய், ஒரு மணி நேரத்துக்கு அவரிடம் பேசியது கொஞ்சம் கூடச் சரியல்ல என்று எல்லா எதிர்க் கட்சிகளும் கூவுகின்றன. "நான் அவரிடம் ஆசிகள் வாங்கவும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று வழிமுறைகள் கேட்டுக் கொள்ளவும்தான் போனேன்" என்கிறார் ஜோகிந்தர் சிங். வாஜ்பாயியிடமும், வி.பி.சிங்கிடமும் ஜோகிந்தர் சிங்கின் 'ஆசிகள் பெறும் முயற்சி' பலிக்கவில்லை. சந்திக்க முடியாது என்று மறுத்து விட்டனர்!

# மின்னணி ஒலிக்கும் தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ்கள்


• சந்திராசுவாமி

● சென்னையில் ரௌடி கும்பலை சினிமா பாணியில் துரத்திச் சுட்டுக்கொன்ற நிகழ்ச்சியைப் போலவே, பம்பாய் ரௌடி கும்பலின் 'தாதா'வாகக் கருதப்படும் அமர் நாயக்கையும் பம்பாய் போலீசார் அதிரடி பாணியில் சுட்டுக் கொன்றிருக்கின்றனர். அமர் நாயக், சிவசேனை அனுதாபி என்பது பால்தாக்கரேவுக்கு ஒரு புதிய தலைவலியைக் கிளப்பி விட்டிருக்கிறது!

● யுவ ஜனதா த... மாநாட்டில் பங்கேற்று... கொண்ட பிரதமர் தேவே கௌடா, தில்லியிலேயே 'குண்டு சட்டியில் குதிரை யோட்டும்' ஜனதா தள தலைவர்களை ஏகமாக கடிந்து கொண்டார். 'உங்க...

# தில்லி நியூஸ்

தொகுதிகளுக்குச் சென்று மக்களைச் சந்திக்காமல் இப்படி தில்லியிலேயே கும்மாளம் போடுகிறீர்களே!' என்று சரவெடி மாதிரி வெடித்திருக்கிறார். குறிப்பாக கட்சித் தலைவர் சரத்யாதவ் மீது ஒரேயடியாகப் பாய்ந்தார் தேவேகௌடா - 'ஒவ்வொரு மாநிலமாகப் போய்க் கூட்டம் நடத்தக் கூடாதா?' என்று கொதித்துப் போய்க் கேட்டிருக்கிறார்.

● தில்லியில் அகில இந்திய ஐ.ஏ.எஸ். அதிகாரிகளின் பட்டியலும், விலாசமும் கொண்ட புத்தகம் ஒன்று தயாரித்திருக்கிறார்கள். அதில் தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ் அதிகாரிகளின் எண்ணிக்கைதான் அதிகம் - 300. அதிலும் விசாரணைக்கு உட்பட்டிருக்கும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் லிஸ்ட்டில் தமிழ்நாடுதான் முதல். ஜெயிலில் இருக்கும் இரண்டு ஐ.ஏ.எஸ். அதிகாரிகளையும் அதில் தனியே - பெயர் குறிப்பிடாமல் வெளியிட்டிருக்கிறார்கள்!

* ராவ்



● பிரதமரின் செயலகத்துக்கு உட்பட்ட டிபார்ட்மென்ட் ஆஃப் பெர்ஸானல் அலுவலகத்தில் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள் மீது வந்த ஏகப்பட்ட புகார்கள் பரிசீலனையில் இருக்கின்றன. 80 ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மீதுள்ள புகார்கள் விசாரிக்கப்பட்டு வருகின்றன. இதில் 20, தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ்.காரர்கள் மீது! 60 புகார்கள் ஐ.பி.எஸ். அதிகாரிகள் மீது விசாரணையில் இருக்கின்றன. இதில் 52, பீகார் மாநில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மீது!

● முன்னாள் பிரதமர் நரசிம்மராவின் தனிச் செயலர் ஏ.என்.வர்மா யூரியா ஊழல் விஷயமாகப் பலருக்கு போன் செய்த மாதிரி, முன்னாள் பத்திரிகை - மக்கள் தொடர்புச் செயலர் பி.வி.ஆர்.கே. பிரசாதும் செய்திருப்பாரோ என்று சி.பி.ஐ. சந்தேகிக்கிறது. ஆனால் மே மாதமே இரண்டு மாத விடுப்பில் வெளிநாடு சென்ற பிரசாத், இப்போது எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. வந்தால் அவரையும் குடைய வேண்டும் என்று காத்திருக்கிறது சி.பி.ஐ.

● சான்ஸ் கிடைத்தால் போதும், உ.பி. கவர்னர் ரொமேஷ் பண்டாரி தில்லிக்கு வந்து விடுகிறார். பிரதமர், உள்துறை அமைச்சர் எல்லாருக்கும் ஒரு ஹலோ சொல்லி விட்டுத் தமது மகாராணி பாக் மனைக்குப் போய் விடுகிறார். அங்கேதான் முக்கியமானவர்களை எல்லாம் சந்திக்கிறார். டிரான்ஸ்ஃபர்கள், டிரான்ஸ்ஃபர் கேசுகளில் மாற்றங்கள் எல்லாம் இங்கேதான் தீர்மானிக்கப் படுகின்றன!

* தேவகௌடா



● சிறைக்குள்ளேயே யாகமும் ரக்ஷாபந்தன் விழாவும் நடத்த அனுமதி கோரியிருக்கிறார் சந்திராசுவாமி. தலைமை மெட்ரபாலிடன் மாஜிஸ்திரேட் யோசிப்பதாகச் சொல்லியிருக்கிறார். சொன்னவர், "ஏன் உமது நிலைமை இப்படி ஆகிவிட்டது?" என்று சந்திராசுவாமியிடம் விசாரித்தார். "கிரகங்கள் எனக்குச் சாதகமான நிலையில் இல்லை. அத்தோடு, நான் முன்பு செய்தவற்றின் பலனையும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது!" என்றார் சந்திராசுவாமி.

● சுதந்தர நாள் உரையில் ஆங்கிலமும் கன்னடமும் கலந்து ஹிந்தி பேசலாம், தவறில்லை என்று பலர் தேவேகௌடாவிடம் சொன்னார்கள். பிரதமர் கேட்கவில்லை. தமது இந்தி ஆசிரியர் பிரிஜ் மோகன் மிஸ்ராவிடம் ஆறு வாரங்கள் மிகக் கடுமையான ஹிந்தி பயிற்சி பெற்றாராம்.

● முரசொலி மாறன், தமது அறையில் இருந்த மகாத்மா காந்தியின் படத்தைக் கழற்றி வெளியேற்றி விட்டார். போக்குவரத்து அமைச்சர் டி.ஜி. வெங்கட்ராமனோ, பெரிய சைஸ் கலைஞர் போட்டோ ஒன்றைத் தமது அறையில் மாட்டி வைத்திருக்கிறார்!

— நியூஸ்வாலா

# ஓவியம்



சாருலதாவிடம் எந்த மாற்றமும் இல்லை. முன்னைவிட இன்னமும் வெளுப்பாய், அழகாய்த் தெரிந்தாள்.

ஹாலில் சோபாவில் உட்கார்ந்திருந்தவளை முதலில் 'யாரோ' என்று நினைத்தான்.

"யாருங்க அது..." என்றாள் அவனுடன் ஒட்டிக் கொண்டு படியிறங்கிய உமாவும்.

அப்பாவுடன் பேசிக் கொண்டிருந்தவள் திரும்பிப் பார்த்துப் புன்னகைத்தாள்.

"ஹாய்..."

இயல்பான புன்னகை. அவனுக்குத்தான் வினாடி நேர படபடப்பு. சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

உமாவுக்கும் புரிந்துவிட்டது. ஓ...இவளா...அந்த நிமிடம் நிச்சயமாய் அவள் மனதில் நிறைய கேள்விகள் எழுந்திருக்கும்.

சாருலதாவிடம் சொல்லிக் கொண்டு போவதா, வேண்டாமா என்ற குழப்பமே இல்லை. அவளைப் போலவே தானும் சுதந்தர புருஷன்.

"வா...உமா...." என்றான்.

வெளியே போனதும் உமா விசாரித்தாள்.

"இவதானே உங்க ஃபர்ஸ்ட் வொய்ப்..."

தலையசைத்தான். இவளுடன் திருமணம் நிச்சயமான மறுதினமே பர்சனலாய் சந்தித்துப் பேசி விட்டான்.

'எனக்கு ஏற்கெனவே திருமணமாகி விட்டது. நான் இப்போது விவாகரத்தானவன். வேறு உபத்திரவங்கள்

இல்லை. இந்த விவரங்கள் உங்கள் குடும்பத்துக்கு முன்பே தெரியும். இருந்தாலும் நீ நேரடியாய் என்னை எதுவும் கேட்க விரும்பலாம். அதனால்தான் இந்த சந்திப்பு...'

உமா எதுவும் கேட்கவில்லை. அதாவது முதல் திருமணம் பற்றி. நிறைய முன்கூட்டியே தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

இவனுடைய மற்ற செயல்கள் பற்றிக் கேட்டாள். விடைபெறும்போது மட்டும் சாருலதா பற்றி ஒரு கேள்வி.

'அவங்க ஆர்ட்டிஸ்ட்டாமே... பெயிண்டிங்ல ஆர்வம்னு.... கேள்விப்பட்டேன்....'

'ஆமா.. எக்சிபிஷன்லாம் நடத்தியிருக்கா...'

'ஓ...நம்ம வீட்டுல ஏதாவது அவங்க வரைஞ்சது இருக்கா?'

யோசித்துத் தலையாட்டினான் மறுப்பாக.

'ஸெபரேஷன்போது எடுத்துக்கிட்டுப் போயிட்டா.'

'ஸீ....யூ...'

தான் நினைத்ததைவிட உமா முற்போக்கானவள் என்று புரிந்தது. இந்தத் திருமணமாவது தான் தேடிய ஆதர்ச வாழ்க்கை தரக்கூடும் என்று எதிர்பார்த்தது அப்போதுதான்.

எட்டு மணிக்கு வீடு திரும்பியபோது சாருலதா இருந்தாள். இந்தமுறை வேறு வழியில்லை, நின்று ஒரிரு வார்த்தைகளாவது பேசாமல் போனால் 'பயந்து ஓடுகிறான்' என்ற பெயர் வரக் கூடும்.

'எனக்கு ஒன்றும் பாதிப்பு இல்லை' என்கிற தோரணையில் கால் மீது கால் வைத்து நெஞ்சு நிமிர்த்தி அமர்ந்தான்.

உமா, சாருலதாவின் அருகிலேயே அமர்ந்து விட்டாள்.

அப்பாவின் முகத்தில்கூட புன்னகைக் கீற்று. புது மருமகளும், பழைய மருமகளும் நல்ல ஒப்புமை.

''இன்னிக்கு நாங்க வெளியே சாப்பாடு... வந்து.... உங்களுக்கு ஏதாவது....'' என்றாள் உமா லேசாய்



திக்கிய குரலில்.

''ஆச்சு...'' என்றாள் சாரு முறுவலுடன்.

அப்பா பேசினார்.

''நானும் இன்னிக்கு என்னோட விரதத்தை மாத்திக்கிட்டேன். ரெண்டு ஸ்லைஸ் ப்ரெட்... சாப்பிட்டேன்... அவ டோஸ்ட் பண்ணின்டா...''

''ஃப்ரிட்ஜ்ல பால் இருந்துதே....''

''ம்... ரெண்டு பேரும் ஆளுக்கு ஒரு தம்ளர்... சூடான பால்....'' - இது சாருலதா.

ஏதோ வெளியுறவு மந்திரியுடனான பேச்சு வார்த்தை போல தடம் பிறழாத வார்த்தைகள்.

''இப்ப எதுவும் எக்சி

ரிஷபன்



''வேலூர் ஜெயிலில்
இருக்கும் கட்சித் தலைவர்
அவர்களே! கடலூர்
ஜெயிலில் இருக்கும்
பொருளாளர் அவர்களே!
சென்னை ஜெயிலில்
இருக்கும் கட்சிக் கொறடா
அவர்களே......!''
-ப்ரியதர்சினி

பிஷன் வைக்கப் போறீங்களா...'' என்றாள் உமா.

''என்னை 'நீ'ன்னே கூப்பிடலாம்...உமா...''

சாரு இன்னமும் மாறவில்லை.

''என்ன கேட்டே... எக்சிபிஷன்ா...ப்ச்... வைக்கணும். ஆனா... எனக்கே இன்னும் ஒரு திருப்தி வரலே... என்னோட கலெக்‌ஷன்ல...''

''இங்கே நீங்க...ஸ்ஸ்... நீ வரைஞ்சது ஏதாவது இருக்கும்னு எதிர்பார்த்தேன்... எதுவும் இல்லே...'' என்றாள் உமா.

''அப்பா...ஹால்ல ஒண்ணு இருந்ததே.... அதோ...அந்தக் கார்னர்ல....''

சாருலதா.... 'அப்பா' என்றுதான் முன்பும் அழைப்பாள். பிரிவின்போதும் பிரியாத பந்தம் என்று இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள்.

சீண்டியிருந்தான் முன்பே.

''ஆஃப்டர் ஆல்... நீ என்னோடு வாழ வந்தவ... இப்ப அது முறிஞ்சு போச்சு.... அது என்ன... என்னோட அப்பா... உனக்கும் அப்பா....''

'நல்ல சிநேகிதம் எப்பவும் பட்டுப் போகாது...' என்றாள் பளிச்சென்று.

உறவுமுறைகளைவிட நட்பு போலப் பழகுவதில்தான் அவளுக்கு அதிக ஈடுபாடு. அதில்தான் தனி மனித சுதந்திரமும் இருக்கும். விட்டுக் கொடுத்தலும் இயல்பாய் வரும் என்பாள்.

''என் ரூம்ல இப்ப இருக்கு'' என்றார் அப்பா, விட்டுப் போன பேச்சின் தொடர்ச்சியாக.

''நான் பார்க்கணும்...'' என்றாள் உமா.

அவளுக்கு 'மாமா' என்றும் வரவில்லை. 'அப்பா' என்றும் கூப்பிட மனசில்லை. மையமாய் பேச்சுக்கள்.

''லேட்டாயிருச்சே... இங்கேயே தங்கிடலாம்'' என்றாள் உமா.

இவனைச் சுத்தமாய் உதாசீனப்படுத்திய சம்பாஷணை... அல்லது இவனால்தான் இயல்பாக ஒட்ட முடியவில்லையா... மனசுக்குள் நமைச்சல்.

''இல்லை... போகணும்... ரூம் போட்டிருக்கேன் போயிரலாம்... ஆட்டோதான் இருக்கே....''

அப்பா குறுக்கிடவில்லை. வற்புறுத்தி இருந்தால் தங்கி விடுவாளோ என்னவோ, அப்பாவும் அவளும் நன்றாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

'எனக்கு மட்டும் ஏன் சாத்தியமின்றிப் போனது...' என்று நினைத்தான்.

உமா அவன் தோளில் தட்டினாள்.

''கொஞ்சம் உள்ளே வாங்க...''

சமையலறைக்குள் போனதும் கேட்டாள்.

''ஆமா... நீங்க ஏன் பிரிஞ்சீங்க...''

இதுவரை கேட்டிராத கேள்வி. உமாவை வெறித்தான். 'இருவரும் மனசொப்பி விவாகரத்து கேட்பதால்...' சுலபமாய் எந்தவித நிபந்தனைகளுமின்றிப் பிரிதல்.

வெளியே வந்து விட்டான். சாருலதா தான் கையோடு கொண்டு வந்திருந்த பிரீப் கேஸிலிருந்து எதையோ வெளியே எடுத்தாள்.

''உமா... இங்கே வாயேன்...''

சுருட்டிய கெட்டியான காகிதம், பட்டு நூல் முடிச்சு.

''ஸ்மால் ப்ரசெண்ட் ஃபார் யூ...'' என்றாள் சாருலதா.

உமா ஆர்வமாய்ப் பிரித்தாள். பார்டர் எதுவுமற்று வரையப்பட்ட படம்.

ஒரு பெண்ணின் படம் என்று யூகிக்க முடிந்தது. முகம் ஒழுங்கற்று.... கண்கள், மூக்கு, உதடு எல்லாம் விட்டேத்தியாய்... ஆனால் படத்தில் பெண்ணின் மார்பகங்கள் மட்டும் துல்லியமாய்... மிகப் பெரிதாய்.... அவ்வளவுதான், முகமும் மார்பும்தான்.

''புரியலை...'' என்றாள் உமா உடனே.

''யோசி... புரியும்...''

அப்பா எட்டிப் பார்த்து லேசாய் அதிர்ந்த மாதிரித் தெரிந்தார்.

''ஏம்மா... இவ்வளவு கோபமா... உனக்குள்...'' என்றார்.

அவருக்குப் புரிந்து விட்டது போலும்.

சாருலதா 'குட்நைட்' சொல்லி வெளியே போனாள். அப்பாவும்.

அவனும் ஓவியத்தை வாங்கிப் பார்த்தான்.

'ஒரு பொண்ணுகிட்ட வேற என்ன எதிர்பார்க்கப் போறேன்...' எப்போதோ சாருலதாவிடம் சொன்ன வாசகம் நினைவில் வந்து பளீரென்று அறைந்தது.

# காற்றில் வரைந்த கோலங்கள்

தி. சிவசுப்பிரமணியன்



வாழ்க்கை என்பது சில சமயம் கியூ வரிசை மாதிரி ஆகிப் போகிறது. தன் வாழ்க்கையில் எல்லா விஷயமும் இது மாதிரிதான் நடந்தேறி இருப்பதாய்க் கார்த்தீசனுக்குத் தோன்றிற்று.

கார்த்தீசன் பிளஸ்-2 முடித்ததும், அப்பாதான் அவனை பி.எஸ்ஸி. ரசாயனம் படிக்கச் சொன்னார். ரசாயனத்துக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்றார்.

ஆனால் கார்த்தீசனுக்கு ஏனோ ரசாயனம் பிடிக்காது போயிற்று. அதற்காக அவன் சரிவரப் படிக்காது இருக்கவில்லை. முதல் வகுப்பில் தேர்வாகி முடித்தான். வழக்கமான முன்மாதிரிகள் போல், தினசரிகள் பார்த்து வேலைக்கு மனுச் செய்யலானான்.

இந்தக் காலகட்டத்தில் 'இண்டர்வ்யூ' நிமித்தம் நிறைய இடங்கள் செல்ல முடிந்தது. பலதரப்பட்ட மனிதர்களை உணர முடிந்தது.

ஆனால் யாவும் கொஞ்ச காலம்தான். 'சும்மா இருக்க வேண்டாமே' என்று அப்பாவுடன் விவசாயம் பார்க்கப் போக வேண்டி வந்தது. கிராமத்திலேயே வளர்ந்தவனாதலால், பெரிதாய்க் கஷ்டம் ஏதுமில்லை. வீட்டில் டிராக்டர் இருந்தது. அந்தச் சமயத்தில்தான் ஏதோ காரணங்களுக்காய் டிரைவர் நின்று போக, கார்த்தீசன் டிராக்டர் டிரைவர் ஆனான்.

அதன் பிறகு வாழ்க்கை ஒரு விசித்திரக் கோணத்தில் திரும்பிற்று. நேரங் காலம் பாராது உழைக்க வேண்டி இருந்தது. உழைத்த உழைப்புக்குப் பலன் இருந்தது. கையில் கொஞ்சம் காசு பார்க்க முடிந்தது.

உழைப்பும், அதற்கேற்ற பலனும், ஓரளவு காசும் வாழ்க்கையை நிறைவாக்கிற்று. அந்தச் சமயம், வீடு அவனுக்காய் பெண் பார்க்க ஆரம்பித்தது. இதில் ஒரு சிக்கல் வந்து சேர்ந்தது. கார்த்தீசன் படித்த பெண்ணையே மணம் செய்ய விரும்பினான்.

ஆனால் படித்த பெண்ணின் வீட்டார் விவசாயி மாப்பிள்ளைக்குப் பெண் தரச் சம்மதிக்கவில்லை.

"வெவசாயம்லாம் இப்ப சரிப்பட்டு வராதுங்க. ஒரு காலம் முப்போகம் விளைஞ்சது. இப்போ அப்படியா? காசு வர்ற மாதிரி

வரும். சட்டுனு கவுத்திரும். பையன் படிச்சிருக்கான். ஏதோ உத்யோகத்துல இருந்தான்னா, நம்பிப் பொண்ணு தரலாம். கோவிச்சுக்கப் படாது. பெண்ணைப் பெத்தவன் நிலைல இருந்து பார்த்தா உங்களுக்கே புரியும்."

எல்லாரும் தவறாது இதையே சொன்னார்கள். அரசு உத்யோகம் இல்லாவிடினும் கூட பரவாயில்லை. தனியார் வேலை செய்தாலும் சரிதான். ஆனால், விவசாயம் என்பது சரிப்படாத விஷயம், என்றார்கள்.

கல்யாணம் தட்டிப் போயிற்று.

இந்தக் குளறுபடியில் வேறு பல சிக்கல்கள் முளைத்தன. 'டிராக்டர் வருமானம்' முழுக்க செலவு செய்ததில், பாங்கில் கட்ட வேண்டிய தவணை கட்ட இயலாது போயிற்று. கடன் நெருக்க ஆரம்பித்தது. வண்டியில் ரிப்பேர், அது இது என நிறைய செலவுகள் வந்தது. தவிரவும் அந்த முறை வாழை போட்டதில், காற்று வீசி எல்லாம் சாய்ந்து விட பெருநஷ்டமாகிப் போயிற்று. வாழை வாழவும் வைக்கும். தாழவும் வைக்கும் என்பதை உண்மையாக்கிற்று.

பேசாமல் வண்டியை விற்றுக் கடனை அடைக்கலாம் என்று வீடு தீர்மானித்தது. வேதனையுடன் கார்த்தீசன் அதற்குச் சம்மதம் தர வேண்டியதாயிற்று. வண்டி விற்றுக் கிடைத்த காசில் கடன் அடைத்து, மீதிக் காசுடன் கார்த்தீசன் உத்தியோகம் தேடி சென்னைக்குப் போக வேண்டியதாயிற்று.

சென்னை என்கிற பெருநகரத்தில் எளிதாய் வேலை கிடைத்து விட்டது. ஆனால் சம்பளம் சொற்பம். ''பொறுமையாய் இருப்பின் நாலைந்து வருடங்களில் வேலை நிரந்தரமாகி ஓரளவு காசு கையில் வரும் என்று சொல்லப் பட்டது. வாஸ்தவம்தான். இருபத்தி இரண்டு வயதில் அவ்விதம் வந்திருப்பின், இருபத்து ஏழு வயதில் ஒரு 'நிலைக்கு' வந்து விட முடியும். ஆனால், வேலைக்குச் சேரும் போதே வயது இருபத்து ஏழு முடிந்து விட்டது கார்த்தீசனுக்கு. வாழ்க்கையில் ஒரு 'பொசிஷனுக்கு' வர முப்பத்திரண்டு வயதுக்கு மேல் ஆகிவிடும். அதன் பிறகு திருமணம் செய்து, குழந்தைகள் பெற்று...

கார்த்தீசன் கவலை அதிகமாயிற்று. 'வேறு வழியில்லை, இதுதான் விதி' என்று ஏற்றுக் கொள்ள வேண்டி வந்தது. ஆயினும் வாழ்க்கை என்பது இனிப்பும், கசப்புமான விஷயம். வாழ்வில் முன்னேற, சந்தர்ப்பம் மறுபடி ஒருமுறை கதவு தட்டியது, கார்த்தீசனின் அக்காள் கணவன் வழியில்.

கார்த்தீசனின் அக்காள் கணவன் மத்திய ரிசர்வ் போலீசில், ஏ.எஸ்.ஐயாக இருக்கிறார். அதன் சென்னை குவார்ட்டர்சுக்குள் 'ஒரு காய்கறிக்கடை' வைக்க வாய்ப்பு வந்தது. வேலை பார்ப்பவரின் 'சிபாரிசு' இருந்தால், வாய்ப்பு எளிதில் கிடைக்கும் என்று சொல்லப் பட்டது. அதற்கு அதிக முதலீடு தேவையில்லை. பத்தாயிரம் ரூபாய் இருந்தால் போதும். கடை துவங்கி விடலாம். மிக எளிதானது அது. தொழில் போட்டி கிடையாது. நிச்சயம் வியாபாரம் ஆகும். முனைந்து செயல்பட, முன்னேறி விடலாம். கார்த்தீசனுக்கு மறுபடி நம்பிக்கை துளிர்த்தது.

''படிச்சவன் காய்கறிக் கடை வைக்கலாமா?'' உறவு ஜனம் கேட்டது.

"வேறென்ன செய்றது?"

''பார்த்துட்டுத்தான் இருக்கேன். ஆனா படிப்புக்கேத்த வேலை இல்லியே. முன்னேற வாய்ப்பு இல்லையே."

"அதுக்காக நம்பிக்கை இழந்துடறதா? உன் பயோடேட்டா கொடு. எனக்குத் தெரிஞ்ச இடத்துல முயற்சி பண்றேன். கண்டிப்பா வேலை கிடைக்கும்."

"எப்போ? நாப்பது வயசுக்கு மேலயா?"

''இதான். இந்த வாய்க்கொழுப்புதான் உன்னை முன்னேற விடலை. போ, போயி காய்கறி வியாபாரம் பண்ணு. கஷ்டப்படு. எனக்கென்ன வந்துது. நல்லதைச் சொன்னா இதான் கதி."

உறவு சீறிற்று. இது இவ்விதம் என்றால், கார்த்தீசன் வீடும் இதற்கு எதிர்ப்புக் காட்டிற்று. "அதெல்லாம் கடையும் வேணாம். ஒண்ணும் வேணாம். பேசாம உத்தியோகம் பார்க்கச் சொல்லு. இதுலயே இருந்தா 'பெர்மனன்ட்' ஆயிரலாமாம். விசாரிச்சதில் சொன்னாங்க. பேசாம வேலையப் பாரு. அப்புறம், வேலை பார்க்கிற பொண்ணாப் பாத்துக் கல்யாணம் முடிச்சி வச்சிட்டா, ரெண்டு பேரும் சேர்ந்து சமாளிச்சிக்குவீங்க!'' உபதேசம் வழங்கப் பட்டது.

கார்த்தீசனுக்கு விழிப்புத் தட்டிய போது மணி ஆறே முக்கால். பத்து மணிக்குத்தான் ஆபீஸ். இன்னும் முழுதாய் மூன்றே கால் மணி நேரம் இருக்கிறது. சோம்பலாய்க் கொஞ்ச நேரம் படுக்கையில் புரண்டு, பிறகு எழுந்து குளித்து வேலைக்குக் கிளம்பினான்.

பத்து மணிக்கு ஆபீஸ் சென்று கையெழுத்திட்டு, வேலை பார்க்க ஆரம்பித்த அரை மணியில் நீளமாய்க் கொட்டாவி விட்டான். "சாயங்காலம் ஒரு இடத்துக்குப் பெண் பார்க்கச் செல்ல வேண்டி இருக்கிறது. பெண் உத்யோகம் பார்க்கிறதாம். டீச்சர் வேலை. மாசம் எவ்வளவு வரும்? என் சம்பளமும், அவள் சம்பளமும் சேர்த்து எப்படிக் குடித்தனம் நடத்தலாம்?'' கணக்குப் போடத் தொடங்கினான். அவ்விதம் கணக்குப் போடும்போதே, "அந்தப் பெண் எப்படி இருக்கும்?'' – கனவு காணத் துவங்கினான் கார்த்தீசன்.

கிறோம்.

-எம். ரகுபதி,
நிர்வாக அறங்காவலர், "மென்டார்ஸ்"
16, 3-வது குறுக்குத் தெரு,
டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர்,
சென்னை - 41.

●● பழமலய் கவிதைகள் குறித்து எம்.ஃபில் ஆய்வு நடத்துகிறேன். அவரது கவிதைத் தொகுதிகள் வைத்திருப்போர் தொடர்பு கொள்ளவும். உரிய விலையும் அஞ்சல் செலவும் தரப்படும். கவிஞர் பற்றிய இதர செய்திகள், படங்களும் தேவை தான்.

-மு.கா. நெடுமாறன்,
657, சேலம் மெயின் ரோடு,
காவேரிப்பட்டணம் 635 112.
தருமபுரி (மாவ)

●● வீணை பயில ஆசை. புது வீணை வாங்கும் அளவுக்கு வசதி இல்லை. பழைய வீணை யாரும் தர விரும்பினால் தக்க விலை கொடுத்து பெற்றுக்கொள்வேன்.

-மோ. புவனேஸ்வரி,
D/o. சீ.மோகன்,
37, குமர கட்டளை தெரு,
கூறை நாடு,
மயிலாடுதுறை 609 002.

●● திருக்குறள் தெலுங்கு மொழி பெயர்ப்பு நூல் கிடைக்கவில்லை. தகவல் பெற விரும்புகிறேன்.

-மு.ரா. பார்த்தசாரதி,
18, காளமேகம் தெரு,
கிழக்கு தாம்பரம்,
சென்னை 600 059

●● சைதாப்பேட்டையில் 5.8.96 திங்கள் என்று மடிப்பாக்கம் செல்லும் 51E பஸ்ஸில் ஏறும்போது, மாலை 7.10 மணிக்கு, எனது புத்தம்புது பவர்கிளாஸ் தவறி விழுந்து விட்டது. சாக்லேட் கலர். Carbon frame Photochromatic glass. யாராவது கண்டெடுத்திருந்தால் தெரிவிக்க வேண்டுகிறேன்.

- ஜி. சுந்தர்,
237/1, 4-வது தெரு,
கார்த்திகேயபுரம்,
மடிப்பாக்கம், சென்னை 91.

(பாலம் பகுதியில் இடம் பெறும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்கு கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது - ஆ-ர்)

ஆனந்தனை அவர் 'வாள் பட்டறை'யில் பார்த்துப் பேசி விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன்.

பஸ் நிலையம் வந்து ஊருக்குப் பஸ் ஏற வேண்டும்.

பஸ் நிலையம் அருகில் வந்தபோது, அந்தக் கார் என் அருகில் வந்து நின்றது. டிரைவர் தவிர பின்னால் ஒருவர் மட்டுமே உட்கார்ந்திருந்தார். பார்ப்பதற்குக் கம்பீரமாக 'டை' தலைமுடியோடு இருந்தார்.

"ஏய், சிவசு, என்னடா அப்படிப் பார்க்கிறே? என்னை அடையாளம் தெரியலையா?"

காரில் பின்னால் உட்கார்ந்திருந்தவர் தான் அப்படிக் கேட்டார். சட்டென்று அவரை எனக்குத் தெரியவில்லை.

"என்னடா முழிக்கிறே? இங்கே திருவாரூர், பள்ளிக்கூடத்தில் ஒண்ணா படிச்சோமே... மறந்திட்டியா? நான்தான்டா சாமிநாதன்!"

ஆ!... எனக்கு உடனே புரிந்தது.

திருவாரூர் பள்ளிக்கூடத்தில் என்னோடு படித்த சாமிநாதன். ஆண்டார் தெருவைச் சேர்ந்தவன். வாலிபால் பிளேயர். எனக்கு ஞாபகம் வந்தது.

"அடாடா... அடையாளமே தெரியலே சாமிநாதா! கோவிச்சுக்காதே. பார்த்துப் பதினஞ்சு, இருபது வருஷம் ஆச்சே! நீயும் மாறிப் போயிருக்கே!"

"ஆமாம்டா, மாறித்தான் போயிட்டேன் பழைய சாமிநாதன் இல்லை."

ஆமாம், அவன் சொன்னது, உண்மைதான் பனியன் போடாத டெட்ரஸ் சட்டைக்கு உள்ளே, மொத்தமான மைனர் செயின் மின்னியது. இரண்டு கைகளிலும் விலை உயர்ந்த வைர மோதிரங்கள். ஆள் வளமாகத் தொந்தி சதை இல்லாமல் அளவாக இருந்தான் ஸ்போர்ட்ஸ் உடம்பு.

சாமிநாதன் தொடர்ந்து பேசினான்.

"இப்போ நல்லா இருக்கேண்டா சிவசு கிண்டியிலே ஒரு தொழிற்சாலை வச்சிருக்கேன். மூணு ஒயின் ஷாப் இருக்கு. ஆறு லாரி ஓடுது. சௌகரியமா இருக்கேன்."

அவன் சொல்லச் சொல்ல எனக்கு



மகிழ்ச்சியாக இருந்தது. படிக்கும் காலத்தில் அவன்பட்ட கஷ்டங்கள், அவன் குடும்பக் கஷ்டம் எனக்கு நன்றாகத் தெரியும்.

"சரி, சரி, கார்ல ஏறு. எதிரே பிரசிடெண்ட் லாட்ஜ் ரூம்லேதான் தங்கியிருக்கேன். அங்கே போய் நிறைய பேசுவோம்."

நான் காரில் ஏறினேன். கார் பிரசிடெண்ட் லாட்ஜ் போனது.

போட்டிக்கதை — 3

அ. சி. மணியன்

அறைக்குள் போனதும், சாமிநாதன் கேட்டான்.

"என்னடா துணி இது? உன்னிடம் பழைய தெளிவில்லை. சுணக்கமா இருக்கே. பார்க்க மனசுக்குக் கஷ்டமா இருக்குடா. ஏன், என்ன ஆச்சு? உனக்குத்தான் மூணு வேலி நிலம் இருந்துச்சே, அதெல்லாம் என்ன ஆச்சு? படிக்கிற காலத்திலே என்ன 'டிரிம்'மா இருப்பே! இப்பவும் எங்கண்ணுலயே நிக்கிதுடா."

சாமிநாதன் வருத்தமாகச் சொன்னான். வருத்தத்தைக் காட்டிக் கொள்ளாமல் நான் சிரித்தேன்.

அவன் சொல்வது போலத்தான், திருவாரூருக்கு வந்திருந்தேன். பத்தாண்டுகளுக்கு முன்னால் தைத்த காலர் கிழிந்த சட்டை, நாலு முழ வேஷ்டி, படிக்கும் போது கடிகாரம் கட்டியிருந்த, தற்போதைய வெறுங்கை. நான்கைந்து நாட்களாக 'ஷேவிங்' செய்யாத முகம்.

சாமிநாதன் கேட்பதற்கு இது போதாதா?

ஆனால், அவன் பளபளப்பு எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. படிக்கும் போது நடந்த நிகழ்ச்சி. எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அன்று மாலை...

**நா**ன், சாமிநாதன், அம்மையப்பன் சத்தியமூர்த்தி, தற்போது போலீஸ் இன்ஸ்பெக்டராக இருக்கும் அடியக்கமங்கலம் திருஞானம் எல்லோரும் பள்ளி வாலிபால் டீமில் இருந்தோம்.

மாலை நாலரை மணிக்கு விளையாடும் இடத்திற்கு வந்து விடுவோம்.

அன்றும் விளையாடிக் கொண்டிருந்தோம். என்ன நடந்ததோ தெரியவில்லை. என் பக்கம் விளையாடிக் கொண்டிருந்த சத்தியமூர்த்தியை, எதிர்ப்பக்கம் விளையாடிக் கொண்டிருந்த சாமிநாதன் பாய்ந்து வந்து திடீரென்று தாக்கினான்.

அவனை விட சத்தியமூர்த்தி ஆள் உயரம், தாட்டி. ஆனால் மூர்க்கமாகத் தாக்கிய சாமிநாதனை அவன் தாக்குப்பிடிக்க முடியவில்லை. நல்ல அடி. பின்புறம் விளையாடிக் கொண்டிருந்த நான் ஓடிப் போய் அவர்களைத் தடுத்தேன்.

என்ன நினைத்தானோ, சத்தியமூர்த்தியை விட்டு விட்டு என்னைத் தாக்க ஆரம்பித்தான்; சாமிநாதன். நான் விடவில்லை. சாமிநாதன் என்னைச் சமாளிக்க முடியவில்லை. அவன் போட்டிருந்த சட்டை நார்நாராகக் கிழிந்தது.

திடீரென்று சாமிநாதன் சண்டையை நிறுத்தினான். "எலேய், சிவசு, இருடா. உன் ஊர்க்காரனுக்கு சப்போர்ட்டா என்னையா அடிக்கிறே? என் சட்டையையா கிழிச்சே? நான் 'ஆண்டா தெருக்காரன்'டா. இதோ போயிட்டு நான் உடனே வர்றேன்."

சொல்லிக்கொண்டே ஓடினான்.

நான் பதிலுக்குச் சத்தம் போட்டேன்.

"எலேய், நீ ஆண்டா தெருக்காரனா இருக்கலாம். நான் கள்ளத் தெரு மாப்பிள்ளை. எங்க மாமாதாண்டா அங்க தலைவர். வா, பார்க்கலாம்."

கேட்டுக் கொண்டே சாமிநாதன் போய் விட்டான்.

நானும், சத்தியமூர்த்தியும், இன்னும் சில பேரும் வெகுநேரம் காத்திருந்தோம். பொழுது இருட்டிக் கொண்டு வந்தது. அரைமணி நேரம் சைக்கிள் மிதித்தால்தான் எங்கள் ஊர் போய்ச் சேர முடியும்.



"நானும் என் காதலியும் ஒரு பந்தயம் கட்டியிருக்கோம்."
"என்ன பந்தயம்?"
"எங்க ரெண்டு பேரில யாருக்கு முதல்லே கல்யாணம் நடக்கும்னு!"
— எஸ். இராஜேந்திரன்

இனிக் காத்திருப்பதில் பயன் இல்லை. சாமி நாதன் வரமாட்டான் என்ற முடிவுக்கு வந்து நாங்கள் ஊருக்குக் கிளம்பினோம்.

அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை. மூன்று ஆண்டுகளாக சாமிநாதன் எனக்கு நெருங்கிய நண்பன். தன் குடும்ப சேதிகளைக் கூட என்னிடம் மட்டும் சொல்வான். வேறு வழியில்லாமல் ஊர்க்காரனான சத்தியமூர்த் திக்காக அவனை அடிக்க வேண்டியதாயிற்று. எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

அவர்களுக்குள் ஏன் சண்டை வந்தது என்று எனக்குப் புரியவில்லை. திடீரென்று நடந்த சண்டை. காரணம் தெரியவில்லை. சத்தியமூர்த்தியும் சொல்லாமல் வீட்டுக்குப் போய் விட்டான்.

சாமிநாதனை அடித்தது கூடப் பரவா யில்லை. அவன் சட்டை கிழிந்ததுதான் எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. அந்த ஒரே சட்டைதான் அவனுக்கு. அதையே இரண்டு, மூன்று நாட்களுக்கு ஒருதரம் துவைத்துப் போட்டுக் கொண்டு வருவான். அது கிழிந்து போய் விட்டதே! அதுவும் என்னால்!

நான் அவசரப்பட்டிருக்கக் கூடாதோ! மன சுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

புதிதாகத் தைத்து, இரண்டு மூன்று முறை மட்டும் போட்ட சட்டை என் பெட்டியில் இருந்தது. அதைப் பேப்பர் சுற்றிக் கட்டி என் புத்தகப் பையில் வைத்துக் கொண்டேன்.

மறுநாள் நாங்கள் பள்ளிக்கூடம் வந் தோம், சாமிநாதன் வரவில்லை. அவன் தெருப் பையன் ஒருவனை விசாரித்தேன். அவன் சரியான பதில் சொல்லவில்லை.

எனக்குக் குழப்பமாக இருந்தது. ஒரு சமயம் ஆட்களை அழைத்துக் கொண்டு என்னிடம் சண்டைக்கு வருவானோ? அவன் தெரு துணிச் சலில் பெயர் பெற்றது.

பழகியவன்தானே! நேற்று தவறுதலாக ஏதோ நடந்து விட்டது. சத்தியமூர்த்தியை அடித்ததால்தானே, நான் சாமிநாதனை அடிக்க வேண்டியதாயிற்று. எவனையாவது பிடித்துத் தூது அனுப்பலாமா? பலவா றாகச் சிந்தித்தேன். ஒன்றும் நடக்கவில்லை.

மாலை பள்ளி மணி அடித்ததும் வழக்கம் போல், 'வாலிபால்' கிரவுண்டுக்கு வந்தோம்.

சாமிநாதன் இல்லாதது வேதனையாக இருந்தது. அரை மனதோடு நான் விளை யாடிக் கொண்டிருந்தேன்.

இரண்டு ஆட்டம் ஆடி விட் டோம். அந்த நேரத்தில் சாமிநாதன் வந்தான். சட்டை போடாமல் ஒரு துண்டைப் போர்த்திக் கொண்டிருந்தான்.

அப்படியே ஆட்டத்தை நிறுத்திவிட்டு, "வாடா சாமிநாதா" என்று அழைத்தபடி 'அவன்' பக்கத்தில் போனேன்.

"ஏண்டா, பள்ளிக்கூடத்துக்கு வரலே?" - மெதுவாகக் கேட்டேன்.

"அங்கே தூங்குமூஞ்சி மரத்தடிக்குப் போய்ப் பேசுவோம். இங்கே வேணாம்டா" என்று சாமிநாதன் சொல்லிக் கொண்டே முன் னால் போக நான் பின்னால் சென்றேன்.

மற்றவர்கள் விளையாட்டைத் தொடர்ந் தார்கள்.

நானும் சாமிநாதனும் தூங்குமூஞ்சி மரத்தடி யில் உட்கார்ந்தோம். நான் மறுபடியும் கேட் டேன்.

"ஏண்டா சாமிநாதா, இன்னைக்குப் பள்ளிக் கூடத்துக்கு வரலே?"

"என்னடா சிவசு, நீயே இப்படிக் கேட்கிறே? என் நிலைமை உனக்குத் தெரியுமேடா! இப்ப எப்படி வந்திருக்கேன், பார்த்தியா? டவுனுக் குள்ளே போகாம குறுக்கே சூரிய குளத்தங்கரை வழியா வர்றேன், இந்த துண்டைப் போர்த் திக்கிட்டு...."

"மன்னிச்சிக்கடா சாமிநாதா. நான்தாண்டா முட்டாள்தனமா உன் சட்டையைக் கிழிச்சிட் டேன். உன்கிட்டே இந்த ஒரே சட்டைதான் இருக்குன்னு தெரியும். அப்படியிருந்தும் அவசரப்பட்டுட்டேன். பெரிய தப்புப் பண் ணிட்டேன். என்னை மன்னிச்சேன்னு ஒரு வார்த்தை சொல்லுடா."

என் கண்கள் கலங்கின. ஆனால் சிரித்துக் கொண்டே, சாமிநாதன் பேசினான்.

"சீ...சீ! உன்னைத் தெரியாதாடா, எனக்கு. நேத்து என்னமோ அப்படி நடந்து போச்சு!"

"அது சரி... நீ ஏண்டா 'சத்தி'யை அடிச்சே திடீர்ன்னு..."

"அதுக்கும் இதாண்டா கார்ணம். 'ஏ ஒத்த சட்டை, ஒழுங்கா விளையாடு'ன்னு அவன் சொன்னான். எனக்குத் தாங்க முடியலே. கோபப்பட்டு அடிச்சேன். ஆனா தடுக்க வந்த

உன்னையும் அடிச்சேன், பாரு, அது தப்பு. அது கெடக்கட்டும் விடு.”

சாமிநாதன் சாதாரணமாய்ச் சொன்னான்.

நான் எழுந்து ‘வாலிபால்’ கிரவுண்ட் பக்கம் போய், ஓரத்தில் வைத்திருந்த என் சைக்கிள் கேரியரில் இருந்த புத்தகப் பையை எடுத்துக் கொண்டு, மறுபடியும் சாமிநாதனிடம் வந்தேன்.

நேற்றே எடுத்து வைத்திருந்த சட்டைப் பார்சலை எடுத்து அவனிடம் கொடுத்தேன்.

அவனும் சிரித்தபடி வாங்கிக் கொண்டான். பார்சலைப் பிரித்தான்.

“என்னடா சட்டை?”

வியப்போடு சொன்னான்.

“என் சட்டைதான்டா. இதப் போட்டுக்கிட்டு நாளக்கிக் கட்டாயம் பள்ளிக்கூடம் வா. நேத்து ராத்திரியே எடுத்து வச்சேன்.”

சாமிநாதன் ஒன்றும் சொல்லாமல் வீட்டிற்குப் போனான். மறுநாள் அதே சட்டையைப் போட்டுக் கொண்டுதான் பள்ளிக்கூடம் வந்தான்.

அந்த சாமிநாதன்தான் இவன். இடையில் எப்போதோ ஒருமுறை பார்த்தது. சென்னையில் இருப்பதாகச் சொல்லியிருந்தான். இருபது ஆண்டுகளுக்குப் பிறகு இப்போதுதான் பார்க்கிறேன்.

“என்னடா சிவசு, அப்படியே உட்கார்ந்திருக்கே. ஏதாவது பேசுடா, பள்ளிக்கூடத்திலே எப்படிப் பேசுவே! நான் வசதியாப் போனாலும் இன்னைக்கும் உன் ஆள்தாண்டா. எப்போதும் போல பேசுடா. நீ பார்க்காத வசதியையா நான் பார்த்திட்டேன்!”

சாமிநாதனுக்கு என்ன பதில் சொல்வேன்? எதில் இருந்து ஆரம்பிப்பது?

ஆரம்பித்தேன்.

“நான் கெடக்கிறேன். உன்னைப் பத்தி சொல்லு, சாமிநாதா.”

“என்னைப் பத்திய வசதியைச் சொல்லிட்டேன். மூணு பசங்க. நான் சாப்பிடாமல் என் பெண்டாட்டி சாப்பிட மாட்டா. ஒரு பையன் என்ஜினீயரிங் படிக்கிறான். கடைசிப் பையன் பிளஸ்-டூ படிக்கிறான். இரண்டாவது பையன் எம்.பி.பி.எஸ். படிக்கிறான். கட்டுப்பாடான குடும்பம்.

“நானும் வசதி வந்ததும் ஓகோன்னு ஆடலை. உடம்பையே எப்படி கரெக்டா வச்சிருக்கேன், பார். ஐம்பத்து மூன்று வயசு. எந்தக் கெட்ட பழக்கமும் இல்லை. எந்தக் கோளாறும் இல்லை. இளமையில் எவ்வளவோ கஷ்டப்பட்டேன். இப்போ சௌகரியமா இருக்கேன். அது சரி. உன்னைப் பத்தி சொல்லு, ஏதோ இவ்வளவு நாள் பார்க்காமல் இருந்திட்டோம். இனி அப்படி இருக்கக் கூடாது.”

சாமிநாதன் வித்தியாசமானவன்தான். இவனிடம் வெட்கப்படத் தேவையில்லை. வெளிப்படையாய்ப் பேசத் தொடங்கினேன்.

“பள்ளிக்கூடம் முடிந்ததும், சென்னைக் கல்லூரியில் சேர்ந்தேன். திடீரென்று அப்பா இறந்து போனார். இருந்த நிலபுலன்களைக் கவனிக்க இங்கேயே தங்கினேன். படிப்பு நின்றது. இருபது முடிவதற்குள் அம்மா பிடிவாதம், மனைவி வந்தாள். பிள்ளைகள் நாலு. பெண் இரண்டு. தீவிர அரசியல். அநாவசிய செலவு. வருஷா வருஷம் விவசாயத்தில் நட்டம். முக்கால்வாசி போக, மீதி முக்கால் வேலி நிலத்தோடு இப்போது போராட்டம். இதற்கு மேல் என்ன சொல்ல? பையன்களெல்லாம் பெரியவர்களாகிக் குடும்பம் பார்க்கிறார்கள். என் பொறுப்பில் இல்லை. நானும் இருக்கிறேன், தண்டமாக...”

சாமிநாதன் குறுக்கிட்டான்.

“சீ... சீ, அப்படிச் சொல்லாதே! எவ்வளவோ கெட்டிக்காரன் நீ. எல்லாத்திலேயும் முதல் நீ. ஏதோ நேரங்காலம், கவலைப்படாதே. நானிருக்கேன். ஏண்டா சிவசு, என்னைத் தப்பா நினைக்க மாட்டியே... நான் ஒண்ணு சொல்றேன், கேட்பியா?”

என்ன சொல்லப் போகிறான், சாமிநாதன்? என்னால் யூகிக்க முடியவில்லை.

“என்ன சாமிநாதா, இப்படிக் கேட்கிறே? பழைய நட்பு கொஞ்சம் கூட மாறாம, மறக்காம நீ இருக்கே. நீ சொல்றதைக் கேட்க மாட்டேனா? சும்மா சொல்லு.”

சாமிநாதன் சொன்னான்.

“நீ சொல்றதை பார்த்தா, உன் வீட்டிலேயே நீ ஒதுங்கி இருக்கிற மாதிரி தெரியுது. உன் கஷ்டம் எனக்குப் புரியுது. என்னோட சென்னைக்கு வந்திடு. உனக்குக் கௌரவமான வேலை. போதுமான சம்பளம். நிம்மதியா இருக்

“ஃபோட்டோ ஒண்ணு எடுக்கணும், எவ்வளவு சார் சார்ஜ்?”

“முதல்ல ஃபோட்டோவை எடுத்துக்கங்க, பிறகு ரேட் சொல்றேன்... அப்பத்தான் உங்களால ஸ்மையில்கா போஸ் கொடுக்க முடியும்!”

— சீர்காழி வி. ரேவதி





''பையனுக்கு வீரப்பன்னு பேர் வெச்சது தப்பா போச்சு!''

''ஏன்? ரொம்ப முரட்டுத்தனமா நடந்துக்கறானா?''

''ஊரும்... இருக்கிற இடமும் தெரியாம இருக்கான்...!''

— ராதா வாசுதேவன்

கல்லாம் நான் ஏற்பாடு செய்றேன். இப்போது உன் நிலைமையில இதுதான் சரி. மறுக்காம, குழம்பாம முடிவுக்கு வா. எந்தச் சந்தர்ப்பத்திலும் உனக்கு நான் கைகொடுப்பேன். எனக்கும் நம்பிக்கையா உன்னை மாதிரி துணை தேவை!''

எனக்குப் புல்லரித்தது. நான் முடிவோடு தான் இருக்கிறேன். ஒரு நல்ல வாய்ப்புக்குத் தவித்துக் கொண்டிருக்கிறேன். ஆற்றில் விழுந்தவனைத் தூக்கிவிட ஒரு கை கிடைக்காதா என்கிற நிலைமை!

உடனே சம்மதித்தேன்.

"எனக்குச் சம்மதம் சாமிநாதா'' என்றேன்.

"ரொம்பவும் சந்தோஷம் சிவசு! ஒரு மாதத்திற்குள் தகவல் அனுப்புகிறேன். உடனே கிளம்பி வா.''

என்னை விட மகிழ்ச்சியோடு சாமிநாதன் சொன்னான்.

பிறகு அவன் தன் கார் டிரைவரை அழைத்தான்.

அறைக்கு வெளியே போய் அவனிடம் ஏதோ மெதுவாகச் சொன்னான்.

பிறகு என்னிடம் வந்து பேசினான்.

ஒரு மணி நேரம் கழித்து டிரைவர் வந்தார். சாமிநாதன் அவரிடம் சொன்னான்.

"டிரைவர் இவரை இவர் வீட்ல கொண்டு, விட்டுட்டு வாங்க. நான் உங்களிடம் சொன்ன மாதிரி செய்ங்க.''

நான் வீட்டிற்குக் கிளம்பினேன். காரில் போகும் போது டிரைவர் என்னிடம் பேச்சுக் கொடுத்தார்.

சாமிநாதனை மிகவும் புகழ்ந்தார். "அவரை மாதிரி ஒரு முதலாளியைப் பார்க்க முடியாது. அவரிடம் வேலை பார்க்கும் நாங்கள் கொடுத்து வைத்தவர்கள்'' என்றார்.

எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

வீடு வந்தது. இறங்கிக் கொண்டேன்.

டிரைவர் இறங்கி, காருக்குள் இருந்து பார்சல் போன்ற பேப்பர் சுற்றிய கட்டு ஒன்றை எடுத்தார்.

"ஐயா, இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார். உள்ளே தனியே ஒரு கவர் இருக்காம். பத்திரமாக எடுத்துக் கொள்ளச் சொன்னார்.''

டிரைவர், அதை என்னிடம் கொடுத்து விட்டுக் காரில் ஏறிப் போனார்.

அதற்குள் என்ன இருக்கும்? எதுவும் புரியாமல் வீட்டிற்குள் சென்று பிரித்தேன்.

விழிகள் வியப்பால் விரிந்தன. நெகிழ்ந்து போனேன். மூன்று சட்டைக்குரிய வெள்ளைத் துணி! மூன்று புதிய எட்டு முழ வேஷ்டிகள்!

கடிதக் கவரைப் பிரித்தேன். பத்து நூறு ரூபாய் நோட்டுகள். ஒரு கடிதம்.

"அன்பு சிவசு, நேரில் கொடுத்தால் நீ வாங்க மாட்டாய். எனவே இந்த வழி. தவறாக நினைக்காதே! பணத்தைச் செலவுக்கு வைத்துக் கொள். திடீரென்று நீ சென்னைக்கு வர இது உதவலாம். போனவுடன் தகவல் அனுப்புகிறேன்.''

எனக்கு அழ வேண்டும் போலிருந்தது. இப்படி இந்த நேரத்தில் –

எனக்காக 'இப்படியும் ஒருவன்!'



திருடர் தலைவன் : எதிலேயும் ஒரு பண்பாடு இருக்கணும். முதல்லே எங்களை அறிமுகம் செய்துக்கிறோம். இவர்தான்....

— குல்லூ

# தண்ணீர் வேட்டை

"கிளம்பலாமா?" என்றாள் கல்யாணி.

ரொம்ப நாட்களுக்குப் பின் மதுரைக்கு - மகன் வீட்டுக்குப் போகப் போகிற சந்தோஷம், பரபரப்பு அவள் முகத்தில் தெரிந்தது.

"நா வயக்காடு வரை போய் ஒரு பார்வை பார்த்துட்டு வந்துடறேன். நீ ரெடியா இரு- கிளம்பிடலாம்." என்றார் ராமதீர்த்தன்.

பிள்ளையைப் பார்த்துத்தான் எவ்வளவு நாளாகி விட்டது!

பரபரப்பாக செயல்பட ஆரம்பிக்கிறாள், கல்யாணி.

பேத்திக்குத் தேன்குழல் பிடிக்கும், மாப்பிள்ளைக்கு கைமுறுக்கு, மாட்டுப் பெண்ணுக்கு திரட்டிப்பால்... எல்லாமே தயாராக இருக்கிறது.

அப்படியே அம்பாசமுத்திரத்து தேன் வாழை, தோரண மலை பலாப்பழம், விக்கிரம சிங்கபுரத்து வெற்றிலை என்று தன் மண்ணின் சீதனங்களையும் மூட்டை கட்டிக் கொள்கிறாள்.

தாமிரபரணி ததும்பிப் பாயும் பூமி! இப்பொழுது தவழ்ந்து ஓடக் கூடத் தண்ணீர் இல்லை.

இருந்தாலும் கிணற்றுப் பாசனம் கைவிடவில்லை.

அதோ, நெல்லும் வாழையும்தான் என்னமாய் பொசிந்து வளர்ந்திருக்கிறது!

ராமதீர்த்தன், யூரியா, பொட்டாஷ், தழைச்சத்து என்று விவசாய சமாசாரங்களில் பழம் தின்று கொட்டை போட்டவர். அதனால்தான் அவரது வயலில் இத்தனை பசுமை.

கூடவே ஒரு பிரதான விஷயம் - அந்த வற்றாத ஊற்றுக் கிணறு.

பக்கத்து வயல், ஓச்சாத் தேவனுடையது! வாடி வதங்கி சவலையாகக் கிடக்கிறது. அதைப் பார்க்கும்போது ராமதீர்த்தனுக்குள் ஓர் இனம்புரியாத இன்பம்.

எதிர்ப்படுகிறார்



இந்திரா சௌந்தர்ராஜன்



"ஹோட்டல் முதலாளி க்விஸ்மாஸ்டராம்!"
— குல்லூ

பரமசிவம் பிள்ளை. ஊர் கோவில் தர்மகர்த்தா!

"வாங்க அய்யரே... வயலை நோட்டம் போடக் கிளம்பிட்டீங்களா?"

"ஆமா.... ரெண்டு நாள் ஊருக்குப் போறேன். அதான், ஒரு பார்வை பார்த்துட்டுப் போயிடலாம்னு."

"பார்த்து... நீர் ஊர்ல இல்லங்கறது தெரிஞ்சா தேவன் தண்ணிய உறிஞ்சிப்பிடப் போறான்?"

"அதுக்குத்தானே போறது தெரியாம போகப் போறேன்? எவனையாவது காவலுக்கு வைக்கலாம்னா அவ்வளவு பேரும் களவாணி களா இருக்காங்க. யாரை நம்பறதுன்னே தெரி யலை..."

"எதுக்கு வீண் கவலை...? நான் பாத்துக்க றேன், போய் வாரும்."

பரமசிவம் பிள்ளை அப்படிச் சொல்வதில் ராமதீர்த்தனிடம் துளி மகிழ்ச்சி. இடவலமாக வரப்பின் மேல் ஒரு நடை கட்டி விட்டு, அங் கங்கே குனிந்து களைச் செடிகளைப் பிடுங்கிப் போட்டு விட்டு, வீடு திரும்பத் தொடங்குகிறார்.

"பார்த்து பிள்ளை... அவன் பெரிய திருடன்."

"நீங்க போங்க, நான் பாத்துக்கறேன்."

ராமதீர்த்தன் நகர்ந்து கொண்ட மறு நிமிடமே வாழை மரம் ஒன்றின் பின்னால் இருந்து வெளிப்படுகிறார் ஒச்சாத்தேவர். பரம சிவத்திடம், 'கவலைப்படாதே' என்பது போல சமிக்ஞை!

ராமதீர்த்தனும் கல்யாணியும் அம்பாசமுத் திரத்தில் ரயில் ஏறி விட்டதை ஊர்ஜிதம் செய்து கொண்டு கிணற்று மோட்டாரைத் தட்டி விட, நீர் வேகமாகப் பாய்ந்து ஒச்சாத் தேவரின் வாடிய பயிர்களில் நுழைய ஆரம் பித்தது.

பசித்த பயிர்கள் எல்லாம் புத்துயி ரோடு அந்த நீரை உறிஞ்சத் தொடங்க, ஒச்சாத் தேவனிடம் மகிழ்ச்சி. நன்றியோடு பரமசிவம் பிள்ளையைப் பார்த்துக் கைகூப்புகிறான்.

"நா செய்யறது நம்பிக்கை துரோகம்தான். ஆனா இந்த துரோகம் பயிருங்களுக்காக! நம்ம பசியை தீக்கறதே, இந்தப் பயிருங்கதான். இது களுக்கே பசியெடுக்கைல, நாம வேடிக்கை பார்த்தா எப்படி?"

"விதை போட்டுட்டு, இன்னிக்கு மழை வரும், நாளைக்கு வருமுன்னு நான் வானம் பாத்துப் படற பாடு யாருக்குத் தெரியும்? அய்யர் புண்யம் செஞ்சவர். அவர் கேணி வத்தாம அவரைக் காப்பாத்துது. என் கேணி, பாவக்கேணி... பொட்டுத் தண்ணி இல்லாமப் போச்சு..."

அலுத்துக் கொள்ளும் தேவரைப் பார்த்து சிரிக்கிறார் பிள்ளை.

"ஆண்டவன்கிட்ட சில விஷயங்கள் இருக்கு தேவரே. அதை, ரூவா-அணா-பைசா வால வாங்க முடியாது. தர்மம், நியாயத்தால தான் வாங்க முடியும். அதுல ஒண்ணுதான் மழை. அலுத்துக்கறதை விட்டுட்டு கையைக் கூப்பி அழுங்க. நம்ம கண்ணுத் தண்ணியாவது இந்த மண்ணுக்கு தண்ணிய இழுத்துக்கிட்டு வரட்டும்."

தேவன் சிரம் உடனே வானம் பார்க்கிறது கூடவே - பிள்ளை அகண்ட வானம் பார்க் கிறார். கைகூப்புகிறார்.

அப்போது அவர்களைப் பார்க்கிறது ஒரு உருவம். அதன் கண்களில் அனற் பழமாய்க் கோபம். நெருங்கி வரும் அந்த விழிகள் ராம தீர்த்தனுடையது. அவரைப் பார்க்கும் தேவரும் பிள்ளையும் ஒரு வினாடி ஸ்தம்பிக்கின்றனர்.

"அய்யரே ஊருக்குப் போகலையா நீங்க...?" - இது பிள்ளை.

"அது இருக்கட்டும் - வானம் பார்த்து கைகூப்பினேளே எதுக்கு? இந்தத் திருட்டுல இருந்து உங்களைக் காப்பாத்திக்கவா?"

பிள்ளை தலைதாழ்ந்து போகிறது.

"தெரியும்யா - நான் பாத்துக்கறேன்னு நீ சொல்லும்போதே உம்ம யோக்யதை எனக் நல்லாத் தெரியும். அதான் விட்டுப் பிடிச்சே நீரும்தான் இப்ப களவாணி. இப்படி நம்பிக் துரோகம் பண்றதுக்கு உங்களுக்கு எப்படிய்ய மனசு வந்தது?

"அய்யரே கொஞ்சம் நான் சொல்றதை கேளும். இந்தப் பயிருங்களைப் பாரும். எ வேணா வாடலாம். இது வாடலாமா?"

"தண்ணி இல்லாதப்ப இந்த ஆள் எது காகவே சாகுபடி பண்ண ஆசைப்பட்டார்

"மழை வரும்னு நம்பித்தான்..."

"இப்படி திருட்டு புத்தி இருந்தா இந்த பூமிக்கு மழை வருமா?"

"தண்ணிய வெச்சுகிட்டே இல்லேன்னு நீர் சொல்றது மட்டும் சரியா? லோபியோட ஊருக்கும்தான் மழை வராது..."

"நான் லோபியா? சரி, நீர்தான் பெரிய பரோபகாரியாச்சே,' இவனுக்கு நஷ்டஈடு கொடுத்து உதவ வேண்டியதுதானே? இது என்ன கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கற கதையா?"

"அய்யர்வாள், கொஞ்சம் பொறுமையா கேளும். தண்ணிக்காக நாம இப்படி அடிச்சுக்கக் கூடாது. இது ஆண்டவன் நமக்குக் கொடுக்கற விஷயம்."

"அப்படியா... இதை நம்ம கவர்மென்ட்டுகளுக்கும் போய்ச் சொல்லும். தனக்கு மிஞ்சி தான் தருமம்னு பெரிய பெரிய தலைவர்களே அடிச்சுக்கிற தேசத்துல எனக்கு உபதேசமா?"

அய்யரின் கேள்வி, பிள்ளையின் பொட்டில் அடித்தது. மௌனம் அவரை இறுக்கியது.

நமக்கு முன் உதாரணமாகத் திகழ வேண்டியவர்கள் நம் முன் ரணங்களாக இருந்தால் இப்படித்தானே இறுக வேண்டி வரும்?

"என்ன பேச்சைக் காணோம்?"

"இனி பேசிப் பிரயோஜனமில்லை அய்யர். பேச அருகதையும் இல்லை."

"புரிஞ்சுண்டா சரி. இந்த முறை உம்மை விட்டுடறேன். இனி இந்த மாதிரி அல்பத்தனம் பண்ணாதேள்."

ஓடிக் கொண்டிருந்த மோட்டாரை நிறுத்தி வாய்க்கால் நீரை வற்ற வைத்து விட்டு, தன் வீட்டுப் பயிர்களைப் பெருமிதமாகப் பார்த்தபடி அய்யர் கிளம்புகிறார்.

மதுரை காந்தி நகரில் பிள்ளை வீட்டுக்குள் நுழைந்தபோது அந்தச் சூழ்நிலையே ராமதீர்த்தனுக்குப் பிடிக்கவில்லை.

சின்ன வீடு – அதற்கே வாடகை ஆயிரத்து இருநூறாம்!

கை, கால்களை சுதந்தரமாய் நீட்டிப் படுக்கக் கூட முடியவில்லை. ஊரிலிருந்து வந்த கசகசப்பு. குளிப்பதற்காக பாத்ரூமுக்குள் போனால் ஒரு தூக்குச் சட்டியில் தண்ணீர். கை கழுவக் கூடப் போதாத தண்ணீரில் குளியல் முடிக்க வேண்டும்.

"என்னம்மா இது... பைப்ல தண்ணி வராதா?"

"பூமில இருந்தாத்தானே வர? வாசல்ல லாரித் தண்ணி வரும் – வரிசைல நின்னு பிடிச்சுக்கணும்."

மருமகள் பேசி, வாயை மூடுமுன் வாசல் பக்கம் லாரி சப்தம்.

"அம்மா, தண்ணி லாரி வந்துடுத்து... நீங்களும் ஒரு குடத்தோட வாங்கோ. அவன் பத்து நிமிஷம்னா பத்து நிமிஷம்தான் இருப்பான். அதுக்குள்ள எவ்வளவு பிடிச்சுக்கணுமோ அவ்வளவு பிடிச்சுக்கணும்."

"வாங்கோ... வாங்கோ...."

மருமகளின் ஓட்டத்தில் ஒலிம்பிக் வேகம். கல்யாணி கணவனை ஒரு பார்வை பார்த்துவிட்டு குடத்துடன் கிளம்பினாள். ராமதீர்த்தன் அந்த பிளாட் வீட்டின் பால்கனி வழியாக எட்டிப் பார்க்க, கீழே யுத்தக் காட்சி. 'எனக்கு-உனக்கு' என்கிற ஆவேசங்கள். குடங்கள் மோதிக் குலுங்கும் உக்கிரங்கள்.

புகுபுகுவென்று தண்ணீர் பாயும் குழாய். மேலே நிற்கும் லாரிக்காரன் கையில் ஒரு பெரிய ஸ்பேனர்.

கடிகாரத்தைப் பார்த்தபடி அவன் நிற்கிறான்.

இந்த சண்டைக் காட்சி தனக்கொரு 'துரும்பு' என்கிற பாவனையோடு நிற்கிற அவன், பத்து நிமிடம் முடிந்த நொடியில் ஸ்பேனரால் குழாய் வாயை மூடிவிட்டு, லாரியை வேகமாகக் கிளப்புகிறான்.

"அண்ணே அண்ணே, ஒரு குடம்ணே... ஒரே ஒரு குடம்ணே..."

கூப்பாடும் கூச்சலும் அந்த ஓடும் லாரியினை ஒரு நூறடி தூரம் வரை துரத்த, அவனிடம் கருணையே இல்லை.

கருணை செய்தால் எல்லோருக்கும் தண்ணீர் கொடுத்து முடிப்பது எப்போதாம்?

ராமதீர்த்தன் கனத்த இதயத்துடன் திரும்பும்போது எதிரில் வெறும் குடத்துடன் மாமியாரும் மருமகளும்!

"என்னம்மா?"

"என்னம்மான்னா... இன்னிக்கும் தண்ணி பிடிக்க முடியலை. பத்து நிமிஷத்துல நூறு பேர் தண்ணி பிடிச்சாகணும். முடியுமா என்ன?"

"நானும் பாத்தேன் அந்த கண்றாவியை. வரிசைல நின்னு பிடிக்கக் கூடாதா?"

வரிசைல நின்னா ஒரு மணி நேரமாகும். அதுக்கு லாரிக்காரனுக்கு டைம் கிடையாதாம். அவன் நாப்பது காலனிக்குப் போகணுமாம்."

பெருமூச்செரிகிறார் ராமதீர்த்தன்.

"மாமா, தப்பா எடுத்துக்காதேள். செத்த பக்கத்து வாழைத் தோட்டம் வரைல போய் தண்ணி பிடிச்சுண்டு வந்துடறேளா? குடத்துக்கு ஐம்பது காசு. அவர் ஆபீஸ்ல இருந்து வரதுக்குள்ள தோட்டக் கதவை மூடிடுவா."

வாழ்க்கை ஒவ்வொருவருக்கும் எப்படியெல்லாம் பாடம் கற்பிக்கிறது?

ராமதீர்த்தன் நொந்து கொண்டபடியே இரு குடம் தொங்கும் சைக்கிளை உருட்டியபடி வாழைத் தோட்டத்துக்குக் கிளம்புகிறார். 'ஊருக்குப் போனதும் ஒச்சாத்தேவர் வயலுக்கு வஞ்சனையில்லாமல் தண்ணீர் திறந்து விட வேண்டும்!'

# சுஜாதா பக்கம்



ஒய். ஜி. மகேந்திராவின் 'சக்தி' நாடகத்தில் சுழலும் மேடை அமைத்து ப்ளேன் டேக் ஆஃப் போன்ற காட்சிகள் அமைத்து ஒரு சஸ்பென்ஸ் கதையை இயக்கியிருக்கிறார். (கதை, வசனம் பத்து) மகேந்திரா தமிழ் மேடை நாடகத்தை உயிருடன் வைத்திருக்கும் அரிய பிரஜைகளில் ஒருவர். பூர்ணம் விசுவநாதன், கோபால கிருஷ்ணன், எஸ்.வி. சேகர், கிரேஸி மோகன்களின் எண்ணிக்கை பயங்கரமாகக் குறைந்து வருகிறது. பாம்பே சாணக்யா, ராது போன்றவர்கள் தொடர்ந்து நாடகங்கள் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இருந்தும் இந்த நாட்களில் நாடகங்கள், ஸ்பான்ஸர் என்னும் புதிய ஆதரவாளர்களின் உபயத்தில்தான் சாத்தியம். தேக்குமரப் பண்ணையோ, விடுமுறை விடுதியோ, சீட்டுக் கம்பெனியோ, அவர்கள் விளம்பரத்தை பின் திரையில் ஒட்டும் பட்சத்தில் கொஞ்சம் ஆதரவு தருகிறார்கள். இதில்தான் நாடக உலகமே இன்று இயங்கிக் கொண்டிருக்கிறது. நிலைமை கவலைக்கிடம் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. எல்லாரும் "எதாவது செய்யணும் சார்" என்கிறார்கள். ஏதாவதின் பொருள் அடக்கம் சொல்வதில்லை. நாடகத்தின் பிரபலக் குறைவுக்கு டீ.வியைக் காரணம் சொல்கிறார்கள். அமெரிக்காவில் சிறிய நகரில் கூட நாற்பது சானல்கள் இருந்தும் மேடை நாடகம் தழைத்துள்ளது. டீ.வி. பார்க்கிறவர்கள் தனி இனம். நாடகம் பார்க்கிறவர்கள் தனி. இந்த நிலை மராத்தி, பெங்காலி, ஹிந்தியிலும் உள்ளது. தமிழில் வர, நாம் செய்ய வேண்டியதை யோசித்துப் பார்த்தேன்.

தமிழில் மேடை ஏற்றக் கூடியதான போதுமான நல்ல நாடகங்கள் இல்லை.

எல்லோரும் சொந்தமாகத் தம் நாடகத்தை எழுதி மேடையேற்ற விரும்புகிறார்கள். தேவையில்லை. அருமையாக எழுதப்பட்ட நாடகங்கள் உலக இலக்கியத்தில் பல உள்ளன. சென்னை போன்ற இடங்களில் அமெரிக்கன் லைப்ரரியிலும் பிரிட்டிஷ் கவுன்சிலிலும் நூற்றுக் கணக்கான நாடகங்கள் உள்ளன.

கல்லூரி அமெச்சூர் குழுக்கள் பிறரால் எழுதப்பட்ட நாடகங்களை மேடையேற்றும் பழக்கம் பெற வேண்டும். சங்கீத நாடக அகாதமி வருஷா வருஷம் சிறந்த நாடகத்துக்குப் பரிசளிக்கிறார்கள். பரிசு பெற்ற தமிழ் நாடகங்கள் பல உள்ளன. அவை பற்றிப் பொதுவாக யாருக்கும் தெரியவில்லை. காரணம் இந்தப் பரிசுக்கு பொதுவாக தஞ்சாவூர், பாண்டிச்சேரி போன்ற இடங்களில் உள்ள தனிக்குழுக்கள் ஓரிருமுறை அரங்கேறிய சோதனை நாடகங்களையே அனுப்பி, பரிசு பெறுகிறார்கள். இதில் ஒரு மகத்தான சதி இயங்குவதை கவனிக்கலாம்.

உலக இலக்கியத்தில் உள்ள பல நல்ல நாடகங்களை மொழி பெயர்த்தோ, தழுவியோ புத்தகங்கள் வெளி வர வேண்டும். (இந்திரா பார்த்த சாரதி கிங்லியரை செய்தது போல்) ஸோஃபகிள்ஸ், செகாவ், இப்சன் இவர்களின் மொழி பெயர்ப்புகள் ஒன்றிரண்டே உள்ளன. இவை அதிகம் வர வேண்டும்.

டிசம்பர் கச்சேரிகள் ஆர்கெஸ்ட்ரா சமாசாரங்களிலிருந்து தனிப்படுத்தி, நாடகத்துக்கென்றே ஒரு தியேட்டர் அமைத்து தினம் நாடகங்கள் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

இதற்கான உதவிப்பணம் தமிழ்நாடு அரசு, சங்கீத நாடக அகதமி போன்றோர்களிடமிருந்து பெற வழிமுறைகள் உள்ளன. நாடக விமர்சனங்கள் தவறாமல் பத்திரிகைகளில் வர வேண்டும். எப்போதாவது கல்கி அல்லது விகடனில் ஓரத்தில் இஷ்டமிருந்தால் ஃபில்லர் மேட்டர் போல எழுதுகிறார்கள். புத்தக விமர்சனம், சினிமா விமர்சனம் போல நாடக விமர்சனமும் தவறாமல் வர வேண்டும்.

பம்பாய், தில்லி, கல்கத்தா, பூனா போன்ற இடங்களிலிருந்து நாடகக் குழுக்கள் வரவழைத்து அவர்கள் நாடகங்களை இங்கே போட்டுக் காட்ட வசதி செய்ய வேண்டும். அனுபவப் பங்கீடான சிந்தனைப் பட்டறைகள் நடத்த வேண்டும். நாடகம் எழுதும் முறைகளைப் பற்றி சுயாட்சிக் கல்லூரிகள் பயிற்சி முகாம்கள் நடத்த வேண்டும். கலாசாரப் பரிமாற்ற திட்டங்களின் கீழ் அண்டை அயல் நாடுகளிலிருந்து நாடக வல்லுனர்களை வரவேற்க வேண்டும்.

வாரப் பத்திரிகைகள் அசட்டு நாடகங்களுக்கு மட்டுமின்றி, சிறந்த ஓரங்க நாடகங்களுக்கும் போட்டி அமைத்து, தேர்ந்தெடுத்து, பரிசு கொடுக்க வேண்டும்.

தமிழில் சில நல்ல சிறுகதைகளை நாடகமாக்கி நடித்துக்காட்ட கல்லூரிகளுக்கிடையே போட்டி அமைக்கலாம்.

தியேட்டரில் ஆர்வமுள்ள சினிமா டைரக்டர்களும் நடிகர்களும் மாதம் ஒருமுறையாவது ஒரு நாடகத்தில் பங்கேற்க வேண்டும். இங்மார்பெர்க்மன் உலகப் பிரசித்தமான சினிமா டைரக்டர். தன் எழுபத்தி மூன்றாம் வயதில் திரைப்படங்கள் எடுப்பதை நிறுத்தி விட்டார். ஆனால் நாடகத்தை அவர் புறக்கணிக்கவில்லை.

அதற்கு அவர் சொன்ன காரணம்:

"நாடகம் எனக்கு ஒரு விசுவாசமுள்ள மனைவியைப் போல".

நம் டைரக்டர், நடிகர்கள் பலரும் தம் விசுவாசமுள்ள மனைவிமாருக்குத் திரும்ப வேண்டும்.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

*ரா.கி. ரங்கராஜன்*

'அடிமையின் காதல்', 'வாளின் முத்தம்' ஆகிய சரித்திரப் புதினங்களை எழுதியிருக்கிறேன். அடிமையின் காதல், பிரிட்டிஷ் ஆட்சியில் சென்னை கோட்டைப் பகுதியில் சில இந்தியப் பெண்களுக்கு இழைக்கப்பட்டக் கொடுமைகளைச் சித்திரித்தது. 'வாளின் முத்தம்', பேரரசர் அக்பரைப் பற்றியது. இரண்டிற்குமே எனக்குத் தேவைப்பட்ட சரித்திரச் சான்றுகளும் சம்பவங்களும் கணிசமாகக் கிடைத்தன.

ஆனால் ஆனந்த விகடனுக்காக, கிருஷ்ணதேவராயர் பற்றிய சரித்திரத் தொடரை எழுத முடிவெடுத்தபோது, விஜயநகரப் பேரரசு மற்றும் கிருஷ்ண தேவராயர் காலத்தில் வாழ்ந்த வட இந்திய மன்னர்கள், அவர்களது வாழ்க்கை முறை இவை பற்றியெல்லாம் திருப்தியளிக்கும் விதத்தில் எழுத, 'களைக்களஞ்சியம்' இருந்தால் மிகவும் உதவியாக இருக்குமே என்று எண்ணினேன்.

தமிழில் சீரிய முறையில் தொகுக்கப்பட்ட முதல் 'என்சைக்ளோபீடியா' இது. இதன் பிரதம ஆசிரியரான மா.ப. பெரியசாமி தூரன் எனக்கு நன்கு அறிமுகமானவர் தான். சிறந்த தமிழறிஞர். பெரியநாயக்கன் பாளையம் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்த இவரை, 'கலைக்களஞ்சியம் தயாரிப்பதில் உங்களது முழு முயற்சியும் தேவைப்படுகிறது' என்று அவினாசிலிங்கம் அவர்கள் அழைத்தார். தூரனும் சென்னையில் குடியேறினார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் நூலக வளாகத்தில் கலைக்களஞ்சியம் தயாரிப்புக்காக ஓர் அறை ஒதுக்கப்பட்டது. அங்கு அவரும் அவரது குழுவினரும் இருபத்தோரு ஆண்டுகள் உழைத்ததன் விளைவாகக் கலைக்களஞ்சியம் உருவெடுத்தது.

இது தொடர்பாக கல்கியில் வெளியிடப்படும் 'பாலம்' பகுதிக்கு இந்த ஆண்டு மே மாதம் 'மேற்படி கலைகளஞ்சியத்தின் பத்து வால்யூம்களும் யாராவது வைத்திருந்தால் அதை வாங்கிக் கொள்ளத் தயார்' என்று நான் வேண்டுகோள் விடுக்க நாலைந்து பேர்தான் கடிதம் போட்டிருந்தனர். அவர்களில் ஒருவர் 'எனக்கும் அந்தக் கலைக்களஞ்சியம் தேவை. நீங்கள் எடுத்துக் கொண்டது போக யாராவது அதிகப்படி பிரதிகளை உங்களுக்கு அனுப்பினால், அதை எனக்குத் தரலாமே' என்று கேட்டிருந்தார்!

திருச்சியில் உள்ள பெர்னான்டே என்பவரிடம் மட்டுமே, பயன்படுத்தக்கூடிய



## வி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள்

# ஒரு கலைக்களஞ்சி

23.5.1996
திருச்சி – 12.

அய்யா,

தங்களின் 18.5.96 தேதியிட்ட கடிதம் கிடைத்தது. நன்றி. எங்களது அலுவலக சூப்பிரன்டன்ட் நாளை வெள்ளி சென்னை வருகிறார்கள். அவர்களது மகன் மூலம் கலைக்களஞ்சியம் 10வது தொகுதி தங்களின் வீட்டிற்கு வருகிறது. தாங்கள் எனக்குத் தர எண்ணியுள்ள 'பட்டாம்பூச்சி'யையும் வரும் நண்பர் வசமே கொடுத்தனுப்பிக் கொள்ளுங்கள். நன்றியுடன் பெற்றுக் கொள்கிறேன்.

இச்சமயம் எனது இன்னும் ஒரு கேள்விக்கும் உங்கள் மூலம் விடைகாண விரும்புகிறேன். இதோ அது! 'கலைக்களஞ்சியம்' அதன் பிறகு ஏன் பதிப்பிக்கப்படவில்லை? தமிழக அரசோ, பல்கலைக்கழகங்களோ இந்த முயற்சியில் ஏன் ஈடுபடவில்லை? எம்.ஜி.ஆர். ஆட்சிக் காலத்தில் மீண்டும் தமிழில் கலைக்களஞ்சியம் வெளியாக நடவடிக்கைகள் எடுக்கப்படுவதாக ஒரு தகவல் வந்தது. அதோடு சரி. உங்களைப் போன்ற எழுத்தாளர்கள் ஒரு பிரபல பத்திரிகை வாயிலாக இந்தக் கேள்வியை எழுப்பி சம்பந்தப்பட்டவரின் கவனத்துக்குக் கொண்டு வந்தால் நிச்சயம் பதில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.

அன்புடன் விடைபெறும்,
ஏ.டி. பெர்னான்டோ.

தரத்தில் கலைக்களஞ்சியம் இருந்தது - அதுவும் பத்தாவது வால்யூம் மட்டும்தான். அதை இலவசமாகவே தருவதாக எழுதியிருந்தார் அவர். அந்தக் கடிதத்தில், குமுதத்தில் முன்பு நான் தொடராக எழுதிய 'பட்டாம்பூச்சி' (ஹென்றி ஷாரியர் எழுதிய 'பாப்பிலான்' என்ற நூலின் மொழிபெயர்ப்பு) தன்னை மிகவும் உற்சாகப்படுத்தியதாகக் குறிப்பிட்டிருந்தார்.

பதில் கடிதம் எழுதினேன். அதற்குப் பிறகு அவர் அனுப்பிய கடிதத்தில் கலைக்களஞ்சியம் பற்றி அவர் எழுப்பியுள்ள கேள்வி என் மனத்தின் ஆதங்கத்தையும் வெளிப்படுத்துவதாக அமைந்திருந்தது. ஏன் இந்தக் கலைக் களஞ்சியம் மறுபதிப்பு செய்யப்படவில்லை? இத்தனைக்கும் முழு வால்யூம்களும் வெளி வருவதற்குள்ளேயே முதல் ஐந்து பகுதிகள் விற்றுத் தீர்ந்து விட்டதாக இதன் முகவுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

# வேட்டை!

ஒரு சிரிய குழுவின் இருபத்தோரு வருட உழைப்பினால் உருவான ஒரு பொக்கிஷத்தை அலட்சியப்படுத்துவது சரி அல்ல. சமீபத்திய விவரங்களையும் இணைத்துப் புதுப்பித்தால் பலரும் பயனடைவார்களே!

இந்தக் கடிதத்தைப் படித்ததும் தூரனை நினைத்து என் மனம் கனத்துப் போனது.

தொகுப்பு: அருண்சரண்யா
வண்ணப்படம்: யோகா



‘வயிரவ நாடக சபா’வில் சிரிப்பு நடிகராக இருந்தவர் முருகன். பிறகு ‘வெற்றிவேல் நாடக சபா’வை 1956ல் ஆரம்பித்து, பத்து வருடங்கள் நடத்தி நொடித்துப் போயிருக்கிறார். மனோரமா, முத்துராமனுடன் எல்லாம் சேர்ந்து நடித்துள்ளார்.

1966ல் திருச்சி மாணிக்க விநாயகரைச் சரணடைந்தாராம். மனத்தில் தோன்றிய தெய்வீகப் பாடல்களை சந்நதியில் சுயமாய்ப் பாடிக் கொண்டிருந்த சமயம் இவரது பக்தியில் மயங்கி, ஓர் அன்பர் நூறு ரூபாய் பரிசாக அளித்தாராம். இது நடந்தது 1969ல்!

உடனே, கோயில் கோபுரத்துக்கு பெயிண்ட் அடித்துக் கொண்டிருந்த நடராஜன் என்பவர் மூலம், அந்தப் பணத்தில் மாணிக்க விநாயகர் படத்தை கார்ட்போர்டில் வரைந்து கொடுக்கச் சொல்லியிருக்கிறார் முருகன்.

மாணிக்க விநாயகர் உத்ஸவ மண்டபத்தில் முதன் முதலாக மாட்டப்பட்ட படம் அதுதான்!

கோவிலுக்கு வருபவர்கள் இதைப் பார்த்து விட்டு, தாங்களும் இதே போல அன்பளிப்பு தர விரும்ப, அதுவே முருகனின் தொழிலாகி, சூடுபிடிக்க ஆரம்பித்து, நன்கு வளர்ந்து, இப்போது கைகொள்ளாத ஆர்டர்கள்!

படம் வரைந்து, கண்ணாடி பிரேம் போட்டு, கோவிலில் கொண்டு போய் சுவரில் மாட்டும் வரை இவரது பொறுப்பு!

திருச்சி மலைக்கோட்டை விநாயகருக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அமைந்துள்ளன ஷோடச விநாயகரின் ஓவியங்கள். (ஷோடசம் என்றால் பதினாறு) மலைக்கோட்டையின் கீழே உள்ள மாணிக்க விநாயகர் சந்நிதியின் உற்சவ மண்டபத்தை இவை அலங்கரிக்கின்றன.


* முருகன்

இன்னும் பலப்பல படங்களும் உத்ஸவ மண்டபத்தில் காணக் கிடைக்கின்றன. அத்தனையும் முருகனின் கணேசன் கலைக்கூடத்தில் உருவானவை!

அதே கோவில் வளாகத்திலேயே செயல்பட்டு கொண்டிருந்த அந்தக் கலைக்கூடத்தினுள் நுழைந்தோம். சிறிய இடம்தான். ராமர், சீதையை கைப்பிடித்துக் கொண்டிருந்தார் கல்யாணக் கோலத்தில்!

வெள்ளை தாடி, மீசைக்குப் பின்புறம் ஒளிமிகுந்த கண்களுடன் நம்மை வரவேற்றார் மா.சு. முருகன்.

ஆச்சர்யம் என்னவெனில் இன்னமும் கையில் பிரஷ் பிடித்து ஓவியம் வரையத் தெரியாதவர் முருகன். ஆனால் அவரது மேற்பார்வையில் இதுவரை ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட படங்கள் பல்வேறு கோயில் மண்டபங்களை அலங்கரிக்கின்றன!

மலேஷியாவில் நாகமுத்து மாரியம்மன் கோவிலில் ஆதிபராசக்தியின் அறுபது உருவங்களை அழகான ஓவியங்களாக்கித் தந்துள்ளார் முருகன்.

அவர் கையில் வைத்திருந்த கடிதம் பற்றி விசாரித்தோம். ஸ்ரீரங்கம் ரெங்கனாதசுவாமி கோவில் இணை ஆணைய

# பிள்ளையார் ஓவியர்! முருகன் தொழிலாளி!

சென்னை சரவணபவன் ஹோட்டல் பங்குதாரர் பி. ராஜ கோபாலுக்கு எழுதிய கடிதத்தின் நகல் அது!

ஸ்ரீரங்கம் கோவில் வரலாறை முப்பது ஓவியங்களாகத் தீட்டி, கருட மண்டபத்தில் வைக்க அனுமதி அளிக்கும் கடிதம். இதன் ஓவிய வேலைகள் இவரது கலைக்கூடத்தில் தொடங்கி விட்டன.

மயிலாப்பூர் என்ற பெயர் வரக்காரணம் என்ன என் பதை கபாலீஸ்வரர் கோவிலில் ஐந்து பெரிய படங்களாய் வரைந்து மாட்டியிருக்கிறார்களாம்.

இதே போல திருச்செந்தூர், ராமேஸ்வரம், திருவானைக்கா ஸ்தல வரலாறுகளும் வரைந்து கொடுத்துள்ளார்களாம்.

வரையும் முறை பற்றியும், முதலாளியான அவரது பங்கு இதில் என்ன என்றும் முருகனிடம் கேட்டோம். "முதலாளி நான் இல்லை; இவர் தான்..." என்றார் அங்கிருந்த மாணிக்க வினாயகர் படத்தைக் காண்பித்து! தொடர்ந்து சொன்னார் :

"ஸ்தல வரலாறுகளை ஊன்றிப் படித்து, சிவாச் சாரியார்கள் மற்றும் சாஸ்திர விற்பன்னர்களுடன் கலந்தாலோசித்து, மனத்துக்குள் பதித்து, நோட்டில் பென்சில் ஸ்கெட்சாக வரைந்து கொள்வேன். அவை ஆகம, சிற்ப சாஸ்திர முறைப்படி அமைந் துள்ளதா என ஆராய்ந்து தெரிந்து கொள்வேன். பிறகு, என்னிடம் பணியாற்றும் ஓவியர்களைக் கொண்டு படம் வரைவிக்கிறேன்."

ஓவியர் மாரிமுத்து ஆயில் கலர் பெயிண்டு கள் மூலம் தீட்டிக் கொண்டிருந்த ஓவியத்தை கவனித்தபடி கேட்டோம்.

"ஏதாவது 'தொழில் ரகசியம்' இதில் உள்ளதா?"

கடையில் விற்கும் பெயிண்டுகள்தானாம். வெயில், மழையில் படாமல் வைத்திருந்தால் இரு நூறு வருடங்கள் ஆனாலும் படம் சிதிலமாகாதாம்!

பேசும்போது, அவர் சொல்லும் விஷயங்கள். அவரது ஆழ்ந்த அறிவை உணர்த்துகிறது. 63 வகை சிவன் தோற்றங்கள் இருக்கின்றனவாம். மயிலை கோவிலில் கூட இது பற்றிப் புத்தகம் உள்ளதாம். அதன் கோபுரத்தில் 63 வகை சிவதோற்றங்கள் உள்ளதாம்.

தியானஸ்லோக முறைப்படி கஜலக்ஷ்மி, மகாலக்ஷ்மி இரு வருக்கு மட்டுமே தாமரைப்பூ ஆசனமாம். அஷ்டலக்ஷ்மி களில் மற்ற ஆறு லக்ஷ்மியர்க்கு என்ன பீடம் என்பதை ஒரு புத்தகத்திலிருந்து ஆதாரம் எடுத்துக் காட்டுகிறார்.

தனிப்பட்ட நிறுவனங்கள், ஹோட்டல்களுக்கும் வரைந்து கொடுக்கிறார் இவர். சென்னையிலுள்ள ஹோட்டல் சர வணபவன் கிளைகளில் மாட்டப்பட்டுள்ள முருகன் படங்கள், வாரியார் படங்கள் அனைத்தும் இவரது கலைக்கூடத்தின் கைவண்ணங்களே.

சென்னை மியூசிக் அகாடமியிலுள்ள சங்கீத மும்மூர்த்தி கள் படங்களும் இவரது கைவண்ணம்தான்.

அண்ணா அறிவாலயத்திலும் இவரது படங்கள் மாட்டப் பட்டுள்ளதாம். கலைஞரின் நண்பர் மீ.சு. இளமுருகு பொற் செல்வி, மற்றும் அமைச்சர் செங்குட்டுவன் கொடுத்த ஆர்டரின் பேரில் அண்ணா, பெரியார், கலைஞர், அஞ்சுகம் அம்மை யார் படங்களை வரைந்து தந்துள்ளார். ஒவ்வொரு வருடமும் கலைஞரின் பிறந்த நாளன்று இவரது ஓவியம் பரிசாக வழங் கப்படுகிறதாம்.

"உங்களின் முதலாளியான விநாயகருக்கு நீங்கள் என்ன செய் கிறீர்கள்?" என்று கேட்டோம்.

ஒவ்வொரு ஆர்டரிலும், கிடைக் கும் லாபத்தில், பத்து சதவிகிதத்தை முதலில் எடுத்து, தனி அக்கவுண் டாய் வங்கியில் வைத்திருக்கிறார். விநாயகர் சதுர்த்தியையொட்டி சிறப்பு பூஜையாக இருபத்தேழு வகையான அபிஷேகம் மாணிக்க விநாயகருக்குச் செய்து வைக்கிறா ராம்! (இந்த வருடம் 28.9.96 அன்று இது நடைபெறுகிறது.)



* 'முதலாளி'

இருபத்தேழு வருடங்களாக இறைப்பணியில் ஈடுபட்டு வரும் இந்தக் கலைக்கூடத்தை, அரசாங் கம் இதுவரை கண்டுகொள்ளவே யில்லை என்பதுதான் இவரது ஒரே குறை. கோவில் நிர்வாகமும் மற்ற கமர்ஷியல் கடைகளைப் போலவே இந்தக் கலைக்கூடத்திற்கு சட்ட திட்டங்களைப் போடுகிறதாம்.

இடப்பற்றாக்குறை, வாடகை உயர்வு போன்ற பல பிரச்னைகள் நடுவிலும், இந்த கலைக்கூடம் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண் டிருக்கிறது!

திருச்சியிலிருந்து : **கிருஷ்ணா**

வாசகர் யோசனை : **ஆர். மணிராவ்**

போட்டிக் கதை - 5

## ந. ஜெயபாலன்

இரண்டு நாட்கள் கழித்து ஆர்.சி. போட இருந்த அந்த இடத்தில் பலகைகளை எடுத்து அடுக்கி, ஆணிவைத்து அறைந்து கொண்டிருந்தான் பதினேழு வயது பெருமாள்.

ஆணியின் கொண்டையில் சுத்தியலை ஓங்கி அடித்த அதே நேரம், நச்சென்று ஒரு குட்டு அவன் தலையில் விழுந்தது.

"ஏண்டா நாயி. இந்த சந்தில போய் இத்த னூண்டு பலகையை வைச்சா எப்படிடா? சோறு தானே திங்கிறே? பன்னி! அறிவுகெட்ட முண்டம்! முக்காலுக்கு நாலு சைஸ்ல ஒரு துண்டுப் பலகையை எடுத்து இங்கே ஜாயிண்டு குடுத்திட்டு, அந்தப் பக்கம் ஆறடிப் பலகையை எடுத்து வைடா மூதேவி. ஏழு வருஷமா வேலை பழகற..." என்று இரைந்தபடி அந்த முக்காலுக்கு நாலு சைஸ் பலகையை எடுத்து அவனைச் சாத்துவது போல் நீட்டினான் கான்ட்ராக்டர் முருகன்.

கான்கிரீட் போட்ட மறுநாள், பெருமாளும் கான்ட்ராக்டர் முருகனும் பக்கவாட்டுப் பலகையை மட்டும் பிரித்துக் கொண்டிருந்தனர்.

பெருமாளுக்கு மனசுக்குள் ஒரு குறுகுறுப்பு, எப்படியாவது அதைக் கேட்டுவிட வேண்டும் என்று. இன்று கேட்போமா, நாளை கேட்போமா என்று குழம்பிய பெருமாள், பயந்து பயந்து வாயைத் திறந்தான்.

"அண்ணே, நீங்க இந்த வருஷம் ஐயப்பனுக்கு மாலை போடணும்னீங்களே... போடலியா?"

சுர்ரென்று பாய்ந்தான் முருகன்.

"ஏ விளக்கெண்ணெய்! உன் வேலையைப் பாரு விளக்கெண்ணெய்! நான் போறேன்; சும்மா கூட இருக்கேன்; உனக்கென்னடா அதபத்தி...? முண்டம்!"

பெருமாள் விடவில்லை.

"போன வாரம் போடணும்னீங்களே... அதான் ஞாபகப்படுத்தினேன்."

"ஏ, வெங்காயம். நொச்சு நொச்சுன்னு பேசாதடா வெங்காயம். வெறும் வாயிலே முழம் போட முடியுமா? வெள்ளையப்பன் வேணுமில்லே... மாலை போடறதுக்கு மட்டும் ஐந்நூறு ரூபாய் செலவாகும். நீ குடுக்கிறயாடா காரியக்கார நாயி...!"

பற்களைக் கடித்தான் முருகன்.

"தரேண்ணே..."

"புழுகிணிக் கருப்பா. வாய்ச் சவடால் அடிக்காம வேலையைப் பாருடா. நீ குடுத்து நான் ஐயப்பனுக்கு மாலை போடவாக்கும்!" என்று விரட்டினான்.

சில விநாடிகளில் -

"இந்தாங்க அண்ணே..."

நான்காக மடித்த ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து நீட்டினான் பெருமாள்.

நிமிர்ந்து பார்த்த முருகனின் கண்கள் விரிந்தன. திகைத்து விழித்து, "ஒங்கொப்பனை ஒதைக்கிற பயலே! ஏண்டா சுத்தி வளைச்சுப் பேசுற? பணம் வச்சிருந்தா படக்கின்னு குடுக்க வேண்டியது தானேடா. ஈனா வானா..." என்று கூறிக் கொண்டே பணத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

நான்கு நாட்களாயிற்று.

ஒரு கட்டடத்தில் லாஃப்ட்களுக்கு பலகையைச் சேர்த்து வைத்து தயார் செய்து கொண்டிருந்தான் பெருமாள்.

அடுத்தப் பக்கத்தில் வேலை செய்து கொண்டிருந்த காண்டிராக்டர் முருகன் கத்தினான்.

"ஏ சாமி! பெருமாள் சாமி! என்ன சாமி இது, இங்கே ஒரு முட்டுக் குடுக்க வேணாமா? கலவையைத் தூக்கிக் கொட்டும்போது டபக்கின்னு சரிஞ்சிடுமே சாமி. கொஞ்சம் முன்னப் பின்ன யோசிச்சு செய்யுங்க சாமி..." என்றவன், தொடர்ந்து அடுத்த பக்கத்தைப் பார்த்துக் கத்தினான். "ஏ பாண்டி சாமி! அது கிடக்கட்டும். இங்கே வந்து பெருமாள் சாமி கூட வேலையைக் கவனிங்க சாமி. நான் போய் விரதம் விடறேன்..."

பெருமாள் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவன் சந்தோஷப்பட்டான் என்பதும் அவன் முகத்தில் பிரதிபலித்தது.

ஏனென்றால் -

வாயைத் திறந்தால் இன்ன வார்த்தைதான்

# பயன் நோக்கி...

வரும் என்று சொல்ல முடியாதபடி பேசி வேலை வாங்குகிற முருகன், ஐயப்பனுக்கு மாலை போட்டு விட்டதால், 'சாமி' என்ற சொல்லைத் தவிர வேறு சொல்லைப் பயன்படுத்த மாட்டான்; கிட்டத்தட்ட இரண்டு மாதங்களுக்கு!

பெருமாள் கொடுத்திருந்த பணத்திற்கு அந்த சுக மும் அந்த அற்ப சந்தோஷமும்தான் அவனுக்குக் கிடைக்கிற வட்டி.



ஸ்ரீ வெண்டீ

# பணம் சேமிக்க வெண்டீ!
# எப்போதும் இதற்கே வெற்றி!

சுதா உமா இருவரும் பள்ளித் தோழிகள்.
ஒரு நாள் வீடு திரும்பும் போது...

உமா, என் மம்மி ரொம்ப கிரெட். ஜோரா பெயிண்டிங் பண்ணுவாங்க!

HIGH SCHOOL

என் மம்மி டிரஸ்லேகூட பெயிண்டிங் பண்ணுவாங்களே!

வாக்குவாதம் சூடுபிடித்துவிட்டது.

என் மம்மி ரொம்ப அழகா கர்ச்சீப் தைப்பாங்க

ப்பூ! என் மம்மி என் டிரஸ் எல்லாமே தைக்கிறாங்களே!

என் மம்மி வெண்டீ நிலையத்தில் எண்ணெய் வாங்கறாங்க. உங்க அம்மா அப்படி இல்லை.. நிச்சயமா தெரியும்

Vendee

வெண்டீ... அது

போன மாதம் சேமிப்பிலே. எனக்கு ஒரு அழகான ஸ்கெட்ச் பென் பாக்ஸ் வாங்கிக் கொடுத்தாங்க. வெண்டீ எண்ணெய் மூலம் பாக்கேஜ் செலவும் மிச்சம் ஆகுதுன்னு சொன்னாங்க!

தப்பு. வெண்டீ எண்
டேம்ப்பர் ப்ரூஃப். இதி
மாற்றமும் செய்ய மு
ஸீல் செய்யப்பட்டது
இது தூய்மையான
மம்மி சொன்ன

வெண்டீ... இது ஆட்டோமேட்டிக்கா எண்ணெய் வழங்கற இடம்னு அம்மா சொல்றாங்க. இது தூய்மையானது சுகாதாரமானது. அவங்களுக்கு நிறைய பணமும் மிச்சம் ஆகுதாம்!

எவ்வளவு பணம்?

ANURAG

அப்ப அந்த எண்ணெய் எல்லாம் தூய்மையா இருக்காது.

வெண்டீ வழங்குகிறது - அனுராக் சூப்பர் ரிஃபைண்டு சூரியகாந்தி எண்ணெய். அனுகூல் - பிளெண்டட் வெஜிடபிள் எண்ணெய். அபூர்வா - சூப்பர் ரிஃபைண்டு கடலை எண்ணெய் மற்றும் டெய்லி - டபுள் ஃபில்ட்டர்டு கடலை எண்ணெய்

டாடி பேப்பர்லே படிச்சுகிட்டு இருந்தாங்களே...

நான்தான் சொன்னேனே...என் அம்மாதான் கிரேட்!

மம்மிகிட்டே நிச்சயமா சொல்லணும்... வெண்டீ பத்தி

பாக்கேஜ் செய்த எண்ணெய்களைவிட இவை 6 முதல் 10 ரூபாய் விலை குறைவானவை

# கல்கி

3.11.96

தீபாவளி
சிறப்பிதழில்

பிரபஞ்சன்

எழுதும்

# பூக்கள் நாளையும் மலரும்!

உங்களைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளே
தொடர்கதையாக ஆரம்பமாகிறது!

# என்னைத் திருமணம் செய்து கொள்வீர்களா?

3.09.1966

ஓவியர் திலகமாக விளங்கும் அன்புள்ள திரு. ஜெயராஜ் அவர்களுக்கு,

நான் முன்பு எழுதிய இரண்டு கடிதங்களுக்கும் தாங்கள் எழுதிய பதில் கடிதங்கள் கிடைத்தன. 'ரசிகர்கள் கடிதத்திற்கு நான் தவறாமல் (தாமதமானாலும்) பதில் எழுதி விடுவேன்' என்று எழுதியிருந்தீர்கள். தங்களின் ரசிகர்கள் மீது தாங்கள் வைத்திருக்கும் அன்பை அது காட்டுகிறது. உங்கள் ஓவியங்களை நான் தொடர்ந்து எல்லா சஞ்சிகைகளிலும் பார்த்து – ரசித்து – மகிழ்ந்து வருகிறேன். ஆனந்தவிகடன் வாராந்தரியில் சிவசங்கரி அவர்களின் 'என்றும் உங்கள்' என்ற தொடர் நாவலுக்கும், குமுதம் இதழில் பி.வி.ஆர். எழுதிய 'சந்தைப் பேட்டை' தொடர்கதைக்கும் தாங்கள் கீறிய ஓவியங்கள், ஆங்கிலத்தில் 'இன்க்ரெடிபிள்' என்று சொல்வது போல் புகழ்ச்சிக்கும் அப்பாற்பட்டது. அந்த ஓவியங்களில் பிரகாசிக்கும் கற்பனை வளம், பின்னணியிலுள்ள செழுமை, ஒரு கதாபாத்திரத்துக்கும் இன்னொன்றுக்கும் இடையே உள்ள தெளிவான வித்தியாசம், பாத்திரங்களின் உணர்ச்சிபாவம் ஆகியவை என்னை மிகவும் கவர்ந்தன.

தங்களிடம் ஒரு முக்கியமான சங்கதியைச் சொல்ல அனுமதிப்பீர்களா? தாங்கள் என்னை திருமணம் செய்து கொள்வீர்களா? தங்களுடைய சம்மதத்தையோ அல்லது அபிப்ராயபேதத்தையோ தயக்கமில்லாமல் எனக்கு எழுதுங்கள். அல்லது இதுபற்றி உங்கள் பொதுவான கருத்து என்னவென்பதை எழுதுங்கள். என் அடுத்த கடிதத்தில் என் புகைப்பட நகல் ஒன்றை அஞ்சல் செய்கிறேன்.

அப்படித் தாங்கள் சம்மதித்தால், நம் திருமணத்திற்குப் பிறகு என் அப்பாவிடம் சொல்லி, ஒரு ஓவியப் பள்ளி அமைத்து, அதை நாம் இருவரும் சேர்ந்து நடத்தலாம் என்று முடிவு செய்திருக்கிறேன். எங்கள் நாட்டில் ஓவியப் பள்ளிக்கு நல்ல வரவேற்பு உண்டென்பது எனக்கு நன்றாகத் தெரியும். தாங்கள் நன்கு சிந்தித்து முடிவு செய்து பதில் கடிதம் எழுதுங்கள். எங்கள் நாட்டில் நான் இப்படி யாரையாவது மணக்க விரும்பினால், அவரையே கேட்டுவிடுவது வழக்கம்தான் – முறையும் கூடத்தான்.

தங்களுடைய பதில் கடிதத்தை இன்முகத்துடன் வரவேற்கக் காத்திருக்கிறேன்.

என்றும் தங்கள்

தாமரைச் செல்வி



## சி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள் : ஓவியர் ஜெயராஜ்

“இந்தக் கடிதத்தை நானும் என் மனைவி ரெஜினாவும் சேர்ந்துதான் படித்தோம். அப்போது எங்கள் மகள் ஹில்டாவுக்கு வயது இரண்டு. மகன் டிஸ்னி அப்போதுதான் பிறந்திருந்தான். (இப்போது ஹில்டா தன் கணவர் மற்றும் குழந்தைகளுடன் ஆஸ்திரேலியாவில் இருக்கிறாள். டிஸ்னி சென்னையில் விளம்பரக் கம்பெனி நடத்துகிறான்).

திடீரென்று ‘என்னை மணப்பீர்களா?’ என்று அந்தப் பெண் கேட்டிருந்தது எனக்குப் பெரிய அதிர்ச்சியைத் தரவில்லை. காரணம் அந்தப் பெண் வசிக்கும் நாட்டில் (பெயர் வேண்டாமே) இது சகஜம்.

ஆனால் எனக்குத் திருமணம் ஆகியிருக்கக்கூடும் என்ற சந்தேகம் கூட அந்த ரசிகைக்கு ஏன் வரவில்லை என்பது வியப்புதான். ஒரு வேளை மிகவும் இளமை ததும்பும் ஓவியங்களை வரைபவர் திருமணம் ஆகாத இளைஞனாகத்தான் இருக்க முடியும் என்று முடிவெடுத்து விட்டாரோ என்னவோ!

திருமணத்துக்கு முன் ரெஜினா கூட எனக்கு எந்தக் கடிதமும் எழுதியதில்லை! பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணம்தான் எங்களுடையது என்றாலும் நிச்சயதார்த்தத்திற்கும், திருமணத்துக்கும் இடையே சுமார் எட்டு மாத இடைவெளி. அவளுடைய அப்பாவுக்குத்தான் நான் லெட்டர் எழுதுவேன். ‘அன்புள்ள வருங்கால மாமனார் அவர்களுக்கு’ என்று தொடங்கி நடுவில் ‘ரெஜினா அவர்களை மிகவும் கேட்டதாகச் சொல்லுங்கள்’ என்று சந்தடி சாக்கில் சேர்த்துக் கொள்வேன். அவளும் தன் தந்தை மூலமாகத்தான் என்னை விசாரிப்பாள்.

இதையெல்லாம் நினைவில் கொண்டு சிரித்துக் கொண்டே நானும் ரெஜினாவும், இந்த அன்பு ரசிகையின் மனத்தை நோகச் செய்யாமல் நாசூக்கான நகைச்சுவையோடு பதில் சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தோம்.

‘தாங்கள் என்னைக் கேட்ட முக்கிய கேள்விக்கு நான் என் மனைவியைக் கேட்டுவிட்டுப் பதில் சொல்கிறேன். ஏனென்றால் எதிலும் அவள் ஆலோசனையைக் கேட்டு நடப்பதுதான் என் வழக்கம்’ என்று பதில் அளித்தேன்.

தொகுப்பு : **அருண் சரண்யா**



# வெளிநாட்டு சம்பந்தி

புறங்கையைக் கட்டியபடி பட்டாளைக்கும் ரெண்டாங்கட்டுக்குமாக கதிரேசன் செட்டியார் நடை பழகினார். கண்கள் நொடிக்கொரு தரம் வாசலைப் பார்த்தன. அடர்ந்திருந்த பவளமல்லிக் கொடிகளையும் தாண்டி, வெயில் கண்ணைக் கூசியது.

தபால்காரன் வரும் நேரம்தான்.

"லச்சுமி... ஏ லச்சுமி..." ஆச்சியை உள்பக்கம் பார்த்து இரைந்தார். ஆச்சி மூணாங்கட்டிலோ, கொல்லைப் பக்கமோ இருப்பார். எப்படிக் கேட்கும்? வீடுதான் நானூற்றம்பது அடி நீளமாயிற்றே! பட்டாளை அறைக்குள் சென்று 'பெல்'லை அமுக்கினார். உள்ளே அடுப்படியில் இருந்த ஆச்சி, சத்தம் கேட்டு, பதறிக் கொண்டு ஓடி வந்தார்.

"நாம எழுதி எத்தனை நா இருக்கும்?"

"எதைக் கேக்குறீக?"

"உன்னையப் போய்க் கேட்டேன் பாரு!... அதேன்... உன் மகன் கல்யாணங்கேட்டு எழுதினானே... இங்கிலீசுக்காரன்... அவனுக்கு பதில்..."

"நீங்கதானே எழுதினீக... போன வெள்ளிக்கு மொத வெள்ளி. பதிமூணு நாளாச்சு... ஏங்கேக்குறீக?"

"அவன் பதிலெழுதுறானோ, இல்லை... பேசாம கல்யாணத்தை சர்ச்சுல முடிச்சுப்பிடுறானோ...? ராமா! ராமா!! நம்ம கண்ணால இந்த கண்றாவியெல்லாம் பாக்க வேணுமின்னிருக்கு. எப்படிப்பட்ட குடும்பம்...! எங்கப்பச்சி... எப்படிப்பட்டவுக! எல்லோரும் ராமனா வாழ்ந்தவுக. நம்ம குடும்பத்துலயா இப்படி...? வேலைக்கு போனவங்கயெல்லாமா இப்படி வெள்ளைக்காரியைக் கூட்டியாராங்க...? உம் மகனைப் போலயா...! எல்லாம் எந்தலையெழுத்து...!"

"அவன் கல்யாணங் கட்டுறான்... இல்ல நாசமாய்ப் போறான்... நீங்க கத்தி, கவலைப்பட்டு 'பிரசர்' ஏறிடப் போவுது... விடுங்க காப்பி வேணாப் போட்டாரவா?"

"அதெப்படி... அளகுபெத்த ஆம்பிளைப் பிள்ளை... நாட்டரசங்கோட்டை பழனியப்ப செட்டியார் நேர் வாரிசு... ஊருக்கு முத டாக்டரேட்... பி.எல்.எம்.எஸ்டேட்டுச் முதலாளி, விட்டிருவனா...? வரட்டும் பதி பார்த்தர்றேன். எழுதிக் கேட்டான் பாரு என்னையக் கேனைப்பயன்னு நெனை சுக்கிட்டு...! 'உன்மகன் எம்மகளை விரும் றான்... கட்டிக்கக் கேக்குறான்... உனக்கு சம்மதமா'ன்னு... நடிக்கிறானா...?" அவருடை முகம் சிவந்து போனது. மூச்சு வாங்கியது.

"அடி ஆத்தி! இப்படி மூச்சு வாங்குதே நீங்க ஏன்தா... இப்படி கவலைப்படுறீக நல்லாத்தேன் பெத்தோம், வளத்தோம்



அரியக்குடி பெருமாள் நம்மள கை விட்டுற மாட்டார்...! நம்ம ஐயாக்க செஞ்ச புண்ணியந்தான். ஒவ்வொருத்தர் மாதிரி இல்லாம, பெத்தவுக நம்ம, சம்மதம் கேட்டு வெள்ளைக்காரன் எழுதினான்... நீங்களும் என்னமா ஒரு கேள்வி கேட்டு பதில் எழுதினீக...? அதப் படிச்சவன் மான, ரோசம் இருந்தா நமக்கு சம்மதமில்லாத இந்த கல்யாணத்தைப் பண்ணுவானா...?"

சாய்மானக் குறிச்சியை விரித்துப் போட்டார் லட்சுமி ஆச்சி... ஃபேனையும் சுழலவிட்டு வெள்ளித் தம்ளரில் தண்ணீர் கொடுக்க, கதிரேசனுக்குத் தேவலாம் இருந்தது.

'வாஸ்தவம்தான் அவுக தபால் வந்த உடனே தாமதிக்காம நறுக்குனு ஒரு தபால் போட்டது, அவுக மனதை மாற்றியிருக்கணும்...' இன்னைக்குத் தபால்காரன் வந்தா விஷயம் தெரிஞ்சிடும்...'

"லட்சுமி... உள்ள கண்ணாடிப் பீரோல்ல... மேல் தட்டுல நான் எழுதின தபால் காப்பி வச்சிருக்கேன். அதையும் மூக்குக் கண்ணாடியையும் சித்த கொண்டா... இந்த தபால்காரனை இன்னுங் காணமே?"

ராமய்யா மகன் பேங்க் மானேஜரை விட்டு எழுதலாம் என்று காத்திருந்து, அவன் வராது போக, இருப்புக் கொள்ளாமல் அவரே ஆங்கிலத்தில் உடன் பதில் எழுதிப் போட்டுவிட்டார். லட்சுமி கொண்டு வந்த அந்த தபாலின் நகலினை மீண்டும் படித்தார். அந்தத் தபாலின் நடுப்பாகம்தான்... அம்பு போல் குத்தியிருக்க வேண்டும். மீண்டும் அதை ஒருமுறை படித்தார்.

'நாங்கள் எல்லாம் பரம்பரை பரம்பரையாய் குடும்பமாய் வாழ்பவர்கள். சாமி நம்பிக்கை உள்ளவர்கள். எங்களுக்கு இல்லறம்தான் வாழ்க்கை முறை. வாழ்வில் ஒருமுறைதான் திருமணம். அது ஒரு விளையாட்டல்ல. மணந்தவரை விலக்கி விட்டு, வேறொருவரை செய்து கொள்வது கிடையாது. பந்தம், பாசம், குடும்பம்... திருமணம்.. என்று பழம் பஞ்சாங்கமாய்...

'....டாக்டர் கே. பழனியப்பன் உங்கள் நாட்டு கேம்பிரிட்ஜ் யூனிவர்சிடியில் ஆஸ்டிரோ பிசிக்ஸ் டிபார்ட்மெண்டின் எச்.ஓ.டி. பாவம் ஒரு அப்பாவி. எங்கள் தொன்மையான பாரம்பரியமிக்க நல்ல குடும்பத்தின் ஒரே வாரிசு. ஒரு இனக்கவர்ச்சியில் உங்கள் மகளிடம் மயங்கியிருக்கலாம். நாங்கள் நல்ல குடும்பத்தில்தான் பெண்ணெடுப்போம். நாங்கள் வணங்கும், அரியக்குடி பெருமாள்தான்... திருமணத்திற்கு முன் உங்களை எங்கள் சம்மதம் கேட்கத் தூண்டியிருக்கிறார். உங்கள் சம்பிரதாயமான கடிதத்திற்கு சந்தோஷமான பதில் என்னால் எழுத முடியாததற்கு மன்னிக்கவும்...' கடிதத்தை மூடி வைத்தார்.

அத்துணை கவலையிலும்... கதிரேசனுக்கு... அவரே எழுதிய கடிதத்தை மீண்டும் ஒருமுறை படித்ததும் தென்பு வந்தது.

நிமிர்ந்த பொழுது கையில் பெரிய தபால் கவருடன் மனைவி லட்சுமி நின்று கொண்டிருந்தாள். ஓ... எதிர்பார்த்த பதில் தபால் வந்து விட்டதோ!

உடன் எழுந்து பட்டாள அறைக்குள் சென்று, பெருமாள் படத்தின் முன்.. அந்த கடிதத்தை வைத்து வணங்கி விட்டுப் பிரித்தார்.

சம்பிரதாயமான துவக்கத்திற்குபின் கடிதம் விஷயத்திற்கு வந்தது :

தாங்கள் எங்களைப் பற்றி எவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறீர்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. ஆனால் உங்களைப் பற்றியும் உங்கள் குடும்பம், சமூக கலாசாரம் பற்றியும் நன்கு விசாரித்து நாங்கள் அறிந்திருக்கிறோம்.

சோம. வள்ளியப்பன்

உங்கள் கடிதத்திலிருந்து தாங்கள் எங்கள் குடும்பத்தினைப் பற்றி நல்ல அபிப்ராயம் வைத்து இல்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது. அதை விளக்கும் பொருட்டு... கீழ்வருவனவற்றை எழுத வேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு.

1. எங்களுக்கு விவரம் தெரிந்த கடந்த ஏழு தலைமுறையில் ஒருமுறை கூட திருமண முறிவு என்பதே கிடையாது. அனைவரும் ஒருமுறை மணம் செய்தவர்கள்தான்.

2. நாங்களும் கூட்டுக் குடும்பம்தான் 73 வயதாகும் என் தந்தை பிரவுன் மாக்மிலனுடனும் 72 வயதாகும் என் தாயார் ஸ்டாபினியுடனும் தான் நானும் என் குடும்பமும் வாழ்ந்து வருகிறோம்.

3. என் விதவை அத்தை ஸ்டெபானி தன் கணவனை தன் நாற்பதாவது வயதில் இழந்தும், மறுமணம் செய்யாது எங்களுடன்தான் இருந்து வருகிறார்.

4. என் ஒரே மகன் எட்பெர்க்கும் லாஸ்ஏஞ்சல்ஸ் நகரில் கடந்த ஏழு வருடங்களாக வேலை செய்தாலும் அவன் குழந்தைகள் நலன் கருதி அவன் மனைவி பிரிஜிட்டாவும், குழந்தைகளும் எங்களோடுதான் வாழ்கிறார்கள்.

பாரம்பரியமிக்க நல்ல குடும்பத்தில் பிறந்த எங்கள் மகள் கார்லெட்டா உங்கள் மகன் டாக்டர். கே. பழனியப்பனை விரும்புவது குறித்து நானும் என் மனைவியும் நன்கு யோசித்து ஒரு முடிவெடுத்துத்தான் உங்களுக்கு எழுதினோம்.

இனங்கள் வேறுதான், நாடும், மொழியும், பாரம்பரியமும் நிச்சயம் வேறுதான். ஆனால் அடிப்படைக் கொள்கைகளில் எங்களுக்கு முரண் தெரியாததால் தான் வாழ்விலும் பிரச்னைகள் குறைவாகத்தான் இருக்கும் என நினைக்கிறோம். ஆயினும்... இந்தத் திருமணம் நிச்சயம் உங்கள் முழு சம்மதத்துடன்தான் நடக்க வேண்டும் என்பது எங்கள் விருப்பம். உங்கள் பதிலை எதிர்பார்க்கின்றோம்.

அன்புடன்,

.........................

கணவனும், மனைவியும் இரவு முழுவதும் உறங்கவில்லை. மறுநாள் மஞ்சள் தடவி அமெரிக்காவிற்கு ஒரு தபால் எழுதினார்

கதிரேசன்.

# குட்டி ராஜாக்கள்!

**உள்ளாட்சித் தேர்தலில் எத்தனை மினி அரசுகள்? மின்மினி ராஜாக்கள் எத்தனைபேர் உருவாகப் போகிறார்கள்? இதோ கணக்கு–**

***1) கிராம பஞ்சாயத்து - 12,583***
***அதிலுள்ள வார்டுகள் - 1,18,141***
***2) பஞ்சாயத்து யூனியன் – 384***
***அதில் உள்ள வார்டுகள் – 6504***
***3) பேரூராட்சி – 635***
***அதில் உள்ள வார்டுகள் – 10,152***
***4)மாவட்ட ஊராட்சி - 28***
***அதில் உள்ள வார்டுகள் – 649***
***5) நகராட்சி – 104***
***அதில் உள்ள வார்டுகள் 3,368***
***6) மாநகராட்சி – 6***
***அதில் உள்ள வார்டுகள் 474***

***– மீனா திருநாவுக்கரசு***



நாத்திகன் ஒருவன் உணவு தயாரித்துக் கொண்டு பாலைவனத்தில் போய் அமர்ந்து கொண்டு, 'என் முன் உள்ள உணவை நானே என் கையால் எடுத்துச் சாப்பிடாவிட்டால், கடவுள் எப்படி என் வயிற்றை நிரப்புகிறார் பார்ப்போம் என்று நினைத்து மௌனமாக உணவின்முன் அமர்ந்தான்.

தற்செயலாக அந்த வழியே நல்ல பசியுடன் இரண்டு வழிப் போக்கர்கள் வந்தனர். நாத்திகன் முன் இருந்த உணவைப் பார்த்ததும் ஒருவன் ஆவலுடன் உண்ணப் போனான். ஆனால் கூடவே ஒரு சந்தேகம் வந்தது. இவன் ஏன் உணவை வைத்துக் கொண்டு சாப்பிடாமல் இருக்கிறான். ஒரு வேளை இதில் விஷம் கலந்திருக்குமோ என்று அஞ்சினான். நாத்திகனிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தனர். பதில் இல்லை. கோபத்தில் இருவரும் அவனை பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாக அவன் வாயில் உணவைத் திணித்து விழுங்குமாறு செய்தனர். நாத்திகன் இறைவன் செயலை நினைத்து ஆத்திகன் ஆனான்.

– புராண சொற்பொழிவிலிருந்து:
என். ஜெயராமச்சந்திரன்

# சுஜாதா பக்கம்



உயிர் என்பது என்ன? நாம் எப்போது உயிர் பெறுகிறோம்? பிறக்கும் போதா இல்லை சூலுறும் போதா இல்லை அதற்கும் முன்னாலா என்று கேள்வி கேட்கவைக்கிறது, டைம்ஸ் பத்திரிகை செய்திக் குறிப்பு ஒன்று. (இதை வழக்கறிஞர் டி.ஸி.ஏ. ராமானுஜம் அவர்கள் எனக்கு அனுப்பியிருந்தார்.)

'இன்விட்ரியோ' முறை வந்து, கர்ப்பப் பைக்கு வெளியே ஆணின் விந்துவும் பெண்ணின் முட்டையும் ஒரு பெட்ரி டிஷ்ஷில் சேர வைத்து மீண்டும் தாயின் கர்ப்பப் பைக்குள் வைக்கும் வசதி வந்ததும் பிரிட்டனில் உள்ள கிளினிக்குகளில், ஐம்பதாயிரம் எம்ப்ரியோ என்னும் கருமுட்டைகள் உறைய வைக்கப்பட்டு, சூலுறத் தயாராக இருக்கின்றனவாம். இவற்றில் ஒன்பதாயிரம் ஐந்து வருஷங்களாகக் காத்திருக்கின்றனவாம். 1990ல் பிரிட்டனில் ஐந்து ஆண்டுகளுக்கு மேல் கருவுறாத எம்ப்ரியோக்களை அழித்து விடலாம் என்று சட்டம் கொண்டு வந்தார்கள்.

உயிர் என்பது ஒரு செல், கூட்டணு. ஆர்.என்.ஏ., டிஎன்ஏ, க்ரோமோசோம், ப்ரோட்டின் கொண்ட ஒரு மிகப் பெரிய கூட்டணு. அதில் கார்பன், நைட்ரஜன், ஹைட்ரஜன், ஆக்சிஜன் இவைதான் சரம் சரமாக உள்ளன.

இன்விட்ரியோ எப்போதும் வெற்றி பெறுவதில்லை. அதனால்தான் தேவைக்கதிகமாகவே முட்டைகள் கைவசம் வைத்திருப்பது வழக்கம். அதனால் சேர்ந்து போன கருக்களை என்ன செய்வது என்று தர்மசங்கடம். இவை ஒரு மணற்துகள் அளவுதான் இருக்கும். இருந்தும் இவை எல்லாம் உயிர்கள் என்கிறது வாட்டிக்கனின் கத்தோலிக்க மதத்தலைமை. அதனால் இவற்றைத் 'தத்து' எடுத்துக் கொள்ள இத்தாலியில் நூற்றுக்கணக்கான பெண்கள் தயாராக இருக்கிறார்களாம்.

நிசமாகவே இவை உயிரா? அல்லது உயிராகக் கூடிய சாத்தியமுள்ள முன்னுயிர்களா? இவற்றை அழிப்பதால் உயிரை அழிக்கிறோமா?

அறிவியல் தரும் விடையின்படி உயிர் என்பது ஒரு செல், கூட்டணு. ஆர்.என்.ஏ., டிஎன்ஏ, க்ரோமோசோம், ப்ரோட்டின் கொண்ட ஒரு மிகப் பெரிய கூட்டணு. அதில் கார்பன், நைட்ரஜன், ஹைட்ரஜன், ஆக்சிஜன் இவைதான் சரம்சரமாக உள்ளன.

உயிருள்ள கூட்டணுவுக்கும் உயிரற்ற கூட்டணுவுக்கும் உள்ள ஒரே ஒரு வித்தியாசம் 'ரெப்ளிக்கேஷன்' படியெடுக்கும் திறமை. செல் பாதியாகப் பிரிந்து, தன் சுற்றுப்புறத்தில் உள்ள அணுக்களுடன் சேர்ந்து, ஒன்று இரண்டாகிறது. இரண்டு நாலாகிறது. அது என்ன செல் என்கிற செய்தி, அதன் ரசாயன அமைப்பிலேயே பொதிந்திருக்கிறதன்படி கண்ணாகிறது; தோலாகிறது; ரோமமாகிறது; நகமாகிறது. மனிதப் பிறப்பில் பெண் தரும் முட்டைக் கரு தானாகவே இந்த இரட்டிப்பு நிகழ்ச்சியைத் தொடங்குவதில்லை. ஆணின் விந்து வரக் காத்திருக்கிறது. அது நுழைந்ததும்தான் இதில் பாதி அதில் பாதி என்று செய்திகளைக் கொண்டு தன் இரட்டிப்பைத் தொடங்குகிறது.

எனவே, பெண்ணின் முட்டைக் கரு முழு உயிர் அல்ல; அரை உயிர். அறிவியல் உயிரின் ரகசியத்தைக் கண்டு பிடிக்குமா? செல்களின் கட்டட அமைப்பு, அவை இரட்டிக்கும் விதம், டி.என்.ஏ., வம்ச அடையாளங்களில் டி.என்.ஏ.வின் பங்கு, நம்முள் இருக்கும் நோய்த்தடுப்பு முறைகள் இவற்றையெல்லாம் அறிவியல் அறிந்திருக்கிறது. ஆனால் உயிரின் ரகசியத்தை அறிந்து கொள்ள அறிவியல் மட்டும் போதாது; மற்றொரு ஞானம் தேவை என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். எத்தனை அறிவு பெற்றாலும் உயிரின் ரகசியத்தை அறியவே முடியாது என்கிறார்கள்.

இது ஒரு ஆழமான தத்துவ விசாரம். பார்த்து, அறிந்து, வியக்க முடிகிறதே தவிர, காரணம் என்ன என்பதற்கு, அறிவியல் விடை தருவதில்லை. வேதாந்தத்திலோ கடவுள் தத்துவத்திலோதான் பதில் கிடைக்கும் எனத் தெரிகிறது.

(மீண்டும் அடுத்த வாரம்)

# எனக்கென்று ஓர் இடம்

நிச்சயதார்த்தம் நடக்கும் பொழுது ராஜேஷின் வீட்டில் ஒரே கட்டளை அதுதான்.

"எங்கள் பையனுக்கு வரதட்சணை கூட வேண்டாம். அவனுக்கு நண்பர்கள் அதிகம். வர்றவங்களை நல்லவிதமா கவனிச்சு அனுப்பினாலே போதும். கல்யாணம் க்ராண்டா நடந்தா சரி."

கேட்கும் பொழுது ரொம்ப சாதாரணமாகத்தான் இருந்தது சுசிலாவின் குடும்பத்தாருக்கு.

பஸ்ஸிலும் பின்னே தனியாக இரண்டு வேன்களிலும் வந்து இறங்கிய இளைஞர் பட்டாளத்தைப் பார்த்ததும், அடிவயிறு கலங்கியது, எப்படி சமாளிக்கப் போகிறோம் என்று.

தங்குவதற்கு என்று தனியாக ஒரு கல்யாண மண்டபம் பிடித்து இருந்தது வசதியாகப் போனது.

"ராஜேஷ்... உன் வுட்பி தூள்... சுசிலாங்கறே.. நல்லாப் பாடுவாங்களா.." ஒல்லியாக அப்பாவி முகத்துடன் இருந்த ஒருவன் கேட்டதும் கூட்டம் சிரித்தது.

உறை கழற்றி நாதஸ்வர கோஷ்டியினர் உற்சாகமாக வாசிக்க ஆரம்பிக்க...

இரண்டு மாமிகள் வாசலில் கோலத்தை அழகுபடுத்த...

சமையல்கட்டிலிருந்து கேசரியின் மணம் மூக்கைத் துளைக்க...

அப்பாவும் அண்ணனும் ஓடி ஓடி உபசரித்துக் கொண்டிருந்தனர்.

வாசலில் கார் வந்து நிற்கும்போதெல்லாம் பரபரப்பு... யார் வருவது...

"அபி... நீ போய் டிபன் வந்ததான்னு கேட்டுட்டு வந்துடும்மா..."

"அண்ணன் தானே கொண்டு போனார். அப்புறம் நான் எதுக்கு..."

"அட லேடீஸ்ல யாராவது போய் விசாரிக்கணும்.. போம்மா..."

தயங்கித் தயங்கி நடந்தாள். இதற்கு என்ன நக்கல் செய்யப் போகிறானோ மூர்த்தி... சே!

"டிபன் வந்ததா... காப்பி சாப்பிட்டாச்சா?"

"ஓ..."

"வேற ஏதாவது வேணுமா..."

"நீங்க...." மூர்த்தி இழுத்தான்.

"என்ன..." கொஞ்சம் கோபம்.

"நீங்க கேட்டதே போதும். டிபன் எல்லாம் ரொம்ப அமர்க்களம்."

சட்டென்று கோபம் அடங்கிப் போனது. எப்படி மாற்றி விடுகிறார்கள் வார்த்தையை. திருநெல்வேலி சாமர்த்தியம் என்றால் இது தானோ...?

"என்னம்மா... லைன் க்ளியர் ஆகப் போகுதா..."

யாரோ ஒரு நடுவயதுப் பெண் அபிநயாவைக் கேட்

அந்த அமளியிலும் சுசிலாவின் தங்கை அபிநயாவிற்கு சிரிப்பு வந்தது.

"தங்க இடம் வசதியா இருக்கா..." விசாரிக்கப் போனவளை...

"தாராளமா... இருக்கு. இங்கேயே எங்க ஃப்ரெண்ட்ஸ்ல ஒருத்தனுக்குக் கல்யாணம் நடத்தலாம். அவ்வளவு வசதி... மீண்டும் அதே இளைஞன் கிண்டலுடன் பதில் சொல்ல...

"சும்மா இருப்பா மூர்த்தி... பெண் வீட்ல தப்பா நினைச்சுடப் போறாங்க" ராஜேஷின் அப்பா சொன்னதும் அபிநயாவிற்கு சமாதானமாக இருந்தது.

சுசிலா சந்தோஷ முகத்துடன் வளைய வந்து கொண்டிருந்தாள்.





## நா. நாகராஜன்

டது சரியாகப் புரியாமல் "ம்..." "ம்..." என்றபடி நடந்தாள்.

கல்யாணம் முடிந்து மாப்பிள்ளை வீட்டார் போவதற்குள் மூர்த்தியைப் பார்த்துப் பேசிவிடுவது என்று நினைத்துக் கொண்டாள்.

ஜானவாசம் முடிந்ததும் சாப்பிட்டுவிட்டு காதல் கோட்டை படத்திற்குப் பாதிக் கூட்டமும் சீட்டு விளையாட்டைத் தொடர பாதிக் கூட்டமும் போனதும் அபிநயாவிற்கு நிம்மதியாக இருந்தது.

சுசீலாவைச் சுற்றி அவள் தோழிகள் கிண்டலடித்தபடி இருந்தனர்.

அப்பா பணப் பையுடன் நடமாடிக் கொண்டிருந்தார்.

"என்ன மச்சி. ரூம் மட்டும் தான் போட்டு இருக்கியா... வேறு வசதி ஒண்ணும் பண்ணலியா..." அண்ணனிடம் ஒரு சிறு கூட்டம் விசாரித்துக் கொண்டிருந்தது.

வரதட்சணை வேண்டாம் என்று சொல்லி விட்டு இப்படி கும்பலுடன் வந்து செலவு செய்ய வைப்பதும், சஃபாரி எடுத்துத் தரச் சொல்வதும் வரதட்சணை கொடுப்பதை விட கஷ்டமான காரியம் என்று அபிநயா நினைத்துக் கொண்டாள்.

''எவ்வளவு ஃபிரண்ட்ஸ் பார்த்தியாம்மா உன் மாப்பிள்ளைக்கு...''

''பிஸினஸ்




''ஒட்டப்பந்தயத்தில் ஏகப்பட்ட சாதனைகள் பண்றீங்களே, எப்படி முடியுது உங்களாலே?''

''இதுக்கு முன்னால நிறைய ஊர்ல ஃபைனான்ஸ் கம்பெனி நடத்தியிருக்கேன்...''

– நெய்வேலி ஜீவி

---

பண்றவர். பழக்கம் இருக்கத்தானே செய்யும்...'' அம்மா விட்டுக் கொடுக்காமல் பேசினாள்.

காலையில் மாப்பிள்ளை காசியாத்திரை கிளம்பும் பொழுது குளித்து ட்ரெஸ் செய்து ஃப்ரெஷ்ஷாக வந்து இறங்கியது நண்பர் குழாம்.

“காசிக்கா மாப்பிள்ளே...”

“ம்...”

“வேன்லயே போய்டலாமே...” மீண்டும் மூர்த்தி.

“வழில மாமனார் தேங்கா கொடுத்து மடக்கிடுவார்...”

“நீ அவருக்கு அல்வா கொடுத்திடு...” அலை அலையாய்ச் சிரிப்பு.

சாஸ்திரிகளும் சிரித்துக் கொண்டார்.

“ஏம்பா... வீடியோகிராபர், அறுநூறு மைல் தூக்கம் முழிச்சு கல்யாணம் பார்க்க வந்திருக்கோம். நீ மறைச்சுக்கிட்டு நின்னா எப்படி...”

அவர் திரும்பிப் பார்த்தார்.

“சாரி... நான் எல்லா ஃபங்ஷனும் கவர் பண்ணணும். ரெண்டு கேமிரான்னாலும் எதுவும் மிஸ் ஆயிடக்கூடாது இல்லையா...”

“சரி... மிஸ் ஆனா நாங்க கவனிச்சுக்கறோம்... எங்க கேமராவால...”

ராஜேஷுடன் ஊஞ்சலில் சுசிலா உட்கார்ந்து ஆடும் போதும் கிண்டல்.

“மாப்ளே... இப்படி ஆடிக்கிட்டே இருந்தால் போதும்னு தோணுமே. உறவு... நட்பு எல்லாம் அப்படியே காணாமல் போய் நீங்க ரெண்டு பேர் மட்டும் இருந்தால் போதும்னு தோணுமே...”

பச்சைப் பொடி – சாத்து உருண்டை – பெண் மாப்பிள்ளை தலையைச் சுற்றிப் போடும் போதும் கமெண்ட்...

“ராஜேஷ்... உன் தம்பி கிரிக்கெட் பிளேயர். ஒண்ணு விடாம கேட்ச் பண்ணிட்டான்.”

சிரிப்பு.

“நம்ம மேல உருண்டை விழுந்தா சீக்கிரம் கல்யாணம் நடக்கும்...”

“கல்யாணம் ஆனவங்களுக்குமா...”

“ஆசையைப் பாரு. மாமி கூட வராத தைரியமா... நாளைக்கு காலம்பற முத வேளையா மாமிகிட்டே போய் இதைத்தான் சொல்லப் போறேன். நேத்து ராத்திரி தண்ணி அடிச்சிட்டு லுங்கியை தலைல கட்டிண்டதைக் கூட இன்னொரு நாள்தான் சொல்லுவேன்...”

தாலி கட்டி முடித்ததும் ஒரு கட்டு பேப்பரை விநியோகம் செய்தார்கள்.

பிரம்மச்சாரி சங்கத்திலிருந்து கட்சி மாறிய மாப்பிள்ளையைச் சாடுவது மாதிரி கிண்டலடித்து இருந்தார்கள்.

பரிசளிக்கும் சமயத்தில் ஆளாளுக்கு விலை உயர்ந்த சாமான்களை அளிக்கும் போது அவர்களின் வசதி புரிந்தது அபிநயாவிற்கு.

கல்யாணம் முடிந்த திருப்தியில் அப்பா அம்மா...

கூட்டத்தில் வந்த ஒரு பெண் தோழியுடன் பேசிக் கொண்டு அண்ணன்.

கணவனிடம் தன் தோழியை அறிமுகப் படுத்திக் கொண்டு சுசிலா.

தனித்தனியே வீடியோவிலும் போட்டோவிலும் பதிவு.

கொஞ்ச நேரம் கிடைத்தது அபிநயாவிற்கு. மூர்த்தியிடம் பேசிப் பார்த்தால் என்ன...

இதற்கும் அவர்கள் கிண்டலடிப்பார்களா? நல்ல நேரத்திற்கு மூர்த்தி இன்னும் ஒரு காப்பி குடிக்க சமையல் ரூமிற்கு வந்தான்.

“ஹலோ மூர்த்தி...”

“ஹலோ அபிநயா. ரொம்ப சந்தோஷம் ரொம்ப க்ராண்டா அரேன்ஜ் பண்ணி இருந் தீங்க. ராஜேஷ் கல்யாணம் மறக்க முடியாதபடி க்ராண்ட்...”

“தேங்க்ஸ் மூர்த்தி. பட்... உங்க கிண்ட சில சமயம் ஓவர். உங்க நகைச்சுவை உணர்வை மதிக்கறேன். ரசிக்கறேன். அது அடுத்தவங்களைக் காயப்படுத்தாத வரை...”

“சாரி... அபிநயா. எனக்குக் குடும்பத்தி பிரச்னை ஜாஸ்தி. ரெண்டு அக்கா, அண்ண கடைசியா நான். யாருக்கும் இன்னும் க யாணம் ஆகலை. என் வயசு முப்பது. எப்பே நடக்கும்னு தெரியலை. அதான் இந்த மாதி கல்யாணத்துல கலாட்டா பண்ணி எனக்கு ஒரு இம்பார்டன்ஸ் கிடைக்க ட்ரை பண்றே பட் என் கமெண்ட்ல யாராவது புண்ப டிருந்தா சாரி. இனி, நான் இது மாதிரி செய் மாட்டேன்...”

அதுவரை பார்த்த மூர்த்திதானா அது...

“இல்லே மூர்த்தி நீங்க ஜோக் அடிங் அதுல தப்பில்லை... என்றாள் அபிநய திருப்தியுடன்.



# உள்வீடுகள்...

உமா கல்யாணி

"நாச்சம்மை... ஏ நாச்சா...!" என்று உரத்த குரலில் அழைத்துக் கொண்டே படியேறி உள்ளே வந்தாள் அலமேலு ஆச்சி.

"வா அலமி" என்று வரவேற்றுக் கொண்டே வெளியே வந்தாள் கதிரேசன் செட்டியாரின் மனைவி நாச்சம்மை ஆச்சி.

நீளமான படிக்கட்டு முழுவதும் வேம்பின் நிழல் படர்ந்திருந்தது.

இருவரும் எதிர் எதிராகப் படிக்கட்டில் அமர்ந்து கொண்டனர்.

"நாச்சா, காலம்பற ஓம்பூட்டுப் பேத்திப் பொண்ணப் பாத்தேன். இங்லீசு பள்ளிக்கூடம் போறாளாம். எல்.கே.ஜி. படிக்குதாம். சொன்னாக" என்ற அலமேலுவின் பார்வை நாச்சம்மையை ஊடுருவியது.

நாச்சம்மையின் முகத்தில் ஓர் ஆதங்கம் தோன்றி அடங்கியது.

"ஹும், பேத்திப் பொண்ணு நல்லா, தாட்டியமா இருக்காளா?" என்று கேட்டவளின் குரலில் ஏக்கத்தின் வேதனைகள்!

"ஓ! என்னமா இருக்கான்றே! யூனிஃபார்ம் போட்டுக்கினு கால்ல சப்பாத்து மாட்டிக்கினு, ரெண்டு சடை போட்டுக்கினு நல்லா இருக்காடி ஓம்பூட்டுப் பேத்திப் பொண்ணு..." என்றாள் அலமேலு.

"ஹும்... ம்.."

"ஏன் நாச்சம்மை அலுத்துக்கிறே?"

"என்னவோ அவுகதேன் மாறிட்டா கன்னா, அவுக பிள்ளைகளையுமில்லா மாத்திப்பிடுவாக போல்ருக்கு" என்றாள் வேதனைக் குரலில் நாச்சம்மை.

"காலம் மாறுதுல்ல."

"அதுக்காக நாம கூட மாறிப்பிடணுமாக்கும்? 'சொல்லச் சொல்ல கேட்க மாட்டேனுட்டு,' அரண்மனை போல இருந்த வீட்டை, முகப்பை இடிச்சுப்பிட்டு புது மாடல்னு என்னவோ கட்டியிருக்காக. வீட்டோட அழகே போயிருச்சு அலமி..."

"ஏன் நாச்சம்மை, இப்பவும் வீடு நல்லாத்தானே இருக்கு. முகப்பை மட்டும்தானே மாத்திக் கட்டியிருக்காக. உள் வளவெல்லாம் மாத்தாம கொள்ளாம அப்படியேதானே

இருக்கு.''

"வீட்டோட அழகே முகப்புலதான இருக்கு அலமி! மலேயாவுல இருந்து பளிங்கும் பாவையுமாக் கொணாந்து வீட்டு முகப்பை அரண்மனை போல அலங்காரமாத்தேன் கட்டினாக செட்டியாரு. அதப் பூராவும் பேத்துப்பிட்டு, என்னவோ கன்னாபின்னான்னு பண்ணி மாத்திப்பிட்டானே! நானுந்தேன் தடுத்துப் பாத்தேன். கேட்க மாட்டேன்னுட்டாகளே!"

"படிச்சவுக. நாலு சீமை போய் வாரவுக. எல்லாம் நாகரீகமாய் இருக்கணும்னு நினைக்காக."

சமாதானம் பண்ண முயன்றாள் அலமேலு ஆச்சி. ஆனால் சுலபத்தில் சமாதானமடைவதாக இல்லை நாச்சம்மை ஆச்சி.

''என்ன பெரிய நாகரீகம் வேண்டிக் கிடக்கு? எங்க குடும்பத்தையே 'நாச்சாள் குடும்பம்'னுதேன் சொல்வாக. எவ்வளவோ காலமாத் துலங்கி வர்ற பேரு இது! ஆனா... அவுக எம்பேத்திப் பொண்ணை இந்தப் பேர் சொல்லிக் கூப்பிடலியே. ஹேமான்னோ, கோமான்னோல்ல நாகரீகப் பேர் வச்சுக் கூப்பிடுதாகளாம்.''

"போகுது விடு."

''திருவாதிரைக்கு உத்திரகோச மங்கை போய்ட்டு, அப்படியே ராமேஸ்வரம், திருப்புல்லாணி, சேதுக்கரை எல்லாம் போய்ட்டேனா, திரும்பி வர ஒரு வாரமாயிட்டுது. வந்து பாக்கிறப்ப மனசே பதறிடுச்சே! முகப்பை இடிச்சுப் போட்டுட்டானே. இவ்வளவு ஆன பின்னாடி இந்த மகன்கிட்டே என்ன பேச்சுன்னு இஞ்ச வந்தவதேன், அஞ்ச போக மனசே கொள்ளலை. மருமக நடையாய் நடந்து நடந்து கூப்பிட்டாளே! நான் போகலே. செட்டியார் அவுக கட்டினதை இவன் எப்படி இடிக்கப் போச்சு? நாந்தடுத்துப் பிடுவேன்னு தானே, நான் ஊர்ல இல்லாத சமயத்துல இடிச்சிட்டான்!"

''அவனுக்குப் புது மாடல்ல, பங்களா போல இருக்கணும்னு ஆசை. உனக்குப் பழசெல்லாம் மாறிடப்பிடாதுங்கிற நினைப்பு. அவுக முகப்பை இடிச்சு மாத்திக் கட்டிப் பிட்டாகன்னு உனக்குக் கோபம். உள்வளவு பூராவும் செட்டியார் அவுக கட்டி வச்சாப்ல அப்படியேதானே இருக்கு. அட நாச்சம்மை, இனிமே ஆளப் போறவுக அவுக. அவுக இஷ்டம் போல மாத்திக்கிட்டு போறாக. நீ எதுக்கு வீணாப் போட்டு அலட்டிக்கிறே?''

நாச்சம்மை மௌனம் சாதித்தாள். கொஞ்சம் சிந்தனை பண்ணவும் துவங்கி விட்டாள்.

"ரொம்ப அலட்டாம இரு. ஓம் பேத்திப் பொண்ணப் போயி பாத்துட்டு வா. ஓம்பேத்தி ஒன்மாதிரியே மூக்கும் முழியுமா இருக்கு. துருதுருன்னு அலையுது. அப்பத்தான்னு நீ இருக்கே, ஆனா அதுக்கு ஒன்னத் தெரியவே தெரியாதாமே! அந்தப் பச்சை மண்ணுகூட ஒனக்கென்ன மனத்தாங்கல்? போற வரைக்கும் எல்லார்ட்டயும் நல்லா இருக்கலாமில்ல? ஒரு நடை போய்ப் பாத்துட்டு வந்துரு நாச்சம்மை."

எதுவும் கூறாமல் இப்போதும் மௌனமாகவே இருந்தாள் நாச்சம்மை.

"வாங்க ஆச்சி!" என்று சிரித்தபடியே வரவேற்ற கமலா டீச்சர், "யாரைப் பார்க்கணும்" என்று கேட்டாள்.

"எம்பேத்தி இஞ்ச படிக்குதாமில்ல, அதைப் பாக்கோணும்" என்றாள் நாச்சம்மை.

"ஒங்க பேத்தியோட பெயர் என்ன ஆச்சி?"

"ஹேமாவோ... கோமாவோ... இந்த நாகரீகப் பேரெல்லாம் யாருக்கு வெளங்குது."

கமலா டீச்சர் மனதிற்குள் சிரித்துக் கொண்டாள்.

''ஹேமாங்கிற பேர்ல இங்கே யாருப் படிக்கலியே ஆச்சி..."

''இது எல்.கே.ஜி.தானே! இஞ்சதான் எம்பேத்தி படிக்குதுன்னு அலமி சொன்னா என் மகன் பேரு தேனப்பன்..."

சிறிது யோசனை பண்ணிய கமலா டீச்சா "தேனப்பன்...? இந்தியன் பாங்கிலே காஷியரா இருக்கிற தேனப்பன் சார் மகளா...?"

"ஆமா... ஆமா... அவந்தேன்! அவந்தேன்

''அவங்க டாட்டர் பேரு ஹேம இல்லையே!"

"பின்னே?"

"நாச்சம்மைன்னுல்ல ரிஜிஸ்தர்ல இருக் ஒருவேளை வீட்ல ஹேமான்னு கூப்பிடுவ களோ?"

''நாச்சம்மை! நாச்சியார் கோவி நாச்சம்மை! குலப் பெயரை மறந்து வி வில்லை. பதிவு பண்ணின பெயர் நாச்சம் என்றால், பரம்பரையைப் பழைமை என் ஒதுக்கலேன்னுதானே அர்த்தம்! எல்லா வெளிநாகரீகம் மட்டும்தானே போல்ருக்க

நாச்சம்மை ஆச்சிக்குப் புல்லரிப்பு!

"நாச்சம்மை நாச்சம்மை" என்று கம டீச்சர் அழைத்ததும் குடுகுடுவென ஓடிவ சிறுமி, தேனப்பன் சாயலில் தெரியவே பூ துப் போனாள் ஆச்சி.

அதே பூரிப்போடு மகனின் வீட்டுக் சென்றவள், "பரவால்ல, முகப்பு அழகாத் இருக்கு. பங்களா போல இருக்கு..." எ திருப்தியுடன் தன்னுள் கூறிக் கொண் மூன்றாண்டுப் பிரிவை இணைக்கும் முக நாச்சம்மை ஆச்சி படியேறி உள் போனாள்.

அதோ ஒரு வேன் வருகிறது. டீலக்ஸ் டைப் போலத் தெரிகிறதே. மடக்கி விட வேண்டியதுதான்.

கான்ஸ்டபிள் துரை சுறுசுறுப்பானார். நடுரோட்டுக்கு வந்து கையை நீட்டினார்.

இவரது காக்கி பேன்ட்டையும், வெள்ளைச் சட்டையையும் டிரைவர் கவனித்து விட்டான் என்பது வண்டியின் வேகம் குறைந்ததிலிருந்து தெரிந்தது.

இடதுபக்கம் ஓரம் கட்டச் சொன்னார் வேனை.

வேனின் கண்ணாடியில் பட்ட வெய்யில், இவர் முகத்தில் ஒளிச்சிதறல்களைப் பரப்ப, முகத்தைத் திருப்பிக் கொண்டார் துரை.

வேனின் உள்ளே நோட்டமிட்டார். டவுன் பஸ் கும்பல் தெரிந்தது.

"எத்தனை பேரு உள்ளே?"

டிரைவர் நெளிந்தபடி பின்பக்கம் உள்ளே திரும்பிப் பார்த்தான்.

உள்ளே அமர்ந்திருந்த பெண்மணிகளின் தடித்த உடம்பில், தங்கச் சங்கிலிகளும், நெக் லசும் மின்னின.

எவனாவது வழிப்பறி கொள்ளைக்காரன் கையில்

# தடுமாற்றம்

இவர்கள் மாட்டாமல் போய்ச் சேர வேண்டும்!

வேன் கதவைத் திறந்தபடி பட்டு வேட்டி, சட்டையில் ஒரு ஆள் இறங்கி வந்தார்.

'அம்பதாவது தேறுமா? நாமே கேட்பதா, இல்லை, அவர் கொடுப்பதை வாங்கிக் கொள் வதா?'

கான்ஸ்டபிள் துரையின் மனசுக்குள் தடுமாற்றம்.

"அண்ணே வணக்கம்."

இவருக்கு நான் அண்ணனா?

"புதுக்கோட்டை ஏரியா நம்மளுது."

பையிலிருந்து அடையாள கார்டை எடுத்து நீட்டினார் அந்த வேன் நபர்.

துரையின் முகத்தில் ஏமாற்றம் படர்ந்தது. ஒரே டிபார்ட்மெண்ட், ப்ச்!

"நீங்க கிளம்புங்க. டிரைவர் பார்த்து, சீக்கிரமா ஊர் போய்ச் சேருங்க."

அந்தப் பெண்களின் உடம்பில் அணிந் திருந்த நகைகளைப் பார்த்தவாறே எச்சரித் தார்.

இவர்களுக்கு மட்டும் காசு, மரத்தில் காய்க்கிறதா?

புர்,புர் என இருமுறை உறுமிவிட்டு வேன் புறப்பட்டது.

மதியம் மூன்று மணி வெயில் மண்டை யைப் பிளந்தது. சாலையின் இருபக்கமும் பார்த்தார். எந்த வாகனத்தையும் காணோம்.

பெருமூச்சு விட்டபடி மரநிழலில் ஒதுங் கினார்.

'நாம உப்பு விக்கப் போனா, மழை வர்ற அதிர்ஷ்டம்தான்.'

சத்தமாய் முணுமுணுத்தபடி, கூழாங்கற் களை பூட்ஸ் காலால் உதைத்தார்.

"ஆபரேஷன் செஞ்சுதான் குழந்தையை வெளியே எடுக்கணும். உங்க மனைவி ரத்த குரூப் ரேர் குருப். யாராவது ஆள் கிடைக்கு மான்னு பாருங்க."

காலையில் ஆஸ்பத்திரிக்குச் சென்ற போது டாக்டர் சொல்லி விட்டார்.

மேடிட்ட வயிறுடன் கட்டி லில் படுத்திருக்கும் மனைவியை நோக்கினார் துரை.

"ஆள் கிடைக்கலேன்னா ப்ளட் பாங்க்கிலேதான் வாங் கணும்."

செலவுத் தொகை பயமுறுத்தி யது.

அரசாங்க ஆஸ்பத்திரிதான். போலீஸ் உத்யோகம் வேறு கைகொடுத்ததில், வசந்திக்கு நல்ல கவனிப்புதான்.

இருந்தாலும், செல்வுக்குப் பணம் புரட்ட முடியாமல் திணறினார் துரை.

"இந்த மருந்தெல்லாம் ஆஸ்பத்திரியிலே கிடையாது. வாங்கிக் கொடுத்தீங்கன்னா நல்லது."

திடீரென முளைத்த மாத்திரை இன்ஜெக் ஷன், பில்லே அறுநூறு ரூபாயை சாப்பிட்டு விட்டது இதுவரை.

இப்போது இரத்தம் வாங்க தனியாக பணம் செலவாகும் போலுள்ளது.

அலைந்து பார்த்தும் ஆள் கிடைக் வில்லை. ஒருத்தன் ஊரிலில்லை. இன்னொரு வன் ரத்த தானம் கொடுத்து ஒரு மாதம் கூட ஆகவில்லை. ஆகமொத்தம் ஏமாற்றம்தான் மிஞ்சியது.

போன மாசம்தான் அம்மாவின் கைவு வுக்கு வைத்திய செலவு என்று தண்ணீர்

போட்ட உப்பாய் பணம் கரைந்தது. பாத்ரூம் போகும் போது விழுந்து விட்டார்கள். வயசாகி விட்டது. தடுமாற்றம் இருக்கும்தான்.

தடுமாற்றம்!

துரை ஒரு விநாடி குறுகுறுப்பாய் நின்றார்.

இதுவரை கைநீட்டி யாரிடமும் லஞ்சம் வாங்கியதில்லை.

லாரி, வேன்களை சாலையில் மடக்கி, டாகுமென்டுகளை சரிபார்க்கும்போது, இதுவரை யாரிடமும் கேட்டதில்லை, ஒரு பைசா!

இன்று, சற்று முன்தான் முடிவு செய்து விட்டார்.

மகானாய் இருந்து யாருக்குப் பிர யோஜனம்.

'துரையா, அவன் பைத்தியமாச்சே.'

டிபார்ட்மென்டில் அவன் சகாக்களின் கேலி இன்றோடு முடியட்டும்.

அதோ ஒரு லாரி வருகிறதே! அதன் முகப்பு சிரித்தபடி இருக்கிறது.

ஒவ்வொரு லாரியின் முன்புறத்தையும் கவனித்தால், வேடிக்கையாயிருக்கும்.

சிலது அழும், சிலது சிரிக்கும், அந்தச் சிரிப்பிலும்



வகையுண்டு.. கம்பீரச் சிரிப்பு, கோமாளிச் சிரிப்பு, வெகுளியான சிரிப்பு... இது கம்பீர சிரிப்புடன் வரும் லாரி!

"என்னண்ணே, நம்ம ஐயாவோட லாரி. வரட்டுமா?"

ஒரு செகண்ட் நிறுத்தி, பறந்துவிட்டான் டிரைவர்.

இந்த ஊர் எம்.எல்.ஏவுக்குச் சொந்தமான லாரி. நிறுத்தவும் முடியாது, உள்ளே உள்ள சரக்கை பரிசோதிக்கவும் முடியாது.

ப்ச், போக்கத்தவனுக்கு போலீஸ்காரன் உத்யோகங்கறது சரியாய்த்தான் இருக்கிறது.

எல்லா போலீஸ்காரனுக்குமா இப்படி? அந்த நாகராஜ் புல்லட்டில் பறக்கிறான். கழுத்தில் மைனர் செயின். நாலு ஆட்டோ ஓடுகிறது டவுனில் அவனுக்கு.

தன்னைப் போன்ற நாணயமான ஆட்களுக்குத்தான் இந்தப் பழமொழி பொருந்தும்.

வெயில், மழையிலேயே நிற்கும் தங்களுக்கு சம்பளத்தையாவது கூட்டிக் கொடுக்கலாம்.

எல்லோருமே சூழ்நிலைக் கைதிகள் தானோ? வாங்கிய கடனே, விழி பிதுங்குகிறது. இனி கேட்டாலும் கொடுக்க மாட்டார்கள்!

ஆஸ்பத்திரி செலவுக்குத்தானே? லஞ்சம் வாங்கினால் என்ன தப்பு?

இதுவே தொடருமா? சேச்சே, இந்த ஒரு முறை மட்டும்தான்! நிறுத்த முடியுமா, ஒரு முறை வாங்கிப் பழகியபின்?

அதோ லாரி ஒன்று வருகிறதே! நிறுத்து, நிறுத்து, இதிலாவது அம்பது, நூறு கிடைக்குமா?

இவரின் சைகைக்கு லாரி தலை வணங்கி ஓரமாய் நின்றது.

"வணக்கம் சார், சௌக்யமா?"

அட, இவனை நிறைய முறை இந்த ரூட்டில் பார்த்திருக்கிறோமே! எல்லா டாகுமெண்டும் சுத்தமாய் வைத்திருப்பான். லாரி டிரைவராய் ஓட ஆரம்பித்து, இப்போது ஒரு லாரிக்கு அதிபதியான பின்னும், டிரைவராய் தொடர்கிறான்.

"வாங்க பரமு, பிசினஸ் ஓடுதா?"

வறண்ட காவிரி போல ஆனது துரையின் உள்ளம். ஒப்புக்கு, அவனுடன் பேசினார்.

இவனிடம் காசு கேட்கலாமா? அதிலென்ன தப்பு. மற்ற போலீஸ்காரர்களாயிருந்தால், தரமாட்டானா? ஓடும் வண்டியில் ஏதாவது ஒரு 'மிஸ்டேக்' கண்டு பிடிக்க முடியும். அது டிரைவர்களுக்கும் தெரியும். அதனால்தான் லஞ்சம் கொடுக்கிறார்கள்.

"அண்ணே...." என்று இழுத்தான் கிளினர் பையன்.

"டேய், டேய், உள்ளே வைடா. சார் பார்த்தா கோவிச்சுக்கப்போறார்."

பரமு, இவரைப் பார்த்துச் சிரித்தான்.

"பையிலே தயாராய் பணத்தை எடுத்து வைச்சுக்க. ஆளைப் பொறுத்து பத்தோ, அம்பதோ கொடுக்கணும் ரூட்டுல போறச் சேன்னு' சொன்னேன். உங்களைத் தெரியாதா எனக்கு. கை சுத்தமாச்சே. லாரியிலே போய் உட்காருடா."

கிளீனரை விரட்டினான் பரமு.

கேட்டுவிடலாமா? கை சுத்தமாவது, கால் சுத்தமாவது? இப்படி சொல்லிச் சொல்லியே தன்னை ஏமாளியாக்குகிறார்கள். கேட்டு விட வேண்டியதுதான்.

தொண்டையை செருமிக் கொண்டார் துரை.

"என்னசார் வழக்கமான மிடுக்கைக் காணோம். உங்க முகத்துல? உடம்புல கூட விறைப்பு குறையுது?"

திடுக்கிட்டுப் பார்த்தார் துரை.

மனசில் ஏற்படும் மாற்றத்தால், நடவடிக்கைகளிலும் இவ்வளவு மாற்றங்களா?

"ஏன் சார், வீட்டுலே யாருக்கும் உடம்பு சரியில்லையா?"

அட, எப்படி கண்டுபிடித்தான்?

"நம்மளை மாதிரி ஆம்பளைக்கு செயல் தடுமாறுதுன்னா, வீட்டுல மனைவிக்கோ குழந்தைக்கோ உடம்பு சரியில்லேன்னு அர்த்தம். சரியா சார்?"

துரை கடகடவென கொட்டிவிட்டார்.

"என்ன க்ரூப் சார்?"

சொன்னார்.

"அட, என் க்ரூப்பும் அதேதான். போன வாரம் எய்ட்ஸ் தடுப்பு முகாமிலேயிருந்து டாக்டர்கள் எங்களை மாதிரி டிரைவர்களை டெஸ்ட் பண்ணினப்பதான் தெரிஞ்சது. சொல்லுங்க சார், எப்ப வரணும் ஆஸ்பத்திரிக்கு. பணம் கைமாற்றாய் ஏதும் வேணுமா?"

பரமுவை நிமிர்ந்து பார்த்த துரையின் மனசுக்குள் நிம்மதிப் பூக்கள்.

நல்ல வேளை காப்பாற்றிவிட்டான்!

---



மழைக்காலத்தில் குடையை எடுக்கிறீர்கள். வெகு நாட்கள் பயன்படுத்தாமல் வைத்திருந்த உங்கள் குடையின் நிறம் மங்கி சாம்பல் பூத்த மாதிரி காட்சி அளிக்கிறது. அதை போக்க அமோனியா கலந்த வெந்நீரில் கழுவிப்பாருங்கள். புதிய குடையை விடப் பொலிவுடன் இருக்கும்!

– பா. அச்சுதன்

* சங்கர நாராயணன்



சங்கீதத்தைத் தவிர, மற்ற விஷயங்களில் எல்லாம் மிகவும் 'அடக்கி வாசிக்கும்' டி.வி.எஸ்., தமிழில் நிறைய ஆர்வமும் பயிற்சியும் உள்ளவர் என்பது பலருக்குத் தெரியாது. இசை நிகழ்ச்சிகளில் கணிசமாகத் தமிழில் பாடும் இவர், கல்லூரி நாட்களில் தீவிரமான படிப்பார்வம் கொண்டவராக இருந்தார். இப்ஸன், ஷா, ஹெச்.ஜி.வெல்ஸ், டென்னஸி வில்லியம்ஸ் என்று ஒரு பெரிய பட்டியலே இவருக்குப் பிடித்த நூலாசிரியர்கள். எழுபத்தைந்தில் அமெரிக்கப் பயணம் போகும் வரை சென்னை நூலகங்கள் எல்லாவற்றிலும் இவரைப் பார்த்திருக்கலாம்.

அப்புறம் படிப்பார்வம் ஓரளவு குறைந்து விட்டது. பாரதி பக்தரான டி.வி.எஸ்., தம்முடைய சிந்தனைகளைக் கீர்த்தனைகளாக வடிக்கவும் கூடியவர்! அவ்வப்போது பயண நேரங்களில் மனசில் அரும்பும் கவிதை வரிகளைக் குறித்தும் வைத்திருக்கிறார். இதுவரை 'பாட' என்று பயன்படுத்தியிருக்கும்

ராமச்சந்திரன் பக்கவாத்யங்களோடு இரண்டு மணி நேரம் பாடிக் காட்டிய பிறகுதான் மாமா சம்மதம் தந்தார். மறுநாளே இராயப்பேட்டை ஆஞ்சநேயர்

# கிருஷ்ணன் தூண்டி விட்ட 'ராமன்'!

கோவிலில், கோதண்டராமசுவாமி சந்நிதியில் அரங்கேற்றத்துடன் அவர் பயணம் தொடங்கியது.

சமீபத்தில் 'சங்கீத சூடாமணி' விருது பெற்றார் டி.வி.எஸ். அனேகமாக அவருடைய அத்தனை கச்சேரிகளும் ஹவுஸ் புல்!

1960 ஆம் ஆண்டில், பாபு ராஜேந்திரபிரசாத் கையால் மதுரை மணி அய்யர் ஜனாதிபதி விருது வாங்கியபோது உடன் சென்றிருந்தவர் பதினைந்து வயதுச் சிறுவனான சங்கரநாராயணன்.

"அப்போ இப்படி ஒரு சந்தோஷம் எனக்கும் கிடைக்கும்னு நான் கனவு கூடக் காணவில்லை. ஆனால் பெரியவர்கள் ஆசீர்வாதத்தால் அடுத்த முப்பதாண்டுகளில் ஜனாதிபதி ஆர்.வி. கையால் அதே விருதை நானும் பெற முடிந்தது..." என்று அடக்கத்தோடு கூடிய மனநிறைவில் சொல்கிறார் டி.வி.எஸ்.

சொந்த சாகித்யம் பிருந்தாவனி ராகத் தில்லானா அமைப்பில் மாங்காடு காமாட்சியைப் பணிந்திருப்பதுதான்.

"நதியெனப் பெருகும் அருளினைப் பெறவும்
விதியென வந்த வினைகள் தீரவும்
கதியென வந்தேன் காமாட்சி, முழு
மதியெனத் திகழும் மதுரமணிநேசன்..."

என்ற இந்தப் பாடல் வரிகளை அந்த குருநாதர் இருந்து கேட்க முடிந்திருந்தால், சிஷ்யனின் இந்தத் திறமைக்குச் சட்டத்துக்கும் கிரிக்கெட்டுக்கும் செய்த மாதிரி, தடைசெய்திருக்க மாட்டார்!

நாலாயிர திவ்யப் பிரபந்தங்களில் மிகுந்த ஈடுபாடுடையவர் டி.வி.எஸ். சனிக்கிழமைகளில் தவறாமல் இந்தப் பாராயணம் உண்டு. சங்கரநாராயணனின் மனைவி விஜயலெக்ஷ்மி சங்கீதத்தில் எம்.ஏ. தங்கப்பதக்கம் பெற்றவர்!

**- சுப்ர.பாலன்**

விளக்கை அணைக்காமல் மனைவியின் முகத்தருகில் நெருங்கியது தப்பென ரவிக்குத் தோன்றியது. அவள்தான் முதலில் தாடியில் நரையைக் கண்டுபிடித்தாள். நிஜமாவாயென ரவி கன்னத்தை அதிர்ச்சியோடு தடவிப் பார்த்தான். உடனடியாகக் கட்டிலை விட்டு எழுந்து கொண்டான்.

"கவலைப்படாதீங்க... அப்புறம் மொத்தமும் நரைச்சிரும். முகத்துக்கும் சேர்த்து இனி 'டை' அடிச்சுக்கலாம்..."

"கிண்டலா.. இது பித்த நரை."

"பித்தம் தலைக்குத்தான் ஏறும். முகத்தில யுமா பரவும்?"

"வயசு ஆயிடுச்சுங்கறயா?"

"பின்ன ஆகலையா? பனிரெண்டு வயசுல ஒரு பையன். ஞாபகமிருக்கா..."

ரவி அவளைத் தலையணையால் செல்லமாக அடித்தான். அதில் அவள் நரையைக் கண்டுபிடித்த கோபமும் இருந்தது. லட்சுமி திரும்பிப் படுத்துக் கொண்டாள். சிரிப்பு கேட்டது. ரவிக்கு தூக்கம் போய் விட்டது. மறுபடியும் கன்னத்தைத் தடவிக் கொண்டான்.

"என் சுயநலமில்லாம... இதுவரைக்கும் ஏதாவது நல்லது பண்ணியிருக்கேனா?" என்று லட்சுமியிடம் கேட்கத் தோன்றியது அவனுக்கு.

"அதான் ஒண்ணே ஒண்ணு. கண்ணே கண்ணு போதும்னு கவர்ன்மென்ட்டெ ஃபாலோ பண்ணியிருக்கீங்களே. பத்தாதா?" என்பாள் கிண்டலாய்.

லட்சுமிக்கு எப்போதும் கிண்டல் அதிகம். ரவி அவளைத் திரும்பிப் பார்த்தான். தூங்கியிருந்தாள். எழுந்து கண்ணாடி அருகே வந்து மறுபடியும் கன்னத்தைப் பார்த்தான். உண்மையிலேயே நரைத்துத்தான் போயிருக்கிறது. கும்மென ஒரு பாரம் நெஞ்சை அழுத்தியது.

அவனுக்கு இரண்டு நாள் தொடர்ந்து ஷேவிங் செய்யாமல் விட்டது ஞாபகம் இல்லை. வாத்தியார் வேலையில் தினமும் குழந்தைகளோடான சந்திப்பில், பொலிவான முகமே பழக்கமாகியிருக்கிறது. விடிந்ததும் டீ குடித்தபடி பத்திரிகையில் செய்தி மேய்வது. படிக்கிற ஷியாமிற்கு, கேட்கிற சந்தேகம் தீர்ப்பது. பிறகு ஜன்னலில் கண்ணாடி மாட்டி ரோடைப் பார்த்தபடி ஷேவிங். எப்படியோ வந்து ஒட்டிக் கொண்டு முணுமுணுக்கிற பிடித்த பாடல். ஒருநாள் ஷேவ் செய்யாமல் விட்டாலும் இந்த வயசிலும் அப்பாவிடம் திட்டு விழும். ஷேவிங் முடிப்பதற்குள் லட்சுமி பாத்ரூமில் வெந்நீர் வைத்து, 'என்னங்க' என்பாள். குளித்து வந்ததும் எண்ணெய் தேய்த்து, தலையைப் படிய சீவி – பவுடர் பூசி – நெற்றியில் சந்தனம் தீற்றிக்கொண்டு பளிச் சென்று மின்னல் வெட்டியதும் சாப்பிட உட்காருவான்.

ஒன்பது மணிக்குப் பள்ளிக்கூடம். வாசலில் வண்டி துடைத்து, ஷியாம், "அப்பா, ரெடி!" என்பான். இருவரும் கிளம்பும் வரையான அன்றாட நிகழ்ச்சியில் எப்படி நரையை உணராமல் போனேன் என ரவிக்கு வருத்தம் வந்தது.

ரவி படியேறி மொட்டை மாடிக்கு வந்தான். அப்பா படுத்திருந்தார். கழுத்து வரை போர்வையிருந்தது. எத்தனை பனியிலும் தொடர்ந்து எப்படி அப்பாவால் மொட்டை

# அர்த்தத்தை

## சரசுராம்

மாடியிலேயே தூங்க முடிகிறது என ஆச்சர்யமாகவே இருக்கும் ரவிக்கு. கேட்டால் இயற்கையோடு இயைந்த வாழ்வு என்று தத்துவம் சொல்லுவார். ஓய்வுபெற்ற வாத்தியார் உத்தியோகத்தில் புத்தகங்களில் தத்துவம் தேடுகிறார். 'இதுவரையான வாழ்வில் வேறென்ன தேடினீர்கள்' என அப்பாவை எழுப்பிக் கேட்க வேண்டும் போலிருந்தது.

கிடைத்த நிலா வெளிச்சத்தில் அப்பாவின் முகத்தைப் பார்த்தான். நரைத்த முடிகள் அப்பாவின் புன்னகையோடு மின்னியது. எதையோ தேடி, கிடைத்த திருப்தி அப்பாவுக்குக் கிடைத்திருக்குமோ எனக் கேள்வி வந்தது. நிமிர்ந்து நிலாவைப் பார்த்தான். வளர்பிறை. வளர்ந்து தேய்ந்து – தேய்ந்து வளர்ந்தென காலகாலமாய் வாழ்ந்தும் பிரகாசமாய் இருப்பதெப்படி என ஆச்சர்யம் வந்தது. நிலவின் மொத்த வெண்மையே அதற்கு நரைத்த அடையாளமோ என யோசித்தான்.

ஜன்னலில் வெளிச்சம் வந்தது. ரவி கண்கள் எரிய விழித்துக் கொண்டான். மொத்தம் இரண்டு மணி நேரமே தூங்கியிருக்கக்கூடும். ஷியாம் படிக்கிற கவனத்தில் இருந்தான். அப்பா பேப்பரில் மறைந்து இடுப்புக்கு கீழே தெரிந்தார். லட்சுமி வாசல் தெளிப்பது கேட்டது. ரவி பிரஷ்ஷுடன் வாசலுக்கு வந்த போது, லட்சுமி கோலத்தில் பத்து புள்ளிகள் வைத்திருந்தாள். அவளையே பார்த்தான். ரவி லட்சுமி அவ்வளவு கலரில்லை. தனிப்பட்ட

ஏதோவொரு கவர்ச்சியில் மயக்குவாள். குளித்து – கூந்தலை நுனியில் கட்டியிருந்தாள். இலேசான மஞ்சள் முகத்தில் அவசரத்தில் திட்டின குங்குமம். தலைமுடியில் ஒரு நரையைத் தேட முடியாது. இதுவரை கண்ணில் பட்டதில்லை. லட்சுமி நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

"என்ன ஏழு மணிக்குக் கோலம்?" என்றான் எச்சிலைத் துப்பிக் கொண்டு.

"நான் எழுந்திரிச்சதும் லேட்தான். அய்யா நைட்டெல்லாம் மொட்டை மாடியில காவல் போலிருக்கு. ரொம்ப நேரம் கீழே ஆளையே காணம்?"

# தேடி...

"காவலுக்குத் தான் எங்கப்பா இருக்காரே! எனக்கு வேற யோசனை. இப்பச் சொல்ல முடியாது. எனக்கு லேட்டாகுது."

**வ**குப்பறை. அட்டெண்டென்ஸ் மட்டும் எடுத்தான். பாடம் எதுவும் நடத்தவில்லை. நேற்றைய பாடத்தைப் படிக்கச் சொன்னான். மொசுமொசுவென சப்தம் பெரியதானது. எழுந்து அவர்களுக்கு மக்கியில் நடந்தான். படிக்கிற சப்தம் இறங்கி ஏறியது. வராந்தாவில் வந்து நின்றான். பள்ளிக்கூடத்தின் மொத்தப் படிப்பும் எதிரொலித்தது. மல்லிகா டீச்சர் சிரித்தபடி வந்தார்கள்.

"என்ன சார்... வந்ததுமே யோசனையா நின்னுட்டீங்க? வீட்டில எதுவும் பிரச்னையா..." என்றாள்.

"சே... சே... அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல மேடம்..."

"இல்லைன்னு சொன்னாலும்... கவலை முகத்திலேயே தெரியுது சார். தாடி கூட நரைச்சிடுச்சே..." என்றபடி மல்லிகா டீச்சர் நகர – ரவி மறுபடி கன்னத்தைத் தடவிக் கொண்டான். சந்தேகம் கேட்க வந்த கணேஷிற்கு அப்புறம் சொல்கிறேன் என்றான். இங்கே நிற்க வேண்டாமெனப் பட்டது. உள்ளே வர, ராமசாமி வாத்தியார் கூப்பிட்டார். உதவி தலைமையாசிரியர். இன்னும் மூன்று வருடத்தில் ஓய்வு கிடைக்கும். முழுவதும் நரைத்த தலைமுடி. ஷேவ் செய்யாமல் விட்டால் முகத்திலும் அப்படியே இருக்கும்.

"என்ன சார்..." என்றான் ரவி.

"இல்ல... நேத்து பணம் கேட்டேனே... பொண்ணுக்கு அடுத்த வாரம் கல்யாண



ஏற்பாடு பண்ணியிருக்கேன்..."

"இன்னும் ரெண்டு நாள்ல ஏற்பாடு பண்ணிடறேன் சார்..."

"எப்படியோ பார்த்து ரவி. முடிச்சு கொடுத்திருங்கோ. ரெண்டு மாசத்தில திருப்பி தந்துடறேன்..."

"ஒண்ணும் கவலைப்படாதீங்க... சார் முடிச்சுறலாம். சார் அப்புறம் உங்ககிட்ட ஒண்ணு கேட்டா தப்பா நினைச்சுக்க மாட்டீங்களே.."

"அட... என்னங்க ரவி. பத்து ரூபா வேணும்னா கூட நான் உங்ககிட்டத்தான் தயக்கமா கை நீட்டறேன். அதைவிட தப்பா நீங்க என்ன கேட்கப் போறீங்க?"

"இல்ல... உங்களுக்கு முதல் முதலா எப்ப நரைச்சது?"

ராமசாமி வாத்தியார் வாய் விட்டுச் சிரித்தார். வகுப்பறை குழந்தைகள் திரும்பிப் பார்த்தன. ரவிக்கு ஒரு மாதிரி பட்டது.

"எப்ப நரைச்சுதுன்னா... என்ன சொல்றது? நரைக்கும்போது நரைச்சது. நீங்க வேற... என் பிறந்த நாளே எனக்கு மறந்து போச்சு..."

"உங்களுக்கு முடியெல்லாம் நரைச்சு போச்சேன்னு எப்பவாவது உறுத்தியிருக்கா?"

"உறுத்தியிருக்கு. உறுத்தும் போது ஷேவ் பண்ணிடுவேன்..."

"சார்... நான் கேட்கறது அதல்ல. இந்த வயசு வரைக்கும் வேற யாருக்காகவும் வாழலையேன்னு கவலைப்பட்டிருக்கீங்களா?"

"மத்தவங்களுக்காக கவலைப்பட சொல்றீங்களா? அதுகெங்கே ரவி நேரம்? மூணும் பொண்ணா பொறந்தது. ஓரளவு படிக்க வைச்சேன். ரெண்டை கட்டிக் கொடுத்துட்டேன். இன்னும் ஒண்ணு பாக்கி. எப்படியோ தலைகீழா நின்னு அதுக்கும் ஏற்பாடு பண்ணிட்டேன். அது முடிச்சுட்டாலே ஏதோ வாழ்க்கையில சாதனை பண்ணின மாதிரிதான். அப்புறம் ரிடையர்மெண்ட். அதில வர்ற பணம்.. அப்புறம் வயசான என் வாழ்க்கை... ஏன் ரவி, என்ன ஆச்சு உங்களுக்கு?"

"ஒண்ணுமில்லை சார்..."

ரவி வகுப்பறைக்குள் வந்தான். குழந்தைகள் படிக்கிற சப்தம் அதிகமானது. சேரில் வந்து உட்கார்ந்து கொண்டான். சரளா புத்தகத்தோடு எழுந்து வந்தாள்.

"சார்.. இனிமே கண்ணன் டியூசனுக்கு வர மாட்டான் சார்..." என்றாள்.

"ஏன்... கண்ணனுக்கு என்னாச்சு?"

"கண்ணனுக்கு ஒண்ணுமில்ல சார். கண்ணனோட அப்பாவுக்குத்தான் வயித்தில கட்டி சார். ஒரு வாரமா வண்டியில பழம் விக்கறதுக்குக் கூட போகல சார். நேத்து ஆஸ்பிடல்ல சேர்த்துட்டாங்க. ஸ்கூலுக்கு நாளைக்குத்தான் வருவான்னு அவங்கம்மா சொல்லி விட்டாங்க. ஆனா... இனிமேல் கண்ணன் டியூசனுக்கு வரவே மாட்டானாம் சார்..."

"டியூசனுக்கு அவன் ஏன் வர முடியாதாம்...?"

"அவங்கப்பாவுக்கு நிறைய செலவாயிடுச்சாம். டியூசனுக்கெல்லாம் அவங்கப்பாவால பணம் கட்ட முடியாதாம். அப்புறம்... என்னோட டியூசன் பீஸை அம்மா சாயந்திரம் தர்றேன்னு சொன்னாங்க சார்."

ரவிக்கு, தன்னை சவுக்கில் யாரோ அடிக்கற மாதிரி இருந்தது. தொடர்ந்து அடிபட வேண்டும் போலவும் இருந்தது.

"கண்ணனைப் பார்ப்பியா சரளா?" என்றான்.

"பார்ப்பேன் சார்..."

"பார்த்தா, சாரு சாயந்திரம் டியூசனுக்கு வரச் சொன்னேன்னு சொல்லு" என்றான்.

சாயந்திரம் வீடு. டியூசனுக்கு குழந்தைகள் கூடியிருந்தன. முப்பது குழந்தைகள் இருக்கும். வீடே வகுப்பறையாய் இருந்தது. எப்போதாவது ரவிக்கு அப்பா உதவி செய்வார். ரவி இல்லாத நேரத்தில் மட்டும் லட்சுமி பாடம் எடுப்பதுண்டு.

ரவி பயந்தடி வந்த கண்ணனைக் கூப்பிட்டான்.

"அப்பா எப்படியிருக்கார்?" என்றான்.

"பரவாயில்ல சார். இன்னும் மூணு நாள்ல வீட்டுக்கு வந்துருவாரு..." என்றான்.

"இனிமேல் டியூசனுக்கு வரமாட்டாயா?"

"அப்பாவால பணம் கட்ட முடியாதாமா சார்!"

"உனக்கு படிக்கற ஆசை இருக்கா?"

"நிறையப் படிக்கணும் சார். எங்கப்பா மாதிரி கஷ்டப்படாம படிச்சு பெரிய ஆளா வரணும் சார்..."

ரவி ஒரு நிமிஷம் அமைதியாய் இருந்தான். திரும்பிப் பார்த்தான். லட்சுமி வாசல்படியில் கோல நோட்டில் புள்ளி வைத்துக் கொண்டிருந்தாள். பேசினால் கேட்கிற தொலைவு தான். ரவி பேசினான்.

"கண்ணன்... தினம் நீ டியூசனுக்கு வரணும். ஆனா பணம் தர வேண்டாம். இனி எப்பவும் டியூசனுக்குப் பணமே தர வேண்டாம். சரளா.. உன் பீஸையும் உங்கம்மாகிட்டேயே தந்துரு. இனி யாரும் டியூசனுக்கு பீஸ் கொண்டு வர வேண்டாம். படிக்க மட்டும் வந்தாப் போதும். உங்க வீட்டுக்கு பக்கத்தில படிக்க ஆசைப்படற குழந்தைகள் இருந்தா ரவி சார் சொல்லித் தருவாருன்னு கூட்டிட்டு வாங்க..." என்றான்.

குழந்தைகள் என்னவோ புரிந்த மாதிரி பார்த்துக் கொண்டிருந்தன. ரவி திரும்பி லட்சுமியைப் பார்த்தான். லட்சுமி தொடர்ந்து நோட்டில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

# சுஜாதா பக்கம்



தொலைக்காட்சியில் எனக்கு மிகவும் பிடித்தது, அதை அணைக்கும் ஸ்விட்ச் என்று சொல்வது நியாயமாகாது. தொலைக்காட்சியை அளவோடு பார்க்கலாம். இந்தப் பட்டியல் உங்களுக்கு பயன் படுமோ தெரியாது. தொலைக்காட்சியில் நான் விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சிகள் இவை :

காலை ஆறு மணி சங்கீதக் கச்சேரிகள் ('பார்த்து' ஆக வேண்டும் என்று கட்டாயமில்லை. அடுத்த அறையில் இருந்தும் கேட்கலாம்.) நல்ல கச்சேரிகள் அடிக்கடி வருகின்றன. ஒரு யோசனை – இப்போது இளைய சமுதாயம் தீவிரமாக கர்நாடக சங்கீதத்தை எடுத்துக் கொண்டிருப்பது ஆரோக்கியமான விஷயம். அவர்களுக்கு ஊக்கமளிக்க ராம், சஞ்சய், விஜயசிவா, உன்னிகிருஷ்ணன் போன்ற பாடகர்கள், எண்ணற்ற இளம் வயலினர்கள் (கார்த்திக் என்று ஒருவர் அப்படி கடம் வாசிக்கிறார்) இவர்களுக்கெல்லாம் சாயங்கால வேளைகளில் இளைய பாரதம் என்ற பெயரில் மாமாக்கள் அபஸ்வரமாக ஆர்கெஸ்ட்ரா பாடுகிறார்களே, அவர்களைத் துரத்தி விட்டு, வாய்ப்பளிக்க வேண்டும்.

'குட்மார்னிங், இண்டியா' என்று வினோத் துவாவும் அந்த வசீகரமான பெண்ணும் தரும் சுமார் ஒரு மணி நேர நிகழ்ச்சி, எப்போதும் பார்க்கத்தக்கது. ப்ரணாய் ராய், துவா இருவரும் இந்த தேசத்தின் மிகச் சிறந்த ஒளிபரப்பாளர்கள்.

துவா இந்தி வெறியர். ஒருமுறை அமைச்சர் அருணாசலத்திடம் படபடவென்று இந்தியில் பொறிந்து தள்ளி, கேள்வி கேட்க, அமைச்சர் அமைதியுடன் முழுவதும் கேட்டுவிட்டு, "எனக்கு ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை; ஆங்கிலத்தில் கேளுங்கள்" என்று சொன்னது சந்தோஷமாக இருந்தது.

தென்னிந்தியர்களை வட இந்தியர்கள் தாழ்வாகக் கருதுவதைப் பற்றி ஸிபிஐயைச் (CPI) சேர்ந்த சீதாராம் பச்சோரி போன்றவர்களிடம் கேட்க வேண்டும். இதற்கு ஒரே மாற்று, அவர்கள் இந்தியில் கேட்டால் நாம் தமிழிலோ, கன்னடத்திலோ பதில் சொல்வது.

தேவேகௌடா கன்னடத்தில் எழுதி வைத்து இந்தியில் பேச மெனக்கெடுவது தமாஷாக இருக்கிறது. தேவையில்லை...

பிற்பகலில் டீவி பார்க்காமல் இருப்பது ஆரோக்கியம். அதற்குப் பதிலாகப் படிக்கலாம். நான் தூர்தர்ஷனின் விசுவாசி. கேபிள் போட்டுக் கொள்ளவில்லை. கேபிளில் நமக்கு பத்து பதினைந்து சானல்கள் இருப்பதாக எண்ணுவது மாயை. ஒரு சானல்தான். பத்து பெயர்களில் எல்லாரும் தருவது ஒரே நிகழ்ச்சிதான். தலைப்பும் அறிவிப்பாளரும் தான் மாறுகிறார்கள். இந்த நிலை மாறும் வரை கேபிள் போட்டுக் கொள்வதாக இல்லை. (சன் டீவியுடன் என் கசப்பான அனுபவமும் காரணம்). ஈஎஸ்பிஎன்னில் கிரிக்கெட், பாஸ்கெட்பால், பெண்களின் வாலிபால் அவ்வப்போது தெரிந்தவர் வீடுகளுக்குச் சென்று பார்ப்பேன். டிடியிலேயே டென்னிஸ் நிறைய காட்டுகிறார்கள்.

தமிழாக்கத் தொடர்களில் 'சாந்தி' மந்திரா பேடிக்காகவும் அவருக்காகப் பேசும் பெயர் தெரியாத அந்தப் பெண்ணின் இனிய குரலுக்காகவும் அவ்வப்போது சாம்பிள் பார்ப்பேன். மாலை வேளைகளில் 'சூடாமணி கதைகள்' போன்ற தொடர்கள் அரிதாகக் கிடைக்கும். (டைரக்ஷன் – கம்பர் ஜெயராமன்) தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைகளைத் தொகுத்துத் தரும் தொடரும் சிறப்பாக உள்ளது. (அண்மையில் அசோகமித்திரனின் 'மாலதி') லாசராவின் 'கழுகு' ஸோ, ஸோ. வயலும் வாழ்வில் நிஜ விவசாயிகளை இயற்கையான சூழ்நிலையில் காணும் பேட்டிகள் சுவாரஸ்யமாக உள்ளன. சஃபாரி அணிந்து வியர்க்கும் அதிகாரிகளின் ஸ்டூடியோ பேட்டிகளை விஷம் போலத் தவிர்க்கிறேன். (புத்தக விமர்சனம் தவிர) அதுபோல் நாட்டுப்புறக் கலைகளை ஸ்டூடியோவில் காட்டினால் உடனே அணைத்து விடுவேன். வில்லுப்பாட்டு தவிர அண்மையில் ஜான்சிராணி என்கிற இளம்பெண்மணியின் கீசகவதம், நாட்டுப்புறக் கலைகளை தொலைக்காட்சி உயிருடன் வைத்திருப்பதற்கு உதாரணம். கிராமிய சூழ்நிலையிலேயே எடுத்தால் நல்லது. சாயங்காலம் 'ப்ளாஸம்' வால்ட் டிஸ்னி, இரவில் 'மேரி ஆவாஸ் சுனோ' பார்க்கிறேன். சூப்பர் ஹிட் முக்காபுலா ஆறு வாரத்துக்கு ஒருமுறை பார்த்தால் போதும். சித்தார்த் பாசுவின் 'க்விஸ் சம்மிட்' வாரம் தவறாமல் பார்க்கிறேன். புதன்கிழமை டிடி மூன்றிலும் வெள்ளி, சனி இரண்டாவதிலும் சில நல்ல சினிமாக்கள் நம் அதிர்ஷ்டத்தைப் பொறுத்து அகப்படும்.

ந்யுஸ் டுனைட் தவறாமல் பார்ப்பேன். எட்டரை மணி ந்யூஸ் தலைப்புச் செய்திகள் மட்டும் கேட்டு விட்டு கவனம் கலைந்து கடைசியில் நமக்குத் தெரிந்தவர்கள் யாராவது மைக் முன்னால் மௌனமாக வந்தால் அவருக்கு போன் செய்வது பொழுது போக்கு. மூன்றாவது சானல் சிலநாள் திரையில் மூன்று நான்கு பிம்பமாகத் தெரியும். ட்ரான்ஸ்மிஷன் கோளாறு. சீக்கிரமே மூன்றாவது சானலை அவர்கள் மூடிவிட்டாலோ, குணம் மாற்றி விட்டாலோ ஆச்சரியமில்லை. அவ்வப்போது உயிர் இருக்கிறதா என்று போட்டுப் பார்ப்பேன். மிகுந்த கலாசார சத்தியங்களுடன் துவங்கிய இந்த சானல், பட்ஜெட் பற்றாக்குறையாலும் விளம்பரம் இல்லாததாலும் காட்டியதையே காட்டுகிறார்கள். குஷ்வந்த் சிங் மோடியைப் பேட்டி கண்டதை இதுவரை நூறு முறை போட்டிருப்பார்கள்.

தொலைக்காட்சி ஹோமியோபதியைப் போல. கொஞ்சமாக உட்கொண்டால் குணம்.

(மீண்டும் அடுத்த வாரம்)

# முகவரி

வேதா கோபாலன்

எட்ட வைத்துப் பார்த்தேன். கிட்ட வைத்துப் பார்த்தேன். நம்ம அப்பாவா! அந்தக் கடிதத்தை மீண்டும் மீண்டும் திருப்பிப் பார்த்தேன். அப்பா கடிதம் எழுதியிருக்கிறார் என்பதையே என்னால் நம்ப முடியவில்லை. சிங்கம் இறங்கி வந்துவிட்டதா என்ன? சின்னதாய் மனதுக்குள் ஒரு நடுக்கம் பரவியது. அவர் கடிதம் எழுதுமளவுக்கு இறங்கி வந்து விட்டார் எனில்... அப்படி என்ன நேர்ந்து விட்டது? அவரின் கம்பீரம் குறைவதை, அது என் பொருட்டு எனினும் நான் ஜீரணிக்கத் தயாரில்லை.

"யார்கிட்டேயிருந்து லெட்டர்?" தனக்குப் பரிச்சயமில்லாத தமிழை இப்போது ஓரளவுக்குச் சுமாராய்ப் பேச ஆரம்பித்திருந்த வேற்று பாஷைப் பெண்டாட்டி ஆர்வமாய்க் கிட்டே வந்து கேட்டாள்.

"அப்பா..." ஒற்றை வார்த்தைக்கு மேல் பெயர மாட்டேன் என்றது.

"யுவர் ஃபாதர்!" ஜென்னி முகம் தாமரையாகக் கேட்டாள்.

நான் பதில் சொல்லவில்லை. அந்தக் கடிதத்தைக் கத்தரிக்கோல் வைத்துச் சீராய்க் கவர் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன். அப்பாவின் பர்ஃபெக்ஷனுக்கு நான் தரும் மரியாதை. "வீட்டை விட்டு வெளியே போடா..." என்று சீறிய அப்பாவின் மேல் ஏனோ கோபம் வர மறுத்தது. அவரின் காரெக்டர் உணர்ந்த யாருமே இப்படி நடக்கவில்லையென்றால்தான் வியந்திருப்போம்.

'ஜகன்னாதா...' என்று பக்கத்தில் உட்கார்ந்து நேரில் தலைவருடிப் பேசுவது போல் துவங்கியிருந்தது அந்தக் கடிதம். துவக்க நிமிஷத்திலேயே தடக்கென்று கண்ணில் ஜலம் ரொப்பியது. அப்பாதான் இத்தனை வைராக்யமாய் இருந்தார் என்றால் நான் ஏன் இத்தனை பிடிவாதமாய் இருந்தேன் என்று எனக்கே கோபம் எழுந்தது.

அந்தக் கடிதத்தைப் பிரித்தபோதே முதல் உறுத்தல் மனத்தில். இது சத்தியமாய் அப்பாவின் கையெழுத்தல்ல. என் கை முட்டியில் ஸ்கேலால் அடித்து அடித்து என் கையெழுத்தைச் சீர்ப்படுத்தி இன்று என்னைச் சுற்றியுள்ள அனைவரும் திகட்டத் திகட்ட, கையெழுத்து என்ற ஒரு சமாசாரத்துக்காகவே புகழுமளவுக்குச் செய்திருக்கும் அந்த மனிதர் என்னை விடவும் நூறு மடங்கு அழகாய் எழுதுவார். இது ஏதோ கிறுக்கல். ஆனால்...

'நான் படுத்த படுக்கையில் இருப்பதால் எழுத முடியவில்லை. பராலிஸிஸ். ஐக்கு... நினைத்துப் பார்த்தால் இத்தனை பிடிவாதம் தேவையா என்று என்னை நானே கடிந்து கொள்கிறேன். நீ இள ரத்தம். உனக்கு ஆத்திரம் இருக்கும். நினைத்தவளைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று ஒற்றைக் காலில் நின்றது ஓரளவு நியாயப்படுத்தக்கூடிய விஷயம். ஆனால் நான்... அப்போது... பதினைந்து வருஷத்துக்கு முன்னே உன் இஷ்டத்துக்கு ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து அவளுக்குத்தான் உன் மோதிர மாற்றல் என்று ஒற்றைக்காலில் நின்றபோது, உன்னைத் துரத்தியடித்திருக்க வேண்டாமோ என்று யோசிக்கிறேன். காலம் கடந்து என்றும் சேர்த்துக் கொள் ஜகந்நாதா. உன் அம்மா நேற்று மெல்ல வந்து என் வாயில் மாத்திரைக் கசப்புக்களை ஒவ்வொன்றாய்ப் போட்டுக் கொண்டே யதேச்சை போல் கேட்டாள்.

"இன்னும் இந்த வைராக்யம் தேவை தானா? அவனை... கூப்பிட்டு ஒரே ஒரு தடவை..." என்று சொல்லிவிட்டு மே கொண்டு என் பார்வைக்குப் பயந்து ஓடிப் போய் விட்டாள். என் மனசில் அந்த வார்த்தைகள் வேலை செய்து செய்து... இதோ இந்தக் கடிதம். ஆனால் மை டியர் ஸன் நான் கடிதம் எழுதும் நிலையில் இல்லாததா உன் அக்கா மீனாட்சியின் பெண் வ தனாவை விட்டு எழுதச் சொல்கிறேன். நா தான் எழுதச் சொன்னேன் என்று யாரிடமு சொல்லக் கூடாது என்று சத்தியம் வாங்கி கொண்டேன். தயவு பண்ணி நீயும் சொ லிடாதேடா... நீயாய் என்னைப் பார் வருகிற மாதிரி வா. முதலில் விட்டுக் கொ தவன் நீயே என்றிருக்கட்டும். கொஞ் இரக்கம் காட்டு.'

மைகாட். மைகாட். அப்பாவா? இத்தன கெஞ்சல்களும் இவ்வளவு தழைதல்க அவருக்குச் சாத்தியமா என்ன! நான் தனையோ முறை ஜென்னிஃபரையும் அ

ருத்தனையும் அழைத்துக் கொண்டு போய் அதிரடியாய் அவரின் பரந்து விரிந்த தாமரைப்பூக் கால்களில் விழுந்து மன்னித்தால்தான் ஆயிற்று என்று பிடிவாதிக்க நினைத்து, இந்தப் பெண் எதிரில் சினிமாக் காட்சிகள் வேண்டாம் என்று தீர்மானித்தது பைத்தியக்காரத்தனம் போலும்.

கடிதத்தின் கடைசி வரியைப் படித்துவிட்டு வெட்கமில்லாமல் அழுதேன். 'நான் செத்துப் போவதற்குள் ஒரு தடவை என் மாட்டுப் பொண்ணையும் பேரனா – பேத்தியா? அதையும் என் கண்ணில் காட்டி விட்டுப் போவாயா?'

''வர்றேம்ப்பா... வர்றேன்'' மீண்டும் கையெழுத்தைப் பார்த்தேன். லேசாய்க் கிறுக்கலாய் இருந்தாலும் மிகவும் செட்டிலாகியிருந்த கையெழுத்து. ஓ. வந்தனா அப்போது ஆறு வயசுப் பெண். இப்போது எத்தனை பெரியவளாய் இருப்பாள்! தம்பி விக்னேஷுக்குக் கல்யாணம் ஆகிவிட்டிருக்கும். நாலைந்து வயசில் ஒரு குழந்தை இருந்தாலும் வியப்பில்லை. ஹும். நான் கிளம்பி வரும்போது தம்பியே சின்னப் பையன்தான்.

நடுக்கத்துடன் சென்னையில் சிந்தாதிரிப்பேட்டையில் அப்பாவின் வீடு இருந்த தெருவில் நுழைந்தபோது அசாதாரணக் கும்பல் எதுவும் தென்படாதது தெம்பு.

"வாடா... வாடா... வா... வா..." வாசலில் கோலம் போடவோ என்னவோ வந்த அம்மா அப்படியே சின்னப் பெண் போல் துள்ளி ஓடி வந்தாள்.

நல்லவேளை முகவரி மாறவில்லை.!

''அம்மா'' தொண்டையை அடைத்தது. எத்தனை தளர்ந்திருக்கிறாள். பதினைந்து வருஷத்தில் நிறைவுகள் கிடைத்த மாதிரியே இழந்ததும் நிறையவோ?



''எப்பிடிடா இருக்கே... இதுதான் என் பேரனா? ஐயோடா... அப்பிடியே நம்மாத்து ஜாடைடா..." அம்மா கண்களில் நீர். கட்டியணைத்து உச்சந்தலையில் பேரனுக்கு முத்தமிட்ட நிமிஷம் பொறாமையுணர்ந்தேன். என்னையும் அப்படிக் கொஞ்சேன்.

ஒரு நிமிஷம் சட்டென்று எதேச்சை போல் ஜென்னிஃபரை நிமிர்ந்தவள் 'உன்னாலன்றோ சகலமும்' போல் விழிகளைத் திருப்பிக் கொண்டாள். என் ஜென்னி இதற்கெல்லாம் அவசரப்பட்டுக் கோபிக்கிற ரகமில்லை. "நமஸ்தே அம்மா'' என்றாள் இருகரம் குவித்து, நான் கேட்க நினைத்ததை என்னையும்

முந்திக்கொண்டு என் மனைவி கேட்டாள். "அப்பா எப்பிடிம்மா இருக்கார்?" அன்னியப் பெண்ணிடம் அப்பா என்று அத்தனை உரிமையாய் வந்ததற்குத்தான் வியந்து நிமிர்ந்தாள் என்று நினைத்தேன்.

"அப்பாவுக்கு... உடம்பு சரியில்லைன்னு தெரிஞ்சுதான் வந்திருக்கியா" குரல் தாழ்த்தி ரகசியம் போல் கேட்டாள். "யாராவது உறவினர் சொன்னாளா?"

சட்டென்று சுதாரித்தேன். அப்பா கடிதம் போட்டு வந்ததாக இவளிடம் மட்டும் காண்பித்துக் கொள்ளலாமா என்ன?

"என்னவோ திடீர்னு தோணித்து.. உன்னையெல்லாம் பார்க்க ஆசை..." அபத்தமாய் வாய் குழறி இழுத்தேன்.

"ஐயோ.. இத்தனை ஆசையாய் வந்திருக்கே. ஆனால் படுத்த படுக்கையிலும் அந்தக் கிழட்டுச் சிங்கம் பார்வையைத் திருப்பிண்டுடுத்துன்னா என்ன செய்யறதுன்னு பயமாய் இருக்குடா..." அம்மாவின் குரலில் கலக்கம். அப்பா அப்படிச் செய்ய மாட்டார் என்று ஆறுதல் சொல்ல வேண்டும் போல் இருந்தது. வேண்டாம். நேரில் பார்த்துத் தெரிந்து கொள்ளட்டும்.

"அந்த ரூம்லதான் அப்பா படுத்திருக்கார்." அம்மா காண்பித்த அறையில் அரை வெளிச்சம். நீல டிஸ்டெம்பரில் பளிச்சென்றிருந்த அறை இப்போது அழுகிற மாதிரி இருக்கிறது. முன்பு நான் பரீட்சைக்குப் படிக்கும் போது என்னமாய் தகதகக்கும்? இப்போது அப்பாவின் நிலைமைக்காய் அழுகிறதோ?

அப்பாவினருகில் பிளாஸ்கிலிருந்து வெந்நீர் எடுத்துக் கொண்டிருக்கும் பெண் யார்? "இதுதாண்டா உன் தம்பி பெண்டாட்டி..."

"அப்பா... வாயைத் திறங்கோ... மாத்திரை..." என்று அப்பாவினருகில் உரிமையாய்க் குனிந்து சொல்லும் பெண்ணைப் பார்த்தபோது 'என்ன ஒரு குடுப்பினை! பக்கத்திலேயே இருந்து செய்கிறாள்' என்று தோன்றியது.

அப்பா மாத்திரை சாப்பிடும் பொருட்டு லேசாய் வாயை மட்டுமல்லாமல் கண்ணையும் திறந்தார். சுற்றிச் சுழன்று ஜென்னியையும் பேரனையும் பார்த்துக் கண்கள் என் மேல் நிலைத்தன. 'நீயா!' என்றன விழிகள். முகத்தில், நெற்றியில் வரிகள். எனக்கு முகவரி கொடுத்தவரன்றோ.

என் சகல வைராக்யங்களும் கரைய, பெரிய மேருமலை போல் படுத்திருந்த அப்பாவினருகில் சரிந்து அமர்ந்தேன். மென்மையாய்க் கரத்தைத் தொட்டேன். "அப்பா... எப்பிடி இருக்கீங்க? என்ன உடம்புக்கு?"

அழவே கூடாது என்று நான் திட்டமிட்டிருந்ததெல்லாம் நிமிஷமாய் மறந்து போய்...

"அழாதேடா... வளர்ந்த பிள்ளைகள் அழுதா உங்கப்பாவுக்குப் பிடிக்காதுன்னு தெரியுமோல்லியோ..." அம்மா தலை கோதினாள்.

மெல்லக் கையை என் பக்கம் காட்டி அப்பா தலையை இடமும் வலமுமாய் அசைத்தார்.

"த்சு... அப்படியெல்லாம் சொல்லக் கூடாது... குழந்தை வந்திருக்கான். எல்லாத்தையும் மறந்துடுங்க. மனசில் போட்டு மறுகி மறுகித்தான் உடம்பை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கேளே..."

இப்போ அப்பா என்ன சொன்னார்

## அருள்வாக்கு



"எத்தனையோ வாழ்க்கை ப்ரச்னை எங்களுக்கு. ஆபீஸ் கார்யம், வீட்டுக் கார்யம் என்று அலைகிறோம், அவதிப்படுகிறோம். அது தெரியாமல், எங்கேயோ மடத்தில் உட்கார்ந்து கொண்டு 'அதைக் கத்துக்கோ, இதைக் கத்துக்கோ' என்று நீங்கள் உபதேசம் பண்ணினால் எப்படி?" என்று கேட்கலாம். மனஸிருந்தால் எதையும் செய்துவிடலாம். இத்தனை வாழ்க்கை ப்ரச்னை இருந்தாலும் எத்தனை பொழுது அரட்டை, ந்யூஸ் பேப்பர், ஸினிமா, சீட்டுக்கட்டு இத்யாதியிலே போகிறது? இப்படி வீணாகப் போகிற காலத்தில் பாதி பொதுநலப் பணிகளுக்கு என்றும் பாதி ஏதாவது வித்யாப்யாஸத்துக்கு என்றும் வைத்துவிட்டால் போதும் - ஸமூஹப் பணிகளும் நடந்துவிடும், நம்முடைய வித்யைகளும் ப்ரகாசம் பெற்றுவிடும், நாமும் ப்ரகாசம் பெற்று விடுவோம்.

வேலை - வெட்டி, குடும்பத் தொல்லை

அம்மா என்ன புரிந்து கொண்டாள்?

"என்னம்மா?" புருவம் உயர்த்திக் கேட்டேன்.

"அது பற்றி உனக்கென்ன? ஆரம்பத்தில் அப்பிடித்தான் புந்தா பண்ணுவார். அப்புறம் தானாய் மன்னிப்பார்..."

"அதென்னவோ.. .உனக்காய்த் தோணி வந்திருக்கியே... பகவான் செயல்தான்'' என்றாள் அம்மா தொடர்ந்து.

'இல்லை. அப்பாவின் செயல்' என்று சொல்லத் தோன்றியது. காண்பித்துக் கொள்ள விரும்பவில்லை. ஆனாலும் அப்பா என்னை விரோதி மாதிரி பார்க்கிறாராம்! என்ன ஒரு நடிப்பு? தானாய் லெட்டர் போட்டது தெரியாதிருக்க அப்படி ஒரு பிசுக்காரம்.

"அக்கா எப்பிடிம்மா இருக்கா?" வேண்டுமென்றே அக்காவைப் பற்றிப் பேசினேன். அந்தப் பெண் வந்தனாவைப் பார்க்க ஆசையாய் இருந்தது. என்னை வரவழைத்த கடிதத்தை எழுதியவளல்லவா? நன்றியுணர்ச்சி.

"உம்.. போன வாரம் வந்திருந்தா... அவ பெண் வந்தனா. இப்போ எம்.பி.ஏ. பண்ணிண்டிருக்கு. திரும்பவும் திண்டுக்கல் போயாச்சு'' என்றாள்.

பேரன் விடாமல் பாட்டியையே சுற்றிக் கொண்டிருக்க, என் பெண்டாட்டி முதலில் கொஞ்சம் செய்வதறியாது திகைத்தாலும் மிக இயல்பாக அந்தக் குடும்பத்துடன் ஒட்டிவிட்டதைச் சொல்லாமல் சொல்கிற மாதிரி காரியங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்ய... முதலில் முகத்தைத் திருப்பிக் கொண்ட அம்மா கூட இப்போது அவளுடன் முகம் கொடுத்துப் பேச ஆரம்பித்து விட்டாள்.

"இதோ பாருடியம்மா... உன் பெயர் என் வாயில் நுழைய மாட்டேங்கறது. லட்சுமின்னு கூப்பிடறேன்."

"கூப்பிடுங்கம்மா. எனக்கும் அந்தப் பெயர் பிடிக்கும். தினமும் லட்சுமி சுலோகம் சொல்றேன்'' என்று அவள் சொன்னபோது அம்மாவின் பிரமிப்பு அருவியாய் வழிந்தது.

நான் அப்பாவை விட்டு நகரவில்லை. ''அப்பா... என்னை மன்னிச்சுடுங்கப்பா. உங்களை ரொம்பவும் இழந்துட்டேம்பா... இந்தப் பதினைஞ்சு வருஷமாய் நானே இந்தத் தவிப்புத் தவிச்சேன்னா... என்னைப் பெற்ற நீங்க என்னமாய்த் துடிச்சிருப்பீங்கன்னு புரியது...'' வேண்டுமென்றே நான் கடிதம் பற்றி எதுவும் பிரஸ்தாபிக்கவில்லை. நானாய் வந்தது

## எறும்பார் கடிக்கிறார்...

**"அ.இ.அ.தி.மு.க. மீது கூறப்பட்ட கறைகளைப் போக்க, எந்த தியாகமும் செய்யத் தயாராக இருக்கிறேன்..."**

**– தேர்தல் பிரசார காசெட்டில் ஜெ.**



**'பதவித் தியாகம் தவிர'ன்னு ஒருவரி சேர்த்து சொல்லியிருக்கலாம்...**

---

என்று மன்றாடுபவர்களுக்கு 'டைவர்ஷன்' வேண்டாமா என்று கேட்கலாம். ஆசையோடு மனஸ் ஈடுபட்டு ஏதாவது ஒரு வித்யை அப்யஸிக்க ஆரம்பித்தீர்களானால் உங்களுக்கே தெரியும், இந்த அப்யாஸத்தைவிடப் பெரிய 'டைவர்ஷன்' எதுவும் இல்லையென்று. களைத்துப் போன மனஸுக்கு வேண்டிய உத்ஸாஹத்தை இவையே (வித்யைகளே) ஊட்டிவிடும். அப்படியும் ஒரேயடியாக நீங்கள் 'டைவர்ஷன்' என்பதை விட்டுவிடும்படிச் சொல்லவில்லை. அதுவும் கொஞ்சம் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்களே ஆலோசித்துப் பார்த்து, "இப்படிப் பொழுதை வேஸ்ட் பண்ணுகிறோமே" என்று நினைக்கக்கூடியவைகளை விட்டு விட்டு - இப்படி நிறைய அகப்படும் - அந்தப் பொழுதை இப்படியொரு Pursuit-ஐ (தேட்டத்தில்) செலவிட்டால் போதும், ஏதாவதொரு ஸ்வதேச வித்யையில் ஈடுபட்டுத் தேர்ச்சி பெற்று விடலாம். நம் முன்னோர்கள் போன வழி அதுதான்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

போலவே இருக்கட்டும். அவர் கடிதம் போட்டதாய்க் குறிப்பிட்டுக் காட்டி அவருடைய கம்பீரத்துக்கு இழுக்கு செய்ய வேண்டாம் என்று தோன்றியது.

"நானே மருந்து கொடுக்கிறேன்" அம்மா கையிலிருந்து வாங்கிக் கொண்டேன். அவர் முகத்தைத் திருப்பிக் கொண்டார். நான் கொடுத்து அவர் மருந்து சாப்பிட மாட்டாராம். என் மேல் அத்தனை கோபமாம். எனக்குச் சிரிப்பு வரவில்லை; அழுகைதான்!

"ஒருநாள் தலை சுத்தறதுன்னு உட்கார்ந்தார்டா... அன்றைக்கே பாத்ரூமில் தலை சுத்தி விழவும் செய்தார். ரத்தக் கொதிப்பு அதிகமாய் இருக்குன்னார் டாக்டர். அப்புறம் பாரிச வாயு..."

அதற்கப்புறம் ரொம்ப நேரத்துக்கு அம்மா பேசவில்லை.

"அப்பா... நான்... நான் வந்திருக்கேம்ப்பா... என்னை மன்னிச்சு... வந்தியான்னு ஒரு வார்த்தை கேளுங்கப்பா..." சின்னக் குழந்தையானேன். இன்னும் இரண்டு நாளைக்குத்தான் லீவு. அதற்குள் அப்பாவை முழுவதுமாய் நிறைவு செய்து கிளம்பல் சாத்தியமா? அவர் என்னைப் பார்த்ததும் முகம் மலர்ந்து மகிழ்வார் என்றல்லவா நினைத்தேன்?

அடுத்த நாள் காலையிலிருந்தே மனசு சரியில்லை. நான் எதிர்பார்த்து வந்ததென்ன, இங்கே நடப்பதென்ன? நானாகவே, எல்லாவற்றையும் மறந்தாற்போல் மன்னிப்புக் கேட்கு முகமாக வருகிற மாதிரி வந்தேன். அப்பாவே வரிந்து வரிந்து அவ்வளவு நெகிழ்ந்து, எதிர்பாராத விதமாய் நாலு வரி எழுதிப் போடவும்தான் கிளம்பினேன்.

முகத்தை இவ்வளவு திருப்பிக் கொள்ள வேண்டுமா? முதலில் நடிப்பு என்று நினைத்தேன். சுற்றி உள்ளவர்களுக்காக என்று நினைத்துச் சமாதானம் பண்ணிக் கொண்டேன். இப்போது சந்தேகமாய் இருந்தது. ஏதோ ஒரு வேகத்தில் எழுதி விடவும் இப்போது மீண்டும் ஈகோ தலைதூக்கி, இறங்கி வர அனுமதிக்கவில்லையோ?

"அப்பா... நான்... நான் இன்னிக்குக் கிளம்பணும்..." அவர் முகம் தடவிச் சொன்னேன். ரோஸ் நிற அப்பா நிறையவே நிறம் மாறியிருந்தார். ஆனால் அப்போதும் குணம் மாறினதாகத் தெரியவில்லை.

இடக்கை மட்டும் ஸ்வாதீனம். நெஞ்சு தடவிக் கொண்டார். முகம் வேதனை காட்டியது. "ஊம்..." ஏதோ ஒரு உருவமற்ற உறுமலாய் ஹுங்காரமாய் வெளிப்பட்டு அது நிகழ்ந்து விட்டது.



அம்மா அழுது புரளவில்லை. "போயிட்டாரா... போயிட்டாரா..." என்று அடிபட்ட பார்வையுடன் இரண்டு முறை கேட்டாள். "இப்படியெல்லாம் ஆகும்னு தான் வராதவனை பகவான் வரவழைச் சானா? இத்தனை வைராக்கியத்திலும் பிள்ளை கையால் கொள்ளின்னு குடுப் பினையாக்கும்."

எதிர்பார்த்த மரணம்தான் என்றாலும் தன்னை ஏமாற்றி விட்டு அந்த மனிதன் மட்டும் தப்பித்துப் போய் விட்டது போல் குற்றச் சாட்டுப் பார்வை பார்த்தாள்.

எனக்கும் கூட ஏமாற்றம்தான். இத் தனை தூரம் கடிதம் எழுதி வரவழைத்து விட்டு, அது பற்றி ஒன்றுமே கண்டுகொள் ளாமல்...

திடீரென்று மனசுக்குள் ஒரு பேருண்மை உறைத்தது.

உண்மையில் கடிதம் எழுதியது அப்பா தானா? அம்மாவாய் இருக்குமா? கையெழுத்து தெரியக்கூடாது என்று பேத்தியை விட்டு எழுதச் சொல்லி... அத னால்தான் 'கடிதம் எழுதியது பற்றிக் கண்டுகொள்ளாதே... நீயாய் வருகிற மாதிரி வா' என்று ஒரு குறிப்போ?

அப்படியானால் நடித்தது அப்பாவா, அம்மாவா?

"உடம்பு சரியில்லையென்று தெரிந்து தான் வந்தாயா?" என்று வியப்பாய்க் கேட்டது நடிப்பாகவா இருக்கும்?

மை காட். மை காட்.

ஆக...

அப்பாவைப் பொறுத்தவரையில் அவ ரின் ஈகோ கடைசி வரையில் அப்படியே தான் இருந்திருக்கிறதா? தன் கம்பீரம் இழக்காமல்தான் போய்ச் சேர்ந்திருக் கிறாரா? அப்பாவைப் பொறுத்தவரைக்கும் நானாகத்தான் மன்னிப்புக் கோரி வந் திருக்கிறேன் என்பதாகிறதா?

அம்மாவின் முகத்தைப் பார்த்தேன். அவள் அப்பாவுடன் ஏதோ மானசீக சம்பாஷணை நிகழ்த்திக் கொண்டிருந் தாள்.

நான் கடைசி வரைக்கும் இவளிடம் எதையும் கேட்கப் போவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டேன். என் அனு மதியின்றி ஜென்னி வாயைத் திறக்க மாட்டாள்.

ஏனெனில் –

ஒருவேளை அப்பாதான் நிஜமாய்க் கடிதம் எழுதியவரெனில், அம்மாவுக்கு அந்த ரகசியம் உடைத்த பாவத்தைச் செய்தவனாவேனல்லவா?




# தள்ளிப்போட்டது தப்பாப் போச்சு!

'இன்று ஒரு தகவல்' கேட்கிறவர்களில் சில பேர் அவ்வப்போது எனக்குக் கடிதங்கள் எழுதுவதுண்டு. "தகவல் சொல்ற மாமா அவர்களுக்கு வணக்கம். தயவுபண்ணி ஒரு கையெழுத்துப் போட்டு அனுப்புங்களேன்" என்று கேட்கும் பள்ளிச் சிறுவர்கள். 'அர்த்த பஞ்சகம் பற்றி நீங்கள் சொன்னீர்கள். அது சம்பந்தமாக இன்னும் கொஞ்சம் உங்களிடம் பேச வேண்டும். எப்போ வரலாம்?' என்று கேட்கிற பெரியவர்கள். இவர்களுக்கு மத்தியில்தான் அந்தக் கடிதமும் ஒருநாள் வந்து சேர்ந்தது.

அந்த முதியவரின் கடிதத்தைப் படித்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. எல்லா வசதிகளோடும், வானொலியில் மிக உயர்ந்த பதவியிலிருக்கும் '....' அவருடைய தந்தையா இப்படி.. இங்கே?

உடனே அந்தப் பெரியவருக்கு பதில் கடிதம் எழுதினேன் –

'கூடிய சீக்கிரம் உங்களை வந்து பார்க்கிறேன். என்னை உங்கள் மகனாகக் கருதி என்ன வேண்டுமோ கேளுங்கள், நான் செய்கிறேன்!'

ஒருநாள் சாவகாசமாகப் போய் அன்று முழுவதும் அங்கேயே இருந்து பெரியவருடன் உரையாடி விட்டு வரவேண்டும் என்று முடிவு செய்து

**அந்த முதியவரின் கடிதத்தைப் படித்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. எல்லா வசதிகளோடும், வானொலியில் மிக உயர்ந்த பதவியிலிருக்கும் '....' அவருடைய தந்தையா இப்படி.. இங்கே?**

## ...தங்கள் — தென்கச்சி சுவாமிநாதன்

...காண்டேன்.

அவசரமாகப் போய்ப் பார்த்துவிட்டு திரும்பி விடலாம் என்று நினைத்திருந்தால் அப்போதே போயிருக்கலாம். நிதானமாகப் போகலாம் என்று நினைத்ததாலேயே இது காமதமாகிக் கொண்டு வந்தது!

அவ்வப்போது அவரிடமிருந்து கடிதங்கள் வரும். பதில் எழுதுவேன். இடையில் 23.06.93 தேதியிட்டக் கடிதம் வந்தபோது நான் வெளியூரில் இருந்தேன். ஊர் திரும்பியவுடன் அடுத்த கடிதமும் சேர்த்துக் காத்திருந்தது! "என்னுடைய காலை நீக்கி விட்டார்கள்."

'அவசியம் ஒருநாள் அவரைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டும்' என்று நினைப்பதோடு மட்டுமே நாட்களைக் கடத்திக் கொண்டிருந்தேன்.

ஒருநாள்... இரண்டாவது சனிக்கிழமை... விடுமுறை

> 23.6.93
>
> மதிப்பிற்குரிய 'இன்று ஒரு தகவல்' சுவாமிநாதனுக்கு,
>
> நான் தற்சமயம் என் இடதுகால் முழங்கால் வரை வெட்டுப்படுவதற்காக (Amputation) ஆஸ்பத்திரியில் இருக்கிறேன். எனக்கு உதவ யாரும் இல்லை. தங்களைப் போன்றவர்களின் நல்லாசிகள் என்னை ஒருவிதமாகத் தேற்றும். ஆகையால் தாங்கள் எனக்காகப் பிரார்த்தனை செய்யவும். ஆபரேஷன் ஆனபின், தங்களுக்கு எந்தவித கஷ்டமும் இல்லையென்றால் என்னைப் பார்க்கவர வேண்டுகிறேன்.
>
> நன்றி.
>
> தங்கள் அன்பை எதிர்பார்க்கும்,
> பி.ஆர். ராமமூர்த்தி

நாள்... அலுவலகத்தில் ஓர் ஒலிப்பதிவை முடித்துக் கொண்டு வெளியே வந்தேன்.

வாசலில் இருந்த ஊழியர், "சார், நீங்க உள்ளேயா இருந்தீங்க? ஒரு நிமிஷத்துக்கு முன்னே ஆட்டோவிலே ஒரு பெரியவர் வந்தார். உங்களை விசாரிச்சார். கால் இல்லேப்பா. அவரை அழைச்சுகிட்டு வர முடியுமா?'ன்னார். "இன்னைக்கு ஆபீசு லீவு ஆச்சுங்களேன்னதும் போயிட்டார்" என்றார்.

இனியும் அவரை சந்திப்பதைத் தள்ளிப் போடக் கூடாது என தீர்மானித்தாலும் அன்று மாலையே விவசாயம் சம்பந்தப்பட்ட ஒலிப்பதிவுக்காக தருமபுரி புறப்பட வேண்டிய சூழ்நிலை. மூன்று நாட்கள் கழித்துத் திரும்பியதும், பிடிவாதமாக ஒருநாள் ஆபீஸுக்கு லீவு போட்டுவிட்டு, அந்தப் பெரியவரைத் தேடிப் போனேன். அங்கே எனக்குக் கிடைத்த செய்தி – "உங்களுக்குத் தகவல் தெரியாதா? அவரு செத்துப் போயிட்டாரு."

> 28.5.92
>
> அன்புள்ள ஐயா,
>
> நான் எல்.ஐ.சி. ஊழியனாக இருந்து ஓய்வுபெற்றவன். என் சரும வியாதியின் காரணமாக என் குடும்பத்தினரால் விலக்கப்பட்டு வண்டலூரில் உள்ள தொழுநோயாளிகள் குடியிருப்பில் வசிக்கிறேன்.
>
> 'இன்று ஒரு தகவல்' நிகழ்ச்சியை சுவையாக நடத்தி வருகிறீர்கள். பாராட்டுக்கள். கடவுள் உங்களை ஆசீர்வதிக்கட்டும்.
>
> இங்கு நாங்கள் முப்பத்தைந்து குடும்பத்தினர் இருக்கிறோம். உங்களை நேரில் சந்திக்க ஆசைப்படுகிறோம். உங்கள் நிகழ்ச்சிக்கான 'தகவல்'கள் கூட இங்கே உங்களுக்குக் கிடைக்கலாம்.
>
> நாங்கள் சுத்தமாகவும், சுகாதாரமாகவும்தான் இருக்கிறோம். சுற்றுப்புறத்தையும் நன்றாக வைத்திருக்கிறோம். ஆகையால் தாங்கள் இங்கே வருவதற்குத் தயங்க வேண்டியதில்லை.
>
> நான், தற்போது உங்கள் இலாகாவில் பெரிய பதவியில் இருக்கிறாரே '.....' அவருடைய தந்தை.
>
> உங்கள் அன்புள்ள,
> பி.ஆர். ராமமூர்த்தி

'எதையும் தள்ளிப் போடாதே' என்கிற அறிவுரையை எனக்கு உணர்த்திவிட்டு அந்தப் பெரியவர் போய்ச் சேர்ந்து விட்டார். இப்போதெல்லாம் எதையும் நான் தள்ளிப் போடுவதே இல்லை.

தொகுப்பு : **அருண்சரண்யா**

• பெரிய தம்பி : 'நோ நெருக்கம்!'



வாகினியின் ஆஸ்பத்திரி செட் வாசலில் செல்லுலர் போனுடன் தண்டபாணியைப் பார்த்ததும் அதிர்ந்து விட்டேன்.

"என்ன தண்டபாணி, யாராவது மாஜி அமைச்சருக்குத் தற்காலிக பினாமியா உன்னை அப்பாயின்ட் பண்ணியிருக்காங்களா? கலக்கறே?" என்றேன்.

"செல்ஃபோன் பார்த்துட்டுக் கேக்கறியா? இன்னிய தேதிக்கு போட்டுக்க நல்ல பேன்ட் – ஷர்ட் இல்லாட்டியும் பரவாயில்லை. கையில ஒரு செல்லுலர் இல்லாத சினிமாக்காரனை, சினிமாக்காரனாவே யாரும் மதிக்கறதில்லை! விடு, இந்த வாரம் உனக்கு மூணு இசையமைப்பாளர்கள் பத்தி முத்தான மூணு தகவல் தரப்போறேன்."

"சொல்லு, சொல்லு" என்று சப்புக் கொட்டிக் கொண்டேன்.

"அர்ஜுனோட 'தெனாலி ராஜா'வுல அவரோட ஆஸ்தான இசையமைப்பாளர் வித்யாசாகர் இல்லை. பதிலா, பாலபாரதி."

"அடடா, கல்தா குடுத்துட்டாங்களா?"

"இதை கல்தான்னு சொல்ல முடியாது. வித்யாசாகரோட சமீபத்திய பாட்டுகள் பெரிசா ஹிட் ஆகலை; அதனால தூக்கிட்டாங்கன்னு சில பேர் பேசிக்கறாங்கதான். ஆனா விஷயம் அது இல்லை. பாலபாரதி, டைரக்டர் செல்வாவுக்குப் பிடிச்ச இசையமைப்பாளர். அவரோட முதல் படத்துல அத்தனை பாட்டுங்களும் ஹிட். தலைவாசல் ஞாபகமிருக்கில்ல? ஏதோ போறாத வேளை... தொடர்ந்து அவருக்கு சான்ஸ் கிடைக்கலை. செல்வா, அர்ஜுன் கிட்டப் பேசி, 'இந்த மாதிரி சமாசாரம்... எனக்காக இந்த ஒரு படத்துல பாலபாரதி மியூசிக் பண்ணட்டும்' அப்படீன்னு ரிக்வெஸ்ட் பண்ணிக்கிட்டாப்பலயாம். முதல்ல கொஞ்சம் யோசிச்சாலும் அப்புறம் 'பரவாயில்லை. அவரும் நல்லா வர வேணாமா. ஒரு வாய்ப்பு தந்து பார்ப்போம்'னு அர்ஜுன் ஒத்துக்கிட்டாராம்."

"நல்ல மனசுப்பா!"

"இதுல வித்யாசாகர் கொஞ்சம் அப்ஸெட் ஆயிட்டதா கேள்வி. ஏன்னா, இங்க அவருக்குத் தொடர்ந்து வாய்ப்புத் தர ஒரே ஆளு அர்ஜுன்தான். 'விதி இப்படி ஆயிடுச்சே'ன்னு மனுஷன் மௌனமா புலம்பிட்டிருக்காராம்."

"அடடா..."

"அடுத்த நியூஸ் ரகுமான் பத்தி. தெரியுமா? முன்னெல்லாம் டைரக்டர்கள், புரொட்யூசரைத் தேடிப் போய் கதை சொல்லுவாங்க. அவங்களுக்குப் பிடிச்சிருந்தா, அப்புறம் மத்த விஷயங்கள் பத்திப் பேசுவாங்க. இதுதான் நடைமுறையா இருந்தது.

## மணிவண்ணன் காட்டில் மழை!

• மணிவண்ணன் : காட்டுல மழை

இசட் கியர் போட்டான். வேரோடு கெல்லிப் பிடுங்கி வெளியில் தூக்கிப் போட்டிருந்தால் கூட இத்தனை சப்தம் வராது. தீனமாக பிரெஞ்சு மொழியில் ஓலமிட்டபடி அந்தப் பழைய கார் நின்றே விட்டது.

இசட்டின் அப்பா பாரீஸில் ஏதோ சில்லுண்டி உத்தியோகத்தில் வருஷக்கணக்காக ஃபைல் நகர்த்திவிட்டு ரிடையராகி வரும்போது கொண்டு வந்த கார்.

அப்பா முழங்காலுக்கு வழியும் காக்கி நிக்கர் மாட்டிக் கொண்டு, பிரெஞ்சு பென்ஷனர்களான இதர கிழட்டுக் குழந்தைகளோடு பெரிய சைஸ் இரும்பு கோலிக் குண்டுகளை நாள் முழுக்கப் பாண்டிச்சேரி தெருவோரம் உருட்டி விளையாடிக் கொண்டிருக்கிறார்.

இசட் பாரின் காரில் சீதாதேவி என்ற கன்னிகையை ஏற்றிப் போய், ஊசுட்டேரியில் படகு விடும் முஸ்திபுகளோடு கிளம்பி இருக்கிறான். ஒத்தாசைக்கு, கூடப் படிக்கிற சாதுப் பிராணியான நான்.

"ஏமி... ஏமி... ஏமி?"

பின்சீட்டில் சீதாதேவியின் ஒன்றுவிட்ட சித்தியும் உடம்பு பெருத்த பேரிளம் பெண்ணுமான தாங்குதூரி பங்காரு பாப்பா கே.பி. தெலுங்கு சுந்தராம்பாளாகத் துளைத்தெடுக்க, அவள் பக்கத்தில் ஏதோ நாவல் படித்தபடி சீதாதேவி. உடனடி வர்ணனை தேவைப்படுகிறவர்கள் ஒரு ஆறு பாரா ஜம்ப் செய்யவும்.

''இறங்கித் தள்ளுடா...'' இசட் ஆணையிட்டான். மனத்தில் முறைத்துக் கொண்டே கீழே இறங்கினேன்.

இவனை நம்பி வந்தே இருக்கக்கூடாது. இப்படி ஞாயிற்றுக்கிழமை விடிகாலை எட்டு மணி சுமாருக்கு கசங்கிய ஜீன்ஸும், ஹாஸ்டல் ரூம்மேட் சின்னக்கருப்பனின் தூக்கத்தைக் கெடுக்காமல் உருவிக் கொண்டு வந்த கோவிந்தா மஞ்சள் டீ ஷர்ட்டுமாக ஓட்டைக் காரைத் தள்ளி மூச்சு முட்டிக் கொண்டு... எல்லாம் சீதா



# Z-TO-A

தேவிக்காக... நாட்டில் பளபளப்பும் ஜொலி ஜொலிப்புமாக எத்தனையோ காலேஜ் இருக்க, பாண்டிச்சேரிக்கு இவள் வந்தது ஏனாம் என்று கேட்டால் பதிலும் 'ஏனாம்'தான்.

இங்கே புதுச்சேரி, அங்கே சேட்டன்மார் பூமியில் மாஹே, மற்றாங்கே ஆந்திரத்தில் ஏனாம் என்று துண்டு துணுக்காகப் பிடித்து வைத்திருந்த பிரெஞ்சுக்காரன் அப்படியே திருப்பிக் கொடுத்துவிட்டுப் போக, எல்லாம் சேர்ந்து புதுவை யூனியன் பிரதேசம். ஏனாமில் மூலைக்கச்ச வேட்டியும், முக்கால் அடி சுருட்டுமாக உருண்டு போகிற ஏதோ ஜமீன்தாரின் செல்லப் பெண் சீதாதேவி.

இரா. முருகன்

அந்த உவாமல் அழகைக் கூடையிலும் முறத்திலும் கூறுகட்டி வைத்துக் கொண்டு கூவிக் கூவி விற்பார்களோ என்னமோ... வாங்கிப் பூசி வழிய விட்டுக் கொண்டு சீதாதேவி போன வருடம் இங்கே காலேஜில் சேர்ந்த அப்புறம் நானும் இசட்டும் இன்னும் நானூற்றுச் சில்லறை இதரர்களும் ஒருநாள் கூட மட்டம் போட்டதில்லை. அழகு என்றால் அப்படி ஒரு...



ரொம்ப வேண்டாம்... சாம்பிளுக்கு அந்தப் புஷ்டியான கன்னங்கள் குழி விழ, மையெழுதிய கண்ணும், நீள நாசியும் சேர்ந்து கூட்டணி அமைத்த ஐஸ்கிரீம் சிரிப்பு. நிரந்தர ஊடலாக எப்போதுமே காலே அரைக்கால் சென்ட்டிமீட்டர் பிரிந்து இருக்கிற ஆரஞ்சுச் சுளை உதடுகளுக்கு ஈர ஒத்தடம் கொடுக்க, உள்ளேயிருந்து அவ்வப்போது வந்து போகும் வெல்வெட் நுனி நாக்கைப் பார்க்கக் காத்துக் கொண்டு இருக்க, பாட்டனி வகுப்பு பொசுக்கென்று முடிந்து போகும்...

எல்லாக் குடிமகன்களும் அவள் மூச்சுப்பட்ட காற்றைப் பக்கத்திலிருந்து சுவாசிக்கத் துடித்துக் கொண்டிருக்க, சீதாதேவி என்னவோ இசட்டைத்தான் பழகத் தேர்ந்தெடுத்தாள். அவள் சொன்னது வெகு விநோதமான காரணம்.

''இசட் எங்க அத்தை பாட்டி சாயல்லே இருக்கான். உசிரையே வச்சிருந்தேன் பாட்டியம்மாகிட்டே...''

இசட்டே விநோதமானவன் தான். "இசட்...ஈ... ஆர்...ஏ... எம் ஜெயராம்'' என்று முழு பெயரை பிரெஞ்சு மற்றும் நியூ

ராலஜி அடிப்படையிலான ஸ்பெல்லிங்கோடு நிறுத்தி நிதானமாக அவன் சொல்லும்போது ஆரம்பிக்கிற விநோதம் அது...

சீதாதேவி மட்டுமில்லை... தெலுங்கு சினிமா பத்திரிகை படிக்கவும், ஒழிந்த நேரத்தில் சமையல் மற்றும் குடும்ப நிர்வாகத்தைக் கவனித்துக் கம்பெனி கொடுக்கவும் என்று அவள் கூடக் கிளம்பி வந்து குடித்தனம் வைத்த பங்காரு பாப்பாவும் இசட்டின் ‘அத்தைக் கிழவி சாயலை' ஊர்ஜிதம் செய்ய, வலுவாக சந்தோஷப்பட இசட் எனக்கு சம்பாகலி, சந்திர கலா என்று விநோதப் பெயருடைய அசட்டுத் தித்திப்பு ஸ்வீட் எல்லாம் வாங்கிக் கொடுத்தான்.

“இசட்டுக்கு நீ என்ன செக்ரட்டரியா?”

எல்லோரும் கேட்கும் கேள்வியையே சீதாதேவியும் கேட்க, உருட்டி விழித்த இசட்டை அலட்சியப்படுத்திவிட்டு, நிஜக் காரணத்தைச் சொன்னேன்...

இசட் என்னை விட ஏழு வயது பெரியவன். நிறுத்தி நிதானமாக ஸ்கூல் முடித்து காலேஜ் சேர்ந்தவன். கிராமத்திலிருந்து என்னை ஹாஸ்டலில் சேர்க்க வந்த அப்பா, காலேஜ் வளாகத்துக்குள் புறங்கையைக் கட்டிக் கொண்டு நடைபோட்ட இசட்டை பிரின்சிபாலுக்கு அடுத்த லெவல் கல்வித் தெய்வமாக நினைத்து விண்ணப்பஞ் செய்தார்...

“பெரிய மனசு பண்ணிப் பாத்துக்கணும்... குடும்பத்துலேயே காலேஜு வாசலை மிதிக்கற முத ஆளு இவன்தான். ஏடாகூடமா ஏதாச்சும் பண்ணினா, உங்க தம்பியா நெனச்சு ரெண்டு தட்டுத் தட்டிட்டு எனக்கு போஸ்ட் கார்ட் மட்டும் போடுங்க போதும்...”

வாட்டசாட்டமான இசட்டுக்கு நான்

## ஜாவி போட்டி - 10 முடிவு

கார்ட்டூன்கள் மாறிய அந்த ஆறு ஜோக்குகள், இவைதான்:

1. என்கிட்ட வர்றவங்களை...
2. மன்னருக்கு சாமரம்...
3. தொப்புள் காட்டி...
4. அப்பா அடிக்கடி...
5. சாகப் போற காலத்துல...
6. இரவில் விபச்சாரின்னு...

குலுக்கலில் தேர்வாகி, ரூ. 5000 பரிசு பெறுபவர்:

எஸ். ராஜாரமணி,
4. சாந்திநகர், 6வது தெரு,
ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

உடனடியாக அடிபணிந்ததாலும், காலே பக்கம் போஸ்ட் ஆபீஸ் இல்லாததாலும், அந் இரண்டுமே நடக்கவில்லை. மற்றபடி நா சாயந்திரங்களில் இசட் இழுத்த இழுப்புக்கு கூடப் போய் வந்து கொண்டு இருக்க வே டிய கட்டாயம்... எங்கே... சீதாதேவி வீட்டு குத்தான்...

“தனியாப் போகக் கூச்சமா இருக்கு... கூ வாடா...”

கூச்சம்... அந்த ஆறடி உடம்புக்குள் அப்ப ஒரு சமாசாரம் இருந்ததும் கூட விநோதம்தா

சீதாதேவி வீட்டில் தினசரி கிடைக்கு ஓசி டிபன், காப்பி என்ற சில்லறை சவுகரிய களைக் கருதி நானும் அட்ஜஸ்ட் செய் கொண்டதாக வைத்துக் கொள்ளலாம்.

இஜட்டு... இக்கட பக்கத்துலே ஊசுட்டே அனி செப்தாரு... சால மஞ்சி வாட்டரு... பெத் பெத்த போட்டு மேலே போவாரு... வருவாரு டூரிஸ்ட்டு ஸ்பாட்டு....”

பங்காரு பாப்பா முந்தாநாள் சாயந்திர ஆவக்காய் ஊறுகாய்க்கு பெசரட் தோ யைத் தொட்டுக் கொண்டு விசாரித்ததோ எச்சில் கையால் படகும் விட்டுக் காட்டினா அப்போது பிடித்த சனி...

“இத்தனை நாளா பாண்டியிலே இருந்திட் ஊசுட்டேரி பார்க்கலியா... பரவாயில்லே.. வ ஞாயிற்றுக்கிழமை போயிடலாம்... ஜம்மு நம்ப கார்லேயே போய்.. பெரிய பட எடுத்து...”

காரில் போக மற்றவர்கள் என்றும் தள் நான் மட்டும் என்று விதித்தது யார் என மனம் புலம்பித் தள்ள, இதோ தம் பிடித் தள்ளிக்கொண்டு நிற்கிறேன். நகர் வழியாகவே இல்லை.

போதாக்குறைக்கு பின்னால் ஹாரன உக்ரமாக அடித்து மிரட்டுகிற ‘மறக்கான லாரி சர்வீஸ்' என்ற அழுக்கு மஞ்சள் ‘றா'ட சன்.

“இன்னாங்கடா... கொயந்தைப் பையன தள்ள ஸொல்லிட்டு உள்ளாற எந்த பேமா ஷ்டீரிங் புட்சுக்கினு கீறான்?”

சோனியான லாரி டிரைவர் ஏற்கென முட்டுக்கு மேலே ஏறி இருந்த லுங்கி இன்னும் ஏற்றிக் கட்ட முயற்சி செய்த காருக்குள் எட்டிப் பார்க்க, ஏர்கண்டி ஜில்லிப்பாக சீதாதேவியின் “எக்ஸ்க்யூஸ்

இன்னொரு இன்ஸ்டண்ட் உபாச உருவான அடுத்தகணத்தில் லுங்கி தழை குரல் உயர்ந்தது. நாலு ஜோடி வலுவான கள் லாரிக்குப் பின்னால் இருந்து குதி காரைத் தள்ளின. இசட் எதை எதை வளைத்து ஒடித்துத் திருகினான். அ நிமிடம் ஒயிலாக வழுக்கிக் கொண்டு கி

பிய கார்...

நன்றி சொன்ன சீதாவின் பார்வையில் இன்னும் ஒரு நிமிடம் இருந்தால், மறக் காணக்காரன் மஞ்சள் பெயிண்டாக உருகி வழிந்திருப்பான்.

"இஜட்டு... உசுட்டேரி எப்ப வருவாரு?"

உத்தேசமான தமிழில் கேட்டபடி பின் சீட்டுக்குக் கீழே பிரம்புக் கூடையில் நிறைத்திருந்த பழமலையில் ஒரு சப்போட் டாவை எடுத்துக் கடித்தாள் பங்காருபாப்பா.

"தோ வந்துடும்..." இசட் சப்போர்ட்டாகச் சொல்ல, நான் தூங்கி விழுந்தேன்.

"ஏரி வந்தாச்சு..."

கொலம்பஸ் போல இசட்டின் உற்சாகக் கூச்சல்.

இறங்கினோம்.

சரசரவென்று நீலம் விரித்து, குளிரக் குளிரக் காற்று நடந்து போகிற ஏரி. கரை நெடுகப் பச்சை மணக்கும் மரமும் செடியும். சாரிசாரியாக ஏதேதோ பறவைகள் தாழப் பறந்து போகிற ஸ்லோமோஷன் நேர்த்தி.

நான் இசட்டின் பைனாகுலரை எடுத்து போக்கஸ் செய்தேன்.

"ஏமி இதி?" என்று கேட்டபடி பங்காரு பாப்பா அதைத் தட்டிப் பறிக்காத குறையாக வாங்கிக் கண்ணில் வைத்துப் பார்த்துப் புளகாங்கிதம் அடைந்து, சீதாவுக்கும் கொடுத் தாள்.

"இதி சூடு சீதம்மா.... அதி சூடு..."

பங்காருபாப்பா கைகாட்டிய திசையெல் லாம் சூடிக் கொடுத்த அந்த சுடர்க்கொடி பைனாகுலரைத் திரும்ப நீட்ட, காக்கிச் சட் டையோடு படகுத் துறைக்காரன் பிரசன்ன மானான்.

"என்ன தொரே... கண்ணாலம் ஆச்சா?"

இசட்டுக்கு ரொம்ப நெருங்கியவனாக இருக்க வேண்டும்.

"வேண்டப்பட்டவங்க நம்சு... ஒரு பெரிய போட் எடுத்து வா..."

நம்சு என்ற ஆள் மகா வருத்தத்தோடு உச்சுக்கொட்டினான். "முன்னாலேயே சொல்லியிருந்தா பிடிச்சு வச்சிருப்பேன் இல்லே... மீன் பிடிக்க தள்ளிட்டுப் போய்ட் டாங்க பசங்க... ரெண்டு சின்ன போட் எடுத்துக்கயேன்..."

வந்த முதல் படகில் தாவியேறி உட்கார்ந் தது பங்காரு பாப்பா.

காக்கிச் சட்டைக்காரன் படகை அவிழ்த் தபடி என் கையில் துடுப்பைத் திணித்தான்.

"எனக்கு இதொண்ணும் தெரியாதே..."

நான் ஏகக் கலவரத்தோடு விழிக்க, தொட்டெடுத்த படகில் சீதாதேவி சகிதம் முன் னால் போய்க் கொண்டிருந்த இசட், பூச்சியாக என்னைப் பார்த்தான். கையில் துடுப்பாயுதம் ஏந்திய கடவுள் தோரணையில், "இதுக்கெல் லாம் உக்காத்தி வச்சு கிளாசா எடுக்க முடியும்? இப்படி இப்படித் தள்ளுடா... தானே நகரும்..." என்று அவன் முழங்க, சந்தர்ப்பம் தெரியாமல் என் சகபயணி சிரித்தாள்.

இப்படியே துடுப்பால் இவள் தலையில்...

என் வேகத்தைத் தண்ணீரில் காட்டினேன். முதல் நாள் கிளாஸ் எடுக்க வந்த புது லெக் சரராக ஐந்து நிமிடம் அலைபாய்ந்து விட்டுப் படகு வழிக்கு வந்தது. அப்புறம் ஆயுசு முழுக்க ஊசுட்டேரியில் படகோட்டி ஜலசா போட்ட லாகவத்தோடு நான் துடுப்புப் போட, லேசாகக் கிளம்பி வரும் உற்சாகம். மனசுக்குள் ஒரு முண்டாசுக்காரன் 'சிந்துநதியின்மிசை நிலவினிலே' பாடுகிற சப்தம்..

"தம்புடு..."

பங்காரு பாப்பா ரகசியம் பேசுகிற குர லோடு முன்னால் நகர்ந்தாள். அரும்பு விட ஆரம்பிக்கும் மீசையைத் தவிர எனக்கும் இவளுக்கும் பொது விஷயம் ஏதும் கிடை யாது...

"எனக்கு முப்பத்மூடு ஏஜ் வரெ நீளுலே கண்டம் அனி ஜோசியர் செப்தாரு... சால கேர்புல்லு சூசி போட்டு பண்ணு அப்பாயி..."

தலையை ஆட்டினேன். கண்டம் எனக்குத்தான்.

"பெத்த ஜோசியரு... தெல்சா... வாளு செப்தாரு... பெள்ளி... அதான் மேரேஜு முப்ச்சு நானு... வீட்காரு... பிளேன்லோ... பாரின்லோ..."

பூண்டு வாடையோடு இத்தனை நெருங்கிப் பேசாமல் எங்கே ஒழிந்தாலும் சரிதான்...

கூப்பிடு தூரத்தில் சிரிப்பு சப்தம். தலையைத் திருப்பிப் பார்க்க, இசட் ஏதோ சொல்லி வழிய, சீதாதேவி முத்துச் சிதறுகிறாள். பிரஸ்தாப ஸ்தலம் முழுக்க ஆயிரம் வாட் பல்பு போட்டது போலப் பிரகாசம்.

பிறந்தால் இசட்டாகப் பிறக்க வேண்டும்... நம் போல எக்ஸ், ஒய் எல்லாம் சரிப்பட்டு வராது.

ஒரு சின்ன அலையில் இசட்டின் படகு வெகு பக்கத்தில் வந்தது.

"என்னடா துடுப்புப் போடறே... படகு



"...ச்சே தலைவர் இப்படி ஏமாத்திடுவாருனு நினைக்கவேயில்லை!"

"எப்படி?"

"கள்ள வோட்டு போட்டதுக்கு பணம் கொடுக்கறேனு சொன்னவர் கள்ள நோட்டை கொடுத்திட்டார்!"

– சக்தி சரவணன்

ஆடி ஆடிப் போறது... நல்லா இப்படி வலிச்சு...''

இசட் இருந்த இடத்திலிருந்தே செயல் முறை விளக்கம் காட்டியபடி பெருந் தன்மையாகச் சிரித்தான்.

அடுத்த வினாடி தடார் என்று பெரிய சப்தத்தோடு, இசட்டின் படகு என் படகு மேல் மோதியது.

துடுப்பு கையிலிருந்து நழுவி விழ, நான் தடுமாறித் தண்ணீருக்குள் விழுந்தேன்.

''இஜட்டு... இஜட்டு....''

கோணல்மாணலாக நெளிகிற படகில் கையை தலைக்கு மேலே உயர்த்தியபடி பங் காரு பாப்பா நாமஜபம் செய்கிற காட்சிதான் நான் கடைசியாகப் பார்த்தது.

கண் விழித்தபோது காக்கிச் சட்டைக் காரன் கிளாசில் டீ கொடுத்தான். அவசரமாக உடுத்திய சுங்குடிப் புடைவைகளோடு சீதா தேவியும், பங்காருபாப்பாவும் ஆளுக்கு ஒரு பக்கமாகத் தலைமாட்டில் உட்கார்ந்து என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''இந்த இரண்டு லேடீசும் வந்துச்சோ... நீ பொளச்சியோ... சொம்மா ஆளுக்கு ஒரு பக் கமாப் பிடிச்சு சுளுவா இளுத்துக்கிட்டு நீந்தி வந்துட்டாங்க...''

காக்கிச் சட்டைக்காரன் சொல்லிக் கொண் டிருக்க, நான் இசட்டைத் தேடினேன். படகுத் துறை முனையில் சொட்டச் சொட்ட விழித்தபடி உட்கார்ந்திருந்தான் அவன்.

''பேரு பெத்த பேரு... தாக நீலு லேது... பைக்கு பண்றாரு... காரு பண்றாரு... போட்டு பண்றாரு... பாஷை எல்லாம் பேஸ்ராரு... நீச்சல் தெல்லேது... தேவுடா...''

இசட்டை எத்தனையாவது தடவை யாகவோ விசித்திரமாகப் பார்த்தபடி பாங்காரு பாப்பா நீட்டி முழக்க, சீதாதேவி முகத்தில் நமுட்டுச் சிரிப்பு மாறவேயில்லை.

மாறிவிட்டது எல்லாமே. பத்து வருஷம் கழித்து, போன மாதம் கல்கத்தா போக ஏர்போர்ட்டில் காத்துக் கொண்டிருந்தபோது சீதாதேவியைப் பார்த்தேன். பெல்லாரி வெங்காய மூட்டைக்குப் புடைவை கட்டி விட்டது போல ஊதியிருந்தாள். ஆப்பிள் கன்னம் பப்பாளியாக புரமோஷன் வாங்கி இருக்க, ஒரு மண்டலம் தொடர்ந்து பானிபூரி சாப்பிட்டது போல வாய் அகல விரிந்து மூடாத உதடுகள்...

ஆயிரம் வாட் ஒளிவிட்ட இடத்தில் அறுபது வாட்ஸ் பல்ப் போல அங்கே மிச்ச மிருந்த சிரிப்புதான் அவளை அடையாளம் காட்டியது.

விசாகப்பட்டினத்தில் இருக்கிறாளாம். வீட்டுக்காரன் விண்டமில் என்ற காற்றாடி சுற்றி மின்சாரம் எடுக்கும் விஞ்ஞானியாம்.

''நீ என்ன பண்ணிட்டிருக்கே?''

சொன்னேன்.

பாண்டிச்சேரி.. ஊசுட்டேரி பற்றி எல்லாம் கேட்டாள். அந்தப் பக்கம் போயே வருஷக் கணக்கில் ஆகிவிட்டது. ஊர் ஊராக இப்படிப் பறந்து கொண்டிருக்க, காதில் விழுந்த தகவல் படி ஊசுட்டேரியில் மண்ணடித்துக் கிடக்கிற தாம்...

''இசட் என்ன ஆனான் தெரியுமா?''

சீதாவைக் கேட்டேன்.

''பிரெஞ்ச் சிட்டிஸன்ஷிப் வாங்கிட்டு பாரீஸ்லே செட்டில் ஆயிட்டான். ஒய்ப்பும் அவனுமா இன்ஸ்ட்டிட்யூட் வச்சு நீச்சல் பயிற்சி, காரோட்ட டிரெயினிங்னு நல்லா சம்பாதிக்கறாங்க...''

பாரீஸில் ஏதோ பெயர் தெரியாத வீதியில் இசட் காரை விளக்குக் கம்பத்தில் இடிக்கிற காட்சி மனத்தில்...

''சொல்லப் போனா இவனையும் சேர்த்து அவதான் கவனிச்சுக்கறா... மூணு நாலு வயசு அவனுக்கு மூத்தவ தான்... ஸோ வாட்? மனசு ஒத்துப் போச்சு... உனக்குத்தான் எல்லாம் தெரிஞ்சிருக்குமே...''

கொஞ்சமும் தீராத குழப்பத்தோடு அவளையே பார்த்தேன்.

''விடாம லவ் பண்ணி என் சித்தி பங் காருபாப்பாவை ஒருவழியாக் கல்யாணம் பண்ணிக்கிட்டான் இசட்...''

சீதாதேவி சிரித்தபடி நிற்க, பக்கத்தில் டையும் கோட்டுமாக...

''மீட் மை ஹஸ்பண்ட ஆனந்த்...''

வழுக்கைத் தலை விஞ்ஞானி கைகுலுக்கி விட்டு நீட்டிய விசிட்டிங் கார்டைப் பார்த் தேன். ஒன்றுக்கு மூன்று ஏயோடு அங்கே பெயராக 'AAANAND'.

இசட் மட்டுமா விநோதம்?



''நம்ம ராமர்பிள்ளை குவெய்த் போனா அங்கே என்ன தயாரிப்பாரு?''

''மூலிகையிலிருந்து தண்ணீர் தயாரிப்பாரா யிருக்கும்!''

– பா.ஜெயக்குமார்

மாதம் ஒருவராகத் தங்கள் வீட்டிற்குப் பிரபல பெண் எழுத்தாளர்களை வரவழைத்து மகளிர் விழிப்புணர்வுக் கூட்டம் நடத்துவாள் ஹேமா. தங்கள் வள்ளி தெய்வானை மகளிர் மன்றத்தில் ஐந்நூறு உறுப்பினர்களைச் சேர்த்து விட்டாள். தலா மாதம் ரூபாய் பத்து வீதம் வசூலித்து பெண்களின கல்வி, திரு மணம், ஆதரவற்ற நிலையில் உள்ள பெண் களுக்கு உதவி என்று பயனுள்ள வகையில் தர்மகாரியங்கள் தொடர்ந்தன.

"இதெல்லாம் நடத்தினா மட்டும் பெண், ஆணுக்கு மேம்பட்டவளா? என்ன இருந்தா லும் ஆண்தான் கம்பீரமானவன்" என்பார் கிருஷ்ணன் வெற்றிலைச் சாற்றைப் 'புளிச்' சென்று துப்பி.

"இந்த மேல் ஷாவனிஸ்டு கிடக்கட்டும். நீ நினைப்பதை நடத்து" என்பான் சம்பத்.

இப்போது ஹேமாவிடம் சிறிது முன்னேற் றம். எந்தப் பத்திரிகையின் எந்தப் போட்டியில் எந்த எழுத்தாளர் வென்றாலும் அந்தப் பத்திரி கைக்கு ஹேமாவின் முதல் பாராட்டுக் கடிதம் செல்லும். "போட்டி நேர்மையாக நடைபெற் றதா? உண்மையில் தகுதியான படைப்புக்குத் தான் பரிசு தரப்பட்டதா? திரைமறைவில் என்ன தில்லுமுல்லு திருகு தாளங்களோ!" என்று ஜெயசுக்கிரன் சபை கூட்டி விவாதிப் பார்.

"நான்கைந்து நாட்களாகவே நான் உங்களை ஒன்று கேட்க நினைக்கிறேன்..." ஓர் இரவு ஹேமா, சம்பத்திடம் ஆரம்பித்தாள்.

"யம்மா, இலக்கிய விஷயம் ஏதும் கேட்டுப் புடாத, அதுல நான் பூஜ்யம்."

"உங்கப்பா சரியாகவே சாப்பிடுவதில்லை. இரவில் நேரம் கழித்து வீடு திரும்புகிறார். சாப்பிட்டதாகப் பேர் பண்ணி விளக்கை அணைத்துப் படுத்து விடுகிறார். பத்திரிகைகள் படிப்பதில்லை. ஏதோ கவலை அவரை வாட்டு கிறது..."

சம்பத் அப்பாவைத் தேடிச் சென்றான். தூங்குவது போலப் பாசாங்கு செய்தவரை உலுக்கி, எழுப்பி உட்கார வைத்தான். பரி சோதித்தான். உடம்பில் ஒன்றும் இல்லை. மனத்தில்தான். "என்னப்பா விஷயம்? சொல்ல மாட்டியா?"

கிருஷ்ணன் மேசை டிராயரிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து நீட்டினார்.

நான்கு நாட்களுக்கு முன்பு ஒரு காலை கிருஷ்ணனுக்கு நல்ல பொழுதாக விடிய வில்லை. ஆபீஸ் சென்றதும் வாசகர் கடிதம் எழுத அமர்ந்தார். ஃபோன் மணி அடித்தது. அப்போது ஆபீசில் வேறு எவரும் வந்திருக்க வில்லை. இவர்தான் ஃபோனை எடுத்தார். வழக்கம் போல வாயில் வெற்றிலைக் குதப்ப லுடன் "யெஷ்?" – மறு முனையில் பேசியவர் தன் பெயரைச் சொன்னார். இவர் காதில் விழவில்லை. மனம் எல்லாம் பாதியில் விட்டு வந்த வாசகர் கடிதத்தில், "யார் பேசறது?"

"நான்தான்யா, நாதான்..."

"நாதான்னா யாருய்யா? டெலிஃபோன் கூட ஒரு டெலிவிஷனுமா வெச்சிருக்கு உன் மூஞ்சி தெரிய? பெயரைச் சொல்லித் தொலை யேன்யா!"

"நான்தான் மந்திரி பேசறேன். பொதுமக்க ளிடம் இவ்வளவு பண்போடு பழகும் தாங்கள் யாரோ?"

கிருஷ்ணனுக்கு வெடவெடவென்று நடுங்க ஆரம்பித்தது. "நான் கி... கி..."

"சரி, உங்க அதிகாரிகிட்ட நான் பேசிக் கறேன்..." மறுமுனையில் ஃபோன் வைக்கப்

கோதுமை ரவை உப்புமா செய்கையில் என்ன தான் அவசரமாகச் செய்தாலும் பதமாக பத்து நிமிடங்கள் தேவை. இல்லையேல் வேகா மல் வயிற்றுக்கும் கெடுதல். ப்ரஷர் பேன் அல்லது சிறிய குக்கரில் ஒன்றுக்கு இரண்டு நீர்விட்டு வேக வைத்து எடுத்து, 2 ஸ்பூன் எண்ணெய் விட்டுத் தாளிக்க அடிக்கடி கிளற வேண்டிய அவ சியமுமின்றி சுலபத்தில் தயார் செய்ய முடிகிறது.

– ர. சாரதா



கறி செய்ய வேண்டுமென்றால், நிறைய எண்ணெய் விட வேண்டுமென்பதில்லை. வாணலியில் தாளித்த பிறகு காய்களைப் போட்டு மூடிவிடுங்கள். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு காரப் பொடியும், உப்பு, மஞ்சள் பொடியும் போட்டுக் கிளறிவிட்டு மீண்டும் மூடிவிட்டு காஸை சிம்மில் வைத்துவிட்டு வேறு வேலை இருந்தால் பாருங்கள். அவ்வப்பொழுது கிளறிவிட மறக்க வேண்டாம். தேவையானால் ஒரே ஒரு முட்டை எண்ணெய் விட்டால் போதும். மேலே முறுமுறுப்பாகவும், உள்ளே மிருதுவாகவும் இருக்கும் இந்தக் கறி!

- பானு மூர்த்தி



பட்டது. அன்று மதியமே கிருஷ்ணன் சஸ்பெண்டு செய்யப்பட்டார்.

"எனக்கு இன்னும் ஒன்பது மாத சர்வீஸ் தான் பாக்கி. ஒன்பது மாதமும் விசாரணை முடியாமல் இருக்கும். குறித்த நாளில் நான் ஓய்வு பெற முடியாது. பென்ஷன் இத்தியாதிகளைப் பெற நான் நாயாய், பேயாய் அலையணும். இத்தனை வருடம் அப்பழுக்கில்லாமல் பணியாற்றியும் கடைசிக் காலத்தில் எனக்கு இப்படி அவப்பெயர்...." கிருஷ்ணனின் குரல் கீச்சிட்டது.

"எல்லாம் நல்லபடி முடியும்பா. பத்து நாளில் நீ பழைய கி.கி.யாய் ராஜநடை போடுவாய் பார்..." போர்வையை இழுத்துப் போர்த்தி விளக்கை அணைத்தான் சம்பத்.

சம்பத்தின் வாக்கு பலித்தது. பத்து நாட்களில் கிருஷ்ணன் மறுபடி வேலையில் சேர்ந்தார் மட்டும் அல்ல, ஓய்வு பெறும் வரை அவருக்கு எந்தத் தொந்தரவும் தரலாகாது என்று இப்போதைய அதிகாரிக்கு மேலிடம் உத்தரவிட்டு விட்டது.

"பின்னே? தினமும் நான் விஷ்ணு சஹஸ்ர நாமம் சொல்வது வீண் போகுமா...?" என்றார் கிருஷ்ணன் பெருமிதத்துடன்.

பழையபடி வாசகர் கடிதம் எழுதுவதும், சிலரைப் போற்றுவதும், பலரைத் தூற்றுவதும், விடுமுறைகளில் வீட்டில் இலக்கிய சபைக் கூட்டுவதும், 'குருட்டுப் பூனை விட்டத்தில் பாய்ந்த கதை' என்று ஹேமாவை விமர்சிப்பதும்...

அந்த நாளும் வந்தது. கிருஷ்ணன் பணியில் இருந்து ஓய்வு பெறும் நாள். பலர் பூமாலை, சொல் மாலை அணிவித்துக் கௌரவித்தனர்.

"ஒரு சூப்பிரண்டு ஓய்வு பெறுவது பற்றி நாம் வருந்தவில்லை. ஓர் இலக்கியச் செல்வரை இழப்பது பற்றித்தான். அத்தனை பத்திரிகைகளையும் படிக்க நமக்கு நேரம் இல்லை. ஆனால் அவற்றைப் படித்து, சாரத்தைத் தொகுத்து அவ்வப்போது சொல்லிக் கொண்டிருந்த சுவையான மனிதரை நாம் இழப்பதானது..."

வீடு திரும்பினார்.

"என்னப்பா, ரிடையர் ஆகிவிட்டாயா நிம்மதியா?" என்றான் சம்பத்.

"ஆமாண்டா, ஆமாம். நீ அந்தப் பிரிவு உபசார விழாவைப் பார்த்திருக்கணும். ஒவ்வொருவனும் என்னைப் புகழ்ந்து பேசி அப்படியே கண்ணால் ஜலம் விட்டான்கள். இந்த வீட்டில் தான் எனக்கு மதிப்பில்லை. நான் ஓர் அற்பப் புழு. எனக்கு இந்த வீட்டில்தான் எதிரி..."

"நிறுத்து, நிறுத்து. உனக்கு ஒரு உண்மையைச் சொல்லி விடுகிறேன். நீ தற்காலிக வேலை நீக்க உத்தரவைக் காண்பித்த இரவை நினைத்துப் பார். அடுத்த காலையில் நானும், ஹேமாவும் கோவை போவதாக உன்னிடம் சொல்லிப் புறப்பட்டோமே? உண்மையில் நாங்கள் சென்றது சென்னையில் அந்த மந்திரியின் வீட்டுக்கு. மந்திரி மகளும், ஹேமாவும் பள்ளித் தோழிகளாம். ஒரு காலத்தில் இதே திருச்சியில் அடுத்த அடுத்த வீட்டுக்காரர்களாம். ஹேமாவிடம் மந்திரி எவ்வளவு அன்பு காட்டினார்! என் மாமா கிருஷ்ணனை நீங்கள் எந்தவித்திலும் சிறுமைப்படுத்தக் கூடாது என்றாள் ஹேமா. அதனால்தான் உனக்கு மறுபடி வேலை கிடைத்தது. இதை எல்லாம் உன்னிடம் சொல்லவே கூடாது என்று என்னைக் கட்டுப்படுத்தினாள் ஹேமா..." என்றான் சம்பத்.

"அதற்காக இனி நீங்கள் என் கதைகளைப் புகழ்ந்து கடிதம் எழுத ஆரம்பித்து விடாதீர்கள். நீங்கள், நீங்களாகவே இருக்க வேண்டும். காரசாரமான விமர்சனங்களையே நான் வரவேற்கிறேன்..." என்றாள் ஹேமா.

இலக்கியவாதி கிடாரம்கொண்டான் கிருஷ்ணமூர்த்தி, ஹேமாவை நிமிர்ந்து பார்க்கக் கூசி நீண்ட நேரம் தலைகுனிந்திருந்தார்.

# பிரீமியர் மில்ஸ்

ப்ளவுஸ் துணிகளில் நெ. 1

நீங்கள் தேர்ந்தெடுக்க...

* ரூபி
* ஃபேர் & லவ்லி
* பிளாட்டினம் சூப்பர்
* லவ்லி லேடி

சேலையும் சோளியும் ...

"புடைவை கட்டும் பெண்களுக்கு ரவிக்கைகள் அமைவது எப்படி பிரச்னையாக இருக்கிறதோ அதேபோலத்தான் உள் பாவாடையும். நிறைய காசு கொடுத்துத்தான் வாங்குவோம். ஆனாலும் சுருங்கிப் போகும். ஆறு பார்ட் வெச்சுத் தைத்தது என்பார்கள். ஆனாலும் சுற்றளவு பத்தாது. தடுக்கும். உட்காரும்போது கஷ்டமாக இருக்கும். குறிப்பா என் குடும்பத்துப் பெண்களில் பலர் நல்ல உயரம். அவர்களுக்கெல்லாம் கடைகளில் உள் பாவாடையே கிடைக்காது.

இதையெல்லாம் பார்த்துப் பார்த்துத்தான் நாமே தைக்க ஆரம்பித்தால் என்ன என மூன்று மெஷின்

# சாதிக்க விரும்புகிறோம்!





களோடு இந்தத் தொழிலை ஆரம்பித்தோம்..." என்கிறார்கள் உறவினர்களான சசிகலா ஜெயப்பிரகாஷும், பத்மஸ்ரீயும். 'ஸ்டிச் இன் நியூ எண்டர்பிரைசஸ்' எனும் பெயருடன் வீட்டிலேயே ஆரம்பித்துச் செய்ய தோழிகளிடையே நல்ல வரவேற்பாம்.

"ஒவ்வொரு துணியும், நூலும் நாங்களேதான் பார்த்துப் பார்த்து வாங்குகிறோம். கடைகளில் கிடைக்கும் உள் பாவாடைகளில் என்னென்ன குறைபாடுகள் எனப் பார்த்து அதையெல்லாம் தவிர்த்தோம். உள்ளே போய் விடாத நாடா, ஓபன் பகுதியில் 'ஜிப்', கீழே அகலமாக நடந்தால் தடுக்காத வகையில் கட்டிங், பாவாடை ஓரங்களில் ஓவர்லாக் எனப் பல புதுமைகளைச் செய்ததால் ஒரு தடவை வாங்கிப் போனவர்கள் தொடர்ந்து வாங்க ஆரம்பித்தார்கள்.

இதை நாங்கள் ஒன்றும் கமர்ஷியலாகச் செய்யவில்லை. குடும்பத் தலைவிகளான எங்களுக்கு இப்படி ஒன்றைச் செய்கிறோம் என்பதே மனத்திருப்தியைக் கொடுக்கிறது. குழந்தைகள் ஸ்கூலுக்குப் போன பிறகு கேபிள் டி.வி. பார்த்துக் கொண்டோ, மற்றவர்களுடன் பேசிக் கொண்டோ பொழுதைக் கழிக்காமல் எதையாவது சாதிக்க விரும்பினோம்!

உங்கள் மங்கையர் மலரிலேயே வருவது போல நிறைய பெண்கள் பெரிய பெரிய கடைகள் எல்லாம் வைத்துச் செய்கிறார்கள். அதோடு ஒப்பிடும் போது எங்களுடையது மிகச் சிறியது. ஆனால் எங்களைப் போன்ற பல பெண்கள் அவரவர் 'ஏரியா'வில் சிறிய அளவில் எத்தனையோ விஷயங்களைச் செய்யலாம் என்பதற்காகத்தான் சொன்னோம்!"

என்கிறார்கள் சைதாப்பேட்டை இளையாழ்வார் கோவில் தெரு ஒன்பதாம் நெம்பர் வீட்டில் அமைதியாக இப்பணியினைச் செய்து கொண்டிருக்கும் சசிகலாவும், பத்மஸ்ரீயும்.

பேட்டி, படம் : **ஜி. சுரேஷ்**

# அவங்க எல்லோரும்

ஆறப் போட்டிருந்த எலுமிச்சை சாதத்தை பரபரவென்று டப்பாவில் வைத்து அடைத்தாள். இன்னும் தலை பின்னிக் கொள்ள வேண்டும், புடவை மாற்ற வேண்டும். அடிக்கொருதரம் கடிகாரத்தை கண்கள் தேடி ஓடிக் கொண்டேயிருக்க... கண்களை சுழற்றினாள் நாலாபக்கமும்.

மீதிப் பாலைக் காய்ச்சி, ஆறவைத்து ப்ரிஜ்ஜில் வைக்கணும். ஸ்ரீராமிற்காக ஜூஸ் ரெடி பண்ணியாக வேண்டும். பாக்கி வேலை பூரா முடிச்சாச்சு. மூளை பரபரவென்று கணக்கெடுத்தது.

"உஷ்! நேத்தைக்கே ஜன்னல் மூட மறந்து போச்சு. பூனை வந்து கழுத்தறுக்கும்!" – புலம்பியபடியே பட்டென்று ஜன்னலை மூடி கொக்கியை மாட்டினாள்.

"வச்சு மோர் கொண்டா!"

கணவனின் குரல். ரெடி பண்ணி வைத்திருந்த டப்பாவோடு மோர் பாத்திரத்தையும் தூக்கிக் கொண்டு ஓடினாள்.

"ம்! பிசைங்க. எப்பப் பாரு பேப்பர், புக்கைல. மணியாயிடுத்து எனக்கு."

"மெள்ள... மெள்ள தலைலயே கொட்டிட்டு போயிடாதே. ஊறுகாய் கொண்டா!"

பேப்பரை விட்டு தலைய்யை நகர்த்தாமலேயே கேட்ட கணேசனைப் பார்க்க ஆத்திரமும், அழுகையுமாக வந்தது வத்சலாவிற்கு.

எதிரில் உட்கார்ந்திருக்கும் ஊறுகாய் கிண்ணம் கண்ணுக்குத் தெரியவில்லை.

"ம்! போடேன் சீக்கிரம். டிராபிக்ல மாட்டிக்கணும் நான். உனக்கென்ன?"

"ஏன்? எனக்கு ஆபீஸுக்குப் போக வேண்டாமா?"

"நீ யாரும்மா! உங்களுக்கெல்லாம் என்ன? அரைமணி லேட்டா போனாக் கூட கவலை கிடையாது. புடைவையைப் பார்த்தா எவனும் வாயைத் திறக்க மாட்டான். எங்களை மாதிரியா. மூணு நிமிஷம் லேட்டாச்சுன்னா மூணு நாள் வரை டோஸ் வாங்கணும்!"

சாப்பிட்டு முடித்துத் தட்டிலேயே கையைக் கழுவி விட்டு கணேசன் எழுந்து தொண்டான்.

தட்டை எடுத்தாள். இவர்களுக்கெல்லாம் வேலைக்குப் போகும் பெண்கள் கிள்ளுக்கீரை. ஜோக் அடிப்பதற்கான ஒரு சப்ஜெக்ட். வீட்டில் இப்படி கிண்டல் பேச்சு. ஆபீஸில் அனைவர் எதிரிலும் மானேஜர்,

"ஏம்மா! இப்படி லேட்டா வந்து எங்க உயிரை வாங்கறீங்க? ம்! முடியலேன்னா குழந்தை, குட்டின்னு வீட்டோட இருந்து தொலைக்கறதுதானே. சீவி, சிங்காரிச்சுகிட்டு கிளம்பிடுவீங்க!"

இப்படி சிடுசிடுக்கும் போது எத்தனை பெண்கள் உள்ளுக்குள் அப்பளமாக நொறுங்குகிறார்களோ?

தட்டை போட்டு விட்டு டேபிளை சுத்தப்படுத்தினாள். தலையை இரண்டு வாரு வாரி 'க்ளிப்'பை மாட்டினாள். சட்டென்று ஞாபகம்



வந்தது. ஓ! பால்...

கிச்சனை நோக்கி ஓடுவதற்குள் அது பொங்கி வழிந்து கொண்டிருக்க படபடப்பு அதிகமானது. 'குப்'பென்று வியர்வை பொங்க கேஸை அணைத்தாள்.

ப்ரஷர் ஏறியிருக்க வேண்டும். எழுந்ததிலிருந்தே லேசாக தலைசுற்றுகிறது. பைப்பை திறந்து முகத்தில் ஜில்லென்று தண்ணீ அடித்துக் கொண்டாள். பெரிய பாத்திரத்தி தண்ணீரைப் பிடித்து அதனுள் பாலை வை தாள். ஆறுவதற்குள் மீதியை முடித்து வி லாம்.

புடைவையை அவசர அவசரமாக சுற்றி கொள்ளும் போது கணேசனின் குர கேட்டது.

"வச்சு! வரேன். சீக்கிரம் கிளம் பதினெட்டு-ஏ போயிடுவான்" அடுத்த நிமிட

ஸ்கூட்டர் கிளம்பும் சப்தம் கேட்டது. போய் விட்டான்.

ஹேண்ட் பாக்கை எடுத்து மாட்டிக் கொண்டே பாலை எடுத்து ப்ரிஜ்ஜில் வைத்து பூட்டினாள்.

"சார்! போஸ்ட்" சப்தம் கேட்டது.

கதவுக்கடியிலிருந்து உள்ளே வந்திருந்த கார்டை எடுத்துக் கொண்டு கதவைப் பூட்டி னாள்.

ஓ! டிபன் பாக்ஸ்! கிச்சன்லேயே கிடக்கு. சத்! தொலைகிறது போவென்று சாவியை பர்ஸில் பத்திரப்படுத்திக் கொண்டாள். ஸ்ரீராம், ஸ்ரீப்ரியா இருவரிடமும் சாவி இருக்கிறது.

நடந்து கொண்டே வந்திருந்த கார்டைப் நோக்கி விறுவிறுவென்று ஓடினாள் வத்சலா.

"இங்க பாருங்க. வைகை வண்டியிலே உங்க அத்தை வராங்களாம். லெட்டர் வந்திருக்கு, இன்னிக்குதான். ஸ்டேஷன் போன் பண்ணி கேட்டேன். அரை மணி நேரம் லேட். போய் அழைச்சுட்டு வந்துடுங்க."

போனில் கத்தினாள் வத்சலா.

கணேசன் மறுமுனையில் 'சத்' கொட்டுவது ஸ்பஷ்டமாகக் காதில் விழுந்தது.

"வத்சலா! இப்படி பண்ணேன். ஒரு ஆஃப் அடிச்சுட்டு போயி நீயே அழைச்சுட்டு நேர வீட்டுக்குப் போயிடு. ஏன்னா, நான் வெளீல கிளம்பறம்மா. நம்ம ஹெட்கிளார்க் மூர்த்தி யோட பொண்ணுக்கு கல்யாணமில்லை? பிரசன்டேஷன் வாங்க கிளம்பறோம். கொஞ்சம் லேட்டாகும் வீட்டுக்கு வர. என்ன? அத்தைகிட்டே சொல்லு. போய் பிக்-அப் பண்ணிடு என்ன? வழி தெரியாது பாவம்..."

போன் மறுமுனையில் வைக்கப்பட தவித்துப் போனாள் வத்சலா. கையிலிருக்கும் வேலையை முடித்துக் கொடுத்து விட்டு லன்ச்-அவருக்கு மேல் கிளம்ப வேண்டும் லீவு சொல்லி விட்டு. காலையில் அவசர அவசரமாய் உட்கார்ந்து சாப்பிட நேரமில்லாமல் கரைத்துக் குடித்து விட்டு வந்த ரசமும், சாதமும் எப்போதோ செரித்துப் போயிருக்க, காலி வயிறு தலைவலியைக் கிளப்பியிருந்தது.

தன்னைத் தாண்டிப் போகும் ப்யூனிடம் ஒரு காப்பிக்கு சொல்லிவிட்டு பைலை புரட்டினாள் வேகமாய்.

அலாரம் அடித்தது! பட்டென்று பழக்கப்பட்ட உணர்வுகள் விழித்துக் கொண்டு பரபரக்க உடம்பு அதற்கு ஈடுகொடுக்க முடியாமல் படுக்கையிலேயே கிடந்தது. தலையெல்லாம் நல்ல பாரம்! கை, கால்கள் அடித்துப்

# புரிஞ்சிட்டாங்க...

உமாகுமார்

படித்தாள். மதுரையிலிருந்து அத்தை எழுதியிருந்ததைப் படிக்க, படிக்க படபடப்பு ஏறியது வத்சலாவிற்கு. அத்தை வருகிறாள் இன்று.

இந்த லெட்டர் ஐந்து நிமிடம் முன்னால் வரக் கூடாதா? எக்மோர் போய் அத்தையை அழைத்துக் கொண்டு வரும் வேலையை கணேசனிடம் ஒப்படைத்திருக்கலாம். வைகை எக்ஸ்பிரஸ் எத்தனை மணிக்கு வருகிறது? தெரிந்து கொள்ள வேண்டும் முதலில். மடமடவென்று பல யோசனைகளையும் மனத்தில் போட்டு குழப்பிக் கொண்டே பஸ் ஸ்டாண்டை

போட்டாற்போல வலியில் துவண்டு போய் கிடக்க... மிகவும் கஷ்டப்பட்டு கண்களைத் திறந்தாள் வத்சலா. ஹரே! அஞ்சே கால் ஆயாச்சு. தலைதூக்கினாள் எழ! விர்ரென்று பம்பரமாய் சுற்றியது. அப்படியே இரண்டு கையாலும் தலையைப் பிடித்துக் கொண்டு சரிந்தாள்.

மிருதுவாய் ஒரு கை நெற்றியை வருட சிரமப்பட்டு இமைகளைப் பிரித்தாள். அத்தை!

"என்னாச்சும்மா? தலையைச் சுத்தறதா?"

"ஆமாத்தே. என்னவோ தெரியலை எழுந்

திருக்கவே முடியலை. கொஞ்சம் என் ஹேண்ட் பேக்ல ப்ரஷர் மாத்திரை இருக்கும். எடுத்துட்டு வாங்களேன். முழுங்கிட்டேன்னா கொஞ்சம் நார்மலுக்கு வந்துடும். ஸ்ரீராம் கராத்தே கிளாஸ்லேர்ந்து வந்துடுவான். பால் வாங்க பூத்துக்குப் போகணும். கூட்டமாயி டும்!"

புலம்பியவளின் வாயில் மாத்திரையைப் போட்டாள் அத்தை. "நாலைஞ்சு நாளா வந்ததுலேர்ந்து நானும் பார்த்துண்டேதான் இருக்கேன். போறும்! நீ வாயை மூடிண்டு பேசாம படுத்துக்கோ. படுக்கையை விட்டு நகரக் கூடாது. உடம்பு நார்மலாகற மட்டும் இந்த பாலு, தேளு எல்லாத்தையும் நான் பார்த்துக்கறேன்."

மென்மையாய் அதட்டிவிட்டு வலுக்கட்டாயமாய் வத்சலாவை படுக்க வைத்து ஃபேனை சுழல விட்டாள். கதவை மூடிவிட்டு ஹாலுக்கு வந்தாள்.

பத்தே நிமிடத்தில் மார்னிங் வாக்கிலிருந்து கணேசன், கராத்தே கிளாஸிலிருந்து ஸ்ரீராம், யோகாவை முடித்துக் கொண்டு ஸ்ரீப்ரியா... மூவரும் ஒருவர் பின் ஒருவராய் உள்ளே நுழைந்தனர்.

"வத்சலா! காப்பி..." – குரல் கொடுத்து விட்டு புத்தம் புது பேப்பரை அலுங்காமல் பிரித்துக் கொண்டு சோபாவில் சரிந்தான் கணேசன்.

"அம்மா! பாலை என் ரூமுக்கே எடுத்துட்டு வந்துடும்மா. சிக்ஸ் தேர்ட்டிக்கெல்லாம் பாபு வந்துடுவான்."

அவனும் தன் ரூமிற்குள் நுழைந்து கொண்டான். அத்தை மௌனமாய் உட்கார்ந்து வேடிக்கையாய் பார்த்துக் கொண்டிருக்க, யோகாவிலிருந்து வந்த பெண் "குட்மார்னிங்பா!" என்று சொல்லியபடியே நேரே போய் விட்டாள்.

அவளுக்கு இப்போது ஒரு தேவையும் இல்லை. ஏழரை மணிக்குப் பிறகு இயற்கை உணவு தயாராக இருக்க வேண்டும் டேபிளில். அதுதான் டிபனாம். தின்று விட்டு எட்டு மணிக்கெல்லாம் காலேஜ் கிளம்பி விடுவாள்.

வீடே அமைதியாய் இருந்தது.

வேண்டுமென்றே மௌனமாய் உட்கார்ந்திருந்தாள் அத்தை. பொறுமையிழந்தவனாய் கணேசன் கிச்சன் பக்கம் திரும்பிப் பார்த்தான்.

"அத்தை! என்ன பண்ணிட்டிருக்கா இன்னும்? காப்பியைக் குடிச்சுட்டு எனக்குக் குளிக்கப் போகணும். நீங்க காப்பி சாப்பிட்டாச்சா?"

கேட்டவனுக்கு உதட்டைப் பிதுக்கினாள்.

"பாலே இல்லையே... எங்கேயிருந்து காப்பி வரும்? போய் பால் பாக்கெட்டை வாங்கிண்டு வந்தா கிடைக்கும்!"

தூக்கி வாரிப் போட்டது கணேசனுக்கு.

"என்ன? இன்னும் பால் கூட வாங்கலியா. என்னாச்சு இன்னைக்கு! வத்-சல-ா-ஆ!"

"உஷ்! கத்தாதே. தூங்கட்டும் அவ. எழுந்து போய் பால் வாங்கறதுக்கு முன்னால ஒரு நல்ல டாக்டரைக் கூட்டிட்டு வா. அவளுக்கு உடம்பு சரியில்லை!"

அத்தையின் குரல் கண்டிப்பாய் வர கணேசன் பரபரத்துப் போனான்.

"என்னாச்சு? திடீர்னு..." பதறியபடியே, "ஸ்ரீராம்! கம்ஹியர்" என்று பிள்ளைக்குக் குரல் கொடுத்தான்.

அடுத்த அரைமணி டாக்டரும், இன்ஜெக்ஷனும் மாத்திரையுமாக பரபரப்போடு கழிந்தது.

"ம்! ஆளுக்கொரு மூலையா எதுக்கு நிக்கறீங்க? நான் இருக்கேன், பார்த்துக்கறேன். நீங்கள்லாம் கிளம்புங்கோ. அவாவாளுக்கு வேணுங்கறதை வெளீல சாப்பிட்டுக்கங்கோ. வேற வழி?" – அத்தை நிதானமாய் சொல்லி விட்டு வத்சலாவின் அருகில் போய் உட்கார்ந்தாள்.

சட்டென்று நினைவு வந்தவளாக திரும்பி ஹாலுக்குப் போனாள்.

"அப்பா... கணேசா எங்க உன் குழந்தேள்? – மூணு பேரும் இருக்கேளா. சொல்ல மறந்து போச்சு. நீங்கள்லாம் உங்களுக்கு வேணுங்கற

திடீர் விருந்தாளிகள் வந்த பொழுது, டிபன் தயாரிக்க, ரவை, கோதுமை மாவு, மைதா எல்லாம் காலி. ஆனால், அரிசி, ஜவ்வரிசி கலந்த வடாம் மாவு இருந்தது. இந்த மாவுடன் சிறிது மைதா, உப்புத் தூள், புளித்த மோர், மிளகுத்தூள், சீரகத் தூள் சேர்த்து, முதல்தரமான கரகர தோசை வார்த்து, நிலைமையைச் சமாளித்து பாராட்டும் பெற்றேன்.

– காந்தாமணி





**வீட்டு வரி, குடிநீர் வரி, மின்சாரக் கட்டணம், பால் கார்டு வாங்குதல் இவை போன்றவற்றிற்காக நாம் கிளம்பும்போதே சரியான சில்லறை எடுத்துச் செல்வதால் பல சங்கடங்களைத் தவிர்க்கலாம். வசூலிப்பவர் பணியும் இதனால் எளிதாகிறது. இந்த வகையான கட்டணங்கள் எவ்வளவு என்பது நமக்கு முன்கூட்டியே தெரிவித்து விடுவதாலும், நமக்கு சில்லறை சேர்க்கப் போதிய அவகாசம் இருக்கிறது.**

**– லெ. நா. சிவகுமார்.**

சாமான் அதாம்ப்பா கர்சிப்பு, சீப்பு, மூஞ்சில உன் பொண் தடவிகற க்ரீம் டப்பா, ஸ்கூட்டர் சாவி, உங்க சாக்ஸ், ராத்திரி படிச்சுட்டு வச்ச புக்கு இதெல்லாம் பாவம் கொஞ்சம் தேடி எடுத்துக்கங்கோ. உங்கம்மா இல்ல பாரு. அதான்!" - சொடுக்கி விட்டுப் போனாள்.

இரவு மணி ஏழு!

டீ.வி.யில் கவியரங்கம். வாவ்! என்று கணேசனும், "என்ன போடு போடறாப்பா!" என்று ப்ரியாவும் கைதட்டிக் கொண்டிருக்க, படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை கீழே வைத்து விட்டு கண்ணாடியைக் கழட்டினாள் அத்தை காத்திருந்தவள் போல.

"உங்கம்மாவும் ஒரு காலத்துல நிறைய கவிதை எழுதுவா தெரியுமா?"

அத்தை கேட்க டீவியை விட்டு விட்டு அத்தையின் அருகே வந்தாள் ப்ரியா.

"அம்மாவா? ரியலி.... பெண்டாஸ்டிக். நம்பவே முடியலியே! ராம் கேட்டியா விஷயத்த..."

"ஆமா. நானே நிறைய படிச்சிருக்கேன் ஏன் பத்து, பதினைஞ்சு பிரசுரம் கூட ஆச்சு. ஏண்டா கணேசா?"

"ஹா! முன்னேல்லாம் எழுதிண்டிருந்தா."

ப்ரியா கண்ணை அகல விரித்தாள்.

"ஹரே! எங்களுக்குத் தெரியலை இன்னி வரைக்கும்."

"இப்பல்லாம் ஏன் எழுதறதில்லைன்னு கேட்டியா நீ?" - அத்தையின் நேரடிக் கேள்விக்கு பதில் சொல்ல முடியாமல் கணேசன் தடுமாறி நிற்க...

"நான் கேட்டேன். கவிதையைப் பத்தி பேச்சை எடுத்த உடனேயே அவ கண்ணு ரெண்டும் கலங்கினதையும் பார்த்தேன். ஒரே வரில பதில் சொன்னா...

'விழுந்தடிச்சுண்டு ஓடி ஓடி எல்லாமே சிதறிப் போச்சுன்னா' அதுக்கு மேல அந்தப் பொண்ணை ஒண்ணும கேட்கலை நான். ஆனா வந்ததுலேர்ந்து பார்த்துக்கிட்டிருக்கேன்."

"ம்! என்ன பண்றது அத்தை. போறும் சம்பாதிச்சது வேலையை விட்டுடுன்னாலும் மாட்டேங்கறா..." அலுத்துக் கொண்ட கணேசனை ஆச்சரியமாகப் பார்த்தாள் அத்தை.

"அவ ஏம்ப்பா வேலைய விடணும்! பதினேழு, பதினெட்டு வருஷ சர்வீஸ். சர்வசாதாரணமா சட்டைல ஒட்டிண்டிருக்கற தூசிய உதறிட்டு போறாப்புல சொல்றியே. நீ இப்ப உன் வேலையை விட்டுட்டு வருவியா?"

அத்தை எதிர் கேள்வி போட தடுமாறினான்.

"பிரச்சனைன்னா அதுக்கு முடிவு பொண் தன் கேரியர், ஆசை, பிரமோஷன் இப்படி எதையும் நினைச்சு பார்க்காம வேலைக்கு கால் கடுதாசு எழுதிக் கொடுத்துட்டு வீட்டுக்கு வந்துடணும், அப்படித்தானே? - இதுதான் ஒரே வழியா? வேற இல்லே...?"

அப்பா, பிள்ளை, பெண் மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்

"சரி... நான் கேட்கறதுக்கு பதில் சொல்லுங்கோ மூணு பேரும். கேஸ் நம்பர் என்ன? நம்ம வீட்டுதுதான், சொல்லுங்கோ? இந்த மாச எலெக்ட்ரிக் பில் எவ்வளவு வந்தது? யாருக்காவது தெரியுமா?" - அத்தை கேட்க மூவரும் உதட்டைப் பிதுக்கினர்.

"டெலிபோனுக்கு பில் கட்ட லாஸ்ட் டேட் எப்ப வந்திருக்கு? ம்! கிரைண்டர் ரிப்பேர் ஆகி கடைல கிடக்கு இருபது நாளா. எந்தக் கடைல தெரியுமா உங்களுக்கு? உங்கம்மா பத்து நாளா பிரஷர் ஏறிப் போயி டாக்டர் கிட்ட நாலு தடவை போயிட்டு வந்திருக்கா. யார்கிட்ட போயிண்டிருக்கா? அதுவாவது தெரிஞ்சிருக்கணுமே! ஏம்பா! கணேசா உனக்குக் கூடவா தெரியலை?"

"அது வந்து அத்தை..." இழுத்தவனை தடுத்தாள்.

"போறும்ப்பா. எந்த சால்ஜாப்பும் எனக்கும் வேண்டாம். இத்தனையும் அவ ஒருத்தியே பண்ணிண்டிருக்கா. இதுக்கு மேல மளிகை சாமான் வாங்கறதுலேர்ந்து, காய்கறி வாங்கிட்டு வரதுலேர்ந்து கேஸ்ட்டை ரிஸீவ் பண்ண எக்மோர் வர மட்டும் பூரா நாளும் தெரியாமத்தான் கேட்கறேன ஒரு பொண்ணு கிட்ட டேலண்ட் இருக்கு. இத்தனையும் சமாளிக்கறாங்கறதுககாக, ஓண்டியாவே ஓடவிட்டு வேடிக்கை பார்க்கணுமா? ஒருத்தருக்கு மூணு பேர் இருக்கற வீட்ல அவ ஒருத்தியே மண்டைல அத்தனை டென்ஷனை வச்சுண்டு குழம்பறா.

இது போறாதுன்னு பதினெட்டு வயசு புள்ளைக்குக் கைல கொண்டு போய் ஜூஸ் நீட்டணும். பதினேழு வயசு பொண்ணுக்கு டீவி பார்க்கற இடத்துக்குக் கொண்டு போய் கொரிக்கறதுக்கு நீட்டணும் தட்டுல. ம்! உன் வயசுல எனக்குக் கல்யாணமாகி ஒரு குழந்தை ஆயிடுத்து தெரியுமா? ஆனா உனக்கு பருப்பு இருக்கற இடம் தெரியாது வீட்ல."

ப்ரியா பதில் சொல்ல முடியாமல் தலை குனிந்து கொண்டாள். "தலைகுனிஞ்சு பிரயோஜனமில்லம்மா. நிமிர்ந்து கிச்சனுக்கு போ."

"நா...னா" - ப்ரியா தடுமாறினாள்.

"பின்னே... பரதநாட்டியம் கத்துண்டா போதுமா? இன்னிலேர்ந்து ராத்திரி சமைக்கற வேலை உன்னது. அதோட காலை டிபன். எத்தனை மணிக்குக் காலேஜ் போகணும்?"

"எட்டு மணிக்கு அத்தை..."

"தாராளம்! கார்த்தால டிபன், இந்த ஜூஸு, பூஸு விவகாரம் எல்லாம் உன் பொறுப்பு!"

ப்ரியா தலையாட்டினாள்.

"ஸ்ரீராமா! தினமும் கராத்தே கிளாசுக்குப் போற. அங்க போற இங்க போற. அதோட டெலிபோன் பில், எலெக்ட்ரிக் பில், அது இதுன்னு முக்கியமா கேஸ் சிலிண்டர் புக் பண்ணி வாங்கிட்டு வரது எல்லாம் உன் வேலை இன்னைலேர்ந்து. போக வர செய்துடலாம் நீ. படிப்பும் கெட்டுப் போகாதுப்பா. முடியுமா?" அத்தை கேட்க ஸ்ரீராம் ஓகே! என்று தோளைக் குலுக்கினான் பட்டென்று. மிஞ்சியிருப்பது தான் மட்டும்தான் என்று கணேசன் அத்தையைப் பார்க்க, அத்தையும் அவன் பக்கம் திரும்பினாள்.

"என்ன முழிக்கறே! நம்மளை விட்டுடுவான்னா... தினமும் காலைல வாக் போயிட்டு வரும் போது பால் பாக்கெட்டோட வரணும். அதோட காய்கறி வாங்கிட்டு வரது உன் டியூட்டி. மளிகை சாமான் பார்த்து வாங்கறது. வீட்டுக்கு, ஆபீஸுக்கு ப்ரசன்டேஷன் வாங்கறாப்புலதான். மாசம் ஒரு தடவை நீதான் பண்ணணும் பொறுப்பா. புரிஞ்சுதா? தலையாட்டினா போறாது."

மூவரும் அத்தையை ஆமோதித்துத் தலையாட்டினார்.

**லே**சாக புரண்டு படுத்தாள் வத்சலா.

"வத்சலா! எழுந்துரு. கார்த்தாலேர்ந்து வெறும் வயிறு. எழுந்து கொஞ்சம் சாப்பிட்டுட்டு படுத்துக்கோ. வா!"

"பாவம் அத்தை. உங்களை உட்கார வச்சு செய்யறேனோ இல்லையோ வேலை வாங்கிட்டேன். இந்த வயசுல எனக்கு சமைச்சு..."

கலங்கிய வத்சலாவைப் பார்த்துச் சிரித்தாள்.

"கவலைப்படாதே. நான் சமைக்கலை. நாள் முழுக்க வேணுமனே ஒண்ணும் பண்ணலை. எல்லாம் உன் பொண்ணு பண்ணியிருக்கா சாப்பிடு!"

வத்சலாவிற்கு தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

"என் பெண்ணா? ப்ரியாவா? ப்ரியாவா சமைச்சா!"

"ஆமா! ரசத்துல துளி உப்பு கூட ஆனா லும் கமகமக்கறது. வெண்டைக்காயை கறுகடிச்சிட்டா. போகப் போக சரியாயிடும் அதுவும்!"

ஆசைபொங்க பெண்ணை ஏறிட்டாள் வத்சலா.

"யெஸ்ம்மா! இவ்வளவு டேலண்ட்டா இத்தனை வருஷமா தனியா நிர்வாகம் பண்ணிட்டே. இப்ப அதையெல்லாம் எங்களுக்கும் கத்துக் கொடுங்க. ஸ்ரீராம், நான், அப்பா எல்லாருமா சேர்ந்து உனக்கு நிறைய ஹெல்ப் பண்ணப் போறோம். எல்லா வீட்டு வேலையையும் செய்யப் போறோம். நீ... மனசுல டென்ஷன் இல்லாம திரும்ப கவிதை எழுத ஆரம்பிக்கணும் என்ன! உடம்பைப் பார்த்துக்கணும்!"

கழுத்தை வளைத்துக் கட்டிக் கொண்ட ப்ரியா பேசிக் கொண்டே போக வத்சலா நன்றியோடு ஜன்னலருகில் நிற்கும் அத்தையைப் பார்த்தாள்.

"வத்சலா, அவங்கெல்லாம் புரிஞ்சுக்கிட்டாங்க. நீயும் அவங்களோட பொறுப்புணர்வைப் புரிஞ்சுக்கணும். உன்னைப் போல பெண்கள் முதல்லேந்தே கணவனை, குழந்தைகளை நயமா சொல்லிச் சொல்லி வீட்டு பொறுப்பை ஏத்துக்க வைக்கணும். அப்புறம் தும்பை விட்டு வாலைப் பிடிச்ச கதையா அவஸ்தைப்படறீங்க..."

"உண்மைதான் அத்தை. அன்பான அழகான குடும்பம்கறதை நாமதான் அமைச்சுக்கணும்..." ஆமோதித்தாள் வத்சலா.

வெயில் காலம். ஸ்குவாஷ், ஸிரப் செய்து ப்ரிட்ஜில் வைத்து பருகுவோம். அப்பொழுது நீர் கலக்கும் போது சிட்டிகை உப்பையும் சேர்த்து அந்தக் குளிர்பானத்தை சுவையுங்கள். ருசியோ! ருசி!

– லதா வெங்கடேஷ்



"என்ன பெரிசா வாங்கியாந்துட்டார் உங் அப்பா... நாலணா பூ வாங்கியாந்ததுக்கே இந்த குதி குதிக்கிறீங்க! இன்னும் தங்கம்கிங்கம் வாங்கியாந்துட்டாரோ, உங்களைக் கண்டுபிடிக்கவே முடியாது..."

பாண்டியனுக்குக் கலக்கமாக இருந்தது. என்ன இது... மீண்டும் இப்படி ஆரம்பிக்கிறாள்! கவனமாக இருக்க வேண்டும். பொருளாதாரம் பற்றிய எந்த விஷயத்தை ஆரம்பித்தாலும் ஈசுவரிக்குப் பொசுபொசுவென்று

வந்துவிடுமே! பொலுபொலுவென்று உலுப்பி விடுவாளே என்ன செய்ய?

அவளுக்கு இந்த கைக்கும் வாய்க்கும் பிழைப்பு பிடிக்கவேயில்லை. அதுவும் சக்திக்கு மீறி அயனாவரத்தில் ஒரு பிளாட் வாங்கியதிலிருந்து கடனும் வட்டியும் கழுத்தை இறுக்க சகிப்புத்தன்மை சுத்தமாய் வரண்டுவிட்டிருந்தது.

பாண்டியனுக்கு மாதக் கடைசிகளில் கொடுக்கப்படும் மரியாதை சந்தேகத்துக்கு இடமாகி விடும். ஜாடை பேச்சு, குத்தல், எரிச்சல் எல்லாம் எக்காளமிடும். அவனுடைய பிராக்டிகல் பேச்சுக்கள் நகைப்பிற்கு இடமாகி அவமானத்தில் குன்றி விடுவான்.

சே! பணம்தான் வாழ்க்கையா? இல்லாவிட்டால் மனைவி கூடவா மதிக்க மாட்டாள்! ஈசுவரியின் சகோதரிகள் நல்ல இடங்களில் வாழ்க்கைப் பட்டு விடுமுறைகளில் சந்தித்து வயிற்றெரிச்சல் கொட்டிக் கொள்வார்கள்.

ஆகவே, வீட்டில் பாண்டியன் பேச்சுக்கள் பொது விஷயங்கள் பற்றி மட்டும் இருக்கும். எத்தனை நாட்கள் இப்படியே ஜாக்கிரதையாக ஓட்ட முடியும்? இன்று மீண்டும் துவங்கிவிட்டதே! என்ன காரணமாக இருக்கும்?

"ஏழாம் நம்பர் வீட்டுக்காரர் துபாயிலிருந்து வந்திட்டாராம். ஆறு பவுன்ல கழுந்தா ஒரு சங்கிலி விஜயாவுக்கு வாங்கியாந்திருக்காராம்."

மௌனமாய் லுங்கிக்கு மாறி, கைகால் கழுவினான். தண்ணீர் வெதுவெதுப்பாய் முகத்தில் பட்டதும் எரிச்சலூட்டியது.

"மலேயா சேலை மூணாம்..."

முகத்தைத் துடைத்தபடி கேட்டான், "தபால்

சோம. வள்ளியப்பன்



ஏதாவது வந்ததா?" முகத்தை முடிந்தவரை இயல்பாய் வைத்துக் கொண்டான்.

கவனமாகப் பேச்சை மாற்றி, பிரச்னையில்லாமல் வெளிவர வேண்டுமே! வேறு வழி? நாலு தங்க வளையல்கள், மாற்றுத் தாலி சங்கிலி, ஒரு ஜோடி தங்கத்தோடு எல்லாம் பாழாய்ப் போன பிளாட் வாங்க விற்றிருக்கிறானே?

தங்கம் விலையேறுதல் இறங்குதல் செய்தியாகக் கூட அவன் வீட்டில் பேச இயலாது. பொசுக்கி விடுவாள் பேச்சாலேயே.

"பேச்சை ஏன் மாத்துறீங்க? என்னமோ தினம் நாலு தபாலும், அஞ்சு மணியார்டரும் வர்ற மாதிரி... நாமதான் வாங்க முடியாது, யாரும் வாங்கி வர்றத காதுகுடுத்துக் கேட்கக் கூடவா முடியாது?"

கர்ப்பி தம்ளர் 'லொட்'டென்று மேசைமேல் வைக்கப்பட்டது. 'இப்படி இதைக் குடிக்கவும்தான் வேண்டுமா?' குடிக்கத்தான் வேண்டும். மறுத்தால் இதற்குப் பதில் அவள் இரவு லங்கணம் இருப்பாள். பேச்சு வளரும். ஆதியோடந்தமாய் அலசப்படும். ஏன் வம்பு?

"துபாயில விலை குறைச்சலாயிருக்கும்..." சாதாரணமாய்த்தான் சொன்னான்.

"ஒகோ... இங்க விலை கூடன்னுதான் ஐயா வாங்காம விக்குறீங்களாக்கும்?"

குழந்தைகள் நிலைமையைப் புரிந்து கொண்டு உள் அறைக்குச் சென்றார்கள்.

"அனாவசியமா எதுக்கு இந்தப் பேச்செல்லாம்... அவர் வாங்கியாந்ததுக்கு நாம என்ன பண்ணணுங்கறே...?"

குரல் உயர்ந்தது. பாவம் அவனும் எவ்வளவுதான் பொறுத்துக் கொள்ள முடியும்?

இரவு இருவரும் பட்டினி. சாப்பிடக் கெஞ்சிய குழந்தைகளுக்கும் அடி. அவையும் சரியாகச் சாப்பிடாமல் படுத்தன.

பாண்டியனுக்கு உறக்கம் வரவில்லை. முதுகைக் காட்டியபடி படுத்திருந்த ஈசுவரியும் தூங்கவில்லை என்று அவனுக்குத் தெரியும்.

அவனுக்குப் பரவாயில்லை. அவள் உடலுழைப்பு அதிகம். குழந்தைகள் முதல் அவர்கள் துணிவரை துவைத்து, வீட்டு வேலைகள் முழுவதும் செய்து களைத்திருப்பாள். ஏற்கெனவே அயர்ன் சத்து பற்றாக்குறை வேறு.

அவளையே பார்த்தான், எழுந்து அமர்ந்தான். அவள் காதுகளிலும் கைகளிலும் கவரிங் விஷயங்கள். நல்ல சேலைகளும் குறைவு. பாவம், படித்தவள்; நல்ல இடத்தில் பிறந்தவள்... போட்டுக் கொண்டும் வந்தவள்.

நாலு பேரோடு புழங்குகையில் தோணாதா என்ன? அவள் மீது இரக்கம் ஏற்பட்டது. பேச்சுதான் அப்படியே தவிர, அவன் மீதும் குழந்தைகள் மீதும் அன்பை உழைப்பால் பொழிந்திடுவாள். பாவம், சாப்பிடாமலேயே படுத்துவிட்டாளே!

**ம**றுநாள் காலை அவன் லீவு போட்டது ஈசுவரிக்குத் தெரியாது. கிளம்பி சாந்தாராம் ஜுவல்லரிக்குப் போனான். அதன் முதலாளி தெரிந்தவர்தான். இன்சூரன்ஸ் செக் விவரம் சொன்னான். ஒப்புக் கொண்டார். ஒரு பவுனுக்குத் தோடு வாங்கினான். 'இது ஆரம்பமாக இருக்கட்டும்... இனி எப்படியாவது...' மனதுக்குள் தீர்மானங்கள்.

மதியம் அவனை எதிர்பார்க்க மாட்டாள். ஒரு பவுன்தானே என்று அலட்சியப்படுத்துவாளோ! என்ன இருந்தாலும் தங்கம் அல்லவா? அசல் தங்கம் நான்காண்டுகளுக்குப் பிறகு... அவனுக்கே கூடச் சந்தோஷமாக இருந்தது.

**வீ**ட்டினுள் பேச்சுக் குரல். அவள் அப்பா குரல். வீட்டினுள் நுழைந்தான்.

"என்ன மாப்ளே... எனக்கு பென்ஷன் அரியர்ஸ் வந்திருக்கு... மூணு பெண்களுக்குமா ஆளுக்கு இருபதாயிரம் பிரிச்சிட்டேன். ஈசுவரிக்கு இருபதாயிரம்."

ஈசுவரி ஹாலுக்கு வந்தாள்.

"நீங்க இன்னும் கிளம்பலியா? அதெல்லாம் அவரைக் கேக்க வேணாம்பா... நீங்களே போய் வாங்கியாந்திடுங்க..."

'என்ன வாங்கப் போகிறார்கள்?' பாக்கெட்டுக்குள் கையை விட்டபடி யோசித்தான். 'வேறு என்ன? பெரிய நகையாய்த்தானிருக்கும்... பரவாயில்லை... வாங்கிக் கொள்ளட்டும்! ஆனால்! பாக்கெட்டுக்குள்ளிருந்த விரல்களில் தட்டுப்பட்டது தோடு டப்பா.

'அவர்கள் வாங்கப் போகும் நகைக்குமுன்... இந்த ஒரு பவுன் தோடு பரிகசிக்கப்பட்டு விடுமோ!'

கலக்கமும் குழப்பமும் மேலிட மாமனாரைப் பார்த்தான்.

"மாப்ளே... அவ உங்களுக்கு ஒரு நல்ல ஸ்கூட்டரா வாங்கச் சொல்லியிருக்கா... எந்தக் கடைக்குப் போகலாம்?"

***விருந்தினருக்கு பப்பாளியை சிப்ஸ் துருவலில் துருவி பஜ்ஜி மாவில் தோய்த்து கொடுத்தேன். மிக நன்றாக இருப்பதாய்ச் சொன்னார்கள்!***

***- கி. மஞ்சுளா***



# ‘டெலிஷாப்பிங்கில் வாங்கிய அதிசய விமானம்!

ஒரு தொலைக்காட்சி, ஒரு தொலைபேசி-இவை போதும் வீட்டிலிருந்தபடியே ஷாப்பிங் செய்ய.

மேல்நாடுகளில் பல வருடங்களாக வேர்விட்டிருக்கும் ‘டெலி-ஷாப்பிங்’ உத்தி இந்தியாவில் கொஞ்ச காலமாக நடைமுறைக்கு வந்திருக்கிறது.

சின்னத் திரையில் வெவ்வேறு பொருள்கள்- நகைகளிலிருந்து புடவைகள் வரை: வீட்டுச் சாமான்களிலிருந்து அலங்காரப் பொருட்கள் வரை- ஒவ்வொன்றாக ஊர்வலம் வருகின்றது. ஒவ்வொரு பொருளின் அருமை பெருமைகளும் (அக்கால சுயம்வரத்தில் தோழி ராஜகுமாரிக்கு ஒவ்வொரு மன்னனின் சிறப்பையும் எடுத்துக் கூறுவது போல) விளக்கப்படுகின்றன. நீங்கள் செய்ய வேண்டியது இவ்வளவே. உங்களுக்குப் பிடித்த பொருளுக்கான சங்கேத எண்ணையும், உங்கள் பெயர், முகவரியையும் நிகழ்ச்சியில் குறிப்பிடப்படும் தொலைபேசி எண்ணைத் தொடர்பு கொண்டு தெரிவித்தால் போதும். தொலைபேசிக்கு பதிலாக கடிதம் மூலமாகவும் தொடர்பு கொள்ளலாம். உங்கள் வீடு தேடி வந்து அந்தப் பொருளை அன்புடன் உங்களுக்கு அளித்து விடுவார்கள்- அதற்கான தொகையை அன்புடன் வாங்கிக் கொண்ட பிறகுதான்!

“தயாரிப்பாளர்களிடம் நாங்கள் நேரடியாக ஒப்பந்தம் போட்டுக் கொண்டிருக்கிறோம். இதனால் அவர்கள் உருவாக்கும் பொருள்கள் எங்களது டெலி-ஷாப்பிங் மூலமாக மட்டுமே விற்பனை செய்யப்படுகின்றன. இந்த முறையில் விற்கப்படும் பொருள்களை நீங்கள் கடைகளில் சகஜமாகக் காண முடியாது” என்றார் டெலி-ஷாப்பிங் விற்பனையாளர் ஒருவர்.



அதென்னவோ உண்மைதான். “இதுவரை கடைகளில் கண்டிராத பல பொருள்களை டெலிஷாப்பிங் நிகழ்ச்சி அறிமுகப்படுத்தி வைக்கிறது” என்று நாம் சந்தித்த கணிசமான பெண்மணிகள் கூறினர்.

இதோ சில உதாரணங்கள். மிகச் சிறிய சைஸ் வாக்குவம் கிளீனர். மின்சார ப்ளேட் - இதன் மீது ஒரு பொருளை சுட வைத்தால் அந்தப் பாத்திரத்தின் அடிப்பகுதி மட்டுமே சுடும். இடுக்கி, துணி போன்ற எதன் உதவியுமே இல்லாமல் (உள்ளே உணவுப் பொருள் கொதித்துக் கொண்டிருந்தாலும்) அந்தப் பாத்திரத்தை கைகளாலேயே இறக்கி

வைச்சுக்கலாம். அலார வசதி கொண்ட கடிகாரம் - காலையில் சுப்ரபாத இசையோடு நம்மை எழுப்புகிறது. 'ரோடி செஃப்' என்ற கருவியில் சப்பாத்தி மாவை உருட்டி வைத்து விட்டால் அதுவே அதை வட்டமாக இட்டு, சப்பாத்தியாகச் சுட்டே வெளியில் தள்ளுகிறது. சின்னத் திரையில் இந்தச் சப்பாத்திகள் 'பம்'மென்று உப்பி மேலெழும்பும் விதத்தைப் பார்த்து பிரமித்த தாய்க்குலத்தின் எண்ணிக்கை ஏராளம்.

தாங்கள் விற்கும் பொருளை விதவிதமான கோணங்களில் காட்டுவதிலும், அவற்றின் செயல்முறையை கண்கவரும் விதத்தில் டெமான்ஸ்ட்ரேட் செய்வதிலும் வித்தகர்களாக இருக்கிறார்கள் இந்த விற்பனையாளர்கள்.

பொருட்காட்சிகளில் 'சப்பாத்தி ப்ரஸ்ஸர்' என்ற ஒன்றை வாங்கிய அனுபவம் பலருக்கும் இருந்திருக்கலாம். விற்பனையாளர் அந்தக் கருவி மூலம் பெரிய வட்டமான சப்பாத்திகளை இட்டுத் தள்ளும் வேகத்தைப் பார்த்து மயங்கி இதை வாங்கிய பலரும் வீட்டில் அந்தக் கருவியில் எவ்வளவோ அழுத்தம் கொடுத்தும் ஏதோ சின்ன அப்பம் சைஸுக்கு மட்டுமே சப்பாத்தியை அது இடும் அவலம் கண்டு குமுறியபடி பழைய சப்பாத்திக் கல்லையும், குழவியையுமே மீண்டும் தஞ்சமடைந்த கதைகள் ஏராளம்.

டெலிஷாப்பிங் மூலம் சப்பாத்தியைச் சுட்டே தரும் கருவியை வாங்கிய இருவரின் அனுபவங்களைக் கேட்டோம். சின்னத் திரையில் பார்த்த அளவுக்கு அற்புத ரிசல்ட் கிடைக்கவில்லை என்றனர். இதுபற்றி ஒருவர் புகார் செய்ய, "இருபது நாள் பயன்படுத்தினப்புறம் அதே மாதிரி வரும்" என்று ஆறுதலளித்திருக்கிறாராம் கடைக்காரர். இப்படியெல்லாம் முதலிலேயே சொல்லவில்லையே என்று அந்தப் பெண்மணி பொருமுகிறார் - சுமார் இரண்டாயிரம் ரூபாயை விழுங்கி விட்டு சுமாரான சப்பாத்திகளையே உருவாக்கிக் கொண்டிருக்கும் அந்தக் கருவியைப் பார்த்தவாறு.

என்றாலும் நினைத்தும் பார்த்திராத பல தயாரிப்புக்களை டெலி-ஷாப்பிங் மூலம் பார்த்து வாங்க முடிவது ஒரு சாதகமான அம்சம்தான்.

"பாதகமான அம்சமும் கூட. தேவையில்லாத பொருளையெல்லாம் ஆசைகாட்டி தலையில் கட்டி விடுகிறார்கள்" என்றார் நண்பர் ஒருவர். ஆகாயவிமானம் ஒன்றை அழகாகத் திரையில் பறக்கச் செய்து காண்பிக்க, அடம் பிடித்து அதை வாங்க வைத்து விட்டான் அவரது மகன். அதன் விலை (வழக்கம்போல்?) ஒரு நாலு இலக்கத் தொகைதான்!

டெலி-ஷாப்பிங்கிற்குக் கணிசமான ஆதரவு கிடைக்காததற்கு இன்னொரு முக்கியமான காரணமும் உண்டு. வீட்டிலிருந்தபடியே விரலசைப்பில் பொருளை வாங்கலாம்தான். வேலைக்குப் போகும் பெண்களுக்கு இது சௌகரியம்தான். ஆனாலும் ஷாப்பிங் என்பது நம் பெண்மணிகளுக்கு ஓர் உற்சாக அனுபவமாயிற்றே. அது ஒரு பொழுது போக்கு மட்டுமல்ல, வாழ்க்கைமுறையே கூட! ஒன்றுக்கு நான்கு கடைகளை அலசிவிட்டு, பேரமும் பேசி ஒரு பொருளை வாங்கும் (அல்லது வாங்காமலே திரும்பும்) த்ரில் இந்த டெலி-ஷாப்பிங்கில் கிடைக்குமா?

"எதற்குக் கிடைக்க வேண்டும்? ஷாப்பிங் என்ற பெயரில் குடும்பத்தோடு கிளம்பி வழியில் தேவையில்லாத அச்சு பிச்சுப் பொருள்களையெல்லாம் வாங்கிக் கொண்டு, சமோசா, கோன் ஐஸ் க்ரீம் என்றெல்லாம் பணத்துக்கும் உடல் நலத்துக்கும் கேடுவிளைவிக்கும் ஐட்டங்களை வயிற்றில்



## மில்க் ஷேக்

பாட்டிலின் அடியில் 'கொஞ்சூண்டு' ஜாம் மிஞ்சி நின்றால், அதில் சிறிது சூடான பாலைவிட்டு குலுக்கி அத்துடன் சிறிது 'ஐஸ்' பாலை விட்டு மிக்சியில் அடித்து நுரை பொங்க குழந்தைகளுக்கு (ஏன் பெரியவர் களுக்கும் தான்) தந்தால் 'சூப்பர் மில்க் ஷேக்!

- உஷா

சென்னை, தி.நகரில் இயங்கி வரும் ஜோதி மாதர் சங்கத்தின் 17ம் ஆண்டு நிறைவு விழா சமீபத்தில் நடந்தேறியது. சென்னை சர்வகலாசாலை மாணவர் ஆலோசனை மையச் செயலாளர் டாக்டர் சுசீலா மாரியப்பன் தலைமை வகித்தார். அவ்விழாவில் மனநிலை பாதிக்கப்பட்ட சிறுவர் இல்லமான ஞானதீபம் அமைப்பிற்கும் 'பான்யன்', 'சமர்ப்பணா' போன்ற சேவை நிறுவனங்களுக்கும் ஏழை மாணவர்கள்– பெண்களுக்கும் பணமாகவும் பொருளாகவும் நன்கொடை அளித்தனர். முன்னதாக சங்கத் தலைமை திருமதி சீதாராகவன் அனைவரையும் வரவேற்றார். திருமதி உஷா சம்பத் சங்க ஆண்டு அறிக்கையை படித்தார். திருமதி லக்ஷ்மி வாசுதேவன் நன்றி கூறினார்.



திணித்துக் கொண்டு, கடைகளில் மணிக்கணக்கில் நின்று கொண்டிருந்துவிட்டு, களைப்புடன் ஆட்டோவில் வீடு திரும்பி அக்கடாவென்று விழும் ஷாப்பிங் ரொம்ப உயர்வானதா என்ன?" என்று தன் நெடுநாள் ஆதங்கத்தை வெளிப்படுத்தினார் ஒரு குடும்பத் தலைவர். "குடும்பத்தோடு வெளியில் போவதென்பதே இதுபோன்ற ஷாப்பிங்கிற்குதான் என்றாகி விட்டது. எனவே அது பிக்னிக் போலவும் அமைகிறது. இதில் என்ன தப்பு?" என்று தன் கருத்தை வெளிப்படுத்தினார் அவரது மனைவி.

டெலி-ஷாப்பிங்கைப் பொறுத்தவரை பலரது மனதில் எழும் சந்தேகம் ஒன்று உண்டு. "திரையில் காட்டப்படும் பொருளும், அதை ஆர்டர் செய்தால் எனக்கு வந்து சேரும் பொருளும் (தரம், நிறம் அளவு போன்ற எல்லா விஷயங்களிலும்) அச்சாக ஒரே மாதிரிதான் இருக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம்?"

"பிரபல ஆங்கில மகளிர் இதழ் ஒன்றில் புடைவைகளை ஒரு சமயம் விளம்பரப்படுத்தியிருந்தார்கள். குறிப்பிட்ட தொகையை அனுப்பினால் பத்திரிகையில் காணப்படும் அதே வண்ணம் மற்றும் ஷேட் கொண்ட புடைவை உட்னே அனுப்பப்படும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. நானும் என் இரு சகோதரிகளும் பணம் அனுப்பியிருந்தோம். எங்கள் விருப்பத்தையும் குறிப்பிட்டிருந்தோம். எனக்கு என் விருப்பப்படியே புடைவை வந்து சேர்ந்தது. என் சகோதரிகளுக்கு அவர்கள் குறிப்பிட்டிராத வேறு ஏதோ வண்ணத்தில் புடைவைகள் வந்து சேர்ந்தன. இதுபோன்ற கசப்பான அனுபவம் டெலி-ஷாப்பிங்கில் நேராது என்பது என்ன நிச்சயம்?" என்றார் வங்கி ஊழியை ஒருவர்.

ஒரு பொருளைப் பல நிறுவனங்கள் தயாரிப்பது இயற்கை. டெலி-ஷாப்பிங்கைப் பொறுத்தவரை ஏதாவது ஒரு குறிப்பிட்ட ப்ராண்டின் தயாரிப்பை மட்டுமே விற்கிறார்கள். சில சானல்களில் ஒளிபரப்பில் ப்ராண்டின் பெயர் கூடக் குறிப்பிடப்படுவதில்லை. இதனால் பல்வேறு ப்ராண்டுகளை ஒப்பு நோக்கும் வசதியை நாம் இழந்து விடுகிறோம்.

மேலே குறிப்பிட்ட பல காரணங்களினால் டெலி-ஷாப்பிங் இங்கு பரவலாகப் பயன்படுத்தப்படுவது அரிது என்றே தோன்றுகிறது, என்றாலும் எந்த ஒரு புதுமைக்கும் ரசிகர்களும், வாடிக்கையாளர்களும் ஓரளவு இருக்கவே செய்வார்கள். அந்த அளவில் டெலி-ஷாப்பிங்கிற்கும் நிச்சயம் அங்கீகாரம் உண்டு. வாங்குகிறோமோ இல்லையோ பல பொருள்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவாவது இந்த முறை உதவுகிறதே!

**- ஜி.எஸ்.எஸ்.**

இந்த லாவண்யா எப்போதுமே இப்படித் தான். நேரங்கெட்ட நேரத்தில் திடுதிப்பென்று குட்டைப் போனிடெயில் பறக்க, வெளிறிய ஜீன்ஸும், டீ-ஷர்ட்டுமாய் கைனெட்டிக் ஹோண்டாவில் வந்து இறங்குவாள். டைனிங் டேபிள் மேல் ஏறி அமர்ந்து கொள்வாள் நொறுக்குத் தீனி டப்பாவைத் திறந்து வைத்துக் கொண்டு கொறித்தபடியே தன் லேட்டஸ்ட் சாதனைகளைப் பற்றி அளக்க ஆரம்பித்து விடுவாள்.

அன்றும் அப்படித்தான்...

"ஆண்களின் பெயரை, ஏதோ பரிதாபப் பட்டுத்தான் நம் பெயருக்குப் பின்னே வால் மாதிரி ஒட்ட வச்சிக்கறோம்... அவ்வளவு தான்"னு சொன்னேன் பாரு... அப்ளாஸ் பிச்சிக் கிச்சு....

"உம்..."

"...போன வாரம் ஒரு பேரணி... 'எங்கும் சமத்துவம், எதிலும் சமத்துவம்.. ஆணுக்குப் பெண் எப்போதும் சரிசமம்...'னு கோஷம் போட்டோம். மவுண்ட் ரோடே ஸ்தம்பிச்சுப் போச்சு தெரியுமா... டீ.வி. நியூஸ்ல கூடக் காட்டினானே..."

"நான் பார்க்கலை..." ஒரு பக்க மூக்கால் பேசினேன்.

"என்ன நீ, எத்தனை பாடுபடறேன்... எல் லாம் என்னையும் உன்னையும் போன்ற பெண்

# உரிமைப்

களுக்குச் சமுதாயத்தில் சமமான அந்தஸ்து அங்கீகாரமும் கிடைக்கணும்கிறத்துக்காகத் தானே... நீ இப்படி அஸ்வாரஸ்யமாக இருக் கியே...."

"போடீ... உனக்கென்ன... நாளொரு மீட்டிங் பொழுதொரு மேடைன்னு போவே... உனக்குக் கை தட்டவே ஒரு கூட்டமும் இருக்கு... ஒண்ணு செய்..., 'ஆணுக்குச் சமமா வியாதியைக் கொண் டாடிக் கொள்ளவும் பெண்ணுக்குச் ச உரிமை வேணும்... ஆணின் வலிகளுக்கு சளைத்ததல்ல பெண்ணின் வலிகள்'னு எங்கே யாவது பேசணும்னா சொல்லு நானு வரேன்." சலிப்புடன் சொன்னேன். அதற்கு மூச்சு வாங்கியது. தொண்டை எரிந்தது.

"என்னடீ கீத்து... உனக்கு என்ன ஆச்சு ஏன் இப்படி 'டிப்ரெஸ்ட்'டாக இருக்கே வாட்ஸ் ராங் வித் யூ?" கரிசனத்துட என்னைத் தொட்டுப் பார்த்தாள்.

"ஜலதோஷம்! டீ, லாவண்யா... பயங்க மான கோல்ட்."



"இவ்வளவுதானே பூ..... ஒரு மாத்திரையை முழுங்கு, ரெஸ்ட் எடு. போயே போயிடும். இதுக்கு எதற்குப் போராட்டம்... சம உரிமை அது இதுன்னு,"

# போராட்டம்

## உஷா ஸ்ரீகுமார்

"நீ கல்யாணம் பண்ணிக்கலை. உனக்குப் புரியாது."

தோளைக் குலுக்கினாள்.

"உன் மூடு சரியில்லை. வரேன். பக்கோடா பண்ணினால் எனக்கும் எடுத்து வை...." ஸ்கூட்டர் கிளம்பியது. பெருமூச்சு விட்டேன்.

**லா**வண்யாவுக்குப் புரியாது... ஆனால் உங்களுக்குப் புரியுமே. அனுபவித்திருப்பீர்கள் அல்லவா.

ஒரு வாரத்திற்கு முன்...

அதிசயமாக, மத்தியான வேளையில் வாசலில் எங்கள் கார் சப்தம்...

என் கணவரேதான்.

கண் சிவந்து, டை அவிழ்ந்து, ஷர்ட் கசங்கி, தலை கலைந்து, மூக்கு மின்ன...

"என்ன ஆச்சு?"

பதில் பேசாமல் சோபாவில் சரிந்தார்.

"ஐயோ, என்ன பண்ணுது? சொல்லுங்களேன். மூஞ்சியே சரியாகயில்லையே." ஒரு அக்மார்க் முத்திரை குத்தப்பட்ட நல்ல மனைவியின் கரிசனத்தோடு பதறினேன்.

பதிலில்லை.

நெற்றிக்கட்டைத் தொட்டேன்.

வியர்த்துப் பிசுபிசுத்தது.

சோகமாகப் பார்த்தார்.

"என்னவோ தெரியலை. உடம்பு என்னென்னமோ பண்ணுது. தலைவலி மண்டையைப் பிளக்குது. மிளகாய்ச் சாறுபட்ட மாதிரி கண்களில் எரிச்சல்.. காதுகளில் 'ரொய்ங்ங்'னு ஒரு சவுண்டு.. பிளேடை முழுங்கின மாதிரி தொண்டையெல்லாம் எரிச்சல்... கண்ணிலிருந்தும், மூக்கிலிருந்தும் அருவியாய் தண்ணீர் வழியுது. உடம்பு மேல ரோடு ரோலரை ஏற்றினது மாதிரி ஒரு பயங்கர வலி... முழங்கால்களில் ஒரு நடுக்கம்... சம்திங் சீரியஸ்லி ராங்...."

படுக்கையில் 'தொம்'மென்று விழுந்தார் ஷூவைக் கூட கழட்டாமல்.

"சீதா, காப்பி...."

கொண்டு வந்தேன்.

"ருசியும், மணமும் சுத்தமாகத் தெரியலையே... அந்த கார்டுலெஸ் போனைக் கொண்டு வா...."

கொண்டு வந்தேன்.

"ஹலோ... டாக்டர் அகோரமூர்த்தியின் லைனைக் கொடு. உடனடியாய் ஒரு அப்




பாயின்மென்ட் வேணுமே... என்ன ஆப்பரேஷனா? அத முடிக்கிறதுக் குள்ளே நான் செத்தே போயிடுவேன்... உடனே பார்க்கணும்... ரொம்ப சீரியஸ்... என்ன ட்ரபிளா? எக்கச்சக்கம். வந்து சொல்லறேன்.''

டாக்டர் அகோரமூர்த்தி என் பெரியப்பா மகன். எனக்காக என் கணவரையும், மாமி யாரையும் சுணங்காமல் சகித்துக் கொள்ளும் அப்பாவி!

டெலிபோன் பிடிவாதமாய் அலறியது.

எடுத்தேன் என் மாமியார்.

''ஹலோ.. கீதாவா... விச்சுவுக்கு என்ன உடம்புக்கு? ஆபீசிலிருந்து அதற்குள் கிளம்பிவிட்டானாமே....''

''........'' விளக்கினேன்.

''யாரு அகோரமூர்த்தி கிட்டேயா காட்டப் போறே... எதுக்கும் ப்ளட்டெஸ்ட் பண்ணச் சொல்லு. தலை வலின்னா சாதாரணமாக விட்டுடக் கூடாது. த்லையில் என்ன இருக் குன்னு 'ஸ்கான்' பண்ணிப் பார்க்கச் சொல்லு'' உத்தரவுகள் பறக்க ஆரம்பித்தன.

'வேஸ்ட். எப்படியும் காலியாகத்தான் இருக்கும்.' வாய்விட்டுச் சொல்லவில்லை! அப் புறம், என் காதுக்கு வைத்தியம் செய்ய வேண்டி வருமே!

''அவன் பாவம் பூஞ்சை உடம்புக்காரன். கவனமாய் பார்த்துக் கொள்வாயா, நான் வரவா? டீ.வி பார்த்துக் கொண்டிருக்காமல் அவனை கவனி சுக்கோ...'' 'ணங்'கென்று போனை வைத்தேன்.

கிளினிக்கில்.

''கலாட்டா பண்ணிட்டியே விச்சு, இ சாதாரண ஜலதோஷத்தின் ஆரம்பம்தா இந்த மாத்திரைகளைச் சாப்பிடு. ரெஸ்ட் எடு துக்கோ....''

''ஹா.... ஹ... ஹாச்ச்ச்!''

அடுத்த மூன்று தினங்களும் எனக்கு தி மும் மூன்று ஷிஃப்ட் நர்ஸ் டியூட்டி.

மணிக்கு ஒருமுறை டெம்பரேச்சர் எடுக் ஒருமுறை கூட 99 டிகிரியைத் தாண்டவில்ல

'தர்மாமீட்டர் ரிப்பேர். நிச்சயம் 103 இ கும்.' இடைக்கொரு தடவை நீலகி தைலத்தை ஆவி பிடிக்கக் கொடுத்து....

வாய்க்கு ருசியாய் சூடான வெஜிட சூப்பும், மிளகாய் பஜ்ஜியும், மிளகு ரச செய்து கொடுத்து;

''Feed the Cold... ன்னு சொல்லியிருக்கா சப்பென்று சமைத்திருக்கியே....''

பொறுமையாக 'ஐய்யய்யோ... அம்மம் புலம்பல்களை சகித்துக் கொண்டு....

'டீ.வி வைக்காதே. கேரம் விளையாட என்று பசங்களை அதட்டியபடி அவர் லும், முதுகிலும், மார்பிலும், தொண்டையி என் உள்ளங்கைத் தோல் உரியும் வரை தோஷ நிவாரணியை அழுந்தத் தேய்த்து வழியாக அவருடைய ஜலதோஷத்தி 'செண்ட் ஆஃப்' கொடுத்தேன்.

சுவற்றில் '113' என்று எழுதியிருந்தது.

"என்னடா விக்ரம் இது?"

"அப்பாவோட தும்மல் ஸ்கோர்ம்மா..."

"ஏம்மா, அப்பாவுக்கு டைஃபாய்டு, காலரா, மலேரியா, நிமோனியா எதுமேயில்லையா... அதுக்குள்ளே சரியாப் போச்சா?" துக்கம் பொங்கக் கேட்ட மஹிமாவை அடிக்கக் கையை ஓங்கினேன்.

வலித்தது. கை மட்டுமல்ல... உடம்பு முழுவதும்தான்....

காலையில்....

கனவுகளில் மிதந்து கொண்டிருந்த போது பால்காரன் மணியடிக்க....

எழுந்திருக்க முயற்சித்தேன்.

கால்கள் நடுங்கின. கண்கள் சொருகின.

தூக்கக் கலக்கத்திலேயே பாலைக் காய்ச்சி காப்பியைக் கலந்து, நியூஸ் பேப்பருக்குப் பின்னே மோன நிலையிலிருக்கும் இவருடைய மூக்குக்குக் கீழே காப்பியை நீட்டினேன்.

"என்ன டிபன்?"

"ரொட்டியும் ஜாமும்."

"ஏன்?"

"எனக்கு உடம்பு சரியில்லை. எழுந்ததிலிருந்தே என்னவோ பண்ணுது. தலையெல்லாம் சம்மட்டியால் அடிக்கிற மாதிரி ஒரு வலி. உடம்பு முழுவதும் பூட்டுப் பூட்டாய் வலிக்குது. தொண்டையை யாரோ உப்புக் காகிதத்தால் அழுத்தத் தேய்த்த மாதிரியிருக்கு.... எச்சில் கூட விழுங்க முடியலை... கண்ணு ரெண்டும் தீப்பட்ட மாதிரி எரியுது. காதுக்குள்ளே ஒரே குடைச்சல்... மூக்குக்குள் ஒரே குத்தல்.... காய்ச்சல் அடிக்கிற மாதிரி இருக்கு...."

மூச்சு விடாமல் பேசி முடித்தேன்.

சலனமின்றி என்னை தலை யிலிருந்து பாதம்வரை பார்த்தாரே ஒரு பார்வை!

"கவலைப்படாதே.... சாதாரண ஜலதோஷம் தான் ஆரம்பிக்கப் போகுது. ஒரு மாத்திரையைப் போட்டுக் கொண்டு நன்றாய் தூங்கி ரெஸ்ட் எடு. சாயங்காலம் சரியாயிடுவே..."

"எப்படித் தூங்குவதாம்? தலைக்கு மேல் வேலைகள் எத்தனை இருக்கு?"

"நீ வீட்டில்தானே இருக்கே அட்ஜஸ்ட் பண்ணிக்கோ..."

"எலக்ட்ரிசிடி பில் கட்ட இன்றுதான் கடைசி நாள். நீங்க வேணா கட்டிவிட்டு...."

"நோ, நோ.... எனக்கு இன்று ஆடிட்டரைப் பார்க்கணும். அட்ஜஸ்ட் பண்ணிக் கட்டிடு."

"மஹிமாவோட ஸ்கூலில் பேரண்ட்ஸ் மீட்டிங்."

"நான் எப்படி போவேன் பூராவும் பொம் பளைக் கூட்டமாக இருக்கும். நீயே தலையைக் காட்டிட்டு வந்துடு."

"உங்கம்மா போன் பண்ணினா... புடைவைக் கடையில் வருடாந்தர சேல் போட்டிருக்கு... கூட்டிண்டு போறியான்னு கேட்டா?"

"வயசானவ.... கூடப்போயிட்டு வந்துடு. ஆட்டோ வச்சிண்டு போ..."

"இத்தனை வேலைகளுக்கும் அலைந்துவிட்டு நான் எப்படி ரெஸ்ட் எடுப்பதாம்? என் உடம்பு மட்டும் என்ன, இரும்பாலேயா அடிச்சு வச்சிருக்கு?"

"வீட்டில்தானே இருக்கே... உனக்கு நாள் பூராவும் ரெஸ்ட் தானே... மறந்துட்டேனே. மத்தியானம் லஞ்ச் கேரியரில் ஒரு கறியும், கூட்டும் சேர்த்து வச்சிடு... வெங்கட்டராமன் என் கூட சாப்பிடுவான். முடிஞ்சா வடாமும் பொறிச்சு வை. அவனுக்கும் பிடிக்கும். அவன் பெண்டாட்டிக்குப் பாவம் காய்ச்சலாம்...."

நான் பதில் பேசவில்லை. கத்தவில்லை. கூப்பாடு போடவில்லை.... எனக்குத் தெரியும் அப்படி ஏதாவது செய்தால் நான்தான் இன்னும் அதிகமாகக் களைத்துப் போவேன் என்று.

இப்போது புரியுதா?

ஒரே பிராண்டு ஜலதோஷம்... ஆனால் ஆணின் ஜலதோஷத்திற்குக் கிடைக்கும் மதிப்பும், கவனிப்பும், உபசரணையும் பெண்ணின் ஜலதோஷத்திற்குக் கிடைக்கிறதா?

சொல்லுங்களேன்.

ஏன் கொடி பிடிக்கக்கூடாது, கூட்டம் போட்டுப் பேசக்கூடாது, போராட்டம் நடத்தித் தீர்மானம் போடக்கூடாது.

"பெண்ணுக்கும் ஆணுக்கும் சரிசமமாக வியாதியைக் கொண்டாட உரிமை கொடு... ஆணின் வலியும் பெண்ணின் வலியும் சரிசமம். அதைப் புரிந்து கொள்ளாதவர்களை தண்டிக்க சட்டத்தில் ஒரு புது திருத்தம் கொண்டு வரப்பட வேண்டும்" என்று....



# வராதா

# ஜென்மமும் ஜென்மமும் இடையே

தெலுங்கு மூலம்:
த்வவேதுலு விசாலாக்ஷி
தமிழாக்கம் : ஸரஸா

**ஸ்**பிரிங் கதவைத் திறந்து கொண்டு வெளியே வருகிறேன். தன் ஆதங்கத்தை கண்ணில் தேக்கிக் கொண்டு, தீனமான பார்வையுடன் வெளியே நிற்கிறான் அவன். எப்பொழுதும் சுந்தர புருஷனாக, அழகாக நேர்த்தியான ஆடை அணியும் அவன், இன்று தாடியும், மீசையுமாக பஞ்சத்து ஆண்டியைப் போல் நிற்கிறான். என் முகத்தைக் கண்டவுடன் சற்று தைரியம் ஏற்பட்டது போலும்! என் சமீபத்தில் வருகிறான்.

"நமஸ்தே டாக்டர்" என்கிறான். பதிலுக்கு வணக்கம் தெரிவிக்கிறேன்.

"என் மிஸஸ்ஸிற்கு எப்படியிருக்கிறது டாக்டர்" என்ன பதில் வருமோ என்ற கவலை அவன் முகத்தில்.

"இனி கவலையில்லை! நல்லபடியாக டெலிவரி ஆயிற்று. சிறிது நேரத்தில் உங்கள் மனைவிக்கு நினைவு வரும். போய் பாருங்கள்" என்கிறேன்.

"ரொம்ப சந்தோஷம் டாக்டர்... உங்கள் தயவு..." அவனுடைய பேச்சில் தடுமாற்றம். என்னிடம் மேலே பேசுவதற்கு இஷ்டமில்லாமல் அவசர, அவசரமாக உள்ளே போகிறான். மனத்தில் ஏதோ நினைவு நெருடுகிறது. திரை விலகினாற்போல், ஆறு மாதங்களுக்கு முன் நடந்த சம்பவம் நினைவிற்கு வருகிறது. சௌதாமினி ஆறு மாதங்களுக்கு முன் கேட்ட கேள்விக்குப் பதில் இன்று கிடைத்து விட்டது.

**நா**லு வருஷங்களுக்கு முன் முதன் முதலாக நான் சௌதாமினியைப் பார்த்தபொழுது அவள் ஒரு பேஷண்ட்... நான் ஒரு டாக்டர். இந்த உறவுதான் எங்களுக்குள். ஆனால் சௌதாமினி இந்த நர்ஸிங்ஹோமிற்கு அடிக்கடி வருவதும் போவதும் அதிகமாக, எங்கள் இருவருக்குமிடையே ஒரு சிநேக பாவம்... அந்நியோன்யம் ஏற்பட்டது. சௌதாமினி என்ற பெயருக்கு மின்னல்கொடி என்ற அர்த்தமாகயிருக்கலாம். இத்தனை ரூபவதியான இந்தப் பெண்ணிற்கு ஏற்ற அழகான பெயரைத் தேர்ந்தெடுத்த அவளுடைய பெற்றோரை நினைத்துப் பெருமைப்பட்டேன்.

மெடிகல் உலகில் விஞ்ஞானம் எத்தனை அபிவிருத்தி அடைந்த போதிலும், சிற்சில நோய்கள் நம் வைத்தியத்திற்குக் கட்டுப்படுவதில்லையே! நம் அறிவிற்கும், விஞ்ஞான வளர்ச்சிக்கும் அப்பாற்பட்ட சக்தி ஒன்று இருக்கிறது என்பதை நமக்கு உணர்த்துகிறது. விஞ்ஞான சாஸ்திரத்தில் நாம் சாதிக்க வேண்டியது எத்தனையோ இன்னும் இருக்கின்றன.

வீட்டிற்கும் நர்ஸிங்ஹோமிற்குமாக அலைய வேண்டியிருக்கிறதே என எண்ணி, சௌதாமினியை நர்ஸிங்ஹோமில் அட்மிட் செய்தார் மிஸ்டர் ராவ். என் ரூமிற்கு அடுத்தாற் போல் ஸ்பெஷல் வார்டு. அதனால் வேலையற்ற நேரத்தில் சௌதாமினியுடன் பேசி பொழுதை போக்குவது எனக்கு வழக்கமாயிற்று. இப்படியாக எங்களது சிநேகம் வளர்ந்தது.

வாழ்க்கையில் எந்தச் சின்ன விஷயத்தையும் லேசாக எடுத்துக் கொள்வது இயலாது சௌதாமினிக்கு. தினசரி நடவடிக்கைகளில் கூட எந்தச் சிறிய மாற்றம் ஏற்பட்டாலும் தடுமாறிப் போகும் சுபாவம் அவளுக்கு.

"ஏன் இப்படி ஆயிற்று டாக்டர்! எனக்கு ஒரே பயமாகயிருக்கிறதே" என புலம்புவாள். பலவிதமாக தைரியம் சொல்லி அவளை தேற்றுவேன். நான் எத்தனை ஆறுதல் சொல்லியும், அவளுடைய திகில் குறைந்தது இல்லை.

"வாழ்க்கையில் முக்கியமான விஷயங்களில் சமரஸ பட முடிவதில்லை டாக்டர்! எனக்குப் பரிபூர்ணமான வாழ்வு வேண்டும். மூச்சு முட்டும் அளவு மகிழ்ச்சியில் திளைக்க வேண்டும் டாக்டர்! அப்படிப்பட்ட வாழ்க்கை எனக்குக் கிடைக்காது என தெரிந்தால்,





சந்தோஷத்துடன் மரணத்தை எதிர் நோக்குவேன். அந்த வாழ்வைக் காட்டிலும், மரணத்தில் மனச் சாந்தியை அடைவேன்" சௌதாமினி ஆவேசமாகக் கூறுவாள்.

நாள் தவறாமல் மனைவியைப் பார்ப்பதற்கு ராவ் வருவது வழக்கம். மணிக்கணக்காக சௌதாமினியுடன் பேசிக் கொண்டிருப்பார். அவளுடைய பயத்தைப் போக்கி உற்சாகத்தை அளிப்பார். அவளுடைய அபிலாஷைகளை ஆர்வத்துடன் கேட்டு உயிரூட்டுவார்.

எத்தனை அருமையான தாம்பத்தியம். இந்த அளவு கணவனுடைய அன்பைப் பெற இவள் பூர்வ ஜென்மத்தில் எத்தனை பூஜை செய்திருக்க வேண்டும் என எண்ணுவேன்.

ஆனால் ஒரு நாள் நர்ஸ் பங்கஜா

என்னிடம் கேட்டாள்.

"நீங்கள் மிஸ்டர் ராவை சமீபத்தில் கவனித்தீர்களா டாக்டர்! அவரிடம் ரொம்ப மாறுதல் தெரிகிறது. அவருடைய பேச்சு, நடவடிக்கைகள் வித்தியாசமாகத் தெரிகிறது."

அவளுடைய பேச்சைக் கேட்டபின் மிஸ்டர் ராவை கவனிக்கத் தொடங்கினேன். பிரகாசமாக எரியும் தீபத்தைத் திடுமென குறைத்தாற்போல், அவருடைய முகத்தில் வழக்கமாகக் காணும் உற்சாகம் குறைந்து, பதிலாக இரக்கம் காண்கிறது. சௌதாமினியின் அறைக்குள் நுழையும் முன், சற்று தயங்கி முகத்தில் மலர்ச்சியை வரவழைத்து கொள்ளுகிறார்.

ராவைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் என்னுள் பிறந்தது. பார்க்கில் ஒருமுறை, சினிமா ஹாலில் ஒருமுறை என அங்கும் இங்கும் அவருடன் ஒரு பெண்ணைப் பார்த்தேன். சில தினங்களுக்குப் பிறகு; தினமும் ராவின் காரில் வந்து, காரிலேயே அவள் காத்திருப்பது வழக்கமாயிற்று. ராவ் நர்ஸிங்ஹோமிலிருந்து வெளியே வரும்வரை சுற்றிலுமுள்ள கடைகளை ஆராய்ந்து கொண்டிருப்பாள், ராவ் வெளியே வந்தபின் இருவரும் உற்சாகமாகப் பேசிய வண்ணம் காரில் புறப்பட்டு போகிறார்கள்.

எனக்கு ராவைப் பற்றி தவறாக நினைக்கத் தோன்றவில்லை. உலகநீதியே அப்படித்தானே? யௌவன வயது! வாழ்க்கையை அனுபவிக்க... ரசிக்கத் தெரிந்தவன்.. அழகு... செல்வாக்கு... ஹோதா எல்லாம் நிறைந்தவன்.

அழகிற்கு அடிமையாகி, ஆசைப்பட்டு விவாகம் செய்துகொண்ட மனைவி... தீராத வியாதியுடன் படுக்கையிலிருக்கிறாள். எப்பொழுது சௌதாமினி பூரணகுணம் பெற்று வீடு திரும்புவாள்? உண்மையில் குணம் பெறத்தான் போகிறாளா என்பதே சந்தேகம் என்ற நிலையில்; அவனுடைய இந்தத் தடுமாற்றம் சகஜம்தானே!

ஒரு சமயம் ஒரு வார்டிலிருந்து மற்றோர் வார்டிற்குப் போய்க் கொண்டிருந்தபோது என்முன் ராவின் கார் வந்து நின்றது.

"ஹலோ டாக்டர்! இவள் மிஸ். மஞ்சுலதா" என அந்தப் பெண்ணை அறிமுகப்படுத்தினான்.

"சௌதாமினியின் தங்கை இவள்."

ஏதோ விந்தையான விஷயத்தைக் கேட்ட வியப்பு என் முகத்தில். அந்தப் பெண்ணையே சற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டேன் போலும்.

"மஞ்சுலதாவிற்கு வியாதி என்றாலே பயம் அதிகம் டாக்டர். அதனால்தான் சௌதாமினியை பார்க்க உள்ளே வருவதில்லை"என்றான்.

'இப்படியும் இருக்க முடியுமா! என்ன பெண் இவள்! சௌதாமினிக்கு சகோதரியிடம் அளவற்ற பாசம்...' அன்பு...'

சௌதாமினி விஷயத்தில் நான் எடுத்துக் கொள்ளும் சிரத்தை, நான் படும் ஆராட்டத்தைக் கண்டு மற்ற டாக்டர்கள் எல்லோரும் வியப்படைந்தார்கள். எனக்கு ஏனோ அவள் மேல் ஒரு தாயன்பு தோன்றியது.

கதவைத் தட்டிவிட்டு உள்ளே போகும் வழக்கமுடைய நான், அன்று ஏதோ நினைவாக, சௌதாமினியின் அறையினுள் நுழைந்து விட்டேன்.

தினத்தைக் காட்டிலும் அன்று ராவ் சற்று முன்னதாகவே வந்திருக்கிறான் போலும். சௌதாமினியுடன் சேர்ந்து இருப்பது இன்னும் சில நாட்களே என்பதை அவன் உணர்ந்திருக்கிறான். கணவன் மடியில் சௌதாமினி தலை வைத்துப் படுத்திருந்தாள். அவளுடைய கூந்தலைக் கோதிய வண்ணம், ராவ் பேசிக் கொண்டிருக்கிறான். சில நாட்களில் அவளை அணுகப் போகும் ம்ருத்யு பற்றியல்ல. தன்னை விட்டு சாஸ்வதமாக பிரியப் போகும் தன் மனைவியைப் பற்றியும் அல்ல. அழகான தங்கள் ஜீவிதம் குறித்துப்



**அடைக்கு அரைக்கும் பொழுது சிறிது ஜவ்வரிசி, சிறிது கோதுமையையும் ஊறவைத்து அடைமாவுடன் அரைத்தால் அடைமொறுமொறு வென்றும் மிருதுவாகவும் இருக்கும்.**

**— நளினிஜெயபா...**

பார்ட்டியின் போது வாங்கப்பட்ட பேப்பர் தட்டுகள் நிறைய மீந்து விட்டன. வீட்டில் ஃப்ரிஜ்ஜில் வைக்கப்படும் பாத்திரங்களை மூடு வதற்கு மிகவும் உதவியாக இருக்கிறது. (எத்தனை எவர்சில்வர் தட்டு இருந் தாலும் நமக்குப் போறாதே!)

– நளினி ஜெயபால்



---

பேசுகிறான். அழகும், அற்புதங்களும் நிறைந்த பிரபஞ்சத்தைக் குறித்து கதை கதையாகச் சொல்லுகிறான். மிகுந்துள்ள தங்கள் வாழ்க்கையைப்பற்றி, தாங்கள் இருவருமாக சேர்ந்து அனுபவிக்கப் போகும் இன்ப நாட்களைக் குறித்து விதவிதமாக வர்ணிக்கிறான். அவனுடைய மடியில் படுத்து, கண்மூடி அந்த இன்ப நாட்களை கற்பனை செய்து ஆனந்தம் அடைந்து கொண்டிருந்தாள் சௌதாமினி. எந்நாளும் கண்டறியாத தேஜஸ் அவள் முகத்தில் வியாபித்திருக்கிறது.

இந்தக் கடைசி நாட்களில் எதற்காக அவள் மனதில் ஆசையை வளர்க்க வேண்டும் இந்த மனிதன்! ஏன் அன்பை அள்ளிக் கொடுக்க வேண்டும்! அவனுடைய மென்மையான உள்ளத்தை மெச்சிக் கொள்ளத் தோன்றுகிறது. கடைசி நிமிஷத்திலும் சௌதாமினி, மனநிம்மதியுடன்... ஆனந்தத்துடன் கண்மூடட்டும் என்ற தயாள குணம் போலும்.

என் காலடியோசை கேட்டு சௌதாமினியின் தலையை எடுத்து மெல்ல தலைகாணியில் விட்டு எழுந்தான். அவள் முகத்துடன் தன் முகத்தை முத்தம் இடும் பாவனையில் பதிய வைத்தான். ராவின் கண்களிலிருந்து ஒரே ஒரு கண்ணீர் சொட்டு சௌதாமினியின் உதட்டின் மேல் விழுந்தது. திடுக்கிட்டுக் கணவனை திகிலுடன் உற்று நோக்கினாள். கணவனுடைய முகத்தில் காணும் புன்சிரிப்பு அவளுக்கு தெம்பை அளிக்கிறது. அந்த ஒரே ஒரு கண்ணீர் சொட்டை அருமையுடன் நாக்கால் தடவி உள்ளே இழுத்துக் கொண்டாள். ஆசுவாசத்துடன் கிழிந்த நாராக கண்களை மூடி படுத்திருக்கும் சௌதாமினியை வீட்டிற்குக் கிளம்புமுன் பார்த்துவிட்டு புறப்பட்டான் ராவ்.

சட்டென்று சௌதாமினி கண் விழித்து என்னைப் பார்த்தாள். அதிகப் பிரயாசையுடன் மெல்ல தன் கைகளைத் தூக்கி என் கைகளைப் பிடித்துக் கொண்டாள்.

"என்னிடம் உங்களுக்கு எத்தனை அபிமானம் டாக்டர்! எத்தனையோ ஜன்மஜன்மங்களாக உள்ள அனுபந்தமா இது?" எனக் கேட்கும் அவளைப் பார்த்தேன். மூன்று வருஷங்களாக பார்த்து, பழகிய அந்தக் கண்கள்! முதன் முதலாக பார்த்த மாத்திரத்திலேயே ஆகர்ஷித்த அந்தக் கண்களை திரும்பவும் காணும் சந்தர்ப்பம் இனி எனக்குக் கிடைக்குமா! என்ற எண்ணத்தில் மெய்மறந்து சில நிமிஷ நேரங்கள் உறைந்து நின்று விட்டேன்.

நைட் டியூட்டியில் இருக்கும் டாக்டரிடம் சௌதாமினியைக் குறித்துச் சொல்ல நினைத்து தடுமாறிப்போனேன். வாய் குளறுகிறது.

"கவலைப்படாதீர்கள் டாக்டர்! ஏதாவது அவசியமென்றால் உடனே உங்களுக்கு தெரியப்படுத்துகிறேன். தைரியமாக போய் வாருங்கள். குட் நைட்" என்று விடை கொடுத்து அனுப்பினாள் அவள்.

இரவு முழுவதும் கண்கொட்டாது, போனை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தேன். காலை ஏழு அடிப்பதற்கு முன்னதாகவே, ஸ்நானம் செய்து, டிரஸ் செய்து கொண்டு, நர்ஸிங்ஹோம் நோக்கி விரைந்தேன்... மனம் பதைக்கிறது.

ரூமிற்கு வெளியே நைட் டியூட்டி டாக்டர் எனக்காகக் காத்திருந்தார். என்னை நெருங்கி "கன்கிராஜுலேஷன்ஸ்" என்றபடி என் கைகளைப் பிடித்துக் குலுக்கினார்.

"ஏன்! என்ன விசேஷம்?" புரியாமல் கேட்டேன்.

"நீங்களே போய்ப் பாருங்கள்" என்றபடி சௌதாமினியின் அறைக் கதவை திறந்து காட்டினான். பனியில் உறைந்த புஷ்பத்தை போல் வெள்ளை வெளேரென்று படுத்திருக்கும் சௌதாமினியின் முகத்தில் சொல்லொணா தேஜஸ். மலர்

# ஜலதோஷம், தலைவலி எப்போதோ பெரியவர்களுக்கான டி'கோல்ட் அப்போது.

**இப்போது நீங்கள் பெரியவராகத் திகழுங்கள் !**



ஜலதோஷம், தலைவலி, உடல்வலி...



உடனடி நிவாரணம்

ஆம், இப்போது ஜலதோஷத்தினால் அவதிப்பட்டால் குழந்தைகளுக்கான கோல்ட்ரப் தடவுவதை நிறுத்துங்கள். அறிமுகம் டி'கோல்ட் கோல்ட்ரப். பெரியவர்களுக்கான ஜலதோஷத்திற்காக விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. எப்போது பெரியவர்களுக்கு ஜலதோஷம் ஏற்படுகிறதோ, அப்போது தலைவலியும் கூட ஏற்படுகிறது. இத்தகைய நிலைமைகளில் தான், டி'கோல்ட் மருந்தின் டபுள் ஆக்ஷன் செயல் புரிகிறது-ஒன்று இதன் அபரிமிதமான வேப்போரைஸிங் ஆக்கப் பொருள் மூக்கடைப்பைப் போக்குகிறது. இரண்டு, இதிலுள்ள அனால்ஜெஸிக் ஆக்கப் பொருள் தலைவலிக்கு நிவாரணம் அளிக்கிறது. அதனால் தான், நீங்கள் செய்ய வேண்டிய அவசர வேலைகள் எதுவும் தடைபடுவதில்லை. ஆகையால் குழந்தைத் தனத்தை விடுங்கள். குழந்தைக்கானதல்ல, உங்களுக்கான டி'கோல்ட் ரப்பைத் தடவுங்கள். ஜலதோஷம் மற்றும் தலைவலியிலிருந்து உடனடி நிவாரணம் பெறுங்கள்.




டி'கோல்ட் பெரியவர்களுக்கான கோல்ட்ரப்

TRITON/96/PP/008/TAM

விரித்தாற்போல் மெல்ல கண்விழித்து புன்முறுவலுடன் என்னை நோக்கினாள்.

இதைப் போன்ற அற்புதங்கள் நிகழ்வதுண்டு. கண்ணால் கண்டும் நம்பமுடியாமல் திகைத்ததும் உண்டு. சௌதாமினியின் விஷயமும் அப்படியே அற்புதம்! அவளுடைய கணவனின் அந்த ஒரு சொட்டுக் கண்ணீர், அவளுக்கு உயிரை ஊட்டியிருக்கிறது. முந்தைய தினம் ராவ் அவளிடம் வர்ணித்த ஆனந்தமயமான வாழ்வு, அவள் கற்பனையில் கண்முன் நின்று, அவளை ம்ருத்யுவின் பிடியிலிருந்து மீட்டிருக்க வேண்டும்.

வைத்தியர்களின் கூற்றைப் பொய்யாக்கி, வைத்திய சாஸ்திரத்தைப் பொய்யாக்கி, நாளுக்குநாள், அதிசய வேகத்தில் உடல் தேறி வந்தாள் சௌதாமினி. மூன்று மாதங்கள் முடியும் பொழுது, இனி சௌதாமினி நர்ஸிங் ஹோமில் இருக்க வேண்டிய அவசியமில்லை என டாக்டர்கள் கூறினர்.

"எனக்கு நீங்கள் பிராணம் கொடுத்தீர்கள். டாக்டர் என் நன்றிக் கடனை எப்படித் தீர்ப்பேன்?" என நாத்தழுதழுக்க கூறினாள் சௌதாமினி.

"புனர்ஜென்மம் எடுத்த உன் வாழ்க்கையில், நீ என்றைக்கும் அமைதியையும், ஆனந்தத்தையும் காண வேண்டும். அதற்கு மேல் நான் வேண்டுவது எதுவும் இல்லை சௌதாமினி" அவளை அன்புடன் அணைத்துக் கொண்டேன்!

சௌதாமினியை வீட்டிற்கு அனுப்பியபின் நர்ஸிங்ஹோம் வெறிச்சென்றிருப்பதாக எனக்குத் தோன்றிற்று. புக்ககத்திற்கு மகளை அனுப்பிய தாயின் நிலையில் நான் இருந்தேன். நாலு நாள் லீவு எடுத்துக் கொண்டு, வீட்டில் இருந்து, புத்தகங்களைப் படிப்பதில், என் மனதிற்கு சாந்தியைத் தேடினேன். மூன்றுநாள் லீவு முடிந்தாகிவிட்டது.

நான்காம் நாள் காலை ஹாலில் பேப்பர் படித்துக் கொண்டிருந்தேன். நர்ஸ் பங்கஜம் ஓடோடி வந்தாள்.

"டாக்டர்... டாக்டர்... அவள் திரும்பி வந்து விட்டாள்... உடனே கிளம்புங்கள்... டாக்டர்."

"யார் பங்கஜம்! வந்திருப்பது யார்?" நிதானமாக கேட்டபடி பேப்பரை மடித்து பக்கத்திலுள்ள மேஜையில் வைத்தேன்.

"சௌதாமினி டாக்டர்... நம் சௌதாமினி!"

"சௌதாமினியா!.... எதற்கு... வந்திருக்கிறாள்?"

"ரிலேப்ஸ் ஆகிவிட்டது... ரொம்ப சீரியஸ் நிலையில் இருக்கிறாள்."

புடைவைகூட மாற்றிக் கொள்ளாமல் உடனே புறப்பட்டேன். பங்கஜம் சொன்னது உண்மைதான். சௌதாமினியின் நிலை கொஞ்சமும் சரியாக இல்லை. இப்படி சீரியஸ் ஆக வேண்டிய காரணம் என்ன? இந்த மாறுதல் இத்தனை வேகத்தில் எப்படி ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது. யாருக்கும் புரியவில்லை. அவள் குணம் அடைவதை எத்தனை வியப்புடன் கண்டேனோ... அதே வித வியப்பு இன்றும் ஏற்பட்டது எனக்கு. நினைவற்ற நிலையில் கிடக்கும் சௌதாமினியை பரிட்சை செய்து பார்த்துவிட்டு வெளியே வந்தேன்.

ராவ் என் முன் வந்து நின்று தீனமான குரலில் கேட்டான்.

"சௌதாமினிக்கு ஏன் இப்படி ஆயிற்று

"என்னைக் காட்டிலும் உங்களுக்குதான் காரணம் தெரிந்திருக்க முடியும்." என்னையறியாமலே என் குரலில் கடுகடுப்பு... ம்... அவன் மீது கோபம் கொள்ள எனக்கு என்ன உரிமையிருக்கிறது

மூன்றாவது நாள், சௌதாமினிக்கு நினைவு திரும்பிற்று. "டாக்டர்! திரும்பவும் உங்களிடமே வந்து விட்டேன்" அந்த நிலையிலும் சிறு புன்னகை அவள் முகத்தி

"அதிகம் பேசாதே சௌதாமினி! ரெஸ் எடுத்துக் கொள்."

அவள் என் பேச்சைக் கேட்கவில்லை.

---



முட்டை கோஸ் செய்து முடித்ததும் மாறுதலுக்காக ஒரு ஸ்பூன் மிளகு, இரண் ஸ்பூன் சீரகம், வெறும் வாணலியில் வறு அரை ஸ்பூன் கறுப்பு எள் எல்லாவற்றை நைசாகப் பொடி செய்து தூவி, கல சாப்பிட்டுப் பாருங்களேன். ஏதோ புது தே துக் காய்கறிபோல் வித்தியாசமாய் இருக் சுவையும் மணமும்!

- கி. மஞ்சு

விருந்தினர்கள் வருவார்கள் என்று எதிர்பார்த்துச் செய்த அடைமாவு ஏகமாய் மீந்துவிட்டது. இரண்டாம்நாள் ஒரு பிளாஸ்டிக் பேப்பரில், ஸ்பூனால் குட்டி குட்டி வடகம் போல் இட்டு நன்றாகக் காய்ந்ததும் டப்பாவில் பூட்டி விட்டேன். குழம்புக்கு, கூட்டுக்கு வறுத்து தாளிக்க எங்க தெருவே மணக்குதுங்க.

–மஞ்சுளாகிருஷ்ணன்



“டாக்டர்! சாவிற்கும் வாழ்விற்கும் அர்த்தம் என்ன? அதன் மத்தியில் உள்ள தூரம் என்ன டாக்டர்?” எனக் கேட்டாள். அவளே தொடர்ந்து பேசினாள்.

“வேண்டாம்! நீங்கள் சொல்ல வேண்டாம். உங்களுக்குத் தெரிந்ததெல்லாம்... ஹார்ட் பீட்... பல்ஸ் ரேட்... என ஆரம்பித்து விடுவீர்கள். இதுவரை நீங்கள் யாரையும் காதலித்தது இல்லை... கல்யாணம் செய்து கொண்டதும் இல்லை எனச் சொல்லியிருக்கிறீர்கள் என்னிடம். நான் கேட்ட கேள்விக்கு பதில் உங்களுக்கு எங்கே தெரியப் போகிறது! டாக்டர் வாழ்விற்கும் சாவிற்கும் மத்தியில் உள்ள தூரம் நீங்கள் அறிய மாட்டீர்கள்.” மெல்ல அவள் கண்கள் மூடிக் கொண்டன. அழகான அந்தக் கண்கள் திரும்பவும் திறக்கவில்லை. அவள் கேட்ட அந்தக் கேள்விக்கு அன்றைக்கு எனக்கு விடை தெரியவில்லை.

ராவ் மஞ்சுலதாவை மணம் செய்து கொண்டதாக கேள்விப்பட்டபொழுது, நான் ஆச்சரியம் அடையவில்லை. ஆனால் மனைவியிடம் அபரிமித அன்பைக் காட்டிய அந்த மனிதன், அவள் இறந்த ஒரு மாதத்தில் மறு விவாகம் செய்து கொண்டது அவன் பேரில் வெறுப்பை அளித்தது. ப்ரேமை... காதல்... எனப் பலரும் ஜபம் செய்யும்... அந்த மூன்று எழுத்தின் மகிமை இத்தனை தானா! தனக்கு நெருக்கமானவர்களை இத்தனை எளிதில் மறப்பது சாத்தியமா!...

ஆறு மாதங்களுக்குப் பின் ஒரு நாள்... ராவ் திரும்ப வந்தான். முதன் முதலாக ராவ் நர்ஸிங்ஹோமிற்கு சௌதாமினியை அழைத்து வந்த அதே தோற்றம்... டிரிம்மாக டிரஸ் செய்து கொண்டு, உற்சாகத்துடன், ஆனந்தத்துடன் அழகு ததும்ப வந்தான். சௌதாமினியின் மரணம் அவனை எந்த வகையிலும் பாதித்ததாகத் தெரியவில்லை. முதல் தடவை அவனுடன் சௌதாமினி வந்திருந்தாள். இந்த முறை மஞ்சுலதா வந்திருக்கிறாள். அதுவே வித்தியாசம்.

“உங்களிடம் எனக்கு உள்ள நம்பிக்கையின் பேரில் மஞ்சுலதாவை உங்களிடம் அழைத்து வந்திருக்கிறேன் டாக்டர்!”

டெலிவரிகேஸ்... அதிக சிரமத்துடன் டெலிவரி ஆயிற்று... தாய், குழந்தை இருவரையும் காப்பாற்ற முடிந்ததே என்ற திருப்தியுடன் வெளியே வந்தேன்.

“ஏழு மாதங்கூட நிறையவில்லை. என்ன ஆகுமோ எனக் கவலைப்பட்டேன் டாக்டர்!”

“குழந்தை பத்து மாதம் தாயின் கர்ப்பத்தில் இருந்து ஆரோக்யமாக வளர்ந்ததுதான். குழந்தைக்கு ஒரு குறையுமில்லை. உங்கள் கணக்கில்தான் குறை” என்றேன். என் பேச்சைக் கேட்ட மாத்திரத்தில் கூனிப் போனான் ராவ். அவனுடைய தடுமாற்றத்தின் காரணம் எனக்குப் புரிந்தது.

சௌதாமினியின் கேள்விக்குப் பதில் இன்று கிடைத்து விட்டது. நல்ல தேக ஆரோக்யத்துடன் வீட்டிற்குச் சென்ற சௌதாமினி... அத்தனை சீக்கிரத்தில் சீரியஸான நிலையில் திரும்பி வந்ததின் காரணம் எனக்குப் புரிந்து விட்டது.

நிறைந்த மனதுடன், இன்பமான எதிர்பார்ப்புகளுடன் வீடு திரும்பிய சௌதாமினிக்கு ஏமாற்றம் தான் மிஞ்சியது. தன் உடன் பிறந்த சகோதரியே, தனக்கு அநியாயம் செய்வதை சௌதாமினி அறிந்து கொண்டாள். கணவனுடைய கபட நாடகத்தைப் புரிந்து கொண்டு விட்டாள். வாழ்ந்து தினம்.. நிமிஷத்திற்கு நிமிஷம் செத்துக் கொண்டேயிருப்பதைக் காட்டிலும், மரணத்தில் வாழ்வைக் காண்பதே மேல் என நிர்ணயித்துக் கொண்டு விட்டாள் சௌதாமினி.

அது எங்கே கிடைக்கிறது என்று கேட்கிறீர்களா? அதுதான் எல்லோர் வீட்டிலும் இரு
கிறதே ஒன்று - ஒன் டோர், டூ டோர், த்ரி டோர் - பலவிதமான பெயர்கள், பலவிதமான கல
கள். திறந்தால் அட்சய பாத்திரம் போல் நேத்து பழசு, முந்தாநேத்து பழசு, மூன்று நாள் பழ
நாலு நாள் பழசு, ஒரு வாரத்து பழசு என்று கக்கி கொண்டே இருக்கிறதே அந்த ப்ரிட்ஜுக்குத்தா
இந்த நாமகரணம் செய்திருந்தான் பட்டாபி நம் கதாநாயகன் ஒரே வயத்தெரிச்சலுடன். நிஜமா
வயத்தெரிச்சல்தான் பாவம். ஒரே பழையது சாப்பிட்டு சாப்பிட்டு எப்பொழுது பார்த்தாலு
வயத்தில் கடமுடாவென்று சப்தம். அஸிடிடி எனப்படும் பித்தம், பித்தத்தினால் ஏற்படும் எரிச்ச
நம நமவென்று வயிற்றுவலி.

ஏன் அப்படியாவது பழையதை சாப்பிட்டு உடம்பை கெடுத்து கொள்ள வேண்டும்? பெண் டாட்டியை கொஞ்சம் அதட்டி கை கீழே வைத்துக் கொள்ள கூடாதா? ஒரு வேளை பெண்டாட்டி பயமா? அப்படியானால் நன்றாக படட்டும் என்று விமர்சனம் செய்யாதீர்கள். உங்களுக்குக் கதாநாயகி சித்ராவை அறிமுகம் செய்கிறேன். எருமைமாடு மேல் எண்ணெய் மழை பொழிந்ததாம் என்று யார் எது சொன்னாலும் காதில் கேட்டுக் கொள்ளாமல் செல்லும் பேர்வழி. பட்டாபி பாவம், ரொம்ப அதிர்ந்து பேசக் கூடியவனோ அல்லது பெண் டாட்டியை அடித்து, உதைத்து வழிக்குக் கொண்டு வருகிற ஆதங்கவாதியோ இல்லை. தானுண்டு, தன் வேலை உண்டு என்று யார் வம்பிலும் தலை போடாமல் தன் காரியத்தை நடத்திக் கொண்டு போகும் ஆசாமி. அதனால்தான் வந்தது இந்தத் தகராறு எல்லாம்.

சித்ரா, "மகளிர் மலரின்" பெரிய விசிறி.

# அட்சய



மாதம் முதலில் லேடஸ்ட் இஷ்யூ வந்தவுடன் வாங்கி, முன் அட்டையிலிருந்து பின் அட்டை வரை ஒன்று விடாமல் படிப்பவள். அவளுக்கு மிகவும் பிடித்த பகுதி சமையற் குறிப்புகள். அது அத்தனையும் ஒன்று விடாமல் படிப்பது மட்டும் இல்லை. அத்தனையும் ஒன்று விடாமல் செய்தும் பார்ப்பவள். வருகிற, போகிற சிநேகிதிகள், உறவுக்காரர்களிடம் "நான் இந்த ரெஸிபியை செய்து பார்த்தேன். மிகவும் நன்றாக இருந்தது. நீங்களும் செய்து பாருங்களேன்" என்று வேற ரெகமண்டேஷன்.

ஒரு தடவை ஒரு வாசகி மிகுந்து போயிருக்கும் கூட்டு, பருப்பு, குழம்பு, ரச பருப்பு எல்லாவற்றையும் சேர்த்து பிஸி பேளாபாத் எப்படி செய்ய வேண்டும் என்ற

குறிப்பை கொடுத்திருந்தார். அதே வாசகி முன் னெச்சரிக்கையாக, "இந்த குழம்பு சாதத்தை எப்படி தயார் செய்தீர்கள்? என்ற ரகசியத்தை மாத்திரம் வெளியிலே சொல்ல வேண் டாம்" என்று எழுதியிருந்தார். ஆனால் சித்ராவின் மர மண்டைக்குள் அந்த

# பாத்திரம்



எச்சரிக்கை நுழையவில்லை. அந்த பிஸி பேளாபாத்தை சாப்பிட்ட பிறகு, செய்த முறையை சித்ரா விவரமாக விளக்கிய பொழுது பட்டாபி எடுத்த ஓக்காளம் மெட் ராஸ் முழுவதும் கேட்டிருக்கும்.

மேல் நடந்த கதை :

ஒரு புதன் கிழமை சாயங்காலம், மார்ச்சு மாதம், ராத்திரி 9.30 மணிக்கு பட்டாபி களைப்புடன் உள்ளே நுழைந்தான். ஆபீஸில் ஆடிட்டிங் நடந்து கொண்டு இருந்தது. பட்டாபி சீஃப் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் ஆனதால் அவனுக்கு எக்கச்சக்க வேலை. மேலும் வர வழியில் கார் வேற மக்கர். அதை காரஜில் விட்டு விட்டு ஆட்டோ பிடித்துக் கொண்டு வருவதற்குள் மிகவும் லேட்டாகி விட் டது. களைப்புடன், பசியுடன் உள்ளே நுழைந்தவன் நேராக பெட்ரூமிற் குள் சென்று ட்ரெஸ் மாத்திக்

இந்திரா சேஷாத்ரி



விடுமுறைக்கு வீட்டுக்கு வந்த 'பொடிசு'களின் விஷமத்தால் 'இங்க் பாட்டில்' கவிழ்ந்து விட்டது. துணியால் ஒற்றி எடுத்தால் பரவும். ஆதலால் சாக்பீஸ் தேடினால் சமயத்திற்குக் கிடைக்க வில்லை. வீட்டில் கிடந்த 'நேப்தலின் பால்ஸ்' (பூச்சியுருண்டை) ஸால் ஒற்றி எடுக்க இங்க் பூராவும் உறிஞ்சப்பட்டது.

— அனுபல்லவி

---

கொண்டு, கை கால் அலம்பிக் கொண்டு சாப்பிட உட்கார்ந்து கொண்டான். டைனிங் டேபிள் மேல் சாப்பாடு எல்லாம் தயாராகி வைத்திருந்தது. ஆனால் சித்ரா என்னமோ உம்மணா மூஞ்சி போட்டுக் கொண்டு "மூடி"யாக இருந்தாள். கண்டு கொள்ளாத மாதிரி பட்டாபி சாப்பிட ஆரம்பித்தான்.

"என்ன? உங்களைத்தானே. சாயங்காலம் உங்களோட ஷாப்பிங் போகலாம் என்று காத் துண்டு இருந்தேன். என்ன இவ்வளவு லேட்?"

"உனக்குத்தான் தெரியுமே, மார்ச்சு மாசம் வந்தாலே முதுகெலும்பு உடையற மாதிரி வேலை பிச்சுண்டு போகும்னுட்டு. இது என்ன புதுசா கேக்கறே? நீதான் எப்போதுமே உன் ஷாப்பிங்க நீயே செய்துண்டு பழக்கம். என்னை கூப்பிட மாட்டியே? என்ன திடீர்னுட்டு இன் னைக்கு நான் கூட்டிண்டு போணம்னுட்டு."

"இல்லை. சாதாரணமாக நான் போய் வழக்கம். ஆனால் இன்னிக்குக் கொஞ்சம் 'காஸ்ட்லி' ஷாப்பிங்க் செய்யணும்னுட்டு, உங்கள் பெர்மிஷன் இல்லாமல் போகறதுக்கு இஷ்டம் இல்லை."

"அது என்ன காஸ்ட்லி ஷாப்பிங்க்?" என் றான் பட்டாபி. "ஒண்ணுமில்லை. நம்ப ப்ரிட்ஜ் என்னமோ மக்கர் செய்ய ஆரம்பிச்சிருக்கு ஸ்டார்ட் ஆகும் போது ஒரே சத்தம் போடு கிறது. அதற்கும் மேலே ப்ஃரிட்ஜின் மேல் இருக்கும் பெயிண்ட் உதிர்ந்து கொண்டே இருக்கு. டீலருக்கு போன் செய்தால், "ப்ஃரிட்ஜ் மேலிருக்கும் பெயிண்ட்டுக்கெல்லாம் உத்திர வாதம் கிடையாது. நீங்கள் உங்கள் ப்ஃரிட்ஜை சரியாக மெயின்டெயின் செய்யவில்லை என்று தோன்றுகிறது" என்று ஒரே போடாய் போட் டுட்டான். இது பல்லை இளிக்கிறது. இதை வித்துட்டு இப்போதான் விடியோகான் த்ரீ டோர் நோ ப்ஃராஸ்ட் வந்திருக்கிறதே அதை புக் செய்யலாம் என்று யோஜனை" என்றாள் சித்ரா.

அதிர்ச்சியில் மௌனம் ஆகி விட்டான் பட்டாபி. ஒன்டோர் ப்ஃரிட்ஜிலேயே மூணு நாள் பழசு ரொம்பி கிடக்கும். இன்னும் த்ரீ டோர் ப்ஃரிட்ஜில் மூணு மாசம் பழையது ரொம்புமோ என்னமோ தன் வயிறின் கதி என்னவாகும் என்று யோசித்தவாறே பட்டாபி சாப்பிட்டு கொண்டிருந்தான். ஒரு வார்த்தை பதில் பேசவில்லை.

"என்ன? பதிலையே காணம்? உங்களுக்குத் தான் போனஸ், எல்டி.ஸி.னுட்டு ஆயிர தெட்டு எக்ஸ்ட்ரா பணம் வரதே. அதனால் இந்த செலவெல்லாம் நம் கையை கடிக்காது" என்று சமாதானம் சொன்னாள் சித்ரா.

"பணத்தை பத்தி யோஜனை இல்லை. இப் போதைக்கு என்னத்துக்கு இத்தனை பெரிய ப்ஃரிஜ்னுட்டுதான் யோஜனை பண்ணிண்டு ருக்கேன். பசங்கள் ரெண்டு பேருமே வெள யூருலே ஹாஸ்டல்லே படிச்சுண்டிருக்கா எப்பவோ லீவுக்குத்தான் தலையை காட்டற நானோ மத்தியான சாப்பாடு ஆபீஸிலே சா பிடறேன். ஒரு வேளை சமையலுக்கு என்ன துக்கு பெரிய ப்ஃரிட்ஜ் அவசியம்?" என்றான் பட்டாபி.

"அதனாலென்ன! பெரிய ப்ஃரிட்ஜினா நமக்கு எத்தனை ஸௌகர்யம்னுட்டு யோசிச் பார்த்தேளா? இப்போது சீஸனில் பட்டாணி விலை கிலோ எட்டு ரூபாய் விக்கறது. பசங் லீவுக்கு வரும் போது விலை கிலோ பதினா ரூபாய் ஆயிடறது. இப்போதே ஒரு நா கிலோ பட்டாணி வாங்கி உரித்து ப்ஃரீஸ் கம்பார்ட்மெண்டில் தள்ளினால் பசங்க வரு போது உபயோகிக்கலாமே? பரத்துக்கு ட டாணி பாத், கட்லட் எல்லாம் ரொம்ப பிடி குமே. ஆனந்தோ டொமேட்டோ கெச்சப் தண்ணியாட்டம் யூஸ் பண்றான். இப்ப கி நாலு ரூபாய் தக்காளி விக்கும் போதே நிறை கெச்சப் செஞ்சு வைக்கலாம். வருஷாந் கணக்கை எடுத்து பார்த்தால் நல்ல கணிசமா சேமிப்பு. இதெல்லாம் யோசிச்சுதான் இ பெரிய ப்ஃரிட்ஜ் வாங்க யோசித்தேன்" எ றாள் சித்ரா. பட்டாபி வாயை திறக்கவில்லை

"இன்னிக்குக் கார்த்தாலே பிரேமா அக் வீட்டிற்கு போயிருந்தேன். (ஆஹா! இப்போ வெளியே வருகிறது நிஜம்) அக்காவிற்கு போ வாரம் விடியோகான் ப்ஃரிட்ஜ் டெலிவரி திருக்கிறார்கள். உங்களக்கா பெரு

போறுமே. நானிருந்த இரண்டரை மணி நேர மும் அதையே புகழ்ந்துண்டிருந்தா. அதுக்கும் மேலே "உன் ஓட்டையை எப்போ விக்கப் போறே. பட்டாபிக்குத்தான் வேணுமானத் தனை சம்பாத்தியம் வரதே. அதை மனசு வந்து செலவழிச்சு டீஸண்ட்டா ஒரு ப்ஃரிட்ஜ் வச்சுக் கோயேன். பணத்தை ஆம்படயான், பொண் டாட்டி ரெண்டு பேரும் என்ன ஊறுகாய் போடறேளா?" என்று வேற கிண்டல்." சித்ரா வின் பேச்சில் ஆவேசம் ஏறியது. மூக்கு சிவந் தது. கண்ணில் தண்ணீர். குரல் ஒரு கட்டை மேல் ஏறியது.

பட்டாபி குனிந்த தலை நிமிரவில்லை. "ஊம், பார்க்கலாம்" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு சாப்பாட்டை முடித்துக் கொண்டு எழுந்தான். கையை அலம்பிக் கொண்டு நேராக போய் படுத்துக் கொண்டு விட்டான். என்றைக்கும் போல் டிவி. பார்க்க வில்லை. சமையலறையிலிருந்து பாத்திரம் உருட்டும் கடமுடா சத்தம். பட்டாபி, காதின் மேல் தலைகாணியை போட்டுக் கொண்டு அழுத்தி மூடிக் கொண்டான்.

ஞாயிற்றுக் கிழமை சுமார் 10 மணி. காலையில் பட்டாபி ஆற, அமர உட்கார்ந்து கொண்டு பேப்பர் வாசித்துக் கொண்டு இருந் தான். யூஷுவலாக சித்ரா ஞாயிற்று கிழமை கார்த்தாலே கடகடவென்று சமையல் எல்லா வற்றையும் முடித்துவிட்டு, பட்டாபியுடன் உட் கார்ந்து கொண்டு வம்பளப்பாள். ஊர் சமாச் சாரம் எல்லாவற்றையும் அலசி, விமர்சனம் செய்து கொண்டு இருப்பாள்.

ஆனால் இந்த ஞாயிற்றுக்கிழமை வீட்டு வேலை முழுவதும் சித்ராவின் மேல். இன் னிக்கு மாத்திரம் என்ன? நாலு நாளாகவே வேலைக்காரி மட்டம். உடம்பு சரி இல் லையோ என்னமோ தெரியவில்லை. சித்ரா விற்கு சமையல் வேலை, வீட்டு வேலை எல் லாமே செய்வதிலேயே பொழுது சென்று கொண்டிருந்தது. திரும்பவும் பெரிய ப்ஃரிட்ஜை பற்றி தொணதொணப்பதற்குக் கூட பொழுது இல்லை.

வாசலில் காலிங் பெல் கர்ரென்று கர்ஜித் தது. பட்டாபி வாசல் கதவை திறந்தான். ஆஜானுபாகுவாக, பரட்டை தலை, பெரிய கிருதா மீசை, சிவந்த கண், ஒரு அழுக்கு லுங்கி யுடன் யாரோ ஒருவன், பட்டாபிக்கு அடை யாளம் புரியவில்லை. "யோவ்! அம்மா இருக் காங்களா?" என்று பெரிய குரலில் இறைந்தான். சித்ராவை பட்டாபி அழைப்பதற்கு முன் அவளே சமையலறையிலிருந்து ஆஜர் ஆகி விட்டாள், கையை புடைவை தலைப்பில் துடைத்துக் கொண்டு. தலை முடியெல்லாம் பறந்து கொண்டிருந்தது. உடம்பெல்லாம் வியர்வை ப்ரவாகம். வேலைக்காரி வராத கோபம் வேற. எல்லாவற்றையும் சேர்த்து வைத் துக் கொண்டு வந்தவனை பார்த்து உச்சஸ் தாயியில்,

"என்னப்பா முனுசாமி! நாகம்மாக்கு என்ன ஆச்சு? நாலு நாளா காணம்? ஒண்ணும் விஷய மும் சொல்லி அனுப்பல்லை. இன்னும் எத் தனை நாள் மட்டம் போடப் போறா? அவள் நாளைலேந்து வரல்லேனாக்க நான் வேற வேலைக்காரியை பாத்துக்கறேன். இந்த மாசம் சம்பளத்துலே நாலு நாள் பணம் கட் பண் ணிண்டு மிச்சம்தான் குடுக்கப் போறேன்" என்று சத்தம் போட்டாள்!

'ஒஹோ இவன்தானா அந்த பேஃமஸ் ரௌடி முனுசாமி. இவன் பேரைக் கேட்டாலே இந்த வட்டாரமே கடகடவென்று நடுங்கும். இவன் கிட்டே என்ன சித்ரா இப்படி கூச்சல் போடறா?' என்று பட்டாபிக்கு ஒரே அதிசயம்.

"என்னாம்மா நீயு? என்ன பேச உடா மலேயே மேலே மேலே கத்திக்குன்னு போறே? நாலு நாளா வவுத்து வலி, சுரம், வாந்தி, பேதினுட்டு கண்ணே திறக்காம இருந்தா. நேத் தைக்கு சாயங்காலம் ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ணினேன். குளுக்கோஸ் தண்ணி ஏத் திக்கிட்டு இருக்காங்க. இன்னைக்கு காலையிலே தான் கண்ணையே தொறந்தா. நீயென்னமோ பேச உடாமே அலர்றே?"

"ஆமா! உன் பொஞ்சாதிக்கு என்ன!

ஃபிரில் கவுன் தைக்கும் போது அதற்கென்று கால்மீட்டர் என்று தனியே வாங்க வேண்டாம். பட்டை ரிப்பன் வேண்டிய அளவு வாங்கி என் பெண் கவுனுக்கு ஃபிரில் வைத்தேன். ஓரம் அடிக்கும் வேலை, பணம் மிச்சமானதுடன், போனசாக ஏகப்பட்ட பராட்டுக்கள்!

— மஞ்சுளா கிருஷ்ணன்





உங்கள் வீட்டு 'ட்ராயிங்ரூம்' சுவரெங்கும் உங்கள் குழந்தை 'க்ரேயான்'னால் ட்ராயிங் வரைந்து தள்ளிவிட்டானா?

அவற்றின் மீது சிறிது பற்பசையைப் பூசிக் காய விடவும். பின் சூடான நீரில் நனைத்த துணியால் துடையுங்கள். கறை? போயே போச்சே....

— உஷா

நன்னா அந்த ராமசாமி முதலியார் வீட்டு கருவாடு, கோழி எல்லாம் ஒரு கை பாத்திருப்பா. என்னமோ காணாததை கண்ட மாதிரி சாப்பிட்டு வயித்தை ரொப்பிண்டா. யாரு என்ன பண்ண முடியும்?"

"ஏய் அம்மோவ்! நீ சும்மா மத்தவங்க மேலே பழி போடதம்மா. இன்னிக்குக் காலேல கண்ண துறந்த பேசினா என் பெஞ்சாதி. நீ என்னமோ நாலு நாளு முன்னாலே என்னமோ சோறு குடுத்தியாம். நசநசனுட்டு இருந்ததாம். அத்த துண்ணுட்டு ஒரே வலி. உங்க வீட்டு பழசு, ஊசி போன சமாச்சாரம் எல்லாம் வேணும்னாக்க உன் ஊட்டுக்காரருக்குக் குடு. இல்லா நீ துண்ணு. இல்லைனாக்க வீதி நாயிக்கு விட்டெறி. என் பெஞ்சாதி வயிறு என்ன குப்ப தொட்டியா?"

"என்னப்பா இது" சித்ராவின் குரல் இரண்டு கட்டை கீழே இறங்கியது. உள்ளூர பயம், நடுக்கம். அவள் நாகம்மாக்குக் கொடுத்த சாப்பாடு என்னமோ கொஞ்சம் நச, நச்வென்று தான் இருந்தது. அதோடு கொடுத்த கூட்டும் பழசு... "நான் அப்படியெல்லாம் பழசு எல்லாம் கொடுத்து பழக்கமே இல்லையே. மிஞ்சி போன சாப்பாடு எல்லாம் தூரக் கொட்டிடுவேனே. நாங்களும் சாப்பிட மாட்டோம். வேலைக்காரிக்கும் கொடுக்க மாட்டோம்" என்று சமாதானமாக ஆரம்பித்தாள். ஆனால் முனுசாமிக்குக் காதில் ஒன்றும் ஏறவில்லை. "ஊம், என்னாத்துக்கு இந்த மாதிரி பொய் வேற சொல்றே. உங்க ஊட்டு சாப்பாடு கைவரிசை தான் எல்லாம். அந்த முதலியார் வீட்டுக்காரங்க எல்லாம்தான் வெளியூரு போயிருக்காங்களே. உன்னோட கைவேலை - எனக்கு ஆஸ்பத்திரி சார்ஜ், மருந்து, குளூக்கோஸ்! டாக்டருனுட்டு ஐநூறு ரூபாய் பழுத்திடுத்து தெரியுமா? இந்த லட்சணத்துலே நாகம்மாவ வேலையவிட்டு துரத்த போறயா?" என்று இறைந்தான்.

இந்த நாடகத்தைப் பார்க்க ஒரு கும்பல் வேற சேர ஆரம்பித்தது. கீழ் ப்ஃளாட் வம்பி மிஸஸ் அம்மணி மேனன், தோட்டத்தில் பூ பறிப்பது போல் வந்து நின்று கொண்டு மேல் பக்கம் அண்ணாந்து பார்த்தாள். எதி ப்ஃளாட் சேதுமாதவன் கையில் பேப்பருட முகத்தில் கண்ணாடியுடன், கதவின் பி பக்கத்திலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டி தார். மிஸஸ் சேதுமாதவன் கரண்டியும் கை மாக ஜன்னல் பக்கத்தில் ஆஜர். பிள்ளை ரா னுடைய சிநேகிதர்கள் ரோட்டில் சைக்கி நிறுத்திக் கொண்டு சுவாரஸ்யமாக பார்த்து கொண்டிருந்தார்கள். வண்டியில் வாழைப்ப தள்ளிக் கொண்டு போகும் சீதாராமன், பெருக்கும் லட்சுமி, .......

மெதுவாக ஐநூறு ரூபாய் நோட்டுட வெளியே வந்தான் பட்டாபி. சித்ராவிற்கு மு சாமியை சமாளிக்க சமத்து போறாது என் நன்றாக தெரியும். மெதுவான குர முனுசாமியை வராண்டாவிற்குள் அழைத் கொண்டு, "இந்தாப்பா - உன் ஆஸ்பத் சார்ஜ் எல்லாம் நான் குடுத்துடறேன். நாகம் வுக்கு உடம்பு நன்றாக தேவலை ஆனப் வேலைக்கு அனுப்பு. அது முட்டும் நா டெம்பரவரியாக வேற வேலைக்காரி பார்த் கறோம்" என்று சமாதானமாக சொ ரூபாயை கொடுத்து முனுசாமியை அனுப்பி வைத்தான்.

ராத்திரி மணி ஒன்பது இருக் 'இண்டியா டுடே'யில் மூழ்கி இருந்தான் டாபி. "என்ன உங்களைத்தானே!" சி வேலை எல்லாம் முடித்துக் கொண்டு யிங்க் ரூமில் ஆஜர். "ஊம்" என்றவாறே ராவை பார்த்தான். "நானும் யோசித்துப் தேன். நீங்க சொல்லறது போல பெரிய ப்ஃ ஜெல்லாம் சுத்த அனாவசியம்." பட்டா முழி பிதுங்கியது.

"இந்த பெரிய ப்ஃரிட்ஜை வித்துட் சின்ன ப்ஃரிட்ஜா பால், தயிர் ஒரு இர நாள் கறிகாய் வைக்கிற மாதிரி வாங் போதும். நீங்க என்ன சொல்றீங்க?"

வாழ்க முனுசாமி, வளர்க என் என்று முனுசாமிக்கு மானஸிகமாக செலுத்திவிட்டு, சித்ராவின் யோசனை பூரணமாக ஆமோதித்தான் பட்டாபி.



# பாட்டியின் நகைப்பெட்டி

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்

"ஃபாதர் எஸ்காண்டேன்னு ஒரு வெள்ளைக்காரப் பாதிரி. அவராக்கும் எனக்கு ப்ரைஸ் கொடுத்தார். அப்போ நாலு வயசு" பாட்டி நிதானமாய்ச் சொன்னாள்...

"பாட்டி... இன்னும் ஒரே ஒரு தடவை சுந்தரப் பரம்பொருளைப் பாடு பாட்டி. ப்ளீஸ் ப்பாட்டி..." பெங்களூர்ப் பேரன் கெஞ்சினான். ஆறு வயது ஆகிறது அவனுக்கு...

"ஓ... பேஷா சொல்றேனே... அதுக்கென்ன அட்டி... தேவகி நந்தன ஷ்ரஷ்டா... ருக்கு, வாசல் வெளக்க ஏத்து. அஸ்தமிச்சு நாலு நாழியாச்சு..." பாட்டி பேசிக் கொண்டே போனாள். பேச்சு குழறலடித்தது...

"டேய்... விளையாட வாடா போகலாம்..." பாட்டியின் மற்றொரு பேரன் விளை யாட அழைத்தான். குழந்தைகள் வாசலுக்கு ஓடின...

சுசித்ரா கூடத்தில் பூக்கட்டிக் கொண்டிருந்தாள். இது பெங்களூரில் இல்லாத சமாசாரம். அவள் வந்து இன்றோடு பத்து நாட்களாகப் போகிறது. தனியே இருக்கும் கணவனை நினைத்துக் கவலைப்பட்டாள்...

தந்தி வந்தது பாட்டி சீரியஸ் என்று... சங்கரன் சுசித்ராவையும், பையனையும் மட்டும் பஸ் ஏற்றிவிட்டான். அவனால் உடனே வர முடியாது. 'ஏதாவது ஒன்று' ஆனால் மட்டுமே வரமுடியும். ஆபீசில் லீவுப் பிரச்னை... அத்துடன் எம்.டி. அத்திப் பூத்தாற் போல் வர நேரிடலாம்...

சுசித்ராவின் கவலை அது இல்லை... சங்கரனின் நண்பர்கள் இன்னும் விடலைப் பருவத்தைத் தாண்டாதவர்கள். வீட்டில் பெண் இல்லை என்பது அவர்களுக்கு விடுமுறைக் காலம் போல. குவளை குவளையாய் பீரும், விடிய விடிய தொள்ளாயிரத்து நாலும் அமர்க்களப்படும்...

சுசித்ராவின் மாமியாருக்கு, அதுதான் பாட்டிக்கு அடிபட்டுவிட்டது. பின் மண்டையில் சரியான அடி. தோட்டத்தில் நீர் நிறைந்த கிணற்றடிப் பாசி செய்த கைங்கர்யம்... இல்லாவிட்டால் ஓர் இடத்தில் படுக்கிறவளா அவள்...? அடிக்கடி நினைவு போய் விடுகிறது... திடீரென்று பேச்சு சரளமாய் வருகிறது... பள்ளிக்கூட நாட்களைத் துல்லியமாய்ச் சொல்கிறாள்...

பிள்ளைகளுக்குப் பாட்டியின் மேல் அபாரப் பிரியம்... பிரியம் என்பதைவிட பக்தி என்றுதான் சொல்ல வேண்டும். காரணம் உண்டு. அவர்கள் அப்பாவைவிட அம்மாவுடன்தான் அதிகம் இருந்திருக்கிறார்கள். சங்கரன் பிறந்த கொஞ்ச நாட்களில் பாட்டிக்கும் அவள் கணவருக்கும் ஏற்பட்ட வேற்றுமையில் அவர் கோபித்துக் கொண்டு போனவர்தான்... அவர் இறந்த செய்தி கூட யார் மூலமோ ரொம்பத் தாமதமாகவே கிடைத்தது. பாட்டி போவதற்கு முன்பே காரியம் ஆகி விட்டது.

பாட்டி கஷ்டப்பட்டாள். பையன்கள்

மூன்று பேரும் நன்கு நிமிர்ந்து விட்டார்கள். பேரன், பேத்தி என்று குடும்பம் பெருகிவிட்டது... இன்றும் அவள்தான் எஜமானி.

பாட்டிக்கும் அவளுடைய கணவருக்கும் வேற்றுமை வரக் காரணமானவை பாட்டியின் நகைகள் என்றொரு ரகசியம்... அது நிஜம் தானா என்று யாராலும் சரிபார்த்துக் கொள்ள முடியவில்லை... தாத்தா, ஏதோ ஓர் அவசரத்திற்குக் கேட்டபோது பாட்டி சுணங்கினாளாம். பெண்ணான அவளுக்கே அவ்வளவு என்றால் ஆண் பிள்ளைக்கு எப்படி இருக்கும். நீயும் வேண்டாம். உன் நகையும் வேண்டாம் என்று போய்விட்டார்.

இந்தச் செய்திகள் யாவும் பாட்டியின் சம வயதுக்காரர்கள் துண்டு துண்டாய்ச் சொன்னவை... பாட்டி காதிற்கு மட்டும் இன்னார் சொன்னது என்று தெரிந்துவிட்டால் ஆய்ந்து விடுவாள் ஆய்ந்து...

பாட்டி ஒரு விஷயத்தில் தீவிரமாக இருந்தாள். தாத்தா போன பிறகு, அதாவது சண்டை போட்டுக் கிளம்பிய பிறகு அவள் நகைகளை அணியவில்லை. ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டினாள். சாவியை அவள் கழுத்திலேயே தொங்க விட்டுக் கொண்டாள். எவ்வளவோ, கஷ்டங்களுக்கு அந்த நகைகளை விற்றிருக்க முடியும்... ரொம்பவும் பிடிவாதம்தான்.

தாத்தா ரொம்பவும் வசதிக்காரர் தான். பலத்த போட்டிகளுக்கு இடையில்தான் பாட்டி அவரைக் கைப்பிடித்தாள். அவ்வளவு வசதியானவர் மனைவியிடம் ஏன் நகைகளைக் கேட்க வேண்டும்? அங்குதான் யாவருக்கும் அவருடைய நடத்தையின் மீது ஐயம் வந்தது... அதை ஊர்ஜிதம் செய்வது போல்தான் அவரும் பாட்டியைக் கடைசிவரை திரும்பிப் பார்க்காமலே இருந்தார்... பாட்டி நகைப்பெட்டியைப் புருஷனைப் போல் வைத்திருந்தாள்...

சுசித்ரா பெருமூச்சு விட்டுக் கொண்டாள். மாமியார் மிகவும் நல்லவள் தான். தன் மகன்களுக்குக் கல்யாணம் பே
போது மாட்டுப் பெண்கள் இவ்வளவு
களுடன் வரவேண்டும் என்று கண்டி
போடவில்லை.

ஆயினும் எத்தனை நாள்தான் இப்ப
இருப்பது? பையனின். ஸ்கூல் வீண
போகிறது... வீடு அங்கு என்ன கதியில்
கிறதோ...? மாமியாருக்கு ஏதாவது ஒன்று
ஊர் திரும்புவது சாத்தியம்தானா....?

சுசித்ரா ஒரு விஷயத்திற்காகப் பொறு
காத்தாள். வந்தது வந்தாயிற்று, தான்
பட்டுப் போன பின்பு மாமியார் மூச்சு நி
விட்டால் எல்லாம் வியர்த்தமாகிவிடும்.
கால நகைகள். அ
பெட்டியைத் தி
நகைகளைப் பா
செய்த பின்பு
வதே புத்திச
தனம். இ
மெட்ராஸ்
பாட்டி
இரண்ட
மரும
மட்
எதற்
வே
வெட்
வி



உட்கார்ந்திருக்கிறாளாம்....? புண்ணியவதி... அதிர்ஷ்டக்காரி... அவளுடைய உடன் பிறந்தவர்கள் மெட்ராஸில் இருக்கிறார்கள். ஹாயாகக் குழந்தைகளையும் கணவனையும் ஒப்படைத்துவிட்டாள்...

வைதேகி இரண்டாவது மருமகள் ஸ்வெட்டர் போட்டுக் கொண்டே சுசித்ராவை ஓரக் கண்ணால் பார்த்தாள். அவளுக்குச் சுசித்ராவைக் கண்டால் ஆகாது... மூன்றாம் வருடம் லீவிற்குக் குழந்தைகள் பெங்களூர்ச் சித்தியிடம் போக ஆசைப்பட்டன. டூர் போவதால் சரிப்படாது என்று கூசாமல் முகத்தில் அடித்தவள். தினம் தினமா அவள் வீட்டுக்குப் போகப் போகிறோம்... ம்... மனசில்லை...

வைதேகி பற்களை நறநறத்தாள்... சப்தமின்றி... இருக்கட்டும்... மாமியார் போகட்டும். ஒரு கை பார்க்கிறேன். இவளுக்கென்ன, சிங்கம் மாதிரி பிள்ளைக் குழந்தைகள்.. எனக்கு ரெண்டுமே பெண்கள்... இந்த ஒரு பாயிண்டே போதும். மாமியாரின் நகைகளில் வழவழா, கொழகொழா என்று பங்கே பிரிக்கக் கூடாது.

நல்லவேளை, அவளுடைய கணவன் மணி வரவில்லை. அண்ணா, தம்பியைக் கண்டால் அவருக்குச் சித்தம் தடுமாறும். வைதேகி ஏமாறுவதாக இல்லை. இது உரிமைப் பிரச்னை... கண் குத்திப் பாம்பாய் இருக்க வேண்டும்... கொஞ்சம் அயர்ந்தால் பெட்டியே காணாமல் போய்விடும், இந்த வீட்டில். கொஞ்சம் தனிமை கிடைத்தால் போதும். மாமியாரிடம் நைச்சியமாய்ப் பேசி மூன்றாம் நபர் அறியாமல் பெட்டியைத் திறந்து வேண்டியதை எடுத்துக் கொள்ளலாம்... அந்த நாள் நகை, ஹ்ம்... இவளானால் அசையாமல் மாமியாரைக் காவல் காக்கிறாள்...

இவர்கள் இருவரையும் எரித்து விடுவது போல் பார்த்துக் கொண்டே அடைக்கு அரைத்துக் கொண்டிருந்தாள் ருக்கு. இருந்திருந்து இந்தக் குடும்பத்தின் மூத்த மாட்டுப் பெண்ணாய் வந்திருக்க வேண்டாம். இதுநாள் வரை என்ன சுகத்தைக் கண்டோம். அவளவள் மெட்ராஸ் என்ன, பெங்களூர் என்ன என்று கண்காணாமல் இருந்து கொண்டு ஆட்டம் போடுகிறார்கள். மேக்ஸி என்ன, ஷாம்பு போட்டுப் பறக்கும் தலை என்ன...? மாமியார் இன்னும் ஒன்பது கஜ மடிசாரைத் தாண்டவிட மாட்டேன் என்கிறாள். எந்தக் காலத்தில் இருக்கிறோம். இன்



னும் குமுட்டி அடு[illegible]; வெண்கல உருளி இதுதான் சமையலுக்கு... வெங்காயம், பூண்டு கூடாது...

மகராசிகள் வந்தார்களே, கொஞ்சம் இரக்க சுபாவம் கொண்டு என்னைப் பார்க்கலாமா கூடாதா...? கொஞ்சம் ஒத்தாசை செய்தால் என்ன...? இவர்களுக்கும் சேர்த்துப் பொங்கிப் போடவா பகவான் என்னைப் பெண்ணாய்ப் படைத்தான்?

சோழியன் குடுமி' சும்மா ஆடுமா? இத்தனை நாளாய் இருந்தாளா, போனாளா என்று கூடப் பார்க்க வராதவர்கள் இன்றைக்குப் பிசினைப் போல ஏன் ஒட்டி இருக்கிறார்கள்? அங்குதான் சூட்சுமமே...

மாமியாரைவிட அவள் தலைக்குக் கீழே இருக்கும் அந்தப் பெட்டி மீதுதான் இவர்களுக்கு அக்கறையே...

மாமியாரின் வைத்தியத்திற்குப் பணம் தண்ணீராய்ச் செலவாகிறது... ஜமுக்காள சைஸிற்கு மருந்துச்சீட்டு தந்துவிட்டுப் போயிருக்கிறார் டாக்டர். எல்லாம் இவர் தலையில்... கோபுண்ணா, கோபுண்ணா என்று பரிவட்டம் கட்டிவிட்டார்கள், இரண்டு மச்சினர்களும். ஏன் வைத்தியத்திற்குப் பணம் கொடுத்து அனுப்புவது பெண்டாட்டிகளிடம். பாத்தியதை உண்டா இல்லையா? இவரானால் தாயாருக்குச் செய்ய வேண்டிய கடமை ருக்கு என்கிறார். வாஸ்தவம்தான். இவர் மட்டும் பிள்ளை என்றால் யார் இங்கே கேட்கப் போகிறார்கள். தடித்தடியாய் மூன்று பேரை மாமனார் விட்டுப் போயிருக்கிறார். சும்மா இல்லை. எத்தனை நாளைக்குத்தான் மூத்தது மோழை என்றிருக்கிறது?

அவரை நம்பிப் புண்ணியம் இல்லை. நேரடியாகக் கோதாவில் இறங்க வேண்டியது தான். முதலில் மாமியாருக்கு [illegible] சொல்ல வேண்டும். அப்புறம் நான் செய்த சிசுருஷை. நான் இங்கு கை ஒடியக் கிழவியின் மூத்திரத் துணியைக் கசக்கிக் கொண்டிருப்பேன். அலங்காமல் ஆடாமல் நகையைப் பங்கிடு செய்து கொண்டு போவார்களாமா... ஆசை... ஆசை...

தெய்வம் அறியச் சொல்கிறேன், இவ்வளவு நாளாய் மாமியாருடன் இருக்கிறேன். 'பாருடி ருக்கு' என்று மாமியார் ஒரு நாளாவது பெட்டியைத் திறந்து நகைகளைக் காட்டியதில்லை. அவ்வளவு நம்பிக்கை... அடித்துக் கொண்டு அழலாம் போலிருக்கிறது... பூதம் காப்பது போல் பெட்டியைக் காப்பாற்றுகிறார் மாமியார். போகும்போது இதையும் கொண்டு போவதுபோல். இவ்வளவு வஞ்சனை வேண்டாம். பேர்தான் பெத்த பேர். மூத்த நாட்டுப் பெண்... வேலைக்காரி கூட ஒரு வேளைக் காப்பி வரவில்லை என்றால் சட்டமாகக் கேட்கிறாள்... முணுமுணுத்துப் பைத்தியமாக ஆகப் போகிறேன்.

ருக்கு தனக்குள் தலையை ஆட்டிக் கொண்டாள். நான் ஏன் பைத்தியமாக வேண்டும்? லோகத்தில் நியாயம் என்று ஒன்று உண்டு. மாய்ந்து மாய்ந்து நான் செய்தது ஊர் பூராவுக்கும் தெரியும். சாட்சி சொல்ல ஊரையே கூண்டில் ஏற்றுகிறேன். அவர்கள் பார்த்துச் சொல்லட்டுமே நல்லது கெட்டதை.

ருக்கு அடை மாவைப் பாத்திரத்தில் வைத்து மூடினாள். சமையலறை நிலையில் தலை வைத்துக் கண் செருக உறங்கினாள்.

**ரொ**ம்பவும் சோதிக்காமல் பாட்டி செத்துப் போனாள். தூக்கத்தோடு தூக்கமாய்ப் போய்ச் சேர்ந்தாள்.



கால் கிலோ மைதா மாவிற்கு 50 கிராம் அளவு வெந்த பருப்பு பிரிட்ஜில் இருந்ததை எடுத்து, உப்பு சேர்த்துப் பிசைந்து சப்பாத்தி செய்தால், அட! இது என்ன, இத்தனை மிருதுவான சப்பாத்தி என்று வீட்டிலுள்ளவர்கள் ஒரு பிடிபிடித்தார்கள்.

- பூங்கோதை

பையன்கள் கூடினார்கள். காரியங்கள்
ஜாமென்று நடந்தன. 'குறைவு இல்ல
நடத்திய பெருமை மாட்டுப் பெண்களு
என்று துக்கத்திற்கு வந்தவர்கள் சொன்
கள். மாமியாருக்குச் செய்வதில் என்ன
போட்டி... தத்தம் மருமகள்களும் இருக்கி
களே...' என்று வேறு பொருமிக் கெ
டார்கள்.

**வீ**ட்டு மனிதர்கள் மட்டுமே இருந்த
குழந்தைகளை விளையாட அனுப்பிவி
மொட்டை மாடியில் மூன்று பையன்க
மனைவிகளும் மட்டும் இருந்தார்கள். பா
முடிந்ததும் அடுத்த பஸ்ஸில் போவ
ஏற்பாடு.

நகைப் பெட்டி நடுவே இருந்தது.

"பின்னால வா(ய்) புளிச்சுதோ மா
புளிச்சுதோன்னு யாரும் பேசப்படாது. அ
ஒரு ஆசாரிய வச்சு எடை போட்டுச் சம
பிரிச்சுட்டா எல்லாருக்கும் நல்லது..." மூ
மவள் சுசித்ரா ஆரம்பித்தாள்.

"கழுதையும் குதிரையும் ஒண்
எனக்குப் பொண்ணு ரெண்டுமே. அ
இருந்தா அவளே எனக்குன்னு பார்த்து
கொடுப்பா..." ஆணி அடித்தாற்போ
சொன்னாள் வைதேகி.

"நல்லா இருக்கு... கேட்டா எல்ல
சிரிப்பா... வெல்லம் திங்கறது ஒருத்தர்.
லைச் சூப்பறது ஒருத்தரா... மூத்தவங்கற
மரியாதையே போச்சே. இதுக்குத்தான் அ
இருக்கணும்கறது... வாய்க்கு வாய் 
லுவா... ருக்கு, நீதாண்டி என்னை அப்பி
கொண்டிருக்கேன்னு... அப்பிடி பா
பார்த்துச் செஞ்சிருக்கேன்" ருக்கு அ
யைச் சேர்த்துக் கொண்டாள். இப்
அழாவிட்டால் ஒரேயடியாய் அழ வே
யதுதான்...

சங்கரன், மணி, கோபு மூவரும் 
களை அடக்கச் சிரமப்பட்டு முடிய
சும்மா இருக்க வேண்டியதாயிற்று. தம
ஏதோ சமரசம் பேசிக் கொண்டார்கள்

ஆசாரி தராசுடன் வந்தார்.

பூட்டு லேசில் திறக்கவில்லை. எண்
போட்ட பின்பே திறக்கச் சம்மதித்தது.

மூன்று நாட்டுப் பெண்களும் ஆவ
திடுக்கிட்ட இதயத்துடன் பெட்டி திறப்
பார்த்தனர்.

கும்மென்று வாடை கிளம்ப, 
பெட்டியில், களிம்பு ஏறி, என்ன 
ஆசாரி சிரித்தார். "அவ்வளவும் பித்தளை
ஹ்ம்... ஒண்ணும் ஒப்பேறாது."

மொட்டை மாடியில் திறந்த 
சீந்துவாரின்றி அப்படியே இருந்தது.

வீடு நிசப்தமாக இருந்தது.

# அட்டைப் போடுகிறார் அண்ணாசாமி

**ப**த்மா தனக்குள் பொருமிக் கொண்டிருந்தாள்...

'படிக்கிறது ஒண்ணாம் கிளாஸ். சுமக்கிறதோ ஒம்பது கிலோ நோட்டுப் புத்தகம். அது என்ன படிப்பாளோ! என்ன சொல்லித் தருவாளோ! ஜி.கே., என்விரான்மெண்ட சயின்ஸ், அ இதுன்னு நோட்டு புத்தகமுமாய்ச் சேர்த் மொத்தம் இருபது உரு படி. இன்னும் ஏதே கொஞ்சம் சொச்சம் மிச்சம் இருக்காப்ல இருக்கு. இரண்டு நாள் கழிச்சுத் தருவாங்களாம்.

படாபடா ஸ்கூல். ஆளைத் தேளைப் பிடித்துத்தான் இடம் கிடைச்சுது. லீவ் நாளிலேயே ஃபீஸ் கட்டின கையுடன் நோட்டு, புத்தகமெல்லாம் கொடுத்தாச்சு. இதையெல்லாம் சுமக்கப்போற குட்டி கூட ஊரில் இல்லை. லீவுக்கு சித்தி வீட்டுக்குப் போயிருக்கு. நாளைக்குத்தான் வரா. அவ வரத்துக்குள்ளே எல்லாத்துக்கும் அட்டைபோட்டு, லேபிள் ஒட்டி, ரெடியா வைச்சாகணும்.

இன்னிக்கு இந்த மனுஷன் ஆபீசிலிருந்து வந்ததும் ஈசிசேரில் மல்லாந்துக்க விடக் கூடாது. ரெக்கமண்டே ஷன், இன்டர்வ்யூக்குன்னு நாம இத்தனை அலை அலைஞ்சிருக்கோம். ஒரு ஒரு மணி நே உட்கார்ந்து அட்டையாவது போடட்டும். அ ஆயுசு ஐநூறு!' நடையில் சைக்கிள் பெல் சத் அப்புறம் செருப்பு சத்தம் கேட்டது.

''உஸ்ஸப்பாடா இன்னிக்கு வெய்ய தாளிச்சிடுத்து. கட்டாயம் நூத்தியஞ்சு இ கும். டி.வி.யிலே நியூஸ் சொல்லும்பே கேட்கணும். நான் சொல்றதையே சொ வான். முன்னே பின்னே ஒரு டிகிரி கு யாது பார்.''

''உள்ளே வரச்சேயே அலட்ட எனக்குப் பத்திண்டு வருது 110டி கோபம்!''

''அப்ப உன் தலையிலேயே வெ போட்டுடலாம் காஸ் செலவு மிச்சம்.''

டிபன் பாக்ஸை ஸிங்க்கில் போட்டுவி ஆபீஸ் உடையிலிருந்து மப்டிக்கு ம சளார் பளார் என்று முகத்திலும் கழுத்தி தண்ணீரை அடித் கொண்டு ஹாலு வந்தார் அண்ணா

''என்ன ப்ரெ பேப்பர் வாங்கி ருக்கே நோட்டுக் அட்டை போ



போறியா?"

''போடப் போறியாவா? நீங்கதான் அத் தனை நோட்புக் குக்கும் இன் னிக்கே, இப்பவே, இங்கேயே



போடப்போறீங்க."

"அட்டையா? நானா?" மசாலா விளம்பரம் மாதிரி பின் வாங்கினார்.

"இதோ பாருங்க. நாளைக்குக் குழந்தை வறா. உங்கப்பாதான் அட்டை போட்டுக் கொடுத்தா ரென்று சொல்ல வேண்டாமா?''

"சரி நீ சொன்னதுக்காகப் போடலே. நம்ம பாப்புக் குட் டிக்காகப் போடறேன்" என்ற வாறே ப்ரௌன் பேப்பரையும் நோட்டுப் புத்தகங்களையும் எடுத்து வைத்துக் கொண்டு உட் கார்ந்தார்.

"சித்தே அந்த 'கம்'மை யும் கத்தரிக்கோலையும் எடுத்துக் கொடேன்."

''சபக்குன்னு

சிந்தாரவி

ப்ரெளன் பேப்பரை மட்டும் எடுத்து வைச்சுண்டு உட்காந்துட்டா ஆச்சா? அதை எடு இதை எடுன்னு அதிகாரம் பண்ணிண்டு. எல்லாத்தையும் நீங்களே எடுத்து வைச்சுண்டு உட்காருங்க."

"அப்ப நீயே போடு. குழந்தைக்காகத்தான் அட்டை போடறேன். உனக்காக இல்லை."

"ஐயோ சாமி! இந்தாங்க 'கம்'. இந்தாங்க கத்ரிக்கோல். ஒரு வேலையான உருப்படியா செய்யுங்க."

"ஐயோ சாமி இல்லைடி. அண்ணாசாமி."

"இன்னும் ஒரே ஒரு ரிக்வெஸ்ட். இந்தப் பயலை விட்டுட்டுப் போறேன் கால் மணியிலே வந்துடறேன். இன்னிக்கு வெள்ளிக் கிழமை. கோவில்லே கூட்டம் நெரிச்சுடும். இவனையும் அழைச்சிகிட்டுப் போனா நசுங்கி நண்டு வண்டலாயிடுவான்."

"போ. போ. நீ இல்லைன்னா நான் நிம்மதியா வேலை பண்ணுவேன்."

பெரிது பெரிதாய் இருந்த ப்ரெளன் பேப்பரை இரண்டாய் மடித்து நாலாய் மடித்து கையில் அழுத்தி நீவிவிட்டுக் கொண்டே சொன்னார் அண்ணாசாமி. பத்மா படி இறங்கிப் போனாள்.

'அடடா ப்ளேடு எடுத்து வைச்சுக்க மறந்துட்டோமே பத்மா.... ஆ...'

அட அவ பறந்து போய் ஒரு நிமிஷம் ஆச்சு. 'அவள் பறந்து போனாளே'. பாடினவாறே ப்ளேடைத் தேடிப் போனார். அவர் போன அடுத்த நிமிஷம் ப்ரெளன் பேப்பரும் திசைக் கொன்றாய்... ஃபேன் காற்றில் பறந்தது.

ப்ளேடுடன் திரும்பியவர் 'அட சனியனே விட்டேனா பார் உன்னை' என்று ஒவ்வொன்றாய் ஓடி ஓடிப் பொறுக்கினார்.

ஒன்றரை வயது அஸ்வின் 'ஐய் அப்பா ஓடடா! அப்பா ஓடடா!'' என்றான் கை கொட்டியபடி.

"ஓடடாவா! ஓடமாட்டேண்டா ஓட்மாட்டேன்!'' என்று எல்லாவற்றையும் மீண்டும் அடக்கி மடக்கி கம் பாட்டிலை வெயிட்டுக்கு வைத்தார்.

'முதல்லே நியூஸ் பேப்பர் அட்டை. அதுக்கு மேலேதான் ப்ரெளன் பேப்பர்' எப்போதோ வாரத்தில் ஒரு சனிக்கிழமை ஞாயிற்றுக் கிழமை லீவுநாள் என்று அபூர்வமாய்தான் நியூஸ் பேப்பர் வாங்குவது வழக்கம். அங்கே இங்கே கிடந்த நியூஸ் பேப்பரை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தார். ப்ரெளன் பேப்பரை பொறுக்கின வேகத்தில் ப்ளேடை எங்கோ வைத்து விட்டார்.

'ப்ளேடை எங்கே வைத்தேன்? ஒரு செட் ப்ளேடு அப்படியே கொண்டுவந்தேனே நாளைக்கு ஷேவ் பணணிக்க வேணுமே ஷேவிக்கவேண்டும் ஐயா! தினம் தினம் ஷேவிக்க வேண்டும் ஐயா' என்று தன் முன் போல் முளைத்த தாடியைத் தடவிக் கொண்டே கர்நாடகப் பாட்டு பாணியில் இழுத்தார்.

'சரி போ. என் கையே எனக்குதவி' கையாலேயே கிசிட்றேன் கிசி' மீண்டும் உட்கார்ந்தார் நியூஸ் பேப்பரை மடித்து, அழுத்தி நீவி விட்டார். பையன் அஸ்வின் 'தேமே'ன்னு ஒரு மூலையில் எந்தயோ நோண்டிக் கொண்டிருந்தான்.

நன்றாய் நியூஸ் பேப்பரை நீவிட்டபின் கிழித்தார். சர்....சர்....சர்.... மெளன்ட் ரோட்டிலிருந்து சைதாப்பேட்டைக்கு, நேரே போகாமல் நுங்கம்பாக்கத்துக்காய் திரும்பி விட்டது. படு கோணல் படுகோணல். 'சே சே எல்லாம் சதி அவ கால்மணி ஆகும்னா, அரைமணியாகும் வர்றதுக்கு. பத்து நோட்டுகளுக்கான அட்டை போடணும் என்று தன் சதியை நினைத்துக் கொண்டே அந்த உத்தம பதி அவலட்சணமாக கிழிந்த நியூஸ் பேப்பரை பலங்கொண்ட மட்டும் நசுக்கி, உருண்டையாக்கி தூக்கித் தூக்கி எறிந்தார். அவை குழந்தை அருகில் போய் விழுந்தன

குழந்தை திடீரென்று "வீல் வீல்" என்று கத்தியது. "ஏண்டா மேலே படாமே தானேடா போட்டேன். நீ வேற ஏன் அழறே?"

ப்ரெளன் பேப்பர், நோட்டுப் புத்தகம் ஸ்கேல், கத்தரிக்கோல், கம், நியூஸ்பேப்பர் உருண்டை, எல்லாத்தையும் 'தமா திமா'என்று அவசர அவசரமாய் தாண்டிக்குழந்தையிடம் ஓடினார். அவர் தேடிய 'ப்ளேடு' குழந்தையின் கையில். ரத்தம் 'கடகட'வென்று கொட்டியது குழந்தையை அள்ளி எடுத்துக் கொண்டு வாஷ் பேஸினுக்கு ஓடினார். ரத்தத்தை அலம்பி குழந்தைக் கதறக் கதற பஞ்சில் டெட்டால் வைத்து அமுக்கி, வேர்த்து விறுவிறுத்து போனார் அண்ணாசாமி. குழந்தையை மடியில்







*என் பெண் எல்.கே.ஜி. படிக்கிறாள். விடுமுறை நாளில் ஏதாவது வார்த்தைகளுக்கு ஸ்பெல்லிங் சொல்லித் தரலாம் என்றால் 'வீவு நாள்ல கூட படிப்பா?' என்பது போல் அலுப்பாள். உடனே என் கணவரின் யோசனைபடி அத்தை, மாமா, பாட்டி என்று உறவினர்களுக்குப் பத்து வார்த்தைகளில் நலம் விசாரித்துக் கடிதம் எழுத பழக்கினேன். தான் கடிதம் எழுதுகிறோம் என்ற மிதப்பில் நான் சொல்லும் ஸ்பெல்லிங்கை எழுதுவாள்.*

*– கி. மஞ்சுளா*

போட்டு சமாதானம் செய்து முடிக்க பத்து நிமிடம் ஆயிற்று. விசித்து விசித்து அழுது கொண்டே குழந்தை தூங்கிப் போனான்.

'டொக் டொக்!'– கதவுச் சத்தம் 'ஐயையோ வந்துட்டாளே' கதவைத் திறந்தால், ஒரு ரெட்டைப் பின்னல் குட்டைப் பாவாடை. "மாமா எங்க வீட்டு தினமணி பேப்பர் மாமி மத்தியானம் வாங்கிண்டா. எங்கப்பா கேக்கறா." தினமணியா?... அண்ணாசாமிக்கு மூளையில் ஏதோ பொறிதட்டியது.

"அது... அது மாடிலே தாடி மாமா வாங்கிட்டு போயிருப்பார். ஓசி அடிக்கலாம். தப்பில்லே. ஆனா ஓசிலே ஓசி ரொம்ப தப்பு. ரொம்ப ரொம்ப தப்பு. மாமி கோவிலுக்குப் போயிருக்கா. வரட்டும். வாங்கித் தரச் சொல்றேன்."

பாதிக் கதவைத் திறந்து பதில் சொல்லிட்டு பட்டென்று கதவைச் சாத்தினார். காலண்டரைப் பார்த்தார். பத்து தேதி பத்து.

சற்று முன் பந்து விளையாடிய பேப்பர் உருண்டை காலடியில் ஓடி வந்தது. எடுத்தார்; உருண்டையைப் பிரித்தார்: 'பத்து!' பத்து! அதிலும் பத்து.

'பேப்பர் ஓசி வாங்கின பத்தூ... உன்னை ஒரே மொத்து' காலை ஓங்கி ஒரு உதை உதைத்தார் 'பசக்' இதென்ன? காலைத் தூக்கினால் ப்ரௌன் பேப்பர் காலுடன் வந்தது.

"ஐய்யைய்ய."

கூம் அத்தனையும் கொட்டி... காலில் ஒட்டிய ப்ரௌன் பேப்பரை லாவகமாய் காலிலிருந்து கழற்றினார். பேப்பரிலிருந்து நீளமாய் பிசுக்காய் பாகுமாதிரி 'கம்' வழிந்து கொண்டிருந்தது. 'அட சனியனே பனியனெல்லாம் வழியறயே! கையில் இசுக் பிசுக். காலில் இசுக் பிசுக். பனியனில் இசுக் பிசுக். காலை பூமியில் முழுவதும் பாவ முடியாமல் கோந்து, காலிலும் தரையிலும் ஒட்ட ஒட்ட மீண்டும் பாத்ரூம் நோக்கி 'தததா' 'புதகா' என்று நடக்கையில் கால்பட்டு அடுக்கி வைத்திருந்த நோட்டும் புத்தகங்களும் மடமட என சரிந்தன.

தண்ணீர் ஊற்ற இசுக் பிசுக் கொழ மொழ என்றாகி அலம்புவதற்குள் போதுமென்றானது. பனியனில் கோந்து நாத்தம் குடலைப் பிடுங்கியது. 'பனியனைத் தூக்கி எறி' என்று அவிழ்த்துக் கடாசினார்.

மீண்டும் வாசலில் டொக்டொக். கோவிலுக்குப் போன பத்மா வந்தாள், இரண்டடி உள்ளே காலை வைத்ததும் 'இசுக் பிசுக்'.

'என்ன இது?' குனிந்து பார்த்தாள் ரத்தம் சொட்டு சொட்டாய் பாத்ரூம் வரை ஒரு பக்கம் பிசின் பிரவாகம் நாலைந்து பேப்பர் உருண்டைகள். ஸ்கேல், ப்ரௌன் பேப்பர் நோட்டுப் புத்தகம் எல்லாம் இரைந்து கிடைக்க வீடு ரணகளமாய் இருந்தது.

அண்ணாசாமி சோடா பாட்டில் கண்ணாடிக்குள் மலங்க மலங்க முழித்துக் கொண்டிருந்தார்.

"போறுண்டா சாமி! நீங்க அட்டையும் போட வேண்டாம் சட்டையும் போட வேண்டாம்."

"இத பாரு நீ அப்பப்ப எம்போர்ல பாதிய சொல்றே. அதிலேயும் அவமரியாதையா'டா' போடறே மரியாதையா பேசு."

"போறுங்க. சாமிங்க நானே போடறேன் உதடு தேயறத்துக்கு உள்ளங்கால் தேயலாம்பா. சரியாத்தான் இருக்கு." மடமடவென்று வீட்டைச் சரிபண்ணி நோட்டுப் புத்தகங்களுக்கு அட்டை போட்டாள். அண்ணாசாமி ஈஸி சேரில் சாய்ந்தார்.

ஒரு மணி நேரத்தில் அத்தனை நோட்டும் புத்தகமும் 'நிகு நிகு' என புதுச்சட்டை போட்ட பையன்கள் போல கம்பீரமாய் இருந்தன.

மீண்டும் கதவு சத்தம். மீண்டும் ரெட்டைப் பின்னல் குட்டைப்பாவாடை.

"மாமி எங்கம்மா ஒரு டம்ளர் காபிப்பொடி கேட்டா. அட புது நோட்டா? பாப்புக்குட்டியோடதா? அவளை எங்க ஸ்கூல்ல சேத்துட்டீங்க இல்லையா? இதென்ன அட்டை? எங்க ஸ்கூல்ல அவங்ககொடுக்கிற ப்ரௌன் பேப்பர்ல தான் அட்டைபோடணும். மேலே ஸ்கூல் பேர் ப்ரிண்ட் பண்ணியிருக்கும். ஸ்கூல் படம் கூட போட்டிருக்கும். ரெண்டுநாள் கழிச்சி தரேன்னாங்களே உங்களுக்குத் தெரியாதா மாமி?"

இப்போது அண்ணாசாமி கொக்கரித்தார்.

# வாஸ்து எனும் புதையல்

* பிஜே.ரவிராஜ்

மனிதன் பிறக்கின்ற பொழுதே அவனுடைய விதி நிர்ணயிக்கப்படுகின்றது என்று நம்முடைய சாத்திரங்களும், இதையே வலியுறுத்தி ஜோதிட சாத்திரமும், பிரம்ம தத்துவ சூத்திரமும் கூறுகின்றது. மனிதன் நிச்சயமாக ஓர் உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்பதே பிரம்மா படைப்பின் இரகசியமாகும். அதன்படி பார்க்கின்ற பொழுது, அவன் ஒரு கோடீஸ்வரனாகவோ, குறைந்தது லட்சாதிபதியாகவோ வாழ வேண்டும். இன்று ஒரு சிலர் நல்ல வசதியாகவும், பலர் தரித்திரத்திலும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இதன் காரணங்களை ஆராய்ந்து பார்த்தால், மனிதனே தனக்கு விதிக்கப்பட்ட விதியின் வழியே வாழ முடியாமல் தன்னை தானே கெடுத்துக் கொள்கிறான் என்பது புலப்படும்.

இதற்கு ஒரு சிறு உதாரணம் கூறலாம். கிராமங்களில் இன்றும் மேய்ச்சல் நிலத்தில் ஒரு குச்சியை அடித்து ஒரு நீளமான கயிற்றில் மாட்டை மேய்ச்சலுக்காக கட்டி விடுவார்கள். கயிற்றின் நீளத்திற்கு ஏற்ப அது மேய்ந்து கொள்ள முடியும். தூரத்துப் பச்சை கண்ணுக்கு அழகு, அதன்படி மாடு தான் மேய்ந்து கொண்டிருக்கும் இடத்தை விட்டு எதிர் திசைக்குச் செல்லும், மீண்டும் எதிர் திசையிலிருந்து மறு திசைக்கு மாறி, மாறி சென்று தன்னுடைய கயிற்றின் நீளத்தைக் குச்சியில் சுற்றி சுற்றி குறைத்துக் கொண்டு தனக்குக் கொடுக்கப்பட்ட மேய்ச்சலையே குறைத்துக் கொள்ளும். தன் எல்லையைத் தானே குறைத்துக் கொள்கிறது.

அதன்படியே மனிதனும் தான் கட்டிய கிரஹத்தினால் தன்னுடைய வாழ்க்கை பெரியதாகவோ, சிறியதாகவோ வாழ்வதைத் தானே நிச்சயித்துக் கொள்கிறான். தான் கட்டிய கிரஹ பலத்தினால் தான் செல்வ செழிப்போடு பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்வதோ, தன் வாழ்வை சிறுமை படுத்திக் கொள்வதோ, தன்னுடைய சிந்தனையிலேயே, தன்னுடைய கையிலேயே விதி இருப்பதை மறந்து போகின்றான். மனிதனுடைய விதியை மதியால் வெல்ல இந்த வாஸ்து சாஸ்திரம் பெரிதும் வழி காட்டுகின்றது. கிரஹத்திற்குச் சரியான திசைகளையும், அதன் தன்மைகளையும் நன்கு அறிந்து அந்த திசைகளை தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள மனிதன் மதியைப் பயன்படுத்தித் தன் விதிவழியே கிடைக்கக் கூடியதை முழுமையாக பெற்றுக் கொள்ளலாம்.

முதலில் வாஸ்து சாஸ்திரப்படி திசைகள் எப்படிப்பட்டவை அவை நமக்கு என்ன செய்கின்றது, அந்தத் திசைகளின் கடவுளர்கள் யார்? துர்த்தேவதைகள் யார்? இவர்களால் நம் வீட்டிற்கு ஏற்படும் நன்மை தீமைகள் என்ன என்பதனை தெரிந்து கொள்வோம்! இவைகள் அனைத்தும் நம் ரிஷிகளாலும், முனிவர்களாலும் கொடுக்கப்பட்ட சாத்திர உண்மைகளாகும். கீழே உள்ள வரைப்படத்தினால் திசைகளையும் கடவுளர்களையும் அறியலாம்.

வடமேற்கு — வடக்கு — வடகிழக்கு

| | | |
|---|---|---|
| வாயு | குபேரன் | ஈசன் |
| வருணன் | பிரம்மா | இந்திரன் |
| இராட்சசன் | எமன் | அக்னி |

மேற்கு (இடம்) — கிழக்கு (வலம்)

தென்மேற்கு — தெற்கு — தென்கிழக்கு

வடக்குத் திசையை மூன்று கடவுளர் ஆட்சி செய்கின்றனர். அவர்களின் குணநலன்கள் புராணங்களில் கூறப்பட்டுள்ளது போலவே மனிதனின் வாழ்வில் அவன் கட்டிய கிரஹத்தில் பிரதிபலிப்பதை நன்கு உணரலாம். வடக்கு திசையில் அதிக காலி இடத்தை மனையிலோ அல்லது வீட்டிலோ விட்டு வடக்குத் திசையில் வாசல் வைத்துக் கிரஹத்தைக் கட்டினால் குபேரன் போன்று வசதியான வாழ்வு கிடைக்கும். குபேரன் அந்த "பரமாத்மா கோவிந்தனுக்கே"கடன் கொடுத்தவன் என்பதை நாம் நன்கு அறிவோம்- வடகிழக்கில் உள்ள வடக்கு ஈசன் நம்முடைய பெண் குழந்தைகளின் வாழ்வைச் சீராக்கி நம் சந்ததியை வளம்பெற செய்கின்றார். வடமேற்குப் பகுதியில் வடக்குப் பகுதி வாயு நம்முடைய தொழில் வளர்ச்சியுடன் பொருளாதார மேம்பாட்டை வளர்க்கின்றார். ஆகவே இந்த வடக்கு திசை முழுமையாக மனிதனுடைய தொழில், பொருளாதாரம், நம் பெண் குழந்தைகளின் வளர்ச்சி ஆகிய வற்றைக் குறிக்கின்றது. இந்தத் திசை சரியாக நம் வீட்டிற்கு அமையாவிட்டால், தொழிலில் வீழ்ச்சி, பணத்தட்டுப்பாடு, பெண் பிள்ளைகளால் அவப் பெயர் மற்றும் துன்பங்கள் ஏற்படும் என்பதனை சாத்திரங்கள் கூறுவது மட்டும் இல்லாமல் அனுபவ உண்மையும் காட்டுகின்றது.

கிழக்கு திசை வடக்கு திசையைப் போன்றே மிக முக்கியமானதாகும். இந்தத் திசையையும் மூன்று கடவுளர் ஆட்சி செய்கின்றனர். இந்தக் கடவுளர்களின் குண நலன்களே வாழ்வை முழுமையாக பிரதிபலிக்கின்றது. கிழக்கு திசையில் அதிக காலி இடத்தை மனையிலோ அல்லது வீட்டிலோ விட்டு கிழக்கு திசையில் வாசல் வைத்து கிரஹத்தைக் கட்டினால் இந்திரன் போன்று அதிக அழகுடன், பொன் பொருள் ஆபரணங்கள் கிடைக்கும். வடகிழக்குப் பகுதியின் கிழக்குப் பகுதி ஈசன் நம்முடைய ஆண் குழந்தைகளின் வாழ்வைச் சீராக்கி நம் சந்ததியை வளம் பெருகச் செய்கின்றார். கிழக்கிலிருக்கும் அக்னிபகவான் நம்முடைய பெண்களின் உடல் நலத்தைக் காத்து அவர்களை புகழ் பெறச் செய்கின்றார். இந்த கிழக்கு பாகம் சரியாக அமையாவிட்டால், ஆண் குழந்தைகளால் துன்பம், பொன் பொருள் இழப்பு, மனைவிக்கு வியாதி, துன்பம் மற்றும் விவாகரத்து மற்றும் பெண்களுக்கு அதிக உதிரப்போக்கு முதலியன ஏற்படுவதை நாங்கள் அனுபவப் பூர்வமாக கண்டறிந்த உண்மைகளாகும்.

தெற்கு திசை, இது மிக மிக முக்கியமானதும் நன்கு யோசித்து ஆராய்ந்து அனுபவம் பெற்ற வாஸ்து வல்லுனர்களை வைத்து எதையும் செய்ய கூடிய திசையும் ஆகும். இந்தத்

திசையை ஒரு கடவுளும் இரண்டு துர்தேவர்களும் ஆட்சி செலுத்துகின்றனர். தெற்குப் பகுதியில் குறைவான இடத்தை விட்டு, ஆராய்ந்து அறிந்து வாயிற்படிகளை அமைக்க வேண்டும். இப்பகுதியில் தெற்கு பாகத்தினால் நல்ல உடல் ஆரோக்கியமும், தென் மேற்குப் பகுதியினால் புகழும், கீர்த்தியும், ஸ்திரமான வருமானங்களும் ஏற்படும். இந்தப் பகுதி சரியாக அமையாமற் போனால் கோர்ட் வழக்கு, கடன் படுதல், தொழில் முடக்கம், கொடிய வியாதி, தற்கொலை எண்ணங்கள் நிச்சயம் ஏற்படும். இது ஏதோ பயமுறுத்தும் விஷயம் இல்லை! நம்மை நாம் சீர் செய்து கொள்ள துன்பங்களை களைந்து கொள்ள அறிந்து கொள்ள வேண்டிய விஷயமாகும். தெற்குப் பகுதி இராட்சசன் மற்றும் எமனை அடக்கி வெற்றி கொள்ள வேண்டும்.

மேற்கு திசையும், தெற்கைப் போன்றே மிகவும் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய திசையாகும். மேற்குப் பகுதியை இரண்டு கடவுள்களும், ஒரு துர் தேவனும் ஆட்சி செய்கின்றனர். இங்கு குறைவான காலி இடத்தை விட்டு வீடு கட்டினால் மனிதனுக்கு ஓர் உயர்ந்த அந்தஸ்து இந்தச் சமூகத்தில் கிடைப்பதுடன் ஸ்திரமான சந்ததிகளுக்கும் போதுமான பொருள் கிடைக்கும். தொழிலில் போதுமான பணப் புழக்கங்கள் ஏற்படும். பெண்களால் வீட்டிற்குப் பெருமைகள் கிட்டும். இந்தப் பகுதி சரியாக அமையாமற் போனால் புகழ் மங்குதல், எதிலும் தோல்வி, விபத்து, அவமானம், பெண்களுக்குக் கெடுதல் மற்றும் துன்பங்கள், ஸ்திரத்தன்மை இல்லாத எண்ணங்கள் ஏற்படும்.

பழங்கால வீடுகளை நாம் ஆராய்ந்து பார்த்தோமேயானால் மனிதன் தன்னுடைய பாதுகாப்பிற்கும், புகழ் மங்கா பண்பிற்கும், தீய எண்ணங்கள் இல்லாத நல் வாழ்விற்கும் நம் ஆரோக்கிய வாழ்விற்கும் ஏற்ற வீடாக வாஸ்து சாத்திர முறைப்படி, பஞ்ச பூதங்களாகிய நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் இவற்றின் இயற்கை அதிர்வுகளை தங்கள் இல்லங்களில் இருக்கும் படியாக படுக்கை அறை, குளியல் அறை, சமையல் அறை, பொக்கிஷ அறை மற்றும் விருந்தினர் அறை ஆகியவற்றை இயற்கை விஞ்ஞானத்திற்கு முரண்பாடு இல்லாத வீடாக அமைத்துக் கொண்டார்கள். இன்றும் கிராமங்களில் இப்படிப் பட்ட வீடுகளைப் பார்க்கலாம். ஆனால் இன்று தன்னுடைய வசதி ஒன்றையே மனிதன் கருத்தில் கொண்டு வீடு கட்டுகின்றான். இன்றைய நாகரீகமான வீட்டினால் மனிதன் இயற்கைக்கு முரண்பாடான வாழ்வை வாழ்ந்து கொண்டு புதிய புதிய துன்பங்களைத் தானே தேடிக் கொள்கிறான்.

மனிதன் இயற்கையால் கொடுக்கப்பட்ட திசைகளை நம் முன்னோர்கள் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கண்டறிந்த உண்மைகளைக் கொண்டு சரியாக அமைத்துக் கொண்டு நல்ல திசைகள் உள்ள மனிதனாக மாறி, தன் ஜாதக தெசா புத்திகளின் முழு பலனை பெற்று, தோல்வி, பயம், வழக்கு, வியாதி, வீழ்ச்சி, அவப் பெயர், பொருளாதார வீழ்ச்சி இவைகளிலிருந்து விடுபட்டு வாழலாம். நம் விதியை நம் முன்னோர்களால் கொடுக்கப்பட்ட மதியின் வாயிலாக வென்று வாழலாம்.

பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு ஏற்பட்ட தோல்வி, துன்பம், அவமானம், ஆகியவையே இந்தத் துறைக்கு என்னை கொண்டு வரச் செய்தது. தஞ்சை, மதுரை போன்ற இடங்களில் கிடைத்த ஓலைச் சுவடிகள் மற்றும் பழைய கிரந்தங்கள் ஆகியவை என்னை இதில் ஆராய்ச்சிகள் செய்யத் தூண்டியது. என்னை நான் முதலில் மாற்றி வெற்றிகளை பெற்றதன் வாயிலாக அநேகருக்கு ஆலோசனைகள் வழங்கி இன்று பல தொழிற்சாலைகள், வீடுகள் சிறப்புற நடைபெறுவதை, நினைத்து நம் வாஸ்து சாஸ்திரம் எவ்வளவு துல்லியமாக இருக்கின்றது என்பதை உணர்ந்து வியந்து கொண்டும், புதிய அனுபவங்கள் பலவும் பெற்றும் வருகிறேன். சென்னையில் திங்கள், செவ்வாய், புதன் மூன்று நாட்களும் 13 பந்தலவேணுகோபால தெரு, திருவல்லிக்கேணி, சென்னை -5 (தொ:840084) லும், மற்ற நான்கு நாட்களும் 43, ப்ரரதி நகர் 2-வது தெரு, பீளமேடு, கோவை -4(தொ:577907)லும் இருக்கிறேன்.

நான் பெற்ற இன்பம் ஒவ்வொருவரும் பெற வேண்டும் என்ற தீராத தாகம் என்னுள் இருக்கின்றது. இனிவரும் இதழ்களில் நாம் இப்பொழுது வசிக்கும் வீட்டின் அமைப்பை எப்படி சரி செய்து கொண்டு மேலும் நாம் எப்படி வளர்ச்சி பெறுவது என்பதனை வாஸ்து சாஸ்திர வாயிலாக உணர்ந்து புதையல் நோக்கிச் செல்வோம்!

**- பி.ஜே.ரவிராஜ்**

(தொடரும்)



வாழைப்பூ அடை செய்யும்போது பூவை அப்படியே நறுக்கிப் போடுவதற்கு பதில் முக்கால் பதத்திற்கு வேக வைத்து பிறகு பட்டும்படாமலும் அரைத்து, விழுதை மாவில் கலந்து அடை வார்த்தால் வாசனையும் சுவையும் கொடிகட்டிப் பறக்கும்.

–கி. மஞ்சுளா.

களுக்கு 'ஹோலி மலர் மருந்து' பயன்படும். வேளைக்கு 5 சொட்டுக்கள் வீதம் சிறிது தண்ணீரில் கலந்து தினசரி 3 வேளை சாப்பிட்டால் மனத்தில் நம்பிக்கையம் ஆரோக்கியமும் உண்டாகும். மேலும் சந்தேகத்தால் ஏற்படும் உடல் பிரச்னைகளும் குணமாக்கப்படும்.

சந்தேகம் என்னும் மனநோயால் மூளை நரம்பு, இருதயம், ஆண்மை, பெண்மை ஆகியவை கடுமையாக பாதிக்கப்படும். இதை புரிந்து கொள்ள முடியாத அளவுக்கும், தீர்க்க முடியாத வியாதியாகவும் அமைந்து வாழ்நாள் முழுவதும் பின் தொடரும்.

## தைரியம் தரும் ராக்ரோஸ் மலர் மருந்து :

குடும்பத் தலைவன் (அல்லது) தலைவி பிள்ளைகள் உறவினர்கள் இறந்து விட்டால் குடும்பத்தில் துயரம் ஏற்படும். அவர்கள் ஆழ்ந்த கவலையில் மூழ்கியிருப்பார்கள். யாருக்காக நான் வாழ வேண்டும், என் பிள்ளைகளை எப்படி வளர்ப்பேன் என்ற மனக்கவலையில் இருப்பார்கள். இவர்களுக்கு ராக்ரோஸ் என்ற மலர் மருந்தை வேளைக்கு 5 சொட்டு வீதம் தினசரி 3 வேளை தண்ணீரில் கலந்து கொடுத்தால் தைரியம் உண்டாகும்.

## மனநோய்க்குப் பயன் தரும் இதர மருந்துகள் :

* செர்ரி பிளரம் மலர் : இது தற்கொலை, கொலை செய்யும் எண்ணங்களை அகற்றும்.

* கிளிமாட்டிஸ் மலர் : கனவுக் கோட்டைகளை கட்டிக் கொண்டிருப்பவர்களின் கனவை நனவாக்க உதவும்.

* இம்பேஷண்ட் மலர் : அவசர குணத்தை மாற்றும்.

* ஹார்ன் பீம் மலர் : திறமைசாலிகள், தங்களின் திறமைகளை செயல்படுத்த உதவும்.

* கிரேப் ஆப்பிள் மலர் : உடலில் செதில் செதிலாக உதிரும் சொரியாசிஸ் என்னும் தோல் நோய், மூளை சம்பந்தமான நோயாகும். இதை குணமாக்கும் தன்மை கிரேப் ஆப்பிள் மலருக்கு உள்ளது.

* லார்ச் மலர் : இது சோம்பேறித்தனத்தைப் போக்கும்.

* அக்ரிமோனி மலர் : அளவு கடந்த வெட்கம், தங்கள் குறைபாடுகளை மூடி மறைத்து வைக்கும் பழக்கம் உள்ளவர்களின் நிலையை குணமாக்கும்.

* ஹீதர் மலர் : தன் மனவேதனைகளை மற்றவர்களுக்கு உட்கார வைத்துச் சொல்லும் சுபாவம் கொண்டவர்களின் பிரச்னைகளை குணமாக்கும்.

* வெர்டெய்ன் மலர் : நினைத்ததை உடனடியாக முடிக்கும் சுபாவம் கொண்டவர்களுக்கு ஏற்படும் நோய்களை இது குணமாக்கும்.

* சுவீட்செட்நெட் மலர் : தன் வியாதியை எந்த மருந்தாலும் குணமாக்க இயலாது என்ற மனநிலையை மாற்றி புது நம்பிக்கையை தர இம்மருந்தை பயன்படுத்தலாம்.

* ஃஹோர்ஸ் மலர் : காலம் கடந்தாலும் தன் பிரச்னைகளை இறைவன் தீர்த்து வைப்பான் என்ற நம்பிக்கை கொண்டவர்களுக்கு இது நல்ல மருந்தாகும்.

* பீச் மலர் : மற்றவர்களை கேலி செய்தும் கொடுமைப்படுத்தியும் அதில் ஒருவிதமான சந்தோஷம் அடையும் மனநிலையைக் கொண்டவர்களை இது குணமாக்கும்.

* வாட்டர் வயலெட் மலர் : ஒருவரின் தீய குணங்களை நிராகரித்துவிட்டு நல்லவைகளை மட்டும் எடுத்துக் கொள்ளும் மன நிலையை கொண்டவர்களுக்கு இது மிகவும் பயன்படும்.

* வைலட் ரோஸ் மலர் : எவ்வளவு கஷ்டம் ஏற்பட்டாலும் இறைவனைத் தவிர மற்றவர்களிடம் கூற மாட்டார்கள், இவர்களுக்கு இதைத் தரலாம்.

* மிமுலஸ் மலர் : காரணமின்றி பயப்படுதல், அடிக்கடி கவலை கொள்ளுதல் போன்ற மனநிலையைப் போக்க இம்மருந்தைத் தரலாம்.

எனவே மனநோய்க்கு உடனடியாக மருத்துவம் அளிக்கப்பட வேண்டும், தவறினால் அதுவே பெரிய நோயாக மாறலாம் என்று யுனானி மருத்துவம் எச்சரிக்கின்றது.

ஜவ்வரிசி வடாம் அடிவண்டல் துகள் கொஞ்சம் மொத்தமாக வந்து விட்டதா? அவற்றை பஜ்ஜி மாவில் இரண்டு நிமிடம் ஊறப் போட்டு விட்டு பிறகு எண்ணெயில் போடுங்கள். பிரமாத சுவை தரும்.

– மஞ்சுளா கிருஷ்ணன்



# உறவுகள் வேறாகும்போது...

சித்ரா நீட்டிய கோப்பையுடன் ஒரு பத்திரிகையும் இருந்தது. நிமிர்ந்து பார்த்தேன். சித்ரா சமையலறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள்.

"ஏய், சித்ரா! என்ன பத்திரிகை?"

"பிரிச்சுத்தான் பாருங்களேன். அதுக்குள்ளே அவசரமா?"

போய் விட்டாள்.

யாராயிருக்கும்? ஆவல் தாங்கவில்லை. காப்பியை வைத்து விட்டு, பத்திரிகையைப் பிரித்தேன்.

"ஓ மறந்தே விட்டது. தங்கை குழந்தைக்கு அப்த பூர்த்தி விழா!'

சித்ரா உள்ளே போய் சுடச்சுட தோசை, வெங்காய சட்னியுடன் வந்தாள்.

"என்ன, ஐயா முகம் பிரசன்னவதனமாயிடுச்சு?" சிரித்தவாறே கேட்டாள்.

பத்திரிகையுடன் ஒரு கடிதமும் இணைக்கப் பட்டிருந்தது.

அன்புள்ள அண்ணா என்று உறவில் ஆரம்பித்து, சில பல ஆதங்கங்களுடன், அவளுடைய நிறைவேற்றப்படாத ஆசைகள் (கட்டளைகள்!) என்னால் நிறைவேற்றப்பட வேண்டியவை, தெரிவிக்கப்பட்டு இருந்தன.

என் பிரிய தங்கை புவனா! அவள் கேட்பவற்றைச் செய்ய வேண்டியது என் கடமைதானே! ஆனால் சித்ரா... என்ன தடங்கல் சொல்லப் போகிறாளோ?

நண்பன் ரவி சொன்னது நினைவுக்கு வந்தது.

"மூர்த்தி! நீ புதுசா கல்யாணமானவன். மனைவியை வளைச்சுப் போட கத்துக்கோ. மாமியார் வீட்டுக்கு எதுனாச்சும் செய்யணும்னா மூஞ்சியைத் தூக்கு வாங்க. அவங்க பொறந்த வீடுன்னா... சந்தோஷமா தோள் மேல தூக்கிப்பாங்க."

"அதுக்கு என்ன செய்யணும்கறே ரவி?"

"ஒண்ணுமில்லேடா. கொஞ்சம் நடிக்கணும். நம்ம வீட்டு செலவுன்னு வெச்சுக்கோ, இஷ்டப்படாத மாதிரி பேசு. அப்புறம் பாரு நடக்கறதை..."

ரவி சொன்ன மாதிரியே செய்தால் என்ன?

"என்ன, திடீர்னு பேச்சையே காணோம்? அப்செட் ஆயிட்டீங்களா?"



முகத்தை சோகமாக வைத்துக் கொண்டேன்.

"சித்ரா! லெட்டர் படிச்சியா? அவ பாட்டுக்கு ஒரு பெரிய லிஸ்ட்டே போட்டிருக்கா. என் நிலைமை அவ ளுக்குத் தெரியாதா?"

ஊடுருவும் பார்வையுடன் என் மனைவியைப் பார்த்தேன், அவள் முக பாவத்திலிருந்து எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

சரியான அழுத்தக்காரி! என்ன சொல்லப் போகிறாள்?

என் தங்கை புவனாவுக்கு எல்லாமே நான் தான். தாய், தந்தை காலமான பின் பொறுப்பு என் தலை மேல்.

எனக்குச் சுமாரான வேலைதான். திடீர் செலவுகளுக்கு ஆட்டம் காண்பிக்கும் சம்பளம்.

புவனா நல்ல அழகு! பணக்கார இடத் திலிருந்து வலிய வந்து, அவளை மருமக ளாக்கிக் கொண்டதில், எனக்கு ஏகப் பட்ட பெருமை.

புவனாவின் பிரசவம் 'சிசேரி யன்' ஆகிவிட்டதில், அதிகப்படி செலவு. குழந்தைக்கு எதுவும் செய்ய முடியவில்லை. அந்த ஆதங்கம்தான், புவனா கடி தத்தில் இருந்தது.

"புண்யாஹவாசனத் திற்குக் கூட எதுவும் பண்ணவில்லை. அதனால குழந் தையின் ஆண்டு நிறைவுக்கு 2 பவுனில் சங் கிலி, வெள்ளி

அஸ்வினி

அரைஞாண் கயிறு, கொலுசு, டிரஸ், வேஷ்டி, புடைவை இத்யாதி... இத்யாதிகளுடன், அண்ணியைக் கட்டாயம் அழைத்துக் கொண்டு வரவும்."

"என்ன அப்படியே பிரமிச்சுப் போய் உட்கார்ந்துட்டீங்க? தங்கை கேட்டதை செஞ்சுட வேண்டியதுதானே?"

சிரித்துக் கொண்டே என்னை உலுக்கி னாள் சித்ரா. அவள் விளையாடுகிறாளா? நிஜமாகவே சொல்கிறாளா? எனக்குப் புரியவில்லை.

இரண்டு தோசை காலியாகி, மூன்றாவது தோசை தட்டில் விழுந்தது. நான் எதுவும் பேசாமல் தோசையை உள்ளே அனுப்பிக் கொண்டிருந்தேன்.

"எப்படி செய்யப் போறோங்கற கவலை தானே? விடுங்க எல்லாம் நல்லபடியா நடக்கும்."

என் தங்கைக்கு நிறைய செய்ய வேண்டும் என்ற ஆசையின் குறுக்கே நிற்கிறதே பணம்! ரவி சொன்ன யோசனையின்படி சித்ராவுக்கு சம்மதம் என்று தெரிந்து போயிற்று.

ஆனால் பணம்! இவள் என்ன செய்யப் போகிறாள்? கேள்விக்குறியுடன் சித்ராவைப் பார்த்தேன்.

"எப்படி... எப்படி? புவனாவுக்கு செய்யலாம் தான், ஆனா வழி என்ன? இப்ப..."

"பி.எஃப். லோன் கூட போட முடியாது. தெரியும். கவலைப்படாதீங்க. உங்க கௌரவத்தைக் காப்பாத்த வேண்டிய பொறுப்பு எனக்கும் இருக்கு இல்லியா?"

கை அலம்பி துடைத்தபடி வந்தேன். எனக்குக் கொஞ்சம் ஆச்சரியம்தான், எந்த முட்டுக்கட்டையும் இல்லாமல் எனக்கு இணங்கி வந்ததில்.

"அப்படி இப்படின்னு சேர்த்து வெச்ச பணம் அஞ்சாயிரம் இருக்கு. மீதிக்கு, இந்தாங்க. இந்த செயினை வெச்சுப் பணம் வாங்கிட்டு வாங்க. தாராளமா போதும்."

அவள் கழுத்தில் மஞ்சள் கயிறு பளபளத்தது. எல்லாமே ஏற்பாடு செய்திருக்கிறாள்.

எனக்கு என்னவோ, நன்றி சொல்லத் தோன்றவில்லை. எனக்கே உரித்தான ஈகோ!

குழந்தையின் ஆண்டு நிறைவு, நினைத்ததற்கு மேலும் நன்றாகவே நடந்தது. புவனாவின் உபசரிப்பில் எனக்கு ஒரே மகிழ்ச்சி.

ஊர் திரும்பி மறுநாள். மஞ்சள் தடவிய அந்தக் கடிதத்தை, சித்ரா என்னிடம் கொடுத்தாள்.

என் மச்சினன், சித்ராவின் அண்ணன் பாஸ்கரின் பெண்ணுக்குப் பூப்பு நீராட்டு விழா.

மற்றொரு செலவா? என் இயற்கை சுபாவம் சட்டென்று வெளிப்பட்டு விட்டது.

"இப்பத்தான் இவ்வளவு செலவு பண்ணிட்டு போயிட்டு வந்தாச்சு. இப்ப எங்க உடனே போறது? அதெல்லாம் முடியாது."

எரிச்சலும், கோபமுமாக வார்த்தைகள் வெடித்தது. புவனா குழந்தைக்குச் செய்தது போல அண்ணன் மகளுக்கும் செய்ய வேண்டும் என்று மனைவி சொல்வாளோ என்ற வேகம் எனக்கு.

"தேதியைப் பார்த்தீங்களா?"

சித்ரா அமைதியாகக் கேட்டாள்.

பார்த்தேன். முதல் நாள் தேதி. புவனா குழந்தை ஆண்டு நிறைவு நடந்த அதே நாள்.

"நேத்திக்கே சொல்லித் தொலைக்கறதுக்கு என்ன? இப்ப வந்து சொல்றியே?"

மறுப்பதற்கு வழி. என் கோபத்தின் அர்த்தம், எனக்கே புரியாதது. மீண்டும் செலவுக்கு என்ன செய்வது என்ற எண்ணத்தின் பிரதி பலிப்பா? என் தங்கை குழந்தை என்ற உறவு முறை அண்மை இதில் இல்லையா?

"ஏன் அனாவசியமா டென்ஷன் ஆறீங்க? ரெண்டு லெட்டரும் ஒண்ணாத்தான் வந்தது. ரெண்டையும் சேர்த்துப் பார்த்தா, ரெண்டு இடத்துக்கும் போகணும். ரெண்டு பேருக்கும் நல்லா செய்யணுமேன்னு ஆதங்கப்படுவீங்க."

என் மனைவியின் கண்களில் லேசான தளும்பல். அவளை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ?

நான் பதில் எதுவும் சொல்லாமல் அவளைப் பார்த்தேன். அவளே தொடர்ந்தாள்.

"உங்க தங்கையைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்த இடம் பெரிய இடம். அதுக்கேத்தா மாதிரி பண்ணினாத்தான் உங்களுக்குக் கௌரவம். அதைத்தான அவங்களும் விரும்பறாங்க. அதனால அவங்களுக்குத்தான் முதலிடம். ஆனா... எங்க அண்ணன் நம்மை, நம்முடைய சூழ்நிலையைப் புரிஞ்சுப்பான்."

அவள் பார்வையின் கோணத்தில் இருந்த ஆரோக்கியம், என் பார்வையின் கோணத்தின் வக்ரத்தைத் தகிக்க ஆரம்பித்திருந்தது.

அவளை நிமிர்ந்து பார்க்க மனம் கூசியது.

எனக்குக் கோபம் என்று நினைத்துக் கொண்டாள் போலும்.

"ப்ளீஸ், இங்கே பாருங்களேன். இப்ப எதுவும் பண்ண வேண்டாம். உங்க தங்கை எனக்கு வாங்கிக் கொடுத்தாளே, அந்தப் புடைவையையே கவிதாவுக்குக் கொடுத்துடலாம். அப்புறம் முடிஞ்சப்ப ஏதாவது செஞ்சுக்கலாம். இன்னைக்குப் போய்ப் பார்த்துட்டு மட்டும் வந்துடலாமா?"

என்னைப் புரிந்து கொள்ள வைக்கும் பரிவு, நிதானம் அவளிடம். நான்தான் குன்றிப் போனேன்.

**வீழ்வது வெட்கமல்ல; ஆனால் வீழ்ந்து கிடப்பது வெட்ககரமானது.**
**தகவல் : வி. வி. ஜனனி**

# பிரம்மாண்டமான அதிநவீன தங்க நகை



# ஏற்றுமதி உற்பத்தி தொழிற்சாலை

# திட்டத்திற்கான டெபாசிட்டுகள்



# சேகரிப்பு விழா

**30%** + **7%** + **2 கிராம்** தங்க நாணயம் இலவசம்

வட்டி — ஊக்கத்தொகை

மற்றும் கீழ்கண்ட
சிறப்புப் பரிசுகள்

| டெபாசிட் | ரொக்க பரிசுகள் |
|---|---|
| ரூ. 10 ஆயிரம் | ரூ. 150 |
| ரூ. 25 ஆயிரம் | ரூ. 400 |
| ரூ. 50 ஆயிரம் | ரூ. 1000 |
| ரூ. 1 லட்சம் | ரூ. 2250 |
| ரூ. 2 லட்சம் | ரூ. 4800 |
| ரூ. 3 லட்சம் | ரூ. 7500 |
| ரூ. 5 லட்சம் | ரூ. 13000 |



ரூ.10,000 முதலீடு செய்யும்
முதல் 1000 நபர்களுக்கு
ஒரு வெள்ளி விளக்கு
இலவசம்.

# ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்

## அகிலா கிருஷ்ணன்

முப்பத்து மூன்று வருடங்களாகக் கம்ப்யூட்டர் ப்ரோக்ராம் போட்டது போலச் சிறு பிசிறு இல்லாமல் நடக்கும் வேலைகள், முதல் தடவையாக இன்று தடம் மாறிப் போயிருக்கின்றன. காலை நான்கு மணிக்கு எழுந்து, பல் துலக்கி, முகம் அலம்பி, விளக்கேற்றும் பொழுது அவர் எழுந்து விடுவார். காப்பி குடித்து அவர் தாமிரபரணிக்குக் குளிக்கச் சென்றதும், வாசல் தெளித்துக் கோலம் போட்டுப் பின், பின் வாசல் துளசி மேடை அலம்பிக் கோலம் போடும் பொழுது திரும்பி வருவார். மஞ்சள், ஸ்நானப்பொடி, குடம், சவுக்காரம் எடுத்துக் கொண்டு மங்களம் தாமிரபரணிக்குக் கிளம்புவாள். குளித்து, ஈரப்புடவையுடன் புதுக் கிராமம் பிள்ளையார் கோவில் வாசலில், குடத்துத் தண்ணீர் கொஞ்சம் தெளித்துக் கோலம் போட்டுப் பிறகு பழைய கிராமம் பிள்ளையார் கோவில் வாசலில் மீதித் தண்ணீரைத் தெளித்து கோலம் போட்டு வீட்டில் நுழையும் பொழுது 'கம்'மென்று ஊதுபத்தி வாசனை வர வேற்கும். சஹஸ்ர நாமம் கணீரென்று ஒலித்துக் கொண்டு இருக்கும். இனிமையான இல்லறம். சிக்கலில்லாத வடம் போல. மூன்று வருடங்களுக்கு முன்பு ஒரு சிறு முடிச்சு. நெஞ்சு வலி என்றார். மிக மிக மைல்ட் ஹார்ட் அட்டாக். பயமே இல்லை. ஜாக்கிரதையாக இருந்தால் போதும் என்று சொல்லி விட்டார் மூன்றாம் வீட்டு டாக்டர்.

மங்களம் அவரது உணவு விஷயத்தில் படு கவனமாகத்தான் இருக்கிறாள். மலையாளத்துக் காரரையும், திருநெல்வேலிக் காரரையும் தேங்காய், தேங்காயெண்ணெய் சாப்பிடாதே என்று சொன்னால் உயிரையே விட்டு விட மாட்டார்களா? ஆனாலும் இவர் பொறுமைசாலிதான். எத்தனையோ 'மாற்றிக் கொண்டு விட்டார். நேற்று யாரோ தெரிந்தவர்கள் சண்டிகர் போகிறேன் என்று சொன்னார்கள். புழுங்கல் சம்பா அரிசியையும் தேங்காயையும் சம அளவிலே அரைத் மண்டை மண்டையாக உருட்டி, மண மணக்கத் தேங்காயெண்ணெயிலே பொ துக் கொடுத்து அனுப்பித்தாள் மங்களம், த மகன் ரவிக்கு. பாபப்பட்டு நாலை சீடைகளைத் தன் கணவருக்கும் கொடுத் விட்டாள். அதுதானோ என்னமோ. இ நெஞ்சு வலிக்கிறது, மூச்சு விடச் சிரமம இருக்கிறது என்று சொன்னார்.

மங்களம் பதறிப் போய் விட்டா சுக்குக்கு மிஞ்சின மருந்துண்டோ. சுப் மணிய ஸ்வாமிக்கு மேலே தெய்வ உண்டோ? திருச் செந்தூர் பத்ர விபூதி அவர் நெற்றியிலே இட்டு, சற்று சுக்கு வெந் கொடுத்து விட்டு, டாக்டரிடம் ஓடினாள்.

டாக்டர் பரம ஆப்தர். உடனே விரை வந்து பார்த்தார். "ஒன்றும் பயப்படும் யாகத் தெரியவில்லை, தூங்குவதற்கு மரு கொடுக்கிறேன். காலையில் ஹைக்ரௌண் டாக்டரிடம் காண்பித் விடலாம்'' என்று சொல் மருந்து கொடுத்துச் சென்ற

அதுதான், "வழக்கத்து மாறாக இன்னமும் தூங் கொண்டு இருக்கிற மங்களத்திற்குக் கலக்கம இருந்தது. பையன் இரண்டு பேரும் வடக் இருக்கின்றார்கள். "எங் டம் வந்து விடுங்கள்,'' எ கூப்பிடுகிறார்கள். இவருக் தான் பிடிவாதம். "நமது உடம்பிலே ப இருக்கும் வரை யாருக்கும் பாரமாக இருக் கூடாது'' என்று அடிக்கடி சொல்வார். குழந்தைகளையே யாரோ என்று நினைப்ப

மங்களத்திற்குப் புரியவில்லை. இத்த வருட இல்லறத்திற்குப் பின்பும் கணவ புரிந்து கொள்ள முடியவில்லை. எ சொன்னால் யாராவது சிரிப்பார்கள். தங் தாம்பத்யம் அன்யோன்யமானது தானா

'சின்னச் சின்ன ஆசை' பாட கேட்டால் மங்களத்துக்குச் சிரிப்பாக வ அவளுக்கும் நிறைய சின்னச் சி ஆசைகள் உண்டு. "உனக்கு எது கிட்டு அதற்கு மட்டும் ஆசைப்பட வேண் என்று அறிவுரை சொல்லுவார். எட்டா கும், கிட்டாததற்கும் ஏங்குவது தான் வ கையின் சுவாரஸ்யம். தங்கத்தை 'பெ மென்று அமுக்கி வைத்தால் என்ன அ

சின்னச் சின்ன நகாசு வேலைகள் தான் அதை அழகு படுத்தும். இவரிடம் எதைக் கேட்டாலும் சலனமற்று இருப்பார். ஹரித்துவார், ரிஷிகேசம்; பத்ரி, கேதார் போக வேண்டும் என்று கேட்டுக் கொண்டே இருந்தாள். இவர் எங்கே இனி கூட்டிப் போகப் போகிறார் என்று நினைத்து ஓய்ந்து விட்ட பொழுது ரிடையர் ஆனார். பி.எப் பணத்தில் சௌகரியமாகக் கூட்டிப் போய் வந்தார். குழந்தைகள் வசதியாக இருக்கிறார்கள். கேட்கக் கூடாது. கொள்கை. வெங்காயம்!

உறங்கிக் கொண்டிருந்தவர் லேசாகப் புரண்டு படுத்தார். இவரில்லாமல் தன்னால் ஒரு நொடி இருக்க முடியுமா? நினைப்பே, அக்னியாக அடி. வயிற்றிலிருந்து உருண்டு வந்து தொண்டையை அடைத்தது. உறவின் இறுக்கம் பிரமிப்பாக இருந்தது. பிரம்ம முடிச்சை விட அழுத்தமானதா இந்த மூன்று முடிச்சு? இந்தக் காலத்துக் குழந்தைகள், எப்படி எடுத்தேன் வைத்தேன் என்று



'டைவர்ஸ்' எளிதாகச் செய்து கொள்கிறார் கள்? "சோமசுந்தரி மாங்கல்யப் பிச்சை கொடும்மா," என்று உரக்கவே வேண்டிக் கொண்டாள்.

பிரார்த்தனை செய்யும் பொழுதே, பழைய நினைவு ஒன்று வந்து நெஞ்சில் திகிலை எழுப்பியது. மூன்று வருடங்களுக்கு முன்பு இவருக்கு ஹார்ட் அட்டாக் வந்த பொழுது, கோடி வீட்டு அம்மணி மாமி சொன்னாள், "மங்களம், லக்ஷம் மஞ்சள் கிழங்குகள் சுமங் கலிகளுக்குக் கொடுப்பேன் என்று வேண்டிக் கொள். உன் சௌபாக்கியத்திற்கு ஒரு குறைவும் வராது" என்றாள். 'எத்தைத் தின்னால் பித்தம் தீருமோ' என்ற நிலை. மங்களம் உடனே 'லக்ஷம்மஞ்சள்' பிரார்த் தனை செய்து கொண்டு விட்டாள்.

இவருக்கு உடம்பெல்லாம் சரியான பிறகு ஒரு நாள் சாவகாசமாகத் தன் பிரார்த் தனையைப் பற்றிச் சொன்னாள். தனக்கே உரிய நிதானத்துடன் கொஞ்ச நேரம் யோசித்து விட்டுச் சாவகாசமாகச் சொன் னார்.

"இன்றைய விலையில் ஒரு லக்ஷம் மஞ்சள் சுமார் 12 ஆயிரம் ரூபாய் ஆகும். அவ்வளவு செலவு செய்ய நமக்கு முடியாது. இரண்டா வது, இந்தக் காலப் பெண்கள் யாரும் மஞ்சள் பூசிக் குளிப்பதாகத் தெரியவில்லை. ஆபத் தான காலங்களில் நாம் அவசரமாகச் செய்யும் காரியங்களுக்கு எந்தவித அர்த்தமும் இல்லை. அம்பாள் நம்மைப் புரிந்து கொள் வாள். நீ நன்றாகப் பிரார்த்தனை செய்து, பின் அபராத காணிக்கை போட்டு விடு. பரம ஏழையான ஒரு பெண்ணிற்கு மஞ்சள் புடவை வேண்டுமானால் வாங்கிக் கொடு."

மங்களம் ஆடிப் போய் விட்டாள். "என்ன இப்படிச் சொல்கிறீர்கள். உங்களால் முடிய வில்லை என்றால் ரவி, சோமுவிடம் கேட்டுச் செய்கிறேனே!" என்று அழுது பார்த்தாள்.

அவர் பிடிவாதமாக மறுத்து விட்டார். அவரை மீறி எதையும் செய்து பழக்கமில்ல 'ஒருவேளை பிரார்த்தனையை முடிக்காததா தெய்வ குற்றமாக இப்பொழுது உடம்புக் வந்திருக்கின்றதோ?

வாசலில் நிழலாடியது. வள்ளிக் குட் வேலைக்கு வந்து இருக்கிறாள். "ஏம் மா இப்படி உட்கார்ந்திருக்கியேள்? மாமாவிற் என்ன உடம்பு. தூங்கறாளே," என்று பதறி போய் விட்டாள்.

"ஒன்றுமில்லையடி குட்டி. மாமாவுக் சித்த மேலுக்கு முடியலை. நீ பாத்துக்கறைய நான் ஸ்நானம் செய்து விட்டுப் பிள்ளையார் நமஸ்காரம் செய்து விட்டு வந்து விடுகிறேன்

மஞ்சள் கிழங்கை எடுத்துக் கொண் குளிக்கக் கிளம்பினாள். துறையில் இன்னு இரண்டு மூன்று பெண்கள் குளித்து கொண்டு இருந்தனர். மங்களம் பரபரப்போ முங்கி எழுந்தாள். பக்கத்தில் யாரோ ஒ இளம் பெண். பார்த்த நினைவும் வருகிற யாரென்று விளங்கவும் இல்லை. அந்த பெண்ணே பேசினாள்.

"மாமி நீங்க குளிக்க வருவேள் என்று தா காத்திண்டு இருந்தேன்."

"யாருன்னு தெரியலையே."

"நான் ஹெட்மாஸ்டரோட அக்கா பெ இரண்டு வருஷம் முன்னால் வந்திருந்தே நின்று பேச நேரமில்லை. மனமும் இல்ல "சந்தோஷம் அம்மா. வீட்டுக்கு வந்து விட் போ என்ன?" மங்களம் புறப்பட்டா பரபரப்புடன்.

அந்தப் பெண் 'சட்'டென்று கைகளை பிடித்துக் கொண்டு விட்டாள். "மாமி, எ கணவருக்கு ஒரு குட்டி வந்திருந்த ஆபரேஷன் செய்து, பயாப்சி செய்து பார்க் கொடுத்து விட்டு, திருச் செந்தூர் தரிசு செய்து வர இங்கே வந்தோம். சஞ்சலமா குளிக்க வந்தேன். நீங்கள் குளித்துக் கொ இருந்தீர்கள். 'ஆற்றங்கரையில் மஞ் இட்டுக் கொள்ளாமல் குளிக்கக் கூட



ரயிலில் பயணிக்கும் போது சாதார 'ஹவாய்' செருப்புகளையே பயன்படுத்து நல்லது. அங்கிருக்கும் டாய்லெட்களு அணிந்து சென்று விட்டு வந்து வீட்டி வந்ததும் சுத்தமாக கழுவிக் கொள்ளலாம். அ லெதர் செருப்புகளை அவ்வாறு செய்ய முடிய மேலும் செருப்புகளை கீழே விடும்போது (அ பெர்த் கிடைக்கும்போது) தொலைந்த போனால் போகிறது என்று ஹவாயை விட ம வரும்.

– அனுபல்

கோஸ் பிடித்த குழந்தைகளுக்கு, கோஸ் பச்சை பட்டாணி கறியுடன் சாதம் கலந்து வையுங்கள். கோஸூம் சாதமும் சுவையே தனி.

-மஹிமா



என்று சொல்லுவார்களே. அபசகுன்மாக இருக்கிறதே' என்று அதிர்ந்து நின்றேன். நீங்கள் அகஸ்மாத்தாக, என்னிடம் ஒரு மஞ்சள் கிழங்கைக் கொடுத்து, 'இட்டுக்கோ குழந்தே' என்று சொன்னீர்கள். நீங்கள் கொடுத்த ஒரு மஞ்சள் கிழங்கு, ஒரு லக்ஷம் மஞ்சள் போல எனக்குத் தோன்றியது. ஊருக்குப் போனபின், இவருடைய பயாப்சி ரிஸல்ட் கான்சர் இல்லை என்று வந்து விட்டது. உங்களை அடிக்கடி நினைத்துக் கொள்வேன்'' அவள் குரல் தழுதழுத்தது.

மங்களம் திக் பிரமித்து நின்றாள். 'ஒரு மஞ்சள், ஒரு லட்சம் மஞ்சள் போல' என்ற வார்த்தைகள் காதிலே மணியடிப்பது போல ஒலித்தன.

''குழந்தே எல்லாம் அம்பாள் செயல். அவளுடைய விருப்பத்தை அவளே அழகாகச் செய்து கொண்டு விடுவாள். வீட்டிற்கு வந்து வெற்றிலை பாக்கு வாங்கிப் போ'' என்று பரபரப்புடன் கிளம்பினாள்.

வீட்டு வாசலில் கார் ஒன்று நின்றிருந்தது. மங்களத்திற்குப் படபடப்பு ஏறியது. இவருக்கு உடம்பு ஏதேனும் அதிகமாகி இருக்குமோ?'

ஹைகிரெண்ட் டாக்டர் தான் காரில் வந்திருந்தார். உள்ளூர் டாக்டரும் வந்திருந்தார். மூன்று பேரும் சிரித்துப் பேசியபடியே காப்பி குடித்துக் கொண்டிருந்தனர்.

''வாருங்கோ மாமி. நேற்று ராத்திரி டாக்டர் ஃபோன் செய்தார். இன்று ஞாயிற்றுக் கிழமை. திருச்செந்தூர் போகலாம். அப்படியே, வழியில் மாமாவையும் பார்த்து விட்டுப் போகலாம் என்று காலையிலேயே புறப்பட்டு வந்தேன். மாமாவிற்கு எந்தக் கோளாறுமே இல்லை. வெறும் 'காஸ்'தான். நேற்று ஏதோ ஹெவியாகச் சாப்பிடக் கொடுத்து இருக்கிறீர்கள். சதாபிஷேகத்திற்கு எனக்கு நாலு விரற்கடை ஜரிகை போட்டு வேஷ்டி வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டு இருக்கிறேன்'' என்று கலகலவென்று சிரித்தார்.

மனசு நிம்மதியாயிற்று. எல்லோரும் போனபின் சாவகாசமாகக் குளித்துப் பூஜையை முடித்து ஈஸிச் சேரில் நிதானமாக அமர்ந்தார்.

''பைத்தியமே, பதறிப் போய் விட்டாயா?''

வெட்கமாக இருந்தது. தனக்கேற்பட்ட குழப்பங்களையும் சொன்னாள். ஆற்றங்கரையில் நடந்ததையும் சொன்னாள்.

''லக்ஷம் மஞ்சள் கொடுக்கலையே தெய்வ குற்றமோ என்று பயந்து கொண்டிருந்தேன். அவள், ஒரு மஞ்சள் ஒரு லக்ஷம் மஞ்சள் போல் என்று சொன்னதும் உடம்பெல்லாம் சிலிர்த்து விட்டது,'' மங்களத்தின் குரல் தழுதழுத்தது.

சற்று நேரம் மௌனமாக இருந்தார். ''மங்களம் உனக்கும் வயது ஆகி விட்டது. அஞ்ஞானத்தை விட்டு விட்டு விவேகமாகச் சிந்திக்கும் பக்குவம் வரணும். கசந்து முகர்ந்து எந்தக் காரியமும் செய்து பலனே இல்லை. அடிக்கடி, 'பிள்ளைகள் நிறைய சம்பாதிக்கிறார்களே' என்று சொல்கிறாய். நீ படி அரிசி ஐம்பது பைசாவிற்கு வாங்கினாய். இன்று பதினாறு ரூபாய்க்கு வாங்குகிறார்கள். ரவிக்கு பத்தாவது படிக்கும் பொழுது ஃபீஸ் இரண்டரை ரூபாய். இன்றைக்கு அவன் குழந்தைக்கு எல்.கே.ஜி.க்கு ஃபீஸ் இருநூற்று ஐம்பது ரூபாய்! முடிந்த வரை நாம் தொந்தரவு செய்யக் கூடாது என்ற ஞானம் வேண்டும்.

கோடி வீட்டு சமையல் ராமுவின் அம்மா பரம சாயிபக்தை. மாமிக்கு நடக்கவும் முடியாது. ஆர்த்ரைடீஸ், வயது வேறு. இதில் ஷீரடி போக வேண்டும் என்று புலம்பிக் கொண்டே இருப்பாள். 'பெரியாத்துப் பாப்பா அவ அம்மாவை பிளேனில் வைத்து ஷீரடி கொண்டு போய்க் காண்பித்திருக்கிறான். இந்த ராமுவுக்கு என்ன கேடு. பெரியவாளை சம்ரக்ஷிக்கிரதே இல்லை. அதுதான் சீரழியறான்' என்று புலம்பிக் கொண்டே இருப்பாள். பெரியாத்துப் பாப்பாவின் சம்பளத்தில் நூறில் ஒரு மடங்கு கூட ராமுவிற்கு இல்லை. நித்யகர்பிணி மனைவி. உண்ண உணவும் இல்லாமல், உடுக்க உடையும் இல்லாமல் அவலமாய்க் குழந்தைகள்.''

''அந்த மாமிக்கு பாபா பக்தி அவ்வளவு.

# வெண்டீ

# வெண்டீயைப்

புரட்சித்தலைவிகள் சங்கத்தின்
தலைவி செல்வியை நிருபர் சந்திக்கிறார்.

மேடம்
உங்க சங்கத்துக்கு
ஏன் புரட்சித்தலைவிகள்
சங்கம்னு பெயர் வைச்சு
இருக்கீங்க? அப்படி என்ன
புரட்சி செய்யறீங்கன்னு
சொல்ல முடியுமா

நிச்சயமா. இன்னைக்கு இருக்கிற
சமுதாய சூழல்ல. பெண்கள் அதிக விழிப்புணர்ச்சியோட
செயல் படனும் அவங்களுடைய உரிமைகளை விட்டுக் கொடுக்காமல்.
அவங்களுக்கு ஏற்பட ற ஏமாற்றத்தையும். அவங்களுக்கு எதிரா
நட க்கற சதியையும் எதிர்த்து நின்னு போராட னும்

அது மட்டுமில்லை.
தன்ன பாதுகாத்துக்கிற ச
தனக்கு வேணுங்கறதை நிர்ணயிச்
தன் கையிலதான் இருக்குங்கற
பெண்ணும் உணரணுங்கி
வலியுறுத்துகிறது தான்
சங்கத்தின் முக்கிய கட



உதாரணமா.
நம்ம வெண்டீயை
எடுத்துக்குங்க.
கஸ்டமரோட
தேவைகளை மதிச்சு.
அவங்க செலவிடற
பணத்துக்கு
முழு மதிப்பையும்
கொடுக்கிற
பொருளுக்கு
உன்னதமான ஒரு
உதாரணம்.











அப்படி
கண்ஸ்யூம
தேவைக்கு ம
பொருள்களு
நாம ஆதரவு
சொல்
இல்லை





# ர் இல்லத்து புரட்சித்தலைவியின் கருத்து.
















**பாக்கேஜ் செய்தது போல் தூய்மையானது.**
**தனியே அளந்து வாங்குவது போல் விலை குறைவானது.**

| | பாக்கேஜ் செய்த எண்ணெயின் விலை (1 லிட்டருக்கு) | வெண்டி நிலையத்தில (1 லிட்டருக்கு) | உங்கள் சேமிப்பு |
|---|---|---|---|
| சூப்பர் ரிஃபைண்டு சூரியகாந்தி எண்ணெய் | 51.00 | 43.00 | 8.00 |
| அனுராக் சூப்பர் ரிஃபைண்டு சூரியகாந்தி எண்ணெய் | | | |
| டபிள் ஃபில்ட்டர்டு கடலை எண்ணெய் | 48.00 | 42.00 | 6.00 |
| டெய்லி டபிள் ஃபில்ட்டர்டு கடலை எண்ணெய் | | | |
| சூப்பர் ரிஃபைண்டு கடலை எண்ணெய் | 54.00 | 46.00 | 8.00 |
| அபூர்வா சூப்பர் ரிஃபைண்டு கடலை எண்ணெய் | | | |
| பிளென்டட் வெஜிடபிள் எண்ணெய் | 45.00 | 37.00 | 8.00 |
| அனுகூல் பிளென்டட் வெஜிடபிள் எண்ணெய் | | | |




அபூர்வா
சூப்பர் ரிஃபைண்ட் கடலை எண்ணை




டெய்லி
டபிள் ஃபில்டர்ட் கடலை எண்ணை

டெய்லி சேமிப்பு. டெய்லி அரவணைப்பு.

FOUNTAINHEAD-1929-96




நமது திருமண பத்திரிக்கைகளை தமிழில் அடிப்பதுடன் அதன் முதல் பக்கத்தில் ஆங்கிலத்திலும் அச்சடிப்பது ஒரு மரபாக இருக்கிறது. அப்படி அச்சடிக்கும் போது மணமகனின் பெயருக்கு முன் சிரஞ்சீவி என்றும், சௌபாக்கியவதி என்று மணமகளுக்கு முன்பும் குறிப்பிடுகிறார்கள். இதையே ஆங்கிலத்தில் குறிப்பிடும்போது Chi Kannan என்றும் Sow Kamala என்றும் எழுதுகிறார்கள். Chi என்ற வார்த்தை ஆங்கிலத்தில் இல்லை. ஆனால் Sow என்ற வார்த்தை ஆங்கிலத்தில் உள்ளது. இதன் பொருள் வெண்பன்றி என்பதாகும். எனவே தேவையில்லாமல் அறியாமல் ஒரு பெண்ணை வெண் பன்றியாக்கலாமா?

- ஆர். மங்கையர்க்கரசி

---

க்ஷீரடிபார்க்கணும்னு அவ்வளவு ஆசை. இது தப்பா."

"அசடே. 'ஈசனோடாயினும் ஆசை அறுமின்' என்று திரு மூலர் பாடுகிறார் தெரியுமா? ராம தாஸர் திருடி நகைகள் செய்து போட்டு ஜெயிலில் இருந்த பொழுது, ராமலக்ஷமணர்கள் நவாபிடம் வந்து நகைகளைக் கொடுத்து விட்டுப் போகின்றனர். "ஐயோ, நான் திருடிப் போட்டு அழகு பார்த்தேனே, எனக்குத் தரிசனம் கொடுக்காமல் நவாபிற்குக் கொடுத்தாயே." என்று ராமதாஸர் புலம்புகிறார். "தப்பான வழியில் போயாவது எனக்குச் செய்" என்று கேட்டேனா! என்ற ஆதங்கம் ஸ்ரீ ராமபிரானுக்கே இருந்திருக்கிறது."

மங்களத்திற்குப் புரிந்த மாதிரியும் இருந்தது. புரியாத மாதிரியும் இருந்தது.

"உண்மையான பக்தியும் சிரத்தையும் இருந்தால் பொறுமையுடன் காத்திருந்தால் இறைவன் எதையுமே நிறைவேற்றித் தருவான். பத்து வருடங்களுக்கு நான் லீவுலே அஸ்ஸாம் போய் வந்தேனே, உனக்கு ஞாபகம் இருக்கா. அதுக்குப் பின்னாடி ஒரு சம்பவம் இரு அப்ப சொல்லலை. இப்ப உனக்க அதசொல்றேன். எனக்குக், காமரூபம காமேஸ்வர பீடத்தில் வீற்றிருக்கும் காமே வரியை அஸ்ஸாம் போய்ப் பார்த்து வேண்டும் என்று ரொம்ப ஆசையாக இ தது. ஆதி சங்கரர் ஸ்தாபித்த பீடமது. ஆன என்னிடம் ஏது வசதி? தினமும் அம்பா மனமுருக வேண்டிக் கொள்வேன்."

"ஒரு நாள் ரோடில் நடந்து போ கொண்டிருந்த பொழுது காலில் கூர்மைய கல் குத்தி விட்டது. ரத்தமாகக் கொட விட்டது. ராமகிருஷ்ண மடம் விவேகான கேந்திரத்தின் வாசல் அது. உள்ளே கூட் போய் கட்டுப் போட்டுக் காப்பி தந்தார் பேசிக் கொண்டிருந்தோம். நான் வாத்திய சம்மர் விடுமுறை என்று தெரிந்து கொண்ட கள். எனக்கு ஆங்கிலம், ஹிந்தி, பெங்க மொழிகளில் நல்ல பரிச்சயம் உ என்றதும் இரண்டு மாத விடுமுறை அஸ்ஸாம் விவேகானந்த கேந்திரத்தில் சே செய்ய முடியுமா என்று கேட்டார் மெய்சிலிர்த்துப் போனேன். அவர் செலவிலேயே மனம் குளிர அம்பா தரிசித்து வந்தேன். கடவுளின் கரு எல்லையில்லாதது. நமக்குக் கிட்ட வேண் என்று விதித்திருந்தால் கிட்டியே தீரும் எ விவேகம் வேண்டும்."

மங்களம் பெருமையோடு கணவ பார்த்தாள். 'இவரோடு வாழ என்ன த செய்தேன்."

மெலிதான குரலில் பாடினார்,

'ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய் வரும் துன்ப
ஆசை விடவிட ஆனந்தமாமே!'

---

**மிளகு சீரகத்தை லேசாக நெய் வறுத்துப் பொடி செய்து, சிறிய வெங்க 4,5 வதக்கி உப்புப் போட்டு கலந்து பண்ணுங்கள். சுவையான 'ஜீரா ரெடி.**

—ம





# கயிற்றின் மேல் நடக்கும் கருணாநிதி!

கயிற்றின் மேல் நடக்கும்' வித்தையை அனாயாசமாகச் செய்து காட்டியிருக்கிறார் கருணாநிதி! தமிழக பட்ஜெட்டில் 306 கோடி மதிப்புக்கு வரிச் சுமையிலிருந்து விடுதலை தருவதென்றால் சும்மாவா...! நெஞ்சுரமும் நம்பிக்கையும் இருந்தாலொழிய இப்படி அரசுக்கு வருவாயைக் குறைக்கும் காரியத்தைச் செய்ய முடியாது. அதுவும் பட்ஜெட்டில் பற்றாக்குறை ரூபய் 851 கோடியில் வந்து நிற்கும் போது.

அடுத்தடுத்து வரும் அரசாங்கங்கள் வரி விதிப்பை அதிகரிப்பதன் மூலமே அரசுக்கு வருவாயை அதிகரிக்க முடியும் என்ற நோக்கில் செயல்பட்டு வந்திருக்கின்றன. வரி விதிப்பு அனுமதிக்கும் ஊழலும் நிச்சயமாகக் குறையும்.

இந்தக் காரணங்களுக்காக தமிழக முதல்வரின் பட்ஜெட்டை வாழ்த்தி வரவேற்போம்.

அதே சமயத்தில், பற்றாக் குறையைச் சமாளிக்க மத்திய அரசிடம் அவர் நிறைய எதிர்பார்ப்பது சரியல்ல என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டியுள்ளது. மாநில அரசு மூலம் கணிசமாக வருவாய் பெறும் மத்திய அரசு, மாநிலங்களுக்கு நிறைய நிதியளிக்க வேண்டும் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

ஆனால், மத்திய அரசுக்குக் கிடைக்கும் வருவாயில் சுமார் 62 சதவிகிதம்,

கலைஞர் இந்த பட்ஜெட்டில் வரிகளை நேரடியாகக் குறைக்காவிட்டாலும் விற்பனை வரி வசூலில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்து, வரிச் சுமையைக் குறைத்து, கூடுதலான வரி வசூலுக்கு வழிவகுத்திருக்கிறார். வரி விதிப்பு எளிமைப்படுத்தப்பட்டிருப்பதால் பெரும்பாலானோர் சுணங்காமல் வரி செலுத்துவார்கள்; அதனால் வருவாய் பெருகும் என்பது எதிர்பார்ப்பு.

பல பொருள்களுக்கு பல்முனை விற்பனை வரி விதிக்கப்பட்டு வந்தது. அதாவது தயாரிப்பாளரிடமிருந்து மொத்த வியாபாரிக்கும், பின்னர் சில்லறை வியாபாரிக்கும் ஒரு பொருள் கைமாறும் போது, ஒவ்வொரு கட்டத்திலும் விற்பனை வரி விதிக்கப்பட்டு நுகர்வோர் தலையில் அதன் சுமை விடிந்தது. இப்போது அந்த முறை கைவிடப்பட்டு ஒருமுனை வரியாக மாற்றப்பட்டிருக்கிறது. மஹாராஷ்டிர மாநிலத்தைப் பின்பற்றி, Value Added Tax என்ற வரி விதிக்கப்படவுள்ளது. இதன் மூலம் உற்பத்திப் பொருள்களின் மீது, அதன் உற்பத்தி முறையைப் பொறுத்து உரிய விகிதத்தில் ஒரே வரியாக அறிமுகப்படுத்தப்படும். காலப்போக்கில் விற்பனை வரியென்பதே இல்லாமல் போய், Value Added Tax என்ற ஒருமுனை உற்பத்தி வரி மட்டுமே விதிக்கப்படும்.

இதனால் நுகர்வோரின் சுமை குறைவதுடன், பல்முனை விற்பனை வரி வசூலுக்காகச் செய்யப்படும் ஏராளமான தண்டச் செலவும், அத்தகைய வாங்கிய கடன்களுக்கு வட்டி செலுத்தவே சரியாய்ப் போய்விடுகிறது. (நாட்டின் இப்போதைய கடன் சுமை நான்கு லட்சம் கோடி ரூபாய்...! என்ன தலைசுற்றுகிறதா!)

இந்த நிலைமையில், கலைஞர் கேட்பது போல், மாநிலங்களிலிருந்து மத்திய அரசு பெறுகிற வருவாயில் 1/3 பகுதியை மீண்டும் மாநிலங்களுக்கே தந்துவிட்டால், அரசு இயந்திரம் இயங்கக் கூடப் பணம் இருக்காது.

சரி, மாநில அரசுகள் வருவாயை அதிகரித்துக் கொள்ள என்னதான் வழி...?

மாநிலங்களின் வருவாய் முக்கியமாக விற்பனை வரி, மோட்டார் வாகன வரி, பதிவுக் கட்டணங்கள் மூலமே கிடைக்கிறது. இந்த வரிகளை அதிகரிக்க வாய்ப்பு இல்லாத நிலையில் புதிதாக சர்வீஸ் டாக்ஸ் என்றொரு வரி விதிக்க மாநிலங்களுக்கு அதிகாரம் வேண்டும் என்று கோரியிருக்கிறார் கலைஞர்.

எவ்வளவுதான் வரிகள் விதித்தாலும் உற்பத்திப் பெருக்கம் கணிசமாக இல்லாவிட்டால், அரசுக்கு வருவாய் போதுமான அளவு பெருகாது. இந்த பட்ஜெட்டில் சிறந்த வரிச் சீர்திருத்தங்களைப் புகுத்தியதன் மூலமும் தொழில் முயற்சிகளுக்கு வரவேற்பும் ஆதரவும் காட்டி வருவதன் மூலமும் வருவாய் பெருக்கத்திற்கு ஓர் ஆரம்பம் ஏற்படுத்தியிருக்கிறார் முதல்வர்.

**- வி. கோபாலன்**

செல்லப்பாவுக்கு அந்தப் பெட்டியைத் திறந்து காட்டியதும் வெலவெலத்துப் போய்விட்டது. விழி பிதுங்கிவிட்டது என்பதுதான் உண்மை.

"ஒங்களுக்கு இல்லே இது. இதக் கொண்டு போய் நீங்க மிஸ்ராட்டக் குடுத்துட்டாப் போதும். குடுத்துட்டு திரும்பிப் பாக்காம வந்துடுங்கோ!" என்றார் பட்டுசாமி.

மைத்துனன் கிருபாசங்கர் மீதுதான் செல்லப்பாவுக்குக் கோபமும் ஆத்திரமும் பொத்துக் கொண்டு வந்தன. தில்லிக்கு வந்து சேர்ந்து, இந்த இருபத்து நாலு வருடங்களாக அவன் போடுகிற சாப்பாட்டு

கும் செலவுக்

என்று தருகிற ஐ

நூறு ரூபாய்க்கும் கட்டு

பட்டுத்தான் இந்த மாதி

துஷ்கிருத்யங்களில் இறங்

வேண்டியிருக்கிறது.

"உம்மோட கதர் ஷர்ட்டு

கதர் வேஷ்டியும் உம்மை ஒ

பார்ட்டி ஆளாகத்தான் கா

பிக்கிறது. யாரும் சந்தேகப் ப

மாட்டா!" என்றான் கிருபா.

"அதுனால தைரியமா எடு

துண்டு போய் மிஸ்ராட்

குடுத்துடும். மீதி எது ஒ

ணைப் பத்தியும் நீர் க

லையேபட வேணாம்.

'கதர் டிரஸ் ஒண்ணு

தான் கட்சிக்கார

வேஷம். கலைந்து போ

பரட்டைத்தலை. ஒடு

கிய கன்னம், ஃபிடி

குச்சி போல உடம்பு எ

லாம் நிச்சயமா கட்சி

காரனோட சேர்

இல்லே' என்

நினைத்து

கொண்டா

செல்லப்பா.



பெட்டியை மனசில்லா மனசோடுதான் பட்டுசாமியிட மிருந்து வாங்கிக் கொண்டான். பெட்டி கனமாய் இருந்தது. இருக்காதா பின்னே? அத்தனையும் கரன்சி. கத்தை கத்தையாய் கரன்சி. முன்னாலேயே இன்னார் கம்பெனியிலிருந்து சூட் கேஸ் கொண்டு வந்து தருவார்கள் என்று எல்லாம் பேசி முடிவாகிவிட்ட சமா சாரம்தான். கம்பெனி ஆள் யாரானும் கொண்டு போய்க் கொடுத்து வெளியே விவ காரம், விகாரம் ஆகி விடாமல் இருக்கத்தான் இந்த ஏற்பாடு. செல்லப்பா அப்பாவி. செய்யச் சொன்ன வேலையை, சொன்ன மாதிரி செய்து விட்டு வந்து விடுவான் என்று அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது.

"இது ஒரு பெரிய பிராஜக்ட். நானூறு கோடி ரூபாய் பிராஜக்ட். கெடைச்சா கோடிக் கணக்குல லாபம் வரும். ஹோசூர்லதான் கேட்டுருக் கோம். உங்க தூரத்து ஒறவுல யாருக்கோ வேலை வேணும்னு கேட்டுண்டு இருந் தேளே, வரட்டும். முதல் அப்பாயின்ட் மென்ட் அவருக்குத்தான்!" என்றான் கிருபா. இதெல்லாம் வெளிப் பேச்சு. ஃபாக்டரி வந்ததும், 'எம்.பி.ஏ.க்காரன், ஸேவியர் இன்ஸ்ட்டிட் யூட்காரனுக்கு எல் லாம்தான் முதல்ல உத்தியோகம் போட்டுக் குடுப்பான்' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான்.

கட்சி அலுவலகத்தில் வெளியே பாதுகாப் புக்கு, துப்பாக்கி தாங்கிய முரட்டு போலீஸ் இருந் தது. மெட்டல் டிடெக்டர் கருவியோடு யாரும் இல்லை என்றாலும், கடந்து போகக் கட்டாயமாக வாசக்கால் மாதிரி மரச் சட்டம் வழியே நுழைந்துதான் போக வேண்டியிருந் தது.

ஒரு ஜீப் வந்து, யாரோ அவசர அவசரமாய் இறங்கி உள்ளே போனார்கள். 'இவன்தான் மிஸ்ராவோ? யாரு கண்டா?'

மெல்ல மெல்ல பார்ட்டி ஆபீசில் கூட்டம் அதிகரித் தது. அறைகளின் சாத்திய கதவுகளுக்கு வெளியே ஒவ் வொருவித முகத்துடன், ஒவ்வொரு விதக் கவலையுடன் ஆட்கள் காத்து நிற்கத் தொடங்கினார்கள். சிலர் விஸிட் டிங் கார்டு கொடுத்தார்கள். சிலர் கதவு திறந்ததும் எட்டிப் பார்த்து, ஒரு சிரிப்புச் சிரித்தே உள்ளே போனார்கள்....

"மிஸ்ரா சாப் ஆகயா க்யா?" என்று கேட்டான் செல லப்பா.

எடுபிடிக்கு இவனிடம் பதில் சொல்லவே வெறுப்பு போல. ஒரு அசிரத்தையான பார்வையை அவன் மீது உதிர்த்துவிட்டு நகர்ந்து விட்டான்.

பெட்டி கனத்தது. இந்தக் கடன்கார மிஸ்ராவிடம் இதைக் கொடுத்துத் தொலைத்து விட் டால் இங்கிருந்து போய்விட லாம். கொடுத்தாச்சு என்று கிருபா சங்கரிடம் சொல்லி விடலாம்....

இதற்குள் ஒரே பரபரப்பு. கட்சித் தலைவர் வந்து விட்டார். ஆட்சித் தலைவரும் அவரே.

திடீரென்று எங்கிருந்து தான் அத்தனை கூட்டம் வந்ததோ தெரிய வில்லை. கார் களும் ஆட்டோ



## சாருகேசி

ரிக்ஷாக்களும் சர்சர்ரென்று வந்து நின்றன.

தலைவருடன் கூட வந்தவரைத்தான் மிஸ்ரா என்று அடையாளம் காட்டினார் ஒரு தொண்டர். செல்லப்பா உஷாரானான்.

கிருபாசங்கர், பட்டுசாமி இருவரும் வேலை பார்க்கும் நிறுவனத்தின் விசிட்டிங் கார்டை எடுத்து வைத்துக் கொண்டான். வியர்வை பட்டு, கொஞ்சம் நனைந்துதான் போயிருந்தது.

''மிஸ்ரா சாப்கோ மில்னா ஹை....'' என்றான் ஒரு கண்ணாடிக்காரரிடம்.

''சாப்தோ பிஸிஹை. கார்டு தியா ஆப்கோ?''

கொடுத்தான்.

அரை மணி ஆயிற்று. ஒரு மணி ஆயிற்று.

'மிஸ்ரா உள்ளே இருக்கானா? இல்லை ஜன்னல் வழியாக் குதிச்சு ஓடிப் போயிட்டானா? கர்மம், கர்மம்.'

கூட்சிக்குச் சம்பந்தமே இல்லாத மாதிரி ஒரு குடும்பம் வந்தது. கணவனும் மனைவியும் பஞ்சப் பரதேசிகளாகத் தெரிந்தார்கள். கூடவே




குஞ்சும் குளுவானுமாக மூன்று குழந்தைகள். பெரிதாக ஒரு பையன் மட்டும் அப்பனைத் தாங்கிக் கொண்டு.

தலைவரைப் பார்க்க வேண்டுமாம்.

"ஒரே ஒரு நிமிஷம்தான். என் கஷ்டத்தைச் சொல்லிவிட்டுப் போய்விடுகிறேன். அவர் ஏதானும் கொடுத்தால் வாங்கிக் கொண்டு போய்விடுகிறேன்'' என்றான் கணவன். 'சாப்பிட்டு எத்தனை நாள் ஆச்சோ, பாவம்!'

தலைவர் மாதிரி தெரிகிற அத்தனை பேரிடமும் அவர்கள் மன்றாடியது பரிதாபமாய் இருந்தது.

செல்லப்பா மெல்ல அங்கிருந்து நகர்ந்தான். அவர்களை அழைத்துக் கொண்டு பின்னால் இருந்த கேன்டீனுக்குப் போனான்.

உத்தரபிரதேசத்தில் இருக்கிற ஏதோ ஒரு கிராமத்திலிருந்து வருகிறார்களாம். கணவனுக்கு வைத்தியம் பார்த்ததில் நிலத்தை விற்றுக் கிடைத்த நாற்பதாயிரம் ரூபாயும் போய் விட்டது. மூளைக் காய்ச்சல் என்று சொன்னார்களாம். வேறு பெரிய ஆசுபத்திரியில் சிகிச்சை எடுத்துக் கொள்ளச் சொல்லி அனுப்பிவிட்டார்களாம்!

"அடப்பாவிகளா!'' என்றான் செல்லப்பா வாய்விட்டு.

அவர்கள் ரொட்டியையும் பாஜியையும் சேவ்டாவையும் பரபரத்துப் போய்ச் சாப்பிட்டதைக் கண்டு, உண்மையிலேயே பயங்கரப் பசி அவர்களுக்கு இருந்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

"இப்போது எதற்காக இங்கே வந்தீர்கள்? யார் உங்களை இங்கே வரச் சொன்னார்கள்?''

"நாங்களாகத்தான் வந்தோம். இவர்தானே நாட்டின் தலைவர்? ஏதானும் நல்லது பண்ண மாட்டாரா என்று வந்தோம்... நீங்க யாரு? தலைவரோட ஆபீசுல வேலை பார்க்கறீங்களா... உங்களுக்கு நல்ல மனசு!'' என்றார்கள் கணவனும் மனைவியும்.

ஒரு குடிசை மட்டும்தான் இருக்கிறதாம். நிலம் போய்விட்டது. இனி பிழைப்புக்கு வழி? "இந்த மனிதரோட வாழ்வு எத்தனை நாள்?'' என்று கேட்டாள் அந்தப் பெண், கண்ணிலிருந்து கரகரவென்று நீர் சொரிந்தபடி.

சந்தடியே இல்லாத மரத்தடிக்கு அவர்களைக் கூட்டிக் கொண்டு போனான் செல்லப்பா.

"பை ஏதானும் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

சில அலுமினியப் பாத்திரங்கள் போட்ட ஒரு காலி சிமென்ட் பையைக் காண்பித்தாள் அந்தப் பெண்.

செல்லப்பா சூட்கேஸைப் பட்டென்று திறந்தான். உள்ளே நெருக்கி நெருக்கிப் பவாட்டில் வைத்திருந்த நூறு ரூபாய்க் கட்டுகளிலிருந்து ஒவ்வொன்றாக எடுத்து, ஐந்து கட்டுக்களைப் போட்டான்.

"வச்சுக்குங்க. ஊருக்குப் பத்திரமா பிடிச்சு போய்டுங்க. பஸ் ஸ்டாண்டு தெரியுமா? ஐ.எஸ்.பி.டி. இருக்கே அதுதான். ஒரு ஆட்டோ பிடிச்சுப் போய்டுங்க!'' என்றான்.

"இது தலைவர் கொடுத்ததுதானா?'' என்று கேட்டான் கணவன்காரன்.

"ஆமா. தலைவர் கொடுத்ததுதான்!'' என்றான் செல்லப்பா அழுத்தமாக.

அவர்கள் நம்ப முடியாமல், அந்த அழுக்கு சிமென்ட் பையை மூடிப் புறப்பட்டபோது செல்லப்பாவுக்கு மனசெல்லாம் பாரம் இறங்கி லேசாகிவிட்டிருந்தது.

"பாக்கி போர்ரும் அந்தச் சனியன் மிஸ்ராவுக்கு!'' என்று அவன் சொன்னது யாருக்கும் கேட்டிருக்காது.

# கே. ரவிசங்கர்

கிட்டத்தட்ட இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, பள்ளி நண்பன் வாசுவைச் சந்திக்கிறேன். என்னை அறியாமல் என் கை நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டது. 'வீட்டு துட்டு' என்று உதட்டில் உச்சரித்து, சிரித்துக் கொண்டேன். ஒன்றா இரண்டா? நூற்று ஏழு டிகிரி ஜுரம் அடிக்கக் காரணம் இந்த வீட்டு துட்டுதானே! தேர்தல் ஜுரம், கிரிக்கெட் ஜுரம், பரீட்சை ஜுரம் எல்லாவற்றையும் தூக்கிச் சாப்பிட்டு விட்டது இந்த ஜுரம். பார்க் ஷெராட்டனில் நுழையும் போது அந்த ரப்பர் பேண்ட் கட்டிய வாசுவின் டிராயர் பாக்கெட் பை கடிகார பெண்டுலம் மாதிரி என் கண்முன் ஆட, பழைய நினைவுகள், தியாகி அன்னை சத்யவதி உயர்நிலைப் பள்ளி (ESTD 1924) முன் போய் நின்றது.

# வீட்டு துட்டு



நானும் வாசுவும் வலது கைக்குப் பத்து நோட்டீசும் இடது கைக்குப் பத்து நோட்டீசும் வாங்கி, பாக்கெட்டில் திணித்துக் கொண்டோம்.

"என்னடா நோட்டீஸ் இது?" பாட்டி வழியில் மடக்கினாள்.

'அன்புடையீர், வணக்கம்! சிவப்பிரகாசம் மைதானத்தில் வரும் திங்கட் கிழமை முதல் பத்து நாள் தொடர்ந்து சைக்





கிள் விடப் போகிறார் மோகன சுந்தரம். கொடுத்துச் சிவந்த கைகள், பாரி வள்ளல் எம்.ஜி. ராமச்சந்திரன் (ஆலந்தூர் எம்.எல்.ஏ) அவர்கள் தொடங்கி வைப்பார். பத்தாவது நாள் பம்மல் ரீட்டா டான்ஸ் உண்டு. குள்ளன் குணா டமாஸ் உண்டு. அனைவரும் வருக!'

"புளுகுண்ணி. எம்.ஜியார் வர மாட்டாரு. உங்களையெல்லாம் ஏமாத்தறான். ராத்திரியெல்லாம் யார் போய்ப் பாக்கறா. குடிச்சிட்டுத் தூங்குவான்."

பாட்டி மாதிரி எனக்கும் சில சந்தேகங்கள் உண்டு. குளிப்பது, பாத்ரூம் போவது போன்ற சமாசாரங்கள் எப்படி நடக்கும் என்று. இதற்காக்வே நைட்ஷோ பார்த்துவிட்டு நைஸாக நோட்டம் விட வேண்டும் என்று நினைத்துக் கொள்வேன். பாட்டியும் லேசுப்பட்டவளில்லை. காய்கறி, பால் வாங்கும் சாக்கில் யார் மீதும் படாமல் தள்ளி நின்று பார்த்துவிட்டு ஓசைப்படாமல் வருவாள். காமெண்ட் அடிப்பாள்.

**ம**றுநாள் நானும் வாசுவும் அந்த மைதானத்திற்கு ஓடினோம். வாசு எப்போது வாசல் படி தாண்டினாலும் ஒரு சிறு பவுடர் அப்பல் ஒப்பனை இருக்கும். நெற்றியில் விபூதிக் கீற்று இருக்கும். எதையாவது மென்று கொண்டே இருப்பான். இந்தப் பழக்கத்தால் 'புறாவாய்' வந்திருந்தது. மைதானத்தைச் சுற்றி, வட்டமாக கம்புகள் நட்டு, கயிற்றால் இணைக்கப்பட்டிருந்தது. குச்சி ஐஸ், வேர்க்கடலை, ஆள்வள்ளிக் கிழங்கு, கமர்கட்டு விற்பவர்கள் கடை போட்டு பேசிக் கொண்டிருந்தார்கள்.

வாசு திடீரென்று காணாமல் போனான். தெரியும். எதையாவது தனியாகத் தின்று விட்டு வருவான். சாப்பிட்ட பொருளின் கலர் பூச்சு நாக்கில் தெரிய, திருட்டு முழி முழிப்பான். சாப்பிட மட்டும் யாரையும் கூட்டு சேர்க்க மாட்டான். நிறைய காசு கொண்டு வருவான். இதெல்லாம் வீட்டிலிருந்து லவுட்டிக் கொண்டு வருவது. காசு இருக்கும் இடம் கண்டுபிடிக்க முடியாது. டிராயர் பாக்கெட்டில் கா
போட்டு, முனையை ரப்பர் பேண்டால்
விடுவான். பாக்கெட்டில் கை விட்டால்
டையாக நிற்கும். கண்டுபிடித்து விட்
'வீட்டு துட்டு' என்று சொல்லி விடுவ
நாங்களும் 'வீட்டில் ஏதாவது சொல்லுவா
என்று பயந்து போய் விட்டு விடுவோம்.

**ப**டபடவென்று சத்தம் கேட்க, சைக்
பின் சக்கரத்தில் போர்ன்விட்டா டின் க
சைக்கிளை ஓட்டி வந்தான், மோகனசுந்
பல வித்தைகள் செய்து காண்பித்தான்.
டலும் விசிலும் பறந்தன. எல்லாம் முடி
பிறகு அடிவயிற்றை ஹாண்டில்பாரில் ச
துக் கொண்டு குரங்கு பெடல் அடித்தவ
கையால் எல்லோரையும் கும்பிட்டான்.
டெடுக்கும் நேரம்' என்று சில பேர் நழுவி
கள். சிலர் ஐந்து பைசா பத்து பைசா நாண
களை போட்டு, கைகுலுக்கினார்கள். யா
ஒருவன் ஆள்வள்ளிகிழங்கு வாங்கிக் கொ
தான். அதைப் பார்த்து, மற்றொருவன் வே
கடலை வாங்கி, உள்ளங்கையில் தேய்
ஊதிக் கொடுத்தான். வயதான கிழவி ஒரு
டீ வாங்கி முந்தானையால் பிடித்து
வைத்து, அவனுக்கு ஊட்டினாள். கூட்டம்
சிரித்து ஆரவாரித்தது. யாரோ மைக்
'பொருளுக்கு பதில் சன்மானமாகக் கொ
வும்' என்று அறிவித்தார்கள்.

**"தங்க நகைக்கு லோன் கிடைக்கும்னு சொன்னாங்களே சார்..."**

**"உங்களுக்கு எவ்வளவு லோன் வேணும்?"**

**"மகளோட கல்யாணத்துக்கு அஞ்சு பவுன்ல சங்கிலி வாங்கணும்; அதுக்கு எவ்வளவு தேவையோ அதைக் கொடுங்க சார் போதும்!"**

**– சீர்காழி வி. ரேவதி**

இதற்கிடையில் யாரோ கொடுத்த சே
வைக் குடித்து, மீதியை ஸ்டைலாக முக
பீச்சி அடித்துக் கொண்டான். பார்க்கப் பா
எனக்கும் அவன் மீது மனிதநேயமும் அ
சுரந்து, ஏதாவது வாங்கிக் கொடுக்க துருது
ஆரம்பித்தது. பரபரத்து, வாசுவைக் கேட்
மறுத்தான். அரித்தேன். அவனைக் கிட்ட
இழுத்து, தொடை வழியாக டிராயர் பாக்
டைத் தொட்டுப் பார்த்தேன். காசு மூட்
கையில் உறுத்தியது.

என்னை உதறித் தள்ளி விட்டு, 'ரன்

ரேஸ்டா' என்று கழன்று கொண்டான். இன்னும் கூட கூட்டத்தில் சில பேர் ஏதேதோ வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். பார்க்கப் பார்க்க ஏக்கம் வாட்டியது. மறுபடியும் வாசுவை தேடிப் பிடித்து, கெஞ்சினேன். 'இது வீட்டு துட்டு' என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே வாயை மூடும் போது வேர்க்கடலை பர்ப்பியின் துகள்கள் பல்லிடுக்கில் ஒட்டிக் கொண்டிருந்தது.

ஏமாற்றத்தில் சவக்களை தோன்றி, ஏக்கத்தோடு வீட்டிற்குத் திரும்புகையில், லேசாகக் குளிர் எடுத்து, உடம்பு சுட ஆரம்பித்தது. வீட்டில் போய்ப் படுத்து, நெற்றியைத் தொட்டுப் பார்த்ததில் 107 டிகிரி ஜுரம்.

நமுட்டுச் சிரிப்பை அடக்கினேன். எவ்வளவோ விஷயம் பேசினாலும் அந்த 'வீட்டு துட்டு' விஷயத்தை டச் பண்ணவில்லை. தைரியமில்லையா, இல்லை வெட்கமா தெரியவில்லை. என்னை மாதிரி அந்தச் சம்பவத்திற்கு சரித்திர மதிப்பு கொடுக்க வேண்டிய அவசியம் அவனுக்கு இருக்குமா?

"லூசுடா... நீ இத போய்..." என்று அலட்சியமாக விலக்கி ஒதுக்குவான். நான் இதையெல்லாம் மிகுந்த வாஞ்சையோடு யோசித்துக் கொண்டிருக்கையில், வாசு சக்கையாகத் தின்று கொண்டிருந்தான். பில் வந்தது. முன்னூறு ரூபாய்! உள்ளுக்குள் 'பவ்' என்றது. நான் இவ்வளவு எதிர்பார்க்கவில்லை. என்னதான் ஸ்டார் ஓட்டல் என்றாலும் அவ்வளவு பணம் இருக்குமா? கிட்டத்தட்ட இருநூற்றி எண்பது ரூபாய் தேற்றி பில் ஃபோல்டரில் வைத்து விட்டு, வாசுவைப் பார்த்தேன். வாசு எதுவும் கண்டுகொள்ளாமல் சோம்புவை மென்று கொண்டு, பல்லை ஆராய்ந்து கொண்டிருந்தான். இப்படியே பத்து நிமிடம் ஓடியது.

மறுபடியும் மேல் பாக்கெட், கீழ் பாக்கெட், ஆபீஸ் பேக் என்று குடைந்து, தேடியதில் வீட்டுக்குப் போகப் பத்து ரூபாய் தேறியது. வாசுவிற்கு நிலைமை புரியாமல் இல்லை. அவன்தான் நிறைய சாப்பிட்டான். நானே சுத்தமாக துடைத்துக் கொடுத்தது வருத்தமாக இருந்தது.

ஒருவழியாக வெளியே வந்தோம். பர்சைத் திறந்து, வாசு பாதி மடித்து வைத்திருந்த பான் பராக்கை எடுத்துப் போட்டுக் கொண்டான். பர்சை கவனித்ததில் அவனிடத்தில் சுத்தமாகப் பணம் இல்லை! அதான் கொடுக்கவில்லை என்று நினைத்துக் கொண்டேன்.

சின்ன வயசு 'வீட்டு துட்டு' புத்தி போய் விட்டது சந்தோஷம்தான். ஆனால் ஆமெக்ஸ் (AMEX) கிரெடிட் கார்ட் பர்சில் பளிச்சிட்டது. என் பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு இந்த கார்டை உபயோகித்து தர்மசங்கடத்தை தவிர்த்திருக்கலாமே என்று தோன்றியது.

"பெரிய ஆள்பா... நீ ஆமெக்ஸ் கிரெடிட் கார்டெல்லாம் வச்சுருக்க..." ஆற்றாமையால் கிண்டினேன்.

"இந்த கார்ட மெயினா வீட்டுக்குத்தான் யூஸ் பண்றேன். வீட்டு புரொவிஷன், துணி மணியெல்லாம் இதத் தேச்சுதான் வாங்குவேன். வேற எதுக்கும் யூஸ் பண்றதில்லை..."

நான் நெற்றியைத் தொட்டுப் பார்த்துக் கொண்டேன். இன்னொரு சரித்திர மதிப்பை லேசான சூட்டில் உணர்ந்தேன்.



"சாயம் போகாதுன்னு சொன்னீங்க; தண்ணில நனைச்சதும் சாயம் கொட்டுதே சார்...?"

"ஒரு ரெண்டு மூணு 'வாஷ்' வரைக்கும்தான் சார் அப்படி இருக்கும்; அதுக்குப் பிறகு பாருங்க!"

— சீர்காழி. வி. ரேவதி



"பேப்பர் விலையெல்லாம் ஏறிப் போச்சுங்க..."

"ஓகோ... உங்க வார இதழ் விலையை ஏத்தப் போறீங்கன்னு சொல்லுங்க."

"அதுக்கில்லீங்க, இனிமே நீங்க சிறுகதை எழுதி பேப்பரை வேஸ்ட் பண்ணாம, 'ஜோக்' எழுதியனுப்புங்க, போதும்னு சொல்ல வந்தேன்."

— அகில்

அன்புள்ள உங்களுக்கு...

விரோதிகளுக்கு வந்த கடிதங்கள்!



- வித்தகர்!

  - பழைய முகங்களின் புதிய பரிமாணம்!



- எறும்பார் கடிக்கிறார்!

- களத்தில் கல்கி!

  — சமூகப் பிரச்னைகளை நோக்கி...



- ஹலோ, சுகமா?

  – உங்கள் ஆரோக்கியத்துக்காக ஒரு பக்கம்!

- செய்திகள் வாசிப்பது செம்பியன்...

- கடலோரக் கொலைகள்

  பெனிட்டோ குமார் எழுதும் பரபரப்பான மர்ம(பட)க்கதை!

ஒரு ஜன நெரிசலான நேரத்தில் தவிர்க்க முடியாமல் ராம்குமார் தனது மோட்டார் சைக்கிளில் கீழே காலை ஊன்றிய போதுதான் அந்தச் சுவரொட்டியைப் பார்க்க நேர்ந்தது.

**நவீன சுயம்வரம்**

.... மஹா ஜனங்களுக்கு (இந்தியா மத, ஜாதி சார்பற்ற நாடு என்பதால் கோடிட்ட இடத்தில் குறிப்பிட்ட ஜாதி பெயரைத் தவிர்த்திருக்கிறேன்)

நமது சமூகத்தின் முன்னேற்றம் குறித்தும், உறுதிப்பாட்டினை காக்கும் பொருட்டும், நமது சமூக இளைஞர்களை நல்வழிப்படுத்தவும், முன்னாள் சேர்மன் அமரர் நடராஜ... நினைவு மகாலில் நவீன சுயம்வரம் நடைபெறும். வரன்களும், பெண்களும் ரூ. 100/- முன் பணமாகச் செலுத்தி வரும் ஜனவரி 19 ம் தேதி சுயம்வரத்தில் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்

# நவீன சுயம்வரம்

கள். விவரங்களுக்கு நமது சமூகக் கட்டடத்தை அணுகவும்.

இவண்
வெங்கடேச.... (தலைவர்)
ராஜகோபால.... (செயலாளர்)

பின்குறிப்பு : முன் பதிவு செய்து கொள்ள வருபவர்கள் அவசியம் ஜாதி உறுப்பினர் அட்டையை எடுத்து வரவும்.

ராம்குமார், தனது சொந்த ஜாதியைச் சேர்ந்த, கிட்டத்தட்ட தன் அளவு சம்பாதிக்கும் ஒரு வங்கியில் எழுத்தர் வேலை பார்க்கும் விஜி என்ற விஜயராணியைக் காதலிக்கிறான்.

அவன் சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்கச் சென்றபோது, அந்தக் கவுண்டரில் விஜி இருந்தாள். ரெக்கரிங் டெபாஸிட்டின் பெயரில் கடன் வாங்கப் போனால் அந்த கவுண்டரில் விஜி இருந்தாள். வித்ட்ராயல் போட்டு பணம் வாங்கப் போனால் கேஷ்-கவுண்டரில் விஜி இருந்தாள். எல்லாம் வெவ்வேறு தினங்களில் நிகழ்ந்தவை.

"ஆல் இன் ஆலா?" என்றான்.

"லீவ் ரிஸர்வ்" என்றாள்.

"கேஷுவல் லேபரர் இல்லியே?"

அவள் கல, கல என்று சிரித்தாள். அவள் கொட்டிய முத்துக்களை அள்ளிக் கொள்ள அவன் பர்ஸில் இடமில்லை. வித்ட்ரா பண்ணியிருந்த பணம் நிரம்பி வழிந்தது. வெள்ளோட்டமாக அவள் சிரித்த சிரிப்புக்கு நல்ல இருந்தது. வங்கிப் பின்னணியை மீறி அரங்கு, டிபார்ட்மெண்டல் ஸ்டோர், சுக சுவரர் சந்நிதியில் ஆருத்ரா தரிசனம் — பக்தி நோக்குடனும், அவன் ஸைட் அடி நோக்குடனும் என்பது வேறு விஷயம் — மாறுபட்ட பின்னணியில் அவர்கள் பரிச மலர்ந்து வழக்கம் போல காதல அவனையே 'ஐலவ்யூ' சொல்லச் சொன்

அதன் பிறகு, குறைந்தது இரண்டு மாவது அவர்கள் காதலித்திருப்பார்கள். குமார் விஜிக்கு குறைந்தது நான்கு புடை குடை, ஒரு ஸெண்ட் பாட்டில், பாரதிய கவிதை புஸ்தகம் - காதலினால் மானுடர்க்கு கவலை

போம் என்ற வ பச்சைமசியால் அடிக்கோடு இ பட்டிருந்தது - தோலினால் செய்யப்ப தோள்பை முதலியவைகளை வாங்கிச் செ தான். அவள் பிரதி காதலாக ஒளிக்கேற்ற நிறம் மாறும் கூலிங் க்ளாஸ், தோல் கை ஆயத்த சட்டை நான்கு என வாங்கிச் செ தாள்.

ராம்குமார் அவர்கள் வீட்டில் தன் கா இந்த நேரம் வரையில் பிரஸ்தாபிக்கவில் வெறும் மெடிக்கல் ஸேல்ஸ் ரெபரஸன் வாக இருக்கும் அவன், பதவி உயர்வு பெ ஏரியா ஸேல்ஸ் மானேஜர், டிவிஷனல் மே ராகட்டும் என அவன் தந்தை காத்திருக்கி மூன்றாம் நிலை எழுத்தராகச் சேர்ந்து, எ ஸர்வீஸ் ராங்கில் பதவி ஓய்வு பெற்ற நா மான அரசு ஊழியர் என்பதால் பதவியும் தஸ்துமே தன் மகனின் வாழ்வை நிர்ணயி என உறுதியாக நம்பினார். இத்தனைக்கும் குமார் அவருடைய மூத்தமகன்.

விஜி வீட்டில் நிலை வேறு. விஜ அப்பா குகைப் பகுதியில் சாயப்பட் வைத்திருப்பவர். பல விதமான நிறங்களில் களுக்கு சாயமேற்றும் தொழில். சொந்த காவல் நாயுடன் கூடிய வீடு. விஜியைத் வேறு வாரிசு கிடையாது. பெண் விருப பிரதானம். ஆனால் அவர் போட்டு வைத் கும் மாப்பிள்ளை லிஸ்டில், மாப்பிள்ளை வரப் போகிறவன் சேட்டு கடைகளில் னான்கு மணி நேரம் வேலை பார்க்கும் கு தாவாக இருந்தாலும் இருக்கலாமே கண்டிப்பாக விற்பனைப் பிரதிநித இருக்கக் கூடாது.

விற்பனைப் பிரதிநிதிகள் என்றால் அவர் அகராதியில் குடிகாரர்கள். தொடர் புகை பிடிப்பாளர்கள்; பெண் பொறுக்கிகள், தீராத வயிற்றுப்புண்காரர்கள்.

எனவே விஜயராணியும் தனது காதலை வீட்டில் முன்மொழியவில்லை.

இப்படிப்பட்ட நிலையில் அவர்கள் காதல் பயிர் ஆதரவில்லாமல் வாடத் தொடங்கி யிருந்த நேரத்தில்தான் ராம்குமார் மோட்டார் சைகிளில் பயணம் செய்தான். அப்பொழுதுதான் அந்த சுவ ரொட்டி விளம்பரத்தைப் படித்துப் பரவசமானான்.

“ஒரு ஐடியா” என்றான் ராம்குமார்.

‘‘என்ன?’’ என்றாள் விஜி ஐஸ்க்ரீமை அளைந்தபடி.

‘‘இந்த சுயம்வரத்தில் நாம் இருவரும் கலந்து கொண்டால் என்ன?’’

“இது என்ன ஸன் டிவி நடத்தும் பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சியா? அப்பா, சுயம்வரத்தில் கலந்துக்கவான்னு வாய் விட்டுக் கேட்க முடியுமா?”

“இதோ பார். நம் காதலை வாய்விட்டு இரு வீட்டிலும் சொல்ல முடியாத நிலை. இதை விட்டால் நமக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது. எப்படியாவது உன் வீட்டில் நீயும், என் வீட்டில் நானும் சந்தர்ப்பம் வாங்கி அறிமுக மில்லாதவர்கள் போல சுயம்வரத்தில் கலந்து கொள்வோம். முடிவில் பரஸ்பர விருப்பத்தைத் தெரிவிப்போம், என்ன?” என்றான்.

“பலிக்காமல் போனால்?”

“திருப்பியும் காதலிப்போம்!”

“போர்” என்றாள்.

ராம்குமார் இரண்டு நாள் வீட்டில் சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் நவீன சுயம்வரத்தைப் பற்றிப் பேசுவான். மூன்றாவது நாள் அவன் வீட்டில் எல்லா இடங்களிலும் பாத்ரூம் உள்பட தலைகுப்புற தேடிக் கொண் டிருந்ததை நிறுத்தி, எதைத் தேடுவதாக அவன் தந்தை கேட்க, ராம்குமார், சொன்ன பதில் “உறுப்பினர் கார்டு”. நான்காவது நாள் அவன் தந்தையே சாதி சங்கத்தில் சென்று ராம்குமார் என்ற சிவதாணு... (சிவதாணு அவன் தாத்தா பெயர்) என்ற பெயரையும் ரூ. 100/- கட்டி, பதிந்து விட்டு வந்தார்.

விஜயராணிக்கு பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அவள் தாயாரே அவளது தந்தை யிடம் சுயம்வரத்தில் கலந்து கொள்ள அனுமதி கேட்டாள். அவள் தந்தை கௌரவம், அந்தஸ்து என குதித்து, முடிவில் எப்பொழுதும் போல மனைவி சொல்வதற்குச் சம்மதித்தார்.

## சத்தியப்பிரியன்



சங்கத்தில் சுயம்வரத்தில் கலந்து கொள்ளும் வரன் மற்றும் பெண்களின் முழு விவரங்களையும் கேட்டார்கள். கலந்து கொள்ளும் அனைவருக்கும் அடையாள அட்டை வழங்கப் பட்டது. பெயர், வயது, உத்யோகம் முதலியன குறிப்பிடப்பட்டு ஓர் எண்ணும் வழங்கப்பட் டிருந்தது. நூற்றுக்கு மேல்தான் தொடங்கும் அந்த எண், அடையாள அட்டையில் பிரதான மாக இருக்க, போல்ட் டைப் வார்த்தைகளால் அச்சிட்டிருந்தார்கள். வயசு அதிகமான பெண், வயசு குறைவான பையனை தேர்ந்தெடுத்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் ராம் [illegible]ருந்தது. ஆனால்



**...அடுத்ததாக சோத்துப்பா**
**சுந்தரம் எழுதியுள்ள கடிதம்: "ச**
**கிழமைதோறும் ஒளிபரப்பாகும் 'ச**
**யலோ சமையல்' நிகழ்ச்சிக்கு**
**'தம்ப்ஸ்அப்' விளம்பரத்திற்கு போடு**
**போல் எச்சரிக்கை அறிவிப்**
**போட்டுத் தொலைக்கவும்...**
**மனைவி நிகழ்ச்சியை சீரியஸாக எ**
**துக் கொண்டு செய்முறையில் இற**
**வதை என்னால் சகிக்க முடியவில்லை**
**— அ**

கொலு மண்டபத்தில் அவன் பயம் தெளிவடைந்தது.

பெண்களின் வயதே குறைந்த அளவுகோலாக எடுத்துக் கொள்ளப்பட்டிருந்ததாம். ஒரே ஒரு பையனின் வயதும், பெண்ணின் வயதும் மட்டும்தான் ஒன்றாகப் போய் விட்டதாம். ஒரு குறிப்பிட்ட வரன் மீதோ, அல்லது பெண் மீதோ நிறைய மாலைகள் கரங்களில் காத்திருந்தால் மல்யுத்தம், ஏறு தழுவுதல் முதலிய தமிழர் பெருமை கூறும் வீர விளையாட்டுக்களை ஏவுவார்களா எனத் தெரியவில்லை. சுயம்வரத்துக்கும் வரதட்சணைக்கும் சம்பந்தமுண்டா, எல்லா வரன்களும் மண்டபத்தை விட்டு வெளியில் வரும் பொழுது கழுத்தில் மாலையுடன்தான் வர வேண்டுமா, போன்ற நிறைய சந்தேகங்கள் அவனுக்குக் கிளம்பிய வண்ணம் இருந்தன.

இவை எல்லாவற்றையும் தெளிவுபடுத்திக் கொள்ள முன்னதாகவே தனது வண்டியில் வழக்கமான எண்பது கிலோமீட்டர் வேகத்தில் போக எண்ணியிருந்தான். கடைசி நேரத்தில் ஆட்டோவில் அவனும், பெற்றோரும், கடைசி தம்பியும் கிளம்பிப் போனார்கள். ஆட்டோ டிரைவர் சீட்டை தம்பியும், டிரைவரும் பாதியாகப் பகிர்ந்து கொண்டார்கள்.

மண்டப வாசலில் அதிக அளவில் இரண்டு சக்கர மோட்டார் சைகிள்களும், ஒரு டாடா ஸியாரா, ஒரு மாருதி ஜென், இரண்டு அம்பாசிடர் கார்களும், நாலைந்து சைக்கிள்களும் நின்று கொண்டிருந்தன. இரண்டு இளம் நங்கைகள் பன்னீர் செம்பு, கல்கண்டு சகிதம் வரவேற்றார்கள். இருவரும் இந்த சுயம்வரம் சம்பந்தப்படாதவர்களாக இருக்க வேண்டும். பின்னால் விசாரித்ததில் மாருதி ஜென்னில் விஜயராணியும், அவள் குடும்பமும் வந்திருப்பது தெரிந்தது.

இவனது உறுப்பினர் கார்டை வாங்கி, பதிவு செய்து விட்டு இவனது அடையாள எண் தாங்கிய அட்டையை சட்டையின் நெஞ்சுப் பகுதியில் குத்தி விட்டார் இவனை மட்டும் இரண்டு பிரிவாகப் பிரி பட்டிருந்த கூடத்தின் ஒரு பகுதியில் பே சொன்னார்கள். இரண்டு நிமிடம் இவ நடக்கச் சொல்லி, உட்காரச் சொ க்ளோஸப் ஷாட், மிட் ஷாட் என வீடி படமெடுத்தார்கள். அவனால் படம் எடுக் பொழுது இயல்பாக சிரிக்க முடியாமல் பே தற்கும், நெற்றியில் வேர்வை வெள்ளமா பெருக்கெடுத்ததை தடுக்க முடியாமல் பே தற்கும் வருத்தப்பட்டான்.

பிறகு அவன் கொலு மண்டபத்தி அழைத்துச் செல்லப்பட்டான். நீள் வரிசை வரிசைக்குப் பத்து நாற்காலிகள் வீதம் நா வரிசையாக நாற்பது பெண்கள் உட்கார்ந் தார்கள். இரண்டே இரண்டு பெண்கள தவிர, மற்ற எல்லாப் பெண்களும் புடை மாட்சிங் ஜாக்கட், மாட்சிங் ஹேர்-பா மாட்சிங் ஸ்டிக்கர் பொட்டுடன் இருந்தார் பெண்கள் ஜரிகை வேறுபாட்டுடன் பட் புடைவை உடுத்தியிருந்தார்கள். ஒன்று ர ஷிஃபான், இரண்டு கஞ்சி போட்ட காட் புடைவை.

முதல் சுற்றின் பொழுது ஒட்டுமெ மாக நாற்பது பெண்களைப் பார்க்கக் கூ பட்ட ராம்குமார், கடைசி சுற்றின் பொ அவனுக்கு அளிக்கப்பட்டிருந்த மூ முறைகளையும் மீறி இன்னொரு சந்தர் கிடைக்காதா என ஏங்கினான். பார் தோறும் பொலியும் பெண்கள். இதே ஆடவர் அமர்ந்திருக்க, நான்கு பெண்கள் ஒவ்வொரு வரிசையிலும் வலம் வர அனு தார்கள். ராம்குமாரை விஜியும், விஜியை குமாரும் பார்க்கும் பொழுது பரஸ்பரம் வரும் தலையைக் கவிழ்த்துக் கொண்டா

அடுத்த சுற்று ஒரு பஃபே போல — பாஷையில் கையேந்தி பவன் — சாப் ஆளுக்கு ஒரு போண்டா, பள்ளிக்கூட தைகள் கொண்டு செல்லும் ரப்பர் சை

ஒரு பர்ஃபி, பனிரெண்டு காராபூந்தி அடங்கிய பேப்பர் தட்டை கொடுத்தார்கள். ஏற்கெனவே பத்து மில்லி மீட்டர் டீயை அரைமணி நேரம் குடித்தபடி பேசி அனுபவப்பட்டிருந்த ராம் குமார் இதை ஒரு குறையாகக் கொள்ள வில்லை.

இந்த சந்தர்ப்பத்தில்தான் காலர் எலும்புப் பகுதியில் பட்டுப் புடைவை மேல் அடையாள எண் அட்டை குத்திக் கொண்டிருந்த பெண்ணுடன் பேசும் வாய்ப்பு கிடைத்தது.

"எனது எண் 108."

"எனது எண் 127" முதலில் எண்களை மனப் பாடம் செய்து கொண்டார்கள்.

"வேலை பார்க்கறீங்களா?"

"இல்லை."

"ஹவுஸ் வைஃபா இருக்கத்தான் பிடிக் குமா?"

"அது என்ன ஹவுஸ் வைஃப்னா இளப்பம்? இன்ஃபாக்ட் ஹவுஸ் வைஃப்னு ஒண்ணை உருவகம் பண்ணினா லாட்ஜ் வைஃப்னு இன்னொரு உருவகம் உண்டா?"

ராம்குமார் கிளர்ந்தெழுந்தான். காரணம் உருவகம், பின்புலம், தாக்கம் முதலிய தமிழ் பத்திரிகையில் காணக் கிடைக்காத வார்த்தைகளை அவள் பேசியது. விஜயராணி, அன்பே, என்னாங்க, கண்ணாளா லெவலை என்றும் தாண்டியதில்லை.

"என்ன வேலை பார்க்கறீங்க?"

"மெடிகல் ரெப்ரஸன்டேடிவ்" மெல்லிய குரலில் சொன்னான்.

"ஏன் தயக்கமா சொல்றீங்க?"

"நிறைய பேருக்கு 'ரெப்'புனு சொன்னா பயம் வந்துடுது!"

"நான் அப்படி இல்லை. இன்ஃபாக்ட் — அவள் இன்ஃபாக்ட் என்ற வார்த்தையை இடம் கிடைத்த பொழுது கையாண்டாள் — அதைப் போல சவால் விடும் வேலை வேறு எதுவும் இல்லை. மாசத்தில் பதினஞ்சு நாள் ஓடியாடி வேலை பண்ணிட்டா போதும். மீதி பதினஞ்சு நாள் சம்பளத்தோட ரெஸ்ட்." என நாடி பிடித்துச் சொன்னாள்.

மனைவியானவள் குடும்பப் பொண்ணாக வீட்டோடு இருப்பதில் எவ்வளவு சௌகரியம்? வேலை மாற்றல் என்னும் கொடிய ஆயுதத்திற்கு இரையாக நேராது. குழந்தைகள் பிறந்தால் காப்பகங்களில் கொண்டு தள்ள வேண்டாம். பதவி உயர்வு என்பதற்கு வேலை பார்க்காத குடும்பப் பெண் ஒரு உறுதுணையாக இருப்பாளே தவிர தடையாக இருக்க மாட்டாள்.

"இன்னும் காராபூந்தியை முழுக்க சாப்பிடலை நீங்க" என்றாள் அடையாள அட்டை எண் 127.

"இதோ ஒரு நிமிஷம்" தட்டை அவள் கையில் கொடுத்து விட்டு வேகமாக அந்த இடத்தை விட்டு அகன்றான்.

ஒரே ஒரு உறுத்தல் ராம்குமார் மனத்தில் இருந்தது. விஜயராணியைத் தேடினான். அவள் பெற்றோர் நடுவில் இருந்தாள்.

கண்ஜாடையால் அவளை அழைத்தான்.

"எங்கே அரைமணி நேரமா ஆளைக் காணும்?" — அவன் கேட்க வேண்டிய கேள்வியை விஜயராணி கேட்டாள்.

தொண்டை வறண்டு விட்டது அவனுக்கு. காதலுக்கு நீ இழைக்கப் போகும் மிகப் பெரிய துரோகம் என்றது மனச்சாட்சி. வாழ்வில் முன்னேற்றம் காண சில மெல்லிய உணர்வுகளை மிதிப்பதில் தவறில்லை என்றது, பிழைக்கத் தெரிந்த மனம். மனத்தின் சிந்தனை விரிவின் பிரும்மாண்டத்தின் முன் காலம் மிகச் சிறியது என்பதை ராம்குமார் அந்த ஒரு நிமிடத்தில் உணர்ந்தான். மனதை திடப்படுத்திக் கொண்டு, "இங்கே வா! ஒரு முக்கியமான விஷயம்" என்றான்.

"நான் கூட ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்!" என்றாள் விஜி.



"முதலாளி இவரு இருபது இட்லி, பத்து தோசை, எட்டு பூரின்னு சாப்பிட்டுட்டு இப்போ காசில்லைன்னு சொல்றாரு.... அத்தனைக்கும் மாவாட்டணும்னு சொன்னா நாள் கணக்கா இல்லே ஆகும்."

"அதுக்கு என்ன பண்ணலாம்கறே?"

"பேசாம 'பொது மன்னிப்பு' குடுத்து வுட்டுடலாம்னு நினைக்கறேன்."

— அகில்



# தரையில் இறங்கும் தனியார் விமானங்கள்

இந்தியன் ஏர் லைன்ஸ் என்றாலே உடனே நினைவுக்கு வருவது அதன் ஊழியர்கள் செய்யும் திடீர் வேலை நிறுத்தங்கள். அதனால் விமான கால அட்டவணையில் ஏற்படும் குழப்படிகளும். தனியார் விமானக் கம்பெனிகள் தலையெடுத்ததும் விமானப் பயணிகளுக்கு ஒரு மாற்று கிடைக்கவே செய்தது. வியாபாரப் பெரு மக்கள் தனியார் விமானங்களின் தரமான சேவையை மனத்தில் கொண்டு தனியார் விமானங்களில் போவதையே பெருமையாக எடுத்துக் கொண்டார்கள்.

ஆனால் சமீப காலமாகத் தனியார் விமானக் கம்பெனிகளும் தரமான சேவையை அளிப்பதில் தவறி வருகின்றன. கடைசி நேரத்தில் விமானங்கள் ரத்து, மாற்று ஏற்பாடுகள் செய்யாமை அல்லது செய்வதில் தாமதம், போன்ற எரிச்சலான செயல்களைச் செய்து 'பெயர்' சம்பாதித்துக் கொண்டிருக்கின்றன.

எப்படி இந்த நிலை வந்தது? இதற்கு எல்லா தனியார் விமான கம்பெனிகளும் உடனடியான ஒரே பதிலை வைத்துள்ளார்கள். அது: 'இந்திய அரசாங்கத்தின் ஸ்திரமற்ற கொள்கை'.

போதிய அளவு அரசாங்க விமானங்கள் இல்லாதபோது, தனியார் விமான கம்பெனிகளை முதலில் இரத்தினக் கம்பளம் விரித்து வரவேற்றார்கள். அவற்றுக்கு அபரிமிதமான வரவேற்பு கிடைத்...
விட, இந்தியன் ஏர்லைன்ஸை இ... போது 'பாதுகாக்கும்' பொருட்டு அரசாங்க... பலவித கொள்கைக் குளறுபடிகள் செய்திரு... கிறது.

குறிப்பாக, அந்நிய செலாவணி கையிரு... பில் உள்ள பற்றாக்குறையைச் சுட்டிக் காட்... விமானங்களை நேரடியாக வாங்குவதற்கு தடை போட்டார்கள். அங்கீகரிக்கப்பட்ட தனி... யார் விமானங்கள் மட்டும்தான் செய்தித் தா... களில் தமது கால அட்டவணையை வெளியிட... லாம் என்று ஒரு பக்கம் சொல்லிவிட்டு, அங்... கரிப்பு விஷயத்தை ஆரப் போட்டார்கள்... விமான நிலையத்தில் பாதுகாப்பு நியதிகளை... கடைப்பிடிக்கவில்லை, விமான வரிகளை... சரியாகக் கட்டவில்லை என்றெல்லா... சொல்லி, அவ்வப்போது பலப்பல தொந்தர... களைக் கொடுத்து வந்தார்கள்.

விமான சர்வீஸ் என்பது அதிக முதலீ... கொண்டது. அதன் நிரந்தர நிர்வாகச் செல... கள் மிக அதிகம். எனவே அதன் விரிவாக்க... குறைந்த காலகட்டத்தில் படுவேகமாக எட்... விட வேண்டும். இல்லையேல், ஏற்படக்கூடி... நஷ்டத்தைத் தாங்க முடியாது. தனியா... விமான கம்பெனிகளின் இந்த விரிவாக்க தி... டங்கள், அரசாங்க சிவப்பு நாடாக்களினா... செவிடன் காதில் ஊதிய சங்காய்ப் போன...

"மத்திய அரசில் உள்ள ஒரு சாதாரண நட்டி ஆபீஸர் கூட ஏதாவது செய்து, எங்கள் றெக் கங்களை முடக்கிவிட முடிகிறது" என்று அலுத்துக் கொண்டார் சாஹாரா இந்தியா என்கிற தனியார் விமான கம்பெனியின் மூத்த அதிகாரி ஒருவர்.

அடுத்து ஒரு கொடுமையான விஷயம். தனியார் விமானங்கள் பம்பாய், டெல்லி, மதராஸ், கல்கத்தா போன்ற பெரு நகரங்களில் மட்டும் தமது சேவையைச் செய்யக் கூடாது. அது அதிக லாபமில்லாத ரூட்களிலும் நாற்பது சதவிகிதமாவது சேவை செய்ய வேண்டும் என்று நிர்ணயம் செய்தது இந்திய அரசாங்கம். இதுவும் இந்தியன் ஏர்லைன்ஸைக் காப்பாற்றும் முயற்சியே என்று கூக்குரலிடுகின்றன தனியார் விமான கம்பெனிகள்!

ஒரு விமானப் பயணம் லாபம் ஈட்ட வேண்டுமானால் குறைந்தபட்சம் 65 சதவீத இருக்கைகள் நிரம்ப வேண்டும். ஆனால் அதிக லாபமில்லா ரூட்களில் 35 சதவீதத்துக்கும் குறைவாகவே நிரம்புவதால், அதில் ஏற்படும் நஷ்டம் கம்பெனியின் மொத்த லாபத்தையே பதம் பார்த்து விடுகின்றது!

"ஒரு நாள் ஒரு விமானம் பறக்கவில்லை என்றாலோ, அல்லது தரையில் இறங்க சிக்னல் கிடைக்காமல் அரைமணி நேரம் வானில் வட்டமிட்டாலோ ஏற்படும் லட்சக்கணக்கான ரூபாய் நஷ்டத்தைத் தாங்க முடியாத நாங்கள் எப்படி லாபமில்லா ரூட்களில் பிழைப்பை நடத்துவது?" என்று காட்டமாகக் கேட்கிறார் என்.இ.பி.சியின் அதிகாரி ஒருவர்.

இது போன்ற நஷ்டங்களைச் சமாளிக்க இந்தியன் ஏர்லைன்ஸ் வெளிநாட்டு விமான சர்வீஸ்களை அளிக்கிறது. ஆனால் எங்களுக்கு அனுமதி மறுக்கப்படுகிறது. இது என்ன கொள்கை? ஒரு கண்ணில் வெண்ணெய், இன்னொரு கண்ணில் சுண்ணாம்பு?" என்றார் அவர்.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த தனியார் விமான கம்பெனிகள், இப்போது போர்க் கொடி உயர்த்தியிருக்கிறார்கள். தங்களது கோரிக்கைகளை புதிய விமானப் போக்குவரத்து அமைச்சரான சி.எம். இப்ராஹிமிடம் கொடுத்தார்கள். அவரும் இன்னும் இரண்டு மாதங்களில் ஒரு தீர்மானமான முடிவெடுப்பதாக உறுதியளித்திருக்கிறார்.

— நடராஜன்

## மூச்சுத் திணறலில் முக்கியமாய் மூன்று!

● கிட்டத்தட்ட 49 கோடி ரூபாய் நஷ்டத்தில் மூழ்கிக் கொண்டிருந்த தமானியா ஏர்வேஸ் என்கிற தனியார் கம்பெனி 'விட்டால் போதும் டா சாமி' என்ற நிலையில், சென்னையைச் சேர்ந்த என்.இ.பி.சி. என்ற தனியார் விமான கம்பெனியிடம் தன்னை மொத்தமாய் விற்றுவிட்டு, ஒதுங்கிக் கொண்டது. ஸ்கைலைன் என்.இ.பி.சி. என்ற புதுப் பெயர் அதற்கு வந்தாலும், அந்தப் பழைய 'தமானியா' தன்னை நிமிர்த்திக் கொள்ள இப்போதைக்கு சாத்தியம் இல்லை என்றே தெரிகிறது.

● சென்ற மாதம் 'மோடி லுப்ட்' என்கிற தனியார் விமானக் கம்பெனிக்கு மிகப் பெரிய அடி விழுந்தது. அடி என்றால் மரண அடி! அடித்தது வேறு யாருமல்ல. அதன் பார்ட்னரான 'லுப்தான்ஸா' என்கிற ஜெர்மன் நாட்டு விமான கம்பெனி! திடீரென ஒரு நாள் லுப்தான்ஸா தன் மோடி லுப்ட் உறவை முறித்துக் கொள்வதாக அறிவித்தது. இதில் சுவாரஸ்யமான விஷயம், மோடி லுப்டின் அதிகாரிகளுக்குக் கூட இது பத்திரிகை மூலமாகத்தான் தெரிந்தது! உறவை முறித்துக் கொண்டதோடல்லாமல் வாடகைக்குக் கொடுத்திருந்த தனது மூன்று போயிங் விமானங்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளப் போவதாய் அறிவித்தது! தற்போது மோடி லுப்ட் நிலைகுலைந்து போயிருக்கிறது. எல்லாம் பணத் தகராறுதான்.

● தனியார் நிறுவனங்களுள் அதிக போயிங் விமானங்கள் கொண்ட ஈஸ்ட் வெஸ்ட் ஏர்லைன்சுக்கும் தலைவலிகள் தொடர்கின்றன. அதன் தலைவர் குண்டர்களால் மும்பையில் சுடப்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீளுவதற்கு முன்பே வாடகைக்கு எடுக்கப்பட்ட மூன்று போயிங் விமானங்கள் அதன் குத்தகைக்காரர்களால் வலுக்கட்டாயமாகத் தரையில் இறக்கப்பட்டன. பணம் கொடுக்காவிட்டால் ஈட்டிக்காரர்கள் கழுத்தில் துண்டைப் போட்டுப் பிடிப்பார்களே, அதைப் போல. போதாக் குறைக்கு ஏர்போர்ட் அத்தாரிட்டியும் தன் பங்குக்கு வரி வசூலிக்க விமானங்களை முடக்கி வைத்தது. இந்தத் தொடர் நிகழ்ச்சிகள் ஈஸ்ட் வெஸ்ட்டின் கஷ்டமான காலகட்டத்தை அப்பட்டமாய்க் காட்டுகின்றன.



* பவித்ரா



* அர்ச்சனா



* அபர்ணா

*யாருக்கு எவ்வித உடைகள் 'எடுக்கும்' என்பதறிந்து அணிவது நிச்சயம் கவன ஈர்ப்புக்கு வழிவகுக்கும். இங்கே சில இளவட்டங்கள், பிரபலங்களின் உடை உணர்வை விமர்சிக்கிறார்கள்:*

**ஷோபனா கமல்:**

"உடை உணர்வுன்றது மத்தவங்களை கண்ணியமான முறையில் இம்ப்ரெஸ் செய்ய வைக்கும் ஒரு உத்தி. என்னைப் பொறுத்த வரையில் அற்புதமான உடை உணர்வு கொண்டவர் ராஜீவ் காந்தி தான். எப்பொழுதும் ஒரே மாதிரி உடை அணிபவர்களின் ட்ரெஸ் சென்ஸ் பாராட்டுக்குரியது அல்ல.



* ராஜிவ்: ஸ்மார்ட்!

ராஜீவைப் பொருத்தவரை தமிழ்நாட்டுக்கு வந்தால் வேட்டி, மணிப்பூருக்குப் போனால் அந்த மாநில உடை, இப்படிப் பலவித உடைகளை அணிந்து கொண்டாலும் அவை தனக்குப் பொருத்தமாக இருக்கும்படியும் பார்த்துக் கொண்டவர். கொஞ்சம் கூட உடை உணர்வே இல்லாதவர் நடிகர் மிதுன் சக்ரவர்த்தி தான். 'பரவாயில்லை, சுமார்...!' என்று சொல்லும்

## "லல்லுவை டீ.வி.யில் பார்த்தா நகர்ந்திடுவேன்..."

* ஜெயலலிதா: சகிக்கலை!





# சம்மதம் சம்மதம்...

கரையேற
விருப்பமில்லை
எனக்குக்
கரையேற
விருப்பமில்லை - உன்
கன்னக் குழியிலேயே
கிடக்கிறேன்
விட்டுவிடு!

விரல் தொடும்முன்
வீணையின் இசை
எங்கே
இருந்தது?
அது
எங்கிருந்ததோ
அங்கிருந்தது
உன்னைக் கண்டபின்
ஊற்றெடுத்த காதல்
உன்னைக் காணாமுன்?

'ஒருகிளையில்
இருபுறாக்களென'
பாடுவோமே
இப்பாடல்
மறந்தாவிட்டாய்!
இரத்த
நாளங்களில்
ஓடும்பாடல் - இதை
மறந்தாவிட்டாய்!

வசந்த வாசல் திறந்த
இந்தப் பாடலைப்
புனைந்தது
எப்போது - அது
என்ன கிழமை?
ஞாபகத்தின்
கன்னத்தை
கிள்ளிக் கேள்!

கிழமைப் பெயர்
எதையும்
குறிக்க முடியாத
அந்த நாளுக்கு எந்தப்
பெயர்?
ஏழு கிழமைகளும்
பொறாமையில்
வேர்க்கப்
பெயரொன்று
தேட வேண்டும்!

எங்கேனும்
போய்விட எண்ணி
விளக்கு
அணைக்கப்படுவதை
ஒளி
எதிர்பார்க்குமா?
உன் உள்ளத்தை
ஒருமுறை
கலந்தாலோசித்துப்
பதில்சொல்!

எங்கேனும்
பறந்துவிட எண்ணி
இங்குப் பூவின்
மொட்டு
உடைபடுவதை
வாசம்
எதிர்பார்க்குமா?
உன் நெஞ்சைத்
தொட்டுச் சொல்!
நீ
என்னை ஏன்
அணைக்கத்
துடிக்கிறாய்?
என்னை ஏன்
உடைக்கத்
துடிக்கிறாய்?

என்னைநீ
தள்ளினாலும் நான்
ஒரு
புல்லாங்குழலுக்குள்
போய்விழுந்து
உன்னைப்
பாடிக் கொண்டுதான்
இருப்பேன்!
என்
கண்ணீரில் உனக்கு
முத்தாரம்
தொடுப்பேன்!
என்
காயங்களை வைத்து
உனக்கு ஒரு
பதக்கம் செய்வேன்!
ஏனெனில்
எனக்கு வாழ்க்கை
தேவை
உன்னோடு - அது
சுகங்களின் அல்லது
சோகங்களின்
முகவாயில்
எதில் இருந்தாலும்
சம்மதமே!

- தமிழன்பன்

# நரையு

தி.சிவசுப்பிரமணியன்

தலையைச் சற்று அழுத்தமாய் வாருகையில் சீப்போடு சில முடிக்கற்றைகளும் சேர்ந்து வர லாயிற்று. 'முடி நிறையக் கழிய ஆரம்பித்து விட்டதோ? குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு 'முடி உதிர்தல்' ஆரம்பித்து விடுமாமே. எனக்கு அவ்விதம் 'முடி உதிர்தல்' தொடங்கிவிட்டதா? இன்னும் கொஞ்ச நாளில் நெற்றி மேட்டின் இருபுறமும் வழுக்கை விழுந்து விட நேரிடுமோ? யோசனை வந்தது. கூடவே கவலையும்.

கண்ணாடி பார்த்துக் கவலைப்படுகையில் ஏதோ உறுத்தல் தோன்றிற்று. திரும்பிப் பார்த்த போது நிலைப்படி அருகில் நின்று சிவகாமி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

சிவகாமி எப்போதும் இவ்விதம்தான். அதிகம் அதிர்வுகளின்றிதான் இருக்கும். அவளது பேச்சும் செயலும். எதிலும் ஒரு மென்மை பரவி இருக்கும். கல்யாணமான இந்தப் பதினேழு வருடங்களில் அதிர்ந்து அவள் பேசி நான் கேட்டதில்லை. "வீடு என்பது இதமான விஷயம்" என்கிற சூழலை உருவாக்க அதுவே காரணமாயிற்று.

"என்ன, அலங்காரம் ரொம்ப அமர்க்களப்பட்றது? 'மார்க்கண்டேயனாவே இருந்துடலாம்னு உத்தேசமா?"

சிவகாமியின் கேள்விக்குப் பதில் பேசாது லாகவமாய் நரைமுடி ஒன்றைக் கத்தரிக்கோலால் வெட்டி எறிந்து விட்டு, வேறெங்கேனும் நரை தெரிகிறதா என்று ஆராய ஆரம்பித்தேன்.

"அப்போ 'மார்க்கண்டேயன்' இல்லை"

"என்னது?"

"வயசாயிடுச்சின்னு அர்த்தம். இனிமேயாச்சும் அதிக ஆர்ப்பாட்டம் பண்ணாத இருக்கணும்னு அர்த்தம்"

"நீ வேற. இது பித்த நரையாக்கும்"

"ஆமா. முப்பத்தி ஒம்போது வயசில வர்றதுக்குப் பேரு பித்த நரையாக்கும்"

சின்னதாய்ச் சிரித்தாள். தண்ணீரில் வெடித்து வருகிற நீர்க்குமிழிகள் மாதிரி அந்தப் புன்னகை எனக்குத் தோன்றிற்று. குழந்தைகள் எழுந்து வந்து விடவே, அந்தப் பேச்சைப் பாதியில் நிறுத்த வேண்டியதாயிற்று.

அன்றைக்கு மதியம் சாப்பிட வீட்டுக்கு வந்தபோது, வாசற்படியில் கிடந்த செருப்பு பார்த்ததுமே புரிந்து போயிற்று. யார் வந்திருப்பது என்று. நர்மதாதான் வந்திருக்கிறாள். என் தங்கை நர்மதா 'சாதாரணமாய் வந்திருக்கிறாளா அல்லது வழக்கம் போல் ஏதும் பிரச்னைகளுடனா?' மனதில் கேள்வி வந்தது. 'இந் நேரத்துக்கு, சாதாரணமாய் வர வாய்ப்பில்லையே' - யோசனை அதிகக் கவலையும், அயர்ச்சியும் தரலாயிற்று. மெல்ல எழுந்த பெருமூச்சை அடக்கியபடி உள் நுழைந்து, 'வா, நர்மதா' என்றேன்.

அவள் முகம் பார்த்தவுடனேயே புரி
போயிற்று. உணர்ச்சி வசப்பட்ட முகமும், சிவ
கண்ணீர் மழை கொட்டத் தயார் என்கிற ரீதியில
விழிகளும் அதைக் காட்டிக் கொடுத்தன.

இப்போது எதுவும் சொல்வதற்கு இல்லை. செ
லவும் கூடாது. அது தவறாய் முடியும். மனதுக்கு
எழுந்த தீர்மானத்துடன், "ஆபீசுக்கு நேரமா
சிவகாமி. சாப்பிட்டுட்டு சீக்கிரம் போக வேண்
இருக்கு இன்னிக்கு?"

சின்னப் பொய்யைச் சொல்லி விட்டு, அவ
மாகச் சாப்பிடலானேன். செல்வி சமையற்கட்டி
உட்புறம் ஒதுங்கிக் கொண்டாள் பதில் பேசாது.

மனசு கஷ்டமாகத்தான் இருந்தது. கிளாஸுக்
போக மாட்டாரு." ஆனாலும் வேறு வழியில்லை.

கிளம்புகையில் சிவகாமி வாசல் வரை வந்
மெதுவாகச் சொன்னாள். "பாவங்க அது. இப்ப தா
வந்துச்சி. என்ன, எதுன்னு ஒரு வார்த்தை கேக்க
மில்லை? அதும் முகத்தைப் பார்த்தவுடனேயே ஏ
பிரச்னைன்னு தெரிஞ்சுப் போச்சு. விசாரிச்சாத்தா
சொல்லும். நீங்க பாட்டுக்குப் போனா, அதும் ம
கஷ்டப் படாதா?"

"வேண்டாம் சிவகாமி. நான் ஒண்ணும் கேக்
போறதில்லை. நீயும் கேக்க வேணாம். அவளா
வாச்சும் சொன்னா, அப்படியான்னு சாதாரணமா
கேட்டுக்க. சாயங்காலம் 'விவரமா' பேசிக்கலாம்"

அவசரமாய் ஸ்கூட்டரைக் கிளப்பினேன். கா
மெல்ல வீசி தலைமுடியைப் பின்னே தள்ள. மன

பின்னோக்கிப் போயிற்று.

நர்மதா எங்கள் வீட்டின் கடைக்குட்டி. இ
பாகவே, எந்த வீட்டிலும் கடைசிக் குழந்தை
'செல்லம்' ஜாஸ்திதான். அதிலும், நான்கு ஆண்
ளைகள் பிறந்து அதற்கு அப்புறம் அம்மாவும், அ
வும் கோவில், குளம், சாமி என்று வேண்டிப் பி
வீட்டில் அவள் வைத்தது தான் சட்டமாயி
வேண்டியது வாங்கிக் கொடுக்கப்பட்டது. ஆன
அதுதான் தவறாய்ப் போயிற்று.

நர்மதாவுக்கு குழந்தை சுபாவம். எந்த வி
திலும் அவள் நினைத்ததுதான் நடக்க வேண்
அவ்விதம் நடக்காவிடில், கோபம் பன்மடங்
விடும். இதெல்லாம் சின்னச் சின்னக் குறை
பெரியவளானதும் சரியாகி விடும்' என்று நினை
நடக்காது போயிற்று.

கல்யாணமான பிறகுகூட அவள் சுபாவம் மாறாது போயிற்று. உள்ளூரிலேயே 'அண்ணன்' வீடு இருப்பது வசதியாயிற்று. கோபப்பட்டு புருசன் வீட்டில் தகராறு செய்து அவள் என் வீடு வருவதும், நான் இரண்டு நாள் பொறுத்து அவளைச் சமாதானப் செய்து, நல்ல புத்தி சொல்லி, அவள் புருஷனிடம், தங்கைக்காய் மன்னிப்பு கேட்டுக் கொண்டு போய் விடுவது வாடிக்கையாயிற்று.

இது மாதிரி நாலைந்து முறை நேர்ந்து விட்டது. சென்ற முறையே இது எனக்கு அதிகம் கவலை கொடுத்தது. இந்த முறை அது மேலும் அதிகமாயிற்று. இதை இவ்விதமே விட்டு விடக் கூடாது என்ற எண்ணத்தின் விளைவு தான் நான் நர்மதாவிடம் இன்று காட்டிய பாராமுகம்.

இரவு நான் வீடு திரும்ப கொஞ்சம் லேட்டாயிற்று. அலுவலகத்தில் அக்கவுண்டன்ட் ஒருவர் ஓய்வு பெறுகிறார். அவருக்கு 'பிரிவு உபசார விழா' நடத்தி அவரைப் புகழ்ந்து நினைவுப் பரிசு கொடுத்து ஒவ்வொருவரிடமாய் அவர் விடைபெற்று.... நேரமாகி விட்டது. அதில் வீட்டுக்கு வர லேட்டாகி விட, நர்மதா இல்லை.



# நர்மதாவும்

"அவள் கிளம்பிச் சென்று விட்டாள்" என்று சிவகாமி சேதி சொன்னாள். 'என்னைக் குற்றம் சாட்டுகிற தொனி' அவள் பேச்சில் இருந்ததை உணர முடிந்தது.

உண்மைதான். நான்கூட அவளிடம் ஏதேனும் கேட்டிருக்கலாம். கேட்டால் அவள் உடைந்து, சுய இரக்கம் அவளைப் பற்றிக் கொண்டு பிரச்னையின் தன்மையிலிருந்து அவளை விலகச் செய்து விடும். 'அன்பு' தன்னை அவள் உணர இயலாது போகும். 'அன்பு' என்பது சில சமயம் இவ்விதம் தான் பலவீனமாக்குகிற விஷயந்தான். நர்மதா பலவீனப்படுவதை நான் விரும்பவில்லை. அவள் உரமாய் நிற்பதைத்தான் நான் விரும்பினேன். அதனால்தான் அவள் பிரச் னையைக் கிளறாது போய் விட்டேன். அதனால் தான், "அடுத்து என்ன செய்வது?" என்று அவளே முடிவெடுத்துக் கிளம்ப வேண்டியதாயிற்று.

இதையெல்லாம சிவகாமியிடம் விலாவாரியாய் எடுத்துச் சொல்லவில்லை. களைப்பும், அயர்ச்சியும் சேர்ந்திருந்ததால் பதில் பேசாது படுத்து விட்டேன்.

மறுநாள் கண்ணாடி பார்த்தபோது, மேலும் ஐந்தாறு நரை முடிகள் தலையில் தெரியலாயிற்று. கத்தரிக்கோலைக் கையில் எடுத்த போது, மனைவி சொன்னது ஞாபகம் வந்தது.

யோசித்தபோது ஒரு விஷயம் தெளிவாய்ப் புரிந்து போயிற்று. நர்மதாவின் பிரச்னையோ எனது நரை முடியோ இரண்டும் ஒன்றுதான். இதை இவ்விதம் சும்மா விட்டு விடுதலே உத்தமம். இரண்டுமே வெட்ட வெட்ட மறுபடி முளைக்கும். 'வயதானால் நரை' என்பது மாதிரி, குடும்பம் என்றால் பிரச்னை என்பதும் இயல்பான விஷயங்கள். 'இயல்பைத் தவிர்த்தல் இயலாத காரியம்.

தெளிந்த சிந்தனையோடு மறுபடி கண்ணாடி பார்த்தபோது, 'நரை' கம்பீரமாகத் தோன்றிற்று.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

ரூ. 1500 முதல் பரிசு பெறும் கதை.



"டேய்... குடிக்கறதுக்கு சுடு தண்ணி கேட்டனில்ல..."

"இதோ... கொண்டு வர்றனுங்க..."

"தம்பி... தீப்பெட்டி குடுப்பா..."

"இந்தாங்க..."

"தம்பி... டீ சொல்லி எவ்வளவு நேர மாச்சு?"

"உங்களுக்குத்தான் சார் டீ போடுது..."

அப்பாண்டு விரைவில் களைத்துப் போனான். மூன்று மணி என்கிற போதுதான் கூட்டம் கொஞ்சம் ஓயும். அப்போது தான் மத்தியானச் சாப்பாடே சாப்பி முடியும். மிஷின் மாதிரி இயங்கிக் கொ டிருப்பான்.

"லுங்கி வேட்டிக்காரர்கிட்டே பத்து ரூ வாங்கிக்குங்க... சார்கிட்டே மூன்று ரூபாய் ஓனரிடம் கணக்குச் சொல்ல வேண்டும்.

"அப்பாண்டு... உனக்கு எத்தனை வ சாச்சு?"

"பத்துங்க..."

"பள்ளிக் கூடம் போகலையா?"

"ரெண்டாம் வகுப்பு வரை படிச்சனுங்க

பேக்கரியில் கூட்டம்.

"மூணுல ஒண்ணு லைட் டீ."

பிறகு–

"உங்களுக்கு...?"

"சாப்பிடறதுக்கு என்ன இருக்குது?"

"வடை, போண்டா, பஜ்ஜி, பப்ஸ், முறுக்கு, மிக்சர், கேக், பிஸ்கெட்..."

"தேங்காய் பன்னு இருக்குதா?"

"இருக்குதுங்க..."

"ஒண்ணு கொண்டா..."

"உங்களுக்கு?"

"பால்டீ..."

"ஒரு பால் டீ.." டீ மாஸ்டரை நோக்கிக் கத்தினான் அப்பாண்டு.

**கனகராஜன்**



"அப்புறம்?"

"மேல படிக்கலீங்க..."

"ஏன்?"

"வூட்ல வேண்டாம்னுட்டாங்க."

"ஏன்?"

''கலெக்டர் வேலைக்கா போகப் போறேன்னு கேட்கறாங்க..."

"யாரு?"

"அம்மாவும் அப்பாவும்."

"உனக்குப் படிக்கணும்னு ஆசை இல்லியா?"

''இருக்குதுங்க... என்ன செய்யிறதுங்க? படிச்சிருந்தா அஞ்சாம் வகுப்பு வந்திருப் பனுங்க... இங்க பாருங்க தழும்பை."

இடது கையைக் காட்டினான்.

"ஷ்... என்னது?"

"சூடுங்க... அப்பா பீடியில வெச்சு விட்ட துங்க... நான் பள்ளிக்கூடம் போவேன்னு

# மறுபடியும்...

ரகளை செஞ்சேன்... அதனால சூடு வெச்சிருச்சிங்க... லாட்டரிச் சீட்டுக் கடையில வேலைக்குச் சேர்த்துவிட்டாங்க.."

"நீ ஒரே பையன் தானா?"

"எனக்கு ஒரு தம்பி இருக்கறானுங்க..."

"அவன் என்ன செய்யிறான்?"

"ரெண்டாம் வகுப்பு படிக்கறானுங்க... நல்லாப் படிப்பு வருதுங்க... அவனாவது நல்லாப் படிச்சு பெரிய ஆளா வரணும்னு காசு சேர்த்திட்டு வர்றனுங்க."

"பரவாயில்லையே..."

அப்பாண்டுவின் நிஜப்பெயர் அப்புசாமி. அது எப்படியோ அப்பாண்டு என்றாகி விட்டது. இந்த பேக்கரியில் இரண்டு வருடங்களாக வேலை பார்க்கிறான்.

கடை ஓனரிடம் தினமும் திட்டு வாங்குகிறான். அவனுடைய அப்பா குடிக்கக் காசு கேட்கிறார். அம்மா அடிக்கடி சினிமா பார்க்கக் காசு கேட்பாள். கருப்பராயன் நோம்பி அன்று வாங்கின உண்டியலில் கொஞ்சம் காசு சேர்த்து வருகிறான். தம்பியின் படிப்புச் செலவிற்கு.

புத்தகக் கடைக்கு டீ கொண்டு போய்த் தரும் போது காகித வாசனையை ரசிப்பான். கடை ஓனரின் மகனுக்கு இங்கேதான் புத்தகம் வாங்கினார்கள். புத்தகக் கட்டை வீட்டில் கொண்டு போய் வைத்து விட்டு வந்தான் அப்பாண்டு. தம்பியிடம் கிழிந்த புத்தகங்கள்தான் இருக்கின்றன. உடைந்த சிலேட்டு. காதறுந்த புத்தகப் பை. கிழிந்த சட்டை. இப்படித்தான் தினமும் பள்ளிக்கூடம் போய் வருகிறான்.

திருவள்ளுவர் திடலுக்கு மந்திரி வருகிறார். இதனால் கடைக்குள் கட்சி வேட்டிகளும் கட்சித் துண்டுகளும் காட்சி

**"ஏழு தலைமுறைக்கு உட்கார்ந்து சாப்பிடற மாதிரி அந்த ஆள் ஒரு வேலை செஞ்சுட்டார்."**

**"என்ன?"**

**"நல்ல டைனிங் டேபிள், சேர் செட் ஒண்ணு வாங்கிட்டார்."**

**— வெ.ராஜாராமன்**



அளித்தன. வெளியேயும் ஆட்கள் டீயி... காத்துக் கொண்டிருந்தார்கள்.

"டேய் அப்பாண்டு... பார்த்துக் ... கணக்கை கரெக்டா சொல்லணும்... குடுக்காம நழுவிக்கிட்டுப் போயிடுவ... என்றார் ஓனர் காதோடு.

"தம்பி... இங்க வாப்பா. எவ்வளவு... வெளியில வெயில்ல நிக்கறது? ப... சொல்லி அரைமணி நேரமாச்சே..."

"அண்ணா... டீ போட்டாச்சுங்க..."

உள்ளே டீ சாப்பிட்டு முடித்தவர்க... காசமாக சிகரெட் பற்ற வைத்துக் செ... கதை பேசினார்கள்.

"அண்ணா... வெளியில நெறையப்... நின்னுகிட்டு இருக்கறாங்க. டீ சாப்... முடிச்சா கொஞ்சம் எந்திரிச்சு ... கொடுங்க..."

முறைத்தார்கள்.

"டேய்... நேத்தத்த பன்னு மாதிரி... குது... கல்லு மாதிரி... இதை எடு மு... மனுசன் சாப்பிடுவானா?"

"ஏம்பப்பா இங்க வா...." ஒரு மீசை... கூப்பிட்டார்.

"நான் என்ன டீ கேட்டேன்?"

"ஸ்ட்ராங் டீ..."

"நீ பாட்டுக்கு லைட் டீ தந்தி... போறே?"

"அண்ணா.. ஸ்ட்ராங் டீ தாண்ணா..."

"எனக்குத் தெரியாதா? டிகாஷன் ... கொண்டு வா... போ..."

"டேய் அப்பாண்டு... இவரு கணக்... வளவு?"

மனத்திற்குள் கூட்டினான்.

"எட்டு ரூபாய்... அம்பது காசு..."

"பப்ஸ் கொண்டு வாப்பா..."

"ரெண்டு பால் டீ, ஒரு காபி..."

"இங்க ஒரு டீ..."

"தம்பி நாலு டீ சொல்லு..."

டீ மாஸ்டரைப் பார்த்துக் கத்தினா... பாண்டு.

"எட்டுல ரெண்டு பால் டீ, ஒரு ..."

ஐந்து டீ தம்ளர்களை ஒரு ... கொண்டு வர முயன்றான். யாரு... கையோ தட்டி விட்டது.

"டமார்!"

கண்ணாடி தம்ளர்கள் உடைந்தன... கள் மேல் டீயெல்லாம் சிதறியது.

"என்னடா ஆச்சு...?" ஓனர் ஓடி வ...

"உடைச்சிட்டியா? முண்டம்.. கெட்ட முண்டாம்... உருப்படியா ஒரு ... செய்யத் தெரியுதா?"

கன்னத்தில் இரண்டு அறை விட... கண்கள் கலங்கின.

"ச்சே... வேட்டி, சட்டையெ...

நாறடிச்சுட்டான். தலைவருக்கு இந்த அலங் கோலத்தோட போய் எப்படி மாலை போடறது? இங்க பாருடா என் வேட்டி, சட்டையெல்லாம்..." ஒரு ஆள் கத்தினான்.

"அண்ணா தெரியாம..."

"பேசாதடா... மூஞ்சி மேல ஒண்ணு விட்டன்னா தெரியும்..."

"ச்சே...வேற கடைக்குப் போயிருக்கலாம்..."

"பொறுக்குடா கண்ணாடிச் சில்லெல் லாம்... எடத்தை சுத்தம் பண்ணு... மூதேவி... முழியப் பாரு..."

ஆள் ஆளுக்குத் திட்டினார்கள்.

"மளமளன்னு சுத்தம் பண்ணுடா... ஒரு வாரத்துக்கு உனக்கு பேட்டா காசு கெடை யாது. தம்ளர் செலவையும் டீச் செலவையும் உன் சம்பளத்தில் புடிக்கறேன்... என்னடா அழுகாச்சி வேண்டிக் கெடக்குது..."

'நங்'கென்று ஒரு குட்டு விழுந்தது.

"என்னங்க கடையில பையனைக் காணோம்?"

"அப்பாண்டுங்களா? அவன் எங்கியோ ஓடிப் போயிட்டானுங்க..."

"ஓடிப் போயிட்டானா? எங்கே போனான்..?"

"தெரியலீங்க... அவங்க வூட்டிலேயும் ஒரு வாரமாத் தேடறாங்க... தம்ளர்களை உடைச்ச அன்னிக்குப் போனவன்தான். அன்னிக்கு அவன் அப்பன்கிட்டேயும் ஒதை விழுந் திருக்கு..."

"அடி தாங்காம ஓடியிருப்பான் போலி ருக்குது..."

"திமிருங்க..."

"சார்... என்ன வேணுங்க...?"

"என்ன இருக்குது?"

"வடை, போண்டா, முறுக்கு, மிக்சர்..."

"வடை ரெண்டு குடு..."

"வேற...?"

"ஒரு டீ...."

"டீ ஒண்ணு...." சுப்புணி டீ மாஸ்டரைப் பார்த்துக் குரல் கொடுத்தான்.

"பையன் யாரு...?"

"இவனுங்களா? அப்பாண்டோட தம்பி..."

"அப்படியா?"

"போன வாரம்தான் வேலைக்குச் சேர்ந் தான்... அப்பாண்டை விட நல்ல சுறுசுறுப்பு..."

சுப்புணியின் நிஜப் பெயர் சுப்பிரமணி. எப்படியோ சுப்புணி ஆகி விட்டான். அவன் வலது தொடையில் ஒரு காயம் இருக்கிறது. 'படிக்கறேன்' என்று ரகளை செய்தவனுக்கு அவன் அப்பா போட்ட சூடு.

"அண்ணன் கிட்ட மூன்று ரூபாய் வாங்கிக்குங்க..."

அப்பாண்டு மாதிரியே இருந்தான்.

**புதிய பகுதி:**

# வாரம் ஒரு போட்டி!

## பரிசு ரூ. 5000!

ஜாலியா போட்டிகள் வெச்சி கொஞ்ச நாளாச்சு இல்லை? இதோ, ஆரம்பிச்சுட்டோம்!

## போட்டி - 1

ஒரு ஜோக்கை அஞ்சு துண்டா வெட்டி, அங்கங்க ஒளிச்சி வெச்சிருக்கோம்.

நீங்க செய்ய வேண்டியது என்ன? ரொம்ப ஈஸி! இஷ்யூ முழுக்க, வரிவிடாம படிச்சீங்கன்னா மேட்டருக்கு நடுவுல, சம் பந்தமில்லாம அந்த அஞ்சு பகுதிகள் எங்கெங்கேயாவது தட்டுப்படும். சேர்த்து, தொகுத்து, முழு ஜோக்கா கூப்பன்ல எழுதி அனுப்புங்க.

சரியா எழுதறவங்களுக்குப் பரிசு ரூ.5000/- நிறையப்பேர் சரியா எழுதிட்டா?

வேற வழி? குலுக்கல்தான். கூப்பன் வந்து சேரக் கடைசி நாள் 12.8.96.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

### ஜாலி போட்டி - 1

தேடி எடுத்த ஜோக்:

என் பெயர் :..............................

முகவரி:..............................

..............................

..............................

..............................

..............................

